# மகாத்மா காந்தி

## நூல்கள்

### ஐந்தாம் தொகுப்பு



*முதல் பதிப்பு: 26, ஏப்ரல், 1960*
*இரண்டாம் பதிப்பு: 15, ஆகஸ்டு 1964*

[இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ள மகாத்மாவின் கட்டுரைகள் முதலியன நவஜீவன் டிரஸ்டின் அனுமதியின்பேரில் பிரசுரிக்கப்படுகின்றன.]

*முழு உரிமை :*
காந்தி நூல் வெளியீட்டுக் கழகம், சென்னை-2.

விலை ரூ. 7-50

மாணிக்கம் பிரஸ், அமைந்தகரை, சென்னை - 29.



நாடியசீர் நாடடைய
ராட்டுருட்டும் கையே !
நல்லகதர் நெய்யமிகு
வல்லமைகொள் கையே !

—சி. தேசிகவிஞயகம் பிள்ளே.

# மகாத்மா காந்தி நூல்கள்

## 5

கதரின் முக்கியத்தைக் குறித்தும், மக்களின் பட்டினியையும்
பசியையும் போக்குவதற்கு எவ்விதம் உற்ற துணையாக
ராட்டை இருக்கிறது என்பது குறித்தும்,
கிராமக் கைத்தொழில்களின் வளர்ச்சியின்
அவசியத்தைப் பற்றியும் மகாத்மா
எழுதிய எல்லாக் கட்டுரைகளின்
தொகுப்பு இந்நூல்.

வெளியிடுவோர் :

**காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்**

[ தமிழ் நாடு காந்தி நினைவு நிதி ஆதரவில் ]

சர்க்கார் எஸ்டேட், மவுண்ட் ரோடு,

சென்னை-2.

# பதிப்புரை

கதர், கிராமக் கைத்தொழில்கள் சம்பந்தமாக மகாத்மா எழுதியவைகளையும், பேசியவைகளையும் கொண்டது இத் தொகுப்பு. கதர் இயக்கத்தை மகாத்மா 1917–ஆம் வருடத்தில் ஆரம்பித்தார். 1921–இல் இதைப் பற்றி அவர் கூறுகையில், "நான் செய்ததும், செய்யத் தவறியதுமான எத்தனையோ தவறு களுக்காகப் பின்னல் வரும் சந்ததியாரின் சாபங்களுக்கு நான் ஆளாக வேண்டியவனாக இருக்கலாம். ஆனால், ராட்டை திரும்ப வும் புத்துயிர் பெற வேண்டும் என்று நான் சொன்னதற்காகப் பிற்கால சந்ததியின் வாழ்த்து எனக்குக் கிடைக்கும் என்ற திடநம்பிக்கை எனக்கு உண்டு. எனக்குள்ளது எல்லாவற்றை யும் அதற்கே பணயமாக வைத்திருக்கிறேன். ஏனெனில், ராட்டை சுற்றும்போது அதன் ஒவ்வோர் சுழற்சியிலும் சாந்தத்தையும், நல்லெண்ணத்தையும், அன்பையுமே அது நூற்கிறது" என்றார். இதிலிருந்து ராட்டையையும் கதரையும் அவர் எவ்வளவு முக்கிய மானதாகக் கருதி வந்தார் என்பது நன்றாக விளங்கும்.

காந்தி அடிகள் இந்தியாவிற்கு வந்ததும் நாடு முழுவதையும் சுற்றி, அப்பொழுது இருந்த நிலைமையைக் கவனித்தார். அச்சம யம் சில பிரதேசங்களில் பஞ்சம் ஏற்பட்டிருந்தது. அதற்காகப் பொருள் திரட்டி நிவாரண வேலையை ஆரம்பித்தார். கொடுக்கக் கொடுக்க ஏழை மக்கள் கேட்டுக்கொண்டே இருந்தனர். இங்ஙனம் மற்றவர்களை எதிர்பார்த்துப் பிச்சை ஏற்று வாழ்வதே அவர்கள் மனிதத் தன்மையைக் குறைப்பதாக இருந்தது. நாளா வட்டத்தில் அவர்கள் உழைக்கும் தன்மையையும், அதன் மூலம் சுயமரியாதையையும் இழந்தவர்களானார்கள். எனவே, அவர்களை மீண்டும் சுயமரியாதையுள்ள மனிதர்களாக, அவர்களுக்கு உழைக்கச் சந்தர்ப்பம் கொடுப்பதே உண்மையான வேலையாக இருந்தது.

பல கோடி மக்கள் ஏழ்மையிலும் வறுமையிலும் இருக்கும் இந்நாட்டில், அவர்களுக்கு என்ன வேலை கொடுக்க முடியும் என்று ஆழ்ந்து ஆலோசித்தார். பலர் மில்கள் கட்டலாம் என் றார்கள். ஆனால், இவ்வளவு கோடி மக்களுக்கு வேலை கொடுக்கக்

கூடிய அளவு மில்கள் கட்டுவதற்குப் பணம் பல நூறு கோடிகள் அல்லவா ஆகும்? அப்பணம் நம்மிடம் இல்லை. கொஞ்சம் பொருளீட்டில் நடக்கக்கூடிய தொழிலாகவும், மனிதனின் முக்கியமான தேவைகளில் ஒன்றைப் பூர்த்தி செய்யக்கூடியதாகவும் இருக்க வேண்டும். கைராட்டை நூற்பு இந்த நிபந்தனைகளைப் பூர்த்தி செய்வதாக இருந்தது. உணவுக்குப் பின் உடை மனிதனுக்கு அவசியம். கொஞ்சம் முதலீட்டில் ராட்டை வாங்கி எளியவர்களும் நூற்க முடியும். எனவே, இதுவே ஏழை மக்கள் சுயமரியாதையுடன் எவரையும் நாடாமல், பெண்களும் தங்கள் வீடுகளிலேயே இருந்து, ஓய்வு நேரங்களையும் பயன்படுத்தக்கூடிய முறையில் செய்யக்கூடியதென்று மகாத்மா தீர்மானம் செய்தார். ஆண்டுதோறும் தங்கள் வாழ்க்கையை நடத்தப் பல லட்சக் கணக்கான பேர்களுக்கு இன்றும் இது உதவி வருகிறது.

கதர்க் கொள்கையின் தத்துவம் மங்கி வரும் இக்காலத்தில், இத்தொகுப்பு அதை நன்ருகத் தெரிந்துகொள்ள உதவியாக இருக்குமென்று நம்புகிறோம்.

முப்பது ஆண்டுகளில் கதர் சம்பந்தமாக அவர் எழுதியவைகளும் பேசியிருப்பவைகளும் ஏராளமானவை. அவைகளையெல்லாம் இயன்ற வரையில் இத்தொகுப்பில் சேகரித்துக் கொடுக்க முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. இக்கட்டுரைகளும் பிறவும் தேதிவாரி வரிசையில் கொடுக்கப்படவில்லை. கதர் சம்பந்தமான ஒவ்வோர் அம்சத்தைக் குறித்தும் மகாத்மா என்ன சொல்லியிருக்கிருர் என்பதைப் படிப்போர் எளிதில் அறிய வசதியாக இருக்கும் பொருட்டு, பல பகுதிகளின் கீழ் அக்கட்டுரைகளும் பிரசங்கங்களும் பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. நவஜீவன் டிரஸ்டிற்காக ஸ்ரீ பரதன் குமரப்பா தொகுத்துக் கொடுத்திருக்கும் முறையே இதில் பெரும்பாலும் அனுசரிக்கப்பட்டிருக்கிறது. ஆனல், இதில் ஒரு முக்கியமான வித்தியாசமும் உண்டு. ஸ்ரீ பரதன் குமரப்பாவின் தொகுப்பில் மகாத்மாவின் கட்டுரைகள், அநேகமாக விஷயத்தை ஒட்டிச் சுருக்கிக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இத்தொகுப்பிலோ, ஒவ்வொரு கட்டுரையும் அப்படியே பூரணமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்பகுதிகளில் வராதவையும், கதர் சம்பந்தமானவையுமான எஞ்சிய பல கட்டுரைகள், இரண்டாம் பாகம் என்ற தலைப்பில் ஒருங்கு திரட்டிக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இக்கட்டுரைகள் விஷயவாரியாகப் பிரிக்கப்படாததால் தேதிக் கிரமத்தில் ஒன்றன்பின் ஒன்ருகப் பிரசுரிக்கப்பட்டிருப்பதையும் காணலாம்.

மகாத்மா கதருக்காக அல்லும் பகலும் எவ்வளவு எண்ணியிருக்கிறார், எவ்வளவு உழைத்திருக்கிறார், எத்தனை பேருடன் கலந்தாலோசித்திருக்கிறார் என்பதை இத்தொகுப்பைப் படிப்போர் ஒவ்வொருவரும் நன்கு அறிய முடியும். அவர் நூற்காமல் இருந்த நாளில்லை. நோயும், உண்ணாவிரதமும்கூட, அவர் நூற்பதை நிறுத்திவிட முடிந்ததில்லை. சிறையில் கைவலி இருந்த சமயத்திலும் கூட இடது கையாலாவது அவர் நூற்றுக்கொண்டு தான் இருந்திருக்கிறார். இதைக் காட்டும் விவரங்களை ஸ்ரீ மகாதேவ தேசாயின் நாட்குறிப்பிலும் மற்றும் சிலவற்றிலுமிருந்து எடுத்துத் தனியே 'பின்சேர்க்கைப் பகுதி'யில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

இத்தொகுப்பில் மூன்றும் பாகமாகச் சேர்க்கப்பட்டிருக்கும் கிராமக் கைத்தொழிலைப் பற்றிய கட்டுரைகள், ஸ்ரீ கா. திரவியம் அவர்கள் மொழிபெயர்த்து சென்னை அரசாங்கம் வெளியிட்டிருந்த 'பூரண சுதேசி' என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டவை. இதைப் பிரசுரித்துக்கொள்ள அன்புடன் அனுமதி அளித்த சென்னை அரசாங்கத்திற்கு நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

முன்னால் வெளிவந்திருக்கும் நான்கு தொகுப்புக்களையும் தமிழ்ப் பெருமக்கள் போற்றி அன்புடன் ஏற்று எல்லா ஆதரவும் தந்திருக்கிறார்கள். அதற்கு எங்கள் உளம் கனிந்த நன்றி. இந்த ஐந்தாம் தொகுப்பையும் அதே போல ஏற்று ஆதரவளிக்க வேண்டுகிறோம்.

**தி. சு. அவிநாசிலிங்கம்**
தலைவர்,
காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்.

சென்னை,
26, ஏப்ரல், 1960.

# பொருளடக்கம்

பகுதி ஒன்று

## நூற்க வேண்டியது ஏன்?

பகுதி இரண்டு

## ஏன் யந்திர மயமாகிவிடக் கூடாது ?



பகுதி மூன்று

## ஆட்சேபங்களுக்குப் பதில்

பகுதி நான்கு

## கதரும் அந்நியத் துணியும்



பகுதி ஐந்து

## கதரும் மில் துணியும்

பகுதி ஆறு

## மில் துணியும் அந்நியத் துணியும்



பகுதி ஏழு

## கதரின் பொருளாதாரம்



பகுதி எட்டு

## கதர் விஞ்ஞானம்



பகுதி ஒன்பது

## கதர் ஊழியர்கள்

பகுதி பத்து

## தியாகத்திற்காக நூற்பது



பகுதி பதினொன்று

## ஊழியத்திற்காக நூற்பு

பகுதி பன்னிரண்டு

## தனக்கென்று நூற்பது



பகுதி பதின்மூன்று

## சங்க வேலையில் புது மாறுதல்



பகுதி பதினான்கு

## புதிய கொள்கை: கேள்விகள், விவாதம்

பகுதி பதினைந்து

## காங்கிரஸும் கதரும்



பகுதி பதினாறு

## அரசாங்கமும் கதரும்

பகுதி பதினேழு

## கைத்தறிகள்



இரண்டாம் பாகம்

## கதர் பற்றிய மகாத்மாவின் மற்றக் கட்டுரைகள்

## மூன்றாம் பாகம்

# சுதேசியும் கிராமக் கைத்தொழில்களும்

## பின்சேர்க்கைப் பகுதி

பகுதி ஒன்று

# நூற்கவேண்டியது ஏன்?

## 1

## ராட்டையை நான் கண்டுகொண்ட விதம்

அகில இந்திய நூற்போர் சங்க ஸ்தாபனத்தை ஆராய்ந்து வரும் நண்பரொருவர், காரைக்குடி (தமிழ்நாடு) கதர் ஸ்தாபனத்தை ஆராய்ந்துவிட்டுப் பின்வருமாறு எழுதுகிறார் :

"இது (ஊத்துக்குளி), கையால் நூற்று நெய்வதன் மூலம் அதிகமாக உற்பத்தி செய்யப்படும் இடம். இந்த வேலையில் பாதியை நான் இங்கேதான் கற்றுக்கொண்டேன். இங்கே நூற்போர் சுமார் ஆயிரம்பேர் இருக்கிறார்கள். நான் கிராமங்கள்தோறும் சென்று அவர்களை, அவர்களுடைய சிறு குடிசைகளிலேயே சந்தித்தேன். இந்த ராட்டையை நீங்கள் எப்படித் தான் கண்டுபிடித்தீர்களோ என்ற ஆச்சரியம் ஒவ்வொரு நாளும் எனக்கு அதிகமாகிக்கொண்டே இருக்கிறது. ராட்டையை எப்பொழுது, எப்படிக் கண்டுகொண்டீர்கள் என்பதை, 'எங் இந்தியா'வில் தாங்கள் தயவு செய்து எழுதக்கூடாதா என்று உங்களைக் கேட்டுக்கொள்ள வேண்டும் என்ற ஆசை எனக்கு அதிகரிக்கிறது. இது அற்ப விஷயந்தான். ஆனால், அதே சமயத்தில் இது மிகப் பெரிய விஷயமுமாகும். மழைத் துளிகளையே இது எனக்கு நினைவூட்டுகிறது. மழைத் துளி அதனளவில் மிகச் சிறியதேயாயினும் அது ஒன்று திரண்டு மகத்தான சமுத்திரமே ஆகிறது. நூற்க வேண்டும் என்று நீங்கள் இந்தியாவைக் கேட்டுக்கொண்டீர்கள். இப்படி நூற்கும்படியும் நீங்கள் வற்புறுத்திவிட்டதால் இந்தியா நூற்கிறது என்று சொல்லுவதைவிடப் பெரிய தவறு வேறு எதுவும் இருக்க முடியாது. ஆனால், கோடிக்கணக்கான கிராம மக்கள் இதைச் செய்து தீரும்படி உங்களைச் செய்துவிட்டனர். தாங்கள் நூற்கும் நூலெல்லாம் செலவாகும்படி செய்வதற்கு உங்களைத் தங்கள் ஏஜெண்டாக்கிக் கொண்டிருக்கிறார்கள் என்பதுதான் உண்மை. கிழவிகளும் குமரிகளும் கூட்டம் கூட்டமாகத் தங்கள் நூல்களுடன் வருவதைத் தினமும் நான் கவனித்து வருகிறேன். தங்களுடைய அருமை நூல்களை மார்போடு அணைத்துக்கொண்டு சிரித்த முகத்தோடு அவர்கள் வருகிறார்கள். கொஞ்சமேனும் இரக்கமே இல்லாத சுரண்டலினால் அடியோடு நாசமாக்கப்பட்டு விட்ட நமது தேசிய வாழ்வின் உயிர்ப் பகுதிகளில் கதர் இப்பொழுதுதான் மெதுவாக ஜீவனை உண்டாக்கி வருகிறது. 'என்னுடைய பணிகளில் அதிகப் பெருமை வாய்ந்தது கதரே என்பதை உலகம் ஒரு நாளைக்கு ஒப்புக் கொண்டேதீரும்' என்று நீங்கள் சொன்னீர்கள். நீங்கள் சொன்னதன் உண்மையை, முன்பைவிட இப்பொழுதுதான், நான் நன்றாக உணர்ந்து வருகிறேன்."

பாடுபட்டு உழைக்கும், பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்கள், இவ்வேலையை மேற்கொள்ளும்படி என்னைச் செய்துவிட்டார்கள் என்று இவர் சொல்லுவதே சரியானதாகும். நான் ராட்டையை முதன் முதலில் கண்டுகொண்டது லண்டனில் 1908-ஆம் ஆண்டில். அப்பொழுது தென்னுப்பிரிக்காவிலிருந்து ஒரு தூதுகோஷ்டிக்குத் தலைவனாக நான் அங்கே போயிருந்தேன். ஊக்கமுள்ள அநேக இந்தியருடனும், மாணவர்களுடனும், மற்றவர்களோடும் அப்பொழுதுதான் எனக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. இந்தியாவில் இருந்துவந்த நிலைமையைக் குறித்துப் பன்முறை நீண்ட நேரம் விவாதித்து வந்தோம். நூற்கும் ராட்டை இல்லையானல், சுயராஜ்யம் இல்லை என்ற எண்ணம், மின்னல் போல் திடீரென்று அப்பொழுது எனக்கு உண்டாயிற்று. ஒவ்வொருவரும் நூற்றாக வேண்டும் என்று உடனே அறிந்தேன். ஆனல், தறிக்கும் ராட்டைக்கும் வித்தியாசம் இருக்கிறது என்பது அச்சமயம் எனக்குத் தெரியாது. இதனலேயே 'ஹிந்த் ஸ்வராஜ்' என்ற நூலில்* ராட்டை என்பதற்குத் தறி என்ற சொல்லை உபயோகித்தேன். அந்தப் பிரசுரத்தின் கடைசி அத்தியாயத்தில் நான் கூறியிருப்பது இதுதான் :

"கேட்டுக்கொண்டிருப்பதால் எதுவும் கிடைத்துவிடாது. நமக்கு வேண்டியதை நாம்தான் எடுத்துக்கொள்ள வேண்டும். இம் முயற்சிக்கு வேண்டிய பலம் நமக்கு வேண்டும். கீழே குறிக்கும் வழிகளில் நடந்தால் மாத்திரமே அந்தப் பலத்தைப் பெற முடியும்.

"2. ஒருவர் வக்கீலாயின், அவர் தமது வக்கீல் தொழிலை விட்டுவிட்டுக் கைத்தறி (ராட்டை) வேலையை மேற்கொள்ள வேண்டும்.

"3. ஒருவர் டாக்டராகவே இருப்பினும், அவரும் கைத்தறி (ராட்டை) வேலையை மேற்கொள்ள வேண்டும்.

"10. ஒருவர் பணக்காரராக இருப்பாராயின், அவர் தமது பணத்தைக் கைத்தறிகளை (ராட்டைகளை) அமைப்பதில் உபயோகிக்க வேண்டும். கையினல் தயாரித்த சரக்குகளைத் தாமே அணிந்து கொள்ளுவதன் மூலம் மற்றவர்களும் அவற்றை உபயோகிக்க உற்சாகமளிக்க வேண்டும்."

இப் பிரசுரத்தை 1908-இல் நான் எழுதினேன். இச் சொற்கள் அப்பொழுது இருந்ததைப் போன்றே இன்றும் உண்மையானவைகளாக இருக்கின்றன. இன்று டாக்டர்களும், வக்கீல்களும், மற்றவர்களும் தியாக வழியிலேயே நூற்று வருவதோடு மாத்திரமல்லாமல் கதர் இயக்கத்தை நடத்தியும் வருகின்றனர். எனினும், கோடிக்கணக்கான மக்களை. அவர்களுடைய கதியற்ற தூக்கத்திலிருந்து எழுப்பும் காரியத்திற்குப் போதுமான தொகையினராக இவர்கள் இன்னும் இல்லாதிருப்பது

*மகாத்மா எழுதிய 'ஹிந்த் ஸ்வராஜ்' (இந்திய சுயராஜ்யம்) என்ற நூல் 'மகாத்மா காந்தி நூல்கள்' முதல் தொகுப்பில் (602 முதல் 731-வது பக்கங்கள் வரை) சேர்க்கப்பட்டிருக்கிறது.

வருந்தத்தக்கது. பெரும்பாலானவர்கள் ஏராளமாக இன்னும் ஒதுங்கியே இருந்து வருகிறார்கள். தங்கள் கண் முன்னால் இன்று நிகழ்ந்துகொண்டிருக்கும் பேரபாயம் இன்னும் பெரிதானால் பார்த்துக்கொள்ளலாம் என்று அவர்கள் காத்துக்கொண்டிருப்பதாகவே தோன்றுகிறது. தங்களைச் செயலில் இறங்கும்படி செய்யக்கூடிய அதிர்ச்சியைத் தங்களுக்கு உண்டாக்க, கோடிக் கணக்கானவர்கள் ஏககாலத்தில் அழியட்டும் என்று அவர்கள் காத்திருப்பதாகவும் தோன்றுகிறது. அது எப்படி இருந்தாலும் சரி, பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்கள் சுயராஜ்யத்தின் பிரகாசத்தை உணருகிற வரையில், ஜீவனுள்ள சுயராஜ்யம் என்பதே கிடையாது. வாயுள்ள வகுப்பினரான நாம் பிழைப்பதற்காக அம் மக்களின் ரத்தத்தை உறிஞ்சிக்கொண்டு வருகிறோம். ஆகவே, அம் மக்களுக்கும் நமக்குமிடையே உயிர்த் தொடர்பு ஏற்பட்டாலன்றி, அவர்கள் சுயராஜ்யத்தை உணரவே மாட்டார்கள்.

ராட்டைக்கே திரும்பி வருவோம். 1948-இல் ராட்டையை மனக் கண்ணில் கண்டுகொண்டேன் என்றாலும், மூன்று ஆண்டுகள் பொறுமையோடும் விடாமுயற்சியோடும் உழைத்த பிறகு 1918-இலேயே அது வேலை செய்வதைக் காணமுடிந்தது. முதல் கதர் விரதத்தை (பம்பாயின் நவநாகரிக சகோதரிகளுக்கு உகந்ததாக இருக்கவேண்டும் என்பதற்காக அதிகப் பலமில்லாததாகச் செய்யப்பட்ட விரதத்தை), 1919-இல் மேற்கொண்டோம். 1921-இல் ராட்டை, காங்கிரஸின் வேலைத் திட்டத்தில் இடம் பெற்றது.* இந்த இயக்கத்தின் அதற்குப் பிந்திய சரித்திரம் எல்லோருக்கும் தெரிந்ததே. நூற்கும் இரண்டாயிரம் பேரின் வாழ்க்கையில் கொஞ்சம் நம்பிக்கையை ராட்டை உண்டாக்கியிருக்கிறது. ராட்டையின் சரித்திரம் அவர்களுடைய வாழ்க்கையைக்கொண்டு இன்னும் எழுதப்பட்டு வருகிறது. மனத்தை மயக்கி நாசமாக்கிவிடும் பட்டண நாகரிகத்தின் மாயவலையில் நாம் சிக்காமல் இருந்தால், இதய பூர்வமாக ஓர் உண்மையை நாம் அறிந்துகொள்ளுவோம். இந்தியாவின் ஒவ்வோர் வீட்டிலும் ராட்டை இருக்கும்படி செய்வதற்கு, உழைப்பு என்ற வகையில் ஒன்றுபட்ட, மனப்பூர்வமான, யோக்கியமான முயற்சி ஒரு சிறிது இருந்தாலே போதும் என்பதை நாம் உணர்வோம். ஒரு ராட்டையில் கிடைக்கும் உற்பத்தியைப் பத்துக் கோடியினால் பெருக்கிப் பார்த்தால், அதன் பலன், ராட்டையின் சக்தியைப் பிடிவாத

---

*1921-இல் கதரும் அந்நியத் துணி பகிஷ்காரமும் காங்கிரஸின் வேலைத் திட்டத்தில் முக்கியமாக இருந்தது. அவ்வாண்டு ஜூலை 31-ஆம் தேதி பம்பாயில் பரேல் என்ற இடத்தில் உமார் சோபானித் திடலில் மகாத்மா, அந்நியத் துணிகளைத் தகனஞ் செய்யும் சடங்கை நடத்தினர். ஆயிரக்கணக்கான மக்கள் கூடியிருந்து அக் காட்சியைக் கண்டனர். கொளுத்தப்பட்டவை கந்தைத் துணிகள் அல்ல. அநேக உயர்ந்த புடவைகள், வேட்டிகள், சட்டைகள் தகனமாயின. தங்கள் குமாரிகளின் விவாகத்திற்கு என்று தாய்மார்கள் பத்திரப்படுத்தி வைத்திருந்த பல பட்டுப் புடவைகளையும் கொளுத்திவிடக் கொடுத்துவிட்டனர். ஒன்றரை லட்ச ரூபாய் பெறுமான ஜவுளி அன்று தகனமாயிற்று.

மாக நம்பாமல் இருப்பவரைக்கூட நம்பும்படி செய்துவிடும். ஆனால், அவர் அப்படி நம்ப ஒருவேளை சம்மதிக்காமல் இருக்கலாம். 'நீங்கள் சொல்லுவது கணக்குப்படி சரிதான். ஆனால், அனுபவ ரீதியில் அது முற்றிலும் உண்மையல்லாத காரியம்' என்றும் அவர் சொல்லிவிடக் கூடும். தண்ணீர் குடிக்க இஷ்டப்படும் குதிரையைத்தான் நீங்கள் தொட்டிக்குக் கொண்டுபோய் நீர் குடிக்கச் செய்யமுடியும். ஆனால், உண்மையான நூற்போருக்கு எல்லையற்ற பொறுமை வேண்டும். அவர் தோல்வி அடைந்துவிடுவதில்லை. ஆகையால், நண்பர் கேட்டிருக்கும் கேள்விக்கு, 'ராட்டை இன்னும் கண்டுபிடிக்கப்பட்டு வருகிறது' என்பதே ஒருவேளை பதிலாக இருக்கலாம். அது ஒரு நாளைக்கு நடந்தே தீரும் என்பதை நான் அறிவேன். ஏனெனில், இதைக் கண்டுபிடிப்பதற்காகத் தங்கள் உயிரையும் கொடுக்கத் தயாராக இருக்கும் சிலர் இந்நாட்டில் இருக்கிறார்கள்.

—'எங் இந்தியா' 20—9—1928

## 2

# நெசவாளனாகிப் பிறகு நூற்பவனானேன்

மதுரை செளராஷ்டிரர்கள் அளித்த உபசாரத்திற்கு மகாத்மா பதிலளித்த போது* தாம் ராட்டினத்தில் நூற்க ஆரம்பித்த வரலாற்றைக் குறித்துப் பின்வருமாறு கூறினார்:

*1915-இல் முதன்முதலில் நான் தறியில் நெய்பவனானேன்.* † நான் முதலில் நெசவாளனாகித்தான் பிறகு நூற்பவன் ஆனேன்.

---

* 1927 அக்டோபரில் மகாத்மா தென்னாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்தார். அம் மாதம் முதல் வாரத்தில் மதுரை, ராமநாதபுரம் ஜில்லாக்களிலும் திருநெல்வேலி ஜில்லாவில் சில பகுதிகளிலும் பல இடங்களுக்குச் சென்றிருந்தார். ராஜபாளையத்திற்கும் போயிருந்தார். அப் பிரயாணத்தின் போதே மதுரையில் செளராஷ்டிரர்கள் காந்திஜிக்கு உபசாரப்பத்திரம் வாசித்தளித்தார்கள்.

† சாபர்மதி ஆசிரமத்தில் கைத்தறி நெசவு வேலையை ஆரம்பித்துத் தாமும் துணி நெய்ய ஆரம்பித்ததையே மகாத்மா இங்கே குறிப்பிடுகிறார். அப்பொழுது அங்கே நடந்த கைத்தறிப் பரீட்சையைக் குறித்து மகன்லால் காந்தி வருமாறு விவரமாகக் கூறியிருக்கிறார்:

"சத்தியாக்கிரக ஆசிரமத்தில் இந்த முதல் பரீட்சை 1915-இல் ஆரம்பமாயிற்று. பத்து மாத காலம் வரையில் நெசவு மாத்திரமே செய்து வந்தோம். நெசவு வேலையில் வெளியில் அனுபவம் பெற்றுத் திரும்பி வந்தவர்கள், சென்னை ரக பிளைஷட்டில் தறிகளைப் போட்டுச் சென்னை மாதிரியில் பாவையும் அமைத்து, அகலமான, நயமான துணியை நெய்ய ஆரம்பித்தனர். ஆனால், இதெல்லாம் கற்றுக்குட்டிகள் வேலையாகவே இருந்தது. அந்தத் தொழிலுக்கென்றே பிறந்தவர்களைப் போல் நெய்ய முடியவில்லை. நெய்வதில் இருக்கும் கஷ்டங்களைத் தெரிந்துகொள்ள ஆரம்பித்தோம். பெண்களுக்கு ஆகக்கூடிய வகையில் துணியை நாங்கள் இன்னும் உற்பத்தி செய்யவில்லை. ஆசிரம சகோதரி ஒருவருக்கு ஆடை வேண்டியிருந்தது. கையினால் நெய்த புடவையைக் கடைகளில் வாங்கிவிடுவதும் எளிதல்ல. மில் புடவையைக் கட்டிக்கொள்ளத் தம்மை

இதே என் கைகளினுலேயே வெளிநாட்டு நூலேயும் நம் மில்களின் நூலேயும் கொண்டு தறியில் துணி நெய்திருக்கிறேன். என் தறியில் உட்கார்ந்து நான் துணி நெய்து கொண்டிருந்தபோது எனக்கு நானே சிந்தித்துப் பார்த்தேன். கைத்தறியில் நெய்யப்பட்டுவரும் ரகத் துணிகளேயும் தாங்களே நெய்துவிடுவதற்கான ஏற்பாடுகளே மில்கள் செய்து கொண்டுவிட்ட பிறகு, என் கதி என்ன, ஆயிரக் கணக்கான, பல்லாயிரக்கணக்கான கைத்தறி நெசவாளர்களின் கதி என்ன என்று சிந்திக்கலானேன். இதைப் பற்றி நான் சிந்தனை செய்தபோது, கிராமங்களில் பட்டினி கிடக்கும் கோடிக் கணக்கான சகோதரிகளே என் மனம் எண்ணியது. நெய்து கொண்டிருக்கையிலேயே இச்சகோதரிகளின் கதி என்ன என் பதையும் யோசித்துப் பார்த்தேன். என் மனம் அதிகத் துக்க மடைந்ததோடு திகிலடைந்தும் போயிற்று. கையினுல் நூற்ப தற்கு எங்களுக்குச் சொல்லிக் கொடுக்கக் கூடியவர்கள் சிலரைக் கண்டுபிடிப்பதற்காக நானும் என் சகாக்களும் ஊக்கத்தோடு தேட ஆரம்பித்தோம். கையால் நூற்பது இன்னும் நடந்து வருவ தைக் காணக்கூடிய கிராமம் ஒன்ருவது இருக்குமா என்பதை யும் பார்த்தேன். பாஞ்சாலத்தில் சில சகோதரிகள் நூற்று வருகி ருர்கள் என்பது அப்பொழுது எனக்குத் தெரியாது. டீலி ஒன்

---

அனுமதிக்க வேண்டும் என்று அவர் எதிர்பார்த்தார். ஆனல் அனுமதி கிடைக்காது என்பதைக் கண்டுகொண்டார்.

''உமக்குத் தேவையானதை நெய்து கொள்ளும். இல்லையானுல், அது இல்லா மலேயே இரும்'' என்றே அவருக்குப் பதில் கிடைத்தது. இந்தக் கண்டிப்பான பதில் அச்சகோதரிக்கு ஏமாற்றமளித்ததோடு அவர் கணவருக்கு அவமானமாகவும் பட்டது. ஆனல், இந்த ஏமாற்றமும் அவமானமாகத் தோன்றியதும் அப்போதைக்குத்தான் இருந்தன. பயனளிப்பதான அந்த வசை விரும்பத்தக்க நன்மையையும் உண்டாக் கியது. கணவர் நகருக்குப் போனுர். பாவு போட வேண்டாத வகையில் முறுக்கித் தயாராயிருந்த நயமான நூலே வாங்கினுர். அதைக் கொண்டு ஐம்பது அங்குல அகலத்தில் துணி நெய்ய ஆரம்பித்துவிட்டார். இந்தப் பரீட்சை வெற்றிகரமாகிவிடவே இம்முயற்சிக்கு அதிக உற்சாகம் பிறந்தது.

''1916–ஆம் ஆண்டு இறுதியில் ஆசிரமத்தில் மூன்று சாதாரணத் தறிகளும் மூன்று பிளேஷட்டில் தறிகளும் இருந்தன. இந்தியப் புதுவருட நாளன்று முந்திய வருடத்தில் நடந்திருக்கும் வேலையைக் கணக்கெடுத்தோம். நெய்வதுதான் முக்கியமாக நாங்கள் செய்து வந்த வேலே. முந்திய பதினைந்து மாதங்களில் நடந்த வேலே பாராட்டக் கூடியதாக இல்லே. ஆகையால், புதுவருட இறுதிக்குள் ஒவ்வொரு வரும் நெய்யக் கற்றுக்கொண்டு தமக்கு வேண்டிய துணியைத் தாமே நெய்து கொள்ளும் திறமையைப் பெற்றுவிட வேண்டும் என்று முடிவு செய்தோம். இவ் வேலேயில் ஒவ்வொருவரும் முனைந்து வேலே செய்தனர். ஆறு மாதந்தில் மேலும் நான்கு பிளேஷட்டில் தறிகள் புதிதாகப் போடப்பட்டன. இவ்விதம் ஒரே சமயத்தில் பத்துத் தறிகள் வேலே செய்து வந்தன. பகலில் எட்டு மணி நேரம் தறியில் வேலே செய்வோம். ஸ்ரீ காந்தியுங்கூட நான்கு ஐந்து மணி நேரம் தறியில் நெய்வார். ஷட்டில் தறிகளில் 45 முதல் 50 அங்குலம் வரை அகலமுள்ள துணிகளே நெய்தோம். தினத் திற்கு இத்தறி ஒவ்வொன்றிலும் மூன்று முதல் ஐந்து கெஜம் வரையில் துணி தயா ராகும். அகலம் குறைவாகவுள்ள துணியானுல், மணிக்கு ஒரு கெஜம் தயாராகிவிடும். அதாவது, எங்களில் பலர் கை நெசவு மூலம் தினத்திற்கு 8 அணு முதல் 12 அணு வரையில் சம்பாதிப்பவர்களானேம்.''

றும் தோன்ருது நான் சோர்வடைந்து, குஜராத்தைச் சேர்ந்த ஒரு வீர விதவைப் பெண்மணியிடம் தஞ்சம் அடைந்தேன். * தீண்டாதாரின் கஷ்டங்களைப் போக்கும் பணியில் அவர் ஈடுபட்டிருந்தார். என்னுடைய துயரத்தை அந்தப் புனித சகோதரியிடம் கூறினேன். குஜராத் முழுவதும் ஓய்வின்றி ஊர் ஊராகச் சுற்றி அலைந்து, கையினுல் நூற்கும் ஆற்றலை இன்னும் கைவிடாமல் இருக்கும் சகோதரிகளைக் கண்டு பிடிக்கும்படி அவரைக் கேட்டுக் கொண்டேன். குஜராத்திலுள்ள வீஜாப்பூரில் சில முஸ்லிம் சகோதரிகளை அப்பெண்மணிதான் கண்டு பிடித்தார். தாங்கள் நூற்கும் நூலை இவர் வாங்கிக் கொள்ளுவதானுல் நூற்பதற்குத் தயார் என்று அந்தச் சகோதரிகள் கூறினர்கள். அப்பொழுதிலிருந்து ராட்டைக்கு இம்மகத்தான புத்துயிர் பிறந்தது. இப்பொழுது ராட்டை இந்தியாவில் ஆயிரத்து ஐந்நூறு கிராமங்களில் பரவியிருக்கிறது. இதைக் கண்டு பிடித்த பிறகுதான், என் நிர்வாகத்திலிருந்து வரக்கூடிய ஆசிரமத்தில் வெளிநாட்டு நூலையோ, மில் நூலையோ கொண்டு ஓர் இழைகூட நெய்வதில்லை என்று நான் தீர்மானித்தேன்.

—'எங் இந்தியா' 13—10—1927

## 3

# சுதேசி என்பது என்ன?

[மகாத்மா காந்தி, *1916* பிப்ரவரி *14*-ம் தேதி சென்னையில் பாதிரிகள் மகாநாட்டில் பேசினர். அப்பிரசங்கமே கீழே கொடுக்கப்படுகிறது.]

மிகுந்த தயக்கத்தின் பேரிலேயே உங்கள் மத்தியில் பேசுவதற்கு நான் ஒப்புக்கொண்டேன். எந்த விஷயத்தைக் குறித்துப் பேசுவது என்ற முடிவுக்கு வருவதும் எனக்குக் கஷ்டமாகவே இருந்தது. அதிகச் சங்கடமும் கஷ்டமுமான ஒரு விஷயத்தைக் குறித்துப் பேச முடிவு செய்திருக்கிறேன். சுதேசி என்பதைக் குறித்து நான் கொண்டிருக்கும் கருத்து மற்றவர்களுக்கு விசித்திரமாகத் தோன்றக் கூடுமாகையால் இது சங்கடமானதாகிறது. என் எண்ணங்களைச் சரியான வகையில் எடுத்துக் கூறுவதற்கு வேண்டிய மொழியாற்றல் எனக்கு இல்லாததனுல் இது கஷ்டமானதும் ஆகிறது. என்னுடைய பேச்சில் அநேக குற்றங் குறைகளை நீங்கள் காணக்கூடும் என்பதில் சந்தேகமில்லை. அவற்றை நீங்கள் பொறுத்துக் கொள்ளுவீர்கள் என்பதையும் அறிவேன். அதோடு நான் சொல்லப் போவதில், நான் இப்பொழுதே அனுசரித்து வராதவையோ, அவற்றை

---

* கங்காபென் மஜ்முதார் என்ற இப்பெண்மணியைக் குறித்தும் அவருடைய அருமையான முயற்சியினுல் ராட்டையில் நூற்பவர்களைக் கண்டுபிடித்த விதத்தைக் குறித்தும் மகாத்மா தமது 'சுயசரிதை'யில் விரிவாக எழுதியிருக்கிருர். 'மகாத்மா காந்தி நூல்கள்' மூன்றும் தொகுப்பு 630—631 பக்கங்களில் இதை விவரமாகக் காணலாம்.

அனுசரிப்பதற்காக என் சக்திக்கு இயன்றவரை முயற்சி செய்யாததவையோ எவையும் இல்லை என்பதையும் உங்களுக்குச் சொல்லிக்கொள்ளுகிறேன். சென்ற மாதம் நீங்கள், பிரசங்கத்திற்குப் பதிலாகப் பிரார்த்தனை செய்வதிலேயே ஒரு வாரத்தைச் செலவிட்டீர்கள். இதைக் கவனித்ததில் எனக்கு உற்சாகம் ஏற்படுகிறது. நான் சொல்லப் போகிறவை நல்ல பலனைத் தர வேண்டும் என்று நான் மனப்பூர்வமாகப் பிரார்த்தனை செய்கிறேன். அதே போன்ற பிரார்த்தனையைக் கொண்டு என் சொற்களையும் ஆசீர்வதிப்பீர்கள் என்பதை அறிவேன்.

எவ்வளவோ ஆழ்ந்து சிந்தித்த பிறகு, சுதேசி என்பதற்கு ஒரு விளக்கத்திற்கு வந்திருக்கிறேன். அதற்கு நான் கொள்ளும் பொருளை அதுவே சரியானபடி எடுத்துக் காட்டுவதாக இருக்கலாம். சுதேசி என்பது நம்முள் இருக்கும் ஓர் உணர்ச்சி. தூரமாக இருப்பதை விலக்கிவிட்டு நம்மை ஒட்டிச் சுற்றிலுமிருப்பவைகளை உபயோகித்துக் கொள்ளுபவர்களாகவும், அவற்றிற்குச் சேவை செய்பவர்களாகவும் நம்மை அந்த உணர்ச்சி கட்டுப்படுத்துகிறது. ஆகவே, சமயத்தைப் பொறுத்தவரையில், எனது இந்த விளக்கத்தின் தேவைக்குப் பொருத்தமாக இருப்பதை முன்னிட்டு, என்னுடைய பாரம்பரிய சமயத்தோடுதான் என்னை நான் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும். எனக்கு அடுத்துச் சமீபமாகவுள்ள சமயத்தின் பயன் என்பது இதுதான். அச்சமயத்தில் குறைபாடுகளை நான் கண்டால், அதன் குறைபாடுகளை நீக்குவதன்மூலம் நான் அதற்குச் சேவை செய்ய வேண்டும். ராஜீயத் துறையிலும் எனக்கு அருகாமையிலுள்ள தான ஸ்தாபனங்களை நான் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். அவற்றில் நன்ருகத் தெரிந்ததாகவுள்ள குறைபாடுகளைப் போக்குவதன் மூலம் அவற்றிற்கு நான் சேவையும் செய்ய வேண்டும். பொருளாதாரத் துறையிலும் என்னைச் சுற்றி அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள் தயாரிக்கும் பொருள்களை மாத்திரமே நான் உபயோகிக்க வேண்டும். அந்தக் கைத்தொழில்களில் ஏதாவது குறைபாடுகளிருந்தால் சீர்திருத்தி, அவற்றைத் திறமையானவைகளாகவும் பூரணமானவையாகவும் ஆக்குவதற்கு நான் சேவையும் செய்ய வேண்டும். இத்தகைய சுதேசியத்தை நடைமுறையில் கொண்டு வருவதானல் அது நம் வாழ்நாளில் நிறைவேறப் போவதில்லை; ஓர் ஆயிரம் ஆண்டும் ஆகிவிடக்கூடும் என்று சொல்லப்படுகிறது. இவ்வாறு அது பல தலைமுறைக்கு முழுவதும் நிறைவேருது என்று இருந்தாலுங்கூட சுதேசியத்தை நாம் கைவிட்டுவிட முடியாது.

சுதேசியத்தின் மூன்று பிரிவுகளைக் குறித்து நான் மேலே குறிப்பிட்டேன். அவற்றை இனி சுருக்கமாக ஆராய்வோம். ஹிந்து சமயம், மாறுதலை வேண்டாததோர் சமயமாகிவிட்டது. ஆகையால், அதனுள் அடங்கிய சுதேசி உணர்ச்சியின் காரணமாக அது மகத்தான சக்தியாக இருக்கிறது. பிறரைத் தன் மதத்திற்கு மாற்றிவிட வேண்டும் என்ற நோக்கம் ஹிந்து

சமயத்திற்கு இல்லாததால் இது அதிகச் சகிப்புத் தன்மை கொண்டதாக இருக்கிறது. விரிவடைவதற்கு இடமுள்ளதாக இச்சமயம் முற்காலத்தில் எப்படி இருந்ததோ அப்படியே இன்னும் இருக்கிறது. புத்த மதத்தை விரட்டிவிடுவதில் இது வெற்றி பெற்றிருக்கிறது என்று கூறப்படுவது தவறு; புத்த சமயத்தைத் தன்னுள் ஒன்ருக்கிக் கொள்ளுவதில்தான் இது வெற்றி பெற்றிருக்கிறது என்று நான் நினைக்கிறேன். சுதேசி உணர்ச்சியின் காரணத்தால் ஒரு ஹிந்து தன்னுடைய மதத்தை மாற்றிக்கொள்ள மறுக்கிருர். தன் சமயமே மிகச் சிறந்தது என்று அவர் கருதுவது இதற்குக் காரணமாகாது. புதிய சீர்திருத்தங்களை அதில் கொண்டு வந்து அதை உயர்வானதாக்க முடியும் என்பதை அவர் அறிந்திருப்பதே இதற்குக் காரணம். ஹிந்து சமயத்தைக் குறித்து நான் இப்பொழுது சொன்ன தெல்லாம் உலகத்தின் மற்றப் பெரிய சமயங்களுக்கும் பொருந் தும் என்று கருதுகிறேன். ஹிந்து சமயத்திற்குத்தான் இது முக்கியமாகப் பொருந்தும் என்று எண்ணுகிருர்கள். நான் குறிப்பிட்டுச் சொல்ல முயற்சிக்கிற முக்கியமான விஷயம் இங்கேதான் வருகிறது. இந்தியாவிலிருந்து வரும் கிறிஸ்தவப் பாதிரிமார்களின் பெரிய சபைகள், இதுவரைசெய்து வந்திருக் கும் சேவைக்கும், இப்பொழுது செய்து வருவதற்கும் நன்றி செலுத்த இந்தியா எவ்வளவோ கடமைப்பட்டிருக்கிறது. நான் இதுவரை சொன்னதில் ஏதாவது பொருள் இருக்கிறதென்ருல், அது இதுதான்: மதம் மாற்றும் லட்சியத்தைக் கைவிட்டுவிட்டுப் பரோபகார வேலைகளை மாத்திரம் அவர்கள் தொடர்ந்து செய்து வந்தால், இன்னும் நன்ருகச் சேவை செய்தவர்களாவதோடு கிறிஸ்தவ உணர்ச்சிக்கு இன்னும் மேலான சேவை செய்வதா காதா? அகம்பாவத்தினுல் நான் இவ்வாறு கூறுவதாக நீங்கள் எண்ணமாட்டீர்கள் என்று நம்புகிறேன். மனப்பூர்வமாகவும், உரிய பணிவுடனுமே இந்த யோசனையை நான் கூறுகிறேன். மேலும், நான் கூறுவதை நீங்கள் கவனிக்க வேண்டும் என்று கேட்பதற்கு எனக்குச் சில உரிமைகளும் இருக்கின்றன. கிறிஸ்தவ வேதமான பைபிளை ஆராய்ந்து அறிந்து கொள்ளுவ தற்காக முயன்றிருக்கிறேன். அதையும் என் வேத நூல்களில் ஒன்ருகவே கருதுகிறேன். பகவத் கீதை என் உள்ளத்தை எவ்வாறு ஆட்கொண்டிருக்கிறதோ அதே போலவே ஏசுநாதரின் மலைப் பிரசங்கத்தின் கருத்துக்களும் என் உள்ளத்தை ஆட் கொண்டிருக்கின்றன. 'அருள் ஒளியே வழிகாட்டிடு'* என்ற

* மகாத்மாவுக்கு மிகவும் பிடித்தமான தோத்திர கீதம் இது. இவ்வழகிய தோத்திரப் பாடலை இயற்றியவர் கார்டினல் ஜான் ஹென்றி நியூமான் என்பவர் (1801–1891). ஆக்ஸ்போர்டில் கல்வி பயின்று கிறிஸ்தவ சமய ஆராய்ச்சியில் ஈடுபட்டுக் கடைசியில் கத்தோலிக்கக் கொள்கைக்குத் திரும்பியவர். பர்மிங்ஹாமுக்கு அருகில் எட்க் பாஸ்டன் என்ற இடத்தில் செயின்ட் பிலிப் நேரி மரபைச் சேர்ந்த மடாலயத்தில் வாழ் நாள் முழுவதும் தங்கிப் பல அருமையான சமய நூல்களை எழுதினர். இவருடைய 'அபொலோஜியா ப்ரோவீடா ஸுவா' என்ற லத்தீன் நூல், சமயம் பற்றிய இவரது பரந்த அறிவை வெளிப்படுத்துகிறது.

கீதத்தையும் அதே போன்ற மற்றும், பல பக்திப் பாடல்களையும் நான் பாடும்போது, பக்தி மேலீட்டில் எந்தக் கிறிஸ்தவருக்கும் நான் குறைந்தவனாக இல்லை. கிறிஸ்தவ சமயத்தின் பலதரப் பட்ட பிரிவுகளையும் சேர்ந்த அநேக முக்கியமான பாதிரிமார் களுடன் நான் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்திருக்கிறேன். இவர்களில் சிலருடன் நட்புக் கொண்டிருக்கும் பேறு எனக்கு இன்னும் இருந்து வருகிறது. ஆகையால், நான் மேலே சொன்ன யோசனைகளை; மத வெறி பிடித்த ஹிந்துவாக நான் கூறவில்லை. கிறிஸ்தவ மதச் சார்பு அதிகமாகவுள்ள, பாரபட்சமற்ற, பணி வுள்ள சமய பக்தனாகவே கூறினேன் என்று ஏற்றுக்கொள்ள வேண்டும். 'உலகமெலாம் செல்லுவீர்' என்ற உபதேசத்திற்கு எப்படியோ தவறான பொருள் கொண்டு அதன் உண்மைக் கருத்தை அறியத் தவறிவிட்டார்களா? நடந்திருக்கும் மத மாற்றங்களில் அநேகம் பெயரளவிலேயே நடந்திருக்கின்றன. அனுபவத்திலிருந்து இதைச் சொல்லுகிறேன். இதை யாரும் மறுக்கவே முடியாது. சிலர் விஷயத்தில் மத மாற்றம் வயிற்றுப் பிழைப்பை முன்னிட்டு நடந்திருக்கிறதேயன்றி உள்ளத்தில் தோன்றிய கனிவினால் அல்ல. நடந்த ஒவ்வோர் மத மாற்ற விஷயத்திலும் ஒரு புண் மிஞ்சி நிற்கும்படி செய்யப்பட்டிருக் கிறது. இது தவிர்த்துவிடக்கூடியது என்றே நான் நிச்சயமாக நம்புகிறேன். பெரிய சமயங்கள் ஒவ்வொன்றிலும் ஒரு புது ஜனனம், ஒரு மனமாற்றம் ஏற்படுவது முற்றிலும் சாத்திய மானதே. இதையும் மீண்டும் அனுபவத்தைக் கொண்டே கூறு கிறேன். அபிப்பிராய பேதத்திற்குரிய சங்கடமான விஷயத் தையே நான் சொல்லுகிறேன் என்பது எனக்குத் தெரியும். இப்பொழுது ஐரோப்பாவில் நடந்துவரும் அட்டூழியங்கள், சாந்த குமாரரான ஏசுநாதரின் உபதேசங்களை ஐரோப்பா கொஞ்சங்கூட அறிந்துகொள்ளவில்லை, அதற்கு ஞான ஒளி கிழக்கு நாடுகளிலிருந்துதான் வரவேண்டும் என்பதையே காட்டுகின்றன. நான் பேச எடுத்துக்கொண்ட விஷயத்தின் இப்பகுதியை இவ்வாறு கூறி முடிப்பதற்காக நான் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளவுமில்லை.

சமய சம்பந்தமான காரியங்களில் உதவுவது, உங்களுக்கு விசேஷமாகவுள்ள பணி. இவற்றில் உங்கள் உதவியை நாடியிருக் கிறேன். ஆனால், ராஜீய விஷயங்களில்கூட உங்கள் உதவியை நாடுவது என்ற துணிவு கொண்டிருக்கிறேன். சமயத்திற்கும் ராஜீயத்திற்கும் எந்தவித சம்பந்தமுமே கிடையாது என்பதை நான் நம்பவில்லை. சமயத் தொடர்பே இல்லாத ராஜீயம் வெறும் பிணத்திற்குத்தான் சமம்; புதைத்து விட வேண்டியதே அதற்குள்ள தகுதி. உண்மையைக் கவனித்தால், உங்களுடைய மௌனமான வழிகளில் ராஜீயத்தில் உங்கள் செல்வாக்கை நீங்கள் உபயோகித்து வருவது கொஞ்சமன்று. இப்பொழுதும் செய்யப்பட்டு வருவதைப் போன்று சமயத்திலிருந்து ராஜீ யத்தைத் தனியாகப் பிரித்துவிட முயற்சி செய்யப்படாம

லிருந்தால், அவை இப்பொழுது அடைந்திருப்பதாகத் தோன்றும் கீழ் நிலைக்கு வந்திருக்கமாட்டா என்றே கருதுகிறேன். நாட்டின் ராஜீய வாழ்வு இன்பமான நிலையில் இருப்பதாக யாரும் எண்ண வில்லை. சுதேசி உணர்ச்சியின் வயப்பட்டிருக்கும் நிலையில் இந் நாட்டின் புராதனமான ஸ்தாபனங்களும் கிராமப் பஞ்சா யத்துக்களும் என்னைத் தம் வசப்படுத்திக் கொள்ளுவதைக் காண்கிறேன். உண்மையாகவே இந்தியா குடியாட்சி நாடு. அதனால்தான் இந்தியா தனக்கு ஏற்பட்ட எத்தனையோ அதிர்ச்சிகளையெல்லாம் சமாளித்து நின்றிருக்கிறது. மன்னர் களும் பிரதானிகளும் இந்தியாவில் பிறந்தவர்களாயினும் சரி, அந்நியராயினும் சரி, நிலத் தீர்வையை வசூல் செய்துகொண் டதைத் தவிர, பொதுவாகப் பொதுமக்களிடம் எந்த விதமான சம்பந்தமும் அவர்கள் வைத்துக் கொள்ளவில்லை. பொது மக்களும் அவர்களுக்கு உரியதைக் கொடுத்துவிட்டு மற்றவைகளிலெல்லாம் தங்களுக்கு விருப்பமான வழிகளில் நடந்துவந்தார்கள். இம் மக்களிடமிருந்த விசாலமான சாதி முறை, சமூகத்தின் மதத் தேவைகளுக்கு உதவியாக இருந்து வந்ததோடு அதன் ராஜீயத் தேவைகளுக்கும் உதவியாக இருந்து வந்தது. கிராமவாசிகள் தங்களுடைய உள் விவகாரங்களையெல்லாம் சாதி முறையைக் கொண்டே தீர்த்துக் கொண்டார்கள். ஆளும் அதிகாரத்தின், அதிகாரங்களின் அடக்குமுறைகளையும் இந்தச் சாதி முறையைக் கொண்டே சமாளித்துக் கொண் டார்கள். இச்சாதி முறையிலிருந்து தனது அற்புதமான நிர்வாகத் திறமையைப் பெறவல்லதாக இந்திய சமுதாயம் இருந்தது என்பதை மறுப்பது சாத்தியமல்ல. ஹரித் துவாரத்தில் சென்ற ஆண்டு நடந்த கும்ப மேளா உற்சவத்தைப் பார்த்திருக்க வேண்டும். நம் முயற்சியும் இருப்பதாக வெளிக்குத் தோன்றாமலேயே அந்த நிர்வாகம் பத்து லட்சத் திற்கும் அதிகமான யாத்திரீகர்களை எவ்வளவு சாமர்த்தியமாகச் சமாளித்தது என்பது அப்பொழுது தெரிந்திருக்கும்.* என்றாலும், ஒழுங்காக நிர்வகித்துக்கொள்ளும் ஆற்றல் நமக்குக் கிடையாது என்று சொல்லிக்கொள்ளுவது இக்கால வழக்கமாகிவிட்டது. புதுச் சம்பிரதாயங்களில் வளர்ந்துவிட்டவர்கள் விஷயத்தில் ஓரளவுக்கு இது உண்மையே. சுதேசி உணர்ச்சியிலிருந்து மோசமான வகையில் நாம் முற்றிலும் மாறிவிட்டதனால் பயங் கரமான சங்கடத்தில் துன்பப்பட்டு வருகிறோம். படித்தவர் களாகிய நாம், அந்நிய மொழியின் மூலமே நமது கல்வியைப் பெற்றிருக்கிறோம். இதனால், நாம் பொது மக்களிடம் எந்தவிதத்திலும் பிரதிபலிக்கவில்லை. பொது மக்களின் பிரதிநிதிகளாக இருக்க நாம் விரும்பினாலும் அது

---

* 1915-ஆம் ஆண்டு கும்ப மேளா உற்சவத்திற்குக் காந்திஜி சென்றிருக்கிறார். அங்கே தமக்கு ஏற்பட்ட அனுபவங்களைக் குறித்து அவர் தமது 'சுயசரிதை'யில் எழுதி யிருக்கிறார். இவ்விவரத்தை 'மகாத்மா காந்தி நூல்கள்' மூன்றாம் தொகுப்பு 498-503 பக்கங்களில் காண்க.

நம்மால் முடிவதில்லை. ஆங்கில அதிகாரிகளை இம்மக்கள் எவ்வாறு எண்ணுகிறார்களோ அதே மாதிரிதான் நம்மையும் எண்ணுகிறார்கள். அவர்களுடைய உள்ளங்கள் இந்த இரு பாலாருக்கும் தெரிவதும் இல்லை. அவர்களுடைய அபிலாஷைகள் வேறு; நம் அபிலாஷைகள் வேறு. எனவே, இரு தரப்பாருக்கு மிடையே பிளவு இருந்து வருகிறது. உண்மையில் நாம் இப்பொழுது காண்பது, அவர்களுக்கும் அவர்களுடைய பிரதிநிதிகள் என்னும் நமக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லாமல் இருப்பதையேயன்றி அவர்கள் தங்களை ஒழுங்குபடுத்திக் கொள்ளத் தவறிவிட்டார்கள் என்பதை அல்ல. சென்ற ஐம்பது ஆண்டுகளாக நாம் நமது தாய்மொழிகளின் மூலமே கல்வி பெற்று வந்திருப்போமானால், நம் வீட்டுப் பெரியவர்களும் நம் வேலைக்காரர்களும், அண்டை வீட்டுக்காரர்களும், நாம் பெற்ற அறிவில் பங்கு கொண்டிருப்பார்கள். போஸோ, ராயோ கண்டு பிடித்திருப்பவை யாவும் ராமாயணத்தையும் மகாபாரதத்தையும் போலவே குடும்பப் பொக்கிஷங்களாக இருந்துவரும். இப்போது இருக்கும் நிலைமையில், சாதாரணப் பொது மக்களைப் பொறுத்தவரையில், நம் விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கும் உண்மைகளும் வெளிநாட்டினர் கண்டுபிடித்தவையும் ஒரே மாதிரிதான் ஆகின்றன. கல்வித் துறைகள் யாவும் தாய் மொழியின் மூலமே போதிக்கப்பட்டு வந்திருக்குமானால், இம்மக்கள் அற்புதமான வகையில் அறிவுச் செல்வத்தை அடைந்திருப்பார்கள் என்று துணிந்து கூறுவேன். கிராம சுகாதாரம் போன்ற பிரச்னைகள் வெகு காலத்திற்கு முன்பே தீர்ந்திருக்கும். கிராமப் பஞ்சாயத்துக்கள், விசேஷ முறையில் இன்று ஜீவனுள்ள சக்திகளாக இருந்துவரும். இந்தியா தனக்குத் தேவையான முறையில் சுயாட்சியை அநேகமாக அனுபவித்துக் கொண்டு மிருக்கும். இந்நாட்டின் புனிதமான மண்ணில் திட்டமிட்டுச் செய்யப்பட்டு வரும் படுகொலைகளின் மானங்கெட்ட காட்சியைக் காணவேண்டியும் நேர்ந்திருக்காது. இவற்றையெல்லாம் சீர்ப்படுத்திக்கொள்ள இன்னும் காலம் கடந்துவிடவில்லை. உங்களுக்கு மன மிருந்தால், வேறு யாரும், எந்த ஸ்தாபனங்களும் செய்ய இயலாத உதவியை இதில் நீங்கள் செய்யமுடியும்.

சுதேசியின் கடைசிப் பிரிவுக்கு இப்பொழுது வருவோம். பொருளாதார, கைத்தொழில் வாழ்வில் சுதேசியத் தத்துவத்திலிருந்து நாசகரமான வகையில் மாறிவிட்டதுதான் பொது மக்களிடையே ஆழ்ந்துவிட்ட வறுமைக்குக் காரணம். வெளிநாடுகளிலிருந்து இந்தியாவுக்கு வர்த்தகப் பொருள் எதுவும் வராமலிருக்குமானால், இந்தியா இன்று பாலும் தேனும் பெருக்கெடுத்து ஓடும் நாடாக இருக்கும். ஆனால், இப்பொழுது அப்படி இல்லை. நாம் பேராசை கொண்டிருந்தோம்; அதேமாதிரி இங்கிலாந்தும் பேராசை கொண்டது. இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் தொடர்பு, நிச்சயமாக ஒரு தவறையே அடிப்படை

யாகக் கொண்டது. ஆனால், இந்தியாவில் இங்கிலாந்து இருந்து கொண்டிருப்பது தவறின் காரணமாக அல்ல. இந்தியாவை, அதன் மக்களின் நன்மைக்காகத் தான் தர்மகர்த்தாவாக வைத்திருப்பதாகக் கூறி வருவதே பிரிட்டனின் பகிரங்கமான கொள்கை. இது உண்மையானால், லங்காஷயர் ஒதுங்கி இருந்துவிட வேண்டும். மேலும், சுதேசித் தத்துவம் நியாயமான தத்துவமாக இருந்தால், லங்காஷயர் எந்தவித நஷ்டமுமின்றி ஒதுங்கி இருந்துவிட முடியும். அதன் மூலம் இப்போதைக்கு ஏற்படும் அதிர்ச்சியையும் அது சமாளித்துக்கொண்டு விடலாம். நான் சுதேசியத்தை எண்ணும்போது, வஞ்சந் தீர்த்துக் கொள்ளுவதற்காக மேற்கொள்ளப்படும் பகிஷ்கார இயக்கமாக இதை நான் நினைக்கவில்லை. எல்லோரும் அனுசரித்தாக வேண்டிய மத தருமமாகவே நான் இதைக் கருதுகிறேன். நான் பொருளாதார நிபுணன் அல்ல. ஆனால், தனக்குத் தேவையானவைகளையெல்லாம் தானே எளிதில் உற்பத்தி செய்துகொண்டு தனக்குத் தானே வாழக்கூடிய நாடாக இங்கிலாந்து இருக்க முடியும் என்று கூறும் பொருளாதார நூல்கள் சிலவற்றை நான் படித்திருக்கிறேன். இது முற்றிலும் பைத்தியக்காரத்தனமான யோசனையாக இருக்கலாம். உலகத்தில் வெளிநாடுகளிலிருந்து அதிகமாக இறக்குமதி செய்யும் நாடு இங்கிலாந்து என்பதே, அது உண்மையாக இருக்க முடியாது என்பதற்குச் சிறந்த அத்தாட்சியாகவும் இருக்கக் கூடும். என்றாலும், லங்காஷயருக்காகவோ, வேறு எந்த நாட்டிற்காகவோ வாழும் நாடாக இந்தியா இருக்க முடியாது. ஏனெனில், தனக்குத் தானே வாழ இந்தியாவினால் முடியும். இந்தியாவின் தேவைக்கு வேண்டியவைகளையெல்லாம், தன்னுடைய எல்லைக்குள்ளேயே உற்பத்தி செய்துகொண்டால்தான், அப்படி உற்பத்தி செய்துகொள்ள உதவி செய்தால் மாத்திரமே, இந்தியா தனக்குத்தானே வாழ முடியும். சகோதர நாசத்தையும் பொறாமையையும் மற்றும் பல தீமைகளையும் உண்டாக்குவதாயிருக்கும் பைத்தியக்காரத்தனமான, நாசகரமான போட்டி வெறியில் இந்தியா நுழைய வேண்டியதில்லை; நுழையவும் கூடாது. ஆனால், இந்நாட்டின் பெரும் லட்சாதிபதிகள் இந்த உலகப் போட்டியில் பிரவேசிப்பதை யார் தடுக்க முடியும்? சட்டத்தினால் நிச்சயமாக இதைச் செய்துவிட முடியாது என்றாலும், பொதுஜன அபிப்பிராயத்தின் சக்தியும், சரியான கல்வியுமே விரும்பத்தக்க வழியில் பெருமளவு இதைச் செய்ய இயலும். கைத்தறி நெசவுத் தொழில் சாகும் நிலையில் இப்பொழுது இருக்கிறது. சென்ற ஆண்டு பல இடங்களுக்கும் நான் சென்றபோது, முடிந்த வரையில் எத்தனை நெசவாளர்களைப் பார்க்க முடியுமோ அத்தனை பேரையும் பார்க்க விசேஷ சிரத்தை எடுத்துக்கொண்டேன். ஒரு சமயம் சுபிட்சமாகவும், கௌரவமானதாகவும் இருந்த தொழிலை அவர்கள் எவ்விதம் இழந்துவிட்டார்கள், அவர்கள் குடும்பங்கள் அத்தொழிலிலிருந்து எவ்வாறு விலகிவிட்

டனை என்பதைக் காண என் மனம் வேதனைப்பட்டது. சுதேசியத் தத்துவத்தை நாம் பின்பற்றுவதாக இருந்தால், நமக்குத் தேவைப்படுகிறவைகளைச் செய்து கொடுக்கக் கூடியவர்கள் நம் அக்கம் பக்கத்தில் யார் இருக்கிறார்கள் என்பதைக் கண்டு பிடிக்க வேண்டியது உங்கள் கடமையாகவும், என் கடமையாகவும் இருக்க வேண்டும். நமக்குத் தேவைப்படும் சாமான்களை எப்படிச் செய்வதென்பது அவர்களுக்குத் தெரியாமலிருந்தால், நல்ல பிழைப்புக்கான தொழில் அந்த அக்கம் பக்கத்தாருக்குத் தெரியாமலிருந்தால், அதை அவர்களுக்கு நாம் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அப்பொழுது இந்தியாவின் ஒவ்வோர் கிராமமும் தனக்கு வேண்டியதைத் தானே தயாரித்துக் கொள்ளுவதாகவும் சுய தேவையைப் பூர்த்தி செய்துகொள்ளும் பகுதியாகவும் இருக்கும். உள்ளூரில் தயாராகாத அவசியமான சரக்குகளை மற்றக் கிராமங்களில் தம் பண்டங்களுக்குப் பதிலாக வாங்கிக் கொள்ளுவார்கள். இவையெல்லாம் முட்டாள்தனமானதாகத் தோன்றலாம். ஆம், இந்தியாவே ஒரு முட்டாள்தனம் குடிகொண்ட நாடுதான். அன்போடு கூடிய ஒரு முஸ்லிம், குடிப்பதற்குச் சுத்தமான நீரைக் கொடுப்பதற்குத் தயாராக இருக்கும் போது, அது வேண்டாம் என்று தொண்டை வறண்டு போகச் செய்து கொள்ளுவது முட்டாள்தனமே. என்றாலும், ஆயிரக் கணக்கான ஹிந்துக்கள் தாகத்தால் நா வறண்டு சாகவும் தயாராயிருப்பார்களேயன்றி ஒரு முஸ்லிம் வீட்டில் தண்ணீர் குடித்து விட மாட்டார்கள். முட்டாள்தனமுள்ள இதே மனிதர்கள், இந்தியாவில் தயாரான ஆடைகளையே தாங்கள் உடுத்த வேண்டும், இந்தியாவில் விளைந்தவைகளையே சாப்பிட வேண்டும் என்பதே தங்கள் மத தருமம் என்று நம்பிவிடுவார்களாயின், வேறு எந்தத் துணியையும் உடுத்தவும், வேறு எந்த உணவையும் தின்னவும் மறுத்துவிடுவார்கள். தேநீர் குடிக்கும் பழக்கத்தை லார்டு கர்ஸான் * கொண்டு வந்தார். நாசத்தை உண்டாக்குவதான இச்சரக்கு இந்நாட்டு மக்களையே அநேகமாக அடிமைகொண்டு விட்டது. அது இப்பொழுதே லட்சக்கணக்கான ஆண்கள், பெண்களின் ஜீரண சக்தி உறுப்புக்களைக் கெடுத்துவிட்டது. இப்பொழுதே பணமில்லாதிருக்கும் மக்களுக்கு இது புது வரி போலும் ஆகிவிட்டது. சுதேசிப் பொருள்களை உபயோகிக்கும் பழக்கத்தை லார்டு ஹார்டிஞ்சு † மேற்கொள்ளுவாரானால், இந்

---

* லார்டு கர்ஸான் (1859—1925): பிரபலமான பிரிட்டிஷ் நிர்வாகி, ராஜதந்திரி. 1899 முதல் 1905-ஆம் ஆண்டு வரையில் இவர் இந்தியாவில் மிகத் தீவிரமான வைஸ்ராயாக இருந்தார். பின்னர், 1914—24-இல் பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரியாக இருந்து, மத்தியக் கிழக்கு நாடுகளில் பல மாறுதல்களைச் செய்தார். முதல் உலக யுத்தத்திற்குப் பின்னால் நடந்த பல மகாநாடுகளில் முக்கிய பங்கு வகித்தார். இவர் வைஸ்ராயாக இருந்த காலத்தில் தேநீர் குடிக்கும் பழக்கத்தை இந்தியாவில் இவர் கொண்டு வந்ததையே மகாத்மா குறிப்பிடுகிறார்.

† லார்டு ஹார்டிஞ்சு: 1910 முதல் 1916–ஆம் ஆண்டு வரையில் இந்தியாவில் பிரிட்டிஷ் வைஸ்ராயாக இருந்தார். வைஸ்ராயே சுதேசிப் பழக்கத்தை மேற்கொண்

தியா முழுவதுமே வெளிநாட்டுச் சரக்குகளை உபயோகிப்பதைக் கைவிட்டுவிடும். பகவத் கீதையில் ஒரு சுலோகம் உண்டு. 'பணக்காரர்களையே சாதாரண மக்கள் பின்பற்றுகிறார்கள்' என்பது தான் அந்தச் சுலோகத்திற்குச் சாதாரணமான பொருள். சமூகத்தில் அறிவு படைத்தவர்களாக இருப்பவர்கள், கொஞ்ச காலத்திற்கு எவ்வளவுதான் அசௌகரியங்களை உண்டாக்குவதாக இருந்தாலும் பொருட்படுத்தாது சுதேசி விரதத்தை மேற்கொள்ளுவார்களானால், இத்தீமையைப் போக்கிவிடுவது மிகவும் எளிது. வாழ்க்கையின் எந்தக் காரியமாக இருந்தாலும், அதில் சட்டம் தலையிடுவது என்பதை நான் வெறுக்கிறேன். அதிகம் சொன்னால், அதைக் குறைந்த தீமை என்று சொல்லலாம். என்றாலும், வெளிநாட்டுச் சரக்குகள் மீது பாதுகாப்புத் தீர்வையைக் கடுமையாக விதிப்பதை நான் சகிப்பது மாத்திரமல்ல, வரவேற்பேன்; அப்படி விதிக்க வேண்டும் என்றும் கோருவேன். நேட்டால், ஒரு பிரிட்டிஷ் குடியேற்ற நாடு. என்றாலும், மற்றோர் பிரிட்டிஷ் குடியேற்ற நாடான மொரீஷியஸிலிருந்து வந்த சர்க்கரைக்கு நேட்டால் தடை வரி விதித்துத் தன் சர்க்கரைக்குப் பாதுகாப்பு அளித்தது. ஆனால், இங்கிலாந்தோ, தடையில்லாத வர்த்தகத்தைத் திணித்து இந்தியாவுக்கு விரோதமான பாதகத்தைச் செய்திருக்கிறது. இது இங்கிலாந்துக்கு உணவாக இருக்கலாம். ஆனால், இந்த நாட்டுக்கோ அது விஷமாகவே ஆயிற்று.

பொருளாதார வாழ்க்கையில் எப்படியும் இந்தியா சுதேசியத்தை மேற்கொள்ளவே முடியாது என்று எப்பொழுதும் வற்புறுத்திக் கூறப்படுகிறது. இந்த ஆட்சேபத்தைக் கூறிவருகிறவர்கள், சுதேசியத்தை வாழ்க்கையின் விதியாகவே கவனிப்பதில்லை. இது வெறும் தேசாபிமான முயற்சியே என்றும், இதை அனுசரிப்பதால் தங்கள் சொந்தச் சௌகரியங்களைத் துறக்கவேண்டியிருந்தால் இம்முயற்சியைச் செய்ய வேண்டியதே இல்லை என்றும் அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால், இங்கு விளக்கப்பட்டிருக்கும் வகையில் சுதேசியம் என்பது ஒரு சமயக் கட்டுதிட்டம்; தனிப்பட்டவர்களுக்கு அதனால் உடல் சம்பந்தமான அசௌகரியம் என்ன நேர்ந்தாலும் கொஞ்சமும் பொருட்படுத்தாது அதை அனுசரித்தாக வேண்டும். குண்டூசியோ, ஊசியோ இந்தியாவில் செய்யப்படவில்லை என்பதனால், சுதேசி விரதம் கொண்டவர், அவற்றை உபயோகிக்காமல் இருக்க நேருவதைக் குறித்துப் பயந்துவிட வேண்டியதில்லை. நமக்கு மிக அவசியமானவை என்று இன்று நாம் நினைக்கும் நூற்றுக்கணக்கான பொருள்கள் இல்லாமலேயே வாழச் சுதேசியவாதி கற்றுக் கொண்டு விடுவார். மேலும், சாத்தியமில்லாதது என்று சொல்லிக் கொண்டு சுதேசி என்பதையே அடியோடு மறந்துவிடுகிறவர்கள், நிதானமான

டால், அதைப் பார்த்து எல்லோரும் சுதேசியை மேற்கொள்ளுவார்கள் என்ற கருத்திலேயே லார்டு ஹார்டிஞ்சை மகாத்மா குறிப்பிட்டிருக்கிறார்.

முயற்சியினால் அடைய வேண்டிய லட்சியமே சுதேசியம் என்பதை மறந்துவிடுகின்றனர். இந்நாட்டில் கிடைக்காத சாமான்களில் மாத்திரம் தற்காலிகமாகப் பிற நாட்டுப் பொருள்களை உபயோகிப்பது என்று நம்மை அனுமதித்துக்கொண்டு குறிப்பிட்ட சாமான்களைச் சுதேசிப் பொருள்களாகவே உபயோகிப்பது என்று நாம் இருந்தாலும், சுதேசி லட்சியத்தை நோக்கிப் போய்க் கொண்டிருப்பவர்களேயாவோம்.

சுதேசிக்கு எதிராக இன்னுமொரு ஆட்சேபமும் கிளப்பப் படுகிறது. இதையும் நாம் கவனிக்க வேண்டும். சுதேசியம் மிகவும் மோசமான சுயநலத் தத்துவம், நாகரிக மக்களின் தருமக் கோட்பாட்டிற்கு இது விரோதமானது என்று இந்த ஆட்சேபக் காரர்கள் கருதுகிறார்கள். சுதேசியத்தை மேற்கொள்ளுவது காட்டுமிராண்டித்தனத்திற்குத் திரும்புவதுதான் என்றும் இவர்கள் நினைக்கிறார்கள். இவர்கள் கூறுவதைக் குறித்து விவரமான பரிசீலனையில் நான் இறங்குவதற்கில்லை. ஆனால், அடக்கத்திற்கும், அன்புக்கும், தருமத்திற்கும் மிகவும் பொருத்தமான தத்துவம் சுதேசி ஒன்றே என்று வற்புறுத்திக் கூறுவேன். என் சொந்தக் குடும்பத்தைக் காப்பாற்றவே என்னால் முடியாமலிருக்கும்போது, இந்தியா முழுவதையும் காப்பாற்றக் கிளம்ப நினைப்பது அகம் பாவமே யாகும். என் முயற்சியையெல்லாம் என் குடும்பத்தினிடமே செலுத்தி, அதன் மூலம் நாடு முழுமைக்கும், விரும்புவீர்களாயின் மனிதவர்க்கம் முழுமைக்கும் சேவை செய்வதாக எண்ணுவதுதான் நல்லது. இதுதான் அடக்கம்; இதுதான் அன்பு. நம் செயலின் தன்மையை நம் நோக்கமே நிர்ணயிக்கும். மற்றவர்களுக்கு நான் துன்பங்கள் இழைப்பதைப் பொருட்படுத்தாமலேயே நான் என் குடும்பத்திற்குச் சேவை செய்து வரலாம். உதாரணமாக, மக்களை வருத்திப் பணம் பறிக்கக்கூடியதாகவுள்ள ஓர் உத்தியோகத்தை நான் ஏற்றுக்கொள்ளலாம். இதன் மூலம் பணக்காரனாகிறேன். பிறகு என் குடும்பத்தின் நியாயமில்லாத தேவைகளையெல்லாம் நிறைவேற்றி வைக்கிறேன். இவ்வாறு நான் செய்வது என் குடும்பத்திற்கோ, நாட்டிற்கோ சேவை செய்ததாகாது. நான் இதற்கு மாறாக வேறொன்றும் செய்யலாம். உழைத்து என் ஜீவனத்தை நடத்திக்கொண்டு, என்னை நம்பியிருப்பவர்களின் ஜீவனத்திற்கு வேண்டியதைச் செய்வதற்காகவே கடவுள் எனக்குக் கைகளையும் கால்களையும் கொடுத்திருக்கிறார் என்பதை நான் உணர்ந்துவிடலாம். அப்பொழுது நான் என் வாழ்க்கையையும், என் பேச்சைக் கேட்கும்படி நான் செய்யக்கூடியவர்களின் வாழ்க்கையையும் உடனே எளிமையானதாக்கிவிடுவேன். இவ்வாறு செய்வதால், பிறர் யாருக்கும் கெடுதலை உண்டாக்காமல் என் குடும்பத்திற்குச் சேவை செய்தவனாவேன். இந்த வாழ்க்கை முறையை எல்லோரும் அனுசரிக்கிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுதே நாடு லட்சிய நிலையை அடைந்துவிடும். எல்லோரும் ஏககாலத்

தில் அந்த நிலையை அடைந்துவிட மாட்டார்கள். ஆனால், நம்மில் யார் அதன் உண்மையை உணர்ந்து அதை நடைமுறையில் கொண்டு வருகிறோமோ அவர்கள், அத்தகைய இன்பகரமான நாள் வரும் என்று எதிர்பார்ப்பதோடு அது வருவதையும் துரிதப்படுத்தலாம். இத்தகைய வாழ்க்கைத் திட்டத்தில் மற்ற எல்லா நாடுகளையும் விலக்கிவிட்டு இந்தியாவுக்கே சேவை செய்வதாகத் தோன்றுவதில், மற்ற எந்த நாட்டிற்கும் நான் கெடுதி செய்யவில்லை. என் தேச பக்தி, மற்ற நாடுகளை ஒதுக்குவது, அந்நாடுகளைச் சேர்ப்பது ஆகிய இரண்டும் கொண்டது. முழு அடக்கத்துடன் என்னுடைய கவனம் முழுவதையும் நான் பிறந்த நாட்டிடம் செலுத்துகிறேன் என்ற வகையில் அது பிற நாடுகளை ஒதுக்குவதாகிறது. ஆனால், என்னுடைய சேவை, போட்டி அல்லது விரோதத்தன்மையுடையது அல்ல என்ற வகையில், மற்ற நாடுகளையும் சேர்த்துக் கொள்ளுவதாகிறது. 'உன் அண்டை வீட்டுக்காரன் சொத்துக்குக் கேடு நேராதவாறு உன் சொந்தச் சொத்தை உபயோகப்படுத்து' என்பது, ஒரு சட்ட விதி என்பது மாத்திரமல்ல. ஆனால், அது வாழ்க்கையின் உயரிய தத்துவம். அகிம்சை அல்லது அன்பைச் சரியானபடி அனுசரிப்பதற்கு அதுவே மார்க்கம். துவேஷத்தை அடிப்படையாகக் கொண்ட தேசாபிமானம் 'கொல்லுகிறது', அன்பை அடிப்படையாகக் கொண்ட தேசாபிமானம் 'உயிரளிக்கிறது' என்பதைப் பெரியதோர் சமயத்தின் ஆச்சாரியர்களாகிய நீங்கள், பிரசாரத்தினாலும் நடைமுறையில் அனுசரிப்பதனாலும் பழக்கத்தில் கொண்டு வர வேண்டியது உங்கள் கடமையாகும்.

# 4

# சுதேசி உணர்ச்சி

[1917-ஆம் ஆண்டு அக்டோபரில் கோத்ரா என்ற இடத்தில் நடந்த குஜராத் மாகாண ராஜீய மகாநாட்டில் தலைமை வகித்து மகாத்மா காந்தி பேசியபோது சுதேசியத்தைப் பற்றிக் கூறியதே கீழே கொடுக்கப்படுகிறது. இந்த மகாநாட்டில்தான் கங்காபென் மஜ்முதார் என்ற பெண்மணியைக் குறித்துத் தாம் நெருக்கமாக அறிந்துகொண்டதாக மகாத்மா தமது 'சுயசரிதை'யில் கூறியிருக்கிறார். "ராட்டினம் கிடைக்காததால் எனக்கு ஏற்பட்டிருந்த துயரை அவரிடம் முறையிட்டுக் கொண்டேன். ஊக்கத்துடன் விடாமல் தேடி ராட்டினத்தைக் கண்டுபிடித்துத் தருவதாக வாக்களித்து, என் மனத்திலிருந்த பளுவை அவர் குறைத்தார்" என்றும் மகாத்மா கூறினார். ஆகையால், ராட்டினத்தைத் தேடிப் பிடித்துத் திரும்ப அது பரவும்படி செய்யவேண்டும் என்ற முழுக் கவலையில் மகாத்மா இருந்த சமயத்தில் கீழ்வரும் பிரசங்கம் செய்யப்பட்டது என்பது கவனிக்கத்தக்கது.]

எதுவுமில்லை என்ற நிலையிலேயே சுதேசி இயக்கம் இருக்கிறது என்று சொன்னால், அது தவறான கூற்று என்று கருதிவிடுவதற்கில்லை. சுதேசியத்தின் மூலம்தான் சுயராஜ்யத்தை அடைய முடியும் என்பதை நாம் அறிந்துகொள்ளவில்லை. நாம் அவரவர்களின் தாய் மொழியை மதிக்கவில்லையென்றால், நம் ஆடைகளை நாம் விரும்பவில்லையெனின், நம் உடைகளை நாம் வெறுக்கிறோம் என்றால், குடுமி வைத்துக்கொள்ள நாம் வெட்கப்படுவதாயின், நம் உணவு நமக்கு ருசிக்கவில்லை யென்றால், நம் சீதோஷ்ண நிலை நமக்குப் பிடிக்கவில்லை, நம் மக்கள் அவலட்சண மானவர்கள், நம்மோடு பழகத் தகுதியில்லாதவர்கள் என்று நாம் நினைத்தால், நம் நாகரிகம் குற்றங் குறைகளுடையது, அந்நிய நாகரிகமே கவர்ச்சியானது என்று நாம் எண்ணினால், சுருங்கச் சொன்னால், நம் நாட்டினது என்பதெல்லாம் கெடுதலானது என்றும் வெளிநாட்டினது எல்லாம் நமக்கு இன்பமளிப்பது என்றும் நமக்குத் தோன்றினால், சுயராஜ்யம் என்பதற்கு நாம் கொள்ளும் பொருள்தான் என்ன என்பது எனக்கு விளங்கவில்லை. அந்நிய நாட்டினதான ஒவ்வொன்றையும் நாம் மேற்கொள்ளுவதானால், நாம் நிச்சயமாக அந்நிய ஆட்சியின் கீழ் நீண்ட காலம் தொடர்ந்து இருந்து வரவே நேரும். ஏனெனில், அந்நிய நாகரிகம் சாதாரணப் பொது மக்களிடையே பரவவே இல்லை. சுயராஜ்யத்தின் பெருமையை அறிந்து நாம் உணர்வதற்கு, நமக்குச் சுதேசியத்தில் அன்பு மாத்திரமல்ல, தீவிர சுதேசிய மோகமும் ஏற்படவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. நமது செயல் ஒவ்வொன்றிற்கும் சுதேசி முத்திரை இருக்கவேண்டும். நம் நாட்டினதாக இருக்கும் எல்லாமே நல்லதுதான் என்ற நம்பிக்கையின் பேரிலேயே சுயராஜ்யத்தை அமைக்க முடியும். நான் இங்கே கூறிய கருத்துத்தான் சரி என்றால், சுதேசி இயக்கத்தைத் தீவிரமாக நடத்தவேண்டும். சுயராஜ்ய இயக்கத்தை நடத்திய ஒவ்வொரு நாடும் சுதேசி உணர்ச்சியை முற்றிலும் பாராட்டியிருக்கிறது. ஸ்காட்லாண்டைச் சேர்ந்த ஹைலாண்டர்கள், தங்கள் உயிருக்கு நேரக்கூடிய ஆபத்தையுமே பொருட்படுத்தாமல் 'கில்ட்ஸ்' என்ற தங்கள் தேசீய உடையை விடாமல் அணிந்தே வருகின்றனர். ஹைலாண்டர்களைப் 'பாவாடைப் பட்டாளம்' என்று நாம் வேடிக்கையாகக் கூறுகிறோம். ஆனால், அந்தப் பாவாடைக்குள் பொதிந்து கிடக்கும் பலத்தை உலகம் முழுவதும் ஒப்புக்கொள்ளுகிறது. இது அசௌகரியமான ஆடையாக இருந்தபோதிலும், எதிரி தாக்குவதற்கு எளிதானதாக இருப்பினும், ஸ்காட்லாண்டு ஹைலாண்டர்கள் இந்த ஆடையைக் கைவிடமாட்டார்கள். இதுவரை நான் சொல்லிக்கொண்டு வந்த வாதத்தின் நோக்கம், நமது குறைகளையெல்லாம் பொக்கிஷங்களாக நாம் அப்படியே வைத்துக்கொள்ளவேண்டும் என்பதற்காக அல்ல. ஆனால், நம் தேசத்தது என்பது அவ்வளவு மனத்திற்குப் பிடித்தமானதாக இல்லாவிட்டாலும் அதைத்தான் நாம் கைக்கொள்ள

வேண்டும்; அந்நிய நாட்டினுடையது நம்முடையதைவிட என்னதான் மனத்திற்குப் பிடித்ததாக இருந்தாலும் அதை நாம் தவிர்த்துவிட வேண்டும் என்பதற்காகவே கூறினேன். நமது நாகரிகத்தில் ஏதாவது குறைவு இருக்குமானல், நாம் சரியான முயற்சி செய்வதன் மூலமே நிறைவாக்கிக்கொண்டு விடலாம். இக்கூட்டத்தில் இருப்பவர் ஒவ்வொருவரையும் சுதேசி உணர்ச்சி ஆட்கொள்ளும், எவ்வளவு பெரிய கஷ்டங்களும் அசௌகரியங் களும் இருந்தாலும் சுதேசி விரதத்தை நிறைவேற்றி வைப் பார்கள் என்று நிச்சயமாக நம்புகிறேன். அப்படிச் செய்வோ மாயின் சுயராஜ்யத்தை அடைந்துவிடுவது எளிது.

[1917 அக்டோபரில் கோத்ராவில் நடந்த குஜராத் அரசியல் மகாநாட்டில் தலைமைவகித்து மகாத்மா பேசியதிலிருந்து எடுத்தது.]

# 5

# சுதேசியில் சுயராஜ்யம்

இந்தியாவுக்கு இன்று வேண்டிய சீர்திருத்தம், சுதேசி யத்தை அதன் உண்மையான கருத்தில் அனுசரிப்பதேயாகும். நம் முன்னுல் இருக்கும் அவசரமான பிரச்னை, நமக்கு உண்ண உணவையும் உடுக்க உடையையும் நாம் எப்படித் தேடிக் கொள்ளுவது என்பதேயன்றி இந்நாட்டின் ஆட்சியை எப்படி நடத்துவது என்பது அல்ல. 1918-ஆம் ஆண்டில் துணி வாங்குவ தற்காக அறுபது கோடி ரூபாயை நாம் வெளி நாடுகளுக்கு அனுப்பியிருக்கிருேம். இந்தக் கணக்கில் நாம் வெளிநாட்டுத் துணிகளை வாங்கிக்கொண்டு போவோமானுல், இந்தத் தொகை இந்திய நெசவாளருக்கும் நூற்போருக்கும் கிடைக்க முடியாத படி செய்வதோடு இதற்குப் பதிலாக ஆணுக்கும் பெண்ணுக் கும் வேறு தொழிலையும் கொடுக்காமல் இருக்கிருேம். ஆகையால், இந்நாட்டு மக்களில் பத்தில் ஒரு பகுதியினர் கொடூரமாக அரைப் பட்டினி கிடப்பதோடு மீதமிருப்போரில் பெரும்பாலான வர்கள் வயிற்றுக்குப் போதுமான உணவில்லாமல் இருப்பதில் ஆச்சரியம் இல்லை. மத்தியதர வகுப்பினர் வயிற்றுக்குப் போதிய உணவில்லாமல் இப்பொழுதே கஷ்டப்படுகிருர்கள். நமது குழந்தைகளுக்கு, வயிற்றுக்குப் போதுமான பால் இல்லை. கண்ணுள்ளவர்கள் யாரும் இதைக் கண்டறிய முடியும். அரசியல் சீர்திருத்தத் திட்டம், என்னதான் தாராளமானதாக இருந்தபோதிலும், உடனடியாக நமக்கு இருந்து வரும் பிரச்னை யைத் தீர்ப்பதற்கு அது உதவப் போவதில்லை. ஆனுல், சுதேசி இப்பொழுதே இப் பிரச்னையைத் தீர்க்க முடியும்.

இப்பிரச்னையைத் தீர்க்கும் வழியைப் பாஞ்சாலம் எனக்கு மிகவும் தெளிவாகக் காட்டியிருக்கிறது. பாஞ்சாலத்தின் அழ கிய பெண்கள், தங்கள் கை விரல்களின் ஆற்றலை இழந்துவிடா

மல் இன்னும் இருந்து வருவதற்காக நாம் கடவுளுக்கு நன்றி செலுத்த வேண்டும். பணக்காரராயினும் ஏழைகளாயினும் நூற்கும் கலையை அவர்கள் இன்னும் அறிந்தே இருக்கிறார்கள். அநேக குஜராத்திப் பெண்கள் செய்துவிட்டதைப் போன்று இவர்களும் தங்கள் கைராட்டைகளை அடுப்பெரித்துவிடவில்லை. நூற்பந்துகளை இப்பெண்கள் என் மடியில் சொரிந்தது எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியை அளித்தது. நூற்பதற்கும் தங்களுக்கு அவகாசம் இருக்கிறது என்று இப்பெண்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள். கையினால் நூற்ற நூலைக் கொண்டு தயாரித்த கதர், யந்திரத்தில் தயாரித்த நூலினாலான துணியைவிட உயர்வானது என்றும் அவர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள். நமது மூதாதைகளுக்கு, வெளிநாடுகளிலிருந்து துணிகளை வாங்கும் அவசியமே இல்லாமல், கொஞ்ச முயற்சியினால் முழு சௌகரியத்துடன் தங்களுக்கு வேண்டிய துணிகளைத் தாங்களே தயாரித்துக் கொள்ள முடிந்தது.

நாம் உடனே விழித்துக்கொள்ளாது போவோமாயின், இந்த அழகான, அதே சமயத்தில் மிக எளிதானதுமான கலை அடியோடு அழிந்துபோய்விடும் அபாயம் ஏற்பட்டிருக்கிறது. இக்கலையினால் என்ன சாதிக்க முடியும் என்பதைப் பாஞ்சாலம் எடுத்துக் காட்டுகிறது. ஆனால், பாஞ்சாலமும் அதனிடம் கொண்டிருக்கும் பிடிப்பை அதிக வேகமாக இழந்துவருகிறது. கையினால் நூற்கும் நூலின் உற்பத்தி ஆண்டுக்கு ஆண்டு அங்கே குறைந்துகொண்டு வருகிறது. நமது வீடுகளில் வறுமை அதிகமாவதோடு நாம் வேலையில்லாது சோம்பியிருப்பதும் அதிகமாகிறது என்பதுதான் இதன் பொருள். நூற்பதை நிறுத்திவிட்ட பெண்கள், தங்கள் நேரத்தை இதைவிடச் சிறந்த வேலை எதிலும் ஈடுபடுத்தி விடவில்லை; வெறும் பேச்சுப் பேசுவதைத் தவிர சிறந்த வகையில் வேறு எதுவும் செய்யவுமில்லை.

ஆனால், இக்கேட்டிலிருந்து மீள வேண்டுமானால், ஒரு காரியம் அவசியம். படித்த ஒவ்வொரு இந்தியரும் தமது முதல் கடமை இன்னதென்பதைத் தெளிவாக உணர்ந்து கொள்ளுவாராயின், தம் வீட்டுப் பெண்களுக்கு கைராட்டை வாங்கிக் கொடுப்பதோடு நூற்கும் கலையை அவர்கள் கற்றுக் கொள்ளுவதற்கான ஏற்பாடுகளையும் செய்வார். அன்றாடம் கோடிக்கணக்கான கெஜ நூலை உற்பத்தி செய்துவிடலாம். இத்தகைய நூலினால் தயாரான துணியையே உடுத்துவது என்று படித்த இந்தியர் ஒவ்வொருவரும் உறுதி கொண்டு விடுவாரானால், இந்தியாவில் சாத்தியமானதாக இருக்கும் ஒரே கிராமக் கைத்தொழிலை அவர் ஆதரிப்பதாவதோடு அது புனருத்தாரணம் அடைவதற்கு உதவியவருமாவார்.

கிராமக் கைத்தொழில் இல்லையாயின் இந்திய விவசாயிகள் அழிந்துவிடுவார்கள். நிலத்தில் கிடைப்பதைக் கொண்டு மாத்திரம் விவசாயி வாழ்ந்துவிட முடியாது. உதவிக்கு வேறு

தொழிலும் அவருக்கு அவசியம். நூற்பதுதான் எளிதானது, மலிவானது, மிகச் சிறந்தது.

இவ்விதம் செய்வதென்பது நமது மனப்போக்கில் ஒரு புரட்சி உண்டாவதேயாகும் என்பதை நான் அறிவேன். இது ஒரு புரட்சியே என்பதனாலேயே சுயராஜ்யத்தை அடைவதற்கு இருக்கும் வழி சுதேசியின் மூலமே என்று நான் கூறுகிறேன். ஆண்டுக்கு அறுபது கோடி ரூபாயை மிச்சம் பிடித்து, அப்பெரும் தொகையைத் தங்களது நூற்போர், நெசவாளர்களிடையே அவர்களது வீடுகளிலேயே வினியோகித்துவிடக்கூடிய ஒரு நாட்டின் மக்கள், தங்களுடைய வளர்ச்சிக்கு வேண்டிய மற்ற எல்லாவற்றையும் செய்துகொள்ளுவதற்கு வேண்டிய நிர்வாகத் திறமை, தொழில் சக்தியைப் பெற்றவர்களாகி விடுவார்கள்.

ஆனால், கனவுலகத்திலிருக்கும் சீர்திருத்தவாதியோ, "பொறுப்பாட்சியை நான் பெறும் வரையில் பொறுங்கள். நம் பெண்கள் நூற்று, நம் நெசவாளர்கள் நெய்ய வேண்டிய அவசியமே இல்லாமல் இந்தியாவின் கைத்தொழிலைப் பாதுகாத்துவிடுகிறேன்'' என்று மெள்ளச் சொல்லுகிறார். சிந்தனை சக்தியுள்ளவர்கள் இப்படித்தான் சொல்லி வருகிறார்கள். இத்தகைய யோசனையில் இரண்டுவிதத் தவறுகள் இருக்கின்றன. வெளிநாட்டுச் சரக்குக்குப் பாதுகாப்புத் தீர்வை விதிக்கப்படும் என்பதற்காக இந்தியா காத்துக் கொண்டிருக்க முடியாது. அத்தகைய பாதுகாப்பு துணி விலையைக் குறைத்துவிடாது. இரண்டாவதாக, வெறும் பாதுகாப்பு மாத்திரம் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு நன்மை செய்துவிடாது. நூற்கும் தொழிலைத் திரும்பவும் அவர்கள் அடையும்படி செய்து, அவர்களுடைய வருவாய் அதிகரிக்கும்படி செய்வதனாலேயே அம்மக்களுக்கு உதவி செய்ய முடியும். ஆகையால், பாதுகாப்பு வரி இருந்தாலும் சரி, இல்லாது போனாலும் சரி, அப்பொழுதும் நாம் கையினால் நூற்கும் தொழிலைப் புதுப்பித்துக் கை நெசவுக்கும் ஊக்கம் அளித்தே ஆக வேண்டும்.

உலக யுத்தம் தீவிரமாக நடந்து கொண்டிருந்த போது அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் கிடைத்த ஆட்கள் எல்லோரையும் கப்பல் கட்டும் தொழிலிலேயே ஈடுபடுத்தினார்கள்; அவர்களும் ஆச்சரியப்படதக்க வேகத்தில் கப்பல்களைக் கட்டி முடித்தார்கள். நான் சொல்லுகிறபடி எல்லோரும் செய்வதாயிருந்தால், ஒவ்வொரு இந்தியரும் நூற்கவோ நெய்யவோ கற்றுக்கொள்ளும்படி செய்வேன். தினம் குறிப்பிட்ட நேரத்திற்கு ஆணும் பெண்ணும் அந்த வேலை செய்தாக வேண்டும் என்றும் செய்வேன். பள்ளிக்கூடங்களும் கல்லூரிகளும் உடனடியாக இதற்கு ஏற்ற ஒழுங்கான ஸ்தாபனங்களாக இருப்பதால் இந்த வேலையை அவற்றிலேயே முதலில் ஆரம்பிப்பேன்.

நெசவாலைகளைப் பெருக்குவதால் இந்தப் பிரச்னை தீர்ந்துவிடாது. வீணாக வெளியில் போய்க் கொண்டிருக்கும் நம் பணத்தைத் தடுத்து நிறுத்த நெசவாலைகளுக்கு நீண்ட காலமாகும். அதோடு அறுபது கோடி ரூபாய் நம் வீடுகளிலேயே இருந்துவிடும்படி செய்யவும் நெசவாலைகளால் முடியாது. பணமும் தொழிலாளரும் சில இடங்களில் குவிந்து நிலைபெற்று விடும்படிதான் அவைகளால் செய்ய முடியும். இதனால், இருக்கும் சீர்கேடான நிலைமை இன்னும் அதிகச் சீர்கேடாக்கத் தான் முடியும்.

—'எங் இந்தியா' 10—12—1919

## 6

# அதற்கான வழிகள்*

தேசீய வாரம், 13-ஆம் தேதி செவ்வாய்க்கிழமை முடிவடைந்தது. ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை, ரௌலட் சட்டத்தை ரத்துச் செய்யும்படி செய்வது என்பதில் கொண்டுள்ள உறுதி, சத்தியாக்கிரக உணர்ச்சி ஆகியவைகளைத் தேசீய வாரம் எல்லா வகைகளிலும் அற்புதமான வகையில் எடுத்துக் காட்டுவதாக இருந்தது. அச்சமயம் செய்த சொற்பொழிவுகள், முன்பிருந்ததைவிட நிதானத்தோடு கூடியதாகவும் விஷயத்தைப் பொறுத்ததாகவும் இருந்தன. கூட்டங்களைக் குறித்து நமக்குக் கிடைத்திருக்கும் தகவல்களிலிருந்து பொதுக்கூட்டம் எதிலும் குழப்பம் என்பதே கிடையாது.

என்றாலும், சுதேசியைப் பற்றி என்ன? சத்தியாக்கிரக உணர்ச்சியிலிருந்தும் நடவடிக்கைகளிலிருந்தும் பிறந்த ஒன்றல்லவா சுதேசியும்? அப்படிப் பிறந்ததே என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால், மற்றவைகளையெல்லாம்விட சிறந்த ஆக்க வேலை சுதேசி. இதில் உருப்படியான வேலைக்குத்தான் அதிக இடமேயன்றிப் பிரசங்கங்களுக்கு இதில் அதிக இடமில்லை. பிரசங்கங்களினாலோ, ஆர்ப்பாட்டங்களினாலோ ஆண்டுக்கு ஐம்பது கோடி ரூபாயைப் பாதுகாத்துவிட முடியாது. வருடந்தோறும் பாழாகிக் கொண்டிருக்கும் இப்பணத்தைப் பாதுகாப்பதில் இன்னும் அதிக முக்கியமானவைகளும் அடங்கியிருக்கின்றன. இந்தியப் பெண்களின் மானத்தைப் பொறுத்த விஷயம் இது. ஆலைகளில் வேலை செய்யும் பெண்கள், எத்தனையோ கேடுகளுக்கும் ஆபத்துக்களுக்கும் இலக்காகி விடக்கூடிய நிலைமையில் இருந்து வருகின்றனர். அப்படிப்பட்ட நிலைமை அவர்களுக்கு இருக்கவே கூடாது. ஆலைத்தொழிலில் கொஞ்சம்

---

* இக்கட்டுரையும் 'எங் இந்தியா'வில் 'சுதேசி' என்ற தலைப்பிலேயே வெளியாயிற்று. இதற்கு இந்நூலில் வேறு தலைப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

சம்பந்தமுள்ள ஒவ்வொருவரும் இதை அறிவார்கள். தங்கள் வீடுகளிலேயே இருந்து செய்யக்கூடிய எந்த வேலையும் கிடைக்காத காரணத்தால் அநேக பெண்கள் சாலைகள் போடும் வேலையை ஏற்றுக்கொள்ளுகின்றனர். இந்த வேலைகளில் பெண்களுக்கு என்ன அபாயங்கள் இருக்கின்றன என்பதை, இந்த வேலை என்ன என்பதை அறிந்தவர்களே அறிய முடியும். பெண்களுக்கு நூற்கும் ராட்டையைக் கொடுங்கள்; உட்கார்ந்து ராட்டையில் நூற்பதைத் தவிர பெண்கள் யாரும் வேறு எந்த வேலையையும் தேடிப் போகவேண்டிய அவசியமே இல்லை. விவசாயத்திற்கு அடுத்தபடியான முக்கியமான ஒரு தொழிலின் மூலம் செல்வம் எல்லோருக்கும் சமமாகப் பரவும்படி செய்வது என்பதே சுதேசி என்பதற்குப் பொருள். பயிர்த் தொழிலுக்கு உதவும் துணைத் தொழிலாக இருக்கிறது இது. ஆகையால், வளர்ந்து வரும் வறுமைப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு இது அதிக அளவு தானே உதவுவதாக இருக்கிறது. ஆகவே, சுதேசியே நமது உண்மையான காமதேனு. நமக்குத் தேவையானவைகளை யெல்லாம் அது அளிப்பதோடு கஷ்டமான நமது பிரச்னைகள் பலவற்றையும் அது தீர்த்து வைக்கிறது. நமது மானத்தைக் காத்து, நமக்குப் பிழைப்பையும் அளிக்கும் இத்தொழில், ஒரு தெய்வீகக் கடமையுமாகிறது.

இந்த மகத்தான லட்சியத்தை அடைவது எப்படி? இதற்கு விடை எளிதானது. இப் பிரச்னையின் முக்கியத்தை உணருகிறவர்கள், கீழ்க்கண்ட வழிகள் எல்லாவற்றிலுமோ அல்லது சிலவற்றிலோ வேலை செய்ய ஆரம்பிக்க வேண்டும்:

1. ஆண்களாயினும் பெண்களாயினும், நீங்கள் ஒவ்வொருவரும் நூற்கக் கற்றுக்கொள்ள வேண்டும். உங்களுக்குப் பணம் தேவைப்பட்டால், இதில் உங்கள் உழைப்புக்கு ஊதியம் பெறுங்கள். இல்லையானால், ஒரு நாளைக்கு ஒரு மணி நேர உழைப்பை நாட்டுக்கு நன்கொடையாக அளியுங்கள்.

2. பொழுது போக்காகவேனும் அல்லது ஜீவனத்திற்காக என்றாலும், நீங்களே நெய்வதற்கும் கற்றுக்கொள்ளுங்கள்.

3. இப்பொழுது இருக்கும் கைத்தறியிலும் நூற்கும் ராட்டைகளிலும் அபிவிருத்திகளைச் செய்யுங்கள். நீங்கள் பணக்காரர்களாக இருப்பின், அந்த அபிவிருத்திகளைச் செய்கிறவர்களுக்குப் பணம் கொடுங்கள்.

4. சுதேசி விரதம் பூண்டு, கையினால் நூற்றுக் கையினாலேயே நெய்த துணியை உபயோகித்து ஆதரியுங்கள்.

5. இத்தகைய துணியை உங்கள் நண்பர்களும் உபயோகிக்கும்படி செய்யுங்கள். இத் துணியிலிருக்கும் நூல் உங்கள் ஏழைச் சகோதரிகளால் தயாரிக்கப்பட்டதாகையால், இதி

லேயே அதிகக் கலைத் திறனும் காருண்யமும் இருக்கின்றன என்று நம்புங்கள்.

6. நீங்கள் மக்களைப் பெற்றெடுத்த தாய்மாராக இருப்பின், உங்கள் குழந்தைகளுக்குப் புனிதமான தேசீய கலாசாரத்தை அளித்து அவர்கள் அழகான கதரினாலான ஆடைகளை அணியச் செய்வீர்கள். கதர், லட்சக்கணக்கானவர்களுக்குக் கிடைக்கக் கூடியதாவதோடு அது மிக எளிதாகவும் உற்பத்தி செய்துவிடக் கூடியதாகும்.

அப்பொழுது சுதேசி என்பது, ஒவ்வொரு பகுதியும் மற்றொன்றுடன் நன்றாக ஒன்றுபட்டு வேலை செய்வதான மிகவும் ஒழுங்கான ஸ்தாபனத்தை உண்டாக்கியதாகும். அத்தகையதோர் ஸ்தாபனத்தை அமைத்து விடுவதில் நாம் வெற்றி பெற்று விடுவோமாயின், சுதேசியின் வெற்றி நிச்சயமாவதோடு உண்மையான சுயராஜ்யம் நமக்குத் தானே வந்து சேருவதும் நிச்சயம் என்றாகிவிடும்.

—'எங் இந்தியா' – 21—4—1920

# 7

# கதரின் உபயோகங்கள்

சுதேசி இயக்கம் அமோகமாக முன்னேறிக்கொண் டிருக்கும் இச்சமயத்தில், ஹிந்துக்களைப் போன்றே முஸ்லிம்களும் இதில் தீவிரமாக ஈடுபட்டுவரும் இக் காரியத்தில், சுதேசியை அபிவிருத்தி செய்வதற்கான சிறந்த முறைகளைக் கவனிக்க வேண்டியது அவசியமாகிறது. நமது தேவைக்குப் போதுமான துணியை நாம் உற்பத்தி செய்யவில்லை என்பதைச் சுதேசியத்தைக் குறித்து எதுவுமே தெரியாதவர்களும் அறிவார்கள். ஆகையால், மில் துணிகளை மாத்திரம் நாம் உபயோகிப்பதாக இருந்தால், ஏழைகளுக்குத் தேவையான துணி அவர்களுக்குக் கிடைக்காதபடி செய்துவிட்டவர்களாவோம். அப்படியில்லாவிட்டாலும், ஆலைகளில் தயாராகும் துணிகளின் விலையையாவது உயர்த்திவிட்டவர்களாவோம். எனவே, சுதேசியை ஊக்குவிப்பதற்குள்ள ஒரே வழி, இன்னும் அதிகமாகத் துணியை உற்பத்தி செய்வதாகும். மில்கள் காளான்களைப் போல் வளர்ந்துவிட முடியாது. ஆகையால், கை நெசவுக்கும் கையினால் நூற்ற நூலுக்கும் நாம் திரும்பித்தான் ஆகவேண்டும். நூலுக்கு இப்பொழுது இருப்பதைப் போல என்றுமே இவ்வளவு கிராக்கி இருந்திராது. நூலில் ஆலைகள் ஏராளமாக லாபம் சம்பாதித்து வருகின்றன. கையினால் நூற்பது அதன் உற்பத்திக்கு உதவி செய்வதோடு அதன் விலையையும் மலிவாக்குகிறது.

எப்படி நூலை நூற்பது, எவ்விதம் துணியை நெய்வது என்ற கேள்வி பிறகு எழுகிறது. சாதாரண ரகக் கதர்த் துணியே

உடுத்துவதற்கு ஏற்ற துணி என்பது ஒப்புக்கொள்ளப்பட்டுவிடுமானால், கையினால் நூற்ற நூலையும் கையினால் நெய்த துணிகளையும் கடைகளில் ஏராளமாக நிரப்பிவிடுவது சாத்தியமே. என் சொந்த அனுபவத்திலிருந்து இதை நான் அறிவேன். வட இந்தியாவில் இத்துணியைக் கதர் என்கிறார்கள். பம்பாய் மாகாணத்திலோ இதைக் காதி என்கின்றனர். கதரைக் கொண்டு புடவைகள் தயாரித்துவிடுவதும் சாத்தியம் என்பதைச் சரளா தேவி காட்டியிருக்கிறார். இதற்காக அவருக்கு நன்றி. தேசீய வாரத்தில் தாம் கதர்ப் புடவை உடுத்திக் கதர் ரவிக்கை போட்டுக்கொள்ளுவதுதான் சரி என்று அவர் எண்ணினார். அவர் அப்படியே செய்தார். கதர்ப் புடவை கட்டிக்கொண்டே விருந்து போன்ற வைபவங்களுக்கும் போனார். அப்படிச் செல்ல முடியாது என்று நண்பர்கள் எண்ணினார்கள். மிகச் சிறந்த பட்டையும் டாக்கா மஸ்லினையும் தவிர வேறு எதையுமே அணிந்தறியாத பெண், கனமான கதரின் பளுவைத் தாங்கவே முடியாது போகும் என்றும் அவர்கள் எண்ணினார்கள். இதெல்லாம் வீண் பயங்கள் என்று அவர் நிரூபித்துவிட்டார். பட்டுப் புடவை கட்டியிருந்த போது இருந்ததைவிட கதர்ப் புடவை கட்டிய சமயத்தில் அழகில் குறைந்துவிடவில்லை; சுறுசுறுப்பாக வேலை செய்வதிலும் இவருக்கு இடையூறு இல்லை. இவர் கதர்ப் புடவை கட்டிக்கொண்டிருந்ததைப் பார்த்த இவருடைய பெரிய தகப்பனார் டாக்டர் ரவீந்திரநாத டாகுர், "நீ கட்டியிருக்கும் புடவை உனக்கு நன்றாக இல்லை என்ற எண்ணம் உனக்கு இல்லை என்றால், அதோடு நீ எங்கு வேண்டுமானாலும், எந்த விருந்துக்கும் போகலாம். அது உனக்கு அழகாகவே இருப்பதை நீ காண்பாய்" என்று கூறி இவரை வாழ்த்தினார். இந்தியாவில் கலையுணர்ச்சி மிகுந்தவர்களான இருவர், கதரில் அழகின்மை எதையும் காணவில்லை என்பதைக் காட்டுவதற்காகவே இப் புனிதமான சம்பவத்தை இங்கே குறிப்பிடுகிறேன். இந்தத் துணியைத்தான் நாகரிகம் வாய்ந்த இந்தியக் குடும்பங்களில் புகுத்த நான் முற்பட்டிருக்கிறேன். ஏனெனில், சிசுப் பிராயத்திலிருக்கும் சுதேசி இயக்கத்தின் உடனடி வெற்றி இத் துணியை உபயோகிப்பதைப் பொறுத்திருக்கிறது.

கதரில் அடங்கியிருப்பவைகளைப் பார்க்கும்போது, மிக மேன்மையான டாக்கா மஸ்லினைவிடக் கதரில் கலை அழகு அதிகமாக இருப்பதாகவே, என்னைப் பொறுத்த வரையில் தோன்றுகிறது. பட்டினியாகக் கிடக்கும் மக்களுக்கு இன்று கதர் உதவியளிக்கிறது. மானம் குலைந்த வாழ்க்கையிலிருந்து மீட்கப்பட்ட பெண்களுக்கும், வெளியே போய் வேலை செய்ய முடியாததால், வேலை எதுவுமில்லாமல் சோம்பிக் கிடந்து தங்களுக்குள் சச்சரவிட்டுக்கொண்டிருக்கும் பெண்களுக்கும் கதர் உதவுகிறது. ஆகையால், கதருக்கு ஆன்மா உண்டு. அது தனிச் சிறப்பு வாய்ந்தது. அதை உற்பத்தி செய்வதில் ஈடுபட்ட ஒவ்வொரு தனி நபரைக் குறித்தும் கதரை அணிபவர் அறிய முடிகிறது.

நமது ரசனை உணர்ச்சி கேவலமாகிவிட வில்லையென்றால், கோடைக் காலத்திற்குக்கூட, பிசுபிசுப்பாக இருக்கும் காலிகோத் துணியைவிடக் கதரையே நாம் விரும்புவோம். இப்பொழுது கதரை உபயோகிப்பவர்கள், அவர்கள் விரும்பினால், நான் கூறுவதிலுள்ள உண்மைக்கு அத்தாட்சி அளிக்கட்டும்.

—'எங் இந்தியா' —21—4—1920

## 8

# கைராட்டையின் கீதம்

இந்தியாவின் மிகப் புராதனமானது என்று சொல்லக்கூடிய யந்திரத்தின் கீதம், மெதுவாகவேயாயினும் நிச்சயமாக, சமூகத்தில் மீண்டும் பரவி வருகிறது. இந்தியாவின் ராணிகளும் மகாராணிகளும் நாட்டின் நன்மைக்காக நூல் நூற்று, ராஜாக்களும் மகாராஜாக்களும் கைத்தறிகளில் உட்கார்ந்து நாட்டிற்காகத் துணி நெய்ய ஆரம்பிக்கும் வரையில் தாம் திருப்தியடைந்து இருந்துவிடப் போவதில்லை என்று பண்டித மாளவியாஜி கூறுகிறார். ஔரங்கசீப் தமக்கு வேண்டிய குல்லாய்களைத் தாமே தயாரித்துக்கொண்டார். இந்த உதாரணம் அவர்களுக்கு இருந்து வருகிறது. கபீரும் பெரிய சக்கரவர்த்தி. அவரும் நெசவு நெய்தவரே. தமது காவியங்களில் அவர் அக்கலையின் பெருமையைச் சிரஞ்சீவியானதாக்கியிருக்கிறார். ஐரோப்பா, சைத்தானின் வலையில் சிக்கிக்கொள்ளுவதற்கு முன்னால், ஐரோப்பிய ராணிகளும் நூல் நூற்றே வந்தனர்; அதைக் கௌரவமான தொழிலாகவும் கருதினர். கன்னிப் பெண்களுக்கு 'ஸ்பின்ஸ்டர்' (நூற்பவள்) என்றும் மனைவிக்கு 'ஒயிப்' என்றும் ஆங்கிலத்தில் சொற்கள் இருப்பதும் பண்டைக் காலத்தில் நூற்கும், நெய்யும் கலைக்கு இருந்த கௌரவத்தையே நிரூபிக்கின்றன. 'ஆதாம் பூமியை உழுதுகொண்டு ஏவாள் நூற்றுக்கொண் டிருந்தாள். என்றால் இங்கிலையில் கனவான் யாரே' என்ற ஆங்கில முதுமொழியும் அந்த உண்மையையே நினைவூட்டுகிறது. தெய்வீகமானதான நம் நாட்டின் புராதன இத்தொழிலைச் செய்து வரும்படி இந்தியாவின் ராஜ குடும்பத்தினர்களைத் தூண்டிவிடலாம் என பண்டிதஜி நம்புவது நல்லதே. நாட்டிற்குச் சுபிட்சமும் உண்மையான சுதந்திரமும் திரும்ப ஏற்படுவது ஆயுதப் போராட்டத்தைப் பொறுத்தது அல்ல. இது, ஒவ்வோர் வீட்டிலும் திரும்பவும் நூற்கும் ராட்டையின் கீதம் தொனிக்கும்படி செய்வதையே பெரும்பாலும் பொறுத்திருக்கிறது. வெறுக்கத்தக்கதான ஆர்மோனியம் போன்ற வாத்தியங்களின் கீதங்களைவிட ராட்டை இனிமையான, மிகவும் லாபகரமான கீதத்தை அளிக்கிறது.

இந்திய ராஜ குடும்பத்தினர் ராட்டையில் நூற்கும்படி செய்வதற்காக பண்டிதஜி, தமக்கே உரியதான இனிய வழியில்,

முயற்சி செய்துகொண்டு வருகிறார். அதே சமயத்தில் இந்திய பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்தவரேயான ஸ்ரீமதி சரளா தேவி சௌத்ராணி, நூற்கும் கலையைத் தாமே கற்றுக்கொண்டு விட்டதோடு இந்த இயக்கத்தில் முழு மனப்பூர்வத்துடன் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார். அவரிடமிருந்தும், மற்றவர்களிட மிருந்தும் கிடைத்துவரும் தகவல்களிலிருந்து சுதேசி அவருக்கு வெறியாகவே ஆகிவிட்டதெனத் தெரிகிறது. மஸ்லின் புடவைகளைக் கட்டிக்கொள்ளுவது தமக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை என்றும், கோடையிலும் கதர்ப் புடவை கட்டிக்கொள்ளுவது தான் தமக்குத் திருப்தியாக இருக்கிறது என்றும் அவர் கூறுகிறார். அவர் வாயினால் செய்யும் பிரசாரத்தைவிட அவருடைய கதர்ப் புடவைகளே சுதேசிப் பிரசாரத்தை இன்னும் அதிகப் பலமாகத் தொடர்ந்து செய்து வருகின்றன. அமிர்தசரஸிலும் லூதியானாவிலும் மற்ற இடங்களிலும் அவர் பிரசங்கம் செய்தார். அமிர்தசரஸிலுள்ள தமது நூற்புக் கழகத்தில் ஸ்ரீமதி ரதன் சந்த், ஸ்ரீமதி புக்கா சௌத்ரி, கீர்த்தி வாய்ந்தவரான ரத்தின தேவி ஆகியோர் சேர்ந்து சேவை செய்யும்படி செய்வதில் அவர் வெற்றி பெற்றிருக்கிறார். இவ்வீரப் பெண்மணியான ரத்தின தேவி, ஏப்ரல் 30–ஆம் தேதியன்று ஜெனரல் டயரின் ஊரடங்குச் சட்டத்தையும் பொருட்படுத்தாமல் நூற்றுக்கணக்கான பிணங்களுக்கும், செத்துக்கொண் டிருப்பவர்களுக்கும் நடுவே தன்னந்தனியாக இருந்துகொண்டு, இறந்த தமது கணவரின் சில்லிட்டுப் போன தலையைத் தம் மடியில் வைத்துக் கொண்டு அப்பயங்கரமான இரவெல்லாம் உட்கார்ந்திருந்தவர். அப்பெண்மணிகளுக்கு எனது பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நூற்கும் ராட்டையின் கீதத்தினாலும், தேசீயப் பணியாற்றி வருகிறோம் என்ற எண்ணத்தினாலும் அவர்கள் மன ஆறுதலை அடைவார்களாகுக. அமிர்தசரஸிலிருக்கும் மற்றப் பெண்மணிகளும் சரளா தேவியின் முயற்சிக்கு உதவி செய்வார்கள் என்றும், அமிர்தசரஸின் ஆண்கள் இவ்விஷயத்தில் தங்கள் கடமையை உணர்வார்கள் என்றும் நம்புகிறேன்.

பம்பாயில் பிரபலமான குடும்பங்களைச் சேர்ந்த பெண்மணிகள் நூற்க ஆரம்பித்துவிட்டார்கள் என்பதை வாசகர்கள் அறிவார்கள். டாக்டர் ஸ்ரீமதி மாணிக்கபாய் பகதூர்ஜியும் இவர்களுடன் சேர்ந்திருக்கிறார். அவர், இக்கலையை இதற்குள் கற்றுக்கொண்டுவிட்டதோடு சேவா சதனத்திலும் இதைக் கற்றுக் கொடுக்க இப்பொழுது முயற்சி செய்து வருகிறார். ஜான்ஸி ராணி பீகம் சாகபாவும் அவருடைய சகோதரி ஸ்ரீமதி அதியா பீகம் ரகிமானும் இக்கலையைக் கற்றுக்கொள்ள முற்பட்டிருக்கிறார்கள். இந்த நல்ல சீமாட்டிகள், நூற்கக் கற்றுக் கொண்டு, நாட்டிற்கு அளிக்க வேண்டிய அன்றாட நூற்புக் கடமையை நிறைவேற்றி வருவார்கள் என்று நம்புகிறேன்.

இம்மகத்தான கலையைப் புதுப்பிக்கச் செய்யப்பட்டு வரும் முயற்சியைக் கண்டு நகைக்கும் நண்பர்களும் இருக்கிறார்கள்.

என்பதை அறிவேன். நெசவாலைகளும், தையல் யந்திரங்களும், டைப் அடிக்கும் யந்திரங்களும் மிகுந்திருக்கும் இக்காலத்தில் மிகவும் பழசானதாகிவிட்ட நூற்கும் ராட்டையைத் திரும்பக் கொண்டு வந்துவிடுவதில் வெற்றி பெறலாம் என்று பைத்தியக்காரன்தான் நம்ப முடியும் என்று அவர்கள் எனக்கு நினைவூட்டுகிறார்கள். தையல் யந்திரம் வந்ததனால் ஊசி மறைந்துவிடவில்லை, டைப் அடிக்கும் யந்திரம் வந்தவிட்டதனால் கைக்குள்ள எழுதும் திறமை போய்விடவில்லை என்பதை இந்த நண்பர்கள் மறந்துவிடுகிறார்கள். ஹோட்டல்கள் வந்து விட்ட பிறகும் வீட்டுச் சமையலும் உடன் இருந்துகொண்டு தான் வருகிறது. அதே போல நூற்கும் மில்கள் இருக்கும் போது நூற்கும் ராட்டையும் இருக்க முடியாது என்பதற்குக் கொஞ்சமும் காரணம் இல்லை. டைப் அடிக்கும் யந்திரங்களும் தையல் யந்திரங்களும் போனாலும் போய்விடக்கூடும். ஆனால், ஊசியும் கொருக்காந் தட்டைப் பேனாவும் நீடித்து இருந்தேவரும். ஆலைகள் அழிந்து போய்விடக்கூடும். நூற்கும் ராட்டையோ நாட்டிற்கு அத்தியாவசியமானது. இதைச் சந்தேகிக்கிறவர்கள், மிகச் சொற்ப வருமானமேயுள்ள ஏராளமான ஏழைகளின் இல்லங்களுக்குப் போய், அந்த ஏழைகளுக்கு ராட்டை மீண்டும் வருவாய் அளித்து வருவதைப் பார்க்கட்டும். நூற்கும் ராட்டை அந்த ஏழைகளின் இல்லங்களுக்கு ஆனந்தத்தைக் கொண்டு வந்திருக்கிறதா, இல்லையா என்பதை அவற்றில் வாழ்வோரையே கேட்டுத் தெரிந்துகொள்ளட்டும்.

ஸ்ரீ ரவேசங்கர் ஜகஜீவன் அளிப்பதாக அறிவித்திருக்கும் பரிசு, கடவுள் அருளால் நற்பயனைக் கொடுக்க ஆரம்பித்திருக்கிறது. சீக்கிரத்தில் புதிய மாறுதல்களோடு கூடிய நூற்கும் ராட்டையை இந்தியா அடையப் போகிறது. பொறுமை மிக்க தக்காணத் தொழில் நிபுணர் ஒருவர் அற்புதமான ராட்டை ஒன்றைக் கண்டுபிடித்திருக்கிறார். சாதாரணமான சமான்களைக் கொண்டு அது தயாரிக்கப்பட்டிருக்கிறது. அதில் சிக்கலானவை எவையுமே இல்லை. அது மிகவும் மலிவானது; பழுதானாலும் எளிதில் சரி செய்துகொண்டுவிட முடியும். சாதாரண ராட்டையைவிட இது அதிக நூல் கொடுக்கும். ஐந்து வயது ஆண் குழந்தையோ, பெண் குழந்தையோகூட அதில் நூல் நூற்கலாம்.

ஆனால் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கும் ராட்டையைப் பற்றிக் கூறப்படும் சாதனங்களெல்லாம் இருந்தாலும் சரி, இல்லாது போயினும் சரி, இந்தியாவின் பொருளாதார, ஆன்மிக முன்னேற்றத்திற்குக் கையினால் நூற்பதும், கையினால் நெய்வதும் பெரிய உதவியை அளிக்கப் போகின்றன என்பதில் மாத்திரம் எனக்குக் கொஞ்சமும் சந்தேகமில்லை. விவசாயத்திற்கும் துணையாக இருக்கக்கூடிய சுலபமான கைத்தொழில் ஒன்று கோடிக்கணக்கான மக்களுக்கு இருந்தாக வேண்டும்.

பல்லாண்டுகளுக்கு முன்னல் நூல் நூற்பது கிராமத் தொழிலாக இருந்து வந்திருக்கிறது. கோடிக்கணக்கான மக்களைப் பட்டினியிலிருந்து பாதுகாக்க வேண்டுமாயின், அவர்களுடைய இல்லங்களில் திரும்பவும் ராட்டை இருப்பதைச் சாத்தியமானதாக்குவதோடு ஒவ்வொரு கிராமத்திற்கும் திரும்பவும் அதன் சொந்த நெசவாளர் இருக்கவும் வேண்டும்.

—'எங் இந்தியா' - 21—7—1921

# 9

# பட்டினியைப் போக்கவல்ல தொழில்

'கைராட்டையின் கீதம்' என்ற தலைப்பின்கீழ் நான் எழுதிய கட்டுரையை 'லீடர்' பத்திரிகை கண்டித்திருக்கிறது. அதோடு நான் சொல்லாத கருத்துக்களையும் நான் சொன்னதாக அது கூறுகிறது. சுதேசியின் உண்மையான பலனைப் புரிந்து கொள்வதற்கு, இப்பொழுது இருந்துவரும் சில தவருன எண்ணங்களைத் திருத்த வேண்டியதும் அவசியமாகிறது. கையினல் நெய்த துணியையும் கையால் நூற்ற நூலையும், மில் துணிக்கும் மில்லில் நூற்ற நூலுக்கும் பதிலாகக் கொண்டுவந்து முன்னேற்றத்தைத் தடுக்க நான் முயற்சிக்கிறேன் என்று 'லீடர்' கருதுகிறது. அத்தகைய முயற்சி எதையும் நான் செய்துவரவே இல்லை. மில்களுடன் எனக்கு எந்தச் சண்டையும் இல்லை. என்னுடைய கருத்துக்கள் மிகவும் தெளிவானவை. ஆண்டுக்கு, ஆளுக்குச் சுமார் பதின்மூன்று கஜம் துணி வீதம் இந்தியாவுக்குத் தேவை. தேவைப்படும் இத் துணியின் அளவில் பாதிக்கும் குறைவாகவே நம் மில்கள் தயாரிக்கின்றன என்று எண்ணுகிறேன். ஜப்பானுக்கும் லங்காஷயருக்கும் பல லட்சம் பொதிகள் பருத்தியை இந்தியா ஏற்றுமதி செய்கிறது. இந்தியா தனக்குத் தேவைப்படும் துணி முழுவதையும் கையினல் நூற்று, நெய்வதன் மூலம் பூர்த்திசெய்து கொண்டுவிட முடியும். என்ருலும், தான் ஏற்றுமதி செய்யும் பருத்தியில் பெரும் பகுதியைத் துணியாக இந்தியா வாங்கிக்கொள்ளுகிறது. இந்திய மக்களின் முக்கியமான தொழில் விவசாயம். அதோடு மேலும் கொஞ்சம் வருமானம் தருவதாக இருக்கக்கூடிய ஏதாவது ஒரு தொழில் அவர்களுக்குத் தேவை. கோடிக்கணக்கான மக்களுக்கு அப்படி உதவியாக இருக்கக்கூடிய ஒரே தொழில், கையினல் நூற்பதேயாகும். ஒரு நூற்ருண்டுக்கு முன்னல் இத் தொழில் நாட்டுக்குகந்த தேசீயத் தொழிலாக இருந்தது. பொருளாதாரக் கஷ்டங்களும் இக்கால யந்திரங்களும், கையினல் நூற்பதையும் கையினல் நெய்வதையும் அழித்துவிட்டன என்று சொல்லுவது உண்மையாகாது. கிழக்கு இந்தியா கம்பெனி அனுசரித்த அசாதாரணமான, அக்கிரமமான முறைகளினலேயே இம் மகத்தான தொழில் அழிக்கப்பட்டுவிட்டது; அநேகமாக அழிந்துவிட்டது.

சிரமமெடுத்துக்கொண்டால், மக்களின் மனப்பான்மையில் கொஞ்சம் மாறுதல் ஏற்பட்டால், ஆலைத் தொழிலுக்குத் தீங்கு ஏதும் இல்லாமலேயே இத்தேசீயத் தொழிலுக்குப் புத்துயிரளித்துவிட முடியும். ஆலைகளை அதிகமாக்குவது என்பது, துணிப் பற்றுக் குறையைப் போக்கிக்கொள்ளுவதற்கு இப்பொழுதுள்ள பரிகாரமாகாது. கையினல் நூற்று, கையினல் நெய்வதன் மூலம் மாத்திரமே இத் துணிப் பற்றுக் குறையை எளிதில் பூர்த்தி செய்ய இயலும். இந்தத் தொழில் திரும்பவும் நிலவும்படி செய்யப்படுமாயின், ஆண்டுதோறும் அறுபது கோடி ரூபாய் நாட்டிலிருந்து வெளியே போய்விடுவதை அது தடுத்து, அத்தொகையை லட்சக் கணக்கான ஏழைப் பெண்களுக்கு அவர்களுடைய இல்லங்களிலேயே பகிர்ந்து கொடுக்கும். ஆகையால், இந்தியாவின் கொடூரமான ஏழ்மைப் பிரச்னைக்கு, ஓரளவுக்கேயாயினும் தானே தீர்த்து விடக்கூடிய பரிகாரம் சுதேசியமே என்று கருதுகிறேன். மழை இல்லாது போய்விடும் காலங்களில் விவசாயிகளுக்கு உடனே உதவக்கூடியதாக இருப்பதும் இதுவே.

ராட்டை அவசியமானதான இப் புத்துயிரைப் பெறுவதற்கு இரு காரியங்களைச் செய்தாக வேண்டியது முக்கியம். கதர் அணிவதில் ருசி ஏற்படுவதோடு, பட்டை போட்ட பஞ்சை வினியோகிப்பதற்கும், நூற்ற நூலைப் பணம்கொடுத்து வாங்கிக்கொள்ளுவதற்கும் ஒரு ஸ்தாபனத்தையும் நிறுவ வேண்டும்.

ஒரே ஆண்டில் ஒரு சிலருடைய அடக்கமான சேவையின் காரணமாக குஜராத்தில் பல்லாயிரம் ஏழைப் பெண்களிடையே பல்லாயிர ரூபாய்கள் வினியோகிக்கப்பட்டிருக்கின்றன. தங்கள் குழந்தைகளுக்குப் பால் வாங்குவது போன்ற செலவுக்காகும் சில அணுக்களைத் தாங்கள் சம்பாதிப்பதைக் குறித்து அந்த ஏழைப் பெண்கள் ஆனந்தமடைகிறார்கள்.

சர்க்கரை உற்பத்தித் தொழிலுக்கு 'லீடர்' பத்திரிகை அனுசரிக்க முற்பட்டிருக்கும் வாதம் பொருத்தமானதன்று. இந்தியாவின் சர்க்கரைத் தேவையைப் பூர்த்தி செய்வதற்கு வேண்டிய சர்க்கரையை உற்பத்தி செய்வதற்குப் போதுமான கரும்பு இங்கே சாகுபடியாகவில்லை. அதோடு சர்க்கரை செய்வது இந்நாட்டின் தேசீயத் தொழிலாகவும், உதவியான உபரித் தொழிலாகவும் இருந்தது இல்லை. வெளிநாட்டுச் சர்க்கரை, இந்தியச் சர்க்கரை உற்பத்தித் தொழிலை நசுக்கிவிடவுமில்லை. இந்தியாவின் சர்க்கரைத் தேவை அதிகரித்துவிட்டது. அதனல், அதிக சர்க்கரையை இறக்குமதி செய்கிறது. ஆயினும், இந்த இறக்குமதி, துணி இறக்குமதி செய்யும் வகையில் இந்நாட்டுப் பணத்தை வடிகட்டி வெளியில் போய்விடும்படி செய்வதாகவும் இல்லை. சர்க்கரையை இங்கே அதிகமாக உற்பத்தி செய்வதென்றால், விஞ்ஞான ரீதியில் கரும்பை அதிகமாகச் சாகுபடி செய்வதோடு சாறு பிழியவும் சர்க்கரையைச் சுத்தம் செய்யவும் சிறந்த யந்தி

ரங்களும அதிகமாக வேண்டும். ஆகையால், சர்க்கரை உற்பத்தித் தொழில் முற்றிலும் வேருன நிலேயில் இருக்கிறது. சர்க்கரையிலும் சுதேசியம் விரும்பத்தக்கதே. ஆனல், துணியில் சுதேசியம் அவசரமான அவசியமாகும்.

—'எங் இந்தியா' – 18—1—1921

## 10

# பாவத்திற்குப் பிராயச்சித்தம்*

சுதேசியத்தின் அவசியத்தையும், அதை முன்னிட்டு வர்த்தகர்கள் அதிகத் தியாகம் செய்ய வேண்டும் என்றும் வற்புறுத்திக் காங்கிரஸ் தீர்மானம் செய்திருப்பது நியாயமானதே.

சென்ற ஒன்றரை நூற்ருண்டாக இந்தியாவின் செல்வமெல்லாம் சுரண்டிக்கொண்டு போகப்பட்டு வருகிறது. இதை இந்தியா விரும்பி ஆதரித்துக்கொண்டோ, சகித்துக்கொண்டோ இருக்கும் வரையில் இந்தியா சுதந்திரமடைய முடியாது. வெளிநாட்டுச் சரக்குகளைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்பதன் பொருள், வெளிநாட்டுத் துணியைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்பதேதான். நாமாக விரும்பி அனுமதித்துக்கொண்டிருக்கும் சுரண்டலில் மிக அதிகமானதாக இருப்பது, வெளிநாட்டுத் துணியின் மூலம், அதாவது ஆண்டுதோறும் ஐவுளிக்காக அறுபது கோடி ரூபாய் கொடுத்துக்கொண்டிருப்பது. இந்தச் சுரண்டலே நிறுத்திவிடுவதற்கு வெற்றிகரமான முயற்சியைச் செய்வது இந்தியாவிற்குச் சாத்தியமாகுமாயின், அந்த ஒரு காரியத்தினுலேயே அது சுதந்திரத்தை அடைந்துவிட முடியும்.

வெளிநாட்டுத் துணி உற்பத்தியாளரின் பேராசையைத் திருப்தி செய்வதற்காக இந்தியா அடிமைப்படுத்தப்பட்டது. கிழக்கிந்தியா கம்பெனி இங்கே வந்த காலத்தில், நமக்கு வேண்டிய துணியை நாமே உற்பத்தி செய்துகொண்டிருந்ததோடு அதிகமாக ஏற்றுமதியும் செய்துகொண்டிருந்தோம். ஆனல், இப்பொழுதோ, தனக்கு வேண்டிய துணிக்கு முற்றிலும் வெளிநாடுகளின் உற்பத்தியையே நம்பியிருக்கவேண்டிய நிலேயை இந்தியா அடைந்துவிட்டது. இவ்வாறு செய்யப்பட்டுவிட்ட முறையைப் பற்றி இங்கு விவரித்துக்கொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லே.

ஆனல், இவ்விதம் அந்நியரை எதிர்பார்த்து நாம் வாழ வேண்டிய அவசியமே இல்லே. இந்திய மக்கள் மாத்திரம் இதற்கென்று பாடுபட முற்படுவார்களானல், தனக்குத் தேவைப்படும் துணி முழுவதையும் தானே தயாரித்துக்கொண்டுவிடும் சக்தி

* இக்கட்டுரை 'எங் இந்தியா'வில் 'சுயராஜ்யத்தின் ரகசியம்' என்ற தலேப்பில் வெளியாயிற்று. இக்கட்டுரைக்கு இத் தலேப்பு புதிதாகக் கொடுக்கப்பட்டதாகும்.

இந்தியாவுக்கு இருக்கிறது. இந்திய மில்கள் தயாரிப்பதற்கு மேற்கொண்டு வேண்டிய துணியை நெய்துவிடுவதற்குப் போதுமான நெசவாளர்கள் அதிருஷ்டவசமாக இந்தியாவில் இப்பொழுதும் இருந்து வருகிறார்கள். நமக்குத் தேவைப்படும் துணி முழுவதையும் மில்கள் தயாரித்துவிடவில்லை. உடனே உற்பத்தி செய்துவிடவும் முடியாது. இப்பொழுது கூட மில்கள் உற்பத்தி செய்வதைவிட அதிகமான துணியை நெசவாளர்கள் நெய்து வருகிறார்கள். வாசகருக்கு இது தெரியாமல் இருக்கலாம். ஆனால் மில்கள் ஐந்துகோடி கெஜம் உயர்ந்த ரகத் துணியை நெய்கின்றன. இது, சாதாரண ரகத் துணி நாற்பது கோடிக்குச் சமம். அந்நியத் துணி பகிஷ்காரத்தை வெற்றிகரமாக நிறைவேற்றி வைப்பதற்கு வழி, நூல் உற்பத்தியை அதிகரிப்பதேயாகும். கையினால் நூற்பதனால் மாத்திரமே இதைச் செய்ய முடியும்.

இந்த பகிஷ்காரம் நிறைவேறுவதற்கு நம் வியாபாரிகள், வெளிநாடுகளிலிருந்து துணிகளை இறக்குமதி செய்வதையெல்லாம் அடியோடு நிறுத்திவிடவேண்டும். நஷ்டம் வந்தாலும் சரி என்று இந்தியாவில் கையிருப்பில் இருக்கும் அந்நியத் துணி முழுவதையும், அநேகமாக அந்நியர்களிடமே விற்றுவிடவேண்டும். லாபம் சம்பாதிப்பதற்காகப் பருத்தி விலையை ஏற்றி இறக்குவதை வியாபாரிகள் விட்டுவிடவேண்டும். உள்நாட்டுத்தேவைக்கு வேண்டிய பருத்தி முழுவதையும் இங்கேயே வைத்துக்கொள்ள வேண்டும். வெளிநாட்டுப் பருத்தி வாங்குவதையும் அவர்கள் நிறுத்திவிட வேண்டும்.

ஆலைச் சொந்தக்காரர்கள், தங்களுடைய ஆலைகளைத் தேசத்தின் தருமச் சொத்தாக மதித்து வேலை செய்யவேண்டுமேயன்றி லாபத்திற்காக வேலை செய்யக்கூடாது. ஆகையால் அதிக நயமான நூலை நூற்பதையே நிறுத்திவிட்டு உள்நாட்டுத்தேவைக்கான நூலை மாத்திரமே நூற்கவேண்டும்.

குடித்தனக்காரர்கள், நாகரிக உடை என்பதைப் பற்றித் தாங்கள் கொண்டிருக்கும் கருத்தை, இப்போதைக்காவது, மாற்றிக்கொள்ள வேண்டும். மெல்லிய ஆடைகளை அணிவது பெரும்பாலும் உடலை மூடிக்கொள்வதற்காக அல்ல. ஆகையால் அத்தகைய மெல்லிய ஆடைகளை அணிவதை விட்டுவிட வேண்டும். தூய வெள்ளைக் கதராடையிலேயே கலையையும் அழகையும் காணவும், அதன் மிருதுவான கரடுமுரட்டுத் தன்மையைப் போற்றவும் ஒவ்வொருவரும் கற்றுக்கொள்ள வேண்டும். ஒரு லோபி, தான் சேர்த்துவைத்திருக்கும் செல்வத்தை எப்படிக் கருமித்தனமாகச் செலவிடுவானோ அதே போலவே ஒவ்வொரு குடித்தனக்காரரும் துணியைச் சிக்கனமாக உபயோகிக்க கற்றுக்கொள்ளவேண்டும்.

உடை விஷயத்தில் குடித்தனக்காரர்கள் தங்கள் ருசியை மாற்றிக்கொண்டுவிட்ட போதிலும், நெசவாளருக்கு வேண்டிய

நூலையாவது நூற்றே ஆகவேண்டும். ஒவ்வொருவரும் தங்களுடைய ஒழிந்த நேரங்களில் ஆசைக்காகவோ அல்லது பணத்திற்காகவோ நூற்றுவந்தால்தான் இது முடியும்.

நாம் ஓர் ஆன்மிகப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிறோம். நாம் இன்று வாழ்வது சாதாரணமான காலத்தில் அல்ல. அசாதாரணமான காலங்களில் சாதாரணமான நடவடிக்கைகளெல்லாம் நிறுத்தி வைக்கப்படுகின்றன. ஓர் ஆண்டுக் காலத்திற்குள் நாம் சுயராஜ்யத்தை அடைந்துவிடுவது என்றால், நமது மற்ற வேலைகளை யெல்லாம் ஒதுக்கிவைத்துவிட்டு நமது லட்சியம் ஒன்றிலேயே முழுக் கவனத்தையும் செலுத்த வேண்டும் என்றாகிறது. ஆகையால், இந்தியா முழுமையிலும் இருக்கும் மாணவர்கள் எல்லாரும் ஓர் ஆண்டுக்குச் சாதாரணமான தங்கள் படிப்பையெல்லாம் நிறுத்தி வைத்துவிட்டுக் கையினால் நூற்பதன் மூலம் நூலை உற்பத்தி செய்வதில் தங்கள் நேரத்தைச் செலவிட வேண்டும் என்று யோசனை கூறத் துணிந்து முற்படுகிறேன். அவ்வாறு செய்வதே அவர்கள் தாய்நாட்டிற்குச் செய்யும் அரும் பெரும் பணியாவதோடு சுயராஜ்யத்தை அடைவதற்கு இயற்கையாக அவர்கள் செய்யும் பேருதவியுமாகும். நம்மை ஆளுவோர், போன யுத்தத்தின் போது ஒவ்வொரு தொழிற்சாலையையும் ஈயக் குண்டு தோட்டாக்களைச் செய்யும் யுத்த தளவாடத் தொழிற்சாலையாக மாற்றிவிட முயன்றார்கள். நம்முடைய போராட்ட சமயத்தில், ஒவ்வொரு தேசீயப் பள்ளிக்கூடமும் கல்லூரியும் நாட்டிற்காக நூல் குவியல்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளாக மாறிவிட வேண்டும் என்று நான் யோசனை கூறுகிறேன். இவ்வேலையைச் செய்வதால் மாணவர்க்கு எவ்விதமான நஷ்டமும் ஏற்படாது. இம்மையிலும் மறுமையிலும் அவர்கள் இன்பத்தையே அடைவார்கள். இந்தியாவில் துணிப் பஞ்சம் இருக்கிறது. இப்பஞ்சத்தைப் போக்குவதற்கு உதவி செய்வது நிச்சயம் சிறந்த சேவையாகும். வெளிநாட்டு நூலை உபயோகிப்பதில்லை என்றால், தேவைக்கு வேண்டிய நூல் இல்லாது போய் விடும். அந்நிய நூலை உபயோகிப்பது பாவம் என்றால், நமது நூல் பஞ்சத்தைப் போக்கிக்கொள்வதற்கு வேண்டிய சுதேசி நூலை அதிகமாக உற்பத்தி செய்வது புண்ணியமான காரியமேயாகும்.

நூலை உற்பத்தி செய்வது அவசியம் என்றால், ஒவ்வோர் ஏழைக்கும் பணம் கொடுத்து ஏன் நூற்கச் செய்யக்கூடாது? நியாயமாக இவ்வாறு கேட்கப்படலாம். நெசவு வேலையையோ அல்லது தச்சுவேலை முதலானவைகளையோ போலக் கையினால் நூற்பது என்றுமே ஜீவனத்திற்கான ஒரு தொழிலாக இருந்ததில்லை என்பது அந்தக் கேள்விக்குப் பதிலாகும். பிரிட்டிஷ் ஆட்சிக்கு முற்பட்ட இந்தியாவின் பொருளாதாரத்தில் கையினால் நூற்பது இந்தியப் பெண்களுக்குக் கௌரவமானதும், ஒழிந்த நேரங்களில் செய்வதுமான ஒரு வேலையாக இருந்து வந்தது.

நமக்கு இருக்கும் இக்குறுகிய காலத்திற்குள் அக்கலையை நம் பெண்களிடம் திரும்பக் கொண்டுவந்து விடுவதென்பது சிரம மானது. ஆனல், நாட்டின் அழைப்புக்கு உடன்படும்படி பள்ளிச் சிறுவர்களைச் செய்வது மிகவும் எளிதானது; சிரமம் இல்லாதது. இவ்வேலையைச் செய்வது மனிதருக்கோ, மாணவருக்கோ, அவர் களுடைய கௌரவத்திற்கு இழுக்கானது என்று யாரும் இழித்துச் சொல்லிவிட வேண்டாம். இந்தியப் பெண்களுக்கு ஓய்வு நேரம் அதிகமாக இருந்ததனல், இக்கலை அப்பெண்களிடமே இருந்தது. மேலும், இது அழகானது; இன்னிசையோடு கூடியது. இதைச் செய்வதில் உடலுழைப்புச் சிரமமும் அதிகம் இல்லை. ஆகையின லேயே இது பெண்களிடம் ஏகபோகமானதாக இருந்து வந்தது. ஆனல், எவ்வாறு சங்கீதம் இருபாலாரும் கற்கக்கூடிய அழகான கலையோ அதே போலவே இதுவும் இருபாலாருக்கும் அழகான கலை. பெண்களின் கற்புக்குப் பாதுகாப்பு, பஞ்சம் வராமலிருப் பதற்கு உத்தரவாதம், விலைவாசிகளின் மலிவு ஆகியவைகளெல் லாம் கையினல் நூற்பதில் மறைந்து கிடக்கின்றன. சுயராஜ் யத்தின் ரகசியமும் அதில் பொதிந்திருக்கிறது. வெளிநாட்டு உற்பத்தியாளர் காட்டிய சனியன் பிடித்த ஆசைகளில் மயங்கி நம் முன்னேர்கள் பாவம் செய்துவிட்டார்கள். அதற்கு நாம் செய்யக் கூடிய குறைந்தபட்சப் பிராயச்சித்தம் கையினல் நூற்பதைத் திரும்பப் புதுப்பிப்பதுதான்.

பள்ளி மாணவர்கள், கையினல் நூற்பது அதற்குரிய கௌரவமான அந்தஸ்தை அடையும்படி செய்துவிடுவார்கள். கதரை அணிவதே நாகரிகம் என்ற உணர்ச்சி துரிதமாக ஏற் படும்படியும் அவர்கள் செய்து விடுவார்கள். ஏனெனில், தங்கள் குழந்தைகளின் கையால் நூற்ற நூலைக் கொண்டு தயாரான துணியை உடுத்திக் கொள்ள எந்தத் தாயோ, தந்தையோ மறுத்துவிட மாட்டார்கள். மேலும், படித்தவர்கள் இக்கலையை நடைமுறையில் ஏற்றுக்கொண் டிருப்பதானது, இந்திய நெசவாளர்களின் கவனத்தையும் கவர்ந்தே தீரும். சிப்பாயாக இருக்கும் தொழிலில் இருந்தல்ல, ஒரு பாவமுமறியாத மற்ற நாட்டு மக்களைக் கொல்லுபவர்களாக இருந்து வருவதிலிருந்து பஞ்சாபிகளைத் தடுத்து நாம் வெளியேற்றுவதாக இருந்தால், அவர்களுக்கு மீண்டும் நெசவுத் தொழிலை நாம் அளிக்க வேண் டும். பாஞ்சாலத்தில் சாந்தமான ஜுலாகா நெசவாளி வம்சத்தின ரெல்லாம் அழிந்தே போய்விட்டனர். பஞ்சாபி நெசவாளி, தனது பாவமில்லாத தொழிலுக்குத் திரும்புவதைச் சாத்தியமாக்க வேண்டியது பஞ்சாபில் படித்தவர்களாக இருப்பவர்களின் கடமை.

இந்த மாறுதலைப் பள்ளிக்கூடங்களில் கொண்டு வருவது எவ்வளவு சுலபமானது, இம்முறையில் நமது பள்ளிக்கூடங்களை யும் கல்லூரிகளையும் எவ்விதம் துரிதமாகத் தேசீய மயமாக்கி விட முடியும் என்பதை இனி வரும் பத்திரிகை இதழ்களில்

எடுத்துக்காட்டலாம் என எண்ணுகிறேன். தேசீய மயமாக்கப் பட்டுள்ள நம் பள்ளிக்கூடங்களில் புதிதாக என்ன சேர்க்கப் போகிறீர்கள் என்று எல்லா இடங்களிலும் மாணவர்கள் என்னைக் கேட்கிறார்கள். நூற்பதை நிச்சயமாகக் கொண்டு வரப் போகிறேன் என்று நான் எங்குமே கூறி வருகிறேன். முன்னால் செய்யாமல் இருந்துவிட்டதற்கு ஈடு செய்வதை முன்னிட்டு உடனடியாகத் தேசீய அவசியத்திற்கானவையான நூற்றலிலும் மற்றும் சிலவற்றிலும் இச்சந்திக் காலத்தில் முழுக் கவனத்தையும் செலுத்தியாக வேண்டும். முன்பைவிட மிகத் தெளிவாக இப்பொழுது இதை நான் உணருகிறேன்.

—'எங் இந்தியா'—19—1—1921

# 11

## பஞ்சத்தைத் தடுக்கும் ராட்டை

நூற்பதைக் குறித்து "ஸர்வண்ட் ஆப் இந்தியா" பத்திரிகை பழித்தும் கூறியிருக்கிறது. உண்மைகளைச் சரியாகத் தெரிந்து கொள்ளாததனாலேயே அது இவ்வாறு பழித்துக் கூறுகிறது என்பதை இப்பொழுது காட்டப் போகிறேன். நூற்பது, ஒரு பெண்ணின் மானத்தை நிச்சயமாகக் காக்கிறது. ஏனெனில் பொதுச் சாலைகளில் இன்று வேலை செய்துகொண் டிருக்கும் பெண்களுக்கு, தங்களுடைய கற்பு கெடுக்கப்பட்டுவிடக்கூடிய ஆபத்திலிருக்கும் அப்பெண்களுக்கு, தங்களைத் தாங்களே பாது காத்துக்கொள்ளும் வாய்ப்பை நூற்றல் அளிக்கிறது. மேலும், நூற்பதைத் தவிர லட்சக்கணக்கான பெண்கள் மேற்கொள்ளக் கூடிய தொழில் வேறு எதுவும் இருப்பதாகவும் எனக்குத் தெரியவில்லை. இப்பொழுதே அநேக பெண்கள், தமது இல்லங்களின் புனிதத் தன்மைக்குத் திரும்பியிருக்கின்றனர்; நூற்றும் வருகிறார்கள். வரப்பிரசாதம் போன்றதாக இருக்கும் ஒரே தொழில் இதுதான் என்றும் அவர்கள் கூறுகிறார்கள். கேலி செய்து எழுதியிருப்பவருக்கு இவ்விஷயத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இன்னிசைக் கருவிக்குள்ள தன்மைகள் நூற்றலுக்கு உண்டு என்று நான் கூறுகிறேன். ஏனெனில், பட்டினி கிடக்கும், கட்டத் துணியுமில்லாத பெண், பியானோவிலிருந்து எழும் கீத இசையை ஒட்டி நடனமாட மறுத்துவிடுவாளாயினும் நூற்கும் ராட்டை வேலை செய்வதைக் காணும்போது பெண்கள் ஆனந்தத்தோடு பூரிப்பதை நான் பார்த்திருக்கிறேன். சாதா

* காந்திஜி 'எங் இந்தியா'வில் எழுதிய இக்கட்டுரைக்கும் இந்நூலில் வேறு தலைப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது. 'மீண்டும் கையினால் நூற்றலைக் குறித்து' என்ற தலைப்பிலேயே இக்கட்டுரை முதலில் பிரசுரமாகியிருந்தது.

ரணமானதான இக்கருவியின் மூலம் தங்களுக்கு வேண்டிய உணவையும் உடையையும் தாங்களே தேடிக்கொண்டுவிட முடியும் என்பதை அவர்கள் அறிவதுதான் அதற்குக் காரணம்!

ஆம், இந்திய மக்களின் தீராத வறுமைப் பிணியை ராட்டை தீர்க்கிறது; பஞ்சம் வந்துவிடாமல் இருப்பதற்கு இது ஒரு பாதுகாப்பு. பாசன, கஷ்ட நிவாரண வேலைகளைப் பற்றிய ஆபாச ஊழல்களையெல்லாம் நான் அறிவேன். கேலி செய்து எழுதியிருப்பவருக்கு அவையெல்லாம் தெரியாது போலும்! இந்த வேலைகளெல்லாம் பெரும்பாலும் மோசடிகளே. ஆனால் எனக்குப் புத்திமதி கூறக் கிளம்புகிறவர்கள், வீடுதோறும் ராட்டை இருக்கும்படி தாங்களே செய்வார்களானால், பஞ்சம் உண்டாகாமல் இருப்பதற்கு ராட்டையே முழுப் பாதுகாப்பாக இருக்கும் என்று நிச்சயமாகக் கூறுகிறேன். இருக்கும் ஏழ்மையையும், என் காருண்யத்திலிருக்கும் குறைபாடுகளையும் ஒப்புக்கொள்ளுகிறேன். காமதேனு என்பது எப்படியோ அப்படிப் பட்டதே இந்தியாவுக்கு ராட்டை என்றுதான் நான் எண்ண முடியும். ஏனெனில், கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சி ஏற்படுவதற்கு முன்னால் இந்தியாவில் ஒவ்வோர் வீட்டிலும் நூற்கும் ராட்டை இருந்திருக்கிறது. இந்தியா, பருத்தி பயிரிடும் நாடாகையால், வெளியிலிருந்து ஒரு கெஜம் துணியை இறக்குமதி செய்வதையும் பெரும் பாவம் என்றே கருத வேண்டும். கட்டுரையை எழுதியிருப்பவர் எடுத்துக் காட்டியிருக்கும் புள்ளி விவரங்கள் முற்றிலும் பொருத்தமற்றவை.

உண்மை என்னவென்றால், ஆலைகள் *1917-18*–இல் *62.7* கோடி ராத்தல் நூலை உற்பத்தி செய்திருந்தும் பல கோடி கெஜங்கள் நூலை இந்தியா வெளிநாடுகளிலிருந்து வாங்கியிருக்கிறது. அந்த நூலைக்கொண்டு ஆலைகளும் நெசவாளர்களும் நெய்திருக்கிறார்கள். ஆலைகள் நெய்திருப்பதைவிட அதிகத் துணியை இன்று நம் நெசவாளர்கள் நெய்து வருகிறார்கள் என்பதும் அக்கட்டுரையை எழுதியிருப்பவர் அறிந்திருப்பதாகத் தெரியவில்லை. ஆனால், அவர்கள் நெய்திருக்கும் நூலில் பெரும் பகுதி வெளிநாட்டு நூல். ஆகையால், நம் நெசவாளர்கள், வெளிநாட்டில் நூல் நூற்பவர்களையே ஆதரித்து வருகிறார்கள். இதற்குப் பதிலாக நாம் வேறு எதையோ செய்துகொண்டிருக்கிறோம் என்றாலாவது இதைக் குறித்து நான் பொருட்படுத்தமாட்டேன். நூற்பது கட்டாயமாக முற்றிலும் நிறுத்தப்பட்டுவிட்டபோது அதற்குப் பதிலாக வந்தது அடிமைத்தனத்தையும் சோம்பேறித்தனத்தையும் தவிர வேறு எதுவுமே இல்லை. நமது தேவைக்குப் போதுமான நூலை நமது ஆலைகளால் இன்று நூற்றுவிட முடியாது. அப்படியே அவை நூற்றுவிட்டாலும், அவைகளைக் கட்டாயப்படுத்தினாலன்றி அவை விலையை ஏற்றிவிடாமல் இருக்கமாட்டா. பணம் சம்பாதிக்க இருப்பவையே ஆலைகள் என்பது வெளிப்படையானது. எனவே, நாட்டின் தேவையை

அனுசரித்து அவை விலைகளைக் கட்டுப்படுத்தா. ஆகையால், கோடிக்கணக்கான ரூபாய் ஏழைக் கிராமவாசிகள் கைக்குப் போகும்படி செய்வதற்கென்று ஏற்பட்டதே கையினால் நூற்பது. எல்லா விவசாய நாடுகளுக்கும், அவற்றின் விவசாயிகள் தங்களுக்கு ஓய்வாக இருக்கும் நேரத்தைப் பயன் படுத்திக் கொள்ளுவதாக இருக்கும் ஓர் உபத்தொழில் தேவை. நூற்பது இந்தியாவுக்கு எப்பொழுதுமே அத்தகையதோர் தொழிலாக இருந்து வந்திருக்கிறது. இத்தொழில் அழிந்ததால் மக்கள் அடிமைகளாகவும் ஓட்டாண்டிகளாகவும் ஆகியிருக் கிறார்கள். இந்தியாவில் அற்புதமான துணிகளைத் தயாரித்து வந்த இணையற்ற கலையாற்றலை எல்லோருமே போற்றினர்; உலகமே இதைக் கண்டு பொறாமைப்பட்டது. அத்தகையதோர் தொழிலுக்குப் புத்துயிரளிக்க முயற்சிப்பது வீணானதோர் லட்சியமாகுமா?

இப்பொழுது சில புள்ளி விவரங்களையும் பார்ப்போம். ஒரு சிறுவன், தினத்திற்கு நான்கு மணி நேரம் வேலை செய்வதா யிருந்தால், கால் ராத்தல் நூலை நூற்க முடியும். ஆகவே, 64,000 மாணவர்கள் தினத்திற்கு 16,000 ராத்தல் நூல் நூற்பார்கள். ஒரு நெசவாளி இரண்டு ராத்தல் கையினால் நூற்ற நூலை நெய்வதாயிருந்தால், அந்நூலைக்கொண்டு 8,000 நெசவாளருக்கு வேலை கொடுக்கமுடியும். நூற்பதை எல்லோரும் அனுசரிக்கும் படி செய்வதற்கும், இந்த நடைமுதல் ஆண்டில் முழு உற்பத்தி யையும் மேற்கொள்ளுவதற்குக் கையினால் நூற்ற நூல் உற்பத் தியை அதிகரிப்பதற்காகவும், மாணவர்களும் மற்றவர்களும் புனிதமாக்கிக்கொள்ளும் இவ்வாண்டில், இதை ஒரு பிராயச்சித்த மாகவே நூற்க வேண்டியவர்களாகிறார்கள். இதைச் செய்வதற் கில்லையானால் நாடு இன்னும் சோம்பேறித்தனத்திலேயே இருந்து விடக்கூடும். ஆனால், இந்த வேலையில் எல்லோரும் ஈடுபடுவார் களானால், இது மிகவும் எளிதானது. இதனால் வேறு எதையும் செய்து விடாவிட்டாலும் ஆண்டுதோறும் இந்நாட்டிலிருந்து போய்விடும் அறுபது கோடி ரூபாயையாவது மீதப்படுத்தலாம். இதற்காகச் செய்யவேண்டிய தியாகமும் அதிகமில்லை. இவ்விஷ யத்தைக் குறித்துப் பல ஆலை முதலாளிகளுடனும் பல பொரு ளாதாரப் பண்டிதர்களோடும் வர்த்தகர்களோடும் விவாதித் திருக்கிறேன். இங்கே நான் எடுத்துக்காட்டியிருக்கும் நிலை மையை ஆட்சேபித்துக் கூற அவர்களில் யாராலும் முடிந்த தில்லை. 'ஸர்வண்ட் ஆப் இந்தியா' பத்திரிகை, முக்கியமான விஷ யத்தை யோசனையோடும் தகவல்களின் உண்மையைக் கொண் டும் கவனிக்கும் என்றே நம்புகிறேன்.

—'எங் இந்தியா' – 16-2-1921

# 12

## பஞ்சங்களுக்குக் காரணம்

சுதேசிப் பிரசாரம், தீவிரமான, தனித்த முறையில் நடக்க வேண்டியதாயிற்று. அது ஏற்பட வேண்டிய முறையில் நடந்தும் வருகிறது. ஒத்துழையாமைத் திட்டத்தின் ஒரு பகுதியாக அது இருந்ததோடு இப்பொழுதும் இருந்து வருகிறது. இதுவே மிகப் பெரிய, பத்திரமான, நிச்சயமான பகுதி என்று நான் கருதுகிறேன். இன்று இது இருக்கும் முறையில் இதை இதற்கு முன்னல் மேற்கொள்ளுவதற்கில்லை. நூற்கும் ராட்டையைக் கைக்கொள்ளுவதற்கான வழியைக் குறித்து நாடு தெளிவடைய வேண்டியிருந்தது. பழைய மூட நம்பிக்கைகளும் துவேஷங்களும் நாட்டைவிட்டுப் போகவேண்டியிருந்தன. பிரிட்டிஷ் சரக்குகளையும், அதே போல எல்லா அந்நியச் சாமான்களையும் பகிஷ்கரிப்பது மாத்திரம் பயனில்லை என்பதையும் நாடு தெரிந்து கொள்ள வேண்டியிருந்தது. துணி விஷயத்தில் சுதேசியத்தைக் கைவிட்டதனல்தான் சுதந்திரத்தை இழந்து விட்டோம். கையினல் நூற்றுக் கையினல் நெய்த துணிக்கு மீண்டும் திரும்பினல்தான் திரும்பவும் சுதந்திரத்தை அடைய முடியும் என்று நாடு கண்டுகொள்ள வேண்டியிருந்தது. பஞ்சங்கள் இந்தியரின் வாழ்வில் எப்பொழுதுமே ஏற்பட்டுக் கொண்டிருக்கும் சம்பவங்களாகிவிட்டன. ராணுவத்திற்காகச் செலவிடப்படும் பெருந் தொகைகூட இதற்கு அவ்வளவாகக் காரணமல்ல; உபத் தொழிலாக இருந்தது போய் அதனல் இந்தியாவின் சக்தியெல்லாம் உறிஞ்சப்பட்டுவிட்டதுதான் பஞ்சங்களுக்கே முக்கியமான காரணம். இதையும் நாடு கண்டுகொள்ள வேண்டியிருந்தது. நூற்கும் ராட்டையில் நம்பிக்கையுள்ளவர்கள் ஒவ்வொரு மாகாணத்திலும் அதிகரிக்க வேண்டியிருந்தது; கதரின் அழகையும் அதன் உபயோகத்தையும் மக்கள் உணரவும் வேண்டியிருந்தது.

இவை யாவும் இப்பொழுது ஏற்பட்டுவிட்டன. இந்தத் தேசீய தருமம் புத்துயிர் பெறும்படி செய்வதற்குக் கோடி ஆண்களும் பெண்களும், கோடி ரூபாயும் தேவை. ஆறு கோடி இல்லங்கள் ஒவ்வொன்றிலும் ராட்டினம் இருக்கும்படி செய்ய வேண்டும் என்பதுதான் இப்பொழுதுள்ள பிரச்னையேயன்றி சில ராட்டைகளைச் செய்துவிடுவது அன்று. இந்தியாவுக்குத் தேவையான துணி முழுவதையும் உற்பத்தி செய்து வினியோகிப்பது தான் பிரச்னை. ஒரு கோடி ரூபாயைக் கொண்டு இதைச் செய்து விடமுடியாது. ஆனல், இந்தியா ஒரு கோடி ரூபாயைக் கொடுத்து, ஒரு கோடி ஆண்களையும் பெண்களையும் அளித்து, ஜூன் 30-ஆம் தேதிக்குள் எத்தனை இல்லங்களில் சாத்தியமோ அத்தனை இல்லங்களிலும் இருபது லட்சம் ராட்டைகள் வேலை செய்து

கொண்டிருக்கும்படியும் செய்துவிட்டால், இந்தியா சுயராஜ்யத்திற்கு அநேகமாகத் தயாராகிவிட்டதாக ஆகும். ஏனெனில், ஒரு நாட்டு மக்களை நல்லவர்களாகவும், சிறந்தவர்களாகவும், தன்னம்பிக்கையுள்ளவர்களாகவும், தேவையைப் பூர்த்தி செய்துகொண்டவர்களாகவும் ஆக்குவதற்கான எல்லாக் குணங்களுமுள்ளவர்களாக இம்முயற்சி செய்துவிடும். தேச மக்கள், தங்களுடைய சொந்த முயற்சியின் மூலம் தங்களுடைய அந்நியத் துணி பகிஷ்காரத்தைப் பூர்த்தி செய்துகொண்டு விடும்போது, இம்மக்கள் சுயராஜ்யத்திற்குத் தயாராகிவிடுவார்கள்.

அப்பொழுது, இந்திய நகரங்களில் இருக்கும் அநேகக் கோட்டைகளெல்லாம், இன்று இந்தியாவின் சுதந்திரத்தை அவமானப்படுத்தும் அபாயங்களாக இருந்து வருவதற்குப் பதிலாக, இந்தியக் குழந்தைகள் விளையாடும் இடங்களாக மாறிவிடும் என்று நான் உறுதி கூறுகிறேன். அப்பொழுது நமக்கும் ஆங்கிலேயருக்கும் இருக்கும் உறவும் புனிதமானதாகிவிடும். அப்பொழுது லங்காஷயரின் வாக்குரிமை பலமும் பயன்படாததாகிவிடும். ஆங்கிலேயர்கள், அவர்கள் விரும்பினால், உண்மையில் இந்தியாவுக்கு நன்மை செய்வது, உதவியாக இருப்பது என்ற ஒரே நோக்கத்துடன் இந்தியாவின் நண்பர்களாகவும் சமமானவர்களாகவும் இங்கே இருந்தும் வரலாம். கௌரவமான முறையில் எங்களுடன் ஒத்துழையுங்கள், இல்லாவிடில் எங்கள் நாட்டைவிட்டுப் போய்விடுங்கள் என்று ஆங்கிலேயரை அழைப்பதை நோக்கமாகக் கொண்டதே ஒத்துழையாமை இயக்கம். நமது சுயமரியாதைக்கும் கௌரவத்திற்கும் உகந்த முறையில் நமக்கும் அவர்களுக்கும் உள்ள உறவைப் புனிதமான அடிப்படையில் வைப்பதற்கான இயக்கமே இது.

ஆனால், இந்த இயக்கத்திற்கு எந்தப் பெயர் வேண்டுமானாலும் கொடுங்கள். 'சுதேசியும் குடிக் குறைப்பும்' என்றும் சொல்லுங்கள். முன்னால் இத்தனை மாதங்களாகச் செய்த வேலைகளெல்லாம் வீண் என்று வேண்டுமானாலும் எண்ணிக் கொள்ளுங்கள். எல்லோரும் கையினால் நூற்கும்படி செய்வதிலும், மதுபானம் செய்வதைக் குற்றச் செய்கையாக்கிவிடுவதிலும் நாட்டு மக்களுடன் ஒத்துழைக்கும்படி அரசாங்கத்தையும் மிதவாத நண்பர்களையும் அழைக்கிறேன். இவ்விரு இயக்கங்களினால் ஏற்படப் போவதைக் குறித்து அவ்விரு தரப்பாரும் சந்தேகிக்க வேண்டாம். காரியம் எப்படிப்பட்டது என்பதை அதன் பலனைக்கொண்டே அறிந்துகொண்டு விடலாம்.

—'எங் இந்தியா' - 20—4—1921

# 13

# ராட்டையின் உபதேசம்

நூற்கும் ராட்டையின் பெருமையைக் குறித்து ஒரு நிருபர் எழுதியிருக்கும் குறிப்பை 'இந்தியன் சோஷியல் ரிபார்மர்' பத்திரிகை பிரசுரித்திருக்கிறது. இந் நிருபர் தமது கருத்தைத் தெரிவிக்கையில், நூற்பவர்களுக்கு அதில் அலுப்புத் தட்டிவிடும் படி செய்துவிடாத வகையில் இந்த இயக்கத்தின் வேலை அமைக்கப்படும் என்று தாம் நம்புவதாகக் கூறுகிறார். ஸ்ரீ அமிர்த லால் தக்கரின் சிறந்த குறிப்பும் 'சர்வண்ட் ஆப் இந்தியா' பத்திரிகையில் வெளிவந்திருக்கிறது. கத்தியவாரில் தாம் நடத்தி வரும் பரீட்சைகளைக் குறித்து அவர் அதில் கூறியிருக்கிறார். விவசாயக் குடும்பப் பெண்கள் ராட்டையில் நூற்க ஆரம்பித்துவிட்டார்கள் என்கிறார். இப் பெண்களுக்கு நூற்பது ஜீவனத்திற்கு ஒரு வழி. மேலும், இவர்கள் முன்னால் இதில் பழக்கமுள்ளவர்கள். ஆகையால், நூற்பது அவர்களுக்கு அலுப்புத் தட்டிப் போய்விடுவதற்கில்லை. நூற்கும் நூலுக்குக் கிராக்கியே இல்லாது போனதால் நூற்பதும் இல்லாது போய்விட்டது. பட்டணத்து மக்கள், மோகத்தினாலோ அல்லது இதுதான் இக்கால நாகரிகம் என்பதற்காகவோ, நூற்க ஆரம்பித்திருப்பார்களாயின் அவர்களுக்கு அலுப்புத் தட்டிவிடும். நாட்டுக்கு இன்று மிகப் பயனுள்ளதாக இருப்பதான இவ் வேலைக்குத் தங்களுடைய ஒழிந்த நேரத்தைச் செலவிடுவது தங்கள் கடமை என்று எண்ணுகிறவர்கள் மாத்திரமே இதில் நம்பிக்கையுள்ளவர்களாவர். மூன்றாவது ரகத்தினரான நூற்போர், பள்ளிச் சிறுவர்கள். தேசீயப் பாடசாலைகளில் ராட்டினத்தில் நூற்கும்படி செய்வதென்ற பரீட்சையினால் மிக அதிகமான பலன் ஏற்படும் என்று எதிர்பார்க்கிறேன். இந்தியாவில் இருக்கும் ஏழரை லட்சம் கிராமங்களுக்குக் கல்வி கிடைக்கும்படி செய்வதற்கு ராட்டினமே மிகச் சிறந்த உபாயம் என்பதை நம்பும் உபாத்தியாயர்கள், சரியான முறையில் இதை நடத்தி வருவார்களானால், அலுப்புத் தட்டிவிடும் அபாயமே ஏற்படுவதற்கில்லை. அது மாத்திரமன்று, அதிகப்படியான வரி எதுவும் இல்லாமலே, ஒழுக்கக் கேடான வரி வகைகளுக்குத் திரும்பாமலே, எல்லா மக்களுக்கும் கல்வியளிப்பதற்கு வேண்டிய பணப் பிரச்னையை இந்நாட்டு மக்கள் தீர்த்துக்கொண்டு விடுவதற்கும் இதில் வாய்ப்பு அதிகம் இருக்கிறது.

நூற்கும் ராட்டையில் மிக உயர்ந்த ரக நூலைத் தயாரிப்பதற்கான முயற்சியையும் செய்ய வேண்டும் என்று 'இந்தியன் சோஷியல் ரிபார்ம'ரில் எழுதியிருப்பவர் யோசனை கூறியிருக்கிறார். அதற்கான வேலை இப்பொழுதே ஆரம்பமாகிவிட்டது என்று அவருக்கு உறுதி கூறுகிறேன். ஆனால், டாக்கா மஸ்லினையோ அல்லது இருபதாம் நெம்பர் நூலைப் போன்றுகூட

தயாரிக்கும் தரத்திற்கு நாம் வருவதற்கு இன்னும் கொஞ்சம் காலமாகும். கையினுல் நூற்பதற்குச் சென்ற செப்டம்பரில் தான் புத்துயிர் அளிக்கப்பட்டது. இந்தியா, போன டிசம்பரில் தான் இதில் கொஞ்சம் நம்பிக்கை வைக்க ஆரம்பித்தது. இதைப் பார்க்கும்போது இதில் ஏற்பட்டிருக்கும் அபிவிருத்தியை அதிக அபாரமானது என்றே கருத வேண்டும்.

எவ்வளவு வேகத்தில் நூற்கப்படுகிறதோ அவ்வளவு வேகத்தில் நூற்ற நூல் துணியாக நெய்யப்படவில்லை என்பது அக் கட்டுரையை எழுதியிருப்பவரின் புகார். இவர் கூறுவதில் ஓரளவு உண்மையும் உண்டு. இதற்குப் பரிகாரம், கையினுல் நூற்ற நூலை இப்பொழுது இருக்கும் நெசவாளர்கள் அதிகமாக உபயோகிக்கும்படி தூண்டுவதில்தான் இருக்கிறதேயன்றித் தறிகளின் தொகையை அதிகரிப்பதில் இல்லை. நூற்பதைவிட நெய்வது அதிகச் சிக்கலான வேலை. மேலும், நூற்பதைப் போன்று இது ஒரு துணைத் தொழிலுமன்று. ஆனுல், ஜீவனோபாயத்திற்கான பூரணமான தொழில், நெய்வது. ஆகையால், இத்தொழில் செத்துப் போய்விடவே இல்லை. வெளிநாட்டிலிருந்து இறக்குமதியாகும் துணி முழுமைக்கும் பதிலாக நெய்துவிடுவதற்குப் போதுமான நெசவாளர்களும் தறிகளும் இந்தியாவில் இருக்கின்றன. சென்னை, மகாராஷ்டிரம், வங்காளம் ஆகியவற்றிலிருக்கும் ஆயிரக்கணக்கான தறிகளில், ஜப்பானிலிருந்தும் லங்காஷயரிலிருந்தும் வரும் நயமான நூலைக்கொண்டே நெய்து வருகிருர்கள் என்பதையும் நாம் அறிய வேண்டும். கையினுல் நூற்கும் நூலைக்கொண்டு துணி நெய்வதற்கு இந்தத் தறிகளை நாம் உபயோகித்துக் கொள்ளலாம். இதற்கு நம் மக்கள், மெல்லிய, ஆடம்பரமான, ஒரு பயனுமில்லாத மஸ்லின் துணி மீது கொண்டிருக்கும் மோகத்தை மாற்றிக்கொள்ள வேண்டும். உடலை மறைக்காமல் அதை வெளியில் காட்டுவதாயிருக்கும் மஸ்லின் துணிகளை நெய்வதில் எந்தக் கலையும் இருப்பதாக நான் காணவில்லை. கலையழகைப் பற்றிய நம் எண்ணத்தில் மாறுதல் ஏற்பட வேண்டும். ஆனுல், எல்லோரும் மெல்லிய துணிகளை உடுத்திக்கொள்ளுவது சாதாரணமான நிலைமையில் விரும்பத்தக்கதுதான் என்று கருதுவதாக இருந்தாலும், சுதந்திரமானவர்களாகவும் நம் தேவையை நாமே பூர்த்தி செய்து கொள்ளுகிறவர்களாகவும் ஆவதற்கு நாம் மகத்தானதோர் முயற்சியில் ஈடுபட்டிருக்கும் இத்தறுவாயில், கையினுல் நூற்ற நூலைக்கொண்டு கிடைக்கக்கூடிய துணிகளை அணிவதைக் கொண்டாவது நாம் திருப்தியடைய வேண்டும். ஆகையால், முரட்டு ரக ஆடைகளை உடுத்திக்கொள்ளுவதில் திருப்தியடையுங்கள் என்று நாகரிக உடை அணிபவர்களை ஒரு பக்கம் நாம் கேட்டுக்கொள்ள வேண்டியதாகிறது. மற்ருேர் புறத்தில், உயர்ந்த ரக, கரடு முரடில்லாத நூலை நூற்பதற்கு நூற்போருக்கு நாம் கற்றுக்கொடுக்க வேண்டும்.

ஆலை முதலாளிகள், தாங்கள் தயாரிக்கும் துணிகளுக்கு வைத்திருக்கும் விலையைக் குறைக்க வேண்டும் என்றும் இக் கட்டுரையை எழுதியிருப்பவர் கேட்டுக்கொள்ளுகிறார். சுதேசியில் பற்றுள்ளவர்கள், கதர் கட்டுவதே தங்கள் கடமை என்று கருதிவிடும்போது, தேவையான அளவு ராட்டைகள் வேலை செய்ய ஆரம்பித்து நெசவாளர்களும் கையினால் நூற்ற நூலையே நெய்யக் கிளம்பிவிடும்போது, ஆலை முதலாளிகள் மில் துணியின் விலையைக் குறைத்துத்தான் ஆகவேண்டி வரும். தங்களுடைய சொந்த லாபங்களை அதிகரித்துக்கொள்வது என்பது ஒன்றையே முக்கிய நோக்கமாகக் கொண்டவர்களிடம், தேசாபிமானத்தோடு நடந்துகொள்ளும்படி கேட்டுக்கொள்ளுவது முற்றிலும் பயனில்லாததாகவே தோன்றுகிறது.

கொஞ்சமும் பொருத்தமில்லாத சில செய்கைகளைக் குறித்தும் மேற்கண்ட கட்டுரையை எழுதியிருப்பவர் குறிப்பிடுகிறார். பொது வைபவங்களில் மாத்திரம் கதர் அணிந்து மற்றச் சமயங்களிலெல்லாம் அதிக நாகரிகமான ஆங்கில உடை அணிகிறார்கள் என்கிறார். கதரை அணிந்துகொண்டு அதே சமயத்தில் விலையுயர்ந்த சுருட்டுக்களைப் பிடிக்கிறார்கள் என்கிறார். இதுபோன்ற முரண்பாடுகள், புதிய நாகரிகம் பலப்பட நாளாவட்டத்தில் மறைந்தே ஆகவேண்டும். அந்நியத் துணி பகிஷ்காரத்தை நாம் பூரணமாக நிறைவேற்றிவிட்ட பிறகு, இப்பொழுது நம்மிடமிருக்கும் ஆபாசங்களை யெல்லாம் அவசியமாக விட்டுவிட வேண்டிய அளவுக்கு நாம் முன்னேறியவர்களாவதோடு, சாதாரணமான பொது மக்களின் உள்ளங்களில் வேரூன்றிக் கிடக்கும் எளிமை, சுதேசியம் ஆகிய லட்சியங்களுக்குப் பொருத்தமானதோர் தேசீய வாழ்வைத் திரும்ப நாம் அமைத்துக்கொண்டு விடுபவர்களாகிவிடுவோம் என்பதே எனது கருத்து. அப்பொழுது உலகில் இருக்கும் பலமில்லாத நாடுகளைச் சுரண்டுவதன் மூலம் அமைக்கப்பட்டிருக்கும் ஏகாதிபத்தியத்திற்குள் நாம் இழுக்கப்பட்டுவிட மாட்டோம். அமைதியாக வாழ்வது என்பதையே முற்றிலும் அசாத்தியமான தாக்கி வரும் கடற்படை, விமானப் படைகளைக்கொண்டு பாதுகாக்கப் பட்டுள்ள மயக்கும் லோகாயத நாகரிக வாழ்வை ஏற்றுக் கொண்டுவிடவும் மாட்டோம். இதற்கு மாறாக நாம், அந்த ஏகாதிபத்தியத்தை எல்லா நாடுகளின் நன்மைக்கானதோர் ஐக்கியக் கூட்டுறவு ஆட்சி நிலைக்கு அப்பொழுது புனிதப்படுத்துவோம். அப்படி இந்நாடுகள் ஒன்றுபட்டால், அவை தங்களாலான சிறந்ததை உலகிற்கு அளித்து, மிருக பலத்தைக் கொண்டல்லாமல் தமக்குத் தாமே கஷ்டப்படுவதன் மூலம் உலகில் இருக்கும் பலக் குறைவான நாட்டினரையும் இனத்தினரையும் பாதுகாப்பனவாகவும் இருக்கும். கருத்துலகத்தில் இப் புரட்சியை உண்டாக்குவதையே நோக்கமாகக்கொண்டிருக்கிறது, ஒத்துழையாமை. நூற்கும் ராட்டை பூரணமான வெற்றியை அடைந்துவிட்ட பிறகுதான் இத்தகைய மாறுதல்

ஏற்பட முடியும். இந்நாட்டின் முக்கியமான இரு தேவைகள், உணவும் உடையும். இதில் நம் நாடு சுயதேவையைப் பூர்த்தி செய்துகொள்ளுவதாக வேண்டும். அந்நியப் பொருள்களில் ஆசைவைத்து, அதன் காரணமாக வெளியார் தாக்குதலுக்கும் ஆளாகாமல் இருக்க வேண்டும். அத்தகைய நிலையை இந்தியா அடையும்போதுதான் மேற்கண்ட உபதேசத்தை உலகிற்கு அளிக்கும் தகுதி இந்நாட்டுக்கு ஏற்படும்.

—'எங் இந்தியா' - 29—6—1921

# 14

# இந்தியாவிலுள்ள ஒவ்வோர் ஆங்கிலேயருக்கும்*

ஆனால், அந்நியத் துணி பகிஷ்காரத்திற்கும், மதுபான ஒழிப்புப் போராட்டத்திற்கும் உங்கள் உதவியை எங்களுக்கு அளிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். லங்காஷயர் துணியை வாங்கும்படி இந்தியர் கட்டாயப்படுத்தப்பட்டிருக்கிறார்கள். உலகப் பிரசித்தி பெற்ற இந்தியத் துணி உற்பத்தி, வேண்டும் என்றே திட்டமிட்டு நாசப்படுத்தப்பட்டு விட்டது என்பதை ஆங்கிலச் சரித்திரக்காரர்களே எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். ஆகையால், இந்தியா, லங்காஷயரின் தயவில் மாத்திரமன்றி ஜப்பான், பிரான்ஸ், அமெரிக்கா ஆகிய நாடுகளின் தயவிலும் வாழவேண்டியதாகிவிட்டது. இதனால், இந்தியாவுக்கு நேர்ந்திருப்பது என்ன என்பதைக் கொஞ்சம் கவனியுங்கள். ஆண்டுதோறும் ஏறக்குறைய அறுபதுகோடி ரூபாயைத் துணிக்காக வெளியில் அனுப்பிக் கொண்டிருக்கிறோம். எங்களுக்கு வேண்டிய துணிக்குப் போதுமான பருத்தியை நாங்கள் சாகுபடி செய்து வருகிறோம். இப்பருத்தியை இந்தியாவுக்கு வெளியே அனுப்பி, அங்கே அதைக்கொண்டு தயாரித்து, அத்துணியைக்

---

* ஒவ்வொரு போராட்டத்தையும் ஆரம்பிக்கும்போதும், எதிராளிகளாக இருப்பவர்களுக்குக் கோரிக்கை விடுத்து அவர்கள் ஆதரவையும் தமது நியாயமான போராட்டத்திற்குக் கோருவது மகாத்மா அனுசரித்து வந்திருக்கும் ஒரு முறை. மகாத்மா, தென்னாப்பிரிக்கா சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்தபோது 'ஒவ்வோர் ஆங்கிலேயருக்கும்' வேண்டுகோள் விடுத்தார். 1942-இல் இந்தியாவில் இறுதியான சுதந்திரப் போராட்டத்தை நடத்துவதற்கு முன்னாலும் 'ஒவ்வொரு பிரிட்டானியருக்கும்' என்ற தலைப்பில் 'ஹரிஜ'னில் இதே போன்ற கோரிக்கை விடுத்தார். இதை 'மகாத்மா காந்தி நூல்கள்' இரண்டாம் தொகுப்பில் 481-வது பக்கத்தில் காண்க. 1921-இல் ஒத்துழையாமை இயக்கத்திற்கும் சுதேசி இயக்கத்திற்கும் ஆதரவு கோரி மகாத்மா அத்தகைய கோரிக்கை விடுத்தார். 'இந்தியாவிலிருக்கும் ஒவ்வோர் ஆங்கிலேயருக்கும்' என்ற தலைப்பில் வெளியான கட்டுரையிலிருந்தே மேற்கண்ட பகுதி எடுத்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

கப்பலேற்றிக் கொண்டுவருவது என்பது பைத்தியக்காரத்தன மானது அல்லவா? இத்தகைய திக்கற்ற நிலைமைக்கு இந்தியா வைக் கொண்டுபோய் விட்டது நியாயமா?

நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னால் எங்களுக்குத் தேவையான துணி முழுவதையும் நாங்களே தயாரித்து வந்தோம். எங்கள் பெண்கள் தங்கள் வீடுகளிலேயே உயர்ந்த ரக நூலை நூற்று வந்தார்கள். தங்கள் கணவர்களின் வருவாயையும் இதன்மூலம் அதிகரித்தும் வந்தனர். கிராம நெசவாளர்கள் அந்த நூலைக்கொண்டு நெய்தார்கள். எங்களைப் போன்ற பெரிய விவசாய நாட்டின் தேசீயப் பொருளாதாரத்தில் இது இன்றியமையாததோர் பகுதியாக இருந்தது. மிகவும் இயற்கை யான வகையில் எங்கள் ஓய்வு நேரங்களைப் பயன்படுத்திக் கொள்ளவும் இதனால் முடிந்தது. இன்றோ, எங்கள் பெண்கள் இதில் தங்கள் கைத்திறனை இழந்துவிட்டார்கள். கோடிக்கணக் கான மக்களுக்குக் கட்டாயமாக ஏற்பட்டுவிட்ட சோம்பேறித் தனம் நாட்டையே ஏழ்மைப்படுத்திவிட்டது. நெசவாளர் அநேகர், தெருக் கூட்டுவோராகிவிட்டார்கள். சிலர், கூலிக்குச் சிப்பாய்களாகும் தொழிலை மேற்கொண்டனர். சித்திர வேலைப் பாட்டுடன் நூற்று வந்த இனத்தில் பாதிப்பேர் மடிந்துவிட் டனர். மீதமிருக்கும் பாதிப்பேரோ, கையினால் நூற்கும் நூல் நயமானதாகக் கிடைக்காததால் இறக்குமதியாகும் அந்நிய நூலைக்கொண்டு நூற்று வருகிறார்கள்.

இந்தியா விஷயத்தில் அந்நியத் துணி பகிஷ்காரம் என்ப தற்குப் பொருள் என்ன என்பதை நீங்கள் இப்பொழுது புரிந்து கொள்ளுவீர்கள். தண்டிக்கவேண்டும் என்பதற்காக இது கொண்டு வரப்படவில்லை. அரசாங்கம், கிலாபத், பஞ்சாப் அநீதிகளுக்குப் பரிகாரங்களைச் செய்து, இந்தியா உடனே சுயராஜ்யம் அடைவதற்கும் சம்மதித்துவிட்ட போதிலும், பகிஷ்கார இயக்கம் மாத்திரம் அப்பொழுதும் தொடர்ந்து நடந்தே வரும். இந்திய மக்களின் பொருளாதார வாழ்விற்கு ஜீவனாகவுள்ள இந்தியக் கைத்தொழில்களைப் பலப்படுத்தும் சக்தியை அடைவதும், அத்தகைய பொருளாதார வாழ்விற்கு இடையூறாக இருக்கும் இறக்குமதிகளைத் தடுக்கும் அதிகாரத்தை யுமாவது பெறுவதுமே சுயராஜ்யம் என்பதற்குப் பொருள். தேசீய உடலுக்கு இரு ஈரல்களைப் போன்றிருப்பவை விவசாய மும், கையினால் நூற்பதும். அவற்றில் க்ஷயரோகம் பாதித்து விடாதபடி எப்படியும் பாதுகாத்தே ஆகவேண்டும்.

மேற்கொண்டும் காத்துக்கொண்டு சும்மா இருக்கக்கூடிய விஷயமல்ல இது. விவசாயத்திற்கு அனுசரணையாக இருக்கக் கூடிய பெரிய உற்பத்தித் தொழில் இல்லாததனால் நாட்டு மக்கள் எல்லோருமே பட்டினி கிடந்து வரும்போது அந்நிய நாடுகளிலிருக்கும் உற்பத்தியாளரின் நன்மையையும், அவற்றை

இறக்குமதி செய்துவரும் இந்தியரின் நன்மையையும் கவனித்துக் கொண்டிருப்பதற்கில்லை.

அந்நியச் சாமான்கள் எல்லாவற்றையுமே பகிஷ்கரிக்கும் இயக்கம் இது என்று நீங்கள் தவருக நினைத்துவிட வேண்டாம். சர்வதேச வர்த்தகத்திலிருந்து தான் விலகி இருந்துவிட வேண்டும் என்று இந்தியா விரும்பவில்லை. துணியைத் தவிர மற்றச் சாமான்கள், இந்தியாவுக்கு வெளியில் நன்ருகச் செய்யப் படுமானல், வாங்குவோருக்கும் விற்போருக்கும் சாதகமான முறையில், நன்றியறிதலோடு இந்தியா அவற்றை வாங்கிக் கொள்ளவே வேண்டும். எதையும் பலவந்தமாக வாங்கும்படி இந்தியாவைச் செய்துவிட முடியாது. ஆனல், எதிர்காலத்தில் என்ன நடக்கும் என்பதைக் கவனிக்க நான் தயாராயில்லை. சமத்துவமான முறையில் இங்கிலாந்துடன் ஒத்துழைப்பது சீச்கிரத்திலேயே முடியும் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். வர்த்தக உறவுகளைக் குறித்துப் பரிசீலனை செய்ய அதுதான் ஏற்ற சமயம். இப்போதைக்கு அந்நியத் துணி பகிஷ்காரம் நிறைவேறுவதற்கு உங்கள் உதவியை நாடுகிறேன்.

—'எங் இந்தியா' – 13—7—1921

# 15

# இந்தியப் பெண்களுக்கு

என் அருமைச் சகோதரிகளே,

லோகமான்ய திலகரின் ஞாபகார்த்தமாக, ஜூலை 31-ஆம் தேதி பம்பாயில் அந்நியத் துணிகளுக்கு மூட்டிய தியாகத் தீயின் மூலம் அந்நியத் துணி பகிஷ்காரம் ஆரம்பமாயிற்று. அந்தப் பகிஷ்காரத்தைப் பூரணமாக்கி விடுவதற்கு அடுத்த செப்டம்பர் 30-ஆம் தேதியை நிர்ணயித்து அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி ஒரு முக்கியமான முடிவைச் செய்திருக்கிறது. நயமானது, அழகானது என்று இதுவரையில் நீங்கள் கருதி வந்த விலையுயர்ந்த புடவைகளையும் ஆடைகளையும் மலைபோல் குவித்து அதற்குத் தீ மூட்டிவிடும் பாக்கியத்தை எனக்கு அளித்தார்கள். சகோதரிகள் தங்களுடைய விலையுயர்ந்த ஆடைகளைத் தீயிலிட்டு விடக் கொடுத்தது நியாயமானது, புத்திசாலித்தனமானது என்று கருதுகிறேன். பிளேக் நோய் பற்றிய பொருள்களை அழித்துவிடுவதுதான் சரியான காரியம். அதேபோல அந்நியத் துணி விஷயத்தில் சரியானபடி நீங்கள் செய்யக்கூடிய காரியம், அதைத் தீயிலிட்டுவிடுவதுதான். ராஜீயம் என்ற உடலில் இன்னும் அதிகக் கடுமையான நோய் பரவாதபடி தடுப்பதற்குச் செய்யும் அவசியமான சத்திர சிகிச்சையே இது.

சென்ற பன்னிரண்டு மாதங்களாக இந்தியப் பெண்மணிகள், தாய்நாட்டின் சார்பாக அநேக அற்புதங்களை நிகழ்த்தியிருக்கிறார்கள். கருணைத் தெய்வங்களைப்போல நீங்கள் சந்தடியின்றிப் பணியாற்றியிருக்கிறீர்கள். உங்கள் பணத்தையும், உங்களுடைய அழகான நகைகளையும் கொடுத்திருக்கிறீர்கள். வசூலுக்காக வீடு வீடாக அலைந்திருக்கிறீர்கள். உங்களில் சிலர் மறியலிலுங்கூட உதவியிருக்கின்றனர். பல வர்ணப் பட்டாடைகளை உடுத்தி, தினத்திற்குப் பன்முறை ஆடைகளை மாற்றிப் பழக்கப்பட்டுப் போன உங்களில் சிலர், தூய வெள்ளை, ஆனால், கனமான கதர்ப்புடவை கட்டி வருகிறார்கள். இது பெண்களிடமுள்ள புனிதத் தன்மையை நினைவூட்டுகிறது. இவற்றையெல்லாம் இந்தியாவுக்காக, கிலாபத்துக்காக, பஞ்சாபுக்காக நீங்கள் செய்திருக்கிறீர்கள். உங்கள் சொல்லிலும் செயலிலும் எந்தவிதமான கபடமுமே இல்லை. உங்களுடைய தியாகம், கோபம் அல்லது துவேஷம் என்ற மாசு எதுவுமே இல்லாத புனிதத் தியாகமாகும். இந்தியா முழுவதிலும் உங்களுடைய மனப்பூர்வமான, அன்பு நிறைந்த ஈடுபாடு, கடவுள் நம் பக்கம் இருக்கிறார் என்பதை நான் நிச்சயமாக அறியும்படி செய்திருக்கிறது. இதை உங்களிடம் ஒப்புக்கொள்ளுகிறேன். நம் போராட்டம் அந்தரங்க சுத்தியானது என்பதற்கு, லட்சக்கணக்கான இந்தியப் பெண்கள் இதற்குத் தீவிரமாக உதவி செய்து வருகிறார்கள் என்பதைத் தவிர வேறு எந்தவிதமான ஆதாரமும் தேவையில்லை.

எவ்வளவோ செய்திருக்கும் நீங்கள், மேலும் இப்பொழுது செய்தாக வேண்டியவர்களாக இருக்கிறீர்கள். திலகர் சுயராஜ்ய நிதிக்குப் பண வசூல் செய்வதில் ஆண்கள் முக்கியமான பங்கு கொண்டிருக்கிறார்கள், ஆனால், நீங்கள் அதிகப் பங்குகொண்டால் தான் சுதேசி இயக்கம் பூர்த்தியாவது சாத்தியம். உங்களுடைய அந்நிய ஆடைகள் முழுவதையும் நீங்கள் கொடுத்துவிட்டாலன்றிப் பகிஷ்காரம் அசாத்தியமே. அந்த ஆடைகளை அணிவதே நாகரிகம் என்ற மோகம் இருந்துகொண்டிருக்கும் வரையில் பூரணமான தியாகம் சாத்தியமல்ல. பூரணத் தியாகம் என்பதே பகிஷ்காரம் என்பதற்குப் பொருள். கடவுள் நமக்கு அளிக்கும் குழந்தைகளைக்கொண்டு நாம் எவ்வாறு நன்றியறிதலோடு திருப்தியடைகிறோமோ அதே போலவே இந்தியாவினால் தயாரிக்க முடிந்த துணியைக்கொண்டும் திருப்தியடைந்து இருந்துவிட நாம் தயாராக வேண்டும். ஒரு குழந்தை மற்றவர்களுக்கு விகாரமானதாகத் தோன்றலாம். ஆனால், அவர்கள் அப்படி நினைக்கிறார்களே என்பதற்காக எந்தத் தாயும் தன் குழந்தையை எறிந்துவிட்டதாக நான் கண்டதில்லை. இந்தியாவில் தயாரிக்கப்படுபவை விஷயத்திலும் தேசாபிமானமுள்ள பெண்மணிகள் இப்படித்தான் இருக்கவேண்டும். கையினால் நூற்றுக் கையினால் நெய்த துணி ஒன்றையே இந்தியாவில் தயாரானதாக நீங்கள் கருதவேண்டும். இந்தச் சந்திக் காலத்தில் முரடாயுள்ள கதர்த்

துணிதான் உங்களுக்கு ஏராளமாகக் கிடைக்கும். உங்கள் நாகரிக ருசி எதையெதை அனுமதிக்கிறதோ, விரும்புகிறதோ அவ்விதக் கலையையெல்லாம் நீங்கள் அத்துணியில் சேர்த்துக்கொள்ளலாம். சில மாத காலத்திற்கு இந்த முரட்டுக் - கதர்த் துணியைக் கொண்டு நீங்கள் திருப்தியடைந்து இருந்துவிடுவீர்களானால், ஒரு காலத்தில் இந்தியா தயாரித்து வந்த எந்த உயர்ந்த, விலையுயர்ந்த பல வர்ண ஆடைகளைக்கொண்டு உலகினர் பொறாமைப் பட்டு அவற்றைத் தங்களால் தயாரிக்க முடியவில்லையே என்று ஏங்கி வந்தனரோ அத்தகைய துணியைத் திரும்பவும் தயாரிக்க முடியவில்லையே என்று இந்தியா வருந்த வேண்டிவராது. ஆறு மாத காலத்திற்குத் தன்னலத் தியாகம் செய்து பாருங்கள். அழகானது என்று நாம் இன்று கருதுவதெல்லாம் வெறும் போலி அழகுதான் என்பதும், உண்மையான அழகு ஒன்றின் அமைப்பில் மாத்திரமில்லை, அதனுள் உள்ளதிலும் இருக்கிறது என்பதையும் அப்பொழுது நீங்கள் கண்டுகொள்ளுவீர்கள் என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். கலையில் உயிரைக் கொல்லுவதும் உண்டு; உயிரை அளிப்பதும் உண்டு. மேற்கத்திய நாடுகளிலிருந்தும், தூரக் கிழக்கிலிருந்தும் நாம் இறக்குமதி செய்திருக்கும் நயமான துணிகள் உண்மையில் கோடிக்கணக்கான நம் சகோதர சகோதரிகளைக் கொன்றிருக்கின்றன. ஆயிரக்கணக்கான நம் அருமைச் சகோதரிகள் மானமிழந்த வாழ்க்கையை நடத்தும்படியும் செய்திருக்கின்றன. உண்மையான கலையாக இருக்குமானால் அதைப் படைத்தவர்களிடையே இன்பத்தையும் திருப்தியையும் புனிதத்தையும் அது காட்டுவதாக இருக்கவேண்டும். அத்தகைய கலையே நம்மிடையே திரும்பவும் நிலவ வேண்டுமானால், உங்களில் நன்றாக இருப்பவர்கள் இச்சமயத்தில் கதர் கட்டியாக வேண்டியது அவசியம்.

கதரை உபயோகிப்பது, சுதேசித் திட்டத்தின் வெற்றிக்கு அவசியம் என்பது மாத்திரமல்ல; நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் ஓய்வு நேரங்களில் நூற்றாக வேண்டியது அத்தியாவசியமாகும். சிறுவர்களும் ஆண்களும்கூட நூற்றாக வேண்டும் என்று கூறி வருகிறேன். அவர்களில் ஆயிரக்கணக்கானவர்கள் தினமும் நூற்று வருகிறார்கள் என்பதை அறிவேன். ஆனால், இவ் வேலையின் பெரும் பாரத்தை, பண்டைக் காலத்தில் இருந்தது போல நீங்கள் தான் ஏற்றுக்கொள்ள வேண்டும். இருநூறு ஆண்டுகளுக்கு முன்னால், இந்தியப் பெண்கள், உள் நாட்டுத் தேவைகளுக்கு மாத்திரமேயன்றி வெளிநாடுகளுக்காகவும் நூற்று வந்தார்கள்; அவர்கள் சாதாரண நூலை நூற்றுவந்ததோடு உலகம் என்றுமே நூற்றறியாத அவ்வளவு உயர்ந்த நூலையும் நூற்று வந்தனர். நமது மூதாதைகள் நூற்றதைப் போன்ற அவ்வளவு நயமான நூலை இன்னும் எந்த யந்திரத்தாலும்கூட நூற்க முடியவில்லை. இரு மாதங்களிலும் அதற்குப் பிறகும் கதருக்கு இருக்கும் கிராக்கியை நாம் சமாளிப்பதென்றால், நூற்கும் சங்கங்களை அமைத்து, நூற்புப் போட்டிகளை வைத்துக்

கையினுல் நூற்ற நூல் இந்தியாவில் ஏராளமாகக் கிடைக்கும்படி நீங்கள் செய்ய வேண்டும். இக்காரியத்திற்காக உங்களில் சிலர், நூற்பதிலும் பஞ்சைப் பட்டை போடுவதிலும், நூற்கும் ராட்டையை ஒழுங்குபடுத்திக் கொடுப்பதிலும் நிபுணர்களாக வேண்டும். அதாவது, ஓயாமல் உழைக்க நீங்கள் தயாராக இருக்கவேண்டும். நூற்பதை ஜீவனத்திற்கு ஓர் உபாயமாகவே நீங்கள் கருதக்கூடாது. மத்தியதர வகுப்பினருக்குக் குடும்ப வருமானத்திற்கு இது அதிகப்படியாக உதவுவதாக இருக்க வேண்டும். ஒவ்வோர் ஏழைப் பெண்ணுக்கும் சந்தேகத்திற்கு இடமில்லாத வகையில் இது ஜீவனத்திற்கு வழி செய்வதேயாகும். ராட்டை, முன்னுளில் இருந்ததைப் போன்று, விதவைப் பெண்களுக்கு அன்பிற்குரிய துணையாக இருக்கவேண்டும். ஆனுல், என் கோரிக்கையைப் படிக்கும் உங்களுக்கு இதை ஒரு கடமையாகவும் தருமமாகவுமே கூறுகிறேன். இந்தியாவில் வசதியோடு வாழும் பெண்களெல்லோரும் தினமும் ஓர் அளவுக்கு நூல் நூற்பதனுல், நூல் மலிவாகக் கிடைக்கும்படி செய்தவர்களாவார்கள். நாம் எதிர்பார்ப்பதைவிட இன்னும் சீக்கிரமாகவே நாம் விரும்பும் நயமான நூல் உற்பத்தியாகும்படி செய்தவர்களுமாவார்கள்.

இவ்விதம் இந்தியாவின் பொருளாதார, ஒழுக்க விமோசனம் உங்களைப் பொறுத்தே இருக்கிறது. வருங்காலச் சந்ததியை வளர்ப்பவர்கள் நீங்களேயாகையால் இந்தியாவின் எதிர்காலமும் உங்கள் மடியில்தான் தவழ்ந்துகொண்டிருக்கிறது. எளிய வாழ்வு வாழ்கிறவர்களாகவும், கடவுள் பக்தியுள்ளவர்களாகவும், வீரம் மிக்க ஆண்களாகவும் பெண்களாகவும் ஆகும்வகையில் இந்தியக் குழந்தைகளை நீங்கள் வளர்க்க முடியும். ஆனுல், செல்லங் கொடுத்து அவர்களைப் பலவீனர்களாகவும், வாழ்க்கைப் புயல்களைத் தீரமாக எதிர்த்து நிற்கும் சக்தியில்லாதவர்களாகவும், அந்நிய ஆடம்பரங்களில் பழகினவர்களாக்கிப் பின்னுல் அவற்றைக் கைவிட முடியாதவர்களாகவும் நீங்கள் குழந்தைகளை வளர்த்துவிடவும் முடியும். இந்தியப் பெண்கள் இதில் எத்தன்மையினர் என்பது வரப்போகும் சில வாரங்களில் தெரிந்துவிடும். இதில் எப்படி இருக்க நீங்கள் விரும்புவீர்கள் என்பதில் எனக்கு எந்த விதமான சந்தேகமும் இல்லை. அரசாங்கம், இந்தியாவின் செல்வங்களையெல்லாம் சுரண்டி வந்திருப்பதால் அதன் மீதே அது நம்பிக்கையை இழந்துவிட்டது. ஆகையால், அந்த அரசாங்கத்தின் கையிலிருப்பதைவிட இந்தியாவின் விதி உங்கள் கையில் பத்திரமாக இருக்கிறது. பெண்களின் கூட்டம் ஒவ்வொன்றிலும், தேசீய முயற்சிக்கு உங்கள் ஆசீர்வாதம் வேண்டும் என்று கேட்டு வந்திருக்கிறேன். நீங்கள் புனிதமானவர்கள், எளிமையாக வாழ்கிறவர்கள், தேசீய முயற்சியை நிறைவேற்றி வைக்கும் தெய்வத் தன்மை வாய்ந்தவர்கள் என்ற நம்பிக்கையினுலேயே அவ்வாறு கேட்டு வந்தேன். உங்களிடமிருக்கும் அந்நியத் துணிகளையெல்லாம் கொடுத்துவிட்டு, நாட்டின் நன்மைக்காக விடாமல் ஒழிந்த

நேரங்களிலெல்லாம் நூற்பதன் மூலம் உங்கள் ஆசீர்வாதங்கள் பலனடையும்படி நீங்கள் செய்ய முடியும்.

உங்கள் அன்பு மிக்க சகோதரன்.

மோ. க. காந்தி

—'எங் இந்தியா' – 11—8—1921

## 16

# ஏழைகளின் இன்பத்திற்கு அறிகுறி

[அந்நியத் துணி பகிஷ்காரத்திலேயே மக்களின் மனமெல்லாம் ஈடுபட வேண்டும் என்பதிலேயே மகாத்மா 1921 ஜுலை, ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் கவனஞ் செலுத்தி வந்தார். ஜுலை 31-ஆம் தேதி பம்பாயில் பரேல் என்னுமிடத்தில் உமார் சோபானி மைதானத்தில் அந்நியத் துணி தகனத்தை மகாத்மா நடத்தினார். அக்காட்சியை ஆயிரக்கணக்கான மக்கள் கூடியிருந்து பார்த்தனர். மகாத்மா மூட்டிய அத்தீ, சொக்கப்பனை போல் ஓங்கி எரிந்தபோது, கூடியிருந்த மக்கள் சந்தோஷ ஆரவாரம் செய்தனர். கொளுத்தப்பட்டவை கந்தைத் துணிகள் அல்ல. விலையுயர்ந்த பட்டாடைகள், சேலைகள் முதலியனவெல்லாம் தீக்கு இரையாயின. இவ்விதத் துணிகள் ஒன்றரை லட்சம் ரூபாய் மதிப்புள்ளவை அன்று தகனமாயின. இது நடந்த மறுநாள், பம்பாய் சௌபாத்திக் கடற்கரையில் நடந்த பெரும் கூட்டத்தில் மகாத்மா பேசினார். அப் பிரசங்கமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

"அழகான பம்பாய், நேற்று ஒரு தீயை ஏற்றியது. பார்ஸிகளின் கோயில்களில் இருப்பதைப் போன்று இத்தீ என்றென்றும் நீடித்து இருக்க வேண்டும். நமது மிகப் பெரிய வெளிப் பாவமாகிய அந்நியத் துணியை நாம் நேற்றுக் கொளுத்தியதைப் போன்று நமது பாவங்களையெல்லாம் அத்தீ தொடர்ந்து கொளுத்தி வரவேண்டும். அந்நியத் துணியை இனி என்றும் நாம் தீண்டுவதில்லை என்று கொள்ளும் உறுதிக்கு அது ஒரு சின்னமாக இருந்து வரட்டும். ஹிந்துக்கள், முஸ்லிம்கள், ஜெயினர்கள், சீக்கியர்கள், பார்ஸிகள், கிறிஸ்தவர்கள், யூதர்கள் முதலிய இந்தியாவைத் தாயகமாகக்கொண்ட எல்லா மதத்தினரும் அந்நியத் துணியைத் தீண்டாமலிருப்பதை ஒரு கடமையாகக்கொள்ள வேண்டும். இது, இந்திய இனத்தினர் எல்லோருக்குமே பொதுப்படையானதோர் அவசியமான தருமமாகட்டும். ஒடுக்கப்பட்ட மக்களைத் தீண்டாதாராகக் கருதுவது எவ்விதம் பக்தியுள்ள ஒவ்வொரு ஹிந்துவுக்கும் பாவச் செய

லாகுமோ, அவ்வாறே அந்நியத் துணியைத் தீண்டாமலிருப்பது நம் எல்லோருக்கும் இருக்க வேண்டிய ஒரு நற்குணம். ஆகையால், நாம் நேற்றுச் செய்தது ஒரு மகத்தான தியாகம். லோகமான்யரின் நினைவைக் கொண்டாடுவதற்கான தகுதியைப் பம்பாய் அடைந்துவிட்டது. அவருடைய பெரிய தன்னலத் தியாகம், அவருடைய இணையற்ற தீரம், அவருடைய மிக எளிய வாழ்க்கை ஆகியவைகளின் நினைவு நமக்கு என்றும் பொக்கிஷங்களாக இருக்கட்டும். தேசாபிமானத்தையே அவர் தமது மத தருமமாகக் கொண்டார். அவர் அடையக் கனவு கண்ட சுயராஜ்யத்தை அடைவதற்கு நம்மை நாம் அர்ப்பணம் செய்துகொள்ளுவோமாக. சுயராஜ்யத்தைவிட அவருக்குச் சிறந்த நினைவுச் சின்னம் வேறு எதுவுமில்லை.

"நேற்று நான் கூறியதைப்போன்று, உண்மையான சுதேசியமின்றி இந்தியாவுக்கு விமோசனமில்லை. பரேலில் நாம் நேற்று ஏற்றிய தீ உண்மையான, அவசியமான யாகத் தீயாகும். அகம் உள்ளிருப்பது எப்படியோ அப்படித்தான் புறமும். நேற்று நாம் ஏற்றிய புறத்தீ, அகத் தீக்கு ஒரு சின்னம். நம் மூளையிலும் உள்ளத்திலும் இருக்கும் பலவீனங்களையெல்லாம் அத்தீ எரித்துவிட வேண்டும். புனிதமடைந்த நம் பகுத்தறிவு, சுதேசியத்தின் உண்மையான பொருளாதாரத்தைக் காட்டவேண்டும். சுத்தமடைந்துவிட்ட நம் உள்ளங்கள், அந்நியத் துணியின் அழகில் நாம் மயங்கிப் போய்விடாமல் இருப்பதற்கு வேண்டிய பலத்தையும் நமக்கு அளிக்கும். அந்நியத் துணி மயக்கம் இந்தியாவுக்கு வெளியிலிருப்பவர்களுக்கு என்னதான் நல்லதாக இருந்தாலும் அது இந்தியாவுக்கு நல்லதல்ல.

"நேற்று நாம் ஏற்றிய தீ உண்மையான தியாகத் தீயாக இருக்குமாயின், லோகமான்யரின் நினைவுக்காக இன்று நாம் கூடித் தெரிவிக்கும் வணக்கம் உண்மையானதாக இருந்தால், நம்மை நாமே ஏமாற்றிக்கொள்ளாதிருப்பதிலும், நாட்டை ஏமாற்றுமலிருப்பதிலும் நாம் எச்சரிக்கையுடன் நடக்க வேண்டும். கதர், விசேஷ காலங்களில் அணியும் ஆடையாக மாறிக்கொண்டு வருகிறது. இனிமேல் விசேஷ காலங்களில் வெளிநாட்டு மஸ்லின் துணிகள் நம் உடல்களை அலங்கரிக்கப் போவதில்லை. ஆனால், தெய்வீகமானதான கதர், வேர்வையைச் சிந்தும் உழைப்பிற்கோ அல்லது பலவந்தமாக ஏற்பட்டுள்ள சோம்பேறித்தனத்திற்கோ அடையாளமன்று. குடும்ப வாழ்வில் திரும்பவும் ஏற்படப் போகும் கீதத்திற்கும், ஏழைப் பாட்டாளிக்கு வரப்போகும் சுபிட்சத்திற்குமே இது அறிகுறி. அதுவும், காலஞ்சென்ற நம் தேசத் தலைவரின் சடலத்தை ஓராண்டுக்கு முன்னால் எங்கு தகனம் செய்தோமோ அதே இடத்தில் இன்று நாம் கூடியிருப்பதும் தெய்வீக பிரதிக்ஞையானால், நம் உறுதியிலிருந்து நாம் பின் வாங்குவது என்பதே இருக்கக்கூடாது; ஏமாற்றுவதோ, வெறுக்கப்பட்டோ இதில் இருக்கக்கூடாது. அந்நியத் துணியை அணிவதென்பதை

நாம் அடியோடு விட்டொழித்துவிட வேண்டும். என்னதான் உயர்வான பாலாக இருந்தாலும், அதில் விஷம் இருக்கிறதென்ருல் அதைத் தூரக் கொட்டி விடுவதைத் தவிர அது எவ்விதம் பயன்படாதோ, அதேபோலவே நம்மிடமிருக்கும் அந்நியத் துணியும் வீணனது என்பதை நாம் உணர வேண்டும். நாம் இனி அந்நியத் துணிகளை உடுத்தப் போவதில்லையென்ருல், நம் பெட்டிகளில் அவற்றைப் பூட்டி வைத்திருப்பது வீண் சுமையல்லவா? நாகரிகத்திற்கு உகந்ததல்ல என்று ஏற்பட்டுவிட்டபோது ஐரோப்பியர்கள் விலையுயர்ந்த பொருள்களையும் கைவிட்டுவிடவில்லையா? இந்த எச்சரிக்கையை இப்பொழுதே சொல்லிவிடுகிறேன். ஏனெனில், மீதம் வைத்திருந்தால் பின்னுல் உடுத்திக் கொள்ளுவதற்குப் பயன்படும் என்ற நம்பிக்கையில் சிலர் கொஞ்சம் அந்நியத் துணியைக் கொளுத்தக் கொடுத்துவிட்டு, மீதத்தைப் பத்திரமாக வைத்திருக்கிருர்கள் என்பதை நான் அறிவேன். அந்நியத் துணியை வசூல் செய்வது, பணம், நகை வசூலைப் போன்றது அல்ல. தங்களிடமிருப்பதில் ஒரு பகுதி நகையையும் பணத்தையுமே அநேகர் கொடுக்க வேண்டும். ஆனல், அந்நியத் துணிகளை வசூலிப்பது, குப்பையைக் கூட்டாகச் சேர்ப்பது போன்றது. சிரத்தையுள்ள, எச்சரிக்கையோடு கூடிய ஒரு குடித்தனப் பெண், சிறு குப்பையையும் கூட்டி அப்புறம் எறிந்துவிடுவாள். நம் கடைத் தெருக்களில் அந்நியத் துணிகளை விற்கும் கடை எங்கோ ஒன்றுதான் இருக்க வேண்டுமானல், ஆடம்பரப் பகட்டில் இருக்கும் மோகத்தால் புரட்சியை உண்டாக்கிவிட நமக்கு இருக்கும் ஆற்றலையே அது பொறுத்திருக்கிறது. போலிகளைக் கண்டு நாம் ஏமாந்துவிடாமல் இருக்க வேண்டும். நாம் ஏமாந்துவிட்டால், வெளிநாடுகளிலிருந்து மோசடியான போலிக் கதர்த் துணிகள் வந்துவிடும். இச்சமயத்திற்கு, இந்தச் சந்திக் காலத்திற்கு முரடாகவுள்ள சலவை செய்யப்படாத கதரே சிறந்ததாகும்.

“நமது எல்லா ஆற்றல்களையும் அதிக அளவுக்குப் பயன்படுத்திக் கொள்ளுவதற்குச் சுதேசியில் வாய்ப்பு இருக்கிறது. கோடிக்கணக்கான ஆண் பெண்களையும், கிழவர்களையும் குமரர்களையும் அது சோதித்து விடுகிறது இதனுலேயே சுதேசியில் நான் உறுதியுடன் இருக்கிறேன். இந்தியா ஒரே மனதாக வேலை செய்தால்தான் இது வெற்றி பெற முடியும். சுதேசியில் இந்தியா இதைச் செய்ய முடிந்தால் சுயராஜ்யத்தின் ரகசியத்தை அது அறிந்து கொண்டு விட்டதாகும். அப்பொழுது சரியான முறையில் ஆக்கல் அழித்தல் கலையில் இந்தியா நிபுணத்துவம் அடைந்து விட்டதாகும்.”

[பத்திரிகைகளில் வெளியான செய்தியிலிருந்து.]

## 17

# அழித்தலின் தத்துவம்

கீழ்க்கண்ட பரிதாபகரமான, அழகிய கடிதத்தை ஸ்ரீ ஆண்டுரூஸ் எழுதியிருக்கிறார். அக்கடிதத்தை வாசகரும் அறியும்படி நான் செய்வதை அவரும் பாராட்டுவார் என்றே நிச்சயமாகக் கருதுகிறேன். அக்கடிதமாவது:

“ஏழைகளுக்கு உதவி செய்யும் எண்ணத்திலேயே அந்நியத் துணியை நீங்கள் கொளுத்துகிறீர்கள் என்பதை அறிவேன். ஆனால், அவ்விதம் செய்வதால் தவறான வழியில் போகிறீர்கள் என்றே கருதுகிறேன். அந்நியத் துணி எல்லாவற்றையுமோ அல்லது அதில் பெரும் பகுதியையோ பகிஷ்கரித்துவிடுவதில் நீங்கள் வெற்றி பெற்று விடுவதாக இருந்தால், மில் துணியின் விலை ஏறி அதனால் ஏழைகள் கஷ்டப்படுவார்கள் என்பது தானே தெளிவாகிறது என்று கருதுகிறேன். ஆனால், இதில்லாமல், ‘அந்நிய’ என்ற சொல்லை உபயோகிப்பதில் இன உணர்ச்சியைக் கிளப்பிவிடுவது மறைவாக இருந்து வருகிறது. இதைத்தடுக்க வேண்டும்; இது வளராதிருக்கப் பார்க்கவேண்டியது அவசியம் என்று நாளுக்கு நாள் எனக்குத் தோன்றி வருகிறது. அழகான ஆடைகளையும் கொண்ட அந்நியத் துணிகளின் பெருங் குவியலுக்கு நீங்கள் தீ மூட்டினீர்கள் என்ற காட்சி என் மனக்கண் முன்பு தோன்றியதும் நான் அதிக அதிர்ச்சியடைந்துவிட்டேன். அழகான இப்பரந்த உலகத்தைச் சேர்ந்தவர்களே நாமும் என்பதை மறந்து சுயநலத்தோடு இந்தியாவினிடமே முழுக் கவனம் செலுத்தி வருகிறோம் என்று தோன்றுகிறது. பழைய, கெடுதலான சுயநல தேசியத்திற்கே இது நம்மைக் கொண்டு போகும் என்று அஞ்சுகிறேன். அப்படியானால், ஐரோப்பா இன்று எந்தத் தீய சூழ்நிலையிலிருந்து தப்புவதற்குத் தீவிரமாக முயன்று கொண்டிருக்கிறதோ அதே சூழ்நிலைக்குள்ளேயே நாம் போய்விட்டவர்களாவோம். ஆனால், அதை நான் விவாதித்து நிரூபித்துவிட முடியாது. எனினும், அது என்னை நடுக்குறச் செய்தது. அநேகமாக ஒரு பலாத்கார முறையாகவே எனக்குத் தோன்றியது என்று மாத்திரமே நான் மீண்டும் கூறமுடியும். என்றாலும், பலாத்காரம் உங்களுக்கு எவ்வளவு வெறுப்பானது என்பதையும் அறிவேன். அந்நியத் துணி விஷயத்தை ஒரு சமய தருமம்போல் ஆக்கிக்கொண்டுவிடுவது எனக்குப் பிடிக்கவில்லை.

“குடிப் பழக்கம், அபின் போன்ற லாகிரி வஸ்துக்களைத் தின்பது, தீண்டாமை, இன அகம்பாவம் போன்ற பெரிய அடிப்படை ஒழுக்கக் கேடுகளை எதிர்த்து நீங்கள் பலமான அடி கொடுத்து வந்ததையும், மகா மோசமான விபசாரத் தீமையை நீங்கள் அற்புதமான, அழகான அன்பு வழியில் சமாளித்தபோதும் நான் அளவு கடந்த ஆனந்தமடைந்தேன். ஆனால், அந்நியத் துணிகளைச் சொக்கப்பனை கொளுத்துவது, அத்துணியை அணிவது மகாபாவமான காரியம் என்று மக்களிடம் சொல்லுவது, நம் நாட்டுச் சகோதர சகோதரிகளின், வெளி நாட்டிலிருக்கும் சகோதர சகோதரிகளின் உயர்வான கைவேலைப்பாட்டினாலாகியவைகளைத் தீயிவிட்டு

நாசமாக்குவது, அவற்றை அணிந்தால் தீட்டுப்பட்டுவிடும் என்று கூறுவது போன்றவைகளெல்லாம் எனக்கு எவ்வளவு கஷ்டமாகத் தோன்றுகின்றன என்பதை நான் விவரிப்பதற்கில்லை. 'உன்னைவிட நான் தெய்விகமானவன்' என்று பரிசேயர்கள்* சொல்லிக் கொள்ளுவார்களாம். அதைப்போல மற்றவர்களை மதிப்பிடுபவனாக நான் தோன்றி விடுவேனா என்பதற்காக நீங்கள் எனக்குக் கொடுத்த கதரை உடுத்திக் கொள்ளவும் எனக்குப் பயமாக இருக்கிறது என்பதை நீங்கள் அறிவீர்களா? இதற்கு முன்னால் எல்லாம் நான் இப்படி உணர்ந்ததே இல்லை.

"நீங்கள் செய்வதில் ஏதாவது என் மனத்தை வருத்துமானால் அதைக் குறித்து உங்களிடமே முறையிட்டுக்கொள்ளுவேன் என்பதை அறிவீர்கள். இதுவும் என் மனத்தை வருத்திவிட்டது.

" 'மாடர்ன் ரெவியூ' பத்திரிகையில் கட்டுரைகள் எழுதினேன், ஆர்வம் மிக்க ஆனந்தத்தோடு அவற்றை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். ஏனெனில், உங்கள் வாழ்க்கையின் பொருளை நான் கண்டுகொண்டேன் என்று நிச்சயமாகக் கருதினேன். ஆனால், இப்பொழுது நீங்கள் பலாத்காரமான, பொருந்தாத, இயற்கையல்லாத எதையோ செய்து வருகிறீர்கள் என்று என் மனம் உங்களிடம் முறையிட்டுக்கொள்ளுகிறது. உங்கள் சகோதரன் ஏதோ தவறு செய்கிறான் என்று நீங்கள் உணர்ந்தபோதும் உங்கள் அன்பு எவ்விதம் இருந்ததோ அதே போலவே தங்களிடம் என் அன்பு எப்போதையும்விட அதிகமாகவே இருக்கிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். உங்கள் கருத்துத்தான் என்ன என்பதைத் தெரிவியுங்கள். தீயிட்டுக் கொளுத்தியதைக் குறித்து 'எங் இந்தியா'வில் எழுதியிருப்பது எனக்குக் கொஞ்சங்கூடச் சமாதானமளிக்கவில்லை."

அவருடைய சுபாவமே இதுதான். நான் செய்வது ஏதாவது அவருடைய மனத்திற்குக் கஷ்டத்தை உண்டாக்கி விடுமானால், (எப்படியும் இது முதல் தடவை அல்ல), என்னுடைய பதிலுக்குக்கூடக் காத்திருக்காமல் எனக்குக் கடிதங்களை எழுதிக் குவித்து விடுவார். ஏனெனில், இது அன்பு அன்போடு பேசுவதேயல்லாமல் விவாதிப்பது அல்ல. புண்பட்டு விட்ட உள்ளத்தைக் கொட்டுவதே அது. அந்நியத் துணிகளைக் கொளுத்துவது சம்பந்தமாகவும் அதேதான் நடந்திருக்கிறது.

ஸ்ரீ ஆண்டுரூஸ் அன்பு மொழிகளால் என்ன கூறியிருக்கிறாரோ அதையே, என் கருத்துக்கு மாறுபட்டவர்கள், கடுமையான, கோபமான, ஆபாசமான சொற்களில்கூட எனக்கு எழுதியிருக்கிறார்கள். ஸ்ரீ ஆண்டுரூஸின் சொற்கள் அன்பும் துக்கமும் நிறைந்தவைகளாகையால் என் உள்ளத்தில் ஆழப் பதிந்து

* இவர்கள் புராதன யூத இனத்தினர். பாரம்பரியமாக வருவதும், எழுதிவைத்திருப்பதுமான சட்ட திட்டங்களைக் கண்டிப்பாக அனுசரித்து வருபவர்கள். தங்களிடமே தெய்வீகத் தன்மை உண்டு என்று காட்டிக்கொள்ளுபவர்கள். தாங்கள் செய்வதொன்றே நியாயம் என்றும் எண்ணுபவர்கள்.

முழுப் பதிலையும் கூறும்படி செய்கின்றன. கோபச் சொற்கள் விஷயத்திலோ, போகிற போக்கில் குறிப்பிட்டுவிட்டு ஒதுக்கி வைத்துவிடுகிறேன். ஸ்ரீ ஆண்டுரூஸின் சொற்கள் அகிம்சையோடு கூடியதாவதோடு அன்பும் நிறைந்ததாகையால் பலன் தந்திருக்கின்றன. மற்றவர்களின் சொற்களோ பலாத்காரமானவை, துவேஷம் நிறைந்தவை. ஆகவே, என்னிடம் பயனுண்டாகவில்லை. அதே போன்ற பதிலை அளிக்கக்கூடியவனாக நான் இருந்தால், அதற்கு நான் சம்மதிப்பதானால், கோபமான பதிலை என்னிடமிருந்து எழுப்பியிருக்கும். சுயராஜ்யத்தைச் சீக்கிரத்தில் அடைவதற்கு நமக்குத் தேவையான அகிம்சையில், ஸ்ரீ ஆண்டுரூஸின் கடிதத்தில் காண்பதும் ஒரு வகையாகும்.

இதைவிட்டு இனி விஷயத்திற்கு வருவோம். கொளுத்துவது அவசியம் என்றுதான் நான் இப்பொழுது எண்ணுகிறேன். புனிதமான, குறிப்பிட்ட குடும்பங்கள், நண்பர்கள் வட்டாரத்திலும்கூட இதைத்தான் நான் செய்திருப்பேன். நான் செய்வதிலெல்லாம், யோசனை கூறுவதிலெல்லாம், குறிப்பிட்ட செய்கை அன்பிற்குரியவர்களுக்கும் நெருங்கியவர்களுக்குப் பொருத்தமானதாக இருக்குமா என்பதே நான் அனுசரித்து வரும் தவறாத சோதனை. முக்கியமானது என்று நான் கருதும் நம்பிக்கையை உபதேசித்து வருவது, இவ்விஷயத்தில் தவறாக நினைப்பதற்கிடமில்லாதது; தெளிவானது. நண்பர்கள் விஷயத்திலும் விரோதிகள் விஷயத்திலும் நான் ஒரே மாதிரியாகவே இருக்க வேண்டும். இந்த நம்பிக்கை நண்பர்களுக்குப் புதிராகத் தோன்றினும், என் செய்கைகள் விஷயத்தில் நான் தெளிவாகவும் உறுதியாகவும் இருக்கும்படி செய்கிறது.

அருமை நண்பர் ஒருவருக்கும் எனக்கும் அடிக்கடி விடாமல் தகராறு ஏற்படுவதற்கு ஓர் அழகான தூரதிருஷ்டிக் கண்ணாடி காரணமாக இருந்தது. ஆகவே, அக்கண்ணாடியைக் கடலில் எறிந்துவிட்டது எனக்கு நினைவிருக்கிறது.* கடலில் அதை எறிந்துவிடுவதைக் குறித்து முதலில் அவர் தயங்கினார். அழகானதும், விலை உயர்ந்ததும், ஒரு நண்பரால் பரிசாக அளிக்கப் பட்டதுமான அதை அழித்துவிடுவதே நியாயம் என்பதை அவர் பிறகு கண்டுகொண்டார். விலையுயர்ந்த பரிசுகள், ஒருவரின் ஒழுக்க அபிவிருத்திக்கு இடையூறாக இருக்குமானால், அதை எவ்வித ஈடுபாடு இல்லாமலும் தயக்கமின்றியும் அழித்துவிட வேண்டியதே என்று அனுபவத்திலிருந்து தெரிகிறது. பாரம்பரியமாக வைத்திருக்கும் மிக அருமையான பொருள்களில்

---

* இதில் மகாத்மா குறிப்பிடும் நண்பர், தென்னாப்பிரிக்காவில் அவருக்குச் சிறந்த தோழராக இருந்த ஸ்ரீ கால்லென்பாக்கைக் குறித்தேயாகும். அவர் வைத்திருந்த தூரதிருஷ்டிக் கண்ணாடியைக் குறித்துத் தமக்கும் அவருக்கும் அடிக்கடி வாக்குவாதம் நிகழ்ந்ததைக் குறித்தும் முடிவில் அக்கண்ணாடியைக் கடலில் எறிந்துவிட்டதைப் பற்றியும் காந்திஜி தமது 'சுயசரிதை'யில் குறிப்பிட்டிருக்கிறார். இதன் விவரத்தை 'மகாத்மா காந்தி நூல்கள்' மூன்றாம் தொகுப்பில் 448–50–ஆம் பக்கங்களில் காண்க.

பிளேக் நோய்க் கிருமிகள் மிகுந்துவிட்டன என்ருல் அவற்றைத் தீயிலிட்டு எரித்துவிடுவது தெய்வீகக் கடமை அல்லவா? நான் வாலிபனுக இருந்தபோது என் அருமை மனைவியின் அன்பான வளையல்களினுல் எனக்கும் அவளுக்கும் அபிப்பிராயபேதம் ஏற் படவே அவ்வளையல்களை நொறுக்கித் தூளாக்கிவிட்டதும் எனக்கு நினைவிருக்கிறது. அவள் தாயார் அவ்வளையல்களை அவளுக்குப் பரிசாக அளித்திருந்தார் என்று எனக்கு ஞாபகம். அவ்வாறு நான் அவள் வளையல்களை முறித்தது குரோதத்தினுல் அல்ல; அன்பினுலேயே. அறியாமையால் அப்படிச் செய்தேன் என்று இந்த முதிர்ந்த வயதில் காண்கிறேன். அவ்வாறு அழித் தது எங்களுக்கு உதவியது; எங்களை நெருங்க இணைத்து அன்பை அதிகரித்தது.

அந்நியச் சாமான்கள் எல்லாவற்றையுமே பகிஷ்கரிக்க வேண்டும் என்று நான் வற்புறுத்தியிருந்தால். அது இனவெறி, குறுகிய மனப்பான்மை, அக்கிரமம் என்று இருக்கலாம். ஆனுல், வற்புறுத்துவது எல்லா அந்நியத் துணிகளையும் பகிஷ்கரிக்க வேண்டும் என்பதே. இதை மாத்திரம் வற்புறுத்தி வருவதில் எவ்வளவோ வித்தியாசம் இருக்கிறது. ஆங்கில லீவர் கெடி காரங்களையோ அல்லது அழகான ஜப்பானிய அரக்கு வேலைப் பொருள்களையோ வராமல் தடுத்துவிட வேண்டும் என்று நான் விரும்பவில்லை. ஐரோப்பாவிலிருந்து வரும் மது வகைகள் எவ்வளவோ ஜாக்கிரதையாகத் தயாரிக்கப்பட்டுக் கவனமாகப் பாதுகாத்து வைக்கப்பட்டவைகளாக இருக்கலாம். என்ருலும், அந்த ருசியான மதுபான வகைகளையெல்லாம் நான் அழித்தே ஆக வேண்டும். சைத்தானின் மாயவலை மிகப் பக்குவமாகவே விரித்து வைக்கப்பட்டிருக்கிறது. நல்லதையும் தீயதையும் பிரிக் கும் போது, கண்ணுக்குச் சரியாகத் தெரியாதபடி அவ்வளவு நுட்பமாக இருக்கும்போது, சைத்தானின் வலை அதிகக் கவர்ச்சி யானதாகத்தான் இருக்கிறது. என்ருலும், கோடு மாத்திரம் உறுதியாகவும் வளைத்துவிட முடியாதபடியும் இருந்து கொண்டு தான் வருகிறது. அதைக் கடந்து விட்டாலோ நிச்சயமாகச் சாவுதான்.

இன்று இந்தியா இனப்பற்றுடையதாக இருக்கிறது. மக் களின் தீய உணர்ச்சிகளையெல்லாம் தடுத்து நிறுத்திவைப்பது சாத்தியம் என்பதை அதிக முயற்சியின் பிறகே அறிகிறேன். பொதுவாக மக்களிடம் விரோத மனப்பான்மையே இருந்து வருகிறது. ஏனெனில், அவர்கள் பலவீனமாக இருக்கிருர்கள். தங்களுடைய பலவீனத்தைப் போக்கிக் கொள்ளும் வழியில்லாத திக்கற்ற நிலையிலும் இருக்கிருர்கள். மனிதர் மீதுள்ள விரோத மனப்பான்மையைப் பொருள்களின் மீது நான் மாற்றிக்கொண் டிருக்கிறேன்.

அந்நியத் துணி மீது கொண்ட மோகத்தினுல் அந்நிய ஆதிக்கம் ஏற்பட்டதோடு மக்களும் ஓட்டாண்டிகளாகிவிட்டனர்.

அநேக குடும்பங்கள் மானங்கெட்டு வாழ நேர்ந்திருப்பது, இதையெல்லாம்விட மிக மிக மோசமானதாகும். சமீபத்தி லேயே, கத்தியவாரைச் சேர்ந்த நூற்றுக்கணக்கான 'தீண்டாத' நெசவாளர்கள், தங்கள் தொழிலைக்கொண்டு பிழைக்க முடி யாமற் போய்விட்டதால் பம்பாயில் முனிசிபாலிடியில் தெருக் கூட்டும் தோட்டிகளாகிவிட்டார்கள். இது வாசகருக்குத் தெரியாமல் இருக்கலாம். அவர்களுடைய வாழ்க்கை அதிகக் கஷ்டமானதாகிவிட்டது. இதனால், அவர்கள் தங்கள் குழந்தை களைப்பறிகொடுத்துவிட்டு உடலிலும் ஒழுக்கத்திலும் சீர்குலைந்து நிற்கிறார்கள். சிலர், தங்கள் பெண்களும் மனைவியருங்கூட மானமிழந்த வாழ்வு வாழ்வதைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டியவர்களாகி விட்டார்கள். குஜராத்தில் இவ்வகுப்பைச் சேர்ந்த அநேக பெண்கள், வீட்டிலிருந்தே செய்வதற்கான தொழில் எதுவும் இல்லாததால், பொதுச் சாலைகளில் வேலை செய்யப் போயிருக்கின்றனர். அங்கே ஒன்றில்லாவிடில் மற்றோர் நிர்ப்பந்தத்திற்கு ஆளாகித் தங்கள் மானத்தையும் விற்று வருகின்றனர். வாசகருக்கு இதுவும் தெரியாமல் இருக்கலாம். பாஞ்சாலத்தின் பெருமைமிக்க நெசவாளர்கள், பிழைக்க வழி யில்லாததால், சில ஆண்டுகளுக்கு முன்னால்தான் ராணுவத்தில் சேர்ந்துவிட்டார்கள். பெருமைகொண்ட, ஒரு பாவமும் அறியாத அரபுக்களை, அதிகாரிகளின் உத்தரவின்பேரில் கொல்லுவதற்கு இவர்களே கருவிகளாக இருந்தனர். இவர்கள் இவ்விதம் கொன்றது வயிற்றுப் பிழைப்பிற்காகவே யன்றி நாட்டிற்காக அல்ல. இதுவும் வாசகருக்குத் தெரிந்திருக்காது. மதி மயங்கிக் கூலிகளாகியிருக்கும் இவர்களிடம் உண்மையை வெற்றிகரமாக எடுத்துக்கூறி அக்கைத்தொழிலிருந்து திருப்பிவிடுவது என்பது மிகக் கஷ்டம். கௌரவமானதாகவும் கலை மிகுந்ததாகவும் ஒரு சமயம் இருந்துவந்த தொழிலைக் கௌரவக் குறைவானது என்று இப்பொழுது இவர்கள் எண்ணுகிறார்கள். உலகப் பிரசித்தி வாய்ந்த 'ஷூப்ளம்' என்ற உயர்ந்த துணியை நெய்துவந்த டாக்கா நெசவாளர்கள், அத்தொழிலைக் கௌரவக் குறைவானது என்று எண்ணியிருக்க முடியாது.

அந்நியத் துணியைத் தொடுவதும் பாவம் என்று இந்நிலை யில் நான் எண்ணினால், அது ஆச்சரியமானதாகுமா? ஜீரணசக்தி கொஞ்சங்கூட இல்லாத ஒருவர், சத்தான ஆகாரத்தைத் தின்பது பாவமல்லவா? அத்தகைய ஆகாரத்தை அவர் அழித்துவிட வேண்டும் அல்லது வேறு யாருக்காவது கொடுத்துவிட வேண்டும் அல்லவா? என் மகன் நோயுற்றுப் படுத்த படுக்கையாக இருக் கும்போது, என்னிடம் அத்தைய சத்தான ஆகாரம் இருந்து, என் மகன் அவ்வுணவைச் சாப்பிடக்கூடாது என்றாலும் அவன் சாப்பிட ஆசைப்படுகிறான் என்றால், அப்பொழுது அவ்வுணவை நான் என்ன செய்வேன் என்பதை நான் அறிவேன். அந்த ஆகாரத்தை நான் தின்று ஜீரணிக்கமுடியும். என்றாலும், நானும் அதைத் தின்னமாட்டேன். அதைத் தின்பதால் துன்பம் விளையும்

என்பதை அவன் உணரும்படி செய்வதற்காக அவன் கண் முன்னுலேயே அவ்வுணவை நாசப்படுத்திவிடுவேன்.

உயர்ந்த ஒழுக்க ரீதியைக்கொண்டு பார்த்தால், அந்நியத் துணியை அழிப்பது நியாயமான காரியமேயானுல், சுதேசித் துணியின் விலை ஏறிவிடுமே என்பதற்காக நாம் அஞ்சவேண்டியதில்லை. உற்பத்தியை உற்சாகப்படுத்துவதற்கு மிகுந்த வேகமான முறை அந்நியத் துணியை அழிப்பதுதான். ஒரு மகத்தான முயற்சியினுலும், அந்நியத் துணியை வேகமாக அழிப்பதனுலுமே இந்தியாவை அதன் உறக்கத்திலிருந்தும், பலவந்தமாக ஏற்பட்டுவிட்ட சோம்பேறித்தனத்திலிருந்தும் எழுப்ப வேண்டும். அஸ்ஸாம் கெஜட்டியரின் ஆசிரியரான ஸ்ரீ ஆஸன், காம்ரூபைக் குறித்து 1905-இல் வருமாறு எழுதியிருக்கிருர்:

"சமீப வருடங்களில் அந்நியத் துணியை உபயோகிக்கும் வழக்கம் அதிகமாகிக் கொண்டும் வருகிறது. இம்மாறுதல் சரியானது என்று சொல்லுவதற்கு எதுவும் இல்லை. ஏனெனில், இதற்கு முன்னுல் கைத்தறியில் நெய்வதற்கு உபயோகித்து வந்த நேரம் இப்பொழுது வேறு எந்தப் பயனுள்ள தொழிலிலும் உபயோகிக்கப் படவில்லை."

அஸ்ஸாம் மக்களிடம் நான் பேசிக் கேட்டிருக்கிறேன். கஷ்டப்படுவதால் மேற்கண்ட சொற்களிலுள்ள உண்மையை அவர்கள் உணருகிருர்கள். உடலுக்குள் அந்நியப் பொருள் சேருவது எப்படித் தீமையானதோ அதே போலத்தான் இந்தியாவுக்கு அந்நியத் துணி. உடலில் சேர்ந்த அந்நியப் பொருளை அழித்துவிடுவது உடலின் ஆரோக்கியத்திற்கு எவ்வாறு அவசியமோ, அதுபோல அந்நியத் துணியை அழித்துவிட வேண்டியது இந்தியாவின் சுகத்திற்கு அவசியம். சுதேசியமே உடனடியான அவசியம் என்பதை ஒப்புக்கொள்ளுவதானுல், அந்நியத் துணியை அழிப்பதில் அரைகுறையாக நடந்து கொள்ளுவதற்கே இடமில்லை.

முழு சுதேசி உணர்ச்சியையும் வளர்ப்பதால் குறுகிய மனப்பான்மையும், பிறநாட்டுச் சம்பந்தமின்றித் தனித்து வாழும் உணர்ச்சியும் வளர்ந்துவிடுமோ என்று நாம் அஞ்சவேண்டியதில்லை. மற்றவர்களின் புனிதத்தைக் காப்பாற்றப் போவதன் முன், நாம் புலன் நுகர்ச்சியில் திளைத்து நம் உடல்களை நாசமாக்கிக்கொள்ளாமல் இருக்கவேண்டும். இன்று இந்தியா, மற்ருெருவரின் விருப்பத்திற்கு அசைந்து கொண்டிருக்கும் உயிரற்ற கட்டையே தவிர வேறு எதுவுமல்ல. புலனடக்கம், தன்னல மறுப்பு ஆகியவைகளின் மூலம் தன்னைத்தானே, புனிதமாக்கிக் கொண்டு இந்தியா உயிர் பெறட்டும். அப்பொழுது இந்தியா தனக்கேயன்றி மனித வர்க்கத்திற்கே வரப்பிரசாதமாக இருக்கும். இதற்கு மாருக, இந்தியா அசிரத்தையோடு புலன் நுகர்ச்சியிலும், பிறரை ஆக்கிரமிப்பதிலும், மற்றவர்களைச் சுரண்டு

வதிலும் இருக்குமானால், அது விழித்தெழும்போது கும்பகர்ணனைப்போலக் கிளம்பி அழிப்பதொன்றையே செய்வதோடு தனக்குமாத்திரமேயன்றி மனிதவர்க்கத்திற்கும் ஒரு சாபக்கேடாகவும் இருக்கும்.

சுதேசியத்தில் உறுதியான பற்றுள்ளவருக்குக் கதரை அணிவதில் பரிசேயர்களைப் போன்று தாம் உயர்ந்தவர்கள் என்ற அகம்பாவம் இருப்பதற்கில்லை. பரிசேயன் உயர்குணத்தைப் போற்றுகிறவன். சுதேசி நோக்கத்தோடு பார்த்தால், கதர் அணிபவன், தன் நுரையீரல்களைப் பயன்படுத்திக் கொள்ளுபவனைப் போன்றவன். மற்றவர்கள் கெட்ட நோக்கத்தின் பேரில் செய்தாலும் சரி, அதன் அவசியத்திலோ அல்லது பிரயோசனத்திலோ நம்பிக்கையில்லாததால் அடியோடு செய்யாமல் இருந்தாலும் சரி, இயற்கையான கடமையானதோர் காரியத்தை நாம் செய்தே ஆகவேண்டும்,

—'எங் இந்தியா'–1—9—1921

# 18

# ஏழைக்கு ஏற்ற வழி

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி கேட்டுக்கொண்டபடி அந்நியத் துணி பகிஷ்காரத்தை நாம் பூர்த்தி செய்வதற்கு இன்னும் சில தினங்களே பாக்கியாக இருக்கின்றன. ஆண்,பெண் ஆகிய ஒவ்வொரு காங்கிரஸ் ஊழியரும் தங்கள் முழுக் கவனத்தையும் பகிஷ்காரத்திலேயே செலுத்தி வருவார்களானால் இது இப்பொழுதும் காலங் கடந்ததாகிவிடாது. சுதேசி இல்லாமல், அதாவது அந்நியத் துணியைப் பகிஷ்கரித்துவிட்டு நமக்குத் தேவையான துணி முழுவதையும் கையினால் நூற்று நெய்வதன் மூலம் உற்பத்தி செய்தாலன்றிச் சுயராஜ்யம் கிடைக்கமுடியாது என்பதை ஒவ்வொருவரும் உணர்ந்துவிட்டால், சுயராஜ்யம் இல்லாமல் கிலாபத், பாஞ்சாலப் பிரச்னைகளுக்குத் தீர்வு காண முடியாது என்பதை அறிந்துவிட்டால், நாம் விரும்புகிற பகிஷ்காரத்தையும், தேவைப்படும் துணி உற்பத்தியையும் நிறைவேற்றிக்கொண்டு விடுவதில் கஷ்டமே இருப்பதற்கில்லை.

தங்களிடம் இருக்கும் அந்நியத் துணிக்குப் பதிலாக, எடுத்தவுடனேயே சுதேசித் துணியை வாங்கிக்கொண்டுவிடுவது அநேகருக்குக் கஷ்டமாக இருக்கும் என்பதை அறிவேன். உபயோகப்படுத்த முடியாமல் எறிந்துவிடும் தங்கள் துணிக்குப் பதிலாக வேறு துணி வாங்கிக் கட்ட முடியாத ஏழைகள் கோடிக் கணக்கில் இருக்கிறார்கள். சென்னைக் கடற்கரைக்கூட்டத்தில் நான் என்ன கூறினேனோ அதே யோசனையை அவர்களுக்கு

மீண்டும் சொல்லுகிறேன். கோவணம் மாத்திரமே போதும் என்று அவர்கள் இருந்துவிடட்டும். நமக்கு இருப்பதைப் போன்ற உஷ்ண நாட்டில் கோடை மாதங்களில் நம் உடம்பைப் போர்த்திக்கொள்ள நமக்கு எதுவுமே வேண்டியதில்லை. ஆண்கள் உடம்பு முழுவதையும் மூடிக் கொள்ளுவதுதான் நாகரிகத்திற்கு அடையாளம் என்று இந்தியாவில் என்றும் வற்புறுத்தப்பட்ட தில்லை.

எனக்குள்ள முழுப் பொறுப்பையும் நன்ருக உணர்ந்தே நான் இந்த ஆலோசனையைக் கூறுகிறேன். ஆகையால், இதற்கு உதாரணமாக நடக்க வேண்டும் என்பதற்காக அக்டோபர் 31-ஆம் தேதி வரையிலாவது தொப்பியும் சட்டையும் அணிவதை விட்டுவிடுவது, இடுப்பு வேஷ்டி ஒன்றே போதும் என்று இருப் பது, உடம்பைப் போர்த்திக்கொள்ளவேண்டிய அவசியம் வரும் போது மாத்திரம் உபயோகிக்க ஒரு மேல் வேஷ்டியை வைத்துக் கொள்ளுவது என்று இருக்கிறேன்.* என்னளவில் நான் பின்பற் றத் தயாராயில்லாத எதையும் பிறருக்கு யோசனை சொல்ல நான் என்றும் தயங்கி வந்திருக்கிறேன். அதோடு தங்களிட மிருக்கும் அந்நியத் துணியை எறிந்துவிட்டு வேறு துணி வாங்க இயலாமலிருப்பவர்களைச் சுலபமான வழியில் நடத்திச் செல்ல வேண்டும் என்பதில் நான் ஆர்வத்துடன் இருப்பதாலும் இந்த உடை மாற்றத்தை மேற்கொள்ளுகிறேன். துக்கத்திற்கு அறி குறியாகவும் இத்துறவு அவசியமாகிறது என்று கருதுகிறேன். வெறுந்தலையுடனும் வெற்றுடம்புடனும் இருப்பது துக்கத்திற் குச் சின்னம் என்று இந்நாட்டில் நான் வசிக்கும் பகுதியில் கருதப் படுகிறது. இவ்வாண்டு முடிவுறும் தறுவாயிலிருக்கிறது. நாம்

---

* மகாத்மா இவ்விதம் தமது உடை மாற்றத்தைக் குறித்துக் கூறியது, 1921 செப்டம்பர் 19-ஆம் தேதி திருச்சிராப்பள்ளியில் பொதுக் கூட்டத்தில் பேசியபோதாகும். அப்பிரசங்கமே 'எங் இந்தியா'வில் பிரசுரமாயிற்று. தம் முடிவை நிறைவேற்ற மகாத்மா அதிக நாட்கள் எடுத்துக்கொண்டுவிடவில்லை. செப்டம்பர் 21-ஆம் தேதி அவர் மதுரையிலிருந்தார். காலை பத்து மணிக்கெல்லாம் நாவிதரை அழைத்துத் தலையை மொட்டையாக க்ஷவரம் செய்யச் செய்தார். மறுநாள் அங்கிருந்து அறுபது மைல் தூரம் மோட்டாரில் பிரயாணம் செய்து காரைக்குடி போகவிருந்தார். அதி காலையிலேயே எழுந்து தமது உடையை முற்றிலும் மாற்றிக்கொண்டு விட்டார். சட்டையையும் குல்லாயையும் எறிந்துவிட்டார். தமது சட்டைப் பையில் வைத்துக் கொள்ளுபவைகளை இனி வைத்துக்கொள்ளுவதற்காக ஒரு சிறு கதர்ப்பையை வைத்துக் கொண்டார். பிறகு ஒரு முழ அகலத்துண்டு ஒன்றை இடுப்பில் கட்டிக்கொண்டார். இத்தகைய ஆடையை அணியவேண்டாம் என்று அவருடைய நண்பர்கள் எவ்வளவோ காந்திஜியிடம் சொல்லிப் பார்த்தார்கள். சந்நியாசிகளாக மாறிவிட வேண்டும் என்பது தமது நோக்கம் அல்ல என்று மகாத்மா, நண்பர்களுக்கு உறுதி கூறினர். இத்தகைய ஆடை அணிவதைத் தென்னிந்தியாவில் இருப்பவர்கள் தவருகக் கருத மாட்டார்கள் என்ருர். உறுதியுடன் கோவணதாரியாகவே மகாத்மா ஆகிவிட்டார். அக்டோபர் 31-ஆம் தேதி வரையிலாவது, தொப்பியையும் சட்டையையும் அணிவதை விட்டுவிடப் போவதாகக் கூறிய மகாத்மா, பிறகு என்றுமே அவற்றை அணிய வில்லை.

இன்னும் சுயராஜ்யத்தை அடைந்துவிடவில்லை என்பது, நாம் துக்கத்திலேயே இருக்கிறோம் என்பதை மேலும் மேலும் நான் அறியும்படி செய்கிறது. ஒரு விஷயத்தைத் தெளிவாகச் சொல்லிவிட விரும்புகிறேன். என்னுடன் வேலை செய்து வரும் ஊழியர்கள், தொப்பியையும் சட்டையையும் அணிவதை விட்டு விடுவது தங்களுடைய வேலைக்கு அவசியம் என்று கண்டாலன்றி அவர்கள் அவற்றை அணிவதை விட்டுவிட வேண்டும் என்று நான் எதிர்பார்க்கவில்லை.

போதுமான ஊழியர்கள் மாத்திரம் இருப்பார்களாயின், ஒவ்வொரு மாகாணமும், ஒவ்வொரு மாவட்டமும் தனது தேவைக்குப் போதுமான துணியை ஒரே மாதத்தில் உற்பத்தி செய்துவிடலாம் என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். இதை நிறைவேற்றுவதற்காக ஒரு மாதத்திற்குச் சுதேசியைத் தவிர மற்ற வேலைகளை யெல்லாம் நிறுத்தி வைத்துவிடும்படியும் யோசனை கூறுகிறேன். குடிப் பழக்கம் இருப்பவர்கள், ஆன்ம பரிசுத்தத்திற்கான இப் புதிய உணர்ச்சியை உணர்ந்து கொள்ளுவார்கள் என்ற நம்பிக்கையின் பேரில், மதுபானக் கடைகளில் மறியல் செய்து வரும் தொண்டர்களைத் திருப்பிக்கூட அழைத்துக் கொண்டு விடுவேன். சிறைப்படுவது வாழ்க்கையில் சாதாரணமான காரியமே என்றும், அதைப்பற்றி எதுவும் எண்ண வேண்டாம் என்றும் ஒத்துழையாமைக்காரர் ஒவ்வொருவருக்கும் கூறுகிறேன். அக்டோபர் மாதம் முழுவதிலும் எல்லாக் கூட்டங்களையும் கிளர்ச்சிகளையும் நிறுத்திவிட்டுத் துணி உற்பத்தியை அதிகரிப்பதிலும் அந்நியத் துணியைச் சேகரிப்பதிலுமே நாம் ஈடுபடுவோமானால், சட்ட மறுப்புப் போராட்டத்தை ஆரம்பிக்க வேண்டியது அவசியம் என்று பின்னால் தோன்றினாலும், அதற்கு வேண்டிய அமைதியான, நிதானமான சூழ்நிலையை நாம் உண்டாக்கியவர்களாவோம். பூரண சுதேசியத்திற்கு ஒழுக்க வலிமையும், மக்களை ஒன்று திரட்டும் ஆற்றலும், தன்னடக்கத்தின் இணையற்ற சக்தியும் வேண்டும். இவையெல்லாம் நம்மிடம் இருக்கிறது என்பதை நாம் காட்டிக்கொண்டு விடுவோமாயின், இதற்குமேல் அதிகம் எதுவும் தேவையில்லாமலேயே நாம் சுதந்திரத்தை அடைந்து விடுவோம்.

—'யங் இந்தியா'-29—9—1921

## 18

# பெரும் பாதுகாவலர்

இப்பொழுது நடந்துவரும் இயக்கத்தைக் குறித்துச் சாந்தி நிகேதனத்தின் கவிஞர் 'மாடர்ன் ரெவியூ'வில் மிக அற்புத

மான கட்டுரை ஒன்றை எழுதியிருக்கிறார்.* தொடர்ந்த சொல்லோவியங்களைக் கொண்டது இது. அவராலேயே அதைத் தீட்ட இயலும். புதிதாகத் தோன்றும் ஆவேச மோகத்தைப் பயத்தின் காரணமாகவோ அல்லது நம்பிக்கையினாலோ கண்மூடித்தனமாகப் பின்பற்றுவதைக் குறித்து ஒருவர் எவ்விதம் வருணித்தாலும் அப்படிப்பட்ட அதிகாரத்தை, அடிமைப் புத்தியைப் பலமாக ஆட்சேபிப்பதே அந்தக் கட்டுரை. நாம் பொறுமை இழந்துவிடக்கூடாது, நமக்கு அதிகாரம் எவ்வளவுதான் அதிகமிருந்தாலும் அதைப் பிறர் மீது சுமத்தக்கூடாது என்பதற்கு அக்கட்டுரை எல்லா ஊழியருக்கும் வரவேற்கத்தக்க, சிறந்த எச்சரிக்கையாகும். நமது பகுத்தறிவுக்கும் உள்ளத்திற்கும் சரியெனப் படாத எதையும் உடனே நாம் நிராகரித்துவிட வேண்டும் என்றும் கவிஞர் கூறுகிறார். நாம் சுயராஜ்யத்தை அடைய வேண்டும் என்றால், நாம் அறிந்த வகையில் சத்தியத்தில் நாம் எப்படியும் உறுதியுடன் நின்றாக வேண்டும். தன்னுடைய உபதேசம் ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்பதற்காகக் கோபாவேசம் அடைந்துவிடும் சீர்திருத்தக்காரர், கவனிப்பது எப்படி, காத்திருப்பதும் பிரார்த்திப்பதும் எவ்வாறு என்பதைக் கற்றுக் கொள்ளுவதற்காகக் காட்டுக்குப் போய்விட வேண்டியதே.

---

* மகாத்மா காந்தியின் ஒத்துழையாமை, அந்நியத் துணி பகிஷ்காரத்தில் அறிவு எதேச்சாதிகாரம் ஏற்பட்டுவிடக்கூடிய அபாயம் இருப்பதாக, கவி ரவீந்திரநாத டாகுர் ஆரம்பத்தில் கருதினார். 1921 செப்டம்பரில் மகாத்மாவும் கவி டாகுரும் கல்கத்தாவில் சந்தித்துப் பேசினார்கள். ஆனால், ஒருவர் கருத்தை மற்றொருவர் ஏற்றுக்கொள்ள முடியாமல் பிரிந்தனர். பிறகு, நாட்டில் ஏற்பட்டுவரும் போக்குக்கு எதிரே தமது கருத்தைத் தெரிவிக்கவேண்டியது கடமை என டாகுர் எண்ணினார், 1920 அக்டோபரில் வெளியான 'மாடர்ன் ரெவியூ' பத்திரிகையின் இதழில், 'உண்மையின் அறைகூவல்' என்ற தலைப்புடன் ஒரு கட்டுரை எழுதினார். அதற்கு மகாத்மா எழுதிய பதிலே இங்கே பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. கவி டாகுர் எழுதிய கட்டுரையில் அவர் கூறியதாவது: "வெளிச் செல்வாக்கு ஒன்று மக்களுக்குச் சுமையாகி, அவர்களை நசுக்கி வருவதோடு எல்லோரையும் ஒரே தொனியில் பேசும்படியும், ஒரே போக்கில் போகும்படியும் செய்து வருகிறது. எங்குமே பகுத்தறிவும் கலாசாரமும் போய்விட வேண்டுமென்றும், கண்மூடித்தனமாகப் பணிவது ஒன்றே இருக்க வேண்டும் என்றும் சொல்லப்படுவதாகவும் அறிகிறேன். ஏதோ வெளிச் சுதந்திரம் என்பதன் பேரால் ஆன்மாவின் உண்மையான சுதந்திரம் அவ்வளவு எளிதாக நசுக்கப்படுகிறது." இந்தியாவினுடையதைப் போன்ற பெரிய லட்சியம். ஒரு தனி எஜமானரின் இஷ்டத்தைப் பொறுத்ததாகிவிடக் கூடாது என்றும் அக்கட்டுரையில் கூறிய கவி டாகுர், "ஆவேசமும் உற்சாகமும் வேண்டியதுதான். ஆனால், விஞ்ஞானமும் தியானமும் வேண்டும். நாட்டு மக்களின் ஒழுக்க சக்தி முழுவதையும் திரட்டவேண்டும். பொருளாதாரப் பண்டிதர்கள், காரியார்த்தமான பரிகாரங்களைக் காண வேண்டும்; கல்வியாளர்கள் போதிக்க வேண்டும்; ராஜ தந்திரிகள் சிந்திக்க வேண்டும்; தொழிலாளர்கள் வேலை செய்ய வேண்டும். பகிரங்கமாகவோ, மறைமுகமாகவோ அறிவை நிர்ப்பந்தப்படுத்துவது என்பது இருக்கக்கூடாது" என்றார். "நூல் நூற்க வேண்டும், நெய்ய வேண்டும்" என்று மகாத்மா கூறியது கவி டாகுருக்குப் பிடிக்கவில்லை. ஆகவே, "எதையும் சிருஷ்டிக்கும் இக்காலத்திற்கு இதுதானா வேதவாக்கு? மேற்கத்திய நாடுகளுக்குப் பெரிய ஆபத்து அல்லவா?" என்றும் கேட்டார். இதற்குத்தான் மகாத்மா பதில் கூறியிருக்கிறார்.

இவற்றையெல்லாம் மனமார ஒப்புக்கொள்ளவேவேண்டும். சத்தியத்தையும் நியாயத்தையும் எடுத்துக்காட்ட முற்பட்டிருக்கும் கவிஞருக்கு நாட்டு மக்களின் நன்றி உரியதாகும். நம் பகுத்தறிவை இன்னொருவரிடம் நாம் ஒப்படைத்து விடுவோமாயின், முதலில் இருந்ததைவிட நமது கடைசி நிலைமை அதிக மோசமானதாகவே இருக்கும் என்பதில் சந்தேகமே இல்லை. நாடு யோசித்துப்பார்க்காமல், கண்மூடித்தனமாக நான் சொன்னதையெல்லாம் பின்பற்றிவிட்டது, செய்துவிட்டது என்பதை நான் கண்டுகொண்டால் நான் மிகுந்த வருத்தத்தையே அடைவேன். கொடியனின் அடிக்கு அஞ்சிப் பலவந்தமாகச் சரணடைந்து விடுவது அதிக மோசமானது என்ற உண்மையை நான் நன்கு உணர்ந்தே இருக்கிறேன். மிருகத்தனத்திற்கு அடிமையாகப் போனவன் மீள முடியும் என்ற நம்பிக்கைக்காவது இடமுண்டு. அன்பால் அடிமையாகிவிட்டவனுக்கு எதுவுமே இல்லை. பலவீனமாயிருப்பவர்களைப் பலப்படுத்துவதற்கு அன்பு தேவை. நம்பாதவரிடமிருந்தும் கீழ்ப்படிதலை அன்பு கவர்ந்துவிடுமாயின், அத்தகைய அன்பு கொடுமை நிறைந்ததாகிறது. ஒரு மந்திரத்தின் மதிப்பை அறியாமலேயே அதை உச்சரித்துக் கொண்டிருப்பது மனிதத் தன்மையானதல்ல. ஆகையால், கைராட்டை இயக்கத்தில் நம்பிக்கையில்லாமல் அதை ஆதரித்து வருகிறவர்கள் எல்லோரும் தங்கள் எதிர்ப்பைத் தைரியமாகக் கூற முன்வருமாறு கவிஞர் அழைத்திருப்பது நல்லதேயாகும். நமது ஆத்திரத்தில் சகிப்புத் தன்மை நமக்கு இல்லை என்பதைக் காட்டிக்கொண்டுவிட்டோம். நமது கருத்துக்கு மாறுபட்ட கருத்துடையவர்களிடம் பலாத்காரமாகக்கூட நடந்துவிட்டோம். அப்படிச் செய்துவிட்ட நம் எல்லோருக்கும் கவிஞரின் கட்டுரை எச்சரிக்கையாக அமைந்திருக்கிறது. வெறி, மதி மயக்கம், சகிப்பின்மை, அறியாமை, அசட்டுத்தனம் என்ற விரோதிகளும், அவ்வினத்தைச் சேர்ந்த மற்ற விரோதிகளும் நம்மை அணுகாதிருக்க எச்சரிக்கை செய்யும் பாதுகாவலராகவே கவிஞரை நான் கருதுகிறேன்.

கவனத்தோடு இருப்பது அவசியம், இல்லாவிடில் சிந்திக்கவே முடியாதவர்களாகிவிடுவோம் என்பதைக் குறித்துக் கவிஞர் கூறுவதையெல்லாம் நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், இன்று நாட்டில் கண்மூடித்தனமாகப் பணிந்து போய்க் கொண்டிருப்பது ஏதோ பெரும் அளவில் இருப்பதாக அவர் கூறுவதையும் நான் அங்கீகரிப்பதாக யாரும் கருதிவிடக் கூடாது. நன்றாக ஆலோசித்துப் பார்க்குமாறு நான் மீண்டும் மீண்டும் தேச மக்களைக் கேட்டுக்கொண்டு வந்திருக்கிறேன். நூற்கும் ராட்டையே சுபிட்சத்தை அளிக்கும் என்பதை ஆனந்திக்கும் வகையில் நாடு நம்ப முற்பட்டிருக்கிறது என்றால், ஆழ்ந்து சிந்தித்த பிறகு, அதிகத் தயக்கத்திற்குப் பிறகே இம் முடிவுக்கு வந்திருக்கிறது என்று அவருக்கு உறுதி கூறுகிறேன். இந்தியாவிலிருக்கும் படித்தவர்கள் ராட்டையில் அடங்கி

யிருக்கும் உண்மையை இப்பொழுதாவது அறிந்திருப்பதாக நான் சொல்ல முடியாது. மேலே மிதக்கும் அழுக்குத்தான் உள்ளே இருக்கும் பொருளும் என்று கவிஞர் தவருகக் கருதிக் கொண்டுவிடக்கூடாது. கண்மூடித்தனமான நம்பிக்கையினல் ராட்டினம் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறதா, அல்லது ஆய்ந்து பார்த்து அவசியம் எனக் கண்டதால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக் கிறதா என்பதை இன்னும் கொஞ்சம் ஆழ்ந்து கவனித்து அவரே தெரிந்துகொள்ளட்டும்.

நூற்பது ஒரு தெய்வீகக் கடமை என்று கருதி நூற்க வேண்டும் என்றே கவியையும் காவற்காரனையும் கேட்டுக் கொண்டு வருகிறேன். யுத்தம் நடக்கும்போது கவிஞர் தம் வீணையைத் தூரத்தில் வைத்துவிடுகிருர்; வக்கீல் தமது சட்டப் புத்தகங்களையெல்லாம் அப்பால் வைத்துவிடுகிருர்; பள்ளிச் சிறுவனும் தன் பாடப் புத்தகங்களைக் கட்டிவைத்துவிடுகிருன். யுத்தம் முடிந்துவிட்ட பிறகு கவி தம் உண்மையான கீதத்தை இசைக்கலாம். மக்கள் தங்களுக்குள் சச்சரவிட்டுக்கொள்ள நேரமிருக்கும்போதுதான் சட்டப் புத்தகத்தைப் புரட்டிப் பார்க்கும் அவசியம் வக்கீலுக்கு உண்டாகும். ஒரு வீடு தீப்பிடித் துக்கொள்ளும்போது அதற்குள் இருப்பவர்களெல்லோரும் வெளியே ஓடிவந்து விடுகிருர்கள்; தண்ணீரைக்கொண்டு தீயை அணைக்க ஒவ்வொருவரும் ஒரு பாத்திரத்தை எடுத்துக்கொண்டு விடுகிருர்கள். என்னைச் சுற்றி இருப்பவர்களெல்லோரும் சோற் றுக்கு இல்லாமல் செத்துக்கொண்டிருக்கும்போது, பட்டினி கிடப்பவர்களுக்குச் சோறு தேடிக்கொடுப்பது ஒன்றே நான் செய்யக்கூடிய ஒரே வேலை. தீப்பிடித்து எரியும் வீட்டைப் போன்றதே இந்தியா என்பது என் திடமான அபிப்பிராயம். ஏனெனில், சோறு வாங்குவதற்கு வேலை கிடைக்காததால், நாட் டின் மனிதத் தன்மை தினமும் தாக்கப்பட்டு வருவதோடு பட்டினி யால் செத்துக்கொண்டும் இருக்கிறது. கூலி மக்கள் பட்டினி கிடப்பது, அவர்களுக்கு வேலை கிடைக்காததனுலேயே யன்றி அவர்களால் வேலை செய்ய முடியாது என்பதனுல் அல்ல. ராயல சீமை ஜில்லாக்கள் தொடர்ந்து நான்காவது தடவையும் பஞ்சத் தால் வாடுகின்றன. ஒரிஸ்ஸா, தீராப் பஞ்சத்தால் தவிக்கும் பகுதியாக இருக்கிறது. இந்தியா, நமது நகரங்கள் அல்ல; நமது ஏழரை லட்சம் கிராமங்களில் வாழ்கிறது இந்தியா. இந்தக் கிராமங்களைக்கொண்டு நகரங்கள் பிழைக்கின்றன. தங்களிட மிருக்கும் செல்வங்களை அவை வெளிநாடுகளிலிருந்து கொண்டு வந்துவிடவில்லை. ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும், ஜப்பா னிலும் இருக்கும் பெரிய வர்த்தக ஸ்தாபனங்களின் தரகர்க ளாகவும் கமிஷன் ஏஜெண்டுகளாகவும் நகர மக்கள் இருந்து வருகின்றனர். சென்ற இருநூறு ஆண்டுகளாக நடந்துகொண்டு வரும் ரத்தத்தை உறிஞ்சும் வேலையில் அந்தப் பெரிய வர்த்தக ஸ்தாபனங்களுடன் நகரங்கள் ஒத்துழைத்திருக்கின்றன. நாளுக்கு நாள் இந்தியா ஏழையாகிக்கொண்டு வருகிறது என்பது அனு

பவத்தை அடிப்படையாகக்கொண்ட என் நம்பிக்கை. அதன் கால்களிலும் கைகளிலும் ரத்த ஓட்டம் அநேகமாக நின்றே போயிற்று. நாம் கவனிக்கத் தவறிவிட்டால் அது அடியோடு செத்துவிடும்.

பஞ்சத்தில் அடிபட்டுச் சோம்பிக் கிடக்கும் மக்களுக்குக் கடவுள் பிரசன்னமாகத் துணிகிருர் என்ருல், அதற்கு ஏற்றுக் கொள்ளத்தக்கதான ஒரே வழி, வேலையும் அதற்கு ஊதியமாக உணவும் அளிக்க உறுதியளிப்பதன் மூலம் அவர் பிரசன்னமாக வேண்டும். அவன் உணவுக்கு அவன் வேலை செய்ய வேண்டும் என்றே கடவுள் மனிதனைப் படைத்திருக்கிருர். வேலை செய்யாமல் சாப்பிடுகிறவன் திருடன் என்றும் சொன்னுர். நாட்டில் எண்பது சத விகிதத்தினர், வருடத்தில் பாதி நாட்கள் பலவந்தத்தால் திருடர்களாகவே இருக்கின்றனர். எனவே, இந்தியாவே பெருஞ் சிறைச்சாலையாகி விட்டதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? பசி என்ற ஒரே வாதம்தான் இந்தியாவை நூற்கும் ராட்டைக்கு ஓடும்படி செய்திருக்கிறது. நூற்கும் தொழில் மற்றெல்லாத் தொழில்களிலும் மிகவும் மேன்மையானது. ஏனெனில் அன்புத் தொழில் இது. அன்பே தான் சுயராஜ்யமும். அவசியமான உடலுழைப்பு வேலை, மனத்தை அடக்கும் என்று சொல்லலாம் என்ருல், நூற்கும் ராட்டை மனத்தை அடக்கும். இன்று மிருகங்களிலும் கேவலமாக, அநேகமாகச் சாகும் நிலையில் இருந்துவருபவர்களான கோடிக்கணக்கான மக்களைக் குறித்தே நாம் சிந்திக்கவேண்டும். செத்துக்கொண்டிருக்கும் கோடிக்கணக்கான நம் நாட்டுப் பெண்களுக்கும் ஆண்களுக்கும் நூற்கும் ராட்டையே புத்துயிர் அளித்து நீர் வார்ப்பதாகும். "சாப்பாட்டுக்காக வேலை செய்ய வேண்டிய அவசியம் எனக்கு இல்லை. அப்படி இருக்க, நான் ஏன் நூற்கவேண்டும்?" என்ற கேள்வி எழலாம். "என்னுடையது அல்லாததை நான் தின்றுகொண்டிருப்பதனுல்தான்" என்பதே அக்கேள்விக்குப் பதில். என் நாட்டு மக்கள் நாசமாக்கப்படுவதைக்கொண்டு நான் வாழ்ந்து வருகிறேன். உங்கள் மடிக்கு வந்து சேரும் ஒவ்வொரு காலணுவும் எந்த வழியில் உங்களிடம் வருகிறது என்பதை ஆராய்ந்து பாருங்கள். நான் எழுதுவதிலுள்ள உண்மை அப்பொழுது உங்களுக்கு விளங்கும். பலவந்தமாகத் தங்களுக்கு ஏற்பட்டிருக்கும் சோம்பேறித்தனத்தைப் போக்கி வேலை செய்து வாழ்வது எப்படி என்பதைக் கோடிக்கணக்கான மக்கள் அறியவில்லை என்ருல், சுயராஜ்யம் என்பது அவர்களுக்குப் பொருளில்லாதது. இத்தகைய சுயராஜ்யத்தைக் கொஞ்ச காலத்திற்குள் அடைந்துவிடுவது சாத்தியம். நூற்கும் ராட்டை திரும்பவும் ஏற்படுவதனுல்தான் அது சாத்தியம்.

வளர்ச்சியை நானும் விரும்புகிறேன்; எனக்கும் சுயநிர்ணய உரிமைவேண்டும்; சுதந்திரமும் எனக்கு வேண்டும். ஆனுல், இவையெல்லாம் ஆன்மாவுக்கு வேண்டும் என்று விரும்புகிறேன்.

சக்கிமுக்கிக் கல்லை உபயோகித்த ஆதிக் காலத்தைவிட இரும்பை உபயோகிக்கத் தலைப்பட்ட காலம் முன்னேற்றமானது என்பதை நான் சந்தேகிக்கிறேன். அதைப் பற்றியெல்லாம் எனக்கு இப்பொழுது கவலையில்லை. நமது அறிவும், நம்முடைய எல்லா ஆற்றல்களும் ஆன்ம வளர்ச்சி ஒன்றிலேயே ஈடுபட்டிருக்கவேண்டும். இக்கால வசதிகளையெல்லாம் பெற்ற மனிதன், நீடிக்கக்கூடியதும் புதியதுமான ஒன்றை மனித வர்க்கத்திற்காகக் கண்டுபிடிப்பது சாத்தியம் என்பதை யூகிப்பதில் எனக்கு எவ்விதக் கஷ்டமும் இல்லை. தன் வழிக்கு வெளிச்சத்திற்கும் தீக்கும் ஒரு சிறு சக்கிமுக்கிக் கல்லையும் ஓர் ஆணியையும் தவிர வேறு எதுவுமே இல்லாத ஒருவன், எப்பொழுதும் கடவுள் மீது துதி பாடிக்கொண்டு உலகில் அமைதியும் நல்லெண்ணமும் நிலவுவதற்கான உபதேசத்தைத் துன்புற்றிருக்கும் மக்களுக்குச் செய்துகொண்டிருக்க முடியும் என்பதை யூகிப்பதோ எனக்கு இன்னும் எளிதானது. நூற்கும் ராட்டைக்காக நான் கோருவதெல்லாம் உழைப்புக்குள்ள பெருமையை ஒப்புக்கொள்ள வேண்டும் என்பதே.

நூற்கும் ராட்டையை நாம் இழந்துவிட்டதால் நமது இடப்பக்க நுரையீரலை நாம் இழந்துவிட்டோம் என்று நான் கருதுகிறேன். ஆகையால், தீவிரமான க்ஷயரோகத்தினால் நாம் பீடிக்கப்பட்டிருக்கிறோம். ராட்டை திரும்பவும் உயிர் பெறுவது அக்கொடிய நோய் வளர்வதைத் தடுக்கும். எல்லா இடங்களிலும் எல்லோரும் செய்ய வேண்டிய காரியங்கள் சில இருக்கின்றன. சில இடங்களில் எல்லோரும் செய்தாகவேண்டியதான காரியங்களும் சில இருக்கின்றன. இந்தியாவின் நிலைமைக்கு கைராட்டையில் நூற்கவேண்டியது, இந்தச் சந்திக் காலத்திலாவது எல்லோரும் எல்லாக் காலங்களிலும் மிகப் பெரும்பாலானவர்கள் செய்தாகவேண்டிய காரியம்.

அந்நியத் துணி மீது நாம் கொண்டுவிட்ட மோகமே ராட்டையை அதனுடைய கௌரவமான நிலையிலிருந்து விரட்டிவிட்டது. ஆகையால், அந்நியத் துணியை அணிவது பாவமான் காரியம் என்று கருதுகிறேன். பொருளாதாரத்திற்கும் நீதி தருமத்திற்கும் அதிக வித்தியாசமோ, ஏதோ வித்தியாசமோ இருப்பதாக நான் கருதவில்லை என்பதை நான் ஒப்புக்கொண்டே ஆக வேண்டும். ஒரு தனிப்பட்டவரின் அல்லது ஒரு நாட்டின் ஒழுக்கத்திற்குக் கேடு விளைவிப்பதாக இருக்கும் பொருளாதாரம் ஒழுக்கக் கேடானதே. ஆகையால், அது பாவகரமானது. இவ்விதம் ஒரு நாட்டை மற்றோர் நாடு பிடுங்கித் தின்ன அனுமதிக்கும் பொருளாதாரமும் ஒழுக்கக் கேடானதே. பிறரைக் கஷ்டப்படுத்தி வேலை வாங்கித் தயாரிக்கப்பட்ட பொருள்களை வாங்குவதும் உபயோகிப்பதும் பாவமாகும். அமெரிக்கக் கோதுமையைத் தின்றுகொண்டு, என் பக்கத்தில் இருக்கும் தானியக் கடைக்காரரிடம் போய் வாங்குவார் இல்லாததால் அவரைப்

பட்டினி போட்டுவிடுவதும் பாவம். இதே போல என் பக்கத்தில் இருக்கும் நூற்போரும் நெய்வோரும் தயாரித்த துணியை நான் வாங்கினால், அத்துணி என் உடம்பை மூடுவதோடு அவர்களுக்கு வயிற்றுக்குச் சோறும் கட்டத் துணியும் அளிக்கும். இது தெரிந்திருந்தும் லண்டன் ரீஜண்ட் தெருவில் விற்கும் நவநாகரிக ஆடம்பர ஆடையை நான் அணிந்தால் அது பாவமேயாகும். பாவம் என்னைச் சூழ்ந்துகொள்ளுகிறது என்பதை நான் தெரிந்துகொண்டதுமே, நான் அந்நிய ஆடைகளையெல்லாம் தீயிலிட்டுக் கொளுத்திவிட்டு என்னை நானே தூய்மைப்படுத்திக் கொள்ளவேண்டும். அதன் பிறகு, என் பக்கத்தில் இருப்பவர்கள் தயாரிக்கும் முரட்டுக் கதரே எனக்குப் போதும் என்று நான் திருப்தியடையவேண்டும். நூற்கும் தொழிலைக் கைவிட்டுவிட்டதால் அதைத் திரும்பவும் செய்யவிரும்ப மாட்டார்கள் என்பதை நான் அறிவேனுகையால், நானே அதைச் செய்ய ஆரம்பித்து எல்லோரிடத்திலும் அது பரவும்படி செய்யவேண்டும்.

எரித்துவிட வேண்டும் என்று கவிஞரிடம் நான் கேட்டுக்கொள்ளும் துணி, அவரிடமிருக்கும் அவருடைய துணியாக இருக்கவேண்டும் என்று துணிந்து அவருக்குக் கூறிகொள்ளுகிறேன். அத்துணிகள் ஏழைகளுடையவை, கட்டத் துணி இல்லாதவர்களுடையவை என்பது அவருக்குத் தெரிந்திருந்தால், ஏழைகளின் துணிகளை முன்னுலேயே அவ்வேழைகளுக்கு அவர் கொடுத்திருப்பார். என் அந்நியத் துணியை நான் எரிக்கும்போது என் அவமானத்தையே நான் எரிக்கிறேன். நிர்வாணமாக இருப்பவர்களுக்கு வேண்டியது துணியல்ல. இதற்கு மாருக அவர்களுக்கு இருக்கும் ஒரே தேவை பிழைப்புக்கு வேலை. இதைக் கொடுக்காமல் அவர்களுக்குத் துணி கொடுத்து அவர்களை அவமதிக்க நான் மறுத்துவிடவேண்டும். அவர்களுடைய போஷகர்களாகிவிடும் பாவத்தை நான் செய்யமாட்டேன். ஆனல், அவர்களை ஏழ்மைப்படுத்துவதற்கு நானும் உதவியாக இருந்திருக்கிறேன் என்று அறிந்ததும், அவர்களுக்குச் சலுகையோடு கூடிய ஸ்தானத்தை அளிப்பேன். என் சாப்பாட்டில் மிஞ்சிப்போவதையோ, எனக்கு வேண்டாமென்று எறிந்துவிடும் துணியையோ அவர்களுக்குக் கொடுக்கமாட்டேன். ஆனல், என் நல்ல சாப்பாட்டையும் துணியையும் அவர்களுக்கு அளித்து வேலையிலும் அவர்களுடன் பங்கு கொள்ளுவேன்.

அதோடு, ஒத்துழையாமை அல்லது சுதேசித் திட்டம், பிறர் சம்பந்தம் வேண்டாம் என்று தனித்து நிற்கும் தத்துவம் அன்று. ஒத்துழையாமை, அகிம்சை, சுதேசி ஆகியவை உலகம் முழுவதற்குமேயான தத்துவங்கள். ஆனல், அதை நான் அவ்வாறு பகிரங்கப்படுத்துவதை என் அடக்கம் தடுத்துவிட்டது. இத்தத்துவம் பிறந்த மண்ணிலேயே நல்ல பலனைத் தரவில்லையானல், இதை மற்றவர்கள் பெரிதாக நினைக்கமாட்டார்கள். தன்

னுடைய அவமானம், மோசமான ஏழ்மை, தொற்று நோய்கள் ஆகியவைகளைத் தவிர உலகத்துடன் பகிர்ந்துகொள்ள இச்சமயத்தில் இந்தியாவிடம் வேறு எதுவுமே இல்லை. உலகிற்கு நாம் அனுப்பக்கூடியவை இந்தியாவின் புராதன சாத்திரங்களையா? சரி, அவை எத்தனையோ பதிப்புகளாக அச்சிடப்பட்டிருக்கின்றன. சந்தேகிக்கும் உலகம் அவற்றைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் மறுக்கிறது. ஏனெனில், அச்சாத்திரங்களின் வாரிசுகளும், அவைகளைப் பாதுகாப்பவர்களுமான நாம் அவை கூறுகிறபடி நடப்பதில்லை. ஆகையால், உலகத்துடன் பகிர்ந்துகொள்ள வேண்டும் என்று நான் நினைப்பதற்கு முன்னால், அப்படிப் பகிர்ந்துகொள்ளுவதற்கானதும் என்னிடம் இருக்கவேண்டும். நமது ஒத்துழையாமை, ஆங்கிலேயருடனோ மேற்கத்திய நாட்டினருடனோ ஒத்துழையாமை அல்ல. ஆங்கிலேயர் அமைத்துள்ள முறை, உலகமே சதம் என்ற நாகரிகம், அதனால் தோன்றியிருக்கும் பேராசை, எளியாரைச் சுரண்டுதல் ஆகியவைகளுடன் ஒத்துழைக்க மறுப்பதே நமது ஒத்துழையாமை. நமக்குள்ளேயே ஒதுங்கியிருப்பதுதான் நம் ஒத்துழையாமை. நம்மை ஆளும் ஆங்கிலேயருடன், அவர்களுடைய நிபந்தனைக்குட்பட்டு ஒத்துழைக்க மறுப்பதுதான் நம் ஒத்துழையாமை. 'எங்கள் நிபந்தனையின்படி வந்து எங்களோடு ஒத்துழையுங்கள். அது எங்களுக்கு நல்லது; உங்களுக்கும் உலகுக்கும் நல்லது' என்று அவர்களுக்குக் கூறுகிறோம். நமது அடிப்படையிலிருந்தே நிலைகுலைந்து போகும்படி செய்யப்படுவதற்கு நாம் மறுத்து விடவே வேண்டும். நீரில் மூழ்கி அமிழ்ந்துகொண்டிருப்பவன் மற்றவனைக் காப்பாற்ற முடியாது. மற்றவர்களைக் காப்பாற்றக்கூடியவர்களாக நாம் இருப்பதற்கு நம்மை நாமே காத்துக்கொள்ள முயற்சி செய்ய வேண்டும். இந்தியாவின் தேசீயம், தான் வாழ்ந்தால் போதும் என்று இருப்பதோ, ஆக்கிரமிப்பதோ, அழிப்பதோ அல்ல. இது ஆரோக்கியமளிப்பது; தெய்வ நம்பிக்கையுள்ளது. ஆகையால், இது பரோபகாரமுள்ளதாகும். மனித குலத்தின் நன்மைக்காகச் சாகவும் ஆசைப்படுவதற்கு முன்னால், வாழ்வதற்கும் இந்தியா அறிந்துகொள்ளவேண்டும். கதியற்றுப் பூனையின் பற்களுக்கு இடையில் சிக்கிக்கொண்டுவிடும் எலிகளின் பலவந்தமான தியாகத்தில் பெருமை எதுவும் இல்லை.

கவிஞர், தமது கவியுணர்விற்கு ஏற்ப வருங்கால நன்மைக்கு என்றே வாழ்கிறார். நாமும் அப்படி வாழவேண்டும் என்றும் விரும்புகிறார். பொழுது புலரும்போது வானை நோக்கிப் பறந்து செல்லும் பறவைகள் திவ்விய கீதங்களை இசைத்துச் செல்லும் அற்புதமான காட்சியை, வியக்கும் நம் பார்வைக்கு அவர் அளிக்கிறார். இப்பறவைகள், வேண்டிய ஆகாரத்தைப் பகலில் தின்றிருக்கின்றன. இரவில் களைப்பாறிய சிறகுகளோடு பறந்து செல்கின்றன. முதல் நாளிரவில் புது ரத்தம் பரவியிருக்கிறது. பலம் இல்லாததனால், என்ன தூண்டியும் சிறகுகளை அடித்துக்

கொள்ளவும் முடியாத நிலையிலிருந்த பறவைகளைக் காணும் வேதனையும் எனக்கு இருந்திருக்கிறது. இந்திய வானத்தின் கீழிருக்கும் மனிதனாகிய பறவையோ, தூங்கப் போவதாகப் பாசாங்கு செய்வதற்கு முன்னால் இருந்ததைவிட அதிகப் பலவீன முள்ளவனாக வெளிவருகிறான். கோடிக்கணக்கான மக்களுக்கு முடிவில்லாத விழிப்பு அல்லது முடிவில்லாத மூர்ச்சைதான். இது, வருணிக்க முடியாத வகையிலுள்ள, வேதனையான நிலை. இதை அறிந்துகொள்ளுவதற்கு அனுபவித்துத்தான் பார்க்க வேண்டும். துன்பப்படும் நோயாளிகளிடம் கபீர்தாஸரின் கீதம் ஒன்றைப் பாடி அவர்கள் சாந்தமடையும்படி செய்துவிடுவது முடியாது என்பதை நான் பார்த்திருக்கிறேன். பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்கள் கேட்பதெல்லாம் ஒரே ஒரு கீதத்தைத்தான். சத்தளிக்கும் உணவே அது. அதை அவர்களுக்கு இன்னொருவர் கொடுக்க முடியாது. அவர்களே அதைச் சாம்பாதித்துக்கொள்ள வேண்டும். உழைத்துப் பாடுபடுவதனால் மாத்திரமே அதைச் சாம்பாதிக்க முடியும்.

"நித்திய கர்மத்தை நீ செய். செயலின்மையைவிடச் செயலே சிறந்தது.

* * *

யக்ஞ கர்மம் தவிர மற்றக் கர்மத்தால் இவ்வுலகம் கட்டுண்டிருக்கிறது. குந்தியின் மைந்தா, யக்ஞத்திற்காகக் கர்மத்தைப் பற்றற்று நன்கியற்று.

சிருஷ்டித் துவக்கத்தில் பிரம்மதேவன் யக்ஞத்தோடேயே பிரஜைகளைப் படைத்து, 'இதனால் விருத்தியடையுங்கள்; இது உங்களுக்குக் காமதேனுவாகட்டும்' என்றான்.

இதனால் தேவர்களைப் பேணுங்கள்; தேவர்கள் உங்களைப் பேணட்டும். பரஸ்பரம் பேணிப் பெரு நன்மை எய்துவீர்.

யாகத்தால் பேணப் பெற்ற தேவர்கள், நீங்கள் நாடிய போகங்களை உங்களுக்கு நல்குவார்கள்! அங்ஙனம் அவர்களால் கொடுக்கப் பெற்று, அவர்களுக்குக் கைம்மாறு அளிக்காது நுகர்பவன் திருடன்.

யாகத்தில் மிஞ்சியதை உண்ணும் நல்லோர், எல்லாப் பாவங்களினின்றும் விடுபடுகின்றனர். ஆனால் தங்கள் பொருட்டே சமைக்கும் பாவிகள் பாவத்தை உண்கின்றனர்.

உணவினின்று உயிர்கள் உண்டாகின்றன. மழையினின்று உணவு உருவாகிறது. யக்ஞத்திலிருந்து மழை வருகிறது. யக்ஞத்திற்குப் பிறப்பிடம் கர்மம்.

கர்மம் வேதத்தினின்று உதித்ததென அறிக. வேதம் பரமாத்மாவினின்று வந்தது. ஆகையால், எங்கும் நிறைந்துள்ள வேதம் யாண்டும் யக்ஞத்தில் நிலைபெற்றுள்ளது.

இகத்தில் இங்ஙனம் இயக்கப் பெற்றுள்ள சக்கரத்தைப் பின்பற்றுதவன். ஓ பார்த்தா, பாவ வாழ்க்கையுடையோனுய், புலன்களில் ஈடுபட்டவனுய் வீணே வாழ்கிருன்.''

—பகவத் கீதை : அத்தியாயம்-3

இன்று இந்தியாவுக்கு நூற்கும் ராட்டை அத்தியாவசியமானதான, தெய்வீகமான பொருள் என்ற முழு உண்மையும் மேலே கண்ட சுலோகங்களில் எனக்கு அடங்கி யிருக்கின்றன. இன்று செய்யவேண்டியதை நாம் கவனித்துச் சரியாகச் செய்து வந்தால், நாளை நடக்கவேண்டியதைக் கடவுள் கவனித்துக் கொள்ளுவார்.

—'எங் இந்தியா' – 13—10—1921

# 20

# கூட்டுறவை வளர்க்கும்

கையினல் நூற்பது விருத்தியாகிறது என்ருல், உலகம் என்றுமே கண்டறியாத வகையில் வலிய ஏற்படும் மிகப் பெரிய கூட்டுறவு என்பதுதான் அதன் பொருள் என்பதை மிகச் சில ஊழியர்களே கவனித்திருக்கக்கூடும். மிகப் பரந்ததோர் பிரதேசத்தில் சிதறிக்கிடந்து, தங்களுடைய அன்ருட வாழ்க்கைக்கு வேலைசெய்து கொண்டிருக்கும் கோடிக்கணக்கான மக்களிடையே கூட்டுறவு என்பதுதான் அதன் பொருள். விவசாயத்திற்கு அதிகக் கூட்டுறவு முயற்சி வேண்டியிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனல், கையினல் நூற்பதற்கோ, அதைவிட அதிகமான, யோக்கியமான கூட்டுறவு வேண்டியிருக்கிறது. கோதுமை விளைகிறதென்ருல், அது மனிதனுடைய சீலத்தைவிட இயற்கையின் சீலத்தினலேயே. நமது குடிசைகளிலேயே நூலை உற்பத்தி செய்வது, மனிதனின் சீலம் ஒன்றையே முக்கியமாகப் பொறுத்திருக்கிறது. கோடிக்கணக்கான மனிதர்கள், மனமார, புத்திசாலித்தனமாக ஒத்துழைத்தாலன்றிக் கையினல் நூற்பதென்பது சாத்தியமல்ல. தானியம் விற்பவருக்கு இருக்க வேண்டியதைப் போன்று நூற்பவருக்கும் தமது நூல் உடனுக்குடன் விற்பனையாகக்கூடிய வசதி வேண்டும். நூற்பவர் பஞ்சைப் பட்டை போடத் தெரியாதவராக இருந்தால், பட்டை போட்ட பஞ்சும் அவருக்குக் கிடைத்து வரவேண்டும். அப்படிப்பட்ட கட்டத்தை நாம் அடைந்தாக வேண்டும். பொதுமக்களிடையே வளர்ந்துகொண்டு வரும் ஏழ்மையை மந்திர சக்தியால் ஓட்டுவதைப் போன்றே கையினல் நூற்பது விரட்டிவிடும் என்று நான் சொல்லுவதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது? சீனவில் யந்திரங்கள் அபிவிருத்தியடைந்திருப்பதைக் கூறும்

பத்திரிகைக் கட்டுரை ஒன்றை ஆங்கில நண்பர் ஒருவர் எனக்கு அனுப்பியிருக்கிறார். கையினல் நூற்கவேண்டும் என்று நான் சொல்லிவருவதால், யந்திரங்களைக் குறித்த என் கருத்துக்களைப் பிரசாரம் செய்து வருகிறேன் என்று அவர் எண்ணிவிட்டார் போலும்! அப்படி எதையும் நான் செய்யவில்லை. ஏழ்மையையும், அதனல் விளைந்திருக்கும் சோம்பேறித்தனத்தையும் யந்திரங்களினல் போக்கிக்கொண்டுவிட முடியுமென்ருல், மிக விரிவான வகையில் யந்திரங்களை அமைப்பதையும் நான் ஆதரிப்பேன். ஏழ்மையையும், வேலையையும் செல்வத்தையும் அசாத்தியமான தாக்கும் பஞ்சத்தையும் விரட்டுவதற்குக் கைமேலிருக்கும் ஒரே உபாயமாகவே கையினல் நூற்கவேண்டும் என்று நான் கூறிவருகிறேன். நூற்கும் ராட்டையும், அதனளவில் உயர்வான சிறு யந்திரம்தான். இந்தியாவில் இருக்கும் விசேஷ நிலைமைக்கு ஏற்ற வகையில் வேண்டிய அபிவிருத்திகளை இந்த ராட்டையில் செய்வதற்கும் என்னுடைய அடக்கமான முறையில் நான் முயன்றிருக்கிறேன். ஆகையால், இந்தியாவிடமும், மனித வர்க்கத்தினிடமும் அன்புள்ளவர்கள், தங்களுக்குத் தாங்களே கேட்டுக்கொள்ள வேண்டிய ஒரே கேள்வி, இந்தியாவின் படுமோசமான நிலையையும் துயரத்தையும் குறைப்பதற்கு அனுபவ சாத்தியமான சிறந்த முறை என்ன என்பதுதான். மனிதனின் புத்தி நுட்பத்தினல் உருவாக்கப்படும் எந்த நீர்ப்பாசனத் திட்டமோ, விவசாய அபிவிருத்தித் திட்டமோ, இந்தியாவெங்கும் சிதறி வாழும் ஏராளமான மக்கள் தொகையினருக்கு நன்மை செய்துவிடவோ, சதா வேலையில்லாதவர்களாக இருக்க நேர்ந்திருக்கும் மனித வர்க்கத்தின் பெருந்திரளுக்கு வேலை தேடிக் கொடுத்துவிடவோ முடியாது. ஒரு நாட்டு மக்கள் சராசரி தினத்திற்கு ஐந்துமணி நேரம்தான் வேலை செய்கிருர்கள். இது சந்தர்ப்பங்களின் கட்டாயத்தினலேயேயன்றி, அவர்கள் இஷ்டத்தினல் அல்ல. இதை எண்ணிப் பார்த்தால், இந்தியாவின் உண்மையான சித்திரத்தை நீங்கள் அறியலாம்.

இந்தியாவின் உண்மையான இப்படத்தை வாசகர் தமது கண் முன்பு நிறுத்திப் பார்ப்பதாயிருந்தால், நகர வாழ்க்கையிலிருக்கும் சுறுசுறுப்பு ஆரவாரங்களையோ, தொழிற்சாலை வாழ்க்கையின் சிரமமான களைப்பையோ, தோட்டங்களிலுள்ள அடிமை வாழ்வையோ தம் மனத்திலிருந்து அகற்றிக்கொள்ள வேண்டும். இந்திய மனித சமுதாயமாகிய கடலில் இவையெல்லாம் சிறு துளிகளே. இந்தியாவின் எலும்புச் சட்டத்தின் படத்தை வாசகர் மனக்கண் முன்பு எண்ணிப் பார்ப்பதாயிருந்தால், தங்கள் சொந்த வயல்களில் வேலை செய்துகொண்டிருக்கும் இந்திய ஜனத்தொகையில் எண்பது சதவிகிதத்தினரையும், வருடத்தில் குறைந்தது நான்கு மாத காலம் தங்களுக்கு ஒரு வேலையுமே இல்லாததால் பட்டினியைத் தொடும் நிலையில் அவர்கள் வாழ்வதையும் எண்ணிப் பார்க்க வேண்டும். இது சாதாரண

மாக இருந்து வரும் நிலைமை. பலவந்தமாக ஏற்பட்டுள்ள இந்தச் சோம்பல் நிலையை, அடிக்கடி ஏற்பட்டுக்கொண்டு வரும் பஞ்சங்கள் இன்னும் அதிகமாக்குகின்றன. மிகக் குறைவாகக் கிடைத்து வரும் தங்கள் வருவாய்க்கு உபரியாக ஏதாவது கிடைப்பதற்கு இந்த ஆண்களும் பெண்களும் தங்கள் குடிசைகளில் இருந்தபடியே எளிதாகச் செய்யக்கூடிய வேலை என்ன? கையினால் நூற்பது ஒன்றைத் தவிர வேறு எதுவுமே இல்லை என்பதைக் குறித்து யாருக்காவது இன்னும் சந்தேகம் இருக்கிறதா? ஊழியர்கள் மாத்திரம் மனம் வைத்தால், சில மாத காலத்திற்குள் நூற்பதை எல்லோரும் செய்வதாக்கிவிட முடியும் என்று திரும்பவும் கூறுகிறேன். எல்லோரும் நூற்பது என்பதில் அது நன்றாக முன்னேறிக்கொண்டுதான் வருகிறது. இதை ஒழுங்குபடுத்துவதற்கு நிபுணர்கள் மட்டுமே இப்பொழுது தேவை. மக்கள் தயாராக இருக்கிறார்கள். ராட்டையில் நூற்பது மக்களுக்குப் புதிதல்ல; செய்து பார்க்காதது அன்று. சமீப காலம் வரையில் நூற்று வந்திருக்கிறார்கள். இதுதான் கையினால் நூற்பதற்குள்ள பெரிய சாதகம். இதை வெற்றிகரமாகத் திரும்பவும் கொண்டு வருவதற்கு ஆற்றலோடு கூடிய முயற்சியும், சீலமும், உலகம் கண்டறியாத மிகப் பெருமளவில் கூட்டுறவும் வேண்டும். இந்தக் கூட்டுறவை இந்தியா அடைந்து விடுமானால், அந்த ஒரு காரியத்தினாலேயே சுயராஜ்யத்தையும் அடைந்ததாகிவிடும் என்பதை யார் மறுக்க முடியும்?

'எங் இந்தியா' – 3—11—1921

# 21

# இந்தியப் பொருளாதாரத்தில் ராட்டை

இந்திய அரசாங்கத்தின் உத்தரவின் பேரில் ஸ்ரீ ஏ. ஸி. கௌபரோ, ஸி. பி. ஈ., இந்திய மில் ஜவுளி வர்த்தகத்தைக் குறித்துத் தயாரித்திருக்கும் துண்டுப் பிரசுரம் ஒன்றை நண்பர் ஒருவர் என்னிடம் கொடுத்திருக்கிறார். அதில் முன்னுரைக் குறிப்பில் வருமாறு கூறப்பட்டிருக்கிறது: "இந்தத் துண்டுப் பிரசுரத்தில் கூறப்பட்டிருப்பவையும், தெரிவித்திருக்கும் கருத்துக்களும் ஆசிரியரின் சொந்தக் கருத்துக்களே என்பதை அறிவித்துக்கொள்ள இந்திய அரசாங்கம் விரும்புகிறது." அப்படியானால், இந்தத் துண்டுப் பிரசுரம் வெளியிடுவதற்கு ஏற்பட்ட செலவை இந்திய அரசாங்கம், வரி செலுத்துவோரின் தலையில் சுமத்துவானேன்? என் முன்னால் இருப்பது, இவ்விதம் வெளியிடப்பட்டிருக்கும் துண்டுப் பிரசுரங்களில் பதினாறுவதாகும். இப்பிரச்னையின் இரு தரப்பையும் அவர்கள் பிரசுரித்திருக்கிறார்களா?

இப்பொழுது கவனிக்கப்படும் துண்டுப் பிரசுரம், சுதேசி இயக்கத்திற்கு ஒரு பதிலாக இருக்க வேண்டும் என்ற நோக்கத்

தில் வெளியிடப்பட்டிருப்பதாகும். இறக்குமதி, கையினல் நெய்யப்படுவது உள்பட உள்நாட்டு மில் ஜவுளி உற்பத்தி நிலை ஆகியவைகளைக் குறித்து இதில் விரிவாகக் கூறப்பட்டிருப்ப தோடு பல விளக்கப் படங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆனல், சுதேசி இயக்கத்தை ஆராய்வதற்கு இப்பிரசுரம் வாச கருக்கு உதவி செய்வதாயில்லை. இதைத் தயாரிப்பதில் சிரமம் எடுத்துக்கொண்டிருக்கும் ஆசிரியர், இப்பொழுது நடந்துவரும் இயக்கத்தையோ, அதன் வாய்ப்பையோ பரிசீலனை செய்யும் சிர மத்தைஎடுத்துக்கொள்ளவில்லை. நாட்டின் மிகப் பெரிய நிர்மாண, கூட்டுறவு இயக்கத்தை மிகுந்த அலட்சியமாக இந்திய அரசாங் கம் கருதுகிறது. அனுதாபத்துடன் ஆராய்ந்து, வேண்டியதைச் செய்வதற்குப் பதிலாக, வீணில் மறுப்பதற்கு மக்களின் பணத் தைச் செலவிடுகிறது. இதையெல்லாம் செய்து வரும் ஆட்சி முறையின் மீது கடுமையான கண்டனத்தை வெளியிடுவதற்கு இவைகள் போதுமானதாகும்.

ஆசிரியரின் வாதம் இதுதான் :

1. இந்த இயக்கம் வெற்றியடைந்தால், அந்நிய நாட்டுத் துணியைத் தடுப்பதாகத்தான் அது இருக்குமேயன்றி, இந்தியத் துணிக்குப் பாதுகாப்பு அளிப்பதாக இராது.

2. இந்த இயக்கத்தின் பலன், இந்திய முதலாளிகளை மேலும் பணக்காரர்களாக்கித் துணி வாங்கும் இந்தியரைத் தண் டிப்பதாகவே இருக்கும்.

3. இறக்குமதியாகும் மில் ஜவுளியில் பெரும்பகுதி, இந்தி யாவில் உற்பத்தியாகாத ரகங்கள். ஆகையால், இறக்குமதி இந்திய ஜவுளியோடு போட்டி போடுவதாக இல்லை.

4. அத்தகைய ஜவுளியைப் பகிஷ்கரிப்பதன் பலனுக விலைகள் ஏறுமேயல்லாமல் அதற்கேற்றபடி நன்மை எதுவும் இருக்காது.

5. ஆகையால், இந்தப் பகிஷ்காரம், உற்பத்திக்கு ஏற்ற தேவை என்ற நியதிக்கு விரோதமானதாகவும், துணி வாங்கு வோருக்கு விரோதமானதாகவும் இருப்பதால் முடிவில் தோல்வி யையே அடையும்.

6. கையினல் நூற்பது அழிந்துவிட்டதற்காக நானும் வருத் தப்பட்டுக் கூறியிருக்கிறேன். நேரத்தை மிச்சப்படுத்தும் யந்திரங்களைக் கண்டுபிடித்துவிட்டதைப் போன்ற இயற்கைக் காரணங்களினலேயே அது அழிந்ததாகையால் அது தவிர்க்க முடியாததாகும்.

7. பருத்தி பயிரிடுவது ஒரு காலத்தில் இந்தியாவில் எவ்வளவோ சிறப்பாக இருந்திருந்தும் இந்திய விவசாயிகள்

சோம்பேறித்தனமாக அதை அலட்சியம் செய்துவிட்டார்கள். ஆகையால், இந்திய விவசாயிகளின் அழிவிற்கு அவர்களேதான் பொறுப்பாளிகள்.

8. ஆகையால், நான் செய்யக்கூடிய சிறந்த சேவை, பயிர் செய்யும் பருத்தியின் தரத்தை அபிவிருத்தி செய்யுமாறு அவர்களை ஊக்குவிப்பதுதான்.

9. துண்டுப் பிரசுரத்தின் ஆசிரியர் முடிவாக வருமாறு கூறுகிறார்: "ஒரு பயனுமில்லாத ராட்டையை வீடுதோறும் நிரப்புவதற்குப் பதிலாகப் பருத்தியை இன்னும் அதிகத் தீவிரமாகச் சாகுபடி செய்ய வேண்டுமென்றும், முக்கியமாக நீளத் துசும்புப் பருத்தியை அதிகமாகப் பயிரிட வேண்டும் என்றும் பிரசாரத்தை அவர் ஆரம்பிப்பாரானால், அவருடைய செல்வாக்கினால் இச்சமயத்திலேயே யன்றி இனி வரும் பல தலைமுறைகளுக்கும் நன்மை ஏற்பட்டதாகும்."

இந்தியாவின் பொருளாதார விமோசனத்திற்கு எது மிகவும் அவசியமானது என்று நான் கருதுகிறேனோ அதை, இந்தத் துண்டுப் பிரசுரத்தின் ஆசிரியர், அசல் முட்டாள்தனமானது என்கிறார் என்பதை வாசகர் காணலாம். ஆகையால், இதில் இருவரும் ஒத்துப்போவது என்பதற்கே இடமில்லை. துண்டுப் பிரசுரத்தின் ஆரம்பத்தில் இந்திய சர்க்கார் வெளியிட்டிருக்கும் அறிக்கையை நான் எடுத்துக்காட்டினேன். இருந்துங்கூட இவர் அரசாங்கத்தின் போக்கைத்தான் எடுத்துக்காட்டுகிறார். இந்தச் சுதேசி இயக்கத்திலாவது, மக்களின் நன்மைக்கான இவ்விஷயத்தில், திட்டமாக ஒத்துழைக்குமாறு அரசாங்கத்தையும் அத்துடன் ஒத்துழைப்போரையும் அழைத்திருக்கிறேன். இதிலுள்ள ராஜீய விளைவுகளை அவர்கள் நம்பவில்லை யாகையால், அவற்றை அவர்கள் பொருட்படுத்த வேண்டியதில்லை. இதற்கு மாறாக ராட்டையின் எழுச்சி, மக்களின் ராஜீய அதிகாரம் அதிகரிப்பதில் முடியுமானால், நிச்சயமாக அவர்கள் வருத்தப்பட வேண்டியதே இல்லை. கதரின் மீது அவர்கள் போர் தொடுப்பதற்குப் பதிலாக அதை எல்லோரும் உபயோகிக்கும்படி அவர்கள் பிரசாரம் செய்திருக்கலாம். இந்திய விவசாயிகளை நாசப்படுத்தி, அதன் மூலம் வெளிநாட்டுத் துணி உற்பத்தியாளர்கள் லாபமடையும்படி செய்ய விரும்புகிறார்கள் என்று எழுந்திருக்கும் பயங்கரமான சந்தேகத்தையும் அதன் மூலம் அவர்கள் போக்கியிருக்கலாம். என் அழைப்பு எப்பொழுதும் அப்படியே இருந்து வருகிறது. தேசீய வேலைத் திட்டத்தின் மற்ற பகுதிகள் எப்படியானாலும், இந்தியாவின் ஏழ்மை விரட்டப்பட வேண்டுமானால், சுதேசி இயக்கம் இன்றுள்ள அமைப்பில் என்றும் இருந்தே தீரும் என்று ஜோசியம் கூறுகிறேன்.

நான் பொருளாதார சாத்திரம் தெரியாதவனே. என்றாலும் பொருளாதார நூல்களில் கூறப்பட்டிருக்கும் நியதிகள் எனப்

படுபவை, மேடஸ், பாரஸிகர் சட்டத்தைப் போன்று மாற்ற வொண்ணுதவையோ அல்லது எல்லோருக்கும் பொருந்துவனவோ அல்ல. ஜெர்மனியின் பொருளாதாரத்திற்கு மாறுனது இங்கிலாந்தின் பொருளாதாரம். தனது பீட் கிழங்கு சர்க்கரைக்குப் பாதுகாப்பு அளித்ததனல் ஜெர்மனி செல்வத்தில் உயர்ந்தது. வெளிநாட்டு வியாபாரத்தின் மூலம் சுரண்டி இங்கிலாந்து அதிகச் செல்வத்தை அடைந்தது. ஒரு குறுகிய பிரதேசத்திற்குச் சாத்தியமானது, *1,900* மைல்கள் நீளமும், *1,500* மைல்கள் அகலத்தையும் கொண்ட பிரதேசத்திற்குச் சாத்தியமானது அல்ல. ஒரு நாட்டின் பொருளாதாரம், அதனுடைய சீதோஷ்ண நிலைமை, பூகோள அமைப்பு, மனோபாவம் ஆகியவைகளைக்கொண்டு நிர்ணயிக்கப்படுகிறது. இந்த முக்கியமான விஷயங்களிலெல்லாம் இந்திய நிலைமை இங்கிலாந்தின் நிலைமைக்கு மாறுபட்டது. இங்கிலாந்துக்கு உணவாக இருப்பது அநேக காரியங்களில் இந்தியாவுக்கு விஷமாக இருக்கிறது. மாட்டு மாமிச சூப் இங்கிலாந்தின் சீதோஷ்ண நிலைக்கு நல்லதாக இருக்கலாம். ஆனல், மத உணர்ச்சியுள்ள இந்தியாவின் சீதோஷ்ண நிலைக்கு அது விஷம். பிரிட்டிஷ் தீவுகளின் வடபகுதியில் இருப்போருக்கு நெருப்புப் போன்று தகிக்கும் விஸ்கி (சாராயம்) அவசியமானதாக இருக்கலாம். ஆனல், அதே சாராயம் ஓர் இந்தியனை வேலைக்கும் சமூகத்திற்கும் தகுதியற்றவனுக்கிவிடுகிறது. ஸ்காட்லந்திலிருப்பவர்களுக்குப் பர் கோட்டு இன்றியமையாதது. ஆனல், இந்தியாவிலிருப்பவருக்கோ அது சகிக்க முடியாத சுமை. சில நாடுகள் கைத்தொழிலில் வளர்ச்சியடைந்திருக்கின்றன. அந்நாடுகளின் மக்கள் நகரங்களில் வசிக்க முடியும், வசிக்கிருர்கள். மற்ற நாடுகளைப் பிடுங்கித் தின்னுவதைப் பற்றியும் அவர்கள் கவலைப்படுவதில்லை. இதனல், இயற்கையல்லாத தங்கள் வர்த்தகத்தைப் பாதுகாத்துக் கொள்ள மிகப் பெரிய கடற்படையையும் வைத்திருக்கிருர்கள். ஆகையால், அத்தகைய ஒரு நாட்டுக்குத் தடையே இல்லாத வர்த்தகம் பொருளாதாரத்தில் சரியானதாக இருக்கலாம். (ஆனல், அதன் ஒழுக்கமின்மையை நான் ஆட்சேபிப்பதை வாசகர் கவனித்திருக்கலாம்). இந்தத் தடையே இல்லாத வர்த்தகம், இந்தியாவுக்குச் சாபக்கேடாக முடிந்திருக்கிறது என்பது நிரூபிக்கப்பட்டிருப்பதோடு இந்நாட்டை அடிமையாக்கியும் இருக்கிறது.

இப்பொழுது ஸ்ரீ கௌபரோவின் யோசனைகளைக் கவனிப்போம் :

*1.* இந்த இயக்கம், தானுகவே விதித்துக்கொள்ளும் தடைவரியாகப் பயன்படவேண்டும் என்ற நோக்கத்தைக்கொண்டது.

2. ஆனல், அனுவசியமாக முதலாளிகளுக்கு லாபகரமாகவோ அல்லது துணி வாங்குவோருக்குக் கெடுதலாகவோ இல்லாத முறையில் இயக்கம் அமைக்கப்பட்டிருக்கிறது. மிகக்

குறுகிய காலமான இந்தச் சந்திக் கட்டத்தில், உள்நாட்டில் உற்பத்தியாகும் துணிகளின் விலை அதிகமாகலாம்; அதிகமாகியும் இருக்கிறது. ஆனால், துணி வாங்குவோரில் மிகப் பெரும் பகுதியினர், தங்களுக்கு வேண்டியதைத் தாங்களே உற்பத்தி செய்து கொண்டுவிடுபவர்களாக வேண்டுமாகையால், விலை ஏற்றம் தாற்காலிகமானதாகவே இருக்க முடியும். வீட்டுச் சமையலுக்கும் அதிகச் செலவாகாது. வீட்டுச் சமையலுக்குப் பதிலாக ஹோட்டல் சாப்பாடே இருக்கட்டும் எனச் செய்துவிட முடியாது. அதே போலக் குடிசைகளிலேயே நூலையும் துணியையும் உற்பத்தி செய்வது அதிகச் செலவாவதாக ஆகாது. மொத்த ஜனத்தொகையில் இருபத்தைந்து கோடிக்கு அதிகமானவர்கள், தாங்களே நூல் நூற்றுக்கொண்டிருப்பார்கள். இவ்விதம் நூல் நூற்பதால் பக்கத்து ஊர்களில் அதைக் கொடுத்துத் துணியாக நெய்துகொள்ளுவார்கள். இந்த மக்கள் நிலத்தில் வேர் ஊன்றிப் போனவர்கள். குறைந்த பட்சம் வருடத்தில் நான்கு மாதங்களாவது இவர்களுக்கு எந்த வேலையுமே இல்லாமலும் இருக்கிறது.

அந்த நேரத்தில் இவர்கள் நூற்று, அந்த நூலைக்கொண்டு நெய்து உடுத்திக்கொள்ளுவார்களாயின், மில்லில் தயாராகும் துணி கதருடன் போட்டி போடவே முடியாது. இவ்விதம் தயாரான துணியே அவர்களுக்குச் சாத்தியமான அளவு மலிவானதாகவும் இருக்கும். ஜனத்தொகையில் இவர்கள்போக மீதமிருப்பவர்கள், இந்தத் துணி உற்பத்தியில் பங்கெடுத்துக்கொள்ளவில்லையென்றாலும், இருபத்தைந்து கோடி மக்கள் தயாரிக்கும் துணியில் மீதமாக உள்ளதை இவர்களுக்குச் சுலபமாகக் கொடுத்துவிட முடியும்.

3. இறக்குமதியாகும் துணிகளில் இந்திய மில்களில் உற்பத்தியாகும் துணிக்குப் போட்டியாக உள்ளதைவிட, போட்டியாக இல்லாத ரகங்களே அதிகம் என்பது உண்மை. நான் கூறும் திட்டத்தில் இதைப் பற்றிய பேச்சிற்கே இடமில்லை. ஏனெனில், இத்திட்டத்தின் கேந்திரமான நோக்கம், நாட்டு மக்கள் வேலையில்லாமல் சோம்பிக் கழிக்கும் நேரத்தை உபயோகிக்கும்படி செய்வது, வளர்ந்துகொண்டு வரும் மக்களின் ஏழ்மையை இயற்கையான வழியில் போக்குவதேயன்றி வெளிநாடுகளுடன் வர்த்தகப் போரை நடத்துவதைப் பிரதானமாகக் கொண்டதல்ல.

4. பகிஷ்காரத்தின் காரணமாக முடிவில் துணி விலை ஏற்றம் ஏற்பட்டுவிடாது என்பதை முன்னுடியே நான் காட்டியிருக்கிறேன்.

5. நான் கூறும் பகிஷ்காரம், உற்பத்திக்கு ஏற்ற தேவை என்ற நியதிக்கு விரோதமானது அல்ல. ஏனெனில், தேவைக்கு வேண்டியதை உற்பத்தி செய்வதன் மூலம் இந்த நியதிக்கு

வேலையே இல்லாதபடி செய்துவிடுகிறது. நயமான ஜவுளியை உடுத்திப் பழக்கப்பட்டுப் போனவர்கள் இருக்கிறார்கள், இவர்கள் விசித்திரமான வர்ணங்களையும் ரகங்களையும் விரும்புகிறவர்களாக இருக்கிறார்கள். இவர்கள் தங்களுடைய ருசியை மாற்றிக்கொள்ளும்படி செய்வதுதான் இயக்கத்திற்குத் தேவையானதாகும்.

6. கிழக்கு இந்தியா கம்பெனியின் ஏஜெண்டுகள், கொஞ்சங்கூட மனிதத் தன்மையில்லாத வகையில் திட்டமிட்டுக் கையினால் நூற்பதை அழித்திருக்கிறார்கள் என்பதை இப்பத்திரிகையில் எடுத்துக்காட்டி வந்திருக்கிறேன். போலித்தனமும் கொடூரமுமான முறையில் திட்டமிட்டு அழிக்காமல் இருந்திருந்தால், எவ்வளவுதான் யந்திர சாதனங்கள் வந்தாலும், இந்தத் தேசீயக் கலையையும் கைத்தொழிலையும் அவற்றால் போக்கியிருக்க முடியாது.

7. பருத்தி உற்பத்தி மோசமாகி விட்டதற்கு இந்திய விவசாயிகளே பொறுப்பாளிகளென்று நான் கூறிவிடுவதற்கு இல்லை. கையினால் நூற்பது அழிக்கப்பட்டுவிட்டதும் அவர்களுக்கு இந்த ஊக்கம் முழுவதுமே போய்விட்டது. விவசாயிகளின் நன்மையைக் குறித்து அரசாங்கம் அக்கறை எடுத்துக்கொள்ளவே இல்லை.

8. நான் செய்துவரும் வேலை, பருத்தியை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்பதில் விவசாயியின் கவனத்தை இப்பொழுதே திருப்பியிருக்கிறது என்பதை எண்ணிப் பெருமையடைகிறேன். நாட்டு மக்களின் கலை உணர்ச்சி, நயமான மெல்லிய நூலில் நெய்த துணியேவேண்டும் என்று வற்புறுத்தும். இதற்கு நீளத் துசும்புப் பருத்தி அவசியமானது. இந்தியாவின் ஏழ்மைப் பிரச்னையைப் பருத்திச் சாகுபடி மாத்திரம் தீர்த்துவிட முடியாது. ஏனெனில், மக்கள் சோம்பிக்கிடக்கும்படி செய்யப்பட்டிருக்கும் பிரச்னை, பருத்திச் சாகுபடி உயர்ந்தாலும் அப்படியேதான் இருக்கும்.

9. ஆகையால், பொருளாதாரத் துயரப் பிரச்னையை மிகவும் இயற்கையான, எளிதான, செலவில்லாத, காரியார்த்தமான வழியில் தீர்க்கக்கூடிய பெருமை ராட்டைக்கு உண்டு என்று நான் கூறுகிறேன். எனவே, அத்துண்டுப் பிரசுரத்தை எழுதியிருப்பவர் அறியாமையினால் கூறுவதைப் போன்று, ராட்டை பிரயோசனமில்லாதது அல்ல என்பது மாத்திரமன்று, அது ஒவ்வோர் வீட்டுக்கும் பயனுள்ள அத்தியாவசியமான பொருள்; நாட்டு மக்களின் சுபிட்சத்திற்கும், அதனால் சுதந்திரத்திற்கும் சின்னம். அது வர்த்தகத்திற்கான போராட்டத்தின் சின்னமல்ல; ஆனால், வர்த்தகச் சமாதானத்தின் சின்னம். உலகத்தின் நாடுகள் மீது அது துவேஷத்தை உபதேசிக்கவில்லை; ஆனால், நல்லெண்ணத்தையும் சுயமுயற்சியையுமே அது போதிக்கிறது. உலக சமா

தானத்திற்கு அபாயத்தை உண்டாக்குவதாகவும் அதன் செல்வங்களைச் சுரண்டுவதாகவும் இருக்கும் கடற்படையின் பாதுகாப்பு, ராட்டைக்குத் தேவையில்லை. ஆனால், தங்களுக்கு வேண்டிய ஆகாரத்தைத் தங்கள் வீடுகளிலேயே எவ்வாறு சமைத்துக் கொள்ளுகிறார்களோ அதேபோலத் தங்களுக்கு வேண்டிய நூலைத் தாங்களே வீடுகளில் நூற்றுக்கொள்ளுவது என்று கோடிக்கணக்கான மக்கள் பக்தி பூர்வமான மன உறுதி கொள்ளுவதுதான் இதற்குத் தேவை. நான் செய்ததும், செய்யத் தவறியதுமான எத்தனையோ தவறுகளுக்காகப் பின்னால் வரும் சந்ததியாரின் சாபங்களுக்கு நான் ஆளாக வேண்டியவனாக இருக்கலாம். ஆனால், ராட்டை திரும்பவும் புத்துயிர் பெற வேண்டும் என்று நான் சொன்னதற்காகப் பிற்கால சந்ததியின் வாழ்த்து எனக்குக் கிடைக்கும் என்ற திடநம்பிக்கை எனக்கு உண்டு. எனக்குள்ளது எல்லாவற்றையும் அதற்கே பணயமாக வைத்திருக்கிறேன்; ஏனெனில், ராட்டை சுற்றும்போது அதன் ஒவ்வோர் சுழற்சியிலும் சாந்தத்தையும் நல்லெண்ணத்தையும் அன்பையுமே அது நூற்கிறது. அதுவல்லாமல் ராட்டையை இழந்தது எவ்விதம் இந்தியாவின் அடிமைத்தனத்தில் முடிந்ததோ அதேபோல, ராட்டை வலியப் புத்துயிர் பெறுவது அதன் முழு விளைவுகளின் காரணமாக இந்தியாவின் சுதந்திரமாகவே பொருள்படும்.

—'எங் இந்தியா' – 8—12—1921

# 22

# விவசாயி சக்தி விரயமாகுமா?

'வெல்பேர்' பத்திரிகையின் சென்ற மே மாத இதழில் வெளியாகியிருக்கும் கட்டுரையைக் கவனிக்குமாறு ஒரு நண்பர் அறிவித்திருக்கிறார். காகினடாவில் கதர்க் காட்சியை ஆரம்பித்து வைத்து ஆச்சாரிய ரே பேசினார். அப்பிரசங்கத்தை ஸ்ரீ எம். என். ராய் பரிசீலனை செய்திருப்பதே அக்கட்டுரை. இப்பத்திரிகை இரண்டு மாதங்களாக என்னிடமிருக்கிறது. இதுவரையில் அதைப் படிக்க என்னால் முடியாது போனதற்காக வருந்துகிறேன். டாக்டர் ரேயின் கருத்துக்களை மறுத்து ஸ்ரீ ராய் தெரிவித்திருக்கும் கண்டனங்களுக்கு இப்பத்திரிகையிலேயே அடிக்கடி பதில் கூறப்பட்டு வந்திருக்கிறது என்பதை அக்கட்டுரையைப் படித்த பிறகே அறிகிறேன். வாசகருக்கு ஞாபக மறதி உண்டு. ஆகையால், முன்னால் சொன்ன வாதங்களைக் கோவையாக இங்கே மீண்டும் கூறுவதுதான் சரி. ராட்டைக்காகச் செய்யும் முயற்சியெல்லாம் 'சக்தியை விரயமாக்குவதேயாகும்' என்று டாக்டர் ரேயின் கருத்தைக் கண்டிப்பவர் கருதுகிறார். ஒரு வேலையும் இல்லாமல் சோம்பலாக இருக்கும் நேரத்தைப் பயன்படுத்திக்கொள்ள விவ

சாயிக்கு உதவுவதன் மூலம் ராட்டை பயனுள்ள சாதன மாகிறது என்பதுதான் டாக்டர் ரே கூறியதில் முக்கியமானது. ஆனல், அவர் கருத்தைக் கண்டிப்பவரோ, விவசாயிகளுக்குச் சோம்பியிருக்க நேரமே இல்லை என்கிருர். அவர்களுக்கு எவ்வளவு ஓய்வு வேண்டுமோ அதுதான் இருக்கிறதாம். எட்டு மாதங்களுக்கு ஓய்வின்றிக் கடுமையாக உழைப்பதனல்தான் நான்கு மாதங்களுக்குச் சும்மா இருக்கிருர்கள் என்றும், அந்த நான்கு மாதங்களிலும் விவசாயிகள் ராட்டையில் வேலை செய்யும் படி செய்துவிட்டால், எட்டு மாதம் உழைப்பதற்கு அவர் களுக்கு இருக்கும் ஆற்றல் வருடந்தோறும் குறைந்துகொண்டே போய்விடும் என்றும் அவர் கூறுகிருர். சுருங்கச் சொன்னல், 'ராட்டையில் வேலை செய்வதற்கு நாட்டு மக்களுக்கு அவகாசம் இல்லை' என்பதுதான் குறை கூறுபவரின் கருத்து.

இந்திய விவசாயிகளைப் பற்றிய அனுபவம் இவருக்குக் கொஞ்சங்கூட இல்லை என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. மேலும், ராட்டை எவ்விதமாக வேலை செய்யும், இன்று உண்மையில் அது எவ்விதம் வேலை செய்கிறது என்பதை மனத்தில் எண்ணிப் பார்த்துக்கொள்ளவும் அவரால் ஆகவில்லை. விவசாயிகள் ராட்டையில் உடல் வருந்தி வேலை செய்ய வேண்டியதில்லை. கஷ்டப்பட்டு வேலை செய்துவிட்டுத் திரும்பிய வர்களுக்கு அது மாறுதல் அளிப்பதாகவும், இனிய பொழுது போக்காகவும் இருக்கும். நிரந்தரமாகச் செய்யும் வேலையாக இது இந்தியப் பெண்களுக்கு அளிக்கப்படுகிறது. நினைக்கும் போதெல்லாம் அவர்கள் நூற்பார்கள். பாட்டாளிகளில் பெரும் பாலானவர்கள் தினத்திற்கு அரைமணி நேரம் நூற்பார்களாயின், தங்களுக்குப் போதுமான நூலை நூற்றுவிடுவதோடு மற்றவர் களுக்கும் கொடுக்கலாம். அத்தகைய ஒரு பாட்டாளி, ஆணு யிருந்தாலும் பெண்ணுயிருந்தாலும், தனது வருவாயில் வருடத்திற்கு ரூ. 1—11—0 அதிகப்படியாகப் பெறலாம். பட்டினி கிடக்கும் ஒருவருக்கு இந்த உபரி வருவாய் மோசமானதல்ல. நமக்குத் தேவையான துணி முழுவதையும் நெய்துவிடுவதற்குப் போதுமான தறிகளும் நெசவாளர்களும் இந்தியாவில் இருக்கிருர்கள் என்பது ஒப்புக்கொள்ளப் படுகிறது. ஆகையால் இதில் இருக்கும் ஒரே விஷயம் கையினல் நூற்பதைப் பற்றித்தான். இந்த வேலையை விவசாயிகள் மேற்கொள்ளுவார்களானல், துணி சம்பந்தமாக இந்தியா சுயதேவையைப் பூர்த்தி செய்துகொண்டு விடுவதில் எவ்விதமான பெரிய முதலீட்டுச் செலவும் இல்லாமலேயே பிரச்னையைச் சமாளித்துவிடலாம். இதனல், குறைந்த பட்சம் அறுபது கோடி ரூபாய், தங்கள் வீடுகளிலிருந்தபடி வேலை செய்யும் கோடிக்கணக்கான நூற்போர், ஆயிரக்கணக்கான பஞ்சடிப்போர், நெசவாளர் ஆகியவர்களிடையிலேயே இருந்து வருவதாகும். அந்த அளவுக்கு விவசாயிகளின் சம்பாதிக்கும் சக்தியும் வளர்ந்ததாகும்.

விவசாயிகளுக்கு உபரி வருமானம் கிடைப்பதற்கும், அவர்களுடைய ஓய்வு நேரத்தைப் பயன்படுத்திக்கொள்ளுவதற்கும் துணைத் தொழில் ஒன்று அவர்களுக்குத் தேவை என்பது உலகம் எங்குமுள்ள அனுபவம். இந்தியாவுக்குத் தேவையான நூல் முழுவதையும் இந்தியப் பெண்கள் தங்கள் ஓய்வு நேரங்களில் சமீப காலம் வரையில் நூற்று வந்தார்கள் என்பதையும் மறந்துவிடக் கூடாது. இவ்விதம் கூறுவதிலுள்ள உண்மையை, ராட்டை புத்துயிர் பெற்றிருப்பது, மிகவும் தெளிவான வகையில் எடுத்துக் காட்டிவிட்டது. இயக்கம் தோற்றுவிட்டது என்று எண்ணுவது தவறு. இதில் ஈடுபட்டு வேலை செய்த ஊழியர்கள் ஓரளவுக்குத் தவறியிருக்கிறார்கள் என்பது உண்மை. ஆனால், அவர்கள் சரியானபடி வேலை செய்து வந்திருக்கும் இடங்களில் நூற்பது தொடர்ந்து நடந்துகொண்டு வருகிறது. இது இன்னும் ஸ்திரமானதாக ஆகிவிடவில்லை என்பது உண்மையே. நிர்வாக வேலைகள் பூரணமாகாததும், தொடர்ந்து தங்களுக்கு வேலை கிடைக்கும் என்ற நிச்சயம் நூற்போருக்கு ஏற்படாததுமே இதற்குக் காரணம். பாஞ்சாலம், கர்நாடகம், ஆந்திரா, தமிழ்நாட்டின் சில பகுதிகள் ஆகிய இடங்களில் இருக்கும் நிலைமையை ஸ்ரீ ராய் கவனித்துப் பார்க்கட்டும். ராட்டையினால் என்ன சாதிக்கமுடியும் என்பதை அவரே அறிந்து கொள்ளுவார்.

பஞ்சங்கள் பெருகிய நாடு இந்தியா. ஆண்களும் பெண்களும் கல்லுடைத்துப் பிழைப்பது நல்லதா, அவர்கள் பஞ்சு கொட்டி நூற்பதா? விடாப் பஞ்ச நிலைமையினால் ஒரிஸ்ஸா மக்கள் பிச்சையெடுத்து வாழும் நிலைக்கு வந்துவிட்டார்கள். இவர்கள் வேலை செய்யும்படி செய்வதுகூட இப்பொழுது மிகவும் கஷ்டமான காரியம். இவர்கள் மெள்ள மெள்ள செத்துக் கொண்டிருக்கிறார்கள். நூற்பது திரும்பவும் ஏற்படும்படி செய்வதுதான் இவர்களுக்குள்ள ஒரே விமோசனம்.

விவசாய அபிவிருத்தியை ஸ்ரீ ராய் வற்புறுத்துகிறார். இது அவசியம்தான். செய்ய உத்தேசிக்கும் விவசாய அபிவிருத்திக்குப் பதிலாகச் செய்வது அன்று நூற்பது. அதற்கு மாறாக அந்த அபிவிருத்திக்கு இது வழிசெய்யும். அந்த அபிவிருத்தி ஏற்படுவதற்கான வழியில் எத்தனையோ கஷ்டங்கள் இருக்கின்றன. அரசாங்கத்திற்கு இதில் இஷ்டம் இல்லாமல் இருப்பது, மூலதனமில்லாதது, புதிய முறைகளை அனுசரிக்க விவசாயிகள் பிடிவாதமாக மறுத்து வருவது போன்றவைகளையெல்லாம் நாம் சமாளித்தாக வேண்டும். நூற்பதால் ஏற்படுவதாகக் கூறும் நன்மைகள் இவையே :

1. ஓய்வு இருந்து, சில செப்புக் காசுகளும் தேவையே என்று இருப்போருக்கு, உடனே வேலை கொடுத்துவிடக் கூடிய தொழிலாக இருக்கிறது, இது.

2. ஆயிரக்கணக்கானவர்களுக்கு முன்பே தெரிந்திருக்கும் வேலை இது.

3. இதை எளிதில் கற்றுக்கொண்டுவிடலாம்.

4. இதற்கு மூலதனம் போடவேண்டிய அவசியம் எதுவுமில்லை.

5. ராட்டினத்தைச் சுலபமாகவும் அதிகச் செலவில்லாமலும் செய்துவிடலாம். ஒரு சிறு ஓட்டுச் சில்லையும் ஒரு கதிரையும் வைத்துக்கொண்டும் நூற்றுவிடலாம் என்பது அநேகருக்குத் தெரியாது.

6. இதைச் செய்வது இழிவு என்ற எண்ணம் மக்களுக்கு இல்லை.

7. பஞ்சமும் பற்றுக்குறையும் ஏற்பட்டுவிடும் சமயங்களில் இது உடனடியாக நிவாரணமளிக்கிறது.

8. அந்நியத் துணி வாங்குவதால் செல்வம் நாட்டைவிட்டு வெளியே போய்விடுவதை இது ஒன்றுதான் நிறுத்த முடியும்.

9. இதன் மூலம் மிச்சப்படும் கோடிக்கணக்கான ரூபாய், உதவி வேண்டியவர்களான ஏழை மக்களிடையே தானே வினியோகமாகிவிடும்படி இது செய்கிறது.

10. இதில் மிகக் கொஞ்சமான வெற்றி கிடைத்தாலும் அது மக்களுக்கு உடனடியான அதிக லாபமாகும்.

11. மக்களிடையே கூட்டுறவைப் பெறுவதற்கு இதுவே அதிகச் சக்திவாய்ந்த ஆயுதம்.

இவ்வேலைக்குத் தேவையான ஊழியர்களை மத்தியதர வகுப்பு ஒன்றே அளிக்க முடியும். அந்த வகுப்பினருக்கு இதில் நம்பிக்கை இல்லாததுதான் இதிலுள்ள கஷ்டமெல்லாம். இன்னும் அதிகக் கஷ்டமானதாக இருப்பது, பகட்டான மில் துணிக்குப் பதிலாகக் கதரை அணிய மக்கள் விரும்பாமை. இடைக்காலத்தில் கதர் விலை அதிகமாக இருப்பதும் மற்றோர் கஷ்டம். நூற்கவேண்டும் என்ற உறுதியைப் போதுமான அளவு மக்கள் கொண்டுவிடுவார்களானால், விலையில் மில் துணியுடன் போட்டி போடும் வகையில் கதரைக் கொண்டுவந்துவிட முடியும். இயக்கத்தின் வெற்றிக்கு மக்களும் சிறிது தியாகம் செய்யத்தான் வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. விவசாயிகளின் தேவைகளைக் கவனிக்கும் நமது சொந்த அரசாங்கம் இருக்குமானால், வெளிநாட்டுப் போட்டியிலிருந்து அவர்களைக் காப்பாற்ற அது உறுதிகொண்டிருந்தால், மக்களின் நேரடியான இந்தத் தியாகம் கூட அவசியமாக இருக்காது. தேசீய சர்க்காராக இருந்தால்,

என்ன செய்யுமோ அதை, மத்தியதர வகுப்பினர் கொஞ்ச காலத்திற்கு வலியச் செய்யும் தியாகமே செய்துவிடும்.

விவசாயிகளின் சக்தி வீணாகிவிடும் என்பதற்கு இடமில்லை. ஆயிரக்கணக்கான நம் சகோதரிகளுக்கு ஸ்ரீ ராய் முன்னால் தருமப் பிச்சை கொடுத்துக்கொண்டிருந்தாரே, அந்தச் சகோதரிகளுக்கு இப்பொழுது கௌரவமான வேலையைக் கொடுத்து, கொஞ்சத்திற்கோ அல்லது முழுமைக்குமோ அவர்கள் தங்களைத் தாங்களே காப்பாற்றிக் கொள்ளுபவர்களாக்குவது அவர்களுடைய சக்தியை விரயமாக்குவதாகுமா? பிச்சை எடுப்பது, இல்லாவிட்டால் பட்டினி கிடப்பது என்பதைத் தவிர அவர்களுக்கு வேறு வேலையே இல்லை. இளைஞர்கள் கிராமங்களுக்குப் போய், அங்குள்ளவர்களின் நிலைமையை ஆராய்ந்து, அவர்களுக்காக வருந்தி, அவர்கள் முன்னேற உதவி செய்வது சக்தியை வீணாக்குவதாகுமா? பணக்காரர்களான ஆயிரக்கணக்கான இளைஞர்களும் பெண்களும், அரைப் பட்டினியாகக் கிடக்கும் ஆயிரக்கணக்கான மக்களை எண்ணுவதும், அவர்கள் சார்பில் அவர்களுக்காகப் பக்தியுடன் நூற்பதற்குத் தங்கள் நேரத்தில் அரைமணி அவகாசத்தை ஒதுக்கிவைப்பதும் சக்தியை விரயஞ் செய்துவிடுவதாகுமா? ஓர் ஆணுக்கோ அல்லது பெண்ணுக்கோ பிழைப்புக்கு வேறு எந்தத் தொழிலும் இல்லாதபோது, ஒரு சில காலணாக்களுக்காக அவனோ அவளோ நூற்பதாயிருந்தால், அதுவே பெரிய லாபம் தான். ஓர் ஆணோ பெண்ணோ ஒரு தியாகமாக நூற்றால், அதுவும் பெரிய லாபம்தான். எல்லாம் லாபமே தவிர நஷ்டமே இல்லாத காரியம் ஏதாவது ஒன்று இருக்கிறது என்றால், கையினால் நூற்பதுதான் அது.

# 23

# பட்டினி கிடப்போருக்குச் சோறும் துணியும்

நாற்பத்தொன்பதாவது வங்காள ரெஜிமெண்டைச் சேர்ந்த ஒருவர் கீழ் வருமாறு எழுதுகிறார் :

“உலகிலுள்ள தலைவர்களில் எல்லாம் நீங்களே மிகப் பெரிய தலைவர் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். பெரிய தலைவர் என்பவர் செய்யவேண்டியது என்ன? இந்தியாவில் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு வயிற்றுக்கு வழி செய்வதுதான் பெரிய தலைவர் செய்யவேண்டியது. அதுதான் சரியல்லவா? இந்தியாவின் முப்பத்திரண்டு கோடி மக்களுக்கு உண்ணச் சோறும் கட்டத்துணியும் அளித்துவிட உங்களால் முடிந்தா

லன்றி நீங்கள் சுயராஜ்யத்தை எதிர்பார்க்க முடியாது. எனக்கு நூறு கோடி ரூபாய் கொடுப்பீர்களாயின், அப்பொழுதே உங்களுக்குச் சுயராஜ்யத்தைக் கொடுத்துவிடுவேன். சுயராஜ்யத்தைப்பற்றி நீங்கள் பேசுகிறீர்கள். ராட்டை முதலியவைகளைப் பற்றியெல்லாம் பேசுகிறீர்கள். ஆனால், பட்டினி கிடக்கும் மக்களுக்குச் சோற்றுக்கு வழி செய்வதைப்பற்றி நீங்கள் பேசவில்லை. சரியான சாப்பாட்டிற்கு வழியில்லாதவன் ராட்டையைச் சுற்ற முடியாது. முதலில் 'வயிறு'; பிறகுதான் துணி. ஒரு நாளெல்லாம் நான் துணியே இல்லாமல் நிர்வாணமாக இருந்துவிட முடியும். ஆனால், உணவில்லாமல் இரண்டு மணி நேரம்கூட என்னால் இருந்துவிட முடியாது. இந்தியருக்குச் சோறு போட்டுப் பணமும் கொடுப்பீர்களானால், இந்தியப் பொதுமக்கள் நீங்கள் சொல்லுகிறபடி செய்வார்கள் ; இல்லையானால் மாட்டார்கள்."

'பெரிய தலைவர்' என்ற பட்டத்தை நான் விரும்பியதுமில்லை; ஏற்றுக்கொண்டதுமில்லை. ஆகையால், அதை ஏற்றுக்கொள்ள நான் மறுக்கத் தேவையில்லை. என்றாலும், 'பெரிய தலைவர்' பட்டத்தை முதலாவதாக நான் மறுக்கிறேன். என்னுடைய சிறுமையையும் கதியின்மையையும் தினமும் நான் உணர்ந்தே வருகிறேன். என்னிடம் பெருமை எதுவும் இருப்பதாக இன்னும் நான் அறிந்ததே இல்லை. ஆனால், 'பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்குச் சோற்றுக்கு வழி செய்வது' என்னைப் பெரியவனாக்குமாயின், அந்தப் பெருமையை அடையும் வழியில்தான் நான் போய்க்கொண்டிருக்கிறேன். ஏனெனில், நான் கூறிவரும் ராட்டை மருந்து அதைச் செய்யும் என்றுதான் நான் சொல்லி வருகிறேன். பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு வயிற்றுக்குச் சோற்றையும் கட்டத் துணியையும் அளிப்பதற்கென்றே அது உருவாக்கப்பட்டிருக்கிறது. உடுக்கும் துணி, இரண்டாவதாகக் கவனிக்கவேண்டிய விஷயம்தான் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், ராட்டையைக் கொண்டுவரும் நோக்கம், முதலில் உணவளித்துப் பிறகு துணி அளிக்கவேண்டும் என்பதே. நான் யோசித்திருப்பது, நூறு கோடி ரூபாயையும் ஒரேயடியாகக் கொடுத்துவிடுவது என்பது அல்ல. குறைந்தபட்சம் வருடந்தோறும் அறுபது கோடி ரூபாய் கொடுப்பது என்பதே என் திட்டம். பட்டினி கிடக்கும் மக்கள், தங்களுக்குச் சோறும் பணமும் கொடுப்பவர்கள் சொல்லுவதைத்தான் கேட்பார்கள் என்பதை நான் மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொள்ளுகிறேன். நான் கொடுக்கும் பரிசில் அந்த இரண்டும் அடங்கியிருக்கின்றன. ஆனால், அதைச் செய்ய முன்வருகிறவர்கள் யார்? நிச்சயமாகக் குணத்தை அளிக்கும் மருந்தை வைத்தியர் கொடுக்கலாம். ஆனால், அதைச் சாப்பிட்டுவிட நோயாளியை அவரால் வற்புறுத்திவிட முடியாது. பாமர மக்களுக்கு இருக்கும் நோய், வேலையில்லாமல் இருப்பதேயன்றிக் காசில்லாமல் இருப்பது அல்ல. உழைப்புத்தான் பணம். கோடிக்கணக்கான மக்களுக்கு அவர்களுடைய குடிசைகளிலேயே கௌரவமான வேலையைக் கொடுப்பவர், அவர்களுடைய சோற்றுக்கும் துணிக்கும் வழி செய்தவராகிறார். பணத்தைக் கொடுப்

பதைப் போன்றதே அது. அத்தகைய வேலையை ராட்டை அளிக்கிறது. ஆகையால், இதைவிடச் சிறந்ததான ஒன்று கண்டுபிடிக்கப்படும் வரையில் இதுதான் இருந்து வரவேண்டும்.

—'எங் இந்தியா' – 18—2—1925

# 24

# ராட்டை ஒன்றே பரிகாரம்

ஸ்ரீ ஆண்டுரூஸ் கீழ் வருமாறு எழுதுகிறார் :

"ராக்பெல்லரின் சர்வதேச சுகாதார போர்டைச் சேர்ந்த டாக்டர் டென்ட்ரிச் இப்பொழுதுதான் இங்கே என்னோடு இருந்தார். அவர் சென்னையில் ஏதோ வேலை செய்துகொண்டிருக்கிறார். விவசாயிகளைப் பரிசோதித்துப் பார்த்ததில் அவர்களில் 92 முதல் 95 சத விகிதத்தினருக்குக் கொக்கிப் புழு நோயும், மலத்தினால் ஏற்படும் தொற்று நோயான டைபாயிட், சீத பேதி ஆகியவைகளும் இருக்கின்றன என்று அவர் கூறுகிறார். கழிக்கும் மல ஜலம் எல்லா இடங்களிலும் குடி தண்ணீருடன் கலந்து விடுவதால்தான் இந் நோய்கள் அதிகமாகின்றன என்கிறார். அமெரிக்காவின் தென் மாகாணங்களில் இருபது ஆண்டுகளுக்கு முன்பு நீக்கிரோக்கள் என்ன நிலையில் இருந்தார்களோ அதே நிலையில்தான் இவர்களும் இப்பொழுது இருக்கிறார்கள் என்று கூறுகிறார். அதன் விளைவும் அங்கிருந்தது போலவே இருக்கிறது. உடம்பில் சக்தி இருப்பதில்லை. பலவீனமான, மோசமான வாழ்க்கை. ஆனால், அதே மாகாணங்களில் அவர்கள் இன்று சுபிட்சத்தோடும் பலத்தோடும் இருக்கிறார்கள். ஏனெனில், கண்டபடியெல்லாம் மலம் கழிக்காமல் கட்டுப்படுத்திக் கொக்கிப் புழு நோயும் டைபாயிடும் வராமல் சமாளிக்கப்பட்டிருக்கிறது என்றும் கூறுகிறார். அவர் இன்னொன்றும் கூறுகிறார். சாதாரணமான கிராமச் சாக்கடை அமைப்பதன் மூலம் இவ்வகையில் மக்கள் தங்கள் பழக்கங்களை மாற்றிக்கொள்ளவேண்டும் என்கிறார். சீனா, ஜப்பான், அமெரிக்க மாகாணங்கள் ஆகிய இடங்களில் செய்வது போலச் சிறு சாக்கடைகளைத் தோண்டி அதில் மலங்கழித்து மேலே மண் போட்டுவிடச் செய்து, ஆறு மாதங்களுக்கு ஒரு முறை அதைத் தோண்டி எடுத்துவிடச் செய்ய வேண்டும்; அப்படித் தோண்டியெடுத்ததை அபாயமில்லாத எருவாக உபயோகிக்கலாம். அதனால் மதிப்பிடமுடியாத அளவுக்குப் பொருளாதார லாபம் உண்டு என்றும் சொல்லுகிறார். ராட்டை, கிராமப் பிரச்சினையைக் கவனிக்க ஆரம்பித்திருக்கிறது. ஆனால், அப்பிரச்னையை அது இன்னும் தீர்த்துவிடவில்லை என்பதையே நான் குறிப்பிட விரும்புகிறேன். அது ஒன்றிலேயே முழு கவனமும் செலுத்துவதனால் அதுவே கிராமப் பிரச்னையைத் தீர்த்துவிடும் என்று நீங்கள் கூறுவதானால் அது மிகவும் குறுகிய திட்டமாகும். கால்நடைப் பிரச்னையும், சுகாதாரத்தைப் பற்றிய பிரச்னையும் முக்கியமானவைகளே ஆகும்."

மேலே கண்ட கடிதத்தில் ஸ்ரீ ஆண்டுரூஸ், சுகாதாரத்தைப் பற்றிய பிரச்னையை எழுப்பியிருக்கிறார். இதன் அவசியத்தை

நான் அறியாமல் இல்லை. ராட்டையை நான் கண்டுபிடிப்பதற்கு வெகு காலத்திற்கு முன்பே நான் சுகாதாரச் சீர்திருத்தக்காரனாகிவிட்டேன். மலத்தைப் புதைத்து அதை எருவாக்குவதை நேட்டால் போனிக்ஸ் பண்ணையில் நானே செய்து பார்த்திருக்கிறேன். அங்கே எங்களுக்குத் தோட்டி யாரும் இல்லை; நாங்களே எங்களுக்குத் தோட்டிகள். போனிக்ஸ் குடியேற்றத்தில் ஆபாசங்களை மிதித்துவிடும் அபாயமே இல்லாமல் யாரும் வெறுங்காலுடன் நடக்கலாம். இதை ஸ்ரீ ஆண்ட்ரூஸே நேரில் அறிவார். மலத்தை இவ்வாறு பக்குவப்படுத்தும் முறை சாபர்மதி நதிக்கரையிலுள்ள சத்தியாக்கிரக ஆசிரமத்திலும் தொடர்ந்து செய்யப்பட்டு வருகிறது. ஆனால், அதைக் குறித்து நான் எவ்விதப் பிரசாரத்தையும் செய்து வரவில்லை. ஏனெனில், தினமும் வளர்ந்துகொண்டே போகும் வறுமைப் பிரச்னையை இது உடனடியாகவும் நேரடியாகவும் தீர்த்துவிடாது என்பதுதான் இதற்குக் காரணம். மேலும், சுகாதாரத்தைப் பற்றிய பிரச்னையில் ஏதாவது செய்வதானால், பழைய எண்ணங்களையும் பழைய பழக்க வழக்கங்களையும் எதிர்த்துப் போராடியாக வேண்டும். தொடர்ந்து மக்களுக்குப் போதித்து வர வேண்டிய விஷயம் இது. மேலும், அரசாங்கத்தின் உதவியில்லாமல் இதில் யாரும் எதுவும் செய்துவிடவும் முடியாது. தொன்றுதொட்டுப் பாரம்பரியமாகத் தொடர்ந்து வந்து ஊறிப்போயிருக்கும் பழக்க வழக்கங்களை, எடுத்துக் கூறுவதனால் போக்கிவிட முடியாது என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். சட்டம் ஒன்றுதான் இதற்குச் சரியான பரிகாரம் என்று எனக்குத் தோன்றுகிறது.

ஆனால், இதே ஆட்சேபம் ராட்டை விஷயத்தில் பொருந்தாது. இதற்கு மாறாக, எல்லாச் சீர்திருத்தங்களுக்கும் முன்னதாக ஏற்படவேண்டியது இது. நாட்டு மக்களின் கவனம் முழுவதும் ராட்டை ஒன்றிலேயே செல்லும்படி செய்வது என்றால் முடியுமானால், மற்றெல்லாப் பிரச்னைகளையும் அது தானே தீர்த்துவிடும். சட்டம் வேண்டிய இடத்தில் அதற்கும் அது வழிகோலிவிடும். தனிப்பட்டவருக்கு உடனடியாக லாபம், அந்த லாபம் மிகச் சிறியதாகவே இருந்தாலும், கிடைக்கும்படி ராட்டை செய்யும். இதில் வேலை செய்வதில் கொஞ்சமும் கஷ்டமில்லை. இதற்கு எதிராக ஊறிப்போயிருக்கும் துவேஷம் எதுவும் மக்களுக்கு இல்லை. ராட்டை சுற்றுவதன் அவசியத்தைக் குறித்துச் சாதாரண மக்களைப் பொறுத்தவரையிலாவது, விரிவான வகையில் நியாயங்களை எடுத்துச் சொல்லிக்கொண்டிருக்க வேண்டியதில்லை. கொஞ்சம் மூலதனம் இருந்தாலே இதற்குப் போதும். தேசம் முழுமைக்கும் என்ற அளவில் செய்வதற்குச் சாத்தியமான நிர்மாண முயற்சியும் இது ஒன்றுதான். இது வெற்றியடைந்துவிடுமானால், இதனால் ஏற்படக்கூடிய தேசீய நன்மைகள் அபாரமானவை. மக்களுடைய ஒத்துழைப்பின்றி இது வெற்றியடைய முடியாது என்பது தெரிவதால்

மகத்தான ஒத்துழைப்பு முயற்சியையும் இது செய்கிறது. இதனுலேயே, கவனம் முழுவதையும் ராட்டையில் செலுத்துவது ஒன்றே சுயராஜ்யம் அடையச் செய்யும் என்கிறேன். இது மிகவும் பலமான பேச்சு என்ருல் மற்ருேர் வகையில் வருமாறு கூறலாம்: 'ராட்டையும் அதனுல் ஏற்படுகிறவைகளும் இல்லாமல் சுயராஜ்யமே இல்லை. ஆகையால், இது நிறைவேறினுல் மற்றவைகளெல்லாம் தானே தொடர்ந்து வரும் என்பதை அறிந்து புத்திசாலியான பொருளாதார நிபுணர், தமது கவனம் முழுவதையும் ராட்டையிலேயே செலுத்துவார்.

நோயின் தன்மையை இன்னும் கொஞ்சம் ஆழ்ந்து பரிசீலனை செய்து பார்ப்போம். இதில் முக்கியமான நோய் வறுமையேயல்லாமல் சாக்கடை அன்று. வறுமையுங்கூட அவ்வளவு பெரியதல்ல. வறுமையினும் கொடியதான நோய் சோம்பேறித்தனம். முதலில் பலவந்தத்தால் திணிக்கப்பட்ட சோம்பேறித்தனம் இப்பொழுது ஒரு வழக்கமாகவே ஆகிவிட்டதுதான் மிக மோசமானது. சாக்கடையைத் தடுத்துவிடலாம். வறுமை சாதாரணமாக வெளியில் தெரியும் ஓர் அறிகுறி. ஆனல், சோம்பியிருத்தலோ எல்லாத் தீமைகளுக்கும் வேராக இருக்கும் மிகப் பெரிய காரணம். அந்த வேரை அழித்துவிட்டால், மேற்கொண்டு எந்த முயற்சியும் இல்லாமலேயே அநேக தீமைகளுக்குப் பரிகாரம் தேடிவிடலாம். பட்டினி கிடக்கும் ஒரு நாட்டின் மக்களுக்கு எந்தவிதமான நம்பிக்கையோ, தன் முயற்சியோ இருப்பதற்கில்லை. ஆபாசங்களைக் குறித்தோ, நோய்களைக் கண்டோ அம்மக்கள் அசிரத்தையோடுதான் இருப்பார்கள். எல்லாச் சீர்திருத்தங்களையும் 'இதனுல் என்ன நன்மை?' என்றுதான் கேட்பார்கள். வாழ்வை அளிக்கும் சக்கரமான ராட்டை ஒன்றுதான் சோர்வுற்ற இந்த இருண்ட நிலையிலிருந்து பிரகாசமான நம்பிக்கை நிலைக்குக் கொண்டுபோக முடியும்.

—'எங் இந்தியா' – 27—8 – 1925

# 25

# ராட்டையே காமதேனு

ரத்தினகிரி, லோகமான்ய திலகர் பிறந்த இடம். ஆகையால், இது இந்தியா முழுமைக்கும் யாத்திரை ஸ்தலம் என்று மகாத்மா கூறிவிட்டு அங்கே செய்த பிரசங்கமாவது:

லோகமான்யரின் சுயராஜ்ய மந்திரத்தை நீங்கள் எல்லோரும் அறிவீர்கள். அந்த மந்திரத்தை நிறைவேற்ற என்னைவிட அதிகமாக முயன்ற லோகமான்யரின் சீடர்கள் வேறு யாரும் இருப்

பதாக நான் நினைக்கவில்லை. எனக்குச் சமமான முயற்சியைச் செய்தவர்கள் பலர் இருக்கலாம். ஆனல், என்னைவிட அதிக முயற்சி செய்திருப்பதாக யாரும் கூறிக்கொள்ள முடியாது. ஏனெனில், சுயராஜ்யம் நமது பிறப்புரிமை என்பது மாத்திரமல்ல, அதை அடைந்தாக வேண்டியதும் நமது தெய்வீகக் கடமை என்பதை நான் அறிவேன். ஏனென்றல், சுயராஜ்யமில்லாமல் நாம் இருக்கிறவரையில் ஆண்மை இல்லாதவர்களாகவும் இருந்து வருகிறோம். சுயராஜ்யமில்லாமல் நமது சக்திகளையெல்லாம் சரியானபடி காட்டிக்கொள்ள முடியாது. லோகமான்யர் எண்ணிய சுயராஜ்யம், ரத்தினகிரி மக்களுக்கோ, மகாராஷ்டிரர்களுக்கோ சுயராஜ்யம் அல்ல. ஆனல், ஏழை, பணக்காரர்கள் ஆகிய எல்லோரையும் கொண்ட இந்தியாவுக்குச் சுயராஜ்யம் அது. வயிற்றுக்குத் தின்னப் போதுமானது இருந்தாலன்றி, ஏழை மக்களுக்குச் சுயராஜ்யம் என்பதற்குப் பொருளில்லை. நமது மில்களுக்காக நாம் ஏன் பாடுபடக் கூடாது என்று கேட்கிறீர்கள். ஷோலாப்பூர் மில்களின் சொந்தக்காரரான சேத் நரோத்தம மொரார்ஜி எனது நண்பர். நான் அவர் மகனின் விருந்தாளியாக இருந்தபோது என் மீது அவர் அன்பையே பொழிந்தார். அதற்காக ஷோலாப்பூர் மில்களில் தயாராகும் துணியை நான் உபயோகித்து அந்த 'ஏழை' சேத் நரோத்தமருக்கும் அவர் மகனுக்கும் நான் சேவை செய்ய வேண்டும் என்று அர்த்தமா? அவர்கள் துணியை நான் உபயோகிப்பதால் ஏழைகளுக்குச் சேவை செய்தவனவேன் என்று அவர்கள்கூடச் சொல்லமாட்டார்கள்.

கொங்கணம் ஏழைப் பகுதி என்று எல்லோரும் சொல்லுகிருர்கள். நீங்கள் ஏழைகளாக இருந்தால், நிலைமை உங்களால் சகிக்க முடியாததாக இருக்கவேண்டும். உங்கள் பகுதியிலுள்ள ஏழை மக்கள் பாம்பாய்க்குப் போய்ப் பிழைப்புத் தேடிக் கொள்ளுகின்றனர் என்று கூறுகிறீர்கள். அந்த வாழ்வுக்கு அவர்கள் என்ன விலை கொடுக்க வேண்டியிருக்கிறது என்பதை அறிவீர்களா? வெளிச்சமோ, காற்ருே இல்லாத பொந்துகள் போன்ற இடங்களில் அவர்கள் வசிக்கிருர்கள். சில அடி நீளம், சில அடி அகலம்தான் இருக்கும். அச்சிறு இடத்தில் உடல் சுத்தமோ, வெட்க உணர்ச்சியோ இல்லாமல் அநேக ஆண்களும் பெண்களும் ஒன்ருக நெருங்கிக் கிடக்க வேண்டியிருக்கிறது. அப்படிப்பட்ட நிலைமையில் வசிக்கும்படி உங்கள் தாய்மார்களையும் சகோதரிகளையும் அனுப்ப நீங்கள் தயாராயிருக்கிறீர்களா? பம்பாய் மில்களுக்குப் போகும் பெண்கள் உங்கள் சகோதரிகள், ஆண்கள் உங்கள் சகோதரர்கள் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்களல்லவா? இந்த உங்கள் சகோதரர்களும் சகோதரிகளும் குடியும் மானக்கேடும் நிறைந்த வாழ்க்கையை அங்கே நடத்திவிட்டு இங்கே திரும்பி வந்து அப்பாவங்களையெல்லாம் உங்களிடம் தொற்றிக்கொண்டு பரவும்படி பார்க்க நீங்கள் சம்மதிக்கிறீர்களா? அங்கே இவர்கள் சம்பாதிக்க

முடியும் எட்டணுவுக்காக இவ்வளவு மோசமான கொடுமைகளை விலைக்கு வாங்கவேண்டுமா?

சரியான பசுப் பாதுகாப்பு நமக்குத் தெரியாததனுல் நமது கால்நடைகள் நாசமாகின்றன. சரியான பொருளாதாரமும் சமூக வாழ்வும் தெரியாததனுல் நமது கிராமங்கள் நாசமாகின்றன. இவ்விதம் நாசமாகிக்கொண்டு வருவதை ராட்டை நிறுத்திவிட முடியும். நம் நாட்டில் ஒவ்வொருவரின் சராசரி தின வருமானம் இன்னதென்பது உங்களுக்குத் தெரியுமா? இச்சராசரி வருமானம் ஒன்றரை அணு என்று நமது பொருளாதார பண்டிதர்கள் சொல்லுகிருர்கள். ஆனல், அதுவும் உண்மை நிலையைக் காட்டுவது அல்ல. ஓர் ஆற்றில் சில இடங்களில் ஆறு அடி ஆழமிருக்கிறது. வேறு சில இடங்களில் இரண்டு அடி ஆழமிருக்கிறது. இதைக் கூட்டிக் கணக்குப் பார்த்து ஆற்றின் சராசரி ஆழம் நலடிதான் என்று ஒருவர் ஆற்றில் இறங்கினுல் மூழ்கிவிட மாட்டாரா? புள்ளி விவரங்கள் இப்படித் தான் நிலைமையைத் தவருகக் காட்டுகின்றன. ஏழையின் வருவாயையும், வைசிராய், லட்சாதிபதிகள் ஆகியவர்களின் வருமானத்தையும் சேர்த்துக் கூட்டிப் போட்டுச் சராசரி வருமானம் இன்னது என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. ஆகையால், உண்மையான வருமானம் ஆளுக்குச் சராசரி முக்காலணுக்கூட இருக்காது. இந்த வருமானத்துடன் ராட்டையினுல் இன்னுமொரு முக்காலணுவாவது கூடுதலாகக் கிடைக்கும்படி நான் செய்யும்போது ராட்டையே என் காமதேனு என்று சொல்லிக் கொள்ளுவது நியாயமல்லவா? என்னிடம் தெய்வீக சக்திகள் இருப்பதாகச் சிலர் சொல்லிக் கொள்ளுகிருர்கள். என்னிடம் அசாதாரணமான குணங்கள் இருக்கின்றன என்று மற்றும் சிலர் சொல்லுகிருர்கள். நான் எப்படிப்பட்டவன் என்பதைக் கடவுள் ஒருவரே அறிவார். சத்தியாக்கிரகத்தின் வெற்றியில் நம்பிக்கையில்லாதவர்கள் இருப்பது சாத்தியம். ஆனல், ராட்டையைப் பற்றிய பிரத்தியட்ச உண்மைகளையும் நம்பாமல் இருப்பதற்கு எவ்விதக் காரணமும் இருப்பதாக நான் நினைக்கவில்லை. இந்தியாவில் ஏழ்மை என்பதே இல்லை, தினத்திற்குச் சில செப்புக் காசுகள்கூட இல்லாததனுல் பட்டினி கிடப்பவர்கள் இந்தியாவில் மிகச் சிலரே என்பதை யாராவது நிரூபித்துக் காட்டி நான் நம்பச் செய்து விடுவார்களாயின், நான் தவருக எண்ணிவிட்டேன் என்பதை நானே ஒப்புக்கொண்டு நூற்கும் ராட்டையையும் அழித்து விடுகிறேன்.

ஆகவே, கொங்கணம் ஏழைப் பகுதி என்று நீங்கள் சொல்லும்போது, என்ன கருத்துடன் அப்படிச் சொல்லுகிறீர்கள் என்பதை எண்ணிப் பார்க்கும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். உண்மையிலேயே நீங்கள் ஏழ்மையில் இருந்தால், உங்கள் ஏழ்மையைப் போக்கக்கூடியது ராட்டையைவிட வேறு எதுவுமே இல்லை. உங்கள் பெண்களின் மானத்திற்கும் அது

பாதுகாப்பு. ராட்டையையும் அதைச் சேர்ந்தவைகளையும் முதலில் நீங்கள் தேடிக்கொள்ளுங்கள். மற்றவையெல்லாம் உங்களை வந்தடையும். நாட்டிற்கும் பிரபஞ்சத்திற்கும் பொருந்துவதான ஒன்றை நீங்கள் எப்படிப் புறக்கணிக்க முடியும்? லோகமான்யரைப் பின்பற்றுகிறவர்கள், ராட்டையைப் பழிப்பதோ, அதை நிராகரிப்பதோ முறையாகுமா?

ஆனால், ஓர் இளைஞர் என்னை ஓயாமல் கேள்விகள் கேட்க முற்பட்டதைப் போன்று, 'லோகமான்யர் கதரை விரும்பினர் என்றால் அதை மேற்கொள்ளும்படி அவர் ஏன் நாட்டு மக்களைக் கேட்டுக்கொள்ள வில்லை?' என்று நீங்களும் என்னைக் கேட்கலாம். உங்களுடைய இக்கேள்வியால் நான் ஏமாந்து போய்விட மாட்டேன். சுதேசியை லோகமான்யர் விளக்கியபோது கதரையும் அவர் எண்ணியிருந்தாலும், எண்ணாமலிருந்தாலும், அவருடைய சுதேசியில் நிச்சயமாகக் கதரும் சேர்ந்ததுதான். நானோ, லோகமான்யரின் வாரிசு. அவர் விட்டுச் சென்ற பிதுரார்ஜிதத்தை நான் அதிகமாக்கவில்லையென்றால், அச்சிறந்த தந்தைக்கு ஏற்ற தனயனாக நான் ஆகேன். லோகமான்யரின் உபதேசங்களை ஆழ்ந்து சிந்தித்தேன். எனது பல வருட அனுபவங்களையும் அத்துடன் சேர்த்துக் கொண்டேன். அதன் பேரில் லோகமான்யரின் உபதேசத்திற்குக் கதர்தான் பொருளாக இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன். அவர் என்ன செய்வது வழக்கம் என்பது உங்களுக்குத் தெரியுமா? அவர் இறப்பதற்குக் கொஞ்ச காலம் முன்னால் நிகழ்ந்த ஒரு சம்பவத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன். கிலாபத் பிரச்னை சம்பந்தமாக மௌலானா ஷௌகத் அலி அவரை அணுகினார். அப்பொழுது அவரிடம் லோகமான்யர், "காந்தி கையெழுத்துப் போடுமிடத்தில் நானும் கையெழுத்திட்டு விடுவேன். ஏனெனில், இந்த விஷயம் அவருக்கே நன்றாகத் தெரியும் என்பதை நம்புகிறேன்" என்றாராம். ஆகையால், சுதேசியை மேற்கொள்ளும்படி அவர் ஆலோசனை கூறியபோது அவர் மனத்தில் கதர் இல்லை என்றே வைத்துக்கொண்டாலும், அதனால் என்ன? மூக்குக் கண்ணாடிகளை நாம் இங்கே தயாரிக்கிறோம் என்று வைத்துக் கொள்ளுவோம். 'இதை உபயோகிக்கும்படி லோகமான்யர் கூறவில்லை. ஆகையால், அதை நாம் உபயோகிக்கக் கூடாது' என்று யாராவது சொன்னால் அது சரியா? இத்தகையவரை 'வேதவாதா' என்று கீதை வருணிக்கிறது. அதே போல சாரத்தை விட்டுவிட்டு வெறும் சொல்லை மாத்திரம் கிரகிப்பவர் அவர் என்று கூறி அவர் பேச்சைக் கேட்க மறுத்து விடுவோம். வேதங்களின் சொல்லுக்கு மாத்திரம் பொருள் கூறிக் கொண்டிருப்பவர் எவ்விதம் வேதங்களின் உண்மையான சாரத்தை அறிந்து கொண்டவர் ஆகமாட்டாரோ, அதே போல லோகமான்யரின் உபதேசத்தின் சாரத்தைப் புரிந்துகொள்ளாமல் சொல்லை மாத்திரம் வியாக்யானம் செய்து கொண்டிருப்பவர்கள், அந்த

உபதேசத்திலுள்ள உண்மையான சக்தியை அறிந்துகொள்ளத் தவறிவிட்டவர்கள் ஆவார்கள்.

'முஸ்லிம்கள் நம்மை மதம் மாற்றிக் கொண்டிருக்கையில் கதரைப் பற்றி நீங்கள் கூறுவதை யார் கேட்பார்கள்?' என்று இன்னுமொருவர் என்னிடம் வந்து கேட்கிறார். இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவும்படி இன்னொருவர் உங்களைக் கட்டாயப் படுத்துகிறார் என்பதனால் முஸ்லிம்களாகிவிடும் அளவுக்கு நீங்கள் சக்தியற்றவர்களாகிவிட்டீர்களா என்று உங்களைக் கேட்கிறேன். உண்மையான தருமம் உங்களிடம் இருக்கு மாயின் அதைக் கெடுத்துவிட யாராலும் முடியாது. ஆனால், நமது தருமத்தையும் கதரைக்கொண்டே பாதுகாக்க நான் விரும்புகிறேன். ஏனெனில், ஹிந்துப் பெண்களுக்கு மாத்திரமே யன்றி முஸ்லிம் பெண்களுக்கும் சேவை செய்வதே கதர் என்பதன் பொருள். வங்காளத்தைச் சேர்ந்த ஒரு மௌல்வி, சில பெண்களிடம் போய், கதர் இயக்கம் ஹிந்துக்கள் இயக்கம் என்றும், ஆகவே அப்பெண்கள் நூற்க வேண்டாம் என்றும் கேட்டுக்கொண்டார். அப் பெண்கள் இரண்டு நாட்கள் அவர் பேச்சைக் கேட்டார்கள். மூன்றும் நாள் பஞ்சு கொடுக்கும்படி கேட்டுக்கொண்டு வந்துவிட்டார்கள். அவர்கள் வேறு என்ன செய்வது? அவர்கள் பட்டினி கிடந்துகொண்டே இருக்க முடியாது. அவர்களுக்குப் போட மௌல்வியிடம் சோறும் இல்லை. விஸ்வாமித்ர முனிவருக்குப் பசியின் கொடுமை மிகுந்து விட்டபோது, தாம் தின்னக்கூடாததையும் தின்ன முற்பட்டு விட்டதோடு திருடித் தின்னவும் கிளம்பிவிட்டார் என்று மகா பாரதத்தின் அறிவுமிக்க ஆசிரியர் வருணிக்கிறார். பசிக் கொடு மையைத் தாளமுடியாத ஓர் ஆணோ, பெண்ணோ எதைத்தான் செய்யத் துணிந்துவிடமாட்டார்கள் என்பதை யாராலும் சொல்லமுடியாது. ஆகையால், வறுமையைப் போக்கி, உங்கள் பெண்களின் மானத்தையும் பாதுகாக்க வேண்டுமானால், நீங்கள் கதரை மேற்கொள்ள வேண்டும் என்று நான் உங்களுக்குக் கூறுகின்றேன்.

சுத்தி* இயக்கத்தில் நானும் பங்கெடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்கிறார்கள். முஸ்லிம்களிடமும் கிறிஸ்தவர் களிடமும் இருக்கும் இதே போன்ற இயக்கங்கள் போய்விட வேண்டும் என்று நான் விரும்பும்போது சுத்தி இயக் கத்தில் நான் எப்படிச் சேரமுடியும்? ஹிந்து மதம், கிறிஸ்தவம் அல்லது இஸ்லாம் ஆகிய குறிப்பிட்ட ஒரு மதத்தில்

---

* சுத்தி இயக்கம்: வேத உபதேசங்களின்படி வாழும் வாழ்க்கையே விமோசனம் அளிக்கவல்லது என்ற கொள்கையுடன், பிற மதத்தினரைச் சுத்தி செய்து ஹிந்து மதத்தில் சேர்த்துக்கொள்ளுவதற்காக ஆரிய சமாஜத்தினரால் தொடங்கப்பட்ட இயக் கம். சாதி மத வேற்றுமைகள் இன்றி, மக்கள் அனைவரும் ஒரே இனமாக வாழவேண் டும் என்பது இந்த சமாஜத்தின் நோக்கங்களில் ஒன்றாகும். ஆரிய சமாஜத்தை 1875-ஆம் ஆண்டில் குஜராத் பிராமணரான ஸ்ரீ தயானந்த சரஸ்வதி தோற்றுவித்தார்.

சேருவதால்தான் மனிதன் நல்லவனாகி முக்தியையும் அடைவான் என்பது எண்ணவும் இயலாதது. ஒழுக்கம் புனிதமானதாவதும், மோட்சத்தை அடைவதும் உள்ளத் தூய்மையைப் பொறுத்தவை. ஆகையால், ஹிந்துக்களுக்கு ஒன்று கூறுகிறேன். 'நீங்கள் விரும்புவதை நீங்கள் செய்யுங்கள். ஆனால், தீர ஆலோசித்ததன் பேரில் ஒரு முடிவுக்கு வந்துவிட்ட என்னைப் போன்ற ஒருவரை, அவரால் முடியாததைச் செய்யும்படி மாத்திரம் சொல்லாதீர்கள்' என்று கூறுகிறேன். ஓரளவுக்கு உட்பட்டதே மனிதனுடைய சக்தி. என் சக்திக்கு உட்பட்டதைத்தான் நான் செய்ய முடியுமே யன்றி அதற்கு மிஞ்சியது எதையும் என்னால் செய்துவிட முடியாது. நூறு காரியங்களையே அல்ல, அரை டஜன் காரியங்களைக்கூட ஒரே சமயத்தில் என்னால் செய்துவிட முடியாது. ஒரு சமயத்தில் ஒரு காரியத்தைச் சரிவரச் செய்ய என்னால் முடிந்தாலும் நான் பாக்கியசாலி என்று எண்ணுவேன். ராட்டை ஒன்றே சாத்தியமான சிறந்த சேவை என்று நான் கூறுவதை நீங்கள் ஒப்புக் கொள்ளுவதாக இருந்தால், உங்களால் இயன்ற உதவியை எனக்கு அளியுங்கள்.

—'எங் இந்தியா'–17—3—1927

# 26

# சிறந்த ஒரே பரிகாரம்

பேராசிரியர் ஸி. என். வக்கீல் எழுதிய பயன் மிக்க கட்டுரைகள், இப்பத்திரிகையில் ('எங் இந்தியா'வில்) வெளியாயின. வறுமையைக் குறித்து அவர் தொடர்ந்து எழுதி வந்தவைகளுக்கு அனுபந்தங்களைப் போன்றவை அக்கட்டுரைகள். ஆகையால், அவற்றைச் சேர்த்தே படிக்க வேண்டும். அவருடைய கட்டுரை ஒன்றைப் பிரசுரிக்காமல் நிறுத்தி வைத்துக் கொண்டேன். அதில் வறுமையைப் போக்குவதற்கு அவர் கூறியிருந்ததைவிட இன்னும் அதிகத் திட்டமானதான பரிகாரங்களைக் கூறும்படி அவரைக் கேட்டுக்கொண்டேன். அதன் பேரில் அவர் அதை நான்கு கட்டுரைகளாக விரித்தார். அவையே மேலே கூறப்பட்டுள்ள கட்டுரைகள். அறிவு மிக்க பேராசிரியர் குறிப்பிட்டிருக்கும் வேலைத் திட்டத்தைப் பத்து ஆண்டுகளில் முடித்துவிட முடியும் என்று நான் எண்ணவில்லை. நம் நாட்டைப் போன்ற விசாலமான, வறுமை மிகுந்த நாட்டிற்குப் பத்து வருட அபிவிருத்தித் திட்டம் ஒன்றை வகுப்பது என்பது ஒரு வேளை அசாத்தியமானதாக இருக்கலாம்.

என்றாலும், இந்தியாவின் முக்கியமானதான நோய்க்குப் பேராசிரியர் வக்கீல் கூறியிருக்கும் பரிகாரங்களைப் பார்ப்போம். உற்பத்திச் செல்வத்தைப் பெருக்கி, அதைச் சமமாக வினியோ

கிப்பது எப்படி என்பதே பிரச்னை என்று சரியானபடியே அவர் கூறியிருக்கிறார். முக்கியமாக, பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களிடையே செல்வத்தை வினியோகிப்பதையே கூறுகிறார் என்று கருதுகிறேன். இதற்காக அவர் கூறுவதாவது :

1. கட்டுபடியாகாததாக உள்ள சிறு நிலவுடைமைகளை மாற்றியமைக்க வேண்டும்.

2. விவசாயிகள் பட்டிருக்கும் கடன்களை நில அடமான பாங்கிகள், கூட்டுறவு பாங்கிகளின் மூலம் கொடுத்துத் தீர்த்து விடவேண்டும்.

3. ரெவினியூ சட்டத்தை மாற்றியமைத்து, வருமான வரி முறையை அனுசரித்து நிலவரியும் படிப்படியாக உயர்வதாகச் செய்து, குறைந்த பட்சம் இவ்வளவு வருமானமுள்ளவர்களுக்கு நிலத்தீர்வை இல்லை என்றும் செய்துவிட வேண்டும்.

4. கட்டுபடியாகாத நிலவுடைமையை மாற்றியமைப்பதால் நிலமில்லாது போகிறவர்களுக்கு, இப்பொழுது இருக்கும் மொத்த நிலப் பரப்பில் தரிசாகக் கிடக்கும் 23 சத விகித நிலத்தில் சாகுபடி ஏற்படும்படி செய்வதன் மூலமும், பெரிய தொழில்களைத் தேச மக்களின் சொத்தாக்கிவிடுவதன் மூலமும், அவற்றை அபிவிருத்தி செய்வதனாலும் வேலை மீண்டும் கிடைக்கும்படி செய்ய வேண்டும்.

5. பாங்கி முறையை, இப்பொழுது இருப்பதைப் போல் அல்லாமல் தேசத்தின் நன்மைக்கான முறையில் அமைப்பதன் மூலம் சிறிய, பெரிய மூலதனங்களை அவை கிரகித்து உபயோகிப்பதாகச் செய்யவேண்டும்.

6. முதலாளிகளுக்கும் தொழிலாளருக்குமிடையே போராட்டத்தைத் தவிர்க்கும் வகையில் தொழிலாளர் நிலையை அபிவிருத்தி செய்யவேண்டும்.

7. அளவுக்கு மிஞ்சிய ஜனப் பெருக்கத்திற்கும், தகுதியற்றதான சந்ததி விருத்திக்கும் காரணமாக இருக்கும் குழந்தைக் கல்யாணம் போன்ற சமூகக் கேடுகளைப் போக்க வேண்டும்.

8. கல்வி, பாமர மக்களிடையேயும் பரவி, அது அம்மக்களின் தேவையைப் பூர்த்தி செய்யக்கூடியதாக இருக்கும் வகையில், கல்வி முறையில் தீவிரமான மாறுதலைச் செய்ய வேண்டும்.

9. ராணுவச் செலவைக் குறைத்து, திறமை வாய்ந்த இந்தியரையே உத்தியோகங்களுக்கு நியமிப்பதன் மூலம் இந்தியாவின் பணம் வெளிநாடுகளுக்குப் போய்விடாதபடி தடுக்க வேண்டும்.

இது அதிகக் கவர்ச்சியான திட்டமே. ஆனால், இக்கட்டுரையை நான் திரும்பவும் பார்த்தபோது, 'பூனைக்கு யார் மணியைக் கட்டுவது?' என்ற கேள்விதான் தொடர்ந்து என் மனத்தில் எழுந்து வந்தது. இதில் கூறப்பட்டிருப்பவைகளில் எதையும் அரசாங்கத்தின் உதவி இல்லாமல் செய்துவிட முடியாது. ஆளப்படுவோரைச் சுரண்டுவது என்ற அடிப்படையில் அமைந்திருப்பது இந்த அரசாங்கம் என்பதில் சந்தேகமில்லை. இத்தகைய அரசாங்கம், மேலே கூறப்பட்டிருக்கும் மாறுதல்களைச் செய்ய முற்படாது, முற்பட முடியாது; அப்படியே முற்பட்டாலும் உடனடியான அபிப்பிராயத்தை உண்டாக்கக் கூடிய அவசியமான காரியத்தைச் செய்யாது. கோடிக்கணக்கான செலவில் நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்ற இந்த அரசாங்கம் முற்படலாம். ஆனால், லட்சக் கணக்கிலேயே செலவு செய்ய வேண்டியதான கிணறு வெட்டும் திட்டத்தை அது மேற்கொள்ளாது. ஆகையால், பேராசிரியர் வக்கீலுக்கு முதலில் வேண்டியதெல்லாம் ஒரு சுருக்கமான சுயராஜ்யத் திட்டம். அதை அடைவதற்கு அவர் முக்கிய காரணமாக இருந்ததனால், வறுமை ஒழிப்பு இலாகாவில் வறுமை ஒழிப்புக் கமிஷனரை நியமிக்க உத்தரவிடும் அதிகாரம் அவருக்கு இருக்கும்.

என்றாலும், இது மிகத் தீவிரமானதோர் பரிகாரமே. இதை நிறைவேற்ற வேண்டியவர்கள், பண்டித மோதிலால் நேருவும் அவருடைய அறிக்கையில் கையெழுத்திட்டிருப்பவர்களுமே. நாட்டின் முன்னால் இருக்கும் முக்கியமான பிரச்னைகளுடன் சேர்ந்து கவனிக்கும் எந்த அரசாங்கத்தின் முன்பும் ஒரு திட்டத்தை வைப்பதே கட்டுரையை எழுதியிருக்கும் ஆசிரியரின் வேலை.

ஒரு தலைசிறந்த பரிகாரம் இப்பத்திரிகையின் மூலம் இடைவிடாது எடுத்துக் கூறப்பட்டு வந்திருக்கிறது. நடந்திருக்கிற வரையில் இப்பரிகாரம் பரிசோதிக்கப்பட்டு அதிக அளவு வெற்றியும் கண்டிருக்கிறது. ஆனால், அறிவு மிக்க பேராசிரியர், 'எங் இந்தியா'வுக்குக் கட்டுரை எழுதியபோதாவது இத் தலைசிறந்த பரிகாரத்தைப் பரிசீலனை செய்வார் என்றே நம்பியிருந்தேன். தமது யோசனைகளாகிய வட்டத்தில் சிறு ராட்டையைக் கண்ணுக்குத் தெரியாத சிறு கோடாகப் பேராசிரியர் மறைத்திருக்கிறார் என்பது உண்மையே. நான் அதற்குரியதாகக் கூறும் இடம் ஒரு வட்டத்தில் ஒரு புள்ளி அல்ல. அறிவுமிக்க இக்கட்டுரையாளர் கருத்தில் கொண்டிருக்கும் பல விஷயங்களும் சேர்ந்த மற்றும் எண்ணற்ற அநேகவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் வட்டத்தின் மையமாகவே நான் அதை மதிக்கிறேன் ஆனால், உண்மை இதுதான்: புத்தகங்கள் நிறைந்த நூல் நிலையத்தில் அமர்ந்து, பொறுமையுடன் ஆராய்ந்து, இந்தியாவின் ஆழமான, ஆழமாகிக் கொண்டுவரும் வறுமையை ஒப்புக்கொள்ளும்படி செய்யும் கட்டுரைகளை எழுதிவிடுவது அவருக்குச் சாத்தியமாயிற்று. ஆனால்,

நோய் இருக்கும் இடத்தை அறிவதற்கும், பரிகாரத்தைத் தாங்குவதற்கு நோயாளிக்கு உள்ள சக்தியைத் தெரிந்துகொள்ளுவதற்கும், திறந்த மனத்தோடும், விஷயத்தை அறியும் உள்ளத்தோடும் சில கிராமங்களை நெருங்கிப் பரிசீலனை செய்தாலன்றி முடியாது. பரிகாரத்தை அறிந்துகொள்ளுவதற்கும், தமக்கே சொந்தமான புதிய நோக்கத்துடன் அதன் தகுதியை நிரூபிப்பதற்கும், கிரக்கிற்கு* படிப்பதற்கும், கிராம மக்களிடையே வசிப்பதற்குமாக ஓர் ஆண்டு ஆயிற்று. பாட்டாளிகளான கோடிக்கணக்கான மக்களிடையே இப்பொழுதே பலவந்தமாகக் கடுமையான வேலையில்லாத் திண்டாட்டம் இருந்து வருகிறது. வருடத்தில் நான்கு மாதங்கள் அவர்களுக்கு வேலையே இல்லை என்பதுதான் அறிய வேண்டிய முக்கியமான உண்மை. இதை அறிந்துகொண்டுவிட்டால், இந்தக் கோடிக்கணக்கான மக்கள் சோம்பிக் கழிக்கும் நேரத்தைப் பயன்படுத்தும் வகையில் அவர்களுக்கு வேலை கொடுப்பதில் கணமும் காலதாமதம் ஆகக்கூடாது என்பதில் நிச்சயம் ஏற்படும். இந்நாட்டிலிருப்பவரின் சராசரி வருமானம் ஒன்றே முக்காலணா. அதாவது, இப்பொழுதுள்ள நாணயமாற்று விகிதப்படி தினத்திற்கு இரண்டு ஆங்கிலப் பென்னிகளுக்கும் குறைவு என்றால், கோடிக்கணக்கான பாட்டாளி மக்களின் சராசரி வருமானம் இன்னும் அதிகக் குறைவாகத்தான் இருக்க வேண்டும். இது, அறிந்துகொள்ள வேண்டிய மற்றோர் உண்மை. இவர்களுடைய இந்த வருவாயில் தினத்திற்கு அரையணாவை அதிகரிப்பவர்கள், அதுவும் பெரிய முதலீட்டுச் செலவு எதுவும் இல்லாமல் இதைச் செய்பவர்கள், அவர்களுடைய வருவாயில் பெரிய அதிகரிப்பைச் செய்தவர்களே ஆவார்கள். அதோடு இக்கோடிக்கணக்கான மக்கள் உள்ளத்தில் இறந்துகொண்டிருக்கும் நம்பிக்கையைத் திரும்பவும் உயிர்பித்தவர்களுமாவார்கள். இவ்வேலைத் திட்டம் இப்பொழுது அரசாங்கத்தின் உதவியில்லாமலேயே நடந்துவருகிறது என்பது இத்திட்டத்திற்குள்ள மற்றோர் பெருமை. என்றாலும், இதற்கு இன்னும் அதிகமான ஆதரவு வேண்டும். எல்லையில்லாத அளவுக்கு இதை விருத்தி செய்யவும் முடியும்; இவ்வேலை நடந்துவரும் இடத்திற்கே போய் இந்த இயக்கத்தை ஆராயுமாறு இந்தியப் பொருளாதார நிபுணர்களை அழைக்கிறேன். அவர்கள் தங்களுடைய ஆராய்ச்சிக்குத் தேர்ந்தெடுத்துக்கொள்ள இரண்டாயிரம் கிராமங்கள் இருக்கின்றன. ஆராய்ந்துபார்த்த பிறகு அவர்களால் முடிந்தால்

---

* கிரக்: இந்த அமெரிக்க அறிஞரின் முழுப்பெயர் ரிச்சர்டு பி. கிரக் என்பதாகும். இவர் 30 ஆண்டுகளுக்கு மேலேயே இந்தியாவுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர். சாந்தி நிகேதன், சாபர்மதி ஆசிரமம், சிம்லா, கொடைக்கானல் போன்ற பல இடங்களிலும் சில ஆண்டுகள் தங்கி இருந்தவர். அகிம்சையின் சக்தி, கதரின் பொருளாதாரம் ஆகியவை பற்றிய நூல்களும், விஞ்ஞானத்தை இந்தியாவின் கிராமங்களில் வசிக்கும் குழந்தைகளுக்குக் கற்பிப்பதற்கான ஒரு நூலும், முதலாளித்துவம், கம்யூனிஸம், சோஷியலிஸம், காந்திஜியின் திட்டம் ஆகியவற்றை விளக்கும் ஒரு நூலும் வேறு சில நூல்களும் ஆங்கிலத்தில் எழுதியிருக்கிறார். இவருடைய நூல்கள் சிலவற்றிற்குக் காந்திஜி முன்னுரை எழுதி, அவற்றின் சிறப்பைப் பாராட்டியிருக்கிறார்.

இந்த இயக்கத்தை அவர்கள் கண்டிக்கட்டும். இல்லாவிட்டால், புத்திசாலித்தனமோ அல்லது சலுகையோ, வேண்டா வெறுப்புடன் அளிக்கக்கூடியதான ஒதுக்கலான இடத்தை இதற்கு அளித்துவிடாமல் இதற்குரியதான நடுநாயகமான இடத்தை அளிக்கட்டும்.

—'எங் இந்தியா'-1—11—1928

## 27

# ராட்டையே போக்க முடியும்

ராட்டை சாதிக்கக்கூடிய மகத்தான காரியங்களை எண்ணும் போது, அதன் சாதாரணமான உபதேசம் எங்கும் பரவுவதற்கு இவ்வளவு அதிகக் காலமாவது ஆச்சரியமாகவே இருக்கிறது. 'ஒன்றுமே இல்லாததிலிருந்து எதுவும் வருவதில்லை' என்பது லத்தீன் பழமொழி. ஆனால், சொல்லளவில் இப்பழமொழியை ராட்டை பொய்யாக்குவதாகவே தோன்றுகிறது. ஏனெனில் பயனுள்ள எதையும் அழிக்காமலே, அதற்குப் பதிலாக ஒன்றைச் செய்யாமலேயே, நாட்டு மக்களின் சோம்பல் நேரத்தை ராட்டை பயன்படுத்திக்கொள்ளுகிறது.

இந்தச் சோம்பலை, பலவந்தமாக உண்டாக்கப்பட்டது என்று கருதினாலும் அல்லது மக்கள் தாமே வருவித்துக்கொண்டது என்று எண்ணினாலும், நாட்டு மக்களின் ஆன்மாவையே அது கொன்றுகொண்டு வருகிறது. கிராமங்களில் அதிகமாக நான் ஊடுருவிப் பார்க்கப் பார்க்க, நான் பார்க்கும் கிராமவாசிகளின் கண்களில் வெறித்த பார்வையையே நான் காணக் காண, எனக்கு அதிர்ச்சி மேற்கொண்டும் அதிகமாகிறது. தங்கள் மாடுகளோடு சேர்ந்து தொழிலாளர்களாக உழைப்பதைத் தவிர அவர்களுக்குச் செய்வதற்கு வேறு எதுவுமே இல்லாததால், அநேகமாக அவர்களும் மாடுகள் போன்றே ஆகிவிட்டனர். கோடிக்கணக்கான இம்மக்கள், தங்கள் கைகளைக் கைகளாக உபயோகிப்பதை நிறுத்திவிட்டார்கள். இது முதல்தரமான மகா துக்ககரமான விஷயம். மனிதப் பிறவிக்கு இயற்கை அளித்திருக்கும் இந்த அருட் கொடையை நாம் அக்கிரமமாக வீணாக்கிக்கொண்டு விட்டதற்காக இயற்கை நம்மீது மிகக் கடுமையாகப் பழிதீர்த்துக்கொண்டு வருகிறது. இயற்கையின் கொடையை முழுவதும் பயன்படுத்திக்கொள்ள நாம் மறுக்கிறோம். மிருகங்களிலிருந்து நம்மை வேறாகப் பிரித்துக் காட்டும் மற்றும் சில காரியங்களில், நமக்குள்ள அற்புதமான கைத்திறனும் ஒன்று. நம்மில் கோடிக்கணக்கானவர்கள் கையைக் காலாகவே உபயோகித்து வருகிறோம். இதன் பலன் என்னவென்றால், உடலையும் உள்ளத்தையும் இயற்கை பட்டினி போட்டு வருகிறது.

வீணுக்கும் இந்த அக்கிரமத்தை ராட்டை ஒன்றே நிறுத்த முடியும். இப்பொழுதே, அசாதாரணமான பணச்செலவோ, புத்திச் செலவோ இல்லாமல் இதை அது செய்ய முடியும். பாழாக்கும் இக்காரியத்தினாலேயே அநேகமாக உணர்ச்சியே இல்லாததானதோர் நிலையில் நாம் வாழ்ந்துகொண்டிருக்கிறோம். ஒவ்வொரு வீடும் திரும்பவும் நூற்கும் ஆலையாகவும், ஒவ்வொரு கிராமமும் நெய்யும் ஆலையாகவும் மாறினால்தான் நம் வாழ்வு உயிர்பெற முடியும். அத்துடன் உடனே நமது கிராமக் கலைகளும் கிராமிய கீதங்களும் உயிர் பெற்றுவிடும். அரைப் பட்டினி கிடக்கும் ஒரு நாட்டு மக்களுக்குச் சமயமோ, கலையோ அல்லது கூட்டமைப்போ இருக்காது.

ராட்டையால் போதுமான வருவாயில்லை என்பதுதான் ராட்டையைக் குறித்துக் குறை கூறுபவர்களின் ஒரே ஆட்சேபம். சராசரி ஓர் அமெரிக்கரின் தின வருமானம் பதினான்கு ரூபாய். ஓர் ஆங்கிலேயரின் சராசரி வருமானமோ ஆறு ரூபாய். ஆனால், ஓர் இந்தியரின் சராசரி தின வருமானம் ஒன்றரை அணா. இதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும்போது, தினத்திற்கு ராட்டை காலணா கொடுத்தாலும் அது நிச்சயம் வருமானத்தையே கொடுக்கிறது என்பது தெரியும். எதுவுமே இல்லை என்பதிலிருந்து ஏதாவது கொஞ்சத்தையாவது பெற முயற்சிப்பதே நூற்கும் ராட்டை. ராட்டையினால் நாட்டிற்கு அறுபது கோடி ரூபாயை மிச்சப்படுத்த நிச்சயமாக முடியும். அப்படி மிச்சப் படுத்திவிடுவோமானால், தேச மக்களின் வருமானத்துடன் அப் பெருந் தொகையையும் சேர்த்துவிடுகிறோம். இக்காரியத்தைச் செய்வதில் நம் கிராமங்களையும் தானே ஒழுங்குபடுத்தி விடுகிறோம். அநேகமாக இத்தொகை முழுவதையும் நாட்டில் பரம ஏழைகளாக இருப்பவர்களிடையே வினியோகித்தாக வேண்டுமாகையால், அவ்வளவு பெரிய செல்வத்தை நியாயமாக, அநேகமாகச் சமமாக வினியோகிக்கும் திட்டமாக அது ஆகிறது. இதோடு இத்தகைய வினியோகத்தினால் ஏற்படும் மகத்தான ஒழுக்க லாபத்தையும் சேர்த்துப் பார்த்தால் ராட்டையின் அவசியம் மறுக்க முடியாததாகிறது.

—'எங் இந்தியா'–17—2—1927

## 28

# நூற்பது ஹரிஜனங்களுக்கு உதவி

ஆயிரக்கணக்கான ஹரிஜனங்களுக்கு உணவளித்து வரும் கைத்தொழில்களில் நூற்பதும் நெய்வதும் ஒன்று என்பதையும், சரியானபடி வேலை செய்தால் இன்னும் அநேகருக்கும் இது உண வளிக்கும் என்பதையும் என் சுற்றுப்பிரயாணங்களில் நான் கவ

னித்தேன். என்ருலும், சில இடங்களில் நெசவாளர்கள், தங்கள் தொழில் காரணமாகத் தீண்டாதாரில் சேர்க்கப்பட்டிருக்கிருர்கள். வேறு ரகங்கள் எதுவும் இல்லாமல் பெரும்பாலும் முரட்டுக் கதரை மாத்திரமே நூற்பவர்கள் இவர்கள். இவ்வகுப்பினர் வேகமாக மறைந்தொழிந்துகொண்டிருந்த சமயத்தில் இவர்களைக் காப்பாற்றக் கதர் வந்தது. இவர்கள் தயாரிக்கும் முரட்டுத் துணிகளுக்கும் நல்ல கிராக்கி ஏற்பட்டது. இப்பொழுதும் நூற்பதனுலேயே ஜீவித்துக்கொண்டிருக்கும் ஏராளமான ஹரிஜனக் குடும்பங்களும் இருக்கின்றன என்பதும் அப்பொழுதுதான் கண்டுபிடிக்கப்பட்டது. இவ்விதம் இரண்டு வகையிலும் கதர் ஏழை உயிரின் ஊன்றுகோலாகிறது. மிகுந்த ஏழைகளிலும் அதிகத் திக்கற்ற நிலையிலிருப்பவர்கள் ஹரிஜனங்கள். ஹரிஜனங்களுள்பட ஏழைகளுக்கெல்லாம் கதர் உதவி செய்கிறது. மற்றவர்களுக்குக் கிடைப்பதாயிருக்கும் அநேக தொழில்கள் ஹரிஜனங்களுக்குக் கிடைக்காமல் இருப்பதனுலேயே அவர்கள் அதிக ஏழைகளாக இருக்கிருர்கள்.

—'ஹரிஜன்'–27—4—1934

# 29

# நூற்பது தேகாரோக்கியத்திற்கு நல்லது

பிராமணப் பெண்கள் ராட்டையில் நூல் நூற்கக்கூடாது என்று சென்னைக் கல்வி இன்ஸ்பெக்டிரஸ் அம்மையார் ஒருவர் உத்தரவு போட்டிருக்கிருர். இவருடைய இத்தீர்ப்பு இவர்மீது கண்டனங்களைக் கிளப்பியிருக்கின்றன. ராட்டையில் நூற்பது பிராமணரல்லாத பெண்களுக்கு நல்லதே யென்ருல், பிராமணப் பெண்களுக்கு மாத்திரம் அது ஏன் நல்லதல்ல என்று வாதிக்கப்படுகிறது. சாதி அகம்பாவம் தரைமட்டமாக்கப்பட்டு வரும் போது இக்கேள்வி பொருத்தமானதே. பிராமணப் பெண்கள் மிக மெல்லிய நூலை நூற்று வருகிருர்கள். பூணூலுக்காக நூல் நூற்கிற வழக்கம் அநேக பிராமணக் குடும்பங்களில் இன்னும் இருந்துவருகிறது என்பது இன்ஸ்பெக்டிரஸுக்குத் தெரியவில்லை என்றே தோன்றுகிறது.

இந்த இன்ஸ்பெக்டிரஸ்மீது எழுந்த கண்டனத்திலிருந்து மற்றொரு கேள்வியும் பிறந்திருக்கிறது. நூற்பது ஒரு கலையா? மாறுதல் இல்லாத ஒரே மாதிரியான இந்த நூற்கும் வேலை, குழந்தைகள் களைப்படையும்படி செய்யக்கூடியதா? நூற்பது மிகவும் உயர்தரமான கலை. அவ்வேலை அதனளவில் அதிக இன்பகரமானது என்று இதுவரையில் சேகரிக்கப்பட்டுள்ள ஆதாரங்கள் எல்லாம் காட்டுகின்றன. பலதரப்பட்ட ரக நூல்களையும் நூற்பதற்கு இயந்திரம்போல் இழுப்பது மாத்திரம்

போதாது. விரும்பும் நயமான ரக நூல் கிடைப்பதற்கு விரல்களும் கண்களும் தவறுமல் வழிகாட்டும்போது ஏற்படும் இன்பத்தை, நூற்றலைக் கலையாகக் கருதி நூற்பவர்கள் அறிவார்கள். கலை கலையாகவே இருப்பதற்கு அது மன ஆறுதலை அளிக்க வேண்டும். ஸர் பிரபாசங்கர பட்டாணி, நாளெல்லாம் கஷ்டப்பட்டு வேலை செய்த பிறகு தமது நரம்புகள் அமைதியடைவதற்கும், நிம்மதியாகத் தூங்குவதற்கும் ராட்டையில் நூற்று வருவது தமக்கு வழக்கம் என்று எழுதியிருந்ததை ஓராண்டுக்கு முன்னுல் நான் குறிப்பிட்டிருக்கிறேன். சோர்வடைந்துபோன தமது நரம்புகள், நூற்பதால் அமைதி அடைந்ததைக் குறித்து ஒரு சகோதரி எழுதியிருக்கும் கடிதத்திலிருந்து ஒரு பகுதியைக் கீழே கொடுக்கிறேன் :

"என் அறைக்குள் விரைந்தேன். பின்னர் இருளில் உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரையில் ஒரே வேதனையால் அவதிப்பட்டேன். பிறகு பிரார்த்தனை செய்து சோர்வைப் போக்கச் சிறிது நேரம் முயன்றேன். அதன் பின்னர் ராட்டையை எடுத்து நூற்க ஆரம்பித்தேன். அது மந்திர சக்தியைப் போன்று எனக்கு ஆறுதலை அளித்தது. அமைதியாகவும் ஒழுங்காகவும் அது சுழலும்போது ஏற்படும் நாதம், எனக்குச் சாந்தத்தை அளித்தது. அதன் சேவையைப்பற்றி எண்ணியபோது கடவுளுக்கு அருகில் நான் இருப்பதாக உணரச் செய்தது."

நூற்பவர்களில் ஒருவர் இருவரின் அனுபவம் மாத்திரமல்ல இது. அநேகரும் இதையே அனுபவித்திருக்கிறுர்கள். என்ருலும், நூற்பது எல்லோருக்கும் இன்பமானதாக இருக்கும் என்று சொல்லவேண்டிய அவசியமில்லை. ஏனெனில், அது அநேகருக்கு ஆனந்தமானதாக இருந்திருக்கிறது. ஓவியம் வரைவது அற்புதமான கலை என்பது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆனல், எல்லோருமே ஓவியம் வரைந்துவிடுவதில்லை.

—'எங் இந்தியா'-27—5—1926

## 30

# பித்தம் தெளிய மருந்து

"ராட்டையை நோயைத் தீர்க்கும் உபாயமாகவும் நீங்கள் எண்ணுகிறீர்களா?" என்று "நியூயார்க் போஸ்டு" பத்திரிகையைச் சேர்ந்த ஸ்ரீ பிரீமன் மகாத்மாவைக் கேட்டார். அதற்குக் காந்திஜி 'ஆம்' என்று கூறி மேலும் சொன்னதாவது: "இதைக் குறித்துக் கிளாஸ்கோ பேராசிரியர் ஒருவர் எனக்கு அனுப்பியிருந்த சில நூல்களை நான் படித்திருக்கிறேன். வங்காளத்தில் ஒரு சிறைச்சாலையின் சூப்பரிண்டெண்டாக இருந்து ஓய்வுபெற்ற

ஒருவரும் இதைக் குறித்து எனக்கு எழுதியிருக்கிறார். பைத்தியம் பிடித்தவர்கள் குணமடையச் செய்வதற்கும், முக்கியமாக ராட்டை சுழலுவதால் உண்டாகும் நாத லயத்தினால் மனத்தில் சாந்தமான நிலைமை ஏற்படுவதற்கும் ராட்டை பயனுள்ளதாவதைக் குறித்து அவர் விவரித்திருக்கிறார்.''

அதன்பேரில் ஸ்ரீ பிரீமன் கூறியதாவது: ''ராட்டை 'ஆலோசிக்கும் யந்திரம்' என்று அதைக் குறித்து அமெரிக்கருக்கு எடுத்துக் கூறுவதென்றிருக்கிறேன். ராட்டையுடன் நான் தனித்திருக்கும்போது அது என்னை ஆலோசிக்கும்படி செய்கிறது என்பதை நூற்கும் வகுப்பில் நான் கண்டுகொண்டேன். அமெரிக்கர்கள் மாத்திரம் நூற்க முற்படுவார்களானால், கொஞ்சம் ஆலோசனை செய்யவும் அவர்களுக்கு வாய்ப்பு இருக்கும். இதுவும் இல்லையென்றால் ஆலோசிப்பதற்கு அவர்களுக்கு நேரமே இல்லை.''

—'ஹரிஜன்'—17—11—1946

# 31

# நூற்பும் பிரம்மச்சரியமும்

சத்தியத்தை நிலைநாட்ட முற்படும்போது உண்மையை எடுத்துக் காட்டுவதைவிட அறியாமைச் சிக்கல்களை அவிழ்த்துவிடுவதில்தான் சிரமம் அதிகமிருக்கிறது என்று ஓர் ஆங்கில ஆசிரியர் கூறியிருக்கிறார். தனக்குத் தானே தெளிவாவதுதான் சத்தியத்தின் இயற்கை. அதைச் சூழ்ந்துள்ள அறியாமையாகிய ஒட்டறையை நீக்கியதுமே அது தெளிவாகப் பிரகாசிக்கிறது. சாதாரணமானதும், நேரானதுமான நூற்கும் ராட்டை இயக்கம், இப்பொழுது இதே போன்ற சங்கடத்திலேயே இருந்துவருகிறது. இந்த இயக்கம் நிறைவேற்றும் என்று யாருமே சொல்லாத காரியங்களையெல்லாம் அது நிறைவேற்ற வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அப்படி அக்காரியங்களை நிறைவேற்ற அது தவறிவிடும் போது இதற்குப் பழியைக் குறைகூறுவோர் மீது போடுவதற்குப் பதிலாக இந்த இயக்கத்தின் மீதே போட்டுவிடுகிறார்கள்! கதர் அன்பர் ஒருவர் எழுதியிருக்கும் கடிதத்தில் காணும் சில பகுதிகள் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகின்றன. அதன் சாராம்சம் வருமாறு:

''1. ராட்டையானது எப்பொழுதும் அவர்களுக்கு வேண்டியதெல்லாம் கொடுக்கும் என்று நீங்கள் இப்பொழுது சொல்லிக்கொள்ள ஆரம்பித்திருக்கிறீர்கள். இது எங்களுக்கு மிகுந்த அருவருப்பை உண்டாக்கியிருக்கிறது. ஆகையால், அறிவு படைத்தவர்களாகிய நாங்கள், இன்று உங்களையும் உங்கள் நூற்கும் ராட்டையையும் சேர்த்து எதிர்க்கிறோம்.

''2. கையினால் நூற்பதைச் சிறு கிராமங்களில் புகுத்துவது சாத்தியமானதாக இருக்கலாம். அந்த அளவோடு நீங்கள் நிறுத்திக்கொண்டிருந்தால்

உங்களை யாரும் குறை சொல்லமாட்டார்கள்; கொஞ்சம் அனுதாபங்கூட உங்களுக்குக் கிடைக்கும்.

"3. ஆனல், ராட்டையின் மூலம் ஆன்ம முக்தியுங்கூடக் கிடைக்கும் என்று காட்ட நீங்கள் முயற்சிக்கும் போது உங்களை நீங்களே கேவலமாக்கிக் கொள்ளுகிறீர்கள். ஆயினும், நீங்கள் 'பெரிய' மனிதராக இருப்பதால், ஒன்றுமறியாத சில அப்பாவிகள் நீங்கள் சொல்லுவதையெல்லாம் ஏற்றுக் கொண்டுவிடக்கூடும். படித்தவர்களோ, உங்கள் முட்டாள்தனத்தை இனியும் சகித்துக்கொண்டிருக்கப் போவதில்லை. ஏனெனில், இப்பொழுது நீங்கள் நிதானத்தையெல்லாம் காற்று வாக்கில் விட்டுவிட்டீர்கள். அதோடு முக்கியமாக, நீங்களாகவே விலகிக்கொண்டதிலிருந்து இவ்வுலகத்திலுள்ள எல்லோருக்கும், எல்லாக் காரியங்களுக்கும் நூற்கும் ராட்டை ஒன்றே விமோசனம் என்று சொல்ல நீங்கள் தயங்குவதே இல்லை. பிரம்மச்சரியத்தை அனுசரிக்க ஒருவர் விரும்புகிருரா? அவர் ராட்டையில் நூற்க ஆரம்பிக்கட்டும். சிறையில் கிடக்கும் ஒரு பாவமும் அறியாத வங்காள தேசபக்தர்கள் விடுதலையடைய வேண்டும் என்று விரும்புகிறீர்களா? ராட்டையைச் சுற்றுங்கள். இந்தியாவின் பொருளாதார நிலையைச் சீர்படுத்த விரும்புகிறீர்களா? இதற்குத் திரும்பவும் ராட்டைதான். இது மாத்திரமல்ல; வாளையும் ஈட்டிகளையும் ஏந்தவல்ல சிறந்த போர்வீரர்களுக்குக்கூட நீங்கள் ராட்டையைக் கொடுக்கிறீர்கள். இதில் ஆச்சரியம் என்னவென்ருல், இவைகளிலெல்லாம் உள்ள முழுப் பைத்தியக்காரத்தனத்தை நீங்கள் அறியாமல் போனதுதான்.

"4, அறுபது கோடி ரூபாய் பெறுமானமுள்ள துணியைப் பிரிட்டனிடமிருந்து வாங்குவதை இந்தியா நிறுத்திவிடுவதால் பிரிட்டனுக்கு என்ன ஆகிவிடும்? இந்தியாவில் அது வகித்து வரும் ராஜீய அதிகாரத்தைத் துறந்துவிடும்படி இது செய்துவிடும் என்று நீங்கள் எண்ணுகிறீர்களா? கையினல் நூற்பதைவிடப் பலனுள்ளதான ராஜீய வேலைத் திட்டம் வேறு எதுவுமில்லை என்று கூறுவது எவ்வளவு தீமையான தவறு என்பதைப் பாருங்கள்.

"5. பாமர மக்களின் சோற்றுப் பிரச்னையையாவது நூற்கும் ராட்டை தீர்த்துவிடும் என்பதை நீங்கள் இன்னும் நிரூபித்துவிடவில்லை. இதற்கு மாருக இதனல் ஏற்பட்டிருக்கும் தீமை வெளிப்படையாகத் தெரிந்திருக்கிறது. இதுவரையில் நஷ்டம் அடைந்திருக்கும் கதர்க்கடைகளை எண்ணிப்பாருங்கள்.

"6. கையினல் நூற்பதற்காக மற்றக் கைத்தொழில் நடவடிக்கைகளையெல்லாம் கைவிட்டுவிடலாம் என்றுகூட நீங்கள் யோசனை கூறுவதாகத் தோன்றுகிறது."

இந்த ஆட்சேபங்களையெல்லாம் என் சொந்த வார்த்தைகளிலேயே சுருக்கிக் கொடுத்திருக்கிறேன். இதை எழுதியவருக்கு இதனல் நான் எந்த அநீதியும் செய்துவிட்டதாக எண்ணவில்லை. இதற்கு மாருக நான் ஏதாவது தவறு செய்திருப்பேனுயின், அவர் எழுதியிருப்பதிலுள்ள கசப்பை நீக்குவதிலோ அல்லது குறைப்பதிலோதான் நான் அத்தவறைச் செய்திருக்கிறேன். மனம் கசந்து விட்ட தேசபக்தர் ஒருவருக்கு, 'மகாத்மா' பட்டம் சூட்டப்பட்டிருக்கும் ஒருவரைக் குறித்துக் கடுமையான சொற்களை உபயோகிக்க உரிமையுண்டு. ஒரு புறம்

தமது நாடு காட்டும் பாழடைந்து போன காட்சி. மற்ருேர் புறத்திலோ அதற்குப் பரிகாரம் தேடிக்கொள்ள இயலாத திக்கற்ற நிலைமை. இவற்ருல் பொங்கி எழும் கோபத்தை ஓரளவுக்காவது குறைத்துக்கொள்ளக் கடுஞ்சொற்களை உபயோகிப்பது அவருக்கு உதவியாக இருக்கும். என் கடமையோ, சாத்தியமானுல் அக் கோபத்தினுல் எழுந்திருக்கும் குழப்பத்தை நீக்க முயற்சிப்பதேயன்றி அவருடைய கோபத்தை விளம்பரம் செய்வது அன்று.

அதை எழுதியிருப்பவர் கூறியிருக்கும் ஆறு விஷயங்களையும் இனி ஆராய்வோம்:

1. ராட்டையைத் தமது காமதேனு என்ருே, அது எல்லோருக்கும் அவர்கள் வேண்டியதையெல்லாம் அளிக்கும் என்ருே யாரும் கருதவேண்டும் என்று நான் எப்பொழுதும் முயன்றதே இல்லை. அதை என்னுடைய காமதேனு என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். ஹிந்துக்கள் கொஞ்சம் களிமண்ணை எடுக்கிருர்கள்; அதைச் சிறு முட்டை வடிவமான உருண்டையாகப் பிடிக்கிருர்கள்; தெய்வமே அதில் இருப்பதாக மனத்தினுள் எண்ணிக்கொள்ளுகின்றனர். தங்கள் முழு பக்தியையும் அதன் மீது செலுத்தி வணங்கி, அதைத் தங்கள் காமதேனுவாக்கிக் கொள்ளுகின்றனர். இன்று இந்தியாவில் கோடிக்கணக்கான ஹிந்துக்கள் எதைச் செய்து வருகிருர்களோ அதற்கு அதிகமாக நான் எதையும் செய்துவிடவில்லை. அக்கம் பக்கத்தில் இருப்பவர்களும் அதைத்தான் வணங்க வேண்டும் என்று அவர்கள் சொல்லுவதில்லை. இதற்கு மாருக, அவர்கள் தங்களுடைய பிரார்த்தனை முடிந்ததும் அக்களிமண் உருண்டையை நீரில் கரைத்து விடுகின்றனர். ஆகவே, என்னைப் போன்றிருக்கும் கோடிக்கணக்கான மக்களுடன் நானும் சித்தத்தை இழந்து ராட்டையை என் காமதேனுவாக்கிக் கொண்டால், அறிவு படைத்தவர்களாக இருப்பவர்கள் அதற்காக அருவருப்பை அடைவானேன்? அவர்களிடமிருந்து ஓரளவுக்குச் சகிப்புத் தன்மையை நான் எதிர்பார்க்கக்கூடாதா? ஆனுல், உண்மையில் அறிவு படைத்தவர்கள் எல்லோருமே ஒரு கூட்டமாக இன்னும் என்னைக் கைவிட்டுவிடவில்லை. ஆகையால், சிலர் அவர்களில் வெறுப்படைந்து விட்டார்கள் என்பதற்காக அறிவாளிகள் எல்லோருமே வெறுப்படைந்துவிட்டார்கள் என்று நம்புவதோ அல்லது பிறர் நம்பச் செய்வதோ நியாயம் அல்ல. அவர்கள் எல்லோருமே உண்மையில் என்னை முற்றிலும் கைவிட்டுவிட்டதாகவே இப்போதைக்கு வைத்துக்கொள்ளுவோம். பிறகு, உண்மையான நம்பிக்கை எல்லாமே இருந்தாக வேண்டியதைப் போன்றே என் நம்பிக்கையும் அசைக்க முடியாததாக இருந்தால், அதே காரணத்தினுல் அது மேலும் ஒளி வீசி அதிகமாகப் பிரகாசித்து எரியும். 1908-இல் 'கில்டோனன் காஸில்' கப்பலில் நான் எழுதிய 'ஹிந்த் சுயராஜ்' என்ற நூலில் ராட்டையில் எனக்கு இருந்த நம்பிக்கையை, நான் முற்றிலும் தன்னந்

தனியனுக இருந்துகொண்டே வெளியிட்டேன். அச்சமயம் என் நம்பிக்கையை வெளியிடுவதில் என் பேனுவைச் செலுத்திய என் கடவுள், என்னுடைய அந்த நம்பிக்கை சோதனைக்குட்பட்டிருக்கும் இச்சமயத்திலா என்னைக் கைவிட்டுவிடுவார்?

2. கிராமங்களில்தான் ராட்டையை அதிகமாகப் பரப்ப வேண்டும் என்று உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது அங்கேதான் அவ்வாறு நடந்துகொண்டும் வருகிறது. அனுதாபத்திற்கும் ஆதரவுக்கும் நான் இன்று வேண்டிக்கொள்ளுகிறேன் என்ருல், நமது கிராமங்களில் அது புத்துயிர் பெறவேண்டும் என்பதற்காகவே. மேலும், இதற்காகத்தான் படித்தவர்கள் அனுதாபத்தை நான் தேடிக்கொண்டிருக்கிறேன். ஒன்றும் தெரியாதவர்களாக இருக்கும் நம் கிராமவாசிகளுக்கு, மலேரியாவின் அபாயத்திலிருந்தும் மற்றும் பல நோய்களிலிருந்தும் தங்களை எப்படிப் பாதுகாத்துக் கொள்ளுவது என்பதைச் சொல்லிக் கொடுப்பதற்குப் படித்தவர்களும் நடுத்தர வகுப்பினருமானவர்களிலிருந்து சிலரும், இந்நோய்களிலிருந்து தப்புவதற்கான சுகாதார முறைகளில் பழக்கம் உள்ளவர்களாவதோடு அந்த முறைகளைத் தாங்களே அனுசரிப்பவர்களாகவும் இருக்க வேண்டும். அதேபோல, நம்மில் சிலர் நூற்கக் கற்றுக் கொண்டு, நாமே விடாமல் அதில் பழகியும் வந்தால்தான் அதை நம் கிராம மக்களுக்கு நாம் சொல்லிக் கொடுக்க முடியும். நாம் செய்து காட்டுவதன் மூலம் அவர்களுக்குள்ள அசிரத்தையைப் போக்கவும் இயலும். அவர்கள் உற்பத்தி செய்யும் கதரை நாம் உபயோகித்துக்கொண்டாலன்றி ராட்டை உயிர் வாழ முடியாது என்பதைச் சொல்லத் தேவையில்லை. ஆகையால், நகரங்களில் வசிக்கும் மக்களை நான் கேட்டுக்கொள்ளுவதெல்லாம், கிராமங்களில் இருக்கும் தங்கள் சகோதரர்கள் லாபத்தைக் கருதி நூற்கும்போது பட்டணவாசிகள் அதை ஒரு யக்ஞமாக எண்ணி நூற்க வேண்டும் என்பதே. இவ்விஷயம் மிகவும் தெளிவானது. இதிலுள்ள உண்மையை மாத்திரம் நாம் உணர்ந்துகொண்டு விடுவோமாயின் இதைக் குறை கூறுவது என்பதற்கே கொஞ்சமும் இடமில்லை.

3. எனது ஆன்ம விமோசனத்திற்கு ராட்டைதான் வழி என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். ஆனுல், மற்றவர்களுக்கோ, சுயராஜ்யத்தை அடைவதற்கும் நாட்டின் பொருளாதார நிலைமையைச் சீர் செய்துகொள்ளுவதற்கும் இது வலிமை வாய்ந்த ஆயுதம் என்று மாத்திரம் சொல்லி வருகிறேன். பிரம்மச்சரியத்தை அனுசரிக்க விரும்புகிறவர்களுக்கும்கூட ராட்டையைத்தான் நான் சொல்லி வருகிறேன். அனுபவத்தைக் கொண்டே நான் இதைச் சொல்லுவதால் கேவலமாக எண்ணிவிடக்கூடிய விஷயம் அல்ல இது. தமது ஆசாபாசங்களையெல்லாம் அடக்க விரும்புகிறவருக்கு அமைதியாக இருப்பது அவசியமாகிறது. தன்னுள் இருக்கும் ஆவேசங்க

ளெல்லாம் ஒடுங்க வேண்டும். ராட்டையின் சுழற்சியோ மிகவும் மென்மையானது, அமைதியானது. ஆகையால், முழு பக்தியுடன் அதைச் சுழற்றுவதால் ஆசாபாச உணர்ச்சிகளை அது அடக்கு கிறது என்பது தெரிந்திருக்கிறது. ராட்டையைச் சுற்றுவதால் என் கோபம் அடங்கி விடுவதைக் கண்டிருக்கிறேன். மற்றும் பல பிரம்மச்சாரிகளும் இதே அனுபவத்தைப் பெற்றிருக்கிறார்கள் என்பதை எடுத்துக் காட்ட முடியும். இத்தகையவர்களெல்லாம் முட்டாள்கள், ஒன்றுமே தெரியாத அறிவிலிகள் என்று ஏளனம் செய்துவிடுவது மிகவும் எளிதானது. ஆனால், அப்படி ஏளனம் செய்வது எவ்வளவு தவறானது என்பது பின்னால்தான் தெரியும். ஏனெனில், அவ்வாறு ஏளனம் செய்கிறவர் அடையும் கோபத்தின் மூலம் தமது உணர்ச்சிகளை அடக்கி, வீரியத் தையும் பலத்தையும் பெறுவதற்குள்ள சிறந்த உபாயத்தை இழந்துவிடுகிறார். ஆகையால், இதைப் படிக்கும் ஒவ்வொரு வாலிபரும், வாலிபப் பெண்ணும் ராட்டையில் நூற்றுப் பார்க்கும் படி அவர்களுக்கு முக்கியமாகச் சிபார்சு செய்கிறேன். அவர்கள் நூற்க உட்கார்ந்தவுடனே தங்களுடைய உணர்ச்சி வேகங்களெல் லாம் அடங்கி விடுவதைக் காண்பார்கள். நூற்பதை நிறுத்திவிட்ட பிறகுங்கூட அந்நாள் முழுவதிலும் அவர்கள் மன அமைதியுட னேயே இருப்பார்கள் என்று நான் சொல்லவில்லை. ஏனெனில், மனிதரின் உணர்ச்சி வேகம் காற்றினும் கடுமையானது; அதை முற்றிலும் அடக்கிவிடுவதற்கு எவ்வளவோ பொறுமை வேண்டும். ஆகையால், நிதானத்தை வளர்த்துக்கொள்ளுவதற்கு வேண்டிய பலமான உபாயத்தை நூற்கும் ராட்டையில் அவர்கள் காண முடியும் என்றுதான் நான் கூறுகிறேன். ராட்டையை நான் சுற்றச் சொல்லுவதன் நோக்கம் மனத்தை அடக்குவதுதான் என்றால், ஜபமாலையை உருட்டி ஜபம் செய்து கொண்டிருக்கும்படி நான் ஏன் யோசனை சொல்லக் கூடாது என்று சிலர் கேட்கலாம். ஜப மாலைக்கு இருப்பதைவிட மேலும் சில சிறந்த குணங்கள் ராட்டை யினிடம் இருக்கின்றன என்பதே அக்கேள்விக்கு என் பதில். எல்லாவற்றையும் துறந்துவிட்டு இயற்கையோடு இயற்கையாக இமய மலையின் குகையில் வாழ்ந்து, காட்டில் கிடக்கும் இலை களையும் கிழங்குகளையும் தின்றுகொண்டிருப்பவர் ராட்டையைச் சுற்றட்டும் என்று நான் சொல்லவில்லை. ஆனால், என்னைப் போல் இவ்வுலக வாழ்வில் ஈடுபட்டுக்கொண்டு அதே சமயத்தில் நாட்டுக்குச் சேவைசெய்யவும், பிரம்மச்சரியத்தை அனுசரிக்கவும் ஆவல் கொண்டிருக்கும் எண்ணற்ற மக்களுக்கே இந்த யோசனை யைக் கூறுகிறேன்.

வாங்காளக் கைதிகளை விடுதலை செய்யும்படி செய்வதற்கு நாம் ராட்டையைச் சுற்ற வேண்டும் என்று நான் கூறிய யோசனையை ஏளனம் செய்வதானது, அவர்களுடைய விடுதலைக் காக எதையும் செய்ய நாம் கொஞ்சங்கூட அசையவும் தயாரா யில்லை என்பதையே காட்டுகிறது. ஏனெனில், அங்கு நூற்கும் ராட்டை என்பது, அந்நியத் துணி பகிஷ்காரம் என்றுதான்

பொருள். கட்டாயப்படுத்தும் சக்தி அதனிடம் எவ்வளவு இருக்கிறது, இச்சமயம் எப்படி வேறு எந்தவிதமான சக்தியையும் விருத்தி செய்ய முடியாத நிலையில் நாம் இருக்கிறோம் என்பதை மற்ற விஷயங்களைக் குறித்துப் பின்னால் ஆராயப் போகும்போது கவனிப்போம். ஈட்டியும் வாளும் ஏந்திப் போராடவல்ல சிறந்த போர்வீரர்களும்கூட நூற்க வேண்டும் என்று நான் கூறுவது, சிறந்த ஞானத்தின் அடையாளமேயன்றிப் பைத்தியக்காரத்தனத்தின் சின்னம் அன்று. இந்த ஞானம், புத்தகப் படிப்பினால் மாத்திரம் ஏற்பட்டது அல்ல; ஏராளமான அனுபவத்தைக் கொண்டு ஏற்பட்டது அது.

4. பிரிட்டிஷாரிடமிருந்து அறுபது கோடி ரூபாய் பெறுமானமுள்ள துணி வாங்குவதை இந்தியா நிறுத்திவிடுவதால், பிரிட்டனுக்கு என்ன நஷ்டம் ஏற்படும் என்பது இவ்விடத்திற்குக் கொஞ்சமும் பொருத்தமில்லாத கேள்வி. அதனால், நமக்கு ஏதாவது நன்மை இருக்குமா, இருந்தால் என்ன நன்மை என்பதைக் கவனிப்பதுதான் நம்முடைய கடமை. அறுபது கோடி ரூபாய் மதிப்புள்ள அந்நியத் துணியை வாங்குவதை நிறுத்திவிடுவது, முதலாவதாக, கோடிக்கணக்கான இந்தியக் குடும்பங்களுக்கு அவ்வளவு தொகையையும் மிச்சப்படுத்திவிட்டதாகும். அதாவது, இவர்களுடைய வருவாயில் இவ்வளவு தொகை அதிகமாவதாகும். பிறகு, இந்த அளவுக்குப் புதிதாக இங்கு தொழில்கள் ஏற்படும்படி இது செய்யும். கோடிக்கணக்கானவர்கள் சேர்ந்து, கூட்டுறவு முயற்சியில் ஈடுபடுவார்கள். கோடிக்கணக்கான மக்களின் சக்தியைச் சேமித்துப் பயன்படுத்த முடியும். கோடிக்கணக்கானவர்கள் தங்கள் வாழ்வைத் தாய்நாட்டின் சேவைக்கு அர்ப்பணித்துக்கொள்ளுவார்கள். மேலும், இம்மகத்தான காரியத்தை நிறைவேற்றுவதன் மூலம் நமது பலத்தை நாம் உணர்வதற்கும் வாய்ப்பு உண்டாகும். இதனால், விவரங்களையும், கணக்கற்ற சிக்கலான பிரச்னைகளையும் அறிவதிலும் நாம் தேர்ச்சியடைவோம். அதாவது, செலவு செய்யும் ஒவ்வொரு பைசாவுக்கும் கணக்கு வைக்கக் கற்றுக் கொள்ளுவோம்; சுகாதாரமான, ஆரோக்கியமான நிலையில் கிராமங்களில் வசிக்கக் கற்றுக் கொள்ளுவோம்; எதிர்ப்படும் கஷ்டங்களையெல்லாம் போக்கிக் கொள்ளுவது போன்ற அநேக காரியங்களையும் தெரிந்துகொள்ளுவோம். ஏனெனில், இவற்றையெல்லாம் நாம் கற்றுக்கொள்ளாத வரையில் இக்காரியத்தை நிறைவேற்றிவிட நம்மால் முடியவே முடியாது. ராட்டை, இந்தச் சக்தியை நம்முள் வளர்க்கும் ஒரு சாதனமாக இருக்கிறது. ஆகையால், ராட்டையின் உட்பொருளைத் தெரிந்துகொள்ளாமல் இருக்கும் வரையில்தான் ஒருவர் அதைக் குறித்து ஏளனம் செய்து கொண்டிருக்க முடியும். அதன் மகத்தான பொருளை அவர் அறிந்துகொண்டுவிட்ட பிறகு ராட்டையினிடமிருந்து அவரைப் பிரிக்கவே இயலாது.

மேலும், பிரிட்டிஷார் புத்திசாலிகள். அதிகாரிகளும் புத்தி கூர்மையும் சாதுர்யமும் உள்ளவர்கள். இதை நான் அறிவேன். இதனுல்தான் ராட்டையில் நூற்கும்படி என் நாட்டு மக்களைக் கேட்டு வருகிறேன். நமது நாவின் ஆற்றலினுலோ, எழுத்துத் திறமையினுலோ பிரிட்டிஷாரை வென்றுவிட முடியாது. நமது மிரட்டல்களையெல்லாம் கேட்டுக் கேட்டு அவர்கள் பழகிப் போயிருக்கிருர்கள். நம் உடல் பலத்தைப் பொறுத்த வரையிலோ, ஆகாய விமானங்களிலிருந்து அவர்கள் பொழியும் குண்டுகளுக்கு முன்னுல் அதுவும் பயன்படாது. ஆனுல், இந்தப் பிரிட்டிஷார் பொறுமை, விடாமுயற்சி, உறுதி, ஒழுங்குபடுத்திக் கொள்ளுவதில் உள்ள ஆற்றல் ஆகியவைகளைப் புரிந்துகொள்ளுகிருர்கள்; மதிக்கிருர்கள். அவர்களுடைய வர்த்தகத்தில் பெரும் பகுதியாக இருப்பது துணி. அதைப் பகிஷ்கரிப்பதை நாம் நிறைவேற்றி விடுவோமாயின் நமது பலத்தை உணரும் விழிப்பு அவர்களுக்கு ஏற்பட்டுவிடும். அவர்கள் இந்தியாவை விடாமல் வைத்துக்கொண்டிருப்பது பெருமைக்காக மட்டும் அல்ல. ஆயுத பலத்தினுல் மாத்திரம் அவர்கள் இந்தியாவை வைத்துக்கொண்டிருக்கவுமில்லை. ஆனுல், சமயோசித புத்தியினுலும் தந்திரத்தினுலும் நம் மீது தங்கள் ஆட்சியை நடத்தி வருகிருர்கள். நம்முடைய தங்கு தடையற்ற சுயேச்சையான இஷ்டத்தைப் பொறுத்ததாக இருக்கும்படி செய்துவிடும்போது அவர்களுடைய ஆட்சியும் அதே போன்ற மாறுதலை அடைந்துவிடும். இன்றோ அந்த இரண்டும் நம் விருப்பத்திற்கு விரோதமாக நம் மீது சுமத்தப் பட்டிருக்கின்றன. இதில் ஒன்றை நமது இஷ்டத்திற்கான வகையில் உருவாக்கிக்கொள்ளுவதில் நாம் வெற்றி பெற்றுவிடுவோமாயின், மற்றதும் தானே அதே போல ஏற்பட்டுவிடும். ஆனுல், நம்மிடம் அவர்களுக்கு இருக்கும் வர்த்தக உறவில் எந்த வித மாறுதலும் இல்லாமல் இருக்கும் வரையில் ராஜீய உறவில் எந்தவிதமான மாறுதலும் சாத்தியமில்லை என்பதை எளிதில் புரிந்து கொண்டுவிடலாம்.

கையினுல் நூற்பதைவிடச் சிறந்ததும், எல்லோருக்கும் அனுசரிக்கக்கூடியதுமான ராஜீய வேலைத் திட்டம் வேறு ஒன்று இருக்கிறது என்று யாராவது காட்டுவார்களானுல், இன்றே ராட்டையைக் கைவிட்டுவிட நான் தயார் என்பதை மீண்டும் சொல்லுகிறேன். ஆனுல், இன்றளவும் வேறு எதையும் நான் காணவில்லை; யாரும் எனக்கு எதையும் காட்டவுமில்லை. வேறு ஏதாவது இருக்கிறதா என்பதை அறிய ஆவலுடலும் இருக்கிறேன்.

5. நம் சோற்றுப் பிரச்னையை ராட்டை தீர்த்துவிடும் என்பதைக் குறித்து 'நவஜீவன்' வாசகர்களுக்கு நிரூபித்துக் காட்டவேண்டிய அவசியம் இல்லை. ஆயிரக்கணக்கான ஏழைப் பெண்கள், நூற்பதனுலேயே தங்கள் வாழ்க்கைக்கு வேண்டிய

தைச் சம்பாதித்து வருகிறார்கள் என்பதைப் பல கதர் ஸ்தாபனங்களும் பிரசுரித்திருக்கும் புள்ளி விவரங்கள் காட்டுகின்றன. நூற்பவருக்குத் தினத்திற்குக் குறைந்தது ஓர் அணாவையாவது ராட்டை அளிக்கிறது என்பதை யாரும் இன்னும் மறுக்கவில்லை. ஒரு நாளைக்குக் காலணாவைக்கூடச் சம்பாதிக்காத மக்கள் இந்தியாவில் கோடிக்கணக்கில் இருக்கின்றனர். நிலைமை இவ்வாறு இருந்து கொண்டிருக்கும் வரையில் ராட்டைக்கும் சோற்றுப் பிரச்னைக்குமிடையே இருந்துவரும் நெருங்கிய தொடர்பைக் குறித்துச் சொல்லத் தேவையில்லை.

ராட்டை நாட்டுக்குத் தீமை செய்துவிட்டது என்ற குற்றச் சாட்டை, இக்குற்றச் சாட்டைக் கூறுகிறவர்கள் யாரோ அவர்கள்தான் அதை நிரூபிக்கவேண்டும். செய்யும் முயற்சி எதுவும் வீண்போகாத தன்மையை இயற்கையாகவே கொண்டிருப்பது தான் இந்த வேலை. அது தொடர்ந்து நடந்து வருவதை எதுவும் தடுத்துவிட முடியாது. அதில் கொஞ்சம் உழைத்தாலும் ஒரு வரைப் பெரும் தீமைகளிலிருந்து காப்பாற்றிவிடும். சில கதர்க் கடைகளை மூடிவிட்டதனால் என்ன கெட்டுப் போய்விடும்? இவ் விதம் மூடிவிட வேண்டி வருவது எல்லா வியாபாரத்திற்கும் சகஜமானதே. இவற்றில் போட்ட பணம் இந்த நாட்டைவிட்டு வெளியே போய் விடாமலாவது இருக்கிறது. இதனால் ஏற்பட்ட அனுபவமோ, மேற்கொண்டும் அபிவிருத்தி செய்து கொள்ளும்படி நமக்கு உதவியாக இருக்கிறது. மேலும், சில கடைகளை மூட வேண்டியிருந்தாலும் அவற்றிற்குப் பதிலாக நன்றாக, ஒழுங்காக அமைக்கப்பட்ட மற்றும் பல கடைகள் தோன்றியிருக்கின்றன என்பதற்கு எத்தனையோ உதாரணங்களைக் கூற முடியும்.

6. கையினால் நூற்பதற்காக எந்த ஒரு சரியான, ஜீவாதாரமான கைத்தொழில் நடவடிக்கையையும் கைவிட்டுவிடலாம் என்று நான் எண்ணியதுமில்லை; விட்டுவிடச் சொன்னதுமில்லை. இந்தியாவில் பாதி நேரத்திற்கு வேலை இல்லாமல் கஷ்டப்படும் மக்கள் கோடிக்கணக்கில் இருக்கிறார்கள் என்பதுதான் நூற்கும் ராட்டையின் முழு அடிப்படையும். அப்படிப்பட்ட நிலைமை இல்லை என்றால் ராட்டைக்கு இதில் இடமே இல்லை என்பதையும் நான் ஒப்புக்கொள்ளவே வேண்டும். ஆனால், உண்மையில் மக்கள் மாதக் கணக்கில் வேலையில்லாமல் சோம்பிக்கிடக்கிறார்கள். இதனாலேயே அவர்கள் நாசமாகிவிடுவார்கள் என்பதை நமது கிராமங்களுக்குப் போய்ப் பார்த்தவர்கள் எல்லோரும் அறிவார்கள். நடுத்தர வகுப்பினர், நூற்பதை ஒரு யக்ஞமாகக் கருதி நூற்க வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுவதுங்கூட அவர்கள் தங்கள் ஓய்வு நேரத்தில் நூற்க வேண்டும் என்று தான். ராட்டை இயக்கம் எந்தத் தொழில் முயற்சிக்கும் எவ் விதத்திலும் நாசத்தை விளைவிப்பது அல்ல. ஜீவனை அளிக்கும் வேலை இது. இதனால்தான் இதை அன்னபூரணி, சோறு அளிப்பது என்று சொல்லுகிறேன்.

—'எங் இந்தியா'–27—5—1926

## 32

# நூற்பதில் கூட்டுறவு

அன்புள்ள நண்பரொருவர், தமக்கும், தமது மற்ற நண்பர்களுக்கும் தோன்றியுள்ள கேள்விக்குப் பதில் சொல்லும்படி கேட்டிருக்கிறார். 'நூற்பதில் கூட்டுறவு இருக்கிறதா? ஒரு கூழாங்கல்லுக்கும் மற்றொரு கூழாங்கல்லுக்கும் எவ்விதம் தொடர்பு இல்லையோ அதேபோல நூற்றல், மக்களைத் தங்கள் தங்கள் காரியங்களையே கவனித்துக்கொண்டு போகிறவர்களாகவும், சுயநல எண்ணமுள்ளவர்களாகவும் செய்து ஒருவருக்கொருவர் தொடர்பில்லாதவர்களாகவும் ஆக்கிவிடாதா?' என்பதே அக்கேள்வி.

இதற்கு நான் கொடுக்கக்கூடிய மிகச் சுருக்கமான, திட்டமான பதில் இதுதான்: 'சரியானபடி வேலை நடந்துவரும் எந்த நூற்பு ஸ்தலத்தையும் போய்ப் பார்த்துக் கவனியுங்கள். நீங்களே சோதித்தும் பாருங்கள். கூட்டுறவு இல்லாமல் நூற்பது வெற்றிபெற முடியாது என்பதை அப்பொழுது நீங்கள் கண்டுகொள்ளுவீர்கள்.'

இந்தப் பதில் மிகச் சுருக்கமானதாகவே இருந்தாலும், அப்படிப் போய் நேரில் பார்ப்பதற்கு நேரமில்லாதவர்களுக்கு இப் பதில் பிரயோசனமில்லை என்பதை நான் அறிவேன். இப்படிப்பட்டவர்கள்தான் பெரும்பாலோராக இருக்கிறார்கள். ஆகையால், அத்தகைய நூற்பு நடக்கும் இடத்தைக் குறித்து என்னால் முடிந்தவரையில் விவரித்துச் சொல்ல நான் முயற்சி செய்ய வேண்டியதுதான்.

சென்னையில் ஒரு கூட்டுறவுச் சங்கத்தில் சென்ற ஆண்டு பேசுகையில், கையினால் நூற்பதன் மூலம் உலகம் கண்டறியாத மிகப் பெரிய கூட்டுறவுச் சங்கத்தை அமைத்துவிடவே நான் முயன்று வருகிறேன் என்று சொன்னேன். இது உண்மையில்லாக் கூற்று அல்ல. இது அதிகப்படியான ஆசையாக இருக்கலாம். ஆனால், இதில் உண்மையில்லாமல் இல்லை. ஏனெனில், கையினால் நூற்பதில் கோடிக்கணக்கான மக்கள் ஒத்துழைத்தாலன்றி அதனால் எதிர்பார்க்கப்படும் நோக்கம் எதுவோ அது நிறைவேற முடியாது.

இந்தியாவில் பலவந்தமாக இருந்துவரும் சோம்பேறித்தனத்தையும், அந்தச் சோம்பேறித்தனத்தையே முக்கியமான காரணமாகக்கொண்ட வறுமையையும் விரட்டிவிடுவதுதான் அந்த நோக்கம். இந்த நோக்கம் சிறந்ததுதான் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ளுவார்கள். இதற்காகச் செய்யும் முயற்சியும் அதற்கு ஏற்றாற்போல் பெரிதாக இருக்கவேண்டும்.

ஆரம்பத்திலிருந்தே கூட்டுறவு இருந்தாக வேண்டும். நூற்பது, ஒருவருக்குத் தன்னம்பிக்கை அளிக்கிறது என்ருல் ஒவ்வொரு கட்டத்திலும் பரஸ்பரம் ஒருவரையொருவர் எதிர்பார்த்தே வாழ வேண்டியிருப்பதன் அவசியத்தை அவர் உணரும்படியும் செய்கிறது. சாதாரணமாக நூற்கிற ஒருவருக்கு அவரிடமிருக்கும் உபரி நூலை வாங்கக்கூடியவர்கள் வேண்டியிருக்கிறது. நூற்கும் பெண்ணே அதை நெய்தும்விட முடியாது. அதிகத் தொகையினரான மக்களின் கூட்டுறவு இருந்தாலன்றி, அப்பெண் நூற்கும் நூல் விலை போகாது. சாகுபடி செய்வதும், விளையும் பொருள்களை விற்பனை செய்வதும் கொஞ்ச அளவில்தான் இருக்கின்றன என்ருலும், கோடிக்கணக்கான மக்களின் கூட்டுறவு இருப்பதனுலேயே எவ்விதம் சாத்தியமானதாகின்றனவோ அதேபோல, அதே போன்ற கூட்டுறவு பெருமளவில் இருந்தால்தான் நூற்பதும் வெற்றிபெற முடியும்.

நூற்பு நடக்கும் ஓர் இடத்தில் நடக்கும் வேலையை எடுத்துக்கொண்டு பார்ப்போம். நூற்பவர்களுக்காக மத்திய அலுவலகத்தில் கொட்டை நீக்கப்படாத பருத்தி சேகரிக்கப்படுகிறது. அநேகமாக அங்கேயே பருத்தி அரைப்பவர்கள் அவ்வேலையைச் செய்யக்கூடும். பிறகு இப்பருத்தி பஞ்சடிப்பவர்களிடம் விநியோகிக்கப்படுகிறது. அவர்களோ, பஞ்சைப் பட்டை போட்டுத் திருப்பிக்கொண்டு வந்து கொடுக்கின்றனர். நூற்பவர்களுக்குக் கொடுக்கப் பஞ்சு இப்பொழுது தயாராக இருக்கிறது. நூற்போர் வாரந்தோறும் வந்து நூலைக் கொடுத்துவிட்டுப் புதிதாகப் பட்டைகளை வாங்கிக்கொண்டு, கொடுத்த நூலுக்குக் கூலியையும் வாங்கிச் செல்லுகிருர்கள். இவ்விதம் வாங்கிய நூலை நெசவாளரிடம் நெய்யக் கொடுக்கிருர்கள். அவர்கள் கதர்த் துணியாக நெய்து விற்பதற்குக் கொடுக்கிருர்கள். இத்துணியை, உடுத்துவோராகிய பொதுமக்களுக்கு விற்க வேண்டும். இவ்விதம் தலைமை அலுவலகம் சாதி, நிறம், மதம் என்பவற்றைப் பாராமல் ஏராளமான மக்களுடன் இடைவிடாத உயிர்த் தொடர்பு கொள்ள வேண்டியதாக இருக்கிறது. மத்திய அலுவலகத்திற்கு லாபம் தேடும் வேலை இல்லை. அதிக வறுமையிலிருப்பவர்களைக் கவனிப்பதைத் தவிர அதற்குத் தனிப்பட்ட கவலை எதுவும் இல்லை. நூற்பு நடக்கும் அவ்விடம் பயனளிப்பதாக இருப்பதற்கு எல்லா வகையிலும் தான் தூய்மையாக இருப்பதாக இருந்தாக வேண்டும். இதற்கும், இப்பெரிய ஸ்தாபனத்தின் மற்ற உறுப்புக்களான பகுதிகளுக்குமிடையே இருக்கும் பந்தம், முற்றிலும் ஆன்மிகமானது; தார்மிகமானது. ஆகையால், நூற்பு நடக்கும் இடம் ஒரு கூட்டுறவுச் சங்கம். பஞ்சடிப்பவர்கள், பட்டை போடுகிறவர்கள், நூற்பவர்கள், நெய்கிறவர்கள், துணி வாங்குகிறவர்கள் ஆகியவர்களெல்லாம் அச்சங்கத்தின் உறுப்பினர்கள். பொதுவான பந்தத்தினுலும், பரஸ்பர நல்லெண்ணத்தினுலும், சேவையினுலும் இவர்களெல்லோரும் ஒன்ருகப் பிணைக்கப்பட்டிருக்கின்றனர். இந்தச்

சமூகத்தில் ஒவ்வொரு காலணாவும் யாரிடம் போயிருக்கிறது என்பதைத் திட்டமாகக் கண்டுபிடித்துவிடலாம். ஏனெனில், அது இவர்களுக்கிடையிலேதான் அங்குமிங்குமாகப் போய்க் கொண்டிருக்கிறது. இத்தகைய நூற்குமிடங்கள் வளரும்போது நாட்டின் இளைஞர்கள் இவற்றில் ஈடுபடுவார்கள். இந்த இளைஞர்களின் உள்ளத்தில் தேசாபிமானம் சுடர்விட்டு எரிந்து கொண்டிருக்கும். அவர்களுடைய தூய்மை எல்லாவிதமான ஆசைகளையும் எதிர்த்து நிற்கும். இத்தகைய இளைஞர்களைக் கொண்ட இந்த நூற்குமிடங்கள், சாதாரணமாக துப்புரவு, சுகாதாரம், கிராமவாசிகளுக்கு ஏற்படும் சாதாரண நோய்களுக்கான நாட்டு வைத்தியம், அவர்களுடைய குழந்தைகளுக்கு அவர்களின் தேவைக்கான கல்வி ஆகியவற்றை எங்கும் பரப்பும் இடங்களாகிவிடும். அப்படிப்பட்ட காலம் இன்னும் வந்துவிடவில்லை. அதன் தொடக்கம் ஆரம்பமாகிவிட்டது. ஆனால், இயக்கம் மெதுவாகத்தான் வளரமுடியும். நெய்யைப் போன்றோ, இன்னும் நன்றாகத் தபால் பில்லைகளைப் போன்றோ கடைத் தெருவில் விற்பனையாகும் சரக்காகக் கதர் ஆகும் வரையில் உருப்படியான பலனைக் காட்டுவது சாத்தியமில்லை. குழந்தை, தன் தாய் சமைத்துப்போடும் சாதத்தைத் தின்று நன்றி காட்டுகிறது. சமைத்த அரிசியின் தரத்தைப் பற்றியோ அல்லது அதன் விலையைப் பற்றியோ குழந்தை பார்த்துக்கொண்டிருப்பதில்லை. அதேபோல மக்களும், வேறு துணியை வாங்குவதற்குப் பதிலாகக் கதரை வாங்கவேண்டும் என்று போதிப்பதில் தான் இப்பொழுது அதிக உழைப்பைச் செலவிடவேண்டியிருக்கிறது. சமைத்த சாதத்தின் தரத்தையும் அரிசியின் விலையையும் குழந்தை எண்ணிப் பார்க்குமாயின், அதைச் சமைப்பதில் செய்திருக்கும் உழைப்பும் காட்டியிருக்கும் அன்பும் அதிக மதிப்புள்ளவை என்பதை அது கண்டுகொள்ளும். ஒரு நாளைக்குக் கதர் விஷயத்திலும் அப்படித்தான் நடக்கும். இந்தியத் தாயின் குழந்தைகள் ஆழ்ந்த தூக்கத்தினின்றும் அப்பொழுது விழித்தெழுவார்கள். இந்தியத் தாயின் புதல்வர்களும் புதல்விகளும் கையினால் நூற்ற, வேலை செய்த நூல், அத்தாயின் கோடிக் கணக்கான மக்களுக்கு அதிக விலையுள்ளதாகவே இருக்க முடியாது என்பதை அப்பொழுது உணர்ந்துகொள்ளுவார்கள். சாமான்யமான இந்த உண்மையை நாம் உணர்ந்துகொண்டு விடும்போது நூற்கும் நிலையங்கள் நூறு மடங்காகப் பெருகும். இருள் சூழ்ந்திருக்கும் இந்தியக் குடிசைகளில் நம்பிக்கையாகிய ஒளிக்கிரணமும் பாயும். நாம் விரும்பும், ஆனால் அதை அடைவது எப்படி என்பதை நாம் அறியாமலிருக்கும் சுதந்திரத்திற்கு, அந்த நம்பிக்கையே நிச்சயமான அடிக்கல்லாக இருக்கும்.

—'எங் இந்தியா'-10—6—1926

# 33

# சகலருக்குமான குடிசைத் தொழில்

வங்காள ஸிவில் சர்விஸைச் சேர்ந்தவர் பாபு விஜய விகாரி முக்கர்ஜி. வங்காளத்தின் குடிசைத் தொழில்களைக் குறித்து அவர் ஒரு சிறு புத்தகத்தை வெளியிட்டிருக்கிறார். கல்கத்தாப் பல்கலைக்கழகத்தின் வீரேஸ்வர மித்திரர் தங்கப் பதக்கத்தை அப்பிரசுரம் பெற்றிருக்கிறது. அதில் பாபு விஜய விகாரி தெரிவித்திருக்கும் முடிவுகள் ஸ்திரமில்லாதவை. ஆனால், அவர் எடுத்துக்காட்டியிருக்கும் உண்மைகள், நாட்டின் நலனை விரும்புகிறவர்கள் ஒவ்வொருவரும் கவனிக்கத்தக்கவையாகும். வங்காளத்தின் விஷயத்தில் எது உண்மையோ அதுதான் பெரும்பாலும் இந்தியாவின் விஷயத்திலும் உண்மை என்பதைக் கொண்டு இவை அதிக முக்கியமானவையாகின்றன.

"1921-ஆம் வருடத்தில் ஜனத்தொகைக் கணக்குப்படி 1,000 பேருக்கு 68 பேர்தான் வங்காளத்தில் பட்டணங்களில் வசிக்கிறார்கள். கல்கத்தா, ஹௌரா, 24 பர்காணுக்கள், ஹூக்ளி போன்ற நகரப் பகுதிகளைத்தவிர 30,000 மக்களுக்கு அதிகமாகக்கொண்ட பட்டணங்கள் மூன்று இருக்கின்றன...... ஆகையால், வங்காளத்தின் பிரிட்டிஷ் பிரதேசத்தில் வசிக்கும் 4,66,95,530 பேரில் 13 லட்சம்பேரே பட்டணங்களில் வசிக்கிறார்கள். மற்றவர்களெல்லோரும் அநேகமாகக் கிராமங்களிலேயே வசிக்கிறார்கள் என்று கூறுவதே நியாயம்."

ஆகையால், இயற்கையாகவே அவர் வருமாறு கூறுகிறார்:

"கொஞ்சம் இருந்தாலும் போதும் என்றுள்ள ஒரு நாட்டில், அதன் மக்கள் அத்தியாவசியமான வசதிகளைப் போதுமான அளவுக்குப் பெறும்படி செய்து கிராமங்களை அபிவிருத்தி செய்வதும், அரசியலமைப்பின் ராஜீயத்தில் ஜீவனுள்ள அம்சங்களாக அவற்றை ஒழுங்குபடுத்துவதுமே நாட்டின் முன்னால் இருந்துவரும் கடினமான பிரச்னையாகும். ஸர் ஹொரேஸ் பிளங்கெட், அயர்லாந்தைப் பற்றிக் கூறுகையில், 'நமக்குச் சுயாட்சிக்கு முன்னால் சொந்தமான வீடு வேண்டும்' என்று சொன்னார். அயர்லாந்துக்கு அவர் சொன்னதே வங்காளத்திற்கும் பொருந்தும். கிராமங்களில் இல்லங்களைத் திருத்தியமைப்பதற்கான முயற்சியைச் செய்யவேண்டியது மிக முக்கியமான, உயர்ந்த அவசியம். இதை நன்றாக ஒருவர் புரிந்துகொள்ளுவதற்கு, அரசாங்க முறையின் பலனையும் அதில் ஏற்படவேண்டிய மாறுதலையும் அலட்சியமாகக் கருதிவிடுவதற்கில்லை. இந்த இல்லங்களை மாற்றியமைக்கும் திட்டத்தில் குடிசைத் தொழில் வெறும் உதவியாக மாத்திரம் இருந்துவிடாமல் முற்றிலும் அத்தியாவசியமானதாகவும் இருக்கும்."

இந்தியா, ஒரு காலத்தில், அதுவும் கொஞ்ச காலத்திற்கு முன்பு, ஆனந்தமாகவும் சுபிட்சமாகவும் வாழ்ந்து வந்திருக்கிறது என்பதை ஆசிரியர் கஷ்டமின்றி எடுத்துக்காட்டியிருக்கிறார். எல்பின்ஸ்டன், "கிரேக்கர்கள் வந்து பார்த்த இந்தியாவின்

பகுதிகளைக் குறித்து அவர்கள் விவரித்திருப்பவைகளையெல்லாம் கவனித்தால், இந்நாட்டில் மக்கள் ஏராளமாக வாழ்ந்திருக்கிருர்கள், மிக உயர்ந்த அளவுக்குச் சுபிட்சத்தையும் அனுபவித்து வந்திருக்கிருர்கள் என்ற கருத்தே உண்டாகிறது" என்று கூறியிருப்பதையும் இவர் குறிப்பிடுகிருர். இந்தச் சுபிட்சமெல்லாம் முக்கியமாக நூற்பதும் நெய்வதுமாகிய ஒரே ஒரு கைத்தொழிலினுல்தான் என்பதைத் காட்டுவதிலும் அவருக்குச் சிறிதும் கஷ்டமில்லை. ஆனுல், இன்ருே கையினுல் நூற்பதற்குப் புத்துயிரை அளிக்கவேண்டியிருக்கிறது. நெய்வது, இப்பொழுதும் ஒரு முக்கியமான குடிசைத் தொழிலாக இருந்தபோதிலும், அதே விதமான கவனம் அதின் மீது செலுத்தத் தேவையில்லை.

இன்று குறிப்பிடத்தக்கதான எந்த வித சுபிட்ச வாழ்வும் இல்லை. மக்களில் முக்கால்வாசிப் பேர், விவசாயம் ஒன்றையே நம்பி வாழவேண்டியவர்களாக இருக்கிருர்கள். விவசாயம் செய்யக்கூடிய நிலத்தில், டாக்காவிலும் பரித்பூரிலும் 92 சதவிகித நிலத்திலும், மிதுனபுரியில் 74 சத விகித நிலத்திலும் இப்பொழுது சாகுபடிசெய்து வருகிருர்கள். இந்த மூன்று ஜில்லாக்களிலும் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும் மக்களில் ஒருவருக்கு முறையாகச் சராசரி 0.72, 0.73, 0.84 ஏக்கர் வீதம் சாகுபடியாகிறது. இவ்விதம் அதிகப்படியான நிலத்தைச் சாகுபடி செய்வது என்பதற்கு இடமே இல்லை. விவசாயத்தையே நம்பி வாழவேண்டியிருக்கும் எந்த விவசாயியும், ஓர் ஏக்கருக்கும் குறைவான நிலத்தைக் கொண்டு வாழ்ந்துவிடுவது சாத்தியமில்லை. கொடுக்கப்பட்டிருக்கும் சராசரிக் கணக்கைவிட உண்மையான சராசரிக் கணக்கு மிகவும் குறைந்ததாகும். ஏனெனில், இக்கணக்கில் பணக்கார ஜமீன்தார்களுக்குச் சொந்தமான பெரும் நிலப்பரப்புகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. 'ஆகையால், இந்நாட்டின் மக்களில் பாதிப் பேருக்குத் தினம் இரண்டு வேளை சாப்பிடுவது என்பதே தெரியாது என்று அரசாங்கத்தின் மிகப்பெரிய அதிகாரி ஒருவரே சொல்லவேண்டியதாகயிருப்பதில் ஆச்சரியம் எதுவுமில்லை.'

நிலைமை எவ்வளவு மோசமானதாக இருக்கிறது என்பதை 1877-78-ஆம் ஆண்டிலேயே பஞ்சக் கமிஷன் பின்வருமாறு எடுத்துக்காட்டியிருக்கிறது: 'இந்தியாவின் மக்களில் பெரும்பாலானவர்கள் விவசாயத்தையே நேரடியாக நம்பி வாழவேண்டியவர்களாக இருக்கிருர்கள். ஜனத்தொகையினரில் பெரும் பகுதியினர் ஆதரவைப் பெறக்கூடிய வேறு தொழில் எதுவும் கிடையாது. இந்தியப் பஞ்சங்களின் நாசகரமான விளைவுகளுக்கும், பலன் அளிக்கக்கூடிய முறையில் எந்த விதமான நிவாரணமும் அளிக்க முடியாமல் இருப்பதற்கும் முக்கியமான காரணம் மேலே சொன்ன உண்மையில்தான் இருக்கிறது. வழக்கமான மழை இல்லாதுபோனுல், தங்களால் வாங்குவதற்கு இயன்ற

விலையில் சாதாரண உணவு தானியங்களைத் தொழிலாளர் வகுப்பினர் முழுவதுமே வாங்க முடியாது போவதோடு அந்த உணவை வாங்குவதற்கான உபாயத்தைச் சம்பாதிப்பதற்கு வேண்டிய ஒரே வேலையையும் அவர்கள் இழந்து விட்டவர்களாகிவிடுகின்றனர்.' 'இதற்குள்ள பூரணமான பரிகாரம், பருவ மழையில்லாது போனாலும், அதனால் பாதகமடைந்துவிடாத, விவசாயமல்லாத' வேறு கைத்தொழில்களை விருத்தி செய்வதிலேயே இருக்கிறது' என்றும் அக்கமிஷன் உறுப்பினர்கள் கூறுகின்றனர்.

விவசாயத்தில் ஈடுபட்டிருப்பவர்களில் பெரும்பாலோருக்கு வருடத்தில் நான்கு மாதங்களுக்கு மாத்திரமே வேலை இருக்கிறது என்றும் அப்பிரசுரத்தை எழுதியிருப்பவர் எடுத்துக் காட்டுகிறார். 'குமாஸ்தாக்கள், உத்தியோகஸ்தர்கள், வக்கீல்கள், டாக்டர்கள், ராஜீயவாதிகள், உபாத்தியாயர்கள், ஆங்கிலம் படித்தவர்கள் தாங்கள் என்று நம்பிக் கொண்டிருப்பவர்கள் ஆகிய எல்லோருமே மொத்த ஜனத்தொகையில் ஒரு சதவிகிதத்தினரே இருக்கிறார்கள்' என்கிறார். இதை எழுதியிருப்பவர் தாம் கூறியிருக்கும் முடிவுகளில் பலவீனமாக இருக்கிறார் என்று குறிப்பிட்டேன். சாத்தியமான எல்லாக் குடிசைத் தொழில்களையும் அவர் சேர்த்திருப்பதில்தான் அந்தப் பலவீனம் இருக்கிறது என்பது என் கருத்து. சொல்லியிருக்கும் அளவில் அது நல்லதுதான். ஆனால், அவசரமாகப் பரிகாரம் தேடியாக வேண்டியிருக்கும் இப்பிரச்னையை அது தீர்த்து விடவில்லை. எல்லாக் கைத்தொழில்களையும் சேர்த்துப் பொருட்காட்சி போல் காட்டினால், மக்களில் பெரும்பான்மையோருக்கும் கிராமங்களிலிருக்கும் தொழிலாளருக்கும் திகைப்பை உண்டாக்குவதாகவே அது இருக்கும். எல்லோருக்கும் பொருந்துவதான ஒரு கைத்தொழில் அவர்களுக்கு வேண்டும். ஒவ்வொன்றாக ஆராய்ந்து பார்த்து, பொருத்தமில்லாததையெல்லாம் ஒதுக்கிக் கொண்டே போனால், கோடிக்கணக்கான மக்களுக்கு ஏற்றதான ஒரே கைத்லொழில் நூற்பதுதான். அதைத் தவிர வேறு எதுவுமில்லை என்ற எதிர்க்க முடியாத முடிவிற்குத்தான் வர வேண்டியிருக்கிறது. மற்ற கைத்தொழில்கள் அவசியமில்லாதவை, பயனில்லாதவை என்பது அதன் பொருளல்ல. உண்மையில் தனிப்பட்டவரைப் பொறுத்தவ்ரையில் நூற்பதைவிட வேறு எந்தத் தொழிலும் லாபகரமான, கவர்ச்சிகரமான தொழில் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், எத்தனை பேர் அத்தொழிலில் ஈடுபடமுடியும்? கோடிக்கணக்கான கிராம மக்களுக்கு அதனால் ஏதாவது பயனுண்டா? ஆனால், கிராம மக்கள் தங்கள் குடும்பங்களைச் சீர்திருத்திக்கொண்டு தங்கள் மூதாதைகள் வாழ்ந்த முறையில் இவர்கள் திரும்பவும் வாழ ஆரம்பித்தால், தங்களுக்கு வேலையில்லாமல் இருக்கும் நேரத்தையெல்லாம் பயன்படுத்திக் கொள்ள ஆரம்பித்துவிட்டால், மற்றவைகளெல்லாம், மற்றக் கைத்தொழில்களெல்லாம் தாமே புத்துயிர் பெற்றுவிடும்; பட்டினி கிடக்

கிறவர்களுக்கு முன்னால் பல வகையான சமைக்காத உணவுகளை யெல்லாம் வைத்து, அவர்களுக்கு இஷ்டமானதை அவர்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளுவார்கள் என்று எதிர்பார்ப்பதில் பய னில்லை. அவைகளை என்ன செய்வது என்பதே அவர்களுக்குத் தெரியாது. அதிகக் கவர்ச்சியானதாக இருப்பதை அடைவதற் குப் பறந்தோடி அம்முயற்சியில் அவர்கள் அழிந்தாலும் அழியக் கூடும். பஞ்சத்தால் வாடும் மக்களுக்கு உணவைப் பங்கிட்டுக் கொடுத்தபோது கொல்லப்பட்டு விடுவேனோ என்ற அபாயங் கூட ஒரு சமயம் என் வாழ்க்கையில் ஏற்பட்டுவிட்டது எனக்கு நினைவிருக்கிறது. வினியோகிக்கும்படி என்னிடம் கொடுக்கப்பட் டிருந்ததை நான் வினியோகிப்பதற்கு முன்னால், என்னையும் அந்த உணவையும் சுற்றி அடைப்பு வைத்துப் பாதுகாத்துக்கொள்ள வேண்டியிருந்தது. ஒரே ஒரு கைத்தொழிலாக இருந்தால்தான் அதை எல்லோர் முன்பும் கொண்டுவர முடியும் என்பதை நாம் அறியவேண்டிய சமயத்தில், மக்கள் செய்வதற்குத் தகுந்தது என்ற பாகுபாடு செய்யப்படாத தொழில்களின் தினுசுகள் நம்மிடம் அதிகமாக இருப்பதால்தான் நாம் முன்னுக்குப் போக முடியவில்லை. அந்த ஒரு தொழிலை எல்லோருமே ஏற்றுக்கொண்டு செய்யாது பேகலாம். வேறு தொழிலைச் செய்யவேண்டும் என்று விரும்புகிறவர்கள், செய்ய முடிந்தவர்கள் அதைத் தாராளமாகச் செய்யட்டும். ஆனால், தேசீய வசதிகள் முழுவதையும் கையினால் நூற்பதாகிய ஒரே தொழிலில் ஒருமுக மாக ஈடுபடுத்தவேண்டும். எல்லாருமே இந்த வேலையை இப்பொழுதே மேற்கொள்ளமுடியும். இதைத் தவிர வேறு எந்தத் தொழிலையும் மிகப் பெரும்பான்மையோர் செய்ய முடியாது. இவ்விதம் நாட்டின் கவனம் முழுவதும் இதில் உறுதிப்படுத்தப்பட்டுவிடுமானால், கதர் விற்பனைக்கு நாம் இடம் தேடிக்கொண்டிருக்கவேண்டி வராது. கதரைப் பரவச்செய்வதில் இன்று செலவாகிற சக்தியையும் பணத்தையும், நாளை அதன் அதிக உற்பத்திக்கும் அபிவிருத்திக்கும் செலவுசெய்யலாம். தேச மக்களிடையே இருந்துவரும் சிரத்தையின்மைதான் கதரினால் விளையக்கூடிய நன்மையை நாம் காணமுடியாதபடி நம் கண்களை மறைக்கிறது. இவ்விதம் மகத்தான தேசீய முயற்சிக்குள்ள நமது சக்தியையும் அது முடமாக்கிவிடுகிறது. புத்துயிரளிக்க வேண்டிய கைத்தொழில்களில் கையினால் நூற்பதும் ஒன்று என்று சொல்லுவது மாத்திரம் போதாது. கிராமக் குடும்ப வாழ்க்கையை நாம் திரும்பவும் சீர்படுத்தவேண்டுமானால், நமது முழுக் கவனமும் ஈடுபட்டாகவேண்டிய கேந்திரமான கைத் தொழில் இது என்று வற்புறுத்த வேண்டியது அவசியம்.

—'எங் இந்தியா' 30—9—1926

# 34

# எல்லோரும் இதில் ஈடுபடலாம்

மிக முக்கியமானதான ஏப்ரல் மாதம் சீக்கிரத்தில் வரப்போகிறது. அதோடு புதிய இந்திய சமுதாயம் பிறந்தது, அத்துடன் சேர்ந்து லட்சாதி லட்சம் மக்கள் என்றும் கண்டறியாத வகையில் குதூகலமாக அதைக் கொண்டாடியது, தேச மக்கள் ஒரே மனத்தினராய் ஒன்றுபட்டுச் செயலில் ஈடுபடுவதானால், மக்கள் என்ன செய்யமுடியும் என்பதை அது காட்டியது போன்ற நினைவுகளெல்லாம் நமக்கு வருகின்றன. அதோடு அகம்பாவம் கொண்ட, பழி வாங்கும் எண்ணமுள்ள, இரக்கமற்ற ஏகாதிபத்தியம், தன்னைப் பாதுகாத்துக் கொள்ளுவதற்காக என்ன செய்யும் என்பதையும் அந்த மாதம் நமக்குக் காட்டியிருக்கிறது. நாட்டு மக்களின் வாழ்வில் ஏப்ரல் 6-ஆம் தேதியும் 13-ஆம் தேதியும் என்றுமே மறந்துவிடக் கூடாத நாட்களாகும். அது முதல் நம் நாட்டு மக்கள் தீமைக்குப் பதில் தீமையைச் செய்துவிடாமல் இருக்கப் பாடுபட்டு வருகின்றனர்; பழிக்குப்பழி வாங்காமல் இருக்கப் பாடுபட்டு வருகிறார்கள். ஆனால், ஜாலியன்வாலாவில் கலந்தோடிய இரத்த அருவியைத்* தாங்கள் தூய்மையடையப் பயன்படுத்திக்கொள்ளவும் முயன்று வருகின்றனர். ராட்டை, கதர், தீண்டாமை ஒழிப்பு, பலதரப்பட்ட சாதியினரும் மதத்தினரும் ஒன்றுபடுதல் ஆகியவைகளின் மூலம் தங்களுடைய அகிம்சா உணர்ச்சியை எடுத்துக்காட்டவும் நாட்டு

---

* 1919-இல் அமிர்தசரஸ் நகரில் ஜாலியன்வாலாபாக் என்ற தோட்டத்தில் ஒரு பெருங்கூட்டத்தின் மீது பிரிட்டிஷ் படைகளின் தளபதி ஜெனரல் டயர் சுட்டு, அநேகர் மாண்ட கோரத்தையே இங்கே மகாத்மா குறிப்பிடுகிறார். ஜாலியன்வாலாபாக் தோட்டம் நாற்புறமும் மதில்களால் சூழ்ந்தது. அதற்குள் போகவும் வரவும் ஒரு சிறு வழிதான் உண்டு. தலைவர்களைச் சிறையிலிட்டதைக் கண்டிப்பதற்காக 1919 ஏப்ரல் 13-ஆம் தேதி மாலை அங்கு பெரும் பொதுக்கூட்டம் நடந்தது. அக் கூட்டம் நடக்காதபடி தடுக்க ஜெனரல் டயர் எந்த நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால், ஆயுத மோட்டார்களுடனும் துருப்புகளுடனும் அத்தோட்டத்திற்குள் சென்று, அங்கே கூடியிருந்த மக்களுக்கு எந்தவித எச்சரிக்கையும் செய்யாமல் சுடும்படி தனது துருப்புகளுக்கு உத்தரவிட்டான். இச்சம்பவத்தைப் பற்றி ஸர் வாலன்டைன் சிரால் விவரிக்கையில் கூறியதாவது: "..........உள்ளே 6,000 பேர் கூடியிருந்ததாக டயர் கூறுகிறார்; மற்றவர்கள் பத்தாயிரம் பேர் கூடியிருந்ததாகக் கூறுகின்றனர். அம்மக்கள் நிராயுதபாணிகளாக, எவ்விதப் பாதுகாப்புமின்றி இருந்தனர்..........1,650 வேட்டுகள் சுடப்பட்டன. அப்பெரும் மனிதக் கூட்டம் எலிப் பொறியில் சிக்கியதைப் போலச் சிக்கித் தவித்தது. எப்படியாவது தப்பி ஓட முயன்றனர். தோட்டா குண்டு படாமலிருக்கத் தரையோடு படுத்துக்கொண்டனர்...........பத்து நிமிடங்களில் கைவசமிருந்த தோட்டாக்களையெல்லாம் தீர்த்துவிட்டு வந்த வழியாகவே டயர் துருப்புகளுடன் போய்விட்டான். பின்னால் அரசாங்கத்தின் வாயிலிருந்து வருவிக்கப்பட்ட கணக்குப்படி அவன் 379 பேரைக் கொன்றான். 200 பேருக்கு மேல் படுகாயப்பட்டுக் கிடந்தார்கள். இவர்களைப் பற்றிக் கொஞ்சம் சிந்திப்பதுகூட தமது வேலை என்று தாம் கருதவில்லை என்றும் டயர் கூறினான்."

மக்கள் பாடுபட்டு வருகிறார்கள். என்றாலும், நாட்டு மக்கள் எல்லோரும் பங்கெடுத்துக்கொள்ளக் கூடிய ஒரே காரியம் கதர் தான் என்பது தெளிவானது. அகிம்சா வழியில் நாம் நடந்து கொள்ள வேண்டுமாயின், ஆக்கத்திற்கான வகையிலும், பொறுமையோடும், நம்மிடமும் நம் முறைகளிலும் கொள்ளும் தணிக்க இயலாத நம்பிக்கையோடும் நாம் செயலில் ஈடுபட வேண்டும். ஒற்றுமை, பலம், இரும்பு போன்ற உறுதி யான கட்டுதிட்டம் ஆகியவைகளை நாம் உருவாக்கிக்கொள்ள வேண்டும். என்னதான் பலமான எதிர்ப்புக்கள் இருந்தாலும் நம்முடைய கருத்துக்களை நடைமுறையில் செய்து காட்ட நாம் கற்றுக்கொள்ளவேண்டும். பிரிட்டிஷ் வர்த்தகம் நம்மீது பலவந்த மாகத் திணிக்கப்பட்டிருப்பதால்தான் பிரிட்டிஷ் ஆட்சி நம்மீது சுமத்தப்பட்டிருக்கிறது என்பதை நாம் அறிந்துகொள்ள வேண் டும். பிரிட்டிஷ் வர்த்தகத்தைப் புனிதப்படுத்திவிட நம்மால் முடிந்தால், பிரிட்டிஷ் சம்பந்தத்தையும் புனிதப்படுத்திவிட முடி யும். உலகத்துடன் வைத்திருப்பதைப் போன்றே பிரிட்டிஷா ருடன் நாம் வைத்துக்கொண்டிருக்கும் வர்த்தக சம்பந்தமும், நம் நிபந்தனைகளின்படியே இருக்க வேண்டும். ஆகையால், அந்தச் சம்பந்தம், பரஸ்பரம் இரு தரப்பாருக்கும் நன்மை அளிப் பதாகவும், முற்றிலும் விரும்பிச் செய்துகொள்ளுவதாகவும் இருக்கவேண்டும். ஆனால், லங்காஷயர் துணியோ, வேறு கதி யில்லாமல் நாம் சுரண்டப்பட்டு வருகிறோம் என்பதற்குச் சின்னம். கதரோ, தனிப்பட்டவர்களுக்கும் கோஷ்டிகள், இனங்கள், சாதிகளுக்கு மாத்திரமல்ல, நாட்டு மக்கள் எல்லோ ருக்குமே சுய உதவி, தன்னம்பிக்கை, சுதந்திரம் ஆகியவை களுக்கு அடையாளமாகிறது. அரசனும் ஆண்டியும், ஆணும் பெண்ணும், சிறுவரும் சிறுமியரும், ஹிந்துக்களும் முஸ்லிம்களும், கிறிஸ்தவர்கள், பார்ஸிகள், யூதர்கள் ஆகிய எல்லோரும் பங் கெடுத்துக்கொள்ளக்கூடிய இயக்கம் இது. ஆங்கிலேயரும் அமெரிக்கரும் ஜப்பானியரும் இந்தியா நன்மை அடையவேண் டும் என்று விரும்புவார்களானால், சுரண்டும் போக்கை விட்டொ ழித்துவிடுவார்களாயின், அவர்களும் இந்த இயக்கத்தில் பங்கு கொள்ளலாம். இவ்வாறு இது தனிச் சிறப்பு வாய்ந்ததான இயக் கம். சிலருக்கு மாத்திரமோ, பெரும்பாலாருக்கு மாத்திரமோ என் றிராமல் தேசீய வாரத்தின்போது மற்றக் காரியங்கள் அநேகவற் றையும் இன்னும் பல காரியங்களையும் செய்யக்கூடும், ஆனால், கதருக்கு வேண்டிய ஏற்பாடுகளையாவது நாம் செய்வோமாக. அதற்கான வழிகள் இவை:

1. நம்மில் ஒவ்வொருவரும், நம்மால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு கதரை வாங்கலாம்.

2. நம்மால் முடிந்தவரையில் கதரை விற்கலாம்.

3. நம்மால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு நூலை நூற்க லாம்.

4. அகில இந்திய நூற்போர் சங்கத்திற்கு* நம்மால் இயன்றதைக் கொடுப்பதோடு மற்றவர்களிடமிருந்தும் வசூல் செய்யலாம்.

5. கடைசியாக, நமக்கு இஷ்டமும் சந்தர்ப்பமும் இருந்தால், நம்மை முற்றிலும் கதர் ஊழியத்திற்கே அர்ப்பணித்துக் கொண்டுவிடலாம்.

நான் இதை எழுதிக்கொண்டிருக்கும்போது என் மனத்தில் ஒரு கேள்வி எழுகிறது: 'உடனடியாக இப்பொழுது செய்ய வேண்டியதைப் பற்றி என்ன? தங்கள்மீது சாட்டப்பட்டிருக்கும் குற்றம் இன்னது என்பதைப்பற்றி எதுவுமே அறியாமல், விசாரணையும் இல்லாமல், எவ்வளவு காலம் தாங்கள் சிறைவைக்கப் பட்டிருப்பார்கள் என்பதும் தெரியாமல் சிறைக்குள் கிடந்து வாடும் வங்காளப் பாதுகாப்புக் கைதிகளைப் பற்றி என்ன?' என்பதே அக்கேள்வி. ஆயினும், இதற்கு என் பதில் மிகத் தெளிவானது. அவர்கள் விடுதலையடையும்படி செய்வதற்கு இதைவிட உசிதமான வழி வேறு ஏதாவது எனக்குத் தோன்றி

---

* பாட்னாவில் நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் 1925 செப்டம்பர் 22-ஆம் தேதி அகில இந்திய நூற்போர் சங்கம் அமைக்கப் பெற்றது. இந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்திற்கு இரு வாரங்களுக்கு முன்னால் மகாத்மா காந்தி அதன் உறுப்பினருக்கு வெளியிட்டிருந்த கோரிக்கையில், ''எல்லாம் சரியாக நடந்தால், அகில இந்திய நூற்போர் சங்கத்தையும், வரும் அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில் ஆரம்பித்துவிட வேண்டும் என்பது என் நோக்கம். இதன் ஆரம்பத்தில் அக்கறையுள்ள கதர் ஊழியர்களும், முக்கியமான ஆலோசனைகளைக் கூற விரும்புகிறவர்களும், அ. இ. கா. கமிட்டியில் அங்கத்தினர்களாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் பாட்னா கூட்டத்திற்கு வரவேண்டும் என்று விரும்புகிறேன்'' என்று கூறியிருந்தார்.

அக்கூட்டத்தில் அகில இந்திய நூற்போர் சங்கத்தை ஆரம்பித்துக் கீழ்க்கண்ட தீர்மானம் நிறைவேறியது:

''கையினால் நூற்பது, கதர் ஆகியவற்றின் அபிவிருத்திக்காகத் திறமை வாய்ந்தவர்களைக் கொண்ட ஒரு ஸ்தாபனத்தை ஆரம்பிக்க வேண்டிய சமயம் வந்திருப்பதாலும், ராஜீயம், ராஜீய மாறுதல்கள் அல்லது ராஜீய ஸ்தாபனங்கள் ஆகியவைகளால் பாதிக்கப்படாத, நிர்வகிக்கப்படாத நிரந்தரமான ஸ்தாபனத்தை அமைக்க வேண்டிய சமயம் வந்துவிட்டதாலும், அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் சம்மதத்தின் பேரில் அகில இந்திய நூற்போர் சங்கம் என்ற பெயருடன் இச்சங்கம் ஆரம்பிக்கப்படுகிறது. இது காங்கிரஸ் ஸ்தாபனத்தின் ஒரு பகுதியாக இருந்தாலும் இது சுயேச்சையானதாகவும் சுயேச்சையான அதிகாரமுள்ளதாகவும் இருக்கும்.''

உறுப்பினர்கள், உதவியாளர்கள், பொருளுதவி செய்வோர் ஆகியவர்களைக் கொண்டது, இச்சங்கம். இதன் நிர்வாகக் கவுன்ஸிலில் மகாத்மா காந்தி, மௌலானா ஷவுகத் அலி, ஸ்ரீ ராஜேந்திரப் பிரசாத், சதீஷ் சந்திர தாஸ் குப்தா, மகன்லால் காந்தி, யமுனாலால் பஜாஜ் (பொக்கிஷதார்) உறுப்பினர்கள். ஸ்ரீ சுயிப் குரேஷி, ஸ்ரீ சங்கரலால் பாங்கர், ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு ஆகிய மூவரும் காரியதரிசிகள். இச்சங்கத்தின் அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் மாதத்திற்கு 1,000 கெஜம் நூல் நூற்க வேண்டும். அவர்கள் கதரையே அணிவதுடன் ராட்டையைப் பரப்பவும் வேண்டும்.

யிருக்குமாயின், அதை நான் மேற்கொள்ளுவதோடு அலத இன்றே சொல்லியும் இருப்பேன். ஆனல், வேறு எதுவும் எனக்குத் தோன்றவில்லே. இது மிகவும் மெதுவானது என்று தோன்றலாம். ஆனல், இம்முறைதான் நிச்சயமானது, வேக மானது என்பது என்னுடைய பணிவான கருத்து. ஆகையால், கதரில் நம்பிக்கை இல்லாதவர்கள் அல்லது வேறு எதிலும் நம்பிக்கை இல்லாதவர்கள், தேசீய வாரத்தில் தங்களால் முடிந்ததைச் செய்யட்டும். ஓர் உண்மையான போர்வீரன், முடிவாக அடையப்போகும் வெற்றி எப்படி இருக்கப்போகிறது என்பதைக் குறித்துப் போரில் ஈடுபட்டிருக்கும்போது விவாதித்துக்கொண்டிருக்கமாட்டான். ஆனல், போரில் தன்னுடைய பணிவான பங்கை மாத்திரம் சரியானபடி செய்துவிட்டால் எப்படியோ போரில் வென்றுவிட முடியும் என்பதில் நம்பிக்கையுடன் இருப்பான். நம்மில் ஒவ்வொருவரும் அந்த உணர்ச்சியுடனேயே செயலில் ஈடுபட வேண்டும். வரும் காலத்தில் என்ன நடக்கும் என்பதை நாம் அறிந்துகொண்டுவிட இயலாது. ஆனல், நாம் செய்ய வேண்டியதை எப்படிச் சரியாகச் செய்வது என்பதை நாம் ஒவ்வொருவரும் அறிந்துகொள்ள முடியும். ஆகையால், நமக்கு மனம் மாத்திரம் இருக்குமானல், நம்மால் எதைச் செய்ய முடியும் என்று நாம் அறிந்திருக்கிறேமோ அதைச் செய்வோமாக.

—'எங் இந்தியா' –10—2—1927

# 35

# மக்களுக்குக் கௌரவமான உழைப்பு

[உழைப்பின் கௌரவத்தை மக்கள் உணரும்படி ராட்டை செய்கிறது என்றும் மகாத்மா கூறியிருக்கிருர். கோடிக்கணக்கான மக்கள் தங்கள் கைகளே உபயோகிப்பதை விட்டுவிட்டதுதான் மிகப் பெரிய துக்ககரமான விஷயம் என்றும் அவர் சொல்லுகிருர். இந்த அக்கிரமமான நாசத்தை ராட்டை ஒன்றுதான் போக்க முடியும் என்று அவர் கூறுகிருர். இக்கருத்தை இந்நூலில் முன்னல் 93-ஆம் பக்கத்தில் வெளியாகியிருக்கும் கட்டுரையில் காணலாம். கோடிக் கணக்கான மக்களுக்குக் கதர் கௌரவமான உழைப்பைத் தருகிறது என்பதை மகாத்மா எடுத்துக் காட்டும் மற்ருெரு கட்டுரை இங்கே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது]

சிறந்த கதர் ஊழியர் ஒருவர் ஹிந்துஸ்தானியில் ஒரு கடிதம் எழுதியிருக்கிருர். அதைத் தாராளமாக மொழிபெயர்த்தால் அதில் அடங்கிய கருத்து இதுதான்:

"விலையைப் பொறுத்தவரையில், மில் துணியோடு ஒப்பிட்டால் கதர் மலிவானதாக இல்லே. மில் துணியுடன் கதர் போட்டி போடுவதற்குக் கையி

னல் பஞ்சு அரைப்பது, பட்டை போடுவது, நூற்பது ஆகியவைகளுக்கு ஆகும் செலவை நீங்கள் விட்டுவிடவேண்டும். ஆகையால், தாமே நூற்றுக்கொள்ளு கிறவர்களுக்குக் கூட இது லாபகரமானதாக இராது. கதர் சம்பந்தமாக நீங்கள் புதியதொரு பொருளாதாரத்தை உருவாக்கியிருக்கிறீர்கள் என்பது உண்மையே. ஆனல், பொதுவாக மக்கள் அதை உணர்ந்து ஆதரித்தா லன்றிக் கதர் எல்லோரும் வாங்கக்கூடியதாக ஆகமுடியாது. உங்களுடைய புதிய பொருளாதார தத்துவத்தைக் காங்கிரஸ் மந்திரிகளுங்கூட அறிந்து கொள்ளவோ, ஒப்புக்கொள்ளவோ இல்லை. இந்த நிலைமையில் கதர் ஊழி யர்களுக்கும், பொதுவாகக் காங்கிரஸ்காரர்களுக்கும், மந்திரிகளுக்கும்கூட நீங்கள் வழிகாட்ட வேண்டாமா? உங்களுடைய சக ஊழியர்களான நாங்கள் உங்களை அனுமதித்தால், எட்டு மணி நேரம் யோக்கியமாகவும் திறமையாக வும் வேலை செய்யும் நூற்போருக்குத் தினத்திற்கு எட்டு அணுக் கூலியைக் கொடுத்துவிடுவீர்கள். உங்களுடைய நம்பிக்கை அவ்வளவு பலமானதாக இருக்கிறது. உண்மையைச் சொன்னல் உங்களுக்கு இருக்கும் நம்பிக்கை எங்களுக்கு இல்லை.''

மில் துணியோடு கதர் போட்டிபோடவே முடியாது என்பதில் சந்தேகமே இல்லை; அப்படிப் போட்டிபோடவேண் டும் என்று எண்ணியதுமில்லை. கதருக்குரிய தத்துவத்தை மக்கள் அறிந்துகொள்ளாவிட்டால், உணராது போனல், எல்லோரும் உபயோகிப்பதாகக் கதர் என்றும் ஆகாது. அப்பொழுது, பணம் படைத்தவர்களுக்கும் கிறுக்கர்களுக்கும் ஏற்பட்ட பித்த மாகத்தான் கதர் இருக்கமுடியும். இது அப்படித்தான் இருக்கப் போகிறது என்ருல், அகில இந்திய நூற்போர் சங்கம் போன்ற பெரிய ஸ்தாபனத்தின் உழைப்பெல்லாம் இன்னும் அதிக மோச மான ஒன்று என்று இல்லாவிட்டாலும் வீண் என்றுதான் ஏற்படும்.

ஆனல், கதருக்கு அது செய்யவேண்டிய பெரும் பணி ஒன்று இருக்கிறது. கோடிக்கணக்கான மக்களுக்குக் கதர் கௌரவ மான உழைப்பை அளிக்கிறது. இது இல்லாவிட்டால் வருடத் தில் சுமார் நான்கு மாதம் ஒருவேலையும் இல்லாமல் சோம்பலாக இருப்பார்கள். இந்த உழைப்பு அளிக்கும் ஊதியம் ஒருபுற மிருக்க, அவ்வுழைப்பே அதற்குரிய சன்மானமாகும். ஏனெனில், கோடிக்கணக்கான மக்கள் வேலையே இல்லாமல் கட்டாயமான சோம்பலில் வாழ்வதாயிருந்தால் ஆன்மா, உள்ளம், உடல் ஆகிய வைகளிலும் அவர்கள் செத்தே ஆகவேண்டும். கோடிக்கணக் கான ஏழைப் பெண்களின் அந்தஸ்தை ராட்டை தானே உயர்த்தி விடுகிறது. ஆகையால், மில் துணி மக்களுக்கு இனமாகவே கொடுக்கப்படுவதாக இருந்தாலும், அவர்களுடைய உண்மை யான நன்மையை முன்னிட்டு அவர்களுடைய உழைப்பினல் தயாராவதான கதரைத் தவிர மில் துணியை வாங்கிக்கொள்ளுவ தில்லை என்று அவர்கள் மறுத்துவிட வேண்டியது அவசிய மாகிறது.

பணத்தைவிடச் சிறந்தது, வாழ்வு. வயோதிகப் பெற்ருேரால் ஒரு வேலையும் செய்ய முடியாது. நமக்கு இருக்கும் சொற்ப

வருவாய்க்கும் அவர்கள் பாரமாகவே இருப்பார்கள். ஆகையால் அவ்வயோதிகப் பெற்றோரைக் கொன்றுவிடுவதுதான் செலவு குறைய வழி. நமது லோகாயத சௌகரியங்களுக்குக் குழந்தைகள் அவசியமில்லை. பதிலுக்கு எந்தவிதமான லாபமுமின்றி அவர்களுக்காக நாம் செலவு செய்து வளர்க்கவேண்டியிருக்கிறது. ஆகையால், குழந்தைகளைக் கொன்றுவிடுவதுங்கூட செலவு சிக்கனமாவதற்கு வழிதான். ஆனால், பெற்றோரையோ, குழந்தைகளையோ நாம் கொன்றுவிடுவதில்லை, அவர்களைப் பராமரிப்பதற்கு எவ்வளவு செலவானாலும் அவர்களைக் காப்பாற்றிவரவேண்டியதை ஒரு பாக்கியமாகக் கருதுகிறோம். அதே போலவே மற்ற எல்லாத் துணிகளையும் ஒதுக்கிவிட்டுக் கதரை நாம் பாதுகாத்து வரவேண்டும். கதரைப் பற்றி நினைக்கும்போது அதன் விலையைப் பற்றி நாம் எண்ணுவது பழக்கத்தின் காரணமாகத்தான். கதரின் பொருளாதாரத்தைப்பற்றி நாம் கொண்டிருக்கும் எண்ணத்தை மாற்றிக்கொள்ளவேண்டும். தேச மக்களின் நன்மை என்ற கருத்தோடு நாம் ஆராய்வோமானால், கதர் என்றுமே அதிக விலையுள்ளதாகாது என்பதைக் காண்போம். அந்திக்காலக் கட்டத்தின்போது குடும்பப் பொருளாதாரத்தில் கொஞ்சம் கஷ்டங்கள் ஏற்பட்டாலும் நாம் சகித்துக்கொள்ள வேண்டும். இப்பொழுது நாம் எவ்வளவோ சங்கடங்களுக்கிடையே இருந்து வருகிறோம். லங்காஷயரின் நன்மைக்காகப் பருத்தி உற்பத்தி, குவியல் முறையின் கீழ் கொண்டு வரப்பட்டிருக்கிறது; விரும்பினால், இந்திய மில்களின் நன்மைக்காக என்றும் சொல்லிக்கொள்ளலாம். வெளிநாடுகளில் இருக்கும் விலையைக்கொண்டு இங்கே பருத்திக்கு விலை நிர்ணயிக்கப்படுகிறது. கதரின் பொருளாதாரத்திற்குத் தேவையான வகையில் பருத்தி உற்பத்தி வினியோகிக்கப்படுவதாயிருந்தால், பருத்தி விலை கண்டபடியெல்லாம் ஏறி இறங்கிக்கொண்டிருக்காது. அதன் பலனாக எப்படியும் விலை இப்பொழுது இருப்பதைவிடக் குறைவாகவே இருக்கும். மக்கள், அரசாங்கம் அளிக்கும் பாதுகாப்பின் மூலமோ, தாமே மேற்கொள்ளும் முயற்சியினாலோ, கதர் ஒன்றையே உபயோகிப்பது என்ற பழக்கத்தை வளர்த்துக்கொண்டு விடுவார்களாயின், சைவ உணவையே சாப்பிட்டு வரும் கோடிக்கணக்கானவர்கள் எவ்விதம் கறி காயின் விலையை மாமிச உணவின் விலையோடு ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டிருப்பதில்லையோ, அதேபோலக் கதரின் விலையைப் பற்றியே சிந்திக்க மாட்டார்கள். சைவ உணவினர்கள், பட்டினி கிடந்தாலும் கிடப்பார்களேயன்றி மாமிச உணவு இனாமாகக் கிடைக்கிறது என்பதற்காக அதைச் சாப்பிட்டுவிடமாட்டார்கள்.

—'ஹரிஜன்'–10—12—1938

# 36

# கிராமங்களுக்குப் புத்துயிர் அளிக்க

சட்ட மறுப்பு இயக்கம் ஆரம்பமாகக்கூடும் என்ற பேச்சு இப்பொழுது இருந்து வருவதால், சொன்னதையே நான் திரும்பிச் சொல்லவேண்டி நேர்ந்தாலுங்கூட, ராட்டைக்கும், சுயராஜ்யத்திற்கும், அகிம்சைக்கும் ஜீவத் தொடர்பு இருக்கிறது என்று நான் கூறிவரும் வாதத்தை, ஒரே கட்டுரையில் சுருக்கமாக நான் மீண்டும் கூறவேண்டும் என்று ஒருவர் கூறுகிறார். நான் மகிழ்ச்சியுடன் அம்முயற்சியைச் செய்கிறேன்.

ராட்டை, பாமர மக்களின் நம்பிக்கையை எடுத்துக்காட்டுவதாகவே நான் நினைக்கிறேன். மக்கள், ராட்டையை இழந்துவிட்டதோடு தங்கள் சுதந்திரத்தையும் இழந்துவிட்டார்கள். கிராமங்களின் விவசாயத்திற்குத் துணையான வருமானத்தை அளிப்பதாக ராட்டை இருந்ததோடு பயிர்த்தொழிலுக்குப் பெருமையையும் கொடுத்தது. விதவைகளுக்கு ஆறுதல் அளிப்பதாகவும் நண்பனாகவும் ராட்டை இருந்தது. கிராமவாசிகள் சோம்பலாக இருக்காதபடியும் அது செய்துவந்தது. ஏனெனில், பருத்தி அரைத்தல், பட்டை போடுதல், பாவு போடுதல், சாயம் போடுவது, நெய்வது போன்ற முன்னால் நடப்பதும் பின்னால் நடப்பதுமான பல கைத்தொழில்களையும் உடன் கொண்டது, ராட்டை. இத்தொழில்களோ, கிராமக் கொல்லர்களுக்கும் தச்சர்களுக்கும் நன்றாக வேலை கொடுத்து வந்தன. ஏழு லட்சம் கிராமங்களும் சுயதேவைப் பூர்த்தியுள்ளவைகளாக இருக்கவும் ராட்டை உதவியது. ராட்டை போய்விட்டவுடன் எண்ணெய்ச் செக்கு போன்ற மற்றக் கிராமத் தொழில்களும் போய்விட்டன, இவற்றிற்குப் பதிலாக வேறு எந்தத் தொழில்களும் வந்து புகுந்துவிடவில்லை. ஆகையால், கிராமங்களிலிருந்த பலதரப்பட்ட தொழில்களும், அவைகளின் ஆக்கத்திற்கான ஆற்றலும், இத்தொழில்கள் அளித்து வந்த சொற்பச் செல்வமும் கிராமங்களுக்கு இல்லாமற் போய்விட்டன.

கிராமக் கைத்தொழில்கள் அழிந்துபோன வேறு நாடுகளும் இருக்கின்றன. ஆனால், அவற்றின் உதாரணம் நமக்குப் பொருந்தாது. ஏனெனில், அந்நாடுகளில் அழிந்த கிராமக் கைத்தொழில்களுக்கு ஈடு செய்வதாக உண்டான சௌகரியங்கள் எவையும் இந்தியா விஷயத்தில் இல்லை. தொழில் வளர்ச்சி பெற்ற மேற்கத்திய நாடுகள், மற்ற நாடுகளைச் சுரண்டி வருகின்றன. இந்தியாவும் அவ்விதம் சுரண்டப்பட்டு வரும் நாடு. ஆகையால், கிராமங்கள் முன்னால் இருந்த நல்ல நிலைமைக்குத் திரும்ப வரவேண்டுமானால், அதற்குத் தானே தோன்றுவதான இயற்கை

யான காரியம், ராட்டையும் அது சம்பந்தமானவைகளும் மீண்டும் புத்துயிர் பெறவேண்டும் என்பதே.

அறிவும் தேசாபிமானமுமுள்ள தன்னலமற்ற இந்தியர் பட்டாளமொன்று ஒரே மனத்தினராய்க் கிராமங்களில் வேலை செய்து, ராட்டையின் உபதேசத்தைப் பரப்பி, இன்று ஒளியற்றிருக்கும் கிராமவாசிகளின் கண்களில் ஒளியையும் நம்பிக்கை ஒளிக்கிரணத்தையும் உண்டாக்கினாலன்றி ராட்டைக்குப் புத்துயிர் அளித்துவிடுவது என்பது முடியாது. சரியான முறையில் கூட்டுறவும் முதியோர் கல்வியும் ஏற்படுவதற்கான மகத்தான முயற்சி இது. ராட்டை எவ்விதம் அமைதியான, ஆனால் நிச்சயமான ஜீவனளிக்கும் புரட்சியை உண்டாக்குகிறதோ அதே போல இதுவும் அமைதியான, ஆனால் நிச்சயமான புரட்சியை உண்டாக்குகிறது.

நான், இங்கே கூறும் விவாதம் சரியானது என்பதை என் இருபது வருட ராட்டை அனுபவம் உறுதிப்படுத்துகிறது. ஏழை முஸ்லிம்களுக்கும் ஹிந்துக்களுக்கும் அநேகமாகச் சமமான முறையிலேயே ராட்டை உதவி செய்திருக்கிறது. எந்தவிதமான ஆடம்பரமோ, பறைசாற்றலோ இல்லாமல் லட்சக்கணக்கான இக் கிராமக் கைத்தொழிலாளர்களின் மடிக்குச் சுமார் ஐந்து கோடி ரூபாய் வரையில் போய்ச் சேர்ந்திருக்கிறது.

ஆகையால், எல்லா மதங்களையும் சேர்ந்த பாமர மக்களைப் பொறுத்தவரையில் ராட்டை நமக்குச் சுயராஜ்யத்தைக் கொடுத்தே தீரும் என்று நான் எவ்விதத் தயக்கமுமின்றிக் கூறுவேன். கிராமங்கள், அவற்றிற்குரிய நியாயமான இடத்தை அடைம்யுபடி ராட்டை செய்கிறது; உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற பாகுபாட்டையும் அது போக்கிவிடுகிறது.

ஆனால், நாட்டு மக்களுக்கு அகிம்சையில் நம்பிக்கை இருந்தாலன்றி, ராட்டை சுயராஜ்யத்தைக் கொண்டு வராது; உண்மையில் அது அசையவும் அசையாது. அது போதுமானபடி இருந்து வரவில்லை. சுதந்திர ஆர்வம் கொண்ட தேச பக்தர்கள், ராட்டையை அலட்சியமாகக் கருதலாம். சரித்திரப் புத்தகங்களில் அது இருக்கிறதா எனத் தேடிப்பயனில்லை. போராடவேண்டும், அந்நிய ஆட்சியாளரை விரட்டிவிட வேண்டும் என்ற ஆவேசம், சுதந்திர வேட்கையுள்ளவர்களுக்கு இருக்கிறது. எல்லாக் குற்றங்களும் அந்த அந்நியரிடம் இருப்பதாகவே கூறுகிறார்கள்; தங்களிடமிருக்கும் குற்றங்களைக் காண்பதில்லை. இரத்தத்தைக் கடல் போல் சிந்தியே சுதந்திரத்தை அடைந்திருக்கும் நாடுகளின் உதாரணத்தையும் அவர்கள் குறிப்பிடுகின்றனர். ஹிம்சை என்பதே இல்லாததான ராட்டை, கொஞ்சமும் உப்புச் சப்பே இல்லாத காரியமாக அவர்களுக்குத் தோன்றுகிறது.

சுயராஜ்யத்தை அடைவதற்கு ஒரே நிச்சயமான சாதனம் அகிம்சைதான் என்றும், அதே அகிம்சையின் சின்னமே ராட்டை

என்றும் 1919-ஆம் ஆண்டில் இந்தியாவின் விடுதலை ஆர்வம் கொண்டவர்களுக்கு அறிமுகம் செய்துவைக்கப்பட்டது. 1921-இல் ராட்டை, தேசீயக் கொடியில் தனக்குரிய பெருமையான இடத்தைப் பெற்றது. ஆனல், அகிம்சை இந்திய மக்களின் உள்ளத்தில் ஆழப் பதிந்துவிடவில்லை. எனவே, ராட்டையும் அதற்குரிய ஸ்தானத்தை அடையவில்லை. பெரும்பாலான காங்கிரஸ்காரர்கள், அகிம்சையில் ஜீவ நம்பிக்கையை வளர்த்துக் கொண்டாலன்றி ராட்டை அதற்குரிய ஸ்தானத்தை என்றும் அடையாது. இப்படிப்பட்ட நம்பிக்கையை அவர்கள் அடைந்து விடும்போது ராட்டையைத் தவிர அகிம்சைக்கு வேறு எந்தச் சின்னமும் இல்லை. அது எல்லா இடங்களிலும் பரவினலன்றி அகிம்சையைக் கண்கூடாகக் காட்டக்கூடியது வேறு எதுவுமில்லை என்பதை, வேறு எந்தவித விவாதத்திற்கும் அவசியமில்லாமலேயே, அவர்களே கண்டுகொண்டு விடுவார்கள். அகிம்சையில்லாமல், அகிம்சையோடுகூடிய சட்ட மறுப்பு இருக்க முடியாது என்பது தெரிந்த விஷயம். என்னுடைய வாதம் போலியானதாக இருக்கலாம்; நான் காட்டும் ஆதாரம் தவறானதாக இருக்கலாம். ஆனல், நான் கொண்டிருக்கும் கருத்தின்படி ஒரு விஷயத்தைப் பகிரங்கமாகக் கூறிவிடுகிறேன். நான் கூறியிருக்கும் நிபந்தனைகள் நிறைவேற்றப்பட்டாலன்றிச் சட்ட மறுப்பை நான் சும்மா பிரகடனம் செய்துவிட முடியாது.

சேவா கிராமம், 9—4—40 —'ஹரிஜன்'-13—4—1940

# 37

# உலகத்தையே காக்கும்

"அமெரிக்காவுக்கு ராட்டை செய்யக்கூடிய உபதேசம் ஏதாவது உண்டா? அணுகுண்டுக்கு மாற்றான ஆயுதமாக அது இருக்கமுடியுமா?" என்று அமெரிக்க 'நியூயார்க் போஸ்டு' பத்திரிகையைச் சேர்ந்த ஸ்ரீ ஆண்டுரூ பிரீமன் காந்திஜியைக் கேட்டார்.

அதற்குக் காந்திஜி கூறியதாவது: "அமெரிக்காவுக்கும் உலகம் முழுமைக்குமே அது செய்யக்கூடிய உபதேசம் ஒன்றுண்டு என்றே எண்ணுகிறேன். ராட்டையை இந்தியா தனதாக்கிக்கொண்டுவிட்டது என்பதை இந்நாடு உலகத்திற்கு எடுத்துக்காட்டும் வரையில் ராட்டை உலகிற்கு உபதேசம் செய்வதாக முடியாது. இந்தியா இன்னும் ராட்டையைப் பூரணமாகத் தனதாக்கிக்கொண்டு விடவில்லை. இதில் குற்றம் ராட்டையினுடையதல்ல. இந்தியாவும் உலகமும் காக்கப்படுவது ராட்டையில்தான் இருக்கிறது என்பதில் எனக்குக் கொஞ்சமும் சந்தேகம் கிடையாது. யந்திரத்திற்கு இந்தியா

அடிமையாகிவிடுமானல், பிறகு உலகத்தைக் கடவுள்தான் காக்க வேண்டும் என்று சொல்லுவேன்.

"இந்தியா செய்ய வேண்டிய மிகவும் பெருமை வாய்ந்த பணி ஒன்று இருக்கிறது. உலகில் நட்பையும் சமாதானத்தையும் உண்டாக்குவதுதான், அப்பணி. மகாநாடுகளைக் கூட்டுவதனல் மாத்திரம் சமாதானத்தை உண்டாக்கிவிட முடியாது. மகாநாடு கூட்டிப் பேசிக்கொண்டிருக்கும்போதே சமாதானம் சிதைக்கப்பட்டு வருவதை நாம் பார்த்துக்கொண்டு தான் வருகிறோம்."

ஸ்ரீ பிரீமன் கூறியதாவது: "நூற்பவர்களைக் கிறுக்கர்கள் என்று அமெரிக்கர் சொல்லக்கூடும் என்றாலும், இதைக் குறித்துத் தீர ஆலோசித்துப் பார்க்கும் சில அமெரிக்கரும் இருக்கிறார்கள். ஓரளவுக்கு அறிவுள்ள மனிதன், அமெரிக்கன் என்ற வகையில் நான் இதைத்தான் சொல்லமுடியும்: நாகரிகம் நாசமாகிவிடுவதிலிருந்து பாதுகாக்க ஏதாவது ஒன்றைக் கண்டு பிடித்தாக வேண்டும். வாழ்க்கை எளிமையானதாக வேண்டும்."

இதற்கு மகாத்மா கூறிய பதிலாவது: "வேறு எந்த வகையிலும் மனித அந்தஸ்து நிலை பெற்று இருந்துவிட முடியாது. 'கடையனுக்கும் கதிமோட்சம்' என்பது எடுத்துக்காட்டும் தத்துவத்தையே நான் கடைப்பிடிக்கிறேன். அந்தப் புத்தகம்* என் வாழ்க்கையில் ஒரு திருப்பத்தை உண்டாக்கியது. உலகம் நமக்கு என்ன செய்யவேண்டும் என்று எதிர்பார்ப்போமோ அதையே கடையனுக்கும்கூட நாம் செய்யவேண்டும். சகலருக்கும் சமமான சந்தர்ப்பம் இருந்தாகவேண்டும். சந்தர்ப்பம் மாத்திரம் இருக்குமானல், ஒவ்வொரு மனிதனும் ஆன்ம வளர்ச்சியை அடைவதற்கு ஒரே மாதிரியான சாத்தியமுண்டு. அதைத்தான் ராட்டை எடுத்துக்காட்டுவதாக இருந்து வருகிறது."

"அமெரிக்கரும் ராட்டையில் நூற்க வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா?" என்று ஸ்ரீ பிரீமன் கேட்டார். அதற்குக் காந்திஜி கூறியதாவது: "ஆம். ஆனல், ராட்டை இங்கே சரியானபடி ஊன்றிவிடுவதற்கு முன்னல், அதை வேறு யாராவது மேற்கொள்ளுவார்களா என்பது எனக்குத் தெரியாது ஆயினும் இதற்கு மாருக இந்தியா, தனக்கு வேண்டிய துணி முழுவதற்கும் ராட்டையையே மேற்கொள்ளுமாயின், ராட்டையைக் குறித்து நான் உலகிற்குச் சொல்லிக்கொண்டிருக்க வேண்டிய அவசியம் இராது. உலகம் தானகவே ராட்டையை மேற்

---

* 'கடையனுக்கும் கதிமோட்சம்' என்ற ஜான் ரஸ்கினின் புத்தகத்தையே மகாத்மா இங்கே குறிப்பிடுகிறார். தென்னப்பிரிக்காவில் இருந்தபோது இந்நூலைத் தாம் படிக்க நேர்ந்த விவரத்தையும், அதனல் தம் மனத்தில் ஏற்பட்ட மாற்றங்களையும் குறித்து மகாத்மா தமது 'சுயசரிதை'யில் விவரித்திருக்கிறார். அதை 'மகாத்மா காந்தி நூல்கள்' மூன்றும் தொகுப்பு 392—94—ஆம் பக்கங்களில் காண்க.

கொண்டுவிடும். இன்று இந்தியாவின் மீது மேற்கத்திய நாடு களின் யந்திரப் படையெடுப்பு அதிகப் பலமாக இருந்து வருகிறது. அதை வெற்றிகரமாகச் சமாளித்துக்கொண்டுவிட இந்தியாவினுல் முடியுமானுல், அதுவே ஒரு பெரிய அற்புதம் என்றுதான் சொல்லவேண்டும். ஆனுல், இன்றோ அதற்கு மாருன நிலையிலேயே எல்லாம் இருந்து வருவதாகத் தோன்றுகிறது என்பதையும் நான் ஒப்புக்கொள்ளவே வேண்டும்.''

''ஆனுல், நீங்கள் நம்பிக்கையை இழந்துவிடவில்லை யல்லவா?''

''கடவுளின் உயிர்ச் சக்தியில் எனக்கு நம்பிக்கை இருக் கிறது. நாம் அறிந்திருப்பதைவிட அதிகமாகவே அவர் நம்முள் இருக்கிருர். அந்த நம்பிக்கை எனக்கு இருக்கும்வரை நான் நம்பிக்கையை இழந்துவிடமாட்டேன்.''

—'ஹரிஜன்'–17—11—1946

பகுதி இரண்டு

# ஏன் யந்திர மயமாகிவிடக் கூடாது?

## 1

## சைத்தானின் மாயவலை

தீவிரமான கதர் பக்தர் ஒருவர் எழுதியிருக்கும் கடிதத்தின் சில பகுதிகளே கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவை சிரத்தையுடன் படிக்கக் கூடியவையாகும்:

"கதரில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. கதரின் தத்துவம் பளிங்கு போல் எனக்குத் தெளிவாக விளங்குகிறது. வாழ்க்கையை அது எளிமையானதாக்கி, அதனால் புனிதமானதும் ஆக்குகிறது. சேவையாகிய பந்தத்தின் மூலம் அது நம்மை ஏழைகளுடன் பிணைக்கிறது. நாட்டு மக்களின் உடலையும் ஆன்மாவையும் கொன்றுகொண்டிருக்கும் ஏழ்மைக்கு எதிராக இருக்கும் ஒரே பாதுகாப்பு அதுதான். ஏனெனில், எழுத்து வாசனையே இல்லாத கோடிக் கணக்கான மக்களைப் பொறுத்தவரையிலாவது, உடலே இல்லாதபோது ஆன்மாவைப் பற்றிய பேச்சிற்கே இடமில்லை. யோகிகளும் அவர்களுடைய பக்தர்களும் உடலில்லாதபோதும் ஆன்மா உண்டு என்று பேசுவார்கள். ஆனால், உடலே இல்லாதபோது ஆன்மா இருக்கிறது என்பது கோடிக்கணக்கான மக்களைப் பொறுத்தவரையில் அவர்களுக்குக் கேலிக் கூத்தே ஆகும். கடைசியாக, ஆனால் முக்கியமாக, ஐரோப்பாவில் இன்று ரத்தமும் ஆவேசமும் கரைபுரண்டு ஓடிக்கொண்டிருப்பதைப் போன்ற கொடுமையான சமூகக் கொந்தளிப்புகளிலிருந்து பாதுகாக்க வல்லது ராட்டை ஒன்றுதான். ராட்டை பாமர மக்களையும் பணக்காரர்களையும் ஒன்றுபடுத்துகிறது. இதை இந்தியா ஒப்புக்கொண்டுவிட்டால், போல்ஷ்விஸமும் அதைப்போன்ற கொடிய கொந்தளிப்புகளும் ஏற்படமாட்டா. ராட்டை எவ்வளவு முக்கியமானது என்பதை இவைகளெல்லாம் எனக்கு எடுத்துக்காட்டுகின்றன. ஆனால், ஒரே ஒரு கஷ்டம் மாத்திரம் இருக்கிறது. அது வேலை செய்து வருமா? அது வெற்றி பெறுமா? இல்லம்தோறும் முன்னால் ராட்டைக்கு இருந்துவந்த புனிதமான ஸ்தானத்தில் அதைத் திரும்பவும் நாம் வைத்துவிட முடியுமா? இன்னும் காலம் கடந்ததாகிவிடவில்லையா? நீங்கள் சிறைக்குப் போவதற்கு முன்னால் இவ்வாறு நான் கேட்டிருக்கவே மாட்டேன். நம்பிக்கைக்கு அப்பொழுது இடம் இருந்தது. ஆனால், இப்பொழுது அவ்வளவு நம்பிக்கைக்கு இடமில்லை. பர்ட்ராண்டு ரஸ்ஸல்* வேறு சொல்லுகிறார்; யந்திரத் தொழில், இயற்கையின்

---

* பர்ட்ராண்டு ரஸ்ஸல் (1872— ): உலகப் புகழ் பெற்ற பிரிட்டிஷ் தத்துவ ஞானி; கணித சாஸ்திர மேதை. தத்துவம், கணிதம், ஒழுக்கம் போன்ற பல விஷயங்களைக் குறித்து அநேக சிறந்த நூல்களை எழுதியிருக்கிறார். இலக்கியத்துக்காக 1950-ஆம் ஆண்டில் இவருக்கு நோபல் பரிசு அளிக்கப்பட்டது.

சக்தியைப் போன்றது என்றும், இந்தியா விரும்பினாலும் விரும்பாது போனாலும், அதுவும் அதில் மூழ்கித்தான் போகும் என்றும் அவர் கூறினர். இப்படிக் கூறுகிறவர்களே இவ்விதம் யந்திர மயமாவதற்கான பரிகாரத்தை நாம்தான் தேடிக்கொள்ளவேண்டும் என்றும் சொல்லுகிறார்கள். அவர்கள் கூறுவதில் உண்மையும் இருக்கிறது. யந்திரத் தொழில்கள் பிரவாகமாக உலகத்தையே மூழ்கடித்துக்கொண்டு வருகின்றன. வெள்ளம் வந்துவிட்ட பிறகு அவரவர்களுக்கு வேண்டிய பரிகாரங்களை அவரவர்கள் தேடிக்கொள்ளுகிறார்கள். ஐரோப்பாவைப் பாருங்கள். ஐரோப்பா அழிந்து போய்விடும் என்று நான் நம்பவில்லை. மனித இயல்பில் எனக்கு மிகுந்த நம்பிக்கை உண்டு. உடனேயோ, பிறகோ மனித இயல்பு பரிகாரத்தைத் தேடிக்கொண்டுவிடும். இந்தியா, ஒதுங்கித் தனித்து இருந்துவிட விரும்பினாலும், யந்திரத் தொழிலின் பிடிப்பிலிருந்து தப்பிவிட முடியுமா?''

வேண்டுமென்றேயல்லாமல், வேறு வழியில்லாமல் இந்தக் கதர் பக்தர் முடிவுக்கு வந்திருக்கும் வாதம், சைத்தானின் பழைய தந்திரமேயாகும். எப்பொழுதும் சைத்தான் நம்மோடு பாதி வழி வருவான். பிறகு, மேற்கொண்டு போவது நல்லது அல்ல என்று திடீரென்று சொல்லித் தூண்டுவான். மேற்கொண்டு போவது சாத்தியமில்லாதது என்று தோன்றக்கூடியதையும் சைத்தான் காட்டுவான். சீலமே சிறந்தது என்று சைத்தான் போற்றுவான். ஆனால், சீலமாக வாழ மனிதன் கொடுத்துவைக்கவில்லை என்றும் உடனே சொல்லுவான்.

ஒரு சீர்திருத்தவாதிக்கு ஒவ்வோர் கட்டத்திலும் என்ன கஷ்டங்கள் எதிர்ப்படுமோ அதே போன்ற கஷ்டங்கள்தான் இந் நண்பருக்கும் ஏற்பட்டிருக்கின்றன. பொய்மையும் நயவஞ்சகமும் சமூகத்தில் மலிந்து கிடக்கவில்லையா? என்றாலும், சத்தியத்தின் முடிவான வெற்றியில் நம்பிக்கை இருப்பவர்கள், வெற்றியில் பூரணமான நம்பிக்கையுடன் விடாமல் தொடர்ந்து முயற்சி செய்துகொண்டுதான் இருக்கிறார்கள். ஒரு சீர்திருத்தவாதி, காலம் தனக்கு விரோதமாக இருக்க அனுமதிப்பதே இல்லை. ஏனெனில், அந்தப் புராதனமான விரோதியை அவன் எதிர்க்கிறான். யந்திரத் தொழில் இயற்கையின் சக்தியைப் போன்றதுதான். ஆனால், இயற்கையைக் கட்டுப்படுத்தி, அதன் சக்திகளை வெல்லுவதற்கான ஆற்றல் மனிதனுக்கு இருக்கிறது. எவ்வளவு பெரிய கஷ்டங்கள் எதிர் நின்றாலும், அசையாத உறுதியுடன் இருப்பதுதான் மனிதனுக்குரிய கௌரவம். இப்படிப்பட்ட ஒரு வெற்றியே நம் அன்றாட வாழ்க்கை. விவசாயிகள் இதை மிக நன்றாக அறிவார்கள்.

யந்திரத் தொழில் என்பது பெரும்பாலான மக்களை ஒரு சிறுபான்மையினர் அடக்குவது என்பதைத் தவிர வேறு என்ன? அதில் கவர்ச்சிகரமானது எதுவுமில்லை: தவிர்க்க முடியாதது என்பதும் அதில் ஒன்றுமில்லை. சிறுபான்மையினரின் இனிப்பான பேச்சுக்கு உடன்பட 'முடியாது' என்று சொல்லிவிடும் உறுதி மாத்திரம் பெரும்பான்மையினருக்கு இருந்துவிடுமானால்,

சிறுபான்மையினர் விஷமம் செய்யச் சக்தியற்றவர்களாகி விடுவார்கள்.

மனித இயல்பில் நம்பிக்கை கொள்ளுவது நல்லதே. அந்த நம்பிக்கை எனக்கு இருப்பதால்தான் நான் வாழ்கிறேன். ஆனால், முடிவில் எல்லாம் சரியாகிவிட்டது என்றாலும், தனிப்பட்டவர்களும் தேச மக்கள் என்ற தொகுதியினரும் இதற்கு முன்னால் அழிந்திருக்கிறார்கள் என்று சரித்திரம் காட்டும் உண்மையைக் காணமுடியாதபடி அந்த நம்பிக்கை என்னைக் குருடனாக்கிவிடக் கூடாது. தீய செயல்களின் காரணமாகப் பல நாட்டு மக்கள் அழிந்திருக்கிறார்கள் என்பதற்கு ரோமர், கிரேக்கர்கள், பாபிலோனியர், எகிப்தியர் ஆகியோரும் மற்றும் பலரும் நிரந்தரமான சாட்சியங்களாக இருந்து வருகின்றனர். ஐரோப்பாவுக்குச் சிறந்த விஞ்ஞான அறிவு இருக்கிறது. ஆகவே, ஏற்பட்டுவிடக் கூடிய நாசத்தை உணர்ந்து, தன் போக்கை மாற்றிக்கொண்டு ஒழுக்கக் கேடானதான இயந்திரத் தொழில் முறையிலிருந்து தப்புவதற்கு ஒரு வழியைக் காணும் என்று நம்ப முடியும். பழைய பூரணமான எளிமைக்குத் திரும்பிவிட வேண்டும் என்ற அவசியமில்லை. ஆனால், கிராம வாழ்க்கைக்கு முக்கியத்துவம் இருக்கும் வகையில் அது மாற்றியமைக்கப்படும். அதில் மிருக பலமும் பண பலமும் ஆன்ம பலத்திற்கு அடங்கியதாக இருக்கும்.

கடைசியாக, தவறான உவமைகளில் நாம் சிக்குண்டுவிடக் கூடாது. அனுபவமும், உண்மையான தகவல்களும் கிடைக்காத கஷ்டம் ஐரோப்பிய எழுத்தாளருக்கு இருக்கிறது. ஐரோப்பிய அனுபவத்தை வைத்துக்கொண்டு அவர்கள் பொதுப்படையாகக் கூறுவதாயிருந்தால், ஓரளவுக்கு மேல் அவர்களால் நமக்கு வழிகாட்ட முடியாது. ஏனெனில், ஐரோப்பிய அனுபவம் இந்திய நிலைமைக்குச் சம்பந்தமில்லாதது. இந்தியாவில் இருப்பதைப் போன்ற நிலைமை எதுவும் ஐரோப்பிய நாடுகளில், ரஷ்யாவில்கூட இல்லை. ஆகையால், ஐரோப்பாவைப் பொறுத்தவரையில் எது உண்மையோ, அதுவே இந்தியா விஷயத்திலும் உண்மையாக இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. ஒவ்வொரு தேச மக்களுக்கும் தனிப் பண்புகளும் தனித் தன்மைகளும் உண்டு என்பதையும் நாம் அறிவோம். இந்தியாவுக்கும் அத்தகைய தனிப் பண்புகளும் தன்மைகளும் உண்டு. ஆகவே, இந்தியாவின் பல இன்னல்களுக்கும் உண்மையான பரிகாரம் தேட வேண்டுமானால், இந்தியாவின் தன்மையில் இருக்கும் விசேடமான நிலைகளையெல்லாம் கவனித்து, அதன் பிறகே பரிகாரத்தைக் காணவேண்டும். ஐரோப்பாவில் நடந்திருக்கும் அதே தன்மையில் இந்தியாவை இந்தியத் தொழில் மயமாக்குவது என்பது சாத்தியமாகாத முயற்சி என்றுதான் கூறுவேன். எத்தனையோ புயல்களையெல்லாம் இந்தியா எதிர்த்து நின்றிருக்கிறது. அப்புயல் ஒவ்வொன்றும் மறையாத

அடையாளத்தை இந்தியாவில் செய்துவிட்டே போயிருக்கிறது என்பது உண்மையே. ஆனல், தனது தனித்த தன்மையை இந்தியா அஞ்சாமல் பாதுகாத்து வந்திருக்கிறது. தான் மாத்திரம் எவ்வித ஊனமும் இன்றி இருந்துகொண்டு, அதே சமயத்தில் அநேக நாகரிகங்கள் அழிந்ததைப் பார்த்துக்கொண்டிருந்த ஒரு சில நாடுகளில் இந்தியாவும் ஒன்று. புராதனமான அமைப்பில் மூடநம்பிக்கைகளும் தவறுகளும் படிந்திருந்தாலும், அந்தப் புராதன அமைப்பில் சிலவற்றை விடாமல் இன்னும் வைத்துக் கொண்டிருக்கும் சில நாடுகளில் இந்தியாவும் ஒன்று. ஆனல், தவறுகளையும் மூடநம்பிக்கைகளையும் போக்கிக்கொண்டுவிடக் கூடிய இயல்பான சக்தியும் தனக்கு உண்டு என்பதையும் இந்தியா காட்டி வந்திருக்கிறது. கோடிக்கணக்கான மக்களுக்கு விளைந்துள்ள பொருளாதாரப் பிரச்னையைத் தீர்த்துக் கொள்ளும் சக்தி இந்தியாவுக்கு இருக்கிறது என்பது என் நம்பிக்கை. இந்த என் நம்பிக்கை இன்று, முக்கியமாக வங்காளத்தின் நிலைமையை நான் ஆராய்ந்த பிறகு பிரகாசமாக இருப்பதைப் போன்று இதற்கு முன்பு என்றும் இருந்ததில்லை.

—'எங் இந்தியா' - 6—8—1925

## 2

# அதே பழைய வாதம்

நமக்கு ஏற்பட்டிருக்கும் இன்னல்களைக் கூறிவிட்டு, விவசாயத்தில் தாம் செய்ய வேண்டிய சீர்திருத்தங்களையும் சொல்லிவிட்டு ஒருவர் கீழ்வருமாறு எழுதுகிறர் :

"நாம் பின்னுக்கு நின்றுகொண்டு இக்கால நாகரிகம் ஒரு நோய் என்று சொல்லிவிடுவதனல் இவற்றையெல்லாம் நிறைவேற்றிவிட முடியாது. நோயைத் தைரியமாக எதிர்த்து நின்று, அதனல் ஏற்படும் தீமைகளைப் போக்கிக்கொள்ளுவதற்கான பரிகாரத்தைத் தேட வேண்டும். அபிவிருத்தியில் ஒரு குறிப்பிட்ட கட்டத்திற்கு நாம் வந்துவிட்டோம். இப்பொழுது இக்கால அல்லது சைத்தான் நாகரிகத்திலிடமிருந்து தப்பிவிட முடியாது. எளிதான போக்குவரத்து வசதிகள் இருக்கும் இந்நூற்றுண்டில், எந்த நாடும் மற்ற நாடுகளிலிருந்து பிரிந்து தனித்திருந்து வாழ்ந்துவிட முடியாது. பொருளாதாரம், சமூகம், மதம், ராஜீய விஷயங்கள் ஆகியவைகளில் நமது சமூகத்தின் அடிப்படையையே மேற்கத்திய நாடுகளின் செல்வாக்கு அசைத்துக்கொண்டிருக்கிறது, இந்தப் போராட்டத்தில் முட்டாள்தனமான, மூடநம்பிக்கையானதான, முக்கியமில்லாதவையெல்லாம் அவற்றிற்குரிய நாசத்தை அடைந்து, உறுதியான, அத்தியாவசியமான காரியங்கள் மாத்திரம் இருந்து வர இடமுண்டாக வேண்டும் என்று எண்ணுகிறேன். நமது மாட்டு வண்டிகளும் அகல் விளக்குகளுமே போதும் என்று நாம் இனியும் திருப்தியுடன் இருந்துவிட முடியாது. நீராவிக் கப்பல்கள்,

ரெயில்கள், மோட்டார் வண்டிகள், அச்சு யந்திரங்கள் ஆகியவற்றிலிருந்தும் ஜனநாயகம், அன்பு, உலக சகோதரத்துவம் ஆகியவற்றின் கருத்துக்களிலிருந்தும் நாம் தப்பிவிடமுடியாது. ஜப்பான் கிழக்கில் இவ்வளவு பலம் வாய்ந்த நாடாக ஆகும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. உற்பத்திக்கு இக்காலத்திய முறைகளை அனுசரிக்காமல் ஜப்பான் அலட்சியமாக இருந்திருக்குமானால், அந்த நாடு, உதாரணமாக இன்று சீனு எவ்விதம் மற்ற நாடுகளின் அனுதாபத்திற்குக் கெஞ்சிக்கொண்டிருக்கிறதோ, அந்த நிலையில்தான் இருந்து வரும். சரியான வகையில் இந்தியா வளர்ச்சியடையப் பார்க்க வேண்டும் என்பதே நமது லட்சியமாக இருக்க வேண்டும். மந்திரத்தினுல் இதைச் செய்துவிட முடியாது. நம் வருவாய் அதிகமாக வேண்டும். தேசீய வருமானமோ, பரிதாபப்பட வேண்டிய நிலையில் மிகத் தாழ்வாக இருக்கிறது. தலைக்குச் சராசரி வருமானம் ஐம்பது பவுனுக்குக் குறைவாக இருந்தால், நல்ல சுகமான வாழ்க்கை சாத்தியமில்லை என்று ஆங்கிலப் பொருளாதாரப் பண்டிதர்கள் கூறுகிருர்கள். அப்படியானல், இந்தியாவின் நிலைமை என்ன? வெளிநாட்டுப் போட்டியைச் சமாளித்து நிற்கக்கூடியதான யந்திரத் தொழில்களை நாம் ஆரம்பித்தாலன்றித் தேசத்தின் வருவாயை அதிகரித்துக் கொண்டுவிடுவது சாத்தியமா? நாம் இறக்குமதி செய்வதைவிட நாம் ஏற்றுமதி செய்வது அதிகமாக இருக்க வேண்டும். அப்பொழுதுதான் இந்திய விவசாயி சுகாதாரம், கல்வி, நல்வாழ்வு ஆகியவைகளைக் குறித்து நினைக்கும்படி செய்ய முடியும். மாறுபடும் நிலைமைக்கு ஏற்ற வகையில் இந்தியா இதுவரையில் தானும் மாறிக்கொண்டு வந்திருப்பதாலேயே அது இன்னும் உயிரோடு இருந்து வருகிறது. யந்திரங்களையும் பெருமளவில் உற்பத்தி செய்வதையும் புகுத்தினுலன்றி இதைச் செய்யவே முடியாது."

பழைய வாதமே திருப்பிச் சொல்லப்பட்டிருப்பதுதான் இது. இங்கிலாந்தையும் அமெரிக்காவையும் போல இந்தியாவையும் செய்துவிடுவதற்கு, சுரண்டுவதற்கு உலகில் வேறு இனத்தினரையும் இடங்களையும் கண்டுபிடித்தாக வேண்டும் என்பதை மேற்கண்ட கடிதத்தை எழுதியிருப்பவர் மறந்துவிட்டார். சுரண்டுவதற்கு ஐரோப்பாவுக்கு வெளியில் தெரிந்த இனத்தினரையெல்லாம் மேற்கத்திய நாட்டினர் தங்களுக்குள் இப்பொழுதே பங்கு போட்டுக்கொண்டு விட்டார்கள் என்றுதான் தெரிகிறது. இனி கண்டுபிடித்துக் கொள்ளுவதற்குப் புதிய உலகங்களும் இல்லை. சுரண்டப்பட்டு வரும் நாடுகளில் அதிகக் கொடுமைக்குள்ளாயிருப்பது இந்தியா. இந்தக் கொள்ளையில் ஜப்பானும் பங்கு போட்டுக் கொள்ளுகிறது என்பதில் சந்தேகமில்லை. இந்தியாவும் சீனுவும் இனியும் சுரண்டப்படுவதற்கு அனுமதிக்க மறுத்துவிட்டால், சுரண்டுகிறவர்களின் கதி என்ன ஆகும்? இந்தியாவும் சீனுவும் மேலும் சுரண்டப்படுவதற்கு இடம் கொடுத்துக் கொண்டிருக்க மறுத்துவிடுவதால் மேற்கத்திய நாடுகளின் வழியைப் பின்பற்றி நடக்க முயற்சிக்கும் இந்தியாவின் கதி என்ன ஆகும்? ஏகாதிபத்தியமும் பிறரைச் சுரண்டுவதும் மேற்கத்திய நாடுகளுக்குத் தெவிட்டிப் போகும் அளவுக்கு இருக்கின்றன. நோயால் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிற அவர்களுக்கே தீமைகளை ஒழுங்குபடுத்

திக் கொள்ளுவதற்கு வேண்டிய பரிகாரத்தைக் கண்டுபிடித்துக் கொள்ள முடியவில்லையென்றால், வெறும் கற்றுக்குட்டிகளேயான நமக்கு அவைகளைத் தவிர்த்துக் கொள்ளுவதற்கு எப்படி முடியும்? உண்மை என்னவென்றால், யந்திரத் தொழில் நாகரிகம் எல்லாமே தீமை நிறைந்ததாகையால், ஓர் நோய். பகட்டான சொற்களையும் சொற்றொடர்களையும் கண்டு நாம் ஏமாந்து போய்விடக்கூடாது. நீராவிக் கப்பல்கள், தந்திகள் விஷயத்தில் அவைகள் வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. யந்திரத் தொழில்கள், அவற்றின் எல்லா விளைவுகள் ஆகியவற்றின் உதவி இல்லாமலேயே இருக்க முடிந்தால், தந்தியும் நீராவிக் கப்பல்களும் நிலைபெற்று இருக்கக் கூடும். அதோடு விஷயம் முடிந்துவிடாது. நீராவிக் கப்பல்களுக்காகவும் தந்திக்காகவும் சுரண்டப்படும் கஷ்டம் நமக்கு இருக்கக்கூடாது. மனித வர்க்கத்தின் நிரந்தரமான சுகத்திற்கு அவை எந்த விதத்திலும் இன்றியமையாதவை அல்ல. நீராவி, மின்சாரம் ஆகியவற்றை உபயோகிப்பது இப்பொழுது நமக்குத் தெரிந்திருக்கிறது. தக்க சமயங்களிலும் யந்திரத் தொழிலைத் தவிர்த்துக்கொள்ளுவதற்கு நாம் கற்றுக்கொண்டு விட்டபிறகும், இவற்றை நாம் உபயோகித்துக்கொள்ள முடிந்தவர்களாக இருக்கவேண்டும். ஆகையால், நம் கவலையெல்லாம் எப்படியும் யந்திரத் தொழில்களை அழித்துவிட வேண்டும் என்பதே.

இக்கடிதத்தை எழுதியிருப்பவர், தமக்கே தெரியாத பரிகாரத்தை யோசனை கூறியிருக்கிறார். ஏனெனில், மற்ற நாடுகள் அழிந்திருக்கும்போது இந்தியா மாத்திரம் மாறும் நிலைமைக்கு ஏற்றபடி மாறி வந்திருப்பதால் இன்னும் உயிர் வாழ்கிறது என்பதை அவர் ஒப்புக்கொள்ளுகிறார். மாற்றிக் கொள்ளுவது என்பது இன்னொருவர் செய்வதைப் போல் செய்வது அல்ல. எதிர்க்கவும், ஜீரணித்துக்கொள்ளவும் சக்தி இருக்கிறது என்பதுதான் அதன் பொருள். தனது சொந்த அடிப்படையின்மீது இந்தியா உறுதியாக நின்று வந்திருப்பதனால்தான் மற்ற நாகரிகங்களின் தாக்குதல்களைச் சமாளித்து நிற்க அதனால் முடிந்தது. மாறுதல்களைச் செய்துகொள்ளவே இல்லை என்பதல்ல. ஆனால் இந்தியா செய்துகொண்ட மாறுதல்கள், அதன் வளர்ச்சிக்கு உதவின. யந்திரத் தொழிலுக்கு மாறுவது என்பது நாசத்தை வருவித்துக்கொள்ளுவதாகும். இப்பொழுது இருக்கும் துயரம் சகிக்கமுடியாததாக இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. வறுமைப் பிணி ஒழிந்தாகவேண்டும். ஆனால், அதற்குப் பரிகாரம் யந்திரத்தொழில் அபிவிருத்தி அல்ல. தீமை இருப்பது, மாட்டு வண்டியை உபயோகிப்பதனால் அன்று. நமது சுயநலப் போக்கினாலும், அக்கம்பக்கத்தில் இருப்பவர்களின் நன்மையில் அக்கறை இல்லாததனாலுமே தீமை இருக்கிறது. நம் அக்கம்பக்கத்தாரிடம் நமக்கு அன்பு இல்லை என்றால், ஏற்படும் மாறுதல் எவ்வளவுதான் புரட்சிகரமானதாக இருந்தாலும், நமக்கு நன்மை உண்டாகிவிடாது. அக்கம்பக்கத்தார்க

ளிடம், இந்தியாவின் பரம ஏழைகளிடம், நாம் அன்பு கொள்ளுவ தாக இருந்தால், அவர்கள் நமக்காக என்ன தயாரிக்கிறார்களோ அவைகளை, அவர்களுடைய நன்மைக்காக நாம் உபயோகிப் போம். இந்த அக்கம் பக்கத்தாரின் நன்மைக்காக, விஷயம் தெரிந்திருக்க வேண்டியவர்களான நாம், பகட்டான அந்நியச் சாமான்களை வாங்கி, அவற்றைக் கிராமங்களுக்குக் கொண்டு போகக்கூடிய ஒழுக்கக் கேடானதான வியாபாரத்தில் மேனாட் டினருடன் ஈடுபடமாட்டோம்.

தீவிரமாகவும், விடாமலும் நாம் சிந்தனை செய்வதாக இருந் தால், வேறு எந்த மாறுதலையும் செய்வதற்கு முன்னால் செய்தாக வேண்டிய ஒரு பெரிய மாறுதல், அந்நியத் துணியை வெறுத்துத் தள்ளிவிட்டுப் புராதனமான குடிசைத் தொழிலான கையினால் நூற்பதைத் திரும்ப நிலைநாட்டுவதே என்பதை நாம் கண்டு கொள்ளுவோம். யந்திரத் தொழில் வளர்ச்சியை நாம் எதிர்ப் பதானல், புராதனமானதும், ஆரோக்கியத்தை அளிப்பதுமான தொழிலை இவ்வாறு நாம் நிலைபெறச் செய்ய வேண்டும்.

முதலாளித்துவத்தைக் கண்டு நான் அஞ்சவில்லை. முத லாளித்துவத்துடன் நான் போராடுகிறேன். மூலதனம் ஒரே இடத்தில் குவிவதைத் தவிர்க்க வேண்டும், இன்னுமொரு கொடூரமான முறையில் இனப்போர் மூண்டுவிடுவதைத் தவிர்க்க வேண்டும் என்று மேற்கத்திய நாடுகள் போதித்து வருகின்றன. முதலாளிகளும் தொழிலாளிகளும் ஒருவருக்கொருவர் விரோத மாக இருக்கவேண்டிய அவசியமில்லை. ஒருவரைவிட இன் னொருவர் பணக்காரர் இல்லை என்று இருக்கும் ஒரு காலத்தை எனக்குள்ளேயே என்னால் கற்பனை செய்துகொள்ள முடிய வில்லை. ஆனால், ஏழைகளின் கஷ்டத்தில் அதிகப் பணம் தேடப் பணக்காரர்கள் விரும்பாமலும்,பணக்காரர்களைக் கண்டுஏழைகள் பொறாமைப்படாமலும் இருக்கும் ஒரு காலத்தை என்னுள் நான் சித்திரித்துப் பார்த்துக்கொள்ளுகிறேன். உலகம், எவ்வளவுதான் ஒழுங்கான தாகிவிட்டாலும், ஏற்றத்தாழ்வைத் தவிர்ப்பதென்ப தில் நாம் தவறியே போவோம். என்றாலும், சச்சரவையும் விரோதத்தையும் நாம் தவிர்க்க முடியும்; தவிர்த்தாகவேண்டும். பணக்காரர்களும் ஏழைகளும் சிறந்த நட்புடன் வாழ்ந்து வருகி றார்கள் என்பதற்கு ஏராளமான உதாரணங்கள் இருக்கின்றன. அத்தகைய சம்பவங்களை நாம் பெருக்கவேண்டும்.

மேற்கத்திய நாடுகளின் வழி ரத்தக்களரியானது. அதில் அவைகள் அலுத்து வருகின்றன என்பதற்கான அறிகுறிகளை யும் அவை காட்டுகின்றன. மேற்கத்திய நாடுகளின் அந்த வழி யில் செல்வதல்ல இந்தியாவின் விதி. ஆனால், எளிய, தெய்வீக மான வாழ்விலிருந்து பிறக்கும், ரத்தம் சிந்தாத சமாதான வழியி லேயே இந்தியா செல்லவேண்டும். இந்தியா தனது ஆன்மாவை இழந்துவிடும் அபாயத்தில் இருந்து வருகிறது. அதை இழந்து

விட்டு இந்தியா உயிர் வாழ முடியாது. ஆகையால், சோம் பேறித்தனத்தோடும் திக்கற்றும், 'மேற்கத்தியத் தாக்குதலி லிருந்து நான் தப்ப முடியாது' என்று அது சொல்லக்கூடாது. தன்னுடைய நன்மைக்காகவும் உலகத்தின் நன்மைக்காகவும் அதை எதிர்க்கும் பலத்துடன் இந்தியா இருக்கவேண்டும்.

—'எங் இந்தியா' – 7—10—1926

## 3

# மனித வர்க்கத்திற்குச் சாபக்கேடு

"இந்தியாவை யந்திரத் தொழில் மயமாக்குவது குறித்து உங்கள் கருத்து என்ன?"

"யந்திரத் தொழில் மயமாவது மனித வர்க்கத்திற்குச் சாபக்கேடாக இருக்கப்போகிறது என்றே அஞ்சுகிறேன். ஒரு நாடு, இன்னொரு நாட்டைச் சுரண்டிக்கொண்டிருப்பதென்பது எப்பொழுதும் நடந்துகொண்டு போகமுடியாது. சுரண்டுவ தற்கு உங்களுக்குள்ள சக்தி, வியாபாரத்திற்கு வெளிநாட்டு மார்க்கெட்டுகள் தாராளமாக உங்களுக்குக் கிடைத்துக்கொண் டிருப்பது, போட்டி போடுகிறவர்கள் இல்லாமல் இருப்பது ஆகிய வைகளையே யந்திரத் தொழில் முற்றிலும் பொறுத்திருக்கிறது. இங்கிலாந்துக்கு இந்த அம்சங்கள் நாளுக்கு நாள் குறைவாகிக் கொண்டிருப்பதனுல்தான் அந்நாட்டில் வேலையில்லாது திண் டாடுகிறவர்களின் தொகை தினமும் அதிகரித்துக்கொண்டு போகிறது. இந்திய பகிஷ்காரம் ஒரு ஈக்கடியைப் போன்றது. இங்கிலாந்தின் நிலைமையே இதுவென்ருல், இந்தியாவைப் போன்ற ஒரு பரந்த நாடு யந்திரத் தொழில் மயமாவதால் நன்மையை எதிர்பார்க்க முடியாது. இந்தியா யந்திரத் தொழில் மயமானுல், உண்மையில் மற்ற நாடுகளை இது சுரண் டித்தான் ஆகவேண்டும். அவ்விதம், இந்தியா சுரண்ட ஆரம் பிக்கும்போது இது மற்ற நாடுகளுக்கு ஒரு சாபக்கேடாவதோடு உலகத்திற்கும் ஆபத்தாக ஆகும். மற்ற நாடுகளைச் சுரண்டு வதற்காக இந்தியா யந்திரத் தொழில் மயமாகவேண்டும் என்று நான் ஏன் எண்ணவேண்டும்? நிலைமையிலிருக்கும் ஆபத் தைப் பாருங்கள்: நம் நாட்டில் வேலையில்லாதிருக்கும் முப்பது கோடி மக்களுக்கு வேலையைக் கண்டுபிடிக்க நம்மால் முடிகிறது. ஆனுல், இங்கிலாந்தோ தனது முப்பது லட்சம் பேருக்கு வேலை தேட முடியாததோடு, இதனுல் ஏற்பட்டிருக்கும் பிரச்னை இங்கி லாந்தின் பெரிய அறிவாளிகளையெல்லாம் திகைக்க வைத்திருக் கிறது. யந்திரத் தொழிலின் எதிர்காலம் இருள் சூழ்ந்ததாக இருக்கிறது. அமெரிக்கா, ஜப்பான், பிரான்ஸ், ஜெர்மனி ஆகிய நாடுகள் இங்கிலாந்துடன் வெற்றிகரமாகப் போட்டி

போடுகின்றன. இந்தியாவில் இருக்கும் கொஞ்ச மில்களும் அதற்குப் போட்டியாக இருக்கின்றன. இந்தியாவில் விழிப்பு ஏற்பட்டிருப்பதைப் போல இயற்கை வசதி, கனிப் பொருள்கள், ஆள் பலம் ஆகியவைகளை அதிகமாகப் படைத்திருக்கும் தென்னாப்பிரிக்காவிலும் விழிப்பு ஏற்படும். பலத்தில் மிகுந்த ஆப்பிரிக்க இனத்தினரின் முன்னால் பலம் மிக்க ஆங்கிலேயர் சித்திரக் குள்ளரைப் போன்றே தோன்றுகிறார்கள். எப்படியும் அவர்கள் கௌரவமிக்க காட்டுமிராண்டிகள்தானே என்று நீங்கள் சொல்லலாம். நிச்சயமாக அவர்கள் கௌரவமானவர்கள்தான். ஆனால், அவர்கள் காட்டுமிராண்டிகள் அல்ல. தங்கள் சரக்குகளைக் கொண்டுபோய்த் திணிப்பதற்கு ஆப்பிரிக்கா இனி ஏற்ற இடமல்ல என்பதை மேற்கத்திய நாட்டினர் இன்னும் சில ஆண்டுகளில் கண்டுகொள்ளுவார்கள். யந்திரத் தொழிலின் எதிர்காலம் மேற்கத்திய நாடுகளுக்கே இருள் சூழ்ந்ததாக இருக்கிறதென்றால், இந்தியாவுக்கு இன்னும் அதிக இருள் சூழ்ந்ததாக இராதா?

—'எங் இந்தியா' 12—11—1931

(ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'லண்டன் கடித'த்திலிருந்து எடுத்தது.)

## 4

# வேலையில்லாத் திண்டாட்டத்தை அதிகமாக்கும்*

கலிபோர்னியாவிலிருந்து ஸ்ரீ ஹென்றி ஈட்டன் பின்வருமாறு எழுதுகிறார்:

"நான் பிரிட்டிஷாரின் ஆதரவாளன் அல்ல. என்னுடைய மூதாதைகள் 1776-ல் தங்களை விடுவித்துக்கொள்ளுவதற்காகப் பிரிட்டிஷாருடன் போராடினார்கள். ஆனால், பிரிட்டிஷார் இந்தியாவைவிட்டுப் போய்விடுவார்களானால் நன்மையைவிடத் தீமைதான் அதிகமாகும் என்று பத்திரிகைகளில் நான் படிப்பதிலிருந்து அறிகிறேன். இந்தியா தன்னைத் தானே ஆண்டுகொள்ள முடியாது என்று நான் எண்ணவில்லை. என்றாலும், தன்னைத்தானே ஆண்டுகொள்ள இப்பொழுது முயற்சி செய்வது அதிகக் கஷ்டமானதாக இருக்கும் என்பதை நான் காண்கிறேன். ஆனால், பிரிட்டிஷார் இந்தியாவைவிட்டுப் போய்விட்டால், ரஷ்யரோ, மற்ற நாட்டினரோ உள்ளே புகுந்துவிடாமல் தடுக்கப்போவது யார்? இந்தியாவைப்பற்றி நான் தெரிந்துகொண்டிருக்கிற அளவில், தன்னைப் பாதுகாத்துக்கொள்ளுவதற்குப் போதுமான ராணுவம் அதனிடம் இல்லை என்பது நிச்சயம்.

---

*'எங் இந்தியா 'வில் வெளியான மகாத்மாவின் இக்கட்டுரைக்கு 'மூட நம்பிக்கை சுலபத்தில் சாவதில்லை' என்ற தலைப்புக் கொடுக்கப்பட்டிருந்தது. அத் தலைப்பு இங்கே மாற்றப்பட்டிருக்கிறது.

"ஆனால், பிரிட்டிஷ் எஜமானரைவிட ரஷ்ய எஜமானரே மேல் என்று ஒருவேளை நீங்கள் நினைக்கக்கூடும். கைபர் கணவாயில் ரஷ்யா தயாராகக் காத்துக்கொண்டிருக்கிறது. கிழக்கு நாடுகளை ரஷ்யா நன்ருகத் தெரிந்து கொண்டிருக்கிறது. கிழக்கும் மேற்கும் கலந்தவர்களே ரஷ்ய மக்கள். ஆனல் மேற்கத்தியக் கலாசாரமே ரஷ்யக் கலாசாரம். அதனுடன் இந்தியா வைத்துக் கொள்ளும் எந்த உறவும் அதற்கு உட்பட்டதாகத்தான் இருக்கும். என்னைப் பொறுத்தவரையில் நான் ரஷ்யாவுக்கு விரோதமானவனல்ல; முதலாளித்துவத்துடன் அது நடத்திவரும் போர் மேற்கத்திய நாகரிகத்திற்குப் பெரிய நம்பிக்கை தருவதாக இருக்கிறது. இங்கே அமெரிக்காவில் எங்கள் மிகப் பெரிய முதலாளியான ஹென்றி போர்டு, செல்வத்தைச் சமமாக வினியோகித்தாக வேண்டியது தவிர்க்க முடியாதது என்பதை உணர்கிருர். ஆனல், முக்கியமாக ரஷ்யா இந்தியாவுக்கு எஜமானுக இருப்பதென்பது என்னவோ எனக்குப் பிடிக்கவில்லை. ரஷ்யாவை எஜமானுகக் கொண்ட இந்தியா, தனது நாகரிகத்தின் முக்கியத்துவத்தை இழந்துவிடும். இங்கிலாந்துடன் இருக்கையில் இந்தியா அந்த முக்கியத்துவத்தை எப்பொழுதும் விடாமல் வைத்திருக்கிறது..

"ரஷ்ய ஆபத்தைக் குறித்து மேற்கத்திய உலகம் பயப்படுவதைப்போல ஒருவேளை நீங்கள் பயப்படாமல் இருக்கலாம். இந்தியாவைவிட்டுப் பிரிட்டன் போய்விட்டால், ரஷ்யா உள்ளே புகுந்துவிடுவது நிச்சயம் என்று அமெரிக்காவில் அநேகர் எண்ணுகிருர்கள். இன்று இருக்கும் இந்தியா, தனது சாதிமுறைகளையும், விவசாயத்திலும் தொழில் உற்பத்தியிலும் கர்நாடக முறைகளையும் கொண்ட இந்தியா, மேற்கத்திய நாட்டுப் படையெடுப்பிலிருந்து தன்னைப் பாதுகாத்துக்கொண்டுவிட முடியும் என்று எங்களால் எண்ணிப் பார்க்கவும் முடியவில்லை. பாதுகாப்புக்குத் தேசிய ஸ்தாபனம் எதுவும் உங்களிடம் இல்லை. இந்தியாவில் ஒற்றுமையும் கிடையாது. மேற்கத்தியக் கலாசாரமும் நாகரிகமும் ஓங்குவதற்கு ஒற்றுமையே முக்கியமானதாக இருந்திருக்கிறது. மேற்கத்திய நாடுகளில் முன்னேற்றம் என்பதைக் கவனிக்கும் வகையில் பார்த்தால், இந்தியாவில் எவ்வித முன்னேற்றமும் இல்லை என்றே தோன்றுகிறது. நெய்வதில் பழைய முறைக்கே திரும்பும்படி நீங்களே உபதேசித்துக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் சிறந்த அறிவாளியாக இருந்தும், மாறுதலும், முன்னேறிப் போவது என்பதும் தவிர்க்க முடியாதவை என்பதை நீங்கள் உணரவில்லையா? வயோதிக வயதிலிருந்து குழந்தைப் பருவத்திற்கு நீங்கள் திரும்பிப் போய்விட முடியாது. அப்படியிருக்க. இப்பொழுதுள்ள அபிவிருத்தியான நெசவு முறையிலிருந்து அபிவிருத்தியில்லாத பழைய முறைக்குத் திரும்பிப்போய் அதனல் நன்மையடையவும் நீங்கள் எவ்விதம் எதிர்பார்க்க முடியும்? கஷ்டமானதாக இருக்கும் பழைய முறையில் நீங்கள் வேலை செய்யும்போதே எளிதானதான புதிய முறையும் இருக்கிறது என்பதையும் நீங்கள் உணரும்போது, கஷ்டமான பழைய முறையைக்கொண்டு நீங்கள் திருப்தியடைந்துவிட முடியாது. புதிய முறைகளை மேற்கொண்டு ஜப்பான் எவ்விதம் பலமுள்ள நாடாகிக்கொண்டு வருகிறது, சீனவும்கூட விழிப்படைந்து வருகிறது என்பதை நீங்கள் காண்கிறீர்கள். உலகத்தின் புதிய முறைகளின் முக்கியத்தை இந்தியா மாத்திரமே உணரவில்லை என்று தோன்றுகிறது. அந்நாட்டின் பெரும் தலைவரான நீங்கள், உங்கள் மக்களுக்கு அபிவிருத்தியை உபதேசிக்காமலிருப்பது ஏன்? ........

"இரண்டு கேள்விகள் என்னை அதிகத் திகைப்படையச் செய்கின்றன: இங்கிலாந்திடமிருந்து இந்தியா விடுதலை பெற்றால், ரஷ்யாவினால் தனக்கு ஏற்படக்கூடிய ஆபத்தை அது ஏன் உணரவில்லை? யந்திரங்களின் உதவி கொண்டதான உழைப்பின் புதிய முறையை அனுசரிப்பதில்தான் முதலாவதாக இந்திய மக்களின் சுதந்திரம் இருக்கிறது என்பதைத் தம் மக்கள் உணரும்படி மகாத்மா காந்தி ஏன் செய்யவில்லை? இக்கேள்விகளுக்குப் பதில் உங்களுக்குதான் தெரியும். ஆகையால், அதை எனக்கு நீங்கள் சொல்ல வேண்டும் என்று மிகவும் ஆசைப்படுகிறேன்.

"பிறப்பினாலும். உரிமையினாலும் நான் அமெரிக்காவின் ஒரு பிரஜை. என்றாலும், உலக விஷயங்களில் நான் அதிகச் சிரத்தை எடுத்துக்கொண்டு வருவதால், எனக்குள்ள சொற்ப அளவில், நான் உலகத்தின் பிரஜை என்று எண்ணிக்கொள்ளவே விரும்புகிறேன். நான் இருக்கும் கலிபோர்னியா பல்கலைக் கழகத்தில், இந்தியாவைப்பற்றிய விஷயம் அடிக்கடி வரும். பொதுவான ஆதரவெல்லாம் பிரிட்டனுக்குஎதிராக உங்கள் பக்கந்தான். என்றாலும், இந்தியாவில் இப்பொழுது இருந்துவரும் நிலைமையைக் குறித்து நான் அறிந்தவரையில், அதற்குள்ள இரண்டு தீமைகளில், இந்தியாவில் இருக்கும் பிரிட்டிஷ் ஆதிக்கம் குறைவான தீமை என்றே தோன்றுகிறது. மற்றொரு தீமை, நான் முன்னாலேயே விளக்க முயன்றிருப்பதைப் போன்று ரஷ்ய ஆதிக்கம். ஆனால், நாங்கள் எல்லோரும் அறிய விரும்புவதெல்லாம், இவ்விஷயத்தில் நீங்கள் நினைப்பது என்ன என்பதுதான்."

இரண்டு மூட நம்பிக்கைகள் இருந்து வருகின்றன என்பதை இக்கடிதம் வெளிப்படுத்துகிறது. அவற்றில் ஒன்று, தன்னைத் தானே பாதுகாத்துக்கொள்ள இந்தியாவினால் முடியாததாலும், உள்நாட்டில் தகராறுகள் அதிகமாக இருப்பதாலும் தன்னைத் தானே ஆண்டுகொள்ளும் தகுதி இந்தியாவுக்கு இல்லை என்பது. இந்தியாவிலிருந்து பிரிட்டன் வெளியேறிவிட்டால் அதன் மீது பாய ரஷ்யா தயாராக இருக்கிறது என்றும் இக்கடிதத்தை எழுதியிருப்பவர் காரணமின்றி யூகித்துக்கொள்ளுகிறார். இது ரஷ்யாவை அவமதிப்பதாகும். ரஷ்யாவுக்கு இருக்கும் ஒரே வேலை, பிரிட்டிஷாரால் ஆளப்படாத மக்களைத் தான் ஆளவேண்டும் என்பதுதானா? மேலும், இந்தியா விஷயத்தில் ரஷ்யாவுக்கு இத்தகைய கேவலமான நோக்கமே இருக்குமானால், ஆதிக்கத்திலிருந்து பிரிட்டனை எந்தச் சக்தி விரட்டுகிறதோ, அதே சக்தி வேறு எந்த ஆதிக்கத்தையும் தடுக்கக் கடமைப்பட்டிருக்கிறது. கடிதத்தை எழுதியிருப்பவருக்கு இது விளங்கவில்லையா? அதிகாரம், ஒப்பந்தத்தின் மூலம் இந்தியப் பிரதிநிதிகளிடம் ஒப்படைக்கப்படுமாயின், வெளி ஆக்கிரமிப்பிலிருந்து இந்தியாவைப் பிரிட்டன் பாதுகாக்கும் என்ற நிபந்தனையும் இருந்தாக வேண்டும். ஏனெனில், தன்னைத் தானே இந்தியா பாதுகாத்துக் கொள்ளுவதற்கு வேண்டிய தகுதியைப் பெறும்படி இத்தனை ஆண்டுகளாக, அறிந்தோ அறியாமலோ, பிரிட்டன் செய்யாத தவறுக்கு அதுவே பிராயச்சித்தமாக இருக்கும்.

அப்படியே ஓர் ஒப்பந்தம் இருந்தாலும், என்னைப் பொறுத்தவரையில், சட்ட மறுப்பின் மூலம் ஆக்கிரமிப்பாளரை எதிர்ப்பதில் நாட்டு மக்களுக்குள்ள சக்தியில்தான் நான் அதிக நம்பிக்கை வைப்பேன். ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் பிரிட்டிஷார் விஷயத்தில் சட்ட மறுப்பை மேற்கொண்டு சென்ற ஆண்டில் ஓரளவுக்கு வெற்றியையும் கண்டிருக்கிறோம். இதில் முழு வெற்றியையும் அடைவது, தேச மக்கள் சிந்தனையிலும் சொல்லிலும் செயலிலும் அகிம்சையைப் பூரணமாகத் தழுவுவதைப் பொறுத்திருக்கிறது. உலகம் முழுவதும் இதை ஏற்றுக் கொண்டு, யுத்த தளவாடங்களினால் எந்தவிதப் பயனுமே இல்லை என்பதை இயற்கையாகவே உலகம் உணர்ந்துகொள்ள வேண்டுமாயின், நாடு முழுமைக்குமான சத்தியாக்கிரகத்தின் வெற்றி கண்கூடானதாகத் தெரிய வேண்டும். பலாத்காரத்தின் வெளிப்படையான சின்னம், யுத்த தளவாடம். அதற்குள்ள ஒரே மாற்று, அகிம்சையை வெளிப்படையாகக் காட்டும் சின்னமான சத்தியாக்கிரகம். ஆனால், கடிதம் எழுதியிருப்பவர், நமக்குள் இருக்கும் வேற்றுமைப் பூசல்களைக் குறித்தும் பயந்து சோர்வடைகிறார். முதலாவதாக, இதைப் பற்றிய செய்திகள் மேற்கத்திய நாடுகளுக்கு மிகைப்படுத்தியே அனுப்பப்படுகின்றன. இரண்டாவதாக, இப்பூசல்கள் அந்நிய ஆதிக்கத்தின் கீழேயே அதிக வலுவானதாயின. ஏகாதிபத்திய ஆட்சி என்றாலே பிரித்து ஆளுவதுதான். ஆகையால், உணர்வற்றிருக்கச் செய்யும் அந்நிய ஆட்சி போய், உண்மையான சுதந்திரத்தின் வெப்பம் தரும் சூரியப் பிரகாசம் ஏற்பட்டதுமே அப்பூசல்களெல்லாம் மறைந்துவிடும்.

இரண்டாவது மூட நம்பிக்கை, ராட்டையைப் பற்றியது என்றே கருதுகிறேன். இது இன்னும் அதிகக் கடினமானது. இதே மூட நம்பிக்கை இந்தியாவிலுங்கூட சிலருக்கு இருக்கிறது. யந்திரத் தொழில் முறை புத்திசாலித்தனமானது, கையினால் செய்யும் தொழில் முறை அறியாத்தனமானது என்று இக்கடிதம் எழுதியிருப்பவர் கூறுவது யாரும் ஒப்புக்கொள்ள முடியாதது. கைக்குப் பதிலாக யந்திரத்தைப் புகுத்திவிடுவது எல்லா விஷயங்களிலுமே நன்மையானது என்பது இன்னும் நிரூபிக்கப்படவில்லை. கஷ்டமானதாக இருப்பதைவிட எளிதானதாக இருப்பது சிறந்தது என்பதும் உண்மையல்ல. ஏற்படும் ஒவ்வொரு மாறுதலும் நன்மையானதே என்றும், பழமையானது ஒவ்வொன்றும் தள்ளப்பட்டுவிடவேண்டியதே என்றும் இன்னும் நிரூபிக்கப்பட்டுவிடவுமில்லை.

வேறு வேலை எதுவும் இல்லாதிருக்கும் கோடிக்கணக்கான கைகள் எளிதாக ஒன்றைச் செய்துவிட முடியும் என்று இருக்கும்போது, அதற்கு யந்திர முறையை உபயோகிப்பது தீமை விளைவிப்பது என்பது என் கருத்து. ஆயிரத்துத்தொண்ணூறு மைல் நீளமும் ஆயிரத்து ஐந்நூறு மைல் அகலமுமுள்ள பிரதேசத்தில்,

இந்தியாவின் ஏழு லட்சம் கிராமங்களில் சிதறிக் கிடக்கும் கோடிக்கணக்கான மக்கள், தங்களுடைய உணவைத் தாங்களே தயாரித்துக் கொள்ளுவதைப் போன்றே தங்களுக்கு வேண்டிய துணியைத் தங்கள் கிராமங்களிலேயே தயாரித்துக் கொள்ளுவது எப்பொழுதுமே சிறந்தது; பத்திரமானது. வாழ்க்கையின் முக்கியமான தேவைக்கானவைகளை உற்பத்தி செய்து கொள்ளுவதை இக்கிராமங்கள் தங்கள் ஆதிக்கத்தில் வைத்துக் கொள்ளாமற் போனால், அனாதி காலந்தொட்டு இக்கிராமங்கள் அனுபவித்து வந்திருக்கும் சுதந்திரத்தை விடாமல் வைத்துக் கொண்டிருக்க முடியாது. அநேக முக்கியமான விஷயங்களில் இங்கு இருக்கும் நிலைமைக்கும் மேற்கத்திய நாடுகளின் நிலைமைக்கும் அதிக மாறுபாடுகள் இருக்கின்றன. ஆனால், இந்தியாவின் நிலைமையை நோக்கும் மேற்கத்திய நாட்டினர், அந்நாடுகளின் நிலைமையை வைத்துக்கொண்டு அவசரப்பட்டு விவாதிக்க ஆரம்பித்து விடுகிறார்கள். மாறுபட்ட நிலைமைகளுக்கு மாறுபட்டதான பொருளாதார விதிகளையே அனுசரிக்க வேண்டும்.

யந்திர முறை எளிதானது என்பதில் சந்தேகமில்லை. ஆனால், அதற்காக அது நன்மையாகத்தான் இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. உயரத்திலிருந்து ஓர் இடத்திற்கு இறங்கி விடுவது எளிதானது: ஆனால், அது ஆபத்தானது. கையினால் செய்யும் முறை கஷ்டமானதாக இருப்பதால், இந்த விஷயத்தைப் பொறுத்த வரையிலாவது, நன்மையானதே. யந்திர முறையிலிருக்கும் மோசம் தொடர்ந்து இருந்து வருமானால் நாம் சக்தியை அதிகமாக இழந்தவர்களாகவும் பலவீனர்களாகவும் ஆகிவிடும் காலம் ஒன்று வருவது நிச்சயம். கடவுள் நமக்குக் கொடுத்திருக்கும் உயிருள்ள யந்திரங்களை உபயோகித்துக் கொள்ள நாம் மறந்துவிட்டதற்காக அப்பொழுது நம்மை நாமே சபித்துக்கொள்ள ஆரம்பிப்போம். விளையாட்டுக்களையும் உடற் பயிற்சிகளையும் கொண்டே கோடிக்கணக்கானவர்கள் உடல் வலுவுடன் இருந்துவிட முடியாது. பயனுள்ள, பொருள் உற்பத்தி செய்யும் உடலுழைப்புத் தொழில்களை விட்டுவிட்டு, அதற்குப் பதிலாக ஒரு பயனுமில்லாத, உற்பத்தி செய்யாத, அதிகப் பணச் செலவுள்ளதான விளையாட்டுக்களையும் தேகப் பயிற்சிகளையும் அவர்கள் ஏன் செய்யவேண்டும்? ஒரு மாறுதலுக்கும், உல்லாசத்துக்குமாக அவை இன்று இருப்பது சரிதான். உணவு உற்பத்தியில் நமக்கு உழைப்போ, பங்கோ இல்லாது போய், அந்த உணவை உண்பதற்கு வேண்டிய பசி நமக்கு இருக்க வேண்டும் என்பதற்காகச் செய்யும் அவசியமான வேலையாக விளையாட்டும் தேகாப்பியாசமும் ஆகிவிடும்போது, அவை நமக்கு வெறுப்பானவையே ஆகிவிடும்.

கடைசியாக, பழமையானதெல்லாம் கெட்டதே என்ற நம்பிக்கையையும் நான் ஒப்புக்கொள்ள முடியாது. சத்தியம் பழமையானது, சிரமமானது. அசத்தியத்தினிடம் எத்தனையோ

கவர்ச்சிகள் இருக்கின்றன. என்றாலும், சத்தியத்தின் பொன்னான பழைய காலத்திற்கே நான் திரும்பவும் ஆனந்தமாகப் போவேன். வெள்ளை ரொட்டியைத் தயாரிக்க மாவைச் சுத்தப்படுத்துவதில் அதிலுள்ள ஊட்டச் சத்தில் அதிகம் போய் விடுகிறது. ஆகையால், இந்தப் பிசுபிசுத்த வெள்ளை ரொட்டியை விடப் பழைய நல்ல பழுப்பு ரொட்டி எப்பொழுதும் உயர்வானதே. பழமையானதே என்றாலும், இன்னும் நல்லவைகளேயான சாமான்களின் பட்டியலை முடிவின்றிச் சொல்லிக் கொண்டே போகலாம். இந்தியாவைப் பொறுத்தவரையிலாவது ராட்டை அத்தகைய பொருள்களில் ஒன்று. இந்தியா, தனது தேவையைத் தானே பூர்த்தி செய்து கொள்ளுவதாகவும், தன்னம்பிக்கையுடையதாகவும், மயக்கங்களுக்கும் சுரண்டல்களுக்கும் இடமளிக்காததாகவும் ஆகும்போது, கிழக்கிலோ அன்றி மேற்கிலோ உள்ள எந்த வல்லரசும் பேராசையோடு கவர்ச்சி கொள்ளும் பொருளாக அது இராது. அப்பொழுது அது, யுத்த தளவாடச் செலவுச் சுமையைச் சுமக்காமலேயே தான் பத்திரமாக இருப்பதாக உணரும்; அதனுடைய உள்நாட்டுப் பொருளாதாரம், வெளிநாட்டு ஆக்கிரமிப்புக்கு எதிரான பலமான அரணாகவும் இருக்கும்.

—'எங் இந்தியா'–2—7—1931

## 5

# பிழைப்பின்மையைப் போக்க வழி

கதர், ஹரிஜனங்களுக்கு எவ்வளவு நன்மை செய்து வருகிறது என்பதை அறிந்தவர்கள் மிகச் சிலரே. சாதாரணமான நெசவு, அநேகமாக ஹரிஜனங்களிடம் தனித்த முக்கியமான தொழில். மில்லில் நூல் நூற்கவும் நெய்யவும் ஆரம்பித்து விட்டதால் ஹரிஜனங்களில் அநேகருக்குப் பிழைப்புக்கு வழியாக இருந்த இவ்வேலை இல்லாது போய்விட்டபோதிலும், அவர்களில் ஆயிரக்கணக்கானவர்கள் இப்பொழுதும் நெசவு செய்தே வாழ்ந்து வருகிறார்கள். ஆனால், ஒரு நண்பரோ, பின்வருமாறு வாதிக்கிறார்: "அழிந்துகொண்டிருக்கும் ஒரு கைத்தொழிலை உயிருடன் வைத்திருப்பதால் என்ன பயன்? இதற்குப் பதிலாக வளரக்கூடியதான ஒரு கைத்தொழிலை அவர்களுக்கு ஏன் கொடுக்கக்கூடாது? வேறு வகைகளில் அவர்களுடைய முன்னேற்றத்திற்கான பலவித காரியங்களையும் நீங்கள் செய்து வரும்போது, பயனற்றுப் போய்விட்டதான தொழில்களையே அவர்கள் செய்துகொண்டு வர வேண்டும் என்பதை நிச்சயமாக நீங்கள் விரும்பவுமில்லையல்லவா?" என்று அவர் கேட்கிறார். ஹரிஜனங்கள் மாத்திரமல்ல வேறு யாருமே, இன்னும் லாபகரமானதான வேறு தொழில்களில் ஈடுபட முடியு

மானல், அப்படிப்பட்டவர்கள் நூற்பதிலோ, நெய்வதிலோ, வேறு எந்தத் தொழிலிலோதான் இருக்கவேண்டும் என்று நான் விரும்பவில்லை. ஆனால், ஒன்று என்னவென்றால், கையினால் நூற்பதையும் நெய்வதையும் குறித்து ஆட்சேபிக்கிறவருக்கு இருப்பதைப் போன்று சஞ்சலக் கருத்து எனக்கு இல்லை. இந்தியாவைப் பொறுத்தவரையிலாவது, கையினால் பஞ்சரைப்பது, பஞ்சு கொட்டுவது, கையினால் நூற்பது, கையினால் நெய்வது ஆகியவைகளுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது என்று என்னைப் பொறுத்தவரையில் எண்ணுகிறேன். கோடிக்கணக்கான மக்கள் கொஞ்சமாவது சௌகரியமாக வாழ வேண்டுமென்றால், மில்கள் தங்கள் துணிகளை விற்பதற்கு இந்தியாவுக்கு வெளியில்தான் இடம் தேடிக்கொள்ள வேண்டும். கிராமவாசிகள், தங்களுக்குள்ள சொற்ப வருவாயைக் கையினால் நூற்பது, கையினால் நெய்வது போன்றவைகளினால் அதிகரித்துக்கொள்ளத் தூண்ட வேண்டும். கோடிக்கணக்கான மக்கள் லாபகரமாக இருக்கும் வேறு தொழில்களில் ஈடுபட முடியும் என்றே வைத்துக்கொண்டாலும், நம் நாட்டு மில்கள் நம் மக்களுக்குத் தேவையான துணி முழுவதையும் நெய்து கொடுத்துவிடுவதற்கு அதிக காலம், பல தலைமுறைகள்கூட ஆகிவிடும். இந்த நிலைமை வருவதற்குக்கூடப் பெரும் மூலதனம் தேவைப்படுவதோடு யந்திரங்களுக்காகவும், அதன் சம்பந்தமான நுட்பத் திறமைக்கும் வெளிநாடுகளை எதிர்பார்த்துக்கொண்டும் இருக்க வேண்டும். வெளிநாட்டு யந்திரங்களையும் வெளி நாட்டுத் தொழில் நுட்பத் திறமையையும் எதிர்பார்த்துக் கொண்டிருப்பது கருத்தளவில் தவறில்லையென்றாலும் அனுபவத்தில் அது இந்திய மில் தொழிலுக்குப் பெரும் இடையூறாக இல்லாமற் போகாது. இத்தொழில் வெளி உதவியை நம்பி நடக்க வேண்டியதாக இருக்கும் வரையில் அதை உள்நாட்டுத் தொழில் என்று சொல்லுவதும்கூட உண்மையல்லாததாகும்.

இதற்கு மாறாக, ஒரு கிராமக் கைத்தொழில் என்ற வகையில், கதருக்கு வேண்டியது மிகக் கொஞ்ச மூலதனம். அதற்கு வேண்டிய கருவிகளையெல்லாம் கிராமங்களிலேயே தயாரித்துக் கொண்டு விடலாம். அதற்கு வேண்டிய நுட்பத் திறமைக்கும் கிராமங்களில் பஞ்சமில்லை. ஆனால், மக்களின் புத்திப் போக்கில் மாறுதல் ஏற்பட வேண்டியது ஒன்றுதான் அவசியமான காரியம். ஆகையால், மாறுபாடாக என்னதான் வாதங்கள் சாமர்த்தியமாகக் கூறப்பட்டு வந்தபோதிலும், மில்களின் உற்பத்தியைக் குறித்துப் பிரமாதமான புள்ளி விவரங்கள் கொடுக்கப்பட்டபோதிலும், இந்தியாவில் கதருக்கு மிகப் பெரிய எதிர்காலம் இருக்கிறது என்ற என் கருத்தில் நான் உறுதியுடன் இருந்து வருகிறேன். நாமாகவோ, நம்பிக்கையின் காரணமாகவோ நாம் செய்யாததைச் சந்தர்ப்ப வசத்தினால் நாம் செய்ய வேண்டியும் நேரும். இந்தியா வாழ்ந்தாக வேண்டும். அதாவது, அதன் கோடிக்கணக்கான மக்கள் வாழ்ந்தாக வேண்டும்.

இன்று அவர்கள் அவ்வாறு வாழ்ந்துகொண்டிருக்கவில்லை என்பதில் அபிப்பிராய பேதமே இல்லை. எப்படியோ அவர்கள் உயிரோடு இருந்துகொண்டிருக்கிறார்கள். அநேக கோடி மக்களுக்குக் கொஞ்ச நேரத்திற்குத்தான் வேலை இருக்கிறது. இம்மக்களின் வாழ்க்கை கிராம வாழ்க்கையாகவே முக்கியமாக இருந்து வருகிறது. அப்படியிருந்தும் இவர்களுக்கு ஆளுக்கு இரண்டு ஏக்கர் வீதம்தான் நிலமிருக்கிறதென்றால், இத்தகைய நிலைமை இருக்கும் நாடு உலகில் வேறு எதுவும் இல்லை. மனித சக்தியைக் கொண்டு ராட்டையைச் சுற்றுவதைத் தவிர, நீராவி, மின்சாரம் ஆகியவைகளைக் கொண்டு இந்தியாவுக்குத் தேவைப்படும் துணி முழுவதையும் உற்பத்தி செய்வதென்றால், மக்களின் வேலையில்லாத் திண்டாட்டம் இன்னும் அதிகக் கடுமையானதாகிவிடும். ஆகையால், இந்தியா யந்திரத் தொழில் மயமாகிவிடுமானால், நாம் வெட்கப்படவேண்டிய வகையில் சமூகத்தின் மிகத் தாழ்ந்த நிலையிலிருக்கும் ஹரிஜனங்களுள்படப் பல கோடி மக்கள் அடியோடு அழிய வேண்டியதே என்பதுதான் அதன் பொருள்.

மிக உயர்ந்த யந்திரத் தொழில் முறைகளை அனுசரித்ததனால் ஒவ்வோர் அமெரிக்கரும் 36 அடிமைகளை வைத்திருப்பதற்குச் சமமான வசதியுடன் இருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. அமெரிக்காவை நாம் உதாரணமாகக்கொண்டு நடப்பதானால், 36 அடிமைகள் வசதிக்குப் பதிலாக 30 அடிமைகள் வசதியையே ஒவ்வொரு இந்தியருக்கும் நாம் அளிப்பதாக இருந்தாலும், மொத்தம் 31 கோடி மக்கள் இருக்கும் நம் ஜனத்தொகையில் 30 கோடிப் பேராவது தற்கொலை செய்து கொண்டுவிட வேண்டும் அல்லது கொல்லப்பட்டுவிட வேண்டும். உற்சாகம் மிக்க சில தேச பக்தர்கள், இவ்விதம் செய்வதைக் குறித்துக்கூடக் கவலைப்படமாட்டார்கள் என்பது மாத்திரமல்ல, அதை வரவேற்பார்கள் என்பதை நான் அறிவேன். நடக்கக்கூடச் சக்தியற்ற நிராயுதபாணிகளான மக்கள் 30 கோடி இருப்பதைவிட ஆனந்தமான, திருப்தியோடு கூடிய சுபிட்சமான இந்தியர், முழு ஆயுதபாணிகளாக ஒரு கோடிப் பேர் மாத்திரம் இருப்பதே மேல் என்றும் அவர்கள் சொல்லுவார்கள். அந்தத் தத்துவத்திற்கு நான் பதில் சொல்ல முடியாது. ஏனெனில், ஹரிஜன மனோபாவத்தில் முற்றிலும் ஊறிப் போனவனாக நான் இருப்பதால் கோடிக்கணக்கான கிராமவாசிகளின் நன்மை எதுவோ அதைத்தான் நான் எண்ண முடியும். அவர்களில் மிகுந்த ஏழைகளாக இருப்பவர்களின் இன்பத்தைப் பொறுத்ததாக என்னுடைய இன்பமும் இருப்பதாகவே நான் செய்துகொள்ள முடியும். அவர்கள் வாழமுடிந்தால்தான் நானும் வாழ விரும்புகிறேன். மிக எளிமையானதான என் மனம், சிறிய ராட்டையின் சின்னக் கதிருக்கு அப்பால் போக முடியாது. அந்த ராட்டையை நான் போகுமிடங்களுக்கெல்லாம் எடுத்துச் செல்லலாம். எவ்விதச் சிரமமுமில்லாமல் அதை நான் தயாரித்துவிடுவேன். இது

சம்பந்தமாக, பத்திரிகைகளில் வெளிவந்து கொண்டிருப்பதிலிருந்து கீழ்வரும் பகுதியை எடுத்து ஒரு நண்பர் எனக்கு அனுப்பியிருக்கிறார்:

"சில தொழில்களில் வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவதற்காக நாஜிகள், மனித உழைப்பு வேண்டாதபடி செய்துவிடும் யந்திரங்களை நிறுத்திவிடுமாறு உத்தரவிட்டிருக்கிறார்கள். இந்தத் தடையைக் குறித்து அபிப்பிராயம் கூறுகையில், 'மான்செஸ்டர் கார்டியன்' சொல்லுவதாவது: 'வேலையில்லாத நெருக்கடியை யந்திரங்கள் அதிகரித்துவிடுவதாயிருக்கும் பலனைக் குறித்து விவாதம் பலமாக இருந்து வருகிறது. இதன் பலனைச் செய்யவேண்டி நேரும் காரியத்தை நாஜிகள் செய்யவேண்டியதாகி, யந்திரங்களை உபயோகிப்பதை நிறுத்தியிருக்கிறார்கள். ஜெர்மனியின் மனித உழைப்பைக் குறைக்கும் யந்திர சாதன மாறுதலின் அற்புதமான வெற்றியைப் பார்த்துப் போற்றும்படி கொஞ்ச காலத்திற்கு முன்னால்தான் உலகம் கேட்டுக்கொள்ளப்பட்டது. இப்பொழுதோ, அரசாங்கம் யந்திரத்துடன் போரில் முனைந்திருக்கிறது. அதன் உபயோகத்தைத் தடுக்கிறார்கள் அல்லது தொழிலாளர்கள் குறைவான நேரம் வேலை செய்து அதிகம் பேருக்கு வேலை கொடுக்கும்படி கட்டாயப்படுத்துகிறார்கள். நூற்கும் யந்திரத்திற்குப் பதிலாகக் கைராட்டையும் யந்திரத் தறிக்குப் பதிலாகக் கைத்தறியும் ஏற்படவேண்டுமென்று ஸ்ரீ காந்தி முயற்சி செய்து வருவதை ஒட்டியே ஜெர்மனியில் சுருட்டு, கண்ணாடி தொழிற்சாலைகள் செய்யப்பட்டு வருகின்றன."

'ஜெர்மனியின் தத்துவம் கர்நாடகமானதாகிறது என்றால், அதன் பொருளாதாரமும் ஏன் கர்நாடகமாகக்கூடாது என்பதற்கு எவ்விதக் காரணமும் இல்லை' என்று கூறி 'கார்டியன்' தான் கூறும் கருத்தை முடிக்கிறது. இந்த அபிப்பிராயங்களுக்குப் பதிலளித்து ஒருவர் 'கார்டிய'னில் கீழ்வருமாறு எழுதுகிறார்:

"உற்பத்தியாகும் பொருளெல்லாம் செலவாகிவிடவேண்டும் என்ற அளவுக்கு மெதுவாக உற்பத்தியாகவேண்டும் என்று வெவ்வேறு வழிகளில் பாடுபட்டு வரும் ஹிட்லரும், காந்தியும், மற்றவர்களும் கர்நாடக முறைக்குத் திரும்புகிறவர்களாக இருக்கலாம். ஆனால், கைத்திறனால் செய்யப்படும் பொருள்கள், கர்நாடகமானவையோ, காட்டுமிராண்டித்தனமானவையோ அல்ல. முற்போக்கான ஆரம்ப, நடுத்தரப்பள்ளி ஒவ்வொன்றிலும் இவ்வேலைகள் கற்றுக்கொடுக்கப்படுகின்றன... நூதனமாகத் தோன்றும் வழிகளிலோ, சம்பிரதாயத்திற்கு மாறானதாகத் தோன்றும் வழிகளிலோவாயினும் நியாயமான கால அளவிற்குள் வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிக்கப்படாது போனால், நம் எல்லோரையும் அழித்துவிடக்கூடியதான புரட்சிகளினாலும் யுத்தங்களினாலும் யந்திர சகாப்தமே மறைந்து போய்விடும். யந்திரங்கள், பாமர மக்களுக்கு மாத்திரமேயன்றி உயர் வகுப்பாருக்கும் இன்பத்தையும் சுக வாழ்வையும் கொடுத்துக்கொண்டிருக்கிற வரையில் அவை நன்மையான சாதனமே. ஆனால், அதிகமாக யந்திரத் தொழில் மயமாகியிருக்கும் மேற்கத்திய நாடுகளில் ஏற்பட்டிருப்பதைப் போல வேலையில்லாத் திண்டாட்டத்திற்கும் கோடிக்கணக்கான மக்கள் பட்டினி கிடக்க நேருவதற்குமே யந்திரம் கொண்டு போகும்போது, அது ஒரு

சாபக்கேடேயாகிறது. மனிதனுக்காக யந்திரங்களேயன்றி யந்திரங்களுக்காக மனிதன் அல்ல. ஆகையால், யந்திரம் மனிதரின் நன்மைக்கு உட்பட்டதாக இருக்க வேண்டுமேயல்லாமல் மனிதருக்கு அது எஜமானனாகி விடக்கூடாது,''

ஜெர்மனியில் கிராமக் கைத்தொழில்களுக்கு வாள்முனையைக் கொண்டு புத்துயிர் அளிக்கப்பட்டு வருவது இங்கே கவனிக்க வேண்டியது அன்று. நாம் கவனிக்கவேண்டியதெல்லாம், மிக உயர்ந்த நுட்பத் திறமையைக் காட்டி வந்த ஒரு நாடு, யந்திரத் தொழில் மயமானதில் அதிக முன்னேற்றமடைந்த நாடுகளில் ஒன்று, தனக்கு ஏற்பட்டிருக்கும் பயங்கரமான வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்னையைத் தீர்த்துக்கொள்ளுவதற்குக் கிராமக் கைத்தொழிலுக்கே திரும்பிப் போக முயன்று வருகிறது என்பதேயாகும்.

—'ஹரிஜன்' – 27–10–1933

## 6

# யந்திரம் எப்பொழுது நல்லது?

கிராமக் கைத்தொழில் சம்பந்தமாகக் காங்கிரஸ் செய்திருக்கும் தீர்மானத்தைத் தயாரித்தவன், நான். இக் கைத்தொழில்களின் வளர்ச்சிக்காக என்று ஆரம்பிக்கப்பட்டிருக்கும் சங்கத்திற்கு ஒரே வழிகாட்டியும் நானே. ஆகையால், அந்த முறையில் இந்தக் கைத்தொழில்களைக் குறித்தும், இவற்றுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவைகளாக இருக்கும் ஒழுக்க, சுகாதார முன்னேற்றத்தைக் குறித்தும் என் மனத்தில் முக்கியமாக இருந்துவரும் கருத்துக்கள் இன்னதென்பதைப் பொது மக்களுக்குச் சொல்ல வேண்டியது என் கடமையாகிறது.

ஹரிஜன யாத்திரையின்போது மலையாளத்தில் நான் பிரவேசித்ததுமே இச்சங்கத்தை ஆரம்பிக்கும் எண்ணம் திட்டமான உருவைப் பெற்றது. குரூரமாகவும், யோசனையில்லாமலும் பட்டணவாசிகள் கிராமவாசிகளிடமிருந்து பறித்துக்கொண்டு விட்டவைகளை அவர்களுக்குத் திருப்பித் தருவதற்கு யோக்கியமாக முயற்சி செய்யும் ஒரு சங்கம் எப்படி அவசியமானதாகிறது என்பது, ஒரு கதர் ஊழியரிடம் சாதாரணமாகப் பேசிக் கொண்டிருந்தபோது எனக்குப் புலப்பட்டது. கிராமவாசிகளில் அதிகமாகப் பாதகமடைந்துவிட்டவர்கள் ஹரிஜனங்கள். பொதுவாகக் கிராமவாசிகள் செய்யக்கூடியதாக இருக்கும். கைத்தொழில்களில் ஒரு சிலவே ஹரிஜனங்களுக்கு இருக்கின்றன. ஆகையால், அவர்களிடமிருக்கும் கைத்தொழில்களும் அவர்களுடைய கையை விட்டு நழுவிவிடும்போது, உழைக்கும் மாடு

களோடு வாழவேண்டிய கதியில் இருக்கும் அவர்களும் மாடுகளாகவே ஆகிவிடுகின்றனர்.

ஆனல், பொதுவாகக் கிராமவாசிகள் இப்பொழுது ஹரிஜனங்களைவிட அவ்வளவு நன்ருக இருந்துவிடவில்லை. நிலத்தைப் பிருண்டிக் கைக்கும் வாய்க்குமாகக் காலந்தள்ளும் நிலைக்குத்தான் அவர்களும் கொஞ்சங் கொஞ்சமாக வந்துவிட்டார்கள். துண்டு துண்டாகக் கிடக்கும் கொஞ்ச நிலத்தில் இன்று சாகுபடி செய்வது லாபகரமானது அல்ல என்பது சிலருக்குத்தான் தெரியும். கிராமவாசிகள், உயிரற்ற வாழ்க்கை வாழ்ந்து வருகின்றனர். மெல்ல நாளுக்கு நாள் பட்டினி கிடந்து கொண்டு போவதே அவர்கள் வாழ்க்கை. கடன் பளுவையும் சுமக்கின்றனர். வேறு எதுவும் தான் செய்ய இயலாததால் லேவாதேவிக்காரன் கடன் கொடுக்கிருன். கடன் கொடுக்காவிட்டால் எல்லாவற்றையும் அவன் இழந்துவிடுவான். இந்தக் கிராமக் கடன் முறை எந்த ஆராய்ச்சியையும் திகைக்கவைக்கும். இதைக் குறித்து நாம் விரிவாக விசாரித்தாலும், அதைப் பற்றி நாம் தெரிந்துகொண்டிருப்பது மேலெழுந்தவாரியானதாகவே இருக்கும்.

கிராமக் கைத்தொழில்கள் மறைந்துவிடுவது, இந்தியாவின் ஏழு லட்சம் கிராமங்களின் நாசத்தைப் பூரணமானதாக்கிவிடும்.

நான் எடுத்துக்காட்டி வரும் யோசனைகளைக் குறித்துத் தினப் பத்திரிகைகளில் வெளிவரும் கருத்துக்களை நான் பார்த்து வருகிறேன். புதிதாக எதையும் கண்டுபிடிக்கும் மனிதனின் அறிவு அடிமை கொண்டிருக்கும் இயற்கையின் சக்திகளை உபயோகிக்கும் முறையில்தான் விமோசனம் இருக்கிறது என்பதைக் கண்டு நான் நடந்துகொள்ள வேண்டும் என்று எனக்குப் புத்திமதி சொல்லுகிருர்கள். முன்னேறி வரும் மேற்கத்திய நாடுகள் உபயோகித்துக்கொண்டு வருவதைப் போன்று நாமும், நீர், காற்று, எண்ணெய், மின்சாரம் ஆகியவைகளைப் பூரணமாக உபயோகித்துக்கொள்ள வேண்டும் என்றும் என்னைக் குறை கூறுகிறவர்கள் சொல்லுகிருர்கள். இயற்கையில் மறைந்து கிடக்கும் இந்தச் சக்திகளின் மீது ஆதிக்கம் கொண்டிருப்பதாலேயே ஒவ்வோர் அமெரிக்கரும் 33 அடிமைகளைக் கொண்டிருக்கும் சக்தியைப் பெற்றிருக்கிருர்கள் என்கிருர்கள்.

இந்த முறையையே இந்தியாவிலும் அனுசரித்தால், ஒவ்வொருவருக்கும் 33 அடிமைகளின் சக்தியைக் கொடுப்பதற்குப் பதிலாக இந்நாட்டிலுள்ள ஒவ்வொருவரையும் முப்பத்து மூன்று மடங்கு அடிமைப்படுத்திவிடும் என்று நான் துணிந்து கூறுவேன்.

செய்ய முற்படும் வேலைக்கு வேண்டிய ஆள் பலம் அதிகக் குறைவாக இருக்கும்போது யந்திரம் நல்லதே. ஆனல்,

இந்தியாவில் இருப்பதைப் போல, செய்யவேண்டிய வேலைக்குத் தேவையானதற்கு மேல் ஆள் பலம் அதிகமாக இருக்கும்போது யந்திரம் தீமையானது. சில கெஜப் பரப்பையே கொண்ட ஒரு நிலத்தைப் பதனிடுவதற்கு நான் கலப்பையை உபயோகிக்க மாட்டேன். நமக்கு இருக்கும் பிரச்னை, கிராமங்களிலிருக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு ஓய்வு இருக்கும்படி செய்வது எப்படி என்பது அல்ல. ஆனல், வருடத்தில் ஆறு மாத கால வேலை நாட்களுக்குச் சமமானதாக இருக்கும் அவர்கள் சோம்பல் நேரத்தை எப்படி உபயோகித்துக்கொள்ளுவது என்பதுதான் பிரச்னை. பொதுவாக ஒவ்வொரு மில்லும் கிராமவாசிகளுக்கு ஆபத்து என்பது விசித்திரமாகத் தோன்றலாம். இது சம்பந்தமாக நான் கணக்கெடுத்துவிடவில்லை. என்றாலும், மில்லில் வேலை செய்யும் ஒவ்வோர் ஆளும், கிராமங்களில் குறைந்தது பத்துப் பேர் செய்யும் அதே வேலையைச் செய்துவிடுகிறார்கள் என்று நான் நிச்சயமாகக் கூறுவேன். அதாவது, இந்த மில் தொழிலாளி, தம்மோடொத்த கிராமவாசிகள் பத்துப் பேருக்கு நஷ்டத்தை உண்டாக்கிவிட்டுத் தம் கிராமத்தில் சம்பாதித்ததை விட அதிகமாகச் சம்பாதிக்கிறார். இவ்வாறு நூற்கும், நெய்யும் ஆலைகள், கிராமவாசிகளின் ஜீவனோபாயத்திற்கு இருந்த முக்கியமான சாதனத்தைப் பறித்துவிட்டன. அப்படியே அந்த ஆலைகள் செய்துவிடுவதாகவே இருந்தாலும், அவை மலிவான, மேலான துணிகளை உற்பத்தி செய்கின்றனவே என்பது சரியான பதிலாகி விடாது. ஏனெனில், ஆயிரக்கணக்கான தொழிலாளருக்கு ஆலை வேலையில்லாதபடி செய்துவிட்டதென்றால், கிராமங்களில் நெய்யப்படும் அதிக விலையுள்ளதாயிருக்கும் கதரைவிட அதிக மலிவானதான மில் துணி அதிக விலையுள்ளதாகவே ஆகிறது. நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளி, நிலக்கரியை அங்கேயே அப்பொழுதே உபயோகித்துக் கொள்ளும்போது அந்த நிலக்கரி அதிக விலையுள்ளதாகாது. அதே போலத் தமது சொந்தக் கதரைத் தாமே தயாரித்துக் கொள்ளும் கிராமவாசிகளுக்குக் கதரும் அதிக விலையுள்ளதன்று. ஆனல், மில்களில் தயாராகும் துணி, கிராமவாசிகளுக்கு வேலையில்லாதபடி செய்துவிடுகிறதென்றால், நெல் மில்களும் மாவு மில்களும் ஆயிரக்கணக்கான ஏழைப் பெண்களுக்கு வேலையில்லாது போகும்படி செய்வதோடு ஜனத்தொகை முழுவதிலும் தேகாரோக்கியத்தையும் கெடுத்துவிடுகின்றன. மாமிச உணவு சாப்பிடுவதில் ஆட்சேபமில்லாத, சாப்பிட முடிந்த மக்களுக்கு, வெள்ளை மாவும் தீட்டிய அரிசியும் தீமையை விளைவித்துவிடா. ஆனல், இந்தியாவில் கோடிக்கணக்கான மக்களுக்கு மாமிச உணவைச்சாப்பிடுவதில் ஆட்சேபமில்லையென்றாலும் அவர்களுக்கு மாமிசம் கிடைக்க வழியில்லை. அப்படியிருக்கும்போது, முழு கோதுமை மாவிலும் தீட்டாத அரிசியிலும் இருக்கும் ஊட்டச் சத்துக்களும் உயிர்ச் சத்துக்களும் கிடைக்காமற் போகச் செய்துவிடுவது பாவமாகும். வெள்ளை மாவையும் தீட்டிய அரிசியையும் சாப்பிடுவதில் இருக்கும் ஆபத்தை வைத்தியர்களும் மற்றவர்களும் இப்பொழுதே மக்களுக்கு எடுத்துக் கூறவேண்டும்.

கிராமவாசிகளுக்கு வேலை தேடிக் கொடுப்பதற்கான வழி, அவர்கள் இதுவரையில் செய்துவந்திருக்கும் கைத்தொழில்களுக்குப் புத்துயிர் அளிப்பதேயன்றித் தொழில்களை யந்திர மயமாக்கி விடுவது அல்ல. இதைக் காட்ட சில வெளிப்படையான உண்மைகளை மாத்திரம் எடுத்துக் கூறியிருக்கிறேன்.

எனவே, இன்னும் இருந்து கொண்டிருக்கும் கிராமக் கைத்தொழில்களுக்கு ஊக்கமளித்து, செத்துப் போய்விட்ட அல்லது செத்துக்கொண்டிருக்கும் கிராமக் கைத்தொழில்களுக்கு, எங்கு சாத்தியமானதாகவும் விரும்பத்தக்கதாகவும் இருக்கிறதோ அங்கெல்லாம், புத்துயிர் அளிப்பதுதான் அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தின் வேலையாக இருக்கவேண்டும் என்பது என் கருத்து. கிராம முறையில், அதாவது அனாதி காலந்தொட்டு அவர்கள் செய்துகொண்டு வந்திருப்பதைப்போல் கிராமவாசிகள் தங்கள் குடிசைகளில் இருந்தபடி வேலை செய்வது என்ற முறையில் இதைச் செய்யவேண்டும். இந்த எளிதான முறைகளை, கையினால் பஞ்சரைப்பது, கையினால் பட்டை போடுவது, கையினால் நூற்பது, கையினால் நெய்வது ஆகியவைகளில் செய்திருப்பதைப் போல அதிக தூரம் அபிவிருத்தி செய்ய முடியும்.

புராதனமான தொழில் திட்டம் தனி மனிதன் ஆக்காது என்றும், கூட்டு முயற்சியை அது ஒருபோதும் உண்டாக்காது என்றும் குறை கூறும் ஒருவர் ஆட்சேபிக்கிறார். இக்கருத்து மிகவும் மேலெழுந்தவாரியானது என்றே எனக்குத் தோன்றுகிறது. கிராமவாசிகள் தங்கள் குடிசைகளிலேயே பொருள்களைத் தயாரித்தாலும் அவற்றை ஓரிடத்தில் திரட்டி லாபத்தையும் பகிர்ந்துகொள்ள முடியும், திட்டப்படி மேல்பார்வையின் கீழ் கிராமவாசிகள் வேலை செய்வார்கள். பொது இருப்பிலிருந்து மூலப் பொருளை விநியோகிக்கலாம். கூட்டு முயற்சி எண்ணம் உண்டாகும்படி மாத்திரம் செய்துவிட்டால், கூட்டுறவுக்கும் இன்னின்னார் இன்னின்ன வேலையைச் செய்வது என்று பகிர்ந்து கொள்ளுவதற்கும், காலம் வீணாகாமலிருப்பதற்கும், வேலை திறமையாக நடப்பதற்கும் நிச்சயமாக அதிக வாய்ப்புகள் இருக்கின்றன. இக்காரியங்களையெல்லாம் இன்று அகில இந்திய நூற்போர் சங்கம் ஐயாயிரத்துக்கு அதிகமான கிராமங்களில் செய்து கொண்டு வருகிறது.

ஆனால், கிராம சூரிய மண்டலத்திற்குக் கதரே சூரியன். பல்வேறு கைத்தொழில்களும் கிரகங்கள். இவை கதராகிய சூரியனிடமிருந்து பெறும் வெப்பத்திற்கும் போஷணைக்கும் பதிலாகக் கதருக்கு ஆதரவளிக்கின்றன. கதரில்லாமல் மற்றக் கைத்தொழில்கள் வளரமுடியாது. ஆனால், மற்றக் கைத்தொழில்கள் புத்துயிர் பெறாவிட்டால் கதர் மேற்கொண்டு முன்னேற முடியாது என்பதை என் முந்திய சுற்றுப்பிரயாணத்தின்போது கண்டுகொண்டேன். ஏனெனில், தங்களுக்கு இருக்கும் ஓய்வு

நேரத்தைக் கிராமங்கள் லாபகரமாகப் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமானல், கிராம வாழ்க்கையின் எல்லா அம்சங்களிலும் வேலை செய்தாக வேண்டும். இரு சங்கங்களும் செய்யவேண்டும் என்று எதிர்பார்க்கப்படுவது இதுதான்.

இச்சங்கங்களுக்கு இயல்பாகவே ராஜீயத்திலும் ராஜீயக் கட்சிகளிடமும் எவ்விதச் சம்பந்தமும் இருக்கமுடியாது. இவ்விரு சங்கங்களையும் சுயேச்சையானவைகளாகவும், முற்றிலும் ராஜீய சம்பந்தமாகவே இல்லாதவைகளாகவும் காங்கிரஸ் செய்திருப்பது சரியானது என்பது என் கருத்து. பொருளாதாரத்திலும், ஒழுக்கத்திலும், சுகாதாரத்திலும் கிராமங்களை முன்னுக்குக் கொண்டுவருவதில் எல்லாக் கட்சியினரும் சமூகத்தினரும் ஒன்றுபடலாம்.

கதரை லாபகரமான ஒரு தொழிலாகவே எண்ணுத போக்குடையவர்களும் இருக்கிருர்கள் என்பதை அறிவேன். கிராம வேலைகள் எல்லாவற்றிற்கும் கதரே கேந்திரமானதாக இருக்கவேண்டும் என்று நான் கூறுவதைக் கண்டு, அவர்கள் மருண்டுவிடமாட்டார்கள் என்று நம்புகிறேன். கதருக்கும் மற்றக் கிராமக் கைத்தொழில்களுக்கும் ஒன்றுக்கொன்றுள்ள தொடர்பை எடுத்துக்காட்டாமல், எண்ணத்தில் இருப்பதை நான் பூரணமாகச் சொல்லிவிட முடியாது. நான் நினைப்பதைப் போன்று நினைக்காதவர்கள், மற்றத் தொழில்களில் மாத்திரமே தங்கள் கவனத்தைத் தாராளமாக ஈடுபடுத்தலாம். ஆனல், இக்கட்டுரையில் நான் எடுத்துக்காட்ட முயன்றிருக்கும் கருத்துக்களை அவர்கள் ஒப்புக்கொள்ளுவதானல், இந்த வேலையைக்கூட அவர்கள் புதிய சங்கத்தின் மூலம் செய்ய முடியும்.

—'ஹரிஜன்' – 16—11—1934

## 7

# சிலருக்கு வேலை, ஆனல்?

மகன்வாடியில் ஒரு சிறு பொருட்காட்சியை நடத்தியதன் மூலம் அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கம், ஒரு நூதனமான சோதனையை ஆரம்பித்திருக்கிறது. இக்காட்சியைப் பார்க்க வருகிறவர்களிடம் வேண்டுமென்றே கட்டணம் வசூலிக்கப்படவில்லை. லட்சுமணபுரி பொருட்காட்சியைப் போய்ப் பார்க்காதவர்கள், அந்தப் பொருட்காட்சி எப்படி இருந்திருக்கும் என்பதைத் தெரிந்துகொள்ள முடிவதற்காக இவ்விதம் செய்தார்கள். லட்சுமணபுரியிலிருந்து பல விளக்கப் படங்களையும் சுவர்ப் படங்களையும் இங்கே கொண்டு வந்திருந்தார்கள். என்றுலும், முக்கியமான கைத்தொழில்களெல்லாம் காட்சியில் இருந்தன. ஆனல், எல்லோரும் வந்து பார்க்க

வேண்டிய அளவுக்கு ஜனங்கள் இதற்கு வரவில்லை. இது சம்பந்தமாக மக்களுக்கு இன்னும் எவ்வளவோ போதிக்க வேண்டியிருக்கிறது. வார்தாவுக்கு வரும் கிராமவாசிகளில் அநேகர், வேலை தேடி வருகிறார்கள். இல்லாவிட்டால் தங்களிடமிருக்கும் கறி காய்களையும் மற்றப் பொருள்களையும் விற்றுவிட்டு வாரத்துக்கு வேண்டிய மளிகைச் சாமான்களை வரங்கிப் போக வருகிறார்கள். பொருட்காட்சியைப் போய்ப் பார்ப்பதற்கு அவர்களுக்கு நேரமோ, விருப்பமோ இல்லை. நமது புள்ளி விவர விளக்கங்களைப் படித்தறிவதற்கு வேண்டிய எழுத்தறிவும் அவர்களுக்கு இல்லை. பொருட்காட்சிகளை அவர்கள் வீட்டு வாசலுக்கே கொண்டு போக வேண்டும்; அவர்கள் நேரத்திற்கு ஒத்ததாக நம் நேரத்தை அமைத்துக்கொள்ள வேண்டும்; நம் விளக்கப் படங்களை அவர்களுக்குப் புரியக் கூடியவைகளாக்க வேண்டும். ஆனல், வார்தாப் பொருட்காட்சியோ, வார்தாவாசிகளுக்கென்று இருந்ததே யன்றிக் கிராமவாசிகளுக்கென்று இல்லை. வார்தா மக்களோ, தங்களைச் சுற்றி நடந்து வரும் இப் புது முறையான சோதனையின் விஷயத்தில் எவ்விதப் பற்றோ, சிரத்தையோ இல்லாத போக்குடன் இருந்தார்கள். இந்தியாவில் அநேக கிராமங்கள் இருப்பதைப் போன்றே அநேக வார்தாக்களும் இருக்கின்றன. இந்தப் பொருட்காட்சியை ஆரம்பித்து வைத்துக் காந்திஜி பேசியது இந்தப் பட்டண வாசிகளுக்கேயாகும்.

அவர் கூறியதாவது: “மகன்வாடிக்கு நான் வரும் வழியில் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் நடக்கும் வாரச் சந்தையைப் பார்த்தேன். மூலப்பொருள்களும், மூலப்பொருளைக் கொண்டு தயாரானவைகளும் சந்தைக்கு ஏராளமாக வந்திருந்தன. இந்தக் காட்சியில் அப்பொருள்கள் அதிகச் சாதாரணமான முறையில் வைக்கப்பட்டிருந்தன. இந்த வாரச் சந்தையோடு ஒப்பிட்டால் நமது பொருட்காட்சி எப்படியிருக்கும் என்று ஆச்சரியப்பட்டேன். இதில் அடிப்படையான வித்தியாசம் உண்டு. கிராம மக்களுக்கும் பட்டணவாசிகளுக்கும் சேவை செய்யும் நோக்கத்துடனே பொருட்காட்சி முற்றிலும் வைக்கப்பட்டிருக்கிறது. ஆனல், சந்தையோ, கிராமவாசி சுரண்டப்படும் ஒரு வர்த்தக ஸ்தாபனம். கிராமவாசி தன்னுடைய பொருள்களை, சாத்தியமானவரை குறைந்த விலைக்கு, அநேக சமயங்களில் அடக்க விலைக்கும் குறைவாகவே விற்றுவிடும்படி செய்யப்படுகிறான். இந்தப் பொருட்காட்சியிலோ, விற்பதுமில்லை, வாங்குவதும் இல்லை. தங்களைச் சுற்றிலுமுள்ள கிராமங்களுக்குத் தாங்கள் செய்ய வேண்டிய கடமை இன்னதென்பதை அறியும்படி செய்வதோடு, ஒவ்வோர் வழியிலும் தங்கள் வாழ்வை மேன்மைப்படுத்திக் கொள்ளுவதற்குச் சாத்தியமானது என்ன என்பதைக் கிராமவாசிகள் அறிந்துகொள்ளும்படி செய்ய முயற்சிப்பதே இந்தப் பொருட்காட்சி. கிராமங்களைச் சுத்தமாக வைத்துக்கொள்ளுவது எப்படி, எதைச் சாப்பிட

வேண்டும், தங்களுடைய கைத்தொழில்களில் அபிவிருத்தி செய்து இப்பொழுது சம்பாதிப்பதைவிட இன்னும் கொஞ்சம் அதிகமாகச் சம்பாதிப்பது எப்படி என்பதை இப்பொருட் காட்சி கிராமவாசிகளுக்குப் போதிக்கிறது. பட்டணத்தில் வசிப்போரைப் பொறுத்தவரையில் என்னென்ன வழிகளிலெல் லாம் அவர்கள் கிராமவாசிகளைச் சுரண்டி வருகிறார்கள், அக் கிராமவாசிகள் தயாரிக்கும் பொருள்களை வாங்குவதன் மூலம் எவ்வளவு தூரம் கிராமவாசிக்கு இவர்கள் உதவி செய்ய முடியும் என்பதை இக்கண்காட்சி பட்டணவாசிகளின் மனத்தில் கட் டாயமாகக் கொண்டு வருகிறது. நமது கிராமக் கைத்தொழில் வல்லுநர்கள் எவ்வளவு அற்புதமான சக்தி படைத்தவர்கள் என் பதை லட்சுமணபுரி பொருட்காட்சியைப் பார்த்தவர்கள் அறிந்து கொள்ள முடிந்தது. இந்தப் பொருட்காட்சியும் ஓரளவுக்கு அதையே செய்யும். இப்பொருட்காட்சியைப் பார்க்க இலவச மாக அனுமதிக்கப்பட்ட போதிலும் லட்சுமணபுரியில் கட்டணம் வசூலிக்கப்பட்டது என்பதையும் இங்கே கூற விரும்புகிறேன். அப்பொருட்காட்சி பெரிய நஷ்டத்தில் முடிந்தது என்று செய்தி கள் வெளியாகியிருக்கின்றன. அச்செய்திகள் தவறானவை. பிரவேசச் சீட்டுகள் விற்றதன் மூலம் ரூ. 25,000-க்கு மேல் வசூலாகியிருக்கிறது. கடைக்காரர்களிடம் வாங்கிய கட்டணம் வேறு இருக்கிறது. ஆகையால், பெயரளவுக்குக் கொஞ்சம் லாபமே இருப்பதும் சாத்தியம். லட்சுமணபுரியிலிருந்த பொருட்காட்சியைப் போன்ற ஒன்றை லட்சுமணபுரியைச் சுற்றிலும் உள்ளவர்கள் இன்னும் பல ஆண்டுகளுக்குப் பார்க்கப் போவதில்லை. கும்பமேளா உற்சவங்கள், அதிக கால இடை வெளியே நடந்தாலும், ஒழுங்காக நடந்து வருகின்றன. காங் கிரஸ் மகாநாடும் பொருட்காட்சியும் திரும்பவும் ஒரே இடத்தில் நடக்காது போகலாம். அப்படியே நடந்தாலும், ஒன்றுக் கொன்று அதிக கால இடைவெளியில்தான் நடக்கும். காங்கிரஸ் மகாநாடு நடப்பதற்குச் சிறு பட்டணங்களையே தேர்ந்தெடுப்ப தைத்தவிர பெரிய நகரங்களைத் தேர்ந்தெடுப்பதில்லை என்ற மனோபாவம் இருப்பதாக நான் நம்புவதாலேயே முக்கியமாக இவ்வாறு கூறுகிறேன். ஆனால், இது போன்ற உள்ளூர்ப் பொருட்காட்சிகள், வருடந்தோறும் நடக்க வேண்டிய, செலவு அதிகமில்லாத, போதனை பலன் பெருகிவரும் முயற்சிகளாக இருக்க வேண்டும். உதாரணமாக, கிரா மத்து வாணியர் மிக மோசமான நிலைமைக்கு வந்து விட்டார். எண்ணெயில் மலிவான போலிச் சரக்குகளைக் கலப் படம் செய்துவிடுகிறார். முற்றிலும் சுத்தமான தான, கலப்பட மில்லாத எண்ணெயைத் தயாரிப்பது அவருக்கு எவ்வளவு லாபகரமானது என்பதை அவர் இங்கே அறிந்து கொள்ளுவார். காகிதத்தைச் சுத்தமானதாகவும், நீடித்து நிற்கக்கூடியதாகவும் செய்வது எப்படி என்பதைக் காகிதம் செய்பவர் இங்கே கற்றுக்கொள்ளுவார். நாள் போகப் போக இந்தத் தொழில் முறைகளிலெல்லாம் அபிவிருத்திகளையும் நாம் காட்ட முடியும்.

நமது சுற்றுப்புறங்களிலோ, பக்கத்திலுள்ள கிராமங்களிலோ, இவ்வருடத்தில் மிகக் கொஞ்சப் பலனையே நாம் உண்டாக்க முடிந்தது என்பதை நான் அறிவேன். ஆனால், அதனால் நான் ஏமாற்றம் அடைந்துவிடவில்லை. நாம் முயற்சி செய்து கொண்டே போக வேண்டும். இங்கே வந்திருப்பவர்கள், விளம்பரம் செய்பவர்களாகக் கிராமங்களுக்குப் போய் இத்தகைய பொருட்காட்சிகளைக் கிராமவாசிகள் பார்க்கும்படி செய்ய வேண்டும். பட்டணவாசிகள், கிராமங்கள் விஷயத்தில் நாளுக்கு நாள் அதிகச் சிரத்தையற்றவர்களாக இருப்பதோடு சீக்கிரத்திலேயே கிராமங்கள் அழிக்கப்பட்டுவிடும் என்றுகூட நம்புகிறவர்களாகிவிட்டதுதான் இன்றுள்ள பெரிய துர்ப்பாக்கியமாகும். கையினால் செய்த பொருள்களை வாங்காமல் ஆலைகளில் தயாரான பொருள்களையே வாங்கிக்கொண்டு போவோமாயின் கிராமங்கள் நிச்சயமாக அழிந்து போகும். இங்கே வந்திருக்கும் நீங்கள், கிராம மனப்பான்மை தருமத்தை உபதேசிப்பவர்களாக வெளியில் போக வேண்டும்.

"ஒரு யந்திரத் தொழிற்சாலை சில நூறு பேர்களுக்கு வேலை கொடுத்து ஆயிரக்கணக்கானவர்களை வேலையில்லாது திண்டாடும்படி செய்கிறது. ஓர் எண்ணெய் மில்லில் டன் கணக்கில் எண்ணெயை நான் தயாரித்துவிடலாம். ஆனால், அதே சமயத்தில் ஆயிரக்கணக்கான வாணியர்களை வேலையில்லாது திண்டாடும்படி செய்துவிடுவேன். நான் இதை அழிக்கும் சக்தி என்கிறேன். ஆனால், கோடிக்கணக்கான கைகளின் உழைப்பினால் உற்பத்தி செய்வது ஆக்கமளிப்பதாவதோடு எல்லோருடைய நன்மைக்கும் உகந்தது. சக்தியைக்கொண்டு இயங்கும் யந்திரங்களின் மூலம் ஏராளமாக உற்பத்தி செய்து குவிப்பது, அரசாங்கத்திற்குச் சொந்தமான தொழிலாகவே இருப்பினும், இவ்வகையில் பயன் தராது.

"கோடிக்கணக்கான மக்களின் உழைப்பைக் குறைத்து, அறிவுத் துறையில் முன்னேறுவதற்கு அவர்களுக்கு அதிக அவகாசத்தை ஏன் கொடுக்கக்கூடாது என்று கேட்கப்படுகிறது. ஓரளவுக்குத்தான் ஓய்வு நல்லது, அவசியமானது. நெற்றி வியர்வை நிலத்தில் சிந்திப் பாடுபட்டு உழைத்துச் சாப்பிடும் வகையிலேயே கடவுள் மனிதனைப் படைத்திருக்கிறார். ஜாலவித்தைக்காரன் ஒன்றை வரவழைத்துக் காட்டிவிடுவதைப் போல உணவுப் பொருள்களுள்பட நமக்குத் தேவையான எல்லாவற்றையுமே உற்பத்தி செய்து கொண்டுவிட நம்மால் முடிந்துவிடும் என்பதை எண்ணிப் பார்க்கவும் எனக்குத் திகிலாக இருக்கிறது."

—'ஹரிஜன்'–16—5—1936

# 8

# ஓர் அமெரிக்கரின் கேள்விகள்

ராஜீயப் பிரச்னைகளைப்பற்றி மாத்திரமேயன்றி, சர்வதேச உறவுகள், வர்த்தக, சமூக சம்பந்தங்கள் ஆகியவைகளைக் குறித்தும் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி சமீபத்தில் செய்திருக்கும் முடிவுகளைக் குறித்து* ஓர் அமெரிக்கப் பத்திரிகையாளர் முக்கியமான கேள்விகளைக் கேட்க விரும்பினர்.

"ஹிட்லரின் தத்துவத்திலிருந்து உலகத்தைக் காப்பதற்கு இந்தியா செய்திருக்கும் காரியம் என்ன?" என்பது அவருடைய முதல் கேள்வி. இதற்குக் காந்திஜி அளித்த பதில், அவர் எதிர்பார்த்தபடியே சுருக்கமானதாகவும் இனிமையானதாகவும் இருந்தது. அதாவது, "காங்கிரஸ் அதன் அகிம்சா முயற்சியில் வெற்றி பெறுமானல், ஹிட்லர் தத்துவமும் அதுபோன்ற எல்லாத் தத்துவங்களுமே தாமே ஒழிந்துவிடும்" என்பதே காந்திஜியின் பதில்.

"இந்தியாவைப் பற்றிய உண்மைகள் இன்னும் நன்ருகத் தெரியும்படி இந்தியா செய்வதோடு, இவ்வகையில் சரக்குகளையும் கருத்துக்களையும் இரு நாடுகளும் பரிமாறிக்கொள்ளும்படி செய்யவேண்டும் என்பது பற்றி என்ன நினைக்கிறீர்கள்? இது சம்பந்தமாக என்ன செய்ய வேண்டும் என்று எண்ணுகிறீர்கள்?" என்பது அப்பத்திரிகையாளரின் அடுத்த கேள்வி.

---

* 1940, செப்டம்பர் 15–ஆம் தேதி பம்பாயில் கூடிய அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் நிறைவேறிய தீர்மானம், காந்திஜியால் தயாரிக்கப்பட்டதாகும். யுத்தத்தின் காரணமாகப் பிரிட்டிஷ் சர்க்கார் அபாய நிலையை எதிர்நோக்கிக் கொண்டிருப்பதால், அதற்குக் காங்கிரஸ் எவ்விதமான இடைஞ்சலும் செய்ய விரும்பவில்லை என்றும், ஆனுலும், சுயமாக விதித்துக்கொண்ட இந்தக் கட்டுப்பாட்டைச் சுயநாசத்தின் எல்லைவரையிலும் கொண்டுபோக முடியாது என்றும் அத்தீர்மானம் கூறியது. மேலும், உலகமெங்கும் ஆயுதங்களை அடியோடு ஒழித்து விடவேண்டும் என்று வற்புறுத்தி, அதற்காகச் சுதந்திர இந்தியா பாடுபடும் என்றும், அவ்விஷயத்தில் வழிகாட்டுவதற்கும் இந்தியா தயாராக இருக்கவேண்டும் என்றும் தெரிவித்தது. தீர்மானத்தின் இறுதியில் காணப்படும் வாசகம் பின்வருமாறு:

"ஆயுத ஒழிப்பை நடைமுறைக்குக் கொண்டு வருவதும், உலக சமாதானத்தை நிலைநாட்டுவதும், யுத்தங்களுக்குக் காரணமாக இருப்பவற்றை ஒழிப்பதைப் போறுத்தே இருக்கின்றன. ஒரு நாட்டின் மீது மற்றொரு நாடு ஆதிக்கம் செலுத்துவதற்கும், ஒரு நாட்டு மக்களை மற்றொரு நாட்டு மக்கள் சுரண்டுவதற்கும் முடிவு கட்டுவதன் மூலம், யுத்தத்துக்குரிய காரணங்களை ஒழிக்கவேண்டும். அந்த லட்சியத்திற்காக இந்தியா சமாதானமான முறையில் வேலை செய்துவரும். இந்திய மக்கள் இந்த நோக்கத்தைக் கருத்தில் கொண்டே சுதந்திர நாட்டினர் என்ற அந்தஸ்தைப் பெற விரும்புகிருர்கள். இப்படிப்பட்ட சுதந்திரம், உலக சமாதானத்திற்காகவும், முன்னேற்றத்திற்காகவும் சுதந்திர நாடுகளுடன் நட்புறவு கொள்ளுவதற்கு ஒரு தோற்றுவாயாக இருக்கும்."

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "முதலாவதாக, சரக்குகளை எடுத்துக்கொள்ளுவோம். இதில் இந்திய நிலைமையையோ, இந்திய மக்களின் விருப்பத்தையோ கவனிக்காமல் அமெரிக்கா ஓரளவுக்குத் தன் காரியத்தைச் செய்துகொண்டுதான் இருக்கிறது. கருத்துக்களைப் பொறுத்தவரையில், அமெரிக்காவில் நடந்துவரும் இந்திய எதிர்ப்புப் பிரசாரம், மறுக்க முடியாத வகையில் நடந்துகொண்டுதான் வருகிறது. இதனால், பிரசித்தி பெற்ற பெரியாரான டாகுர் போன்ற ஒருவர் அங்கே போயும் அமெரிக்கரின் மனத்தில் கொஞ்சமும் மாறுதலை உண்டாக்க முடியவில்லை. இது என்னுடைய துக்ககரமான அனுபவம்."

"ஆனால், தன்னைப்பற்றி அமெரிக்காவில் சரியான உண்மைகள் தெரிந்திருக்கும்படி செய்ய இந்தியா ஏன் முயற்சி செய்யக்கூடாது?"

"இந்தியாவைப்பற்றிய உண்மை நிலையை எடுத்துக்கூறும் பிரசுரங்கள் நாளுக்கு நாள் அதிகமாகிக்கொண்டிருக்கின்றன. குறிப்பிட்ட ஒரு சந்தர்ப்பத்தில் இந்தியாவின் கருத்து என்ன என்பதை அமெரிக்கா உண்மையாகவே அறிய விரும்புமானால், அவர்களுக்கு அப்பிரசுரங்கள் இருக்கின்றன. இந்தியாவின் சார்பில் பிரசாரம் செய்வதற்கு அங்கே ஓர் இந்திய ஸ்தாபனம் இருக்கவேண்டும் என்பதே உங்கள் கருத்தாக இருந்தால், இதிலும் எங்களுக்குக் கசப்பான அனுபவம் உண்டு. அங்கே எவ்வளவோ திறமையாகவும், விடாமுயற்சியோடும், ஏராளமான செலவிலும் ஏகாதிபத்தியப் பிரசாரம் நடந்து வருகிறது. எங்கள் பிரசாரம் அந்தப் பிரசாரத்தை மிஞ்சிவிடமுடியாது. அதோடு நீங்கள் எண்ணுவதைப்போன்ற பிரசார ஸ்தாபனத்தின் வேலையெல்லாம் இதுவரை பயனற்றுப்போயிருக்கிறது என்பதும் நிரூபணமாகியிருக்கிறது."

அப்பத்திரிகையாளரின் அடுத்த கேள்வி விசித்திரமானது: "இந்திய மக்கள், இந்தியாவில் கையினாலேயே நூற்ற துணியை உபயோகித்து, இந்திய மில்களில் உற்பத்தியாகும் நூலையும் துணியையும் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதிலேயே அவை சுறுசுறுப்பாக இருக்கும்படி ஏன் செய்யக்கூடாது? பருத்தி சாகுபடி செய்கிறவர்களுக்கு இது உதவியாக இருக்கும் என்று நீங்கள் கருதவில்லையா?" சுதந்திரமடைந்துவிட்டது இந்தியா என்று அவர் எண்ணிக்கொண்டிருந்தார் போலும்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "அப்படி நடப்பதாயிருந்தால் பரவாயில்லை. ஆனால், எங்கள் துணியை வாங்கிக்கொள்ளும் நாட்டின் நிச்சயமான தேவைக்குக் கொடுப்பதாக அது இருக்கவேண்டும். இந்தியாவின் நன்மைக்காக மற்ற நாடுகளைச் சுரண்டுவது என்ற கருத்தே எனக்கு இல்லை. நாங்களே விஷமானதான சுரண்டல் நோயினால் பாதிக்கப்பட்டுக் கஷ்டப்

பட்டு வருகிறோம். அத்தகைய காரியம் எதையும் செய்யும் குற்றமுள்ளதாக என் நாடு இருப்பதை தான் விரும்பமாட்டேன். ஜப்பான் சுதந்திர நாடாக இந்தியாவின் உதவியை நாடுகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். நாங்கள் மலிவாகச் சில சாமான்களைத் தயாரித்து ஜப்பானுக்கு ஏற்றுமதி செய்யலாம் என்று ஜப்பான் சொன்னால், மகிழ்ச்சியுடன் அப்படியே செய்வோம். ஆனால், ஒரு நாடு தன்னுடைய ராணுவம், கடற்படை ஆகியவைகளின் உதவியுடன் தனது சரக்குகளை இன்னொரு நாட்டில் கொண்டுபோய்க் குவிப்பது என்பது, நான் எண்ணுகிற வகையில், அடியோடு நின்றுகவேண்டும்.''

''வர்த்தகப் பொருள்கள் நீங்கலாக, அமெரிக்காவுக்கு இந்தியா கொடுக்கக்கூடியது என்ன? இதற்குப் பதிலாக அமெரிக்காவினிடமிருந்து இந்தியா என்ன எதிர்பார்க்கிறது?''

''உங்களுக்காக உங்கள் கேள்வியை நான் திருத்தவேண்டும். அமெரிக்காவுக்கு இந்தியா எந்த வர்த்தகப் பொருள்களையும் அனுப்பவில்லை: மூலப்பொருள்களை மாத்திரமே அனுப்புகிறது. ஒவ்வொரு தேசீயவாதியும் ஆழ்ந்து சிந்தித்தாகவேண்டிய விஷயம் இது. ஏனெனில், மூலப்பொருள்களை மாத்திரம் ஏற்றுமதி செய்யும் நாடாகவே இந்தியா இருந்து வர முடியாது. அதன் பொருள் (இதுவரையில் நடந்து வந்திருப்பதுபோல) கைத்தொழிலும் கலையும் அழிந்துவிடுவதாகவே ஆகும். இந்தியாவை அமெரிக்கா சுரண்டுவதற்கு ஏற்ற நாடாக அமெரிக்கா கருதாமல், நிராயுதபாணியாக இருந்தாலும் இந்தியா சுதந்திர நாடு என்று அமெரிக்கா கருதவேண்டும் என்றே நான் எதிர்பார்ப்பேன். ஆகவே, தன்னை இந்தியா எப்படி நடத்தவேண்டும் என்று அமெரிக்கா எதிர்பார்க்குமோ, அதே மாதிரி நடத்தப்படுவதற்கான உரிமை இந்தியாவுக்கு இருக்கிறது என்று அமெரிக்கா கருதவேண்டும் என்றும் எதிர்பார்ப்பேன்."

"ஐயா, ஏசுநாதரின் போதனையைத்தான் நீங்களும் சொல்லுகிறீர்கள்" என்றார், நிருபர்.

காந்திஜி கூறியதாவது: ''ஒப்புக்கொள்ளுகிறேன். யந்திர நுட்பத் திறமை எங்களுக்குக் குறைவு. ஆனால், நீங்கள் ஏசுநாதரின் உபதேசங்களை ஏற்றுக்கொண்டு அதன்படி நடக்கச் சம்மதித்ததுமே, எல்லா நுட்பத் திறமையும் அமெரிக்காவின் ஏகபோகச் சொத்தாக இருந்து வருகிறதே என்று நான் குறை கூற வேண்டியிராது. அப்பொழுது நீங்கள், 'இந்தியா நம் சகோதர நாடு, அது நுட்பத் திறமை இல்லாமல் இருக்கிறது. சுரண்டுவதற்காகவோ பயங்கரமான அதிக விலைக்கோ அல்லாமல், இந்தியாவின் நன்மைக்கேயன்றி வேறு எதற்காகவுமல்லாமல் நமது நுட்ப நிபுணத்துவ உதவியை அதற்கு அளிப்போம்,

என்று கூறுவீர்கள். இச்சமயத்தில் உங்கள் பாதிரிமார்களைக் குறித்தும் நான் இங்கே ஒரு வார்த்தை சொல்லவேண்டும். அவர்களை இனமாகத்தான் இங்கே நீங்கள் அனுப்புகிறீர்கள். ஆனால், இதுவும் ஏகாதிபத்தியச் சுரண்டலில் ஒரு பகுதி. ஏனெனில், உங்களை நாங்கள் விரும்பும்படி செய்யவும், உங்கள் சரக்கை நாங்கள் வாங்கும்படி செய்யவும், உங்களுடைய மோட்டார்களும் ஆடம்பரப் பொருள்களும் இல்லாமல் வாழ முடியாது என்று நாங்கள் நினைக்கும்படி செய்யவும் அவர்கள் எண்ணுகிறார்கள். ஆகவே, நீங்கள் எங்களுக்கு அனுப்பும் கிறிஸ்தவம் கலப்படமானதாகிறது. கிறிஸ்தவர் என்று சொல்லப்படுகிற ஜனத்தொகையின் எண்ணிக்கையை அதிகரிக்கும் நோக்கம் இல்லாமல் உங்கள் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், ஆஸ்பத்திரிகள் ஆகியவைகளை நீங்கள் அமைப்பீர்களாயின் உங்கள் தரும காரியம் மாசற்றதாக இருக்கும்.

"யந்திர நுட்பத் திறமையைப் பொறுத்தவரையில், டாட்டா கம்பெனியார் செய்வதைப் போன்று நான் செய்ய முடியாது. அமெரிக்க நிபுணரான ஒருவரை ரூ. 20,000 மாதச் சம்பளத்தில் மானேஜராகக் கொண்டு வருவது அவர்களால் முடியும். புது முயற்சியில் தீவிரமாக இறங்கும் தன்மைக்கு அவர்கள் எடுத்துக்காட்டு. ஆனால், ஏழை இந்தியாவுக்கு அவர்கள் எடுத்துக்காட்டாக ஆகமாட்டார்கள். இந்தியாவில் ஏழு லட்சம் கிராமங்கள் இருக்கின்றன. நாட்டின் ஜனத்தொகையில் 90 சதவிகிதத்தினர் கிராமங்களில் வசிக்கிறார்கள். இதையெல்லாம் அமெரிக்கா எண்ணிப்பார்க்க வேண்டும். அமெரிக்கா உண்மையிலேயே உதவியாக இருக்க வேண்டுமானால், தனக்குள்ள வசதிகளை இந்த விதத்தில் பயன்படுத்த வேண்டும். இதற்கு அமெரிக்கா இன்றைக்கு இருப்பதைப் போல ஏற்றுமதி செய்வதில் முதல்தரமான நாடாக இருக்கக்கூடாது. தேசீய அபிவிருத்தித் திட்டங்களைக் குறித்து நான் கொண்டிருக்கும் கருத்து, இப்பொழுது மற்றவர்களுக்கு இருந்துவரும் கருத்துக்கு மாறுபட்டது. யந்திரத் தொழில் வளர்ச்சி வகையில் அபிவிருத்தியை நான் விரும்பவில்லை. யந்திரத் தொழில் தொற்று நோய் பற்றிக்கொண்டு விடாமல் எங்கள் கிராமங்களைப் பாதுகாக்க வேண்டும் என்று விரும்புகிறேன். அமெரிக்காவின் சுரண்டல், சுரண்டப்பட்ட நாடுகளின் ஒழுக்கத்தையோ, சுரண்டிய நாட்டின் ஒழுக்கத்தையோ உயர்த்திவிடவில்லை. ஆனால், அதற்கு மாறாக ஆன்ம வளர்ச்சிக்கான வழியில் அந்நாடுகள் முன்னேறுவதைத் தடுத்து, அமெரிக்காவின் உண்மையான தரும உணர்ச்சியையும் உயிரற்றதாக்கி விட்டது. அமெரிக்கா கண்டிருப்பதைப் போன்ற விசித்திர காரியங்கள் இந்தியாவில் நடக்க முடியாது. அநேக டன்கள் சர்க்கரையையும் மற்ற விளைபொருள்களையும் அவர்கள் அழித்திருப்பதையே கூறுகிறேன். இந்தச் சர்க்கரையையும் கோதுமையையும் நீங்கள் மற்ற நாடுகளுக்குக் கொடுத்து உதவியிருக்கலாம். இல்லாவிட்டால்

அமெரிக்காவில் வேலையில்லாது திண்டாடுகிறவர்களுக்காவது கொடுத்துத் தின்னச் செய்திருக்கலாம்.''

அங்கிருபர் சிரித்துக்கொண்டே, ''எங்கள் பன்றிகளை நீங்கள் வாங்கிக்கொள்ள மாட்டீர்களே!'' என்றார்.

''உண்மை. ஆனால், எல்லோரும் என்னைப்போல எண்ண வில்லை. யந்திரத் தொழில் மயமாக வேண்டும் என்று பண்டித நேரு விரும்புகிறார். ஏனெனில், அத்தொழிலை நாட்டின் பொதுச் சொத்தாக்கிவிட்டால், முதலாளித்துவத்தின் தீமைகள் அதில் இல்லாதிருக்கும் என்று அவர் கருதுகிறார். ஆனால், யந்திரத் தொழிலில் இயல்பாக உள்ளவை அத்தீமைகள். ஆகையால், என்னதான் அதைப் பொதுச் சொத்தாக்கினாலும் அத்தீமை களைப் போக்கிவிட முடியாது என்பது என் சொந்த கருத்து.''

—'ஹரிஜன்'–29—9—1940

பகுதி மூன்று

# ஆட்சேபங்களுக்குப் பதில்

## 1

## சில கேள்விகள்

கேள்வி: நாகரிகத்திற்குக் கேடாக விளைந்திருப்பது யந்திரம் என்று நீங்கள் கூறுகிறீர்கள். அப்படியானால், நீங்கள் ஏன் ரெயில் வண்டிகளிலும் மோட்டார்களிலும் பிரயாணம் செய்ய ஒப்புக்கொள்ளுகிறீர்கள்?

பதில்: நீங்கள் தவிர்த்து வந்தாலும்கூட நீங்கள் உடனேயே தப்பிவிட முடியாத சில விஷயங்கள் இருக்கின்றன. நான் அடைத்து வைக்கப்பட்டிருக்கும் இவ்வுடலாகிய பாண்டமே என் வாழ்க்கைக்கு ஒரு தீமை. என்றாலும், அதை ஒருவாறு சகித்துக்கொண்டு அதனுடன் ஈடுபடத்தான் வேண்டியிருக்கிறது என்பதை நண்பரே அறிவார். சென்ற யுத்த சமயத்தில் திட்டமிட்டுச் செய்யப்பட்ட கொலைகளுக்கெல்லாம் யந்திர யுகம்தான் பொறுப்பு என்பதை அவர் உண்மையாகவே சந்தேகிக்கிறாரா! மூச்சுத் திணறச் செய்யும் விஷவாயுக்களும் அதைப் போன்ற பயங்கரமான பொருள்களும் ஓர் அங்குலங் கூட நம்மை முன்னேற்றிவிடவில்லை.

கே: சிறந்த பொருளை மலிவாகக் கிடைக்கும் இடத்தில் மனிதன் வாங்கவேண்டும் என்ற பொருளாதார சாஸ்திரம் தவறானதா?

ப: இக்காலப் பொருளாதார பண்டிதர்கள் விதித்து வரும் கோட்பாடுகளில் கொஞ்சமேனும் இரக்கமற்றதாயுள்ளவைகளில் அதுவும் ஒன்று. மேலும், இத்தகைய பிசுனாரித்தனமான காரியங்களைக்கொண்டே மனித உறவுகளை நாம் எப்பொழுதும் முடிவு செய்வதில்லை. இத்தாலிச் சுரங்கத் தொழிலாளிகள் குறைந்த கூலிக்குக் கிடைப்பதாக இருந்தும் ஆங்கிலேயர், ஆங்கிலேயச் சுரங்கத் தொழிலாளிக்கே அதிகக் கூலி கொடுக்கிறார். இது சரியானதேயாகும். இங்கிலாந்தில், குறைந்த கூலிக்குக் கிடைக்கும் தொழிலாளரைக் கொண்டுவர ஏதாவது முயற்சி நடந்தால் அங்கே புரட்சியே உண்டாகிவிடும். இப்பொழுது இருக்கும் வேலையாளைவிட அதிகத் திறமையுள்ளவனும் குறைந்த ஊதியத்திற்கு வரக்கூடியவனுமான ஒரு வேலையாள் கிடைக்கிறான் என்பதற்காக, இப்பொழுது இருக்கும் வேலையாளைப் போலவே புதிய ஆளும் விசுவாச

முள்ளவனே என்றாலும், இப்பொழுது அதிகச் சம்பளம் வாங்கிக்கொண்டிருக்கும் விசுவாசமுள்ள வேலைக்காரனை நான் நீக்கினால் அது பாவமான செய்கையேயாகும். ஒழுக்கம், மனிதனுடைய உணர்ச்சியைப் பற்றியவைகள் ஆகியவைகளை மதிக்காத பொருளாதாரம், மெழுகுப் பொம்மைகளைப் போன்றதாகும். அந்தப் பொம்மைகள் மனிதனைப் போன்றே இருக்கலாம். என்றாலும், உயிருள்ள சதைக்கு இருக்கும் ஜீவன் அதற்கு இல்லை. நெருக்கடியான சமயம் வரும்போதெல்லாம் இப்புதிய பொருளாதார விதிகளெல்லாம் நடைமுறையில் உடைந்தே போகின்றன. இவற்றை வழிகாட்டும் கோட்பாடுகளாக ஏற்றுக் கொள்ளும் நாடுகளோ, தனிப்பட்டவர்களோ அழிந்து தான் போவார்கள். மதத்தின் முறைப்படி தயாரிக்கப் படும் உணவுக்கு ஒரு முஸ்லிம் அதிகப் பணம் கொடுக்கத் தயாராயிருப்பதிலும், உணவு ஆசாரப்படி சுத்தமாகத் தயாரிக்கப்பட்டிருந்தாலன்றி அதைச் சாப்பிடுவ தில்லை என்று ஒரு ஹிந்து மறுப்பதிலும் உள்ள தன்னல மறுப்பில், உயர்வானது ஏதோ இருந்தே வருகிறது. நமக்கு வேண்டிய துணிகளை, மலிவாகக் கிடைக்கும் இங்கிலாந்து ஜப்பான் மார்க்கெட்டுகளில் நாம் வாங்க ஆரம்பித்ததுமே கெட்டுவிட்டோம். நமக்கு அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள், அவர்களின் குடிசைகளில் தயாரிக்கும் துணிகளை நாம் வாங்கு வது நமது தெய்வீகமான கடமை என்பதை நாம் உணர ஆரம்பித்துவிட்டோமானால், நாம் மீண்டும் வாழ்வைப் பெறுவோம்.

**கே:** நாட்டில் அநேகர் அரை நிர்வாணமாக இருந்துவரும் போது, வரப்போகும் குளிர் காலத்தைக் குறித்து எண்ணும் போது உடல் நடுங்கிக்கொண்டிருக்கும்போது, அந்நியத் துணிகளை நீங்கள் சொக்கப்பனையாகக் கொளுத்தி வருவதில் ஆன்மிக அல்லது வேறு ஏதோ அழகு இருப்ப தாக நீங்கள் விவரிக்கிறீர்களா?

**ப:** ஆம். ஏனெனில், வீட்டில் சமைத்த உணவை மாத்திரமே நாம் சாப்பிட வேண்டியதைப் போலவே, கையினால் நூற்ற நூலினாலான துணியையே உடுத்த வேண்டும் என்ற அடிப்படையான நியதியை இந்தியர் அக்கிரமமாக அலட்சியம் செய்து விட்டதனாலேயே அவர்கள் அரை நிர்வாணமாக இருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன். நான் வெறுத்துத் தள்ளும் அந்நியத் துணிகளை நான் கொடுப்பதால் அவர்களுடைய வேதனைதான் நீடித்துக் கொண்டு போகும். அத்துணிகளைக் கொளுத்துவதனால் ஏற்படும் உஷ்ணம் அத்துணியின் கடைசித் துண்டு எரியும் வரையில் நீடிக்குமாயின் அந்த உஷ்ணம் என்றும் இருந்து கொண்டிருக்கும். தொடர்ந்து வரும் ஒவ்வொரு குளிர்

காலத்திலும் நாட்டு மக்கள் மேலும் மேலும் அதிகமான சக்தியைப் பெறுவார்கள்.

—'எங் இந்தியா'-27—10—1921

# 2

# நூற்பதும் மாணவர்களும்

மாணவர்களுடன் பேசியதைச் சுருக்கிச் சொல்லவேண்டும் என்ற ஆசையே எழுகிறது. ஆனால், அது முடியாத வேலை. எல்லா இடங்களிலுமே காந்திஜியை நீண்ட நேரம் தங்களுடன் உள்ளம் கலந்து பேசும்படி செய்துவிடும் அதிர்ஷ்டசாலிகளாகவே மாணவர் இருந்தனர். ஒவ்வோர் ஆங்கிலச் சிறுவனுக்கும் கடற்படைப் பயிற்சி எவ்வளவு முக்கியமோ, கிழக்கு வங்காளச் சிறுவனுக்கு நீச்சலும் படகு ஓட்டுவதில் பயிற்சியும் எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியம் இந்திய மாணவர்களுக்கு நூற்பது என்று சிட்டகாங் மாணவர்களுக்குக் காந்திஜி கூறினர். தேசீயக் கல்வி என்றால் என்ன என்பதைக் குறித்து கோமில்லா மாணவர்களுக்குக் காந்திஜி சொன்னர். தேச மக்கள் எல்லோரிடமும், 'உங்களுக்குச் சகோதர உணர்ச்சி உண்டாகும்படி எந்தக் கல்வி உங்களுக்குப் போதிக்கிறதோ, உங்கள் தேச மக்கள் அவர்கள் எங்கே இருந்து வந்தாலும், அவர்களுடைய துயரங்களை அறிந்து நீங்கள் மனமுருகும்படி எந்தக் கல்வி உங்களுக்குப் போதிக்கிறதோ, அந்தக் கல்வியே தேசீயக் கல்வி" என்றார். தேசீய நோக்கத்துடனேயே எதையும் எண்ணும்படி எக்கல்வி உங்களைச் செய்கிறதோ, ஒரு குறிப்பிட்ட காரியம் தனிப்பட்ட முறையில் உங்களுக்கு எவ்விதம் நன்மை தரும் என்பதை எண்ணுமல் பொதுவாக நாட்டுக்கு அதனால் என்ன நன்மை என்பதையே நீங்கள் எண்ணிப் பார்க்கும்படி எக்கல்வி செய்கிறதோ, அதுவே தேசீயக் கல்வி என்றார். நூற்கும் ராட்டையைப் போல எல்லாருக்குமே பயனளிப்பதாக இருப்பது வேறு எதுவும் இல்லை என்றார். டாக்காவில் மாணவர்களின் கூட்டம் ரத்துச் செய்யப்பட்டுவிட்டது. ஆனால், மற்றப் பொதுக் கூட்டங்கள் போன்ற தமது வேலைகளெல்லாம் முடிந்த பிறகு தம்மிடம் வந்து பேசிக்கொண்டிருந்துவிட்டுப் போகும்படி மாணவர்களுக்குக் கூறினர். அவர்கள் கனவில்கூட எண்ணியிருக்க முடியாததற்கு அதிகமாகவே காந்திஜியுடன் உரையாடினர். யாராவது எதிர்த்து வாதிக்கும்போது காந்திஜி மிக அழகாகப் பதில் சொல்லுவார். நூற்பது, உடல் சக்தியும் நேரமும் விணகும் வேலை என்று கூறி ஒரு நண்பர் ஆட்சேபித்தார். இன்னொருவர். வேலையைப் பகிர்ந்துகொண்டு அவரவர் அவரவர்கள் வேலையைச் செய்ய வேண்டும் என்ற தத்துவத்தைக் கவனிப்பதாக இல்லை காந்திஜி

யின் உபதேசம் என்றார். இவற்றிற்குப் பதிலளித்த காந்திஜி தமது உள்ளத்தைத் திறந்து கூறினார்: "நாள் முழுவதும் நூற்றுக்கொண்டே இருக்க வேண்டும் என்று நான் சொல்லு கிறேனா? ஜீவனத்திற்கான முக்கியத் தொழிலாக அதை மேற் கொள்ள வேண்டும் என்று கூறுகிறேனா? அப்படியெல்லாம் இல்லாமல் இருக்கும்போது, வேலையைப் பகிர்ந்துகொண்டு அவரவர் வேலையை அவரவர் செய்துவர வேண்டும் என்ற தத்துவத்திற்கு இது எவ்விதம் முரணானதாகும்? உண்பதி லும் குடிப்பதிலும் வேலையைப் பங்கிட்டுக்கொள்ளுவது என்பது உண்டா? நாம் ஒவ்வொருவரும் எவ்விதம் நமக்கு நாமே சாப்பிட்டு, நீர் அருந்தி, துணி உடுத்திக்கொள்ள வேண்டி யிருக்கிறதோ, அதே போலவே நமக்காக நாம் ஒவ்வொரு வரும் நூற்கவும் வேண்டும். இது வீணான வேலை என்று சொல்லுகிறீர்கள்? உங்கள் நாட்டு மக்களிடம் சகோதர உணர்ச்சி உங்களுக்கு அளவு கடந்து இருப்பதாக நீங்கள் சொல்லுகிறீர்கள்? மனிதரிடம் அன்பு என்பது இல்லாதபோது அந்தச் சகோதர உணர்ச்சி என்பதுதான் என்ன? ஒரு பசுவுக்கு அதன் கன்றினிடத்திலும், தாய்க்குத் தனது குழந்தையினிடமும் இருப்பதைப்போன்ற அன்பை நீங்கள் உணருகிறீர்களா? கன் றைக் கண்டதும் பசுவின் மடியிலும், குழந்தையைக் கண்டதும் தாயின் முலையிலும் பால் சுரக்கிறது. பஞ்சத்தில் அடிபட்டு வாடும் நாட்டு மக்களைக் கண்ட மாத்திரத்தில் உங்கள் உள்ளத்தில் அன்பு பொங்கி வழிகிறதா? என் நண்பர்களே! நூற்பதன்மூலம் அவர்களிடம் உங்களுக்குள்ள அன்பை நீங்கள் காட்டிக்கொள்ளு கிறீர்கள். நீங்கள் நூற்கிறீர்கள்; அவர்களுடைய சோம்பல் வாழ்வை அவர்கள் உதறித் தள்ளிவிடும்படி அதன் மூலம் நீங்கள் செய்கிறீர்கள். ஒரு நண்பர் போய்க் கூட்டத்தின் முன்பு அழகாகப் பாடி அவர்களுடைய இதயங்கள் கனியும்படி செய்கிறார். இது சக்தியை வீணாக்குவதாகுமா? அவர்கள் முன்னால் அவர் வீணாக 'வந்தேமாதரம்' என்று கூச்சல் போட்டுக் கொண்டிருந்தால் அது வீண்தான். ஆனால், நூற்பதற்கோ இதைவிட அதிக முக்கியமான பொருள் உண்டு. இதைச் செய் வதில் ஒரு நோக்கம் உண்டு. அதனால், உற்பத்தி அதிகமாகிறது. பாமர மக்களுடன் நெருங்கிய உறவு ஏற்படும்படி செய்வது தான் இதிலுள்ள நோக்கம். இதில் செய்கிற உழைப்புக்குப் பலனும் இருக்கிறது. அதிக முயற்சியோ, திறமையோ வேண் டாமல் நூற்பதைச் செய்துவிடலாம். நம்மில் சிறந்தவர்களாக இருப்பவர்களேயன்றிச் சாமான்யமானவர்களான கோடிக்கணக் கான மக்கள் இதைச் செய்துவிடலாம். நூற்பதைப்போல் எல்லோரும் செய்யக் கூடிய வேலை, வேறு எதுவுமே இல்லை. மாணவர்கள் இம்மண்ணுக்கு மிக முக்கியமானவர்கள். ஆகை யால், அவர்கள் எல்லோரும் முக்கியமாக நூற்கவேண்டும். அவர் களுடைய வாழ்க்கை இனிமேல்தான் ஆரம்பமாக வேண்டியிருக் கிறது. வேறு யாராலும் முடியாத வகையில் இவர்கள் புதிய கருத்துக்களைக் கிரகித்துக்கொண்டுவிட முடியும். நீண்ட காலம்

சேவை செய்வதற்கும் இவர்களுக்கு வயது இருக்கிறது. புதிய கருத்துக்களை இளம் உள்ளங்களில்தான் புகுத்த முடியுமேயன்றி முதிர்ந்தவர்கள் புத்தியில் புகுத்திவிட முடியாது. உத்வேகமும், சக்தியும், அறிவும் படைத்த கட்டுப்பாட்டோடு கூடிய மாணவர் குழாம் எவ்வளவு காரியங்களைச் செய்துவிட முடியும் என்பதை எண்ணிப் பாருங்கள். டாக்கா மாணவர்கள் 11,000 பேரில் ஒவ்வொருவரும் நூற்பதில் அரை மணி நேர உழைப்பைச் செலவிட்டால் அதன் உற்பத்தி எவ்வளவு மகத்தானதாக இருக்கும் என்பதையும் யூகித்துப் பாருங்கள்! நீங்கள் எல்லோரும் கதர் அணிவீர்களாயின், நீங்கள் செலவழிக்கும் பணத்தில் பெரும் பகுதியை நூற்போரே அடைகின்றனர் என்பது உங்களுக்குத் தெரியுமா? ஏராளமான யந்திரங்களோடு இருக்கும் இங்கிலாந்தைக் குறித்து ஒரு வேளை நீங்கள் எண்ணிக்கொண்டிருக்லாம். ஆனால், இங்கிலாந்து மற்ற நாடுகளைச் சுரண்டுவதன் மூலம் வாழ்கிறது நம் உழைப்பை அது வெற்றிகொண்டிருக்க கிறது. இந்தியாவுக்காக என்று இந்தியப் பணத்தை இங்கிலாந்தில் செலவழித்து வருவதையும் மற்ற நஷ்டங்களையும் நாம் கண்டுகொள்ளும்படி தாதாபாய் நௌரோஜி * செய்தார். நமது உழைப்பை இங்கிலாந்து வென்று கொன்றுவிட்டது, அதையெல்லாம்விட மிகப் பெரிய பொருளாதார நஷ்டம். இந்தக் கொடிய நஷ்டத்தை அவர்கூடக் கண்டுகொள்ளவில்லை. ஆனால், அவர் வழியிலேயே வேலை செய்துகொண்டிருக்கும் அவருடைய சீடனாகிய நான், எளிதில் கண்டுகொள்ள முடியாததான இப்பெரும் நஷ்டத்தைக் கண்டுபிடித்தேன். நம்நாட்டு மக்களை வேலையில்லாத சோம்பேறிகளாக்கியிருக்கும் இந்தச் சுரண்டல், மற்றெல்லாவற்றையும்விட அதிக நாசகரமானது என்று நான் சொல்கிறேன்.”

காந்திஜி இவ்வாறு சொல்லிக்கொண்டே போனார். பலவந்தமாக உண்டாக்கப்பட்டிருக்கும் இந்தச் சோம்பேறித்தனம் நாட்டை எவ்வளவு தூரம் நாசமாக்கியிருக்கிறது என்பதையும் எடுத்துக் காட்டினார். பூரி ஜகந்நாதத்தில் மக்கள் பட்டினி கிடப்பதையும், பீகாரில் ஏழ்மை மிகுந்திருப்பதையும், மற்ற இடங்களில் தினத்திற்கு ஓர் அணு கிடைப்பது அங்குள்ளபெண்களுக்கு எவ்விதம் கடவுளின் வரப்பிரசாதமாக இருக்கிறது என்பதையும் விளக்கிக் காட்டினார். காந்திஜி பேசுவதை நான் நெடுநாட்களாகக் கேட்டு வருகிறேன். ஆனால், மனத்தை உருக்குவதிலும்

---

* தாதாபாய் நௌரோஜி: பார்ஸி சமூகத்தை சேர்ந்தவர். ‘இந்தியாவின் முதுபெருங் கிழவர்’ என்று இந்திய மக்களால் போற்றப்பட்டவர். 1886, 1893, 1906 ஆகிய மூன்று ஆண்டுகளில் காங்கிரஸ் அக்கிராசனராக இருந்தார். பிரிட்டிஷ் பார்லிமென்ட் அங்கத்தினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். ‘சுயராஜ்யம்’ என்ற பதத்தை 1906–ஆம் ஆண்டு கல்கத்தாக் காங்கிரஸில் முதல் முறையாகப் பிரகடனம் செய்த பெருமை இவருக்கே உரியது.

உள்ளம் கனியும்படி செய்வதிலும் இதற்கு மிஞ்சிய பேச்சை இதற்கு முன்னுல் நான் கேட்டதில்லை.

—'எங் இந்தியா' 28—5—1925

('வங்காளத்தில் காந்திஜியுடன் – 3' என்ற ஸ்ரீ மகாதேவ தேசாயின் கட்டுரையிலிருந்து எடுக்கப்பெற்றது.)

# 3

# வண்டியும் ராட்டையும்

வங்காளத்தில் நான் சுற்றுப்பிரயாணம் செய்தபோது நுட்ப புத்தி படைத்த வங்காளிகள், ராட்டைக்கு எதிராக நுட்ப புத்தியோடு கூடிய வாதங்கள் பலவற்றைக் கூறக் கேட்டேன். இந்த வாதங்கள் பலவற்றைக் குறித்து இப்பத்திரிகையில் முன்பே ஆராய்ந்திருக்கிறேன். ஆனல், பத்திரிகைகளில் படிப்பதை வாசகர்கள் நினைவில் வைத்துக் கொள்ளுவதேயில்லை. ஆகையால், பத்திரிகையாளர் தாம் முன்னுல் சொன்னதையே இடையில் கொஞ்சகாலம் விட்டுத் திரும்பவும் சொல்லுவது எப்பொழுதும் நல்லதே. வாதங்களைக்கூறிய நண்பரில் ஒருவர், ரெயில்களுக்குப் பதிலாகக்கட்டை வண்டியே இருக்கவேண்டும் என்று நான் விரும்புகிறேனு என்றும், அப்படி விரும்பவில்லை என்ருல், மில்களுக்குப் பதிலாக ராட்டையே இருக்கவேண்டும் என்று நான் எவ்வாறு எதிர்பார்க்கிறேன் என்றும் கேட்டார். ரெயில்களுக்குப் பதிலாகக் கட்டை வண்டியே இருக்கவேண்டுமென்று நான் விரும்பவில்லை. ஏனெனில், அப்படிச் செய்ய நான் விரும்பினுலும் அவ்வாறு செய்துவிட என்னுல் முடியாது என்று அவருக்குப் பதில் சொன்னேன். முப்பதுகோடி வண்டிகள் இருந்தாலும் தூரம், தூரமாகத்தான் இருக்குமேயன்றிக் குறையாது. ஆனல், மில்களுக்குப் பதிலாக ராட்டையை நான் கொண்டுவந்துவிட முடியும். ஏனெனில், ரெயில்கள் வேகத்தைப்பற்றிய பிரச்னையைத் தீர்த்துவிட்டன. மில்களைப் பொறுத்தவரையில் அது உற்பத்தியைப்பற்றிய விஷயம். இந்தியாவில் இருப்பதைப்போல வேலைசெய்யப்போதுமான ஆட்கள் இருந்தால், ராட்டை, மில்களுடன் எளிதாகப் போட்டி போட முடியும் என்றும் அவருக்குச் சொன்னேன். ஒரு கிராமவாசி தம்முடைய உழைப்புக்குக் கணக்குப்போடாமல் இருந்தால், தமக்கு வேண்டிய துணியைத் தாமே மில்துணியைவிடக் குறைந்த விலைக்குத் தயாரித்துக்கொண்டுவிட முடியும். அவர் தமது ஒழிந்த நேரத்திலேயே நூற்பதையோ, நெய்வதையோ செய்வதால் தமது உழைப்புக்குக் கணக்குப் பார்க்க வேண்டிய அவசியமே இல்லை. தவருன, அரைகுறையான உதாரணங்கள் மக்களை ஏமாற்றிவிடுவது விசித்திரமாகவே இருக்கிறது. இந்த விஷ

யத்தில் ஒரு பக்கம் மில்களுக்கும் ரெயில்களுக்கும், மற்றோர் பக்கத்தில் கட்டை வண்டிக்கும் ராட்டைக்கும் உள்ள வித்தியாசம் நன்றாகத் தெரிந்ததாகும். ஆகவே, இவற்றை ஒப்பிட்டுக் காட்டியிருக்கவேகூடாது. ஆனால், எல்லாச் சந்தர்ப்பங்களிலும் எல்லா யந்திரங்களையும் நான் எதிர்க்கிறேன் என்று இந்த நண்பர் ஒரு வேளை எண்ணியிருக்கக்கூடும். நான் எழுதிய 'இந்திய சுயராஜ்யம்' என்ற நூலில் ரெயில்களுக்கு நான் கூறியிருக்கும் ஆட்சேபம் அவர் மனத்தில் இருந்திருக்கவும் கூடும். ஆனால், அந்தப் பிரசுரத்தில் கூறப்பட்டிருக்கும் பல்வேறு அடிப்படையான பிரச்னைகளில் நான் வேலை செய்துகொண்டிருக்கவில்லை என்பதை நான் திரும்பத் திரும்பச் சொல்லி வந்திருக்கிறேன்.

ராட்டையில் நூற்பதால் உழைப்பு வீணாகிறது என்பது கூறப்படும் மற்றோர் வாதம். இதைக் குறித்துக் கொஞ்சமும் சிந்திக்காமலேயே செய்யப்படும் ஆச்சரியமான வாதம் இது. ஒரு நோக்கத்தின் பேரில் செய்யப்படும் எக்காரியத்தையும், உழைப்பு வீணாகும் காரியம் என்று கருதலாகாது என்பதை எடுத்துக் காட்டியிருக்கிறேன். வருடத்தில் குறைந்தது நான்கு மாத காலத்திற்குச் செய்வதற்கு எந்த வேலையுமே இல்லாத கோடிக்கணக்கான மக்களுக்குத் தொழில் இருக்கவேண்டும் என்பதற்காகவே ராட்டையை நாட்டு மக்களுக்கு நான் கூறிவருகிறேன். ஒவ்வொரு அரைமணி நேரத்திற்கும் ராட்டை குறைந்தது நூறு கெஜம் நூலையாவது உற்பத்தி செய்கிறது என்பதைப் பார்த்து, நூற்பதில் உழைப்பது வீணாகிறது என்று கருதக் கூடாது என்று, ஆட்சேபித்தவருக்கு நான் சொன்னேன். மேலும், இதில் உழைபு வீணாகவில்லை என்பது மாத்திரமல்ல, இது சிறந்த பொருளாதாரத் திட்டமுமாகும். ஏனெனில், கோடிக்கணக்கான மக்களுக்குத் தேவைப்படுவதெல்லாம், எல்லோரும் செய்யக்கூடிய உற்பத்திக்கான ஒரு வேலை. ஒழிந்த நேரத்தில் எப்பொழுது வேண்டுமானாலும் செய்யக்கூடியதாகவும், கற்றுக்கொள்ளுவதற்கு விசேஷ ஆற்றலோ, நீண்ட காலப் பயிற்சியோ தேவையில்லாததுமானதாகவும் அத்தொழில் இருக்கவேண்டும். அப்படிப்பட்ட தொழில் கையினால் நூற்பது ஒன்றுதான் ; வேறு எதுவும் இல்லை,

நோவாகாலியில் ஒழுக்கக் கேடான வாழ்க்கை நடத்திவிட்ட இரு சகோதரிகள், இப்பொழுது நூற்பதோடு அதைக் கொண்டே முற்றிலும் வாழ்க்கையை நடத்திக்கொண்டு வருகிறார்கள் என்றும் கேள்விப்பட்டேன். இவர்கள் இளம் பெண்கள் அல்ல ; நாற்பதற்கும் அதிகமான வயதினர்கள் இனியும் மானத்தை விற்று வாழ முடியாதவர்கள். இவர்கள் நூற்காமலிருந்தால் பிச்சை எடுத்துத்தான் வாழ நேர்ந்திருக்கும். ஆகவே, சரியாகச் சொல்வதானால், பிச்சை எடுப்பதிலிருந்துதான் இவர்கள் காப்பாற்றப்பட்டிருக்கிறார்களேயன்றி இவர்களுடைய பழைய தொழிலிலிருந்து அல்ல. என்றாலும், இந்தச் சகோதரிகளுடன் தொடர்பு கொண்டு அவர்களுடைய

நல்வாழ்வில் சிரத்தை கொண்டிருப்பது நோவாகாலிக்கே மிகப் பெருமையானதாகும். இவர்களில் சிலர் தங்கள் தொழிலை இன்னும் விட்டுவிடவில்லையாயினும் நூற்க ஆரம்பித்திருக்கிறார்கள் என்றும் கேள்விப்பட்டேன். இத்தகைய சகோதரிகள் தங்கள் தொழிலை இன்னும் விட்டுவிடவில்லையென்றால், இவர்கள் நூற்பது இவர்களுக்கு லாபமா என்பது எனக்குத் தெரியாது. தங்கள் அவமானத்தை மறைப்பதற்கு இது உபயோகிக்கப்படலாம். நூற்பதை ஜீவனத்திற்கு ஓர் உபாயமாக இவர்களுக்குச் சிபார்சு செய்யமுடியாது என்பதில் சந்தேகமில்லை. அதிகமில்லாவிட்டாலும் தினத்திற்கு ஒன்று முதல் இரண்டு ரூபாய் வரையில் சம்பாதித்துப் பழக்கப்பட்டவர்கள். ஆகையால், நல்ல வருவாய் கிடைக்க நெய்வதோ. பின்னல் போடுவதோ, இதுபோன்ற வேறு அலங்கார வேலையோ தான் அவர்களுக்கு இருக்கவேண்டும். இது ஆண்கள் சமாளிக்கக்கூடிய பிரச்னையும் அல்ல. இதில் வேண்டியதைச் செய்ய இதைப் பெண்களுக்கே ஒதுக்கி வைத்துவிடவேண்டும். மாசு மறுவற்ற தூய்மையும், ஒழுக்க பலமுமுள்ள ஒரு பெண்மணி முன் வந்து, நெறிகெட்ட வாழ்க்கையில் விழுந்துவிட்ட மனித வர்க்கத்தின் இப்பிரிவினரை மீட்கும் வேலைக்குத் தம்மை அர்ப்பணம் செய்துகொண்டாலொழிய விபசாரப் பிரச்னையைத் தீர்த்துவிடவே முடியாது. தங்களுடைய காம வெறியைத் தீர்த்துக்கொள்ளுவதற்காகத் தம்மையே விற்பனை செய்துகொள்ளும்படி இளம்பெண்களைச் செய்துவிடும் அளவுக்கு இழிநிலையை அடைந்துவிட்ட ஆண்களிடையே ஓர் ஆண் செய்யவேண்டிய வேலை எவ்வளவோ இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. உலகம் எவ்வளவு பழமையானதோ அவ்வளவு பழமையானது விபசாரமும். ஆனால், அது இன்று இருப்பதைப்போன்று பட்டணத்து வாழ்க்கையின் நிரந்தரமான அம்சமாக இருந்து வந்ததா என்பது தெரியவில்லை. என்றாலும், எவ்வளவுதான் பழமையானவைகளாக இருந்தாலும், அநேக தீய பழக்கங்களை இதுவரை ஒழித்திருப்பதைப் போன்றே இந்தச் சாபக் கேட்டிற்கு எதிராகவும் மனித வர்க்கம் கிளம்பி, விபசாரம் என்றோ ஒரு காலத்தில் இருந்த தீமை என்று செய்துவிடும் காலம் வந்தே ஆகவேண்டும்.

பௌரிங்பேட்டையைச் சேர்ந்த சில இளைஞர்கள், ராம நவமியை அடுத்த ஏழு நாட்களில் தாங்கள் நூற்ற 32,00-க்கு அதிகமான கெஜ நூலை எனக்கு அனுப்பியிருக்கிறார்கள். இந்த ஏழு நாட்களிலும் இளைஞர்களும் கிழவர்களுமாக எல்லோரும் ராமநாமத்தை ஜெபித்துக்கொண்டிருப்பதைக் குறித்தும் அவர்கள் விவரித்து எழுதியிருக்கிறார்கள். ஆனால், இந்த இளைஞர்கள் இந்த ஜெபத்தில் கலந்துகொண்டதோடு அதே சமயத்தில் நூற்றுமிருக்கிறார்கள். இது எல்லோரும் பின்பற்றுவதற்கான உதாரணம். அநேக இளைஞர்கள் நூற்கும்போதே கடவுளைத் தியானித்து வருவதையும் அறிவேன். தியாகத்திற்

கென்றே நூற்பவர்கள், இச்செயலுடன் நல்லதும் உயர்வானது மானவைகளையும் சேர்த்துக்கொள்ளலாம். டாக்காவில் என் மௌன விரத தினத்தன்று சில சங்கீத வித்வான்கள் சித்தார் வாசித்து என்னை மகிழ்விப்பதற்காக வந்தார்கள். இப்பொழுது திங்கட்கிழமை, நான் மௌனம் அனுசரிக்கும் நாள் மாத்திரமல்ல, பத்திரிகைளுக்கு விஷயங்களை நான் பதிப்பிக்கும் நாளுமாகும். ஆகையால், அவர்கள் சங்கீதத்தை நான் கேட்டுக்கொண்டிருந்து விடமுடியாது. ஆனால், அவர்களை ஏமாற்றம் அடையச் செய்து விட நான் விரும்பவில்லை. ஆகவே, அவர்கள் சித்தாரில் வாசிக்கும்போது நான் நூற்பதாக அவர்களுக்கு எழுதி அறிவித்தேன். இதற்கு அவர்களும் உடனே சம்மதித்துவிட்டனர். இதன் பலனாக எப்பொழுதையும்விட அன்று நான் நன்றாக நூற்றேன். சங்கீதத்தினால் கை நிதானமடைந்தது. எப்பொழுதும் சப்தமில்லாத ராட்டையையே நான் உபயோகிக்கிறேன். ஆகையால், சங்கீதத்தை நான் அனுபவிப்பதற்கு அது இடையூறாக இல்லை. இதற்கு மாறாகச் சங்கீதத்தைக் கேட்கும் இன்பத்தை அது அதிகரித்தது; சங்கீதமோ, நூற்கும் இன்பத்தை அதிகரித்தது. கடவுளை நான் தியானித்துக் கொண்டிருப்பதற்கு இந்த இரண்டுமே இடையூறாக இல்லை. கை, காது, உள்ளம் ஆகியவை சரியாக இணைந்து வேலை செய்வதைச் சந்தேகிக்கிறவர்கள், இந்த அனுபவத்தைத் தாங்களே சோதித்துப் பார்த்துக் கொள்ளட்டும்.

—'எங் இந்தியா'-28—5—1925

4

# மில்லும் ராட்டையும்

ராட்டை நிலைபெற்றுவிடவில்லை என்றும், போதுமான உற்சாகத்தை அளிக்கக்கூடியதாக அது இல்லை என்றும், அது பெண்களுக்கு மாத்திரமே ஏற்றதான வேலை என்றும், ராட்டையை ஆட்சேபிப்பவர்கள் கூறுகிறார்கள். ராட்டையில் நூற்பது பழங்காலத்திற்குத் திரும்பிப் போய்விடுவதாகும் என்றும், யந்திரங்கள் எந்த விஞ்ஞான அறிவின் கம்பீரமான முன்னேற்றத்திற்கு அறிகுறியாக இருக்கிறதோ, அதை எதிர்த்துச் செய்யும் வீண் முயற்சியே இது என்றும் சொல்லுகிறார்கள். இந்தியாவுக்குள்ள தேவை, உருப்படியான வேலையேயன்றி உற்சாகமல்ல என்பதுதான் என்னுடைய பணிவான கருத்து. ஏனெனில், கோடிக்கணக்கானவர்களின் உருப்படியான வேலையே உற்சாகமளிக்கக் கூடியதுதான். அதோடு அதுவே வளர்ச்சிக்கான மருந்தும் ஆகும். ராட்டையைப் போதுமான அளவுக்கு நாம் இன்னும் பயன்படுத்திக்கொள்ளவில்லை என்பதுதான் உண்மை. நம்மில் அநேகர் அது விஷயத்தில் முக்கிய கவனத்தைச் செலுத்த

வில்லை என்பதைச் சொல்ல வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் உறுப்பினர்கள் கூட, தாங்கள் அப்போதைக்கப்போது கையினுல் நூற்பதைக் குறித்து நிறைவேற்றி வந்திருக்கும் அநேக தீர்மானங்களை நிறைவேற்றிவைக்கத் தவறிவிட்டார்கள். நம்மில் பெரும்பாலானவர்களுக்கு இதில் நம்பிக்கை ஏற்படவில்லை. இந்த நிலைமையில் அதனிடம் உற்சாகமளிப்பது எதுவும் இல்லாததனுல் நூற்பது தோல்வியடைந்துவிட்டது என்று சொல்லுவது நியாயமன்று. கிழவி செய்துகொண்டிருக்க வேண்டிய வேலையே அது என்று சொல்லுவது, உண்மையை அலட்சியம் செய்துவிடுவதாகும். நூற்கும் ராட்டையின் பெருக்கமே நூற்கும் ஆலைகள். அவற்றை மனிதர்தான் நிர்வகித்து வருகின்றனர். சில தொழில்கள், மனிதரின் கௌரவத்திற்குத் தாழ்வானது என்ற மூடநம்பிக்கையை ஒழித்துவிட வேண்டிய சமயம் வந்துவிட்டது. நூற்பது சாதாரண காலத்தில் பெண்களின் வேலையாகத்தான் இருக்கவேண்டும் என்பதில் சந்தேகமில்லை. குடிசைத் தொழில் என்ற அளவில் இதில் சில அபிவிருத்திகளைச் செய்ய வேண்டும். ஆகையால், இந்த அபிவிருத்திகளைச் செய்வதற்காக வருங்கால அரசாங்கங்கள் சில ஆண்களை எப்பொழுதும் ராட்டையில் ஈடுபட்டிருக்கும்படி செய்துதான் வரும். ஆண்களில் நம்மில் சிலர், இரவு பகல் ராட்டையிலேயே வேலை செய்து, அதைப் பற்றியே சிந்தித்தும் வந்திராவிட்டால், ராட்டையில் ஏற்பட்டிருக்கும் அபிவிருத்தி ஏற்பட்டிருக்க முடியாது என்பதையும் உங்களுக்கு நான் அறிவித்தாக வேண்டும்.

—'எங் இந்தியா' – 26—12—1924

## 5

# ஆண்களுக்கான வேலை அல்லவா ?

ஒரு பேராசிரியர் பின்வருமாறு எழுதுகிருர்:

"என்னைப் பொறுத்தவரையில் ராட்டையிலும் கதரிலும் எனக்குப் பூரணமான நம்பிக்கை இருக்கிறது. கதர் இல்லாவிடில் இந்தியாவின் படித்தோருக்கும் பாமர மக்களுக்குமிடையே பொதுவான தொடர்பு எதுவும் இருக்க முடியாது என்பதையும் நான் முற்றிலும் உணருகிறேன். பொதுவான தொடர்பு இல்லாமல், எல்லோரும் ஒன்று என்ற உணர்ச்சி இல்லாமல், எந்த நாடும் எதையும் அடைந்துவிட முடியாது; இந்தியாவும் அடைந்துவிட முடியாது. மேலும், உற்பத்தியில் கதர் போதுமான அளவு வெற்றி பெற்றுவிடுமாயின் அதன் பலனுக அந்நியத் துணி தானே விலக்கப்பட்டுவிடும் என்பதையும் நான் நன்ருக அறிகிறேன். இந்தியா சுதந்திரத்தை அடைய வேண்டுமானுல் கதர்த் திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றியாக வேண்டும்.

"ஆனால், நீங்கள் தவறான இடத்திலிருந்து ஆரம்பித்துவிட்டீர்கள் என்பதுதான் என்கருத்து பெண்களைப் போல உட்கார்ந்து நூற்கும்படி உடல் வலுவுள்ள ஆண்களைச் சொல்லுவது அநேகருக்கு விசித்திரமானதாகவே தோன்றுகிறது. பெண்களைவிட இப்பொழுது நான் எந்த விதத்திலும் உயர்வான நிலையில் இருந்துவிடவில்லை என்ற கருத்தையும் நான் முற்றிலும் ஒப்புக்கொள்ளுகிறேன். என்றாலும், நம் நாட்டில் அநேக நூற்றாண்டுகளாகப் பெண்களின் வேலையாகவே இருந்து வந்திருக்கும் ஒரு வேலையை நாம் எல்லோரும் மேற்கொள்ளுவதற்கில்லை என்பதுதான் உண்மையான விஷயம். நாட்டிலுள்ள பெண்கள் எல்லோரும் நூற்கும் வேலையை மேற்கொண்டு விட்டார்கள். ஆண்களிடமிருந்து அதற்கு மேற்கொண்டும் ஆதரவு வேண்டியிருக்கிறது என்று நான் நம்பும்படி செய்யப்பட்டாலாவது எனக்கு ஏற்பட்டிருக்கும் இந்த மனப்போக்கை உதறித் தள்ளிவிட நான் சம்மதித்திருப்பேன். பெண்கள் சிறந்த அந்நியப் புடவைகளைக் கட்டிக்கொண்டு உலாவி வந்து கொண்டிருக்கும்போது, ஆண்களை ராட்டை சுற்றும்படி சொல்லுவது, வண்டியைக் குதிரைக்கு முன் பக்கத்தில் வைத்துப் பூட்டுவது போன்றதாகும். அதோடு இந்தியாவில் அந்நியத் துணி பரவும் பிரச்னையை உண்டாக்கியிருப்பது பெண்களேயன்றி ஆண்கள் அல்ல. ஆகையால், ராட்டையையும் கதரையும் உபயோகிக்கும்படி பெண்களை வற்புறுத்தாமல் ஆண்களை வற்புறுத்துவது, பரிகாரத்தைத் தவறான இடத்திலிருந்து ஆரம்பிப்பதாகும்.

"ஆண்கள், பலவகையான ராஜீயப் பிரசாரங்களிலும் ஈடுபட்டுத் தீவிரமாக வேலை செய்து வர விட்டுவிட்டு, உங்கள் உபதேசத்தை இந்நாட்டுப் பெண்களிடமே நீங்கள் நேராகச் செய்திருக்க வேண்டும் என்பது என் பணிவான அபிப்பிராயம். உங்களுடைய மகத்தான ராட்டை, கதர் வேலைத் திட்டம் இப்போதைக்குப் பெண்களிடம் மாத்திரமே இருந்து வரட்டும். ஆண்கள், ஆண்மையோடு கூடிய ஆயுதங்களைக் கொண்டு சுதந்திரப் போராட்டத்தை நடத்தட்டும்."

கடிதம் நீளமானதாக இருந்தது. பாஷையை மாற்றாமல் வாதத்தைச் சுருக்கிக் கொடுத்திருக்கிறேன். இந்தியாவில் இருக்கும் பெண்களின் நிலைமையை இப்பேராசிரியர் அறிந்துகொள்ளவில்லை என்று நன்றாகத் தெரிகிறது; அறிந்திருந்தால், பெண்களிடம் பேசி எடுத்துக் கூறும் வசதியோ சந்தர்ப்பமோ சாதாரணமாக ஆண்களுக்கு வாய்ப்பதில்லை என்பது அவருக்குத் தெரிந்திருக்கும். ஆனால், இதை ஓரளவுக்குச் செய்ய முடிந்தவனாகும் நல்ல அதிர்ஷ்டம் எனக்கு இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனால், எனக்கு எல்லாவசதிகளும் கொடுக்கப்பட்டிருந்தபோதிலும், ஆண்களிடம் அடைந்திருக்கிற அளவுக்கு நான் பெண்களிடம் அடைய முடியவில்லை. ஆண்களின் சம்மதமின்றிப் பெண்கள் எதையும் செய்துவிடமாட்டார்கள் என்பதும் பேராசிரியருக்குத் தெரிந்திருக்கும். ராட்டையையும் கதரையும் மேற்கொள்ளாதவாறு பெண்களை ஆண்கள் தடுத்திருக்கிறார்கள் என்பதற்கு எத்தனையோ சம்பவங்களை நான் எடுத்துக்காட்ட முடியும். மூன்றாவதாக, ஆண்கள் செய்யக்கூடியதைப் போலப் பெண்கள், புதிதாகக் கண்டுபிடிப்பதையோ, மாறுதல் செய்வ

தையோ செய்துவிட முடியாது. நூற்கும் இயக்கம், பெண்க ளோடு மாத்திரம் இருந்து வந்திருக்குமானுல், சென்ற நான்கு ஆண்டுகளாக ராட்டையில் ஏற்பட்டிருக்கும் அபிவிருத்திகளைச் செய்வது சாத்தியமில்லாது போயிருக்கும்; நூற்பதை இப் பொழுது செய்திருப்பதைப் போல வளர்த்திருக்கவும் முடியாது. நான்காவதாக, எந்த ஒரு தொழிலேயும் குறிப்பிட்ட ஒரு பாலாருக்கு என்று தனியாக ஒதுக்கி வைத்துவிடுவது என்பது, அனுபவத்திற்கு முற்றிலும் முரணுனதாகும். சமைப்பது அநேக மாகப் பெண்களுக்கே உரிய வேலே. ஆனுல், தனக்கு வேண்டிய உணவைத் தானே சமைத்துக்கொள்ள முடியாத ஒரு போர் வீரன் பயனில்லாதவன். சிப்பாய்களின் முகாம்களில் சமையல் முழுவதையும், அவசியமாகவும், இயற்கையாகவும் ஆண்களே செய்கின்றனர். மேலும், குடும்பத்திற்கான சமையலே இயற்கை யாகவே பெண்கள்தான் செய்கிருர்களென்ருலும், பெரும் கூட் டங்களுக்குப் பெரிய அளவில் செய்யப்படும் சமையல் முழுவதை யும் உலகம் எங்குமே ஆண்கள்தான் செய்கிருர்கள். போரில் ஈடுபடுவது பெரும்பாலும் ஆண்கள் வேலேயே. ஆனுல், இஸ்லா மின் ஆரம்பகாலப் போராட்டங்களில் அரபுப் பெண்கள் தங்கள் கணவர்களின் பக்கத்திலேயே நின்று வீராங்கனேகளாகப் போராடியிருக்கிருர்கள். சிப்பாய்ப் புரட்சியின்போது, எந்த ஆடவரும் காட்டியிராத வீரத்துடன் ஜான்ஸி ராணி போராடி கீர்த்தி பெற்றிருக்கிருர். இன்று ஐரோப்பாவில் பெண்கள் சிறந்த வக்கீல்களாகவும், டாக்டர்களாகவும், நிர்வாகிகளாகவும் பிரகாசித்து வருவதைக் காண்கிருேம். சுருக்கெழுத்து எழுதும் பெண்களும், டைப் அடிப்பவர்களும் அநேகமாகக் குமஸ்தா உத்தியோகத்தை ஏகபோகமாக்கிக்கொண்டிருக்கிருர்கள். நூற் பது மாத்திரம் ஏன் ஆண்மையுள்ள தொழில் அல்ல? பேராசிரி யர் கருத்துப்படி இந்தியாவுக்கு ராட்டை பொருளாதார, ஆன்மிக மேன்மையை அளிப்பதாக இருக்கும்போது, அப்படிச் செய்யக்கூடிய எவ்வேலேயும் ஆண்களுக்கான ஆண்மையுள்ள வேலேயாக ஏன் ஆகாது? ஸ்பின்னிங் ஜென்னி* என்ற நூற்கும் யந்திரத்தைக் கண்டுபிடித்தவரே ஓர் ஆண்தான் என்பது பேராசிரியருக்குத் தெரியாதா? அவர் இதைக் கண்டுபிடிக்கா திருந்தால் மனித வர்க்கத்தின் சரித்திரம் வேறு மாதிரியில் எழுதப்பட்டிருக்கும். தையல் வேலே முக்கியமாகப் பெண்கள் வேலேதான். ஆனுல், உலகத்தில் தையல் வேலேயில் நிபுணர்க ளாக இருக்கிறவர்கள் ஆண்களே. தையல் யந்திரத்தைக் கண்டுபிடித்தவரும் ஓர் ஆண்தான். இதைக் கண்டுபிடித்தவ ரான ஸிங்கர், தையல் வேலே கேவலமானது என்று கருதி யிருப்பாரானுல், மனித வர்க்கத்திற்கு இப்பெருங் கொடையை

---

* ஜென்னி என்பது ஜேம்ஸ் ஹார்கிரீவ்ஸ் என்பவர், தாம் 1766-இல் கண்டு பிடித்த நூற்கும் யந்திரத்திற்குக் கொடுத்த பெயராகும். இந்த யந்திரம் பருத்தி நூல் நூற்பதில் அதிக அபிவிருத்தியை உண்டாக்கி, அத்தொழில் பெருமளவுக்குப் பெருகும்படி செய்தது. அந்த நூற்கும் யந்திரம் கண்டுபிடிக்கப்பட்டதையே மகாத்மா இங்கு குறிப்பிடுகிருர்.

அவர் விட்டுப்போயிருக்கமாட்டார். முற்காலத்தில் இந்தியப் பெண்களோடு சேர்ந்து நூற்பதில் ஆண்களும் கவனம் செலுத்தி வந்திருப்பார்களாயின், கிழக்கு இந்தியா கம்பெனியின் வற்புறுத்தலின் பேரில் நூற்பதை நாம் கைவிட்டதைப் போன்று ஒரு வேளை நாம் கைவிடாமலேயே இருந்திருப்போம். ராஜீய வாதிகள், தாங்கள் விரும்பும் அளவுக்கு ராஜீயத்தில் மட்டுமே ஈடுபட்டிருக்கலாம். ஆனால், கோடிக்கணக்கான மக்களின் கூட்டுமுயற்சியினால் நமக்கு வேண்டிய துணிகளை நாமே தயாரித்துக்கொள்ள வேண்டுமானால், ராஜீயவாதி, கவிஞன், அரசன், பண்டிதன், பரம ஏழை, ஆண் அல்லது பெண், ஹிந்து அல்லது முஸ்லிம், கிறிஸ்தவர், பார்ஸி அல்லது யூதர் ஆகிய எல்லோரும் நாட்டின் நன்மைக்காக மத தருமமாகக் கருதி அரை மணி நேரம் நூற்கவேண்டும். மனிதவர்க்கத்தின் தருமம் எந்தப் பாலாருக்கோ, வகுப்பினருக்கோ தனிப்பட்டதான உரிமை அன்று. எல்லோருக்கும் அது தனி உரிமை மாத்திரமல்ல; அது கடமை. குறைந்தது அரை மணி நேரமாவது, தம்மை இந்தியர் என்று சொல்லிக்கொள்ளும் ஒவ்வோர் ஆணும் பெண்ணும் நூற்க வேண்டும் என்று அவர்கள் ஒவ்வொருவரையும் இந்திய மனித வர்க்கமாகிய தருமம் கேட்கிறது.

—'எங் இந்தியா' 11—6—1925

## 6

# ஓர் அரசாங்கத்தின் சோதனே

பாட்னுவில் நான் பார்க்க முடிந்த மற்றொரு ருசிகரமான விஷயம், கைத்தொழில் இலாகா நடத்திவரும் தொழிற்சாலே. ஸ்ரீ ராவ் அதன் மேற்பார்வை அதிகாரி. தொழிற்சாலே நவீனமான கட்டடத்தில் இருக்கிறது. நல்ல வெளிச்சமும், நல்ல காற்றோட்டமும் இருப்பதோடு நல்ல அமைப்புடனும் அதிகச் சுத்தமாகவும் இருந்தது. பாட்னுவின் விசேஷமான கைத்தொழில் கைநெசவும், விளேயாட்டுப் பொம்மைகள் செய்வதும். தொழிற்சாலேயிலும் முக்கியமானவை இவையே. நாடாக்கள், கட்டில் நாடாக்கள் ஆகியவைகளே நெய்ய அங்கிருந்த அபிவிருத்திகளோடு கூடிய தறிகள் பாராட்டுதற்குரியவை. என்ருலும், இந்த அற்புதமான தொழிற்சாலேயில் முக்கியமானதான ராட்டை இல்லாததைக் குறித்து நான் வருந்தாமலிருக்க முடியவில்லே. விளேயாட்டுப் பொம்மைகள் செய்வதற்கிருந்த அபிவிருத்தியான முறைகள், பொம்மைகளேச் செய்வோருக்கு நிச்சயமாக நல்ல ஊதியத்தை அளிக்கும். ஆகையால், பாட்ன போன்ற ஒரு நகரிலுள்ள ஒரு தொழிற்சாலேயில் நியாயமான இடமே இத்தொழிலுக்கு இருக்கிறது. கைத்தறி நெசவு இல்லே யென்ருல் ஓர் இந்தியத் தொழிற்சாலே பூரணமானதாகாது. ஆனல், கையினல்

நூற்பதையும், அதன் மூலம், இன்று வேறு உபதொழில் எதுவும் இல்லாமலிருக்கும் கோடிக்கணக்கான கிராம மக்களையும் பற்றிக் கவனம் செலுத்தாத கைத்தொழில் தேசீய இலாகா எதையும் பூரணமானதாக இருப்பதாகக் கருதுவதற்கில்லை. கையினால் நூற்பதை வெற்றிகரமாகச் செய்வதற்கு இருந்து வருவதாக என்னிடம் கூறப்பட்ட கஷ்டங்கள் முக்கியமாக இரண்டு :

(1) கையினால் நூற்ற நூல், மில் நூலைப் போலப் பலமுள்ளதாக இல்லாதிருப்பதால் கையினால் நூற்ற நூல், மில் நூலுடன் போட்டி போடவே முடியாது.

(2) ராட்டையில் நூற்பதால் கிடைக்கும் நூல் கொஞ்சமாக இருப்பதால், அது லாபகரமானதாக இல்லை.

கையினால் நூற்ற நல்ல நூலைக்கொண்டு தயாரித்த துணி, அதே நெம்பருள்ள சிறந்த மில் நூலினால் நெய்த துணியைவிட நாள்பட நீடிப்பதாக இருக்கிறது என்பது அநேக ஆண்டுகளாகக் கதர் அணிந்து வருபவர்களின் அனுபவம். உதாரணமாக, சில ஆந்திர நண்பர்கள், தங்களுடைய வேஷ்டிகள் நான்கு ஆண்டுகளுக்கு அதிகமாகியும் கிழியாமலிருக்கின்றன என்றும், மில் நூல் வேஷ்டியோ ஒரு வருடத்திற்குள்ளேயே கிழிந்துவிடுகிறது என்றும் எனக்குக் காட்டியிருக்கிறார்கள். ஆனால், நான் சொல்ல விரும்பும் விஷயம், கையினால் நூற்ற நூல் துணி நாள்பட்டு உழைக்கிறது என்பதல்ல. இந்திய மக்களில் 85 சதவிகிதத்தினர் விவசாயிகள். இந்த மக்களுக்குச் சாத்தியமானதாக இருக்கும் ஒரே துணைத் தொழில் கையினால் நூற்பதுதான். ஆகையால், துணி சம்பந்தமாக நாம் செய்யும் ஏற்பாடுகளெல்லாம் கையினால் நூற்ற நூலைக் கொண்டு செய்து கொள்ளுவதாக இருக்க வேண்டும் என்பதை உணர்ந்து, அதற்கு ஏற்றபடி செய்தாக வேண்டும். நான் இங்கே சொல்ல விரும்புவது இதுதான். ஆகையால், கையினால் நூற்ற மிக மலிவான சிறந்த நூலைக் கண்டு பிடிப்பதில்தான் நம் முயற்சி யெல்லாம் ஈடுபட வேண்டுமே யல்லாமல், எங்கே, எப்படி நூற்கப்பட்டதாக இருந்தாலும் சரி, நூல் மலிவாகவும் சிறந்ததாகவும் இருந்தால் போதும் என்பதில் நம் முயற்சி ஈடுபட்டுவிடக்கூடாது. என்னுடைய திட்டம் சரியானது என்றால், நாட்டில் இருக்கும் கைத்தொழில் இலாகாக்கள் எல்லாம் ராட்டையை மையமாகக்கொண்டே அதைச் சுற்றி இயங்க வேண்டும். ஆகையால், அப்பொழுது கைத்தொழில் இலாகா, உற்பத்தியை அதிகமாக்கும் வகையில் ராட்டையில் அபிவிருத்திகளைச் செய்வார்கள். கையினால் நூற்பதற்குத் தானே உற்சாகம் உண்டாவதை முன்னிட்டுக் கையினால் நூற்ற நூலை அவர்கள் வாங்குவார்கள். கிடைக்கும் கையினால் நூற்ற நூலின் ஒவ்வொரு ரகத்தையும் பயன்படுத்திக் கொள்ளுவதற்கான வழிகளையும்

அவர்கள் கண்டுபிடிப்பார்கள். கையினல் நூற்ற மிகச் சிறந்த மெல்லிய நூலுக்குப் பரிசுகளும் அளிப்பார்கள். கையினல் நூற்ற நூல் சிறந்ததாகக் கிடைப்பதற்குச் சாத்தியமான வழி வகைகளையும் அவர்கள் தேடுவார்கள். கை நெசவுக்குக் குறைவான ஆதரவு கொடுக்கவேண்டும் என்பதல்ல. கையினல் நெய்வதற்கும் கையினல் நூற்பதற்கும், அதிகமான ஆதரவை அளித்து, அதன் மூலம் யாருக்கு உதவி தேவையாக இருக்கிறதோ அவர்களுக்குச் சேவை செய்யவேண்டும் என்பதுதான் அதன் பொருள்.

ஆனல், கையினல் நூற்பது லாபகரமாக இல்லை என்று இது ஆட்சேபிக்கப்படுகிறது. யார் பல மணி நேரத்திற்கு ஒரு வேலையும் இல்லாமல் இருக்கிருர்களோ, அதிகப்படியாகக் காலணு கிடைத்தாலும் அதுவும் வரவேற்கத்தக்கதாக யாருடைய வருமானம் மிகச் சொற்பமாக இருக்கிறதோ அவர்களுக்கு நிச்சயமாக நூற்பது லாபகரமானதுதான். வருடத்திற்குக் குறைந்தது நான்கு மாத காலமாவது ஒரு வேலையும் இல்லாமல் கோடிக்கணக்கான விவசாயிகள் நிர்ப்பந்தமாகச் சோம்பலாக இருக்க வேண்டியவர்களாக இல்லாதிருந்தால்தான் ராட்டைத் திட்டம் முழுதும் சிதறுண்டு போகும். கதர்த் தொண்டர்கள் எங்கெல்லாம் தங்கள் அன்புப் பணியைச் செய்துகொண்டு வருகிருர்களோ அங்கெல்லாம் இது லாபகரமானதாகவே இருக்கிறது. தாங்கள் நூற்ற நூலை வாங்குவதற்கு ஆள் இருப்பது கிராமவாசிகளுக்கு வரப்பிரசாதமாகியும் இருக்கிறது. மாதம் ஐந்து, ஆறு ரூபாய்க்குமேல் வருமானமில்லாதவர்கள், நேரமும் இருப்பவர்கள், தங்களுக்கு மாதம் இரண்டு ரூபாய் அதிகப்படியாகக் கிடைப்பதாகவுள்ள வேலையை ஆனந்தத்துடன் மேற்கொள்ளுவார்கள்.

—'எங் இந்தியா' – 8—10—1925

## 7

# மிகச் சிறந்த துணைத் தொழில்

'மேற்கு இந்தியாவில் விவசாய அபிவிருத்தி' என்ற தலைப்பில் கீட்டிஞ்ச் எழுதியிருப்பதிலிருந்து கீழ்க்கண்ட பகுதியை ஒரு நண்பர் எனக்கு அனுப்பியிருக்கிருர் :

"கையினல் பஞ்சை நூற்பது போன்ற தொழில் நுட்பத் திறமை வேண்டியிராத வேலையை விவசாயிகள் மேற்கொள்ளும்படி முயற்சிகள் செய்யப்படுகின்றன. விவசாயிக்கு இப்பொழுது அதிக நேரம் வீண் பொழுதாகப் போய்க்கொண்டிருக்கிறது. ஆகையால், இச்சமயத்தில் அவர் செய்யும் எந்த வேலையும், அதனல் அவருக்குக் கிடைப்பது என்னதான் குறைவாக இருப்பினும், ஒன்றுமே இல்லாமலிருப்பதைவிட எவ்வளவோமேல். இதைக்கொண்டு பார்த்தால், நூற்கும் ஆலைகள் திறமையாக வேலை செய்துகொண்டு வரும்

இக்காலத்திலும் கையினால் நூற்பது பொருளாதார விஷயத்தில் நியாய மானதே ஆகிறது. துரதிருஷ்டவசமாக இன்று இருந்து வரும் நிலைமை இவ்விதம் எண்ணும்படி செய்கிறது. ஆனால், இக்கஷ்டமான, சமமில்லாத போட்டிக்கு விவசாயிகளை வேறு வழியில்லாததனாலேயே ஆளாக்கவேண்டி யிருக்கிறது. விவசாயிகளுக்கு மிகச் சிறந்ததான துணைத்தொழில் கால்நடை களின் தரத்தை உயர்த்துவதும் அவைகளை வளர்ப்பதுமாகும். இதனால் அவர்களுக்கு எப்பொழுதும் வேலை இருக்கும்; எல்லாக் காலங்களிலும் வருமானம் வரும். நிலத்தை நல்ல சத்துள்ளதாகச் செய்வதற்கு அவசியமான உரமும் இதனால் அவர்களுக்குக் கிடைத்துக்கொண்டிருக்கும்.''

இதில் சாதாரணமாக இரண்டு விஷயங்கள் ஒப்புக்கொள் ளப்பட்டிருப்பதால் இது பலனுள்ளதாகிறது. ஒன்று, அநேக மாக இந்தியாவிலுள்ள விவசாயிக்கு அதிக நேரம் வீண் பொழு தாகப் போகிறது என்பது. இரண்டாவது, அந்த நேரத்தில் விவசாயிக்குக் கிடைக்கும் வேலை எதுவானாலும், அதில் என்ன தான் குறைவான வருமானம் வருவதாயிருப்பினும், எதுவுமே இல்லாமலிருப்பதைவிட இது மேல் என்பது. என்றாலும், இதை எழுதியிருப்பவர், ஆலைகள் திறமையாக நூற்கின்றன என்பதற்காகக் கையினால் நூற்பது பயனில்லை என்கிறார். நன்றாக ஆராய்ந்து பார்த்தால் இந்த வாதம் எவ்வளவு தவறானது என்பது விளங்கும். தன் வீட்டு வாசலிலேயே இருக்கும் திறமையான ஆலைகளுடன் போட்டி போடவேண்டியவனாக விவசாயி இல்லை. அவன் போட்டி போடவேண்டியிருப்ப தெல்லாம், கஞ்சி போட்டிருக்கும் மெல்லிய மில் துணி மீது தனக்குப் புதிதாகத் தோன்றியிருக்கும் மோகத்துடன் தான். விவசாயி தனது பழைய ருசியைத் திரும்பவும் அடைந்து விடுவானானால், எளிமையான, ஆனால் மிருதுவான, அழகான கதரையே மீண்டும் உடுத்த ஆரம்பித்துவிட்டால், சோம்பலாக இருக்கவேண்டிய அபாயமே அவனுக்கு வராது. கோடிக்கணக் கான மக்கள் தங்கள் வீடுகளில் கோணல் மாணலாகச் சுடப் படும் ரொட்டியைத்தான் விரும்புகிறார்கள். திறமை வாய்ந்த ஹோட்டல்களும் ரொட்டிக் கடைக்காரர்களும் நன்றாகச் சுட்டு மணத்துடன் பிஸ்கோத்துகளை வைத்திருந்தாலும், மக்கள் தாங்கள் சுட்டுக்கொள்ளும் ரொட்டியையே விரும்புகின்றனர். கால்நடை வளர்ப்பைத் துணைத் தொழிலாக யோசனை கூறப்பட் டிருக்கிறது. அது நல்ல தொழிலே என்பதில் சந்தேகமில்லை. கையினால் நூற்பதைவிட இது எப்பொழுதும் அதிக வருவாயை அளிக்கக்கூடியது. ஆனால், இதற்கு மூலதனம் வேண்டும். கால் நடையை நல்ல ரகமானதாக்குவதற்கு அம்முறைகளும் தெரிய வேண்டும். இவை விவசாயியிடம் இல்லை. முன்கூட்டிய தயாரிப்புகளெல்லாம் இல்லாது போனால் இவை விவசாயியிடம் இரா; இருக்கவும் முடியாது. ஆகையால், எந்தவிதத்தில் கவ னித்தாலும், கையினால் நூற்பதைக்கொண்டு போட்டி போடு வதைத் தவிர இந்திய நிலைமைக்கு ஏற்றதான துணைத் தொழில் வேறு எதுவும் இல்லை.



1925–இல் சபர்மதி ஆசிரமத்தில் ராட்டை நூற்று வந்த விதம். இப்படத்தில் இருப்பதைப் போன்ற ராட்டையையே உபயோகித்து வந்தார்.



1929-இல் கலாகன்கார் சமஸ்தான விருந்தினர் விடுதியில் தங்கியிருந்த மகாத்மா நூற்றுக்கொண்டிருந்தபோது எடுத்த படம்.

இதற்கு இருக்கும் இணையற்ற மதிப்பு, கோடிக்கணக்கான மக்களுக்கு உடனேயே வருவாயுள்ள வேலையைக் கொடுப்பதாக இருக்கிறது என்பதில்தான் இருக்கிறதே யன்றித் தனிப்பட்டவர்கள் சிலருக்கு அதிகமான ஊதியம் அளிக்கும் என்பதில் இல்லை. ஆகையால், வெற்றிகரமாக அமைத்துவிடுவதற்குத் தகுந்ததாக இருக்கும் ஒரே ஒரு துணைத்தொழில் இதுதான். எனவே, கால்நடை வளர்ப்பு, அதனளவில் என்னதான் நல்லதாக இருப்பினும், மிகச் சிறந்ததான துணைத்தொழில் கையினுல் நூற்பதே.

—'எங் இந்தியா' – 15—10—1925

# 8

# நூற்கவேண்டியது யார்?

கிரிதி (பீகார்) உபசாரப் பத்திரத்தில் குறிப்பிடப்பட்ட மூன்ருவது ருசிகரமான விஷயம், அங்குள்ள தொழிலாளர்கள் நூற்காமலிருப்பது. கிரிதியில் மைக்காச் சுரங்கங்கள் பல இருக்கின்றன. ஆகையால், இச்சுரங்கங்களில் வேலை செய்யும் தொழிலாளர்கள் அநேகர் அங்கே இருக்கிருர்கள். இத்தொழிலாளர்கள் நூற்பதால் கிடைக்கக்கூடியதற்கு அதிகமான கூலியை இயல்பாகப் பெற்று வருகிருர்கள். ஆகையால், அவர்கள் நூற்பதே இல்லை. உண்மையில் பத்திரத்தில் கூறியிருந்ததைப் போன்று, மன்னிப்புக் கோரும் வகையில் இதைப் பற்றிக் குறிப்பிட்டிருக்க வேண்டியதில்லை. அதிக வருமானம் வரும் உத்தியோகங்களில் இருப்பவர்கள், மிகுந்த வருவாய் கிடைக்கும் உத்தியோகங்களை விட்டுவிட்டு நூற்க முற்படவேண்டும் என்று நான் சொன்னதே இல்லை என்பதை 'எங் இந்தியா' வாசகர்கள் அறிவார்கள். வருவாய் கிடைக்கக்கூடிய வேலை எதுவுமே இல்லாமலிருப்பவர்கள், அதுவும் அவர்கள் வேலையில்லாமல் இருக்கும் நேரத்தில் மாத்திரமே, நூற்கவேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிருர்கள். அவர்களையே நூற்கும்படி தூண்ட வேண்டும் என்று நான் திரும்பத் திரும்பக் கூறிவந்திருக்கிறேன். எந்த வேலையும் இல்லாததால், இந்நாட்டில் கோடிக்கணக்கான ஆண்களும் பெண்களும் குறைந்தது வருடத்தில் நான்கு மாத காலம் 'சோம்பலாக இருந்து வருகிருர்கள் என்பதையே கையினுல் நூற்கும் தத்துவம் முழுதும் அடிப்படையாகக்கொண்டிருக்கிறது. ஆகையால், நூற்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுவது இருவகையினரையே. கூலிக்காக நூற்பவர்கள் இதில் ஒரு வகையினர். இவர்களைக் குறித்து நான் முன்னலேயே கூறியிருக்கிறேன். இரண்டாவது வகையினர், சிந்திக்கக்கூடியவர்களாக இருக்கும் படித்தவர்கள். மற்றவர்களுக்கு உதாரணமாக இருப்பதற்காகவும், கதர் மலிவானதாக

ஆவதற்கும் இவர்கள் தியாகமாக நூற்கவேண்டும். தொழிலாளர்கள் நூற்காத காரணம் எனக்கு விளங்குகிறது. ஆனால், அவர்கள் கதர் அணியாத காரணம் எனக்கு விளங்கவில்லை. அப்பெரிய கூட்டத்தில் இருந்தவர்களில் கதர் அணியாமலிருப்பதற்கு ஒருவருக்கேனும் நியாயம் இல்லை. கிரிதி தனக்கு வேண்டிய நூலைத் தானே தயாரித்து எவ்விதக் கஷ்டமுமின்றித் தனக்கு வேண்டிய கதரையும் நெய்துகொண்டுவிடலாம். இல்லாவிட்டாலும் பீகாரின் மற்றப் பகுதிகளிலிருந்தும் தனக்கு வேண்டிய கதரை மலிவாகவே தயாராக வாங்கிக்கொள்ளலாம். இந்த உபசாரப் பத்திரங்கள், ராட்டையிலும் கதரிலும் தங்களுக்குள்ள குறைபாடுகளை ஒப்புக்கொள்ளுகின்றன. அவர்கள் இதைக் குறிப்பிட்டிருப்பது, இதே நிலைமையிலேயே தொடர்ந்து இருந்துகொண்டு வருவதற்கு ஒரு மன ஆறுதலாகவேயன்றிச் சீக்கிரத்திலேயே சீர்திருத்திக்கொள்ளும் ஆர்வத்தினால் அல்ல என்றே அஞ்சுகிறேன். செய்துவிட்ட குற்றத்தை ஒப்புக்கொள்ளுவது, அதைத் தொடர்ந்து திருத்திக்கொண்டுவிடுவது என்ற நோக்கத்துடன் செய்யப்பட்டால்தான் அது நல்லதாகும். மாறுதலடைவதில்லை என்று திடம் செய்துகொள்ளுவதற்காக இப்படிச் செய்வது பயனில்லாததையும்விட மோசமானது. எனக்கு அளித்த உபசாரப் பத்திரங்கள் பலவற்றில் குறைபாடுகள் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பது, ஏற்படும் நிச்சயமான மாறுதலுக்கான சகுனமாக இருக்கும் என்று நம்புகிறேன்.

—'எங் இந்தியா' 22—10—1925

## 9

# கவியும் ராட்டையும்

ராட்டையைக் குறித்துக் குறை கூறி ஸர் ரவீந்திரநாதர் எழுதியிருந்தது கொஞ்சகாலத்திற்கு முன்பு பிரசுரமானபோது அதற்குப் பதில் கொடுக்கும்படி பல நண்பர்கள் என்னிடம் கூறினர். வேலைகள் அதிகமாக இருந்ததால் அதை முற்றிலும் படித்துப் பார்க்க அப்பொழுது என்னால் இயலவில்லை. ஆனால், அக்கட்டுரையின் போக்கைத் தெரிந்துகொள்ளும் அளவுக்கு அப்பொழுது அதைப் படித்திருந்தேன். அதற்குப் பதில் சொல்ல நான் அவசரப்படவில்லை. அதைப் படித்தவர்கள் அதிகப் பரபரப்படைந்திருந்தார்கள்; அல்லது அதில் கண்ட கருத்து சரியென்ற எண்ணத்திற்கு வந்திருந்தார்கள். ஆகையால், எனக்கு அப்பொழுது அவகாசம் இருந்து நான் பதில் எழுதியிருந்தாலும் அதை அவர்கள் உணர்ந்துகொண்டிருக்க முடியாது. எனவே, உண்மையில் அதைக் குறித்து நான் எழுதவேண்டிய நேரம் இதுதான். கவிஞர் குறை கூறியதையும், நான் எழுதுவதை

அதற்குப் பதில் என்று சொல்லலாம் என்ருல், இதையும் பார பட்சமின்றி எல்லோரும் இப்பொழுது கவனிக்கவும் முடியும்.

ராட்டையைக் குறித்து கவிஞரும் ஆச்சாரிய ஸீலும் கொண்டிருந்த அபிப்பிராயத்தைக் குறித்து ஆச்சாரிய ரே ஆத்தி ரப்பட்டதற்குக் கடுமையான கண்டனமே கவிஞரின் குறை கூறல். அதோடு ராட்டையினிடம் மாத்திரமே தனித்தும், அள வுக்கு மீறியும் நான் அன்பு கொண்டிருப்பதற்காக எனக்கு இலேசான கண்டனமும் அதில் இருக்கிறது. ராட்டையிலுள்ள பெரும் பொருளாதாரப் பலனைக் கவிஞர் மறுக்கவில்லை என்ப தைப் பொதுமக்கள் அறியவேண்டும். குறை கூறும் இக்கட் டுரையை அவர் எழுதிய பிறகு, அகில இந்திய தேசபந்து ஞாப கார்த்தத்திற்காக வெளியிட்டிருக்கும் கோரிக்கையில் கவிஞர் கையெழுத்திட்டிருக்கிருர் என்பதையும் பொது மக்கள் அறிய வேண்டும். அக்கோரிக்கையில் அடங்கியவைகளைக் கவனமாகப் படித்துப் பார்த்த பிறகே அவர் அதில் கையெழுத்திட்டிருக்கிருர். அதில் கையெழுத்திட்டதைப் போன்றே எனக்கு ஒரு செய்தியை யும் அனுப்பியிருக்கிருர். ராட்டையைப்பற்றித் தாம் ஏதோ எழு தியதாகவும் அது எனக்குப் பிடித்திருக்காது என்றும் அச்செய்தி யில் கூறியிருக்கிருர். ஆகையால், வரப்போவது இன்னது என்பதை நான் அறிவேன். ஆனல், அது எனக்கு வெறுப்பை உண்டாக்கி விடவில்லை. என் கருத்து ஏற்றுக்கொள்ளப்பட வில்லை என்பதற்காக நான் ஏன் வெறுப்படையவேண்டும்?' எந்த இரண்டு மனிதரும் எல்லாவற்றிலுமே ஒத்துப்போய்விட முடியாது. அப்படி இருக்கும்போது, அபிப்பிராய பேதம் ஒவ் வொன்றுக்கும் வெறுப்படைந்துவிடுவதென்ருல், வாழ்க்கை இன் பமில்லாத ஒரு சுமையாகவும், அதனல் அதுவே சரியான தொல்லை யாகவும் ஆகிவிடும். இதற்கு மாருக, மனம் விட்டுக் குறை கூறு வது எனக்குத் திருப்தியளிக்கிறது. ஏனெனில், எங்களுடைய கருத்து வேற்றுமையினுல் எங்கள் நட்பு இன்னும் சிறந்ததாகி றது. நண்பர்கள் நண்பர்களாக இருப்பதற்கு எல்லா விஷயங் களிலும் ஒத்துத்தான் போகவேண்டும் என்பது இல்லை. அபிப் பிராய பேதங்களில் கடுமையாகத் தாக்கிக்கொள்ளுவதும் மனக் கசப்பும் மாத்திரம் இருக்கக்கூடாது. கவிஞர் குறை கூறியிருப்ப தில் அப்படிப்பட்டது எதுவும் இல்லை என்பதை நன்றியறித லுடன் ஒப்புக்கொள்ளுகிறேன்.

குறை கூறப்பட்டிருப்பதற்குக் காரணம் பொருமை என்ற வீணன வதந்தி ஒன்று உலவிவருகிறது. ஆகையால், முன்னுரை யாக நான் இவ்வளவும் சொல்லவேண்டியிருக்கிறது. அத்தகைய ஆதாரமற்ற சந்தேகம், பலவீனமும் சகிப்புத் தன்மை இன்மையும் கொண்ட ஒரு சூழ்நிலை இருப்பதையே வெளிப்படுத்துகிறது. கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தாலே, இத்தகைய கொடிய குற்றச் சாட்டுக்கான எல்லா அடிப்படையையும் போக்கிவிடும். கவிஞர் என்னிடம் பொருமைப்படுவதற்கு என்ன இருக்கிறது?

பொருமை என்றால் போட்டிக்கான சாத்தியமும் இருக்கவேண்டும். சரி, என் வாழ்க்கையில் ஒரு பாடலைக்கூட எழுதுவதில் நான் வெற்றி பெற்றதில்லை. கவிக்கு வேண்டியது எதுவும் என்னிடம் இல்லை. அவருக்குள்ள பெருமையை அடைந்துவிட நான் ஆசைப்பட முடியாது. அதில் அவர் இணையில்லாதவர். அவருக்குச் சமமான கவிஞர் யாரும் இன்று உலகத்தில் இல்லை. என்னுடைய 'மகாத்மா' பட்டத்திற்கும் கவிஞரின் இணையில்லாத நிலைமைக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. எங்கள் துறைகள் முற்றிலும் வெவ்வேறானவை. எந்தக் கட்டத்திலும் ஒருவர் மற்றொருவர் துறையில் பிரவேசிக்கவுமில்லை. இதை இப்பொழுதே அறிந்துகொள்ள வேண்டும். தாமே சிருஷ்டித்துக் கொண்டிருப்பதான அற்புதமான உலகத்தில் கவிஞர் வசிக்கிறார். கருத்துலகமே அவர் உலகம். நானோ இன்னொருவர் சிருஷ்டித்த தற்கு-ராட்டைக்கு-ஓர் அடிமை. கவிஞர் தமது வேணுகானத்திற்கு ஏற்பத் தமது கோபிகள் நடனமாடும்படி செய்கிறார். நானோ, என் அன்பிற்குரிய சீதையான ராட்டையைத் தேடி அலைந்துகொண்டிருக்கிறேன். அவளைப் பத்துத் தலை அரக்கனிடமிருந்து, ஜப்பான், மான்செஸ்டர், பாரிஸ் முதலியவைகளிடமிருந்து, விடுவிக்க முயன்று வருகிறேன். கவிஞர் புதிதாகக் கண்டுபிடிப்பவர். அவர் சிருஷ்டிக்கிறார்; அழிக்கிறார்; திரும்பவும் சிருஷ்டிக்கிறார். நான் தேடி அலைபவன். ஒன்றைக் கண்டுகொண்டுவிட்டால் அதை நான் கெட்டியாகப் பிடித்துக் கொண்டுவிட வேண்டும். கவிஞர், கவர்ச்சியான புதியவைகளை நாள்தோறும் உலகிற்கு அளித்துக்கொண்டிருக்கிறார். பழைய உளுத்துப் போய்விட்டவைகளில் மறைந்து கிடக்கும் சாத்தியங்களை நான் காட்டத்தான் முடியும். புதிய, கண்ணைக் கவரும் பொருள்களை உற்பத்தி செய்து காட்டுகிற மந்திரவாதிக்குக் கௌரவமான இடத்தை உலகம் எளிதில் அளித்து விடுகிறது. என்னுடைய உளுத்துப்போன பொருள்களுக்கு மூலை முடுக்கான இடத்தைக் கண்டுபிடிப்பதற்கு நான் கஷ்டப்பட்டுப் போராட வேண்டியிருக்கிறது. இவ்விதம் எங்களுக்குள் போட்டி எதுவும் இல்லை. நாங்கள் ஒருவரின் நடவடிக்கைக்கு இன்னொருவர் உதவி செய்வதாக இருந்து வருகிறோம் என்று முழுப் பணிவுடனும் கூறுவேன்.

உண்மை என்னவென்றால், கவிஞர் குறை கூறியிருப்பது கவிகளுக்குள்ள விசேஷ உரிமையைக் கொண்டது. ஆகையால், அவர் கூறியிருப்பதற்கு அப்படியே பொருள் செய்துகொண்டு விடப் பார்க்கிறவர்கள் சங்கடமான நிலையை அடையவே நேரும். சாலமன் எல்லாப் பெருமைகளையும் ஒருங்கே பெற்றிருந்தான் என்றாலும், வயலில் முளைத்திருந்த தாமரைக்கு இணையாக அவன் இல்லை என்று பழமையான கவி ஒருவர் கூறினார். சாலமனுக்கு என்னதான் கீர்த்திகள் இருந்தாலும் அவையெல்லாம் செயற்கையானவை; அவன் எவ்வளவு நற்காரியங்களைச் செய்திருந்தாலும் அவனிடம் பாவமும் இருந்தது. ஆனால், தாமரை இயற்கை

அழகோடு கூடியது, பாவமற்றது என்பதை அக்கவி தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிருர். ‘ஓர் ஊசியின் காது வழியாக ஓர் ஒட்டகம் நுழைந்து போய்விடுவதுகூட எளிது. ஆனல், ஒரு பணக்காரன் சுவர்க்கத்திற்குள் பிரவேசித்து விடுவது மாத்திரம் முடியாது’ என்று கூறப்பட்டிருக்கிறது. எதையும் சொல்லுவதில் கவிகளுக்குள்ள உரிமையை இதிலும் பாருங்கள். ஊசியின் காதின் வழியாக எந்த ஒட்டகமும் போனதில்லை என்பதை நாம் அறிவோம். ஜனகன் போன்ற பணக்காரர்கள் சுவர்க்கம் போயிருக்கிருர்கள் என்பதும் நமக்குத் தெரியும். பற்கள், மாதுளம் பழத்தின் மணிகளுக்கு ஒத்திருந்தன என்று கூறப்பட்டிருக்கும் உவமையையும் பாருங்கள். இந்த கவியலங்காரத்தை அப்படியே பொருள்படுத்திக்கொண்ட பைத்தியக்காரப் பெண்கள், தங்கள் பற்களை விகாரப்படுத்திக்கொண்டு கெடுத்துக்கொண்டும் விட்டனர். ஒன்றின் உண்மையான உருவைச் சரியானபடி எடுத்துக்காட்டுவதற்காகக் கவிஞரும் ஓவியக்காரர்களும் அந்த உருவங்களின் அளவை மிகைப்படுத்திக்காட்டவேண்டியவர்களாகிருர்கள். ஆகையால், ராட்டையைக் குறித்துக் கவிஞர் கூறியிருக்கும் கண்டனத்தை அப்படியே பொருள் செய்துகொள்ளுகிறவர்கள், கவிஞருக்கு அநீதியைச் செய்தவர்களாவதோடு தமக்கும் கெடுதலை உண்டாக்கிக் கொண்டவர்களாவார்கள்.

கவிஞர் ‘எங் இந்தியா’ வைப் படிப்பதில்லை; படிப்பார் என்று எதிர்பார்ப்பதற்குமில்லை; படிக்க வேண்டிய அவசியமும் அவருக்கு இல்லை. இந்த இயக்கத்தைப் பற்றி அவர் அறிந்திருப்பதெல்லாம், பேச்சுவாக்கில் அவர் காதில் விழுந்திருப்பதுதான். ஆகையால், ராட்டைத் தத்துவத்தில் மிதமிஞ்சியவை என்று தாம் யூகித்துக்கொண்டதை அவர் கண்டித்திருக்கிருர்.

உதாரணமாக, ஒவ்வொருவரும் தங்களுடைய மற்ற வேலைகளையெல்லாம் விட்டுவிட்டுத் தமக்குள்ள முழுநேரத்திலும் நூற்றுக்கொண்டே இருக்க வேண்டும், அதாவது கவிஞர் கவி பாடுவதை விட்டுவிட வேண்டும், உழவன் கலப்பையைக் கைவிட்டுவிட வேண்டும், வக்கீல் தம்மிடமிருக்கும் வழக்குகளை விட்டுவிட வேண்டும், டாக்டர் தமது சத்திரக் கருவியை விட்டுவிட வேண்டும் என்று நான் சொல்லுவதாகக் கவிஞர் நினைக்கிருர். இது உண்மையே அல்ல. தம் தொழிலை விட்டுவிட வேண்டும் என்று நான் யாரையும் கேட்கவில்லை. இதற்கு மாருக, நாட்டு மக்கள் எல்லோருடைய நன்மைக்காகத் தியாகமாக தினந்தோறும் முப்பது நிமிடங்களை மாத்திரம் நூற்பதற்கு அளித்துத் தங்கள் தொழிலுக்கு அழகு செய்யுமாறுதான் நான் கூறுகிறேன். எந்த வேலையுமே இல்லாமல் சோம்பலாக இருந்துவரும் பட்டினி கிடக்கும் ஆண்களும் பெண்களும், தங்களுடைய ஜீவனத்திற்காக நூற்கும்படியும், அரைப் பட்டினியாக இருக்கும் விவசாயி தன்னுடைய சொற்பமான வருவாயில் கொஞ்சம் அதிகம் பெறுவதற்காக ஓய்வாக இருக்கும் நேரங்களில் நூற்க வேண்டும்

என்றும் கூறி வருகிறேன். கவிஞர் தினந்தோறும் அரை மணி நேரம் நூற்பாரானல், அவருடைய கவிதைகள் இன்னும் அதிக அழகைப் பெறும். ஏனெனில் அக்கவிதைகள் ஏழைகளின் தேவைகளையும் துயரங்களையும் இதுவரை பிரதிபலித்ததைவிட இன்னும் நன்ருக பிரதிபலிக்கும்.

மரணத்தைப் போன்ற மாறுதல் இல்லாத ஒரே மாதிரியான நிலையை உண்டாக்குவதற்காகவே ராட்டை கொண்டுவரப்படுகிறது என்று கவிஞர் நினைக்கிருர். அவ்வாறு யூகித்துக்கொண்டு, தம்மால் இயன்ருல் தாம் அதிலிருந்து ஒதுங்கிக்கொண்டுவிட வேண்டும் என்றும் நினைக்கிருர். உண்மை என்னவென்ருல், இந்தியாவின் எண்ணற்ற மக்களிடையே அத்தியாவசியமான ஒன்றுபட்ட வாழ்வின் சிரத்தையை உண்டாக்கும் நோக்கத்துடனேயே ராட்டை கொண்டு வரப்படுகிறது. உலகில் எத்தனையோ மகத்தானவைகளையும் பலவித ரூபங்களையும் காண்கிருேம். ஆனல், அவ்விதம் பல்வேறு விதமாக இருப்பவைகளுக்கிடையில், இயல்பாகவே நோக்கத்தின் ஒருமைப்பாடும், அமைப்பும், உருவமும் இருந்து வருவது சந்தேகத்திற்கிடமில்லாதிருப்பதையும் கண்டு வருகிருேம். எந்த இரு மனிதரும் முற்றிலும் ஒரே மாதிரியாக இருக்கவில்லை. இரட்டைப் பிள்ளைகள்கூட இவ்வாறு இருப்பதில்லை. என்ருலும், மனித வர்க்கம் முழுமைக்கும் தவிர்க்க முடியாதவாறு பொதுவானதாக இருப்பவையும் எவ்வளவோ இருக்கின்றன. உருவம் பொதுவானதாக இருப்பதற்குப் பின்னல் அதே ஜீவன் எல்லாவற்றிலும் வியாபித்து இருக்கிறது. ஒரே மாதிரியானது, ஒன்று என்ற இதைக் குறித்துச் சங்கரர் தர்க்க ரீதியான, இயற்கையான கடைசி முடிவு வரையிலும் போய் ஆராய்ந்திருக்கிருர். ஒரே சத்தியம், ஒரே கடவுள், பிரம்மம்தான் உண்டு. நாம, ரூபங்களாகிய எல்லாத் தோற்றங்களும் மாயை, அநித்தியமானவை என்றும் அவர் கூறியிருக்கிருர். நாம் காண்கிறவைகளெல்லாம் உண்மையல்லாதவைதானு, நாம் எதைக் காணவில்லையோ அதுதான் உண்மையல்லாதவற்றிற்குள் இருக்கும் உண்மையானதா என்பதைக் குறித்து நாம் விவாதித்துக்கொண்டிருக்க வேண்டியதில்லை. நீங்கள் விரும்பினல் இந்த இரண்டுமே உண்மையானதாகவே இருக்கட்டும். நான் கூறுவதெல்லாம், இத்தனை ஏராளமான வகைகளிலும் ஒரே மாதிரியானதும், வித்தியாசமின்மை அல்லது ஒருமையும் இருக்கின்றன என்பதாகும். அதே போலவே பல தரப்பட்ட தொழில்களுக்கிடையேயும் தவிர்க்க முடியாததான தொழில் ஒருமையொன்றும் இருக்கிறது என்றும் கருதுகிறேன். மனித வர்க்கத்தில் பெரும்பான்மையினருக்கு விவசாயம் பொதுவானதாக இல்லையா? இதே போலவே நூற்பதும் கொஞ்ச காலத்திற்கு முன்னல் வரையில், மனித வர்க்கத்தில் மிகப் பெரும்பான்மையினருக்குப் பொதுவானதாக இருந்தது. மன்னனுலும் விவசாயியானுலும், அவர்களேதான் உண்டு, அவர்களேதான் உடுத்தியாக வேண்டும். அதே போலவே தங்களுடைய

ஜீவாதாரமான தேவைகளுக்கு வேண்டியவைகளுக்காக இருவரும் உழைத்தாக வேண்டும், அடையாளம், தியாகம் என்ற வகையில் மாத்திரமே அந்த உழைப்பை அரசன் செய்வதாக இருக்கலாம். அவன் தனக்கும் தன் மக்களுக்கும் உண்மையோடு இருப்பதற்கு அந்த அளவாவது அவன் செய்வது அவனுக்கு இன்றியமையாதது. முக்கியமானதான இந்த அவசியத்தை ஐரோப்பா இச்சமயத்தில் உணராமல் இருக்கலாம். ஏனெனில், ஐரோப்பியரல்லாத இனத்தினரைச் சுரண்டுவதையே அது இப்பொழுது தருமமாகக் கொண்டிருக்கிறது. ஆனால், அது தவறான தருமமாகையால், வெகு சீக்கிரத்தில் அது நாசமாகியே தீரும். ஐரோப்பியரல்லாத இனத்தினர், தங்களை எப்பொழுதும் பிறர் சுரண்டிக் கொண்டிருப்பதற்கு அனுமதித்துக்கொண்டிருக்க மாட்டார்கள். இதிலிருந்து விடுபடுவதற்கு அமைதியானதும், காருண்யமானதும், அதனால் உயர்வானதுமான வழியைக் காட்டவே நான் முயன்று வருகிறேன். அவ்வழி நிராகரிக்கப்பட்டுவிடலாம். இதை நிராகரித்துவிட்டால் அதற்குப் பதிலாக இருப்பது போராட்டம்தான். இதில் ஒருவரையொருவர் கீழே தள்ளிவிட முயன்று கொண்டே இருப்பார்கள். பிறகு ஐரோப்பியரல்லாதவர்கள் ஐரோப்பியர்களைச் சுரண்ட முற்படும்போது ராட்டையின் உண்மையை உணர வேண்டியிருக்கும். நாம் உயிர்வாழ்வதற்கு எவ்விதம் வெளிநாட்டிலிருந்து இறக்குமதியாகும் காற்றைச் சுவாசித்து, இறக்குமதியாகும் உணவை உண்ண வேண்டியதில்லையோ, அதேபோல இங்கிலாந்திலிருந்து துணியை இறக்குமதி செய்ய வேண்டியதுமில்லை. இதே தத்துவத்தை முடிவான தர்க்க எல்லைக்கும் கொண்டு போய்ச் சொல்லத் தயங்க மாட்டேன். அதாவது, பம்பாயிலிருந்தோ, பங்கலட்சுமியிலிருந்தோ தனக்கு வேண்டிய துணியை இறக்குமதி செய்துகொள்ள வங்காளம் துணியக்கூடாது. இந்தியாவின் மற்றப் பகுதிகளையோ, வெளி உலகத்தையோ சுரண்டாமல் வங்காளம் தனது இயற்கையான, சுயேச்சையான வாழ்வை வாழ்வதாயின், தனக்கு வேண்டிய தானியங்களை வங்காளம் அங்கேயே பயிரிட்டுக் கொள்ளுவதைப் போலவே, தனக்கு வேண்டிய துணியையும் அதன் சொந்தக்கிராமங்களிலேயே தயாரித்துக்கொள்ள வேண்டும். யந்திரத்திற்கு அதற்குரிய இடம் உண்டு ; அது நிலைபெற்றுவிட்டது. ஆனால், அவசியமானதான மனித உழைப்புக்குப் பதிலாக யந்திரம் வந்துவிட அனுமதித்து விடக்கூடாது. அபிவிருத்தியோடு கூடிய கலப்பை நல்லதுதான். ஆனால் எப்படியோ ஒருவர், தாம் கண்டுபிடித்த யந்திரத்தின் உதவியைக் கொண்டு இந்தியாவிலிருக்கும் நிலம் முழுவதையும் உழுதுவிட முடிந்தால், விவசாயத்தில் உற்பத்தியாகிறவைகளை யெல்லாம் அவர் தம் ஆதிக்கத்தின் கீழே கொண்டுவந்து விட்டால்,கோடிக்கணக்கான மக்களுக்கு வேறு தொழிலே இல்லாது போகுமாயின், அவர்கள் பட்டினி கிடப்பார்கள். இப்பொழுதே அநேகர் ஆகிவிட்டதைப் போன்று சோம்பேறித்தனமாக இருந்து விட்டதனால் அம்மக்கள்

முட்டாள்களாகிவிடுவார்கள். இன்னும் அநேகரும், விரும்பத்தகாத இந்த நிலையை அடைந்துவிடும் அபாயம் ஒவ்வொரு நாழிக்கும் இருந்து வருகிறது. குடிசையிலிருக்கும் கைத்தொழில் கருவிகளில் எல்லாவிதமான அபிவிருத்திகளையும் செய்வதை நான் வரவேற்பேன். ஆனால், கோடிக்கணக்கான விவசாயிகள் அவர்கள் குடிசைகளில் இருந்தபடி செய்வதற்கு வேறு ஏதாவது ஒரு தொழிலைக் கொடுப்பதற்குத் தயாராயில்லாதபோது, கையின் உழைப்புக்குப் பதிலாக யந்திர சக்தியால் இயங்கும் நூற்கும் கதிர்களைப் புகுத்துவதானால், அது அக்கிரமமான குற்றம் என்பதை அறிவேன்.

அயர்லாந்தின் உதாரணம் நமக்கு அவ்வளவாகப் பயன்படாது. பொருளாதாரக் கூட்டுறவின் அவசியத்தை நாம் உணரும்படி செய்கிறவரையில் அது சரியானதுதான். ஆனால், இந்தியாவிலிருக்கும் சந்தர்ப்பங்கள் மாறுபட்டவைகளாக இருப்பதால், கூட்டுறவு வேலை செய்வதற்கான முறையும் அவசியம் மாறுபட்டதாகவே இருக்க வேண்டும். இந்தியாவின் கஷ்ட நிலைமையில் கூட்டுறவுக்காகச் செய்யும் ஒவ்வொரு முயற்சியும், *1900* மைல் நீளமும் *1500* மைல் அகலமுமுள்ள இப்பெரும் தீபகற்பத்திலிருக்கும் பெரும்பான்மையான மக்களுக்கானதாக அது இருப்பதாயின், ராட்டையை மையமாகக் கொண்டு இயங்குவதாகவே இருக்கவேண்டும். ஸர் கங்கர்ராம் என்ற ஒருவர், மாதிரிப் பண்ணையை நமக்குக் காட்டலாம். ஆனால், கையில் காசு இல்லாத இந்திய விவசாயிக்கு, இரண்டு மூன்று ஏக்கர்கூட நிலமில்லாதவனுக்கு, அந்த நிலமும் மேலும் குறைந்து போய்விடும் அபாயம் தினந்தோறும் இருந்துவரும் இந்த உழவனுக்கு, அப்பண்ணை, மாதிரிப் பண்ணையாக முடியாது.

ராட்டையைச் சுற்றி, அதாவது தங்கள் சோம்பலை உதறித் தள்ளிவிட்டுக் கூட்டுறவின் நன்மையையும் உணர்ந்துகொண்டுவிட்ட மக்களிடையே, ஒரு தேசீய ஊழியர் மலேரியா நோயை எதிர்த்து ஒழிப்பதற்கான வேலைத் திட்டம் ஒன்றை அமைப்பார். சுகாதார அபிவிருத்தி, கிராமத் தகராறுகளைத் தீர்த்து வைப்பது, கால்நடையைப் பாதுகாத்து வளர்ப்பது போன்ற நன்மையளிப்பதான நூற்றுக்கணக்கான மற்றத் திட்டங்களையும் வகுப்பார். எங்கெங்கு ராட்டை வேலை நன்றாக அமைக்கப்பட்டு விட்டதோ அங்கெல்லாம் சம்பந்தப்பட்ட கிராமவாசிகளின், ஊழியர்களின் சக்திக்கு ஏற்ற வகையில், இத்தகைய கஷ்ட நிவாரண வேலைகளெல்லாம் நடந்து கொண்டு வருகின்றன.

கவிஞரின் வாதங்களையெல்லாம் விவரமாக ஆராய்ந்து கொண்டிருப்பது என் நோக்கமல்ல. கவிஞருக்கும் எனக்கும் எங்கெங்கு அடிப்படையில் அபிப்பிராய பேதம் இல்லையோ அவற்றையெல்லாம் எடுத்துக்காட்ட முயன்றிருக்கிறேன். கவி

ஞரின் வாதத்தில் நான் ஆதரிக்க முடியாதது எதுவும் இல்லை. என்ருலும், ராட்டை சம்பந்தமாக நான் கொண்டிருக்கும் நிலையி லேயே நான் இன்னும் இருந்து வருகிறேன். ராட்டையைக் குறித்து ஏளனம் செய்து அவர் கூறியிருக்கும் அநேக விஷயங் களை நான் சொல்லவில்லை. ராட்டைக்கு என்னென்ன பெரு மைகள் உண்டு என்று நான் கூறி வருகிறேனே அவையெல் லாம் கவிஞரின் தாக்குதலால் சேதம் அடையாமல் அப்படியே இருந்து வருகின்றன.

ஒரே ஒரு விஷயம் மாத்திரம் எனக்கு மன வருத்தத்தை உண்டு பண்ணுகிறது. மீண்டும் பேச்சு வாக்கில் யாரோ சொன்னதை வைத்துக்கொண்டு ராம் மோகன் ராயைச் சின்ன மனிதர் என்று நான் சொன்னதாக அவர் நம்பியிருப்பதுதான் அது. பெரிய சீர்திருத்தக்காரராகிய அவரைச் சின்ன மனிதர் என்று எங்கும் நான் சொன்னதேயில்லை; அவரை அவ்வாறு நான் கருதியதும் இல்லை. கவிஞருக்கு அவர் எப்படி மகானு பாவரோ அப்படியேதான் அவர் எனக்கும். ஒரே ஒரு சந்தர்ப் பத்தைத் தவிர ராம் மோகன் ராயின் பெயரை நான் உபயோ கிக்க வேறு சந்தர்ப்பம் எனக்கு இருந்ததாகவும் நினைவில்லை. மேற்கத்தியக் கல்வியைப் பற்றிக் கூறும்போதே அவர் பெயரை உபயோகித்தேன். அது நான்கு ஆண்டுகளுக்கு முன்னல் கட்டாக் மணல்வெளியில் பேசியபோது, மேற்கத்தியப் படிப்பு இல்லாமலேயே ஒருவர் மிக உயர்ந்த பண்பாட்டைப் பெற முடியும் என்று நான் சொன்னதாகவே ஞாபகம். அப்பொழுது யாரோ ஒருவர், ராம் மோகன் ராயின் பெயரைச் சொன்ன போது, உபநிடதங்களைச் செய்த பெயர் தெரியாத ஆசிரியர் களை எண்ணும்போது ராம் மோகன் ராய் சின்ன மனிதரே என்று நான் சொன்னது நினைவிருக்கிறது. இப்படிச் சொன்ன தற்கும், ராம் மோகன் ராய் சின்ன மனிதர் என்று சொல்லு வதற்கும் அதிக வித்தியாசமுண்டு. மில்டனுடனும் ஷேக்ஸ் பியருடனும் ஒப்பிட்டால் டென்னிஸன் சின்ன மனிதர் என்று சொன்னல், டென்னிஸனை நான் அற்பமாக எண்ணுவதாக ஆகாது. இருவர் பெருமையையும் நான் உயர்த்துகிறேன் என்றுதான் நான் சொல்லிக் கொள்ளுகிறேன். எனக்கும் கவிஞருக்கும் கருத்து வேறுபாடு இருந்தபோதிலும் அவரை நான் மிகவும் போற்றுகிறேன். அப்படியிருக்க, வங்காளத்தில் மிகப் பெரிய சீர்திருத்த இயக்கத்தைச் சாத்தியமாக்கியவரை, அதன் மிகச் சிறந்த பயன்களில் ஒன்ருகக் கவிஞர் தோன்றக் காரணமாக இருந்தவரை நான் குறைத்துப் பேசிவிடுவதற் கில்லை.

—'எங் இந்தியா'-5—11—1925

## 10

# கதர் செத்துவிடாது

[கீழ்வரும் கட்டுரை, ஸ்ரீ ஜார்ஜ் ஜோஸப் செய்த ஒரு பிரசங்கத்திற்குப் பதில் கூறி மகாத்மா 'எங் இந்தியா'வில் 'ராணுவத் திட்டம்' என்ற தலைப்பின் கீழ் எழுதிய கட்டுரையின் பிற்பகுதியாகும். கல்லூரி மாணவர்களுக்கு மாத்திரமேயன்றி எஸ். எஸ். எல். ஸி. வரை படித்தவர்களுக்கும் ராணுவப் பயிற்சி அளிக்க வேண்டும் என்று ஸ்ரீ ஜோஸப் தமது பிரசங்கத்தின் முற்பகுதியில் கூறினார். அவர் கூறியதையும் அதற்கு மகாத்மா அளித்த பதிலையும், 'மகாத்மா காந்தி நூல்கள்' இரண்டாம் தொகுப்பில் 395-98-ஆம் பக்கங்களில் காணலாம். கதரைக் குறித்து ஸ்ரீ ஜோஸப் குறை கூறியிருக்கும் பகுதியும் அதற்கு மகாத்மா அளித்த பதிலும் மாத்திரம் இங்கே கொடுக்கப்பட்டிருக்கின்றன.]

கதரைக் குறித்து அவர் சொல்லுவது என்ன என்பதை இனிப் பார்ப்போம்:

"காங்கிரஸில் நான் இருந்து வந்த வரையில், நிர்மாணத் திட்டத்தில் இருந்து வந்ததெல்லாம் கதரும் தீண்டாமை ஒழிப்பும்தான். பிந்திய ஆண்டுகளில் மதுவிலக்கும் அதில் சேர்ந்தது. இவற்றில் ஒன்றுகூட நாட்டின் இன்றைய அடிப்படைத் தேவையின் வேருக்குப் போவதாக இல்லை என்ற திட்டமான முடிவுக்கு நான் வந்துவிட்டேன் என்பதை இப்பொழுது நான் மனம் விட்டு உங்களுக்குச் சொல்லியாக வேண்டும். கதர், இதைச் செய்யவே இல்லை. இந்த இயக்கத்தைத் தோற்றுவித்தவரான காந்திஜிக்குப் பிற்காலத்தில் அது உயிரோடு இருக்காது என்று நினைக்கிறேன். கதரில் சேர்ந்திருக்கும் அடிப்படையான பொருளாதாரக் குறைபாட்டினாலேயே நான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன். இதை உற்பத்தி செய்வதற்கும் வாங்குவதற்கும் அதிகமாகச் செலவாகிறது. அதனால், இதை உபயோகிப்பவருக்கு இது அநீதியானதாகிறது. கெஜம் ஒரு ரூபாய் விலையாகும் கதர், யந்திரத் தொழிற்சாலையில் உற்பத்தியாகும் ஆறு அணத் துணியுடன் போட்டி போட முடியாது. கதர் அதை உற்பத்தி செய்கிறவருக்கும் அநீதியானதாக முடிகிறது என்பது கதரைப் பற்றிய என் அனுபவம். கதருக்கு வேராக இருக்கும் நூற்பவர்கள், பெண்கள், தினத்திற்குப் பத்து மணி நேரம் வேலை செய்து விட்டு மூன்றணக் கூலியைக் கொண்டு திருப்தியடைய வேண்டியிருக்கிறது. முக்கியமான உற்பத்தியாளருக்கு மூன்றணக் கூலி கொடுப்பது என்பதை அடிப்படையாகக் கொண்ட ஒரு கைத்தொழில் இதனாலேயே வெற்றியடையாது என்று நான் கூறுவேன். ஏனெனில், அது தொழிலாளரை வாட்டி வேலை வாங்குவதில் முக்கியமானதாக இருப்பது; உழைப்பவனின் வயிற்றுச் சோற்றுக்கு வேண்டியதற்குக் குறைவாகவே கூலி கொடுப்பது. நாடு பஞ்சத்தில் அடிபட்டிருக்கிறது, கோடிக்கணக்கான மக்கள் ஒரு வேலையுமே இல்லாமல் இருக்கின்றனர் என்றும், வருவாய் எதுவுமே இல்லாமல் இருப்பதைவிட மூன்றணவாவது கிடைப்பது எவ்வளவோ மேல் என்றும் சொல்லிவிடுவது அதற்குச் சரியான பதிலாகிவிடாது. அத்தகைய வாதத்தை

ஒப்புக்கொள்ள நான் மறுக்கிறேன். மனிதரை வேலைக்கு அமர்த்திக்கொள்ளும் முதலாளிகளோ, தன் நாட்டில் இருந்து வரும் நிலைமையை அனுசரித்து முற்போக்கான கருத்தோடு கவனிக்கும் எந்த அரசியல்வாதியோ ஏற்றுக்கொள்ளக்கூடிய வாதம் அல்ல அது. கொடுக்கும் கூலி, தொழிலாளியின் குடும்பத்தின் ஜீவனத்திற்கு மாத்திரமல்ல, அவனுடைய சொந்த ஜீவனத்திற்கே போதாது என்பதைப் பொருளாதார அவசியத்தை முன்விட்டு நான் அறிந்திருக்கும்போது, தினத்திற்கு மூன்றணு கூலி கொடுப்பது நியாயம்தான் என்று கூறிவிடுவது ஆறுதல் அளிப்பதாகாது. இதுவே கதரினிடமுள்ள மோசமான, நீக்கமுடியாத, அக்கிரமமான தீமை என்பது என் கருத்து. இதனுலேயே காந்திஜி ஏழு அல்லது எட்டு ஆண்டுகள் கஷ்டப்பட்டு உழைத்தும், இத்தொழிலின் ஸ்தாபனங்களில் லட்சக்கணக்கான ரூபாயைத் தண்ணீர் போலக் கொட்டியும், தீர்க்க வேண்டியதான மகத்தான பிரச்னையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், இன்று கதர் உற்பத்தி அதிகக் குறைவானதாகவே இருக்கிறது. இந்தியா முழுமைக்கும் வேண்டிய துணியை உற்பத்தி செய்து, வருடந்தோறும் ரூ. அறுபது கோடிக்குத் துணி இறக்குமதியாவதை நிறுத்துவதுதான் இப்பொழுதுள்ள மகத்தான பிரச்னை.”

இங்கே ஜார்ஜ் ஜோஸப்புக்கு மாறுதலில் இருந்து வரும் ஆத்திர புத்தி, அவருக்கு ஞாபக சக்தி தவறிவிட்டது என்பதை வெளிப்படுத்தி விடுகிறது. ஏனெனில், கதரை ஒரேயடியாக அவர் நிராகரிப்பதற்கு அவர் புதிய வாதம் எதையும் சொல்லவில்லை. ஆனல், உண்மையல்லாதவை என்று அவர் சொல்லிக்கொண்டிருந்தவைகளையே உண்மையானவை என்று அவர் இப்பொழுது கூறுகிருர். பின்னும் ஆலோசித்து வாதங்களை மாற்றிக்கொள்ளலாம். ஆனல், உண்மையல்ல என்று நிரூபிக்கப்பட்டாலன்றி உண்மைகளை மாற்றிவிடக்கூடாது. கோடிக்கணக்கான மக்கள் உபயோகிப்பதற்காக என்று கருதப்படும் கதர், அந்நியத் துணியைவிட அதிக விலையுள்ளது அல்ல. கதரை அவர்கள் உபயோகித்தாக வேண்டும் என்ருல், இக்கோடிக்கணக்கான மக்களே அதை உற்பத்தி செய்கிறவர்களாகவும் உபயோகித்துக் கொள்ளுகிறவர்களாகவும் இருக்க வேண்டும் என்பதுதான் அதற்குக் காரணம். பர்தோலியிலும், பிஜோலியாவிலும், மற்றும் பல இடங்களிலும் கோடிக்கணக்கான குடும்பங்களில் எவ்விதம் தங்கள் ஆகாரத்தைத் தாங்களே சமைத்துச் சாப்பிடுகிருர்களோ அதே போல் கதரை உற்பத்தி செய்து உபயோகித்துக்கொண்டும் வருகின்றனர். இது இப்பத்திரிகையில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. இன்று கோடிக்கணக்கான வீடுகளில் சமைத்துக் கொண்டிருப்பதைவிடச் சாதத்தையும் ரொட்டியையும் சில தொழிற்சாலைகளில் தயாரித்துவிடுவதால் செலவு குறைவாகும் என்பதை ரூபாய், அணு கணக்குப் போட்டுக் காட்டிவிடுவது சாத்தியம். அதைக் கொண்டு, கோடிக்கணக்கானவர்கள் சமைப்பதை நிறுத்திவிட வேண்டும் என்றும், சமைப்பதற்காக அரிசியையும் கோதுமையையும் ஒரே இடத்தில் அமைக்கப்பட்டிருக்கும்

தொழிற்சாலைக்கு அனுப்பிவிட வேண்டும் என்றும் யோசனை சொல்லிவிட யாரும் துணியமாட்டார்கள்.

மேலும் நூற்கும் பெண்கள் தினம் பத்து மணி நேரம் வேலை செய்கிறார்கள் என்று சொல்லுவதும் உண்மை அல்ல. அவர்கள் நூற்பதெல்லாம் அவர்களுக்கு இருக்கும் ஓய்வு நேரங்களில்தான். இதில் அவர்களுக்குக் கிடைப்பது, பெரும் பாலானவர்கள் விஷயத்தில் அவர்களுடைய அன்றாடத் தொழில் களிலிருந்து கிடைக்கும் வருவாய்க்கு உபரியான நல்ல வருவாயே யன்றித் தினக்கூலியும் அல்ல. நூற்பதனால் அவர்களுக்குக் கிடைக்கும் வருவாய், வீணாகப் போவதைச் செல்வமாக்கிய தாகுமேயன்றி, ஜோஸப் கூறுவது போல 'வாட்டி வாங்கிய வேலைக்கு' கூலி அன்று. ஜோஸப் சொன்னதிலுள்ள ஒரு தவறையும் திருத்துகிறேன். நூற்பவர் தினம் பத்து மணி நேரம் வேலை செய்தாலும் மூன்று அணா சம்பாதிக்க முடியாது. முழு நாளும் செய்ய வேண்டிய தொழிலாக நூற்பது கருதப்பட்ட தில்லை. கடைசியாக 'இந்தக் கைத்தொழிலின் ஸ்தாபனங்களில் லட்சக்கணக்கான ரூபாய் தண்ணீர் போல் கொட்டப்பட்டிருக் கிறது' என்பதும் உண்மையல்ல. தேசம் முழுவதிலும் நடத்தப் படும் வேறு எந்த ஸ்தாபனத்திற்கும், இந்த ஸ்தாபனத்திற் காக ஆனதைவிடக் குறைவாகச் செலவானதாகக் காணவில்லை. வறண்டு போன ஆயிரக்கணக்கான உதடுகளுக்குத் தண்ணீர் வார்ப்பதற்காக இருக்கும், தினந்தோறும் வளர்ந்துகொண்டு வரும், இப்பெரிய கிராமக் கைத்தொழிலுக்கு வேண்டிய ஏற் பாடுகளைச் செய்வதற்கு அற்பத் தொகையான 25 லட்ச ரூபாய் மூலதனமாகப் போடப்பட்டிருக்கிறது என்பதுதான் உண்மை. 1500 கிராமங்களில் விரும்பி வேலை செய்து வரும் 1500 ஊழியர் களைக்கொண்ட ஒரு ஸ்தாபனம், 1,50,000 பெண்களுக்கு அன்றா டம் நிவாரணம் அளித்து வரும் ஒரு ஸ்தாபனம், ஒரு மிதுபாய் பெடிட், நௌரோஜி சகோதரிகள், ஒரு பாங்கர், ஒரு யமுனா லால், ஒரு ராஜகோபாலாச்சாரி, ஒரு அப்பாஸ் தயாப்ஜி, ஒரு வேங்கடப்பய்யா, ஒரு பட்டாபி, ஒரு கங்காதர ராவ், ஒரு வல்லபாய், ஒரு லட்சுமிதாஸ், ஒரு ராஜேந்திரப் பிரசாத், ஒரு ஜெயராம்தாஸ், ஒரு மகாதேவ், ஒரு கிருபளானி, ஒரு சதீஷ் சந்திர தாஸ்குப்தா, ஒரு சுரேஷ் பானர்ஜி, ஆம், ஒரு ஜவாஹர் லால், வக்கீல்கள், டாக்டர்கள், வர்த்தகர்கள் ஆகிய பிரபலஸ் தர்களான இன்னும் எத்தனையோ பேரின் தன்னலமற்ற தியாக உழைப்புப் பெற்றிருக்கும் ஒரு ஸ்தாபனம், ஒருவர் செத்துவிட்ட பிறகு செத்துவிடும் என்று ஜோஸப் கூறுவ தானால், அவர் தம் நாட்டு மக்களை மிக அற்பமாக நினைக் கிறார் என்றே ஆகும். நான் இறந்த மறுநாள் காலையில், 'கதர் பெரிய தவறான காரியம்' என்று இந்த ஆண்களும் பெண்களும் கண்டு கொண்டு விடுவார்கள் என்றால் அது வருந்தத்தக்கதான அற்புதமே.

இதெல்லாவற்றையும்விடப் பெரிய பரிதாபம், இதற்குப் பதிலாகச் செய்ய வேண்டியது என்ன என்பதைக் கூருதது தான். படித்த இந்தியரெல்லாம் காக்கி உடை அணிந்து நேராகச் சுடுவது எப்படி என்பதையும் அறிந்திருக்கலாம். ஆனல், வறுமை வளர்ந்து கொண்டே போகும் பிரச்னையையும், கோடிக்கணக்கான விவசாயிகளுக்குப் போதுமான வேலை இல்லாது பலவந்தப்பட்டிருக்கும் பிரச்னையையும், இதற்கென்றே திட்டம் வகுத்தாலன்றி மேற்சொன்ன ராணுவப் பயிற்சியால் தீர்த்துவிட முடியாது. கதர்த் திட்டத்தைவிடச் சிறந்ததான திட்டம் உருவாகும் வரையில், நல்லதற்கானுலும் கெடுதலுக்கானுலும், இக்கதர்த் திட்டமே அப்பிரச்னையைத் தீர்ப்பதற்கான திட்டம்.

—'எங் இந்தியா' – 19—12–1929

# 11

# ஒரு சகோதரியின் கஷ்டம்

ஒரு சகோதரி பின்வருமாறு எழுதுகிருர் :

"நாம் ஒவ்வொருவரும் கதர் கட்டியாக வேண்டியதன் மிக மிக முக்கியத்தைக் குறித்து நீங்கள் கூறியதை ஓர் ஆண்டுக்கு முன்னல் கேட்டேன். அதன் பேரில் அப்படியே செய்வதென்று முடிவு செய்து கொண்டேன். ஆனல், நாங்கள் ஏழைகள். கதர் அதிக விலை என்று என் கணவர் கூறுகிருர். நான் மகாராஷ்டிரத்தைச் சேர்ந்தவளாகையால் பதினெட்டு முழப் புடவை கட்டுகிறேன். இப்பொழுது என் புடவையின் நீளத்தைப் பன்னிரண்டு முழத்திற்குக் குறைத்துக் கொண்டால் செலவு அதிகமாக மிச்சப்படும். ஆனல், அப்படிப் புடவையின் நீளத்தை நான் குறைத்துக் கொள்ளுவதைப் பெரியவர்கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். கதர் அணிய வேண்டும் என்பதுதான் முக்கியமேயன்றி, உடுத்துகிற துணியின் தினுசும் நீளமும் முக்கியம் அல்ல என்று அவர்களுக்கு எடுத்துச் சொல்லிப் பயனில்லை. என்னுடைய இளமைதான் எனக்கு இத்தகைய புதிய புத்திப் போக்கையெல்லாம் உண்டாக்கியிருக்கிறது என்று அவர்கள் கூறுகிருர்கள். சேலை கட்டும் தினுசை மாற்றிக்கொள்ள வேண்டியிருந்தாலும் கதரை அணிந்தாக வேண்டும் என்று தயவு செய்து நீங்கள் எனக்கு எழுதுவீர்களானல், புடவையின் நீளத்தைக் குறைத்துக் கொள்ளுவதற்கு அவர்கள் சம்மதித்துவிடுவார்கள் என்று நான் எதிர்பார்க்கிறேன்."

சகோதரி விரும்பிய பதிலை அவருக்கு அனுப்பியிருக்கிறேன். ஆனல், இதே போன்ற கஷ்டமே இன்னும் அநேக சகோதரிகளுக்கும் இருந்து வருகிறது என்பதை நான் அறிந்திருப்பதால், அச்சகோதரியின் கஷ்டத்தைக் குறித்து இங்கு குறிப்பிடுகிறேன்.

இக்கடிதத்தை எழுதியவருக்கு இருக்கும் உறுதியான தேசபக்தியை இக்கடிதம் காட்டுகிறது. ஏனெனில், பழைய

முறைகளையும் பழக்கங்களையும் விட்டுவிட இவரைப் போல முன் வரும் சகோதரிகள் அதிகம் பேர் இல்லை. எந்த விதமான அசௌகரியங்களையும் அனுபவிக்காமலோ, எந்த விதமான செலவும் இல்லாமலோ, சரியோ, தப்போ என்பதைக் குறித்துக் கூட கொஞ்சமும் பொருட்படுத்தாமல் பழைய பழக்கங்களி லேயே விடாப்பிடியாக இருந்துங்கூட சுயராஜ்யத்தை அடைந்து விடலாம் என்று எண்ணுகிற அத்தகைய சகோதரிகளும் சகோதரர்களும் ஏராளம். ஆனால், சுயராஜ்யம் அவ்வளவு மலி வான சரக்கு அல்ல. சுயராஜ்யத்தை அடைவதற்கு மாகாணப் பித்தைத் தியாகம் செய்வதுள்படத் தன்னலத் தியாக உணர்ச் சியை வளர்த்துக்கொள்ள வேண்டும்.

மாகாணப் பித்து, நாட்டின் சுயராஜ்யத்தை அடைவதற்கு மாத்திரமல்ல, மாகாண சுயாட்சியை அடைவதற்கும் உள்ள ஒரு தடை. இக் குறுகிய உணர்ச்சியை விடாமல் வைத்துக் கொண்டிருப்பதற்கு ஆண்களைவிடப் பெண்களே முக்கியமான காரணஸ்தர்களாக ஒரு வேளை இருக்கக்கூடும். எதிலும் பல வகைகள் இருப்பது ஒரு குறிப்பிட்ட அளவுக்கு விரும்பத்தக்கது தான். ஆனால், அது அளவை மிஞ்சிப் போய்விடுமானால், பல வகையானவை என்ற பெயரில் உலாவிவரும் வசதிகளும் பழக்கங்களும் தேசீயத் தன்மைக்கு விரோதமானவை. தக்காணத்துச் சேலை மிகவும் அழகானதுதான். நாட்டைத் தியாகம் செய்வதன் மூலமே அந்த அழகை அடைய முடியும் என்றால், அந்த அழகை விட்டுவிட வேண்டியதுதான். நீளக் குறைவான புடவையை அணிவதனால் கதர் அணிவதை மலிவான தாக்கலாம், அதைக் கொண்டு சௌகரியமானதாக்கலாம் என் றால், நீளக் குறைவான புடவையை உடுத்தும் 'கச்சாகி' முறையோ, பஞ்சாபி 'ஒத்னி' முறையோ உண்மையான அழ குடையவை என்று நாம் கருத வேண்டும். தக்காணி, குஜராத்தி, கச்சாகி, வங்காளி போன்று புடவை அணிவதிலுள்ள முறைக ளெல்லாம் நாட்டின் பலவகையான முறைகளே. ஒவ்வொன்றும் மற்றவைகளைப் போலத் தேசீயத் தன்மையுடையது. ஆகை யால், ஆபாசமாக இல்லாத வகையில் உடை அணிவதற்கு எதில் குறைவான துணி தேவைப்படுமோ அந்த முறையையே தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். அப்படிப்பட்டது கச்சாகி முறை. அதன்படி கட்டுவதற்கு ஆறு முழப் புடவை போதும். அதாவது, குஜராத் புடவையின் நீளத்தில் இது சுமார் பாதி. கொஞ்சம் பளுவையே சுமக்க வேண்டியிருப்பதில் இருக்கும் சிரமக் குறைவு வேறும் இதில் இருக்கிறது. அந்தப் பாவாடை யும் ரவிக்கையும் ஒரே நிறத்தில் இருந்துவிடுமானால், அது பாவாடை மாத்திரமா, முழுப்புடவையா என்பதை யாரும் உடனே தெரிந்து கொண்டுவிட முடியாது. இத்தகைய தேசீய முறைகளைப் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் மாற்றிக் கொண்டு அதே போல அணிவது பெரிதும் விரும்பத்தக்கதாகும்.

பணக்காரர்களாக இருப்பவர்கள், சாத்தியமான எல்லா மாகாணங்களின் உடை வகைகளையெல்லாம் தங்கள் பெட்டியில் வைத்திருக்கலாம். வங்காளி விருந்தினர்களை உபசரிக்கும்போது ஒரு குஜராத்தியும் அவர் மனைவியும் வங்காளிகள் முறையில் தாங்களும் உடையணிந்து அவர்களை வரவேற்று உபசரிப்பதும், அதே போலக் குஜராத்தி விருந்தினர்களை உபசரிக்கும்போது வங்காளித் தம்பதிகள் செய்வதும் அதிக மரியாதையானதாக வும் தேசாபிமானமுள்ளதாகவும் இருக்கும். ஆனல் அப்படிச் செய்வது தேசாபிமானமுள்ள பணக்காரர்களால்தான் முடியும். தேசாபிமானமுள்ள மத்தியதர வகுப்பினரும் ஏழை வகுப் பினரும் உடை முறையில் எந்தக் குறிப்பிட்ட மாகாண முறை மலிவானதாகவும், கதரை அணிவதற்குச் சௌகரியம் செய்வ தாகவும் இருக்கிறதோ அந்த முறையில் உடை அணிவதில் பெருமை கொள்ள வேண்டும். அவ்வாறு அணிவதிலும்கூட ஏழைகளிலும் ஏழைகளாக இருப்பவர்கள் அணியும் உடையின் முறையைக் கவனத்தில் கொண்டவர்களாக இருக்க வேண்டும்.

ஒருவர் தமது சொந்தச் சகதிக் குட்டையிலேயே முழுகிவிடு வது என்பது அல்ல சுதேசியம். ஆனல், நாடாகிய கடலில் அது போய்ச் சேரும்படி செய்வதுதான் அது. அப்படிப் போய்ச் சேருவது சுத்தமானதாக இருந்து, சுத்தமானதாகவே எப்பொழுதும் இருந்து வந்தால்தான் கடலுக்கு அது உதவிய தாக முடியும். ஆகையால், அத்தகைய உள்ளூர், மாகாணப் பழக்கங்கள்தான், அசுத்தமோ, ஒழுக்கக்கேடோ இல்லாதவை களாக நாடு முழுமைக்கும் பழக்கமாக ஏற்றுக்கொள்ளப்படும் என்பது தெளிவாகிறது. இந்த உண்மையை அறிந்துகொண்டு விட்டதுமே, தேசீயம் மனித வர்க்கத்தின் உற்சாகமாக மாறிவிடு கிறது.

ஆடைக்குச் சொன்னதே மொழி, உணவு முதலியவைகளுக் கும் பொருந்தும். ஏற்ற சமயங்களில் மற்ற மாகாணத்தினரைப் போன்று நாமும் உடை அணிய வேண்டியிருப்பதைப் போன்று மொழியையும் மற்றவைகளையும் பயன்படுத்திக்கொள்ள வேண் டும். ஆனல், இப்பொழுது நாம் அறிந்தோ, அறியாமலோ நமது தாய்மொழியையும், அதற்கும் அதிகமாக மற்ற மாகாணங்களின் மொழிகளையும் அலட்சியம் செய்துவிட்டு ஆங்கிலத்திற்குக் கௌரவமான இடத்தை அளிக்கும் வீணன, அசாத்தியமான, ஆபத்தான முயற்சியில் நமது சக்தி முழுவதையும் விரயம் செய்து கொண்டிருக்கிறோம்.

—'எங் இந்தியா'–2—2—1928

# 12

# யந்திரங்கள் மறைந்தால்?

அபிவிருத்தியைத் தடுத்துப் பின்னுக்குக் கொண்டு போய் விட நான் விரும்புகிறேனு? ஆலேகளுக்குப் பதிலாகக் கையினுல் நூற்பதையும் கையினுல் நெய்வதையும் புகுத்திவிட விரும்புகிறேனு? ரெயில்களுக்குப் பதிலாகக் கட்டை வண்டிகளே இருக்கும்படி செய்ய விரும்புகிறேனு? யந்திரங்களேயே அடியோடு அழித்துவிட விரும்புகிறேனு? சில பத்திரிகையாளர்களும், பொது வாழ்வில் ஈடுபட்டிருப்பவர்களும் என்னே இக்கேள்விகளெல்லாம் கேட்கின்றனர். என் பதில் இதுதான்: யந்திரங்களெல்லாம் மறைந்து போய்விடுமானுல் அதற்காக நான் அழப் போவதில்லே; அதைப் பெரிய துக்ககரமானதாகவும் நான் எண்ணப் போவதில்லே. ஆனுல், யந்திரங்களேக் குறித்து அத்தகைய திட்டம் எதுவும் என்னிடம் இல்லே. இச்சமயத்தில் நான் செய்ய விரும்புவதெல்லாம், நமது ஆலேகளில் தயாராகும் நூலுக்கும் துணிக்கும் பதிலாகக் கையினுல் நூற்றும் நெய்தும் துணியைத் தயாரித்து, இந்தியாவுக்கு வெளியில் நாம் அனுப்பிக்கொண்டிருக்கும் கோடிக்கணக்கான பணத்தை மீதப்படுத்தி, நம் குடிசைகளிலேயே அப்பணத்தை வினியோகிப்பதுதான். தேச மக்கள் தங்களுடைய ஓய்வு நேரத்தைக் கையினுல் நூற்பதில் ஈடுபடுத்தத் தயாராக இருந்தாலன்றி, அப்படிச் செய்யும் வரையில் இதை நான் செய்துவிட முடியாது. இதை அடைவதற்காக நூற்பதை ஜீவனேபாயத்திற்கு வழி என்பதற்குப் பதிலாகக் கடமையாகக் கருதி எல்லோரும் நூற்கும்படி செய்வதற்கு நான் கூறி வந்திருக்கும் முறைகளே நாம் அனுசரிக்க வேண்டும்.

—'எங் இந்தியா'—19—1—1921

[மேற்கண்ட விஷயம், 'பாவத்திற்குப் பிராயச்சித்தம்' என்ற தலேப்பில் இதே நூலில் 30-34-ஆம் பக்கங்களில் வெளியாகியிருக்கும் கட்டுரையின் பிற்பகுதியாகும்.]

# 13

# ராட்டையும் யந்திரமல்லவா?

கிராமக் கைத்தொழில் இயக்கம், எல்லா யந்திரங்களேயுமே விரட்டியடித்து விடுவதற்காக ஏற்பட்டிருப்பதல்லவா என்று யந்திரங்களுக்காகப் பரிந்து பேசிய ஒரு சோஷியலிஸ்டு, காந்திஜியைக் கேட்டார்.

அச்சமயம் நூல் நூற்றுக்கொண்டிருந்த காந்திஜி, 'இந்த ராட்டை ஓர் யந்திரமல்லவா?' என்று அக்கேள்விக்குப் பதில் கேள்வி கேட்டார்.

'இந்த யந்திரத்தைப் பற்றி நான் சொல்லவில்லை; பெரிய யந்திரங்களைப் பற்றியே சொல்லுகிறேன்' என்றார் சோஷியலிஸ்டு.

'சிங்கரின் தையல் யந்திரத்தைச் சொல்லுகிறீர்களா? கிராமக் கைத்தொழில் இயக்கம் அந்த யந்திரத்திற்கும் பாதுகாப்பு அளித்திருக்கிறது. உழைப்பதற்கான வாய்ப்பை ஏராளமாக உங்களிடமிருந்து பறித்துவிடாமல் தனிப்பட்டவனுக்கு உதவி செய்து அவன் திறமை அதிகரிக்கும்படி எந்த யந்திரம் செய்கிறதோ, மனிதன் அதற்கு அடிமையாகிவிடாமல் எந்த யந்திரத்தைத் தன் இஷ்டப்படி கையாள முடியுமோ அந்த யந்திரத்திற்கும் பாதுகாப்பு உண்டு' என்றார் காந்திஜி.

'புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருப்பவைகளைக் குறித்து என்ன சொல்லுகிறீர்கள்?' எனக் கேட்டார், சோஷியலிஸ்டு.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: 'அப்படிச் சொன்னது யார்? கிராமத்தில் ஒவ்வோர் வீட்டிலும் மின்சார சக்தி கிடைப்பதாக இருக்குமானால், கிராமவாசிகள் தங்கள் சாதனங்களையும் கருவிகளையும் மின்சாரத்தின் உதவியைக்கொண்டு இயக்கிக் கொள்ளுவதில் எனக்கு ஆட்சேபமில்லை. ஆனால், கிராமச் சமூகத்திற்கு இப்பொழுது எப்படி அவர்களுடைய மேய்ச்சல் நிலங்கள் இருக்கின்றனவோ அதேபோல அச்சமூகங்கள் அல்லது அரசாங்கத்திற்கு மின்சார நிலையங்கள் சொந்தமாக இருக்கும். ஆனால், மின்சார சக்தியும் இல்லை, யந்திரங்களும் இல்லை என்று இருக்கும்போது ஒரு வேலையுமில்லாமல் சோம்பலாக இருக்கும் கைகள் என்ன செய்வது? அக்கைகளுக்கு வேலை கொடுப்பீர்களா? அல்லது வேலையில்லாததனால் அக்கைகளை அவற்றின் சொந்தக்காரர்கள் வெட்டி விடும்படி செய்வீர்களா?

'எல்லோருடைய நன்மைக்காகவும் விஞ்ஞானத்தில் புதிதாகக் கண்டுபிடிக்கப்படுபவைகளையெல்லாம் உயர்வானவையாக நான் மதிப்பேன். இப்படி கண்டுபிடிக்கப்படுபவைகளில் ஒன்றுக்கும் மற்றொன்றுக்கும் வித்தியாசமிருக்கிறது. ஒரே சமயத்தில் ஏராளமான மக்களைக் கொன்று குவித்துவிடக் கூடியதான விஷ வாயுக்களை நான் விரும்ப முடியாது. மனித உழைப்பினால் மேற்கொண்டுவிட முடியாத பொதுஜன சௌகரியத்திற்கான காரியங்களுக்கு உபயோகிக்கப்படும் பெரிய யந்திரங்களுக்குத் தவிர்க்க முடியாததான இடம் உண்டு. அவைகளெல்லாம் அரசாங்கத்திற்கே சொந்தமானதாக இருப்பதோடு, அவை முற்றிலும் மக்களின் நன்மைக்காகவே உபயோகிக்கப்பட வேண்டும். அநேகருக்குக் கஷ்டம் விளைவித்து ஒரு சிலரை மாத்

திரம் பணக்காரர்களாக்குவதற்காகவும், காரணமில்லாமல் அநேகருடைய பயனுள்ள உழைப்பைப் பறித்துக்கொண்டு விடுவதற்காகவும் உள்ள யந்திரங்களை நான் சகித்துக்கொள்ளுவதற்கில்லை.

'ஆனால், சோஷியலிஸ்டு என்ற முறையில் நீங்கள்கூட நன்மை தீமையைப் பாராமல் யந்திரங்களை உபயோகிப்பதை ஆதரிக்க முடியாது. அச்சு யந்திரங்களை எடுத்துக்கொள்ளுங்கள். ஒருவர் அவற்றை கையினாலேயே எவ்விதம் செய்துவிட முடியும்? இவைகளையெல்லாம் செய்வதற்குப் பெரிய யந்திரங்கள் வேண்டியிருக்கும். ஆனால், வேலையில்லாததால் ஏற்பட்டிருக்கும் சோம்பேறித்தனத்தைக் குணப்படுத்திவிடுவதற்கு இதைவிட யந்திரம் வேறு எதுவும் இல்லை' என்று ராட்டையைச் சுட்டிக் காட்டிக் காந்திஜி கூறினார். 'உங்களுடன் பேசிக்கொண்டிருக்கும் போதே இதில் நான் வேலை செய்ய முடியும். இதனால் தேசத்தின் செல்வத்தில் கொஞ்சம் சேர்த்துக்கொண்டிருக்கிறேன். இந்த யந்திரத்தை யாரும் விரட்டிவிட முடியாது' என்றார்.

(ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது)

—'ஹரிஜன்'—22—6—1935

# 14

# பொருளாதார ரீதியில் கதர் சரியானதா?

ஜப்பானிலிருந்து வரும் துண்டுத்துணிகளோடோ, இந்திய ஆலைகளில் தயாராகும் துண்டுகளுடனோ விலையில் கதர் போட்டியிட முடியுமா என்பதே கேட்கப்படும் கேள்வியின் கருத்து என்றால், நிச்சயமாக 'முடியாது' என்பதுதான் என் பதிலாகும். ஆனால், மனிதனின் உழைப்பினால் தயாரிக்கப்படுகிறவைகளுக்குப் பதிலாக மனித உழைப்பைக் குறைத்துவிடும் யந்திரங்களினால் தயாரிக்கப்படுகிற பொருள்கள் ஒவ்வொன்றின் விஷயத்திலும் 'முடியாது' என்ற இதே பதில்தான் சொல்ல வேண்டியிருக்கும். இந்தியத் தொழிற்சாலைகளில் தயாராகும் சாமான்கள் விஷயத்திலும் இதேதான் பதில். தொழிற்சாலைகளில் தயாரிக்கப்படும் துணி, இரும்பு, சர்க்கரை முதலியவைகளுக்கு வெளிநாட்டுப் போட்டியைச் சமாளித்து நிற்பதற்கு ஏதாவது ஒரு வகையில் அரசாங்கத்தின் உதவி வேண்டியிருக்கிறது, கேள்வியை இந்த விதத்தில் கேட்டதே தவறு. ஒழுங்கான முறையில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் ஒரு தொழில், அவ்வாறு ஒழுங்காக அமைக்கப் பெறாத இன்னுமொரு தொழிலைப் பகிரங்க மார்க்கெட்டில் எப்பொழுதுமே விரட்டிவிட முடியும்.

ஒழுங்காக அமைக்கப்பட்டிருக்கும் தொழிலுக்கு ஏராளமான உதவி இருந்து, கணக்கற்ற மூலதனமும் அதற்கு இருக்குமாயின் தாற்காலிகமாக நஷ்டம் வந்தாலும் சரி என்று அது தயாரிக்கும் பொருள்களை விற்க முடியுமாகையால், இவ்வசதியில்லாத தொழிலை இது இன்னும் எளிதாக விரட்டிவிட முடியும். இந் நாட்டில் அநேக தொழில் முயற்சிகளுக்கு இந்தத் துக்ககரமான கதியே ஏற்பட்டிருக்கிறது.

எல்லையில்லாத அந்நிய நாட்டுப் போட்டிக்கு ஆளாகிவிடும் எந்த நாடும், பட்டினி கிடக்க வேண்டிய நிலையை அடைந்து, அதன் மூலம், அந்நியர் விரும்பினால் அவர்களுக்கு அடிமையுமாகி விடும். அதுதான் அமைதியாக உள்ளே நுழைந்து விடுவது என்று சொல்லப்படுகிறது. இன்னும் ஓர் அடி மேலே போய்க் கவனித்தால், கையினால் செய்த பொருளுக்கும் சக்தியால் இயங்கும் யந்திரங்களில் தயாரிக்கும் பொருள்களுக்கும் இடையேயும் இதுதான் முடிவு என்பது விளங்கும். இக்காரியம் நம் கண் முன்னாலேயே நடந்து வருவதை நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். மாவு மில்கள் வந்து மாவரைக்கும் திரிகைகளைப் போக்கி விட்டன. எண்ணெய் மில்கள் கிராமச் செக்குகளை விரட்டி விட்டன. நெல் மில்கள் நெல் குத்தும் உரல்களையும், சர்க்கரை மில்கள் வெல்லம் காய்ச்சும் சட்டிகளையும் ஒழித்துவிட்டன. கிராமத் தொழிலாளரின் உழைப்புக்குப் பதிலாக வந்திருக்கும் இவை, கிராமவாசிகளை ஏழ்மைப்படுத்தி பணக்காரர்களை அதிகப் பணக்காரர்களாக்குகின்றன. இது மேலும் அதிக காலத்திற்கு நடந்து கொண்டே போகுமானால், மேற்கொண்டும் எவ்வித முயற்சியுமில்லாமலேயே கிராமங்கள் அழிக்கப்பட்டுவிடும். கிராமங்களை அழித்துவிடுவதற்கு இதைவிடத் தந்திரமான, அதிக லாபகரமான முறை எதையும் எந்த செங்கிஸ்கானும்* கண்டு பிடித்துவிட முடியாது. இதிலெல்லாம் இருக்கும் பெரிய பரிதாபம் என்னவென்றால், நிலைமையை அறிந்து கொள்ளாமலேயே என்றாலும், நிச்சயமாகக் கிராமவாசிகள் தங்களுடைய நாசத்திற்குத் தாங்களே உதவி செய்துகொண்டிருப்பதுதான். இந்தத் துயரத்தைப் பற்றிய கதை பூர்த்தியாவதற்கு வாசகர் இன்னு

* செங்கிஸ் கான் (1162–1227): வடக்கு ஆசியாவில் பிறந்த மங்கோலிய வீரன். இவன் வட சீனாவில் உள்ள பல பிரதேசங்களையும், மத்திய ஆசியாவில் துருக்கியர்களின் ஆதிக்கத்திலிருந்த பகுதிகளையும் கைப்பற்றியபின், தன்னுடைய இயற்பெயரை மாற்றி 'செங்கிஸ் கான்' (மிகப் பராக்கிரமம் பொருந்திய மன்னன்) என்று பெயர் வைத்துக் கொண்டான். பிறகு இவனும் இவன் படைத்தலைவர்களும் பல புதுப் புது நாடுகளைக் கைப்பற்றிய வண்ணமாக இருந்தனர். கடைசியில், சீனாவின் கிழக்குக் கோடியிலிருந்து மேற்கே கருங்கடல் வரையிலும், வடக்கே சைபீரிய வெளிகளிலிருந்து தெற்கே சிந்து நதிக்கரை வரையிலும், உள்ள மாபெரும் சாம்ராஜ்யத்தை ஒரு குடைக் கீழ் ஆண்டான். சுபாவத்தில் இவன் ஈவிரக்கமில்லாத கொடியவன். தான் வென்ற நாடுகளிலெல்லாம் நகரங்களையும் ஊர்களையும் அழித்துச் சூறையாடுவது இவன் வழக்கம். அதனால் தான் கிராமங்களை அழிப்பதோடு இவனைச் சம்பந்தப்படுத்திக் காந்திஜி இங்கே கூறியிருக்கிறார்.

மொன்றையும் தெரிந்துகொள்ள வேண்டும். விவசாயம்கூட இப்பொழுது லாபகரமானதாக இல்லை என்பதுதான் அது. சில பயிர்களில் விவசாயிகளுக்கு விதைத்த விதையின் விலைகூடக் கிட்டுவதில்லை.

இவ்வளவு பயங்கரமான நிலைமைகளை நான் ஒப்புக்கொண்ட போதிலும், உண்மையான ஒரே பொருளாதார பரிகாரம் கதர்தான் என்று நான் சொல்லுவதன் பொருள் என்ன? இத்திட்டத்தைப் பற்றிய எல்லாவற்றையும் கூறுகிறேன்: "வேலை செய்வதற்கு வேண்டிய உடல் வலுவுடனிருக்கும் பதினறு வயதிற்கு மேற்பட்ட ஒவ்வோர் ஆணுக்கும் பெண்ணுக்கும் அவர்களுடைய வயல்களிலோ, குடிசைகளிலோ, இல்லாவிட்டால் இந்தியாவின் ஒவ்வொரு கிராமத்திலும் தொழிற்சாலைகளை அமைத்தோ வேலையும் போதுமான ஊதியமும் கொடுப்பதற்கு இதைவிடச் சிறந்ததான திட்டம் ஏற்படும் வரைவில், இல்லாவிட்டால் ஒழுங்காக நடத்தப்படும் வாழ்க்கைக்குத் தேவையான, உரிய, அவசியமான சுகங்கள், வசதிகளைக் கிராமவாசிகளுக்கு அளிக்கும் வகையில் கிராமங்களுக்குப் பதிலாக போதுமான நகரங்கள் அமைக்கப்படும் வரையில், கோடிக்கணக்கான கிராம மக்களின் நன்மையைப் பொறுத்தவரையில் கதர் ஒன்றுதான் உண்மையான பொருளாதாரத் திட்டம்." நாம் எண்ணிப் பார்க்கக்கூடிய வெகு நீண்ட காலம் வரையிலும் கதர் ஒன்றே நிலையான திட்டமாக இருக்கும் என்பதைக் காட்டுவதற்காகவே இத்திட்டத்தைக் குறித்து நான் இவ்வளவு சொல்ல வேண்டியதாயிற்று.

கிராமவாசிகள் நாளுக்கு நாள் ஏழ்மை மிகுந்து ஓட்டாண்டிகளாகிக் கொண்டு வருகின்றனர். இக்கால நிபுணர்களின் சாட்சியங்களிலிருந்து இது நிரூபிக்கப்பட்டிருக்கிறது. கிராமங்களுக்குப் போய் நேரில் பார்க்கும் சிரமமெடுத்துக் கொள்ளும் யாரும், அவர்களே உண்மையை அறிந்து கொள்ளலாம். இந்தக் கோடிக்கணக்கான கிராமவாசிகளுக்கு வேலையும் கூலியும் கொடுப்பது எப்படி என்பது இப்பொழுதுள்ள அவசரமான பிரச்னை. மக்கள், பொருளாதாரத்திலும், அறிவிலும், ஒழுக்கத்திலும் ஏழ்மையாகிக்கொண்டே போகின்றனர். வேலை செய்வதிலும், எண்ணுவதிலும், வாழ்வதிலும் கூட உறுதியை இவர்கள் வேகமாக இழந்து வருகின்றனர். உயிரோடு கூடிய சாவுதான் அவர்களுடைய வாழ்வு. கதர் இவர்களுக்கு வேலையையும் கருவிகளையும் கொடுத்து அவர்கள் தயாரிப்பவை உடனே விற்றுவிடுவதற்கான வசதியையும் அளிக்கிறது. செய்வது இன்னதென்று தெரியாமல் நேற்று வரையில் ஏங்கிக் கொண்டிருந்தவர்களுக்குக் கதர் நம்பிக்கை அளிக்கிறது.

"கதர் அப்படிப்பட்ட நம்பிக்கையான திட்டமாக இருந்தால், அது கொஞ்ச அபிவிருத்தியையே அடைந்திருப்பானேன்?" என்று ஒரு சந்தேகி கேட்கிறார். அதற்குப் பதிலாவது: கோடிக்

கணக்கான மக்களின் நன்மையைப் பொறுத்தவரையில் கதர் அடைந்திருக்கும் அபிவிருத்தி, அதனளவில் கொஞ்சமாக இருந்தாலும், மற்றத் தொழில்களையெல்லாம் ஒப்பிட்டுப் பார்த்தால் எந்த ஒரு தொழிலையும்விட மிக அதிகமானதே. கிராமத்திலிருந்து வேலை செய்து கூலி பெறும் ஏராளமான அதிகத் தொகையினரிடையே வருடந்தோறும் மிக அதிகமான தொகையைக் கதர், கூலியாக விநியோகித்து வருகிறது. இதற்காகும் நிர்வாகச் செலவோ மிகக் குறைவு. ஒவ்வொரு காலணாவும் முக்கியமாக மக்களிடையேதான் திரும்பத் திரும்ப வந்துகொண்டிருக்கிறது. அகில இந்திய நூற்போர் சங்கத்தினர் வெளியிட்டு வரும் புள்ளி விவரங்களைக் கவனிக்கும் யாரும் இதை நன்றாக அறிந்துகொள்ளலாம்.

கதரானது, கிராம மக்களிடையே அநேகமாக நிலைத்தே போய்விட்டதான வெறுப்பைச் சமாளித்து வேலை செய்ய வேண்டியிருக்கிறது. அரசாங்கத்தின் பாதுகாப்பு எதுவும் இல்லாமல் அக்கிரமமான போட்டியையும் சமாளிக்க வேண்டியிருக்கிறது. பொருளாதார சாத்திரத்தில் நிபுணர்கள் என்று சொல்லிக்கொள்ளுவோரின் அபிப்பிராயம் என வழங்கி வருவதையும் எதிர்த்து நடைபெற வேண்டியிருக்கிறது. நாளாவட்டத்தில் கதர் மலிவான விலைக்குக் கிடைக்கவேண்டும் என்று கதர் உடுத்துவோர் கோரி வருவதையும் சமாளித்துக் கதர் வேலை நடக்க வேண்டியிருக்கிறது. ஆகையால், இந்தப் பிரச்னை, கண்ணீர் சொரிந்துகொண்டிருக்கும் இந்நாட்டின் உண்மையான பொருளாதாரம் இன்னதுதான் என்பதைக் கிராமவாசிகளும் நகரவாசிகளும் அறிந்துகொள்ளுவதையே பெரிதும் பொறுத்ததாக இருக்கிறது. இப்பிரச்னைகள் எல்லா மதங்களுக்கும் புறம்பானவை. கிராமங்களில் வாழும் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள் ஆகிய எல்லோரும் ஏழ்மை, இல்லாமை என்ற அதே நோயினால்தான் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். ஏதாவது வித்தியாசம் இருக்குமாயின் அது மிகக் கொஞ்ச அளவில்தான்.

ஆகையால், கெஜத்திற்குக் கெஜம் பார்த்தால் மில்துணியை விடக் கதர் அதிக விலையுள்ளதாக இருக்கலாம். என்றாலும், மொத்தமாகவும் கிராமவாசிகளின் நன்மையைக்கொண்டும் கவனித்தால், கதர்த் திட்டமே அதிகச் சிக்கனமானது, அனுபவ சாத்தியமானது, இணையில்லாதது என்று கூறுவேன். இந்தத் திட்டத்தைப் பூரணமாகப் பரிசீலனை செய்வதை முன்னிட்டுக் கதரில் மற்றக் கிராமக் கைத்தொழில்களும் சேர்ந்திருக்கின்றன என்று பொருள் கொள்ளலாம்.

—'ஹரிஜன்'–20—6—1936

பகுதி நான்கு

# கதரும் அந்நியத் துணியும்

## 1

## 1828-ஆம் ஆண்டில்

காதி பிரதிஸ்தானத்தைச் சேர்ந்த ஸ்ரீ சதீஷ் சந்திர தாஸ் குப்தா, 'ராஷ்டிரவாணி' என்ற வங்காளச் செய்திப் பத்திரிகைக்கு ஆசிரியராக இருக்கிறார். 19-ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் 'சமாச்சார தர்ப்பணம்' என்ற பத்திரிகையின் ஆசிரியருக்கு எழுதப்பட்டதான ஒரு கடிதத்தை இவர் சமீபத்தில் கண்டுபிடித்து வெளியிட்டிருக்கிறார். ராட்டை எவ்விதம் மெதுவாக நாசம் செய்யப்பட்டது, அந்தக் காலங்களில் பெண்கள் அதனிடம் எவ்வளவு மதிப்பு வைத்திருந்தார்கள் என்பதைக் காட்டுவதற்கு இக்கடிதம் அதிக முக்கியமானதாக இருந்ததால், அதை இவர் தமது பத்திரிகையில் பிரசுரித்து அக்கடிதத்தின் மொழி பெயர்ப்பையும் எனக்கு அனுப்பியிருக்கிறார். கதர் இயக்கத்தில் அக்கறையுள்ளவர்கள் யாவரும் இக்கடிதத்தைச் சிரத்தையுடன் படிப்பார்கள் என்று நம்புகிறேன். இதுதான் அக்கடிதம் :

### "நூற்பவர் ஒருவரின் முறையீடு"

சமாச்சார் பத்திரிகையின் ஆசிரியருக்கு,

நான் நூற்பவள். எவ்வளவோ துன்பங்களையெல்லாம் அனுபவித்துவிட்ட பிறகு நான் இக் கடிதத்தை எழுதுகிறேன். தயவு செய்து இதை உங்கள் பத்திரிகையில் பிரசுரம் செய்யுங்கள். இது பிரசுரம் செய்யப்படுமானால், என்னுடைய துயரங்களைப் போக்கி, என் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கக்கூடியவர்களுக்கு அது எட்டிவிடும் என்று கேள்விப்பட்டேன். துன்பப்படும் ஓர் ஏழையினிடமிருந்து வரும் இக் கடிதத்தை அலட்சியம் செய்துவிடாதீர்கள்.

நான் மிகவும் துர்ப்பாக்கியமானவள். என்னுடைய துயரங்களையெல்லாம் நான் எழுதுவது என்றால் அதுவே ஒரு பெருங் கதையாகிவிடும். என்றாலும், அதைச் சுருக்கமாக நான் எழுத வேண்டும்.

எனக்கு ஐந்தரை கண்டா வயதானபோது (22 வயது) மூன்று பெண் குழந்தைகளைக் கொண்ட விதவையானேன். என் வயோதிக மாமனார் மாமியாரையும், மூன்று பெண்களையும் காப்பாற்றுவதற்கு எந்தச் சொத்தையும்

என் கணவர் இறந்தபோது வைத்துவிட்டுப் போகவில்லை. அவர் பல வியாபாரங்களைச் செய்து வந்தார். என் நகைகளை விற்றுத்தான் அவருடைய சிரார்த்த காரியங்களை நடத்தினேன். கடைசியாக பட்டினி கிடக்கவேண்டிய நிலைக்கு நாங்கள் வந்துவிட்டபோது எங்களை நாங்களே காப்பாற்றிக் கொள்ளக்கூடிய வழியைக் கடவுள் எனக்குக் காட்டினார். தக்ளியிலும் ராட்டையிலும் நூல் நூற்க ஆரம்பித்தேன்.

காலையில் வழக்கமானதான வீடு வாசல்களைச் சுத்தம் செய்யும் வேலையை முடிப்பேன். பிறகு உட்கார்ந்து ராட்டையில் மத்தியானம் வரையில் நூற்பேன். பிறகு சமைத்து, வயோதிகர்களான மாமனார் மாமியாருக்கும் என் பெண்களுக்கும் சாப்பாடு போட்டுவிட்டு நானும் சாப்பிடுவேன். அது முடிந்ததும் உட்கார்ந்து தக்ளியில் மெல்லிய நூலை நூற்பேன். இவ்விதம் சுமார் ஒரு தோலா நூல் நூற்று வந்தேன். நெசவாளர்கள் எங்கள் வீடுகளுக்கு வந்து, ராட்டையில் நூற்ற நூலை ரூபாய்க்கு மூன்று தோலா வீதம் வாங்குவார்கள். முன் பணமாக நெசவாளரிடம் இருந்து எனக்கு எவ்வளவு பணம் வேண்டுமானாலும் கேட்ட மாத்திரத்தில் கிடைக்கும். இதனால் சாப்பாட்டு, துணிக் கவலையே எங்களுக்கு இல்லாமல் இருந்தது.

சில ஆண்டுகளில் என்னிடம் ஏழு கண்டா பணம் (ரூ 28) சேர்ந்திருந்தது. இதைக் கொண்டு ஒரு பெண்ணுக்கு விவாகம் செய்துவைத்தேன். அதே போல மூன்று பெண்களுக்கும் கல்யாணத்தை முடித்தேன். சாதிப் பழக்கங்களில் எதையும் குறைக்கவில்லை. 'காடகாக்'களுக்கும் சாதியினருக்கும் என்ன கொடுக்க வேண்டுமோ அதையெல்லாம் நான் கொடுத்ததால் என் பெண்களைக் குறித்து யாரும் குறைவாக எண்ணவில்லை. என் மாமனார் இறந்துவிட்டபோது, அவருடைய சிரார்த்த காரியங்களுக்காகப் பதினொரு கண்டா பணம் (ரூ. 44) செலவு செய்தேன். இப் பணத்தை நெசவாளர்கள் எனக்குக் கடனாகக் கொடுத்தார்கள். ஒன்றரை வருடத்தில் அக் கடனைத் திருப்பிக் கொடுத்துவிட்டேன். இவையெல்லாம் ராட்டையின் தருமத்தில் தான் நடந்தன.

இப்பொழுது மூன்று ஆண்டுகளாக, நாங்கள் இருவர், மாமியாரும் நானும், சோற்றுக்கு வழியில்லாமல் இருந்து வருகிறோம். நெசவாளர்கள் நூல் வாங்குவதற்கு எங்கள் வீட்டுப் பக்கம் வருவதில்லை. அது மாத்திரமல்ல, நூலை விற்கச் சந்தைக்கு அனுப்பினாலும், முன்னால் விற்ற விலையில் கால்வாசி விலைக்குக்கூட அது விற்பனையாவதில்லை. எதனால் இப்படி என்பது எனக்குத் தெரியவில்லை. இதைக் குறித்து அநேகரைக் கேட்டுப் பார்த்தேன். 'விலாதி' நூல் (அந்நிய நாட்டு நூல்) ஏராளமாக இறக்குமதி செய்யப்படுகிறது என்று அவர்கள் கூறுகிறார்கள். நெசவாளர்கள் அந்த நூலை வாங்கி நெய்கிறார்கள். அந்நிய நாட்டு நூல் என் நூலுக்கு இணையானதாக இருக்காது என்று என் மனத்திற்குள் பெருமைப் பட்டுக்கொண்டிருந்தேன். ஆனால், அந்த அந்நிய நூலை நான் பார்த்ததும் என் நூலைவிட அது மேலானது என்பதைக்கண்டேன். அது சேர் ரூ. 3, ரூ 4 வீதம் விற்கிறது என்றும் கேள்விப்பட்டேன். 'அட தெய்வமே! என்னைவிட அதிகக் கஷ்டப்படும் சகோதரிகள் அங்கே இருக்கிறார்களே! அந்நிய நாட்டிலிருக்கும் ஆண்களெல்லாம் பணக்காரர்கள் என்றல்லவா எண்ணியிருந்தோம்; என்னைவிட அதிக ஏழைகளாக இருக்கும் பெண்கள் அங்கே இருக்கிறார்கள் என்பதை

இப்பொழுது காண்கிறேன்' என்று கூறித் தலையிலடித்துக் கொண்டேன். அந்த ஏழைப் பெண்களை நூற்கும்படி தூண்டியிருக்கும் ஏழ்மையை நான் முற்றிலும் உணருகிறேன். எவ்வளவோ பாடுபட்டு அவர்கள் நூற்ற நூலை அங்கே விற்க முடியாததால், அவர்கள் இங்கே அனுப்பியிருக்கிறார்கள். இங்கு அது நல்ல விலைக்கு விற்றுலாவது நன்றாயிருக்கும். ஆனால், அது எங்களைத்தான் நாசப்படுத்திவிட்டது. இந்த நூலைக்கொண்டு தயாராகும் துணியை ஆண்கள் இரண்டு மாதங்களுக்குக்கூடக் கட்ட முடியாது. அது சீக்கிரத்தில் கிழிந்து விடுகிறது. ஆகையால், அங்கே இருக்கும் நூற்பவர்கள் இந்தக் கோரிக்கையைச் சிந்திப்பார்களானால், இங்கே நூலை அனுப்புவது நல்லதா, இல்லையா என்பதை அவர்கள் சீர்தூக்கிப் பார்த்து முடிவுக்கு வர முடியும் என்று அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

சாந்திப்பூர்.

துன்பப்படும் நூல் நூற்பவர் ஒருவரின்
கோரிக்கை.
'சமாச்சார தர்ப்பணம்'

இக்கடிதத்தை எழுதியிருப்பவரின் பெருங்குணத்தைக் கவனிக்க வாசகர்கள் தவறியிருக்கமாட்டார்கள். ஆனந்தமான தான தனது அறியாமையால் அப்பெண்மணி, தன்னிலும் ஏழைகளான அந்நிய நாட்டுப் பெண்களின் கையினல் நூற்ற நூலே அது என்று எண்ணி அவர்களுக்காக வருத்தப்படுகிறார். பாவம், அப்பெண் நம்பியது தவறானது. அந்நிய நாட்டு நூலும் கையினாலேயே நூற்கப்பட்டதாக இருந்தால், இப்போட்டியில் இப்பெண் வெற்றி பெற்றிருப்பாள். இந்திய வியாபாரத்தைப் பிடித்துக் கொண்டு விடுவதற்கும், தேசத்தில் கிராமக் கைத்தொழிலைக் கொன்றுவிடுவதற்கும் உறுதி கொண்டிருக்கும் கொள்கை அந்த நூலுக்குப் பின்னால் இல்லாமல் இருந்தாலும், அந்நிய நூலின் போட்டியை இப்பெண் எதிர்த்து நின்றிருக்க முடிந்திருக்கும்.

—'எங் இந்தியா'—21—5—1931

## 2
# சுதேசியும் தேசீயமும்

ஒரு நண்பர் எழுதியிருக்கும் கீழ்க்கண்ட கடிதம் நீண்ட நாட்களாக என் காகிதக் கட்டுகளில் இருந்து வருகிறது :

"ஸ்ரீ ரொமேன் ரோலந்து, 'மகாத்மா காந்தி' என்ற தலைப்பில் எழுதியிருக்கும் புத்தகத்தைப் படித்திருப்பீர்கள் என்பதில் சந்தேகமில்லை. அப்புத்தகத்தின் 176-ஆம் பக்கத்தில் பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது :

'மிகக் குறுகியதான, கலப்பே இல்லாததான தேசீயத்தின் வெற்றி என்பதைத் தவிர இது வேறு என்ன? வீட்டுக்குள்ளே இரு; கதவுகளை

யெல்லாம் மூடிவிடு, எதையும் மாற்ருதே, எதையும் வாங்காதே, உடலையும் ஆன்மாவையும் மாத்திரம் உயர்த்திப் புனிதப்படுத்து என்பது பண்டைக் காலத்துத் துறவிகளுக்கு உகந்த வேதாந்தம்தான்! விசாலமான மனப் போக்குள்ள காந்தி, இத்துடன் தம் பெயர் சம்பந்தப்படுவதற்கு அனுமதித் துக் கொண்டிருக்கிருர்! (டி. பி. கலேல்கார் எழுதியிருக்கும் 'சுதேசியின் உப தேசம்' என்ற புத்தகத்திற்கு ஒரு முன்னுரையாகக் கூறியிருப்பது.)'

"உங்களைப் பெரிதும் போற்றுபவரான ஒருவர் இவ்வாறு எழுதியிருப் பதால் உண்மையில் நீங்கள் இதற்குப் பதில் சொல்ல வேண்டியது அவசிய மாகிறது. 'தேசீயத்தைப் பற்றிய உண்மை' என்ற தலைப்பில் ஸ்ரீ ஆண்டுருஸ் எழுதியிருக்கும் கட்டுரைக்கு அடியில் குறிப்பாக நீங்கள் சேர்த்திருப்பதை நவம்பர் 27–ஆம் தேதி 'எங் இந்தியா'வில் பார்த்தேன். அதில் இந்திய சுதேசி புனிதமல்லாததாகவும், இனவெறி கொண்டதாகவும் ஆக முடியாது என்று கூறப்பட்டிருக்கிறது. இனி வெளிவரவிருக்கும் இதழில் இதே வாதத்தை மேலும் விவரித்து, இந்த அற்புதமான நூலின் ஆசிரியருக்கும் அதன் எண்ணற்ற வாசகர்களுக்கும் ஏற்படக்கூடிய பயத்தை நீங்கள் போக்கக் கூடாதா?"

டி. பி. கலேல்காரின் பிரசுரத்தைப் பொறுத்தவரையில் நிலைமை இதுதான்: ஒரு குஜராத்திப் பிரசுரத்தின் மொழி பெயர்ப்பே இது. அசல் நூலுக்கு எழுதப்பட்டது என் முன்னுரை. டி. பி. கலேல்கார் மதிப்பு வாய்ந்த தோழர். ஆகவே, அப்பிரசுரத்தை முற்றும் ஆராயாமலேயே ஐந்தாறு வரிகள் குஜராத்தியில் முன்னுரையாக எழுதினேன். அப்புத்தகத்தில் அங்குமிங்குமாகச் சில இடங்களைத்தான் படித்தேன். சுதேசி யைக் குறித்து என் நண்பரின் கருத்தை நான் அறிவேன். அவற் றுடன் ஒத்துப் போவதில் எனக்கு எவ்விதக் கஷ்டமும் இல்லை. ஸ்ரீ ஆண்டுருஸ் சொன்னதன் பேரில் மொழிபெயர்ப்பைப் படித்துப் பார்த்தேன். எடுத்துக் கூறப்பட்டிருப்பது சில இடங் களில் குறுகிய மனப்போக்குடையதாக இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். இதைக் குறித்து ஸ்ரீ கலேல்காரிடமும் விவாதித்தேன். குறுகிய மனப்போக்குடையதாகவே மொழி பெயர்ப்பில் இருக்கிறது என்று ஒப்புக்கொள்ளுகிருர். மொழி பெயர்ப்பில் இருப்பதற்குத் தாம் பொறுப்பல்ல என்கிருர். என்னுடைய கருத்தைப் பொறுத்தவரையில், ஸ்ரீ கலேல்காரின் கருத்தைப் பொறுத்தவரையிலும்கூட, அப்பிரசுரம் ஒருவருக்கு உண்டாக்கக்கூடிய எண்ணத்தைப் போல அவ்வளவு குறுகிய மனப்பான்மையுடையது அன்று. 'எங் இந்தியா'வில் நான் எழுதி வந்திருப்பவை இதைத் தெளிவாக்குகின்றன. அப்பிர சுரத்தைப் பற்றிய வரையில் அவ்வளவுதான்.

சுதேசி என்பதற்கு நான் கூறிவரும் விளக்கம் எல்லோருக் கும் தெரிந்தது. எனக்குக் கிட்டத்தில் இருப்பவர்களுக்குக் கஷ்டத்தை உண்டாக்குவதன் மூலம் தொலைவிலிருக்கும் அக்கம் பக்கத்தாருக்கு நான் சேவை செய்யக்கூடாது. சுதேசி, பழி

வாங்குவதற்காகவும் தண்டிப்பதற்காகவும் அல்லவே அல்ல. எந்த வகையிலும் அது குறுகிய மனப்போக்குடையதும் அன்று. ஏனெனில், என்னுடைய வளர்ச்சிக்குத் தேவையானவைகளை உலகின் எல்லாப்பகுதிகளிலிருந்தும் வாங்குகிறேன். ஆனல், ஒரு பொருள் எவ்வளவுதான் நன்ருகவும் அழகாகவும் இருந்தாலும், அது என்னுடைய வளர்ச்சியைக் கெடுப்பதாக இருக்குமாயின், நான் முதலில் கவனித்தாக வேண்டியவர்களாக யாரை இயற்கை செய்திருக்கிறதோ அவர்களுக்குத் தீமை விளைவிப்பதாக இருந்தால், அத்தகைய பொருள்கள் எதையும் யாரிடமும் வாங்க நான் மறுக்கிறேன். சத்திர சிகிச்சைக்கான கருவிகளை இங்கிலாந்தினிடமும், குண்டூசியையும் பென்சிலையும் ஆஸ்டிரியாவினிடத்திலும், கடிகாரங்களை சுவிட்ஜர்லாந்திடத்திலும் வாங்குகிறேன். ஆனல், இங்கிலாந்திலிருந்தோ, ஜப்பானிலிருந்தோ உலகின் வேறு எப்பகுதியிலிருந்தும் உயர்ந்த நயமான பருத்தித் துணியில் ஓர் அங்குலத்தைக்கூட நான் வாங்கமாட்டேன். ஏனெனில், இந்தியாவின் கோடிக்கணக்கான மக்களுக்கு அத்துணி தீங்கு விளைவித்திருக்கிறது; மேலும் மேலும் விளைவித்துக் கொண்டு வருகிறது. வெளிநாட்டுத் துணி கையினல் நூற்ற நூலினலான இந்தியத் துணியைவிட உயர்வானதாக இருக்கலாம். இந்தியாவின் வறுமை மிக்கவர்களான, வறுமையில் வாடும் கோடிக்கணக்கான மக்கள் கையால் நூற்று நெய்த துணியை வாங்க மறுத்து அந்நியத் துணியை வாங்குவது எனக்குப் பாவமான காரியம் என்றே கருதுகிறேன். ஆகையால், என்னுடைய சுதேசி, கையினல் நூற்ற கதரையே முக்கியமாக மையமாகக் கொண்டிருப்பதோடு இந்தியாவில் உற்பத்தியாகும், உற்பத்தியாகக்கூடிய எல்லாப் பொருள்களின் வரையில் போகிறது. என்னுடைய சுதேசி எவ்வளவு விசாலமான போக்குடையதோ அதே போன்றது தான் என் தேசீயமும். உலகம் முழுவதும் நன்மையடைவதற்காக இந்தியா உயரவேண்டும் என்று விரும்புகிறேன். மற்ற நாடுகளை நாசப்படுத்தி இந்தியா உயர வேண்டும் என்று நான் விரும்பவில்லை. ஆகையால், இந்தியா பலமானதாகவும் செயலுள்ளதாகவும் இருந்தால், தனது கலைச் செல்வத்தையும் ஆரோக்கியமளிக்கும் மசாலைச் சரக்குகளையும் அது உலகத்திற்கு அளிக்கும். ஆனல், அபினையும் போதை தரும் சாராய வகைகளையும் அனுப்புவதால் இந்தியாவுக்கு எவ்வளவு லாபம் வருவதாயிருந்தாலும் அவற்றை உலகிற்கு அனுப்ப இந்தியா மறுத்துவிடும்.

—'எங் இந்தியா'—12—3—1925

# 3

# ஒவ்வோர் இந்தியரின் கடமை

இந்தச் சேவையைச் செய்வது எப்படி? இங்கே ராட்டைக்கே நான் முதலிடம் அளிக்கிறேன். அதைப் பற்றி எவ்வளவோ கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால், இன்று எவ்வளவோ இழித்துக் கூறப்படும் இதே ராட்டையை சுதர்சன சக்கரம்[1] என்று வழிபடும் காலம் சமீபத்தில்தான் இருக்கிறது என்பதை அறிவேன். நாமே விரும்பி இதை மேற்கொள்ளாமற் போனால், சந்தர்ப்பங்களின் சக்தி நம்மைக் கட்டாயப்படுத்திவிடும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. நூற்கும் ராட்டையைப்பற்றிய ஆராய்ச்சியே இந்தியாவின் பொருளாதார ஆராய்ச்சி. அழிந்து வரும் கிராமக் கைத்தொழில்களைப் புதுப்பிப்பதற்கு இன்றியமையாதது இதுவே. கையினால் நூற்பதை ஒரு தொழிலாக நான் கருதவில்லை. ஆனால், எல்லா மதத்தினரும் வகுப்பினரும் மேற்கொள்ள வேண்டியதான ஒரு கடமையாகவே இதைக் கருதுகிறேன்.

உடலுழைப்பின் மேன்மையில் நம்பிக்கை கொள்ளும் நாடுகளின் கையில்தான் எதிர்காலம் இருக்கிறது என்று ஓர் அமெரிக்க நூலாசிரியர் கூறுகிறார். எல்லையில்லாமல் பெருகிவிட்ட உயிரற்ற யந்திரங்களை வழிபட்டு அநேக நாடுகள் அலுத்துப் போய்விட்டன. இணையற்றதான உயிருள்ள யந்திரங்களை, நம் சொந்த உடல்களைத் துருப்பிடிக்கச் செய்து நாசப்படுத்திக் கொண்டிருக்கிறோம். இவற்றிற்குப் பதிலாக உயிரற்ற யந்திரங்களைப் புகுத்திவிடவும் முயன்று வருகிறோம். உடலுக்கு முழு வேலையையும் கொடுத்து அதை உபயோகித்துக்கொள்ள வேண்டும் என்பது கடவுளின் நியதி. இதை அலட்சியம் செய்துவிட நாம் துணியக்கூடாது. ராட்டை, சரீர யக்ஞத்தின், தேக உழைப்பின் சுபமான சின்னம். இந்த யக்ஞத்தைச் செய்யாமல் உண்பவன், அந்த உணவைத் திருடியவனாகிறான். இந்த யக்ஞத்தைக் கைவிட்டுவிட்டதால் நாம் தேசத்திற்குத் துரோகிகளாகிவிட்டோம்; அதிர்ஷ்ட தேவதை உள்ளே வர முடியாதபடியும் கதவை அடைத்துவிட்டோம். இந்தியாவில் எலும்புக்கூடுகளாக இருக்கும் ஏராளமான ஆண்கள், பெண்களின் உடல்களே இதற்குப் போதுமான சாட்சியம்; என் மதிப்பிற்குரிய நண்பர் ஸ்ரீ சாஸ்திரியார்[2], மக்கள் தங்களுக்குப் பிடித்த ஆடையைத்

---

1. சுதர்சன சக்கரம்: மகாவிஷ்ணுவின் கையில் உள்ள சக்கரம்.

2. சாஸ்திரியார்: மகா கனம் ஸ்ரீனிவாச சாஸ்திரியார். தஞ்சாவூர் ஜில்லா வலங்கைமானில் பிறந்த அறிஞர். கோகலேக்குப் பின்னர் இந்திய ஊழியர் சங்கத்தின் தலைவராகவும், சட்டசபை உறுப்பினராகவும், பிரிவி கவுன்ஸில் உறுப்பினராகவும் இருந்தவர். 1927-ல் தென்னாப்பிரிக்காவில் ஏஜெண்டு ஜெனரலாகவும் இவர் நியமிக்கப்பட்டார். ராஜீயத்தில் மிதவாதப் போக்குடையவர்.

தேர்ந்தெடுத்துக் கொள்ளுவதில்கூட நான் குறுக்கிடுகிறேன் என்று கூறுகிறார். இது முற்றிலும் உண்மை. இதை, அவசிய மாகும்போதெல்லாம் செய்ய வேண்டியதுதான் தேச ஊழியர் ஒவ்வொருவருடைய கடமை. கால்சட்டைகளைத்தான் அணிவது என்று நாட்டு மக்கள் ஆரம்பிக்கிறார்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். நிச்சயமாக அதை நான் எதிர்த்துக் கூறியே தீருவேன். அது நம் சீதோஷ்ண நிலைமைக்குக் கொஞ்சமும் பொருத்தமானதல்ல. அந்நியத் துணியை உபயோகிப்பதை ஆட்சேபித்தாக வேண்டியது ஒவ்வொரு இந்தியரின் கடமை. உண்மையில் எதிர்ப்பு அத்துணி அந்நியத் துணி என்பதற்காக அல்ல. ஆனால், அது இறக்குமதியாவதைத் தொடர்ந்து வந்து விடும் ஏழ்மையை எதிர்த்துத்தான் அந்த ஆட்சேபம். தேச மக்கள் சோளத்தையும் கம்பையும் விட்டுவிட்டு, ஸ்காட்லாந்தில் இருந்து ஓட் தானியத்தையும் ரஷ்யாவிலிருந்து ரை தானியத்தை யும் இறக்குமதி செய்வார்களாயின், நிச்சயமாக நாட்டு மக்களின் அடுப்புக் கூடங்களிலெல்லாம் புகுந்து ஆத்திரம் தீரத் திட்டு வேன். என் ஆன்மாவின் வேதனை எல்லோருக்கும் கேட்கும் படி செயவதற்காகத் தர்ணவும் உட்காருவேன். இத்தகைய குறுக்கீடுகள் சமீப காலத்திலும் நடந்திருக்கின்றன. சமீ பத்தில் ஐரோப்பாவில் பேய்த்தனமான யுத்தம் நடந்து கொண் டிருந்தபோது குறிப்பிட்ட இன்ன தானியத்தைத்தான் பயிர் செய்ய வேண்டும் என்று மக்கள் கட்டாயப்படுத்தப்பட்டனர். அரசாங்கங்கள், தங்கள் ஆளுகைக்குட்பட்ட மக்களின் உண விற்கும் பானத்திற்கும் கட்டுப்பாடுகளைக் கொண்டு வந்தன.

கிராமங்களில் சேவை செய்ய விரும்புகிறவர்கள், ராட்டை யைப் பற்றிய ஆராய்ச்சியை மேற்கொண்டுதான் ஆக வேண் டும். நூற்றுக்கணக்கான இளைஞர்களும் இளம் பெண்களும் ராட்டையைக்கொண்டே தங்கள் ஜீவனத்திற்குத் தேடிக் கொண்டு அதற்காக நாட்டிற்கு இரட்டிப்பு மடங்கு திருப்பிக் கொடுக்கலாம். ஒவ்வொரு கிராமவாசியுடனும் பழகி அவர்களை ஒருங்கு திரட்டுவதே, ராட்டை வேலை என்பதன் பொருள். பொருளாதாரம், ராஜீயத்தைப் பற்றிய அடிப்படை அறிவை அவர்களுக்கு எளிதில் போதித்துவிட முடியும். கிராமக் குழந்தைகளுக்கு உண்மையான கல்வியை அளிப்பதும், கிராமங் களின் தேவைகளையும் குறைபாடுகளையும் எல்லோரும் அறியும் படி செய்வதும் அந்த வேலையில் சேர்ந்ததாக இருக்க வேண்டும்.

இந்தக் கதர் வேலையில் அரசனுக்கும் அவன் குடிகளுக்கும் எந்தவிதத் தகராறும் உண்டாவதற்குச் சாத்தியமில்லை என்பது மாத்திரமல்ல, அதற்கு மாறாக, அவர்களிடையே உறவு சுமுக மானதாகும் என்றும் எதிர்பார்க்கலாம். எதிர்பார்க்கப்படும் இது நிறைவேறுவது, ஊழியர்களின் பணியைப் பொறுத்திருக்

கிறது. ஆகையால், இந்த ராஜீய மகாநாடு ராட்டைக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுவதில் நான் வெட்கப்படவுமில்லை; தயங்கவுமில்லை.

—'எங் இந்தியா' -8—1—1925

[பவநகரில் நடந்த கத்தியவார் மூன்ருவது ராஜீய மகாநாட்டிற்குத் தலைமை வகித்து மகாத்மா செய்த பிரசங்கத்திலிருந்து எடுக்கப் பெற்றது.]

# 4

# அந்நியப் பொருள்களும் சுதேசியும்

கே: துணியைத் தவிர மற்ற வெளிநாட்டுப் பொருள்களை இந்தியாவில் இறக்குமதி செய்வதைக் குறித்து உங்கள் கருத்து என்ன? உடனே விலக்கிவிட வேண்டியவை என்று நீங்கள் விரும்பும் அந்நிய நாட்டுப் பொருள்கள் எவையாவது உண்டா? வருங்காலத்தில் இந்தியாவின் வெளிநாட்டு வர்த்தகம் எத்தன்மையினதாக இருக்க வேண்டும் என்று நீங்கள் எண்ணுகிறீர்கள்?

ப: துணி தவிர மற்றப் பொருள்களில் நடக்கும் வியாபாரத்தைக் குறித்து அநேகமாக எனக்குச் சிரத்தை கிடையாது. எல்லா வெளிநாட்டுப் பொருள்களையும், அவை வெளிநாட்டுப் பொருள்கள் என்பதனாலேயே, விலக்கிவிட வேண்டும் என்று நான் சொல்லவில்லை. நமது சொந்தப் பொருள்களின் நன்மைகளுக்குத் தீமையாக இருந்துவிடக் கூடிய அந்நியச் சரக்குகளையெல்லாம் அடியோடு தடுத்துவிட வேண்டும் என்பதுதான் என்னுடைய பொருளாதார தருமம். நம் நாட்டிலேயே போதிய அளவு தயாரித்துவிடக்கூடிய சரக்கு எதையும் வெளிநாட்டிலிருந்து எந்தச் சந்தர்ப்பத்திலும் இறக்குமதி செய்யக்கூடாது என்பது அதன் பொருள். உதாரணமாக, ஆஸ்திரேலிய கோதுமை உயர்ந்த ரகம் என்பதற்காக அந்தக் கோதுமையை இறக்குமதி செய்வது பாவச் செய்கை என்று நான் கருதுவேன். ஆனால், இந்தியாவில் நாம் ஓட் பயிர் செய்யவில்லையாகையால், அதை இறக்குமதி செய்ய வேண்டியது முற்றிலும் அவசியமானது என்று ஏற்பட்டால், ஸ்காட்லாந்திலிருந்து ஓட் தானியத்தை இறக்குமதி செய்வதில் எனக்குக் கொஞ்சமேனும் தயக்கம் இருக்காது. இன்னும் சொன்னால், கெட்ட எண்ணத்தின் பேரிலோ, துவேஷத்தின் காரணமாகவோ, எந்த ஓர் அந்நிய நாட்டுப் பொருளையும் பகிஷ்கரிப்பதை நான் ஆதரிக்கமாட்டேன். அதற்கு மாருனதான ஒன்றையும்

கவனிப்போம்: இந்தியாவில் போதுமான அளவு தோல் கிடைக்கிறது. ஆகையால், இந்தியத் தோலால் செய்த செருப்பு, மலிவான, உயர்வான வெளிநாட்டுத் தோலினல் செய்த செருப்பைவிட அதிக விலையுள்ளதாகவும் மட்டமான ரகமாகவும் இருந்தபோதிலும், இந்தியத் தோலினல் செய்த செருப்பை மாத்திரமே உபயோகிக்க வேண்டியது என் கடமை. அதே போல, நமது தேவைக்குப் போதுமான சர்க்கரையும் வெல்லமும் இந்தியாவிலேயே தயாராகிறதென்ருல், வெளிநாட்டுச் சர்க்கரையையும் வெல்லத்தையும் கொண்டு வருவதையும் நான் கண்டிப்பேன். இவ்விதம் மேலே சொன்னதிலிருந்து எந்தெந்த அந்நியப் பொருள்களே இறக்குமதி செய்வதைத் தடுக்க வேண்டும் என்பதற்கு விரிவான பட்டியலே நான் கொடுப்பது என்பது சாத்தியமில்லே. இத்தகைய விஷயங்களிலெல்லாம் என்ன பொதுவான கொள்கையை நாம் அனுசரிக்க வேண்டும் என்பதை மாத்திரமே நான் கூறியிருக்கிறேன். நம் நாட்டின் உற்பத்தி நிலேமை இன்று இருப்பதைப் போல இருந்து கொண்டிருக்கும் வரையில் எதிர்காலத்திற்கும் இக்கொள்கையே சிறந்ததாக இருக்கும்.

—'எங் இந்தியா'–15—11—1928

# 5

# பகிஷ்காரம் பற்றி மில் முதலாளி

அகமதாபாத் மில் முதலாளி ஒருவர் கீழ்வருமாறு எழுதுகிருர்:

"அந்நியத் துணி பகிஷ்காரத்தைக் குறித்து நீங்கள் எழுதி வரும் கட்டுரைகளே நான் கவனமாகப் படித்துக்கொண்டு வருகிறேன். பகிஷ்காரத்தைப் பரப்புவது சம்பந்தமாக எனக்குள்ள சில பயங்களுடன் சில யோசனேகளேச் சொல்ல விரும்புகிறேன். அந்நியத் துணியைப் பகிஷ்கரிக்கும் உங்கள் திட்டத்துடன் இந்திய மில்களும் சேர்ந்துகொண்டால், பகிஷ்காரத்தில் நாங்கள் வெற்றியை அடைந்ததாவதோடு மில் கிடங்குகளில் இப்பொழுதே தேங்கிக் கிடக்கும் துணிகளே உடனே விற்பனே செய்துவிடுவதற்கு வேண்டிய வசதியைப் பெறுவதிலும் வெற்றியடைந்தவர்களாவோம். நாட்டு மக்களுக்குச் சேவை செய்வது, மில் பங்குதாரர்களின் நன்மையைப் பாதுகாப்பது என்ற இரட்டை லாபங்களுக்காக இந்த இயக்கத்தில் மில்கள் சேர்ந்துகொள்ளலாம். பங்குதாரர்களுக்கு ஓர் ஆண்டில் கொடுத்த லாபம், அடுத்த ஆண்டில் ஒரு லாபமும் இல்லே என்பது இல்லாமல் பங்குதாரர்களுக்கு ஒழுங்காக லாபம் இருக்கும் என்று உறுதி கூறலாம். லாபம் ஒழுங்காகக் கிடைப்பதோடு சரக்கும் உடனே விற்றுப்போவதால் வட்டி நஷ்டம். கிடங்குச்

செலவு ஆகியவைகளும் ஏற்படமாட்டா. இது உற்பத்திச் செலவில் நேரடியான மிச்சமாகும். இந்த ஏற்பாட்டின்படி மில்கள், உடுத்தும் காரியங்களுக்கு அவசியமான அளவுகளில்தான் உற்பத்தி செய்யும். ஆகையால், நாட்டில் ஏற்பட்டுவரும் எவ்வளவோ நஷ்டம் இராது. இதை நிர்வகிக்கும் போர்டு என்ன ரகத் துணி உற்பத்தியாகவேண்டும் என்று முடிவு செய்கிறதோ அந்த ரகத் துணிகளையே மில்கள் உற்பத்திசெய்யவேண்டும். அப்படித் தயாராகும் துணிகளின் மீது பகிஷ்காரக் கமிட்டி முத்திரையைக் குத்திவிடுமாகையால் சாதாரணத் துணி என்று எந்த மில்லும் அந்நியத் துணியை விற்றுவிட முடியாது.

''போலிப் பட்டைப் பொறுத்த வரையில், இத்துணியைத் தயாரிக்க வெளிநாட்டுச் சாயம் முதலியவைகளை நாங்கள் உபயோகிக்கும் போது, எப்படி ஆட்சேபிக்க முடியும் என்பது எனக்கு விளங்கவில்லை.

''மில்கள் சம்பந்தப்பட்ட வரையில், அந்நியத் துணிக்குப் பதிலாக மில் துணியைப் புகுத்துவதே பகிஷ்காரத்தின் நோக்கமாக இருக்கவேண்டும். மில்கள் கதரை உற்பத்தி செய்யக்கூடாது என்கிறீர்கள். அதாவது, இப்பொழுது அந்நியத் துணிக்குப் பதிலாக என்ன வகைத் துணி கதரில் இல்லையோ அந்த வகைத் துணியை அந்நியத் துணிக்குப் பதிலாக மில்கள் உற்பத்தி செய்ய வேண்டும் என்கிறீர்கள். இது சரியானதே. மாக்கூழைக் கொண்டு போலிப் பட்டு நூல் தயாரிக்கப்படுகிறது. இது மலிவான ஆடம்பரம். வெளிநாட்டுத் துணியை விலக்குவதற்கு இத் துணி உதவி செய்வதால் இதைப் பகிஷ்கரிக்கக்கூடாது என்பது என் கருத்து. அந்நிய நாட்டு நூல்களை உபயோகிக்கும் மில்கள் சுதேசி மில்களாகமாட்டா. ஆனால், வெளிநாட்டுப் பருத்தியை உபயோகிக்கும் ஒரு மில்லை என்ன என்பீர்கள்? அப் பருத்தியைக் கொண்டு தயாராகும் துணி சுதேசியா? பருத்தி விலையில் ஏற்றத்தாழ்வு அதிக மோசமானதாக இருந்தாலன்றித் துணி விலையில் அதனால் எந்த மாறுதலும் இராது. பருத்தி விலை ரூ. 339-இலிருந்து ரூ. 375-க்கு உயர்ந்திருந்தும், துணி விலையில் எந்த மாறுதலும் உண்டாகவில்லை. இதைக் குறித்து உங்கள் நண்பர் பயப்பட வேண்டியதில்லை. ஆனால், உலகத்தில் அமெரிக்காவே பருத்தி விலையை நிர்ணயிப்பதாக இருப்பதால், பருத்தி விலையைக் கட்டுப்படுத்த இந்திய மில்களால் முடியவில்லை. ஆம், நீங்கள் கூறுகிறபடி பருத்தி ஏற்றுமதியைக் கட்டுப்படுத்திவிட்டால் பருத்தி விலையில் ஏற்றத்தாழ்வு அவ்வளவு அதிகம் இராது. என்றாலும், நாம் சுயராஜ்யத்தை அடைவதற்கு முன்னால் அத்தகைய நிலைமையை அடைந்துவிடுவது சாத்தியமாகத் தோன்றவில்லை. சுயராஜ்யத்தை அடைவதற்கு நாம் இப்பொழுதிருந்தே அந்நியத் துணியைப் பகிஷ்கரிக்க வேண்டும். ஆகையால், பருத்தி விலையில் ஏற்றத்தாழ்வு ஏற்படுவது நீடித்தே வரும். இப்போதைய பகிஷ்காரத் திட்டத்தில் அவற்றின் காரியத்தை அவை செய்தே தீரும்.

''மில் முதலாளிகளின் யோக்கியப் பொறுப்பில் நீங்கள் நம்பிக்கை வைக்கும் பிரச்னைக்கு இனி வருவோம். இதில் நீங்கள் அதிகப்படியாக நம்பிக்கை வைக்கிறீர்கள் என்றே கூறுவேன். அகமதாபாத் மில்களின் திலகர் சுயராஜ்ய நிதியின் கதியைக் குறித்தும், அந்நிதியின் வினியோக சம்பந்தமாகப் பல தடவைகளில் மிரட்டல்கள் வெளியிடப்பட்டதைப் பற்றியும் நான் உங்களுக்கு ஞாபகப்படுத்த வேண்டுமா? நான் கூறுவதைக் கேளுங்கள்:

கண்டிப்பான உத்தரவாதங்கள் இல்லாமல் நீங்கள் எங்களுடன் சேரப் போவதாயிருந்தால், நிச்சயமாக உங்களுக்கு நாசம்தான் ஏற்படும்.

"பகிஷ்காரம் வெற்றியடைய வேண்டுமானுல், எந்த மில்களின் ஏஜெண்டுகள் உண்மையானவர்களாகவும் நம்பக்கூடியவர்களாகவும் இருக்கிருர்களோ அவர்களை மாத்திரமே நீங்கள் சேர்த்துக் கொள்ள வேண்டும். உங்களுடன் சேரும் மில்கள் பத்துப் பன்னிரண்டு இருந்தாலும் நல்ல பிரசாரத்தைச் செய்யமுடியும். மற்றவர்களும் தங்கள் வழிகளைச் சீக்கிரத்தில் திருத்திக் கொண்டு விடுவார்கள். இதை நம்புங்கள்.

"முக்கியமானது எதையாவது செய்தாக வேண்டும் என்ருல், நீங்கள் ஐரோப்பா போவதானுல், ஐரோப்பாவிலிருந்து நீங்கள் திரும்பி வரும் வரையில் அதை ஒத்திவைக்க வேண்டும். இல்லாவிட்டால் ஐரோப்பாவுக்குப் போவதில்லை என்று முடிவு செய்துகொண்டு இக் காரியத்தை மேற்கொள்ள வேண்டும். ஏனெனில், யோசிக்கப்படும் கூட்டு இயக்கத்தை நடத்துவதற்கு நீங்கள் இங்கிருப்பது அவசியம் என்று நான் நம்புவதோடு இதே நம்பிக்கையே இன்னும் பலருக்கும் இருக்கிறது."

இக்கடிதம் ஒளிவு மறைவு இல்லாமல் எழுதப்பட்டிருப்பது மனத்திற்கு உற்சாகமளிக்கிறது. விலையிலும், அவசியமாகத் துணியின் ரகத்திலும் ஒரே மாதிரியான முறையைக் கையாளுவதன் சாத்தியத்தைக் குறித்து இக்கடிதம் எழுதியிருப்பவர் கூறியிருக்கும் கருத்தையே மற்ற மில் முதலாளிகளும் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். பருத்தி விலையில் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகள் துணியின் விலையைப் பாதிப்பதில்லை என்று தெரிவதும் உற்சாகமளிக்கிறது. பருத்தி விலையைக் கட்டுப்படுத்திவிடுவது முடியாது என்று கடிதம் எழுதியிருப்பவர் கருதினுலும், அந்நியத் துணியைப் பகிஷ்கரிப்பது நமக்குச் சாத்தியமாகுமானுல் பருத்தி விலையைக் கட்டுப்படுத்திவிட முடியும் என்றும் கூறுவேன். ஏனெனில், நாம் ஏராளமான பருத்தியை ஏற்றுமதி செய்வதனுல், அதுவும் அமெரிக்கா எந்த இடங்களுக்குத் தன் பருத்தியை அனுப்புகிறதோ அங்கேயே நாமும் அனுப்பி வருவதால்தான் பருத்தி விலையை நிர்மாணிப்பதில் அமெரிக்கா ஆதிக்கம் செலுத்துகிறது. சாத்தியம் என்று இப்பொழுது நிரூபிக்கப்பட்டிருப்பதைப் போன்று, துணி வாங்குகிறவர்களின் தேசாபிமானத்திற்குக் கோரிக்கை விடுத்து வெற்றிபெற முடியும் என்று நாம் நினைத்தால், பருத்தி வாங்குவோருக்கும் கோரிக்கை வெளியிட்டு வெற்றி பெறுவதும் சாத்தியம். பருத்தி சாகுபடி செய்வோரைக் கேட்டுக்கொண்டு வெற்றி பெறுவதும் சாத்தியமானதே. அந்நியத் துணி பகிஷ்காரம் வெற்றி பெறுவதற்கு நாட்டைச் சேர்ந்ததான எல்லாச் சங்கங்களும் தாங்களாகவே இந்த இயக்கத்தில் சேர வேண்டும் என்பதை அறிந்து கொண்டிருப்பதால்தான் அந்நியத் துணி பகிஷ்காரம் முக்கியமானதாகிறது. ஏராளமானவர்களாகக் கிராம மக்கள் விரும்பி மனப்பூர்வமாக ஒத்துழைத்தாலன்றி இயக்கம் வெற்றி

பெற முடியாது. பாமர மக்களைப் பொறுத்தவரையில் அவர்கள் சரியாக இருக்கிறார்கள் என்பதை நான் அறிந்திருப்பதனாலேயே இந்த இயக்கத்தில் எனக்கு நம்பிக்கை விடாமல் இருந்து வருகிறது. மேல் வகுப்பார்களுக்கு நம்பிக்கை இல்லாததனால் அவர்கள் குறுக்கே நிற்கிறார்கள். இவர்கள் மாத்திரம் தங்களுக்கு இருக்கும் பயத்தையும் நம்பிக்கையின்மையையும் விட்டொழித்துவிட்டு இயக்கத்தை நடத்திச் செல்லுவார்களாயின் பாமர மக்கள் பின்பற்றுவார்கள். பாமர மக்கள் அதிகத் தியாகம் எதையும் செய்ய வேண்டியிராமல் தீவிரமாகக் கலந்துகொள்ளக் கூடியது இந்த பகிஷ்காரம் ஒன்றுதான்.

துணி தயாரிப்பதற்கு நமது மில்களில் போலிப் பட்டை எந்தவிதத் தீங்குமின்றி உபயோகிக்கலாம் என்று கடிதம் எழுதியிருப்பவர் கருதுவதை நான் ஏற்றுக் கொள்ளவில்லை. அந்நிய நாட்டுச் சாயம் முதலியவைகளோடு போலிப் பட்டை அவர் ஒப்பிட்டுச் சொல்லியிருப்பது அவசரப்பட்டுக் கூறியிருப்பதாகும். இப்பொழுது நாம் யோசிப்பதெல்லாம் அந்நியத் துணி பகிஷ்காரமேயன்றிச் சாயம் முதலியவைகளை அல்ல. ஆகையால், இயற்கையானதானாலும் போலியானாலும், பட்டு, கம்பளி, பருத்தி முதலிய எல்லா வெளிநாட்டு நூலையும் நாம் விலக்கவே வேண்டும். வெளிநாட்டுப் போலிப் பட்டு நூலை உபயோகிப்பதில் தவறு இல்லையென்றால், வெளிநாட்டுப் பருத்தி, கம்பளி அல்லது இயற்கைப் பட்டு நூலை மாத்திரம் ஏன் உபயோகிக்கக் கூடாது?

ஆனால், வெளிநாட்டுப் பருத்தி விஷயம் வேறு. அது கச்சாப் பொருளேயாகையால் வெளிநாட்டுப் பருத்தியை உபயோகிப்பதை நாம் விலக்க வேண்டியதில்லை. வருடத்தில் நான்கு மாத காலம் ஒரு வேலையுமில்லாமல் சும்மா இருக்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டிருக்கும், பட்டினி கிடக்கும் பாமர மக்களின் நன்மைக்காக அந்நிய நூலையும் துணியையும் நாம் பகிஷ்கரிக்க வேண்டும். இந்த நூலையும் துணியையும் அவர்கள் தங்கள் குடிசைகளிலேயே நூற்று நெய்துகொண்டு விடுவார்கள்.

இந்தப் பாமர மக்களுக்குப் பதிலுக்கு ஒரு தொழிலைக் காணாமல் இந்த வேலையும் அவர்களுக்கு இல்லாதபடி செய்து விடுவதாயின், உள்நாட்டு மில் துணியும் சகிக்க முடியாததாகவே ஆகும். கோடிக்கணக்கான நம் குடிசைகளில் நடந்துவரும் நூற்பதான தேசீயக் கைத்தொழிலுக்குத் துணையானதாக இருக்கும் அளவுக்கு மாத்திரமே நாட்டின் பொருளாதார வாழ்வில் மில்களுக்கு இடமுண்டு. கையினால் நூற்பதுடன் போட்டி போட்டு அதை மில்கள் விரட்டிவிடுவதாக இருந்தால், மில்கள் தேசீய வாழ்வுக்கு இடையூறே. நூற்கும் கிராமவாசியையும் கிராம நெசவாளரையும் விரட்டி விடுவதுதான் மில்களின் சுபாவமான போக்கு. மில் முதலாளிகள், மில் ஏஜெண்டுகள், அவைகளின் பங்குதாரர்கள் ஆகியவர்கள் உண்மையில் தேசப் பற்

றுடையவர்களாகிப் பாமர மக்களின் நன்மையை முதலில் கவனிப்பது, அதன் பிறகுதான் தங்கள் லாபத்தைக் கவனிப்பது என்ற வகையில், பாமர மக்களைச் சுரண்டாத வகையில் தங்கள் காரியங்களைச் செய்து கொண்டு போகும்போதுதான், பகிஷ்கார இயக்கத்தில் சேருவது மாத்திரமன்றி அதைத் தாங்கள் நடத்தவும் வேண்டும் என்பதை அறிவார்கள். அவர்கள் நீண்ட காலத்திற்கான நோக்கத்துடன் இதைக் கவனிப்பதாயின் இதில் அவர்களுக்கு லாபமேயன்றி நஷ்டமில்லை. இதை மேலே கண்ட கடிதம் தெளிவாக்குகிறது. இது தானே வெளிப்படையாக விளங்குவதான விஷயம். பாமர மக்களுக்கு இடைவிடாது வேலை கிடைத்துக் கொண்டிருப்பதற்கு அந்நியத் துணி பகிஷ்காரமே சிறந்த உத்தரவாதமானல், நாளாவட்டத்தில் மில்களுக்குத் தொடர்ந்து லாபம் வந்துகொண்டிருக்கும் என்பதற்கும் இது சிறந்த உத்தரவாதமாகும்.

ஆனல், மில்கள் தேசத்திற்குத் தாங்கள் செய்ய வேண்டிய கடமையை உணர்ந்து சமயமறிந்து செய்ய வேண்டியதைச் செய்யும் என்று நம்ப முடியாது. குறைந்தது பொதுஜன இயக்கத்தின் சென்ற ஏழு வருடத்தில் மில்கள் நடந்துகொண்டு வந்திருப்பதைப் பற்றிய சரித்திரத்தை அறிந்திருப்பவர்கள் யாருக்கும் அவ்விதமான நம்பிக்கை உண்டாகாது. கதர் சம்பந்தமாக மில்கள் ஆதரவு காட்டி அதை வளர்ப்பதற்குப் பதிலாக அவை கதருடன் அநியாயமான, தேசாபிமானமற்ற, அநீதியான போட்டியிலேயே இறங்கின. எந்தெந்த ஆண்டுகளில் நமது மில்கள் எவ்வளவு கதரை உற்பத்தி செய்திருக்கின்றன என்பதைக் கீழே காணும் புள்ளி விவரம் காட்டும் :

| | *1925* | *1926* | *1927* |
|---|---|---|---|
| ராத்தல் | *2,28,87,970* | *2,72,36,337* | *3,39,77,851* |
| கெஜம் | *6,50,48,487* | *7,43,13,280* | *9,43,80,368* |

பெருமளவான இந்த முரட்டுத் துணியைக் கதர் என்று மில்கள் விற்றிருக்கின்றன. கதருக்குக் காங்கிரஸ் ஸ்தாபனங்கள் உண்டாக்கியிருக்கும் ஆதரவைத் தங்களுக்குச் சாதகமாக உபயோகித்துக்கொண்டு விடுவதற்காக ராட்டை முத்திரையையும் உபயோகிக்கும் வெட்கக் கேடான வேலையையும் சில மில்கள் செய்திருக்கின்றன. இவ்விதம் முரட்டுத் துணியை உற்பத்தி செய்து, அதைக் கதர் என்று விற்றும் விட்டதில் மில்கள் நாட்டுக்குப் பெருந் துரோகம் செய்திருக்கின்றன. இதை மனவேதனையுடனேயே சொல்ல வேண்டியிருக்கிறது.

மில்கள் இப்பொழுதாவது தாங்கள் செய்துவிட்ட தவறை அறிகின்றன என்ருல், அவை நாட்டுக்குச் செய்துவிட்ட பெருந் தீங்குக்குக் காலம் கடந்து இப்பொழுதாவது பரிகாரம்

தேடுவதானல், அவை ஒன்று செய்யட்டும் : நான் கூறியிருக்கும் முறைப்படியோ அல்லது அதே போன்று மற்றவர்கள் கூறியிருக்கும் முறைப்படியோ பகிஷ்கார இயக்கத்தை மில்கள் நடத்தட்டும் ; இல்லையானல், கலந்து கொள்ளவாவது முன் வரட்டும்.

மேற்கண்ட புள்ளி விவரங்களைக் கண்டு மன வேதனையடைய நேர்னும் இதில் ஒரு நல்ல அம்சமும் உண்டு. கதருக்குப் பொது மக்களிடையே எவ்வளவு செல்வாக்கு இருக்கிறது என்பதை அப்புள்ளி விவரம் வெளிப்படுத்துகிறது. இந்தச் செல்வாக்கு, அதன் வெற்றியில் திடநம்பிக்கை கொண்டவனும் கதர் நிபுணனுமாகிய எனக்கே அதிசயமானதாக இருக்கிறது. நாம் அறிந்திருப்பதைவிட இன்னும் ஏராளமான மக்கள், தேசத்தின் அழைப்பிற்குப் பணிந்து தங்கள் ருசியை மாற்றிக்கொண்டு, இதற்கு முன்னல் வழக்கமாகத் தாங்கள் அணிந்து வந்த நயமான துணிகளுக்குப் பதிலாக முரட்டுத் துணியை வாங்கி அணிய முற்பட்டிருக்கிருர்கள் என்பதை இது காட்டுகிறது. இதற்கு முன்னல் கொடுத்ததைவிடத் துணிக்கு அதிக விலை கொடுத்தே இம்மக்கள் வாங்கியிருக்கிருர்கள் என்பதில் சந்தேகமில்லை. அசல் கதர், அது காங்கிரஸின் அங்கீகாரத்தையும் பெற்றிருக்கிறது என்று பெரும்பாலும் தவருன நம்பிக்கை கொண்டே அவர்கள் மில் கதரை வாங்கியிருக்கிருர்கள். இந்தப் புள்ளி விவரங்களையும், அதன்மீது நான் வரும் முடிவுகளையும் கொண்டு பொது மக்களிடம் அன்பு கொண்டிருப்பவர்கள் யாரும், அதிகம் சிந்தனை செய்து பார்க்கவும் நம்பிக்கை கொள்ளவும் இடம் இருக்கிறது. நான் ஐரோப்பாவுக்குப் போய் விடுவேனே என்று கடிதம் எழுதியிருப்பவர் அஞ்சுகிருர். பலனளிக்கக் கூடியதான பகிஷ்காரத் திட்டம் சீக்கிரமாகவே உருவாகுமானல், நான் ஐரோப்பாவுக்குப் போகப் போவதில்லை என்று அவருக்கு உறுதி கூறுகிறேன்.

—'எங் இந்தியா'–5–4–1928

# 6

# அமெரிக்கரின் தேசபக்தி

ஸ்ரீ ஸி. வி. ரங்கம் செட்டியார் எழுதுவதாவது :

" பூஜ்ய.........என்ற பாதிரியார்......என்ற இடத்தில் அமெரிக்க மிஷன் பள்ளிக்கூடங்களின் தலைவர்......என்ற இடத்திலுள்ள மிஷன் பள்ளிக்கூடத்தில் இந்திய ஆசிரியரான ஸ்ரீ......ஐத் தமது மோட்டாருக்குச் சாமான்கள் வாங்கி வர அனுப்பினர். அமெரிக்கச் சாமான்களைவிட மலிவானதாகவும் நல்லதாகவுமிருந்த ஜெர்மன் சாமான்களை ஸ்ரீ......வாங்கினர். ஆனல், அந்தச் சாமான்களைத் தொட பூஜ்ய......பாதிரியார் மறுத்துவிட்டார். முடிந்த வரை

யில் தம் பணத்தை அமெரிக்கா தவிர வேறு எந்த நாட்டுக்கும் கொடுக்கத் தாம் விரும்பவில்லை என்றும் கூறினர். பிறகு ஸ்ரீ......அந்தச் சாமான்களை ஒரு பிராமண கனவானிடம் விற்றுவிட்டு அமெரிக்கச் சாமான்களை வாங்கினர். கதர் உடுத்தும்படி நான் எவ்வளவு கேட்டுக்கொண்டு வந்தும் அலட்சியமாக இருந்து வந்த ஸ்ரீ...இச்சம்பவத்திற்குப் பிறகு தம் தவறை ஒப்புக்கொள்ள முன் வந்திருப்பதோடு இனிக் கதர் கட்டுவது என்ற முடிவுக்கும் வந்திருக்கிருர். நம் தேசத்திலுள்ள படித்தவர்களும், பணக்காரர்களும், அந்த அமெரிக்கர் செய்ததிலிருந்து பாடம் கற்றுக்கொண்டு மற்றவர்களுக்கு உதாரணமாக நடந்து கொள்ளுவார்கள் என்று நம்புகிறேன்.''

நான் சொல்லப்போகும் விஷயத்திற்கு முக்கியமல்லவாகையால் இக்கடிதத்தில் கண்ட பெயரையும் ஊரையும் வேண்டுமென்றே நீக்கியிருக்கிறேன். அதில் விஷயம் மிகத் தெளிவானது. கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் பாதிரிக் கனவான், தேசாபிமானத்தின் எல்லையைக் கடந்து போய்விடவில்லையா என்பது ஆராயவேண்டிய சங்கதி அல்ல இச் சம்பவத்திலிருந்து ஸ்ரீ ரங்கம் செட்டியார் எடுத்துக்காட்ட விரும்பும் படிப்பினை நியாயமானது. கையினுல் நூற்று நெய்த துணி நமக்கு என்னதான் அசௌகரியமானதாக இருந்த போதிலும், இந்நாட்டினரான நாம், அந்நியத்துணிக்குப் பதிலாக இதை அணியக் கடமைப்பட்டிருக்கிறோம் என்பதை கவனிக்காமல் மலிவாக இருப்பதை வாங்கும்படி நமக்குப் போதிக்கும் தத்துவம் வீணனது. ஆஸ்திரேலியாவோ, அமெரிக்காவோ உயர்ந்த கோதுமையை நமக்கு இனமாகக் கொடுத்தாலும், இந்திய மண்ணில் பொன் போல் தானியங்கள் விளைவதற்குப் பதிலாகக் களையே மண்டிப்போய் இதனல் இந்தியருக்கு வேலையும் இல்லாது போகுமாயின், இந்த இனம் கோதுமை நமக்கு விஷமேயாகும். அதேபோல மான்செஸ்டர் துணி நமக்கு இனமாகக் கிடைத்தாலும் அதை வாங்கிக்கொள்ளுவதும் நமக்குக் கஷ்ட நஷ்டத்தை உண்டாக்கிக்கொள்ளுவதாகும், ஆகையால், தேசமக்களின் சோம்பல் நேரத்தை உபயோகித்துக் கொள்ளுவதற்குக் கதர் உதவியாக இருக்கும் வரையில் அது என்ன விலையானலும் மலிவானதுதான். இவ்வளவு பயனுள்ளதாக அவர்களுக்கு உடனே கொடுக்கக்கூடிய வேலை வேறு எதுவும் கிடையாது. இதைத் திரும்பவும் சொல்லுகிறேன்.

—'எங் இந்தியா'–17—1—1929

# 7

# கதரும் சுதேசியும்

நாம் கதரை மேற்கொண்டு வருவதனாலேயே சுதேசியின் தத்துவத்தை நாம் பூரணமாக நிறைவேற்றி வருவதாக எண்ணி விடுகிறோம். மற்றவைகளுக்கெல்லாம் இந்தியாவுக்கு வெளியில் தயாரானவைகளை உபயோகிக்கலாம் என்றும், பாரிஸிலிருந்து வரும் புது நாகரிகங்களை மேற்கொண்டு விடுவதற்கும், கதர் அணிவதை அனுமதிச் சீட்டாகவும் வைத்துக்கொள்ளுகிறோம். இது, சுதேசியத்தைப் போலித்தனமாக மேற்கொள்ளுவதாகும். அதோடு கதர்த் தத்துவத்திற்கும் விரோதமாக நடப்பதாகும். கதரை மேற்கொள்ளுவது இந்தியாவில் எல்லாக் காலங்களிலும் ஒரு கடமையாவதைப் போலவே, இந்தியாவில் தயாரான சாமான்கள் கிடைக்கும்போது, அந்நியச் சாமான்களைவிட அவை மட்டமாக இருந்தாலும், இந்தியச் சாமான்களையே உபயோகித்தாக வேண்டியதும் நம் கடமை. வாங்கி ஆதரிப்பார் இல்லாததனால் அடியோடு மறைந்து போய்விடக்கூடிய அபாயத்தில் அநேக சுதேசிப் பொருள்கள் இருந்து வருகின்றன. அவை அவ்வளவு சிறந்தவைகளாக இல்லாமல் இருக்கலாம். அவற்றை உபயோகிப்பதும், அபிவிருத்தி சாத்தியமானவற்றில் வேண்டிய அபிவிருத்திகளை அவற்றை உற்பத்தி செய்கிறவர்கள் செய்யும்படிப் பார்ப்பதும் நம் பொறுப்பு. நல்லதாகவும் மலிவானதாகவும் இருக்கவேண்டுமென்ற விதி எப்பொழுதும் உண்மையானது அன்று. இன்னுமொரு நாட்டின் சீதோஷ்ண நிலை நன்றாக இருக்கிறது என்பதற்காக நாம் நம் நாட்டைவிட்டுப் போய்விடுவதில்லை. அதேபோல அந்நிய நாட்டுப் பொருள்கள் நல்லவைகளாகவும் மலிவாகவும் இருக்கின்றன என்பதற்காகச் சுதேசிப் பொருள்களை நாம் ஒதுக்கிவிடக்கூடாது. சாதாரண அழகுடைய தன் மனைவியிடம் அதிருப்திகொண்டு அழகான இன்னுமொரு பெண்ணைத் தேடி ஒரு கணவன்போவது மனைவிக்குத் துரோகம் செய்வதாகும். அதே போல, வெளிநாடுகளில் தயாரான பொருள்கள் நாட்டில் செய்யப்பட்ட பொருள்களைவிடச் சிறந்தவைகளாகவே இருந்தாலும், அந்த வெளிநாட்டுப் பொருள்களை வாங்குகிறவன் தன் நாட்டிற்குத் துரோகம் செய்பவனாவான். ஒரு நாட்டு மக்கள், தங்கள் நாட்டில் தயாராகும், உற்பத்தியாகும் பொருள்களுக்கே முதலிடம் கொடுக்கவேண்டியது ஒவ்வொரு நாட்டின் அபிவிருத்திக்கும் அவசியமான நியதி.*

—'எங் இந்தியா'-30—5—1929

---

†இக்கட்டுரை 'எங் இந்தியா'வில் 'ஆந்திர தேசம்' என்ற தலைப்பில் மகாத்மா எழுதிய கட்டுரையிலிருந்து எடுக்கப்பட்டதாகும்.

# 8

# சுதேசி நியதி

இக்காலத்திற்கான நியதிகளுக்கெல்லாம் தலையாய நியதி சுதேசியமே. இயற்கையின் நியதியைப் போன்று ஆன்ம நியதியை இயக்கவேண்டிய அவசியமில்லை; அது தானே இயங்கும். ஆனால், அறியாமையினாலோ அல்லது வேறு காரணங்களினாலோ அந்த நியதிகளை மனிதன் அலட்சியம் செய்துவிடுகிறான் அல்லது மீறி நடந்து விடுகிறான். அப்பொழுதுதான் ஒருவனுடைய நடத்தையை ஒழுங்குக்குக் கொண்டுவர விரதங்கள் அவசியமாகின்றன. சுபாவத்திலேயே சைவ உணவு மாத்திரம் சாப்பிடுகிறவனாக இருப்பவனுக்கு அவனுடைய சைவ உணவுக் கொள்கையைப் பலப்படுத்த அவனுக்கு எந்த விரதமும் தேவையில்லை. ஏனெனில், மாமிச உணவைப் பார்த்த மாத்திரத்தில் அவனுக்கு கவர்ச்சி ஏற்படுவதற்குப் பதிலாக அது அவனுக்கு அருவருப்பையே அதிகரிக்கும். மனிதனின் அடிப்படையான சுபாவத்தில் இருப்பது சுதேசி நியதி. ஆனால், இன்று அது மறைந்து போய்விட்டது. இதனாலேயே சுதேசி விரதத்தை மேற்கொள்ள வேண்டியது அவசியமாயிற்று. முடிவான ஆன்மிகப் பொருள் கொண்டு கவனித்தால், மனிதனின் ஆன்மாவை அதன் பந்தங்களிலிருந்து முடிவாக விடுவிப்பதே சுதேசியம் என்கிறது. ஏனெனில், இப்பூதவுடல் ஆன்மாவுக்கு இயற்கையான, நிலையான உறைவிடமல்ல ; ஆன்மா மேற்கொண்டும் அடையவேண்டிய முன்னேற்றத்திற்கு இவ்வுடல் இடையூறாக இருக்கிறது ; மற்ற உயிர்களோடு தானும் ஒன்றுவதை அடைவதற்கும் இது வழியில் இடைஞ்சலாக இருந்து வருகிறது. ஆகையால், படைக்கப் பட்டுள்ள எல்லாவற்றுடனும் தானும் ஒன்றுவன் என்பதை உணர சுதேசி பக்தன் முயலும்போது பூதவுடலின் பந்தங்களி லிருந்து விடுபடுவதற்கே முயலுகிறான்.

சுதேசியம் என்பதற்கு நான் கூறும் இந்த விளக்கம் சரியானதுதான் என்றால், உடனடியாகத் தன்னை அடுத்துள்ளவர் களுக்குச் சேவை செய்வதற்கென்று அர்ப்பணம் செய்து கொண்டு விடுவது சுதேசி பக்தனின் முதல் கடமை என்கிறது. அப்படியாயின் மற்றவர்களுடைய நன்மையை விட்டுவிடவும், தியாகம் செய்துவிடவும் வேண்டும் என்கிறது. ஆனால், அவ் வாறு விட்டுவிடுவதும் தியாகம் செய்வதும் பார்வைக்கு மட் டுமே தோன்றுவதாக இருக்கும். தனக்குப் பக்கத்தில் இருப்பவர் களுக்குச் செய்யும் உண்மையான சேவை, தூரத்திலிருப்பவர் களுக்குத் தீங்காக ஆகாது. இதுதான் உண்மையான சேவைக் குள்ள இயல்பு. இச்சேவை தூரத்தில் இருப்போருக்கும் நன்மை யாக ஆகும். 'தனிப்பட்டவருக்கு எப்படியோ அப்படியேதான் பிரபஞ்சத்திற்கும்' என்ற தத்துவம் பொய்க்காது. இதை நாம்

மனத்தில் வைக்கவேண்டியது முக்கியம். இதற்கு மாருக ஒருவர், 'தூரத்துப் பச்சையில்' மோகங்கொண்டு, சேவை செய்யலாம் என்று உலகத்தில் இன்னெரு கோடிக்கு ஓடுவாரானல் அவருடைய ஆசை நிறைவேருது போவதோடு தமக்குப் பக்கத்தில் இருப்பவருக்குத் தாம் ஆற்றவேண்டிய கடமையிலும் தவறியவராவார். திட்டமான ஓர் உதாரணத்தைப் பார்ப்போம் : நான் வசிக்கும் குறிப்பிட்ட இடத்தில், என் அக்கம் பக்கத்தார் சிலரும், என் உறவினர்களும், என்னை எதிர்பார்த்து வாழ்பவர்களும் இருக்கிருர்கள். தங்களுக்கு உதவ நான் கடமைப்பட்டிருக்கிறேன் என்று இவர்கள் இயற்கையாகவே எண்ணுவதோடு உதவிக்கும் ஆதரவுக்கும் என்னை எதிர்பார்க்கிருர்கள். அப்படி எதிர்பார்க்க அவர்களுக்கு உரிமையும் உண்டு. இப்பொழுது நான் இவர்களைத் திடீரென்று விட்டுவிட்டுத் தூரத்திலுள்ளவர்களுக்குச் சேவை செய்யப் போய்விடுகிறேன் என்று வைத்துக்கொள்ளுவோம். இவ்வாறு நான் செய்துவிட்ட முடிவு, என் பக்கத்தில் இருந்தவர்களையும் என்னை எதிர்பார்த்து வாழ்ந்து வந்த உறவினர்களையும் கொண்ட என் சிறு உலகத்தைக் குழப்ப நிலைக்குக் கொண்டு வந்துவிடும். அதே சமயத்தில் என்னுடைய தரும சிந்தனையின் ஆவேசப் போக்கு புதிய இடத்தின் சூழ்நிலையைக் குழப்பிவிட்டு விடவும் கூடும். இவ்வாறு சுதேசிக் கொள்கையை நான் மீறி நடந்ததன் முதல் பலன், எனக்கு வெகு பக்கமாக இருந்தவர்களைக் கவனிக்காது போன குற்றமும், நான் சேவை செய்ய விரும்பியவர்களுக்கு நான் விரும்பாமலேயே தீமை செய்துவிட்டதுமே யாகும்.

இத்தகைய உதாரணங்கள் பலவற்றைக் கஷ்டமின்றிச் சொல்லிக் கொண்டே போகலாம். இதனுலேயே கீதை வருமாறு கூறுகிறது : ''ஒருவன் சுய தருமத்தைச் செய்வதில் இறக்க நேரினும் அதுவே மேல். ஆனல், பரதருமம் அல்லது இன்னெருவனுடைய கடமையைச் செய்வது ஆபத்தானது." இதை ஒருவரின் சொந்தச் சூழ்நிலையைக் கொண்டு கவனித்தால் இது சுதேசி தருமத்தை நமக்குக் கூறுகிறது. சுயதருமத்தைக் குறித்துக் கீதை சொல்லுவது சுதேசிக்கும் பொருந்துவதாகும். ஏனெனில் தனக்கு மிகச் சமீபத்திலுள்ள சூழ்நிலைக்குப் பொருத்திப் பார்த்தால் சுதேசியமே சுய தருமம்.

சுதேசியத் தத்துவத்தைத் தவருகப் புரிந்துகொள்ளும் போதுதான் கஷ்டம் உண்டாகிறது. அதாவது, என் குடும்பத்தைப் பாதுகாக்க வேண்டும் என்பதற்காக நியாயமோ, அநியாயமோ எந்த வழியிலாயினும் பணம் தேடுவது என்று நான் கிளம்பிவிடும் போதுதான் அது சுதேசியக் கொள்கைக்கு விரோதமானதாகிறது. என் குடும்பத்திற்கு நியாயமாக நான் செய்ய வேண்டிய கடமையை நியாயமான முறையில் நான் செய்யவேண்டியது சுதேசிய தருமத்தின்படி அவசியமாகிறது. இவ்விதம் செய்ய முயற்சிக்கும்போது எல்லோர் விஷயத்திலும் நடந்து

கொள்ள வேண்டிய முறையும் தெளிவாகும். சுதேசியத்தை அனுசரிப்பது யாருக்கும் தீமையாக முடியாது. ஆனால் யாருக்காவது இது தீமையானல், என் அகம்பாவம் என்னை ஆட்கொண்டு விட்டதாகுமேயன்றி அது சுயதருமம் ஆகாது.

சுதேசி பக்தர் ஒருவர், எல்லோருக்கும் சேவை செய்வதை முன்னிட்டுத் தமது குடும்பத்தைத் தியாகம் செய்துவிட வேண்டிய சமயங்களும் வரலாம். விரும்பிச் செய்யும் அத்தகைய தியாகம்தான் குடும்பத்திற்குச் செய்யும் மிக உயர்ந்த சேவையாகும். "தன் உயிரைப் பாதுகாத்துக்கொள்ள விரும்புகிறவன் உயிரை இழப்பான்; கடவுளுக்காகத் தன் உயிரை இழப்பவன் உயிரைப் பெறுவான்" என்ற வாக்கு தனிப்பட்டவர்களுக்கேயன்றிக் குடும்பங்களுக்கும் பொருந்தும். இன்னுமொரு உதாரணத்தையும் பார்ப்போம்: என் கிராமத்தில் பிளேக் நோய் பரவிவிடுகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். இந் நோய் கண்டுவிட்டவர்களுக்குச் சேவை செய்ததில் நான், என் மனைவி, குழந்தைகள், என் குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்கள் ஆகிய எல்லோரும் அடியோடு அழிந்துவிடுகிறோம் என்றும் வைத்துக் கொள்ளுவோம். இவ்விதம் நோயாளிகளுக்குப் பணி செய்வதில் என்னுடன் சேர்ந்துகொள்ளும்படி என் உற்றார் உறவினர்களைத் தூண்டியதன் மூலம் நான் என் குடும்பத்தை அழிக்கும் செயலைச் செய்தவனாகமாட்டேன். ஆனால், இதற்கு மாறாக என் குடும்பத்தின் உண்மையான நண்பனைகச் செயலாற்றியவனாவேன். சுதேசியில் சுயநலத்திற்கு இடமில்லை. அதில் சுயநலம் இருக்குமானல், அது மிகவும் உயர்வானதாகும். உயர்வான பரோபகாரத்திற்கு அது வேறானது அல்ல. பரிசுத்தமானதான சுதேசி, எல்லோருக்கும் சேவை செய்வதன் உச்சம்.

இந்த வகையான விவாத வழியில் சென்றதில் சுதேசியத்தின் கொள்கையைச் சமூகத்திற்கு அனுசரிப்பதில், அவசியமான, மிகவும் முக்கியமான அனுமானம் கதர்தான் என்பதைக் கண்டுகொண்டேன். "எல்லோரும் சுலபத்தில் அறிந்துகொண்டு எளிதில் நிறைவேற்றக் கூடியதும், அதே சமயத்தில் அரைப் பட்டினி கிடக்கும் நம் கோடிக்கணக்கான மக்கள் வாழ முடியும்படி செய்யக்கூடியதும், இந்தியாவின் கோடிக்கணக்கான மக்களுக்கு இப்பொழுது மிகவும் தேவைப்படுவதுமான சேவை எத்தகையது?" என்று என்னை நானே கேட்டுக்கொண்டேன். கதர் அல்லது ராட்டை எங்கும் வியாபிக்கும்படி செய்வதால் தான் இக் காரியங்களை நிறைவேற்ற முடியும் என்ற பதிலையே பெற்றேன்.

கதர் மூலம் சுதேசியை மேற்கொள்ளுவது வெளிநாட்டு மில் முதலாளிகளுக்குப் பாதகத்தை விளைவித்துவிடும் என்று யாரும் கருதிவிட வேண்டாம். திருடனை அத்தீய செயலை விட்டுவிட்டு நல்வழிப்படும்படி செய்துவிடுவதனாலோ, அவன் திருடிய

பொருள்களைத் திருப்பிக் கொடுத்துவிடும்படி செய்வதனுலோ, அவன் தீமை அடைந்துவிடுவதில்லை. ஆனல், இதனல் ஒரு விஷயத்தில் அவன் அறிந்தும், இன்னேர் விஷயத்தில் அவன் அறியாமலும் நன்மையே அடைகிருன். இதேபோல உலகத்திலுள்ள குடிகாரர்களும்,அபின் தின்னும் பழக்கமுள்ளவர்களும் அக்கெட்ட பழக்கங்களை விட்டுவிடுவார்களானல், அதனல் மதுபானக் கடையினரும், அபின் விற்பவரும் நஷ்டமடைந்துவிட்டவர்களாவார்கள் என்று சொல்ல முடியாது. லாபம் என்பதன் உண்மையான பொருளில் அவர்கள் லாபமடைந்தவர்களே ஆவார்கள். பாவ காரியங்களினுல் சம்பாதிப்பதை விட்டு விடுவது, சம்பந்தப்பட்ட தனிப்பட்டவருக்கோ, சமூகத்திற்கோ நஷ்டமே அல்ல ; அது புனிதமான லாபம்.

எப்படியாவது இன்ன அளவு நூலை நூற்று, அதைக் கொண்டு தயாரான கதரை உடுத்திவிடுவது மாத்திரமே சுதேசியக் கடமையின் ஆரம்பமும் முடிவும் என்று எண்ணி விடுவது மிகப் பெருந் தவறு. சமூக விஷயத்தில் சுதேசி தருமத்தை நிறைவேற்றிவைப்பதற்கு அத்தியாவசியமான முதல் காரியம் கதர். சிலர் கதர் அணிந்திருந்தபோதிலும் மற்றவைகளிலெல்லாம் வெளிநாட்டில் தயாரான பொருள்களையே அனுபவித்து வஞ்சம் தீர்த்துக்கொள்ளுவது போல் அதில் திளைத்து வருவதைப் பார்க்கிறேம். அத்தகையவர்கள் சுதேசியை அனுசரித்து வருகிருர்கள் என்று சொல்லமுடியாது. காலத்திற்கு ஏற்ற நாகரிகத்தை அனுசரிப்பவர்களே அவர்கள் ஆனல், சுதேசி பக்தனே, தனக்குச் சுற்றிலுமுள்ள நிலைமையைக் கவனமாக ஆராய்வான். வேறு வெளியிடங்களில் தயாரானவைகளைவிட அங்கு தயாரானவை தரத்தில் மட்டமாயிருந்தாலும், விலையில் அதிகமாக இருந்தாலும், உள்ளூரில் தயாரானவைகளையே வாங்கிச் சாத்தியமான இடங்களிலெல்லாம் தன் பக்கத்தில் இருப்பவர்களுக்கு உதவி புரிவான். உள்ளூரில் தயாராகும் சாமான்களில் குறைகள் இருந்தால், அக்குறைகள் இல்லாமல் இருக்கும்படி செய்ய முயற்சிப்பான். ஆனல், குறைகள் இருக்கின்றன என்பதற்காக அவற்றைக் கைவிட்டுவிட்டு வெளிநாடுகளில் தயாரான பொருள்களை வாங்கமாட்டான்.

ஆனல், எந்த மற்ற நல்ல காரியங்களையும் போலவே சுதேசியத்தையும் அளவுக்கு மிஞ்சிய மோகமாக்கிவிட்டால், அது சாக வேண்டியதாகிவிடும். அந்த அபாயம் நேராவண்ணம் பாதுகாத்துக்கொள்ளவேண்டும். அந்நியமானது என்பதற்காகவே வெளிநாடுகளில் தயாரான பொருள்களை நிராகரித்துவிடுவதும், இங்கு தயாரிப்பதற்குப் பொருத்தமானதாக இல்லாதவைகளைத் தயாரிப்பதற்காக நாட்டின் காலத்தையும் பணத்தையும் விரயமாக்குவதும் பெருங் குற்றங்களாவதோடு அக்காரியங்கள் சுதேசி உணர்ச்சிக்கே முரணுனவையுமாகும். உண்மையான சுதேசி பக்தன், அந்நியர் மீது விரோத எண்ணத்தையே மனத்தில்

கொள்ளமாட்டான். உலகிலுள்ள யார் மீதும் பகை கொண்டு எதையும் அவன் செய்யமாட்டான். சுதேசியம், பகைமை கொள்ளும் தத்துவம் அன்று. அது தன்னலமற்ற சேவைத் தத்துவமே. புனிதமான அகிம்சை அல்லது அன்பில் வேர் ஊன்றியிருப்பது அது.

— 'எங் இந்தியா' – 18—6 –1931

# 9

# கதர் மூலம் அந்நியத் துணி பகிஷ்காரம்

1. காங்கிரஸ் கமிட்டிகள் இருக்கும் ஒவ்வோர் நகரிலும் கிராமத்திலும் காங்கிரஸ் தொண்டர்கள் வீடுதோறும் போகும்படி காங்கிரஸ் ஸ்தாபனங்கள் செய்யவேண்டும். குடித்தனக்காரர்களிடம் இருக்கும் அந்நியத் துணியையெல்லாம் வாங்கிக் கொண்டு அக்குடும்பங்களுக்கு வேண்டிய கதரைக் கொடுக்க வேண்டும்; அவர்களுக்கு வேண்டிய கதருக்கு ஆர்டர் வாங்க வேண்டும்.

2. எல்லாக் கதர்த் துணிகளிலும் அகில இந்திய நூற்போர் சங்க முத்திரை இருக்கவேண்டும். விலையையும் அதன் மீது தெளிவாகப் போட்டிருக்கவேண்டும்.

3. கதரின் உபயோகத்தைப் பரப்புவதற்கும், அந்நியத் துணியைப் பூரணமாகப் பகிஷ்கரிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுவதற்கும் வலிய வந்து பிரசாரகர்களாகும்படி பலரைத் திரட்டவேண்டும்.

குறிப்பு: தொண்டர்களும் பிரசாரகர்களும், அசல் கதருக்கும் போலிக் கதருக்கும் இருக்கும் வித்தியாசத்தைக் கண்டு கொள்ளத் தெரிந்திருக்க வேண்டும்.

4. சேகரிக்கப்படும் அந்நியத் துணிகளையெல்லாம் சாத்தியமான இடங்களில் எல்லோரும் பார்க்கும்படி எரித்துவிட வேண்டும்.

5. அந்நியத் துணி வர்த்தகர்களின் ஆதரவைப் பெறுவதற்காகவும், மேற்கொண்டும் அந்நியத் துணி வாங்குவதை நிறுத்திவிடுவதோடு அந்நியத் துணிக்குக் கொடுத்திருக்கும் ஆர்டர்களில் ரத்து செய்துவிடக்கூடியவைகளை ரத்துச் செய்துவிடும்படி அவர்களைத் தூண்டவும் அந்நியத் துணி வர்த்தகர்கள் ஒவ்வொருவரையும் போய்ப் பார்க்கவேண்டும்.

6. சாத்தியமான இடங்களிலெல்லாம் காங்கிரஸ் மறியல்காரர்கள் பலாத்காரத்தில் ஈடுபட்டுவிடும் ஆபத்து இல்லாத போது, அந்நியத் துணிக் கடைகளில் மறியலை மேற்கொள்ள

லாம். மறியல் செய்பவர்கள் நம்பிக்கையானவர்களாகவும் தேர்ந்த தொண்டர்களாகவும் இருக்கவேண்டும்.

7. ஒவ்வொரு கோஷ்டியினரும், முன்னால் கூறப்பட்டிருக்கும் திட்டப்படி தாங்கள் செய்திருக்கும் வேலையைக் குறித்து அன்றாடம் தலைமைக் காரியாலயத்திற்கு அறிக்கை சமர்ப்பிக்க வேண்டும். தலைமைக் காரியாலயத்தினர் அன்றாடம் நடந்திருக்கும் வேலையைக் குறித்து வார சாராம்சத்தைப் பிரசுரிப்பதற்காகப் பத்திரிகைகளுக்கு அனுப்பவேண்டும்.

8. இந்த இயக்கத்திற்கு எல்லா ராஜீய, மற்ற ஸ்தாபனங்களின் உதவியையும், ஒத்துழைப்பையும் பெற வேண்டும்.

9. பகிஷ்கார இயக்கத்திற்குத் தேசாபிமானமுள்ள பெண்களின் உதவியையும் தேடிக்கொள்ளவேண்டும்.

10. அசல் கதர் கிடைக்கும் இடங்களின் விபரங்களைத் தெரிவிக்கும்படியும், கதருக்குக் கிராக்கி இருக்குமிடங்களில் கதர்க் கடைகளை ஆரம்பிக்குமாறும் அகில இந்திய நூற்போர் சங்கத் தலைமைக் காரியாலயம் கேட்கவேண்டும்.

11. ஆரம்பத்தில் கொஞ்சத் தொகை கொடுத்து, மேற்கொண்டும் வசூல் செய்துகொள்ளும் அதிகாரத்துடன் அந்நியத் துணி பகிஷ்காரக் கமிட்டி என்ற சிறு கமிட்டியை அமைக்க வேண்டும். அக்கமிட்டி மூன்று மாதங்களுக்கொரு முறை வரவு செலவின் தணிக்கை செய்த அறிக்கையை வெளியிடவேண்டும்.

12. மேலே கண்ட கமிட்டியார், பகிஷ்காரத்தின் அவசியத்தையும் சாத்தியங்களையும் எடுத்துக் கூறித் தனிப்பட்டவர்கள் இதில் வெற்றி பெறுவதற்கான முறையையும் விளக்கித் துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டுப் பரப்பிப் பிரசாரம் செய்யவேண்டும்.

13. சொல்லப்படும் அதிக விலை என்பதைப் பொருட்படுத்தாமல் அரசாங்கங்கள் தங்களுக்குத் தேவையான துணிக்குக் கதர்த் துணியையே வாங்க வேண்டும் என்று அவற்றைக் கேட்டுக்கொள்ளும் தீர்மானங்களை மாகாண சட்ட சபைகளிலும், மத்திய சட்ட சபையிலும் கொண்டுவர வேண்டும். வெளிநாட்டிலிருந்து இறக்குமதியாகும் துணிகளைத் தடுக்கும் வகையில் அவற்றிற்குத் தீர்வை விதிக்க வேண்டும் என்றும் தீர்மானங்கள் கொண்டு வர வேண்டும்.

குறிப்பு: இந்தியா முழுவதிலும் காங்கிரஸ் கமிட்டிகள் உடனே திருத்தியமைக்கப்பட்டுவிடும், அதிகம் பேர் அங்கத்தினர்களாகச் சேர வேண்டும் என்ற கோரிக்கைக்கு நல்ல ஆதரவு இருக்கும், கதரின் மூலம் அந்நியத் துணியைப் பகிஷ்கரிக்கும் திட்டத்தை நிறைவேற்றி வைப்பதில் எல்லாக் காங்கிரஸ் கமிட்டி

களின் முழு ஆதரவும் இருக்கும் என்ற கருத்தின் பேரிலேயே மேற்கண்ட திட்டம் அமைக்கப்பட்டிருக்கிறது. இந்த நிபந்தனை கள் நிறைவேற்றப்பட்டுவிடுமாயின், அந்நியத் துணி இறக்கு மதியில் நன்ருகத் தெரியக்கூடியதான அளவுக்காவது, இவ் வாண்டில் பகிஷ்காரம் வெற்றியடைந்து விடுவது சாத்தியம் என் றும் யோசனை கூறப்படுகிறது.

—'எங் இந்தியா' - 24—1—1929

# 10

# அந்நியத் துணி தகனமும் அகிம்சையும்

[கீழே கொடுக்கப்பட்டிருப்பது மகாத்மா காந்தி 1929 ஏப்ரல் 13-ஆம் தேதி ஆந்திரப்பிரதேசத்தில் மசூலிப்பட்டணத்தில் செய்த பிரசங்கத்திலிருந்து எடுத்ததாகும்.]

நீங்கள் எனக்கு அளித்திருக்கும் பல பண முடிப்புகளுக்கா கவும் வரவேற்புப் பத்திரங்களுக்காகவும் நன்றி செலுத்துகிறேன். இந்த அநேக உபசாரப் பத்திரங்களுக்கும் விரிவாகப் பதில் சொல்லுவதற்கு எனக்குப் போதிய அவகாசம் இல்லை. என்ரு லும், பந்தர் ஜில்லா போர்டும், பந்தர் முனிசிபாலிடியும் அளித் திருக்கும் உபசாரப் பத்திரங்களுக்கு மாத்திரம் பதில் சொல்லு வது என்று இருக்கிறேன். ஏனெனில், இவை குற்றங் குறை களைக் கூறியிருக்கின்றன. இதற்காக இந்த உபசாரப் பத்திரங் களை அதிகமாக மதிக்கிறேன். குற்றங் குறை கூறுவதனுல் நான் பலனடைய முடியுமேயன்றிப் புகழ்வதனுல் அடைய முடியாது. இந்த உபசாரப் பத்திரங்களில் அந்நியத் துணிகளைக் கொளுத்து வது ஆட்சேபிக்கப்பட்டிருக்கிறது. அது அசல் அல்லது புது வாதமல்ல. இந்த உபசாரப் பத்திரங்களில் என்ன ஆட்சேபங் கள் கூறப்பட்டிருக்கின்றனவோ இதே ஆட்சேபங்களைத்தான் என் மிகச் சிறந்த நண்பர்களும் கிளப்பியிருக்கிருர்கள். ஆனுல், என்னுல் முடிந்தவரையில் இந்த ஆட்சேபங்களைக் குறித்து நன்ருக யோசித்துப் பார்த்திருக்கிறேன். இந்த விஷயத்தில் நான் எப்பொழுதும் கொண்டு வந்திருக்கும் கருத்தை மாற்றிக் கொள்ளுவதற்கில்லை என்ற முடிவுக்கும் வந்திருக்கிறேன். நம் மக்கள் தாங்கள் அணிந்திருக்கும் அந்நியத் துணிகளையெல்லாம் களைந்தெறிந்து அவற்றைத் தீக்கு இரையாக்கிவிட வேண்டும் என்பதுதான் நான் கொண்டிருக்கும் அக்கருத்து. அந்நியத் துணியைக் கொளுத்துவது அகிம்சை தருமத்திற்கு உகந்தது என்பது மாத்திரமல்ல, அந்தத் தருமத்தைச் சரியானபடி உணரு வதற்கு இந்தியாவில் அந்நியத் துணியைக் கொளுத்த வேண் டியது அவசியம் என்றும் துணிந்து கூறுவேன். தம்மிடமிருக்கும் அந்நியத் துணிகளைக் கொளுத்திவிடுவதற்குக் கொடுக்கும்படி அத்துணிகளுக்குச் சொந்தக்காரர்களாக இருப்பவர்களே கேட்

கப்படுகின்றனர் என்ற முக்கியமான விஷயத்தை இந்தத் தகன சம்பந்தமாக நினைவில் வையுங்கள். பிளேக் கிருமிகள் பற்றி யிருக்கும் ஒரு துண்டுத் துணியோ அல்லது வேறு பொருளோ என்னிடம் இருக்குமாயின், அதைக் கொளுத்திவிடுவதுதான் என் கடமை என்பதை ஒப்புக் கொள்ளுவீர்கள். நான் தென்னுப் பிரிக்காவில் இருந்தபோது, 14,000 பவுன் மதிப்புள்ள ஒரு மார்க் கெட், பிளேக் கிருமிகள் பற்றியிருக்கும் என்று சந்தேகிக்கப் பட்டதனுல், அதில் இருந்தவைகள் எல்லாவற்றுடன் ஜோகன் னஸ்பர்க் முனிசிபாலிடி தீக்கிரையாக்கிவிட்டது எனக்கு நினை விருக்கிறது. ஜோகன்னஸ்பர்க் முனிசிபாலிடியின் இச்செய் கையை நான் பெரிதும் வியந்து பாராட்டினேன். நாசகரமான பிளேக் அந்நகரில் பரவாமல் போனதற்கு இதுவே காரணமாக லாம் என்று இப்பொழுதும் எண்ணுகிறேன். ஆசாரக் குறை வால் தீட்டுப்பட்டுவிட்டது என்பதற்காக அதிக விலையுயர்ந்த ஆகார வகைகள் சாக்கடையில் கொட்டப்பட்டு விட்ட தற்கு வைஷ்ணவன் என்ற முறையில் என் வாழ்க்கையி லிருந்தும் என் நண்பர்களின் வாழ்க்கையிலிருந்தும் அனு பவங்களை நான் சொல்ல முடியும். அந்நியத் துணி சம் பந்தமாக நான் தெரிவித்துக் கொள்ளுவதெல்லாம், அத் துணி அதைவிட அதிகமாகத் தீட்டுப் பட்டதாகிறது. ஒழுக்கம், ராஜீயம், பொருளாதாரம் ஆகிய துறைகளில் இந்தியாவின் நன்மைக்கு அபாயத்தை விளைவிக்கும் கிருமிகள் அத்துணியில் இருக்கின்றன என்பதுதான். மசூலிப்பட்டணத் தில் இருப்பவர்களான உங்களுக்கு, உங்களூர்த் துறைமுகத்தின் சரித்திரத்தையோ, இந்தியாவின் இத்துறைமுகத்தின் வர்த்தக சுபிட்சத்தையும் ஒரு காலத்தில் இணையில்லாததாக இருந்த இதன் கலையையும் அந்நியத் துணி எவ்வாறு அழித்துவிட்டது என்பது பற்றியோ நான் நினைவுபடுத்த வேண்டிய அவசிய மில்லை. ராட்டையைக் கைவிட்டு, அந்நியத் துணிக்காக இந்தி யாவின் பொருளாதார சுதந்திரத்தை விற்றுவிட்டதன் மூலம் இந்திய மனித குலத்திற்கு நாம் பெரும் துரோகம் செய்திருக் கிறோம் என்று நான் கருதுகிறேன். இன்றோ, நமது சோம்ப லினுல் அதே குற்றத்தையே மீண்டும் செய்துகொண்டு வரு கிறோம். ஆகையால், இந்தியாவை இந்தச் சோம்பலிலிருந்து தட்டி எழுப்ப வேண்டியது என்னுடைய முக்கியமான கடமை என்று எண்ணினேன். அந்நியத் துணியை வாங்குவதற்காகப் போகும் அறுபது கோடி ரூபாயை, இந்தியாவில் பட்டினி கிடக் கும் கோடிக்கணக்கான மக்களிடையே வினியோகித்தால், அவர் களில் யாரும் பட்டினி கிடக்க வேண்டியதில்லை. இந்தச் சாதாரணமான உண்மையைத் தெரிந்துகொள்ளுவதற்குப் பொருளாதாரத்தில் பாண்டித்தியம் வேண்டியதில்லை. இந்தியா வுக்குத் தேவையாகும் துணி முழுவதையும் இங்கேயே தயா ரித்துக்கொண்டு விடுவோமாயின், இந்த அறுபது கோடி ரூபாய் தேசத்தைவிட்டு வெளியே போய்விடாமல் தடுத்துவிடுவதும் சாத்தியம். இந்த உண்மையைப் புரிந்துகொள்ளுவதற்கு

விசேஷமான கணித சாஸ்திர ஞானம் எதுவும் வேண்டியது மில்லை. நூறு ஆண்டுகளுக்கு முன்னால் வரையில் நாம் செய்து கொண்டிருந்த காரியம்தான் இது. உழைக்கவல்ல கோடிக் கணக்கான ஆண்களின், பெண்களின் கரங்களில் இந்தச் சக்தி நமக்குத் தயாராக இருந்துகொண்டிருக்கிறது. அந்தச் சக்தி இன்று இந்தியாவின் குடிசைகளில் சோம்பலினால் துருப் பிடித்துக்கொண்டிருக்கிறது. சோம்பலில் இருந்துவரும் கோடிக் கணக்கான இக்கரங்கள், இந்தியாவிலிருக்கும் ஏழு லட்சம் கிராமங்களிலும் கோடிக்கணக்கான கதிர்களில் ஏன் நூற்றுக் கொண்டிருக்கக் கூடாது என்பதற்கு எந்தவிதக் காரணமும் இல்லை. இங்கிலாந்து பருத்தி பயிர் செய்வதில்லை. என்றாலும், இந்தியாவில் விளைகிற பருத்தியை இங்கிருந்து அவ்வளவு தூரத்திலுள்ள லங்காஷயருக்குக் கொண்டு போய் அதைத் துணி யாக இந்தியாவுக்குத் திருப்பியனுப்புவதைச் சாத்தியமாக்கி யிருக்கிறது. அப்படியிருக்கும்போது நாம் இங்கே விளைவிக்கும் பருத்தியை, இந்தியாவில் அது எங்கெங்கு தேவைப்படுகிறதோ அங்கெல்லாம் கொண்டு போய் அதைக் கொண்டு துணி நெய்துவிடுவது எவ்வளவு எளிதானது? சிரத்தையின்மை இருந்து வந்தும், சாத்வீகமான, தீவிரமான எதிர்ப்புக்கூட இருந்தபோதிலும், இந்நாட்டில் இரண்டாயிரம் கிராமங்களில் இன்று இக்காரியம் செய்யப்பட்டு வருகிறது. ஏழ்மையிலிருக் கும் நம் சகோதரிகள் தங்கள் மென்மையான கைகளினால் நூற்ற நூலைக் கொடுத்து விட்டு அதற்குப் பதிலாகப் பணத்தையோ, பருத்தியையோ வாங்கி வருவதற்காகத் தினந்தோறும், வாரந் தோறும் பல மைல் தூரம் நடப்பதையும் பொருட்படுத்துவ தில்லை. இந்த ஏழைச் சகோதரிகளுக்கும் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான இந்தியர்களுக்கும் வருடம் முழுவதிலும் ஒரு வேளைகூட வயிறாரச் சோறு கிடைப்பதில்லை என்று ஆங்கில நிர்வாகிகளே ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆகையால், இப்படிப் பட்ட மக்களிடம் உங்களுக்குக் கொஞ்சமாவது இரக்கமிருக்கு மாயின், உங்களிடமிருக்கும் அந்நியத் துணியை வெறுத்துத் தள்ளி அதைத் தீயிலிட்டு எரிப்பதை நீங்கள் செய்ய வேண்டிய குறைந்த பட்சப் பிராயச்சித்தமாகக் கருதுவீர்கள். இந்த அளவு பிராயச்சித்தமாவது தனது குழந்தைகள் செய்வார்கள் என்று இந்தியத் தாய் எதிர்பார்க்கிறாள்.

ஆனால், எனக்கு அளித்த வரவேற்புப் பத்திரங்களில் ஒன்றில், கதரை மத்தியில் யாரும் வாங்கி விற்கக்கூடாது என்றும், ஒவ்வொருவரும் தங்களுக்கு வேண்டியதைத் தாங்களே தயாரித்துக்கொள்ள வேண்டும் என்றும் யோசனை கூறப் பட்டிருக்கிறது. இந்த உத்தமமான யோசனை எனக்குப் பிடித் திருக்கிறது. ஆனால், இதைக் கூறுகிறவர்கள் கதர் உற்பத்தியி லுள்ள அனுபவ உண்மைகளை அறியவில்லை என்பதையே இது காட்டுகிறது. இந்த வரவேற்புரைகளைத் தயாரித்தவர்களைக் குறித்து நான் கூறுவதை அவர்கள் அனுமதிப்பதாயிருந்தால்

கதர் உற்பத்தி சம்பந்தமான நுணுக்கத்தைக் குறித்துத் தங்களுக்கு ஒன்றுமே தெரியவில்லை என்பதைத்தான் அவர்கள் காட்டிக்கொண்டிருக்கிறார்கள் என்பேன். ஒவ்வொருவரும் தமக்குத் தேவையான அரிசியைத் தாமே தயாரித்துக்கொண்டு விடுவது என்பது எவ்விதம் காரியத்தில் சாத்தியமில்லாததோ அதே போல ஒவ்வொருவரும் தங்களுக்குத் தேவையான கதரைத் தாங்களே தயாரித்துக்கொள்ளுவது என்பதும் காரியத்தில் சாத்தியமில்லாதது. நகரங்களில் வசிப்பவர்கள், தாங்கள் விரும்பினாலும் தங்களுக்கு வேண்டிய கதரை அவர்களே தயாரித்துக்கொண்டு விடமுடியாது. ஒவ்வோர் ஆணும் பெண்ணும் தங்களுக்கு வேண்டிய கதரைத் தாங்களே தயாரித்துக்கொண்டதாக நாம் அறிந்த வரையில் இந்திய சரித்திரத்தில் எந்த ஆதாரமும் இல்லை. 'நீயே தயாரித்த கதரைக் கட்டு, இல்லையானால் வெளிநாட்டுத் துணியைக் கட்டு' என்று சொல்லுவதிலுள்ள தத்துவத்தை நான் புரிந்துகொள்ளவே முடியவில்லை. தினத்திற்கு எட்டு மணி நேரம் ராட்டையில் நூற்கக்கூடியவர்கள், இந்தியாவில் கோடிக்கணக்கில் இருக்கின்றனர். ஆனால், அப்படித் தாங்கள் தயாரிக்கும் நூலிலிருந்து கிடைக்கும் துணி முழுவதையும் அவர்களே உபயோகித்துவிட முடியாது என்பதையும் அறியவேண்டும். தங்களுடைய இந்தச் சகோதரர்களும் சகோதரிகளும் தயாரிப்பதில் அவர்களுடைய தேவைக்கு வேண்டியதற்கு அதிகமாக இருப்பவைகளை வாங்கிக் கொள்ள வேண்டியது நல்ல இந்திய மக்களின் கடமை. விலங்கிலிருந்து மனிதனை வேறாகப் பாகுபாடு செய்வது மனிதனிடமுள்ள சமூக இயல்புதான் என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது. சுதந்திரமாக வாழ்வது மனிதனுக்குள்ள உரிமையெனின், பரஸ்பரம் ஒருவரையொருவர் நம்பி வாழ்வதும் மனிதனின் கடமை. யார் உதவியும் இல்லாமல் சுயேச்சையாக, தன்னளவில் தானே வாழ்வதாக அகம்பாவம் கொண்டவனே சொல்லிக் கொள்ள முடியும். கதர் உற்பத்தியில் இவ்விதம் 'சுயதேவைப் பூர்த்தியான' முறை இந்தியாவில் பல இடங்களில் நடந்து கொண்டு வருகிறது. முனிசிபாலிடிகளும், தாலுகா போர்டுகளும், ஜில்லா போர்டுகளும் தங்களுடைய முக்கியமான கடமையைச் செய்து உதவி செய்ய முன்வருவார்களாயின், கிராமங்கள் தனிப்பட்டு அல்லாமல் ஒன்று சேர்ந்து தங்களுக்கான துணித் தேவையில் சுயதேவையைப் பூர்த்தி செய்துகொள்ளுவனவாக நமது கிராமங்களைத் திருத்தியமைத்துவிட முடியும் என்பதை இந்த வரவேற்புப் பத்திரங்களைத் தயாரித்தவர்களுக்கு முழுப் பணிவுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அகில இந்திய நூற்போர் சங்கம் அப்போதைக்கப்போது வெளியிட்டு வரும் பிரசுரங்களைப் படிக்கும் சிரமத்தை இவ்வரவேற்புரைகளைத் தயாரித்திருப்போர் எடுத்துக்கொள்ளுவார்களானால், இத்துறையில் என்ன செய்யப்பட்டு வருகிறது என்பதையும் காண்பார்கள். இதனாலேயே இந்தியாவில் கதரே செலாவணியுள்ளதாகிவிடுமாயின் அந்நியத் துணிப் போட்டியைக் குறித்தோ, இந்திய மில்

துணிப் போட்டியைக் குறித்தோகூடப் பயப்பட வேண்டியது எதுவுமே இல்லை என்று எண்ணற்ற தடவைகளில் நான் கூறிக் கொண்டு வருகிறேன். இது எவ்வாறு தானே தெரிந்துகொண்டு விடக்கூடிய காரியம் என்பது சிறிது சிந்தித்தாலே விளங்கும்.

—'எங் இந்தியா'–25—4—1929

## 11

# கதரும் பகிஷ்காரமும்

நமக்கு இருந்துவரும் நம்பிக்கைக் குறைவு அதிக விசித்திர மானதான அதிசயம். எதையும் செய்வதற்கு நமக்கு ஆற்றலுண்டு என்ற நம்பிக்கை நமக்கு இல்லை. பூர்ண மதுவிலக்கு என்றால், அது முடியாததாகக் கருதப்படுகிறது. ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை பகற்கனவு எனப்படுகிறது. சனாதனிகளின் எதிர்ப்பைச் சமாளித்துத் தீண்டாமையை ஒழிப்பது, எள்ளளவும் முடியாதது எனக் கருதுகிறோம். நம் மில்களைக்கொண்டு அந்நியத் துணி பகிஷ்காரத்தில் வெற்றி பெற்றுவிடவில்லை, கதரின் மூலமும் அதில் வெற்றிபெற முடியாது என்று நினைக்கிறோம். இவ்விதமாக நாம் செய்யக்கூடியது என்பது எதுவுமே இல்லை. எனவே, சுயராஜ்யம் என்பது அசாத்தியமான ஒரு காரியமாகவும், அடிமைத்தனமே நமது இயல்பான நிலையாகவும் ஆகிறது. இத்தகைய நிலைமையிலிருப்பது என்பது யாருக்குமே மிக இழிவானதாகும்.

சுயராஜ்யத்தை நோக்கி முன்னேறுவதற்கு நமது இந்த நம்பிக்கையின்மையே மிகப் பெரிய முட்டுக்கட்டையாக இருக் கிறது. கதரின் மூலம் பகிஷ்காரத்தில் வெற்றி பெற்றுவிட முடியாது என்று கூறப்படுவதைக் குறித்து ஆராய்வோம். நமது தேவைக்குப் போதுமான கதர் உற்பத்தியாகவில்லை என்று சொல்லப்படுகிறது. இப்படிப் பேசுகிறவர்களுக்கோ, எழுது கிறவர்களுக்கோ கதரைப் பற்றிய அரிச்சுவடி கூடத் தெரி யாது. நமக்கு மனம் மாத்திரம் இருக்குமானால், ரொட்டி சுட்டுக்கொள்ளுவது எவ்வளவு சுலபமோ அவ்வளவு சுலப மாகக் கதரைத் தயாரித்துவிடலாம். ஆகையால், எல்லை யில்லாமல் பரவிவிடக்கூடியது, அது. பகிஷ்காரத்தின் காரியத் திற்காகக் கதரின் பொருளாதாரத்தைப் பற்றி நான் சொல்லிக் கொண்டிருக்க வேண்டியதில்லை. இங்கிலாந்தும் ஜப்பானும் தங்கள் துணியை நமக்கு அனுப்புவதை நிறுத்திவிடுகின்றன என்று வைத்துக்கொள்ளுவோம். நமது மில்களும் ஏதோ காரணத்தினால் வேலைசெய்ய முடியவில்லை என்றும் வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுது கதர் லாபகரமானதா என்பதை

நாம் சிந்தித்துக்கொண்டிராமல் நம் குடும்பங்களுக்குத் தேவையான கதரை மாத்திரம் நாம் தயாரித்துக்கொண்டிருப்போம். மில் துணி வியாபாரத்தை இழந்துவிட்ட வியாபாரிகளெல்லாம் கதர் உற்பத்தியில் ஈடுபடுவார்கள். நமக்குச் செயலில்லை என்ற மோசமான சூழ்நிலையை நம்மைச் சுற்றிலும் நாம் உண்டாக்கிக் கொண்டிருப்பதனுல்தான் சாத்தியமான சிறு காரியங்களைக் கூட நாம் செய்ய முடியாதவர்களென்று எண்ணிக்கொள்ளுகிறோம். நம்பிக்கையில்லாத் தன்மை மாத்திரம் நமக்கு இல்லாதிருக்குமாயின், சிரமமோ, பகிஷ்காரத்தின் தூண்டுதலோ இல்லாமல் பிஜோலியா சாதித்திருக்கும் காரியத்தை, மகத்தான தேசாபிமானத் தூண்டுதலின் காரணமாக நாம் செய்துவிட முடியும் என்று நாம் எண்ண முடியாமல் போவதற்கு எந்தவிதமான காரணமும் இல்லை. நூற்போர் சங்கத்தின் கருவிகள் தயாரிப்பு இலாகா, தேவைப்படும் ராட்டை, உபக்கருவிகள் முழுவதையும் செய்து கொடுத்துவிட முடியாத அளவுக்கு இன்று பர்டோலியில் கதர் உற்பத்தி செய்யப்பட்டு வருகிறது.

ஆனுல், ஒவ்வொருவரும் குறை கூறிக்கொண்டிருப்பவர்களாகவும், ஒதுங்கி நின்றுவிடுபவர்களாகவும் ஆகி, 'இது என் வேலை' என்று யாருமே சொல்லாமற்போனுல் கதர் இயக்கம் உருப்படாது போய்விடும் என்பதில் சந்தேகமில்லை. இந்த இயக்கத்தின் வெற்றி, கோடிக்கணக்கானவர்கள் மனப்பூர்வமாகக் கட்டுப்பாடாக ஒத்துழைப்பதைப் பொறுத்திருக்கிறது. சிந்திக்கவல்லவர்களாக இருக்கும் வகுப்பார், வெற்றியில் திடமான உறுதியுடன் ராட்டையைச் சுற்ற ஆரம்பித்துவிடுவார்களானுல், இந்த ஒத்துழைப்பு கேட்ட மாத்திரத்திலேயே கிடைத்துவிடும். இந்த இயக்கம் குறைந்த மூலதனத்துடன்கூடிய, வளர்ந்துகொண்டு வரும், விழிப்போடுகூடிய ஒரு ஸ்தாபனம் என்பது அவர்களுக்கு நினைவிருக்கட்டும். நாட்டு மக்கள் தங்கள் முழு சக்தியையும் கொண்டு வேலை செய்தால் வெற்றி நிச்சயமானது.

எல்லோருக்குமான வகையில் சரியானபடி வேலை செய்வதற்கு நாட்டின் முன்பு இதைத் தவிர ஆக்க வேலைத் திட்டம் வேறு எதுவும் இல்லை என்பதும் நினைவிருக்கட்டும். கதர் உற்பத்தியை எல்லையில்லாமல் எவ்விதம் அதிகரித்துக்கொண்டே போகலாம் என்பதைக் குறித்து நான் அடிக்கடி இப்பத்திரிகையில் கூறி வந்திருக்கிறேன். கூலிக்காக நூற்பது, சொந்தத்திற்கு நூற்பது, தியாகமாக நூற்பது ஆகிய மூன்று முறைகளையும் விவரித்திருக்கிறேன். உண்மையான தியாக உணர்ச்சி மக்களிடையே தோன்றிவிடுமானுல், கையினுல் நூற்ற நூல் கடைகளில் வெள்ளமாக வந்து குவிந்துவிடும். கதர் உற்பத்தியின் ரகசியமெல்லாம் நூல் அதிகமாக உற்பத்தியாவதில்தான் இருக்கிறது என்பதையும் காட்டியிருக்கிறேன். இந்தியாவிலுள்ள பள்ளிக்கூடங்களிலும் தொண்ணூற்று ஏழு லட்சத்திற்கு

அதிகமான மாணவர்கள் படித்து வருகிறுர்கள். மொத்த ஜனத் தொகையில் இத்தொகை விசனிக்கத்தக்க வகையில் 4 சத விகிதம்தான். ஆனல், யக்ஞ நூற்புத் திட்டத்தை எளிதாக நிறைவேற்றிவிடுவதற்கு இத்தொகை போதுமானது. பகிஷ் காரத்தைக் கதரின் மூலம் அடைந்தேயாக வேண்டும் என்ற உறுதியை மாத்திரம் அடைந்து விடுவோமாயின், அதிகச் சிரமம் எதுவுமில்லாமல் இந்த இயக்கத்தில் ஈடுபடக்கூடிய மற்ற ஸ்தாபனங்களும் இருக்கின்றன. இவற்றின் கணக்கு மேற் சொன்ன தொகையில் சேரவில்லை.

—' எங் இந்தியா '–20—6—1929

## 12

# பகிஷ்கார இயக்க முன்னேற்றம்

அந்நியத் துணி பகிஷ்காரக் கமிட்டி, தான் செய்திருக்கும் வேலையைக் குறித்த அறிக்கையை, சென்ற வாரம் நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி முன்பு சமர்ப்பித்தது. ஏப்ரல் 30–ஆம் தேதியோடு முடிந்த இரண்டு மாதங்களில் நடந் திருக்கும் வேலையைப் பற்றியது அந்த அறிக்கை. அடைந்திருக் கும் அபிவிருத்தியைத் திருப்திகரமானதாகவே கருத வேண்டும். காங்கிரஸ் ஸ்தாபனம் முழு வேகத்துடன் வேலை செய்திருக்கு மானல், அபிவிருத்தி இன்னும் எவ்வளவோ அதிகமாக இருந் திருக்கும். ஸ்ரீ ஜெயராமதாஸின் கோரிக்கையை நிறைவேற்று வதில் முனிசிபாலிடிகளும் ஸ்தல ஸ்தாபனங்களும் மெதுவாக நகர்ந்து கொண்டிருக்கின்றன. அவை முப்பதுக்கு மேல் இன்னும் தங்கள் பதிலை அனுப்பவில்லை. காங்கிரஸ் கைப் பற்றிக்கொண்டிருக்கும் ஒவ்வொரு ஸ்தல ஸ்தாபனமும், பகிஷ் காரத் தீர்மானத்தை நிச்சயமாக நிறைவேற்றியாக வேண்டும். பொது ஸ்தாபனங்களிடமிருந்து கிடைத்திருக்கும் ஆதரவு குறைவேயாயினும் எல்லோரும் உணரும் வகையில் இயக்கம் இப்பொழுதே வளர்ந்திருக்கிறது. அந்த அறிக்கையில் ஆதாரங் கள் பல கூறப்பட்டிருக்கின்றன. டில்லி மில் ஜவுளி வர்த்தகர் கள் சங்கத் தலைவர் ஸ்ரீ ஜே. ஸி. ராபர்ட்ஸ் செய்திருக்கும் பிர சங்கத்திலிருந்து கீழ்க்கண்ட பகுதியை இங்கே குறிப்பிடு கிறேன் :

" வர்த்தக சமூகத்தினருக்கு அதிகக் கவலையை அளித்துவரும் மற்ருெரு குழப்பமான விஷயம், இப்பொழுது நாட்டிலிருந்து வரும் நிலையற்ற ராஜீய நிலைமையும் அதன் விளைவாகப் பயமுறுத்திவரும் அந்நியத் துணி பகிஷ்கார இயக்கமும். இந்தியாவில் தோன்றியிருக்கும் இந்த நிலைமையினல் உற்பத்தி ஸ்தலங்களும் பாதிக்கப்படாமலில்லை. இந்தியாவிலிருந்து வாங்குவோர் இல் லாததனுலும், முன்னல் ஒப்பந்தம் செய்திருந்தபடி துணிகளை இந்திய வியா

பாரிகள் வாங்கிக் கொள்ளாததனலும், பிரிட்டனிலிருக்கும் துணி மில்களில் மூன்றிலொரு பகுதியை மூட வேண்டியதாகிவிட்டது என்று அங்கிருந்து கிடைத்திருக்கும் செய்திகளிலிருந்து தெரிகிறது......விஷயம் வரவர மோசமாகிக்கொண்டு வருகிறது. எதிர்காலம் கவலைக்கிடமானதாகவும் நிச்சயமற்றதாகவும் தோன்றுகிறது.''

பிரசாரம், கதர் விற்பனையில் நல்ல பலனை அளித்திருக்கிறது. போன வருஷம் இதே சமயத்தில் இருந்ததைவிட விற்பனை 50 சத விகிதம் அதிகமாகியிருக்கிறது. ஆனல், கல்கத்தாவைக் குறித்து டாட்டர்ஸால் கூறுவதாவது :

''மில் ஜவுளிக்கு அதிக கிராக்கி இருக்கிறது என்பதற்கான அறிகுறிகள் இருக்கின்றன......இந்தியாவைப் பொறுத்தவரையில் கல்கத்தாவில் வேட்டிகள் போன்றவைகளின் தேவை அதிகமாக இருக்கிறதென்பதற்கு அறிகுறி உண்டு. மக்கள் தாராளமாக வாங்கிக்கொண்டு வருகிறார்கள்.''

இதைக் குறித்து அறிக்கை கூறுவதாவது .

''நாடு முழுவதும் சென்ற ஆண்டு மொத்தம் ரூ. 6,516 லட்சத்திற்கு அந்நியத் துணியை இறக்குமதி செய்திருக்கிறது. இதில் ரூ. 2,821 லட்சத்திற்குக் கல்கத்தா இறக்குமதி செய்திருக்கிறது. ஆகையால், கல்கத்தாவின் பங்கு 43 சத விகிதமாகிறது. இவ்விதம் இதுவே அந்நியத்துணி இறக்குமதிக்குப் பிரதானமான துறைமுகம். மேலே கூறப்பட்டிருக்கும் கருத்தின் முக்கியத்தை இந்த உண்மை மேலும் அதிகரிக்கிறது.''

செய்யப்பட்டிருக்கும் இந்த எச்சரிக்கையைக் கல்கத்தாக் காங்கிரஸ்காரர்கள் கவனிக்கட்டும்.

வாங்குவதற்குக் கடைகளில் இப்போதைக்குக் கதர் கிடைக்காது என்று பலர் பயப்படுவதாகத் தெரிகிறது. அப்படி கிடைக்காது போனல், நாம் முன்பு போல உள்நாட்டு மில்களின் தயவில் தான் இருக்க வேண்டிவரும். அப்பொழுது மில்காரர்கள், வெளி நாட்டுத் துணியை இந்திய மில் துணி என்று நம்மிடம் ஏமாற்றி விடுவார்கள், இல்லையானல் அக்கிரமமான அதிக விலை கொடுத்தாவது வாங்க நேரும் என்று அஞ்சுகிறார்கள் என்றும் தோன்றுகிறது. நமக்கு இருக்கும் எல்லா வழிகளிலும் முயன்று நாம் கதரை உற்பத்தி செய்யாமற் போனல் இந்த ஆபத்து உண்மையாக நேரப்போகும் ஆபத்தே. அந்த வழிகளாவன :

1. நமக்காக என்று நூற்பது ;
2. கூலிக்காக நூற்பது ;
3. தியாகமாக நூற்பது.

முதலாவதுதான் அதிக முக்கியமானது, எல்லோரும் செய்யக்கூடியது. ஒரு முறை ஒழுங்குபடுத்திவிட்டால் என்றும் தவருமல் நடக்கக்கூடியது. இதைக் குறித்துச் சரியானபடி பிரசாரம்

செய்வதற்கான சமயம் இப்பொழுதுதான் வந்திருக்கிறது. காதி பிரதிஸ்தானத்தைச் சேர்ந்த ஸ்ரீ சதீஷ் சந்திர தாஸ் குப்தா இதை அறிந்து இதற்கான விரிவான ஏற்பாடுகளைச் செய்து வருகிறார். கதர் உற்பத்திக்கு மலிவான முறை இதுதான். ஏனெனில், உற்பத்தி செய்வதை விற்பதற்கு இடந்தேட வேண்டிய தொல்லை இதில் இல்லாது போகிறது. கூலியைப் பெறுவதற்கு நூற்பது, இரண்டாவது. இது பெருகுவதற்கு அதிக வாய்ப்புகள் இருக்கின்றன. ஆனால், பருத்தியை இருப்பில் வைப்பதற்கும், விற்பனை ஏற்பாடுகளைச் செய்வதற்கும் இதில் மூலதனம் வேண்டியிருக்கிறது. ஆனால், இது நமது வர்த்தகத் திறமையைக் காட்ட இடம் தருவதோடு நம்மிடம் காரிய ஆற்றலையும் உண்டாக்குகிறது. அதோடு மத்திய தர வகுப்பினருக்கு இதனால் கௌரவமான பிழைப்புக்கு வழியும் ஏற்படும். மூன்றாவது முறை மிகவும் பெருமைவாய்ந்தது. மிகச் சிலரே இதை மேற்கொள்ள முடியும். தியாகத்தின் அவசியத்தை நாட்டு மக்கள் உணர்ந்துகொண்டு விடுவார்களாயின், எல்லையற்ற அளவுக்கு நூலை உற்பத்தி செய்துவிட இதுவே உபாயமாகும். முனிசிபாலிடிகள் நடத்திவரும் பள்ளிக்கூடங்களெல்லாம், லட்சக்கணக்கான மக்கள் உடுத்துவதற்குப் போதுமான நூலைக் கொடுத்துவிட முடியும். நகரங்களில் வசிப்பவர்கள் தினமும் அரை மணிநேரம் நூற்றால் குறைந்தது 100 கெஜம் நல்ல நூலை அளிக்கலாம். நூல் நூற்பதைவிட அவர்கள் நேரத்தை வேறு நல்ல வழிகளில் செலவிடலாம் என்று யாரும் யோசனையின்றிப் பதில் சொல்லிவிட வேண்டாம். தண்ணீரே இல்லாத பாலைவனத்தில் சிக்கிக் கொண்டுவிட்ட ஒரு பணக்கார லேவாதேவிக்காரர், நல்ல நீரைத் தேடுவதைத் தவிர வேறு எதிலும் தமது நேரத்தை நன்றாகச் செலவழித்துவிட முடியாது. இந்த ஆண்டில் அந்நியத் துணி பகிஷ்காரத்தில் வெற்றி பெறுவது என்பதில் உறுதிகொண்டிருக்கும் இந்தியா, தனது மக்களில் மிக உயர்ந்தவர்களின் நேரத்தைக்கூட, அந்தப் பகிஷ்காரம் வெற்றிபெறும் வரையில் நூற்பதை விடச் சிறந்ததான காரியம் வேறு எதிலும் கழித்துவிட முடியாது. இந்தப் பகிஷ்காரத்தின் அவசியத்தை நாம் உணராததனால், இந்தச் சாதாரணமான உண்மையை நாம் காண்பதில்லை. எப்படியும் இந்த மூன்று முறைகளும் இப்பொழுது அனுசரிக்கப்பட்டு வருகின்றன. நமது சக்திக்கு முடிந்த வரையில் நாம் எல்லோரும் இவற்றில் உழைப்போமாயின் கதர்ப் பஞ்ச அபாயம் ஏற்பட்டுவிடாது.

—'எங் இந்தியா'-30—5—1929

# 13
# முதலாளிகளின் கடமை

ஸ்ரீ கனசியாமதாஸ் பிர்லா, ஷோலாப்பூரில் மகாராஷ்டிர வர்த்தகர்கள் மகாநாட்டில் தலைமை வகித்துப் பேசுகையில் தமது கருத்துக்களை மனம்விட்டுக் கூறியிருப்பது கவனிக்கத்தக்க தாகும். பாதுகாப்பு அளிக்கும் விஷயத்தில் ஆங்கிலத் துணிக்கும் மற்ற வெளிநாட்டுத் துணிக்கும் வித்தியாசம் பாராட்டப்படுவதை அவர் விரும்பவில்லை. அவர் கூறியதாவது :

''பருத்தி, ஜவுளி உற்பத்தித் தொழிலின் நன்மையை உத்தேசித்துங் கூடப் பாகுபாடு செய்யும் கொள்கையை அடிப்படையாகக்கொண்டு தீர்வை விதிக்கப்படுவதை இந்நாடு சகிக்காது. அதோடு மேற்கொண்டும் ஒரேவிதமான பாதுகாப்புத் தீர்வையை எல்லா வெளிநாட்டு ஜவுளிக்கும் விதிக்க வேண்டும் என்பதுதான் அரசாங்கத்திற்கு நான் சொல்ல விரும்புவது. மலிவான சரக்குகள் இறக்குமதியாவதை எதிர்த்து மாத்திரமல்ல, உயர்ந்த ரக சரக்குகள் இறக்குமதியாவதை எதிர்த்தும் பம்பாய் பருத்தி ஜவுளி உற்பத்தித் தொழிலுக்குப் பாதுகாப்பு வேண்டும்.''

முதலாளிகளின் கடமையைப் பற்றிப் பேசுகையில், அவர்கள் மேற்கொள்ள வேண்டிய ஒரு லட்சியத்தைப் பற்றிக் கூறினார். தொழிலாளரின் பிரதிநிதிகூட இதைவிட அதிகமாகக் கூறிவிட முடியாது. வர்த்தக வகுப்பாளரிடையே ஒற்றுமை இருக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு அவர் கூறியதாவது :

''ஆனால், ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்திவிடுகிறேன். வர்த்தகர்களிடையே இருக்கவேண்டும் என்று நான் கூறும் ஒற்றுமை, சேவைக்காகவேயன்றி மற்றவர்களைச் சுரண்டுவதற்காக அல்ல. இக்கால முதலாளிகள் இப்பொழுது அதிகமாக நிந்திக்கப்படுகிறார்கள். ஒரு தனி வகுப்பைச் சேர்ந்தவர்களாக அவர்கள் இப்பொழுது கருதப்பட்டு வருகின்றனர். ஆனால், முன்பெல்லாம் நிலைமை முற்றிலும் மாறானதாக இருந்தது. பண்டைக்காலத்தில் வைசியர்களின் வேலை எதுவாக இருந்தது என்பதைக் கவனித்தால், தம்முடைய சொந்த நன்மைக்காக அல்லாமல் எல்லோருடைய பொது நன்மைக்காகவும் உற்பத்தி செய்து வினியோகம் செய்வது என்ற கடமை இவர்களிடம் ஒப்படைக்கப்பட்டு இருந்ததைக் காணலாம். அவன் சேர்த்து வைத்த பணத்தையெல்லாம் நாட்டின் தருமச் சொத்தாகவே கருதிவந்தான். முதலாளிகள், தங்களுக்குள்ள உண்மையான பணியைச் செய்து வருவதானால், பிறரைச் சுரண்டுவதற்கு என்று இல்லாமல் சமூகத்தின் ஊழியர்களாகவே இருந்து வர வேண்டும். நாம் நமது கடமையை உணர்ந்து, அதை நிறைவேற்றி வருவோமாயின் எந்தக் கம்யூனிஸமும் போல்ஷ்விஸமும் தலையெடுக்காது. நமது கடமையை நாம் புறக்கணித்துவிட்டதால், கம்யூனிஸமும் போல்ஷ்விஸமும் வளர்வதற்கு வேண்டிய வளம் மிக்க பூமியைத் தயாரித்து வைத்து விட்டதே நாம்தான் என்றும் கூறுவேன். நாம் நம் கடமையை உணர்ந்து, அதை உண்மை

யுடன் பின்பற்றி வருவோமாயின் சமூகத்தை எத்தனையோ தீமைகளினின்றும் நாம் காப்பாற்ற முடியும். நமக்குள்ள உண்மையான வேலை உற்பத்தி செய்வதும் விநியோகிப்பதும் என்றேன்......சமூகத்தின் சேவைக்காக நாம் உற்பத்தி செய்து விநியோகிப்போமாக. எல்லோருடைய நன்மைக்காகவும் நாம் வாழ்ந்து, நம்மையே தியாகம் செய்ய நேர்ந்தாலும் அதற்கும் நாம் தயாராக இருப்போமாக.''

—'எங் இந்தியா'–19—12—1929

## 14

# ஆபத்தான பொறி

என் கருத்தை விளக்கிச் சொல்ல விரும்புகிறேன். மில் ஜவுளித் தொழிலுக்குப் பாதுகாப்பு அளித்து, அதே சமயத்தில் சாம்ராஜ்யச் சலுகையும் அளிப்பது என்ற யோசனை இருப்பதாகத் தெரிகிறது. கூட்ட யோசிக்கப்படும் வட்டமேஜை மகாநாடு சம்பந்தமாகக் குடியேற்ற நாட்டு அந்தஸ்து என்ற பேச்சும் முக்கியமாக அடிபட்டுவரும் இச்சமயத்தில், இதை ஒரு ஆபத்தான பொறி என்றுதான் கூறுவேன். குடியேற்ற நாட்டு அந்தஸ்தோ, சுதந்திரமோ அளிப்பதற்காக, பிரிட்டிஷ் துணிக்கு எப்பொழுதும் சலுகை இருந்து வர வேண்டும் என்பது ஒரு நிபந்தனையாக்கப்படுமானால், கோடிக்கணக்கான மக்களுக்கும், இந்தியாவின் மில்களுக்கும், குடியேற்ற நாட்டு அந்தஸ்தோ, சுதந்திரமோ என்பதற்கு அர்த்தமே இல்லை. எந்த அளவுக்குத் தேவை இருக்கிறதோ அந்த அளவுக்குத் தன் எல்லைக்குள்ளேயே வேண்டிய சாமான்களை இந்தியா தயாரித்துக் கொள்ள முடியும் போது, பிரிட்டிஷ் சாமான்களுக்குச் சலுகையே இருக்க முடியாது. வெளிநாட்டு வர்த்தகத்தை இந்தியா மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளலாம். ஆனால், உள்நாட்டு வர்த்தகம் தானே சமாளித்துக்கொண்டுவிடக் கூடியதாக இருக்கும்வரையில், அதை வேறு யாருடனும் பங்கிட்டுக்கொள்ள இந்தியா துணிய முடியாது. நட்புடன் இருக்கும் இங்கிலாந்து அல்லது வேறு எந்த நட்புடன் இருக்கும் நாட்டிற்கும் எதிராக, வளர்ந்து வரும் தன்னுடைய தொழில்களைப் பாதுகாத்துக்கொள்ள இந்தியாவுக்கு உரிமை உண்டு. இது இந்தியாவின் கடமை. தங்களைச் சிக்க வைப்பதற்காக வைக்கப்பட்டிருக்கும் பொறியில் மில் முதலாளிகள் சிக்கிக் கொள்ளுவது தவறானதாவதோடு தேசாபிமானமில்லாத காரியமுமாகும். மற்றெல்லா வெளிநாட்டுத் துணிகளுக்கும் பாதுகாப்புத் தீர்வை விதிக்கப்படுவதால், தங்களுக்கு லாபமிருந்தாலும், பிரிட்டிஷ் துணிக்குச் சாம்ராஜ்யச் சலுகை அளிப்பது என்பதுடன் எந்தவித சம்பந்தமும் வைத்துக்கொள்ள அவர்கள் கண்டிப்பாக மறுத்துவிட வேண்டும்.

—'எங் இந்தியா'–12—3—1930

# 15

# நமது மில்களும் அந்நியத் துணி பகிஷ்காரமும்

நாம் நமது கடமையைச் செய்து, அதன் நோக்கத்தையும் அதன் வெற்றிக்கான நிபந்தனைகளையும் அறிந்து கொள்ளுவதற்கான சிரமத்தையும் நாம் எடுத்துக் கொள்ளுவோமாயின் அந்நியத் துணி பகிஷ்காரம் நிறைவேறியே தீரும். கீழே கூறப்படும் யோசனைகளின் காரணத்தை இப்பொழுது நான் கூறுவதற்கில்லை. இப்பத்திரிகையில் அவை அடிக்கடி விவாதிக்கப்பட்டு வந்திருக்கின்றன. திரும்பவும் சொல்லுவதற்கு வேண்டிய புள்ளி விவரங்கள் என்னிடம் இருக்கின்றன. முடிவுகளை அறிந்து கொள்ளுவதில் சிரத்தையுள்ளவர்களுக்கு என்னுடைய முடிவுகளைக் கொடுக்கிறேன். விருப்பு வெறுப்பு இல்லாமல், ஒவ்வோர் அம்சத்தையும், சாதகமாகவும் பாதகமாகவும் எழுந்த ஒவ்வோர் வாதத்தையும் தீரக் கவனித்த பிறகே இம்முடிவுகள் பெறப்பட்டிருக்கின்றன.

1. பூரண பகிஷ்காரம் எந்தக் கால அளவுக்குள் நிறைவேறிவிடும் என்று எதிர்பார்க்கிறோமோ, அந்தக் காலத்திற்குள் பகிஷ்காரத்தினால் ஏற்படும் துணிப் பற்றாக்குறையை இந்திய மில்கள் சமாளித்துவிடுவது என்பது சாத்தியமல்ல.

2. இந்தியாவிலிருக்கும் மில்களெல்லாம் சுதேசி மில்கள் அல்ல. இத்தேசத்தின் செல்வத்தை இதனிடமிருந்து வடிகட்டிக் கொண்டு போய்விடும் விஷயத்தில் அந்நிய அரசாங்கத்தைப் போலவே இம்மில்களில் சில அந்நியமானவையே. அவை இந்தியத் தொழிலாளரை வேலைக்கு வைத்துக் கொள்ளுகின்றனவேயன்றி அவை ஐரோப்பியரின் ஸ்தாபனங்களே.

3. சுதேசி மில்களில் பெரும்பாலானவை, தேசத்தின் நன்மைக்காக மட்டும் என்றோ அல்லது பிரதானமாக இந்தியாவின் நன்மைக்கு என்றோ வேலை செய்யமாட்டா.

4. அப்படியே அவை வேலை செய்தாலும், அரசாங்கம் அநேக வழிகளில் அம்மில்களை நசுக்கிவிடக்கூடும்.

5. இப்பொழுது இருக்கும் நிலைமையைப் பயன்படுத்திக் கொண்டு மக்களைச் சுரண்டும் ஆசையைப் பெரும்பாலான மில்கள் கைவிட்டுவிட மாட்டா.

*6.* நெய்வதற்கு, முக்கியமாகக் கரை போடுவதற்கு அநேக மில்கள் வெளிநாட்டு நூலை உபயோகிக்கின்றன.

*7.* பகிஷ்கரிக்கும் துணிக்குப் பதிலாக இவை துணிகளை உற்பத்தி செய்யும் என்று எதிர்பார்க்காமல், அவைகளின் வசதிகளிலும் கௌரவத்திலும் அவை வேலை செய்து வரும்படி விட்டுவிடுவதில்தான் அவைகளை நாம் உபயோகித்துக் கொள்ளலாம்.

*8.* பகிஷ்கரித்துவிட்ட துணிக்குப் பதிலாக நம் மில்களால் தயாரிக்கப்படாத துணிகளை நாம் கொண்டு வந்தால்தான் கடைசியான இதை நாம் செய்ய முடியும். இத்துணி கதராகத்தான் இருக்க முடியும்.

*9.* கதர் உணர்ச்சியையும், அதை உற்பத்தி செய்யும் உறுதியையும் மாத்திரம் நாம் மக்களிடையே உண்டாக்கி விடுவோமாயின், ஒரு மாதத்திற்குள்ளேயே எல்லையில்லாத அளவுக்குக் கதரை எளிதில் உற்பத்தி செய்துவிட முடியும்.

*10.* திறமை வாய்ந்த நெசவாளர்கள் இந்தியாவெங்கும் இருக்கிறார்கள். ஆகையால், இருக்கும் ஒரே பிரச்னை, நூற்பது தான்.

*11.* உறுதியும் உழைப்பும் இருந்தால், நூற்கவும் அதன் பூர்வாங்க வேலைகளையும் ஒரே வாரத்தில் கற்றுக்கொண்டு விடலாம்.

*12.* இந்தியா, தனது எல்லாத் தேவைகளுக்கும் போதுமானதற்கு அதிகமான பருத்தியை உற்பத்தி செய்கிறது.

*13.* ஆகையால், அந்நியத் துணி பகிஷ்காரத்திற்காக வேலை செய்கிறவர்கள் எல்லோரும் நூற்பதன் மூலம் கதர் உற்பத்தி செய்வதிலேயே தங்கள் முழுக்கவனத்தையும் செலுத்த வேண்டும். இதனால், சுதேசி மில்களின் துணிகளைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்று அர்த்தமல்ல. ஆனால், தங்கள் துணிகளை விற்பதற்கு மில்களுக்கு எந்த முயற்சியும் தேவையில்லை என்பதைப் புத்திசாலித்தனமாக உணர வேண்டும் என்பதுதான் இதன் பொருள். அந்நியத் துணி, ராட்டையை எவ்விதம் நசுக்கிவிட்டதோ அதே போல இந்திய மில் துணிக்கும் அது போட்டியாக இருந்து திணறும்படி செய்து வருகிறது. ஆனால், அந்நியத் துணி பகிஷ்கார இயக்கம் அந்த அந்நியத் துணியை நீக்கி இந்திய மில்துணிக்குப் போதுமான உதவியைச் செய்து வருகிறது. அந்நியத் துணி பகிஷ்காரத்தைத் தேடித் தருவதற்கு அதிகமாக மில்களுக்கு உதவி செய்வது கதருக்குத் தீமை செய்வதாகும்.

மில் முதலாளிகள் விரும்பினுல், கதரின் மூலம் பகிஷ்காரம் வெற்றி பெற உதவி செய்யலாம். எங்தெந்த மில்கள் இந்தியருக்குச் சொந்தமானவை, இந்தியரால் நிர்வகிக்கப்படுகின்றன, நெய்வதில் எந்த மில்கள் அந்நிய நூலேயே உபயோகிப்பதில்லே, கதருக்கு ஒத்ததான துணியை எந்த மில்கள் தயாரிக்கமாட்டா, கதரின் பெயரையோ, ராட்டையையோ எந்த மில்கள் தங்கள் முத்திரைகளில் போடாமலும் ஒரேயடியாக விலேயை ஏற்ருமலும் இருக்கின்றனவோ அத்தகைய மில்களின் பட்டியலே மில் முதலாளிகள் வெளியிடலாம்.

அந்நியத் துணியைப் பகிஷ்காரம் செய்கிறவர்கள், அவர்களே நூற்பதன் மூலமோ அல்லது நூற்போரை அதிகரிப்பதன் மூலமோ கதர் உற்பத்திக்கு உதவி செய்யாமல் பகிஷ்காரப் பிரசாரத்தை மாத்திரம் செய்துகொண்டு போகிறவர்கள், சுதேசி என்று மட்டும் வீணுகப் பேசிக்கொண்டிருப்பவர்கள், பகிஷ்கார இயக்கத்திற்கு உண்மையில் தீங்கு செய்துவிடா விட்டாலும் அதற்குத் தடையே செய்கிருர்கள் என்றுதான் நான் நம்புகிறேன். கதருக்கு இருக்கும் தேவையை இப்போதைக்குப் பூர்த்தி செய்ய முடியாமல் இருந்தாலும், பகிஷ்காரர்கள் அவர்கள் வழியிலிருந்து தவறிப் போய்விடக்கூடாது. இச்சமயம்தான் கதர் உற்பத்திக்கு மிகச் சிறந்த சமயம் என்பதை அவர்கள் அறியட்டும். அவசியம் ஏற்பட்டால் கண்டுபிடிக்க வேண்டியதை அது தானே கண்டு கொண்டுவிடும். அதுவே புதிய நியதிகளே உண்டாக்கிக்கொள்ளுமாகையால் அது எந்த நியதியையும் பார்த்துக்கொண்டிருப்பதில்லே. அந்நியத் துணியை உடுத்துவதை விட்டுவிட்டு நூற்கவும் வேண்டும் என்று கேட்டுக்கொள்ளப்படும்போது, அந்நியத் துணியைக் கைவிட மக்கள் மறுப்பார்களாயின் அதற்காகக் கவலேப்பட வேண்டியதில்லே. இந்தக் கட்டுப்பாடு உண்மையில் பகிஷ்கார இயக்கத்தை முன்னுக்குக்கொண்டு போய்த் தீரும். இது வெறும் முறை மாத்திரம் அல்ல. ஆங்கிலேயரைத் தண்டிப்பதற்கு என்றல்லாமல், சுதந்திரம் இல்லாமல் நாம் வாழ முடியாது என்பதற்காக நாம் எவ்வாறு சுதந்திரம் கேட்டு வருகிருேமோ அதேபோலவே, ஆங்கிலேயரைத் தண்டிப்பதற்கு என்றில்லாமல், பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு ராட்டையின் மூலம் வேலேயும் அதைக் கொண்டு சோறும் கிடைக்க வேண்டும் என்பதற்காக நாம் அந்நியத் துணியைப் பகிஷ்கரிக்க வேண்டியிருக்கிறது.

—'எங் இந்தியா'–24–4–1930

# 16

## ‘மனமாற்றம் இல்லை’

ஆளுவோரிடம் மனமாற்றத்தைப்பற்றியது அன்று இதற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் தலைப்பு. சிந்துவாசி ஒருவர் கூறியிருக்கும் குற்றச்சாட்டின்படி, நம்மிடையே மனமாற்றம் இல்லாததையே இத்தலைப்பு குறிப்பிடுகிறது. அவர் எழுதுவதாவது :

“சட்ட மறுப்பு இயக்கத்தின்போது அந்நியத் துணி உடுத்துவதை விட்டிருந்த நம் பெண்கள், இப்பொழுது திரும்பவும் பகிரங்கமாக ஜப்பான், சுவிட்ஜர்லாந்து, ஆங்கில நாடுகளின் பகட்டான துணிகளை வாங்கிவருகின்றனர். அத்துணி மலிவாகவும் கவர்ச்சியானதாகவும் இருக்கின்றது. துணிக் கடைகளிலும், வெளிநாட்டுத் துணிகளை இறக்குமதி செய்பவர்களிடம் முன்னடியே இருந்திருக்கும் இருப்பிலிருந்தும் இத்துணிகள் எவ்வித சிரமமுமின்றிக் கிடைக்கின்றன. இப்பெண்களின் குடும்பங்களிலுள்ள ஆண்கள், சில மாதங்களுக்கு முன்னால்தான் பகிஷ்கார இயக்கம் ஆரம்பமானபோது இவர்களுக்கு வாங்கிக் கொடுத்த சுதேசிப் புடவைகள் முதலியவைகளை யெல்லாம், அடுத்த பகிஷ்கார காலத்திற்கு உபயோகிக்கலாம் என்று இவர்கள் பூட்டி வைத்துவிட்டார்கள். ஆகவே, ஆண்கள் இந்தக் கஷ்ட காலத்தில் அந்நியத் துணிகளை வாங்கிக் கொடுப்பதில் அதிகப் பணம் செலவு செய்ய வேண்டியிருப்பதே இதன் பலன். மேலும், சட்டமறுப்பு இயக்கத்தின்போது அந்நியத் துணி வியாபாரிகளின் கடைகளின் முன்பு எந்தத் தொண்டர்கள் மறியல் செய்தார்களோ, அதே தொண்டர்கள், பிழைப்புக்கு வேறு வழி எதுவும் இல்லாததால் இப்பொழுது அதே வியாபாரிகளிடம் போய்த் தங்களுக்கு வேலை கொடுக்கும்படி கெஞ்சிக்கொண்டிருக்கிறார்கள். இது உங்களுக்கு இதுவரை தெரியாமல் இருக்கலாம். ‘அந்நியத் துணியும் மற்ற பிரிட்டிஷ் பொருள்களும்’ என்ற தலைப்பில் ‘எங் இந்தியா’வில் தாங்கள் ஏப்ரல் 23-ஆம் தேதி எழுதியிருந்த கட்டுரையின் மொழிபெயர்ப்பைப் படித்தேன். ஆனால், காங்கிரஸ் நடவடிக்கைகளின் தீவிரம் குறைய ஆரம்பித்தவுடனே அந்நியத் துணிக்குக் கிராக்கி வளர்ந்துவிடுவதை ஆங்கிலேயர் கண்டுவரும் வரையில், இத்தகைய கட்டுரைகள் எந்த ஆங்கிலேயரின் மனத்திலும் ஏறாது. இந்திய மக்களின் உள்ளத்தில் எந்தவிதமான மனமாற்றமும் ஏற்படவில்லை. அந்நியத் துணிகளிடம் அவர்களுக்கு இருந்த பழைய மோகம் இன்னும் அவர்களிடம் இருந்துகொண்டுதான் வருகிறது என்பதை இது தெளிவாகக் காட்டுகிறது. இதன் காரணத்தை அறிந்துகொள்ளுவது கஷ்டமானதல்ல. சுதேசித் துணியும் கதரும் விலை கிராக்கியாக இருப்பதும், காந்தி-இர்வின் ஒப்பந்தத்தினால் காங்கிரஸ் வேலைகள் மந்தமாகிவிட்டதுமே இதற்குக் காரணங்கள். போன சட்ட மறுப்பு இயக்கத்தின்போது குஜராத் செய்திருக்கும் பெருந் தியாகங்களுக்காக உங்கள் குஜராத்தைப் புகழ்ந்தீர்கள். மற்ற சமூகத்தினர்களை விட பொதுவாகக் குஜராத்திகள் நல்ல வேலை செய்திருக்கிறார்கள். அந்த இயக்கத்தில் அவர்களுடைய பங்கு போற்றக்கூடியது என்பதில் சந்தேகமில்லை. ஆனால், அந்த இயக்கத்தின்போது குஜராத்திகள் கோடிக்கணக்கான ரூபாய்

சம்பாதித்திருப்பதைப் பற்றி என்ன சொல்லுகிறீர்கள்? மில் முதலாளிகளில் சிலர், காங்கிரஸ் வேலைக்காகச் சில லட்ச ரூபாயை உங்களிடம் கொடுத்து, தங்கள் குடும்பங்களில் இரண்டொருவரை ‘ஏ’ வகுப்புச் சிறை வாழ்க்கையை அனுபவிக்க சிறைக்கு அனுப்பிவிட்டதால் என்ன வந்துவிட்டது? இதற்கெல்லாம் பதிலாக அவர்கள் தங்கள் மில்களினல் ஏராளமான லாபம் சம்பாதித்து விடவில்லையா? யாரை வருத்தி இதைச் சம்பாதித்திருக்கிருர்கள்? தனக்கு மிஞ்சித்தான் தருமம் என்பது சரி. ஆனல், அண்டை வீட்டுக்காரரைக் கொள்ளையடித்துத் தருமம் செய்யவேண்டாம். நான் கராச்சியில் ஒரு ஜவுளித் தரகன். அனுபவத்திலிருந்து இதை எழுதுகிறேன்.”

அந்நியத் துணியைப் பற்றிய புகார், பெருமளவுக்குச் சரியானது என்றே நம்புகிறேன். அந்நியத் துணியை, அது இங்கிலாந்திலிருந்தோ, ஜப்பான், பிரான்சு அல்லது வேறு இடத்திலிருந்தோ வந்ததாக இருந்தாலும், அதைத் தொடுவதில்லை என்ற மனமாறுதல், நகரமக்களைப் பொறுத்தவரையிலாவது, மக்களுக்கு ஏற்பட்டு விடவில்லை. அந்நியத் துணியை விலக்கிவிட வேண்டியது அவசியம் என்று புத்தி ஒப்புக்கொண்டாலும், அந்நிய நாடுகளிலிருந்து வருபவைகளான ஆடம்பரத் துணிகளையே உள்ளம் நாடிக் கொண்டிருக்கிறது. தேசத்தின் மீது கொள்ளும் அன்பைவிட, அல்லது அரைப் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்கள் மீது கொள்ளும் அன்பைவிடச் சுயநலத்தின் மீதுள்ள அன்பு மேலோங்கி நிற்கிறது.

அந்நியத் துணிக் கடைகளை மறியல் செய்வதால் ஏற்படும் பயன் ஒரு குறிப்பிட்ட அளவுக்குத்தான் இருக்கும். பாமர மக்கள் இவ்விஷயங்களை அறிந்தவர்களாக இருக்கும்படி செய்வதுதான் இதில் முக்கியமானது. அந்தப் படிப்பையும் விடச் சிறந்தது, ஊழியர்கள் உதாரணமாக நடந்து காட்டுவது. இதையும்விட இன்னும் சிறந்தது, தாங்களே நூற்பதன் மூலம் மலிவான கதரை உற்பத்தி செய்துகொள்ளுவது எப்படி என்பதை மக்களுக்குக் கற்றுக்கொடுப்பது. காரியத்தில் இம் மூன்று முறைகளும் சேர்ந்தே இருக்கும். ஆகையால் கதரின் மூலம் பகிஷ்கரிப்பதன் போராட்டத்தை உணரும் அறிவு மக்களுக்கு ஏற்படும்படி செய்யவேண்டும். கதர் கிராமங்களை எவ்வாறு சுபிட்சமடையச் செய்ய முடியும், எவ்விதம் சுபிட்சமடையச் செய்திருக்கிறது என்பதை நன்ருகத் தேர்ந்தெடுத்த உதாரணங்களைக்கொண்டு மக்கள் அறியவேண்டும். வழக்கமாகக் கதர் அணிபவர்களாக உள்ள, உண்மையான தொண்டர்களுடன் மக்கள்தொடர்பு கொள்ளவேண்டும். தங்கள் சொந்தக் கதரைத் தங்கள் சொந்தக் கிராமங்களிலேயே தயாரித்துக் கொள்ளுவது எப்படி என்பதையும் மக்கள் அறிந்துகொள்ளுவதாக இருக்க வேண்டும். ஆகையால், காங்கிரஸ் ஊழியர்கள் பகிஷ்காரம், கதர் பற்றிய பிரசுரங்களைப் படித்து அவற்றில் போதிய அளவு அறிந்திருக்க வேண்டும். பஞ்சு கொட்டவும், பட்டை போடவும், நூற்கவும், நெய்யவும்கூடத் தெரிந்துகொள்ள விரும்புவோருக்குக்

கற்றுக் கொடுக்கக்கூடியவர்களாக இருப்பதை முன்னிட்டுப் பருத்தி சம்பந்தமான இவ் வேலைகளைக் காங்கிரஸ் ஊழியர்கள் போதிய அளவு அறிந்திருக்க வேண்டும்.

ஆகையால், அந்நியத் துணி பகிஷ்காரமும், கதரை உற்பத்தி செய்து உபயோகிப்பதும், மிக உயர்ந்த பொருளாதார நன்மையை அளிக்கும் நிரந்தரமான காரியங்கள் என்பதை உணருகிறவர்கள், தேசீய லட்சியத்திற்கு எந்த அளவுக்கு மக்கள் மாற்றப்பட்டிருக்கின்றனர் என்பதை அவர்கள் அறியும்படி செய்வதான ஒப்பந்தத்தை வரவேற்பார்கள். பொதுஜன அபிப்பிராயத்தின் கடுமையான பலவந்தத்தினுலோ அல்லது இன்னும் கடுமையான வேறு காரணங்களினுலோ மக்கள் அசாதாரணமான காலங்களில் செய்துவந்த வேலைகளைச் சாதாரண காலங்களிலும் அம்மக்கள் செய்வதிலேயே நமது உண்மையான பலம் இருக்க வேண்டும்.

மில்கள் சம்பந்தப்பட்ட விஷயத்தில் ஒரு வார்த்தை: மில்களைக் குறித்து எனக்கு எந்த அனுதாபமும் இல்லை. அவைகளின் நலனை அவைகளே கவனித்துக்கொள்ளும். அவை இன்னும் சமாளித்தாக வேண்டியவைகளாக உள்ள குறைபாடுகள் பல இருக்கின்றன. அவற்றின் ஏஜெண்டுகள், சொந்தக்காரர்கள், பங்குதாரர்களின் நலனைவிடத் தேச நலம் முக்கியமானது என்று மில்கள் இன்னும் கொள்ளவில்லை. ஆனால், நான் இவ்வளவு சொன்ன போதிலும், சிறிய அளவிலேயே என்றாலும், இத்தடவை தேசீயக் கோரிக்கைக்கு உடன்பட மில்கள் முயன்றிருக்கின்றன. நான் கூறுவதிலிருக்கும் இந்த உண்மையை, இக்கடிதத்தை எழுதியிருப்பவர் சோதித்துப் பார்த்துக்கொள்ளட்டும். இயக்கத்திற்கு மில்கள் கொடுத்திருக்கும் பண உதவிக்குப் புறம்பாகக் கவனிக்க வேண்டியது இது. உற்பத்தியையும் விலையையும் மில்கள் ஒழுங்குபடுத்துவதில்லையென்றால், அவை செய்திருக்கும் பண உதவியை ஒரு பொருட்டாக நான் மதிப்பதற்கில்லை. அவ்வகையில் மில்கள் யோக்கியமான முயற்சியைச் செய்திருக்கின்றன என்றே நம்புகிறேன்.

என்றாலும், மில்கள் செய்யவேண்டியவை இன்னும் எவ்வளவோ இருக்கின்றன. தேசத்தின் பொருளாதாரத்தில் கதருக்கு இருக்கும் முதன்மையான ஸ்தானத்தை மில்கள் இன்னும் மனம் விட்டு அங்கீகரிக்கவில்லை. அந்நியத் துணி வியாபாரிகள், தங்களுடைய அந்த வர்த்தகத்திற்குப் பதிலாகச் சுதேசி வர்த்தகத்திற்கு மாற்றிக்கொள்ளும்படி செய்வதற்கான காரியங்களையும் அவை செய்யவில்லை. மில் தொழிலாளர்கள் உள்படத் தேச மக்கள் எல்லோருக்கும் தருமகர்த்தாக்கள் என்று தங்களைக் கருதிக்கொள்ளுவதிலிருக்கும் கணக்கற்ற நன்மையை மில்காரர்கள் இன்னும் அறிந்துகொள்ளவில்லை. காங்கிரஸ்காரர்கள் தாங்கள் செய்ய வேண்டியதைச் சரியாகச் செய்து வருவார்களாயின் இந்த மாறு

தல் வந்துவிடும். மனமாற்றமடையச் செய்வதுதான் நோக்கமாக இருக்கவேண்டுமேயன்றி நிர்ப்பந்தம் நோக்கமாக இருக்கக் கூடாது.

—'எங் இந்தியா' –14—5—1930

# 17

# அது பொருளாதார அவசியமா?

'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகையில் (26-5-'31) வெளியான கட்டுரையில் கீழ்வருமாறு காணப்படுகிறது :

"மறியலின் நோக்கத்தைக் குறித்தும் முறையைப்பற்றியும் மகாத்மா காந்தி சமீபத்தில் அறிவித்திருப்பதில், அந்நியத் துணியை விலக்குவது 'இந்தியப் பொருளாதாரத்திற்கு அவசியமானது' என்ற தமது நம்பிக்கையைத் திரும்பவும் கூறியிருக்கிறார். 'இந்தியாவின் பொருளாதாரத்திற்கு அவசியமானது' என்பதை அவர் என்ன பொருளில் உபயோகித்திருக்கிறார் என்பதுபற்றி 'எங் இந்தியா'வின் அடுத்த இதழில் ஒரு வேளை அவர் விளக்கக்கூடும். ஜவுளி சம்பந்தமாக இப்பொழுது ஏற்பட்டுக்கொண்டுவரும் நிலைமையினால் எழும் சில கேள்விகளுக்குப் பதிலளிப்பதன் மூலம் தேவைப்படும் தகவல்களைக் கொடுத்துவிடலாம்:

1. 1930-31-ல் பருத்தி ஜவுளி இறக்குமதியில் 100 கோடி கெஜம் குறைந்திருக்கிறது. இந்தக் குறைவை, கையினால் நூற்று நெய்யும் முறையின் அடிப்படையில் உற்பத்தியான உள்நாட்டு ஜவுளி எந்த அளவுக்குச் சரிக்கட்டியிருக்கிறது ?

2. அந்தக் குறைவு மில்களின் உற்பத்தியினால் எந்த அளவுக்குச் சரிப்பட்டிருக்கிறது?

3. கையினால் தயாரான துணியும், மில்லில் தயாரான துணியும் எந்த அளவுக்கு அந்நியத் துணிக்கு ஈடு செய்திருக்கின்றன என்பதைப் பொருட்படுத்தாமலே பகிஷ்காரம் தொடர்ந்து செய்யப்பட்டு வருமா?

4. அப்படியானால், பிற மாகாணங்களை விடுத்துப் பம்பாய்க்கு எந்த அளவுக்கு நன்மை உண்டாகும்?

கிராமக் கைத்தொழில்களுக்குத் திரும்ப உயிர் கொடுக்கும் முயற்சி தோல்வியடைந்து விட்டதாகவே தோன்றுகிறது. அப்படி அது நிச்சயமாகத் தோல்வியடைந்திருக்குமாயின், மகாத்மா காந்திக்கு மிகவும் பிடித்தமான தான இந்த இயக்கத்தில் தோல்வியை ஒப்புக்கொள்ள அவர் தயங்கலாம். எனினும், பொது வாழ்வின் நேர்மையை முன்னிட்டுப் பகிஷ்கார இயக்கத்தை நடத்தும் வேலையைப் பருத்தி மில் சொந்தக்காரர்களின் சங்கத்திற்கே மாற்றிவிட வேண்டிய சமயம் வந்துவிட்டது. அந்த இயக்கத்தைக் காங்கிரஸ் நடத்துவதாகவும், தாங்கள் ஏஜெண்டுகளாக இருப்பதாகவும்

ஜாலம் செய்வதற்குப் பதிலாகப் பருத்தி மில்காரர்கள் சங்கமே அசல் முக்கி யஸ்தர்களாக வேலை செய்யலாம்,''

திட்டமான அக் கேள்விகளுக்குப் பதில்களாவன:

1. கெஜக் கணக்கு கொண்டு இக்கேள்விக்குப் பதிலளிக்கவே முடியாது. ஏனெனில், கதர் எல்லாமே வர்த்தக ரீதியில் உற்பத்தி செய்யப்படுவதல்ல. உற்பத்தி செய்கிறவர்களின் உபயோகத்திற்கென்றே வீடுகளில் உற்பத்தியாகும் கதர், நிரந்தரமாக வளர்ந்துகொண்டே போய்க்கொண்டிருக்கிறது. இதை அளந்துவிடுவது ஏழை அகில இந்திய நூற்போர் சங்கத்தினுல் முடியாது.

2. பற்ருக்குறையைப் பூர்த்திசெய்வதில் உள்நாட்டு மில்கள் சந்தேகத்திற்கு இடமின்றித் தங்கள் பங்கைச் செய்தே வருகின்றன.

3. பின்னுல் வரப்போவதைப் பொறுத்தே இது இருக்கும்.

4. பம்பாயின் நன்மையே இந்தியாவின் நன்மை. இக்கடிதத்தை எழுதியிருப்பவர், ஒரு வேளை பம்பாயில் அகமதாபாத்தையும் சேர்த்துக்கொண்டு இந்தியா முழுவதிலும் பல இடங்களிலுமிருக்கும் மற்ற மில்களை அலட்சியம் செய்துவிட்டதாகவே தோன்றுகிறது.

திட்டமான கேள்விகளுக்கு நான் பதில் சொல்லியிருப்பது அக்கட்டுரையை எழுதியிருப்பவரின் திருப்திக்காகவேயன்றி என் திருப்திக்காகவோ, பொதுஜனங்களின் திருப்திக்காகவோ அல்ல. கதர் இப்பொழுதே தோற்றுவிட்டது என்பது நிரூபிக்கப்பட்டுவிட்டது என்று கட்டுரையை எழுதியிருப்பவர் நிச்சயமாக எண்ணுகிருர். அவ்விதம் கதர் தோல்வியடைந்துவிட்டது என்பதை உண்மையாகவே நான் கண்டுகொள்ளுவேனுயின், அங்நியத் துணி பகிஷ்காரத்தில் எனக்குச் சிரத்தையே இருக்காது என்பதைப் பொது மக்கள் அறிய வேண்டும். ஆனுல், அவர் எந்த ஆதாரத்தைக் கொண்டு இந்த உறுதிக்கு வந்திருக்கிருர் என்பது எனக்குத் தெரியாது. கதர் உற்பத்தியிலும், அதைப் பற்றிப் பிரசாரம் செய்வதிலும் பிரதானமாகச் சம்பந்தப்பட்டிருப்பவன் நான். இந்த வகையில், கதர் தோல்வியடைந்துவிடவில்லை என்பது மாத்திரமல்ல, அது இந்தியா முழுவதிலும், மெதுவாகவே என்ருலும் நிச்சயமாக, முன்னேறிக்கொண்டிருக்கிறது என்று துணிந்து கூறுவேன். ஆகையால், பாமர மக்களைப் பொறுத்தவரையில் பகிஷ்காரம் ஒரு பொருளாதார அவசியம் என்று வற்புறுத்திக் கூறுகிறேன். பகிஷ்காரம், கதருக்கு இருப்பதைப் போல அதே கருத்தில், அதே அளவில், மில்களின் பொருளாதாரத்திற்கு அவசியம் அல்ல. இது விசித்திரமானதாக இருக்கலாம். என்ருலும், இதுதான் உண்மை. பகிஷ்காரத்தின் காரணமாக, மில்கள் எதிர்பார்த்த

தையும்விட ஏராளமாக சுபிட்சமடைந்திருக்கின்றன என்பதில் சந்தேகம் இல்லை. என்றாலும், மில்கள் இதுவரை செய்து வந்ததைப் போன்றே பகிஷ்காரம் இல்லாமலிருந்தாலும் உயிர் வாழ்ந்திருக்கும்; பட்டினி கிடக்கும் ஒன்றுமறியாத கோடிக்கணக்கான மக்களிடம் தாங்கள் உற்பத்தி செய்யும் துணிகளைக் குவித்து இம்மில்கள் அம்மக்களைச் சுரண்டுவதில் பிரிட்டனுடனும் ஜப்பானுடனும் பங்கு கொண்டிருக்கும். இம் மக்களோ, தங்கள் ஓய்வு நேரத்தை உபயோகித்துக்கொண்டால் தங்களுக்கு வேண்டிய துணியைத் தாங்களே உற்பத்தி செய்து கொண்டு விடலாம் என்பதை மறந்து, உறுதியில்லாத தான மில் துணியை வாங்கி இரு விதங்களிலும் தங்களுக்குத் தீமையைத் தேடிக் கொள்ளுவார்கள். ஆகையால், மில்காரர்கள் விரும்பினாலும், பகிஷ்காரத்தை முற்றிலும் மில்களிடம் மாற்றி விட முடியாது. அவர்கள் இவ்வேலையை மேற்கொண்டாலும் அது தோற்றுப் போய்விடும். தங்களுடைய ஏஜெண்டுகளும், பங்குதாரர்களும் லாபம் அடைய வேண்டும் என்பதற்காகவே மில்கள் முக்கியமாகப் பகிஷ்காரத்தில் அக்கறை கொண்டிருக்கின்றன என்பதை மறைத்து விடுவதற்கில்லை. ஆனால், காங்கிரஸோ, முற்றிலும் பாமர மக்களின் நன்மையை முன்னிட்டே பகிஷ்காரத்தில் அக்கறை கொண்டிருக்கிறது.

ராஜீயத்தில் அகிம்சை எவ்விதம் புதிய முறையோ அதே போலப் பொருளாதாரத்தில் கதரும் புதிய முறை. அக்கட்டுரையை எழுதியிருப்பவரும், அவரைப் போன்ற மற்றும் பலரும் இதை அறியவில்லை. சம்பிரதாயமான ராஜீய முறைகளை அகிம்சை எவ்விதம் திகைக்கும்படி செய்திருக்கிறதோ அதே போலச் சம்பிரதாயமான பொருளாதார முறைகளைக் கதர் திகைக்கவே வைக்கும். சம்பிரதாய முறைப்படி புள்ளி விவரங்களைக் காட்டுவது என்பதற்குப் புதிய முறை ஓர் அளவுக்குத் தான் ஒத்துவரும். பகிஷ்காரத்தின் அமோகமான வெற்றிக்குக் கதர் உணர்ச்சிதான் காரணம். பகிஷ்காரம் என்பது அதனளவில் புதிய கிளர்ச்சி அன்று. வங்காளப் பிரிவினை காலத்திற்கும் பழமையானது அல்ல என்றாலும், பகிஷ்காரம் அக்காலம் முதல் இருந்து வருவது. ஆனால், இதன் வெற்றியில் நம்பிக்கை பிறந்ததே 1919-இல் கதர் திரும்பப் புத்துயிர் பெற்றபோது தான். சென்ற ஆண்டில் கதர் உணர்ச்சி உச்ச நிலையை அடைந்தபோது அந்த நம்பிக்கை ஓரளவுக்குக் கைகூடியது. கதர் உணர்ச்சியின் உண்மையான தோற்றம் இனித்தான் வெளிப்பட வேண்டும். அதுவும் வெளிப்பட்டுத்தான் தீரும். அதுவும் அநேகர் எதிர்பார்ப்பதற்கு முன்னாலேயே இது ஏற்படும். அப்படி ஏற்படும்போது மறியலுக்கோ அல்லது புள்ளி விவரக் கணக்கைக் காட்டிக் கொண்டிருப்பதற்கோ அவசியமிருக்காது.

மில்களுக்கு மாத்திரமே நன்மையை உண்டாக்கிப் பாமர மக்களுக்குத் தீமை செய்யும் வகையிலோ அல்லது அதற்

கென்றே பகிஷ்காரம் உருவாக்கப்பட்டிருக்கிறது என்று 'டைம்ஸ் ஆப் இந்தியா'வில் எழுதியிருப்பவர் கூறுகிறார். பகிஷ்காரத்திற்குப் பின்னால் கதர் இல்லாதிருக்குமானால், அப்படிக் கூறுவதற்கு ஆதாரமிருக்கும். 'கதரின் மூலம் பகிஷ்காரம்' என்று எவ்வளவோ விளக்கமாகக் காங்கிரஸ் திட்டம் இருந்து வருகிறது என்பதை அக்கட்டுரையை எழுதியிருப்பவரும், அவரைப் போன்று குறை கூறுவோரும் நினைவில் வைக்கட்டும். கதருக்குத் துணையாகவே மில்கள் இருக்கின்றன. ஆனால், இந்திய மில்கள் கதரை எதிர்க்குமானால் அதையும் பொருட்படுத்தாமல் பகிஷ்காரம் இருந்தே வரும். ஒரு சமயம் அநேக மில்கள் கதரை எதிர்த்தன. கதர் விஷயத்தில் அவற்றின் அசிரத்தை இப்பொழுதும் தெளிவாகத் தெரிந்துதான் இருக்கிறது. என்றாலும், ஒன்றைச் சொல்லித்தான் ஆக வேண்டும். மில்கள் ஒருவாறு கால மாறுதலை உணர்ந்து கொண்டிருக்கின்றன. பெரும்பாலான மில்கள் இன்னும் அரை மனத்தோடு தான் இருக்கின்றனவெனினும் அவை கதருடன் சமரசத்திற்கு வந்துவிட்டன. சில மில்கள் கதர் வழிக்கே மாறிவிட்டன. கதருக்காக நஷ்டமடைய நேர்ந்தாலும், அதை அவை பொருட்படுத்தமாட்டா. ஆகையால், பகிஷ்கார இயக்கத்தில் இந்திய மில்கள் பிரதானமானவைகளாக எவ்விதத்திலும் இல்லை. அவை லாபமடைகின்றன என்பதில் சந்தேகமில்லை. தற்போதைக்காவது அவை அதிகப்படியாக லாபமடைந்தே வரும். ஆனால் இவை அடையும் லாபத்தின் விகிதம், கதர் விஷயத்தில் இவை நடந்துகொள்ளும் ஒழுங்கிற்கு நேரடியாகப் பொருந்துவதாகவே இருக்கும்.

இந்தியா, அதாவது பாமர மக்கள், மில்களுக்குச் சமீபத்தில் சட்டத்தின் மூலம் அளிக்கப்பட்டிருக்கும் பாதுகாப்பினால்கூட நாளாவட்டத்தில் ஏன் நன்மையை அடைவார்கள் என்பதை அக்கட்டுரையை எழுதியிருப்பவரும் வாசகரும் இப்பொழுது புரிந்து கொள்ளுவார்கள். மில் துணியின் விலை ஏறும் என்பது உண்மையே. லாபமடையும் ஆசையில் மில்கள் இறங்கிவிடாதபடி தடுக்கவேண்டும்; பாமர மக்களின் பொருளாதார நன்மை தங்கள் குடிசைகளிலேயே கையினால் நூற்பதன் மூலம் கதரை உற்பத்தி செய்து கொள்ளுவதில்தான் இருக்கிறது என்பதை அம்மக்களுக்குப் போதித்துக் காங்கிரஸ் இடைவிடாது பிரசாரம் செய்துவர வேண்டும். அந்நியத் துணி போய்விட்டதும் இந்திய மில்கள் தங்கள் துணியின் விலையையும் உற்பத்தியையும் கதருக்கு உகந்ததாக அமைத்துக்கொள்ளும். இல்லையானால், வெளிநாட்டு மில்களைப் போன்றே இவையும் பகிஷ்காரத்திற்கு உள்ளாகவேண்டி வரும்.

—'எங் இந்தியா'-4—6—1931

# 18

# ஜப்பான் துணியா, பிரிட்டிஷ் துணியா ?

கோடிக்கணக்கான மக்களுக்கு முக்கியமானதான ஒரே நோக்கத்தின் பேரில், அதாவது, பொருளாதார நோக்கத்தின் பேரில் ஜப்பானியத் துணி பகிஷ்காரம் இன்னும் அதிக முக்கிய மானதாகிறது. பம்பாய் மில்காரர்கள் சங்கத் தலைவர் ஸ்ரீ ஹெச். பி. மோடி எழுதியிருக்கும் கீழே காணும் கடிதத்திலிருந்து இது தெளிவாகிறது:

“வெளி நாடுகளிலிருந்து இந்நாட்டிற்குள் வரும் ஜவுளியை நான்கு முக்கியமான வகைகளாகப் பிரிக்கலாம். கோடித் துணி, சலவைத் துணி, சாயமிட்ட துணி, போலிப் பட்டுத் துணி என்பவை இவை. 1930-இல் கடைசி நான்கு மாதங்களிலும், 1931-இல் முதல் நான்கு மாதங்களிலும் பிரிட்டனிலிருந்தும், ஜப்பானிலிருந்தும் இந்த வகைத் துணிகள் எவ்வளவு இறக்குமதியாகியிருக்கின்றன என்பதைக் கணக்கெடுத்துக் கீழே கொடுத்திருக்கிறேன்:

| | பிரிட்டன் | | ஜப்பான் | |
|---|---|---|---|---|
| | 1930 கடைசி 4 மாதங்கள் | 1931 முதல் 4 மாதங்கள் | 1930 கடைசி 4 மாதங்கள் | 1931 முதல் 4 மாதங்கள் |
| | (லட்சம் கெஜங்கள் கணக்கில்) | | | |
| கோடித் துணி | 180 | 180 | 530 | 770 |
| சலவைத் துணி | 390 | 660 | 80 | 140 |
| சாயமிட்ட துணி | 280 | 320 | 160 | 280 |
| போலிப் பட்டுத் துணி | ... | ... | 70 | 240 |
| மொத்தம் | 850 | 1160 | 840 | 1430 |

சலவை செய்த துணி வியாபாரத்தில் முன்னால் பிரிட்டன் ஏகபோகமானதாக இருந்தது. அந்தத் துணி வியாபாரத்தைத் தவிர மற்றவைகளில் அதன் வர்த்தகம் சமீபத்தில் கொஞ்சம் அபிவிருத்தி அடைந்திருந்தபோதிலும் பிரிட்டனின் வியாபாரம் சில மாதங்களுக்கு முன்னால் இருந்ததைப்போன்றே இருந்து வருவதை மேலே கண்ட புள்ளி விவரங்களிலிருந்து அறியலாம். ஆனால், ஜப்பான் ஜவுளி விஷயத்திலோ, நிலைமை நன்றாகத் தெரியும் வகையில் மாறுபட்டதாக இருக்கிறது. ஜப்பானில் கோடித் துணி இறக்குமதி 45 சத விகிதம் அதிகரித்திருக்கிறது. சலவைத் துணி, சாயமிட்ட துணி வகையில் 75 சத விகிதம் இறக்குமதி அதிகமாகியிருக்கிறது. போலிப் பட்டு இறக்குமதியிலோ 240 சத விகிதத்திற்கு மேல் அதிகமாகியிருக்கிறது. சலவை செய்த துணி, போலிப்பட்டுத் துணி இறக்குமதி, இவ்வருட முதல் நான்கு மாதங்களில், இதற்கு முன்னால் எப்பொழுதும் இருந்திராத வகையில் அதிகமாகியிருக்கிறது. கோடித் துணி, சாயமிட்ட துணி இறக்குமதியும் பகிஷ்காரத்

திற்கு முன்னால் இருந்த அளவுக்கு வேகமாக அதிகரித்துக்கொண்டு வருகிறது. முடிவில் அந்த அளவையும் மிஞ்சிவிடுவதற்கான அறிகுறிகள் இருக்கின்றன. இப்பொழுதும்கூட ஜப்பான் துணியே அதிக அளவில் இறக்குமதியாகிக் கொண்டிருக்கிறது. முடிவில் லங்காஷயர் துணிக்குப் பதிலாக ஜப்பான் துணியே பெரும்பாலும் புகுந்துவிடும் என்பதைத் தெரிந்துகொள்ளலாம். இதனால், முன்னால் இருந்ததைவிட மோசமான நிலையிலே இந்தியா இருக்க வேண்டி வரும்.

இந்திய ஜவுளி மில்களுக்கு மோசமான போட்டியாக இருப்பது பிரிட்டனைவிட ஜப்பானே என்பது பலவருடங்களாகத் தெரிந்திருக்கிறது. சாதாரணமான ஆண்டு என்று கருதக்கூடிய 1929–30-இல் பிரிட்டனிலிருந்து 12,480 லட்சம் கெஜம் துணி இறக்குமதியாயிற்று. 1924–25-இல் 16,220 லட்சம் கெஜம் இறக்குமதியாகியிருந்தது. ஆனால், ஜப்பானிலிருந்து இறக்குமதியான ஜவுளி 1924–25-இல் 1,550 லட்சம் கெஜமாக இருந்தது 1929-30-இல் 5,620 லட்சம் கெஜத்திற்கு உயர்ந்துவிட்டது. ஜப்பான் போட்டியே அதிக மோசமானது என்பதை இதிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

இது சம்பந்தமாக முக்கியமாகக் கவனிக்க வேண்டியது, ஜப்பானிலிருந்து இறக்குமதியாகும் போலிப் பட்டுத் துணிகள் ஏராளமாக அதிகரித்திருப்பதாகும். 1930-ஆம் ஆண்டு கடைசி நான்கு மாதங்களில் 70 லட்சம் கெஜம் இறக்குமதியாகியிருக்க, இவ்வாண்டு முதல் நான்கு மாதங்களில் 240 லட்சம் கெஜம் இத்துணி இறக்குமதியாகியிருக்கிறது. இதற்கு முன்னால் இறக்குமதியான போலிப் பட்டு நூலில் 80 சதவிகிதம் கைத்தறிகளாலும் 20 சதவிகிதம் மில்களாலும் உபயோகிக்கப்பட்டன. ஆகையால், போலிப் பட்டுத் துணி அதிகமாக ஜப்பானிலிருந்து இறக்குமதியாவதால் மில்களைவிடக் கைத்தறிகளே அதிகமாகப் பாதகமடைகின்றன என்பதை இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

இன்னுமொரு விஷயத்தையும் வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். ஜப்பானிலிருந்து இறக்குமதியாகும் துணிகளெல்லாம் அநேகமாக முரட்டு ரக, நடுத்தர ரக நெம்பர் நூலால் தயாரானவையாகும். இவற்றில் பெரும் பகுதியை இந்திய மில்களே, இந்தியப் பருத்தியைக்கொண்டு தயாரித்துவிடலாம். பிரிட்டனிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டுவந்த ஜவுளியில் பெரும் பகுதியின் விஷயம் அப்படியல்ல.

ஜப்பானிலிருந்து இறக்குமதியாகும் துணிகளுக்குப் பதிலாக இருக்கக்கூடிய துணி வகைகளை இந்திய மில்களிலேயே தயாரிக்கத் தீவிரமான முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. ஆனால், விலையில் ஜப்பான் ஜவுளியுடன் போட்டி போட இந்தச் சரக்குகளை நஷ்டத்திற்குத்தான் தயாரிக்க வேண்டி வரும். ஜப்பான் போட்டியினால் ஏற்படவிருக்கும் ஆபத்தையும், இந்திய நன்மைக்கு அப்போட்டி எவ்வளவோ நாசகரமானதாக இருக்கிறது என்பதையும் குறித்துப் பொதுஜன மனச்சாட்சி விழிப்படைவதன் மூலம் தங்கள் முயற்சி முடிவில் பலன் தரும் என்று மில்கள் நிச்சயமாக உணர முடிந்தாலன்றி மில்கள் நஷ்டப்பட்டுக்கொண்டே போகும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை.

இத்தகைய குறைந்த விலைக்கு ஜப்பான் தனது துணிகளை இங்கே விற்க முடிவதற்கான பல காரணங்களையும் இக்கடிதத்தில் விவரித்துக்கொண்டிருக்க நான் விரும்பவில்லை. நான் செய்ய விரும்பியதெல்லாம், ஜப்பான் இங்கே இறக்குமதி செய்துகொண்டிருக்கும் ரகங்களும், அவை விற்கப்படும் விலையும், லங்காஷயர் வர்த்தகத்திற்கு ஆபத்தாக இருந்ததைப் போன்றே இந்தியாவின் தொழிலுக்கும் மோசமான ஆபத்தாக இருக்கிறது என்பதைக் காட்டுவதே."

ஆகையால், பகிஷ்கார ஊழியர்களிடையே சோர்வு இருக்குமானால், அவர்கள் ஒரு விஷயத்தை ஞாபகத்தில் வைக்கவேண்டும். பொருளாதார நோக்கத்துடன் கவனித்தால் பிரிட்டிஷ் துணி பகிஷ்காரத்தை மாத்திரம் அவர்கள் வற்புறுத்துவதில் எவ்விதப் பிரயோசனமுமில்லை என்பதை நினைவில் வைக்கவேண்டும். ஜப்பான் துணியால் பிரிட்டிஷ் துணி வியாபாரம் எவ்வளவு பாதகமடைந்திருக்கிறது என்பதையும் யாரும் காணலாம்.

—'எங் இந்தியா' - 18—6—1931

# 19

# ஜப்பானிய ஆபத்து

ஒரு நிருபர் எழுதுகிறார் :

"கீழ்த்திசை நாடுகளுக்குச் சென்றிருந்த பிரிட்டிஷ் பருத்தி ஜவுளி தூது கோஷ்டியினர், சீனாவில் லங்காஷயர் ஜவுளி வர்த்தக நிலைமையைப் பரிசீலனை செய்தனர். இவர்கள் வெளியிட்டிருக்கும் அறிக்கை, இந்தியப் பகிஷ்கார இயக்கத்தினால்தான் லங்காஷயர் வர்த்தகத்திற்கு மந்தம் ஏற்பட்டிருக்கிறது என்ற கூக்குரலுக்குச் சரியான பதிலாக இருக்கிறது. சீனாவில் எந்தப் பகிஷ்கார இயக்கத்தினாலும் நிலைமையில் சிக்கல் ஏற்படவில்லை. என்றாலும், பிரிட்டிஷ் பருத்தி ஜவுளி இறக்குமதி சீனாவில் குறைந்துவிட்டதாகத் தெரிகிறது. 1909-13-இல் அங்கே பிரிட்டிஷ் ஜவுளி இறக்குமதி 5873 லட்சம் கெஜமாக இருந்தது. 1930-இல் 694 லட்சம் கெஜத்திற்குக் குறைந்திருக்கிறது. ஜப்பானிய வர்த்தகம், சீன மார்க்கெட்டிலிருந்து லங்காஷயரை விரட்டியடித்திருக்கிறது என்பதும் அறிக்கையில் காட்டப்பட்டிருக்கிறது. லங்காஷயருக்கு இருக்கும் கஷ்டங்களெல்லாம் ஜப்பானின் சரியான போட்டிதான் என்று கமிஷனின் முடிவுகளும் சிபார்சுகளும் காட்டுகின்றன. ஆகையால், கமிஷன் கூறியிருக்கும் பரிகாரம் அடிப்படையானது. கமிஷனின் அறிக்கையிலிருந்து எடுக்கப்பட்டிருக்கும் கீழ்க்கண்ட வாக்கியங்கள் ருசிகரமானதாக இருக்கும் ::

'உள்நாட்டு விற்பனையைவிட வெளிநாட்டின் விற்பனையையே லங்காஷயர் நம்பியிருக்கிறது. முன்னால் சீனா, லங்காஷயரின் முக்கியமான மார்க்கெட்டாக இருந்து வந்தது.

'1912-ல் லங்காஷயர் 800 கோடி கெஜம் துணி உற்பத்தி செய்தது; 1924–இல் 560 கோடி கெஜம் உற்பத்தி செய்தது. 1930–இல் அதன் உற்பத்தி 400 கோடி கெஜத்திற்கும் அதிகக் குறைவாகவே இருக்கும்.

'1909–13–இல் சீனவுக்கும் ஹாங்காங்கிற்கும் பிரிட்டன் சராசரி 5870 லட்சம் கெஜம் ஏற்றுமதி செய்து வந்தது. 1929-இல் 21 கோடி கெஜம் ஏற்றுமதி செய்தது. 1930–இல் 690 லட்சம் கெஜம்தான் ஏற்றுமதி செய்திருக்கிறது. 1913-இல் பிரிட்டன் சீனவுக்கும் ஹாங்காங்கிற்கும் ஏற்றுமதி செய்து வந்த சரக்குகளின் மதிப்பு, அந்நாடுகளுக்கு ஜப்பான் ஏற்றுமதி செய்து வந்ததை விட நான்கு மடங்கு அதிகம். ஆனல், 1930-இல் ஜப்பான் ஏற்றுமதியின் மதிப்பில் பிரிட்டிஷ் ஏற்றுமதி ஆறில் ஒன்றுதான். இந்த ஆண்டு (1930) சீனவுக்கும் ஹாங்காங்கிற்கும் ஜப்பான், பிரிட்டன் ஏற்றுமதி செய்திருப்பதை விட ஒன்பது, பத்து மடங்கு அதிகப் பருத்தி ஜவுளியை ஏற்றுமதி செய்திருக்கிறது.

'வாங்குவதற்குச் சீன மக்களுக்குப் பணவசதி அதிகமாகக் குறைந்துவிட்டதால் தரத்தைக் கவனிப்பது அவர்களுக்கு இரண்டாந்தர விஷயமாகிவிட்டது. ஆகையால், சீன மார்க்கெட்டில் லங்காஷயர் இழந்திருக்கும் ஸ்தானத்தை அது திரும்ப அடையவேண்டுமானல், முக்கியமான போட்டியாக இருக்கும் ஜப்பானின் விலைக்கு அதிகப்படாமல் தன் சரக்குகளை லங்காஷயர் அங்கே விற்கவேண்டும். இதைச் செய்தாலன்றிச் சீனவில் லங்காஷயரின் வர்த்தகம் குறைந்துகொண்டுதான் போகும்.

'நூற்பவர்கள் பருத்தியை வாங்குவதிலிருந்து, நெய்த துணியை ஏற்றுமதி செய்யும் வரையில், ஒவ்வொரு கட்டத்திலும் செலவில் எப்பொழுதும் ஜப்பானுக்கு லங்காஷயரைவிட அனுகூலம் அதிகம் இருக்கிறது. சில கட்டங்களில் இந்த அனுகூலம் குறைவானதாக இருக்கலாம். என்ருலும், மொத்தமாகப் பார்க்கும்போது கணிசமான அனுகூலமே.

'நமது ஏற்றுமதி முறையிலும், லங்காஷயர் சரக்குகளை விற்கும் முறையிலும் தீவிரமான மாறுதல்களைச் செய்யாமல் சீனவின் நிலைமையில் எந்த அபிவிருத்தியும் ஏற்படுவதற்கில்லை என்பது எங்கள் கருத்து. விற்பனை முறையில் மாறுதல் செய்வது மாத்திரம் போதாது. ஆகையால், பருத்தியை வாங்குவதிலிருந்து, துணியாக ஏற்றுமதி செய்யும் வரையில் இத்தொழிலில் ஈடுபட்டிருக்கிறவர்கள் எல்லோரும், பருத்தியை இறக்குமதி செய்கிறவர்கள், நூற்கிறவர்கள், துணி தயாரிப்போர், சலவை செய்வோர், சாயம் போடுவோர், இதில் வர்த்தகம் செய்வோர் உள்பட முதலாளிகளும் தொழிலாளரும், நூலையும் துணியையும் மார்க்கெட்டில் போட்டி போடக்கூடிய விலைக்குச் செலவை எவ்விதம் குறைக்கலாம் என்பதைக் குறித்து ஒவ்வொருவரும் தனித்தும் சேர்ந்தும் யோசிக்க வேண்டும் என்று வற்புறுத்துகிருேம்.

'உள்நாட்டில் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும் என்பதுதான் எங்கள் நோக்கமேயன்றிக் குறைக்க வேண்டும் என்பது அல்ல என்பதை உறுதியாகக் கூற விரும்புகிருேம். இப்போது லங்காஷயரில் பல்லாயிரக் கணக்கானவர்கள் வேலையில்லாமலும், போதுமான வேலையில்லாமலும் இருக்கின்றனர். நிலைமையை உறுதியுடன் சமாளித்தாலன்றி நிலைமை இன்னும் மோசமாகிவிடும் என்று நாங்கள் கிழக்கு நாடுகளில் பார்த்தறி

லிருந்து நம்புகிறேம். சம்பள விகிதத்தில் இருக்கும் குறையையும், இப்பொழுது இருக்கும் துணி விலையையும் இப்படியே வைத்திருப்பதால் பலர் வேலையில்லாது போவதிலும் லங்காஷயர்த் தொழிலாளரின் வருமானம் குறைவதிலுமே முடிவதானல், அதையே வைத்துக்கொண்டிருப்பதில் பயனில்லை அதே போல உற்பத்தியாளரும் வர்த்தகரும் அனுசரித்து வரும் கட்டுபடியாகாத முறையை வைத்துக்கொண்டிருப்பதால், வைத்துக்கொண்டிருக்க முயற்சி செய்வதால், பிரிட்டன் ஒரு காலத்தில் பெருமைப்படுவதாக இருந்த அதன் ஜவுளி ஏற்றுமதி தொடர்ந்து குறைந்துகொண்டுதான் போகிறது என்ருல், அவர்களில் எப்பகுதியினருக்கும் இதனல் பயனில்லை.

'தீவிரமான மாறுதல்களைச் செய்தாலன்றிக் கிழக்கு நாடுகளில் லங்காஷயரின் வர்த்தகத்தை அதிகரிக்க முடியும் என்பதற்கு எவ்வித நம்பிக்கையும் இல்லை. போட்டி போடக்கூடிய விலையில் தன் சரக்கைக் கொடுத்தாலன்றி அது வர்த்தகத்தை இழந்துகொண்டு வரவே நேரும். வெற்றிக்கு எளிதான வழி எதுவும் இல்லை. இப்பொழுது ஏதாவது தியாகம் செய்ய வேண்டி வரலாம். அத்தொழிலில் ஈடுபட்டிருப்போர் எல்லோருக்கும் பெரும் பொறுப்பு இருந்து வருகிறது. லங்காஷயருக்கு அதன் சரித்திரத்தில் என்றும் ஏற்பட்டிராத நெருக்கடி இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது.'

இந்தியாவில் லங்காஷயரின் ஜவுளி வர்த்தக நிலைமையும் சீனவில் அதற்கு இருக்கும் நிலைமையைப் போன்றே இருந்து வருகிறது. இங்கும் வெளிநாட்டு ஜவுளி இறக்குமதியில் பிரிட்டிஷ் பங்குக்கு ஏற்பட்டிருக்கும் குறைவு, ஜப்பானின் தீவிரமான போட்டியினுல் ஏற்பட்டிருப்பதேயாகும். உண்மையான நிலைமையை லங்காஷயர் அறிந்து, அதைச் சமாளித்துக் கொள்ளுவதற்கான முறையை அது கண்டுகொள்ளவேண்டும். இந்நிலைமை நமக்கும் ஒரு படிப்பினையாகிறது. லங்காஷயர் ஜவுளிக்குப் பதிலாக ஜப்பான் துணி வந்துகொண்டிருப்பதாக இருந்தால், முடிவில் நமக்கு ஏற்படக்கூடிய நிலைமை முன்னுலிருந்த நிலைமையைவிடச் சிறந்ததாக இருந்துவிடாது.''

கடிதத்தை எழுதியிருப்பவர் எடுத்துக்காட்டியிருக்கும் விஷயம், நமது கௌரவத்திற்கு அதிர்ச்சியை உண்டாக்குவதாக இருந்தபோதிலும், அதில் இரண்டு படிப்பினைகள் இருக்கின்றன. பிரிட்டிஷ் ஜவுளியை விரட்டியிருப்பது ஜப்பானியரின் திறமையேயல்லாமல் நம்முடைய பகிஷ்காரம் அல்ல. காலத்தை அனுசரித்து நடந்து கொள்ள நமது மில்கள் தவறிவிட்டால், மக்களிடையே சுதேசி உணர்ச்சியை எழுப்பக் காங்கிரஸ் எவ்வளவுதான் முயற்சி எடுத்துக்கொண்ட போதிலும், அதெல்லாம் பயன்படாமல் இப்போட்டியில் ஜப்பானே வென்றுவிடும். திறமையின்மையைப் பாதுகாக்கத் தடை வரி அனுமதிக்கப்பட மாட்டாது. மக்களும் அரசாங்கமும் ஜப்பானில் ஒன்று என்பதை அறிவேன். ஆனல், அந்த நிலைமைக்கு நாம் வந்துவிட்டபோதிலும் இப்பொழுது இருப்பதைவிட இன்னும் அதிகமான தொழில் திறமை அவசியம்.

—'எங் இந்தியா'–16—7—1931

# 20

# அந்நியத் துணி: உறுதிமொழி

அந்நியத் துணி வர்த்தகர்களுக்கும் காங்கிரஸ் ஊழியர்களுக்கும் உதவியாக இருக்க வேண்டும் என்பதற்காகக் காங்கிரஸ் காரியக் கமிட்டி கீழ்க்கண்ட தீர்மானத்தைச் செய்திருக்கிறது:

"அந்நியத் துணி, நூல் சம்பந்தமாக அளிக்கும் உறுதி மொழி எதுவும் கீழ்க்கண்ட உறுதி மொழிக்கு முரண்பட்டதாக இருக்குமாயின் அத்தகைய உறுதிமொழி செல்லாது என்று தீர்மானிக்கிறது :

'வேறுவிதமாகச் செய்யக் காரியக் கமிட்டி தீர்மானத்தின் மூலம் அனுமதி அளிக்கும் வரையில் கீழ்க்கண்ட நிபந்தனைகளை அனுசரிப்பதாக உறுதி மொழியளிக்கிறோம் :

'1. பருத்தி, கம்பளி, அல்லது பட்டினால் தயாரான எந்த வெளிநாட்டு நூலையோ, அத்தகைய நூலினால் தயாரான துணியையோ வாங்குவதோ, விற்பதோ இல்லை.

'2. காங்கிரஸின் நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ளாத எந்த மில்களும் உற்பத்தி செய்யும் நூலையோ, துணியையோ வாங்குவதில்லை, விற்பதும் இல்லை.

'3. இத்தகைய நூல், பட்டு, கம்பளியினால் தயாராகி எங்கள் வசம் இருக்கும் துணியையோ, வெளிநாட்டு நூலையோ, பட்டு, கம்பளியையோ இந்த நாட்டில் விற்பதில்லை.' "

காங்கிரஸ் ஊழியர்களும் ஸ்தாபனங்களும் தற்செயலாக ஏற்றுக் கொண்டிருந்த எல்லா உறுதிமொழிகளுக்கும் பதிலாக இந்த உறுதிமொழி தயாரிக்கப்பட்டிருக்கிறது என்பதைச் சம்பந்தப்பட்டவர்கள் எல்லோரும் அறிய வேண்டும். இந்த அந்நியத் துணி விலக்கு தாற்காலிகமான காரியமன்று என்பதை வர்த்தகர்கள் மனத்தில் கொள்ள வேண்டும். அவர்கள் சுதேசித் துணி வர்த்தகத்தை மேற்கொள்ள வேண்டும். கதர் விற்பது இன்னும் மேலானது. இல்லையானால், தேசத்தின் நன்மைக்கு உகந்ததான வேறு ஏதாவது தொழிலில் ஈடுபட வேண்டும்.

—'எங் இந்தியா'-16—7—1931

பகுதி ஐந்து

# கதரும் மில் துணியும்

## 1

## மில் துணிகளுக்கு இடமில்லை

பருத்தி, பட்டு, கம்பளி ஆகிய துணி எதுவாக இருந்தாலும், கையினுல் நூற்றுக் கையினுல் நெய்த துணியை அணிவதே இக்காலத்திற்கான பழக்கமாக இருக்க வேண்டும் என்ருல் தேசத்தின் பொருளாதாரத்தில் மில் துணிக்கு இருக்கும் இடம் யாது என்று அடிக்கடி கேட்கிருர்கள். ராட்டையின் உபதேசத்தை இன்று கோடிக்கணக்கான கிராமவாசிகள் ஏற்று, அதைப் புரிந்துகொண்டு, அதை மேற்கொள்ளவும் ஆரம்பித்து விடுவார்களாயின் அந்நிய அல்லது இந்திய மில் துணிக்கு நம் உள்நாட்டுப் பொருளாதாரத்தில் இடமே இல்லை என்பதை நான் அறிவேன். இந்த மில் துணிகள் அடியோடு மறைந்து போய்விடுவது நாட்டிற்கு எவ்வளவோ நல்லது என்றும் கருதுவேன்.

இவ்விதம் கூறுவதற்கும், யந்திரத்திற்கும் அல்லது அந்நியத் துணி பகிஷ்காரப் பிரசாரத்திற்கும் எந்த விதமான சம்பந்தமும் இல்லை. இது இந்தியப் பாமர மக்களின் பொருளாதார நிலைமை சம்பந்தமான பிரச்னையை மட்டும் பொறுத்ததாகும்.

ஆனல், பாதுகாக்கக் கடவுள் முன் வந்து, புகலிடமாகக் கருதிப் பாமர மக்கள் ராட்டையைக் கைக்கொள்ளும்படி செய்யும் வரையில், வரும் சில வருட காலத்திற்காவது கதர் உற்பத்தி போதாததற்குத் துணையாகத் துணியை இந்திய மில்கள் உற்பத்தி செய்து கொடுத்துக் கொண்டிருக்கவே வேண்டும். மில் தொழிலைத் தேசத்தின் தருமச் சொத்தாகப் பாவித்து அதற்குரிய ஸ்தானத்தையும் உணர வேண்டும் என்று பெரிய மில் சொந்தக்காரர்களைக் கேட்டுக் கொள்ளுவதில் வெற்றி பெறலாம் என்று மனப்பூர்வமாக விரும்ப வேண்டியிருக்கிறது. பாமர மக்களை வருத்திப் பணம் திரட்ட மில்காரர்கள் விரும்பக் கூடாது. இதற்கு மாருக அவர்கள் தேசத்தின் தேவைக்கான வகையில் தங்கள் தொழிலை அமைத்துக்கொண்டு, வங்காளப் பிரிவினைக் கிளர்ச்சியின்போது அவர்கள் மீது நியாயமாகவே கூறப்பட்ட பழியைப் போக்கிக் கொள்ள வேண்டும். மான்செஸ்டர் வேட்டியைவிட தங்கள்

வேட்டி மட்டமானதாக இருந்தும், மான்செஸ்டர் வேட்டி விலையைவிட அதிக விலைக்கு இந்திய மில்கள் விற்கின்றன என்று இப்பொழுதுகூடக் கல்கத்தாவிலிருந்தும் மற்ற இடங்களிலிருந்தும் தொடர்ந்து புகார்கள் வந்து கொண்டிருக்கின்றன. இத்தகவல் உண்மையானதாக இருக்குமானால், இவ்விதம் செய்வது மிகவும் மோசமான தேசத் துரோகமாவதோடு, இத்தகைய பேராசைக் கொள்கை, லட்சியத்திற்கும் நாட்டிற்கும் தீமை விளைவிப்பதாகும். நாடு, புதிய ஜனனமாகிய பிரசவ வேதனையில் இருந்து வரும் இச்சமயத்தில், துணிக்கு அநியாய விலை வைத்து விற்பது, அதன் மூலம் பொதுஜன இயக்கத்திலிருந்து விலகி நிற்பதாவதோடு அந்த இயக்க சம்பந்தமாக இரக்கமின்றி அசிரத்தையுடனிருப்பதுமாவதால் அது கேவலமானதாகும்.

மில் சொந்தக்காரர்களுக்கு மனமிருந்தால், நிலைமையைக் குறித்து அதிக விசாலமான நோக்கத்தோடு கவனித்துக் கதர் இயக்கத்தின் அவசியத்தை உணர்ந்து அதை அவர்கள் வளர்க்க வேண்டும். மக்களின் தேவையை ஆராய்ந்து, தேசத்தின் புதிய தேவைகளுக்கு ஏற்றாற் போல அவர்களுடைய உற்பத்தியை அமைத்துக்கொள்ள வேண்டும்.

ஆனால், அவர்கள் எதைச் செய்தாலும், செய்யாது போனாலும், இந்நாடு சுதந்திரத்தை நோக்கிச் செல்லுவது, எந்த ஒரு சங்கத்தினரையோ அல்லது கோஷ்டியினரையோ பொறுத்ததாக இருக்கும்படி செய்ய முடியாது. இது பாமர மக்களின் எழுச்சி. விடுதலையை நோக்கி மக்கள் வேகமாகப் போய்க் கொண்டிருக்கிறார்கள். கட்டுப்பாடான முதலாளிகளின் உதவி இருந்தாலும், இல்லாது போயினும், மக்கள் முன்னேறிப் போகவே வேண்டும். ஆகையால், இது முதலாளிகளை எதிர்பார்த்துக் கொண்டிருக்காத இயக்கமாகவே இருக்க வேண்டும். என்றாலும், இது முதலாளிகளுக்கு விரோதமானது அன்று. மக்களின் உதவிக்கு முதலாளிகள் வருவதாயிருந்தால், அது முதலாளிக்குக் கீர்த்தியை அளிக்கும்; சந்தோஷகரமான சுதந்திர தினம் வருவதையும் துரிதப்படுத்தும்.

இதற்கு முன்னாலும் நிலைமை வேறுவிதமாக இருக்கவில்லை. முதலாளிகளுக்கும் தொழிலாளருக்கும் பகைமை இருந்த வரலாறு அல்ல இந்திய சரித்திரம். மக்களை நான்கு வருணத்தினராகப் பிரித்தது, சமய ரீதியிலானதாக இருப்பதைப் போன்றே பொருளாதார, ராஜீய ரீதியானதுமாகும். இஸ்லாமியக் கலாசாரம் வந்து கலந்ததனால், இருந்த நிலைமை மோசமாகப் பாதிக்கப்பட்டுவிடவில்லை. அந்தக் கலாசாரம் முக்கியமாக சமய சம்பந்தமானதாகவே இருந்ததால் ஏழை மக்களுக்கு நன்மையானதாக ஆயிற்று. வட்டி வாங்குவதை இஸ்லாம் திட்டமாகத் தடை செய்வதைப் போன்றே பணத்தைத் திரட்டிவைப்பதையும் தடுக்கிறது என்றே தோன்றுகிறது.

முதலாளிகள் ஒதுங்கியிருக்கிறார்கள் என்று இச்சமயத்தில் கூடச் சொல்லிவிடுவது சாத்தியமில்லை. சுமாரான முதலாளிகள் தான் திலகர் சுயராஜ்ய நிதிக்குத் தாராளமாகப் பணவுதவி செய்தார்கள். ஆனால், பெரும்பாலான மில்காரர்கள் ஒதுங்கியிருந்து விட்டார்கள் என்பதை மனவேதனையுடன் ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும். ஜவுளி உற்பத்தித் தொழில் நாட்டில் மிகப் பெரிய தொழில். தாங்கள் செய்ய வேண்டியது இன்னதென்பதில் அத்தொழிலில் இருப்பவர்கள் ஒரு முடிவுக்கு வந்துவிட வேண்டிய சமயம் வந்துவிட்டது. அப்படி முடிவுக்கு வந்து விடுவார்களா அல்லது கண்மூடித்தனமாகப் போய்க் கொண்டிருப்பார்களா ?

—' எங் இந்தியா '–23—2—1922

## 2

# மில்காரர்கள் பொறுப்பு

சாம்ராஜ்யச் சரக்கு பகிஷ்கார இயக்கம் பயனற்றது என்பதைக் காட்டச் சென்ற வாரம் முயற்சி செய்தேன். பயனுள்ளதான, அத்தியாவசியமானதான ஒரே பகிஷ்காரத்திலிருந்து நாட்டின் கவனத்தை இது வேறு இடத்திற்குத் திருப்புவதாக இருப்பதால் இது தீமையுமாகும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நமது காரியத்திலிருந்து அகிம்சையை விலக்கி விடுவதாயின், நமது லட்சியத்தை அடைவதற்கு ராஜீயத்தில் அகிம்சை ஒன்றுதான் சரியான பரிகாரம் என்று நான் கூறுவதை நம்பாதவர்கள், அகிம்சை முறைகள் தோற்றுவிட்டன என்றும் திருப்தியடைந்திருப்பவர்கள், மற்ற முறைகள்தான் சரியானவை என்று கண்டால் அம்முறைகளை அவர்கள் அனுசரிப்பது நியாயமாவதோடு அப்படிச் செய்யவும் கடமைப்பட்டிருக்கிறார்கள். இதை நான் பல தடவைகளில் ஒப்புக்கொண்டிருக்கிறேன். என்றாலும், இப்பொழுதுள்ள முறை இருந்து கொண்டிருக்கும் வரையில் சாம்ராஜ்யச் சரக்கு பகிஷ்காரம் கொஞ்சமும் சாத்தியமில்லை என்றே நான் கூறுகிறேன். அகிம்சைக்கும் அதை ஒட்டியவைகளுக்கும் பதிலாகச் செய்யக்கூடிய ஒரே காரியம், எனக்குத் தெரிந்த வரையில் ஆயுதங்களைக் கொண்ட புரட்சிதான். இதற்கான ஆயத்தங்களைச் செய்துகொள்ள நாம் விரும்பினால், சாம்ராஜ்யச் சரக்குகள் பகிஷ்காரம் நியாயமானதாவதோடு தேசிய வேலைத் திட்டத்தில் அதற்கு முக்கியமான இடமும் உண்டு. இந்தப் பகிஷ்காரத்தை வைத்துக்கொண்டு அதற்குச் சாதகமாக ஆவேசமான பிரசாரத்தையும் செய்து வந்தால், நமது கையாலாகாத்தனத்தை நாம் உணர உணர நமது ரத்தமும் அதிகமாகக் கொதிக்கும். அத்தகைய பிரசாரத்தின் இயற்கையான விளைவு, எங்குமே கட்டுப்பாடில்லாத பலாத்காரம் ஏற்படுவ

தாகவே இருக்கும். அது அப்பொழுது நசுக்கப்பட்டுவிட்டாலும் பரவாயில்லை, ஆயுதப் புரட்சிக்கு அதை ஒரு பயிற்சியாகவே அப்பொழுதும் கருதப்படும். ஒவ்வொரு தடவையும் நசுக்கும்போதும் அநேகரிடையே திடக்குறைவு ஏற்படுவதோடு சிலரிடையே உறுதி அதிகமாகும். அவ்விதம் உறுதிகொண்ட கோஷ்டியினரிடமிருந்து போர் வீரர்களின் பட்டாளம் ஒன்று தோன்றலாம். மௌனி வில்லியமைச் சூழ்ந்து கொண்டிருந்தவர்களைப் போலவும் இப்பட்டாளம் இருக்கக்கூடும். இந்தியா, புதியதானதோர் சரித்திரத்தை உருவாக்க முடியாது ; ஐரோப்பிய நாடுகள் செய்திருப்பதைப் போன்றுதான் அதுவும் செய்யவேண்டும் என்ற முடிவுக்குத் தேசீய ஊழியர்கள் வந்திருப்பார்களாயின், அவர்களுடைய சாம்ராஜ்ய பகிஷ்கார இயக்கத்தை நான் புரிந்து கொள்ளுவதோடு அதைப் பாராட்டுவேன். அது வெற்றி பெருது போனாலும், அதை ஒரு லட்சியமாக நடத்திக்கொண்டு வர வேண்டியிருக்கும். ஏனெனில், அவசியமான ஆவியைத் தயாரிப்பதற்கு வேண்டிய தொழிற்சாலைகளில் ஒன்ருக அது கருதப்படும். பழசாகப் போன முறையைக் கையாளுவதற்கு இந்தியாவுக்கு உரிமை உண்டு. அப்படிச் செய்வது என்ற முடிவுக்கே இந்தியா வருமானல், உலகத்திலிருக்கும் எந்தச் சக்தியும் இந்தியாவுக்கு இருக்கும் இந்த உரிமையைப் போக்க முடியாது.

ஆனல், வாள் வழி இந்தியாவுக்கு உகந்தது அல்ல என்று நம்பிக்கையுடன் நான் துணிந்து கூறுவேன். இவ்வழியைத்தான் இந்தியா மேற்கொள்ளுமானல் கீழே கண்டவைகளுக்கும் அது தயாராக இருக்க வேண்டும் :

1. இனி வரவிருக்கும் அநேக தலைமுறைகளும் அந்நிய ஆட்சிக்கு உடன்பட வேண்டும்;

2. இல்லையானல், நிரந்தரமான தனி ஹிந்து ராஜ்யம் அல்லது முஸ்லிம் ராஜ்யத்திற்கு உடன்படவும் தயாராக இருக்க வேண்டும்.

ஹிந்துக்களை மாத்திரமே கொண்ட இந்தியாவை அமைத்துக்கொள்ள முடியவில்லையென்ருல், சாத்தியமான வரையில் ஆங்கிலேயருடன் சமரசத்திற்கு வந்துவிடத் தயாராயிருக்கும் ஹிந்துக்கள் இருக்கிருர்கள் என்பதை அறிவேன். இந்தியாவில் முஸ்லிம்களை மாத்திரமே கொண்ட ஆட்சியை அமைக்க முடியும் வரையில் ஆங்கில ஆட்சியைச் சகித்துக்கொண்டிருக்கத் தயாராயிருக்கும் முஸ்லிம்களும் இருக்கிருர்கள் என்பதையும் அறிவேன். இச்சிறுபான்மையினருக்கு நான் சொல்லக்கூடிய வாதம் எதுவும் இல்லை. அவர்கள் மணலை உழுதுகொண்டே இருக்க வேண்டியவர்களே. ஆனல், மிகப் பெரும்பான்மையான மக்கள், அந்நிய ஆதிக்கத்தைச் சகிக்காதவர்களாக இருக்கிருர்கள்

என்பதையும் நான் அறிவேன். அந்த ஆதிக்கத்தை இந்தியாவி லிருந்து போக்கிவிடுவதற்குச் சரியான ஒரு முறையைக் கண்டாக வேண்டும் என்பதிலும் அவர்கள் ஆர்வத்துடன் இருக்கிருர்கள். ஹிந்துக்களும், முஸ்லிம்களும், பல்வேறு சமயங்களை அனுசரித் துக் கொண்டிருப்போரும் சமமான முறையில் பங்கெடுத்துக் கொள்ளக்கூடிய சுயராஜ்யத்தை, மக்களில் சிந்திப்பவர்களாக இருக்கும் பகுதியினர் முற்றிலும் அகிம்சையோடு கூடியதான முறையை அனுசரிப்பவர்களாயின், அடைவது சாத்தியம் என்று அவர்கள் கருதும் காலத்திற்கு அதிகக் குறைவான காலத்திற் குள்ளே அடைந்துவிட முடியும் என்பதை எடுத்துக் கூறி அம்மக் கள் நம்பும்படி செய்ய முடியும் என்பதில் நான் சோர்வடைந்து விட மாட்டேன். வேறு எந்த முறை கொண்டும் சுயராஜ்யத்தை அடைவது சாத்தியமில்லை என்பதை எடுத்துக் கூறி அவர்களை நம்பச் செய்வதிலும் சோர்வடையேன்.

என்ருலும், காங்கிரஸ் அது மேற்கொண்டிருக்கும் கொள் கையை முன்னிட்டு, ஹிம்சைக்கு உகந்ததான ஒரு சூழ்நிலையை உண்டாக்கக் கூடாதவர்களாக இப்போதைக்காவது காங்கிரஸ் காரர்கள் இருந்துவருகிருர்கள் என்று நான் எண்ணிக் கொள்ள வேண்டும். பலனில்லாத ஏகாதிபத்திய பகிஷ்காரம் அத்தகைய பலாத்கார சூழ்நிலையைத்தான் உண்டாக்கும். ஆகையால், பகிஷ் காரத் தீர்மானம் காங்கிரஸ் கொள்கைக்கு விரோதமானது என்று கூறும் அளவுக்கும் நான் போகிறேன். ஆனுல், இவ்விஷயத்தைக் காங்கிரஸ்தான் முடிவு செய்ய வேண்டும்.

ஆகையால், இதற்குப் பதிலான அந்நியத் துணி பகிஷ் காரத்தில் மாத்திரமே வாசகரின் கவனத்தைச் செலுத்த விரும்பு கிறேன். மிதவாதிகள், தேசீயவாதிகள், காங்கிரஸ்காரர்கள் ஆகியவர்களுக்கு ஒன்று கூறுகிறேன். இவர்கள் அந்நியத் துணியையோ, இந்திய மில் துணியையோ ஒதுக்கிவிட்டுத் தங்கள் சொந்த உபயோகத்திற்குக் கையினுல் நூற்ற கதரை மாத்திரமே உபயோகிப்பார்களாயின், ஒவ்வொரு நாளும் குறிப் பிட்ட நேரத்திற்கு இவர்கள் நூற்று வருவதோடு தங்கள் குடும் பத்திலுள்ள ஒவ்வொருவரும் அவ்வாறே நூற்கும்படியும் தூண்டு வார்களானுல், தங்கள் சக்திக்கு ஏற்ற அளவு ராட்டையையும் கதரின் உபயோகத்தையும் தங்கள் அக்கம் பக்கத்திலிருப்பவர் களிடையே பரப்புவார்களானுல், அந்நியத் துணி பகிஷ்காரத்தை ஓர் ஆண்டிற்குள்ளேயே நாடு அடைந்துவிட முடியும். எந்தவித மான சாக்குப் போக்கைச் சொல்லிக்கொண்டும் இவர்கள் அந் நியத் துணியை அணிந்துவிடக்கூடாது ; நமது மில்களில் தயா ராகும் துணியையும் உபயோகித்துவிடக்கூடாது. இந்த இரு தடைகளுக்கும் இருக்கும் பேதத்தையும் நான் எடுத்துக்காட்ட வேண்டும். அந்நியத் துணி பகிஷ்காரம், எல்லாக் காலங்களுக்கும் ஜீவாதாரமான அவசியம். மில் துணி தேசீய பகிஷ்காரம், நிரந் தரமானதாக இருக்க வேண்டும் என்பதில்லை. இப்பொழுது

இருக்கும் துணித் தேவையை இந்திய மில்கள் மாத்திரம் பூர்த்தி செய்துவிட முடியாது. ஆனால், ராட்டையும் கைத்தறியும் பூர்த்தி செய்ய முடியும். என்றாலும், ராட்டையில் உற்பத்தியான கதர், எல்லோரும் விரும்புவதாகவும் சகலரும் உபயோகிப்பதாகவும் இன்னும் ஆக வேண்டியிருக்கிறது. இந்தியாவின் சிந்திக்கும் பகுதியினர் இதை உபயோகிக்க ஆரம்பித்தால் தான் அது எல்லோரும் விரும்புவதாகவும் உபயோகிப்பதாகவும் ஆக முடியும். ஆகையால், கதர் ஒன்றையே உபயோகிப்பது என்று அவர்கள் தங்களைக் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும். நம் மில்களுக்கு நம்மிடமிருந்து ஆதரவு எதுவும் தேவையில்லை. அவர்கள் சரக்கு எல்லோரும் விரும்புவதாகவே இருக்கிறது. மேலும் மில்களைத் தேச மக்கள் கட்டுப்படுத்த முடியாது. அவை தரும ஸ்தாபனங்கள் அல்ல. பகிரங்கமாக அவை சுய நலம் கொண்டவை. அவைகளுக்கான பிரசாரமும் அவைகளுக்கு உண்டு. காலத்தின் போக்கை உணர்ந்து மில்கள் நடப்பதாக இருந்தால், அவை தங்கள் துணியை மலிவாக விற்று அந்நியத் துணி பகிஷ்காரத்திற்கு உதவி செய்யலாம்; கதர் பரவாத இடங்களுக்குக் கொண்டு போயும் விற்கலாம். மில்களுக்கு மனமிருந்தால், கதருடன் போட்டி போடுவதைத் தவிர்த்துக் கொண்டு கதர் போதாததற்குத் தங்கள் துணியை விற்பதோடு திருப்தியடைந்திருக்கலாம். மில்லில் தயாராகும் துணியை ஒவ்வொரு தேசீய ஊழியரும் பக்தியுடன் விலக்கிக்கொண்டாலன்றி அந்நியத் துணி பகிஷ்காரத்தை உடனே நிறைவேற்றிக்கொண்டு விட முடியாது. எந்த வாதமும் தேவையில்லாத அளவுக்கு இது எளிதான யோசனை என்பது நிச்சயம். கதருக்குக் கிராக்கி ஏற்பட வேண்டும். இதற்கு, விஷயம் தெரிந்தவர்களாக இருப்பவர்கள் கதரையே உபயோகிக்க வேண்டும்.

சாம்ராஜ்யச் சரக்குகள் பகிஷ்காரம் என்பதற்குப் பதிலாகவும் அதற்கு மாறுபட்டதாகவும் அந்நியத் துணி பகிஷ்காரத்தைச் சரியானபடியும் துரிதமாகவும் நிறைவேற்றி வைப்பதற்கான ஒரே வழி, கதரை உபயோகிப்பதுதான் என்பதைக் குறித்து நான் இதுவரை ஆராய்ந்து வந்தேன். ஆனால், கதருக்குள்ள இந்தச் சக்தியுடன், பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு உணவளிக்க அதற்குள்ள சக்தியையும் சேர்த்துப் பார்த்தால் கதரின் நியாயம் எதிர்க்க முடியாததாகிறது.

ராட்டைச் சூழ்நிலையை உண்டாக்க வேண்டியது ஏன், தேச மக்களின் நன்மைக்கு ராட்டையின் அவசியத்தை உணரும் ஒவ்வொரு ஆணும் பெண்ணும் குழந்தையும் தினந்தோறும் கொஞ்ச நேரம் ஏன் பக்திபூர்வமாக நூற்க வேண்டும் என்பதைப் புரிந்து கொள்ளுவது ஒருவேளை இப்பொழுது சுலபமாக இருக்கலாம். உலகத்திலேயே அதிகக் கஷ்டப்பட்டு உழைப்பவர்களாக இருப்பவர்கள் இந்திய விவசாயிகள்; இவர்களே அதிகம் சோப்பிக் கிடப்பவர்களாகவும் இருக்கக்கூடும். கஷ்டப்பட்டு உழைப்பது,

சோம்பிக் கிடப்பது ஆகிய இரண்டும் இந்த விவசாயிகளிடம் திணிக்கப்பட்டிருக்கின்றன. தங்கள் வயல்கள் நெல் விளைச்சலை அளிக்கும்படி செய்ய அவர்கள் பாடுபட்டு உழைக்க வேண்டியிருக்கிறது. கிழக்கிந்தியக் கம்பெனி கையினால் நூற்பதைக் கொன்றுவிட்டதால், இவர்கள் செய்வதற்கு முழு வேலையும் இல்லாது போகவே அவர்களைச் சோம்பிக் கிடக்கும்படி செய்து விட்டது. உதாரணமாக நாம் செய்து காட்டினால்தான் இப்பொழுது விவசாயிகள் ராட்டையைச் சுற்றுவதற்குத் திரும்புவார்கள். வெறும் உபதேசம் மாத்திரம் அவர்கள் மனத்தில் எந்த மாறுதலையும் உண்டாக்காது. அன்பிற்காகவே ஆயிரக்கணக்கானவர்கள் நூற்பார்களாயின், கதருக்கு இப்பொழுது இருக்கும் விலையே வைத்து நூற்போருக்கும் அதிகமான கூலி கொடுக்க முடியும். சத்தியாக்கிரக ஆசிரமத்தில் உற்பத்தியான நூலை நான் மலிவாக விற்க முடிந்தது. ஏனெனில், 1919-இல் பஞ்சாபில் நான் யாத்திரை செய்தபோது பஞ்சாபி சகோதரிகள் என் மீது அன்புடன் சொரிந்த நூல் என்னிடம் மணங்குக் கணக்கில் இருந்தது. நான் விரும்பியிருந்தால் ஜீவனத்திற்காக நூற்போருக்கு அதிகக் கூலி கொடுத்துக் கதரின் விலையைக் குறைக்காமல் இருந்திருக்க முடியும். ஆனால், நான் அவ்விதம் செய்யவில்லை. ஏனெனில், கதர் இயக்கத்தின் அந்த ஆரம்ப காலத்தில் அஜாக்கிரதையாக நூற்கப்பட்டிருந்த நூலுக்கு ராத்தலுக்கு நான்கணாவான அவ்வளவு அதிக விலை கொடுத்து வாங்கிக் கொண்டிருந்தேன்.

மிதவாதிகளும் காங்கிரஸ்காரர்களும் கெனியா முடிவைக் கண்டு ஆத்திரமடைந்து, கெனியா வெள்ளைக்காரர்கள் தலை மீது பலனில்லாததான சாம்ராஜ்யச் சரக்கு பகிஷ்காரத்தை வீசினர்கள் என்றால், இவர்கள் நிதானத்தை அடைந்துவிடும் சமயத்தில், கதர் இயக்கம் வெற்றி பெறுவதில் தங்கள் முழு முயற்சியையும் ஈடுபடுத்தி அதன் மூலம் அந்நியத் துணி பகிஷ்காரத்தை ஏன் நிச்சயமானதாக்கக் கூடாது? அந்நியத் துணி பகிஷ்காரம் கெனியா இந்தியருக்கு நிவாரணத்தைத் தேடித் தருவதோடு அது சுயராஜ்யத்தையும் கொண்டு வரும் என்பதை நான் நிரூபிக்க வேண்டியது அவசியமா?

—'எங் இந்தியா'-22—5—1924

# 3

# மில்களுக்காகக் கோரிக்கை

ஒருவர் வருமாறு எழுதுகிறார் :

1. "சுயராஜ்யம் பெறுவதற்கான சிறந்த சாதனங்கள் கதரும் ராட்டையுமே என்று நீங்கள் கூறுகிறீர்கள். உங்களுடைய மேன்மையான நோக்கத்தையோ தன்னலத் தியாகத்தையோ ஆட்சேபிக்க முடியாது. ஆனால் கதரையே எல்லோரும் உடுத்த வேண்டும் என்று வற்புறுத்தி வருவதால், ஏராளமான மில் சொந்தக்காரர்களையும், அவர்களைவிட அதிகத் தொகையினரான பங்குதாரர்களையும் பயங்கரமான நஷ்டத்திற்கும் கஷ்டத்திற்கும் ஆளாக்குபவர்களாவீர்கள் என்பதை அறிய நீங்கள் ஏன் தவறிவிட்டீர்கள் என்பது புரியவில்லை. ஏனெனில், மில் சொந்தக்காரர்கள், மில்களில் ஏராளமாகப் பணம் போட்டிருக்கிறார்கள். 'பங்குதாரர்களில் அநேகர் சாதாரண வாழ்க்கை நிலையில் இருப்பவர்கள். மில்கள் சுபிட்சமாக நடந்து வருகின்றன என்ற தைரியத்தில் அம்மில்களின் பங்குகளில் பணம் போட்டால் லாபத்தில் வரும் ஈவுத் தொகையைக் கொண்டு சுகமாக வாழ்க்கை நடத்தலாம் என்ற மனப்பூர்வமான நம்பிக்கையின் பேரில் தங்களிடம் இருந்ததையெல்லாம் மில்களில் பங்குத் தொகையில் போட்டிருப்பவர்கள் தாழ்ந்த நிலையிலிருக்கும் பெருவாரியான மக்களோ, கௌரவத்தைப் பாராதவர்கள். அவர்கள் எப்படியோ காலம் தள்ளிவிடக் கூடியவர்கள். அப்படிப்பட்டவர்களுக்குச் சுபிட்சத்தை உண்டாக்க வேண்டும் என்று நம்பி நீங்கள் செய்யும் காரியத்தினால், அதே போன்ற பெருந்தொகையினர் அல்லது அதிகமான பேர்களான உயர் வகுப்பு, மத்திய வகுப்பினருக்குச் சந்தேகத்திற்கு இடமின்றி நீங்கள் நாசத்தையே கொண்டு வருகிறீர்கள்.

2. பொதுவாக மனித வர்க்கத்தினிடமே அனுதாபம் கொண்டு கொஞ்சமும் தன்னலமற்றிருக்கும் பெரிய மகாத்மாவாகிய தாங்கள், எல்லோரிடத்திலும் சமமாக நடந்துகொள்ள வேண்டியது அவசியமாகிறது. ஒரு பக்கம் கதருக்கும் ராட்டைக்கும் நியாயமான அளவுக்கு ஆதரவு தேடவும், இன்னொரு பக்கம் மில்காரர்களுக்கும் ஏராளமான பங்குதாரர்களுக்கும் உதவி செய்யவும் நடுவாந்தரமான ஒரு முறையை வகுப்பதில் உங்களுடைய அபாரமான அறிவை நீங்கள் உபயோகிக்க வேண்டும்.

3. அந்நியத் துணியைப் பகிஷ்காரம் செய்யுங்கள். ஆனால், அதற்குப் பதிலாக இஷ்டம் போல் மில் துணியையும் கதரையும் உபயோகிக்க அனுமதியுங்கள். அப்படிச் செய்தால் அநேக உயர் வகுப்பினருக்கும் மத்திய தர வகுப்பினருக்கும் உதவி செய்தவர்களாவீர்கள்."

இது பரிதாபகரமான கடிதம். கடிதம் எழுதியிருப்பவர் எதைக் குறித்துப் பயப்படுகிறாரோ அது ஏற்பட வேண்டும் என்றே விரும்புகிறேன். மில்களுக்கும், மில்களின் பங்குதாரர்களுக்கும் ஏற்படவிருக்கும் நாசமே, அவர்களுக்கும் இந்தியாவுக்கும் விமோசனம் ஏற்படும் காலம் என்பதை அப்பொழுது இவ

கண்டுகொள்ளுவார். அப்பொழுது இந்தியாவுக்குப் புதிய ஜீவன் பிறந்துகொண்டிருக்கும். நடுத்தர வகுப்பினர், பட்டினி கிடக்கும் விவசாயிகளிடமிருந்து பறித்து, அப்பொழுது வாழ்ந்து கொண்டிருக்கமாட்டார்கள். இதற்குப் பதிலாகச் சுபிட்சமாக இருக்கும் விவசாயிகளைக் கொண்டு வாழ்வார்கள். அப்பொழுது அந்த விவசாயிகள், தங்களுடைய விளைபொருள்களைக் கொடுத்து விட்டு அவற்றிற்குப் பதிலாகத் தங்களுக்குத் தேவையானவை யும், தாங்கள் உற்பத்தி செய்யாதவையுமான பொருள்களைச் சந்தோஷத்துடன் வாங்கிக் கொள்ளுவார்கள். இக் கடிதம் எழுதியிருப்பவர் இவைகளையும் அப்பொழுது கண்டுகொள்ளு வார். மில்களை விரட்டிவிடும் வகையில் ராட்டை நன்ருக ஊன்றி விடுவதற்கு முன்னுல், தாமும், மற்றப் பங்குதாரர்களும், மில்களின் டைரக்டர்களும்கூட மக்களுடன் ஒத்துழைக்க வேண்டியிருக் கும் என்பதை இக்கடிதம் எழுதியிருப்பவர் கொஞ்சம் சிந்தித் துப் பார்த்தாலே அறிந்து கொள்ளுவார். ராட்டை, இந்திய மில் துணியைத் தொடுவதற்கு முன்னுல் அறுபது கோடி ரூபாய் பெறுமானமுள்ள அந்நியத் துணியைப் போக்கியாக வேண்டி யிருக்கிறது. இந்த உண்மையைக்கொண்டு இக் கடிதம் எழுதி யிருப்பவர் மன ஆறுதல் அடையட்டும். ஆனுல், இப் பத்திரி கையில் நான் கூறி வந்திருக்கும் காரணங்களை முன்னிட்டு, நம்மில் ஒவ்வொருவரும் இந்திய மில் துணியையும்கூட விலக்கி விட்டுக் கதர்த் துணி ஒன்றை மாத்திரமே கருத்தில் கொள்ள வேண்டும். என்னிடமிருந்தோ, மற்ற யாரிடமிருந்தோ நமது மில்களுக்கு ஆதரவு தேவையில்லை. அவர்களுக்குச் சொந்த மான ஏஜெண்டுகள் இருக்கிருர்கள்; தங்கள் சரக்குகளை விளம் பரம் செய்ய விசித்திரமான முறைகளும் அவர்களுக்கு இருக் கின்றன. காங்கிரஸின் கட்டுதிட்டங்களுக்கு உட்பட்டவர்க ளாக இருப்பவர்கள் விருப்பம்போல் மில் துணியையும் உபயோ கிக்க உரிமை அளிப்பது என்பது கதர்த் தொழிலையே கொன்று விடுவதாகும். கடைகளில் எல்லோரும் விரும்பி வாங்கக்கூடிய தாகக் கதர் ஆவதற்கு முன்னுல், அதற்கு அளிக்கக்கூடிய எல்லாப் பாதுகாப்புகளும் அதற்கு வேண்டும்.

இதுவரை சொன்னதெல்லாம், அக் கடிதத்தை எழுதியிருப் பவரும் அவரைப் போன்றே எண்ணுகிறவர்களும் மன ஆறுதல் அடைவதற்காகும். என்ருலும், அவருக்கு ஒன்றை நினைவூட்டு கிறேன். மில்களுக்கும் மத்திய தர வகுப்பினருக்கும் தீங்கு ஏற் பட்டு விடும் என்று அறியாமையால் கொண்ட பயத்தினுல் அக் கடிதம் எழுதப்படாமலிருந்தால், அப்படி எழுதியது கொஞ்சமும் இரக்கமற்ற செய்கை என்றுதான் கருதவேண்டும். 'தாழ்ந்த நிலையிலிருக்கும் மக்கள் கௌரவத்தைப் பாராதவர்கள். அவர் கள் எப்படியும் காலம் தள்ளிவிடுவார்கள்' என்று அக்கடி தத்தை எழுதியிருப்பவர் கூறுவதன் பொருள் என்ன? கீழ் நிலை யில் இருப்பவர்கள் கௌரவத்தைப் பாராதவர்கள் என்பதை அவர் நிச்சயமாக அறிவாரா? அவர்களுக்கு உணர்ச்சிகளே

இல்லையா? கோபமான வார்த்தைகளினால் அவர்களுக்கு வருத்தம் உண்டாவதில்லையா? அவர்கள் வறுமையில் இருக்கின்றனர். அந்த வறுமைக்கு நடுத்தர வகுப்பினரான நாம்தான் பொறுப்பாளிகள். இந்த வறுமையைத் தவிர வேறு எந்த வகையில் அவர்கள் தாழ்ந்தவர்கள்? 'தாழ்ந்த நிலையில் இருப்பவர்கள்', 'எப்படியோ காலம் தள்ளிவிடுகிறார்கள்' என்பது இல்லை என்பது மாத்திரமல்ல, அவர்கள் அரைப் பட்டினி நிலையில் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதைக் கடிதம் எழுதியிருப்பவருக்குத் தெரிவிக்கிறேன். 'கீழ் நிலையில் இருப்பவர்'களுக்காக நடுத்தர வகுப்பினர் தாங்களாகவே நஷ்டப்படுவார்களாயின், இவர்களைச் சுரண்டுவதற்குத் தாங்களும் உடந்தையாக இருந்துவிட்ட தவறுக்கு இது கொஞ்சம் பிராயச்சித்தமாகும். தாங்கள் உயர்ந்தவர்கள் என்ற இந்த அகம்பாவமும், இதனால் தாழ்ந்த நிலையில் இருப்பவர்கள் எனச் சொல்லப்படுபவரின் துயரங்களைக் குறித்து உணர்ச்சியே இல்லாததும்தான் சுய ராஜ்யத்தை நாம் அடைய முடியாதபடி செய்து வருவதோடு, ஜீவனை அளிப்பதான ராட்டையின் முன்னேற்றத்தையும் தடுத்து வருகிறது. கடிதம் எழுதியிருப்பவர் பாமர மக்களின் நன்மையைக் கொண்டும் சிந்திக்கட்டும், ராட்டையில் நூற்பதை மேற்கொள்ளுவதன் மூலம் தம்மிலும் மோசமான நிலையிலிருக்கும் தேசத்தினருடன் தம்மை ஒன்றுபடுத்திக் கொள்ளட்டும் என்று அவரை அழைக்கிறேன்.

கடைசியாக, கடிதம் எழுதியிருப்பவருக்கு இன்னுமொன்றும் நினைவிருக்கட்டும். எனக்கு இருக்கும் பரந்த ஜீவகாருண்ய நோக்கத்தை முன்னிட்டுத் தாழ்ந்த நிலைமையில் இருப்பவர்களுக்குத் தீங்கு ஏற்படுவதையும் பொருட்படுத்தாது நம் நாட்டு மில்காரர்களிடம் நான் பரிவு காட்டவேண்டும் என்று எனக்குப் புத்திமதி சொல்லுவதானால், மற்ற நண்பர்கள் என்னை வற்புறுத்தி வருவதைப் போன்று, அதே காரணங்களைக் கொண்டு நான் அந்நிய நாட்டு மில்காரர்களிடமும் பரிவு காட்டவேண்டும் என்று என்னை வற்புறுத்த வேண்டும். பாமர மக்களின் சுபிட்சத்தை அந்நிய நாட்டு மில்கள் நாசமாக்கிவிட்டன என்பது உண்மை. அது உண்மைதான் என்றால், அந்நிய நாட்டு மில் சொந்தக்காரர்கள் நஷ்டமடைந்தாலும் ராட்டைக்கே திரும்பி வந்துவிட வேண்டும் என்று பாமர மக்களுக்குப் போதிக்க வேண்டியது ஜீவகாருண்ய எண்ணத்தின்படி அவசியமானதாகிறது. யாருடைய ஏழ்மையைக்கொண்டு இந்திய மில்கள் தங்கள் செல்வத்தைத் திரட்டி இருக்கின்றனவோ அந்த மக்களின் நன்மையை முன்னிட்டு, அவசியமானால், இந் நாட்டு மில்களும் நஷ்டமடைந்துதான் ஆக வேண்டும். சாமர்த்தியசாலியான ஒரு ரொட்டிக் கடைக்காரர், நமது கிராமங்களிலெல்லாம் ரொட்டிக் கடைகளை வைத்து மலிவாக ரொட்டியை விற்று வருவதால் குடும்பச் சமையல் போய்விடுமானால், அத்தகைய சாமர்த்தியத்தை எதிர்த்து நாடு முழுதுமே எழுந்துவிடும் என்றே நம்புகிறேன். பாமர மக்களின்

நன்மைக்கு விரோதமாக மில்கள் வரும்போது எந்தக் காரணத்தைக் கொண்டு நான் எதிர்க்கிறேனே அதே காரணத்தைக் கொண்டுதான் அந்த ரொட்டிக் கடைக்காரரின் வியாபாரத்திற்கும் எதிர்ப்பு உண்டாகும்.

—'எங் இந்தியா'-17—7—1924

# 4

# அடிமைத்தனத்தின் சின்னம்

இந்தியாவில் இறக்குமதியாகும் பருத்தி ஜவுளிக்குத் தீர்வை விதித்தபோது லங்காஷயரின் நன்மை ஒன்றுக்காகவே இந்தியாவில் உற்பத்தியாகும் துணிக்குக்கூட எக்ஸைஸ் வரி விதிக்கப்பட்டது என்பதை இந்தியப் பத்திரிகையாளர் ஒவ்வொருவரும் அறிவார்கள். இவ்வரி எதிர்க்கப்பட்டிருந்தும், அதைக் குறித்துப் புனராலோசனை செய்வதாக வாக்குறுதியளித்திருந்தும், அவ்வரி இன்னும் இருந்துகொண்டிருக்கிறது என்பதையும் அறிவார்கள். இங்கிலாந்தின் நன்மைக்கு இந்தியாவின் நன்மை தாழ்த்தப்பட்டு வருகிறது என்பதை இவ்வரி தொடர்ந்து ஞாபகப்படுத்தி வருகிறது. மில்லில் நூற்ற துணியை விலக்கிக் கையினல் நூற்ற துணியையே உடுத்த வேண்டும் என்று பலமாக ஆர்வத்துடன் நான் வற்புறுத்தி வருவதை மாத்திரமே அறிந்த சில நண்பர்கள், இந்திய மில்களில் நூற்றதற்குச் சலுகை காட்டவேண்டும் என்று நான் கூறுவதைப் புரிந்துகொள்ள முடியாது. என்ருலும், கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தால் இந்த இரண்டிற்குமுள்ள பொருத்தம் விளங்கும். இந்தியா, பொருளாதார சுதந்திரத்தை அடைய வேண்டுமானல், நோய் போன்று ஆகிவிட்ட கொடிய ஏழ்மையிலிருந்து விவசாயிகள் விடுபட வேண்டுமாயின், பஞ்ச காலத்திலும் அது போன்ற கஷ்டமான காலங்களிலும் இந்த விவசாயிகளுக்குக் கௌரவமான பிழைப்புக் கிடைக்க வேண்டுமானல், இந்தியாவின் கடைகளிலிருந்து அந்நியத் துணியை அடியோடு போக்கியாக வேண்டும். தன்னுடைய முக்கியமான தொழிலுக்குப் பாதுகாப்பு அளித்துக்கொள்ளுவது இந்தியாவின் பிறப்புரிமை. ஆகையால், அந்நிய நாட்டுப் போட்டியிலிருந்து இந்திய மில்களைப் பாதுகாப்பது, இச்சமயத்திற்கு ஏழை மக்களுக்குக் கஷ்டமானதாகவே இருந்தாலும், நான் பாதுகாப்பு அளிக்கவே வேண்டும். இந்தப் பாதுகாப்பினல் இந்திய மில்காரர்களுக்கு ஏற்படும் ஏகபோக வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு தங்கள் துணிகளின் விலையை ஏற்றித் தேசாபிமானமற்ற முறையில் அவர்கள் நடந்துகொண்டால்தான் ஏழை மக்களுக்குக் கஷ்டம் உண்டாகும். ஆகையால், பருத்தி எக்ஸைஸ் வரியை ரத்து செய்து இறக்குமதித் தீர்வையைக் கடு

மையாக விதிக்கவேண்டும் என்று கேட்க நான் தயங்கமாட்டேன்.

அதே போல உள்நாட்டு மில்களின் போட்டியிலிருந்து கையினுல் நூற்ற கதருக்கும் நான் பாதுகாப்பு அளிப்பது பொருத்தமானதே; அந்நியப் போட்டி மாத்திரம் தவிர்க்கப்பட்டு விடுமானுல், எந்த விதமான கஷ்டமுமின்றிக் கதர் பாதுகாக்கப்படும் என்பதை அறிவேன். பொதுஜன அபிப்பிராயம் சரியானபடி பலமுள்ளதாகிவிடும்போது அந்நியத் துணி விலக்கப்பட்டுவிடும். அதே பலமே மில்களின் போட்டிக்கு எதிராகக் கதருக்குப் பாதுகாப்பை உறுதிப்படுத்தும். ஆனல், மில்களுடன் ஆபாசமான போராட்டம் எதுவும் இல்லாமலேயே கதர் தனக்கு உரியதான நிலையை அடைந்துவிடும் என்பது எனது பலமான நம்பிக்கை. எனினும், கதர் ஊழியர்கள் இன்று குறிப்பிட்ட தொகையினரே இருப்பதால், நம் நாட்டு மில்களில் தயாரித்தவைகளாயினும் அந்த நூலுக்கும் துணிக்கும் பதிலாகக் கதரையே வாங்க வேண்டும் என்றுதான் அவர்கள் பிரசாரம் செய்ய வேண்டும். இஷ்டம் போல் வாங்கிக் கொள்ளலாம் என்று அனுமதித்துவிடுவது, கதரைக் கொன்றுவிடுவதாகும்.

—'எங் இந்தியா'–28—8—1924

# 5

# தவருன பரோபகாரம்?

ஸ்ரீ ஜாம்ஷெட் மேத்தாவைக் கராச்சியின் உண்மையான மனிதர் என்று சரியாகவே எல்லோரும் ஒப்புக்கொள்ளுகிருர்கள். அங்கே இருக்கும் நல்ல பொதுஜன இயக்கம் ஒவ்வொன்றும் அவர் தன்னைச் சேர்ந்தவர் என்று உரிமை பாராட்டிக்கொள்ளுகிறது. தமது நேரம் முழுவதையும் அநேகமாகப் பொதுஜன இயக்கங்களிலேயே அவர் செலவிடுகிருர். பிரம்ம ஞான சங்கத்தின் சிறந்த பிரதிநிதிகளில் அவரும் ஒருவர். அவருடைய தேசாபிமானத்தைப் போலவே அவருக்குள்ள யோக்கியப் பொறுப்பும் சுயேச்சையும் மறுக்க முடியாதவை. ஆகையால், அப்படிப்பட்ட ஒருவர் தவருன முடிவுக்கு வந்தாலோ, பொதுஜன அபிப்பிராயத்திற்கு மாருக நடந்துவிட்டாலோ, அவருடைய நண்பர்கள் மன வேதனை அடைந்துவிடுகின்றனர். கராச்சி நகர சபையின் தலைவரான ஸ்ரீ ஜாம்ஷெட் மேத்தா, தவருன ஒரு முடிவுக்கு வந்துவிட்டார் என்றே எனக்குத் தோன்றுகிறது. இவர் கதர் அன்பர். என்ருலும், சமீபத்தில் இவர், சபைக்கு வராத ஓர் அங்கத்தினருக்காகக் கதர் பற்றிய ஒரு தீர்மானத்தைத் தாம் பிரேரேபிக்க வேண்டும் என்று கருதிவிட்டார். அதன் பேரில் இவருக்கு அங்கத்தினர்களின் பலமான எதிர்ப்பு உண்டாயிற்று. மற்ருெரு விஷ

யம், ஐரோப்பாவிலிருந்து இந்தியாவுக்குத் தாவர நெய் என்று சொல்லிக் கொண்டுவரப்பட்ட சரக்கைக் குறித்து அவர் கொண்ட மனப்போக்கு.

இவை சம்பந்தமாகக் கராச்சியில் நடந்து வரும் விவாதங்களைப் பொதுவான நண்பர்கள் பலர் என் கவனத்திற்குக் கொண்டு வந்து அவற்றைக் குறித்து என் கருத்தைக் கூற வேண்டும் என்று கேட்டிருக்கிருர்கள். அந்நகர சபைத் தலைவரிடம் நான் வைத்திருக்கும் மதிப்பு அவருக்குத் தெரியும். ஆகையால், என் கருத்துக்கள் அவருடைய போக்கை மாற்றக்கூடும் என்று இந்த நண்பர்கள் எண்ணியிருக்கலாம். இல்லாவிட்டால், என் கருத்துக்கள் அப்படி மாற்றவில்லையானுல், செல்வாக்குள்ள இத்தலைவர் கொண்டிருக்கும் கருத்து தவருனது என்று இந்நண்பர்கள் கருதுவதால், கராச்சிப் பொது மக்கள் தவருன காரியத்தைச் செய்துவிடாமலாவது என் கருத்துக்கள் தடுக்கும் என்றும் எண்ணியிருக்கக்கூடும். என் கருத்துக்கள் அத்தகைய செல்வாக்கை உண்டாக்கினுலும். உண்டாக்காது போனுலும், இவ்விஷயங்களைக் குறித்து ஸ்ரீ ஜாம்ஷெட் மேத்தா தெரிவித்திருக்கும் அபிப்பிராயங்கள் பொறுமையுடனும் மரியாதையோடும் ஆராய வேண்டியவை.

நகர சபையின் உணர்ச்சியை அறிவதற்காகவே கதர் சம்பந்தமான தீர்மானத்தைத் தாம் பிரேரேபித்ததாகவும், நகரசபை உறுப்பினர்கள் அதை எதிர்க்கிருர்கள் என்பதைக் கண்டதும் அதைத் தாம் வாபஸ் வாங்கிக்கொண்டு விட்டதாகவும் அவர் எனக்கு அறிவிக்கிருர். அத்தீர்மானத்தின் பிரதியையும் வாதத்தையும் உள்ளூர்ப் பத்திரிகையிலிருந்து கீழே கொடுக்கிறேன்:

"'கையினுல் நூற்றுக் கையினுல் நெய்த கதரை எல்லாவற்றிற்கும் கட்டாயமாக வாங்கி உபயோகிப்பது, முனிசிபாலிடியின் பல இலாகாக்களிலும் அடிக்கடி பண விரயத்திலேயே முடிந்திருப்பதால், 1924 ஜுலை 2-ஆம் தேதி செய்த 304-ஆம் நெம்பர் தீர்மானத்தை ரத்துச் செய்வது என்று இந்தக் கார்ப்பொரேஷன் தீர்மானிக்கிறது.'

"இத்தீர்மானத்தைச் சபை முன்பு கொண்டு வந்து பேசிய தலைவர், கதரின் உபயோகம் பரவ வேண்டும் என்பதை உண்மையில் தாம் ஆதரிப்பதாகவும், சென்ற மூன்று ஆண்டுகளில் கார்ப்பொரேஷன் இந்தக் குடிசைத் தொழிலை ஊக்குவிப்பதற்காக ஒரு லட்ச ரூபாய்க்குக் குறையாமல் செலவழித்திருக்கிறது என்றும் ஆரம்பத்திலேயே சொன்னுர். ஆனுல், கார்ப்பொரேஷன் கொடுக்கும் கதரை அணிவதில் ஏழைகளான கீழ்ச் சிப்பந்திகள் அதிகக் கஷ்டப்படுகிருர்கள் என்பது தம் உண்மையான கருத்து என்ருர். அணிபவர்களுக்கு எந்த நன்மையுமில்லாத கதருக்காக இவ்வளவு ஏராளமான தொகையைச் செலவு செய்வதனுல் கவுன்சிலர்கள் தங்களுக்கும் வரி செலுத்துவோருக்கும் பெரும் அநீதியையே செய்கிருர்கள் என்ருர். இவ்வளவு கனமான துணியை அணிந்துகொண்டு தெருக்களில் போகும்படி தெருக் கூட்டுவோரைச் செய்வது உண்மையில் கொடுமையே என்ருர். மேலும், வெள்ளைக்

கதர் சீக்கிரத்தில் அழுக்காகி விடுகிறது; ஏழைச் சிப்பந்திகள் அதைச் சலவை செய்ய அதிகம் செலவு செய்ய வேண்டியிருக்கிறது. சாயம் தோய்த்தும் பரீட்சிக்கப்பட்டது; அதுவும் பயன்படவில்லை. கார்ப்பொரேஷன் இரண்டு ஜோடிகள் தான் கொடுக்க முடியும். இவற்றைச் சுத்தமாக வைத்துக்கொள்ள அவர்கள் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது என்று கூறினர். அழுத்தந் திருத்தமாகத் தலைவர் கூறியதாவது: "உண்மையில் அது கொடுமைதான் என்று உங்களுக்குக் கூறுகிறேன். சுமார் ஒரு லட்சம் ரூபாய் செலவழித்திருக்கிறோம். இதில் ரூ. 85,000 உண்மையில் வீணாகப் போயிற்று. நமது நோக்கம் நிறைவேறவில்லை. சிறந்த, மெல்லிய, உயர்வான கதரை இப்போதைய விலையில் இரட்டிப்பு விலை கொடுத்து வாங்கி நாம் கொடுத்தாலன்றி, கொடுக்கும் வரையில், கதர் உடைகளைக் கொடுப்பதைக் குறித்து நாம் எண்ணவே கூடாது. நாம் நமது சிப்பந்திகளுக்கு இப்பொழுது கொடுத்து வரும் கதருடை அவர்கள் கண்களில் நீர் பெருகும்படி செய்யப் போதுமானது."

இந்த வாதத்தை இனி ஆராய்வோம். தலைவர் செய்திருப்பதைப் போன்று தம்முடைய தரத்தை வைத்துக்கொண்டு முனிசிபல் சிப்பந்திகள் விஷயத்தில் ஒரு முடிவுக்கு வந்திருப்பதில் அவர், முனிசிபல் சிப்பந்திகளுக்கும் கதரின் லட்சியத்திற்கும் மோசமான அநீதியைச் செய்திருக்கிறார். ஒரு நாசூக்கான சீமாட்டி, வெயிலிலும் பனியிலும் பாடுபட்டு உழைப்பவர்களான தன் விருந்தாளிகளின் பசியைத் தன் பசியைக்கொண்டு அளப்பது எப்படியோ, ஒரு எறும்பு, மாவில் சிறு தூள்களை எடுத்து யானைக்குப் போட்டுவிட்டு விருந்தாளிக்குச் சரியான அளவு உணவு போட்டுவிட்டதாகச் சொல்லுவது எப்படியோ அவற்றைப் போன்றதுதான் தலைவர் செய்துகொண்ட முடிவும். சீமாட்டியும் எறும்பும் எண்ணிய அளவு தவறானது என்பதை நாம் அறிவோம். நாசூக்கான சீமாட்டியும், எறும்பும் தங்களைப் போன்ற அதே சந்தர்ப்பத்திலிருக்கும், அதே இனத்தினரான விருந்தாளிகளுக்குத் தங்கள் அளவுப்படி உணவை அளித்திருந்தால் அது சரியாக இருந்திருக்கும்.

கராச்சி விஷயத்தில் நகரசபைத் தலைவர் அனுசரித்த அளவு தவறானது. ஏனெனில் தீர்மானத்தைக் கொண்டு வந்தவரைப் போன்று முனிசிபல் சிப்பந்திகள் நாசூக்காக வளர்க்கப்பட்டவர்கள் அல்ல. தலைவரின் அளவு இரண்டு விதங்களில் தவறானதாகிறது. ஏனெனில், முதலாவதாகத் தலைவருக்கு வேண்டியதைப் போன்று தெருக் கூட்டுவோருக்கு உடையில் அதே நயம் தேவையில்லை. இரண்டாவதாக, படித்த இந்தியர் பயத்தினாலோ அறியாமையாலோ அல்லது ஆசையினாலோ ஆளுவோரைப் பார்த்துக் கற்றுக்கொண்டிருக்கும் உடை தினுசு, தெருக் கூட்டுவோருக்குத் தேவையுமில்லை. நகரசபை உறுப்பினர்கள், சரியான உடை எது என்பதில் தாங்கள் கொண்டிருக்கும் புத்திப் போக்கை மாற்றிக்கொண்டு நாட்டின் சீதோஷ்ண நிலைமைக்கும் பழக்க வழக்கத்திற்கும் ஏற்ற முறையிலான உடைகளைத் தங்கள் சிப்பந்திகளுக்குக் கொடுக்கவேண்டும் என்று நான்

துணிந்து யோசனை கூறுவேன். அப்படிச் செய்வார்களானல், அதிக முரடானதாக இருக்கும் கதரை உபயோகிப்பதற்கு அவர்கள் பயப்பட வேண்டியதில்லை. இதனல் நகரசபையின் பணத்தை அவர்கள் மிச்சப்படுத்துவதோடு சிப்பந்திகளின் சௌகரியத்தையும் கவனித்ததாகும். இதனல் உண்மையான கலையைப் புதுப்பித்ததாவதுடன் தங்கள் தேச மக்களில் பரம ஏழைகளாக இருப்பவர்களுக்கும் சேவை செய்ததாகும். கதரினு லன்றி அந்த ஏழை மக்களுக்குச் சேவை செய்ய முடியாது. ஊழி யர்கள் தம்மிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று விரும்புகிருரோ அப்படி அவர்களிடம் தாமும் நடந்துகொள்ளு வதாக இருந்தால், ஒரு கணம் அவர்கள் செய்யும் வேலையைத் தாம் செய்து பார்த்து, அப்பொழுது தாம் உணர்வது எப்படி என்பதைப் பார்க்கட்டும். அப்பொழுதுதான் அவருடைய அளவு சரியானதாகும்.

ஆனல், நகர சபையின் வீண் பெருமைக்கு ஒத்ததாக இருக்க வேண்டும் என்பதற்காக இயற்கையானதல்லாத உடைதான் சிப் பந்திகளுக்கு இருக்கவேண்டும் என்று வைத்துக்கொண்டாலும், முனிசிபாலிடி அதற்கான விலை கொடுத்தால், நயமான கதரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுவதில் இந்நாளில் எவ்விதக் கஷ்டமும் இல்லை; இதற்காகக் காக்கி நிறக் கதர் கிடைப்பதும் அசாத்தியம் அல்ல.

நகர சபைப் பள்ளிக்கூடங்களில் படிக்கும் பெண்களுக்கும் பையன்களுக்கும் நயமான நூலை நூற்பதற்குப் பயிற்சி அளித்து, நகரசபை உறுப்பினர்களும் இதில் தங்களுக்குப் பயிற்சியளித்துக் கொள்ளுவதுதான் அதிக மலிவானதும், மிகுந்த தேசாபிமானமுள்ளதுமான முறை. அப்பொழுது இந்த நகரசபை உறுப்பினர்களின் தேசாபிமானத்தை யும் உழைப்பையும் உதாரணமாகக்கொண்டு மற்ற நகர மக்க ளும் பின்பற்றுவார்கள். கராச்சியிலுள்ள மக்களில் மூன்றில் ஒரு பகுதியினர் தரும காரியமாக அரை மணி நேரம் மாத்திரம் நூற் பார்களாயின் சிப்பந்திகளுக்கு வேண்டியதைவிடப் பன்மடங்கு அதிகமான கதர் கிடைக்கும்.

இந்த முறையை அனுசரிப்பதற்கு நியாயமான ஓர் ஆட்சே பம் இருக்கக்கூடும். இவ்விதம் உற்பத்தியாகும் கதர், எந்த ஏழைகளின் நன்மைக்காக என்று பொது ஸ்தாபனங்களுக் குச் சிபார்சு செய்யப்படுகிறதோ, அவர்களுக்கு இது உதவி செய்யாது என்பதுதான் அந்த ஆட்சேபம். இந்த ஆட்சேபம் அதனளவில் நியாயமானதுதான். என்றாலும், நான் யோசனை கூறியிருக்கும் வகையில் ஒரு நகரம் நூற்க ஆரம்பித்துவிடுமா ஞல், அத்தகைய தியாக நூற்பின் பலன், அவ்வாறு நூற் பதை எங்கும் வியாபிக்கச்செய்துவிடும். இதனல், நூற்கும் சூழ் நிலையும் ஏற்பட்டுவிடும். இதனல் இதை மேற்கொள்ள முன் வராமலிருக்கும் பாமர மக்கள், மனிதன் உயிர் வாழ்வதற்குப்

போதுமானதாக இல்லை என்று எல்லோரும் ஒப்புக்கொள்ளும் தங்களுடைய வருவாயில் இன்னும் கொஞ்ச அதிக வருவாயைப் பெறுவதற்காக நூற்க ஆரம்பித்துவிடுவார்கள். ஆகையால், நான் கூறும் முறையை அனுசரிப்பது இந்தியாவின் ஏழைகளுக்கு மறைமுகமாகச் செய்யும் சேவையானாலும் அது முக்கியமானது என்பதை யாரும் மறந்துவிடக்கூடாது. அவர்களின் சராசரி வருமானம் ஒன்றே முக்காலணுவுக்கும் குறைவாக இருக்கும் போது, தினத்திற்கு இன்னும் ஒரு காலணு கூடக் கிடைப்பதா யிருந்தாலும் அது அவர்களுக்கு ராஜ வருமானம் போன்றது தான்.

ஆனால், காரியவாதிகளான வர்த்தகர்கள், இது கவனிக்கத் தகுதியில்லாத பரிபக்குவத்திற்கான யோசனை என்று த்ள்ளி விடலாம். என்றாலும், லட்சியவாதியான நகர சபைத் தலைவர், என் யோசனையை அவ்வளவு சுலபத்தில் தள்ளிவிடமாட்டார் என்பதை அறிவேன். ஆனால், நான் கூறியிருக்கும் யோசனையை அனுசரித்து வீடுகளில் தீவிரமாகவும் உண்மையாகவும் நூற்ப தற்கு ஏற்பாடு செய்யாதவர்களுக்கு ஒன்று தெரிவித்துக்கொள் ளுகிறேன்: கதருக்காகச் செலவிடும் ஒவ்வொரு காலணுவும் நேரே ஏழைகளின் மடிக்குப் போகிறது. இதில்கூட, குறைந்தது 85 சதவிகிதம் அரைப் பட்டினியாகக் கிடக்கும் நூற்போருள் படத் தொழிலாளருக்கே போய்ச் சேருகிறது. இதை மனத்தில் வைத்துக்கொண்டு கவனித்தால் கதருக்காகச் செய்த செலவு எதையும் வீண் என்று கருதுவதற்கில்லை; கதருக்காக அனுபவிக் கும் எந்த அசௌகரியமும் அதிகமாகாது.

ஆனால், "மில் துணியால் தயாரித்த உடுப்புகளைச் சிப்பந்தி களுக்குக் கொடுத்து, கதருக்காகச் செலவழித்த பணத்தில் அறுபது சத விகிதத்தை ஏன் மிச்சப்படுத்தக்கூடாது?" என்று நகர சபைத் தலைவர் கேட்கிறார். இந்த வாதத்தை ஏழைகளின் நண்பரான ஸ்ரீ ஜாம்ஷெட் மேத்தாவினிடமிருந்து நான் எதிர் பார்க்கவே இல்லை. ஒவ்வொரு நகர சபையும் கதருக்கு 60 சத விகிதம் உதவித் தொகையைக் கொடுத்தால், அப்படிக் கொடுக் கக்கூடிய அதிகாரம் அதற்கு இருக்கிறது என்று வைத்துக் கொண்டால், அப்படி அது செய்வது தவறாகாது.

வீட்டில் சப்பாத்தி தயாரிப்பது என்னதான் அதிகச் செல வாவதாகவும் சிரமமானதாகவும் இருந்தாலும், அதையும் யந்தி ரத்தினால் மலிவாகவும் எளிதாகவும் செய்துவிடும் பிஸ்கோத் தையும் ஒப்பிட்டுச் சொல்லுவதற்கில்லை. அதே போலக் கதரை யும் மில் துணியையும் ஒப்பிட்டுக் கூறுவதற்கில்லை என்று இப் பத்திரிகையில் திரும்பத் திரும்ப எடுத்துக்காட்டி வந்திருக் கிறேன். கதருக்கு எவ்வாறு பொதுஜன ஆதரவோ அல்லது பாதுகாப்போ வேண்டுமோ அதேபோன்று மில் துணிக்குத் தேவையில்லை. என்ன விலை கொடுத்தாலும் கதர் கிடைப்ப

தில்லை என்று இருக்கும்போதும், யந்திரத்தில் தயாரான துணி தான் அவசியம் என்று இருக்கும்போதும், அந்நியத் துணி, சுதேசி மில் துணி இதில் எதை வாங்குவது என்பது வரும்போதும், இந்திய மில் துணிக்குச் சலுகை கிடைக்கிறது; அது கிடைக்கவே செய்யும். இந்த இரண்டு துணிக்கும் பதிலாகக் கதர் வரவேண்டும் என்பது தெளிவானது. மில் துணிக்கு இருப்பதைப்போன்று கதருக்கு ஸ்திரமான விற்பனை இல்லை. கடைத்தெருவில் விற்கும் பொருளாகக்கூட இன்னும் கதர் ஆகவில்லை. வாங்கப்படும் ஒவ்வொரு கெஜம் கதருக்கும் குறைந்த பட்சம் அதன் விலையில் எண்பத்தைந்து சத விகிதம் பட்டினி கிடக்கும் இந்தியாவின் ஏழைகளின் வாய்களுக்குப் போகிறது என்றுதான் பொருள். வாங்கப்படும் ஒவ்வொரு கெஜம் மில் துணிக்கும், அதன் விலையில் 75 சத விகிதம் முதலாளிகளின் பைக்கும், 25 சத விகிதம் தொழிலாளரின் மடிக்கும் போகிறது என்றுதான் அர்த்தம். இவர்கள் என்றும் திக்கற்றவர்களாக இல்லை. இவர்கள் தங்களைத் தாங்களே கவனித்துக்கொள்ள முடியும். யாருடைய நன்மைக்காக என்று கதர் கொண்டுவரப்பட்டிருக்கிறதோ அந்தத் திக்கற்ற கோடிக்கணக்கானவர்களின் பட்டினியைப் போல இவர்கள் பட்டினி கிடக்கவும் இல்லை. முனிசிபல் சிப்பந்திகள் முரடானதாகவுள்ள கதரை அணிவதால் அசௌகரியத்தை அனுபவிக்கிறார்கள் என்று சொல்லப்படுவது, ஜீவகாருண்ய ஸ்ரீ ஜாம்ஷெட் மேத்தாவைக் காரியத்தில் இறங்கும்படி செய்திருக்கிறது. ஆனால், அந்த முனிசிபல் சிப்பந்திகளுக்குக் கதரிலிருக்கும் மிகுந்த தேசீய முக்கியத்தை எடுத்துக் கூறினால், மில் துணி என்னதான் சௌகரியமானதாக இருந்தாலும், கதர்தான் தங்களுக்கு வேண்டும் என்று அந்தச் சிப்பந்திகள் விரும்பாவிட்டால் நான் ஆச்சரியப்படுவேன். கோடிக்கணக்கான மக்களுக்கு வேலையைக் கொடுத்து, அந்த வேலையின் மூலம் உணவு அளிப்பதைத் தன் வேலையாகக் கதர் கொண்டிருக்கும் வரையில், எந்த விலையிலும் கதர் மலிவானதுதான் என்பதே என் கருத்து.

—'எங் இந்தியா'–4—10—1928

## 6

# நம் மில்கள் செய்யக்கூடியது என்ன?

நமது சரித்திரத்தில் ஏற்பட்டிருக்கும் இந்த நெருக்கடியான சமயத்தில், நமது உண்மையான பலத்தைக் காட்டும் காரியம் எதையாவது காட்டக்கூடியவர்களாக நாம் இருக்க வேண்டும் என்பதில் எல்லோரும் ஆவலுடன் இருக்கிறார்கள். பிரிட்டிஷ் துணியை என்று அல்லாமல் அந்நியத் துணியைப் பகிஷ்கரிப்பதன் மூலம் மாத்திரமே அத்தகைய பலத்தை

விருத்தி செய்து காட்ட முடியும் என்பது மேலும் மேலும் உணரப் பட்டு வருகிறது. அந்தப் பகிஷ்காரத்தில் நமது மில்கள், அவை விரும்பினல் முக்கியமான, உண்மையில் திடமான பங்கு வகிக்க முடியும்.

அந்நிய ஆட்சி வேண்டுமா, மக்கள் ஆட்சி வேண்டுமா என் பதில் என்றைக்காவது ஒரு நாள் மில்கள் ஒரு முடிவுக்கு வந்து தான் ஆகவேண்டும். மில்கள், அரசாங்கத்தின் நல்லெண் ணத்தை நம்பி வாழாவிட்டாலும் பெருமளவுக்கு அதன் சகிப்பை நம்பியே வாழ்கின்றன என்பதில் சந்தேகமில்லை. தீமையான ஆட்சியில் செல்வம் படைத்திருப்பது பாவம், ஏழ்மையிலிருப் பதே புண்ணியம் என்று தோரோ* சொல்லியிருப்பது உண்மை யானது. அரசாங்கம் நல்லதாக இருந்தாலும், கெட்டதாக இருந் தாலும், பணக்காரர்களின் செல்வமெல்லாம் அப்பொழுதிருக்கும் அரசாங்கத்திற்கே பயன்படுகிறது.

ஆனல், அரசாங்கத்தின் சகிப்பையோ, நல்லெண்ணத் தையோ எதிர்பார்த்துத்தான் மில்கள் வாழ வேண்டியிருக்கு மாயின், அதைவிட எவ்விதத்திலும் குறையாத வகையில் மக்க ளின் சகிப்பையும் நல்லெண்ணத்தையும் எதிர்பார்த்தும் வாழ வேண்டியிருக்கிறது. மக்கள் அறியாமையிலோ, சோம்பலிலோ, ஒற்றுமையில்லாமலோ இருக்கும் வரையில்தான் மக்களை மில்கள் அலட்சியம் செய்துகொண்டிருக்க முடியும். ஆனல், சென்ற ஏழு ஆண்டுகளாக மக்கள் வீண் வாழ்வு வாழ்ந்து விடவில்லை. மக்களிடையே ஏற்பட்டுவிட்ட விழிப்பு என்றும் செத்துவிடாது. மக்கள் தங்களுடைய பலத்தை எப்படி, எப் பொழுது காட்டுவார்கள். என்பதையும் யாரும் சொல்லிவிட முடியாது.

ஆனல், மில்கள் வசதியான நிலையில் இருந்து வருகின்றன. கொஞ்சம் தீரத்தைக் காட்டுவதன் மூலம் நாட்டு மக்களின் உண்மையான நன்மையைக் கொஞ்சம் கவனிப்பதனல், கொஞ் சம் தன்னலத் தியாகத்தையும் செய்வதனல், அரசாங்கம், மக்கள் ஆகிய இருவருக்கும் மில்கள் சேவை செய்ய முடியும். அவை, அரசாங்கத்தின் மனத்தை மாற்றி மக்களுக்கு நன்மை அதிக மாகும்படி செய்யலாம்.

* தோரோ (1817–62): இந்த அமெரிக்கத் தத்துவ ஞானியின் முழுப் பெயர் ஹென்றி டேவிட் தோரோ என்பதாகும். இயற்கையோடு இயைந்த வாழ்க்கை நடத்த வேண்டும் என்பதையே லட்சியமாகக் கொண்டிருந்த இவர் காட்டுக்குச் சென்று, ஒரு குடிசை கட்டிக்கொண்டு, இரண்டு வருட காலம் தன்னந் தனியாக வாழ்ந்தார்; தம் கைகளால் உழைத்தே தமக்கு வேண்டிய உணவை அங்கே தேடிக்கொண்டார். அவர் தமது வாழ்நாளில் உத்தியோகம் பார்த்ததில்லை; கல்யாணம் செய்துகொண்டதில்லை; வோட்டுப் போட்டதில்லை; மது மாமிசங்களை உட்கொண்டது மில்லை. அடிமைத்தனத்தை ஆதரித்த சர்க்காருக்கு வரி கட்ட மறுத்து அவர் சிறைவாசமும் செய்திருக்கிருர். அவர் காட்டு வாழ்க்கையைப் பற்றி எழுதிய நூலும், சட்ட மறுப்பைப் பற்றி எழுதிய கட்டுரையும் உலகப் புகழ் பெற்றவை.

கீழ்வருமாறு செய்வதே மில்களுக்குள்ள வழி என்பது என் பணிவான அபிப்பிராயம் :

அதிக விலை விற்ற ஆண்டிலும், குறைந்த விலை இருந்த ஆண்டிலும் குறைவாக இருந்த சராசரி எண்ணை எடுத்துக்கொண்டு அதன் மூலம் தங்கள் துணிகளின் விலையை ஒரே மாதிரியானதாகச் செய்யலாம்.

நாட்டு மக்களுக்குத் தேவையான துணியின் அளவு, தரம் ஆகியவைகளில், பகிஷ்கார இயக்கத்தை நடத்தி வரும் தலைவர்களுடன் பேச மில்கள் ஓர் ஏற்பாட்டிற்கு வரலாம்.

கதர் உற்பத்தி ஸ்தாபனங்கள் எந்தெந்த ரகத் துணிகளை எளிதாகவும், உடனேயும் உற்பத்தி செய்ய முடியுமோ, அந்த ரகத் துணிகளை மில்கள் தயாரிக்காமல் இருக்கலாம். இவ்விதம் செய்வதால், கதர் ஸ்தாபனங்களைவிட எந்தத் துணிகளை இப்போதைக்குத் தாங்கள் அதிகச் சுலபமாகத் தயாரிக்க முடியுமோ அந்த ரகங்களை அதிகமாகத் தயாரிப்பதில் தங்கள் சக்தியை மில்கள் உபயோகிக்கலாம்.

மில்கள் தங்கள் லாபத்தை ஒரு குறைந்த பட்ச அளவுக்குக் கட்டுப்படுத்திக்கொண்டு அதிகப்படியான லாபம் ஏதாவது இருந்தால் அதை, பகிஷ்காரத்தை நிறைவேற்றி வைப்பதில் செலவிடலாம். அதற்கு அவசியம் இல்லை என்றால், தொழிலாளரின் நிலைமையை அபிவிருத்தி செய்வதில் அதைச் செலவிடலாம்.

இதனால் எல்லோரிடத்திலும் நேர்மையும், விடாமுயற்சியும், பரஸ்பர நம்பிக்கையும் ஏற்படுவதோடு, தொழிலாளர், முதலாளிகள், துணி வாங்குவோர் ஆகியவர்களிடையே முக்கூட்டு உறவும் தானே ஏற்படும். அதனால் பெருமளவில் காரியங்களைச் செய்யும் ஆற்றலும் ஏற்படும். அகிம்சையின் மூலம் அந்நியத் துணி பகிஷ்காரத்தில் நாம் வெற்றி பெறுவதென்றால், இப்பொழுது நான் கூறி வந்திருக்கும் சோதனைகளை என்றாவது ஒரு நாளைக்கு நாம் நிறைவேற்றித்தான் ஆகவேண்டும்.

இக் காரியத்திற்கு நாம் முற்றிலும் தகுதி வாய்ந்தவர்கள் என்பது என் பணிவான கருத்து. இதற்காக நாம் செய்யவேண்டியிருக்கும் ஏற்பாடுகளும் நமக்குப் பழக்கமில்லாதவை அல்ல. இதில் இருக்கும் ஒரே கேள்வி, அதற்கு வேண்டிய உறுதி நமக்கு இருக்கிறதா என்பதே. மில் சொந்தக்காரர்களுக்குப் போதுமான புத்திசாலித்தனமும், தேசத்தினிடம் போதுமான அன்பும் இருக்கிறதா ? அவர்களுக்கு இருக்கிறது என்றால் அவர்களே தலைமை வகித்து நடத்தலாம்.

எனக்கு இருக்கும் நம்பிக்கையை நான் திரும்பவும் கூறுகிறேன். பகிஷ்காரம் துரிதமாக நிறைவேறிவிடும்படி செய்வதற்கு,

கதருக்கும், உண்மையான சுதேசி மில்களாக இருப்பவைகளுக்குமிடையே ஒத்துழைப்பு இருப்பது விரும்பத்தக்கது. ஆனல், அது முற்றிலும் அவசியமானது அல்ல. இந்தியாவில் போலிச் சுதேசி மில்களும் இருக்கின்றன. அதனலேயே, 'உண்மையான சுதேசி' என்ற சொற்களை நான் உபயோகித்திருக்கிறேன். இந்த மில்கள் இந்நாட்டில் இருக்கின்றன என்பதில்தான் இந்திய மில்கள், அவற்றின் பங்குதாரர்கள், அவற்றின் நிர்வாகம், அவற்றின் உணர்ச்சி முதலியன முற்றிலும் அந்நிய நாட்டினுடையதாக இல்லாதபோது, முக்கியமாக அந்நிய நாட்டினுடையதாக இருக்கின்றன. ஆனல், சுதேசி மில்கள் தேசீய இயக்கத்தில் சேரவோ, அதை நடத்தவோ முடியவில்லை. நடத்தமாட்டா என்ருல், ராஜீய அறிவு படைத்த இந்திய மக்களுக்கு மாத்திரம் மனம் இருந்தால், இக்காரியத்திற்கு வேண்டிய நம்பிக்கையும் சக்தியும் இருக்குமாயின், கதர் மாத்திரமே பகிஷ்காரத்தில் வெற்றி பெற்றுவிடும் என்பதை நான் நிச்சயமாக அறிவேன். நீராவி யந்திரம், எண்ணெயால் இயங்கும் யந்திரம், மின்சார யந்திரம் ஆகியவைகளை இத்தனை குதிரை - சக்தியுடையன என்று கணக்கிட்டுக் கூறுவதைப் போன்று நமக்குப் போதுமான குதிரை - சக்தி இல்லை. ஆனல், வற்ருத மனித சக்தி நம்மிடம் இருக்கிறது. இந்தச் சக்தி வேலையில்லாமல் சும்மா கிடக்கிறது ; தன்னை உபயோகித்துக்கொள்ளுமாறு வேண்டுகிறது. நம் காரியத்திற்கு அது முக்கியமான தகுதியும் உடையது. இந்த மனித சக்தியைக் கண்டு, அதை உபயோகித்துக்கொள்ளும் நம்பிக்கை மாத்திரம் நமக்கு இருக்குமானல் !

—'எங் இந்தியா' – 15—3—1928

# 7

# மில்காரர்—கதர் உடன்பாடு

ஒரு நண்பர், மில்களோடு நெருங்கிய தொடர்புள்ளவர். அந்நியத் துணி பகிஷ்கார இயக்கத்திற்கு நமது மில்கள் அவற்றின் பூரணமான உதவியையும் அளிக்க வேண்டும் என்று விரும்புகிறவர் அவர். அவர் கீழ்வருமாறு கேட்கிருர் :

1. "விலையை எந்த அடிப்படையில் நிலையானதாக நிர்ணயித்துவிட வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள் ? ஏனெனில், எல்லா மில்களும் ஒன்று போல் இல்லை என்பதை நினைவில் வையுங்கள். சில மில்கள் நல்ல நிலைமையில் இல்லை; சில நல்ல நிலைமையில் இருக்கின்றன. சில மில்களில் மற்றவைகளைவிட அதிகம் ரிசர்வ் நிதி இருக்கிறது. வடக்கிலிருக்கும் மில்களைவிட பம்பாயிலிருக்கும் மில்களின் லாபம் குறைவாக இருக்கிறது. இவ்விதம் வித்தியாசங்கள் இருக்கின்றன என்பதைக் காட்டக் கூடிய இது போன்ற உதாரணங்கள் இன்னும் எத்தனையோ இருக்கின்றன."

இதற்குச் சொல்லக்கூடிய பொதுவான பதில், 'மனம் இருந்தால் வழிஉண்டு' என்பதுதான். மில்கள் தங்களுடைய சோம்பேறித்தனத்தை விட்டொழிக்க வேண்டும். பங்குதாரர்கள், டைரக்டர்கள், ஏஜெண்டுகளின் பை நிரம்புவது எப்படி என்பதை மாத்திரம் எண்ணிக்கொண்டிராமல், தீவிரமாக, அதுவும் நாட்டுக்கு நல்லது எது என்பதை அவை சிந்திக்க வேண்டும். அப்பொழுதுதான் அவை தாங்கள் செய்ய வேண்டிய உதவியைச் செய்ததாகும். ஆனல், இவ்விஷயத்தில் என்னுடைய நிலைமையைத் தெளிவாக்கிவிடுவதற்கு நான் ஒன்று கூற வேண்டும். பகிஷ்கார இயக்கத்தில் சேரும் மில்கள், தங்களுக்குள் இருக்கும் வித்தியாசங்களையெல்லாம் ஒன்ருக்கிக் கவனித்து ஒரு திட்டமான விலை நிர்ணயத்திற்கு வர வேண்டும். அப்படி நிர்ணயிக்கும் விலை, சில மில்களாவது இப்பொழுது அடைந்து வரும் லாபத்தில் பெரும் பகுதியைக் குறைத்துக்கொண்டு விட்டதாக இருக்க வேண்டும் என்பதாவது அதன் பொருளாக இருக்க வேண்டும். அவைகளின் தேசாபிமானம் உண்மையானதாகவும் முன்னேற்றமானதாகவும் இருக்குமாயின், சுபிட்சமாக இருக்கும் மில்கள், நஷ்டப்படும் மில்களைத் தாங்கிக்கொண்டு தவிர்க்கக்கூடிய வித்தியாசத்தைத் தவிர்த்துக்கொள்ளலாம். நான் எண்ணும் திட்டத்தில், மொத்தத்தில் மில்கள் நஷ்டமடைய வேண்டியதே இல்லை. துணி வாங்குவோரை வருத்தி மில்கள் லாபம் அடையக்கூடாது.

2. "கதர் போன்ற ரகத் துணியை உற்பத்தி செய்யாமலிருக்கச் சில மில்கள் மாத்திரமே ஒப்புக்கொள்ளும். ஆனல், குறைந்த நெம்பருள்ள மட்டமான நூலை நூற்கும் மில்களின் நிலைமை என்ன? கதர் என்பதற்கு நீங்கள் கூறும் பரீட்சை என்ன?"

இது, கதர் ஸ்தாபனங்களுக்கும் மில்களுக்கு மிடையே ஏற்படும் ஏற்பாட்டையும், சாதாரணமான யோக்கியப் பொறுப்பையும் பொறுத்த விஷயம். வெளியூர்களில் இப்பொழுது கதர் உடுத்தும் உணர்ச்சி வளர்ந்துகொண்டு வருகிறது. இந்நிலைமையை அக்கிரமமான வழியில் தங்கள் லாபத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளுவதற்காகச் சில நல்ல மில்களும்கூட தங்கள் துணிக்குக் 'கதர்' என்ற முத்திரையை வெட்கமில்லாமல் குத்தி விற்கின்றன என்பதைச் சொல்லவேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். செயல் முறைக்கு ஒத்த ஓர் ஏற்பாட்டுக்கு வருவதாயின், கதர் ஸ்தாபனங்களில் தயாராகும் துணி ரகம் இது, மில்லில் தயாராகும் துணி ரகம் இது என்பதில் இச்சமயத்திற்காவது ஒரு நிர்ணயம் இருக்கும் என்று எதிர்பார்க்கிறேன். யுத்த காலங்களில் அடிக்கடி செய்யப்படுவது போலத் துணி உற்பத்தியில் கட்டுதிட்டம் இருக்கும். பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்ட யுத்தத்தில் பலவந்தத்தின் பேரில் எதைச் செய்கிருேமோ அதை, அகிம்சையை அடிப்படையாகக்கொண்ட இந்த யுத்தத்தில் விரும்பி இஷ்டத்தின் பேரில் நாம் செய்ய வேண்டும். வலிய, அதாவது பொதுஜன அபிப்பிராயத்திற்குப் பயந்து நடப்

பதனுல் மாத்திரம் பகிஷ்காரம் முதலியவைகளை நடத்துவதற்கு நமக்குள்ள ஆற்றல், நம்மிடம் அகிம்சை ஏதாவது இருக்குமானுல், அந்த அகிம்சைக்கு வெளிப்படையான, ஆனுல் அத்தியாவசியமான சோதனையாகவே இருக்கும்.

3. "லாபத்தை ஒழுங்குபடுத்துவது எப்படி? பருத்தி விலை மிகவும் தொந்தரவளிக்கும் வகையில் எந்த ஒழுங்குமில்லாமல் ஏறி இறங்கிக்கொண்டிருக்கிறது என்பதை நான் அறிவதைப் போன்றே நீங்களும் அறிவீர்கள்."

பருத்தி விலையைக் கட்டுப்படுத்துவதில் நமக்குச் சக்தியில்லை என்பதையே இது காட்டுகிறது. தேசாபிமானத்தோடு கூடிய முயற்சியில் இந்தியாவிலிருக்கும் பெரிய துணி உற்பத்தியாளர்கள் எல்லோரும் ஒன்றுபடுவார்களானுல், நிச்சயமாக அவர்கள் பருத்தி விலையைக் கட்டுப்படுத்திவிட முடியும். நாம் முட்டாள்தனமாக, யோசனையே இல்லாமல், சுயநலத்தோடு நம் பருத்தியை வெளியே அனுப்பிவிடுவதால் நம் பருத்தி விலையை நிர்ணயிப்பதில் அமெரிக்கா ஆதிக்கம் செலுத்துகிறது. ஆனுல், பகிஷ்காரம் என்ருல், மற்ற எத்தனையோ காரியங்களில் நாம் கட்டுதிட்டம் செய்யவேண்டியிருப்பதைப் போன்று பருத்திப் போக்குவரத்திலும் கட்டுதிட்டம் செய்யவேண்டும். பூரண பகிஷ்காரத்தில் நாம் வெற்றி பெற்ருகவேண்டும். அப்படி வெற்றி பெறவேண்டுமானுல், உண்மையான தேசீய உணர்ச்சியை நாம் வளர்த்துக்கொண்டு நம்மிடத்திலும் தேசமக்களிடத்திலும் நாம் நம்பிக்கை வைக்கவேண்டும்.

4. "நேர்மை, விடாமுயற்சி, பரஸ்பர நம்பிக்கை ஆகியவைகளையே நீங்கள் அதிகமாக வற்புறுத்துவதாயிருந்தால் உங்களுக்குத் தோல்விதான் கிடைக்கும்."

என் இஷ்டப்படி உபயோகிக்க என்னிடம் துப்பாக்கி இல்லை. அதை என் இஷ்டப்படி உபயோகிக்கலாம் என்ருலும் அதை நான் வைத்துக்கொள்ளமாட்டேன். ஆகையால், இந்த நண்பர் எந்தக் குணங்கள் பயனில்லை என்று கருதி அஞ்சுகிருரோ, அந்தக் குணங்களையே நான் வற்புறுத்த வேண்டும். அவர் பயப்படுவதைப்போன்று நான் பயப்படவில்லை. அது மாத்திரமன்று, அந்தக் குணங்கள் இன்று போதிய அளவு இல்லையென்ருல், அந்தக் குணங்கள் வளர்வதற்காகக் காத்திருப்பதற்கு வேண்டிய பொறுமையும் எனக்கு இருக்கிறது. ஏனெனில், இத்தேச மக்கள் என்ற வகையில் அக்குணங்கள் நம் எல்லோரிடமும் இருக்கிறது என்பதை நாம் காட்டிக்கொண்டாலன்றி இந்நாடு எப்பொழுதும் தனக்கு உரியதான ஸ்தானத்தை அடையாது. சத்தியத்திலும் அகிம்சையிலும், அவை சம்பந்தமான மற்றவைகளிலும், நம்மைக் கட்டுப்படுத்திக்கொண்டு விடுவதற்கு வேண்டிய காலத்தைவிடப் பலாத்காரம், மோசடி, அவை போன்றவைகளில் நம்மைக் கட்டுப்படுத்திக்கொண்டு விடுவதற்கு நமக்கு அதிக காலம் பிடிக்கும் என்பதையும் நான் அறிவேன்.

பிறகு அந்த நண்பர், என் முந்திய கட்டுரையில் கீழ்க்கண்டவை விட்டுப்போயிருக்கின்றன என்று எனக்கு எடுத்துக்காட்டுகிறார் :

(அ) இந்தத் திட்டத்தில் சேர்ந்துகொள்ளும் மில்கள், இப்பொழுது உபயோகிக்க முடிவதைப்போன்று வெளிநாட்டு நூலையோ, போலிப் பட்டையோ உபயோகிக்க முடியாது.

(ஆ) அவை வெளிநாட்டுக் கம்பெனிகளில் இன்ஷூர் செய்ய முடியாது.

(இ) அவை வெளிநாட்டுத் துணியை இறக்குமதி செய்து, அத்துணியைச் 'சுதேசி'த் துணி என்று முத்திரையிட்டு விற்க முடியாது.

மேலே கண்டவற்றில் (அ), (இ) பிரிவுகளில் கண்டவை, திட்டமாக முடிவாகி விட்டவை என்றே நான் தீர்மானித்திருக்கிறேன். ஆனால், (ஆ) பிரிவில் கண்ட விஷயத்தில், யோசிக்கப்படும் கூட்டு முயற்சிக்கு இது இடையூறு செய்யும் என்றால், இதை நான் வற்புறுத்தப் போவதில்லை. உள்நாட்டு இன்ஷூரன்ஸ் தொழிலைத்தான் நான் அதிகமாக விரும்பவேண்டும். நமது முன்னேற்றத்தை அந்நியத் துணி தடை செய்வதுபோல வேறு எதுவும் அவ்வளவு தடை செய்யவில்லை என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். இமயமலையைப் போன்றதான இப் பெருந்தடையை நாம் நீக்கிக்கொண்டு விடுவோமாயின், சிறு பாறைகளை யெல்லாம் நாம் சுலபத்தில் அகற்றிக்கொண்டு விடலாம்.

—' எங் இந்தியா '-22—3—1928

# 8

# கதர்ப் பிரசாரம்-மில்களுக்கு உதவி

ஒரு நண்பர் வருமாறு எழுதுகிறார் :

" கதருடன் சுதேசி மில் துணியையும் உபயோகிக்கும்படி இப்பொழுது அநேக காங்கிரஸ்காரர்கள் கூறி வருகிறார்கள். காங்கிரஸ் கதர்க் கடைகளில் மில் துணிக்கும் ஓர் இடமளிப்பதற்கு முயற்சியும் நடந்து வருகிறது. இது சம்பந்தமாகத் தங்கள் தெளிவான கருத்தைக் கூறுவீர்களா ? இதெல்லாம் என்ன என்பதை நான் அறிவேன். ஆனால், காங்கிரஸ் ஊழியர்கள் அறியவில்லை. முக்கியமாக, பகிஷ்கார இயக்கத்தில் சுதேசி மில்கள் செய்யக் கூடியவை என்ன என்பதைக் குறித்து நீங்கள் சமீபத்தில் கட்டுரைகள் எழுதியதால், இதில் நீங்கள் வழிகாட்ட வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள்."

கதர் சம்பந்தமான காங்கிரஸ் தீர்மானங்கள் தெளிவாக இருக்கின்றன. ஆகையால், அத்தீர்மானங்களை மதித்து நடக்க விரும்புகிறவர்களுக்கு மில்களில் தயாரான துணியை விலக்குவதைத் தவிர வேறு வழியில்லை. ஆனால், கட்டுதிட்டங்களை மீறும் காரியங்கள் மலிந்து வரும் இக்காலத்தில், காங்கிரஸ்காரர் செய்துவிடும் குறிப்பிட்ட நடத்தைக்கு ஆதரவாகவோ, எதிர்த்தோ காங்கிரஸ் தீர்மானங்களை எடுத்துக் காட்டிக்கொண்டிருப்பது வீண் வேலை.

ஆகையால், அந்நியத் துணிக்குப் பதிலாகச் சுதேசி மில் துணியை உபயோகிக்கும் அல்லது அத்தகைய மில் துணியைத் தெருவில் விற்கும் காங்கிரஸ்காரர்களைப் பற்றிய விஷயத்தைத் திரும்பவும் கவனிப்போம். வங்காளத்தின் அனுபவத்தை நாம் அறிவோம். வங்காளப் பிரிவினை நாட்களில் அங்கே நடந்த சுதேசி இயக்கம், மில் சொந்தக்காரர்களின் பேராசையினாலும், அயோக்கியத்தனத்தினாலும் முன்னேற முடியாது போயிற்று. அவர்கள் ஒரேயடியாக விலையை ஏற்றி விற்றதோடு சுதேசியின் பெயரால் அந்நியத் துணியையும் விற்பனை செய்தனர். இச் சமயத்தில் மாத்திரம் அவர்கள் ஒழுங்காக நடந்துகொண்டு விடுவார்கள் என்று நம்புவதற்குக் காரணமில்லை. அவர்கள் போலிக் கதரை உற்பத்திசெய்து விற்று வருவதைப்பற்றிய உண்மைகளை அம்பலப்படுத்தியிருக்கிறேன். இந்த மில்கள், துணி வாங்குவோரின் முக்கியமான நன்மைக்கு எதிராகத் தங்களுடைய சுயநன்மைக்காகச் சுதேசி உணர்ச்சியைப் பயன்படுத்திக்கொள்ளத் தயங்கமாட்டார்கள் என்பதையே அது காட்டுகிறது.

ஆனால், மில்கள் நியாயமாகத் தாங்கள் செய்யவேண்டியதைச் செய்வதாகவே இருந்தாலும், காங்கிரஸ்காரர்கள் மில் துணியை உபயோகிக்கவேண்டிய அவசியமோ, அதை விளம்பரப்படுத்த வேண்டிய அவசியமோ இல்லை. மில்கள் தாங்கள் செய்யவேண்டியதை நியாயமாகச் செய்வது என்றால், கதரை அவர்கள் விளம்பரப்படுத்தி விற்கவேண்டும்; அவர்களுக்கும் கதர் உணர்ச்சி ஏற்படவேண்டும்; மில் துணியைவிடக் கதர்தான் முக்கியமானது என்பதை அவர்கள் ஒப்புக்கொள்ள வேண்டும்.

மில்கள் மாத்திரமே, அவை விரும்பினாலுங்கூட, அந்நியத் துணியை அடியோடு நம் தலைமுறையில் போக்கிவிட முடியாது என்பதை எல்லோரும் அறியவேண்டும். ஆகையால், அந்நியத் துணி பகிஷ்காரத்தைப் பொறுத்தவரையில், கதர்ப் பிரசாரத்திற்கு என்று மாத்திரம் தனது கவனத்தைச் செலுத்தி வரக்கூடிய ஒரு ஸ்தாபனம் நாட்டில் இருந்தாகவேண்டும். *1920*–ஆம் ஆண்டு முதல் காங்கிரஸே அந்த ஸ்தாபனமாக இருந்து வருகிறது. கதர் உற்பத்தியும் கதர்ப் பிரசாரமும் மில்காரர்களின்

பேராசையை உடனடியாக மட்டுப்படுத்துவதாக இருக்கிறது. அதோடு, விசித்திரமாகத் தோன்றலாமெனினும், அந்நியப் போட்டியைச் சமாளிக்கப் போராடிக்கொண்டிருக்கும் மில்களுக்கு, மறைமுகமானதாயினும், சரியான பலனளிப்பதான ஆதரவாகவும் கதரும் கதர்ப் பிரசாரமும் இருந்து வருகின்றன. காங்கிரஸ்காரர்களைப் பொறுத்தவரையில், அவர்கள் கதர் ஒன்றினிடம் மாத்திரமே பக்தி வைத்திருப்பதால் கதர் வேரூன்றவும், காங்கிரஸுக்கு அவ்வளவாகச் செல்வாக்கு இல்லாத இடங்களில் மில்கள் சரியானபடி தங்கள் காரியங்களைக் கவனித்துக் கொண்டு போகவும் முடிகிறது. இதனால்தான் கதர்ப் பிரசாரத்தை மில்கள் வெறுக்கவே இல்லை. வெறுக்காததற்கு மாறாகத் கதர்ப் பிரசாரத்தினால் தங்களுக்கு நன்மை ஏற்பட்டிருக்கிறது என்று மில் ஏஜெண்டுகளே என்னிடம் கூறியிருக்கிறார்கள். கதர்ப் பிரசாரத்தினால் அந்நியத் துணிக்கு எதிரான சூழ்நிலை உண்டாகியிருப்பதால் அந்நியத் துணியைவிட முரடாயிருக்கும் தங்கள் துணியை விற்க முடிகிறது என்கிறார்கள். தனியாகக் கதருக்கு மாத்திரம் பிரசாரம் செய்வதை நிறுத்திவிட்டு மில் துணியையும் கூடச் சேர்த்துக்கொண்டு விட்டால், நீங்கள் கதரைக் கொன்று விடுவீர்கள். நாளாவட்டத்தில் மில் துணியையும் நீங்கள் கொன்று விடுவீர்கள். ஏனெனில், அது தன்னளவில் தனியாக அந்நியத் துணிப் போட்டியை எதிர்த்து நின்றுவிட முடியாது. கதர் உணர்ச்சியே இல்லை என்றால், சுதேசி மில்களுக்கும் அந்நிய மில்களுக்குமிடையே நடக்கும் போட்டியில், சரியான பொதுஜன உணர்ச்சியின் ஆதரவு சுதேசி மில்களுக்கு இல்லாது போவது கவலைக்கிடமானதாகிவிடும்.

கடைசியான, ஆனால் இன்னும் முக்கியமான ஒரு விஷயம்: கதருக்கு இருக்கும் மதிப்பிட முடியாததான பெருமை, பாமர மக்கள் மகத்தான விழிப்படையச் செய்வதிலும், மக்கள் முன்னேற்றமடையச் செய்வதிலும், வளர்ந்து வரும் பட்டினியைப் பெருமளவு போக்குவதிலும் அதற்குள்ள அபாரமான சக்தியில் இருக்கிறது. மில் துணி, பாமர மக்களுக்கு வேலையையோ, பண உதவியையோ கொடுக்க வில்லை. ஆனால், ஒவ்வொரு கெஜம் கதரும், வேலையும் கூலியும் இல்லாததனால் இரு விதத்திலும் நாசமாகிக்கொண்டிருக்கும் பாமர மக்களுக்கு வேலையும் பணமும் கொடுப்பதாகிறது. ஆகையால், தேசத்தை நேசிக்கும் தேசாபிமானமுள்ள ஒவ்வொருவரும் கதரை மாத்திரமே உபயோகித்து அதற்கு மாத்திரமே பிரசாரம் செய்வதைத் தவிர வேறு வழி இல்லை.

—'எங் இந்தியா'–10—5—1928

# 9

# மில் சொந்தக்காரர்கள் பேராசை

நமது மில்கள் தயாரித்திருக்கும் போலிக் கதர்த் துணியைக் குறித்து நான் முன்னால் கொடுத்த புள்ளி விவரம் ஒன்பது மாதங்களைப் பற்றிய கணக்கு மாத்திரமே. பத்து மாதத்திய கணக்கு இப்பொழுது எனக்குக் கிடைத்திருக்கிறது. அந்த அந்தப் புள்ளி விவரம் கீழ்வருமாறு :

ஏப்ரலிலிருந்து ஜனவரி வரையில் பத்து மாதங்களில் உற்பத்தியாகியிருக்கும் காதி, துங்கிரி அல்லது கதரின் புள்ளி விவரமாவது :

| | 1925—26 | 1926—27 | 1927—28 |
|---|---|---|---|
| ராத்தல் | 2,58,22,442 | 3,11,95,169 | 3,70,36,206 |
| கெஜம் | 7,32,44,238 | 8,54,31,611 | 10,30,61,072 |

அவர்கள் மாதத்திற்கு ஒரு கோடி கெஜம் கதரை, அதாவது மாதத்திற்கு இருபது லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள கதரை உற்பத்தி செய்திருக்கிறார்கள் என்பதை மேலே கண்ட புள்ளி விவரம் காட்டுகிறது. அசல் கதரின் ஒரு வருட உற்பத்தி இது என்பதே இதன் பொருள். பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு உதவி செய்வதற்கு என்று ஆரம்பிக்கப்பட்டிருக்கும் ஓர் இயக்கத்தின் மூலம், அந்த ஏழை மக்களின் வாயிலிருந் படி நேராகவே பணத்தை எடுத்துக்கொண்டு விடுவதுதான் இது. அற்பத்தனம் இதைவிட இன்னும் அதிக மோசமாகப் போய்விட முடியாது. அக்கிரமமான, அயோக்கியத்தனமான போட்டியினால் கதரைக் கொன்றுவிட முயற்சி செய்திருப்பதற்குப் பதிலாக மில் சொந்தக்காரர்கள் கதருடன் ஒத்துழைத்து அதற்கு நேரடியாக உதவி செய்திருந்தால், அவர்கள் நாட்டிற்குச் சேவை செய்திருக்கக்கூடும். கபடமறியாத பொதுஜனங்களிடம் போலி நெய்யை நல்ல நெய் என்று சொல்லி விற்றுவிடும் வியாபாரிகளின் நடத்தையை ஒத்தது மில் சொந்தக்காரர்களின் நடத்தை. மக்களின் அறியாமையை, அரசாங்கத்தைப் போலவே இவர்களும், பயன்படுத்திக்கொண்டு ஏமாற்றியிருக்கிறார்கள். தாங்கள் செய்துகொண்டிருக்கும் இக்காரியத்தை அவர்கள் நிறுத்தாது போனால், இத்தகைய தந்திரம் மக்களிடம் அதிக நாளைக்குப் பலிக்காது என்பதை, இவர்களுக்கு முன்னாலிருந்த இவர்களைப் போன்றவர்கள் கண்டிருப்பதைப் போலவே இவர்களும் காண நேரும். சிலரை எல்லாச் சமயங்களிலும் ஏமாற்றிக்கொண்

டிருப்பது சாத்தியமாக இருக்கும்; ஆனல், எல்லோரையும் எல்லாச் சமயங்களிலும் ஏமாற்றிக்கொண்டிருந்துவிடுவது என்பது சாத்தியமல்ல. முதலாளிகள் தங்கள் வளர்ச்சிக்கு அயோக்கியத்தனமாக நடப்பது அவசியமானதாக இருக்கக்கூடாது.

—'எங் இந்தியா'—10—5—1928

## 10

# மில் கதர்

ஆயிரக்கணக்கான ஹரிஜன ஆண், பெண், குழந்தைகளுக்குக் கதர் வேலை கொடுக்கிறது. அது இல்லாவிட்டால் அவர்களுக்கு வேலையே இல்லை. இதைத் தீண்டாமை ஒழிப்பின் முழுத் திட்டத்திலேயே அன்றி ஹரிஜனங்களின் செல்வ நிலை மேம்பாட்டிலும் அக்கறையுள்ளவர்கள் அறிய வேண்டும். இது ஒன்றே சில குடும்பங்களைக் காப்பாற்றி வருகிறது. மிகச் சொற்ப வருவாயே உள்ள இன்னும் அநேக குடும்பங்களுக்கு இது மேற்கொண்டும் வருவாய் அளித்து, அம்மக்கள் பட்டினி கிடக்காதபடி பாதுகாத்து வருகிறது. பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்கள் எல்லோருக்கும் வேலை கொடுத்துக் காப்பாற்றுவதற்கான சக்தி கதர் ஒன்றுக்குத்தான் உண்டு என்பதை இப்பொழுது யாரும் அவ்வளவாக ஆட்சேபிப்பதில்லை. ஏழைகளின் வாழ்வுக்கான இதைத்தான் யோக்கியப் பொறுப்பில்லாத முறைகளினல் கெடுத்துவிட முற்பட்டிருக்கிருர்கள். மதுரையில் சில வியாபாரிகள், மில்லில் நூற்ற நூலைக்கொண்டு தயாரித்த துணியைக் கையினல் நூற்று நெய்த துணி என்று ஏமாற்றி வருகிருர்கள் என அறிந்தேன். விசேஷமான கதர் ரகங்களைப் போன்றே இருந்த போலித் துணிகளின் மாதிரிகளையும் எனக்குக் காட்டினர்கள். அகில இந்திய நூற்போர் சங்கத்தின் முத்திரையில்லாத கதரை வாங்கவேண்டாம் என்று கதர் அன்பர்களையும், ஹரிஜனங்களுக்குச் சேவை செய்வதில் கதருக்குள்ள சக்தியில் நம்பிக்கையுள்ள ஹரிஜன ஊழியர்களையும் கேட்டுக்கொள்ளுகிறேன். வெளிநாட்டு, உள்நாட்டு மில் துணிகளும் கதர் என்று கடைகளில் ஏராளமாக விற்கப்படுகின்றன என்றும் கேள்விப்பட்டேன். கதர் சம்பந்தமாக நான் கொண்டிருந்த கருத்தை மாற்றிக்கொண்டு விட்டேன் என்றும், உள்நாட்டு மில் துணியையும் கதரையும் நான் ஒரே மாதிரிதான் கருதுகிறேன் என்றும் சொல்லப்பட்டும் வருகிறது. இவ்விதம் சொல்லப்படுவது, என் துயரத்தைப் பூரணமாக்கிவிடுகிறது. இது, கதரைக் குறித்து நான் கொண்டிருக்கும் கருத்தைத் திரித்துக் கூறுவதாகும். கதரிடம் எனக்கு இருக்கும் நம்பிக்கை, சாத்தியமானல் ஒழுக்கம், பொருளாதாரம், தேசீயம் ஆகியவைகளில் (விரிவான பொருளுடன்

கவனிக்கும்போது) முன்னால் இருந்ததைவிட இப்பொழுது அதிக பலமானதாகவே இருந்துவருகிறது. மில் துணி, உள்நாட்டு மில் துணியாகவே இருந்தாலும் கதருக்கும் அதற்கும் பொருத்தமே இல்லை. மில் துணி அல்லது மில் நூலைக் கொண்டு ஏழை மக்களைச் சுரண்டுவது கதர் விஷயத்தில் அசாத்தியமானது. மில் துணி அல்லது மில் நூலைக்கொண்டு ஏழைகளைச் சுரண்டுவது அவ்வளவு அதிகமாக அல்ல என்றாலும், ஏதாவது ஒரு வகையில் அச்சுரண்டல் தவிர்க்க முடியாததாகும். உண்மையான கதரை உபயோகிப்பது, பணக்காரர்களாக இருப்பவர்கள் ஏழைகளைத் தொடர்ந்து சுரண்டிக் கொண்டிருந்ததற்குப் பதிலாக, கொஞ்சமே என்றாலும் அந்தக் கொஞ்ச நன்மையையாவது அந்த ஏழைகள் தாமே அடையும்படி செய்வதாகும். கிராமங்களில் வசிக்கும் பாமர மக்களுக்கு இது போதுமான பிரதிபலனைகாவிட்டாலும், மொத்தத்தில் பார்க்கும்போது, இது மகத்தான பிரதிபலனைகவே ஆகும். ஆனால், ஒவ்வொரு மில்லையும் தேசத்தின் பொதுச் சொத்தாக்கி விட்டாலுங்கூட மில் துணி இத்தகைய பலன்களில் எதையுமே மக்களுக்கு அளிக்க முடியாது. மில் தொழிலை முற்றிலும் நாட்டு மக்களின் தருமச் சொத்தாக வைத்து, அதைத் திறமையோடு நிர்வாகம் செய்தாலுங்கூட, செல்வம் தானே எல்லோருக்கும் வினியோகமாவதாக அதில் இருக்கவே முடியாது. அதோடு இதனால் பாட்டாளி மக்களில் அநேகருக்கு வேலையில்லாமலும் போகும். கதரிலோ, ஒவ்வொரு வீட்டிலும் ராட்டை வேலை செய்வதால் அநேகருக்கு வேலையில்லாது போவது என்பதற்கே இடமில்லை. உழைப்பின் பலன் எப்பொழுதுமே தானே வினியோகமாவதாகவும் ஆகிறது. ஆகவே, என்னைப் பொறுத்தவரையில் கதரும் மில் துணியும் ஒன்றுதான் என்று கருதுவதற்கு இடமே இல்லை. இந்த இரண்டுக்கும் எந்தவிதமான பொருத்தமும் இருக்க முடியாது. ஏனெனில், இந்த இரண்டும் ஒரே ரகத்தைச் சேர்ந்தவை அன்று. மில் துணியைப் போன்ற ரகத்தையோ, தரத்தையோ கதர் என்றுமே அடையாமற் போகலாம். கடையில் விற்கப்படும் விலையிலும் மில் துணி போலக் கதர் மலிவானதாக இல்லாதும் போகலாம். இவற்றில் இந்த இரண்டையும் அளக்கும் முறை வெவ்வேறானது. கதர், மனித வாழ்வின் மதிப்பைக் காட்டுகிறது; மில் துணியோ, காசின் மதிப்பு ஒன்றை மாத்திரமே காட்டுவதாக இருக்கிறது. கதரின் விலை கெஜத்திற்கு நான்கணு என்றாலும் அது எனக்கு மலிவானதுதான். ஆனால், அதே நெம்பர் நூலையும் நெசவையும் கொண்ட மில் துணியின் விலை கெஜம் இரண்டணுதான் என்றாலும், அது எனக்குக் கிராக்கியானதே. ஆகையால், நான் கேட்டுக்கொள்ளுவதெல்லாம், இந்த இரண்டையும் வெவ்வேறானதாகக் கருத வேண்டும், இதில் கருத்துக் குழப்பம் ஏற்பட்டு விடுவதைத் தவிர்த்துக் கொள்ள வேண்டும் என்பதே. ஒவ்வொன்றும் தனித்தனியாக நின்று தனது தகுதியைப் பிரசாரம் செய்துகொள்ளட்டும். கதர் வகித்துவரும் ஸ்தானத்தைக் குறித்து மில் நிர்வாகிகள் பொரு

மைப்படாமலிருக்கட்டும். கதர் போன்று தோன்றும் துணியைத் தயாரித்து, அது கதர்தான் என்று நம்பி வாங்கும்படி ஏமாற்றுவது மில் முதலாளிகளுக்கு ஒழுங்கு அல்ல.

—'ஹரிஜன்' – 9-2-1934

# 11

# சில கேள்விகள்

கதர் அன்பர்கள் சிலர் பின்வருமாறு கேட்டிருக்கிறார்கள்:

"கதர்ப் பிரசாரம் சம்பந்தமாகக் கராச்சி காங்கிரஸில் நிறைவேறியிருக்கும் தீர்மானம், அந்த நோக்கத்திற்கு எவ்விதம் உதவி செய்யப் போகிறது என்பதைத் தயவு செய்து எனக்கு நீங்கள் விளக்குவீர்களா? உள்நாட்டு மில் சொந்தக்காரர்கள், கையினால் நூற்ற நூலினாலான கதரைத் தாங்களே உபயோகிப்பதன் மூலம், கிராம மக்களுக்கு உபதொழிலாக இருக்கும் கையினால் நூற்பதற்குத் தங்கள் தார்மீக ஆதரவை அளிக்குமாறு அந்த மில் சொந்தக்காரர்கள் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கின்றனர். மில் முதலாளிகள், மில்களை வளர்த்துக்கொள்ளும் நோக்கத்துடன் தங்கள் மில்களை நடத்திக்கொண்டு போகும் உரிமையைத் தங்கு தடை எதுவும் இல்லாமல் அனுபவிப்பதாயின், அவர்கள் கையினால் நூற்று நெய்த துணியை உபயோகிப்பது மாத்திரம் கதருக்குத் தார்மீக ஆதரவை அளிப்பதாகிவிடுமா? மில்களும் ராட்டையும் ஒன்றுக்கொன்று போட்டியாக இருக்கின்றன என்பதை மில் முதலாளிகள் கண்டுகொண்டு, தங்களுடைய நடவடிக்கைகளை நாளாவட்டத்தில் குறைத்துக்கொண்டு விட யோக்கியமாக அவர்கள் முயன்றாலன்றி, தார்மீக ஆதரவு என்பது எதுவுமே இல்லை என்பதுதான் என்னுடைய பணிவான கருத்து. கதருக்குப் பதிலாக உபயோகித்துக்கொள்ளுவதற்கான நயமான துணியை மலிவான விலைக்கு மில்கள் தயாரித்துக்கொண்டே போகும்போது கதர் எப்படி நிலைத்து நிற்க முடியும் என்பதுதான் விளங்கவில்லை. அதோடு துணியின் விலையைக் குறைத்து விற்குமாறு மில்காரர்களைக் கேட்பது நிச்சயமாகக் கதரைக் கொன்றுவிடுவதாகவே ஆகும்."

இவை எல்லாம் நல்ல கேள்விகளே. மில் முதலாளிகள் சொந்தத்திற்குக் கதரை உபயோகித்துக்கொள்ளுவது அவர்கள் உள்ளத்தில் உண்டாகியிருக்கும் நம்பிக்கைக்கு அறிகுறியாக ஆகாது. இதனால் எவ்விதப் பலனுமில்லை. அது அவர்களுடைய கபடத்திற்குத்தான் சின்னமாக இருக்கும் என்பதில் சந்தேகமே இல்லை. கதர் விஷயத்தில் அவர்களுக்கு உள்ளத்தில் நம்பிக்கை இருக்குமாயின், தோட்டக்காரன் புதிதாக நடும் கன்றுகளுக்குத் தீமையுண்டாகாதவாறு எவ்விதம் பக்கத்துக் கன்றுகளின் போத்துக்களைக் கழித்து விடுவானோ அதேபோல, மில்கள் கதருக்கு என்றுமே தீங்கு செய்யாத வகையில் அவற்றை நடத்தி வருவார்கள். சந்திக் காலத்தில் மில்கள் பயனுள்ள

காரியத்தைச் செய்யமுடியும் என்ற நம்பிக்கையின் அடிப்படையிலேயே மில்களைக் காங்கிரஸ் சகித்துக்கொண்டு வருகிறது. பகிஷ்கார இயக்கத்துடன் மில்கள் அனுதாபத்துடன் வேலை செய்வதாயிருந்தால் உள்நாட்டு மில்களைக் கொண்டு அந்நியத் துணியை உடனே விலக்கிவிடுவது எளிதானதாகிறது. உள்நாட்டு மில்களுடன் ஆங்கில, ஜப்பானிய, இத்தாலிய, மற்ற நாட்டு மில்களையும் சேர்த்துக் கதர் சமாளித்துப் போட்டியிடுவதை விட இந்திய மில்களை மாத்திரம் சமாளித்துப் போட்டியிடுவது கதருக்குச் சுலபம். உள்நாட்டில் மில்களின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டு வருவதைக் கண்டு கதர் அபிமானிகள் பயப்பட வேண்டியதில்லை. இந்த அதிகரிப்பு, கதரின் பொருளாதாரச் செல்வாக்கு இன்னும் சரிவர உணரப்படவில்லை என்பதை நிரூபிக்கிறது என்பதில் சந்தேகமில்லை. கதரை எல்லோரும் உபயோகிக்க ஆரம்பித்துவிட்டால், தங்களுக்கு வேலையில்லாது போய்விட்டது என்பதை அநேக மில்கள் கண்டு கொண்டுவிடும். மக்களிடம் கதர் அத்தகையதோர் செல்வாக்கைப் பெற்றுவிடுமா என்பதைக் குறித்து இப்பொழுது ஆராய்ந்துகொண்டிருக்க வேண்டியதில்லை. இது ஊழியர்களின் மனப்பூர்வமான விசுவாசத்தையே பொறுத்திருக்கிறது. கதர் விஷயத்தில் கூறப்படும் நியாயத்தில் எவ்விதமான தவறும் இல்லை. கோடிக்கணக்கான கிராமவாசிகளுக்கு உண்மையான கல்வியை அளிப்பது, தேச மக்களின் ருசியை மாற்றுவது, இந்நாட்டை விட்டு ஏழ்மையை விரட்டியடிப்பதில் ராட்டைக்குள்ள அபாரமான சக்தியை மக்கள் அறியும்படி செய்வது ஆகியவைகளைப் பொறுத்த பிரச்னையே இது. பட்டினியிலிருந்தும், அதனால் ஏற்படுவதான விளைவுகளிலிருந்தும் நிச்சயமாகப் பாதுகாப்பு அளிப்பதாக இருக்கும் ஒரு வழியை மக்கள் பின்பற்றும்படி செய்ய முடிவது சின்ன விஷயமே அல்ல.

இரண்டாவது கேள்வியைப் பொறுத்தவரையில், நயமான துணிகளை மில்கள் உற்பத்தி செய்ய வேண்டியிருக்கும் அவசியத்தை ஆட்சேபிப்பதற்கில்லை. கதரே இருந்து வந்த நாளில் மக்களுக்கு நயமான கதரும் கிடைத்து வந்தது. இப்பொழுதும் நயமான கதர் உற்பத்தியாகிறது. ஆனால், அவ்வளவு அதிக அளவும், அதை விரும்புகிறவர்களுக்கெல்லாம் கிடைக்கக் கூடிய வகையில் மலிவாகவும் நயமான கதர் உற்பத்தியாகவில்லை. ஆகையால், இந்தச் சந்திக் காலத்தில் உயர்ந்த ரகத் துணிகளைத் தயாரிக்க மில்களுக்கு உற்சாகமளிக்கலாம். மேலும், உயர்ந்த ரகத் துணிகளை மாத்திரம் மில்கள் தயாரிக்கலாம் என்று வரையறை விதிப்பது கதருக்கு முற்றிலும் நன்மையானது என்பதையும் எளிதில் அறிந்துகொள்ளலாம். தேசத்தின் தேவையை அனுசரித்து மில்கள் நடந்து கொள்ளாததுதான் இதிலுள்ள பரிதாபம்.

கடைசியாக விலைகளுக்கு வருவோம். கதர் உயிரோடு இருக்க வேண்டும் என்பதற்காக மில்கள் தங்கள் துணிக்கு

அதிக விலை வைத்து விற்க வேண்டும் என்று இக்கடிதம் எழுதியிருப்பவர் நிச்சயமாக யோசனை கூறமாட்டார். கதருக்குப் புத்துயிர் கொடுக்க வேண்டும் என்று ஆரம்பித்தவன் நான். என்றாலும், கதருக்குப் பாதுகாப்பு அளிப்பதற்காக மில்லில் தயாராகும் துணிகள் அதிக விலைக்கு விற்கப்படவேண்டும் என்ற எண்ணம் எனக்குத் தோன்றியதே இல்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளவே வேண்டும். ஒரு தொழிலைக் கொன்று விடுவதாக இருப்பதிலிருந்து பாதுகாப்பு வேண்டும் என்பது வேறு விஷயம். அநேகருக்காகச் சிலர் உற்பத்தி செய்யும் பொருள்களுக்கு அதிக விலை இருக்க வேண்டும் என்று விரும்புவது, அதே போன்றதான ஒரு தொழிலுக்கு அது பாதுகாப்பு அளிப்பதாக இருந்தாலுங்கூட, முற்றிலும் வேறான விஷயமாகும். சாதாரணப் பொருளாதாரத்திற்கு முற்றிலும் மாறானது கதர்ப் பொருளாதாரம். சாதாரணப் பொருளாதாரம், மனிதரின் வாழ்க்கையைப் பற்றிய அம்சத்தையே கவனிப்பதில்லை. கதர்ப் பொருளாதாரமோ, முற்றிலும் மனிதரின் வாழ்க்கையைப் பொறுத்ததாக இருக்கிறது. சாதாரணப் பொருளாதாரம், பச்சையான சுய நலத்தைக் கொண்டது; கதர்ப் பொருளாதாரமோ அவசியத்தை அனுசரித்துத் தன்னலமற்றதாக இருக்கிறது. போட்டியும், அதனால் ஏற்படும் விலையைப் பற்றியதும் கதரைப்பற்றிய கருத்திலிருந்தே விலக்கப்பட்டிருக்கின்றன. வீட்டுச் சமையலுக்கும் ஹோட்டல்களுக்கும் போட்டி இல்லை. தனது உழைப்புக்கு இவ்வளவு பணம் என்றோ, அடுப்பங்கரைக்கு வாடகை இவ்வளவு என்றோ எந்த வீட்டின் தலைவியும் கணக்குப் போடுவதில்லை. குழந்தைகளை வளர்க்க வேண்டியது எவ்விதம் தனது கடமையோ அதே போல வீட்டுச் சமையல் காரியங்களைக் கவனிப்பதும் தனது கடமை என்பதை மாத்திரம் அவள் அறிவாள். அவள் செலவைக் கணக்குப் போடுவதாயிருந்தால், இதைப் பற்றிய உண்மைகளின் நியாயமான முடிவு, அடுப்பங்கரையையும் தன் குழந்தைகளையும் அழித்து விடுவதில்தான் அவளைக் கொண்டுபோய் விட்டுவிடும். இந்த இரண்டையும் சிலர் செய்தும் இருக்கிறார்கள். இந்தச் சித்தாந்தம் அதிக அளவுக்கு வளராமலிருப்பதற்காகக் கடவுளுக்குத்தான் நன்றி செலுத்த வேண்டும். குடும்பத்து ராட்டையை நாம் அழித்துவிட்ட போதே இந்திய மனித வர்க்கத்திற்கு நாம் பெரும் பாவம் செய்துவிட்டோம். நமக்கு ஏற்பட்டுவிட்ட சோம்பேறித்தனமே இதை நாம் உணராதபடி செய்துவிட்டது. நாம் செய்துவிட்ட பாவத்திற்காக வருந்தி, சாந்தமளிப்பதான ராட்டைக்குத் திரும்புவோமாக.

—'எங் இந்தியா' 16—7—1931

## 12

# சுதேசிப் பொருட்காட்சிகளில் கதர்

மில் துணிகளையும் வைக்க அனுமதிக்கும் சுதேசிப் பொருட் காட்சிகள் நடக்கும் இந்தியாவின் மற்றெல்லாப் பகுதிகளிலும் அக்காட்சிகளில் கதரையும் வைக்கக்கூடாது என்று அதை ஒரு விதியாகவே அகில இந்திய நூற்போர் சங்கம் மறுத்துவிட்டது. இந்த விதி எந்த நோக்கத்துடன் செய்யப்பட்டதோ அந்த நோக்கம் அதனால் நிறைவேறிவிட்டது. என்றாலும், இந்த விதியை விட்டுக் கொடுத்துவிடவேண்டும் என்று ஐக்கிய மாகாணத்தி லிருந்து வற்புறுத்தல் வந்திருக்கிறது. ஆனால், இந்த ஆசைக் கெல்லாம் இதுவரையில் நான் இடம் கொடுக்காதிருந்தேன். இதில் தாங்கள் நடந்துகொள்ள வேண்டியது எவ்விதம் என் பதைக் குறித்து ஐக்கிய மாகாண ஊழியர்கள் எனக்கு எழுதிக் கேட்டிருக்கிறார்கள். அநேமாக இவர்கள் எல்லோரும், மற்ற யாருக்கும் குறைந்தவர்களல்லாத, ஊக்கமுள்ள காங்கிரஸ்காரர் களே. ஆனால், இவர்கள் காங்கிரஸின் நிர்மாணத் திட்டத்தின், அதிகக் கஷ்டமானதான வேலைத் திட்டமான கதரின் மூலம் காங்கிரஸின் சேவைக்குத் தங்களை அர்ப்பணம் செய்துகொண் டவர்கள். அவர்களுக்கு இருக்கும் கஷ்டத்தை உணர்ந்து, இவ்விஷயத்தில் ஸ்ரீ ஜவாஹர்லால் நேருவின் கருத்தை அறிவதற் காக அவருக்கு இதைத் தெரிவித்தேன். அவரிடமிருந்து கீழே காணும் பதில் கிடைத்திருக்கிறது :

“பொருட்காட்சிகளில் கதரை வைப்பது சம்பந்தமாகக் கேட்டு நீங்கள் எழுதிய மார்ச்சு 5-ஆம் தேதி கடிதம் எனக்குக் கிடைத்தது. நான் ஐரோப் பாவிலிருந்து திரும்பியதிலிருந்து சென்ற ஒரு வருடமாக இது பற்றி நாம் அடிக்கடி விவாதித்திருக்கிறோம். இரண்டு, மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் ஐக்கிய மாகாணக் காங்கிரஸ் கமிட்டி, ஒன்று, இரண்டு பொருட்காட்சிகளை நடத்தியது. அதற்குப் பிறகு அது திரும்பவும் நடத்தவில்லை. ஆனால், நமது ஜில்லாக் கமிட்டிகள் எப்பொழுதாவது பொருட்காட்சிகளை நடத்துகின்றன. இதுவுங்கூட இப்பொழுது குறைந்துவிட்டது. என்றாலும், சுதேசி சபைகள் நடத்தும் பொருட்காட்சிகள் மாத்திரம் தொடர்ந்து நடந்துகொண்டு வருகின் றன. சென்ற நவம்பரில் அலகாபாத் சுதேசி சங்கத்தினர் தங்கள் வருடாந் தரப் பொருட்காட்சியை நடத்தினார்கள். வழக்கம் போல் மில் துணியையும் அக் காட்சியில் வைத்தார்கள். பொருட்காட்சியை நான் ஆரம்பித்துவைக்க வேண்டும் என்று விரும்பினார்கள். இந்தக் கதர் விஷயத்தினால் அதற்குச் சம்மதிக்கப் பல மாதங்கள் நான் மறுத்து வந்தேன். என்றாலும், பல காரணங் களை முன்னிட்டு, முக்கியமாக உள்ளூர்க் காரணங்களினால், முடிவாக நான் ஒப் புக் கொண்டேன். நான் மறுத்துவிடுவது தவறாகக் கருதப்பட்டுவிடும், அத னால் நமக்குக் கெடுதல் உண்டாகும் என்று நான் உணர்ந்தேன். அதை ஆரம் பித்து வைத்து நான் செய்த பிரசங்கத்தில், கதரைப் பற்றிய இவ் விஷயத்தைக் குறித்தே நான் அதிகமாகப் பேசினேன்.

"நீங்கள் கேட்டிருக்கும் கேள்விக்குப் பதிலளிப்பது எளிதானது அன்று. பொருட்காட்சியில் மில் துணி வைக்க அனுமதிக்கப்படுமாயின் அங்கே கதரையும் வைக்கக்கூடாது என்று சாதாரணமான கதர் ஊழியர் கருதுவதாகத் தெரிகிறது. இத்தகைய பொருட்காட்சிகளில் வழக்கமாகக் கதர் அதிகமாக விற்பனையாகிறது என்பதைக் கொண்டு மற்ற காங்கிரஸ் ஊழியர்களோ, அதற்கு மாருக எண்ணுகின்றனர். கதர் சம்பந்தமானவை களில் கதர் ஊழியர்கள்தான் நிபுணர்கள்; கதரை அதிகமாகப் பரப்பவேண் டும் என்பதில் கவலையுள்ளவர்கள். ஆகையால், உண்மையில் கதர் ஊழி யரின் அபிப்பிராயமே அநேகமாக இதில் முடிவானதாக இருக்கவேண்டும். ஆகையால், நான் கூறுவதுதான் சரி என்பதை அவர் ஒப்புக்கொள்ளும்படி செய்வதில் நான் வெற்றி பெற்ருலன்றி அவர் கருத்துக்கு எதிராக என் முடிவைச் சொல்ல நான் தயங்குவேன். ஓரளவு நீண்ட கால நோக்குடன் இவ்விஷயத்தைக் கவனித்தால், எனக்கு ஒன்று தோன்றுகிறது. கதர் எதற்காக இருக்கிறது, அது எதற்காக இருக்கவில்லை என்பதில் பொது மக்களின் மனத்தில் எந்தக் குழப்பமும் உண்டாவதைத் தவிர்ப்பதை முன் னிட்டு இப்பொழுது கொஞ்சம் நஷ்டத்திற்கு உட்படுவதுகூட நல்லதுதான். அத்தகைய பொருட்காட்சிகளில் அத்தாட்சி பெற்ற கதரை விற்பதைத் தடுப்பது என்று இப்பொழுது இருந்து வரும் கொள்கையை அனுசரிப்பதனு லேயே அதைச் செய்யமுடியும்.

"இதே சமயத்தில் இத்தகைய பொருட்காட்சிகளில் அத்தாட்சி பெருத கதர் விற்பனையாகி வருவதையும், ஏராளமானவர்கள் அதை வாங்கி ஆதரித்து வருவதையும் காண்கிறேன். அத்தாட்சி பெற்ற கதரைத்தான் வாங்கவேண் டும் என்பதில் முக்கிய சிரத்தை இல்லாத மக்கள் ஏராளமாக இருக்கிருர் கள் என்பதை நீங்களே அறிவீர்கள். ஆனல், அத்தாட்சி பெற்ற கதர் கிடைத்தால் வாங்க அவர்களும் தயாராயிருக்கின்றனர். எந்த விசேஷ முறை கொண்டும் மக்களுக்குக் கதரை விற்பதா? அல்லது சுத்தக் கதர் ஒன்றையே உபயோகிக்க விரும்புகிறவர்களிடம் மாத்திரம் விற்பது என்று நான் உறுதி யுடன் இருந்துவிடுவதா? இதுதான் விஷயம். இந்த பிரச்னையில் வர்த்தகம் சம்பந்தப்பட்டிருப்பது மாத்திரமல்ல, மனேதத்துவத்தைப் பற்றியதும் அடங்கி யிருக்கிறது. ஒரு பக்கத்தில் கதர் தனக்கென்று உறுதியான அஸ்திவா ரத்தை அமைத்துக் கொண்டிருக்கிறது. விலையோ, கஷ்டமோ எதுவானலும் தங்களுக்குச் சுத்தமான கதர்தான் வேண்டும் என்னும் மக்கள் தொகையி னரும் இந்நாட்டில் இருக்கிருர்கள். அதே சமயத்தில் மற்ற வகுப்பின ரிடையே எவ்வளவு துரிதமாகப் பரவவேண்டுமோ அவ்வளவு துரிதமாகக் கதர் பரவவில்லை. ஆண்கள் எப்பொழுதாவதுதான் இதை வாங்கி ஆதரித்து வருகின்றனர். இத்தகைய வகுப்பினரிடையே கதர்ப் பழக்கத்தை வளர்ப்பது தான் கதர் ஊழியர்கள் லட்சியமாக இருக்கவேண்டும். அத்தகைய பழக்கம் பெரும்பாலும் மனத்திற்கு அல்லது உள்ளத்திற்குப் பிடித்ததாவதையும், ஓரள வுக்கு வெறும் பழக்கத்தைக் கொண்டும் உண்டாகிறது. சாதாரணமாகப் பார்த்தால், எப்பொழுதாவது கதர் வாங்குகிறவர்கள் சாத்தியமான வரை யில் அதிகமாக இருப்பது நல்லதே. இதனல், அவர்களுக்குக் கதர் வாங்கி உபயோகிக்கும் பழக்கம் ஏற்பட்டு அதன் மூலம் உண்மையான பழக்கம் விருத்தியாகிவிடும். இப்படி எப்பொழுதாவது கதர் வாங்குகிறவர்களை இப் பொழுதுள்ள கொள்கை ஓரளவுக்கு ஒதுக்கி வைத்துவிடுகிறது. இதனல்

வழக்கமாகக் கதர் வாங்குகிறவர்களைச் சேகரிக்கும் துறையை இப்பொழுதுள்ள கொள்கை குறைத்துவிடுகிறது.

"இந்தப் பொருட்காட்சிகளைப் பொறுத்தவரையில் இன்னுமொரு கஷ்டமும் இருக்கிறது. இக் காட்சிக்கு வரும் பொருள்கள் விஷயத்தில் அநேகமாகச் சரியான கண்காணிப்பு இருப்பது இல்லை. அந்நிய நூலினுல் தயாரித்த துணிகளோ, பெரும்பாலும் அந்நியப் பொருளாக இருந்தும் ஒரு சிறு இந்தியப் பொருளோ, வேலைப்பாடோ கொண்ட பொருள்களோ காட்சிக்கு வந்துவிடுகின்றன. அதிகக் கடுமையான கண்காணிப்பு இருந்தால் இதை ஒரு வேளை சமாளித்துக்கொண்டுவிட முடியும். ஆனல், பொதுவாகச் சுதேசி சங்கக் கமிட்டி இவ்விஷயத்தில் பயத்தோடு சிரத்தை கொள்ளுவது இல்லை.

"சுதேசிப் பொருட்காட்சிகள் கிளப்பும் மற்றப் பிரச்னைகளையும் நாம் அலட்சியம் செய்து விடுவதற்கில்லை. சென்ற ஆண்டு பொருட்காட்சியை ஆரம்பித்து வைக்க நான் ஒப்புக்கொண்டது அதற்கு ஓர் உதாரணம். என்னைப் பொறுத்தவரை அம்முடிவைத் தவிர வேறு எந்த முடிவுக்காவது நான் வந்திருந்தால், அதனுல் சில சங்கடங்களும் மனக்கசப்புகளும் ஏற்பட்டிருப்பதோடு நமது வேலைக்கும் இடையூறுகள் நேர்ந்திருக்கும்.

"ஆகையால், என்னுடைய முடிவான கருத்தை அறிய நீங்கள் விரும்புவீர்களாயின். அக்கருத்தை மிகவும் திட்டமானதாக நான் வெளியிடுவதற்கில்லை. ஏனெனில், எனக்குத் திட்டமான அபிப்பிராயம் இதில் இல்லாதபோது, கதருக்காக வேலை செய்து கொண்டிருக்கும் மற்றவர்களின் கருத்துக்களுக்கு நான் மதிப்புக் கொடுக்கவேண்டும். என்ருலும், சில நிபந்தனைகளின் பேரில் கதரை இப் பொருட்காட்சிகளில் வைப்பதுதான் நல்லதாக இருக்கும் என்று எண்ணவேண்டியவனுக இருக்கிறேன். அப்படிச் செய்தால் சாத்தியமான வரையில் கீழ்க்கண்ட காரியங்கள் நடக்காதபடி தடுக்கலாம்: (1) வேறு எதையோ கதர் என்று தவருக எண்ணிக்கொண்டு விடாதபடி தடுக்கலாம். மில் துணிக்கும் கதருக்கும் உள்ள பேதத்தையும் தெளிவாகக் காட்டலாம். (2) பகுதியை அந்நியச் சரக்காகக் கொண்ட பொருள்களைப் பொருட்காட்சிகளிலிருந்து விலக்கலாம்."

ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு தமது முடிவான கருத்தைத் தெரிவிக்க முடியாதவராக இருப்பினும் கதருக்காக வேலை செய்து வரும் மற்றவர்களின் கருத்துக்கு மதிப்புக் கொடுக்கத் தயாராயிருக்கிருர். என்ருலும், "கதரை இப் பொருட்காட்சிகளில் வைப்பதுதான் நல்லதாக இருக்கும் என்று எண்ண வேண்டியவராக" இருக்கிருர். மில்லில் தயாரித்த பகட்டான துணியுடன் சம நிலையில் கதரையும் வைத்துக் காட்டி பொதுமக்களின் மனத்தைக் குழப்பிவிடுவது அபாயகரமானது என்று என் அனுபவத்திலிருந்து காண்கிறேன். மனிதனையும், மனிதனைப் போன்று இயங்கும் ராபாட் யந்திர மனிதனையும் பக்கத்தில் வைத்துக் காட்டுவதைப் போன்றது அது. ராபாட்டுடன் தங்களை ஒப்பிட மனிதர் அனுமதித்துவிடுவதாயின் இப்போட்டியில் மனிதர் நிலைமை மோசமாகிவிடக்கூடும். மில்லில் தயாரான துணியுடன்

ஒப்பிடுவதாயின் கதருக்கும் அதே கதி ஏற்படும். இந்த இரண்டுக்கும் உள்ள ஸ்தானங்கள் வெவ்வேறானவை. இரண்டுக்குமுள்ள நோக்கமும் ஒன்றுக்கொன்று மாறுபட்டவை. கதர், எல்லோருக்கும் வேலை கொடுக்கிறது; மில் துணியோ, சிலருக்கு வேலை கொடுத்துவிட்டு யோக்கியமாக வேலைசெய்து பிழைத்தவர்கள் பலருக்குப் பிழைப்பில்லாதபடி செய்து விடுகிறது. கதர் பாமர மக்களுக்குச் சேவை செய்கிறது; மில் துணியோ, பணக்காரார்களுக்கு லாபம் தருகிறது. தொழிலாளருக்குக் கதர் சேவை செய்கிறது ; மில் துணி தொழிலாளரைச் சுரண்டுகிறது. இந்தியா முழுவதிலும் இருக்கும் கதர் ஊழியர்களின் அனுபவமும் என் அனுபவத்திற்கு ஆதரவளிக்கிறது. ஆகையால், ஸ்ரீ ஜவாஹர்லால் நேருவின் கருத்தும், ஐக்கிய மாகாணக் காங்கிரஸ்காரார்களின் கருத்தும், அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கருத்துக்கு எதிரானதாக இருக்குமாயின், தங்கள் கருத்துக்குப் பதிலாக அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கொள்கைக்கும் அனுபவத்திற்கும் மதிப்புக் கொடுப்பார்கள் என்று நம்புகிறேன்.

—' ஹரிஜன் '-10—4—1937

பகுதி ஆறு

# மில் துணியும் அந்நியத் துணியும்

## 1

## மில்களின் நிலைமை என்ன?

அந்நியத் துணி பகிஷ்காரக் கமிட்டியின் காரியதரிசி பதவியை ஏற்றுக்கொள்ளும்படி அக்கமிட்டியின் சார்பில் நான் கேட்டுக்கொண்டதற்கு ஸ்ரீ ஜெயராம்தாஸ் உடனே சம்மதித்திருப்பதோடு அதன் விளைவாகப் பம்பாய் சட்டசபையில் தாம் வகித்து வந்த உறுப்பினர் ஸ்தானத்திலிருந்தும் அவர் விலகியிருக்கிறார். இது எனக்கு அதிக ஆனந்தமளிப்பதோடு ஒவ்வொரு தேசீய வாதிக்கும் ஆனந்தமளிக்கும் என்று நம்புகிறேன். தமக்கு நம்பிக்கையில்லாத ஒரு லட்சியத்தை மேற்கொள்ளுபவர் அல்ல ஜெயராம்தாஸ். ஆகையால், முழு நேர ஊழியராக அவர் வருவது, இயக்கத்திற்குப் பெரிய லாபம் என்பது என் கருத்து. அந்நியத் துணி பகிஷ்காரக் கமிட்டி அப்போதைக்கப்போது வெளியிட்டு வரும் கோரிக்கைகளுக்கு உடன்பட இதே போலப் பொது மக்களும் முன் வருவார்களாயின், சில மாதங்களுக்குள்ளேயே திட்டமான முன்னேற்றத்தை நாடு காட்டிவிட முடியும். பொதுஜன உறுதி இருக்குமாயின், சரியானபடி வேலை செய்தாலே பகிஷ்காரம் நிறைவேறிவிடும்.

விற்பனை, கதர் உற்பத்தி ஆகிய இரண்டும் சேர்ந்து நடக்க வேண்டியிருக்கின்றன. பொது மக்களைப் பொறுத்தவரையில், அந்நியத் துணியைப் பகிஷ்கரிக்கவேண்டும் என்ற உண்மையான நோக்கம் அவர்களுக்கு ஏற்பட்டுவிட்டதுமே கதர் வாங்குவதற்குப் பெருங்கூட்டம் இருக்கும். கதருக்கு ஏற்படும் கிராக்கியை எதிர்பார்த்து உற்பத்தியும் அதிகரிக்காமலிருந்தால், மோசமான ஏமாற்றம் உண்டாகக்கூடிய ஆபத்து இருக்கிறது. இதன் விளைவாக, கதர் கிடைக்கவில்லை என்பதனால் பகிஷ்காரத்தில் நம்பிக்கை போய்விடவும் கூடும். ஆகையால், பொது மக்கள் தங்களுக்குத் தேவையானதற்கு அதிகமாகக் கதரை வாங்காமலிருப்பது அவசியம். சாத்தியமான வரையில் அவர்கள் தங்கள் தேவையைக் குறைத்துக்கொள்ள வேண்டும்.

இந்தியாவின் மில்களைக் குறித்து வேண்டுமென்றே நான் எதுவும் கூறாமலிருக்கிறேன். மில்கள் எத்தனையோ கட்டுப் பாடுகளின் கீழ் வேலை செய்ய வேண்டியவைகளாக இருக்கின் றன. ஆகையால், நாம் மில்களை நம்பியிருந்தால் முடிவில் அவை நம்மைக் கைவிட்டுவிடும் என்பதே என்னுடைய திடமான நம் பிக்கை. அதோடு தேசத்தின் நன்மையைப் பற்றிக் கொஞ்ச மும் கவனிக்காமல் லாபம் சம்பாதிப்பது ஒன்றையே குறி யாகக் கொள்ளும் ஸ்தாபனங்களாக மில்கள் இருப்பதால், பொது ஜனங்களைச் சுரண்டவும், அந்நியத் துணியைச் சுதேசித் துணி என்று விற்றுவிடவும் அவை தயங்கமாட்டா. மில் துணியைக் கதர் என்று மோசடியாக விற்றதைக் குறித்து இப் பத்திரிகையில் முன்பே அம்பலப்படுத்தி யிருக்கிறேன். இப் பொழுது இருக்கும் அரசாங்கம் இந்தியாவில் இருக்கிறது என் பதனுல் இதை எப்படிச் சுதேசி அரசாங்கம் என்று சொல்ல முடி யாதோ அதே போல, இந்தியாவிலிருக்கின்றன என்பதனுல் எல்லா மில்களும் சுதேசி மில்களாகிவிட மாட்டா. இவை களில் சில எல்லா அம்சங்களிலும் அந்நியமானவை. வெளி நாட்டு மூலதனத்தைக்கொண்டு முற்றிலும் வெளிநாட்டுப் பங்கு தாரர்களின் சார்பில் அவை அந்நியரால் நிர்வகிக்கப்படுகின்றன. நாட்டின் வசதிகளைச் சுரண்டுவதற்கு என்று மாத்திரமே அவை இங்கு இருந்து வருகின்றன. விருப்பமில்லாமலேயே அவை செய்துவரும் ஒரு காரியம், இந்நாட்டில் மலிவாகக் கிடைக்கும் தொழிலாளரை வேலைக்கு வைத்துக்கொள்ளுவதுதான். அதைக் கொண்டு தாங்கள் சுதேசி மில்கள் என்று பொது மக்கள் நம்பும் படி ஏமாற்றி வருகின்றன.

ஆனுல், பகிஷ்கார இயக்கத்தில் மில்கள் வகிக்கக்கூடிய பங்கு எதுவும் இல்லை என்பது இதன் பொருள் அல்ல. அவை பங்கு வகிக்கும். ஆனுல், அது தானே விரும்பிச் செய்ததாக இல் லாமலும் தற்செயலானதாகவும் இருக்கும். இந்தியாவின் ஒவ் வொரு கிராமத்திற்கும் காங்கிரஸ்காரர்கள் உடனே போய்விட முடியாது. பட்டணங்களையும் அவைகளைச் சுற்றிலுமுள்ள கிரா மங்களையும் நாம் அடைந்துவிடுவோம். இந்தியாவின் எல்லாக் கிராமங்களையும் மில்கள் அடைந்துவிட்டன. நாட்டில் உண்டாக் கப்பட்டிருக்கும் சூழ்நிலையினுல், மில் சொந்தக்காரர்களின் ஏஜெண்டுகளின் கையில் கிராம மக்கள் சிக்கிக்கொண்டு விடு வார்கள். சுதேசி என்ற பெயரில் மில்கள் எதைக் கொடுத் தாலும் கிராமவாசிகள் வாங்கிக்கொண்டு விடுவார்கள். ஆகையால், அவர்கள் நடவடிக்கைகள் சம்பந்தமாகக் காங் கிரஸ்காரர்கள் அதிகக் கண்காணிப்புடன் இருந்து வர வேண்டும். தேசாபிமானமுள்ள மில்களும் சில இருக்கின்றன. அவைகளுக்குள்ள கட்டுதிட்டங்களின் காரணமாக அவை தீவிர ஆதரவு தர முடியாவிட்டாலும், நாட்டிற்குத் துரோகம் செய்ய இந்த மில்கள் மறுத்துவிடும். மில்களுக்குச் சென்ற ஆண்டு நாம் கூறிய நிபந்தனை குறித்து அவை ஒரு முடிவுக்கு

வந்து ஏற்றுக்கொண்டுவிடும் காலம் வந்து தீரும். அதுவும் சில மாதங்களுக்குள் அது வந்துவிடும் என்பது எனது திடமான நம்பிக்கை. ஆனால், என்னவானாலும் அந்நியத் துணியைப் பகிஷ்கரித்து அதற்குப் பதிலாக அசல் கதரையே உபயோகிப்பது என்று மக்கள் கொள்ளும் உறுதியைத்தான் இது முற்றிலும் பொறுத்திருக்கிறது. கதருக்கு எல்லை எதுவும் இல்லை. ஏனெனில், கோடிக்கணக்கான மனிதக் கதிர்களும், கோடிக் கணக்கான மனிதத் தறிகளும் நம்மிடம் இருக்கின்றன. தேவைப் படும் ஒரே காரியம், அதைச் செய்வதற்கு வேண்டிய உறுதி தான்.

—'எங் இந்தியா'–7–3–1929

## 2

# மில்காரர்களும் பகிஷ்காரமும்

இந்த விஷயத்தைக் குறித்து இப்பத்திரிகையில் முன்பே எழுதியிருக்கிறேன். என்றாலும், அந்நியத் துணி பகிஷ்கார இயக்கத்தில் பங்கெடுத்துக் கொள்ளுமாறு உள்நாட்டு மில்களை ஏன் அழைக்கவில்லை என்று பலர் என்னை எழுதிக் கேட்டு வருகிறார்கள். மற்றவர்களோ, இந்த இயக்கத்தில் மில்கள் வகித்து வரும் பங்கு என்ன என்று கேட்கின்றனர். மற்றும் சிலரோ, காங்கிரஸ் ஊழியர்கள், கதருடன் உள்நாட்டு மில் துணிகளையும் விளம்பரப்படுத்தி ஏன் நேரடியாக ஆதரவளிக்கக்கூடாது எனக் கேட்கிறார்கள்.

கடைசிக் கேள்வியை முதலில் எடுத்துக் கொள்ளுவோம். கதர் மூலமாகவே பகிஷ்காரம் நிறைவேற வேண்டும் என்று காங்கிரஸ் தீர்மானம் கூறுகிறது என்பதைக் கடிதம் எழுதியிருப்பவர்கள் நினைவில் வைக்க வேண்டும். இந்தப் பட்சபாதத்திற்கு நியாயமான காரணங்கள் இருக்கின்றன. பகிஷ்கரிப்பதற்குச் சந்தர்ப்பம் மில் துணிக்கு மாத்திரமே சென்ற ஐம்பது ஆண்டுகளாக இருந்து வந்திருக்கிறது. என்றாலும், மில் துணி பகிஷ்காரத்தைச் செய்துவிடவில்லை. இப்பொழுது இருக்கும் மில்களைக் கொண்டு உடனே பகிஷ்காரத்தை நிறைவேற்றிவிடுவது என்பது சாத்தியமில்லாதது. நினைத்த மாத்திரத்தில் புதிதாக மில்களை அமைத்து விடுவதற்குமில்லை. ஆகையால், பகிஷ்காரம் வெற்றி பெறுவதானால் கதர் ஒன்றினால் தான் அதைச் செய்ய முடியும். கதரையும் மில் துணியையும் ஒன்று சேர்த்துப் பரப்ப முடியாது. இஷ்டம் போல் வாங்கிக் கொள்ளலாம் என்று விட்டுவிடுவதானால், ஆலோசித்துப் பார்க்கும் திறனில்லாத ஏராளமான மக்கள், விலை அதிகமாகவும், முரடாகத் தோன்றுவதாகவும், எளிதாகக் கிடைக்

காததுமான கதருக்குப் பதிலாக, மலிவானதாகவும் எளிதில் கிடைக்கக்கூடியதாகவும் இருக்கும் மில் துணியையே வாங்கிக் கொண்டு விடுவார்கள். இதை வருத்தத்துடன் ஒப்புக்கொண்டு தான் ஆக வேண்டும். ஆகையால், காங்கிரஸ் ஊழியர்கள், தங்களுடைய செல்வாக்கு செல்லக்கூடிய இடங்களிலெல்லாம்—அந்தச் செல்வாக்கு இன்னும் வெகு தூரம் எட்டிவிடவில்லை—மில் துணியை விலக்கிவிட்டுக் கதர் அணிய வேண்டும் என்று தான் பிரசாரம் செய்து வரவேண்டும் என்றாகிறது.

இது என்னை இரண்டாவது கேள்விக்குக் கொண்டு வருகிறது. கதருக்காக மாத்திரமே பிரசாரம் செய்வது என்பது, உள்நாட்டு மில் துணிக்கு விரோதம் என்றாகாது. மில் சொந்தக்காரர்கள் விரும்பினாலும் விரும்பாது போனாலும், பகிஷ்கார இயக்கத்தில் மில் துணி முக்கியமான பங்கு வகித்து வருகிறது. அந்நியத் துணிக்குப் போட்டியாக இந்திய மில் துணியை ஏராளமான மக்கள் வாங்கி வருகிறார்கள். நேரடியாகவோ, மறைமுகமாகவோ இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் மில்களுக்கு ஏஜெண்டுகள் இருக்கிறார்கள். ஒரு பிரபலமான மில் சொந்தக்காரர் ஒரு சமயம் என்னிடம் மிகவும் சரியாகவே வருமாறு கூறினார்: "உங்கள் உதவி எங்களுக்குத் தேவையில்லை. உங்கள் குரல் கேட்கும்படி நீங்கள் என்றுமே செய்ய முடியாத இடங்களிலெல்லாம்கூட நாங்கள் புகுந்திருக்கிறோம். எங்கள் துணிக்கு நீங்கள் பிரசாரம் செய்வீர்களானால், அதனால் நாங்கள் சமாளிக்க முடியாத அளவுக்கு நீங்கள் எங்கள் துணிக்குக் கிராக்கியை அதிகமாக்கிவிடுவதோடு நாங்கள் துணி விலையை ஏற்றும்படி செய்து விட்டவர்களாவீர்கள்." மில் துணியைக் கொண்டு பகிஷ்காரத்தை நிறைவேற்ற நான் யோசிக்கவில்லை, கதரைக் கொண்டே பகிஷ்காரத்தை நிறைவேற்ற எண்ணுகிறேன் என்று நான் சொன்னதும் அவர் வாயை மூடிக்கொண்டார். அந்நியத் துணிக்குப் பதிலாக இருக்கக்கூடிய அளவுக்குக் கதரை உற்பத்தி செய்து, அதை எல்லோரும் வாங்கும்படியும் செய்துவிட்டால் இது சாத்தியமான யோசனையே என்று அவர் உடனே ஒப்புக்கொண்டார். நான் இங்கே குறிப்பிட்டிருப்பவரைப் போன்றே அநேக மில் சொந்தக்காரர்களும் இதை ஒப்புக்கொள்ளுகிறார்கள். அப்படியிருக்க, காங்கிரஸ்காரர்கள் மில் துணியை உபயோகிக்கும்படி பிரசாரம் செய்வது பகிஷ்காரத்திற்கு இடையூறுதான் செய்யும். அதோடு, யோசனையில்லாத முறைகளை அனுசரிப்பதனால் இயக்கம் தோல்வியடைவது நிச்சயமாகையால் அதன் காரணமாக முடிவில் மில்களுக்கும் தீமையாகிவிடும். இயக்கம் திரும்பத் திரும்பத் தோல்வியடைவதால் மக்களிடையே மனச்சோர்வு அதிகமாகி, எந்தத் துணி வாங்கினால் என்ன என்ற அசிரத்தைப் போக்கு மக்களுக்கு ஏற்பட்டுவிடும் என்பதை வாசகர் அறிய வேண்டும். எப்படியும் இத்தடவை தோல்வியைத் தவிர்த்தாக வேண்டும். தவிர்க்கக்கூடிய தவறுகளைத் தீர யோசியாததாலும், சோம்ப

லான சிந்தனையாலும் நாம் செய்துவிடக்கூடாது. பொது மக்களின் அசிரத்தைதான் அந்நியத் துணி வியாபாரிக்கு இந்நாட்டில் நல்ல இடம் தேடிக் கொடுத்துவிட்டது. மக்கள் தங்களுக்குத் தாங்களே யோசித்து அதன் பேரில் ஏற்றதைச் செய்துகொள்ளும்படி தூண்டிவிட்ட மாத்திரத்திலேயே பகிஷ்கார வெற்றி நிச்சயமானதாகிவிடும். ஆகையால், இந்நாட்டு மில்கள் பகிஷ்கார இயக்கத்தில் தங்கள் பங்கைச் செய்து வருகின்றன. காங்கிரஸ்காரர்களிடமிருந்து உதவி இல்லாமலேயே அதன் மூலம் மில்கள் லாபமடைந்தும் வருகின்றன.

இப்பொழுது முதல் கேள்விக்கு வருவோம். இயக்கத்திற்கு மில் சொந்தக்காரர்கள் தீவிரமாகவும், வேண்டுமென்று விரும்பியும், பலனளிக்கக்கூடியதாகவும் உதவுவதற்கு ஒரு வழி இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இவர்களுடைய தீவிரமான ஒத்துழைப்பைப் பெறுவதற்காகப் பண்டித மாளவியாஜியும், மோதிலால்ஜியும், நானும் முன்னால் ஒரு முயற்சி செய்தோம். அம்முயற்சி தோற்றுப் போயிற்று. அரசாங்கம் பகிரங்கமாகச் சம்பந்தப்படாத அல்லது ரகசியத்தில் அரசாங்கம் கண்டிக்கிறது என்று சந்தேகிக்க இடமிருக்கும் ஓர் இயக்கத்தில், காங்கிரஸின் நிபந்தனைகளுக்கு உட்பட்டு மில்கள் தீவிரமாக ஈடுபடுவது என்பது, மில்களுக்குச் சாத்தியமான காரியமாக இல்லாத நிலைமையே அத்தோல்விக்கு ஒரு வேளை காரணமாக இருக்கலாம். பெரும்பாலான மில்கள், பாங்கிகளின் செல்வாக்கிற்கு உட்பட்டவைகளாக இருந்து வருகின்றன. அந்தப் பாங்கிகளோ, அரசாங்கத்தின் நல்லெண்ணத்தைக் கொண்டு வாழ வேண்டியவைகளாக இருக்கின்றன. ஆனால், அரசாங்கத்தின் நிர்ப்பந்தத்தை, அந்த நிர்ப்பந்தம் எவ்வளவுதான் தந்திரமாகக் கையாளப்பட்டாலும், அதற்கு உடன்பட மறுத்துவிடும் மில்கள் இருக்குமானால், அந்த மில்களோ, அவைகளில் எதுவோ, முழுவதுமோ அல்லது பகுதியாகவோ இயக்கத்தில் நேரடியாக ஈடுபடுவதற்கான நிபந்தனைகள் இதோ இருக்கின்றன :

1. மில்கள் தங்களுடைய ஏஜெண்டுகள் மூலம் கதரை விற்கலாம்.

2. தங்களுடைய ஆற்றல்களை அவை பகிஷ்கார இயக்கத்திற்கு அளிக்கலாம்.

3. பகிஷ்காரத்தை முன்னிட்டுத் தாங்கள் உற்பத்தி செய்ய வேண்டிய ரகங்கள் இன்னவை என்பதை அகில இந்திய நூற்போர் சங்கத்துடன் கலந்து பேசி மில்கள் முடிவு செய்து கொள்ளலாம்.

4. கதர் என்ற பெயரிலோ, வேறு எந்தப் பெயரிலோ கதரை உற்பத்தி செய்வதை அவர்கள் நிறுத்தி விடலாம்.

5. நஷ்டம் வராத, லாபத்தை அதிகரித்துக் கொள்ளாத வகையில் மில் துணிகளின் விலையை அவை ஒழுங்குபடுத்திக் கொள்ளலாம்.

6. பகிஷ்கார இயக்கத்திற்கு மில்கள் பொருளுதவி செய்ய லாம்.

நான் இங்கே கூறியிருக்கும் இந்த முக்கியமான ஆறு வழி களிலிருந்து மற்றும் பல வழிகளையும் எளிதில் அமைத்துக் கொள்ளலாம். மில் சொந்தக்காரர்களும், அவர்களுடைய பங்கு தாரர்களும் தேசாபிமானமுள்ளவர்களாக இருந்து, தங்கள் லாபத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ளவும் தயாராயிருந்தால் தான் இந்த உதவியை அளிக்க முடியும். சரியானபடி எடுத்துக் கூறி ஆதரவு தேடினல் பெரும்பாலான பங்குதாரர்கள் ஆட்சே பிக்கமாட்டார்கள் என்பது நிச்சயம். ஆகையால், இதில் முக்கியமான ஒரு முடிவுக்கு வர வேண்டியவர்கள் முதலாளி களே. அவர்களில் ஒருவர் என்னிடம், ‘நாங்கள் இயக்கத்தில் கலந்து கொள்ளுவதைத் தவிர வேறு வழியில்லை என்று ஏற்படும் போது நாங்கள் கலந்துகொண்டு விடுவோம்; அதற்கு முன்னல் இல்லை’ என்று கூறினர். அவர் சொன்னதே சரியாக இருக்க லாம்.

கடைசியாக வாசகர் இன்னும் ஒன்றையும் அறியவேண்டும்: மில்கள் இந்திய மண்ணில்தான் அமைக்கப்பட்டிருக்கின்றன என்பதனல் எல்லா மில்களையும் நம் நாட்டு மில்கள் என்று சொல்லிவிட முடியாது. பெயரளவிலேயே இந்நாட்டு மில்கள் என்று இருக்கும் மில்களும் இருக்கின்றன. அவற்றின் சொந்தக் காரர்களும், அவற்றை நிர்வகிப்பவர்களும் அந்நிய நாட்டினர். அவற்றின் பங்குதாரர்களும் அந்நியர். இந்தியரை நிர்வாகத்தி லும் பங்குதாரர்களாகவும் அவை சேர்த்துக்கொள்ளுவதில்லை. அவை அடையும் லாபத்தில் பெரும் பகுதி இந்தியாவிலிருந்து வடி கட்டிக்கொண்டு போகப்பட்டு விடுகிறது. அவற்றின் வருமானத்தில் இந்தியாவுக்குக் கிடைப்பது, மிகச் சொற்பத் தொகையான தொழிலாளர் சம்பளம். இப்பொழுது இருக்கும் அரசாங்கத்தைப் போன்றே இந்த மில்களும் இந்நாட்டினவை அல்ல. இவை பகிஷ்கார இயக்கத்திற்கு என்றுமே உதவி செய்யமாட்டா.

—‘எங் இந்தியா’ – 4—7—1929

# 3

# அந்நியத் துணி வர்த்தகர்கள்

அந்நியத் துணி பகிஷ்காரம் சம்பந்தமாக என் கருத்து இன்னது என்பதைப் பத்திரிகைப் பிரதிநிதிகளிடம் கூறியிருக்கிறேன். வர்த்தகர்களுக்கு ஏற்பட்டிருக்கும் திகில், தேசத்தினிடம் நம்பிக்கை இல்லாததற்குத்தான் அறிகுறி. சுயராஜ்யம் வெகு சீக்கிரத்தில் வந்துவிடப் போகிறது என்பதில் அவர்கள் நிச்சயமாக இருந்தால், நிபந்தனைகளும் அவகாசமும் வேண்டும் என்று அவர்கள் விரும்புவானேன்? அவர்கள் நிபந்தனையின்றி உள்ளே வந்து சுயராஜ்யம் வருவதை இன்னும் அதிக நிச்சயமானதாக ஏன் செய்யக்கூடாது. இவ்வித நிச்சயமில்லாதவைகளெல்லாம், சுயராஜ்யச் சூழ்நிலையைப் பலப்படுத்துவதற்குப் பதிலாக, அதைப் பலவீனமாக்கி மக்கள் மனத்தில் சந்தேகங்களையும் நிரப்பிவிடுகின்றன. இந்த இயக்கம் பெரும்பாலும் நம்பிக்கையையே அடிப்படையாகக் கொண்டது. சுயராஜ்யத்திற்கு நம்மைத் தகுதியற்றவர்களாகச் செய்யக்கூடிய தவறு எதுவும் நமது அமைப்பில் இல்லை. நமது மயக்கம்தான் நம்மை, முப்பது கோடி மக்களைக் கொண்ட இந்நாட்டை, திக்கற்றவர்களாகவும், நம்பிக்கையில்லாதவர்களாகவும் உணரும்படி செய்கிறது. அந்நியத் துணி வர்த்தகர்கள், தங்களுடைய திட்டமில்லாத கூற்றுக்களினால் இந்த மயக்கத்தை வளர்த்துவிடாமல் இருக்கட்டும். அவர்களே இந்த மயக்கத்திலிருந்து விடுபட்டு மற்றவர்களும் விடுபட உதவி செய்யட்டும். அப்படிச் செய்ய அவர்களால் முடியாது என்றால், சமரசத்திற்கு அவர்கள் நிபந்தனைகளைக் கேட்காமலிருக்கட்டும். தங்களுடைய வெளிநாட்டுத் துணி வர்த்தகத்தை நிறுத்தப்போவதில்லை என்று தைரியமாகச் சொல்லிவிடட்டும்.

உறுதியில்லாதவர்களுக்கும் நம்பிக்கை இல்லாதவர்களுக்கும் நான் சரியான ஒரு யோசனை கூறுகிறேன். சரக்குகள் அனுப்பும்படி இவர்கள் கேட்டிருந்தும் இன்னும் சரக்குகள் அனுப்பாமலிருப்பவைகளையெல்லாம் இவர்கள் ரத்துச் செய்துவிடட்டும். சுயராஜ்யம் கிடைக்காமற் போய், இவர்கள் தங்களுடைய பழைய தொழிலையே செய்துகொண்டிருக்க அப்பொழுது விரும்புவார்களானால், எந்தச் சக்தியும் இவர்களைத் தடுத்துவிட முடியாது. தங்களிடம் இருக்கும் சரக்கை இந்தியாவுக்கு வெளியே விற்றுவிட முடியாவிட்டால் அதைப் பூட்டிவைத்துவிடட்டும். ஏழைகளாக இருப்பவர்கள், சுயராஜ்ய அரசாங்கம் அவசியமான நஷ்ட ஈடு எதுவோ அதைக் கொடுக்கும் என்று நம்பியிருக்கட்டும். ஆனால், அவர்கள் தங்களிடமிருக்கும் சரக்குகளுக்கு ஒரு பட்டியல் எடுத்து அதில் அங்கீ

-காரம் பெற்ற தொண்டர்களின் அத்தாட்சியையும் பெறவேண்டும். பணக்காரர்களாக இருக்கும் வர்த்தகர்கள் எந்தவித நஷ்ட ஈட்டையும் எதிர்பார்க்கக்கூடாது. இதனால், இவர்கள் அடையும் நஷ்டம், நாட்டிற்கு விரோதமாக இவர்கள் செய்த பாவத்திற்கு ஓரளவு பிராயச்சித்தமாக இருக்கும். மோசமான யோசனையேயாயினும் கடைசியாக ஒரு யோசனை கூறுகிறேன். நாடு சுயராஜ்யத்தை அடைந்துவிடும் என்பதில் இவர்களுக்கு நம்பிக்கை இல்லை என்றால், தங்களிடமிருக்கும் சரக்குகளை அப்படியே வைத்திருந்து, பொதுஜன இயக்கம் சோர்வினால் செத்துவிட்ட பிறகோ அல்லது பலாத்காரத்தைக் கொண்டு நசுக்கப்பட்டுவிட்ட பிறகோ அதை விற்க ஆரம்பிக்கட்டும். என்றாலும், இப்பொழுது மக்களிடையே இருக்கும் உற்சாகம் வெறும் நீர்க்குமிழியாகவோ, மிகக் கடுமையான அடக்குமுறை கொண்டு ஒடுக்கப்பட்டுவிடுவதாகவோ இல்லாதபடி கடவுள் காப்பாராக. ஆகையால், இயக்கத்தின் பலன் எதுவாக இருந்தாலும், அந்நியத் துணி வியாபாரிகள் கூறியிருக்கும் நிபந்தனைகள் லட்சியத்திற்குத் தீமையானவை. அந்த நிபந்தனைகள் இல்லாமலேயே அவர்களுக்குப் போதுமான பாதுகாப்புகள் இருக்கின்றன என்பதை அவர்கள் காண்பார்கள் என்று நம்புகிறேன். இச்சமயத்திற்கு உகந்த வகையில் நடப்பதற்கு வேண்டிய அளவு அவர்கள் தேசாபிமானத்துடன் இருப்பதோடு தாங்களே செய்துகொள்ளும் முடிவினால் அந்நியத் துணிகளை விற்பதை நிறுத்தி மறியலையும் அனாவசியமானதாக்கிக்கொள்ளட்டும்.

—'எங் இந்தியா' 24—4—1930

4

# நாட்டிற்கு மிக முக்கியம்

காந்தி-இர்வின் ஒப்பந்தம், தங்கள் வியாபாரத்தை இஷ்டம் போல் தாங்கள் நடத்திக்கொண்டு போவதற்கு அனுமதிச் சீட்டு அளித்துவிட்டது என்று அந்நியத் துணி வியாபாரிகள் எண்ணுவதாகத் தோன்றுகிறது. எல்லாவித நிர்ப்பந்த அம்சமும் மறியலிலிருந்து பறிக்கப்பட்டிருக்கிறது; நிர்ப்பந்தத்தினாலேயே தங்களிடமிருக்கும் சரக்குகளைத் தாங்கள் கட்டி முத்திரையிட்டு வைத்துவிட்டதாக எண்ணுகிறவர்கள் எந்தவிதத் தொந்தரவும் இல்லாமல் தங்கள் மூட்டைகளைத் தாராளமாக அவிழ்த்துக் கொள்ளலாம் என்பது உண்மையே. ஆனால், மறியல் அடியோடு நின்றுவிடாது, அந்நியத் துணிக்கு விரோதமாக இருந்து வரும் பொதுஜன அபிப்பிராயம் மறைந்துவிடாது என்பதை அவர்கள் தெரிந்துகொள்ள வேண்டும். எதிர்காலத்தைக் குறித்து நாம்

காணமுடிந்த வரையில், அந்நியத் துணியை அடியோடு விலக்கியாக வேண்டியது எப்போதைக்குமே நாட்டிற்கு ஜீவனைப் போன்று அவசியமானது. இந்த வர்த்தகர்களுக்கு நாட்டினிடம் ஏதாவது நம்பிக்கை இருக்குமாயின், சுயராஜ்யம் இன்னும் வெகு தூரத்தில் இல்லை என்பதை அவர்கள் அறியவேண்டும். ஆனால், அது தூரத்தில் இருந்தாலும்,சமீபத்தில் இருந்தாலும், அந்நியத் துணிக்கு எதிராகவும், மதுபானத்திற்கும், அபின் போன்ற லாகிரி வஸ்துக்களுக்கும் எதிராகவும் நடந்துவரும் கிளர்ச்சி தொடர்ந்து நடந்தே வரும். சுயராஜ்யத்தை அடைந்துவிட்ட பிறகு அத்தகைய அரசாங்கம் செய்யும் முதல் காரியங்களில் அந்நியத் துணி, மதுபானம், லாகிரி வஸ்துக்கள் ஒழிப்பு நடவடிக்கையும் இருக்கும். அந்நியத் துணி, நாட்டு மக்களை ஏழ்மைப் படுத்துகிறது ; மற்றவை மக்களின் ஆன்மாவை அழிக்கின்றன.

—'எங் இந்தியா' 19—3—1931

# 5

# என் நிலைமை

ஸ்ரீ ஹெச். பி. மோடி வருமாறு எழுதுகிறார் :

"வட்டமேஜை மகாநாட்டிற்காகத் தாங்கள் இங்கிலாந்திற்குப் போகும் போது லங்காஷயருக்கும் போகக்கூடும் என்ற வதந்தி சம்பந்தமாக நீங்கள் வெளியிட்டிருந்த சுருக்கமான அறிவிப்பை அதிகக் கவனத்துடன் படித்தேன். அப்படியே தாங்கள் போவீர்கள் என்றே நம்புகிறேன். அதோடு உங்கள் நிலைமையையும் காங்கிரஸின் நிலைமையையும் அறிந்துகொள்ளும் வாய்ப்பைப் பிரிட்டிஷ் உற்பத்தியாளருக்கு அளிப்பீர்கள் என்றும் நம்புகிறேன். இந்திய மக்களின் துணித் தேவையை, நாட்டில் தயாரிக்கும் அல்லது நெய்யும் துணியைக் கொண்டே பூர்த்தி செய்துகொள்ள வேண்டியது நாட்டிற்கு முக்கியமானது என்பதும், உற்பத்தி செய்துகொள்ளும் சக்தியை அதிக அளவுக்கு விருத்தி செய்து கொண்டாலன்றி அந்நியத் துணி வராதபடி செய்துவிட முடியாது என்பதுமே இவ்விஷயத்தில் என் கருத்து. இப்பொழுதுள்ள பொருளாதார மந்த நிலைமை போய்விட்ட பிறகு, மக்கள் அதிகமாகத் துணியை உபயோகிக்க ஆரம்பித்துவிடுவது நிச்சயம். அந்த வேலையைப் பூர்த்தி செய்வனவாகத் துணி உற்பத்தி மில்களும், கதர், கைத்தறி நெசவாளர்களும் இல்லாது போகுமாயின், அப்பொழுது அந்நியத் துணி அதிகமாகவோ, கொஞ்சமாகவோ வந்தேயாகும். ஆகவே, இப்பிரச்னை உள்நாட்டுக் கைத்தொழில்களை விருத்தி செய்வதற்கான வழி துறைகளைப் பொறுத்ததாகவே ஆகிறது. அத்தகைய அபிவிருத்தியை அடைவதற்கு மிகப் பெரிய இடையூறாக இருப்பது, ஜப்பானின் கட்டுப்பாடான போட்டியினால் இத்தொழில் அனுபவித்துக் கொண்டிருக்கும் போட்டியாகும். வருடந்தோறும் ஜப்பான், போட்டிக்குப் புதுப் புதுத் துறையைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுகிறது. அந்தத் துறையில் தான் கால் ஊன்றிக்கொண்டுவிட்ட பிறகு, இந்திய உற்பத்தியாளருக்கு இன்

னும் அதிகக் கேட்டை விளைவிக்கும் வகையில் மற்றத் துறைகளில் போட்டி போடக் கிளம்பிவிடுகிறது. பல தடவைகளிலும் தங்களிடம் விளக்கிக் கூறியிருப்பதைப் போன்று, இப்போட்டியானது குறிப்பிட்ட துணியை மக்கள் உபயோகிப்பதைப் பாதிப்பதோடு இந்திய மில்லில் உற்பத்தியாகும் துணிகளின் விலை முழுவதையும் பாதித்துவிடுகிறது. நாளாவட்டத்தில் இந்தத் தொழிலுக்கு இப்பொழுது இருந்துவரும் பொருளாதார மந்தத்தைச் சமாளித்துக் கொண்டு, புதிய சாதனங்களை அமைப்பதற்குப் பணத்தைச் செலவிட மில்களால் முடிந்து, தொழில் மேம்பாடடையச் செய்ய மற்ற நடவடிக்கைகளையும் எடுத்துக்கொள்ளும் பொழுது, கல்வி முதலிய மற்ற முறைகளினால் அதிகமாகத் திறமை வாய்ந்த நிலைக்குத் தொழிலாளரைக் கொண்டு வந்து விடும்போது பாதுகாப்புக்கான விசேஷ முறைகள் அவசியமில்லாது போகும் அளவுக்குப் போட்டி போடுவதற்காக இந்தியாவின் சக்தி அதிகரித்துவிடக்கூடும். ஆனால், அந்த நிலைமையை அடையும் வரையில் தீவிரமான தடை வரிக் கொள்கையை இந்தியா அனுசரித்தாகவேண்டும். அதிக உயர்ந்த நிலைமையில் தொழில்களை அமைத்துக் கொண்டிருக்கும் அமெரிக்காவைப் போன்ற நாடுகள், அவ்விதமே செய்து வந்திருக்கின்றன. கைத்தொழில் அபிவிருத்தியில் இன்னும் குழந்தைப் பிராயத்திலேயே இருந்து வரும் இந்தியா அந்த உதாரணத்தைப் பின்பற்றாமல் இருக்க முடியாது. துணியை வாங்கி உபயோகிப்பவரின் நலனையும் கவனிக்க வேண்டும் என்பது உண்மையே. அவசியம் ஏற்படும்போது அவர்களுடைய நலனைப் பாதுகாக்கும் முறைகளை மேற்கொண்டு விடலாம் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. இது சம்பந்தமாக ஒரு விஷயத்தையும் நினைவில் வைக்கவேண்டும். துணியை வாங்குவோர், அவர்கள் வாங்கும் துணிக்குரிய சிக்கனமான விலைக்கு அதிகமாகக் கொடுக்கும்படி செய்துவிடாத வரையில், அவர்கள் சுரண்டப்பட்டுவிடுவார்கள் என்பதற்கே இடமில்லை. மலிவான அந்நியப் பொருள்களைக் கொண்டுவந்து குவித்துவிடுவது வாங்குவோருக்குச் சௌகரியமாக இருக்கிறது என்றால், அந்தச் சௌகரியம் முற்றிலும் தாற்காலிகமானதே. உள்நாட்டுப் பொருள்களின் அடக்க விலைக்குக் குறைவான விலையில் மலிவான வெளிநாட்டுச் சரக்குகள் வாங்குவோருக்குக் கொஞ்ச காலத்திற்குக் கிடைத்து வருவது அவர்களுக்கும் நாட்டுக்கும் நாளாவட்டத்தில் நல்லதாக ஆகாது.

"இந்தியாவில் இருக்கும் கைத்தொழில்களை இனி எப்படிப் பாதுகாத்து நாட்டின் முழுத் தேவையையும் அது பூர்த்தி செய்யும்படி செய்வது என்ற கேள்வி எழுகிறது. முன் தடவை தாங்கள் பம்பாய்க்கு வந்திருந்தபோது நான் தங்களைச் சந்தித்துப் பேசினேன். திருப்திகரமான வகையில் ராஜீய சமரசம் ஏற்பட்டு விடுமானால், ஜப்பான் சரக்குக்கு எதிராக விசேஷத் தீர்வையை விதிப்பதைத் தாங்கள் ஆதரிப்பீர்கள் என்று தாங்கள் கூறியதிலிருந்து எனக்குத் தோன்றிற்று. சமீபத்தில் நீங்கள் அறிவித்ததன் சாராம்சத்தை நான் சரியாகப் புரிந்துகொண்டிருப்பதாயிருந்தால், முடிந்தால் லங்காஷயர் துணியோ அல்லது வேறு அந்நிய நாட்டுத் துணியோ ஒரு கெஜம் கூட இந்நாட்டிற்குள் வரவிடமாட்டீர்கள். ஜப்பானின் போட்டியைச் சமாளிப்பதற்கான விசேஷ முறைகளினால் சில சந்தர்ப்பங்களில் ஜப்பானுக்கு எதிராக லங்காஷயர் சகாயமடைவதைத் தாங்கள் பொருட்படுத்தமாட்டீர்கள். தங்கள் நிலைமையை நான் சரியானபடி புரிந்துகொண்டிருக்கிறேனா என்பதைத் தயவு செய்து எனக்கு அறிவிப்பீர்களா?"

என் நிலைமை தெளிவானது.

*1.* நான் விரும்புவதே நடப்பதாக இருந்தால், உள்நாட்டு மில்களில் தயாராகும் துணிகள் உள்பட மற்றெல்லாத் துணிகளையும் விலக்கி இந்தியா முழுவதிலும் கதர்தான் அணிந்திருக்க வேண்டும்.

2. தனக்குத் தேவையான கதர் முழுவதையும் உற்பத்தி செய்துகொண்டுவிட இந்தியாவுக்கு மனமில்லாதிருக்கும்போது (அதற்குச் சக்தி இல்லை என்பதற்கே இடமில்லை), போதாததற்கு உள்நாட்டு மில் துணியை நான் அனுமதிக்கவே வேண்டும்.

*3.* அந்நியத் துணியானது, கதர், இந்திய மில் துணி ஆகிய இரண்டினோடும் போட்டி போடுவதனால் அந்நியத் துணி மறியல் இருந்து வருகிறது. அந்த நாட்டில் துணி நியாயமாக உற்பத்தி செய்து இங்கே கொண்டு வரப்படுகிறதா, இல்லையா என்ற வகையில் போட்டி நியாயமானதா, அக்கிரமமானதா என்பது பொருத்த மில்லாதது.

*4.* போட்டியே இல்லை என்றால், கொஞ்சம் அந்நியத் துணி இந்தியாவுக்கு வந்துதான் ஆகவேண்டும் என்பது தெளிவானதாகுமாயின், சுதந்திரமடைந்த இந்தியாவுடன் இங்கிலாந்து பங்கு கொண்டிருக்குமாயின், மற்ற எல்லா நாடுகளையும் விட்டுவிட்டு இங்கிலாந்துக்குச் சலுகை அளிப்பேன். ஆனால், இந்தியா சுதந்தர மடைந்துவிடும்போது தனது தேவைக்குப் போதுமான கதரைக் கொஞ்ச காலத்திற்குள் உற்பத்தி செய்து கொண்டுவிடும், அந்தச் சந்திக் காலத்தில் போதாதற்கு உள்நாட்டு மில் துணியை அது உபயோகித்துக்கொள்ளும் என்பதுதான் என் நம்பிக்கை

—'எங் இந்தியா' – 30—7—1931

பகுதி ஏழு

# கதரின் பொருளாதாரம்

[கதரின் பொருளாதாரம், மற்றப் பொருளாதாரத்திற்கு முற்றிலும் மாறுபட்டது என்பது மகாத்மாவின் திடமான கருத்து. மக்களின் வாழ்வு என்ற அம்சத்தை முற்றிலும் கவனிப்பது ஒன்றே கதரின் பொருளாதாரம் என்று மகாத்மா வற்புறுத்திக் கூறியிருக்கிருர். போட்டி, விலை என்ன என்பதைப் பற்றிய பேச்சுக்குக் கதரில் இடமில்லை என்றும் அவர் கூறியிருக்கிருர். இந் நூலில் முந்திய பகுதியில் 'சில கேள்விகள்' என்ற தலைப்பில் வெளியாகியிருக்கும் அத்தியாயத்தில் 153-ஆம் பக்கத்தில் இதை மகாத்மா விளக்கியிருப்பதைக் காண்க. கதரின் பொருளாதாரம் சாதாரணப் பொருளாதாரத்தைப் போன்றல்லாமல் முற்றிலும் வேருனது என்பதை, 'நூற்பது ஹரிஜனங்களுக்கு உதவி' என்ற அத்தியாயத்திலும் மகாத்மா கூறியிருக்கிருர். அக் கட்டுரையை இதே நூலில் 94-ஆம் பக்கத்தில் காணலாம். அதே கட்டுரையில் கதர்ப் பொருளாதாரத்தின் விதிகளையும் மகாத்மா விள்க்கியிருக்கிருர்.]

## 1

## பருத்தி சாகுபடி

பருத்தி சாகுபடி செய்கிறவர்கள், கையினல் நூற்ற நூலாக்கிக் கொள்ளுவதற்கும், முடிவாகத் தங்கள் சொந்த உபயோகத்திற்காகக் கதர் தயாரித்துக் கொள்ளுவதற்கும், தாங்கள் சாகுபடி செய்யும் பருத்தியில் ஒரு பகுதியை இருப்பில் வைத்துக்கொள்ளும்படி தூண்டுவதற்காக எல்லா இடங்களுக்கும் பரவும் இயக்கம் ஒன்றை ஆரம்பிக்கவேண்டும் என்று ஒரு நண்பர் எழுதி யோசனை கூறியிருக்கிருர். பருத்தி சாகுபடியாகாத இடங்களில் தனிப்பட்ட விவசாயிகள், தங்கள் தேவைக்கு வேண்டிய கறி காய்களை அவர்களே பயிர் செய்துகொள்ளுவதைப் போன்று தங்களுக்குப் போதுமான பருத்தியைச் சாகுபடி செய்துகொள்ளுவதற்கும் ஊக்கமளிக்க வேண்டும் என்று யோசனை கூறுகிருர். இதைஎல்லோரும் செய்துவருவார்களானல், அதனல் குடியானவர்களுக்குக் கதர் மலிவான தாகிவிடும் என்றும் இக்கடிதத்தை எழுதியிருப்பவர் கூறுகிருர். தெற்கே சில பகுதிகளில், கதர் இயக்கம் தோன்றுவதற்கு முன்னலேயே குடியானவர்கள் இம்முறையை அனுசரித்து வந்திருக்கிருர்கள் என்கிருர்.

பருத்தி சாகுபடி செய்வதில் இந்த முறையை இந்திய சமஸ்தானங்கள் நன்ருக வளர்க்க முடியும் என்றும் அவர் கருதுகிருர்.

இக்கடிதத்தை எழுதியிருப்பவர் கூறும் யோசனையில் அதிக உண்மை இருக்கிறது. தங்கள் சொந்தத் தேவைக்குப் போதுமான பருத்தியை விற்காமல் வைத்துக்கொள்ளும்படி பருத்தி சாகுபடி செய்வோரைத் தூண்டும் பரீட்சை, பிஜோலியா (ராஜபுதனம்), பார்டோலி, கத்தியவார் ஆகிய இடங்களில் செய்து பார்க்கப்பட்டு வருகிறது. ஆனல், அதிக விலை கிடைக்கும் போது கையிருப்பில் வைத்திருக்கும் பருத்தியை விற்காமலிருப்பது விவசாயிகளுக்குக் கஷ்டமாக இருக்கிறது என்பது கத்தியவாரில் தெரிந்தது. கதரின் பொருளாதாரத்தை விவசாயிகள் உணர்ந்து கொள்ளும்படி செய்யும் வரையில் அவர்கள் விற்றுவிடாதபடி செய்வது சாத்தியமில்லை. தங்கள் ஓய்வு நேரத்தைப் பருத்தியில் உபயோகித்து, அது துணியாவதற்கு முன்னல் செய்ய வேண்டியிருக்கும் வேலைகளான பஞ்சு கொட்டுதல், நூற்றல் போன்றவைகளைச் செய்வதால், பருத்தியை அதிக விலைக்கு விற்பதால் கிடைக்கும் லாபத்தையே அடையலாம். அதோடு பருத்தி விலையை ஏற்றி இறக்கிப் பேரம் செய்பவர்களின் பிடிப்பிலிருந்தும் விவசாயிகள் விடுபடலாம் என்பதை அவர்கள் உணரும்படி செய்யவேண்டும். அதாவது, கதர்ப் பொருளாதாரத்தை விவசாயிகளுக்கு அகில இந்திய நூற்போர் சங்கம் கற்றுக்கொடுக்க வேண்டும் என்ருகிறது. கதர் வேலையின் எல்லாப் பிரிவுகளையும் நன்ருகச் செய்வதற்குக் கதர் ஊழியர்கள் பருத்தி சாகுபடி செய்வோருடன் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொள்ளவேண்டும். ஏனெனில், டவுன்களுக்குத் தேவையான கதர் உற்பத்தி செய்வதற்குப் பருத்தியை வாங்குவதில்கூட, பருத்தி சாகுபடி செய்பவர்களுடன் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டியது அவசியமாவதோடு, இப்பொழுது வாங்கி வருவதைப் போலப் பருத்தியை மார்க்கெட்டில் வாங்காமல் விவசாயிகளிடமே வாங்கவும் வேண்டும். தரகர்களிடம் சிக்கிக் கொள்ளாமல், பருத்தி மார்கெட்டின் விலை ஏற்றத் தாழ்விஞலும் பாதகமடையாமல், கதர் விலையை ஒரே மாதிரியான விலையுள்ளதாக நாம் நிர்ணயிக்க வேண்டுமாயின், விவசாயிகளுடன் நாம் தொடர்பு வைத்துக்கொண்டு நமக்கே நேராகப் பருத்தியை விற்கும்படியும் தூண்டவேண்டும். கிடைக்கக்கூடிய அதிக விலைக்கு விற்பது, சாத்தியமான அளவு குறைந்த விலைக்கு வாங்குவது என்பதையே வர்த்தக உலகம் நம்புகிறது. ஆனல், கதர் அபிவிருத்தி அடைய அடைய, இதுவரை வர்த்தக உலகம் அனுசரித்து வந்திருக்கும் முறை வேறு, நம் முறை முற்றிலும் வேருக இருக்கவேண்டும் என்பதை நாம் அதிகமாகத் தெரிந்துகொள்ளுவோம். இப்பொழுது இருந்துவரும் வர்த்தக உலகம் நியாயத்தை அடிப்படையாகக் கொண்டது அன்று. 'வாங்குபவர்கள் உஷாராயிருங்கள்' என்பதுதான் அதன் கொள்கை. ஆனல், 'எல்லோருக்கும் நியாயம்' என்பதுதான் கதர்ப் பொருளாதாரத்தின் தத்துவம். ஆகை

யால், ஆன்மாவைக் கொல்லுகின்ற போட்டி முறைக்கு இதில் இடமே இல்லை. பரம ஏழைகளின், திக்கற்றவர்களின் நலனையே கவனிக்கும் வகையில் கதரின் பொருளாதாரம் அமைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, அப் பாமர மக்களுடன் கதர் ஊழியர்கள் கலந்து, அவர்களுடைய நம்பிக்கையைப் பெறும் அளவுக்குத் தான் கதரின் வெற்றி இருக்கும். அவர்களுடைய நம்பிக்கையைப் பெறுவதற்கு இருக்கும் ஒரே வழி, அவர்களுடன் இருந்து தன்னலமற்ற ஊழியம் செய்வதுதான்.

பருத்தி சாகுபடி செய்கிறவர்கள் பருத்தியை இருப்பில் வைத்துக்கொள்ளும் வசதி இந்திய சமஸ்தானங்களுக்கு இருக்கிறது என்றும், மற்ற விவசாயிகள் அங்கே தங்களுக்குப் போதுமான பருத்தியைச் சாகுபடி செய்துகொள்ளலாம் என்றும் கடிதம் எழுதியிருப்பவர் கூறும் யோசனை உண்மையானது என்பதில் சந்தேகமில்லை. என்றாலும், 'பூனைக்கு யார் மணியைக் கட்டுவது ?' என்பதுதான் கேள்வி. விவசாயிகளின் நலனைக் குறித்துப் பெரும்பாலான சமஸ்தானங்கள் கவலைப்படுவது இல்லை. இப்பொழுது அவைகளுக்கு இருக்கும் முக்கியமான வாழ்க்கை லட்சியம், எப்படியாவது வருமானத்தை அதிகரித்துக்கொண்டு அதில் பெரும் பகுதியைத் தங்கள் சொந்த இன்பத்திற்குச் செலவிடுவது என்பதுதான். மேலும், மற்ற முதலாளிகளைப் போன்றே இவர்களுக்கும் கதரின் பொருளாதாரத்தில் நம்பிக்கை இல்லை. ராட்டையைக் கிராமத் தொழிலாக மேற்கொள்ளுவது சாத்தியமா என்பதைக் குறித்து இப்பொழுது மைசூரில் அதிக ஜாக்கிரதையுடன் சோதனைசெய்து வருகிறார்கள். அந்தச் சோதனை விஞ்ஞான ரீதியிலும் பொறுமையோடும் செய்யப்பட்டு வெற்றி பெறும் என்று காணப்பட்டால் அது எங்கும் வேகமாகப் பரவும் என்று நம்பலாம்.

—'எங் இந்தியா'-27—10—1927

## 2

# கதர் ஊழியர்களுடன் பேச்சு

[டாக்டர் பட்டாபி சீதாராமய்யா, ஸ்ரீ சீதாராம் சாஸ்திரி, ஸ்ரீ நாராயண ராஜு உள்பட பிரபல ஆந்திர கதர் ஊழியர்களின் தூது கோஷ்டியினர், சில நாட்களுக்கு முன்னால் காந்திஜியைச் சந்தித்துப் பேசினர். ஆந்திர தேசத்தில் கதர் அபிவிருத்திக்கு வருங்காலத்தில் செய்யவேண்டிய வேலை முறைகளைக் குறித்துக் காந்திஜியுடன் விவாதிக்கவே இவர்கள் வந்தார்கள். இப்பொழுதுள்ள நிலையில் கதர் ஸ்தாபனத்தில் ஜனநாயகக் கொள்கையைக்கொண்டு வருவது, கதர் உற்பத்தியிலிருந்து வர்த்தக அம்சத்தை நீக்கிவிடுவது போன்ற

கதர் ஸ்தாபனத்தின் தத்துவம், பொருளாதாரம் சம்பந்தமான அநேக விஷயங்கள் அப்பொழுது பேசப்பட்டன. விவாதித்த சில விஷயங்கள் சம்பந்தமாக மகாத்மா கூறியவைகளின் சாராம்சம் கீழே கொடுக்கப்படுகிறது-பி.]

கதர் விஞ்ஞானம் சில விஷயங்களில் சாதாரண வியாபாரத்திற்குள்ளவைகளுக்கு நேர்மாறான முறையில் வேலை செய்கிறது என்பதை, உங்கள் கதர் உற்பத்தி முறையை மாற்றியமைப்பதில் நீங்கள் மறந்துவிடக்கூடாது. 'தேசங்களின் செல்வம்' என்று ஆடம் ஸ்மித் எழுதிய நூலில், பொருளாதார அற்புதம் எவ்விதம் சில விதிகளினால் இயங்கி வருகிறது என்பதை எடுத்துக்காட்டிவிட்டு, பொருளாதார விதிகள் சுயேச்சையாக இயங்குவதைக் கெடுப்பதாக இருக்கும் 'கெடுக்கும் அம்சங்களான' மற்றும் சில விஷயங்களையும் அவர் விவரித்திருக்கிறார் என்பதை நீங்கள் அறிவீர்கள். இவைகளில் முக்கியமானது 'மனித அம்சம்'. கதரின் பொருளாதாரம் முழுதும் இந்த 'மனித அம்ச'த்தையே முற்றிலும் பொறுத்திருக்கிறது. ஆடம் ஸ்மித் கூறும் அசல் பொருளாதார நோக்கமான மனிதனின் சுயநலமே 'கெடுக்கும் அம்சமாக' ஆவதால் அதை வென்றாகவேண்டும். ஆகையால், மில் துணி உற்பத்திக்கு எது பொருந்துமோ அது கதருக்குப் பொருந்தாது. தரத்தை மட்டமாக்குவது, கலப்படம் செய்வது, மனிதரின் கீழ்த்தரமான உணர்ச்சிக்கு உகந்ததைக் கொடுப்பது ஆகியவை வர்த்தகப் பொருள்களின் உற்பத்தியில் நிரந்தரமாக இருந்து வருகின்றன. அவைகளுக்குக் கதரில் இடம் இல்லை. அதிகப்படியான லாபம், குறைவான கூலி என்பதற்கும் கதரில் இடம் இல்லை. இதற்கு மாறாக அசல் லாபம் என்பது எதுவும் கதரில் இல்லை. நஷ்டமும் இருக்கக்கூடாது. ஆனால், ஊழியர்கள் இன்னும் தகுதியில்லாத கற்றுக்குட்டிகளாக இருப்பதனால் நஷ்டம் இருக்கிறது. கதரில் கிடைக்கும் விலை, அதன் முக்கியமான உற்பத்தியாளரான நூற்போருக்குப் போகிறது; மற்றவர்களுக்குக் கூலியைத் தவிர அதிகமாகக் கிடைப்பதில்லை.

எல்லாவற்றையும் ஒரே மாதிரியானதாக்குவது என்ற விஷயத்தைப் பார்ப்போம். இதைக் கதரில் அமுலுக்குக் கொண்டுவர முடியாது. ஒரு சமயம் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் சொன்னதைப் போல, நூற்கும் சாதாரணமான ஓர் ஏழை, ஒரே மாதிரியான ரக நூலை எப்பொழுதும் நூற்க முடியாது. அவள் யந்திரம் அல்ல. இன்று அவள் உடல் நலமின்றி இருக்கலாம்; நாளைக்கு அவள் குழந்தை நோயுற்றிருக்கலாம். இதனால் அவள் மனம் வேறு விஷயங்களில் ஈடுபட்டிருக்கலாம். நூற்கும் அந்த ஏழையிடமோ, அவளுடைய குழந்தையிடமோ உங்களுக்கு அன்பு இருக்குமாயின், மிருதுவான, ஒரே மாதிரியான நூல்தான் கொடுக்க வேண்டும் என்று நீங்கள் வற்புறுத்தமாட்டீர்கள். அச்சமயம் அவள் இருக்கும் நிலைமையில் அவள் கொடுக்கக் கூடிய நூல் எதுவானாலும் அதைக் கொண்டு திருப்தியடைவீர்

கள். அவளுடைய கைகளின் புனிதமான ஸ்பரிசம் கதருக்கு உயிரையும் சரித்திரத்தையும் அளிக்கிறது. அதை யந்திரத்தில் தயாரான நூல் ஒரு போதும் அளிக்கமுடியாது. யந்திரத்தில் தயாரான பொருள்களில் இருக்கும். அழகு கண்ணுக்குத்தான் கவர்ச்சியாக இருக்கிறது. ஆனால், கதரில் இருக்கும் அழகு முதலில் உள்ளத்திற்குக் கவர்ச்சியை அளித்துப் பிறகுதான் கண்ணுக்குக் கவர்ச்சியளிக்கிறது. ஆகையால், கதரை வெளுப்பது என்பதையும் நான் தவறு என்பேன். வெளுப்பது கதரின் விலையை அதிகமாக்குகிறது ; அது நீடித்து உழைக்கக் கூடியதையும் பாதிக்கிறது ; அதோடு போலிக் கதர் மோசடியைக் கண்டுபிடிப்பதும் மேலும் அதிகக் கஷ்டமானதாகிறது. பொது ஜனங்கள் விரும்புவதற்கு ஏற்றபடி நாம் கொடுக்கவேண்டியதில்லை. ஆனால், அவர்களிடம் புதிய ருசியை வளர்க்க முயற்சிக்க வேண்டும். கதர் நன்றாக வெளுப்பாவதற்குச் சாதாரணமாகச் சில நாட்கள் துவைத்து வந்தாலே போதும். அதனால் துணி நன்றாக மிருதுவாக இருக்கும். அந்த மிருதுவை சலவை நாசமாக்கிவிடுகிறது. அனாவசியமான செலவுகளையெல்லாம் குறைப்பதற்கு ஒவ்வொருவரும் தங்களாலான உதவியைச் செய்யும்படி செய்ய வேண்டும்.

## நூற்போர் மனத்தை மாற்றல்

கதரை ஒரு வர்த்தகப் பொருளாகக் கருதாமல், அரைப் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்கள் உயிர் வாழ்வதற்கு அவசியமான ஒன்றாக அதை நாம் கருதுவதானால், நூற்கும் பெண்களின் வீடுதோறும் நாம் சென்று, அவர்கள் நூற்கும் நூலைக் கொண்டே தயாரான கதரை அவர்கள் அணிய வேண்டும் என்று எடுத்துக் கூற வேண்டும். இப்படிச் செய்வதால், உற்பத்திச் செலவு உடனே குறைந்துவிடுவதோடு தானே வினியோகமாகிவிடுவதும் உறுதியாகிறது. இதுவரையில் நகரமக்களுக்காகக் கதர் உற்பத்தி செய்வதற்கு மாத்திரமே நாம் முயற்சி செய்து வந்திருக்கிறோம். ஆரம்பத்தில் கதர் உற்பத்தி அதிகமில்லாத சாதாரண நிலையிலிருந்து இப்பொழுது ஆண்டுக்குப் பல லட்சத்திற்கு உற்பத்தி செய்வதற்கு வளர்ந்திருக்கிறது. எத்தனையோ ரகங்களையும் தயாரித்து வருகிறோம். ஆனால், இப்பொழுது இதெல்லாம் எனக்குத் திருப்தியளிக்கவில்லை. இதைவிட இன்னும் அதிக உயர்வான நோக்கத்தின் பேரிலேயே கதர் கொண்டு வரப்பட்டது. அதாவது, நமது கிராமங்கள் பட்டினியை அடையாதவைகளாக இருக்கும்படி செய்வதுதான் நோக்கம். கிராமவாசிகள் தாங்களே கதரை உடுத்தி, மிஞ்சியதை நகரங்களுக்கு அனுப்புவதாக இருந்தாலன்றி இதுசாத்தியமல்ல. கதரின் ஒரே ரகசியம், அது உற்பத்தியாகும் இடத்திலேயே அது விற்பனையாகிவிடுவதிலும், உற்பத்தி செய்கிறவர்களும் அதை உபயோகிப்பதிலும்தான் இருக்கிறது.

## நிர்வாகச் செலவு

நமது நிர்வாகச் செலவு இப்பொழுது அதிகமாக இருக்கிறது என்பதே என் கருத்து. கதரின் கேந்திரமான நோக்கத்திலேயே நமது கவனம் முழுவதையும் செலுத்துவோமாயின், நிர்வாகச் செலவுகள் குறைந்துவிடும். கதரின் விலையைக் குறைப்பதற்கான விதிகள், முக்கியமாக லாபத்தையே உத்தேசித்துத் தயாரிக்கப்படுபவைகளான வர்த்தகப் பொருள் சம்பந்தமான விதிகளுக்கு, முற்றிலுமல்லாவிட்டாலும் ஓரளவுக்கு மாறுபட்டவையாகும். கதரில், அதன் கருவிகளை அபிவிருத்தி செய்வதில் ஓர் எல்லை இருக்கிறது. ஆனால், மனிதரின் அறிவையும் ஒழுக்கத்தையும் விருத்தி செய்துகொள்ளுவதில் ஓர் எல்லை என்பதே இல்லை. இந்த இரண்டையும் நம்மால் அபிவிருத்தி செய்துகொள்ள முடியவில்லையென்றால், கதரையும் நாம் அபிவிருத்தி செய்ய முடியாது. ஆகையால், கதரில், ஸ்தாபனம் ஒழுங்காக நடந்து வருவதற்கு ஒத்த வகையில் மத்தியிலிருக்கும் தரகரை நீக்கிவிடுவதன் மூலம் செலவைக் குறைக்கிறோம். கதர் தனக்குத் தானே காரியங்களைச் செய்துகொள்ளுவதாகவும், தானே இயங்குவதாகவும் ஆகிவிடும்போது ஸ்தாபனத்திற்கு அவசியம் இல்லை.

கதர் விஞ்ஞானம் இன்னும் சிசுப் பிராயத்திலேயே இருந்து வருகிறது. இது விருத்தியாகிவரும் விஞ்ஞானம். இதில் புதிதாக நான் ஒவ்வொன்றையும் கண்டுபிடிக்கும் போதெல்லாம் இதன் விஞ்ஞானத்தில் நான் அறிந்துகொண்டிருப்பது எவ்வளவு கொஞ்சம் என்பதை மேலும் அதிகத் தெளிவாக நான் உணர்ந்து வருகிறேன். இதுவரை பயன்படுத்தப்படாத, வற்றாத மனித சக்தியின் செல்வத்தை இந்தியா பெற்றிருப்பதைப்போல வேறு எந்த நாடும் பெறவில்லை. சீனாவும் இச் செல்வத்தைப் பெற்றிருக்கிறது எனலாம். கையிலிருக்கும் இந்தச் செல்வத்தைப் பயன்படுத்திக் கொண்டால், வறுமையை நாட்டைவிட்டு விரட்டிவிடலாம். இதைச் செய்துவிடுவதற்கு இருக்கும் உபாயம் கையினால் நூற்பதே. கதரில் இதுவரையில் நாம் செய்திருப்பன யாவும் அவசியமானவையே. அவை இல்லாமல் இந்தக் கட்டத்தை நாம் அடைந்திருக்க முடியாது. ஆனால், இப் பிரச்னையின் விளிம்பைத்தான் நாம் இப்பொழுது தொட்டிருக்கிறோம். இப்பொழுது நாம் அடுத்த படியில் அடியெடுத்து வைக்கவேண்டும். ஆகையால், ஆந்திரக் கதர் நிர்வாக சம்பந்தமான அதிகாரம் உங்களிடமே இருக்கவேண்டும் என்று விரும்புவீர்களாயின், உங்களுடைய கடமையை நிறைவேற்றும் விஷயத்தில் எவ்விதக் கஷ்டமுமின்றி நீங்கள் தாராளமாக அதை அடையலாம். நான் யோசனை கூறிய முறைகளில் நீங்கள் வேலை செய்வதைத் தடுக்கக்கூடியது எதுவும் இல்லை.

—'ஹரிஜன்'—21—9—1934

பகுதி எட்டு

# கதர் விஞ்ஞானம்

## 1

## அது என்ன?

கதர், லாபகரமானதோர் திட்டமாக இருக்குமாயின், அது ஓர் விஞ்ஞானமும் சுவை மிக்க புதுமையானதுமாகும் என்று நான் அடிக்கடி கூறி வந்திருக்கிறேன். 'பருத்தியின் சுவை மிக்க கதை' என்ற புத்தகம் ஒன்று இருக்கிறது என எண்ணுகிறேன். அதில் பருத்தியின் பூர்வ கதை கூறப்பட்டிருப்பதோடு, அதை மனிதன் கண்டுபிடித்ததனால் நாகரிகத்தின் போக்கே எவ்விதம் மாறிப்போய்விட்டது என்பதை எடுத்துக்காட்டவும் அப் புத்தகத்தில் முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. விஞ்ஞான அல்லது சுவை மிக்க புதுமை உணர்ச்சி மாத்திரம் ஒன்றில் இருக்குமாயின் எதையுமே விஞ்ஞானமாகவோ, சுவை மிக்க புதுமைக் கதையாகவோ மாற்றிவிடலாம். கதரைச் சிலர் ஏளனம் செய்கிறார்கள். கையினால் நூற்பதைக் குறித்து ஒருவர் பேசினாலே, இவர்கள் ஆத்திரத்தையும் வெறுப்பையும் காட்டிக்கொள்ளுகின்றனர். ஆனால், இந்தியா முழுவதிலும் இருந்துவரும் சோம்பல் நிலைமையையும், வேலையில்லாத் திண்டாட்டத்தையும், அவற்றின் விளைவாகவுள்ள ஏழ்மையையும் போக்கிவிடும் சக்தி கதருக்கு உண்டு என்று சொன்ன மாத்திரத்தில், வெறுப்பதற்கோ, பரிகசிப்பதற்கோ முடியாத ஒன்றாகக் கதர் ஆகிவிடுகிறது. உண்மையில் இந்த அவசியம் இல்லை. அதன் சக்தியை யோக்கியமாக எடுத்துக்காட்டுவதே அதில் கவனம் அதிகமாக ஈடுபடுவதற்குப் போதுமானது. ஆனால், கதருக்கு இந்தச் சக்தி இருப்பதாகக் கூறி, சிலர் செய்வது போல, ஒன்றும் தெரியாத ஓர் ஏழைத் தொழிலாளி தன் பிழைப்புக்காகப் பஞ்சடித்து, பட்டைபோட்டு, நூற்றோ, நெய்தோ வர வேண்டியிருப்பதைப் போன்று நீங்கள் செய்யமுடியாது. அதன் சக்தியில் நம்பிக்கை இருப்பவர், விரும்பி, அறிவோடு, முறையான வகையில் விஞ்ஞான உணர்ச்சியுடன் அதை ஆராய்வார். அதைக் குறித்துக் கூறப்படுபவைகளை ஏற்றுக்கொண்டுவிட மாட்டார்; உண்மைகளையும் புள்ளி விவரங்களையும் சோதித்துப் பார்ப்பார். தோல்விகளினால் மனம் தளர்ந்துவிட மாட்டார். அற்ப வெற்றிகளைக் கண்டு பரவசமடைந்துவிட மாட்டார். லட்சியத்தை அடையும் வரையில்

திருப்தி கொள்ளவும் மாட்டார். காலஞ்சென்ற மகன்லால் காந்திக்குக் கதரின் சக்தியில் ஜீவனுள்ள நம்பிக்கை இருந்தது. அவருக்கு இது அதிசயிக்க வைக்கும் சுவை மிக்க புதுமையாகவும் இருந்தது. கதர் விஞ்ஞானத்தின் முக்கியங்களைக் குறித்து அவர் எழுதினர். எந்த விவரத்தையும் அவர் அற்பமானதென்று கருதிவிடுவதில்லை. பெரியது என்று எண்ணி எந்தத் திட்டத்தையும் அவர் விட்டதும் இல்லை. அதே வேகமான ஆர்வம் ரிச்சர்டு கிரக்கிற்கும் இருந்தது; இருந்து வருகிறது. சர்வ வியாபகமான பொருளை அவர் கதருக்குக் கொடுத்திருக்கிருர். அவர் எழுதியிருக்கும் 'கதரின் பொருளாதாரம்' என்ற நூல், கதர் இயக்கத்திற்குச் செய்திருக்கும் அசலான சேவையாகும். அகிம்சையின் அற்புதமான சின்னம் கதர் என்று அவர் கருதுகிருர். அப்படியெல்லாம் அது இருக்கலாம், இல்லாதும் போகலாம். ஆனல், அவற்றின் நம்பிக்கை, கவர்ச்சிகரமான திட்டத்திலிருந்து அனுபவிக்கக் கூடிய ஆனந்தத்தையும் இன்பத்தையும் மகன்லால் காந்திக்கு அளித்தது ; ரிச்சர்டு கிரக்கிற்கு அளிக்கிறது. ஒரு சாஸ்திரம், சாஸ்திரமாகவே இருப்பதற்கு உடல், உள்ளம், ஆன்மா ஆகிய மூன்றின் பசியையும் அடக்குவதற்கான முழு வாய்ப்பையும் கொண்டதாக அது இருக்கவேண்டும். அத்தகைய திருப்தியைக் கதர் எவ்வாறு அளிக்க முடியும், இன்னும் சொன்னல், 'கதர் விஞ்ஞானம்' என்று நான் கூறுவதன் பொருள்தான் என்ன என்று கதரில் நம்பிக்கையில்லாதவர்கள் ஆச்சரியப்படுகிருர்கள். தம்மைப் பரீட்சிக்கும்படி கேட்டுக்கொண்ட ஒரு கதர் ஊழியருக்காக நான் அவசரத்தில் தயாரித்த கேள்விகளை இங்கு திரும்பக் கொடுப்பதைவிட அவர்கள் கேள்விக்குச் சரியானபடி நான் பதில் சொல்லமுடியாது. இக் கேள்விகள் தர்க்கரீதியில் தயாரிக்கப் படவும் இல்லை; பூரணமானதாகவும் இல்லை. அவற்றை மாற்றி அமைத்துக்கொள்ளலாம்; சேர்த்துக்கொள்ளலாம். ஹிந்துஸ்தானியில் இருந்த அக் கேள்விகளுக்கு, எனக்காக ஒரு நண்பர் செய்த மொழிபெயர்ப்பைக் கீழே கொடுக்கிறேன் :

## பாகம் 1

*1.* இந்தியாவில் எங்கே, எவ்வளவு பருத்தி உற்பத்தியாகிறது? பருத்தியின் ரகங்களைக் கூறுக. எவ்வளவு பருத்தி இந்தியாவில் மீதமாக இருக்கிறது, எவ்வளவு கையினல் நூற்கப் படுகிறது, எவ்வளவு இங்கிலாந்துக்கும் மற்ற நாடுகளுக்கும் போகிறது?

2. (அ) இந்திய மில்களில் எவ்வளவு துணி தயாராகிறது? இதில் எவ்வளவு துணி இந்தியாவில் உபயோகிக்கப்படுகிறது, எவ்வளவு ஏற்றுமதியாகிறது ?

(ஆ) மில்லில் உற்பத்தியாகும் துணியில் எவ்வளவு சுதேசி நூலைக்கொண்டு தயாரிக்கப்படுகிறது, எவ்வளவு துணி அந்நிய நாட்டு நூலைக்கொண்டு தயாரிக்கப்படுகிறது ?

(இ) எவ்வளவு துணி இறக்குமதியாகிறது ?

(ஈ) இந்தியாவில் எவ்வளவு கதர் உற்பத்தியாகிறது ?

குறிப்பு: உங்கள் விடையைச் சதுர கெஜக் கணக்கிலும் ரூபாய்க் கணக்கிலும் தரவும்.

3. மேலே கூறப்பட்டிருக்கும் மூன்று ரகத் துணியின் தராதரங்களை விவரித்துக் கூறவும்.

4. கதர் அதிக விலையுள்ளதாக இருக்கிறது, முரடாக இருக்கிறது, நீடித்து உழைப்பதில்லை என்று சிலர் சொல்லுகிறார்கள். இந்தப் புகார்களுக்கு உமது பதிலைக் கூறவும். இப் புகார்களில் எதற்காவது ஆதாரம் இருக்குமாயின் அதற்கு நீர் கூறும் பரிகாரத்தையும் சொல்லவும்.

5. கதர் வேலையில் (அகில இந்திய நூற்போர் சங்கத்தில்) நூற்பவர்கள் எத்தனை பேர் வேலை செய்து வருகின்றனர்? இத்தனை ஆண்டுகளாக அவர்கள் சம்பாதித்திருப்பது எவ்வளவு? மில்லில் நூற்பவர்கள் தொகையையும் அவர்களுடைய மொத்த வருடச் சம்பாத்தியத்தையும் கூறுக.

6. (அ) அகில இந்திய நூற்போர் சங்கத்தின் வேலை எப்படி நடந்து வருகிறது? நிர்வாகத்திற்காக அவர்கள் எவ்வளவு செலவு செய்து வருகிறார்கள் ?

(ஆ) சுதேசி மில்லை நடத்துவதற்கு எவ்வளவு சிப்பந்திகளை வைத்திருக்கிறார்கள்? அத்தகைய சிப்பந்திகள் பெறும் சம்பளத்தை மில் தொழிலாளர் பெறும் சம்பளத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தால் என்ன விகிதமாகும்?

7. (அ) வாழ்க்கையின் அத்தியாவசியத் தேவைகளில் துணிக்கு, உமது கருத்தின்படி இருக்கும் இடம் எது?

(ஆ) வாழ்க்கையின் முக்கியமான அத்தியாவசியத் தேவைகளைச் சொல்லவும். அவற்றிற்குள்ள சராசரி விகிதத்தையும் கூறவும்.

8. அந்நிய மில் துணியாயிருப்பினும், இந்திய மில் துணியானாலும் மில் துணியையே கட்டுவதில்லை என்று இந்தியாவிலிருக்கும் எல்லோரும் விட்டுவிட்டால், இந்தியாவுக்கு எவ்வளவு பணம் மிஞ்சும்? அப்பணம் யாருக்குப் போகும்?

9. இந்தியா இறக்குமதி செய்யும் துணிக்குப் பதிலாக எதை ஏற்றுமதி செய்கிறது? இவ்விதம் மாற்றிக்கொள்ளுவதால் இந்தியா நஷ்டமடையுமாயின் அந்த நஷ்டம் எவ்வளவு?

10. ஜனத்தொகையில் துணி வாங்கக்கூடியவர்களாக இருப்பவர்களின் விகிதாசாரம் என்ன ?

11. தங்களுக்கு வேண்டிய துணியைத் தாங்களே தயாரித்துக்கொள்ளுவதற்கு வேண்டிய அவகாசமுள்ளவர்களின் சத விகிதம் என்ன? அவர்கள் எப்படித் தயாரித்துக் கொள்ளலாம்?

12. "சரியான பொருளாதார சம நிலையைக் கதர் உண்டாக்கும்." இப்படிக் கூறுவது உண்மையில் சரியானதா? உமது பதிலுக்குக் காரணத்தைக் கூறுக.

13. கதர் எல்லோரிடத்திலும் பரவிவிடுமாயின், அதனுல் வர்த்தகம், தொழில், போக்குவரத்து ஆகியவைகளில் என்ன மாறுதல்கள், எந்த வகையில் உண்டாகும்?

14. இன்னும் 50 ஆண்டுகளுக்குக் கதர் எல்லோரிடத்திலும் பரவவில்லை என்று வைத்துக்கொண்டால், அப்பொழுது நம் மக்களின் பொருளாதார நிலைமையில் ஏற்படக்கூடியது என்ன?

## பாகம் 2

1. இப்பொழுது இருந்து வரும் ராட்டைகளின் விவரங்களைக் கூறுக. அவற்றில் மிகச் சிறந்தது எது? ராட்டைகளில் ஏதாவது நான்கு வகைகளின் படங்களை வரைந்து, அவற்றின் பகுதிகளின் சரியான அளவையும் கொடுக்கவும். அவை எந்த மரத்தினல் செய்யப்படுகின்றன என்பதையும், கதிரின் நீளம், பருமனையும், 'மால்' கயிற்றின் நீளத்தையும் கூறுக.

2. வேகம், செலவு, பொதுவான சௌகரியங்கள் ஆகியவைகளில் இப்பொழுது இருந்து வரும் ராட்டையையும் எராவ்டா ராட்டையையும் ஒப்பிட்டுக் கூறுக.

3. பருத்தியின் ரகத்தையும், நூலின் பலத்தையும், நூற்ற நூல் இன்ன நெம்பருள்ளது என்பதையும் எப்படிக் கண்டு பிடிப்பீர்?

4. நீர் நூற்கும் நூலின் பலமும் நெம்பரும் என்ன? ராட்டையிலும் தக்ளியிலும் நீர் நூற்கும் வேகம் யாது? சாதாரணமாக எந்த ராட்டையை நீர் உபயோகிக்கிறீர்?

5. ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் அவரவர்கள் உடைக்கு எவ்வளவு துணி வேண்டியிருக்கிறது? இந்த உடைகளைத் தயாரிப்பதற்கு எவ்வளவு நூல் வேண்டும்? அதை நூற்பதற்கு எவ்வளவு நேரம் வேண்டும்?

6. ஒரு குடும்பத்திற்குத் தேவையான ஆடைகளுக்கு எவ்வளவு நூல் வேண்டும்? இதைத் தயாரிப்பதற்கு எவ்வளவு

பருத்தி தேவை? தேவைப்படும் அளவு பருத்தியைப் பயிரிட்டுக் கொள்ளுவதற்கு எவ்வளவு நிலம் வேண்டும்?

(ஒரு குடும்பம் என்பது தந்தை, தாயார், முறையே 7, 5, 3 வயதுடைய ஒரு சிறுமியையும் இரண்டு சிறுவர்களையும் கொண்டது.)

7. இப்பொழுது வழக்கத்தில் இருக்கும் பஞ்சடிக்கும் வில்லைப் புதிதாக வந்துள்ள வில்லுடன் ஒப்பிடுக. ஒரு மணி நேரத்தில் நீர் எவ்வளவு பஞ்சு அடிக்கிறீர்? பஞ்சு சரியாக அடிக்கப்பட்டிருக்கிறதா, இல்லையா என்பதை நீர் எப்படி நிர்ணயிப்பீர்? ஒரு ராத்தல் பஞ்சைப் பட்டை போடுவதற்கு உமக்கு எவ்வளவு நேரமாகிறது? ஒரு தோலாப் பஞ்சுக்கு நீர் எத்தனை பட்டை போடுகிறீர்?

8. ஒரு மணி நேரத்தில் நீர் எவ்வளவு பருத்தி அரைக்கிறீர்? பஞ்சைக் கையினால் அரைப்பதற்கும் யந்திரத்தில் அரைப்பதற்குமுள்ள பேதத்தைக் கூறுக. இந்த இரண்டு முறைகளிலுமுள்ள சாதக பாதகங்களை விளக்குக. இப்பொழுது வழக்கத்தில் இருந்து வரும் கையினால் அரைக்கும் யந்திரத்தின் படத்தை வரைந்து அதை விளக்குக.

9. 36 அங்குல அகலத்தில் ஒரு கெஜம் துணி நெய்வதற்கு 20-ஆம் நெம்பர் நூல் எவ்வளவு நீளம் வேண்டும் என்பதைக் கூறுக. இதை நெய்வதற்கு எத்தனை பேர் வேண்டும்?

10. குழித் தறியையும் நாடாத் தறியையும் ஒப்பிட்டுக் கூறுக.

—'ஹரிஜன்' – 16—1—1937

## 2

# கதர் ஊழியர்கள் அறிய வேண்டியவை

கதர் விஞ்ஞானத்தில் அடங்கியிருக்க வேண்டியவை யாவை என்பதைக் குறித்து விளக்கிக் கூற முந்திய கட்டுரையில் முயற்சி செய்திருக்கிறேன். அகில இந்திய நூற்போர் சங்கத்தின் உற்பத்தி நிலையங்களில் வேலை செய்துவரும் கதர் ஊழியர் ஒவ்வொருவரும் இந்த விஞ்ஞானத்தின் முக்கியாம்சங்களைக் கட்டாயமாக அறிந்திருக்க வேண்டும் என்பது என் கருத்து. ஸ்ரீ லட்சுமிதாஸ் ஒரு கதர் பக்தர். கதர் சாஸ்திரத்தை நன்றாக ஆராய்ந்திருக்கும் எங்களிடமுள்ள மாணவர்களில் இவரும் ஒருவர். ஆனால், இவரைக்கூட இந்தச் சாஸ்திரத்தில் நிபுணர் என்று நான் கூறமாட்டேன். 1936 நவம்பரில் இவர் எனக்கு

எழுதிய கடிதத்தில், ஒவ்வொரு கதர் ஊழியரும் குறைந்த பட்சம் என்ன பரீட்சையில் தேறியவர்களாக இருக்க வேண்டும் என்று தாம் கருதுவதை எடுத்துக் கூறியிருக்கிறார் : அவர் கூறியிருக்கும் பரீட்சையைக் கீழே கொடுக்கிறேன் :

1. பருத்தி, பருத்தி விதை, பஞ்சு இவைகளில் உயர்ந்த ரகத்திற்கும் மட்டமான ரகத்திற்கும் இருக்கும் வித்தியாசத்தைக் கதர் ஊழியர் அறிந்திருக்க வேண்டும்.

2. கையினால் பருத்தி அரைக்கும் மணையின் உருளையைச் சரியானபடி அதில் பொருத்தி, அது வளைந்தோ, சமமல்லாத பருமனிலோ இருக்கும்போது அம்மணையில் நிரந்தரமாகப் பொருத்தப்பட்டிருக்கும் உருளையுடன் அது சரியாகப் பொருந்துவதற்கு வேண்டிய திருத்தங்களைச் செய்யத் தெரிந்திருக்க வேண்டும்.

3. வில்லின் நாணை இணைக்கவும், அந்த நாணைத் தயாரிக்கவும், வரத் தோலைச் சரி செய்யவும் தெரிந்திருக்க வேண்டும்.

4. பருத்தியரைக்கும் கை மணையில் நான்கு மணி நேரத்திற்கு அதிகமாக மணிக்கு ஐந்து ராத்தல் பருத்தியை அரைத்து விடக் கூடியவராக அவர் இருக்க வேண்டும்.

5. பட்டை போடும் நேரம் போக மணிக்கு ஐந்து தோலா பஞ்சை வெட்டும் வேகமுள்ளவராக இருக்க வேண்டும்.

6. ஒவ்வொரு ரக ராட்டையின் அமைப்பையும் அவர் அறிந்திருப்பதோடு ஒவ்வொன்றையும் கோத்துவிடவும் அவருக்குத் தெரிய வேண்டும். வளைந்துவிடும் கதிரை நிமிர்த்துவிடத் தெரிந்திருப்பதோடு பெரிய சக்கரத்தின் மால் கயிற்றையும் குறுக்குக் கயிற்றையும் போடவும் தெரிய வேண்டும்.

7. நான்கு மணி நேரப் பரீட்சையில் 20-ஆம் நெம்பர் நூலை 80 சத விகித பலத்திலும் 95 சத விகித சமமும் உள்ளதான நூலை அவர் நூற்கும் வேகம் 300 சுற்றுகள் (400 கெஜம்) நூற்பதாக இருக்க வேண்டும்.

8. கதர் ஊழியர், ஆந்திரா நூற்பு முறையை அறிந்திருப்பதோடு இரண்டு மணி நேரப் பரீட்சையில் 70 முதல் 80 நெம்பருள்ள, 80 சத விகித பலமும் 95 சத விகித சமமும் உள்ள நூலை நூற்றுவிடக்கூடியவராக அவர் இருக்க வேண்டும்.

9. குழித் தறி, நாடாத் தறியின் அமைப்பு அவருக்குத் தெரிந்திருப்பதோடு அச்சு, புல், விழுது ஆகியவைகளைக் கட்டவும் அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

10. இருபதாம் நெம்பர் நூலைக்கொண்டு 50 அங்குல அகலத்தில் நாடாத் தறியில் நெய்வதற்கு அவருக்குத் தெரிந்திருப்ப

தோடு புடவைகளுக்குக் குறைந்தது ஐந்து ரகமான கரைகளைப் போடுவதற்கு வேண்டிய சகல வேலைகளும் அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

*11.* அவர் நெய்யும் வேகம், இருபதாம் நெம்பர் நூலில் மணிக்கு ஒரு சதுர கெஜத்திற்கு வரவேண்டும்.

*12.* பல ரகமான பருத்திகளையும் சாகுபடி செய்வதற்கு வேண்டியவைகளெல்லாம் அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும். கையினால் பருத்தி அரைக்கும் மணைகள், பஞ்சடிக்கும் வில்கள், ராட்டைகள், தறிகள், அதற்கு வேண்டிய சாமான்கள் ஆகியவைகளை யெல்லாம் உள்ளூரில் கிடைக்கும் பொருள்களைக் கொண்டே உள்ளூரிலேயே தயாரித்துக்கொள்ள முடிந்தவராகவும் அவர் இருக்கவேண்டும். இதை முன்னிட்டுக் கீழ்க் கண்டவைகளையும் அவர் அறிந்திருக்க வேண்டும் :

(அ) எந்த அளவுக்கு, வருடத்தில் எந்தெந்தக் காலத்தில் எந்தெந்தப் பகுதிகளில் மழை பெய்கிறது என்பதும், உரங்களைப் பற்றியும், மண்ணின் தரங்களைக் குறித்தும் தெரிந்திருக்க வேண்டும்.

(ஆ) வேலைக்கு வேண்டிய பல வகையான மரங்கள், அவற்றின் அளவைப் பற்றிய கணக்குகள்.

(இ) மேற்கண்ட தேவைக்கான மாதிரிப் படங்களை வரைவதற்கு வேண்டிய அனுபவம்.

*13.* பலவிதக் கருவிகளையும் பழுது பார்த்துக்கொள்ளுவதற்குப் போதுமான அளவு தச்சு வேலை அனுபவம்.

இந்தப் பரீட்சையில் தேறிவிடுவது என்பது அவ்வளவு எளிதானது அல்ல. ஆனால், போதிய அளவு ஊக்கமும் ஓரளவு உழைப்பும் இருந்தால், இதில் கொஞ்சம் பயிற்சி பெற்றிருக்கும் யாரும் ஸ்ரீ லட்சுமிதாஸின் பரீட்சையில் தேறிவிட முடியும். அப்படித் தேறினாலும் இதில் கதர் சாஸ்திரத்தின் வர்த்தக அம்சம் அடங்கிவிடவில்லை. நான் தயாரித்திருக்கும் கேள்விகளில் அந்த அம்சங்கள் அடங்கியிருக்கின்றன. ஸ்ரீ லட்சுமிதாஸ் தயாரித்திருக்கும் பாடத் திட்டம், நுட்பத் துறையை மாத்திரமே கொண்டது. கதர் சாஸ்திரத்தின் முக்கியமானவைகளிலெல்லாம் சிறந்த நிபுணராக ஒருவர் ஆவதற்கு இந்த இரண்டு துறைகளிலும் அவர் தேர்ந்தவராக இருக்க வேண்டும். இக்கட்டுரையைப் படிக்க நேரும் கதர் ஊழியர்கள், நுட்பப் பரீட்சையிலோ, வர்த்தகத் துறையிலோ, இரண்டிலுமோ தேர்ந்தவர்களாக இருப்பார்களாயின், தங்களுடைய பெயரையும் முழு விலாசத்தையும் எனக்கு அறிவிப்பார்களாயின், நன்றியுள்ளவனாவேன். அதே போல, கதரின் சாதாரணமான விஞ்ஞானத்தில்

தகுதியைப் பெறுவதில் ஆர்வமுள்ளவர்களும் எனக்கு எழுத வேண்டும். இதில் தேவையான அறிவைப் புகட்டுவதற்கு உபயோகிக்கக் கூடியதாகவுள்ள பாடப் புத்தகம் எதுவும் துரதிருஷ்டவசமாக நம்மிடம் இல்லை. இக்காரியத்திற்கு ஏற்றதாக இருக்கும் ஒரே புத்தகம், காலஞ் சென்ற ஸ்ரீ மகன்லால் காந்தி எழுதிய புத்தகமேயாகும். அந்தப் புத்தகம் எழுதப்பட்ட பிறகு கதர் விஞ்ஞானம் எவ்வளவோ முன்னேற்றத்தை அடைந்து விட்டதால் அந்தப் புத்தகமும் காலத்திற்கு ஒவ்வாததாகி விட்டது. ஆகையால், அப்புத்தகத்தின் திருத்தப்பட்ட புதிய பதிப்பு அவசரத் தேவையாகும். அப்படித் திருத்தி எழுதுவதிலேயே ஈடுபட்டு அந்த வேலைக்கு வேண்டிய அவகாசம் இருக்கும் கதர் பக்தர்கள் கிடைத்தால்தான் புதிய பதிப்பு வெளிவர முடியும்.

—'ஹரிஜன்' – 13—2—1937

## 3

# ஆரம்பிப்பது எப்படி?

கதர் உற்பத்தி சம்பந்தமான பலவித வேலைகளிலும் தேர்ந்தவர்களாவதற்கு, ஆர்வமுள்ள கதர் ஊழியர்களுக்கு இப் பத்திரிகையில் கொஞ்ச காலத்திற்கு முன்னால் நான் வெளியிட்ட வேண்டுகோள் அதிக ஆதரவைப் பெற்றிருக்கிறது. இது சம்பந்தமாக இப்பொழுதே எனக்கு அநேக கடிதங்கள் வந்திருக்கின்றன. கீழே கூறியிருக்கும் விஷயங்கள், இந்த நண்பர்களுக்கு வழி காட்டுவனவாக இருப்பதை முன்னிட்டு அனுபவ பூர்வமான சில குறிப்புகளைத் தெரிவிப்பதற்காகும்.

எந்த விஷயத்திலும் நிபுணராக விரும்புகிறவர்களுக்கு முதலில் வேண்டியது, அதில் ஜீவ நம்பிக்கை அவர்களுக்கு இருக்க வேண்டியதாகும். அடுத்தபடியாக, கற்றுக்கொள்ளுவதில் ஆர்வமும், அதற்காக அவசியமாகும் தியாகத்தைச் செய்யத் தயாராயிருப்பதும் வேண்டும். புத்தகங்கள், உபாத்தியாயர்கள், மற்ற உபகரணங்களெல்லாம் ஓரளவுக்கு அவசியமானவைகள் என்பது உண்மையே. ஆனால், எல்லாவற்றையும் விட அதிக முக்கியமானவை, அறிவைப் பெறுவதில் வேட்கையும், கற்றுக்கொள்ளுவதில் ஆர்வமும் ஆகும். இவை மாத்திரம் இருந்துவிட்டால் மற்றவை யாவும் தாமே வந்துவிடும். ஆகையால், கதர் விஞ்ஞானத்தைக் கற்றுக்கொள்ள விரும்புவோருக்கு நான் ஒரு யோசனை கூறுகிறேன். அவர்களுக்கு உடனடியாகப் பக்கத்தில் உள்ள ஊர்களில் கதர் உற்பத்தி சம்பந்தமாக என்ன வேலை நடந்துவருகிறது என்பதைக் கண்டு, அவைகள் சம்பந்தமாக அங்கு கிடைக்கக்கூடிய தகவல்களையெல்லாம் சேகரித்துவிடுவ

தன் மூலம் அவர்கள் உடனே ஆரம்பித்துக்கொண்டு விடலாம். கதர் விஞ்ஞானத்தைக் கற்றுக்கொள்ள விரும்புகிறவருக்கு இன்றுள்ள முக்கியமான வேலை, சொந்த அனுபவத்தைத் திரட்டி ஒன்றுபடுத்திக்கொள்ளுவதாகும். நாட்டின் பல பகுதிகளிலும் கதர் உற்பத்தி சம்பந்தமாக வெவ்வேறு விதமான முறைகள் இன்று கையாளப்பட்டு வருகின்றன, ஆனல், அம்முறைகளை யெல்லாம் முற்றிலும் அறிந்தவர் ஒருவர்கூட இப்பொழுது இல்லை. என்ருலும், கதரின் விஞ்ஞானத்தை விருத்தி செய்வதற்கு முன் ருல், வெவ்வேறு விதமான இந்த முறைகளைப்பற்றி யெல்லாம் முற்றிலும் விவரமாக அறிந்திருப்பது அவசியம். உண்மையில் இந்த வேலை தனிப்பட்ட ஒருவரின் சக்தியை மிஞ்சியதாகும். ஆனல், உண்மையாகவே விஞ்ஞான ஆராய்ச்சி உணர்ச்சி வேக முள்ளவர்கள் பலர் இருந்து, அவர்கள் ஒழுங்கான முறையில் இவ்வேலையில் தங்களை ஈடுபடுத்திக் கொள்ளுவார்களானல், அவர்கள் தங்கள் ஆற்றல்களையும் அனுபவங்களையும் ஒருங்கு திரட்டிக்கொள்ளுவதன் மூலம் ஜீவனுள்ள, வளரும் கதர் விஞ்ஞா னத்தைக் கொஞ்ச ,காலத்திற்குள் உருவாக்கிவிட முடியும். ஆனல், இதை அவர்களால் செய்ய முடிவதற்கு முன்னல், இன்று நாட்டில் நடைபெற்றுவரும் எல்லாவிதமான கதர் உற்பத்தி முறை களிலும் அவர்கள் ஒருங்கு சேர்ந்து தாங்களே நிபுணர்க ளாகிவிடவேண்டும்.

திட்டமான ஓர் உதாரணத்தைப் பார்ப்போம். இன்று ஆந்தி ராவில் பல பகுதிகளில், பஞ்சை வெட்டுவதில் வெவ்வேருன முறைகளை அனுசரிப்பதன் மூலம் அநேக வகையான கதரை உற்பத்தி செய்து வருகிருர்கள். ஆந்திராவிலிருந்தும் கதர் ஊழியர் யாராவது கதர் விஞ்ஞானத்தை அறிந்துகொள்ள ஆர்வ முள்ளவர்களாக இருப்பார்களாயின், இந்தப் பல்வேருன முறை களில் நிபுணத்துவம் பெறுவதன் மூலம் இவ்வேலையை ஆரம்பிக்க லாம். இதற்கு அவர் தமது மாகாணத்தை விட்டு வெளியே போக வேண்டியதில்லை. வேலையை ஆரம்பிப்பதற்காக அவர் தமக்கு அடுத்துப் பக்கத்திலேயே இருக்குமிடத்தில் கையாளப் படும் முறையில் நிபுணராவது என்று எடுத்துக்கொள்ளட்டும். இதைத் தெரிந்துகொள்ள முற்படுகிறவர், பஞ்சு வெட்டும் வில் லின் அமைப்பைப் பற்றிய விவரங்களை அறிந்துகொள்ளுவதும், உண்மையில் பஞ்சு வெட்டுவதைக் குறித்து விஞ்ஞான ரீதியில் ஆராய்வதைச் சேர்ந்ததாகும். மேலும் அவர், பஞ்சு வெட்டும் வில்லின் நாண், எதைக்கொண்டு செய்யப்பட்டிருக்கிறது என் பதையும், வில்லின் மற்றப் பகுதிகள் எதனல், எவ்விதம் செய்யப் பட்டிருக்கின்றன என்பதையும் தெரிந்துகொள்ளவேண்டும். அதோடு அந்த வில் சிறந்த பலனை அளிப்பதாக இருக்கவேண்டு மானல் அதன் நீளம் சரியாக எவ்வளவு இருக்கவேண்டும். சாதா ரணமாக இருந்துவரும் நீளம் குறைவதனல் ஏற்படக்கூடியது என்ன என்பதையும் அவர் அறியவேண்டும். அந்த வில்லின் சரியான எந்த இடத்தில் வில்லின் நாணைத் தெறிக்கவேண்டும்

அதற்கு என்ன காரணம் என்பன போன்ற அநேக விஷயங்களை யும் தெரிந்துகொள்ளவேண்டும். இந்த விவரங்களை யெல்லாம் பஞ்சு வெட்டுவதையே பிழைப்பாகக்கொண்ட நம் சிறந்த தொழிலாளர்கள் அறியமாட்டார்கள்; அறியவேண்டும் என்று கவலைப்படுவதும் இல்லை. பஞ்சு வெட்டுவதை ஒரு விஞ்ஞான மாகக்கொண்டு ஆராய முற்படும் ஓர் ஊழியர், பருத்தி சம்பந்த மாகவும், அதில் இருக்கும் எல்லா ரகங்களைக் குறித்தும் தெரிந்து கொள்ளவேண்டும். ஒவ்வொரு வகைப் பருத்தியின் துசும்பின் நீளம், பலம், மென்மை ஆகியவைகளையும், அப்பருத்தி இவர் கைக்கு வருவதற்கு முன்னால் அது என்ன முறைகளிலெல் லாம் பதனாகிறது என்பதையும் இவர் அறியவேண்டும். அப்பருத்தி எங்கே பயிரானது, ஏக்கருக்கு எவ்வளவு பருத்தி விளைகிறது, எவ்வளவு விஸ்தீரணமுள்ள நிலத்தில் பருத்தி சாகுபடியாகிறது, பருத்தியைச் சாகுபடி செய்வதற்கு முன்னால் அந்த நிலத்தில் என்ன சாகுபடியாகிவந்தது, அந்த நிலம் அதற்கு முன்னால் தரிசாகக் கிடந்ததா, பருத்தியைச் சாகுபடி செய்வதற் குப் பதிலாக வேறு ஒன்றைப் பயிர் செய்வதனால் விவசாயிக்கு ஏற்படக்கூடிய மாறுதல் என்ன என்பன போன்றவைகளை யெல்லாம் இவர் தெரிந்துகொள்ள வேண்டும். இவ்வாறு அவ ருடைய நடைமுதல் அனுபவம் விஞ்ஞான அறிவினால் பிரகா சத்தை அடையும். இது அவர் ஆராயும் விஷயத்தில் உறுதி யான பிடிப்பை உண்டாக்குவதோடு அதன் உள் நுட்பங்களை யெல்லாம் அறிந்திருக்கும்படியும் செய்யும். இதனால் ஆந்திரா வின் பல பகுதிகளிலும் பஞ்சு வெட்டுவதற்கு அனுசரிக்கப்படும் அநேக முறைகளிலும் அவர் சுலபமாக நிபுணராகிவிடுவதோடு அதற்கு அவருக்கு அதிக காலமும் ஆகாது. மேலும், இவர் தமது பரீட்சைகளுக்கும் அனுபவங்களுக்கும் ஒழுங்காகக் குறிப்புகளை யும் எழுதிவைப்பாராயின், அவையே உரிய காலத்தில் பஞ்சு வெட்டும் விஞ்ஞானத்தைக் குறித்த ஆதார பூர்வமான சாஸ்திரப் புத்தகமாகவும் ஆகும்.

இவ்விதம் கதர் ஊழியர் எவரும், கதரின் விஞ்ஞானத்தை அறிந்து கொள்ளுவதற்காக அவர் செய்துவரும் வேலைத் துறையை விட்டுவிட்டுப் போகவேண்டிய அவசியமில்லை என் பதைக் காணலாம். ஒருவருக்கு ஆராய்ச்சி உணர்ச்சி வேகம் இருந்து, பொறுமையும், போதுமான அளவுக்குக் கவனம் செலுத்தவேண்டிய சக்தியும் இருக்குமாயின் அவருக்கு விசேஷ வசதியை அளிப்பதாயுள்ள, பக்கத்தில் இருக்கும் இடத்தில் அனுசரிக்கப்படும் முறையைத் தீவிரமாக ஆராய்வதில் அவர் தம்மை ஈடுபடுத்திக்கொள்ளுவதன் மூலம் அக்குறிப்பிட்ட முறை யில் அவர் நிபுணராவதோடு விஞ்ஞானம் என்ற பெயருக்கு உரிய தான அறிவின் வாய்ப்பையும் நாளாவட்டத்தில் விரிவுபடுத்திக் கொள்ளலாம்.

—'ஹரிஜன்' 10—4—1937

## 4

# சரியாகக் கூறவேண்டும்

கதரைப் புகழ்ந்து எழுதப்பட்டிருக்கும் பத்திரிகைக் குறிப்பைக் கத்தரித்து ஒரு நண்பர் எனக்கு அனுப்பியிருக்கிறார். அதிலிருந்து பொருத்தமான சில பகுதிகளைக் கீழே கொடுக்கிறேன்:

"அந்நியத் துணியை வாங்குவதற்காகச் செலவிடும் ஒரு ரூபாயில் ஒன்றரை அணா இந்தியருக்குப் போகிறது. மீதிமிருக்கும் பதினாலரை அணா, அந்நிய வர்த்தகத்தின் வளர்ச்சிக்கு நேரே போய்விடுகிறது

மில் துணி வாங்குவதற்கு ஒரு ரூபாய் செலவிடப்படுமாயின் அதில் பாதித் தொகை மில் சொந்தக்காரர்களுக்குப் போகிறது. மீதமிருப்பதில் ஆறு அணா உற்பத்தியாவதற்குக் கருவிகளாக இருப்போருக்கும், இரண்டணா அந்நியரின் பைக்கும் போகிறது.

கதர் வாங்குவதற்கு ஒரு ரூபாய் செலவிடப்படுகிறது என்றால், நிர்வாகச் செலவான ஓர் அணா போக மீதமிருக்கும் தொகை முழுவதும் உற்பத்தி செய்கிறவர்களுக்கு மாத்திரமே போகிறது."

கதர் வாங்குவதற்குச் செலவிடும் ஒவ்வொரு ரூபாயிலும் பதினைந்து அணா உற்பத்தி செய்வோருக்கும், விற்பவருக்கு ஓர் அணாவும் போகிறது என்பது உண்மைதானா என்று இதை அனுப்பியிருப்பவர் கேட்கிறார். உற்பத்தி செய்யும் இடங்களிலிருந்து வரும் 15 அணா பெறுமானமுள்ள துணிக்கு, செலவுகளை ஈடு செய்வதற்கு ஓர் அணா வைத்து விலையை நிர்ணயிக்க வேண்டும் என்பது அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கிடங்குகளை நிர்வகிக்கும் மானேஜர்களின் முன்பு வைக்கப்பட்டிருக்கும் லட்சியம் என்றுதான் அக்கேள்விக்கு நான் பதில் கூறமுடியும். ஆகையால், அந்தப் பதினைந்து அணாவில் வண்டிச் சத்தம் முதலிய அநேக செலவுகளும் சேரும். எனவே கதருக்காகச் செலவிடும் ஒவ்வொரு ரூபாயிலும் பதினைந்து அணா உற்பத்தியாளருக்கே போய்விடுகிறது என்று சொல்லுவது முற்றிலும் தவறானதாகும்.

கதர், நெசவாளர் கையிலிருந்து வெளிவந்ததும், சலவை, சாயம் போடுதல், கஞ்சி போடுதல். நடுவாந்தரத்தில் இருக்கும் ஸ்டோர்களில் வைத்திருத்தல் போன்ற எத்தனையோ காரியங்களுக்கு உட்படவேண்டியிருக்கிறது. 'உற்பத்தியாளர்' என்ற சொல்லில் பருத்தி சாகுபடி செய்கிறவர், பருத்தி எடுப்போர், பஞ்சரைப்பவர், பஞ்சு வெட்டுகிறவர், பட்டை போடுகிறவர், நூற்பவர், தாறு சுற்றுகிறவர், பாவோட்டுபவர், கஞ்சி போடுகிறவர், நெய்கிறவர் ஆகியவர்கள் யாவரும் சேர்ந்தவர்

களாவதாயின், ஆனுல் நெசவுக்குப் பிறகு அதன் சம்பந்த மாக வேலை செய்வோர் இதில் சேரமாட்டார்கள் என்ருல், உற்பத்தியாளருக்கு அநேகமாக ரூபாயில் எட்டு அணுவுக்கு மேல் போகாது. பிந்திய வேலைகளைச் செய்பவரை நீக்கிவிடுவதுதான் வழக்கம்; அதுதான் நியாயம். ஏனெனில் கதரின் காரியத்திற்கு அவர்கள் அவசியமானவர்கள் அல்ல. இந்த வேலைகளைக் கிராமவாசிகள், தொழிலாளர் என்று நியாயமாகக் கூற வேண்டியவர்கள் செய்து மிருக்கலாம், செய்யாமலும் இருக்கலாம். சலவை, சாயம் போடுதல் ஆகியவை பெரும்பாலும் ஸ்தாபனமாக அமைந்துள்ளவை, அதாவது முதலாளிகளின் ஸ்தாபனங்களே செய்கின்றன. கதரின் விற்கும் விலையை அதிகமாக்கிவிடுகிறவர்கள் எல்லோரும் உற்பத்தி யாளரின் கூலியைப் பங்கு போட்டுக்கொண்டு விடுவதில்லை. அதாவது, உற்பத்தியாளரின் சோற்றை அவர்கள் வாயிலிருந்து பறித்துக்கொண்டு விடுவதில்லை. ஆனுல், உற்பத்தியாளர் உற்பத்தி செய்கிறவைகள் விற்பனையாவதற்கு அவர்கள் உதவி செய்கிருர்கள். முதலாளிகள் ஸ்தாபனங்களாக இருந்துங்கூட இந்த உதவி செய்து வருகின்றனர். ஏனெனில், அவர்கள் இப் பொழுது லாபத்திற்காக வேலை செய்யவில்லை. ஆனுல், உற்பத்தி யாளருக்காக வேலை செய்கின்றனர். அவர்கள் நோக்கம் எதுவாக இருந்தாலும் பரவாயில்லை. ஆகையால், பிரஸ்தாபப் பத்திரிகைக் குறிப்பில் அறியாமலோ அல்லது தெரியாமலோ மிகைப்படுத்திக் கூறப்பட்டிருப்பதைவிட முழு உண்மையைக் கூறுவதே கதரின் விளம்பரத்திற்கு ஏற்றதான விளம்பரம் என்று எனக்குத் தோன்றுகிறது. அந்தக் குறிப்பை நான் எழுதியிருந்தால் கீழ்வரு மாறு எழுதியிருப்பேன்.

"நீங்கள் ஒரு ரூபாய் பெறுமானமுள்ள கதரை வாங்கும்போது, தொழிலாளி தன்னுடைய உழைப்பின் முழுப் பலனையும் அவனே வைத்துக் கொள்ளுகிருன் என்பதை அறியவும். ஆனுல், உள்நாட்டு மில்லில் தயாராகும் துணியை நீங்கள் வாங்கும்போது. அவனுக்குப் பதிலுக்கு எதையும் அளிக் காமல் அந்த லாபகரமான உழைப்பின் பலன் முழுதும் அவனுக்கு இல்லாதபடி செய்து விடுகிருர்கள். கதரை விற்கும் ஸ்தாபனம், அதற்காகும் செலவைத் தவிர வேறு எதையும் அடைவதில்லை. ஆகையால், அதுவும் உற்பத்தி யாளருக்குச் சமமானதாகிறது."

இவ்வாறு கதரின் பொருளாதாரத்தை நன்ருக ஆராய்ந் தால், கதரைத் தவிர வேறு எந்தத் துணியையாவது ஒரு இந்தியர் உடுத்துவது, அரைப் பட்டினி கிடக்கும் மனித வர்க்கத் திற்கு விரோதமாகச் செய்யும் பெரும் குற்றம் என்பதைக் காணலாம். அப்படி வேறு துணியை உடுத்துகிறவர், இப் பொழுதே பஞ்சத்தில் அடிபட்டுக் கிடக்கும் கிராமவாசிகள் சிலரின் வாய்க்குப் போகும் ஒரு கவளச் சோற்றையும் எடுத்து விடுகிருர். கதருக்குக் கஷ்டமுண்டாவது, அதனிடம் இயற்கை யாகவுள்ள எந்தக் குறைபாட்டினுலும் அல்ல. அதன் எதிரி

களைப் போன்றே நண்பர்களும் விஷயத்தை அறியாமல் இருப்பதனுல்தான் அதற்குக் கஷ்டம் உண்டாகிறது.

ஆனுல், கதரை வாங்குகிறவர்களின் நிலைமையையும் பரிசீலனை செய்வது அவசியம். வாங்குபவரின் கருத்துப்படி பார்த்தால் அவ்விளம்பரம் தவருன கருத்தை உண்டாக்குவதாக இருக்கிறது. அவர் தமது ருசியை மாத்திரம் கொஞ்சம் மாற்றிக் கொள்ளுவாரானுல், சலவை செய்யாத கதரை வாங்கி, விரும்பும் அலங்காரங்களையெல்லாம் அதில் பின்னுல் அவர் செய்து கொள்ளுவதாக இருந்தால், இப்பொழுது இருக்கும் விலையில் பாதி விலைக்குக் கதர் விற்கப்படும். விலையைப்பற்றிக் கவலைப் படாதவர், இதெல்லாம் குறித்துத் தமது மூளையை வருத்திக் கொள்ள வேண்டியதில்லை. ஆனுல் விலையை முக்கியமாகக் கருதுகிறவர் ஒன்று அறியவேண்டும். சலவை செய்யாத, அலங்காரம் செய்யப்படாத கதருக்கு அவர் கொடுக்க வேண்டியிருக்கும் விலை, சலவை செய்த, அலங்காரத்தோடு கூடிய கதரின் விலையைவிடக் குறைவு என்பதை அவர் அறிய வேண்டும். மேலும் சலவை செய்யாத கதர், சலவை செய்த கதரைவிட நீடித்து உழைக்கும். சென்ற பன்னிரண்டு ஆண்டுகளில் கதர் அதிக மலிவாகவும், ரகத்தில் நல்லதாகவும் ஆகியிருக்கிறது என்பதையும் பொது மக்கள் அறியவேண்டும். தனிப்பட்ட நூற்போரின் கருவிகளில் அபிவிருத்தியைச் செய்து, அவர்கள் ஆற்றலையும் அதிகரித்ததன் மூலம் அவர்கள் மடிக்கு அதிகப் பணம் போகும்படியும் கதர் செய்திருக்கிறது. கொஞ்ச நேரத்திற்கு மாத்திரம் வேலை இருப்பதால் அரைப் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு உதவி செய்யும் பணியில், படித்த ஆண்களும் பெண்களும், தங்களை அர்ப்பணம் செய்து கொள்ளாமலிருந்தால் இது நடந்தே இருக்காது. வர்ணம் அல்லது சாதி என்ற தப்பான எண்ணத்தினுல் இந்தக் கோடிக்கணக்கான மக்களை அநேகமாகத் தீண்டாதவர்களாகக் கருதாமல், உயர் வகுப்பினர் என்று தங்களைத் தாங்களே சொல்லிக்கொண்டவர்கள் இவர்களிடம் பராமுகமாகவும் இல்லாமலிருந்திருப்பார்களாயின், விவசாயத்திற்கு உதவியாக இருக்கும் இந்தியாவின் ஜீவனுள தொழில் செத்தே போயிருக்காது.

கதர் ஸ்தாபனங்களில் குறைபாடுகளும் இருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை; அவ்வேலைக்கே முற்றிலும் அர்ப்பணம் செய்துகொண்டு விடவில்லை; தீர்வு காண வேண்டியிருக்கும் ஒவ்வொரு பிரச்னையைப் பற்றியும் சரியான ஆராய்ச்சியும் கிடையாது. ஆனுல், இது ஆச்சரியப்பட வேண்டிய விஷயம் அன்று. வாழ்நாளெல்லாம் வந்துவிட்ட பழக்கத்தைக் கணத்தில் விட்டுவிட முடியாது. கைத்திறனையும் திடீரென்று நாம் விருத்தி செய்துகொண்டு விட இயலாது. உயர்ந்த வகையான நுட்பத் திறமையும், யந்திர ஆற்றலும் கதர் விஞ்ஞானத்திற்கு

வேண்டும். நம்மை ஒத்த உயிர்களேயான தாவரங்கள் தம்மிடம் வைத்திருக்கும் இயற்கையின் ரகசியங்களை அவைகளிடமிருந்து கிரகிப்பதற்கு முன்னால் ஸர் ஜே. ஸி. போஸ்* தமது ஆராய்ச்சி நிலையத்தில் செடிகளின் சிறு இலைகளிடம் எப்படி தமது கவனம் முழுவதையும் செலுத்துகிறாரோ அதே போன்ற கவனத்தையும் இதில் செலுத்தவேண்டும்.

இங்கு குறை கூறப்படும் பத்திரிகைக் குறிப்பில் இருக்கும் தவறு, கதரை அது மிகைப்படுத்திக் கூறியிருப்பது அல்ல. ஆனால், கதரின் கட்சியை விகாரமாக, அரைகுறையாக எடுத்துக் கூறியிருப்பதேயாகும். உண்மையைச் சரியானபடி அறிந்து கொள்ளாததனால் உண்டாகும் சரியானதாக இல்லாத தகவலினாலேயே இது ஏற்படுகிறது. தப்பாத உரைகல்லில் அக்குறிப்பின் மூன்று பாராக்களையும் உரைத்துப் பார்த்தால், அவை மோசமான நிலையில் தேறுது போகும்.

—'ஹரிஜன்'-5—10—1934

# 5

# வாங்குவோர் தேவை

கீழ்க்கண்டவை, மீரத் காந்தி ஆசிரமத்திலிருந்து வந்த கடிதத்திலிருந்து எடுக்கப்பட்டவை :

"அகில இந்திய நூற்போர் சங்கம், இன்று மூன்று லட்சத்திற்கு அதிகமானவர்களுக்கு வேலை கொடுத்துவருகிறது. வேலைகள் 13,000 கிராமங்களில் பரவியிருக்கின்றன. தேசத்தின் புனரமைப்புக்கான இக்காரியத்தில் 2 571 ஊழியர்கள் ஈடுபட்டிருக்கின்றனர். ஐக்கிய மாகாணத்தின் பங்கு அற்பமானது அன்று. எங்கள் கணக்கில் 40,000 நூற்பாளர்கள் இருக்கின்றனர். மற்றத் தொழிலாளர்கள், நெசவாளர்கள், சலவை செய்வோர், பஞ்சடிப்பவர்கள் ஆகியவர்களின் தொகை 4,780. சுமார் 3,403 கிராமங்களில் எங்கள் வேலை நடந்து வருகிறது. மாகாணத்தின் பல பகுதிகளிலும் 600 ஊழியர்கள் கதரின் உபதேசத்தைப் பரப்பி வருகிறார்கள். இது நாட்டு மக்களிடமிருக்கும் ஆக்க சக்தி முழுவதையும் செயலில் ஈடுபடுத்துகிறது. ஒன்றுபடவும், திட்டம் போடவும், ஒருமித்து வேலை செய்யவும், ஆக்கவும் நாங்கள் கற்றுவருகிறோம். இன்று நமக்குள்ள துணித் தேவை முழுவதையும் ராட்டை பூர்த்திசெய்துவிட முடியாது என்று காரியக் கமிட்டிக் கூட்டத்தில் பண்டித ஜவாஹர்லால் நேரு கூறியதாகச் சொல்லப்படுகிறது. இக்கூற்று, ராட்டையின் சாத்தியத்தைக்

* ஜே. ஸி. போஸ் (1858—1937) : ஜகதீச சந்திர போஸ் என்பது இவரது முழுப் பெயராகும். இந்த விஞ்ஞானியைப்பற்றி நம் நாட்டில் அறியாதார் யாரும் இல்லை. தாவரங்களின் உடற்கூறுபற்றி இவர் பல நூல்கள் எழுதியிருக்கிறார். தாவர சாஸ்திர ஆராய்ச்சிக்குப் பயன்படும் புதிய கருவிகளையும் இவர் கண்டுபிடித்திருக்கிறார்.

குறித்து மதிப்பிடுவதாகிறது என்று நான் கருதுகிறேன். பிரச்னையின் விளிம்பைக்கூட நாம் இன்னும் தீண்டிவிடவில்லை என்று எங்கள் அனுபவத்தைக் கொண்டு கூறுவேன். நாம் உற்பத்தி செய்யும் கதரை உடனே விற்பனை செய்துவிடுவதற்கு மார்க்கெட் இருக்குமாயின் மிகக் கொஞ்ச காலத்திற்குள் உற்பத்தியை ஆயிரம் மடங்கு பெருக்கிவிட முடியும்.''

விற்பனைக்குக் கோரும் பகுதியை இதிலிருந்து நீக்கியிருக்கிறேன். அவர்களுடைய முயற்சி, அதற்குரிய வெற்றியை அடையும் என்று நம்புகிறேன். ஆனால், இங்கே நான் கவனிக்க விரும்புவது, உற்பத்திக்கு ஏற்ற வகையில் விற்பனை இல்லாததன் காரணத்தையாகும். பிரசாரத்தினால் அதற்குள்ள பலன் உண்டு என்பதில் சந்தேகமில்லை. ஆனால், பிரசாரத்தைவிட அதிகமாகத் தேவைப்படுவது, விஞ்ஞான ரீதியில் ஆராய்ச்சி. நம் மக்கள் சராசரி வருடத்திற்குத் தலைக்கு 15 கெஜம் உபயோகிக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. நூறு கோடி ரூபாய்க்கு எட்டும் ஒரு தொகை, இந்தத் துணியை வாங்குவதற்கு நாட்டில் செலவாகிறது என்பதிலும் சந்தேகமில்லை. அதாவது, இத்தேசத்தின் ஜனத்தொகை 35 கோடி என்று வைத்துக்கொண்டால், சராசரி ஆளுக்கு மூன்று ரூபாய்க்குக் குறைவாகிறது. அரசாங்கம் கதருக்குப் பாதுகாப்பு அளித்தால் கதரை விற்றுவிடலாம் என்று சொல்லிவிடுவது எளிது. கதருக்குப் பாதுகாப்பு அளிக்கவேண்டும் என்பது, தனக்குத் தானே நிருபணமாகும் யோசனை என்பது என் கருத்து. ஆனால், பாதுகாப்பு இல்லாமலே விற்பனை செய்துவிடுவதற்குச் செய்ய வேண்டியதையெல்லாம் நாம் செய்திருக்கிறோமா என்பதை, இதற்குத் தகுதிவாய்ந்தவர்களான கதர் ஊழியர்கள் பார்த்தார்களா? இரண்டு இடையூறுகள் இருக்கின்றன. மில்லில் தயாரான துணி கதரைவிட மலிவாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. மில் துணி பல ரகங்களிலும் அழகாகவும் கிடைக்கிறது என்றும், அவையெல்லாம் கதரில் இல்லை என்றும் சொல்லுகிறார்கள். இரண்டாவது இடையூறை அதிக தூரம் சமாளித்திருக்கிறோம். என்றாலும், இன்னும் செய்யவேண்டியது இருக்கிறது. குறிப்பிட்டதற்கு மேல் போக முடியாத ஓர் எல்லை, ஒரு வேளை கதருக்கு இருக்கலாம். அப்படி ஓர் எல்லை இருக்குமானால், நாம் அதைப் பகிரங்கமாக ஒப்புக்கொண்டுவிட வேண்டும். ஆனால், விலை விஷயத்தில் சரியான ஆராய்ச்சி செய்யப்படவில்லை என்றே அஞ்சுகிறேன். ராட்டையின் மேன்மையைக் குறித்துப் பேராசிரியர் குமரப்பா பிரமிக்கச் செய்யும் விவரங்களைக் கூறுகிறார். இதற்கு ஆதாரமாகப் புள்ளி விவரங்களையும் அவர் காட்டியிருக்கிறார்.* ஆனால், அப்படியானால்,

* பேராசிரியர் குமரப்பா கூறிய புள்ளி விவரமாவது :

'' துணி உற்பத்தித் தொழிலை எடுத்துக்கொண்டால் அதில் இரண்டு முறைகளும் இருப்பதால், புள்ளி விவரங்களைத் திருப்திகரமான வகையில் நாம் ஒப்பிட்டுப் பார்க்கலாம். ஒரு சாதாரணமான நூற்கும் நெய்யும் மில், ரூ. 13 லட்சம் மூலதனத்தை உபயோகிப்பதோடு 1400 பேரை வேலைக்கு வைத்திருக்கிறது. அத்தொகையைக்

மில் துணியைவிடக் கதர் விலை ஏன் அதிகமாக இருக்கிறது என்றுதான் சாதாரண மனிதர் கேட்கிறார். இந்தக் கேள்விக்குத் திருப்திகரமான வகையில் பதில் சொல்லியாக வேண்டும். பிரத்தியட்சமான பதில்கள் திருப்திகரமானவை என்று நான் கருதமாட்டேன். அப்பதில்களையே நன்றாகப் பரிசீலனை செய்ய வேண்டும். கஷ்டங்களைச் சமாளித்து விடுவதற்கான வழியைக் கண்டுபிடிக்க வேண்டும். கதர் அதன் உயர்வை அடையும் வரையில் இவற்றையெல்லாம் தொடர்ந்து செய்து வர வேண்டும்.

நமது தேவைக்கும் அதிகமான பருத்தியை உற்பத்தி செய்யும் நாம், அதை வெளிநாடுகளுக்கு அனுப்பி, அது திரும்பவும் துணியாக நமக்கு வரும்படி செய்ய வேண்டியிருப்பது வெட்கக்கேடானதாகும். அதே போல, நமது கிராமங்களில் பயன்படுத்திக் கொள்ளப்படாத உழைப்பாளர்கள் எல்லையில்லாமல் ஏராளமாக இருந்தும், துணி உற்பத்திக்கான கிராமக் கருவிகளை நாம்

---

கணக்கிட்டால் அதிக வேலைக்கு இருப்பவர்களுக்கு ஆளுக்கு ரூ. 900 ஆகிறது. போட்டிருக்கும் மூலதனத்திற்கு ரூபாய்க்கு 2½ ராத்தல் நூல், ஒன்றரை ராத்தல் துணி வீதம் உற்பத்தியாகிறது. (1932—33—ஆம் வருடப் புள்ளி விவரம் இது). ஒரு தறி, பத்து ராட்டைகளையும் நடைமுதல் மூலதனமாக ரூ. 60 கொண்ட ஒரு குடிசை யூனிட்டைக் கணக்கிட்டால் அதில் வேலை செய்கிறவர்களுக்கு ஆளுக்கு ரூ. 9 மூலதனம் என்றாகிறது. போட்டிருக்கும் ரூபாய்க்கு இதில் உற்பத்தி, மில்லின் உற்பத்தியைவிடப் பத்து மடங்கு அதிகமாக இருக்கிறது. இதிலிருந்து கணக்கிட்டால், நம்முடைய தேவை முழுவதற்கும் மில் துணியாகவே கொடுப்பதானால் ரூ. 300 கோடி மூலதனம் வேண்டியிருப்பதோடு அதனால் 33 லட்சம் பேர் வேலை செய்வார்கள். நமது தேவைக்கான துணியையெல்லாம் குடிசை யூனிட்டுகளிலிருந்து கதராகக் கொடுப்பதற்கோ, ரூ. 72 கோடி மூலதனம் போடுவதோடு 800 லட்சம் பேருக்கு வேலை கொடுக்க வேண்டியிருக்கும். இரண்டு முறைகளிலும் அதனதன் சௌகரியங்கள் சந்தேகத்திற்கு இடமின்றி இருக்கின்றன என்பதை யாரும் மறுக்கவில்லை. நம் நாட்டில் இருந்து வரும் நிலைமைக்குச் சரியானதைத் தேர்ந்தெடுப்பதுதான் நம் முன்பு இருக்கும் விஷயம். நாம் ஏழைகள். ஆனால், நம்மிடம் உழைப்பாளிகளாகிய செல்வம் கடல் போல் இருக்கிறது. ஆகையால், நம் நாட்டின் நிலைமைக்குக் குடிசை முறைதான் சரியானது, புத்திசாலித்தனமான திட்டம். நல்ல களி மண்ணும் மரங்களும் ஏராளமாகக் கிடைக்கும் நாட்டில் கட்டடங்களைக் கட்டத் திட்டம் போடும் ஓர் இன்ஜினீயர், செங்கல்லையும் மரத்தையும் கொண்டு கட்டவே திட்டமிடுவார். சிமிண்டும் இரும்பும் ஏராளமாகக் கிடைக்கும் நாட்டில் கான்கிரீட்டினால் கட்டடம் கட்டத் திட்டமிடுவார். இன்ஜினீயர் செய்யும் சிபார்சு மாறுபட்டதாக இருந்தால், அது முட்டாள்தனமானது. முன்னேற்றத்திற்குத் திட்டமான ஒரே வழி என்பது எதுவும் இல்லை. போடும் திட்டம், பொருள் உற்பத்தியில் மாத்திரமேயன்றிச் சமூக, கலாசாரத் துறையிலும் சிறந்த பலனை அளிப்பதாயின் கிடைக்கக்கூடிய உற்பத்திக்கான அம்சங்களை ஒன்றுபடுத்திக் கொள்ளுவதாக அத்திட்டம் இருக்க வேண்டும். உழைப்பாளராகிய செல்வத்தைப் பயன்படுத்திக்கொள்ளுவதை அலட்சியம் செய்து நம் நாட்டுக்குப் போடும் திட்டம் எதுவும் பொருந்தாததாகிவிடும். ஓர் இடத்தில் குவியலாகிவிடும் உற்பத்தி முறை, உற்பத்திக்கு அதற்குள்ள சக்தி எவ்வளவுதான் அதிகமாக இருந்தாலும் நாம் வேலை கொடுத்தாக வேண்டியிருப்பதைப் போன்று ஏராளமான மக்களுக்கு அதனால் வேலை கொடுத்துவிட முடியாது. நமது விளக்கம் இதை எடுத்துக்காட்டுகிறது. ஆகையால், இந்நாட்டிற்கு அது சரியானதே அன்று.''

எளிதாகக் கொடுத்துவிட முடியும் என்று இருந்தும், நமது உபயோகத்திற்கான துணியைத் தயாரித்துக் கொடுப்பதற்காக பருத்தியை நம் நகரங்களிலிருக்கும் மில்களுக்கு நாம் அனுப்பிக் கொண்டிருப்பதும் வெட்கக்கேடானதாகும். இந்த மானக் கேட்டின் சரித்திரத்தை நாம் அறிவோம், என்ருலும், பொது மக்களுக்குத் தேசாபிமானமுள்ள வேண்டுகோளை விட்டுக் கொண்டிருப்பதைத் தவிர இந்த இரட்டை வெட்கக்கேட்டை எப்படிப் போக்கிக்கொள்ளுவது என்பதற்கான நிச்சயமான வழியை நாம் இன்னும் கண்டுபிடிக்கவில்லை. நாம் விடுத்த கோரிக்கையினுல் ஊக்கமளிக்கக்கூடிய ஆதரவு கிடைத்திருக்கிறது. அந்த ஆதரவின் எல்லையை நாம் அடைந்துவிட்டோம் என்பதையே சமீபத்திய தீர்மானம் காட்டுவதாகத் தோன்றுகிறது. எல்லோரும் அணியும் பொருளாகக் கதர் ஆகும் வரையில் நாம் திருப்தியடைந்துவிட முடியாது. பொருளாதார ரீதியில் கதர் சரியானதாகாது என்பதை நாம் கண்டு கொள்ளுவோம் என்று சிலர் கூறுகிருர்கள். நமது ஆராய்ச்சியைத் தொடர்ந்து செய்துகொண்டு போகையில் இதையே நாம் ஒரு வேளை காணக் கூடும். அப்படிக் கண்டால். அது என்னதான் நமது கௌரவத்தைப் பாதிப்பதாக இருந்தாலும், எவ்வளவோ நம்பிக்கையுடன் இதுவரையில் நாம் கூறி வந்த கருத்துக்களை யெல்லாம் தகர்த்து விடுவதாக இருந்தாலும், அதை ஒப்புக்கொண்டு விட நாம் தயங்கக்கூடாது. ஆனுல், நான் கேட்டிருக்கும் கேள்விகளுக்குச் சந்தேகத்திற்கிடமில்லாத பதில் கிடைக்கும் வரையில், மனிதருக்குச் சாத்தியமான எல்லா வகைகளிலும் எல்லாவித ஆராய்ச்சிகளையும் செய்வதற்கு முன்னுல், அதை ஒப்புக்கொண்டு விட முடியாது.

சேவா கிராமம்–21–8–'39 —'ஹரிஜன்'–26–8–1939

## 6

# அதன் பொருள் என்ன?

அகிம்சை ஒன்றினுலேயே இந்தியா சுதந்திரம் அடைந்து, அந்தச் சுதந்திரத்தையும் காத்துக்கொள்ள முடியும் என்று நம்புகிறவர்கள், நாட்டின் நலனுக்காகப் பயனுள்ளதாகவும், அறிந்தும் ஈடுபடுவதனுல்தான் மக்கள் எல்லோருமான வகையில் அகிம்சையை அனுசரிக்க முடியும் என்பதையும் நிச்சயம் நம்புவார்கள். மூலதனம் என்று சொல்லக்கூடியது எதுவும் இல்லாமல் நாம் எல்லோரும் எளிதாகச் செய்யக் கூடியதும், அதனள்வில் நரம்புகளுக்கு சாந்தத்தை அளிக்கக்கூடியதாகவும், இருக்கும் அந்த ஒன்று என்ன? கையினுல் நூற்பதும், அதற்கு முன்னுல் செய்ய வேண்டியிருக்கும் வேலைகளும் என்பது, அக்கேள்விக்

குச் சந்தேகமில்லாத பதில். இந்த மண்ணுக்கு உகந்தது அது. அதைக் கோடிக்கணக்கானவர்கள் எளிதாகக் கற்றுக்கொண்டு விடலாம். அதன் உற்பத்தியும் உடனே செலவாகிவிடக் கூடியது. மில்களே இல்லாதிருக்குமானல், நெய்க்கு எவ்வளவு கிராக்கி இருக்கிறதோ அதேபோல நூலுக்கும் மதிப்பு இருக்கும். உணவுப்பண்டம் கிடைக்காவிட்டால் எப்படிக் கஷ்டப்படு கிருர்களோ அதே போல நூல் பஞ்சத்தையும் உணர்வார்கள். மக்களுக்கு மனம் மாத்திரம் இருந்தால், தங்களுக்கு வேண்டிய துணியை அவர்கள் அதிக உழைப்பின்றித் தயாரித்துக்கொண்டு விடலாம். யுத்தம் அங்கீகரிக்கப்பட்ட காரியமாக இருக்கும் ஐரோப்பிய நாடுகளில், குறிப்பிட்ட சில வருடங்களுக்கு வயது வந்த ஆண்கள் கட்டாயமாக ராணுவ சேவைக்கு அழைக்கப் பட்டு விடுகின்றனர். தன்னைத் தானே பாதுகாத்துக்கொண்டு, யுத்த ஆயத்தங்கள் இல்லாமல் தன்னுடைய வாழ்க்கையை ஒழுங்குபடுத்திக்கொள்ள விரும்பும் நாட்டில், உற்பத்திக்கான தேசீய சேவைக்கு மக்கள் கட்டாயமாகத் திரட்டப்படுகின் றனர். ஒரு நாட்டின் ஜீவாதாரமான தேவைகள், ஒரே இடத் தில் குவியலாக்கப்பட்ட தொழிலின் மூலம் உற்பத்தியாக வேண்டியிருந்தால், முதலாளி தன் செல்வங்களைப் பாதுகாத்துக் கொண்டிருப்பதைப் போன்று அந்த நாடும் அத்தொழில்களைப் பாதுகாத்துக்கொண்டிருக்க வேண்டியது அவசியமாகும். அகிம் சையைத் தனது கலாசாரமாகக் கொண்ட ஒரு நாட்டில், அதி லுள்ள ஒவ்வொரு வீடும் சாத்தியமான வரையில் சுயதேவை யைப் பூர்த்தி செய்து கொள்ளுவதாக இருக்கவேண்டியது அவசியம் என்பதை அந்நாடு காணும். இந்திய சமூகம், ஒரு காலத்தில் அது அறியாமலேயே அகிம்சை அடிப்படையில் அமைக்கப்பட்டிருந்தது. குடும்ப வாழ்க்கை, அதாவது கிராமம், காட்டுமிராண்டிகளான கூட்டத்தினரின் படையெடுப்புகள் அடிக்கடி நடந்தும் சீர் குலையாமல் இருந்துவந்தது. இந்தியா வின் கிராமங்கள், குடியாட்சியின் திரள் என்று மெய்னே எடுத் துக்காட்டியிருக்கிருர். அவற்றில் சீமான், சீமாட்டி என்று தனி யாக யாரும் இல்லை; எல்லோரும் சீமான்கள், சீமாட்டிகளாக இருந்தனர்.

காங்கிரஸ்காரர்கள் இந்த வாதத்தை ஏற்றுக்கொண்டா லன்றி, எந்த ஆசைக்கும் பணிந்துவிடாததும், அதற்கு எதிராக எவ்வளவுதான் பெரிய கஷ்டங்கள் நேர்ந்தாலும் பொருட்படுத் தாமல் உண்மையானதாக நிற்கக்கூடியதுமான அகிம்சையை நிலைநாட்டிவிடுவது அசாத்தியம் என்று நான் கருதுகிறேன். அத்தகைய அகிம்சையில்லாமல், பின்வாங்குவது என்பதோ, தோல்வியோ இல்லாத போராட்டத்தை நாடு நடத்த முடியாது; பிரிட்டிஷார் முன்பும், உலகத்தின் முன்பும், காங்கிரஸ் அதன் அகிம்சையை என்றும் நிரூபிக்கவும் முடியாது.

ஆளுவோர் விஷயங்களுக்கு மாத்திரமேயன்றி, இந்தப் பெரும் ஸ்தாபனத்திற்குப் பயப்படுகிறவர்கள், இதை நம்பாதவர்கள்,

வெறுப்பவர்கள் ஆகிய எல்லோருக்குமாக இருப்பதுதான் காங்கிரஸின் அகிம்சை. இந்த விசாலமான அகிம்சை இல்லாததனுல்தான் சமூக ஒற்றுமையை அடைவதில் நாம் தவறிவிட்டோம் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. உண்மை என்னவென்ருல், காங்கிரஸ்காரர்கள், அவர்களுக்குள் இருக்கும் காரியங்களில் ஜீவனுள்ள இந்த அகிம்சையைக் காட்டிக்கொள்ளவில்லை. நமது கதர் திட்டத்திலிருக்கும் குறைபாடுகளைக் கொண்டு நம் அகிம்சையிலுள்ள குறைபாடுகளை அளந்துவிட முடியும் என்பது என் திடமான கருத்து. இந்த இரண்டிலும் நமது நம்பிக்கை அரை மனமானதாக இருந்திருக்கிறது. இரண்டிலும் முழு மனத்தோடு கூடிய நம்பிக்கை கொள்ளுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். அப்பொழுது காங்கிரஸ் முறியடிக்கப்பட்டுவிடாத பலம் பெற்றதாகிவிடும். அதனுல், இந்தியாவின் சுதந்திரத்தை அடைவதற்குச் சட்ட மறுப்புத் தீயில் பிரவேசிக்க வேண்டி வராமலும் இருக்கலாம்.

இந்த எண்ணத்துடன் ஒவ்வொரு காங்கிரஸ்காரரும், எனக்காக ஸ்ரீ கிருஷ்ணதாஸ் காந்தி தயாரித்திருக்கும் புள்ளி விவர அட்டவணையை (அது 311-ஆம் பக்கத்தில் பிரசுரமாகியிருக்கிறது) அதிகக் கவனத்துடன் பரிசீலனை செய்யட்டும். கதரின் எல்லா அம்சங்களையும் கவனமாக ஆராய்ந்திருக்கும் கதர் நிபுணர்கள் சிலரில் ஸ்ரீ கிருஷ்ணதாஸ் காந்தியும் ஒருவர். இப்புள்ளி விவரம் கதர் அன்பர்கள் படிப்பதற்கு ருசிகரமானதாக இருக்கும். இவை முடிவானவை அல்ல; கிருஷ்ணதாஸின் அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டவை. மட்டரகப் பருத்தி விஷயத்தில் இவை மாறுபடும். ஆயினும் வேலை செய்ய வேண்டிய குறிப்புகளுக்குப் போதுமானது. அட்டவணையிலிருக்கும் புள்ளி விவரங்கள் முழுவதையும் ஆராயும் சிரமத்தை எடுத்துக்கொள்ள விரும்பாதவர்கள், 14-ஆம் நெம்பர் நூலைப் பற்றியதை மாத்திரம் பார்க்கட்டும். தானே நூற்றுக் கொள்ளுகிறவருக்குக் கதர், சதுர கெஜம் 3 அணுவுக்கும் குறைவாகவே விலையாகும் என்பதை அவர்கள் காணலாம். ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் குறைந்தது ஒரு நாளைக்கு அரை மணி நேரமாவது நூற்க வேண்டும் என்பது என் திட்டம். கற்றுக்குட்டிகூட 30 நிமிஷ நேரத்தில் 100 கெஜம் நூற்றுவிடலாம். அதே நேரத்தில் அநேகர் சுலபமாக 200 கெஜம் நூற்றுவிடுவார்கள். தாமே நூற்கும் ஒருவருக்கு வருடத்திற்கு 20 கெஜம் துணி வேண்டும் என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது அவர் அதிகப்பட்சம் தினம் ஒரு மணி நேரம் நூற்க வேண்டும். இந்தியா முழுமைக்கும் தலைக்கு 20 கெஜம் துணி வீதம் கொடுப்பதாயின், அந்த நூலுக்காக இந்தியாவின் ஜனத்தொகையில் ஐந்தில் ஒரு பகுதியினர் அதிகப்பட்சம் தினம் ஐந்து மணி நேரம் வீதம் நூற்க வேண்டும். இப்பொழுது இருக்கும் சராசரி துணித் தேவை தலைக்கு 15 கெஜம் என்று சொல்லப்படுகிறது, திறமை அதிகமாகிவிட்டால் வேலை செய்ய வேண்டிய நேரமும் அதிகம்

குறைந்துவிடும். கதரின் அத்தகைய பரவலான உற்பத்திக்குக் குறைந்த பட்ச முயற்சியும் செலவுமே தேவைப்படும் என்று கூறுவேன். இது, இக்காலத்தில் எங்குமே கண்டறியாத அளவில் வலியக் கூட்டுறவு கொண்டதாகவும் ஆகும். தேவையான மன உறுதி மாத்திரம் இருக்குமானல் இது முற்றிலும் சாத்தியமான காரியமே. எப்படியும் ஒவ்வொரு காங்கிரஸ் காரரும் தம்மால் முடிந்த வரையில் புத்திசாலித்தனமாக நூற்பதற்கு முழு முயற்சியையும் செய்வார்கள் என்றும், அக்கம் பக்கத்தில் இருப்பவர்களிடம் கதரை விற்பதற்கு ஏற்பாடுகளைச் செய்வார்கள் என்றும் எதிர்பார்க்கிறேன். சுதந்திரத்திற்கு நாட்டைத் தயார் செய்வதில் தமக்குரிய பங்கைத் தாம் ஏற்பதாக அவர் நம்பி இதைச் செய்யவேண்டும்.

**சேவா கிராமம் 4—12—'39** **— 'ஹரிஜன்' 9—12—1939**

# கதர் பற்றிய புள்ளி விவரங்கள்

| நூல் | | | | | | | செலவு சதுர கெஜத்துக்கு எத்தனை அணா | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| நூலின் நெம்பர் | அங்குலத்துக்கு எத்தனை நூல் | 100 கெஜம் நூலுக்குத் துணி சதுர கெஜம் | தினம் 100 க.வீதம் 360 நாளுக்குரிய நூலுக்கான துணி சதுர கெஜம் | கெஜம் | சிட்டம் | எடை தோலா | பருத்தி | பஞ்சடித்தல் | நூற்பு | நெசவு | வெளுக்காத துணி | தான் நூற்ற துணி | தான் பஞ்சடித்து நூற்ற துணி |
| | | | | | | | அ. பை. | அ. பை. | அ. பை. | அ. பை. | அ. பை. | அ. பை. | அ. பை. |
| 10 | 38 | 1/30 | 12 | 3,040 | 3- 9/19 | 14¼ | 1 10½ | 0 8½ | 2 6 | 1 5 | 6 6 | 4 0 | 3 3½ |
| 12 | 40 | 1/32 | 11¼ | 3,200 | 3¾ | 12½ | 1 6¾ | 0 7½ | 2 10 | 1 6 | 6 6¼ | 3 8¼ | 3 0¾ |
| 14 | 42 | 1/34 | 10½ | 3,360 | 3-15/16 | 11¼ | 1 5 | 0 6¾ | 3 1 | 1 6½ | 6 7¼ | 3 6¼ | 2 11½ |
| 16 | 45 | 1 | 10 | 3,600 | 4¼ | 10-5/8 | 1 4 | 0 6 | 3 5½ | 1 8 | 6 11½ | 3 6 | 3 0 |
| 20 | 50 | 1/40 | 9 | 4,000 | 4-11/16 | 9-3/8 | *1 5 | 0 8½ | 3 9½ | 1 10 | 7 9 | 3 11½ | 3 3 |

* இது உயர்ந்த ரகப் பருத்தியாக வைத்துக் கணக்கிடப்பட்டது.

குறிப்பு:—1. தேவையான துணியின் நெம்பர் சாதாரணமாய் 8 முதல் 20 வரை; இரண்டுக்கும் மத்தியாகிய 12 நெம்பர் பின்வரும் கணக்குகளில் அடிப்படையாகக் கொள்ளப்பட்டிருக்கிறது.

2. தியாக நூற்பின் மூலம் கயாராகும் ஒரு கெஜம் துணிக்கு அணா 3—8-1/4 பை செலவாகும்.

3. இந்த நூற்பில் தினம் 100 கெஜம் வீதம் வருடத்தில் 11-1/4 சதுர கெஜம் துணி அல்லது வருடத் தேவையாகிய 15 சதுர கெஜத்தில் முக்கால் பங்கு தயாராகும்.

4. குழந்தைகள், நோயாளிகள், சக்தியற்றவர்கள் இவர்களை விலக்கி, மொத்த ஜனத்தொகையில் 40 சதவீதம் நூற்சக் கூடியவர்கள் என்று கருதலாம். (இது மிகவும் குறைவான திட்டம். 60 சத வீதம் என்பது இன்னும் சரியான புள்ளியாகலாம்.) ஆகவே, 40/100 × 3/4 = 3/10, அதாவது துணித் தேவையில் மூன்றிலொரு பங்கு யக்ஞ நூற்பின் மூலம் தயாராகிறது மிச்சம் மூன்றில் இரு பங்கு கூலி நூற்பால் தயாராக வேண்டும். ஆகவே, ஒரு சதுர கெஜம் கதரின் விலை சுமார் 5 அணா 8பையில் அடங்கும்.

—கிருஷ்ணதாஸ் காந்தி.

# 7

# ராட்டையின் தன்மை

"காலத்தால் ஒரு நூற்றுண்டு பிந்தியது" என்ற தலைப்பில் 'டெக்ஸ்டைல் ஓர்ல்டு' என்ற பத்திரிகை எழுதியிருப்பதைக் கத்தரித்து ஒரு நண்பர் அனுப்பியிருக்கிறுர்.

அது எழுதுவதாவது:

"இந்தியாவில் தோன்றியிருக்கும் காந்தி இயக்கம், தொழில் யந்திர மயமாவதை எதிர்ப்பதாயிருக்கிறது. அதிகப்படியான மக்களுக்கு அவர் கள் வீட்டிலேயே அதிகப்படியான வேலை கொடுப்பதையும் இது நோக்கமாகக் கொண்டிருக்கிறது. பஞ்சை அரைத்து, பட்டை போட்டு, நூற்கும் கை யந்திரம், முரடான நூலிலிருந்து நயமான 20-ஆம் நெம்பர் நூல் வரையில் அதிகப்படி ஒரு நாளில் எட்டு மணி நேரத்தில் 16,000 கெஜம் நூற்கக்கூடிய தைக் கண்டுபிடிப்பவருக்கு சுமார் 37,000 டாலர் பரிசு அளிப்பதாகவும் அந்தச் சங்கம் அறிவித்திருப்பது விசித்திரமாகவே இருக்கிறது.

"காந்தியின் இயக்கமும், தொழில்களில் ஏற்பட்டுவரும் அபிவிருத்தி யைத் தடுப்பதற்குச் செய்யப்பட்டுவரும் எல்லா முயற்சிகளும் பொருளா தாரத் தவறு, பயனில்லாதவை என்பதை நிரூபிக்க ஓர் உண்மையே போது மானது. ரகத்தில் மெல்லியதான நூலைத் தயாரிப்பது ஒன்றைத் தவிர மற்ற வைகளிலெல்லாம் இப்பரிசுப் போட்டிக்கு அநேகமாகத் தகுதி வாய்ந்த ஒரு யந்திரம் ஒரு நூற்றுண்டுக்கு முன்னுல் இந்நாட்டில் உபயோகத்தில் இருந்து வந்தது என்பதுதான் அந்த உண்மை. அசல் யந்திரங்களில் ஒன்று சமீபத்தில் கிரீன்வில்லில் நடந்த ஜவுளிக் காட்சியில் வைக்கப்பட்டிருந்தது. காந்தியின் பரிசுக்குத் தகுதி வாய்ந்த இந்தப் புராதன ரக யந்திரங்கள், வாஷிங்டனி லிருக்கும் ஸ்மித்ஸோனியன் இன்ஸ்டிடியூஷனிலும், டியர்போர்னில் ஹென்றி போர்டிடமும் இருக்கின்றன என்றே நம்புகிறேம்.

"அதிகப்பட்சத் தொகையினரான மக்களுக்கு அறிவு, ஒழுக்கம், சமூக மத வளர்ச்சிக்கு அதிகப்பட்ச வாய்ப்பு காந்தியின் முறையினுல் ஏற்பட்டு விடாது. ஆனுல், அம்முறைக்கு எதிரானதாகவுள்ள முறைகளினுல்தான் அது ஏற்பட முடியும். தானே இயங்கும் யந்திர உற்பத்தியில் இடைவிடாத முயற்சி செய்து, குறைந்த அளவு ஆட்களுக்கு அதிகப்பட்ச சம்பளத்தில் குறைந்த நேர வேலை கொடுத்து, அதன் மூலம் மற்றத் தொழில் முயற்சிகளுக்கு ஏராளமான தொழிலாளரை இவ்விதம் விடுவித்து, புதிய தொழில்களை விருத்தி செய்ய ஊக்கமளித்து, தொழிலாளருக்கும் அவர்கள் உழைப்பைக் கொண்டு வாழ்கிறவர்களான பெண்கள், குழந்தைகள், வயோதிகர்கள் ஆகிய வர்களுக்கும் வாழ்க்கையைச் சிறந்த வாழ்க்கையாக்கவல்ல மற்ற நடவடிக்கை களுக்கெல்லாம் அதிக வாய்ப்புக்களை அளிப்பதுதான் காந்தி முறைக்கு எதி ரானதாகவுள்ள முறைகள்.

"இந்தப் பரிசு கொடுக்க முன் வந்திருப்பது, காந்தி இயக்கமும், தொழில் தானே இயங்கும் அதிகபட்ச யந்திரங்களைத் தடுக்க நடக்கும் எல்லா முயற்சிகளும் அடிப்படைப் பொருளாதாரத் தவறுகள் என்பதை ஒப்புக்கொள்ளுவதாகும். இந்தியாவின் தொழில், சமூக எதிர்காலத்திற்கு இது நம்பிக்கை தருவதான அறிகுறி."

முன்கூட்டியே ஒரு முடிவுக்கு வந்துவிட்டு அதற்குத் தகுந்தாற் போல வாதம் செய்வதற்கு இது ஓர் உதாரணம். இக்குறிப்பை எழுதியிருப்பவர் 'காந்தி இயக்கம்' என்று கூறுவது, உண்மையில் கதர் இயக்கம் என்றுதான் பொருள்படும். இந்த இயக்கத்தின் தன்மை இன்னதென்பதைப் புரிந்துகொள்ளும் சிரமத்தை இவர் எடுத்துக்கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. நூற்பது, இந்தியாவின் கோடிக்கணக்கான குடிசைகளிலிருந்து அநீதியாக, சட்ட விரோதமாக, கொடுமையின் மூலம் நீக்கப் பட்டு விட்டது. நூற்பதைத் திரும்பவும் நிறுவுவதை நோக்க மாகக் கொண்டது நூற்கும் இயக்கம். எல்லோருக்கும் துணைத் தொழிலாக இருந்து வந்த நூற்பு பறிக்கப்பட்டுவிட்ட குடிசை களில் ஏதாவது ஒரு வகையில் பதிலுக்கு ஒரு தொழிலுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்குமானல், இந்த இயக்கத்தை ஆரம் பிக்கவே முடிந்திருக்காது. துரதிருஷ்டவசமாகவோ, அதிர்ஷ்ட வசமாகவோ, பதிலுக்கு எந்தத் தொழிலுக்கும் ஏற்பாடு செய்யப் படவில்லை. எனவே, அவசியத்தின் காரணத்தினலேயே, கிராம வாழ்க்கையை ஆராய்ந்தவர்கள், மற்றெல்லா வழிகளையும் பார்த்துவிட்டு, குடிசைகளின் நூற்புத் தொழில் மறைந்து விட்டதனல் இந்தியாவின் கோடிக்கணக்கான இல்லங்களில் ஏற்பட்டுவிட்ட கடுமையான பொருளாதாரக் கஷ்டத்திற்கு உட னடியான பரிகாரமாக ராட்டையை மேற்கொள்ள வேண்டியவர் கள் ஆயினர். இந்தக் கோடிக்கணக்கானவர்களுக்கு இதை விடச் சிறந்த தொழில் ஒன்று கிடைத்த மாத்திரத்தில் அவர்கள் தாராளமாக ராட்டையைக் கைவிட்டுவிடலாம். இக்கோடிக் கணக்கான மக்களுக்கு மேலான தொழில் கிடைத்துவிட்டதைக் குறித்து அப்பொழுது நான் மற்றவர்களைவிட அதிக மகிழ்ச்சி அடைவேன். ஆனல், மனித அறிவுக்கு எட்டியவரையில் பார்த்தால், ராட்டையைவிடச் சிறந்ததான இன்னென்றைக் கண்டுவிட முடியும் என்ற நம்பிக்கையில்லை எனத் தோன்றுவ தாகவே இந்த இயக்கத்தை ஆரம்பித்தவர்கள் நினைக்கிருர்கள் என்பதில் சந்தேகமில்லை. உலகத்தில் பலவீனமான நாடுகள் என்று சொல்லப்படுகிறவைகளைப் பலமுள்ள மேற்கத்திய நாடுகள் இப்பொழுது சுரண்டிக் கொண்டிருப்பது ஒரு நாளைக்கு ஒழிந்தே தீரும். அப்படிச் சுரண்டல் ஒழிந்துவிடும் போது, உலகம் முழுவதும் ராட்டைக்குத்தான் திரும்பும் என்பதும் இயக்கத்தை ஆரம்பித்திருப்போரின் திடமான நம்பிக்கை. அது நடந்தாலும் நடவாது போனலும், இந்தியாவும் இன்னெரு நாட் டைச் சுரண்டி வாழும் நாடாக ஆகிச் சுரண்டுவதற்குப் புதிதாக நாடுகளைக்கண்டுபிடித்துக்கொண்டாலன்றி அல்லது இப்பொழுது

தனது மண்ணில் கொண்டு வந்து திணிக்கப்படும் பொருள்களை ஏற்றுக்கொள்ளும்படி இந்தியா எவ்விதம் கட்டாயப்படுத்தப் பட்டு வருகிறதோ அதே போல மேற்கத்திய நாடுகளில் தான் கொண்டு போய்க் குவிக்கும் தனது பொருள்களையெல்லாம் அந்நாடுகள் வாங்கிக் கொள்ளும்படி அந்த மேற்கத்திய நாடு களைக் கட்டாயப்படுத்துவதற்குப் போதுமான மிருக பலத்தைச் சுதந்திர இந்தியா விருத்தி செய்து கொண்டாலொழிய, இந்தியா தன்னுடைய பொருளாதாரத் துயரத்தைப் போக்கிக்கொள்ளு வதற்கு, அது தனது வாழ்க்கைக்கு ஜீவாதாரமான தாயுள்ள தானியங்களைத் தன் வயல்களிலேயே எவ்விதம் உற்பத்தி செய்து கொள்ளுகிறதோ அதே போன்று, தனது குடிசை களுக்குத் தேவையான பொருள்களையும் இந்தியா தயாரித்துக் கொள்ளவே வேண்டும். ஆகையால், இப்பொழுதுள்ள ராட்டை நூற்கும் அதே நேரத்தில் இன்னும் அதிகமாக அல்லது நயமாகக் குடிசையில் வாழ்வோர் தங்கள் குடிசைகளில் இருந்த படியே நூற்றுக்கொள்ளும்படி செய்யவல்ல ராட்டையையோ, யந்திரத்தையோ கண்டுபிடிப்பதற்காக நூற்கும் இயக்கத்தை ஆரம்பித்தவர்கள் முயற்சி செய்வதில் முரண்பாடானது எதுவும் இல்லை. வீட்டு யந்திரங்களை நாளுக்கு நாள் அபிவிருத்தி செய்து கொண்டு போகும் முறை தொன்றுதொட்டு வந்துகொண் டிருக்கிறது என்பதை அக்குறிப்பை எழுதியிருப்பவர் அறிய வேண்டும். தக்ளிக்குப் பதிலாக ராட்டை வந்தது. ராட்டை யிலும் நாளாவட்டத்தில் எத்தனையோ அபிவிருத்திகள் ஏற்பட் டிருக்கின்றன. வெவ்வேறுவிதமான பழைய ரக ராட்டைகள் வெவ்வேறு மாகாணங்களிலும் இருப்பதை இன்னும் பார்க் கிறோம். இவ்விதம் அபிவிருத்தி ஏற்பட்டு வந்தது, ராட்டையில் நூற்பது நின்று போன பிறகுதான் திடீரென்று தடைப்பட்டுப் போயிற்று. கிழக்கு இந்தியக் கம்பெனியின் கையாட்கள் செய்த சூழ்ச்சியினால் திடீரென்று நின்றுபோன அந்த அபி விருத்தியின் போக்கையே அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கவுன்ஸில் தொடர்ந்துகொண்டிருக்கிறது. உண்மை என்ன வென்றால், அந்தக் கவுன்ஸிலுக்கோ, எனக்கோ, யந்திரங்களைப் பற்றிய வரையில் எந்த ஆட்சேபமும் இல்லை. ஆனால், தொழிலை யந்திர மயமாக்குவதைக் குடிசைத் தொழில்களைக் கொன்று விடும் அளவுக்குக் கொண்டு போய்க் குறுகிய துறையில் அவற்றைத் திரட்டி வைத்துவிடக்கூடாது என்றுதான் நாங்கள் தெரிவித்துக்கொள்ளுகிறோம். அதாவது, இந்தியாவின் நாக ரிகத்தையும் கிராம வாழ்வையும் நாசமாக்கி, இந்தியாவைப் பட்டண மயமானதாக்கி விடுவதையே எதிர்க்கிறோம். ‘டெக்ஸ்டைல் ஓர்ல்டு’வில் எழுதியிருப்பவர், ‘இப்பரிசுப் போட்டிக்கு அநேகமாகத் தகுதி வாய்ந்ததாக ஒரு யந்திரம், ஒரு நூற்றாண்டுக்கு முன்னால் இந்நாட்டில் உபயோகத்தில் இருந்து வந்தது’ என்று கூறுகிறார். இதில் ‘அநேகமாக’ என்று இருக்கும் வினை உரிச்சொல்தான் குழப்பம் தருவதாக இருக்கிறது. ஆனால், அத்தகைய யந்திரம் ஒன்று அமெரிக்கா

வில் இருந்து வருமானால், அமெரிக்க நிபுணர் ஒருவர் இப்போட்டிக்குத் தேவையான வகையில் அதில் மாறுதல்களையெல்லாம் செய்துவிடும் சிரமத்தை மேற்கொள்ளுவாராயின், அவர் அகில இந்திய நூற்போர் சங்கம் கொடுக்க முன் வந்திருக்கும் பரிசைப் பெறுவதோடு வாயில்லாப் பூச்சிகளான கோடிக்கணக்கான மக்களின் நன்றியையும் சம்பாதித்துக் கொண்டவராவார். ஆனால், அப்படிப்பட்ட யந்திரம் கண்டுபிடிக்கப்படாது போனாலும், பரிசை அடையாது போனாலும், நூற்கும் இயக்கம் அதன் முன்னேற்றப் பாதையில் போய்க்கொண்டுதான் இருக்கும் என்பதைக் குறை கூறுவோர் தெரிந்துகொள்ளட்டும். இந்தியாவில் சுமார் இரண்டாயிரம் கிராமங்களிலிருக்கும் 1,50,000 பெண்களுக்குச் சேவை செய்ய முடிவதற்காகவும், அவர்கள் மூலம் அநேக நூற்போர், சலவை செய்வோர், தையற்காரர்கள், துணியில் அச்சிடுவோர் போன்றவர்களுக்கும் சேவை செய்து வருவதற்காகவும் சங்கம் மகிழ்ச்சியடைகிறது. ஏழு லட்சம் கிராமங்களில், ஒவ்வொரு கிராமத்திலும் இதே போன்று வேலை செய்து, இன்று மனச்சோர்வே பிரதானமாக இருந்துவரும் அவர்களுடைய குடிசைகளில் நம்பிக்கையின் ஒளியைக் கொண்டு வந்துவிட முடியும் என்றும் சங்கம் நம்புகிறது.

—'எங் இந்தியா'–21—11—1929

# 8

# கதரில் ஆராய்ச்சி செய்வோர்

இன்றைய கதர் ஆராய்ச்சி செய்து வருகிறவர்களைக் குறித்து நான் ஏதாவது எழுத வேண்டும் என்று கேட்கிறார்கள். முன்னாலேயே கொஞ்சம் எழுதியிருக்கிறேன். ஆனால், நூற்கத் தெரிந்திருப்பதும், பஞ்சைப் பட்டை போடுவது முதலியவைகளை அறிந்திருப்பதும் மாத்திரம் கதரைக் குறித்து உண்மையில் அறிந்துகொண்டுவிட்டதாகாது என்பதை மிகவும் தெளிவாகச் சொல்லிவிடவோ, போதிய அளவு வற்புறுத்திவிடவோ முடியாது. அவற்றைக் கதரின் நுட்பங்கள் என்று சொல்லலாம். கதரின் உட்பொருளை ஒருவர் தெரிந்துகொள்ள வேண்டுமானால், அதைச் சக்தியினால் இயங்கும் யந்திரத்தைக் கொண்டு தயாரிக்காமல் கையினால் ஏன் தயாரிக்க வேண்டும் என்பதை அறிய வேண்டும். ஒரு தனி ஆள், ஒரு யந்திரத்தை முடுக்கிவிட்டு அதே அளவுத் துணியைக் குறைந்த நேரத்திற்குள் தயாரித்து விட முடிவதாக இருக்கும்போது அதிகம் பேர் இத்துணியைத் தயாரிப்பதில் ஈடுபடும்படி ஏன் செய்ய வேண்டும்? கதரைக் கையினால்தான் உற்பத்தி செய்ய வேண்டும் என்றால், தக்ளியால் தயாரிக்கலாம் என்றால், ஏன் மூங்கில் தக்ளியினால் தயாரிக்கக்

கூடாது? ஒரு கல்லை நூலில் கட்டித் தொங்கவைத்து, அதைக் கொண்டே அவசியமான வேலைக்குப் பயன்படுத்திக் கொண்டு விடலாம் என்றால் தக்ளிதான் எதற்காக? இத்தகைய கேள்விகள் எழுவது முற்றிலும் இயற்கை. இத்தகைய கேள்விகளுக்கெல்லாம் சரியான பதிலைக் கண்டுபிடிப்பது, கதரைப் பற்றிய ஆராய்ச்சியின் அவசியமான பகுதியாகும். இந்த விஷயங்களையெல்லாம் இங்கே விவாதிக்க நான் விரும்பவில்லை. கதரைப் பற்றிய உண்மையான அறிவு அதைத் தயாரிக்கும் வேலைகளுக்கும் அப்பாற்பட்டது, அதற்குப் பொறுமையோடு கூடிய ஆராய்ச்சி வேண்டும் என்பதையே நான் சொல்ல விரும்புகிறேன். அத்தகைய அறிவைப் போதிப்பதற்கு வேண்டிய சாதனம் இன்று நம்மிடம் இல்லை. ஆகையால், கதர் போதகர்கள், தாங்கள் சொல்லிக் கொடுத்துக்கொண்டு வரும்போதே தங்களுடைய அறிவை வளர்த்துக் கொள்ளவேண்டியிருக்கிறது. கதரைக் குறித்து ஆராய்ச்சி செய்கிறவர்கள் சொந்த முயற்சியினாலேயே இந்த அறிவைப் பெற்றுக்கொள்ள வேண்டும். பண்டைக் காலத்தில் விஞ்ஞான அறிவு இல்லாத சமயத்தில் மாணவர்களே தங்களுக்கு ஆசான்களாகவும் ஆகிக்கொண்டு முதல் தரமான அறிவாளிகளாகவும் நிபுணர்களாகவும் ஆயினர். நாமும் அநேகமாக அதே நிலைமையில்தான் இருந்து வருகிறோம்.

—'ஹரிஜன்' 1—3—1942

## 9

# வருமானத்தை இரட்டிப்பாக்கும் விதம்

கதர் இயக்கம் சென்ற பதினொரு ஆண்டுகளாக நடந்து கொண்டு வருகிறது. குறைந்தது 1,20,000 பெண்களுக்கு ஆண்டுதோறும் சிறிய, ஆனால் நிரந்தரமான வருமானத்தையும் கொடுத்துக்கொண்டு வருகிறது. ஆனால், கதரின் விஞ்ஞானத்தைக் குறித்துக் கதர் ஊழியர்களிடம் இருந்துவரும் வருந்தத்தக்க அறியாமையினால், இந்த வருமானம் எவ்வளவு இருக்க வேண்டுமோ அதற்குக் குறைவாகவே இருந்து வருகிறது. கெட்டுப் போன பஞ்சைச் சரியாக அரைத்துப் பட்டை போடாமல், ஆட்டம் கொடுக்கும் ராட்டையில் நூற்பதனால் உற்பத்தி குறைவாகிவிடுகிறது. இவை சம்பந்தமான விவரங்களைச் சரியாகக் கவனித்து வந்தால் உற்பத்தியை இரண்டு மடங்காக்கி வருமானத்தையும் இரட்டிப்பாக்கிக் கொள்ளலாம். கவனித்துப் பருத்தி எடுத்து, கை மணையில் அரைத்து நன்றாகப் பட்டை போட்டால் உற்பத்தி அதிகமாவதோடு நூலின் பலம், சமனாக இருப்பது ஆகியவைகளிலும் அபிவிருத்தி ஏற்படும்.

கதிர் எத்தனை தடவை சுழல்கிறது, அதாவது ராட்டையின் சக்கரம் ஒரு தடவை சுழல்வதில் கதிர் எத்தனை தடவை சுழல்கிறது என்பதையே நூற்பதன் வேகம், நூலின் பலம், சமனுக இருப்பது, நூலின் நயம் ஆகியவைகள் அநேகமாகப் பொறுத்திருக்கின்றன. கதிர் வட்டின் குறுக்கே செங்குத்தாக ஒரு கோடு இழுத்து, ராட்டையை மெதுவாகச் சுற்றினுல் அதன் ஒரு சுழலுக்குக் கதிர் எத்தனை தடவைகள் சுழல்கிறது என்பதை எளிதில் கணக்கிட்டுவிடலாம். ராட்டைச் சக்கரம் ஒரு முறை சுழன்ருல் கதிர் நூறு தடவைக்குக் குறையாமல் சுழலவேண்டும். ஆனுல், கதிர்கள் முப்பத்தைந்து தடவைகளே சுழல்வதைத் தமது சுற்றுப் பிரயாணத்தின்போது பார்த்ததாக ஸ்ரீ சங்கரலால் பாங்கர் அறிவிக்கிருர். எனவே, உற்பத்தி படுமோசமான நிலைமையில் குறைவாக இருப்பதிலும், நூல் பலமில்லாமல் பஞ்சுபஞ்சாக இருப்பதிலும் ஆச்சரியமில்லை. கதரின் சுழற்சியை அதிகரிப்பதற்குக் கதிரில் மால் கயிறு ஓடுவதற்கு இருக்கும் உருளையின் சுற்றளவைக் குறைக்க வேண்டும். ஆங்காங்கு இருக்கும் கதர் ஊழியர்கள் தங்கள் ஊரில் இருக்கும் ஒவ்வோர் ராட்டையையும் பரிசோதித்து, அவசியமானுல் கதிரிலும் மற்றப் பாகங்களிலும் செய்ய வேண்டிய மாறுதல்களைச் செய்ய வேண்டும். முடிவாகத் தக்ளியே நூற்பதற்குச் சிறந்த கருவி என்று காண நேர்ந்தாலும் நேரலாம். தக்ளிக்கு அவ்வளவு கவனம் செலுத்த வேண்டியிருக்காது. தக்ளியில் நூற்கும் புதிய முறை நூற்பின்படி சராசரி *200* சுற்று, அதாவது *266* கெஜம், மணிக்கு *440* சுற்று நூல் கிடைக்கிறது.

—'ஹரிஜன்'–4—5—1935

## 10

# விஞ்ஞான அறிவும் கதரும்

நீங்கள் செய்யும் ஒவ்வொரு சின்னக் காரியத்திலுங்கூட, அது ஏன், எதற்காக என்பதை இடைவிடாது ஆராய்ந்துகொண்டிருப்பது விஞ்ஞான அறிவுக்கு அவசியம். ராட்டையிலேயே சுயராஜ்யமும் சமாதானமும் இருக்கின்றன என்று சொல்லிக்கொண்டு இருப்பது மாத்திரம் போதாது. வெறும் நம்பிக்கையில் மாத்திரம் விஞ்ஞான காரியங்கள் இருந்துவிடுவதைக் கொண்டு விஞ்ஞான மனம் திருப்தியடைந்து விடாது. பகுத்தறியவேண்டிய விஷயங்களில் புகும்போது அந்த நம்பிக்கை முடமாகிவிடுகிறது. பகுத்தறிவது எங்கு முடிகிறதோ அங்குதான் நம்பிக்கையின் துறை ஆரம்பமாகிறது. நம்பிக்கையின் பேரில் ஏற்படும் முடிவுகள் அசைக்க முடியாதவை. ஆனுல், பகுத்தறிவதனுல் ஏற்பட்ட முடிவுகளோ, அதற்கும் மேலான

தத்துவம் வந்து விடும்போது நிலையற்றதாகவும், தோற்றுவிடக் கூடியதாகவும் ஆகிவிடுகிறது. விஞ்ஞானத்திற்குள்ள எல்லையைச் சொல்லுவது அதைக் குறைத்துக் கூறுவதாக ஆகாது. இரண்டும் வேண்டியவைகளே. அதற்குரிய இடம் உண்டு.

நான் முதன் முதலில் ராட்டையைக் கண்டுகொண்டது, அகஸ்மாத்தாக என் மனத்தில் தோன்றியதைக் கொண்டுதான். அதைப் பற்றிய விஷய ஞானம் எனக்கு எதுவுமே கிடையாது. இதனாலேயே ராட்டைக்கும் தறிக்கும் உள்ள வித்தியாசம் தெரியாமல் குழப்பிக்கொண்டேன்.* என்றாலும், காலம் சென்ற மகன்லால் காந்தியின் உதவியைக் கொண்டு ராட்டையின் சாத்தியங்களைக் குறித்து ஆராய்ந்து முடிவுக்கு வர முயன்றேன். உதாரணமாக, இந்தக் கேள்விகளெல்லாம் எழுந்தன: கதிரை ஏன் இரும்பில் செய்யவேண்டும்? ஏன் பித்தளையில் செய்யக் கூடாது? அது கனமாக இருக்க வேண்டுமா, மெல்லியதாக இருக்கவேண்டுமா? இருக்க வேண்டிய சரியான பருமன் என்ன? மில் கதிரைக் கொண்டு நூற்கும் வேலையை ஆரம்பித்தோம். அப்பொழுது கதிரை மூங்கில் மரப்பிடிப்பில் வைத்து வந்தோம். பின்னால் தோலையும் நரம்புக் கயிற்றையும் உபயோகிக்க ஆரம்பித்தோம். கதிர்கள் சுலபமாக வளைந்துவிடுகின்றன என்பதைக் கண்டோம். பிறகு நிமிர்ப்பதும் கஷ்டமாக இருந்தது. ஆகவே, பின்னல் ஊசிகளைக் கொண்டு கதிர்களைத் தயாரித்தோம். முடிவாகக் குடைக் கம்பிகளினால் தயாரித்துக்கொண்டோம். இவைகளெல்லாம் புதிதாகக் கண்டுபிடிக்கும் ஆற்றலுக்கும் விஞ்ஞான ஆராய்ச்சிக்கும் வேண்டியிருந்தன.

விஞ்ஞான உள்ளத்தோடு கூடிய ஒரு கதர் ஊழியர், அதோடு நின்றுவிடமாட்டார். 'ராட்டை எதற்காக? நூற்கும் யந்திரம் ஏன் இருந்துவிடக்கூடாது?' என்று அவர் தம்மைத் தாமே கேட்டுக்கொள்ளுவார். ஒவ்வொருவரும் சொந்தமாக நூற்கும் யந்திரங்களை வைத்துக்கொண்டு விடமுடியாது என்பது அவர் கேள்விக்குப் பதிலாக இருக்கும். தங்களுக்கு வேண்டிய ஆடைகளுக்காக நூற்கும் யந்திரங்களை மக்கள் நம்பி இருந்துவிடுவதானால், அந்த யந்திரங்கள் யாருடைய ஆதிக்கத்தில் இருக்கின்றனவோ அவர்களே இம்மக்கள் மீதும் ஆதிக்கம் செலுத்துவார்கள். இதனால், தனிப்பட்டவரின் சுதந்திரம் இல்லாது போய்விடும். மின்சார சப்ளையையும் தண்ணீர் சப்ளையையும் துண்டித்துவிட்டு லண்டனையும் நியூயார்க்கையும் இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் முழுவதும் தனக்குப்

---

* காந்திஜி தாம் எழுதியுள்ள "ஹிந்த் ஸ்வராஜ்" என்ற நூலில், ராட்டை என்பதற்குப் பதிலாகத் தறி என்ற சொல்லை–இந்த இரண்டுக்கும் உள்ள வித்தியாசம் அப்பொழுது தெரியாமல் – உபயோகித்திருப்பதையே இங்கே குறிப்பிடுகிறார். இதே விஷயத்தை இந்நூலில் முதலாவதாக இடம் பெற்றுள்ள 'ராட்டையை நான் கண்டுகொண்டவிதம்' என்ற கட்டுரையின் 2–ஆம் பக்கத்திலும் மகாத்மா குறிப்பிட்டிருப்பதை வாசகர்கள் கவனிக்கவும்.

பணிந்துவிடும்படி யாரும் செய்துவிட முடியும். சமூகத்தின் வாழ்வுக்குத் தனிப்பட்டவர்களின் சுதந்திரம், ஒருவரையொருவர் நம்பி வாழ்வது ஆகிய இரண்டும் அத்தியாவசியமானவை. ஒரு ராபின்ஸன் குருஸோதான்* தன்னிடம் இருப்பதே தனக்குப் போதும் என்று இருக்க இயலும். தன்னுடைய அத்தியாவசியமான தேவைகளைப் பூர்த்திசெய்து கொண்டுவிடத் தன்னாலானதையெல்லாம் ஒரு மனிதன் செய்து கொண்டுவிட்ட பிறகு, மீதமிருக்கும் தனது தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளுவதற்கு அக்கம்பக்கத்தில் இருப்பவர்களின் ஒத்துழைப்பை நாடுகிறான். அதுதான் உண்மையான ஒத்துழைப்பாக இருக்கும். இவ்வாறு ராட்டையைப் பற்றிய விஞ்ஞான ஆராய்ச்சி, சமூக இயலில் கொண்டு போய்விடும். ராட்டை சம்பந்தமான பல வகை நுட்பங்களையும் நாம் ஆய்ந்து ஆராய்ச்சி செய்யாது போனால் இந்தியாவை விடுவிப்பதற்கு நம் கையிலிருக்கும் ஒரு சக்தியாக ராட்டை ஆகாது. எல்லா நுட்பங்களையும் ஆராய்ந்து கொண்டு விடுவோமாயின் அப்பொழுது அது இந்தியா சுதந்திரமடையச் செய்வதோடு உலகம் முழுமைக்கும் வழிகாட்டும்.

ஒருவருக்கு விஞ்ஞானப் புத்திப்போக்கு இருக்குமாயின், அவர் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும், உண்பது, அருந்துவது, ஓய்வு எடுத்துக்கொள்ளுவது, தூங்குவது போன்ற அவருடைய செயல் ஒவ்வொன்றிலும் அது பிரதிபலிக்கும். ஒவ்வொன்றும் விஞ்ஞான ரீதியில் ஒழுங்காகும். ஏன், எதற்காக என்பதும் முற்றிலும் உணரப்பட்டதாகவும் இருக்கும். முடிவாக, விஞ்ஞான உள்ளம் பற்றற்றதாகவும் இருக்கவேண்டும். அப்படி இல்லையானால், அது தன்னைத் தானே பைத்தியமாக்கிக் கொண்டு விடும்.

—'ஹரிஜன்' –31—3—1946

* ராபின்ஸன் குருஸோ: இவன், டேனியல் டிபோ (1660–1731) என்ற ஆங்கில நாவலாசிரியர் எழுதிய "ராபின்ஸன் குருஸோ" என்ற உலகப் புகழ் பெற்ற நாவலின் கதாநாயகன்; பெரிய அசகாய சூரன். இவன் இளம் வயதிலேயே கடற்பிரயாணம் செய்யவும், துணிகரமான செயல்களில் ஈடுபடவும் ஆசைப்பட்டுப் பெற்றோரின் சொல்லைக் கேட்காமல் ரகசியமாக வீட்டை விட்டு ஓடிக் கடல் யாத்திரை செய்தபோது மனித சஞ்சாரமே இல்லாத ஒரு தீவுக்குப் போய், அங்கே தான் வாழ்வதற்கு வேண்டிய வசதிகளையெல்லாம் தானே தேடிக்கொண்டு பல வருடங்கள் வாழ்ந்து, அநேக வீரதீரச் செயல்களை யெல்லாம் புரிந்து, அதன்பின் வேறு சில நாடுகளுக்கும் யாத்திரை செய்து, இறுதியில் இங்கிலாந்துக்குத் திரும்பி வந்து கல்யாணம் செய்துகொண்டு குழந்தை குட்டிகளுடன் சௌக்கியமாக வாழ்ந்தான் என்பது கதை.

## 11

# தெளிவாக்கும் புள்ளிவிவரங்கள்

சென்னை மாகாண ஜவுளி கமிஷனர் ஸ்ரீ எஸ். வெங்கடேஸ்வரன், முக்கியமாக சென்னை கதர்த் திட்டத்தின் காரியமாக டில்லிக்கு வந்திருந்தார். சென்னையில் மில்களே இல்லை என்று வைத்துக்கொண்டால், மாகாணம் முழுமைக்கும் உடுத்தக் கதரையே கொடுப்பதானால், அதற்கு அவருடைய புள்ளி விவரங்களைக் கொடுக்கும்படி அவரைக் கேட்டேன். அவர் கொடுத்த புள்ளி விவரத்தைக் கீழே தருகிறேன். அவையே உண்மையை விளக்கும்.

| | |
|---|---|
| சென்னை மாகாண ஜனத்தொகை | 530 லட்சம் |
| மாகாணத்திலிருக்கும் குடும்பங்களின் தொகை $\frac{5,30,00,000}{4}$ | 132.5 லட்சம் |
| நூற்பவர் ஒவ்வொருவரும் தினத்திற்கு ஒரு மணி நேரம் வீதம் நூற்ருல் கிடைக்கும் நூல் | 318 சிட்டம் |
| 30 நாட்களைக் கொண்ட ஒரு மாதத்தில் ஒவ்வொரு குடும்பமும் நூற்கும் மொத்த நூல் 318 30 9018 | $11\frac{1}{4}$ சிட்டம் |
| (ஒரு குடும்பத்தில் நூற்பவர் ஒருவர் கையினுல் நூற்ற நூல் உற்பத்தி ஒரு குடும்பத்திற்கு, ஒரு வருடத்திற்கு 12 $11\frac{1}{4}$ | 315 சிட்டம் 9.64 ராத்தல், உத்தேசமாக 144 அங்குல அகலத் துணி 30 கெஜத்திற்குச் சமம் |
| மாகாணத்தில் மொத்தக் கதர்த் துணி உற்பத்தி | 30 13.25 3975 லட்சம் கெஜம் |
| முதிர்ந்தோருக்கு 20 கெஜம், குழந்தைகளுக்கு 10 கெஜம் வீதம் மாகாணத்தின் ஜனத்தொகை முழுவதற்கும் தேவையான மொத்தக் கதர்த் துணி | |
| 370 லட்சம் 20 | 7400 லட்சம் கெஜம் |
| 160 லட்சம் 10 | 1600 லட்சம் கெஜம் |
| | 90 கோடி கெஜம் |
| துணியின் தேவைக்கு உற்பத்தியாகும் துணியின் விகிதம் | 44.1 சத விகிதம் |

"ஒவ்வொரு குடும்பத்திலும் ஒருவர் சராசரி 2 மணிநேரம் தினம் நூற்ருலன்றி, அல்லது மாகாணத்திலிருக்கும் ஒவ்வொரு இரண்டு குடும்பத்திற்கு ஐந்து பேர் வீதம் நூற்கும்படி செய்தாலன்றித் துணித் தேவை முழுவதையும் பூர்த்தி செய்வதற்கு வேண்டிய கையினல் நூற்ற நூல் கிடைக்காது என்று தோன்றுகிறது.

"தேவையான கைத்தறிகள்: சராசரி நெசவாளர் ஒருவர், தக்க பயிற்சியைப் பெற்ற பிறகுங்கூட தினத்திற்கு 5 கெஜத்திற்கு மேல் நெய்ய முடியாது என்று வைத்துக் கொண்டால், அல்லது (பண்டிகைகளுக்கும் மற்ற ஓய்வுக்குமாக 5 நாட்களை ஒதுக்கிவிட்டால்) மாதத்திற்கு 125 கெஜத்திற்கு மேல் நெய்ய முடியாது என்று வைத்துக் கொண்டால், 90 கோடி கெஜம் துணியை நெய்வதற்கு 6 லட்சம் தறிகள் வேண்டும். இப்பொழுது மாகாணத்தில் பருத்தி நூலை நெய்து கொண்டிருக்கும் தறிகளின் தொகை 5 லட்சத்திற்குக் கொஞ்சம் அதிகம். ஆகையால், எல்லோருக்கும் கதர் கொடுப்பதற்கு மாகாணத்திற்குப் போதுமான பருத்தி நூல் தறிகள் இருப்பதற்கு இன்னும் குறைந்தது 75,000 தறிகளையாவது அதிகரிக்க வேண்டும்."

பிறந்த நாட்டினிடம் கொள்ளும் பக்திக்காவது, எட்டுப்பேரில் ஐந்து பேராவது தினத்திற்கு ஒரு மணி நேரம் நூற்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது அநிகப்படியானதா?

—'ஹரிஜன்'-27—10—1946

பகுதி ஒன்பது

# கதர் ஊழியர்கள்

## 1

## அடிப்படையான தேவைகள்

சத்தியத்திலும் அகிம்சையிலும் வேரூன்றப்படுவதற்காக நாம் கதரை மேற்கொண்டிருக்கிறோம். இந்த அடிப்படையை நாம் மறந்துவிட்டு நாம் நினைத்தபடியெல்லாம் கதரை உற்பத்தி செய்துகொண்டு போவோமாயின், நாமே அதை அழித்துக் கொண்டிருக்கக் கூடிய ஒரு சமயம் வந்துவிடும். நமது அடிப் படை லட்சியங்களில் நாம் உறுதியோடு இல்லாது போவோமா யின் நாமே கீழ் நிலையை அடைந்து விடுவதில் தான் அது முடிந்து விடும். கதர் வேலையின் ஒவ்வொரு பகுதியிலும் புனிதம் இருக் கும்படி பார்க்கவேண்டியது கதர் ஊழியர்களின் கடமை. நூற் கும் நம்மவர்கள் எல்லோரும் சத்தியம், அகிம்சை பக்தர்களாக இருப்பார்கள் என்று நான் இன்று எதிர்பார்க்கவில்லை. என்ரு லும், நம் மூவாயிரம் கதர்த் தொண்டர்கள், அத்தகைய பக்தர்க ளாகவே இருக்கவேண்டும் என்று நான் நிச்சயமாக எதிர்பார்க் கிறேன். அப்படி அவர்கள் இல்லை என்ருல், நமது வேலை முன் னேற்றமடையாது; நாமும் அழிந்து போவோம்.

(ஹிந்தியிலிருந்து எடுத்தது.)

—'ராட்டையின் தத்துவம்' என்ற நூலின் 1941-ஆம் ஆண்டு டிசம்பர் பதிப்பி லிருந்து-பக்கம் 81.

* * *

கதர் ஊழியர்கள், இடைவிடாத உற்சாகத்துடன் கதர் விஞ்ஞானம் சம்பந்தமான விதிகளைப் பரிசீலனை செய்து, அதை அதிக நாள் நீடித்து உழைக்கக்கூடியதாகவும், கவர்ச்சியான தாகவும் செய்ய வேண்டும். கதரையே எல்லோரும் உபயோகிக் கும்படி செய்வதற்குப் பொறுப்பு வாய்ந்தவர்கள் தாங்களே என்பதையும் அவர்கள் நம்பவேண்டும். எப்பொழுதும் கண் காணிப்புடன் இருந்து, தங்களுடைய முழுத் திறனையும் தாங்கள் மேற்கொண்டிருக்கும் காரியத்தில் ஈடுபடுத்துகிறவர்களுக்கு மாத்திரமே கடவுள் உதவி செய்கிருர்.

—'ஹரிஜன்'–10—12—1938

அப்போதைக்கப்போது தலைமையிலிருந்து வரும் யோசனைகளுக்கு உடன்பட்டு ஊழியர்கள் நடக்க வேண்டும். அதோடு தாங்கள் யாருக்குச் சேவை செய்பவர்களாக இருக்கிறார்களோ அந்தக் கிராமவாசிகளிடமிருந்து ஆட்சேபங்களும் வரும் என்பதையும் அவர்கள் எதிர்பார்க்க வேண்டும். இக்காரியத்திற்காக அவர்கள் கிராமவாசிகளுடன் மிக நெருங்கிய தொடர்பு கொள்ள வேண்டும். அவர்களை அணுகுவதில் அனுதாபமும் நம்பிக்கையும் சேர்ந்திருக்க வேண்டும். கிராமவாசிகள் முன்பு அவர்களுடைய போஷகர்களாகக் கதர் ஊழியர்கள் தோன்றவே கூடாது. ஆனால், தாங்கள் செய்ய வேண்டிய காரியத்தை இது வரை செய்யத் தவறி இப்பொழுது வலியச் சேவை செய்ய வந்திருக்கும் கிராமவாசிகளின் ஊழியர்களாகவே இவர்கள் தோன்ற வேண்டும். தவிர்க்க முடியாததான இந்த ஆரம்ப நிபந்தனைகளைச் சரியானபடி நிறைவேற்றி விடுவார்களாயின், இரவுக்குப் பின்னர் பகல் வருவது போல மற்றதெல்லாம் தானே வந்து சேரும்.

—'ஹரிஜன்'—24—8—1935

## 2

# கட்சி ராஜீயத்திற்கு இடமில்லை

கதர், ஒரு வகையில் வெறும் பொருளாதார விஷயமே. மற்றெல்லாவற்றையும்விட ஒரு கதர் ஸ்தாபனம் முதலில் ஒரு வர்த்தக ஸ்தாபனமாக இயங்க வேண்டும். ஆகையால், கட்சி ராஜீயத்தைச் சேர்ந்த ஜனநாயகத் தத்துவம் அதற்குப் பொருந்தாது. ஜனநாயகம் என்பது, அவசியமாகவே உறுதி, கொள்கைப் போராட்டமாகவே இருக்கும். இதனால் இந்த வெவ்வேறான கொள்கைகளுக்குமிடையே சில சமயங்களில் அடிதடியும் மூண்டு விடுவது உண்டு. ஒரு வர்த்தக ஸ்தாபனத்தில் அத்தகைய சச்சரவுகளுக்கெல்லாம் இடமே இருக்கக்கூடாது. ஒரு வியாபார ஸ்தாபனத்தில் கட்சி, கோஷ்டிகள் முதலியனவெல்லாம் இருக்கின்றன என்று வைத்துக்கொண்டு யூகித்துப் பாருங்கள். அவற்றினால் அந்த ஸ்தாபனம் சிதறுண்டு போகும். ஆனால், ஒரு கதர் ஸ்தாபனமோ வியாபார ஸ்தாபனத்திற்கும் மேலானது. மக்களுக்குச் சேவை செய்வதற்கு என்று ஏற்பட்ட ஒரு தரும ஸ்தாபனம் அது. அத்தகைய ஸ்தாபனத்தைப் பொது ஜனங்கள் இஷ்டப்படுகிறபடியெல்லாம் நடத்திக்கொண்டு போக முடியாது. சொந்த அபிலாஷைகளுக்கும் இதில் இடமே இல்லை.

—'ஹரிஜன்'—21—9—1934

# 3

# தவருன போக்கு

தம் சக ஊழியர்கள் ஒரு சங்கத்தை அமைத்துக்கொண்டு தமக்கு நிபந்தனைகளை விதித்திருக்கிருர்கள் என்றும், இதற்குத் தாம் என்ன சொல்லுவது என்றும் அகில இந்திய நூற்போர் சங்கத்தின் ஏஜெண்டு ஒருவர் கேட்கிருர். இத்தகைய சங்கங்களை அமைப்பது தவருன போக்கு என்று நான் கருதுகிறேன். அந்த ஊழியர்கள் அகில இந்திய நூற்போர் சங்கத்தின் தன்மையையும் அதன் நோக்கத்தையும் அறிந்துகொள்ளவில்லை என்று தெளிவாகிறது. இச்சங்கம் காங்கிரஸினுல் அமைக்கப்பட்ட பரோபகார ஸ்தாபனம். முக்கியமான கிராமக் கைத்தொழிலான கையினுல் நூற்பதையும் அது சம்பந்தமானவைகளையும் விருத்தி செய்வது என்ற திட்டமான காரியத்திற்காக இச்சங்கத்திற்கு சுயேச்சையான அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. வலியச் சேவை செய்வதான இச்சங்கத்தில் ஈடுபட்டிருப்பவர்கள், அதனிடமிருந்து எந்தவிதமான லாபத்தையும் அடைவதில்லை என்பது மாத்திரமல்ல, அவர்களால் முடிந்தால் தங்கள் உழைப்பை இச்சங்கத்திற்கு அவர்கள் இனுமாக அளிக்க வேண்டும் என்றும் எதிர்பார்க்கப்படுகின்றனர். நம் நாடு உலகிலேயே அதிக ஏழையான நாடாக இருப்பதனுல் அநேகர் அப்படி இனுமாக உழைக்க முடியாது. எனவே, இவர்களுடைய ஜீவனத்திற்குப் போதுமானதாகவுள்ள தொகை மாத்திரமே அவர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. இவர்கள் சௌகரியமாக இருக்க வேண்டும் என்பதற்காக எல்லாவித முயற்சிகளும் செய்யப்படுகின்றன. என்ருலும், இவர்களைச் சாதாரணத் தொழிலாளர் என்ற முறையில் கருதுவதில்லை. லாபம் இருந்து அதை யாரும் பங்கிட்டுக்கொள்ளுவதும் இல்லை. அதில் பங்குதாரர்களும் சொந்தக்காரர்களும் இருக்கிருர்கள் என்ருல், நூற்பவர்களும் நெய்பவர்களும் அவர்களைப் போன்றவர்களும்தான் அவர்கள். கதரை வாங்கி உபயோகிப்பவர்களும் லாபமடைவதில்லை. மில்துணியைவிட மலிவாக இருக்கிறது, பார்ப்பதற்கு நன்ருக இருக்கிறது என்பதற்காக அவர்கள் கதர் அணிய வேண்டும் என்று எதிர்பார்க்கப்படவில்லை. ஆனுல், அரைப் பட்டினி கிடக்கும், போதுமானபடி வேலையில்லாத ஏராளமானவர்களுக்கு, பெரும்பாலும் பெண்களுக்கு, இது வேலை கொடுக்கிறது என்பதனுலேயே கதரை உடுத்த வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகின்றனர். இதை விற்பதனுல் கிடைக்கும் பணமெல்லாம், இவ்வளவு பெரிய பரோபகார ஸ்தாபனத்தை நடத்துபவர்களின் சம்பளம், இதரச் செலவுகள் போக மிச்சமெல்லாம், வாயில்லாப்பூச்சிகளான அத்தொழிலாளருக்கே போகிறது.

ஆகையால், இச்சங்கத்திற்கு எதிராகத் தொழிலாளர் சங்கங்களை யாராவது ஆரம்பிப்பார்களாயின் அவர்கள், கதர்

உற்பத்தித் தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளருக்கு விரோதமானவர்களாவர். அவர்கள் எடுத்துக்கொள்ளுவது, அத் தொழிலாளரின் அல்லது கதர் வாங்குவோரின் மடிகளிலிருந்தே வர வேண்டியிருக்கிறது. ஊழியர்களின் நன்மைக்காகக் கதர் வாங்குவோருக்கு வரி விதிப்பதென்பது தவறானது என்பது வெளிப்படையானது. ஏஜெண்டுகளும் இவர்களைப் போன்ற ஊழியர்களே என்பதை இந்த ஊழியர்கள் அறியவில்லையா? அநேக ஏஜெண்டுகள் எந்தவித ஊதியமும் வாங்கிக் கொள்ளாமலேயே வேலை செய்து வருகிறார்கள். எங்கோ ஒரு ஏஜெண்டு தமது கடமையின் எல்லையையும் மீறித் தம்முடன் தமக்குக் கீழும் வேலை செய்து வரும் ஊழியர்களைச் சக ஊழியர்களாகப் பாவிப்பதற்குப் பதிலாக அவர்களுக்குத் தாமே எஜமானன் என்று எண்ணிக்கொள்ளுவதாகக் காணப்பட்டால் அது வேறு விஷயம். அத்தகைய விஷயங்களில் ஊழியர்கள் தலைமைக் காரியாலயத்தின் மூலம் பரிகாரம் தேடிக்கொள்ளலாம். ஆனால், சம்பிரதாய முறையில் சங்கம் அமைத்துக்கொண்டு அதன் மூலம் பரிகாரம் தேடிக்கொள்ளக்கூடாது என்பது நிச்சயம். சிலவற்றில் சங்கம் அமைத்துக்கொள்ளுவது அவசியம். ஆனால், இதில் எந்த அவசியமும் இல்லை என்பது மாத்திரமல்ல, நான் மேலே சொன்னது போலத் தவறான போக்கும் ஆகும். விரிவான வகையில் இது தொடர்ந்து செய்யப்பட்டு வருமாயின், இந்தச் சங்கத்தைத் தோற்றுவித்தவர்களும் தருமகர்த்தாக்களுமான இவர்களே அதைக் கொன்றுவிடுவார்கள்.

—'ஹரிஜன்'–16—7—1938

# 4

# கதரும் கிராம அபிவிருத்தியும்

கதர் ஊழியர் ஒருவரின் முழு நேரத்தையும் கதர் வேலையிலேயே ஈடுபடுத்துவதாயின், கிராம அபிவிருத்தி வேலையையோ, கிராமக் கைத்தொழில் வேலையையோ அவர் கவனிக்க முடியாது என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். இம்மூன்று வேலைகளுக்கும் மூன்று பேர் தேவை. நன்றாகச் சீரமைப்புச் செய்யப்பட்டுவிட்ட கிராமத்திற்கு ஒருவரே போதும் என்பது என் கருத்து. உதாரணமாக ஓர் ஊழியர், நூலை வாங்கிக்கொள்ளுவது, பஞ்சுப்பட்டைகளையும் நூற்கும் கருவிகளையும் வினியோகிப்பது, கதர் விற்பனை ஆகியவைகளுக்கு இரண்டு மணி நேரம் செலவிடலாம். கிராமக் கைத்தொழில் வேலைக்கு அவ்வளவு நேரம்கூட வேண்டியிராது. மீதமிருக்கும் நேரத்தைக் கிராம முன்னேற்ற வேலைகள், பொதுக் கல்வி ஆகியவைகளில் ஈடுபடுத்திக்கொள்ளலாம். எப்படி நூற்பது என்பது போன்றவைகளை மக்களுக்குக் கதர்

ஊழியர்கள் கற்றுக்கொடுப்பதில் ஊழியரின் நேரம் செலவாகி விடுவதால் இதுவரையில் இது சாத்தியமில்லாது போயிற்று. ஆனால், கதரும், கிராமத்தில் உற்பத்தியாகிற பொருள்களும், உள்ளூரில் உற்பத்தியானவை உள்ளூரிலேயே செலவாகிவிட வேண்டிய காலம் வந்துவிட்டது. அப்படியானால், ஒருவரே எல்லா வேலைகளையும் கவனித்துக்கொண்டுவிட முடியும். இந்த வேலைகளெல்லாம் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை, சாத்தியமானவரை அவை ஒன்றாக ஆகவேண்டும் என்று சொன்னால் இன்று போதும். இந்த இணைப்பைத் திணித்துவிட முடியாது. அது இயற்கையான வளர்ச்சியாக இருக்க வேண்டும். இப்பொழுது இருந்துவரும் எந்த ஒரு நிலைமைக்கும் தவறை நான் யார்மீதும் சுமத்தவில்லை, சுமத்தவும் முடியாது. நமது அறிவும் அனுபவமும் செய்யக்கூடிய அளவுக்குச் சாத்தியமானவரை நமது திட்டங்கள் முன்னேறியிருக்கின்றன. இந்த வேலையின் நுட்ப அறிவை விரிவாக்கி விருத்தி செய்வதற்காகக் கதர் வித்தியாலயங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. கிராம வேலைகள் எல்லாவற்றையும் எப்படி இணைப்பது என்பதை அவற்றிலிருந்து நாம் தெரிந்து கொள்ளுவோம்.

—'ஹரிஜன்' – 31—5—1942

# 5

# ஊழியரும் பணமும்

அகில இந்திய நூற்போர் சங்கத்தின் ஊழியர்கள் இன்று நாடு முழுவதிலும் பரவி இருக்கிறார்கள். அவர்களின் தொகை சுமார் 3000. இது சிறு தொகை என்றுதான் நான் கருதுகிறேன். இந்தியாவில் கதரை எல்லோரும் உபயோகிக்க ஆரம்பித்து விடுவார்களானால், இத்தொகை, இந்த ஊழியர்களின் தொகை, பிரம்மாண்டமானதாகப் பெருகிவிடும். ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு கதர் ஊழியர் இருப்பது என்றால், அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கணக்கில் ஏழு லட்சம் ஊழியர்கள் இருப்பார்கள். இதற்கு ஏராளமான பணம் வேண்டியிருக்கும். ஆனால், இது நம்மைத் தடைப்படுத்திவிட வேண்டியதில்லை. வேலை நன்மையளிப்பதாக இருந்து, மக்களும் அதை மதிப்பதாக இருந்தால், பணம் கிடைத்துவிடும். என் வாழ்நாள் முழுவதும் ஸ்தாபனங்களை அமைத்து நடத்தி வந்திருக்கிறேன். பணம் இல்லை என்பதற்காக என் அனுபவத்தில் எந்த ஸ்தாபனத்தையும் மூட வேண்டியோ, அதன் வேலைகளைக் குறைத்துக் கொள்ளவோ நேர்ந்ததில்லை. ஆனால், இதற்கு மாறாக, ஸ்தாபனங்களை மூடிவிடவோ அல்லது அவற்றின் வேலைகளைக் குறைத்துவிடவோ நேர்ந்திருந்தால், ஊழியர்கள் கிடைக்காததனாலேயே அவ்வாறு நேர்ந்திருக்கிறது. ''பணம் அல்ல என்றால்

பெரிய வர்த்தக ஸ்தாபனங்களிலும், சர்க்கார் உத்தியோகங்களிலும் வேலை தேடுவதற்கு வேறு என்ன கவர்ச்சி இருக்கிறது?" என்று பதிலுக்குக் கேட்கப்படலாம். நான் மேலே சொன்னதைச் சரியாகப் புரிந்துகொள்ளாதவர்கள் மாத்திரமே இத்தகைய ஆட்சேபத்தை எழுப்ப முடியும். பணத்தினல் எதையும் செய்துவிட முடியாது என்று நான் சொல்லவில்லை. பணம் அநேக பலன்களை அளிக்கக்கூடியதாக இல்லாதிருந்தால் மக்கள் எப்படி பணத்திற்கு அடிமையாகி இருப்பார்கள்? நாம் பணத்திற்கு அடிமைகளாக இருப்பதாயின் மக்களுக்குச் சேவை செய்வது என்ற எண்ணத்தையே நாம் விட்டுவிட வேண்டும் என்றுதான் நான் சொல்ல விரும்புகிறேன். நசுக்கப்பட்டிருப்பது அடிமையின் கதி. ஆனல், பணத்தை நமக்கு ஊழியனகப் பாவித்து அதை ஓர் உபாயமாக மாத்திரம் நாம் உபயோகிப்போமாயின், அதுவும் சேவை நோக்கத்துடன் உபயோகிப்போமானல், அப்பொழுது பணத்தைச் சரியானபடி நாம் பயன்படுத்திக் கொண்டவர்களாவோம். மக்களுக்குச் சேவை செய்வதற்கு முதலாவதும், அத்தியாவசியமானதுமான தேவை, நல்ல ஊழியர்தான். அத்தகைய ஊழியர்கள் இருக்கும்பொழுது; பணம் தானே வரும்; அதை அவர்கள் தேடிப்போக வேண்டியதில்லை. ஆகையால், இன்னும் ஏழு லட்சம் ஊழியர்கள் இருந்தாலும், பணம் தானே வந்துவிடும் என்று நாம் வைத்துக்கொள்ளலாம் என்று நான் சொன்னேன். நமது வேலைகளுக்கு மக்களைக் கவருவதற்கு நம்மிடம் பணம் இல்லை என்பது உண்மை. இதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். லட்சியத்தில் உணர்ச்சியும் பக்தியுமே அவர்களைக் கவரவேண்டும். அகில இந்திய நூற்போர் சங்கத்தைப் போன்ற பரோபகார ஸ்தாபனங்களில் சேருகிறவர்கள், சேவா நோக்கத்துடன்தான் சேரவேண்டுமே யன்றிச் சம்பளத்திற்காகச் சேரக்கூடாது. அவர்களுக்கும் கொஞ்சம் ஊதியம் கொடுக்கவே வேண்டியிருக்கிறது என்ருல், பணக்காரர்களைப் போன்றே ஏழைகளும் வயிற்றுக்குச் சாப்பிட வேண்டியிருக்கிறது என்பதால்தான். ஆனல், உயிர் வாழ்ந்து, சேவைக்குத் தகுதி வாய்ந்தவராகத் தாம் இருப்பதற்காகவே ஊழியர் சம்பளம் வங்கிக்கொள்ளுகிருர். இத்தகைய ஊழியர்கள் இன்பத்திற்காகவோ அல்லது நாகரீகம் என்பதற்காகவோ உண்பதோ, அருந்துவதோ அல்லது ஆடைகளை அணிவதோ இல்லை.

(ஹிந்தியிலிருந்து)

—'ராட்டையின் தத்துவம்' என்ற நூலிலிருந்து (பக்கம் 85–86): 3—11—1945

# 6

# கதர் ஊழியரும் ராஜீயமும்

கதர் ஊழியர்களுக்கு ராஜீயத்தில் ஈடுபடுவதற்கு நேரமே இருக்காது. அகில இந்திய நூற்போர் சங்கத்தின் ஊழியர்கள் தினம் எட்டு மணி நேரம்தான் வேலை செய்வது, மற்ற நேரத்தை உல்லாசமாகவும் மற்றக் காரியங்களிலும் செலவிடுவது என்ருல், அச்சங்கம் அதன் காரியத்தை நிறைவேற்ற முடியாது. அச்சங்கத்தை ஆக்கக் கூடியவர்களும் அழிக்கக் கூடியவர்களும் ஊழியர்களே. ஆகையால், ஊழியர்கள் தங்களுக்கு இருக்கும் ஓய்வு நேரத்தை, அந்த வேலையில் திறமையுள்ளவர்களாகவும், கதரைத் தயாரிப்பதில் உள்ள பலவிதமான முறைகளையும் தெரிந்துகொள்ளுவதனுலும், அதன் விஞ்ஞானத்தையும் நுட்பங்களையும் தெரிந்து கொள்ளுவதைக்கொண்டும் தங்கள் வேலையைத் திறம்படச் செய்வதற்காகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

என்ருலும், அகில இந்திய நூற்போர் சங்க ஊழியர்கள் ராஜீயத்திலோ அல்லது வேறு விஷயங்களிலோ சிரத்தையே கொள்ளக்கூடாது என்பது அதன் பொருள் அல்ல. அவர்களுக்கு சிரத்தை உண்டு; சிரத்தை இருக்கவே வேண்டும். ஆனல், யார் ஒருவர் தமக்குள்ள சிரத்தையையெல்லாம் சர்க்கா சங்கத்தின் வேலையின் மூலம் அடைந்து, நிதானத்தோடு அதைத் தக்கவாறு பயன்படுத்துகிருரோ அவர் மாத்திரமே ராஜீயத்தைச் சரியானபடி அறிந்துகொண்டவர் ஆவார். அவர்தான் நல்ல வாக்காளராக இருப்பதோடு காங்கிரஸின் சார்பில் நிற்கும் அபேட்சகருக்கு வோட்டு அளிப்பார். ஆனல், ஒரு குறிப்பிட்டவருக்குத் தங்கள் வாக்கை அளிக்கும்படி மற்றவர்களைத் தூண்டுவதில் தாம் சிக்கிக்கொள்ளமாட்டார். பிரசங்கம் செய்யவும் மாட்டார். காங்கிரஸ் வேலை, மக்கள் வேலை. மக்களுக்குப் பிரதிநிதியாக இருப்பது காங்கிரஸ். காங்கிரஸ் உண்டாக்கியிருப்பதுதான் அகில இந்திய நூற்போர் சங்கம். இச்சங்கம், மக்களைச் சேர்ந்தது. எவ்விதம் ராஜீய வேலை காங்கிரஸின் நடவடிக்கையோ அதே போன்று அகில இந்திய நூற்போர் சங்கமும் காங்கிரஸின் நடவடிக்கை. ஆனல், ஒரே சமயத்தில் ஒருவர் இரண்டு குதிரைகளில் எப்படிச் சவாரி செய்ய முடியும்? அகில இந்திய நூற்போர் சங்கத்தில் சேருகிறவர், அதன் வேலையிலேயே முற்றிலும் ஈடுபட வேண்டும்; ராஜீய வேலையை மேற்கொள்ளுபவர் அதிலேயே முற்றிலும் ஈடுபட வேண்டும். ஆகவே, இரு தரப்பினரும் தங்களுக்குள் இன்னர் இன்ன வேலையைச் செய்வதென்று பிரித்துக்கொள்ள வேண்டும். இதனுலேயே அகில இந்திய நூற்போர்

சங்கத்தின் ஊழியர்கள் ராஜீயத்தில் தீவிரமாக ஈடுபடக்கூடாது என்று அச்சங்கத்தில் விதிகள் இருக்கின்றன.

(ஹிந்தியிலிருந்து)

—'கதரின் தத்துவம்' என்ற நூலிலிருந்து (பக்கம் 108—109) ; 3—11—1945

# 7

# இரண்டு கேள்விகள்

கதர் ஊழியர்களைக் குறித்து என் முன்பு இரண்டு கேள்விகள் இருக்கின்றன. இவற்றில் ஒரு கேள்வி, கிராம ஊழியர்களைப் பற்றியது. அவர்கள் தங்களுடைய நேரத்தை முக்கியமாக நூற்பதிலும், மற்றவர்களை நூற்கும்படி செய்வதிலும் செலவிட்டாக வேண்டியது அவர்களுடைய கடமை. பருத்தி சாகுபடியிலிருந்து அதைத் துணியாக நெய்வது வரையிலுமுள்ள எல்லாக் காரியங்களையும் கவனிப்பதுதான் கதர் வேலை என்பதன் புதிய கருத்து. இக்காரியங்களையெல்லாம் புத்திசாலித்தனமாகச் செய்து, ராட்டையையோ கதிரையோ சீர்ப்படுத்தவும் தெரிந்த ஓர் ஊழியர், தமது ஜீவனத்திற்கு வேண்டியதை எளிதாகச் சம்பாதித்துக்கொண்டு விடலாம்; அதே மாதிரி செய்யும்படி மற்றவர்களுக்கும் சொல்லிக்கொடுக்கலாம். இந்த வேலையுடன் கதர் வேலைக்கு எந்தவிதமான குந்தகமும் இல்லாமல், ஊழியர் சிறு நோய்களுக்கு வைத்தியம் செய்வதோடு கிராமத்தின் சுகாதார வேலைகளையும் கவனிக்க வேண்டும். ஒரு கைத்தொழிலைக் கற்றுக் கொடுப்பதன் மூலம் கல்வியைப் போதிக்க வேண்டும். ஆகையால், இது கதர் வேலைக்குப் புறம்பானது என்று நான் கருதவில்லை. படிப்புக்காக வருகிறவர்கள், கதரை அணிவதோடு கதரின் மூலமே கல்வியைப் பெறவேண்டும்.

இரண்டாவது கேள்வி, ஒரு கதர் ஊழியர் சம்பளம் வாங்கும் ஊழியராக எவ்வளவு காலம் வேலை செய்வது என்பது. ஆரம்பத்திலிருந்தே தமக்குத் தாமே சம்பாதித்துக்கொள்ளுபவராக அவர் இருக்கவேண்டும் என்பதுதான் என் அபிப்பிராயம். அது சாத்தியமில்லை என்றால், அவர் தமக்குத் தாமே ஒரு காலத்தை நிர்ணயித்துக் கொள்ளவேண்டும். அதிகப்பட்சமான காலம் ஐந்து வருடங்கள் என்பது என் கருத்து. ஐந்தாவது வருடக் கடைசியில் தமக்குத் தாமே வாழக்கூடியவராக வேண்டிய ஊழியர், தாம் பெற்றுவரும் சம்பளத்தை வருடத்திற்கு வருடம் குறைத்துக்கொண்டே வரவேண்டும். ஐந்தாவது வருடக் கடைசியில் தம் வாழ்க்கைக்குத் தாமே ஏற்பாடு செய்துகொள்ளுபவராகத் திடீரென்று ஆகிவிடலாம் என அவர்

எதிர்பார்க்க முடியாது. இது ஒரு கலை. இதற்குக் கவனமான சிந்தனையும் நிர்வாகமும் தேவை. தம் வாழ்க்கைக்குத் தாமே சம்பாதித்துக்கொள்ள வேண்டும் என்று மற்றவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பவர் தாமும் அந்தவிதமாக வாழ வேண்டும்.

— 'ஹரிஜன்' –16—11—1934

## 8

## யார் தருமகர்த்தாவாக ஆகலாம்?

அகில இந்திய நூற்போர் சங்கம் மேற்கொண்டிருக்கும் பணி மிக விரிவானது, பெரியது. ஆகையால், இச்சங்கத்திற்குத் தருமகர்த்தாவாக இருக்கக்கூடியவர்களுக்கு வேண்டிய தகுதிகளைக் குறித்து மிகவும் கவனமாகச் சிந்திக்க வேண்டியது அவசியமாகிறது. அவர்கள் கீழ்க்கண்டவாறு இருக்க வேண்டும் என்பது என் கருத்து :

1. பெயரளவிலோ அல்லது பெயருக்காக என்றோ மாத்திரம் யாரும் தருமகர்த்தாவாக இருக்கக்கூடாது.

வருடத்தில் நான்கு முதல் ஆறு மாத காலம் வரையில் வேலை இல்லாமல் இருப்பவர்களைக் கோடிக்கணக்கில் கொண்ட இந்தியா போன்ற ஒரு நாட்டில், ஒவ்வொருவரும் தாமே நூற்றுக் கொள்ளும் நூலைக்கொண்டு தயாரித்த துணியை உடுத்த முடியும். தினமும் நியாயமான நேரம், அதாவது சராசரி தினத்திற்கு ஒரு மணி நேரம், நூற்பதற்கு வேண்டிய உடல் தகுதியுள்ளவர்கள் எல்லோரும் நூற்பதாக இருந்தால், வேறு எந்தத் துணியையும் தொடவேண்டியதே இல்லை என்பதில் ஒரு தருமகர்த்தாவுக்கு நம்பிக்கை இருக்க வேண்டும்.

2. இதில் அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கும் ஒரு தருமகர்த்தா, மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாக இருப்பதை முன்னிட்டும், நாட்டின் சேவைக்குத் தம்மாலானதைச் செய்து வருவதாகத் திருப்தியடையவும் ஒழுங்காக நூற்றுக்கொண்டு வரவேண்டும்.

3. தருமகர்த்தாவாக இருக்கும் ஆணோ,பெண்ணோ, இந்திய கிராமங்களின் வாழ்க்கைக்கு ஏற்ற வகையில் தங்கள் வாழ்க்கையை ஒழுங்குபடுத்திக்கொள்ள வேண்டும்.

4. கிராமங்களால் ஆனது இந்தியா. ஆனால், படித்த நம்மவர்களோ, கிராமங்களை உதாசீனம் செய்துவிட்டார்கள். அகில இந்திய நூற்போர் சங்கத்தின் தருமகர்த்தா ஒருவர்

நமது கிராம வாழ்க்கையில் இருந்துவரும் கஷ்டங்களைப் போக்குவதில் தம்மாலான முழு முயற்சியையும் செய்யவேண்டும். அப்படிச் செய்வதில் நகர வாழ்க்கைக்கு ஒரு மாதிரியாகவோ அல்லது அதற்கு ஒத்ததாகவோ கிராம வாழ்க்கை ஆகிவிடக்கூடாது என்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். நகரங்கள், கிராம வாழ்க்கை முறையை அனுசரிப்பதோடு கிராமங்களுக்காக வாழவேண்டும்.

5. ஒரு தருமகர்த்தாவின் கணவர் மில் தொழில் சம்பந்தப்பட்டவராக இருந்தால், தாமும், தமது நண்பர்களும், உறவினர்களும் நூற்ற நூலை நெய்வதற்குத் தமது சொந்தப் பணத்தில் ஒரு நெசவாளரை வேலைக்கு வைத்துக்கொண்டு நெய்து, அவ்விதம் தயாரான துணியை உபயோகிக்கவேண்டும்.

6. கையினால் நூற்பது, கையினால் நெய்வது ஆகியவைகளைக் குறித்த பிரசுரங்களையெல்லாம் ஒரு தருமகர்த்தா படித்து இந்தக் கைத்தொழில்களின் பொருளாதாரத்தையும், ஒழுக்க முக்கியத்தையும் புரிந்துகொள்ளவேண்டும். இதை எல்லோரும் செய்வதாக எப்படி ஆக்க முடியும் என்பதை அறிந்து, அவர் அதை மற்றவர்களுக்கும் எடுத்துச் சொல்ல வேண்டும்.

7. ஆரம்பத்திலிருந்து இன்று வரையிலுள்ள அகில இந்திய நூற்போர் சங்கத்தின் சரித்திரத்தை ஒரு தருமகர்த்தா படித்து விளங்கிக்கொள்ளவேண்டும். துணி உற்பத்தியின் பலவிதமான காரியங்களிலும் அது என்னென்ன புரட்சிகரமான மாறுதல்களைச் செய்திருக்கிறது என்பதையும் அவர் தெரிந்துகொள்ள வேண்டும்.

இவையே என் கருத்துக்கள். இவற்றைச் சங்கம் அங்கீகரித்தாலன்றி அவை கட்டாயமானவைகளாகமாட்டா. இவற்றிற்குத் திருத்தமாகவோ, சேர்க்கையாகவோ பயனுள்ள யோசனைகளை நான் வரவேற்கிறேன்.

—'ஹரிஜன்'–3—11—1946

பகுதி பத்து

# தியாகத்திற்காக நூற்பது

## 1

## தியாகத்திற்காக நூற்பது ஏன்?

'சாப்பாட்டிற்காக வேலை செய்யவேண்டிய அவசியம் இல்லாத நான் எதற்காக நூற்கவேண்டும்?' என்று கேட்கப் படலாம். எனக்குச் சொந்தமல்லாததை நான் தின்று கொண்டிருப்பதனல்தான் நான் நூற்க வேண்டியதாகிறது. என் நாட்டு மக்கள் நாசமாக்கப்படுவதைக் கொண்டு நான் வாழ்ந்து வருகிறேன். உங்கள் மடிக்கு வரும் ஒவ்வொரு காலணவும் எங்கிருந்து, எப்படி வருகிறது என்பதை ஆராய்ந்து பாருங்கள். நான் கூறுவதிலுள்ள உண்மையை அப்பொழுது அறிந்து கொள்ளுவீர்கள்.

—' எங் இந்தியா '–13—10—1921

## 2

## பெரியோர் செய்வதைப் பாமரர் செய்வர்

நிதானமுள்ள நண்பர் ஒருவர் கீழ்வருமாறு எழுதுகிருர் :

" கதர் அதிகப்படியாக உற்பத்தியாகியிருப்பதைக் குறித்தும், அதை விற்பனை செய்வதற்கு ஏற்பாடுகளைச் செய்யவேண்டியதைப் பற்றியும் 'எங் இந்தியா'வின் சென்ற இதழில் எழுதியிருந்தீர்கள். பம்பாய் போன்ற நகரங்கள், கையிருப்பில் இருக்கும் கதரை எடுத்துக்கொண்டு விடலாம் என்ற உங்கள் விருப்பத்தையும் தெரிவித்திருந்தீர்கள். ஆனல், விற்பனைக்குத் தக்க ஏற்பாடுகள் இல்லையென்ருல், உற்பத்தி முறை தப்பானதல்லவா? இன்றுங்கூட மில் துணியைவிட அதிக விலையுள்ளதாகக் கதர் இருக்கிறது. இந்த அதிக விலையை ஈடுசெய்யக்கூடிய வகையில் கதர் நீண்ட காலம் உழைக்கக் கூடியதாக இருக்கிறதா என்பதும் சந்தேகத்திற்கிடமானது. பலமான உணர்ச்சிக்கு வயப்பட்டிருப்பவர்களும், தங்களிடம் அதிகப்படியாகப் பணம் வைத்திருப்பவர்களும் மாத்திரமே இப்பொழுது கதர் அணியும் ஆடம்பரத்தில் ஈடுபட முடியும். உங்கள் குறிப்பு, ஒருவகையான நன்கொடை என்ற அபிப் பிராயத்தைக் கொடுக்கிறது. ஆனல், நன்கொடை அதனளவில் என்ன

சாதித்துவிட முடியும்? உற்பத்தி முறையே தப்பானதாக இருக்குமானல், அதன் நோக்கத்தில் அது தோற்றுத்தான் போகும். நீங்கள் கூறிவருபவைகளுக்குச் சரியாகப் பொருள் கூறுவதாயின், துணி சம்பந்தப்பட்ட வரையில் கிராமங்கள் சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்ளுவதாக இருப்பதையே ராட்டை இயக்கம் நோக்கமாகக் கொண்டிருக்கிறது என்ருகிறது. அதாவது, ஒவ்வொரு குடிசையும் தனக்கு வேண்டியதைத் தானே நூற்றுக்கொள்ள வேண்டும். இந்த வகையில் உற்பத்தி அதிகப்படியாக நடந்து வருகிறது என்று சொல்ல முடியுமா? சுயதேவையைப் பூர்த்தி செய்துகொண்டு விட்டதாகவோ, அந்தக் கட்டத்தை அடையும் நிலையிலோ எத்தனையோ கிராமங்கள் இருக்கின்றன?

"நீங்கள் கூறுவதைப் போன்று ஒரு மாகாணத்தின் கதர் இன்னுமொரு மாகாணத்தில் போய் விற்பனையாவது விரும்பத்தக்கது அல்லது என்ருல், கதரைச் சேகரித்துப் பட்டணங்களில் வைத்திருப்பது என்பதும் அதே போல விரும்பத்தக்கது அல்ல. இதற்கு முக்கியமான காரணம் கதரின் விலை அதிகமாக இருப்பதால் அதன் விற்பனை கட்டுப்படியாகாததாவதுதான். மக்களின் உணர்ச்சியைத் தூண்டும் கோரிக்கைகளை வெளியிடுவதன் மூலம் விற்பனை சாத்தியமாக்கப்படுகிறது. எப்பொழுதுமே இது சரியான வழி அல்ல."

தோற்றத்தில்தான் கதர் அதிக விலையுள்ளதாக இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட நீளமுள்ள மற்றத் துணியின் விலையோடு கதரை ஒப்பிட்டுக் காட்டுவது தவறு என்பதை இப்பத்திரிகையில் முன்னல் குறிப்பிட்டு எழுதியிருக்கிறேன். ஒருவருடைய மனப்போக்கில் ஏற்படும் புரட்சியில் அடங்கியிருக்கிறது, கதரின் மலிவு. கதரை அணிவது, அலங்காரத்திற்காகத் துணியை உடுத்துவது என்ற சம்பிரதாயக் கருத்திற்குப் பதிலாக, உபயோகத்திற்காகத் துணியை உடுத்துவது என்ற கருத்தை உண்டாக்குகிறது. கதர் நீடித்து உழைப்பதாக இல்லை என்னும் விஷயத்தில் மாறுபட்ட அபிப்பிராயங்கள் இருந்து வருகின்றன. இந்த மாறுபட்ட அபிப்பிராயம், மாறுபட்ட அனுபவங்களை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கக்கூடும். ஒரே வகையாக நூற்பதற்கு நாம் வராமலிருக்கும் வரையில் மாறுபட்ட அனுபவங்கள் இருப்பது தவிர்க்க முடியாதது. கையினல் நூற்ற நூலின் தரத்தை ஒரே விதமாக இருக்கும்படி செய்வதற்கு ஆங்காங்கு சிலர் மட்டும் செய்திருக்கும் நான்கு வருடப் பிரயாசை நிச்சயம் போதாது. சிசுப் பருவத்திலிருக்கும் ஒவ்வொரு தொழிலும் ஆரம்பத்தில் கஷ்டப்பட்டுத்தான் ஆக வேண்டும். நண்பரின் நிதானம், உணர்ச்சியை அசட்டை செய்கிறது. ஆனல், உணர்ச்சிதான் உலகத்தில் அதிகச் சக்தி வாய்ந்த விஷயம். நம் உணவை நாம் வீட்டிலேயே சமைத்துக் கொள்ளுகிருேம். அப்படிச் சமைத்துக்கொள்ளுவது, இக்காலப் பொருளாதார சாத்திரப்படி வீட்டுச் சமையல் மலிவானது என்பதற்காக அல்ல. ஆனல், தொன்றுதொட்டு இருந்துவரும் ஓர் உணர்ச்சியின் காரணமாகவே வீட்டில் சமைத்துக்கொள்ளுகிருேம். செலவு, உழைப்பு, விறகு, பாத்திரங்களின் தேய்மானம், வாடகை ஆகியவைகளை யெல்லாம் கணக்குப் போட்டுப் பார்த்-

தால், வீட்டுச் சமையலைவிட ஹோட்டல் சாப்பாடே மலிவானது என்பதைப் பள்ளிச் சிறுவரின் பொருளாதாரம் கூட காட்டும். இச்சமயம் கதருக்கு நன்கொடை அளிப்பது அவசியம். அரசாங்கம் செய்யாததை மக்களின் தேசாபிமான உணர்ச்சி செய்தாகவேண்டும் என்று ஆச்சாரிய ரே, தம் சமீபகாலத்தில் வெளியிட்ட கோரிக்கையில் சரியானபடி சுட்டிக்காட்டியிருக்கிருர். இக்கடிதத்தை எழுதியிருப்பவர், கதரின் லட்சியத்தைச் சரியாகவே கூறுகிருர். பாமர மக்களுக்குச் சேவை செய்ய விரும்புகிற நாம், ராட்டையின் அவசியத்தை உணர்ந்து, அதன் மீதும் அதில் உற்பத்தியாகிறவைகள் மீதும் ருசியை வளர்த்துக் கொண்டால்தான் லட்சியம் முற்றிலும் நிறைவேற முடியும். எலும்புக்கூடுகளாக இருக்கும் ஒரிஸ்ஸா மக்களின் முன்னல் இந்த ராட்டையைப் போடுவேனுயின் அவர்கள் இதைத் திரும்பிக்கூடப் பார்க்கமாட்டார்கள். ஆனல், அவர்கள் மத்தியில் நான் ராட்டையில் நூற்க ஆரம்பித்தால், மீனுக்குத் தண்ணீரில் நீச்சல் எப்படி இயல்பானதோ அதேபோல, அவர்களும் நூற்க ஆரம்பித்துவிடுவார்கள். பெரியவர்கள் செய்வதைப் போலவே பாமர மக்களும் செய்வார்களே யன்றி அவர்கள் உபதேசிப்பது போலச் செய்துவிடமாட்டார்கள். இதனுலேயே நூற்க வேண்டும் என்ற தீர்மானம் அவசியமானதாக ஆகிறது. இது, நமக்குக் கிராமங்கள் விஷயத்தில் உண்மையான பொறுப்பு உணர்ச்சியை அளிக்கிறது; நூற்பில் எங்கும் ருசி ஏற்படும்படி செய்வதோடு கதரையும் மலிவானதாகச் செய்கிறது. நூற்கும் தீர்மானத்தை நாடு பக்தியுடன் நிறைவேற்றி வைக்குமானல், நாம் இதற்கு முன்பு எண்ணியறியாத சக்தி அதற்கு இருக்கும்.

—'எங் இந்தியா' – 7—8—1924

# 3

# வீழ்ச்சியடைந்தோருக்காக

ஒழுக்கத்தில் வீழ்ச்சியடைந்துவிட்ட சகோதரிகளை, நமது காமவெறிக்குப் பலியாகிவிட்டவர்களை, சுமார் மூன்று ஆண்டுகளுக்கு முன்னல் பாரிஸாலில் சந்திக்கும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. அவர்களில் சிலர், "நாங்கள் தினத்திற்கு இரண்டு, மூன்று ரூபாய் சம்பாதிக்கிறோம். அந்த அளவுக்கு வருமானமுள்ள ஏதாவது ஒரு தொழிலை எங்களுக்கு நீங்கள் கொடுக்க வேண்டும்" என்ருர்கள். ஒரு கணம் அப்படியே சோர்ந்து போய்விட்டேன் உடனே சமாளித்துக்கொண்டு வருமாறு கூறினேன் : 'இல்லை, என் அருமைச் சகோதரிகளே, தினத்திற்கு இரண்டு மூன்று ரூபாய் வருவாய் கொடுக்கும் எந்தத் தொழிலையும் உங்களுக்குச் சொல்ல என்னல் முடியாது. ஆனல், நீங்கள்

பட்டினி கிடக்க நேர்ந்தாலும் இப்பொழுதிருக்கும் உங்கள் தொழிலை விட்டுவிடவேண்டும் என்றே உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். என்றாலும், ராட்டை இருக்கிறது. அதில் நீங்கள் நூற்க ஆரம்பித்துவிட்டால் அதுவே உங்களுக்கு விமோசனமாகும்.'

இந்தியாவின் வீழ்ச்சியடைந்த மனித வர்க்கத்தின் ஒரு சிறு பகுதியாக இருப்பவர்களே வீழ்ச்சியடைந்துவிட்ட சகோதரிகள். ஒரிஸ்ஸாவில் எலும்பும் தோலுமாக இருப்பவர்களும் ஒருவகையில் அந்த மனித வர்க்கத்தைச் சேர்ந்தவர்களே. முதலில் சொல்லப்பட்டவர்கள் எவ்வாறு நமது காமவெறிக்குப் பலியானவர்களோ அதே போல இவர்கள் நமது அறியாமைக்குப் பலியானவர்கள். இவர்கள் விஷயத்தில் இவர்களைப் பாழாக்கியிருப்பது நமது மிருகக் காமவெறி அன்று. ஆனல், நம் பண வெறி இவர்களை எலும்பும் தோலுமாக்கி விட்டது. நாம் பணக்காரர்களாவதற்காக அவர்கள் தங்கள் ரத்தத்தைச் சிந்துகிறார்கள்.

ஆனல், இப்பொழுது நல்ல காலமாக, படித்த மத்திய தர வகுப்பினராகிய நாம், ஒழுக்கம் கெட்டுப்போன நம் சகோதரிகளோடும், பட்டினி கிடக்கும் நமது சகோதரர்களுடனும் நம்மை ஒன்றுபடுத்திக்கொள்ள ஆர்வம் கொண்டிருக்கிறோம். அவர்கள் வாழ வேண்டும் என்பதற்காக நாம் சுயராஜ்யம் பெற விரும்புகிறோம். நாம் எல்லோருமே கிராமங்களுக்குப் போய்க் கிராமவாசிகளுக்கு உதவி செய்ய முடியாது. நாம் தூய்மையடைய வேண்டும் என்பதைக் கெட்டுப்போய்விட்ட சகோதரி இடைவிடாது நமக்கு நினைவூட்டுபவளாகிருள். அப்படியானல், தினந்தோறும் அவர்களைப் பற்றியே நாம் எண்ணி அவர்களுக்காகப் பரிவுகொள்ளுவது எப்படி? நாம் மிகவும் பலவீனர்களாக இருப்பதனல்தான் சாத்தியமான கொஞ்சத்தைச் செய்ய நாம் விரும்புகிறோம். அந்தக் கொஞ்சம் என்பது என்ன? ராட்டையைத் தவிர வேறு எதையும் நான் எண்ணுவதற்கு இல்லை. வேலை எளிதானதாக இருக்க வேண்டும்; படித்தவர்கள் படிக்காதவர்கள், நல்லவர்கள் கெட்டவர்கள், இளைஞர்கள் வயோதிகர்கள், ஆண்கள் பெண்கள், சிறுவர்கள் சிறுமிகள், பலமுள்ளவர்கள் பலமில்லாதவர்கள் ஆகியவர்கள் எல்லோரும், அவர்கள் எம்மதத்தைச் சேர்ந்தவர்களாயினும் எல்லோரும் செய்யக் கூடியதாகவும் அவ்வேலை இருக்க வேண்டும். வேலை பயனுள்ளதாக இருப்பதற்கு அது எல்லோருக்கும் ஒரேவிதமானதாகவும் இருக்க வேண்டும். இந்த நிபந்தனைகள் எல்லாவற்றையும் நிறைவேற்றுவதாக இருக்கிறது, ராட்டை. ஆகையால், தினந்தோறும் அரை மணி நேரம் நூற்கும் ஆணே, பெண்ணே, பாமர மக்களுக்குச் சாத்தியமான, மிகுந்த திறமை வாய்ந்த வகையில் சேவை செய்பவர்களாகிறார்கள். வீழ்ச்சியடைந்திருக்கும் இந்தியாவின் மக்களுக்கு அப்படிப்பட்டவர்கள் மனப்பூர்வமான சேவை செய்வ

தோடு அதன் மூலம் அச்சேவைக்குச் சுயராஜ்யத்தையும் கிட்டத்தில் கொண்டு வந்துவிடுகிறார்கள்.

எல்லாப் பொதுக் கூட்டறவு வாழ்க்கைக்கும் நமக்கு அடிப்படையாக இருப்பது, ராட்டை. அது இல்லாமல் எந்த நிரந்தரமான பொது வாழ்க்கையையும் அமைத்துவிடுவது சாத்தியமல்ல. நாட்டில் மிகுந்த தாழ்ந்த நிலைமையில் இருப்பவர்களுடன் பிரிந்துவிட முடியாத வகையில் நம்மைப் பிணைத்து, அதனால் அவர்களுக்கு நம்பிக்கையை அளிக்கும், கண்ணுக்குத் தெரிவதாயுள்ள ஒரே இணைப்பு, ராட்டைதான். அத்துடன் வேறு பலவற்றையும் நாம் சேர்த்துக்கொள்ளலாம்; சேர்த்துக்கொள்ளவே வேண்டும். ஆனால், புத்திசாலியான கொத்தன் எவ்வாறு அஸ்திவாரம் சரியாக இருக்கிறதா என்பதை நிச்சயம் செய்துகொண்ட பிறகுதான் கட்டடத்தைக் கட்ட ஆரம்பிப்பானோ அதே போல நாமும் அதை நிச்சயம் செய்துகொள்ள வேண்டும். கட்டடம் எவ்வளவு பெரிதோ அவ்வளவுக்கு அஸ்திவாரமும் ஆழமானதாகவும் பலமானதாகவும் இருக்கவேண்டும். ஆகையால், அடைய விரும்பும் பலன் கிடைக்க வேண்டுமாயின், இந்தியாவில் நூற்பது எல்லோரும் செய்வதாக ஆக வேண்டும்.

மேலும் பாமர மக்களையும் உயர்ந்த நிலையில் இருப்பவர்களையும் இணைப்பதாக ராட்டை இருப்பதோடல்லாமல் வெவ்வேறு ராஜீயக் கட்சிகளுக்கும் இது தொடர்பாகவும் இருக்கும். இது எல்லாக் கட்சிகளுக்கும் பொதுவானதாக ஆகும். அவர்கள் இஷ்டப்பட்டால் மற்றவைகளிலெல்லாம் அவர்கள் அபிப்பிராய பேதம் கொள்ளலாம். ஆனால், இதிலாவது அவர்கள் ஒரே கருத்துக்கொள்ள முடியும்.

ஆகையால், நாட்டை நேசிக்கும் ஒவ்வொருவரும், பரம ஏழைகளாக இருப்பவர்களிடமும் வீழ்ச்சியடைந்தவர்களிடமும் அன்பு கொள்ளுபவர் ஒவ்வொருவரும், அவர்களுக்காகவும், கடவுள் பெயராலும் ஒரே கனமுள்ள, நன்றாக முறுக்கேறிய நூலை நூற்பதற்குத் தினம் அரை மணி நேர உழைப்பை அளிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். இது நாட்டுக்கு அளிக்கும் நன்கொடையாக இருக்க வேண்டுமாகையால் இதைப் பக்தியோடு ஒழுங்காக அகில இந்தியக் கதர் போர்டிடம் கொடுக்க வேண்டும்.

—'யங் இந்தியா' - 4—9—1924



1930–மகாத்மா தமது முழு கவனத்தையும் நூற்பிலேயே செலுத்தித் தம்மையும் மறந்து நூற்றுக்கொண்டிருக்கிருர்.



1936-மகாத்மா தமது ராட்டையைப் பழுது பார்த்துக்கொண்டிருக்கிருர். பக்கத்தில் நின்று கவனித்துக்கொண்டிருப்பது மீரா பென். நூற்கும் கலையில் மாத்திரமல்ல, ஒவ்வொருவரும் தம் ராட்டையைத் தாமே பழுது பார்த்துக் கொள்ளுவதிலும் ஆற்றல் பெற வேண்டும் என்பதை மகாத்மா அடிக்கடி வற்புறுத்தி வந்தார்.

# 4

# என் காமதேனு

**எ**ன் கதி மோட்சத்திற்கு வாசல், ராட்டைதான் என்று நான் சொல்லி வருவதைக் குறித்துச் சிலர் என்னைப் பரிகசித்து வருகிறார்கள் என்பதை அறிவேன். ஒருவர் சிறு களி மண் உருண்டை ஒன்றை உருட்டிவைத்து, அதற்குப் பார்த்திவேஸ்வரர் சிந்தாமணி என்ற சாமியின் பெயரைப் பிரமாதமாகச் சூட்டி, அதன் மூலம் கடவுளை நேருக்கு நேராகக் காணலாம் என்ற நம்பிக்கையின் பேரில் தமக்கு இருக்கும் பக்தி முழுவதையும் அதனிடம் காட்டுகிறார். என்னைச் சிலர் பரிகசிப்பதைப்போலவே அவரையும், அவர் உருவ வழிபாட்டிலிருக்கும் ஜீவனளிக்கும் சக்தியில் நம்பிக்கை இல்லாதவரும் பரிகசிக்கலாம். ஆனால், அத்தகைய வழிபாட்டினால் ஆன்ம தரிசனத்தை அடைந்துவிட முடியும் என்ற திட நம்பிக்கையுடன் இருப்பவர், இதற்காகத் தமது வழிபாட்டைக் கைவிட்டுவிடுவாரா? விடவே மாட்டார். அதற்கு மாறாக அவர், முடிவான வெற்றி கைகூடும் வரையில் தம் வழியில் தளராமல் வழிபட்டுக்கொண்டுதான் வருவார். முடிவில் அவருக்கு வெற்றி ஏற்பட்டே தீரும். இடையில் அவரைக் கலைத்துவிடப் பார்த்தவர்கள், பின்பு தாங்கள் செய்த பரிகாசத்தினால் கெடுதல் அடைவார்கள். அதே போல ராட்டையைக் குறித்த என் எண்ணம் தூய உள்ளத்திலிருந்து வருவதாயின், என்னுடைய கதிமோட்சத்திற்கு அதுவே எனக்கு உபாயமாகும். பக்தியுள்ள ஒரு ஹிந்துவின் காதுகள், எங்கு ராமநாமம் ஜெபிக்கப்படுகிறதோ அங்கே தானே நாடும். அந்த நேரத்திற்கு அவனுடைய தீய உணர்ச்சிகளெல்லாம் அவனுள் ஒடுங்கிவிடும். அந்தத் தெய்வீக நாமத்தை உச்சரிப்பது மற்றவர்களிடத்தில் எந்த உணர்ச்சியையும் உண்டாக்கவில்லை என்றால் அதனால் என்ன? ‘அல்லாஹூ அக்பர்’ என்ற கோஷத்தைக் கேட்டு ஒரு ஹிந்துவுக்கு எந்த உணர்ச்சியும் ஏற்படாதிருக்கலாம். ஆனால், ஒரு முஸ்லிமுக்கு உணர்ச்சி எழுகிறது. அதே போல், தெய்வ பக்தியுள்ள ஓர் ஆங்கிலேயரிடம், அவருள் கடவுள் இருக்கிறார் என்பதை நினைவுபடுத்திய கணமே தமது ஆசாபாசங்களை அடக்கிக்கொண்டுவிட அவரால் முடிவதோடு அந்தச் சமயத்திற்கு சாந்தத்தையும் அடைகிறார். கடவுள் வழிபாட்டின்போது உள்ளம் எப்படி இருக்கிறதோ அதற்கு ஏற்றாற் போல இருக்கும் அதன் பலனும்.

ராட்டை அதனளவில் பிரமாதமானது அல்ல என்றே இருந்தாலும், அதற்கு இருப்பதாக நான் கூறும் பெருமையெல்லாம் என் கற்பனையில்தான் இருக்கின்றன என்று இருப்பினும், அப்பொழுதும் எனக்காவது அது என் காமதேனுவாக இருந்து வரும் என்றாகிறது. ராட்டையில் ஒவ்வொரு முறையும் நூலை

இழுக்கும்போதெல்லாம் இந்தியாவின் ஏழைகளையே நான் எண்ணுகிறேன். இந்தியாவின் ஏழைகள் இன்று கடவுளிடம் நம்பிக்கையை இழந்துவிட்டார்கள். நடுத்தர வகுப்பினரிடத்திலும் பணக்காரரிடத்திலும் இந்த நம்பிக்கையின்மை அதிகமாக இருக்கிறது. பசியின் கொடுமையால் பதைக்கிறவனுக்கு, வயிற்றை நிரப்புவதைத் தவிர வேறு எதையும் வேண்டாதவனுக்கு, வயிறுதான் அவன் கடவுள். எவன் அவனுக்குச் சோறு போடுகிறானோ அவனே அவனுக்கு ஆண்டவன். அவன் மூலம் அவன் கடவுளையும் காணக்கூடும். அத்தகையவர்களுக்கு, கால் கை நன்றாக இருப்பவர்களுக்கு, பிச்சைபோடுகிறவன், தன்னையும் அவர்களையும் கேவலப்படுத்துபவனாகிறான். அவர்களுக்குத் தேவையானதெல்லாம், ஏதாவது ஒருருவகைத் தொழில். கோடிக் கணக்கானவர்களுக்கு வேலை கொடுக்கும் தொழில், ராட்டை ஒன்றுதான். ஆனால், ராட்டையின் சக்தியில் எனக்குள்ள நம்பிக்கையை இந்தியாவின் பாட்டாளி மக்களின் உள்ளத்தில் பிரசங்கம் செய்வதனால் புகுத்திவிட முடியாது; நானே நூற்பதனாலேயே அது முடியும். ஆகையால், நான் நூற்பதை ஒரு தவம் அல்லது புனிதமான சடங்கு என்று நான் விவரிக்கிறேன். ஏழைகளிடத்தில் கொள்ளும் புனிதமான, தீவிரமான அன்பு எங்கே இறக்கிறதோ அங்கே கடவுளும் இருக்கிறார் என்று நான் நம்புவதால், ராட்டையில் நான் நூற்கும் ஒவ்வோர் இழை நூலிலும் கடவுளை நான் காண்கிறேன்.

—'எங் இந்தியா' – 20—5—1926

## 5

# தியாக நூற்பு சரியா ?

தொலைவிலுள்ள பர்மாவிலிருந்து ஒரு வைத்திய நண்பர் எழுதுகிறார் : 'சுதேசியை வற்புறுத்தாமல் கதரை ஏன் வற்புறுத்துகிறீர்கள்? சுதேசியே கொள்கை, அதில் அடங்கிய விவரமே கதர் அல்லவா ?'

கதர் ஒரு விவரமே என்று நான் கருதவில்லை. சுதேசி என்பது அனுமானமான ஒருசொல்தான். சுதேசியின் திட்டமான, கேந்திரமான உண்மை, கதர். கதர் இல்லாத சுதேசி, உயிரில்லாத உடலைப் போன்றது. நல்ல முறையில் புதைக்கப்படுவதற்கோ அல்லது எரிக்கப்படுவதற்கோதான் அது உகந்தது. கதர்தான் ஒரே சுதேசித் துணி. இந்நாட்டின் கோடிக்கணக்கான மக்களின் பாஷையில், அவர்களை அனுசரித்துச் சுதேசி என்பதற்கு விளக்கம் கூறுவதாயின், நாம் சுவாசிக்கும் காற்றைப் போலச் சுதேசியிலுள்ள ஒரு முக்கியமான அம்சம் கதர் என்று சொல்ல

வேண்டும். எது சுதேசி என்பதற்குப் பரீட்சை, சுதேசி என்ற பெயரில் எந்தப் பொருள் எல்லோராலும் உபயோகிக்கப்படுகிறது என்பது அல்ல. ஆனால், அந்தப் பொருளின் உற்பத்தியில் அல்லது தயாரிப்பில் எல்லோரும் பங்குகொள்ளுகிறார்களா என்பதுதான் பரீட்சை. அப்படிக் கவனிக்கும்போது மில்லில் தயாரான துணி ஒரு குறுகிய கருத்திலேயே சுதேசியாகும். ஏனெனில், அதன் உற்பத்தியில் இந்தியாவின் கோடிக்கணக்கான மக்களில் மிக மிக அற்பமான தொகையினரே பங்கு கொள்ள முடியும். ஆனால், கதர் உற்பத்தியிலோ, கோடிக்கணக்கானவர் பங்குகொள்ள முடியும். அதிகம் ஆக ஆக ஆனந்தமே. கதரில் கோடிக்கணக்கான மக்களின் நல்வாழ்வும் பிணைந்திருக்கிறது என்பது என் கருத்து. ஆகையால், சுதேசியின் மிகப் பெரிய பகுதி கதர். சுதேசியத்தை உண்மையில் எடுத்துக்காட்டுவதும் கதர் ஒன்றுதான். மற்றவையெல்லாம் அதிலிருந்து பின்னால் வருவன. இந்தியாவில் தயாராகும் பித்தளைப் பித்தான்களையோ, பல் குச்சிகளையோ நாம் உபயோகிக்காவிட்டாலும் இந்தியா உயிர் வாழ முடியும். ஆனால், கதரை உற்பத்தி செய்யவும் உடுத்தவும் நாம் மறுத்துவிட்டால் இந்தியா, உயிர் வாழ முடியாது. இந்தியாவின் மக்கள் வேலையில்லாமல் சோம்பிக் கிடக்கும் நேரத்தைப் பயன்படுத்தக் கதரைவிட அதிக லாபகரமான ஒரு தொழில் கண்டுபிடிக்கப்பட்டுவிடும் போது இந்த உச்சமான முக்கியத்துவம் கதருக்கு இல்லாது போய்விடும்.

ஆனால், இந்த டாக்டரோ, 'நல்ல கதர் விலை அதிகமாக இருக்கிறது; சாதாரண ரகம் அவலட்சணமாக இருக்கிறது' என்கிறார்.

எந்தக் கதரும் அவலட்சணமானதாக இருக்கிறது என்பதை நான் மறுக்கிறேன். ஒரு மரத்திலிருக்கும் கோடிக்கணக்கான இலைகள் ஒன்று போல் இல்லாமலிருப்பது எவ்வாறு அவலட்சணத்திற்கு அடையாளமாகாதோ, அதே போல மில்லில் தயாரித்த துணியின் செத்த மாதிரி ஒன்றுபோலிருப்பது கதரில் இல்லாமலிருப்பது அவலட்சணத்திற்கு அறிகுறி அல்ல. ஆனால், அது உயிர் உண்மைக்கு அடையாளம். உண்மையில், மரத்தின் இலைகளில் மாறுபாடு இருப்பதுதான் மரத்திற்கு ஜீவனுள்ள அழகைத் தருகிறது. யந்திரத்தினால் தயாரான ஒரு மரம் எப்படி இருக்கும் என்பதையும் நான் எண்ணிப் பார்க்க முடியும். அதன் இலைகள் எல்லாம் ஒரே அளவில் ஒரே மாதிரியாக இருக்கும். அம் மரம் பார்ப்பதற்கே விகாரமானதாக இருக்கும். ஏனெனில், உயிருள்ள மரத்தில் அன்பு செலுத்துவதை நாம் இன்னும் விட்டுவிடவில்லை. கதருக்காக நாம் கொடுக்கும் ஒவ்வொரு தம்படியும் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களின் மடிக்குப் போகும்போது, நல்ல கதரானாலும் கெட்ட கதரானாலும் அதன் விலை அதிகமாக இருக்கிறது என்று நாம் கவலைப்படுவானேன்? கதர் கட்ட ஆரம்பித்திருப்பவர்களில் பெரும்பான்மையோர் விஷ

யத்தில், உடையைப் பற்றிய அவர்கள் எண்ணத்தையே மாற்றிக் கொண்டிருக்கிறார்கள் என்பது என் அனுபவம். கதருடன் அதே ரக மான்செஸ்டர் மில் துணியைக் கெஜத்திற்குக் கெஜம் ஒப்பிட்டால், கதர் அதிக விலையுள்ளதாக இருக்கலாம். ஆனால், அதிகப்படியாக உபயோகிக்கும் உடைகளைக் குறைத்துக் கொண்டு விட்டால் கதர் கட்டுவதால் ஏற்படும் அதிகச் செலவு ஈடாகிவிடும். நயமான கதரைக் கட்ட விரும்புகிறவர்கள், எல்லா முக்கியமான கதர்க் கடைகளிலும் அதை இப்பொழுது வாங்கிக்கொள்ளலாம்.

அடுத்தபடியாக இந்த வைத்திய நண்பர், நூற்பது விரும்பத்தக்கதுதானா என்று கேட்கிறார். ஒவ்வொருவரும் நூற்பதானால், நூற்பதைத் தங்களுடைய ஜீவனோபாயமாகக் கொண்டிருக்கும் ஏழை மக்கள் கஷ்டமடைந்து விடுவார்களே என்றும் அவர் கவலையுடன் கேட்கிறார். தியாகமாக நூற்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளப்படுகிறவர்கள், கதர் மனப்பான்மையை வளர்த்து நூற்பது சுலபமானதாவதைச் சாத்தியமாக்குவதுடன் இது சம்பந்தமாகப் புதிதாகக் கண்டுபிடிப்பவைகளைக் கொண்டு நூற்பதை மேலும் லாபகரமானதாகவும் செய்கிறார்கள் என்பதை இந்நண்பர் மறந்துவிடுகிறார், தியாகத்திற்காக நூற்பதன் மூலம் நூற்பதைத் தொழிலாகக் கொண்டிருப்பவர்களின் கூலி எந்த வகையிலும் பாதகமடைந்துவிடாது.

—'எங் இந்தியா'–17—6—1926

## 6

# வற்புறுத்துவது ஏன்?

ஒரு நண்பர் பின்வருமாறு கேட்கிறார்:

"தியாகமாக நூற்கவேண்டும் அல்லது தனக்கு வேண்டியதைத் தானே நூற்றுக்கொள்ள வேண்டும் என்று ஏன் வற்புறுத்துகிறீர்கள்? தியாகத்திற்காக நூற்பது, கொடுத்துவிடுவதற்காக. தனக்குத்தானே நூற்றுக்கொள்ள வேண்டும் என்பது, நீங்கள் நூற்கும் நூலை உங்கள் சொந்த உபயோகத்திற்கு வேண்டிய துணியாக்கிக்கொள்ள வேண்டும் என்பதற்காக. இந்த இரண்டிலுமே, மிகக் குறைந்த கூலி பெறும் தொழிலாளி என்று நீங்கள் கூறும் நூற்கும் ஏழையின் வாய்க்குப் போவதில் ஏதோ கொஞ்சத்தை எடுத்துவிடுகிறீர்கள் தியாகத்திற்காக நூற்பதில் கதரின் விலையைக் குறைப்பதனால் ஏழைகளுக்கு நீங்கள் கொஞ்சம் சேவை செய்கிறீர்கள். மற்றொன்று, நூற்கும் ஏழையின் வாய்ச் சோற்றைப் பறித்துவிடுவதாகத்தான் முடிகிறது."

எல்லா மக்களும் நூற்க ஆரம்பித்துவிடுவதாக இருந்தால் இது ஓரளவுக்கோ, முற்றிலுமோ உண்மையாக இருக்கும். ஆனால், இன்றோ அநேக ஹரிஜனங்களுக்கு அவர்களுடைய சம்

பாதிக்கும் சக்தி பாதிக்குக் குறைந்து போய்விட்டது. ஏனெனில், அவர்கள் நெசவு செய்பவர்களாகையால் அவர்கள் நெய்வதற்குக் கையினல் நூற்ற நூல் கிடைக்கவில்லை. எப்படியோ வாழ்க்கையை நடத்திக்கொண்டு போகக் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். தியாக நூற்பு பெரும் அளவில் நாட்டில் நடந்து கொண்டு வருமானல், இந்த நெசவாளர்கள் இவ்விதமான விசனிக்கத்தக்க நிலைமைக்கு வந்திருக்கமாட்டார்கள். ஒரிஸ்ஸாவில் சுமார் பத்தாயிரம் நெசவாளர்கள், அநேகமாக ஹரிஜனங்கள், வேலையில்லாததனல், நெய்வதற்குக் கையினல் நூற்ற நூல் இல்லாததனல், எவ்விதம் பட்டினி கிடக்கிறார்கள் என்பதைக் குறித்து முன்பே இப்பத்திரிகையில் நான் கூறியிருக்கிறேன். மில்லில் நூற்ற நூலால் நெய்யலாமே என்று சொல்லிவிடுவதில் பயனில்லை. இந்தப் பத்தாயிரம் நெசவாளர்களும் அதைத்தான் செய்துகொண்டிருந்தார்கள். ஆனல், ஜப்பான் போட்டியினல் மில் நூல் கைத்தறித் துணிக்குக்கிராக்கி அதிகமாகக் குறைந்து போய்விட்டது. கதர் நெய்கிறவர்கள், தாங்கள் நெய்யும் கதர்த் துணியை உள்ளூரில் விற்றுவிடுவது சாத்தியமேயன்றிக் கையினல் நெய்த மில் நூல் துணியை விற்பது சாத்தியமல்ல. ஆயிரக் கணக்கில் இல்லாவிட்டால் நூற்றுக்கணக்கில், தியாகமாக நூற்பவர்கள் இருந்து, நெய்பவர்களும் அதிகமாக இல்லாமலிருந்ததால், கையினல் நூற்ற நூல் ஏராளமாகக் கிடைத்து வந்த காலம் ஒன்று இருந்தது. ஆனல், இப்பொழுதோ தியாகத்திற்காக நூற்பது வழக்கத்தில் இல்லாது போய்விட்டது. கையினல் நூற்ற நூலைச் சந்தோஷமாக நெய்வதற்கு ஏராளமான நெசவாளர்கள் இப்பொழுது தயாராக இருக்கிறார்கள். ஆகையால், கதருக்குக் கடைகளில் கிராக்கி இருக்கிற வரையில், தேவைக்கு வேண்டிய நூல் கிடைக்கும் வரையில், எல்லோரும் நூற்பது என்பது ஏற்பட்டு விடுகிற வரையில், நீண்ட காலத்திற்குத் தியாக நூற்புக்கும், தனக்கு வேண்டியதைத் தானே நூற்றுக்கொள்ளுவதற்கும் நாட்டின் பொருளாதாரத்தில் நிச்சயமான இடம் உண்டு. அது, ஏழைகளுக்கு, அவர்களிலும் முக்கியமாக ஹரிஜனங்களுக்கு நிச்சயமான, திட்டமான சேவை செய்வதுமாகும்.

மேலும், இத்தகைய நூற்பை அறிவுள்ளவர்கள், படித்தவர்களான ஆண்களும் பெண்களுமே செய்ய வேண்டியிருப்பதால் இது கலையோடு தொடர்புடையதாக ஆகிறது. இதனல் அதிக வளர்ச்சிக்கும் இதில் இடமிருக்கிறது. இந்த இயக்கத்தில் படித்த நடுத்தர வகுப்பைச் சேர்ந்த ஆண்களும் பெண்களும் சிரத்தை எடுத்துக்கொண்டதால்தான் ராட்டையிலும், அதன் உபகரணங்களிலும், பஞ்சரைக்கும் கை மணையிலும், பஞ்சடிக்கும் வில்லிலும் அற்புதமான அபிவிருத்திகள் ஏற்பட்டிருக்கின்றன. அகில இந்திய நூற்போர் சங்கத்தின் காரியதரிசி எம். ஏ. பட்டம் பெற்றவர், பம்பாயில் பிரபலமான, வெற்றிகரமான ஒரு லேவாதேவிக்காரரின் குமாரர் என்பதும், இந்தியாவின் மிகச்

சிறந்த வர்த்தகரில் ஒருவரே இச்சங்கத்தின் தலைவர் என்பதும், தமிழ் நாட்டில் கதர் ஸ்தாபனத்தை நிர்வகித்து வருகிறவர் அதே போலப் பிரபலமான ஒரு மாஜி வக்கீல் என்பதும், வங்காளத்தில் இச்சங்கத்தை நடத்தி வருபவர்கள் திறமை மிக்க வைத்தியரும், மருந்து தயாரிப்பவரும் என்பதும், ஐக்கிய மாகாணத்தில் தேசீயக் கல்லூரியின் மாஜி தலைமையாசிரியரே இவ்வேலையில் ஈடுபட்டிருக்கிறார் என்பதும் 'ஹரிஜன்' வாசகர்களுக்குத் தெரியாது. இவர்களைப் போலக் கதரின் மூலம் தரித்திர நாராயணர்களுக்குச் சேவை செய்யத் தங்களை அர்ப்பணம் செய்துகொண்டிருப்பவர்கள் இன்னும் எத்தனையோ பேர்களை நான் சொல்ல முடியும். ஆனால், ஒரு சிலரின் பெயரை மாத்திரமே நான் கூறியிருக்கிறேன். இந்தப் பக்தர்கள் குழாம் இல்லாதிருந்தால் கதர் அடைந்திருக்கும் பெரும் அபிவிருத்தி ஏற்பட்டே இருக்காது. இரண்டு லட்சத்து ஐம்பதினாயிரம் தொழிலாளர்களிடையே பஞ்சப்படியாக இல்லாமல், நேர்மையான அவர்களுடைய உழைப்பிற்குக் கூலியாக, நூற்கும் இயக்கம் நடந்து வந்திருக்கும் இவ்வாண்டுகளில் அரைகோடி ரூபாய் வினியோகிக்கப்பட்டிருப்பதும் சாத்தியமாகியிராது. இவ்வளவு விரைவான வேலை ராட்டையினாலன்றி வேறு எந்த வகையிலும் இவ்வளவு சிறப்பாக நடந்திருக்கவும் முடியாது. வாழ்க்கையில் மிக மிகத் தாழ்ந்த நிலையில் இருப்பவர்களுக்கு, நாட்டில் அதிகக் கலாசாரமுள்ளவர்களான சில ஆண்களுடனும் பெண்களுடனும் தொடர்பு ஏற்படும்படியும் ராட்டை செய்திருக்கிறது. இருண்டு பாழடைந்து கிடந்த குடிசைகளில் ஒளியின் கிரணத்தை இது உண்டாக்கியிருக்கிறது. வாடி உயிர் போய்க்கொண்டிருந்த உடலில் இது புதிய உயிரை அளித்திருக்கிறது. பாலே காணாத பல்லாயிரம் குழந்தைகளுக்கு இது பாலைக் கொடுத்திருக்கிறது. பஞ்சம் ஏற்பட்டுவிடாதபடி பாதுகாப்பை விரும்பிய கிராமவாசிகளுக்கு இது பாதுகாப்பை அளித்திருக்கிறது. சோம்பேறித்தனத்தைக் குறைத்து, பிச்சைக்காரர்கள் வாழ்க்கையிலிருந்து ஆயிரக்கணக்கானவர்களை இது மீட்டுமிருக்கிறது.

என்றாலும், இவ்வேலை இன்னும் ஆரம்பக் கட்டத்திலேயே இருந்து வருகிறது. ஊழியர்களோ மிகக் குறைவாக இருக்கின்றனர். இருக்கும் ஊழியர்களிடம் இன்னும் அதிகச் சேவை உணர்ச்சியும், ஒரே சித்தத்தோடு காரியத்தில் ஈடுபடுவதும் அதிகமாக வேண்டும். இந்தத் தேசீய, பரோபகார முயற்சியில் இன்னும் அநேக நூற்றுக்கணக்கானவர்கள் ஈடுபட முடியும்.

ஆகையால், தியாகமாக நூற்பதும், தனக்கு வேண்டியதைத் தானே நூற்றுக்கொள்ளுவதும், கூலி வாங்கும் நூற்போருக்குத் தீமையானது என்று சொல்லுவது தவறானது. முடிந்தவர்களெல்லோரும் ஹரிஜனங்களின், இந்தியாவின் தாழ்த்தப்பட்டோரின் நன்மைக்காகக் குறைந்தது தினம் அரைமணி நேரமாவது நூற்க வேண்டியது அவர்களுடைய கண்டிப்பான கடமையாகும்.

—'ஹரிஜன்'–19—10—1935

# 7

# தவறுக்குப் பிராயச்சித்தம்

உயர் வகுப்பினர் என்று சொல்லப்படுகிறவர்கள், வெகு நீண்ட காலமாகத் தாழ்ந்த வகுப்பார் என்போரை முற்றிலும் புறக்கணித்துவிட்டார்கள். இதன் காரணமாகத் தாழ்ந்த வகுப்பார் என்போர், வாழும் கலையையே அறியாதவர்களாகிவிட்டனர். விறகு பிளந்து தண்ணீர் தூக்கும் வெறும் கூலிகளே தாங்கள் என்று நினைக்கிறார்கள். உயர்ந்த வகுப்பார் என்போர், தாங்கள் செய்துவிட்ட கெடுதலான காரியத்திற்குத் தண்டனையடையாமல் தப்பவில்லை. ஏனெனில், அவர்களுக்கும் வாழும் கலை தெரியவில்லை. தாழ்ந்த வகுப்பார் என்பவர்களின் உதவி இல்லாவிட்டால் இவர்கள் அழிந்தே போய்விடுவார்கள். கீழ் வகுப்பாருக்குச் செய்துவிட்ட கெடுதிகளுக்கு மேல் வகுப்பார் பிராயச்சித்தம் செய்து அந்த இரண்டு தீமைகளையும் போக்கிச் சீர்ப்படுத்துவதே கதரின் வேலை.

—'ஹரிஜன்' – 6—7—1935

# 8

# கதர் உணர்ச்சி

கதர் உணர்ச்சி, கதர் இயக்கத்தின் உள் விஷயம் என்று தாம் கூறியதைக் குறித்து அதே போக்கில் காந்திஜி விவரித்துக் கொண்டே போனார்:

"நமது அன்றாட வாழ்க்கையில் நந்தனுடைய உணர்ச்சியை நாம் எவ்வாறு எடுத்துக் காட்டி வரலாம் என்பதைக் குறித்துச் சில வார்த்தைகள் நான் சொல்லாமற் போவது என்னளவில் தவறு செய்துவிட்டதாகக்கூடும். 'கதர் உணர்ச்சி' என்பதனால் நம்மை நாமே போர்த்துக் கொள்ளுவதைத் தவிர அந்த உணர்ச்சியை வேறு வகையில் நாம் சரியானபடி எடுத்துக் காட்டிவிட முடியாது என்பது என் பணிவான கருத்து. நான் சொல்லுவதிலுள்ள ஒரு நுட்பமான வேறுபாட்டைக் கவனியுங்கள். கதரை உடுத்திக்கொள்ளுவதனால் மாத்திரம் நந்தனுடைய உணர்ச்சியை நாம் எடுத்துக் காட்டிவிட முடியும் என்று நான் சொல்லவில்லை. ஆனால், கதர் உணர்ச்சியை நாம் உடுத்த வேண்டுமென்று சொல்லுகிறேன். இந்நாட்டில் நாம் அரிசிச்சோறோ, கோதுமையோ சாப்பிடுவதைப் போன்றே அயோக்கியனும் வேசியும்கூட சாப்பிடுகிறார்கள். அதேபோல நம்மைப் போன்றே அவர்களும் ஏதாவது

துணி உடுத்தித்தான் ஆகவேண்டுமாகையால் அயோக்கியனும் வேசியும்கூட கதரையே அணியவும் கூடும். ஆனால், 'கதர் உணர்ச்சி' என்றால், கதர் அணிவது அதனுடன் கொண்டு செல்லுவதான பொருளை நாம் அறிந்தாக வேண்டும். உடுத்திக் கொண்டு வெளியே போவதற்காக ஒவ்வொரு நாள் காலையிலும் நாம் கதர் உடையை எடுக்கும்போதெல்லாம், தரித்திர நாராயணர்களின் பெயராலும், இந்தியாவில் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்காகவும் நாம் கதரை உடுத்துகிறோம் என்பதை நாம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். நம்முள் நமக்குக் 'கதர் உணர்ச்சி' இருக்குமாயின், வாழ்க்கையின் ஒவ்வோர் துறையிலும் எளிமையே நம்மைச் சூழ்ந்திருக்கும்படி நாம் செய்துகொள்ள வேண்டும். 'கதர் உணர்ச்சி' என்பது, எல்லையற்ற பொறுமை என்பதாகும். ஏனெனில், கதரின் உற்பத்தியைப் பற்றி எதுவும் தெரிந்தவர்கள், இந்தத் தொழிலில் நூற்பவர்களும் நெய்பவர்களும் எவ்விதம் பொறுமையோடு பாடுபட வேண்டியிருக்கிறது, அதேபோல 'சுயராஜ்யத்தின் நூலை' நூற்றுக் கொண்டிருக்கும்போதும் நமக்குப் பொறுமை இருக்க வேண்டும் என்பதை அறிவார்கள். எல்லையற்ற நம்பிக்கை இருக்க வேண்டும் என்பதும் 'கதர் உணர்ச்சி' என்பதற்குப் பொருளாகும். ராட்டையில் நூல் நூற்று உழைத்துக் கொண்டிருக்கும் ஒருவருக்குத் தாம் நூற்கும் நூல் அதனளவில் கொஞ்சமாக இருந்தாலும், அந்த நூல் எல்லாம் சேர்ந்தால் இந்தியாவிலிருக்கும் ஒவ்வொருவருக்கும் துணி கொடுத்துவிடப் போதுமானதாகிவிடும் என்ற எல்லையற்ற நம்பிக்கை இருக்கிறது. அதேபோல் சத்தியமும் அகிம்சையும் வழியிலுள்ள எல்லாத் தடைகளையும் முடிவில் வென்றுவிடும் என்ற எல்லையற்ற நம்பிக்கை நமக்கும் இருக்க வேண்டும்.

உலகத்திலுள்ள ஒவ்வொருவரிடத்திலும் தோழமை உணர்ச்சி இருக்க வேண்டும் என்பதே 'கதர் உணர்ச்சி' என்பதற்குப் பொருள். அதாவது, மற்றவர்களுக்குத் தீமையாக இருக்கக் கூடியவை எல்லாவற்றையும் முற்றிலும் துறந்துவிட வேண்டும் என்பது அதன் பொருள். கோடிக்கணக்கான நம் நாட்டு மக்களிடையே இந்த உணர்ச்சியை மாத்திரம் நாம் வளர்த்துவிடுவோமாயின் நமது இந்த இந்திய நாடு எவ்வளவு இன்பம் நிறைந்த நாடாக இருக்கும்! இந்நாட்டை நான் அதிகமாகச் சுற்றிப் பார்க்கப் பார்க்க, விஷயங்களை அதிகமாக நான் காணக் காண, ராட்டைக்குள்ள சக்தியில் என் நம்பிக்கை மேலும்மேலும் வளம் பெற்று வலுவடைந்து வருகிறது. 'ராமா' என்ற நாமத்தை மாத்திரம் ஜெபிப்பதிலுள்ள சக்தியை நம் அறிவினால் ஆராய்ந்து பார்க்க முயற்சிப்போமானால், நம் உள்ளங்களுக்குத் திருப்தியளித்துவிட நம் அறிவு தவறிவிடும். என்றாலும், இந்த நாமங்களை ஜெபிப்பதாகிய பாரம்பரியச் சொத்தை நமக்கு அளித்திருப்பவர்களான ரிஷிகளை, பைத்தியக்காரர்கள் அல்லது முட்டாள்கள் என்று கருதிவிடக் கூடியவர் ஒருவர்கூட இக்கூட்டத்தில் இல்லை

என்றே நம்புகிறேன். அதே போலவே, இதுவரை நான் விவரித்து வந்திருக்கும் சக்திகளெல்லாம் 'கதர் உணர்ச்சி'க்கு இருக்கிறது என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆனால், அந்த உணர்ச்சி வெளிப்படுவதற்கு ஒரு நிபந்தனை, ஒரு நிபந்தனை மாத்திரம் இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். அது இது தான்: ராமநாமம் நம் உள்ளங்களில் ஒரு ஜீவ சக்தியாக ஆகிவிட்டதென்றால், அதை நமக்கு அளித்த பெரியவர்களின் இணையற்ற தவம் அதன் பின்னால் இருந்து வருவது அதற்குக் காரணம். கதர் இயக்கத்திலும் அதேதான் இருக்கிறது. அதற்குப் பின்னால் இருப்போரின் தவம் அதற்கு இருந்தாக வேண்டும். கதருக்காகத் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்து கொண்டிருப்பவர்கள் புனித வாழ்வு வாழ வேண்டியதை இடைவிடாமல் வற்புறுத்திச் சொல்லாமல் இருப்பார்களாயின், நமது தேச மக்களின் மூக்குகளுக்குக் கதர் நாற்றமெடுப்பதாகிவிடும் என்ற உண்மையை ஒவ்வொரு நிமிடமும் நான் முற்றிலும் உணர்ந்தே இருக்கிறேன். வியாபாரத்திற்குரிய மற்றப் பொருள்களுடன் அவற்றின் சொந்த முறையில், அவற்றின் சொந்த வகையில் கதர் போட்டி போட முடியாது என்பதை நான் அறிந்தே இருக்கிறேன். சத்தியாக்கிரகம், அந்த வகையில் தனிச் சிறப்புடைய ஆயுதமாக இருப்பதோடு மக்கள் உபயோகிக்கும் சாதாரண ஆயுதங்களில் ஒன்றாக இல்லாததைப் போன்று, கதரும் வர்த்தகப் பொருள்களில் தனிச் சிறப்பு உடையது. ஆகையால், மற்றப் பொருள்களின் சாதாரண முறையினால் அது வெற்றியடையாது, வெற்றியடைய முடியாது. ஆனால், கதர் தனிச் சிறப்புடையது, இன்று இந்தியாவிலுள்ள மற்றெல்லாப் பொருள்களையும் அது பின்வாங்கச் செய்துவிடும் என்பதை, நான் இங்கே உட்கார்ந்து கொண்டிருக்கிறேன் என்பதை எவ்வளவு நிச்சயமாக நான் அறிவேனோ அவ்வளவு நிச்சயமாக அறிவேன். ஆகையால், நீங்கள் எனக்கு அளித்திருக்கும் கதர் பண முடிப்புகளுக்காக நான் ஏன் பரவசம் அடைந்துவிடவில்லை என்பதை நீங்கள் அறிந்திருக்கக் கூடும். கதரில் எனக்கு இருக்கும் நம்பிக்கையில் பத்தில் ஒரு பகுதியாவது உங்களுக்கு இருக்குமானால், உங்களிடம் இருக்கும் ஏராளமான செல்வத்திலிருந்து இரு நூறும், இரண்டாயிரமும் எனக்குக் கொடுக்கமாட்டீர்கள், கதருக்கு மேற்கொண்டும் பணம் தேவையில்லை என்ற வகையில் கொடுத்து எனக்குத் திருப்தி ஏற்படும்படி செய்வீர்கள் என்பதை நான் அறிவேன்.

[ஸ்ரீ மகாதேவ தேசாய் 'மூன்று பிரசங்கங்கள்' என்று எழுதிய கட்டுரையிலிருந்து எடுத்தது.]

—' எங் இந்தியா ' – 22—9—1927

# 9

# தன்னைத்தானே அறிவதற்கு நூற்பு

ராட்டையின் மூலம் கடவுளை எப்படிக் காண்பது சாத்தியம் என்று நீங்கள் கேட்கலாம். நான் முன்னால் உங்களுக்குக் கூறியிருப்பதைப் போன்று, கோடிக்கணக்கானவர்களுடன் நம்மை ஒன்றுபடுத்திக் கொள்ளும்படி ராட்டை செய்கிறது. உலகத்திலிருக்கும் எதையும் பணம் தங்களுக்குக் கொண்டு வந்து கொடுத்துவிடும் என்று லட்சாதிபதிகள் எண்ணுகிறார்கள். ஆனால், அது அப்படியல்ல. எந்தக் கணத்திலும் சாவு வந்து அவர்களைக் கொண்டுபோய் விடக்கூடும். தினமும் யாரோ சிலர் குத்திக் கொல்லப்பட்டு வருகின்றனர். ஆனால், இந்த வகையில் ஒருவர் உயிரை இழப்பது, உயிர் தானே நீங்குவதைப் போன்றதல்ல. கடவுளைக் காண்பதற்காக ஒருவர், தான் என்பதை, அகந்தையை அழித்துவிடக் கற்றுக் கொள்ளுவதோடு அதைத் தியாகமாகவும் செய்ய வேண்டும். ராட்டையில் தனிப்பட்டது என்பது எதுவும் கிடையாது. பரம ஏழைகள் உள்பட எல்லோருக்குமாக இருப்பது அது. ஆகையால், நாம் பணிவுடன் இருப்பதோடு அகந்தையை முற்றிலும் விட்டொழித்து விடுவதை அது அவசியமாக்குகிறது.

தான் என்பதை விட்டொழித்துவிடும்போது அந்த மாறுதல் நம் வெளி நடத்தையிலும் பிரதிபலிக்கும். நம் சிறு செயலிலும், மிகச் சிறிய செயலிலும், அது காட்டும். வாழ்க்கையைப் பற்றிய நோக்கம் முழுவதுமே மாறிவிடும். நாம் செய்கிற ஒவ்வொன்றும் இந்த அற்பமான தனக்காக என்றில்லாமல் எல்லோருக்குமாகச் செய்வதாகவும் இருக்கும்.

கடவுளைக் காண்பதற்காக யாரும் எங்கேயும் போக வேண்டியதில்லை. அவர் நம் உள்ளங்களில்தான் வதிகிறார்; ஆனால், அந்த உள்ளங்களுக்குள்ளே தான் என்பதையும், அகந்தையையும் புகுத்திவிடுவோமாயின், 'ஏழை'க் கடவுளை அந்த அரியாசனத்திலிருந்து இறக்கிவிட்டவர்களாவோம். இந்த 'ஏழை' என்ற அடைமொழியைக் காரணத்தோடுதான் நான் உபயோகித்திருக்கிறேன். ஏனெனில், கடவுள் ராஜாதி ராஜராகவும், மிக மிக சிரேஷ்டராகவும், எல்லாம் வல்லவராகவும் இருந்தபோதிலும், எவர் ஒருவர் தம்மைப் பூஜ்யம் என்ற நிலைக்குத் தாழ்த்திக்கொண்டு மிகுந்த பணிவு உணர்ச்சியுடன் அவரை நாடுகிறாரோ அவர் விரும்பும்போதெல்லாம் கடவுள் தோன்றுவார். ஆகவே, நாம் உணர்ச்சியில் ஏழ்மையை அடைந்து கடவுளை நம்முள்ளேயே நாம் காண்போமாக.

—'ஹரிஜன்' – 13—10—1946

# 10

# வேதங்களில் ராட்டை

அவுந்தைச் சேர்ந்த பண்டித சதவலேகர், 1922-இல் ஹிந்தியில் 'வேதங்களில் ராட்டை' என்ற புத்தகத்தை எழுதினர். எராவ்டா சிறையில் நான் ஓய்வு பெற்றிருந்தபோது அதன் பிரதி ஒன்றை எனக்கு அனுப்பியும் வைத்தார். அப்பொழுது அதைச் சிரத்தையுடன் படித்துப் பார்த்தேன். ஆனால், அபிவிருத்தியடைந்துள்ளது என்று சொல்லப்படும் இந்தக் காலத்தில், வேதங்களில் ராட்டை கூறப்பட்டிருக்கிறது என்பதை அறிந்து கொள்ளுவதால் நமக்கு என்ன நன்மை உண்டாகும் என்று என்னை நானே கேட்டுக்கொண்டேன். வெகு காலத்திற்கு முன்னிலிருந்த நமது மூதாதைகள், அநேக காரியங்களைத் தாங்களே செய்துவந்ததைப் போன்றே தங்கள் குடிசைகளிலே நூற்று, நெய்தும் வந்தார்கள். ஆனால், அதையெல்லாம் இப்பொழுது நாம் செய்வதில்லை. இவ்வாறு எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். அப்புத்தகம் அதிக அனுபவ பலனுள்ளது அல்ல என்று நான் அவசரப்பட்டு முடிவுக்கு வந்து அதைத் தூரவைத்து விட்டேன். நான் நோயுற்றுப் படுத்திருந்தபோது, என் உடல்நிலை அனுமதித்த வரையில், அப்புத்தகத்தைத் திரும்பப் படிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. பண்டித சதவலேகரின் மற்றொரு புத்தகமும் (இதைக் குறித்து இனி அதிகமாகக் கூறுவேன்) என்னைக் கவர்ந்தது. சம்பந்தப்பட்ட புத்தகத்தின் மற்றோர் பிரதியை அவர் எனக்கு அனுப்பி வைத்தார். அது இரண்டாம் பதிப்பாகப் பிரசுரமாகியிருக்கிறது என்பதைக் கண்டேன். இத் தடவை அப்புத்தகத்தை அதிகக் கவனத்தோடு படித்தேன். இப்புத்தகத்தின் ஆசிரியர், வேதங்களிலிருந்து எடுத்துக் காட்டியிருக்கும் மந்திரங்கள், அந்தக் காலத்தில் நமது மூதாதைகள் நூற்றுக்கொண்டும் நெய்துகொண்டும் இருந்தார்கள் என்ற உண்மையை எடுத்துக் காட்டுவதோடு ராட்டையைப் பார்ப்பதற்கான புதியதோர் வழியையும் ஒருவேளை நமக்காகவே காட்டியிருக்கிறார்கள் என்பதையும் காண்கிறேன். நூற்பவர்களுக்கும் நெய்பவர்களுக்கும் மூல மந்திரம் என்று சொல்லக்கூடிய ரிக் வேதத்தின் பத்தாம் பகுதியின் 53-6-ஆம் மந்திரம் கீழ் வருமாறு. அதன் கருத்தை இங்கே கொடுக்கிறேன் :

"நூலை நூற்று அதற்குப் பிரகாசமான வர்ணத்தையும் கொடுத்த பிறகு முடிச்சு விழுந்து விடாதபடி அதை நெய்க. இவ்விதம் ஞானிகள் வகுத்தளித்த வழியைப் பாதுகாத்துச் சரியானபடி சிந்தனை செய்து அருள் ஜோதியிடம் சந்ததிகளை அழைத்துச் செல்லுக அல்லது (நூலாசிரியர் கொடுத்திருக்கும் பொருளின்படி) அருட் புதல்வர்களைப் பெறுக. உண்மையில் இதுவே கவிஞர்களின் வேலை."

இந்த மந்திரத்திற்கு இந்த ஆசிரியர் தமது மொழி பெயர்ப்பை அளித்திருப்பதோடு தமது புத்தகத்தில் கிரிபித்தின் மொழிபெயர்ப்பையும் எடுத்துக்கொடுத்திருக்கிறார். இந்த மொழி பெயர்ப்பு சரியானதுதான் என்றால், வேத காலத்தில் ராட்டை இருந்திருக்கிறது என்பதை இந்த மந்திரம் நிரூபிப்பதோடு மிகத் தாழ்ந்த நிலையிலிருந்தவர்களிலிருந்து மிக உயர்ந்த நிலை எய்திய பெரியவர்கள்வரை ஆண்களுக்கும், பெண்களுக்கும் நூற்பது தொழிலாகவும் இருந்து வந்திருக்கிறது என்பதையும் நிரூபிக் கிறது. ஞானம் வகுத்த வழிகளில் இது ஒன்று. இதைப் பாது காப்பது கவிஞர்களின் வேலையும் ஆயிற்று. தியாக யக்ஞமாக நூற்கும்படி நமது கவிஞரிடம்* பணிவுடன் நான் ராட்டையை அளித்தபோது, மிகப் பழமையான வேதம் என்று கருதப்படுவ தன் ஆதாரமும் எனக்கு ஆதரவாக இருக்கிறது என்பதைப் பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. பழமையானதும், தெய்விக மானதுமான இந்தத் தொழிலையும் கலையையும் புதுப்பிப்பதில் ஈடுபட்டிருப்பவர்கள் எல்லோரும் இந்த மந்திரத்தைக் கவனிக்க வேண்டும். அவர்கள் நூற்கும் யக்ஞத்தைச் செய்துவரும்போது இந்த மந்திரத்தை அவர்கள் கவனத்தோடு பாராயணம் செய்து வரட்டும், இதை அவர்கள் மனத்தில் இருத்திவைத்துக் கொண்டு, முன்னேற்றப் பாதையில் ஏமாற்றங்களும் தோல்வி களும் ஏற்பட்டபோதிலும், நம்பிக்கை மாத்திரம் அசையாமலும் இருக்கும்படி வைத்துக்கொள்ளுவார்களாக.

அப்புத்தகத்திலிருந்து மற்றோர் அழகான மந்திரத்தை இங்கே நான் குறிப்பிடாமல் இருப்பதற்கில்லை. இதுவும் ரிக் வேதம் பத்தாம் பகுதி 130—1-ஆவது மந்திரமாகும். இதன் பொருளாவது;

"இந்த யக்ஞத்தில் நூற்றுக்கணக்கானவர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். இது கோடிக்கணக்கான நூலிழைகளின் மூலம் பூமியெங்கும் பரவுகிறது. நம்மைப் பராமரிக்கும் பெரியோர்கள் இங்கே இருக்கிறார்கள். வேலைமுறை களை அவர்கள் கவனித்து, 'இங்கே அதை நெய்க, அங்கேயே இதைச் செய்துவிடுக' என்று கூறுகிறார்கள்."

இவ்வாறு நூற்பதும் நெய்வதும் தியாக யக்ஞமாக அந்தப் புராதன காலத்திலும் கருதப்பட்டு வந்திருக்கிறது. பெரியவர் கள் அதைக் கவனமாகப் பேணிப் பாதுகாத்து வந்திருக்கிறார்கள் என்பதைக் காண்கிறோம். ஆண்களும் பெண்களும் நூற்றும், நெய்தும் வந்திருக்கிறார்கள் என்பதையும் இப்புத்தகத்தின் ஆசிரியர் ஏராளமான ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டுகிறார். உண்மையில் இத்தொழில் விவசாயத்தைப் போன்று எல்லோ ரும் செய்வதாக இருந்துவந்தது. தையற்கலையும் அக்காலத்தில்

---

* நமது கவிஞரிடம் என்று காந்திஜி இங்கே கூறுவது, கவி ரவீந்திரநாத டாகூரையாகும். 'கவியும் ராட்டையும்' என்ற கட்டுரை இதே நூலில் 170-ஆம் பக் கத்தில் பிரசுரமாகியிருப்பதும் கவனிக்கத்தக்கது.

அதிகமாக முன்னேறி இருந்தது என்பதையும் காட்டுகிறார். வெவ்வேறு சந்தர்ப்பங்களுக்கும், வெவ்வேறு ஆட்சிக்கும், வெவ்வேறான வகை உடைகள் என்றும் கூறப்பட்டிருக்கிறது. உழவனுக்கு லங்கோடு இருந்தது என்றால், அரசனுக்கு ராஜ உடையும் இருந்தது. வர்ணங்கள், பூவேலை, ஜரிகைக் கரைகள் ஆகியவைகளும் கூறப்பட்டிருக்கின்றன. சில அழகிய உருவகங்களும் அணிகளும் நூற்போர், நெய்வோர் மொழியிலிருந்தே எடுக்கப்பட்டிருக்கின்றன என்பதையும் இந்த நூலின் ஆசிரியர் காட்டியிருக்கிறார்.

அதிகச் சிந்தனையோடு எழுதப்பட்டிருக்கும் இப்புத்தகத்திலிருந்து இன்னும் அதிக விஷயங்களை எடுத்துச் சொல்ல வேண்டும் என்ற ஆசை எனக்கு இருந்தபோதிலும் அதை நான் தடுத்துக்கொள்ளவே வேண்டும். அந்தக் காலத்துப் போர்வீரர்களும் நூற்காமல் இருப்பதில்லை என்பதை இன்னுமொரு மந்திரம் நிரூபிக்கிறது. இப்பொழுதும் அஸ்ஸாமில் வழக்கத்தில் இருந்து வருவதைப்போன்று, அக்காலத்தில் மணமகனின் ஆடைகளை மணமகளே நெய்து தயாரித்து வந்தாள்.

என்றாலும், இன்னும் ஒரு விஷயத்தை, வேத நூல்களை ஆராய்ச்சி செய்துவருகிறவர்கள் கண்டுபிடித்துக்கொள்ளட்டும் என்று இந்நூலின் ஆசிரியர் விட்டுவிட்டார். வேதத்தை அவர் ஆராய்ந்த வரையில், ரோமத்தையும் பட்டையும் குறிக்கும் சொற்கள் அதில் இருப்பதைப்போன்று பருத்தியைக் குறிக்கும் சொல் அவருக்குத் தென்படவில்லை. ஆகையால், அந்தக் காலத்தில் நம் மூதாதைகள் கம்பளி, பட்டு உடைகளை மாத்திரம் உடுத்தி வந்தார்களா அல்லது பருத்தி நூலையும் அப்பொழுதே அவர்கள் கண்டுபிடித்துவிட்டார்களா என்பதை அவரால் சொல்ல இயலவில்லை.

—'எங் இந்தியா' – 2—6—1927

# 11

# சர்க்கா மண்டலம்

1. சர்க்கா மண்டல உறுப்பினர்கள், வருடத்திற்கு ஆறு சிட்டம் அல்லது மாதத்திற்கு 320 சுற்று நூலைக் கொடுப்பார்கள். இந்த நூலைச் சமூக நூற்புக்காக, மண்டலம் நிர்ணயிக்கும் நாட்களில், நிர்ணயிக்கும் இடத்தில் அவர்கள் நூற்கவேண்டும் என்பது நிபந்தனை. உறுப்பினர்கள் கை மணையின் மூலம் தாங்களே பஞ்சைப் பட்டை போட்டுக்கொண்டு நூற்க வேண்டும். இவர்கள் கூட்டாகிவிட்டவர்கள் என்று கூறப்படுவர்.

2. கூட்டாகிவிட்ட ஒருவர், பிரவேசக் கட்டணமாக ரூ. ஒன்று கொடுப்பதோடு 1–ஆம் விதியில் கண்டபடி நூற்ற நூலை மாதத்திற்கு 320

சுற்றும் கொடுப்பார். மாதா மாதம் கொடுக்க வேண்டிய நூல் தவணையைக் கொடுத்துக்கொண்டிருக்கும் வரை அவர் கூட்டாகிவிட்டவராக இருந்து வருவார்.

3. சமூக நூற்புக்கும், எந்தெந்தச் சமயத்தில் நூற்க வேண்டும் என்பது பற்றியும் மண்டலம் விதிகளை அமைக்க வேண்டும். தாம செலுத்த வேண்டிய நூல் தவணையை இரண்டு மாத காலங்களுக்குக் கொடுக்கத் தவறிவிடுகிறவரின் பெயர் நீக்கப்பட்டுவிடும். பிறகும் அவர் உறுப்பினராக விரும்புவாரானல் அவர் இரண்டாவது தடவையும் பிரவேசக் கட்டணத்தைச் செலுத்த வேண்டும். அதே வருடத்தில் யாரும் மூன்ருவது முறையாக அங்கத்தினராகி விட முடியாது.

4. இத்தகைய மண்டலங்களை ஒவ்வொரு குக்கிராமத்திலும், கிராமத்திலும், சிறு டவுனிலும் ஆரம்பிப்பதற்கான முயற்சிகளைச் செய்ய வேண்டும். ஒவ்வொரு ஜில்லாவுக்கோ, மாகாணத்திற்கோ ஒரு தலைமைக் காரியாலயம் இருக்கலாம்.

5. நாடு முழுவதும் மாதந்தோறும் ஒரு தேசீய தினத்தைக் குறிப்பிட்டு ஒரே சமயத்தில் அந்தந்த மண்டலங்களில் சமூக நூற்பை நடத்த வேண்டும் என்பது நோக்கம்.

6. மண்டலத்தோடு அநேக இடங்களிலும் நூற்பதைச் சொல்லிக் கொடுக்கும் வகுப்புகளை ஆரம்பிப்பதற்கான முயற்சிகளும் நடந்துவருகின்றன. இந்த வகுப்புகளில் கையினல் பஞ்சு அரைப்பதிலிருந்து, மணையில் பஞ்சடிப்பது, பட்டை போடுவது ஆகியவைகளும், முடிவாக நூற்பதும் சொல்லிக் கொடுக்கப்படும். இதற்கு மேற்கொண்டு கட்டணம் ஒரு ரூபாய். ராட்டை வகுப்பில் இந்த வேலைகளையெல்லாம் கற்றுக்கொண்ட ஒரு மாதத்திற்குள் மண்டலத்தில் சேருகிறவர்கள், மண்டலத்தில் சேருவதற்கு அதிகப்படி ஒரு ரூபாய் பிரவேசக் கட்டணம் செலுத்த வேண்டியதில்லை. அவர்கள் 320 சுற்று நூல் மாத்திரமே கொடுக்கவேண்டும்.

7. ஒவ்வொரு மாதமும் நூற்கப்படும் நூல், மண்டலத்தைச் சேர்ந்ததே என்ருலும், சம்பந்தப்பட்ட நூலை நூற்பவர் அந்த நூலைக்கொண்டு கதர் வாங்கிக்கொள்ளலாம். கூட்டாகிவிட்டவர்களுக்குக் கதரைப் பெறுவதில் முதல் சலுகை உண்டு.

—கனு காந்தி

பங்கிகள் குடியிருப்பில் நடந்த மூன்று நூற்கும் வகுப்புகளிலிருந்து சர்க்கா மண்டலம் உருவாகியிருக்கிறது. இந்த மண்டலங்கள் நாடெங்கும் உதயமாக வேண்டும் என்று நான் எவ்வளவு ஆர்வங்கொள்ளுகிறேன்! அப்படி நடப்பதற்கு முன்னல் டில்லியிலேயே அநேக மண்டலங்கள் ஆரம்பமாக வேண்டும். விளையாடவும் உல்லாசத்திற்கும் எத்தனையோ சங்கங்கள் இருக்கின்றன. தேசீய வேலைக்கு ஏன் அநேக மண்டலங்கள் ஏற்படக் கூடாது?

—'ஹரிஜன்' – 27—10—1946

பகுதி பதினொன்று

# ஊதியத்திற்காக நூற்பு

## 1

## ஒரே மாதிரி கூலி வேண்டும்

மில்களில் தயாராகும் துணிகளோடு போட்டிபோடுவதாக இருக்கும் வகையில், நாகரிகமான கதரை உற்பத்தி செய்து பட்டணங்களில் இருப்பவர்களுக்குக் கொடுத்துக்கொண்டு மாத்திரம் இருப்பது அல்ல, கதரின் வேலை. அப்படிச் செய்து மற்றத் தொழில்களைப் போன்று சில தொழிலாளிகளுக்கு வேலை கொடுப்பது என்பதும் கதரின் வேலை அன்று. ஆனல், இது விவசாயத்திற்குத் துணையான ஒரு தொழிலாக வேண்டும். இந்த நோக்கம் இன்னும் நிறைவேருமலேயே இருந்து வருகிறது.

இந்த நோக்கம் நிறைவேறுவதை முன்னிட்டு அது தனக்குத் தானே தேவையைப் பூர்த்தி செய்துகொள்ளுவதாக இருப்பதோடு அதன் உபயோகம் கிராமங்களில் பரவவேண்டும். கிராமவாசிகள் தங்களுக்கு வேண்டிய ரொட்டியையும், சோற்றையும் தாங்களே சமைத்துக்கொள்ளுவதைப் போன்று தங்கள் சொந்த உபயோகத்திற்கு வேண்டியதற்கு அவர்களே கதரைத் தயாரித்துக்கொள்ளவேண்டும். தயாரித்ததில் அதிகப்படியாக இருந்தால், அதை விற்கலாம். கதர்ச் சேவை தனது போக்கையும், நூற்போர் சங்கம் தனது கொள்கையையும் மாற்றிக்கொண்டாலன்றி இந்த நோக்கம் நிறைவேற முடியாது. கதராக ஆவதற்கு முன்னல் பருத்தி என்னென்ன வேலைமுறைகளுக்கு உட்படுகிறது என்பதையெல்லாம் கதர்ச் சேவையில் ஈடுபட்டிருக்கும் ஒவ்வொருவரும் அறிந்திருக்க வேண்டும்.

சுயதேவைக்கான கதர் என்று வற்புறுத்தும்போது, வர்த்தக ரீதியில் உற்பத்தியாவது பட்டணவாசிகளின் உண்மையான தேவைக்குப் போதுமானதாக இருக்கும் வரம்போடு நிறுத்தப் பட்டுவிடும். அப்பொழுது அது சங்கத்தின் கையில் மாத்திரம் இருப்பதற்குப் பதிலாகத் தனிப்பட்ட வர்த்தகர்களின் கைக்கு மாறிவிடும்.

கதரை வர்த்தக ரீதியானதாகச் செய்ய முயன்றதில் இது வரையில் சங்கம் விலை விவரங்களையே முக்கியமாகக் கருதி வந்தது. இதனல், நூற்பவர்கள் பெறும் கூலி, மற்ற எந்த

வகையான உழைப்பாளிக்கும் கிடைப்பதைவிட மிக மோசமானதாக இருந்தது. மாகாணத்திற்கு மாகாணம் இக்கூலி வேறுபட்டும் இருந்தது. ஆகையால், கதர் விலையும் மாகாணத்திற்கு மாகாணம் வித்தியாசப்பட்டது. கழுத்தறுக்கும் போட்டியை ஊக்குவிப்பதும், அதற்கு உதவியாக இருப்பதும் லாபம் ஒன்றையே குறியாகக்கொண்ட ஸ்தாபனங்களுக்கு ரொம்ப சரி. ஆனால், பரம ஏழைகளாக இருக்கும் கோடிக்கணக்கான மக்களுக்குச் சேவை செய்வதையே ஒரே நோக்கமாகக் கொண்டிருக்கும் சங்கங்கள், அத்தகைய போட்டிகளில் சேர்ந்துகொள்ள முடியாது. பீகாரில் நூற்பவர் ஒருவர், குஜராத்தில் நூற்கும் தம் சகோதரி பெறுவதைவிடக் குறைந்த கூலியைப் பெறுவதற்கு எந்த நியாயமும் இல்லை. ஒவ்வொரு மாகாணத்தில் வாழ்க்கைத் தரம் மாறுபட்டிருப்பதால் விலைவாசிகளும் மாறுபட்டிருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. ஆனால், இருப்பது இருக்கட்டும் என்று நூற்போர் சங்கம் இருந்துவிட முடியாது. நியாயமில்லாததாக இருப்பதை அது மாற்ற வேண்டும். நூற்பதில் செலவிடும் ஒரு மணி நேரத்திற்குக் கொடுக்கும் ஊதியம், நெய்வதில் அதே நேரத்திற்கு இருக்கும் ஊதியத்தைவிடக் குறைவாக இருக்க வேண்டும் என்பதற்கு எந்தக் காரணமும் இல்லை. சாதாரணமான நெசவைச் செய்வதைவிட நூற்பதற்கு ஆற்றல் அதிகம் வேண்டும். சாதாரணமான நெசவு, வெறும் யந்திரம்போல் செய்யும் ஒரு வேலை. சாதாரணமாக நூற்பதற்கும் கைத்திறன் வேண்டும். என்றாலும், ஒரு நெசவாளர் மணிக்குக் குறைந்தது ஆறு தம்படி பெறும்போது, நூற்பவரோ மணிக்கு ஒரு தம்படியே பெறுகிறார். அநேகமாக நெசவு செய்கிறவரைப் போன்றே பஞ்சடிக்கிறவருக்கும் கூலி கிடைக்கிறது. நிலைமை இவ்விதம் இருந்துவருவதற்குச் சரித்திர பூர்வமான காரணங்கள் இருக்கின்றன. ஆனால், அக்காரணங்கள் சரித்திர பூர்வமானவை என்பதனால் நியாயமானவைகளாகிவிட மாட்டா. ஆகையால், சங்கம் அதனால் நிர்வகிக்கப்படும் எல்லாவித உழைப்பின் விலையையும், ஸ்திரப்படுத்தவும் முடியாவிட்டாலும் சமப்படுத்தியாக வேண்டிய சமயம் வந்துவிட்டது. இதைச் செய்வதற்கு அநேகருடைய விஷயத்தில், மணிக்கு ஓர் அணுவுக்கு மேல் கூலி பெறும் நெசவாளர்களை அவர்களுடைய கூலி விகிதத்தைக் குறைத்துக்கொள்ளும்படி சொல்ல வேண்டியிருக்கும். ஒரே மாதிரியான தாக்கும் முறைக்கு எல்லா நெசவாளர்களும் வலிய ஒப்புக்கொண்டுவிடும் காலம் என்றும் வராது. ஆனால், உற்பத்தியில் ஈடுபடும் எல்லா உழைப்புக்கும் கூலி ஒரே மாதிரியானதாக இருக்கவேண்டும் என்ற தத்துவம் சரியானதுதான் என்றால், இந்தக் கொள்கைக்கு எவ்வளவு கிட்டத்தில் வர முடியுமோ அவ்வளவுக்குச் சங்கம் நெருங்கி வர வேண்டும். இதை ஒரே மூச்சில் உடனே செய்ய முடியவில்லை என்றால், நியாயமான இத்தனை மணி நேர வேலைக்கு இன்னது நியாயமான கூலி என்று நூற்போரின் கூலியை

உயர்த்த ஆரம்பித்துவிட வேண்டும். வினேபா தமது வகுப்பு களில் சொல்லிக்கொடுத்துக் கொண்டுவரும் அதே நேரத்தில், ஒரு நாளைக்கு ஒன்பது மணி நேரம் நூற்பது என்ற வகையில், சோதனையை நடத்தி வருகிருர். அவர் மணிக்கு எவ்வளவு நூற்கிருரோ அதையே மணிக்கு இவ்வளவு நூற்க முடியும் என்பதற்குத் திட்டமான அளவாகக்கொள்ள வேண்டும். அந்த அளவைக்கொண்டு நூற்போரின் திட்டமான கூலியை நிர்ண யிக்க வேண்டும். வினேபா செய்து வரும் சோதனையின் பலனைச் சீக்கிரத்தில் பிரசுரிக்க முடியும் என்று நம்புகிறேன்.

நூற்போர் வாழ்க்கையுடன் உயிர்த் தொடர்பு கொள்ள வேண்டும் என்பதை என் திட்டம் அவசியமானதாக்குகிறது. எதிர்பாராத வகையில் கூலியை உயர்த்திக் கொடுக்கும் ஒரு ஸ்தாபனம், வினியோகிக்கப்படும் நிக்கல் நாணயங்கள் எந்த வழியில் போகின்றன என்பதையும் கவனித்துக்கொண்டிருக்கும். பணமெல்லாம் குடியிலும், ஆடம்பரக் கல்யாணச் செலவிலும், மற்ற விருந்துகளிலும் வீணுக்கப்படுகிற தென்ருல், தாராளமாக அதிகக் கூலி கொடுப்பது வீணுனதாகும். கதர் வேலை அநேக மாகத் தீண்டாமை ஒழிப்பு வேலையைப் போன்றது.

கிராமக் கைத்தொழில் ஊழியர்களும், தாங்கள் ஆரம்பித் திருக்கும் அநேக கைத்தொழில்களில் ஈடுபட்டிருக்கும் கிராம வாசிகள், நூற்போர் சங்கம் நிர்ணயிக்கும் குறைந்த பட்சக் கூலியைப் பெறும்படி பார்த்துக்கொள்ள வேண்டும்.

—'ஹரிஜன்' – 6—7—1935

## 2

# போதுமான கூலி

அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தின் கீழ் வேலை செய்து வரும் தொழில் வினைஞர் விஷயத்தில் எது சரியோ, அதுவே அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கீழ் வேலை செய்துகொண்டு வருபவர்களுக்கும் பொருந்தும். அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கம் புதிதாக இதைச் செய்ய வேண்டியிருக்கிறது என்பதுதான் இதிலிருக்கும் வித்தியாசம். அகில இந்திய நூற்போர் சங்கமோ, ஒரே மாதிரியான குறைந்த பட்சக் கூலி முறையைக் கொண்டுவர வேண்டுமானல், பதினைந்து வருட காலமாக இருந்து வந்திருக்கும் பழக்கத்தை மாற்றிக்கொள்ள வேண்டும் ஏராளமான நூற்போருக்கு உதவி செய்யும்போது, அவர்களில் பத்தில் ஒரு பகுதி தொகை யினராக இருக்கும் நெசவாளர்களையும், பஞ்சைப் பட்டை

போடுகிறவர்கள், பஞ்சடிப்பவர்கள் போன்ற மற்றவர்களையும் கவனிக்க வேண்டியிருக்கிறது. இதில் ஒவ்வொரு ரகத்தினரின் கூலியும் வேறுபடுகிறது. சமமான கூலி என்பதை ஒப்புக் கொள்ளுவதற்கு, நூற்போர் பெறும் கூலிக்கும் நெசவாளர் பெறும் கூலிக்கும் உள்ள வித்தியாசம் மிகவும் அதிகமாக இருக் கிறது. நூற்பவர் ஒருவர், மணிக்கு இரண்டு தம்படி பெறும் போது நெசவாளரோ மணிக்குக் குறைந்தது ஓர் அணுவும், அநேக சமயங்களில் இரண்டு அணுவும் பெறுகிறார். நூற்போரின் தொகை ஒன்றரை லட்சம் என்பதை நினைவுபடுத்திக்கொள்ளும் போது இவர்களுடைய கூலியை இரண்டு தம்படியிலிருந்து பன்னிரண்டு தம்படிக்கு உயர்த்துவது என்பது மிகப் பெரிய பிரச்னையாகிறது.

ஆனால், நூற்போர் சங்கம் தனது கொள்கையைக் கடைப் பிடித்து நடப்பதாக இருந்தால், நியாயமான காரியத்தைச் செய்வதற்கு வேண்டிய தைரியத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும். கஷ்டங்கள் இருந்தாலும் அவற்றைச் சமாளிக்க வேண்டுமேயன்றி அவை நம்மைப் பணிய வைத்துவிடக்கூடாது. தரித்திர நாராயணர்களிடம் கொள்ளும் அன்பின் காரணமாகக் கதரை வாங்கி வருகிறவர்கள், இதுவரை கொடுத்ததைவிட அதிக விலை கொடுத்தும் வாங்குவார்கள் என்று நாம் நம்ப வேண்டும். இந்த நம்பிக்கை சரியானதாகாது போனால், அதனால் விற்பனையில் எவ்வளவு குறைவு ஏற்பட்டாலும் அதையும் நாம் சமாளிக்கவேண்டும். கதரிடம் அன்பு கொண்டிருப்பவர்கள், தாங்கள் கொடுக்கும் நூறு ரூபாயில் தொண்ணூற்று ஐந்து ரூபாய் தரித்திர நாராயணர்களின் மடிக்குத்தான் போகிறது என்பதை அறிவார்களானால், என்ன அதிக விலையானாலும் கதரையே வாங்குவார்கள்.

வர்த்தக ரீதியில் கதர் உபயோகமாவது, அதன் இரண்டாம் தரக் கடைசி உபயோகம்தான். நகர மக்களில் ஒரு கோடிப் பேருக்குமேல் கதரை வாங்க வேண்டியிராது. முழு நேரம் வேலை செய்யும் இருபது லட்சம் கைவினைஞர்கள் இம்மக்களுக்கு வேண்டிய கதரை எளிதாகவும் சௌகரியமாகவும் தயாரித்துக் கொடுத்துவிட முடியும். விவசாயத்திற்குத் துணையாக இருந்து வேலை தருவதுதான் கதரின் முக்கியமான உபயோகம். தங்களுக்கு வேண்டிய நூலைத் தாங்களே நூற்றுக்கொள்வதோடு அதைத் துணியாகத் தாங்களே நெய்துகொள்ளவோ, பிறரிடம் கொடுத்து நெய்துகொள்ளவோ அவர்களுக்குக் கற்றுக்கொடுக்க வேண்டும். அவர்கள் எவ்விதம் தங்களுடைய ஆகாரத்தைத் தாங்களே சமைத்துச் சாப்பிடுகிறார்களோ அதே போல் தங்களுக்கு வேண் டிய துணியைத் தாங்களே உற்பத்தி செய்பவராகவும், வாங்கிக் கொள்ளுபவராகவும், அதாவது உபயோகித்துக்கொள்ளுபவ ராகவும் ஆகவேண்டும். இந்த வேலையை நாம் இன்னும் சரியான படி தீண்டக்கூட இல்லை. ஸ்ரீ பாங்கர் இந்த மாறுதலுக்கான

காரியங்களை அமைதியாகவும் மெதுவாகவும் செய்து வருகிருர். இது செய்யப்பட்டு வரும் அதே சமயத்தில், நூற்போருக்குப் போதுமானதான கூலியைக் கொடுப்பதன் மூலம் நாமும் நியாயத்தைச் செய்யவேண்டும். தினத்திற்குக் கூலி எட்டணு வாக இருக்க வேண்டுமா, குறையலாமா? இந்த எல்லே எதுவாக இருந்தாலும், குறித்த கூலியைப் பெறுவதற்கான தகுதியைப் பெறுவதற்கு நூற்பவர் மணிக்கு எவ்வளவு நூல் நூற்கவேண்டும் என்று எதிர்பார்ப்பது? பஞ்சு அரைப்பவர்கள், பட்டை போடு கிறவர்கள், நெய்பவர்கள், இன்று கதர் உற்பத்தியில் ஈடு பட்டிருப்பவர்கள் எல்லாருடைய விஷயத்திலும் இதே பிரச்னே யைத் தீர்த்தாக வேண்டியிருக்கிறது.

கதரில் அக்கறை உள்ளவர்களும், கதரின் சாத்திரத்தை நன்ருக அறிந்திருப்பவர்களும் கூலி விகிதத்தில் யோசிக்கப்படும் மாறுதலைக் குறித்துத் தங்கள் கருத்துக்களை எனக்கு அறிவிப்பார்களா? மாறுதலை அவர்கள் ஆதரிப்பதாக இருந் தால், குறைந்த கூலி எவ்வளவு என்று நிர்ணயிக்க விரும்பு கிருர்கள் என்பதையும் தெரிவிக்க வேண்டும்.

—'ஹரிஜன்'—13—7—1935

## 3

# மிக முக்கியமான பிரச்னே

கதர் வேலே செய்து வரும் எல்லாத் தொழிலாளருக்கும், முக்கியமாக இப்பொழுது யார் விஷயத்தில் அதிகமாகக் கவனம் செலுத்தி வருகிருேமோ அந்த நூற்போருக்கும் கூலி ஒரே மாதிரி யானதாக இருக்கவேண்டும் என்று காந்திஜி எழுதியதிலிருந்து கதர் உற்பத்தி முறையில் மாறுதல்களைச் செய்வது மிக முக்கிய மான பிரச்னேயாக இருந்து வருகிறது. தம்மிடம் யோசனே கேட்க வரும் காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினருக்குத் தமது அவகாசத்தைக் கொடுப்பதற்குக் காந்திஜி விரும்புவ தில்லே. ஆனல், இப்பொழுது இருக்கும் முக்கியமான பிரச்னே யான இவ்விஷயத்தைக் குறித்துத் தம்மிடம் விவாதிக்க விரும்பு கிறவருக்கு அவர் தாராளமாக அவகாசம் அளித்து வருகிருர். காங்கிரஸ் காரியக் கமிட்டியின் தலைவர் சர்தார் பட்டேல், ஸ்ரீ ஜெயராம்தாஸ், யமுனலால் பஜாஜ், டாக்டர் பட்டாபி சீதா ராமையா, பேராசிரியர் கிருபளானி ஆகியோர் வந்திருந்தனர். இவர்களில் சிலர் காந்தி சேவா சங்கத்தின் உறுப்பினர்கள். இவர்கள் எல்லோருமே கதரைக் காங்கிரசின் அத்தியாவசிய

மான வேலை என்று கருதுகிறவர்கள். இவர்களுடன் விவாதிக்க நேர்ந்ததோடு அது அதிக உபயோகமாகவும் இருந்தது. தம் மனத்தில் என்ன கருத்துக்கள் தோன்றி இப்பிரச்னையை அதிக முக்கியமானதாக்கின என்பதைக் காந்திஜி அவர்களிடம் எடுத்துக் கூறினர். சின்ன விஷயங்கள், தம் எண்ணத்திலும் உள்ளத்திலும் தீப்பிடிக்கச் செய்யும் தீப்பொறிகளாகிவிட்டன என்றும், நியாயம் வழங்கப்படுகிற வரையில் தாம் அமைதியுடன் இருக்க முடியாது என்றும் சொன்னர். இந்தச் சின்ன விஷயங்களாவன: (1) மிகவும் நெருங்கிய தோழர் ஒருவர், சாவ்லியிலுள்ள பிரபலமான நூற்பு, நெய்யும் நிலையத்தைப் போய்ப் பார்த்தபோது நாளெல்லாம் ராட்டையில் நூற்றுக்கொண்டிருக்கும் ஏழை நூற்போருக்கு மணிக்கு இரண்டு தம்படிக்கு மேல் கிடைக்கவில்லை என்பதைக் கண்டுபிடித்தது; (2) கதர்க்கடையில் ஓர் ஏழை வாங்கிய கதர்த் துணி, இரண்டொரு சலவைக்கெல்லாம் பஞ்சு பஞ்சாகக் கிழிந்து போய்விட்டது. இவற்றைக் குறித்துக் காந்திஜி உடனே விசாரிக்க ஆரம்பித்தார்; புகார்கள் உண்மையானவை எனக் கண்டார். கதர் ஊழியர்கள் எல்லோருமே தரித்திர நாராயணர்களின் நன்மைக்காகச் சேவை செய்வது என்ற பிரதிக்ஞையைக் கொண்டிருந்தும், அவர்களிடையே அடிக்கடி அருவருக்கத்தக்க வகையில் தகராறுகள் ஏற்பட்டு வந்தன. வர்த்தகத்திற்கான கதர்தான் இதற்கெல்லாம் மூல காரணம் என்று அவருக்கு வளர்ந்துகொண்டு வந்த நம்பிக்கை இதனல் ஊர்ஜிதமாகிவிட்டது. அதன் பேரில் தம் மனத்தில் எழுந்த எண்ணங்களை, உடனேயே ஒரே மாதிரியான கூலியைக் குறித்து அவர் எழுதிய பிரபலமான கட்டுரையின் மூலம் வெளிப்படுத்தினர்.

தெரிந்தோ அல்லது வேண்டுமென்றே செய்த அநீதி எதுவும் இல்லை. வேலையில்லாமல் இருப்பவர்களுக்கு வேலை கொடுக்க வேண்டும் என்பதற்காகவே எல்லாம் செய்யப்பட்டன. மில் துணியுடன் இயற்கையல்லாத போட்டி ஏற்பட்டதனலேயே கதர் விலையைக் குறைக்க வேண்டியதாயிற்று. ஆனல், நியாயத்தைச் செய்யவேண்டும் என்ற நம் அவசரத்தில் நம்மையும் அறியாமலேயே நூற்போருக்குச் சில அநீதிகளைச் செய்துவிட்டோம். இதற்கு மாருக, விவாதத்தில் கலந்துகொண்ட நண்பர்களைப் பொறுத்த வரையில் இவ்விஷயத்திலுள்ள நியாயத்தை ஆட்சேபிக்க முயற்சி செய்யவில்லை என்பது மாத்திரமல்ல, ஆட்சேபிக்க யாரும் எண்ணவுமில்லை. அவர்கள் வற்புறுத்த வேண்டியிருந்ததெல்லாம், நடைமுறையில் ஏற்படக்கூடிய கஷ்டங்களைக் குறித்தே. முதலில் விலை ஏறிவிடுவதால் கதருக்கு இருக்கும் கிராக்கி பாதிக்கப்பட்டு விடாதா? இரண்டாவது, கண்டிப்பான சோதனைகளை அமுலுக்குக்கொண்டு வருவதாலும் ஆயிரக்கணக்கானவர்களுக்கு வேலை இல்லாது போய்விடாதா? 'பீகாரில் இந்தச் சொற்ப ஊதியத்தை வாங்கிக்கொள்ளுவதற்காகச் சுமார் ஐயாயிரம் பெண்கள்

தினமும் பத்து மைல் தூரம் நடக்கிறார்கள். இன்னும் அதிகமாக நாம் கதரை விற்போமானால், இன்னும் அதிகம் பேர் இப்படி வருவார்கள். கதருக்கு இருக்கும் கிராக்கி போய்விட்டால், இந்த ஏழைப் பெண்களின் கதி என்னவாகும்?' இது முக்கியமான கேள்விகளில் ஒன்று. இதற்குக் காந்திஜி சொன்னதாவது: 'ரொம்ப சரி. வங்காளத்தின் கிராமங்களிலும் தென்னிந்தியாவிலும் இதே நிலைமைதான் இருந்து வருகிறது என்பதை அறிவேன். ஆனால், உங்கள் யோசனையை நான் இன்னுமொரு வகையில் மாற்றிச் சொல்லுகிறேன். இப்பொழுது மணிக்கு இரண்டு தம்படி கொடுப்பதற்குப் பதிலாக ஒரு தம்படிதான் கொடுக்கிறீர்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அப்போது 5,000 பெண்களுக்கல்ல, 10,000 பெண்களுக்கும் நீங்கள் வேலை கொடுப்பீர்கள். திக்கற்ற இப்பெண்கள், மோசமான அந்த அற்பத்தை வாங்கிக்கொள்ளவும் தயாராயிருக்கிறார்கள் என்று வைத்துக்கொண்டாலும் அப்படிக் கொடுக்க நீங்கள் துணிவதா? நீங்கள் துணியக்கூடாது என்றே சொல்லுவேன். அப்படியானால், அதற்கும் அப்பால் போகமுடியாது என்ற ஓர் எல்லையை நீங்கள் நிர்ணயித்துக்கொண்டுவிட வேண்டும் என்றாகிறது. நீங்கள் விரும்பினால், அதை 'வேறு வகையில்லாத அதம பட்சம்' என்று வேண்டுமானால் சொல்லிக்கொள்ளுங்கள். ஆனால், அந்த அதம பட்சத்தை நிர்ணயித்துவிட வேண்டியதுதான் என்றால், உற்பத்தியாளர்களில் சிலருக்கு இச்சமயத்திற்கு அதனால் கெடுதல் உண்டாகிறது என்பதைப் பொருட்படுத்தாமல், ஒரேயடியாக அதை ஏன் இப்பொழுதே நிர்ணயித்துவிடக் கூடாது? வாங்குவோர் தொகை ஓரளவுக்குட்பட்டதாக இருந்து, உற்பத்தி செய்வோர் தொகை அளவுக்கு உட்படாததாக இருக்கும்வரையில், உற்பத்தியாளர்களில் சிலரை நீங்கள் வெளியே அனுப்பிவிடவே நேரும் என்பதில் சந்தேகமில்லை. அப்படியிருக்கும்போது, இந்த ஏழைப் பெண்களுக்கு வாழ்க்கைக்குப் போதுமான கூலியாவது நிச்சயமாகக் கிடைக்கும்படி செய்வதை முன்னிட்டுப் போதுமான குறைந்த பட்சக் கூலியை வேண்டுமென்றே ஏன் நிர்ணயித்துவிடக்கூடாது? அப்படிச் செய்யாவிட்டால், தெரியாமல் செய்துகொண்டு போகும் இச் சுரண்டலுக்கு ஒரு முடிவே இருக்காது. காகிதம் உற்பத்தி செய்கிறவர், ஓர் இடத்திலிருந்து காகிதத்தை நமக்கு அனுப்புகிறார். அவர் தொழிலாளருக்குத் தினத்திற்கு ஒன்றரை அணா வீதம் கூலி கொடுத்துக்கொண்டிருக்கிறார். காகிதத்தை இன்னும் மலிவானதாக்க முடியும் என்று நம்புவதாகவும் அவர் கூறுகிறார். இன்னும் மலிவாக எனக்கு வேண்டாம் என்று நான் அவருக்குச் சொல்லுகிறேன்.'

'அப்படியானால், கதருக்கு இப்பொழுது இருக்கும் இலக்கணத்தை நீங்கள் மாற்றிவிடவேண்டும். கையினால் நூற்றுக் கையினால் நெய்த துணியாக அது இனி இருக்காது. ஆனால், குறிப்பிட்ட ஒரு கூலியில் கையினால் நூற்று, கையினால் நெய்த

துணியாகவே அது இருக்கும்' என்று ஒரு நண்பர் ஆட்சேபித்தார்.

இதற்குக் காந்திஜி, 'அதில் சந்தேகமில்லே. இவ்வளவு காலம் கடந்து நீங்கள் இதைக் கண்டுபிடித்திருப்பதற்காக வருந்துகிறேன்' என்ருர்.

"ஆனல், நூற்பது உதவியான ஒரு தொழில் என்று இத்தனை வருடங்களாக நாம் உலகத்திற்கெல்லாம் சொல்லிக்கொண்டு வருகிறோம். இதுவோ ஒருவரின் ஒழிந்த நேரத்தில்தான் செய்யப்படுகிறது."

'ஆம் என்றும் சொல்லலாம்; இல்லே என்றும் சொல்லலாம். நாளெல்லாம் இந்த வேலேயைச் செய்துகொண்டிருப்பவர்கள் ஆயிரக்கணக்கில் இருக்கிருர்கள் என்பதை அறிவேன். அவர்களுக்கு இது உதவியான தொழில் அல்ல. ஆனல், முக்கியமான தொழில். அப்படியே இல்லே என்று வைத்துக்கொண்டாலும், மற்ற வேலேகளுக்கு ஒரு மணி நேரத்திற்கு என்ன கூலி கொடுக்கிறீர்களோ அதே கூலியை இந்த வேலேக்கு ஒருமணி நேரத்திற்கு ஏன் கொடுக்கக்கூடாது?'

'நூற்பதைவிட நெல் குத்துவதில் அதிகக் கூலி கிடைக்கிறது என்பதனல் குண்டூர் ஜில்லாவின் சில பகுதிகளில் மக்கள் நெல் குத்தப் போய்விடுகிருர்கள் என்பது உங்களுக்குத் தெரியுமா?'

'தெரியும். ஆனல், என் வாதத்தைத்தான் நீங்கள் ஆதரிக்கிறீர்கள். எந்த வேலேயில் அதிகக் கூலி கிடைக்கிறதோ அந்த வேலேக்குத்தான் நிச்சயமாகப் போவார்கள். அப்படியிருக்க, மற்றக் கூலிகளுக்குச் சமமான கூலியைக் கொடுத்து நூற்போரை ஏன் கௌரவப்படுத்தக் கூடாது?'

'அனுபவக் கஷ்டங்கள் எவ்வளவோ அதிகம் இருக்கின்றன. உங்கள் நிபந்தனேகளே அனுசரித்து நடந்துவிடும்படி நூற்போரைத் தூண்டிவிட முடியாது. அவர்களுக்கு ஒழுங்கான பட்டியல் இருக்க வேண்டும் என்று விரும்புகிறீர்கள். குறிப்பிட்ட சமமாகவும், குறிப்பிட்ட பலமும் உள்ள குறிப்பிட்ட நூலே அவர்கள் நூற்க வேண்டும் என்கிறீர்கள். இதையெல்லாம் செய்வது எப்படி?'

'கஷ்டங்களேச் சமாளித்துத்தான் ஆக வேண்டும். பெரும் துயரங்களேப் பற்றிய கதைகளெல்லாம் நீண்ட காலம் வரையில் வந்துகொண்டுதான் இருக்கும் என்பது எனக்குத் தெரியாதா? தங்களுக்கு வேண்டியதைத் தாங்களே நூற்றுக்கொள்ளும்படி நூற்போரைத் தூண்ட முடியாது என்று சிலர் சொல்லுகிருர்கள். நமது தேவைகளே அனுசரித்து நூற்கும்படி அவர்களேச் செய்ய முடியவில்லே என்பார்கள்.'

'ஆனல், நமது விதிகளுக்கு உட்பட்டு அவர்கள் நடந்து, நாமும் அவர்களுக்குச் சிறந்த கருவிகளையும், நல்ல கதிர்களையும் கொடுத்து வருவதாக வைத்துக்கொண்டால், அவர்கள் தாமே அதிக வேலை செய்வதோடு இரட்டிப்புக்கு அதிகமான கூலியையும் பெறுவார்கள்.'

'அதை அவர்கள் தாமே அடைவார்கள். ஆனல், உங்கள் நற்செய்கையால் அல்ல. அதிக உற்பத்தி என்ருல் அதிக வருமானம் என்பது நன்ருகத் தெரிந்ததுதான். ஆனல், அவர்களுக்கு நாம் மறுத்து வந்திருக்கும் நீதி சம்பந்தமாக நாம் என்ன செய்யப் போகிருேம்?'

காந்திஜி முடிவாகக் கூறியதாவது: 'அப்படியல்ல; மில் துணியுடன் கதர் போட்டி போட வேண்டியிருக்கிறது என்பதை நாம் மறந்துவிட வேண்டும். மில் துணி மில் துணிதான்; கதர் கதர்தான். மில் துணியை உற்பத்தி செய்கிறவர், அதை எப்படி மலிவாக விற்பது என்பதிலேயே கவனம் முழுவதையும் செலுத்துவார். நீதியிலும், நியாயமான கூலி கொடுப்பதிலும் நாம் முழு கவனத்தையும் செலுத்தி வர வேண்டும். ஆகையால், இந்த இரண்டையும் ஒப்பிடுவது என்பதே இருக்க முடியாது. நடைமுறைக் கஷ்டங்களைப் பொறுத்தவரையில், நம் நிர்வாகச் செலவுகளைக் குறைத்துக்கொள்ளுவோம். விளம்பரங்களை நிறுத்திவிடுவோம். தனிப்பட்ட உற்பத்தியாளருக்கு நாம் ஆதரவு அளிக்காமல் இருந்துவிடுவோம். கதருக்குத் தங்களை அர்ப்பணம் செய்துகொண்டிருப்போருக்கு இது ஒரு சோதனையாக இருக்கப் போகிறது. அதை அவர்களே உற்பத்தி செய்யட்டும் அல்லது அதற்காகத் தங்கள் சகோதரர்களுக்கும் சகோதரிகளுக்கும் வாழ்க்கைக்குப் போதுமான கூலியைக் கொடுக்கட்டும். கதர் நெசவாளர்கள் எல்லோருக்கும் தங்களைத் தாங்களே தூய்மைப்படுத்திக்கொள்ளும் விஷயம் இது. தரித்திர நாராயணர்களுக்குச் சேவை செய்வதுதான் நாம் மேற்கொண்டிருக்கும் பணி என்பதை மறவாது இருப்போமாக. கஷ்டங்கள் இருக்கலாம். ஆனல், அவைகளைக் கொஞ்சம் கொஞ்சமாக நிவர்த்திப்போம்.'

எங்கெங்கே சாத்தியமோ அங்கெல்லாம் பல தரமான, ஆனல், அதிகப்படியான கூலியை நூற்போருக்குக் கொடுத்து இப்பரீட்சையை ஆரம்பிப்பது என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்படுகிறது என்றே தோன்றுகிறது.

—'ஹரிஜன்' – 10—8—1935

# 4

# ஆரம்பிப்பது எப்படி?

கதர்த் தொழிலாளருக்குத் திட்டமான கூலியாக இருந்தாலும், குறைந்தபட்சக் கூலியாக இருந்தாலும் மாறுதல் ஏற்படுவது நிச்சயம் என்றே தோன்றுகிறது. அதிகப்படியாகக் கூலியை உயர்த்திக் கொடுக்க வேண்டும் என்ற என் யோசனையைக் குறித்து இதுவரை கிடைத்திருக்கும் அநேக அபிப்பிராயங்களில், ஒருவரைத் தவிர யாரும் அதை ஆட்சேபிக்கவில்லை. எட்டணை கொடுக்கலாம் என்ற யோசனையை இதுவரை யாரும் அங்கீகரிக்கக் காணோம். எழுதியிருப்பவர்களில் சிலர், எட்டணை யோசனை கதருக்கு ஆபத்தாக முடியும் என்கிறார்கள். அப்படிக் கொடுத்தால், அந்த அளவுக்குக் கதர் விலை அதிகமாகி வாங்குவோர் மிகச் சிலராகக் குறைந்து விடுவார்கள் என்றும் கூறுகிறார்கள். அது எப்படி இருந்தாலும், தக்க மாறுதல் ஏற்படுகிறது என்றால் சில நிபந்தனைகள் நிறைவேற்றப்பட்டே ஆக வேண்டும். ஆகையால், காலத்தால் நாம் முந்திக்கொண்டு எங்தெந்த இடங்களில் சாத்தியமாகிறதோ அங்கெல்லாம் கீழ்க்கண்டவைகளை நிறைவேற்றிவைக்க வேண்டியதுதான் புத்திசாலித்தனமாகும் :

1. தொழிலாளர்கள், மற்றவர்களுக்குச் சொல்லிக்கொடுக்கக்கூடியவர்களாக ஆகும் வகையில் பருத்தி எடுப்பதிலிருந்து நெசவு வரையில் இத்தொழில் சம்பந்தமான எல்லா முறைகளிலும் தேர்ச்சியடைய வேண்டும்.

2. கதர்ப் பிரசாரகர்களும் அமைப்பாளர்களும், தங்கள் வட்டாரத்திற்குள் அல்லது எல்லைக்குள் உள்ள பஞ்சடிப்பவர்கள், நூற்பவர்கள், நெய்பவர்கள் ஆகிய எல்லோரையும் பதிவுசெய்து வைக்க வேண்டும்.

3. தங்கள் நூற்பவர்கள் என்ன பருத்தியை உபயோகிக்கிறார்கள் என்பதை அவர்கள் அறியவேண்டும். அந்தப் பருத்தியால் நூற்க முடிவதற்கு அதிகமான நெம்பருள்ள நூலை நூற்க நூற்பவர்கள் முயற்சிக்காமலிருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும்.

4. நூற்பவர்களும் மற்றத் தொழிலாளர்களும், தங்கள் வீடுகளில் கதரை உபயோகிக்காவிட்டால், அவர்களுக்கு எந்த வேலையும் கிடைக்காது என்று எச்சரிக்கை செய்துவிட வேண்டும்.

5. இவ்விதம் எச்சரிக்கை செய்யப்பட்ட தொழிலாளருக்குத் தங்களுடைய உழைப்புக்குப் பதிலாகக் கதரை எப்பொழு

தும் வாங்கிக்கொள்ளுவதற்கு வேண்டிய வசதியைச் செய்து கொடுக்க வேண்டும்.

*6.* வரும் கதர் நூல் சிட்டம் ஒவ்வொன்றையும், நூலின் பலமும் சமமும் சரியாக இருக்கிறதா என்று பரிசோதித்துப் பார்க்க வேண்டும். சமமில்லாமலும் பலமில்லாமலும் இருக்கும் நூலை, நன்றாக வேகாத அடையை நிராகரிப்பது போல நிராகரித்துவிட வேண்டும்.

*7.* எப்பொழுதும் ஒவ்வொரு நூற்பாளரின் நூலையும் தனித் தனியாகச் சேர்த்து வைத்திருந்து, ஒரு பீசாக நெய்வதற்குப் போதுமான நூல் சேர்ந்ததும் தனியாகவே நெய்யவேண்டும். இதனால், கதர் நீடித்து உழைப்பதாவதோடு நெசவிலும் தோற்றத்திலும் எல்லா அபிவிருத்தியையும் அடையும்.

*8.* இவ்விதம் தயாரான பீசுகளிலெல்லாம், பஞ்சடித்தவர், பட்டை போட்டவர், நூற்றவர், நெய்தவர் ஆகியோர் வெவ்வேறானவர்களாக இருந்தால் அவர்கள் பெயர்களை எழுதிச் சீட்டு ஒட்ட வேண்டும்.

*9.* தொழிலாளர்கள் சில குடும்பங்களைச் சேர்ந்தவர்களாக இருக்கும் இடங்களில், கதர் சம்பந்தமான எல்லா வேலைகளும் அவர்களுடைய சொந்த வீடுகளிலேயே நடக்கும்படி செய்யத் தூண்டி அவர்களுக்கு ஆதரவு அளிக்க வேண்டும்.

*10.* கதர்த் தொழிலாளர்களின் சம்பந்தமுடையவைகளாக இருக்கும் குடும்பங்களின் வாழ்க்கை, வரவு செலவுகள் முதலியவைகளைக் கவனமாக ஆராய வேண்டும். தங்கள் வருமானத்தை நியாயமான வழிகளில் செலவிடுவோருக்கு உதவி செய்ய வேண்டும்.

*11.* வியாபாரம் குறைந்துவிடும் காரணத்தினால் சங்கத்தின் கீழ் வேலை செய்துவரும் தொழிலாளரின் தொகையைக் குறைத்துவிட வேண்டிய அவசியம் எப்பொழுதாவது ஏற்பட்டால், பிழைப்புக்கு வேறு வழி இருப்போரையே முதலில் வேலையிலிருந்து நிறுத்த வேண்டும் இப்பொழுது அநேக மாகாணங்களிலும் தேவை அதிகமாக இருப்பவர்கள் நூற்கிறார்கள் என்பதோடு செட்டாக இருக்கும் சில பெண்களும் நூற்கிறார்கள். நல்ல சாப்பாடு சாப்பிடுவதற்கு வேண்டும் என்பதைவிட அல்லது பட்ட கடனைக் கொடுக்க வேண்டும் என்பதைவிடத் தாங்கள் ஆசைப்படும் ஏதோ சில அற்பச் சாமான்களை வாங்க வேண்டும் என்ற ஆசையால் இவர்கள் நூற்கிறார்கள். இதை நான் அறிகிறேன்.

*12.* ஊழியர்கள், ஒவ்வொரு பஞ்சடிக்கும் வில்லையும், ராட்டையையும், ராட்டை விஷயத்தில் அதன் கதிரையும், அது எ

தனே தடவை சுழல்கிறது என்பதையும் நுட்பமாகச் சோதிக்க வேண்டும். ஏனெனில், உத்தேசிக்கிற கூலி உயர்வு அதிக எளி தாக இருக்கவே இருக்காது. இந்தக் கூலி உயர்வில் ஒரு பகுதியை அதிகச் சிறந்த உற்பத்தியினுல் ஈடு செய்துகொள்ள வேண்டும். இன்னுமொரு பகுதிதான் கொடுக்கும் உயர்வாக இருக்கும். தனது வேலையின் தன்மையில் அபிவிருத்தியைச் செய்துகொள்ள மறுக்கும் நூற்பாளர் யாருக்கும், கதர் விற்பனே அதிகரித்தாலன்றி எந்தக் கூலி உயர்வும் கிடைக்காது.

*13.* மேற்கண்ட பாராவிலிருந்து நூற்போருக்கு நூற்போர் சங்கங்கள் ஆரம்பத்தில் சௌகரியமான ஏற்பாட்டின்படி நூற் கும் கருவிகளேயும், அதன் பாகங்களேயும் கொடுக்க வேண்டும் என்ருகிறது. அநேகர் விஷயத்தில் மால் கயிற்றிலும் கதிரிலும் மாறுதல் செய்வதனுலேயே நூற்கும் நூலின் அளவும் தரமும் விருத்தியடையும்.

கதர் ஊழியர்கள், தங்களுக்கு இருப்பது மகத்தான பணி என்பதையும், தொழில் செய்வோரின், தொழிலாளரின், அரைப் பட்டினி கிடப்போர், வயிற்றுக்குப்போதாது அவதிப்படுவோரின் பெரும் குடும்பத்தில் தாங்களும் பணிவான அங்கங்களே என் பதை உணர்ந்தால்தான் மேலே சொன்னவைகளே யெல்லாம் நிறைவேற்றிவைக்க முடியும்.

பருத்தி சாகுபடியைப் பற்றிய பிரச்னேயை நான் தொடவே இல்லே. கடைகளில் விற்பனே செய்வதற்காகத் தயாரிக்கப் படும் கதரைக் குறித்தே இதுவரை கூறினேன். சொந்தத் தேவைக்காகத் தயாரித்துக்கொள்ளும் கதர் விஷயத்தில் சில விதிகள் வேறுவிதமாக இருக்கும். நூற்பவர்களே சொந்தத்தில் பருத்தி சாகுபடி செய்துகொண்டாலன்றி, ஒவ்வொரு கிராமத் திலும் பருத்தி விளேயவைத்தாலன்றி, இது என்றுமே வெற்றி யடைய முடியாது. சுய தேவைக்கான கதர் உற்பத்தி சம்பந்தப் பட்ட வரையிலாவது, பருத்தி சாகுபடி பரவல் முறையில் நடப்ப தாக இருக்கவேண்டும் என்ருகிறது. இதற்கு, கதர் வேலே நடக்கும் கிராமங்களேப் பற்றிய புள்ளி விவரக் கணக்குவேண்டும். ஏனெனில், நூற்கும் ஆணே, பெண்ணே, தனக்கு வேண்டிய பருத்தியைத் தானே பயிரிட்டுக்கொள்ளுவதற்கு அவர்களில் ஒவ் வொருவருக்கும் மிகக்கொஞ்ச நிலமும்கூட இல்லே. சுயதேவைக் கான கதர் என்பது மிகப்பெரிய திட்டம். அதற்காக மாத்திரமே அகில இந்திய நூற்போர் சங்கம் இருந்து வருவது நியாயமான தாகும். அது அத்துறையில் குறிப்பிடத்தக்கதான எந்த அளவி லும் இன்னும் வேலே செய்து விடவில்லே.

—'ஹரிஜன்' – 27—7—1935

# 5

# அதிகமான விலைகள்

பம்பாய் கதர்க் கடை, அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கதர்க் கடைகள் எல்லாவற்றிலும் மிகப் பெரியது. அது எந்தத் தனிப்பட்டவரின் சொத்தும் அல்ல. தரித்திர நாராயணர்களின் ஏக தருமகர்த்தா என்ற வகையில் அகில இந்திய நூற்போர் சங்கத்தைச் சேர்ந்தது அது. எனவே, அதன் முக்கியமான சிரத்தை தரித்திர நாராயணர்களைப் பற்றியதாகவே இருக்க வேண்டும். மத்திய தர வகுப்பினர் சிலருக்குக் கௌரவமான வேலையைக் கொடுப்பதில் அது உதவி செய்திருந்தபோதிலும், அவர்களுக்கு வேலை தேடிக் கொடுக்கும் ஒரு ஸ்தாபனமாக அதைக் கருதிவிடக்கூடாது. புதிய கொள்கை அனுசரிக்கப் பட்டு வருவதால், புதிய கொள்கையின் அவசியத்தை முன்னிட்டு அதன் சிப்பந்திகளின் தொகை குறைக்கப்படுகிறது. ஸ்ரீ ஜேரா ஜானி, புதிதாகக் கண்டுபிடிப்பதில் தமக்குள்ள அபாரமான திறமையைக்கொண்டு தயாரிக்கச் செய்து இந்தியாவின் எல்லாப் பாகங்களிலிருந்தும் அவர் தருவித்த கதர் ரகங்களின் விற்பனையை அதிகரிப்பதற்கு இதுவரை விசேஷ முயற்சிகள் செய்யப் பட்டு வந்தன. இந்த முயற்சியினால், தரித்திர நாராயணருக்கு ஏற்பட்ட நன்மைக்குக் கொஞ்சமும் பொருத்தமில்லாத வகையில், நிர்வாகச் செலவு மிக அதிகமாக ஆகி வந்தது. மாகாண ஊழியர்களின் முக்கியமான வேலை, சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்ளுவதாகக் கதரைச் செய்து தங்கள் சொந்த மாகாணங்களில் அதை எல்லோரிடத்திலும் பரப்புவதுதான். ஆனால், மேலே சொன்ன முயற்சி, மாகாண ஊழியர்களின் கவனத்தை அவர்களுடைய முக்கியமான வேலையிலிருந்து வேறு வழிகளில் திருப்பிவிட்டுவிட்டது. உண்மையான மாகாண முயற்சி இல்லாமல் எல்லோரிடத்திலும் பரவுவதான கதரின் நோக்கம் நிறைவேற முடியாது. கதர் உற்பத்தியாகும் எண்ணற்ற இடங்களில் சாத்தியமான வரையில் அது வினியோகமானால் தான் அதை அடைய முடியும். பம்பாய் போன்ற பெரிய நகரங்களுக்கு, அவை தாங்களே எப்பொழுதும் உற்பத்தி செய்துகொள்ளப் போவதில்லையாகையால், எப்பொழுதும் கொஞ்சம் கதர் தேவைப்படும் என்பது உண்மை. விசேஷ முயற்சி எதுவும் இல்லாமல் சமாளிப்பதற்கு இது நல்ல முறையிலான தேவையேயாகும். நகரக் கதர்க் கடைகளில் விலையுயர்ந்த கதர் ரகங்களைப் பார்க்கிறோம். நகர மக்களின் பலதரப்பட்ட ருசிக்கும் ஏற்றவகையில் கதரைத் தயாரிப்பதற்கான முயற்சியை அகில இந்திய நூற்போர் சங்கம் செய்வதனாலேயே இது சாத்தியமாகிறது. ஆனால், கதர் அதனுடைய பணியை நிறை வேற்றியாக வேண்டுமாயின், கவனத்தைக் கதர் உற்பத்தியா

கும் இடங்களுக்குத் திருப்பியாக வேண்டிய சமயம் வந்துவிட்டது. உற்பத்தியாகும் இடங்கள் மிகச் சிலதான் இருக்கின்றன. ஒவ்வொரு வீடும் சமைத்து உணவைத் தயாரிக்கும் இடங்களாக இருப்பதைப் போன்று ஒவ்வொரு வீடும் கதர் உற்பத்தியாகும் இடமாக ஆகிவிடாவிட்டாலும் ஒவ்வொரு கிராமமும் அப்படி ஆகவேண்டும். அடுப்பங்கரைப் பொருளாதாரம், புத்தகத்திலிருக்கும் பொருளாதாரத்திற்கு முற்றிலும் மாறுபட்டது. அதே போலத்தான் கதர்ப் பொருளாதாரமும். எனவே, யோசிக்கப் படும் மாறுதலை முன்னிட்டு அகில இந்திய நூற்போர் சங்கம் நடத்தும், அதன் சார்பில் நடத்தப்படும் கதர்க் கடைகளில் சிப்பந்திகளை அதிமாகக் குறைக்க வேண்டியதாகிறது. அத்தாட்சி பெற்ற தனிப்பட்ட உற்பத்தியாளர்கள் அடியோடு மறைந்து விடாவிட்டாலும் அவர்களுடைய தொகையையும் குறைக்க வேண்டியதாகிறது. இவையெல்லாம் எப்படிச் செய்யப்படும் என்பதை இதற்குள் சொல்லிவிடுவது கஷ்டம். இந்தக் காரியத்திற்கு என்றே இந்தியா முழுவதிலும் சுற்றுப் பிரயாணம் செய்திருக்கும் ஸ்ரீ சங்கரலால் பாங்கர் இதைக் குறித்துக் கவனமாகத் திட்டம் தயாரித்து வருகிறார்.

இதற்கிடையில் கதர் அன்பர்களுக்கும் தரித்திர நாராயணர்களுக்காகப் பாடுபடுகிறவர்களுக்கும் ஓர் எச்சரிக்கையைச் செய்ய வேண்டியிருக்கிறது. கதர் விலை அதிகமாகிவிடும்; கதர் ஊழியர்களிடையே நுட்பத் திறமையை அதிகமாக வளர்த்துக்கொள்ள வேண்டும். கதர் உற்பத்தி, வினியோகம் ஆகியவைகளில் சம்பந்தப்பட்டிருக்கும் எல்லா வகுப்பாரிடத்திலும் தன்னலத் தியாக உணர்ச்சி அதிகமாக உண்டாக வேண்டும் என்பதுதான் என் எச்சரிக்கை. நாளாவட்டத்தில் விலைகள் குறைந்து வந்திருக்கின்றன என்பதைக் காட்டுவதில் கதர்க் கடைகள் சந்தோஷமடைகின்றன. அதிக முரடாக இருந்த முதல் கதர்த் துணியைக் கெஜம் ஒரு ரூபாய்க்கு அதிகமாக நான் விற்றது எனக்கு நினைவு இருக்கிறது. அப்படிப்பட்ட முரட்டுக் கதர்த் துணி இன்று இரண்டு அணவுக்குக்கூட விலை போகாது. அத்தகைய துணி இப்பொழுது கதர்க் கடைகளில் விற்கப்படுவதும் இல்லை. கதரின் ஒவ்வொரு பகுதியிலும் ஏற்பட்ட அபிவிருத்தியினால்தான் விலைக் குறைப்பு சாத்தியமாயிற்று. ஆனால், அது பெரிதும் நூற்பவரின் நஷ்டத்திலேயே வாங்கப் பட்டு வந்தது. என்றாலும், தரித்திர நாராயணனின் திட்டமான உருவமே, இந்தியா முழுமைக்கும் மிகக் குறைவானதான கூலியைப் பெறும் நூற்பவர்தான். மிகக் குறைந்த கூலியே என்றாலும், மணிக்கு ஒரு தம்படிதான் என்றபோதிலும், வேலையில்லாமையைத் தீராத நோயாகக் கொண்டுவிட்ட மக்களுக்கு, மிகப் பரந்த அளவில் ஓர் ஊதியத்துடன் அகில இந்திய நூற்போர் சங்கம் வேலை அளித்திருப்பது நல்லதேயாகும். ஆனால், அது தன் கடமையைச் சரிவர நிறைவேற்ற வேண்டுமாயின், நூற்போருக்கு வாழ்க்கைக்கு வேண்டிய கூலியை

யாவது கொடுக்க அது வழி செய்யவேண்டும். நூற்கும் பெண் ஒரு மணி நேரம் நூற்பதற்குப் பெறும் கூலி, தினம் அவள் எட்டு மணி நேரம் வேலை செய்தால் அவள் வாழ்வதற்கு எவ்வளவு தேவைப்படுமோ அதற்கு ஏற்றபடி இருக்கவேண்டும். அந்தத் தொகை என்னவாக இருக்கவேண்டும் என்பது, நூற்போர் சம்பாதிக்கும் கூலியில் அதிகரிப்பு இருக்கவேண்டும் என்பதைப் போல இச்சமயத்திற்கு அவ்வளவு முக்கியமான விஷயம் அன்று. இனிமேல் அகில இந்திய நூற்போர் சங்கத்தின் அறிக்கையில், அதில் காணப்படும் காலத்தில் கதர் விலையில் எவ்வளவு குறைப்பு செய்யப்பட்டிருக்கிறது என்பதைச் சொல்ல வேண்டிய தில்லை. ஆனல், நூற்போரின் கூலியில் எவ்வளவு அதிகரிப்பு செய்யப்பட்டிருக்கிறது என்பதைச் சொல்லுவதில் அவர்கள் பெருமை கொள்ளவேண்டும். நெய்பவர்கள் பெறும் கூலியின் அளவுக்கு நூற்போரின் மணிக் கூலியை அதிகரித்துவிட்டா லன்றி அச்சங்கம் திருப்தியடைய முடியாது; நான் திருப்தி யடையமாட்டேன். கதர்த் துணி வாங்கும் பொதுமக்கள், அந்தப் பெரிய தரும காரியத்தில் தாங்கள் பெயர் கூறப்படாத தரும கர்த்தாக்கள் என்பதையும், நூற்பவர்கள் தங்களால் பராமரிக்கப் பட வேண்டியவர்கள் என்பதையும் நினைவில் வைக்க வேண்டும். இந்த உறவு உணரப்பட்டு விடுமானல், மிக அதிக அளவில் கதரின் அபிவிருத்தி உயருவதில் எந்தவிதமான கஷ்டமும் இராது. கதர் அன்பர் ஒவ்வொருவரும் தமது கடமையை உணர்ந்து, பொது மக்கள் கதருக்கு அதிக விலை கொடுத்து வாங்கவே மாட்டார்கள் என்று கதர் ஊழியர்களிடையே நம்பாதவர்களாக இருப்போரின் பயத்தைப் பொய்யாக்குவார் களாக!!!

—'ஹரிஜன்' – 10—8—1935

## 6

# தனிப்பட்ட உற்பத்தியாளர்கள்

கதர் உற்பத்தியில் வேலை செய்து வரும் நூற்போருக்கும் மற்றவர்களுக்கும் அதிகக் கூலி கொடுப்பது என்ற புதிய கொள்கை உருவாகிக்கொண்டு வரும்போது, அத்தாட்சி பெற்ற தனிப்பட்ட உற்பத்தியாளர்களின் பிரச்னையைக் குறித்துத் தீவிர மாகக் கவனிக்கவேண்டியதாகியிருக்கிறது. அதிகமான கதர் உற் பத்திக்குப் பொறுப்பாளிகளாக இருப்பவர்கள் அவர்கள். ஊதி யம் சம்பாதிக்கிறவர்கள் விஷயத்தில் கடமைப்பட்டிருப்பதைப் போன்று இவர்கள் விஷயத்திலும் சங்கம் கடமைப்பட்டிருக் கிறது. அவர்களுடன் செய்துகொண்டிருக்கும் ஒப்பந்தங்களைக்

கிரமமாக நிறைவேற்றியாக வேண்டும். ஆனால், கடமை அத்தோடு முடிந்துவிடுகிறது. நூற்பவர்களின் நிலைமை நாளாவட்டத்தில் அபிவிருத்தியாகிக் கொண்டு வர வேண்டும். நூற்போர் சங்கத்தின் ஸ்தாபனம் முழுவதும் நூற்போரின் தருமகர்த்தா ஸ்தாபனமாக இருப்பதுடன், அந்த வகையில் நடத்தப்படவும் வேண்டும். முக்கியமாக நூற்போரின் நன்மைக்காகவே தனிப்பட்ட உற்பத்தியாளர்கள் அத்தாட்சி அளிக்கப்பட்டிருக்கின்றனர். நூற்போருக்குச் சேவை செய்வதன் மூலம் அவர்கள் தங்கள் லாபத்தைப் பெறவேண்டும். அதைவிட்டு, அவர்களும் மற்றவர்களும் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள் என்று நாம் கண்டுபிடித்திருப்பது போல, நெசவாளரின் கஷ்டத்தில் அவர்கள் லாபமடையக்கூடாது.

சங்கத்தின் நேரடியான ஏஜெண்டுகளுக்குச் சமமான நிலையில் அவர்கள் தங்களையும் வைத்துக்கொள்ளுவதானால், கொடுத்திருக்கும் அத்தாட்சியை வாபஸ் பெற்றுவிட வேண்டியதில்லை. அவர்கள் அப்படிச் செய்வதானால் அவர்களுடைய வேலைகளின் முறையில் தீவிரமான மாறுதல்களைச் செய்துகொள்ள வேண்டும். தங்கள் லாபம் குறைவதில் அவர்கள் திருப்தியடைய வேண்டும். அவர்கள் நஷ்டமடையவும் நேரலாம். சங்கத்தின் தேவைகளை அனுசரித்துத் தங்களிடம் இருக்கும் நூற்போர் முதலிய கூலி வாங்குவோரின் பதிவு ஏடுகளை அவர்கள் வைத்துக்கொள்ள வேண்டும். தாங்கள் கூலி கொடுத்திருப்பதை நிரூபிக்க அத்தாட்சிகளைக் காட்ட வேண்டும். அவைகளைக் குறித்துப் புள்ளி விவரங்களைச் சேகரித்துக் கொடுத்து வர வேண்டும். இது அவர்களுக்குக் கொஞ்சம் கஷ்டமானதாக இருக்கலாம். கதர் விலையில் அதிகரிப்பு ஏற்படக் கூடியதால் விளையக்கூடிய கஷ்டம் அவர்களால் தாங்க முடியாததாகவும் இருக்கக்கூடும். லாபத்திற்காகச் சந்தேகத்திற்கிடமின்றி இப்பொழுது அதிகக் கஷ்டப்பட்டு வேலை செய்ய வேண்டியிருக்கும். இவர்களுக்குச் சங்கத்தின் விதிகள் அதிகக் கண்டிப்பானவைகளாக இருக்கின்றன என்றும் தோன்றலாம். அப்படி நினைக்கிறவர்கள் இப்பொழுதிலிருந்தே தங்கள் கதர் வியாபாரத்தை நிறுத்திவிட ஆரம்பிக்க வேண்டும். கதர் வேலையைத் தொடர்ந்து செய்ய விரும்புகிறவர்கள் சங்கத்தின் ஏஜெண்டுகளுடன் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டும். நிபந்தனைகளின்படி நடப்பதில் கொஞ்சம் அசட்டையாக இருந்துவிட்டாலும், அத்தாட்சிகள் ரத்துச் செய்யப்பட்டுவிடும் என்பதை அவர்கள் மாத்திரமே அறிய வேண்டும். லாபமோ, நஷ்டமோ சங்கத்துடன் தங்களுடைய ஒப்பந்தத்தைத் தொடர்ந்து வைத்துக்கொள்ளுவதற்கு அத்தியாவசியமான நிபந்தனை, மிகக் கண்டிப்பான யோக்கியப் பொறுப்புதான். ஆகையால், கதர் அன்பர்களும், தரித்திர நாராயண நண்பர்களும், அவர்களுக்காக நஷ்டப்படுவதையும் பொருட்படுத்தாதவர்களும் மாத்திரமே தொடர்ந்து இருந்து வரவேண்டும். தங்கள்

சொந்த உடைக்காகவும், வீடுகளிலும் கதரை உபயோகிக்காதவர்கள், ஒப்பந்தத்தைத் தொடர்ந்து வைத்துக்கொண்டு விடலாம் என்று நம்பிக்கை வைக்க வேண்டாம்.

—'ஹரிஜன்' – 7—9—1935

# 7

# குறைந்த பட்சக் கூலி

இந்தப் பெயர் குறிப்பிடுவதைப் போன்று மிகக் குறைந்த கூலி பெறும் தொழிலாளரான நூற்போருக்காகப் பாடுபடுவது, அவர்களுடைய வாழ்க்கை நிலைமையை உயர்த்துவது நமது லட்சியமாகும். ஆகையால், அவர்களுடைய நிலைமையில் அபிவிருத்தியான முன்னேற்றத்தை நாம் காட்டியாக வேண்டும். ஆரம்பத்தில் நான் சொன்ன முறையை இப்பொழுது நீங்கள் ஞாபகத்தில் வைக்க வேண்டும். வீட்டுக்கு ஒரு ராட்டையும், ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு தறியோ, தறிகளோ இருக்க வேண்டும் என்று நான் சொன்னேன். இம்முறை அன்று இருந்ததைப் போன்றே இன்றும் பொருந்தும். இதுதான் சுயதேவைப் பூர்த்திக் கதர் லட்சியம். என் கருத்தின்படி நீங்கள் நடப்பதாக இருந்தால், நூற்போரின் கதரை விற்பதைவிட அதை அவர்கள் தங்கள் சொந்த உபயோகத்திற்குத் தயாரிப்பதன் மூலம் நூற்போருக்கு நீங்கள் சேவை செய்யும்படி செய்வேன். நமக்கு வேண்டிய சப்பாத்திகளை நாம்தான் தயாரித்துக் கொள்ளுகிறோம்; கிராமங்களில் ஹோட்டல்கள் இல்லை. அதே போல் எல்லாக் கிராமவாசிகளும் தங்களுக்கு வேண்டிய கதரைத் தாங்களே தயாரித்துக்கொள்ள வேண்டும். அவர்கள் அதிகப்படியாகக் கதரை உற்பத்தி செய்யமாட்டார்கள் என்பதல்ல. ஆனால், அப்படி உற்பத்தி செய்வது, இருக்கும் கிராக்கியை மாத்திரமே பொறுத்தது. நம் கதர் வேண்டும் என்று விரும்பும் நகர மக்களிடம் நாம் நிச்சயம் ஆர்டர்களை வாங்கலாம். அன்றாட வாழ்க்கையின் தேவைக்கு வேண்டியதை அனுசரித்து மணிக்கு இவ்வளவு என்று ஊதியம் கொடுத்துக் கதரைத் தயாரித்துக் கொடுக்கும்படி நாம் செய்யலாம். இதனால், இப்பொழுதுள்ள கதர் விலையில் தாற்காலிகமாகக் கொஞ்சம் அதிகமாகலாம். மக்களின் ஏழ்மையைப் பயன்படுத்திக்கொண்டு இனியும் நாம் வஞ்சிக்க வேண்டியிராது. இது வேண்டுமென்றே செய்யப்படும் சுரண்டல் என்று நான் எப்பொழுதும் சொன்னதில்லை. சென்ற பதினைந்து வருடங்களாக நாம் செய்து வந்திருப்பவைகளுக்கெல்லாம் முழுப் பொறுப்பையும் நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். நாம் செய்திருப்பவை தவிர்க்க முடியாதவை. ஆனால், நாம் இப்பொழுது

ஒரு புதிய மாறுதலைச் செய்தாக வேண்டும். பாட்டாளி மக்களைப் பல நூற்றாண்டுகளாக அலட்சியம் செய்து வந்திருக்கிறோம். அவர்களிடம் வேலை வாங்கிக்கொள்ளும் உரிமை நமக்குத்தான் உண்டு என்ற அகம்பாவம் கொண்டும் இருந்து வந்தோம். ஆனால், செய்யும் வேலைக்கு இன்ன கூலி வேண்டும் என்று கேட்க அவர்களுக்கு உரிமை இருக்கிறது. நமக்குப் பணம் எப்படி முதலோ அப்படி அவர்களுக்கு உழைப்புத்தான் முதல் என்பது நம் எண்ணத்தில் தோன்றவே இல்லை. அவர்களுடைய தேவைகள், அவர்களுடைய வேலை நேரம், ஓய்வு, அவர்களுடைய வாழ்க்கைத் தரம் ஆகியவைகளைக் கொண்டு இப்பொழுதாவது நாம் சிந்திக்க வேண்டும்.

சிலருக்கு அதிகக் கூலி கிடைப்பதைவிடக் கொஞ்சக் கூலியானாலும் பலருக்குக் கிடைப்பதாக இருப்பதே மேல் என்று நூற்பவர்களே கூறுவார்கள் என்று வாதம் செய்வது வீண் வாதமாகும். சுரண்டுகிறவர்களும், பிறரை அடிமையாக வைத்திருப்பவர்களும் சொல்லுகிற வாதம்தான் இது. அடிமைகளிலேயே, அடிமைச் சங்கிலியே வேண்டும் என்று அதை ஆர்வத்துடன் அணைத்துக்கொண்ட துர்ப்பாக்கியர்களும் இருந்தது உண்டு. ஆனால், அவர்களில் பெரும்பாலானவர்களுக்கு வேலை போய்விடுமே என்று நீங்கள் ஏன் பயப்பட வேண்டும்? அவர்களுக்குச் சிபார்சு செய்ய நம்மிடம் வேறு தொழில்கள் இல்லையா? நூற்பதைவிட நெல் குத்துவதில் நல்ல கூலி கிடைப்பதால் நூற்பதைவிட்டு நெல் குத்தும்படி உற்சாகப் படுத்த ஆந்திராவில் சீதாராம சாஸ்திரி தயங்கவில்லை. நம்மை நாமே ஏமாற்றிக்கொள்ளாமல் இருப்போமாக. அவர்களுடைய தேவையை நமக்கு நாம் நல்ல வாய்ப்பாகச் செய்துகொண்டு விட்டோம். பிரச்னையை அவர்களுடைய நன்மையைக் கொண்டு நாம் கவனித்ததே இல்லை.

—'ஹரிஜன்' – 14—9—1935

# 8

# மூன்று கேள்விகள்

பாரி கட்டாக்கிலிருந்து எழுதியிருக்கும் ஸ்ரீ கோபபந்து சௌத்திரி கீழ்க்கண்ட மூன்று கேள்விகளை அனுப்பியிருக்கிறார்:

'1. சுயதேவைப் பூர்த்திக் கதரில் அதிகப்படியாக இருக்கும் கதருக்கு என்ன விலை இருக்க வேண்டும்?

2. ஒரு கிராமவாசியிடம் பருத்தி இருக்கிறது. ஆனால், அவருடைய குடும்பத்தின் தேவைக்கு வேண்டிய நூலைக் கொடுப்பதற்கு நூற்பவர்கள்

அவரிடம் இல்லை. தம்மிடம் இருக்கும் பருத்தியைத் தம் கிராமவாசிகளிடமோ பக்கத்துக் கிராமவாசிகளிடமோ கொடுத்துத் தமது குடும்பத்திற்குத் தேவையான நூலை நூற்கும்படி செய்ய விரும்புகிறார். அப்பொழுது அவர் என்ன கூலி கொடுப்பது? வர்த்தக ரீதியான கதருக்குக் கொடுக்க யோசிக்கப்படும் வாழ்க்கைக்குப் போதுமான கூலியே இதற்கும் பொருந்துமா? அல்லது அவர்களுக்குள் பரஸ்பரம் ஏற்பாடு செய்துகொள்ளட்டும் என்று விட்டுவிடப்படுமா?

3. நூற்கும் ஒருவருக்குச் சொந்தத்தில் பருத்தி இல்லை. வாழ்க்கைக்கு வேண்டியதற்கு என்று ரொக்கக் கூலிக்கு அவர் நூற்காமல் பருத்திக்காக என்று நூற்கிறார். அதுவும் தம்முடைய துணித் தேவைக்குப் போதுமானதான பஞ்சு சம்பாதிக்கும் அளவுக்கு மாத்திரம் நூற்கிறார். அப்பொழுது அவருக்குக் கொடுக்கும் கூலி எவ்வளவு?''

அகில இந்திய நூற்போர் சங்கத்தின் வழியாகப் போகும் அதிகப்படி கதரின் விலை, அதே மாகாணத்தில் மற்ற எந்தக் கதருக்கும் என்ன விலை இருக்கிறதோ அதுதான் இருக்கும். நகரங்களுக்குத் தேவையான கத்ரைத் தவிர மற்ற கதர் விற்பனையெல்லாம், அந்தக் கதர் எந்த மாகாணத்தில் உற்பத்தியாகிறதோ அங்கேயே இப்பொழுது இருக்கும். ஆகையால், இப்பொழுது இருப்பதைவிடக் கதர் விலை இனி மாகாணத்திற்கு மாகாணம் அதிக வித்தியாசப் படலாம். ஆனால், அதிகப்படியான கதருக்கும், வேறு எந்தக் கதருக்கும் விலையில் வித்தியாசம் இருக்க முடியாது. ஆணோ, பெண்ணோ முழுதும் கதர் அணிபவராக இருந்தாலன்றி அவர்கள் விற்கக் கொண்டு வரும் கதரைச் சங்கங்களோ அல்லது அதன் கிளைகளோ வாங்கிக் கொள்ளப் போவதில்லை. ஆகையால், விற்பனைக்கு வரும் எல்லாக் கதரும் சொந்தத் தேவைக்குப் போக அதிகப்படியாக இருக்கும் கதராகவே இருக்கமுடியும். என்றாலும், சந்திக் கட்டத்தில் இந்த விதியைத் தளர்த்த வேண்டியிருக்கலாம்.

முதல் கேள்வியின் பதிலை அனுசரித்துப் பார்த்தால், சங்கம் சம்பந்தப்பட்ட வரையில் நூற்பவர்கள் எல்லோருக்கும் ஒரே மாதிரியான கூலிதான் என்பதில் எந்தவிதமான சந்தேகமும் இல்லை. ஆனால், நூற்பவர்களுக்குள்ளேயே செய்துகொண்டு விடும் ஏற்பாடுகளைச் சங்கம் கட்டுப்படுத்த முடியாது. அவர்களுடைய பரஸ்பர உறவுகளை அவர்களே ஒழுங்கு செய்து கொள்ள அனுமதித்துவிட வேண்டும். வேறு எந்தவிதமான கொள்கையும் இதில் தோல்வியடைந்துவிடும்.

மூன்றாவது கேள்வி விஷயத்திலும், முதல் இரண்டு கேள்விகள் சம்பந்தமான கொள்கையே பொருந்தும், சங்கம், அது நேரடியாகச் சம்பந்தப்பட்டிருக்கும் காரியத்தில் வாழ்க்கைக்குப் போதுமான குறைந்த பட்சக் கூலியைக் கொடுக்க அது பொறுப்பு வாய்ந்திருக்கிறது என்பதை நினைவில்

வைக்க வேண்டும். அதன் கொள்கை எல்லோருடைய ஆதரவையும் பெற்று, அதனுல் அது பொதுவானதாகி விடுமானுல், யாரும் குறைந்த கூலி கொடுத்துக் காரியத்தைச் செய்துகொண்டு விடுவது என்பது அசாத்தியமானது என்றில்லாவிடினும் அது கஷ்டமானது என்பதில் சந்தேகமில்லை. அகில இந்திய நூற்போர் சங்கத்திற்கும் அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்திற்குமிடையே ஒத்துழைப்பு அதிகச் சக்தி வாய்ந்ததாகி விடுமாகையால், வேறு ஒவ்வொரு பகுதியிலும் கூலிகள், உடனே இவைகளின் தரத்திற்குச் சமமானதாக இருப்பதாகிவிடும். இம்முயற்சி வெற்றி பெறுவது, கதர் வாங்கும் பொது மக்கள் மனமார அளிக்கும் ஆதரவைப் பொறுத்திருக்கிறது. தங்களுடைய வாழ்க்கை எந்த ஏழை மக்களைப் பொறுத்ததாக இருக்கிறதோ அந்த ஏழை மக்களைத் தாங்கள் இனியும் சுரண்டிக் கொண்டிருக்கக் கூடாது என்பதை அவர்கள் உணர்ந்துகொண்டு விடுவார்களாயின், வேலையில்லாக் கஷ்டம், அரைப் பட்டினிப் பிரச்னைகளெல்லாம் தானே தீர்ந்துவிடும்.

—'ஹரிஜன்' – 5-10-1935

# 9

# சிக்கலான பிரச்னை

நூற்போருக்குக் கொடுக்கும் கூலியை உயர்த்துவது என்ற பேச்சு எழுந்ததுமே, கதர் அன்பர்களுக்குப் பலவிதமான தெளிவில்லாத பயங்களெல்லாம் ஏற்பட்டிருக்கின்றன. உதாரணமாக, 'கதர் விலை ஏறிவிடுவதால் பொது மக்களிடம் கதருக்குக் கிராக்கியே இல்லாது போய்விடும்' என்று அஞ்சுகிருர்கள். கதர் விலையில் ஏற்படுத்தியாக வேண்டிய சிறு உயர்வைப் பொது மக்கள் பாராட்டுவார்கள் என்று நான் நம்பிக் கொண்டிருக்கிறேன். விலையைக் குறைப்பதில் அசாதாரணமான முயற்சியை எடுத்துக் கொள்ளுவதுதான் இதுவரையில் சங்கத்தின் நோக்கமாக இருந்து வந்திருக்கிறது. இதனுல், தொடர்ந்து விலை இறங்கிக்கொண்டே போனதன் பலனைப் பொது மக்கள் இதுவரை அனுபவித்து வந்திருக்கிருர்கள். கதரின், விலை, இப்பொழுது இருப்பதைப் போல எப்பொழுதும் இவ்வளவு குறைவாக இருந்ததே இல்லை. என்ருலும், பிரசாரம் இல்லாததனுல் கதர் விற்பனை குறைந்திருக்கிறது. நிர்வாகச் செலவை அதிகரிக்காமல், முறையாகப் பிரசாரத்தை நடத்திக் கொண்டே போனுல், விலையில் அதிகரிப்புச் செய்ய வேண்டியிருந்தாலும் கதர் விற்பனையை அதிகரித்துவிடலாம் என்பதில் எனக்குக் கொஞ்சமும் சந்தேகமே இல்லை.

ஆனால், விற்பனை குறைவாக இருந்தாலும் அதற்கும் நாம் தயாராக இருக்கவேண்டும். பொது ஜனங்களிடம் கதருக்குக் கிராக்கி குறைந்துவிடுமோ என்று பயந்துகொண்டு, நூற் போருக்கு நியாயமாகச் செய்ய வேண்டியதில் சங்கம் தவறக் கூடாது. நூற்பதைக் கொண்டுதான் ஜீவிக்க வேண்டும் என்ற அவசியத்தில் இல்லாத நூற்போரை, அவசியமானால் சங்கம் தனது பட்டியலிலிருந்து நீக்கிவிட வேண்டும். உணவுக்கு வழி செய்து கொள்ளுவதற்கு என்றில்லாமல் ஏதோ கொஞ்சம் புகையிலையோ, வளையல்களோ, அவை போன்றவைகளோ வாங்குவதற்கு உதவும் என்பதற்காக நூற்கிறவர்கள், ஆயிரக் கணக்கில் இல்லை என்றாலும், நூற்றுக்கணக்கில் இருக்கின்றனர். நிர்ப்பந்தம் இருக்குமானால், சோற்றுக்குச் சில செப்புக்காசு களைத் தேட நூற்க வேண்டியிருப்பவர்களுடன் போட்டிக்குப் போகாமல் இருந்துவிடும்படி அவர்களைக் கேட்டுக்கொள்ளலாம். நூற்போரில் மிகப் பெரும்பான்மையோர் சோற்றுக்காக நூற்பவர்கள்தான். ஆகையால், சங்கத்தின் திட்டத்தை அனுசரித்துத் தேவையில் இருப்பவர்கள் யார் என்பதைக்கண்டு கொள்ளுவதுதான் ஊழியர்களுக்கு இருக்கும் பிரச்னை. கொஞ்சம் நிலம் வைத்துக் கொண்டு பிறருக்குக் கூலி கொடுப்பவர்கள், சாதாரணமாக உணவுக்கும் துணிக்கும் முடைப்படாமல் இருப் பவர்கள், சோற்றுக்காக நிலபுலங்களை விற்கவேண்டிய அவசி யத்தில் இல்லாதவர்கள் ஆகியவர்களை நான் கூறும் வகையினரிலிருந்து நீக்கிவிடலாம். ஆனால் அகில இந்திய நூற் போர் சங்கமோ, அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங் கமோ வேலை கொடுக்காவிட்டால் பகுதியோ, முற்றிலுமோ பட் டினி கிடக்க வேண்டியவர்களாக இருக்கும் நிலமில்லாதவர், சொத்து இல்லாதவர் ஒவ்வொருவருக்கும் தினம் அவர்கள் செய் யும் எட்டு மணி நேர வேலைக்குக் குறைந்த பட்சம் வாழ்க்கைக் குப் போதுமானதான கூலியை அளிப்பது என்ற உறுதியளித்து அவர்களுக்கு நூற்கும் வேலையோ அல்லது நூற்பதற்குத் துணை யானதாக இருக்கும் வேறு வேலையோ கொடுப்பதற்குச் சங்கம் தன்னாலான எல்லாவித முயற்சிகளையும் செய்யும். இன்னும் சொல்லுவதானால், வேறு வகையில் ஏதோ ஜீவனம் நடத்திக் கொண்டு போகிறவர்கள் விஷயத்தில் இச்சங்கங்கள் கவலை எடுத்தக்கொள்ளமாட்டா. இது சக்தியில்லாததனாலேயேயன்றி மனமில்லாததனால் அன்று. இச்சங்கங்கள் மேற்கொண்டிருக் கும் வேலையில் முழு வெற்றியையும் அடைந்துவிடுமானால், அவை தமது லட்சியத்தை நிறைவேற்றிக் கொண்டதாவதோடு கஷ்டத் திலிருக்கும் மற்றவர்கள் எல்லோருக்குமே மறைமுகமாக உதவி செய்ததாகும். அவர்களுடைய வாழ்க்கையைக் கதியற்ற நிலையிலிருந்து பிரகாசமான நம்பிக்கை நிலைமைக்கு மாற்றிய தாகவும் ஆகும்.

—'ஹரிஜன்' – 5—10—1935

# 10

# கதரில் நெருக்கடி

நூற்போர் சங்கத்தின் நிர்வாக சபை, அதனுடைய கதர்க் கொள்கையில் செய்ய வேண்டிய மாறுதலைக் குறித்துக் காந்திஜி சொன்ன யோசனையை ஆலோசிப்பதற்காக மிகுந்த பக்தியுடன் கூடினார்கள். அதன் உறுப்பினர்களில் ஒருவர் கூறியது போல, சென்ற பதினைந்து ஆண்டுகளில் நடந்த கூட்டங்களிலெல்லாம் இதுவே மிக முக்கியமான கூட்டம். கதர் உற்பத்தியில் ஈடுபட்டிருக்கும் எல்லாத் தொழிலாளருக்கும் வாழ்க்கைக்குப் போதுமானதாகக் கூலியைக் கொடுக்க வேண்டும் என்ற யோசனை, அச்சபையின் ஒவ்வொரு உறுப்பினரும் ஒப்புக்கொண்டதைப் போன்று, மிகவும் சாதாரணமானது. இக்கொள்கை, அதனளவில் ஆட்சேபிக்க முடியாதது. ஆனால், அதை நடத்திக் கொண்டு போவது மிகவும் சிக்கல் நிறைந்ததாக இருக்கும் என்று சிலர் கருதினார்கள். புதிய கொள்கை அப்பொழுதே மகாராஷ்டிரத்தில் அமுலுக்கு வந்துவிட்டது. ஆகையால், கொஞ்சம் பொறுத்திருந்து அந்த மாகாணத்தின் அனுபவத்தைப் பயன்படுத்திக்கொள்ளலாம் என்று சிலர் விரும்பினார்கள். ஒரு மாகாணத்தில் உற்பத்தியாகும் கதர், அந்த மாகாணத்தில் தான் விற்பனையாக வேண்டும் என்று ஒதுக்கிவிடுவதனால் கதரை விற்பதற்கு இடம் தேடுவதில் கஷ்டம் ஏற்பட்டுவிடும் என்று சிலர் பயந்தார்கள். இப்பொழுது இருக்கும் நிலைமையிலேயே விற்பனை குறைந்துகொண்டு போவதால், இதைவிட இன்னும் அதிகச் சாதகக் குறைவான நிலைமையில் விற்பனை மறைந்தே போய்விடத்தான் நேரும் என்றார்கள். ஆந்திரா போன்ற மாகாணத்தில் இன்று குறிப்பிட்ட விலைக்கு நயமான ரகக் கதர் கிடைக்கும்போது, புதிய நிலைமைகளின் கீழ் அதே விலைக்கு முரடான கதரை விற்பது என்பது முடியாத காரியம் என்றனர். புதிய கொள்கையின்படி மேலான நுட்பத் திறமையும், அதிகக் கவனமும், விவரங்களை அதிகமாகக் கவனிப்பதும் அவசியமாகிறது. ஆகையால், உற்பத்தித் துறை குறுகுவதால் நிர்வாகச் செலவு குறையாததோடு அதற்கு ஏற்றபடி அதிகமாகும். இவ்விதம் புதிய கொள்கையின்படி வேலை செய்வதில் ஒவ்வொன்றிலும் நஷ்டமடைய வேண்டி நேருவது தவிர்க்க முடியாததாகும். இந்த நஷ்டத்தையும் கதர் வாங்குகிறவர் கொடுக்கும்படி செய்து, நூற்போருக்கு அதிகக் கூலி கொடுப்பதனால் விலை அதிகமாவதற்கு மேல் கதர் இன்னும் அதிக விலையுள்ளதாகச் செய்யப்படுமா? சோதனைகள் செய்யலாம், செய்யப்படலாம். ஆனால், பிறகு ஊழியர்கள் வரவு செலவைச் சரிக்கட்டிவிடுவார்கள் என்று எதிர்பார்க்காதீர்கள். இப்படியெல்லாம் சொன்னார்கள்.

புதிய கொள்கையைக் குறித்துக் காந்திஜி மேலும் தெளிவாக எடுத்துக் கூறி இந்த ஆட்சேபங்கள், சந்தேகங்கள், கஷ்டங்கள் ஆகியவைகளுக்கெல்லாம் சரியான சமாதானம் கூற முயன்றார்.

அவர் கூறியதாவது:

"வீணான, ஆன்மாவைக் கொல்லுவதான பொருளாதாரத்துடன் போட்டிபோடும் எண்ணத்தை நம் மனத்திலிருந்து ஒரேயடியாக ஒழித்துவிட வேண்டும். ஜப்பானியத் துணிகள் எவ்விதச் சூழ்ச்சியான வகையில் நம் கடைகளில் வந்து குவிகின்றன என்பது உங்களுக்குத் தெரியுமா? ஐந்து ஆண்டுகளுக்கு முன்னால் சில ஆயிரம் கெஜம் ஜப்பான் துணி வந்து கொண்டிருந்தது. இன்று லட்சக்கணக்கான கெஜத் துணியாகி விட்டது. இவற்றுடன் நீங்கள் எப்படிப் போட்டி போட முடியும்? முடியாது. இந்தப் போட்டியைச் சமாளிப்பதற்கு என்று விலையைக் குறைக்க இனி நாம் முயற்சி செய்யவே கூடாது. இத்தனை ஆண்டுகளாக நாம் துணி வாங்குவோர் நன்மையைத்தான் எண்ணி வந்தோமேயன்றி நூற்போரைக் குறித்துக் கொஞ்சமும் எண்ணவில்லை. இச்சங்கம் நூற்போர் சங்கமேயன்றித் துணி வாங்குவோர் சங்கம் அல்ல என்பதையும் மறந்துவிட்டோம். நாம் நூற்போரின் உண்மையான பிரதிநிதிகளாக இருக்க வேண்டும்; ஆனால், அவ்வாறு இருக்கத் தவறி விட்டோம். இதன் பலனாக நாம் எப்படியோ வேலை நடத்திக் கொண்டு வந்து, ராஜீயக் கொந்தளிப்புகளை நம்பி, ஒரு வகையான சூதாட்டத்திலேயே ஈடுபட்டு வந்திருக்கிறோம். 'நீங்கள் கொடுத்துக்கொண்டு வரும் ஆடம்பரமான விளம்பரங்களினால் என்ன பயன்?' என்று ஜெராஜனியைக் கேட்டேன். 'வேலையில்லாது திண்டாடும் நடுத்தர வகுப்பினருக்கு வேலை கொடுப்பதற்காகவே இந்த ஸ்தாபனத்தை நடத்திக்கொண்டிருக்கிறோம் என்ற குற்றச்சாட்டை நியாயமாக்குவதில்தான் நாம் சீக்கிரம் முடிவோம்' என்றும் சொன்னேன். இதனாலேயே நம்மைச் சேர்ந்த மக்களில் அதிகக் கஷ்டத்தில் இருப்பவர்களைச் சுரண்டுவதற்காக நாம் மேற்கொண்டும் நஷ்டமடையக் கூடாது என்று சொல்லுகிறேன். 'நூறு பெண்களுக்குத் திருப்தியான கூலியைக் கொடுப்பதற்காக, ஆயிரக்கணக்கான பெண்கள் வேலை இல்லாமல் செய்துவிடும் ஆபத்தை உண்டாக்கி விடுவீர்கள்' என்று என்னைக் கேட்கிறார்கள். திரும்பத் திரும்ப வரும் முறை ஜுரத்தை ஒழிப்பதற்கு இந்த நெருக்கடியை உண்டாக்கவேண்டியது அவசியம் என்று நான் கூறுகிறேன். வயது வந்த ஒவ்வொரு கிராமவாசியிடமும் ஒரு ராட்டை இருக்க வேண்டும், ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு தறி இருக்கும்படி செய்ய வேண்டும் என்பதுதான் நமது லட்சியம். கோடிக்கணக்கான ரூபாய்க்கு நாம் கதரை உற்பத்தி செய்திருக்கலாம். ஆனால், நாம் நமது லட்சியத்திற்

குக் கிட்டத்தில்கூட இன்னும் போய்விடவில்லை. நகரங்களை யும், நகரங்களில் கதர் வாங்குகிறவர்களையும் மறந்துவிடும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். நமது முப்பது கோடி கிராம வாசிகள், தங்கள் சொந்தக் கதரை உற்பத்தி செய்து, உபயோகிக் கும்படி செய்வதில் முழுக் கவனத்தையும் செலுத்துங்கள். நகரங் களில் வசிக்கும் ஒரு கோடிப் பேர் தாமே கதர் அணிய ஆரம் பித்துவிடுவார்கள். தாற்காலிகமான மந்தத்தையோ, வீழ்ச்சி யையோ பொருட்படுத்தாதீர்கள். கிராக்கி இல்லை என்றால், விற் பதற்கு உற்பத்தி செய்ய வேண்டாம். உங்கள் கதர்க் கடைகள் நஷ்டத்தில் வேலை செய்யும் இடங்களில் அவற்றை மூடிவிடுங்கள். உங்கள் கதர் வேண்டும் என்று விரும்புகிறவர்களுக்கு, அவர்களுக் காகத் தயார் செய்து கொடுக்க நீங்கள் தயாராக இருப்பதா கவும், ஆனால் புதிய விலையில்தான் கொடுக்க முடியும் என்றும் சொல்லி விடுங்கள்.

''ஆனால், என்னுடைய யோசனையை உங்கள் மீது திணிக்க நான் விரும்பவில்லை. இதில் உங்களுக்கு நம்பிக்கை ஏற்படா விட்டால் இதை நீங்கள் நிராகரித்துவிடலாம். உங்களால் தாங்க முடிவதற்கு அதிகமான பாரத்தை உங்கள் தோள்களில் சுமக்க முற்படாதீர்கள். இருக்கும் துணிக்கு ஏற்றபடி சட்டையைத் தைத்துக்கொள்ளுங்கள். சாவ்லியில் இருக்கும் கதர் உற்பத்தி நிலையத்தில் புதிய கூலி நிபந்தனைகளுக்குப் பொருத்தமான நூற் போர்கள் இப்பொழுதே இருக்கிறார்கள்; தினம் இரண்டணா முதல் மூன்றணா வரை சம்பாதிக்க ஆரம்பித்திருக்கிறார்கள் என்று உங்க ளுக்குக் கூறுகிறேன். எங்கெங்கு சாத்தியமோ அங்கெல்லாம் சுயதேவைப் பூர்த்திக் கதர் உற்பத்தியில் கவனத்தையெல்லாம் செலுத்துங்கள். அதிலிருந்து நல்ல கதர் சூழ்நிலை வளரும். உதா ரணமாகக் கத்தியவாரில் பல கதர் உற்பத்தி நிலையங்களை நடத் தவும், அதனால் உற்பத்தியாகும் கதரின் விற்பனையை அதிகரித்து விடவும் மிகத் தீவிரமான முயற்சிகளைக் கொஞ்ச காலம் செய் தார்கள். இப்பொழுது அதையெல்லாம் கைவிட்டுவிட்டனர். ஸ்ரீ சங்கரலால் பாங்கருக்குக் கிடைத்திருக்கும் பதில்களில், கத் தியவார்க் கிளையின் காரியதரிசி எழுதியிருப்பதும் ஒன்று. அந்த நிலையத்தில் உற்பத்தியாகும் கதர் முழுவதும் சுயதேவைப் பூர்த்திக் கதராகவே இருப்பதால், புதிய கொள்கையைக் குறித் துத் தாம் கூறக்கூடிய குறைபாடோ, அபிப்பிராயமோ எதுவும் இல்லை என்று அவர் எழுதியிருக்கிறார்.''

இந்த விவாதத்தின் பலனாக ஒரு தீர்மானம் (அது கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது) ஏகமனதாக நிறைவேறியது. புதிய கொள்கையை அது விவரமாக விளக்குகிறது. எல்லா இடங்களி லுமிருக்கும் ஊழியர்களுக்கு விரிவான யோசனைகளையும் தீர்மா னம் கூறுகிறது.

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]

மகன்வாடியில் காந்திஜியின் தலைமையில் 11, 12, 13,–ஆம் தேதிகளில் நடந்த அகில இந்திய நூற்போர் சங்கத்தின் நிர்வாக சபையில் கீழே கொடுக்கப்பட்டிருக்கும் முக்கியமான தீர்மானம் நிறைவேறியது :

## (1)

நூற்போருக்கு இப்பொழுது கொடுக்கப்படும் கூலி போதுமானதாக இல்லை என்று இச்சபை கருதுகிறது. ஆகையால், கூலியை உயர்த்தித் தகுதியான நிலையை நிர்ணயிக்க வேண்டும் என்று தீர்மானிக்கிறது. எட்டு மணி நேரத் திறமையான வேலை என்ற அடிப்படையில் கணக்கிட்டு நூற்பவர்கள் குறைந்த பட்சக் கூலியையாவது பெறவேண்டும். அப்படிக் கொடுக்கும் கூலி, விஞ்ஞான ரீதியில் குறைந்த பட்சம் வேண்டியதாகக் கூறப்படும் உணவுத் தேவையை அனுசரித்துச் சாப்பாட்டுக்கும் துணிக்கும் (வருடத்திற்கு 20 கெஜம்) குறைந்த பட்சம் போதுமானதாக இருக்க வேண்டும். நூற்கும் ஒவ்வொரு குடும்பமும், அதில் வேலை செய்கிறவர்களின் வருமானத்தைக் கொண்டு சரியானபடி ஜீவனம் நடத்துவது சாத்தியமாகும் நிலையை அடையும்படி செய்வதாகக் கிரமமாகச் சம்பள விகிதம் உயரும்படி செய்வதில் சந்தர்ப்பத்திற்கு ஏற்றாற்போலச் சம்பந்தப்பட்டவர்கள் யாவரும் முயற்சி செய்யவேண்டும்.

## (2)

மேலே கண்ட திட்டத்தில் கண்ட கொள்கையை நிறைவேற்றுவதில் அகில இந்திய நூற்போர் சங்கத்தின் ஊழியர்களுக்கு வழிகாட்டுவதை முன்னிட்டுக் கீழே சில விதிகள் கொடுக்கப்படுகின்றன. மேற்கொண்டு ஏற்படும் அனுபவத்தைக் கொண்டு இச்சபை பிறகு மாற்றும் வரையில் இவையே சங்கத்தின் முடிவான கொள்கைகள் என்று சங்கத்தின் எல்லாக் கிளைகளும், இணைந்து வேலை செய்து வரும் ஸ்தாபனங்களும், வேறு தொடர்பு கொண்டவைகளும் கருத வேண்டும் :

1. இந்தியாவில் ஒவ்வொரு குடும்பமும் தேவையான துணி விஷயத்தில் கதரின் மூலம் சுயதேவைப் பூர்த்தி செய்துகொள்ளும்படி செய்ய வேண்டும் ; பருத்தி சாகுபடி செய்வதிலிருந்து அதைக் கதராக நெய்யும் வரையில், பருத்தி சம்பந்தமான பல வேலைகளிலும் ஈடுபட்டிருக்கும் மற்றவர்களிலும், கதர்த் தொழிலாளரிலும் நூற்பவர்களே மிகக் குறைவான கூலி பெறுகிறவர்களாக இருப்பதால் அவர்களுடைய நலனை வளர்ப்பதும் இச்சங்கத்தின் வேலையாகும்.

2. எல்லாக் கிளைகளும், இணைந்துள்ள ஸ்தாபனங்களும், எல்லாவித நஷ்டங்களையும் தவிர்க்கும் வகையில் திட்டத்தை நிறைவேற்ற வேண்டும். உடனடியாகவுள்ள அக்கம் பக்கத்திலிருந்து குறிப்பிட்ட அதன் பிரதேசத்தின் தேவைக்கு மாத்திரம் என்ற வகையில் அவற்றின் உற்பத்தியைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும்; மற்ற மாகாணங்கள் தங்கள் தேவையைப் பூர்த்தி செய்யும்படி கேட்டாலன்றி தங்கள் மாகாணத்திற்கு அப்பால் செல்லக்கூடாது.

3. ஆகையால், கதர் உற்பத்தித் தொழிலில் ஈடுபட்டிருக்கிறவர்கள் எல்லோரும், தொழிலாளராயினும், விற்பவர்களாயினும், மற்றவர்களானாலும், தங்கள் துணித் தேவைக்கு மற்ற எல்லா ரகத் துணிகளையும் நீக்கிவிட்டுக் கதரை மாத்திரமே உடுத்த வேண்டியது மிகவும் அவசியமாகும்.

4. உற்பத்தி அதிகப்படியாகிவிடுவதைத் தவிர்ப்பதைக் முன்னிட்டு உற்பத்தியாளர்கள், வருடம் முழுவதிலுமோ, வருடத்தில் ஒரு பகுதிக் காலமோ தங்களுடைய அன்றாட ஜீவனத்திற்கு நூற்பது ஒன்றையே நம்பியிருப்பவர்களான நூற்பாளர்களுக்கு மாத்திரம் வேலை கொடுப்பது என்று தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளலாம். கிளைகளும் மற்ற ஸ்தாபனங்களும், தங்களிடம் வேலை செய்யும் நூற்பவர்கள், மற்றத் தொழிலாளர்கள் ஆகியவர்களைப் பதிவு செய்து சரியான பட்டியல் வைத்திருப்பதோடு அவர்களிடம் நேரடியான சம்பந்தம் வைத்துக்கொள்ள வேண்டும். கொடுக்கப்படும் கூலி, உணவுக்கும் உடைக்குமே நிச்சயமாகச் செலவாகும்படி செய்வதற்காகக் கூலியின் ஒரு பகுதியையோ, முழுவதையுமோ பொருளாக அதாவது கதர் அல்லது வாழ்க்கைக்கு அவசியமான மற்றப் பொருளாகக் கொடுக்க வேண்டும்.

5. ஒன்றுக்கு அதிகமான கதர் உற்பத்தி ஸ்தாபனங்கள் இருக்கும் இடங்களில், அதிகப்படியாவதையும், அவசியமில்லாத போட்டி அல்லது இரட்டிப்புச் செலவு ஆகியவை நேருவதையும் தவிர்ப்பதற்காக, ஒவ்வொரு ஸ்தாபனமும் வேலை செய்ய வேண்டிய இடம் இன்னதுதான் என்பதை முன்னடியே தெளிவுபடுத்திவிட வேண்டும். தனிப்பட்ட அத்தாட்சி பெற்ற உற்பத்தியாளர்களுக்குச் சங்கம் ஆதரவு கொடுக்காது. இதற்கு முன்னாலேயே அத்தாட்சி அளிக்கப்பட்டிருப்பவர்களில், சங்கத்தின் கிளைகளுக்கு அமுலாகும் அதே விதிகளுக்குக் கண்டிப்பாக உட்பட்டு நடந்து, சங்கத்திடமிருந்து எந்தவித உதவியையும் எதிர்பாராமல் எந்த நஷ்டத்திற்கும் தயாராக இருப்பவர்களுக்கு மாத்திரமே அத்தாட்சி புதுப்பித்துக் கொடுக்கப்படும். அதுவும் அப்போதைக்கப்போது செய்யப்படும் விதிகள், பிறப்பிக்கப்படும் அறிவிப்புகள் ஆகியவைகளில் எதையாவது மீறி

நடந்துவிட்டால் அத்தாட்சிகள் தாமே வாபசாகிவிடும் என்ற கண்டிப்பான அறிவிப்பின் பேரிலேயே அத்தாட்சிகள் புதுப்பிக் கப்படும்.

6. சுயதேவைக் கதர்த் திட்டத்தை வளர்க்க வேண்டியதே சங்கத்தின் கீழ் வேலை செய்யும் எல்லா ஸ்தாபனங்களின் முக்கியமான, தவிர்க்க முடியாத கடமை என்பதை அறிய வேண்டும். நகரங்களின் தேவைக்கோ அல்லது நகரங்களுக்கு வெளியில் தாங்களே நூற்காமல் கதர் கட்டுபவர்களாக இருப் போரின் தேவையைப் பூர்த்தி செய்யவோ கதர் உற்பத்தி செய்வது என்பது அடுத்தபடியான அல்லது துணையான கடமை யாகும். அத்தகைய கதரை உற்பத்தி செய்யவோ, விற்கவோ எந்த ஸ்தாபனமும் கடமைப்பட்டிருப்பதாகக் கருதப்பட மாட்டாது.

—'ஹரிஜன்'–19—10—1935

# 11

# நூற்போரின் கூலி-1

வார்தாவில் 23, 24-ஆம் தேதிகளில் நடந்த அகில இந்திய நூற்போர் சங்கத்தின் நிர்வாக சபை, கீழ்க்கண்ட முக்கியமான தீர்மானங்களை நிறைவேற்றியிருக்கிறது:

"நூற்போருக்கும் மற்றக் குறைந்த கூலி பெறும் தொழிலாளருக்கும் கிரமமாகக் கூலியை அதிகரித்துக் கொடுக்கும் புதிய முறை, நூற்பவர்களின் கூலியில் உயர்வை உண்டாக்கியிருப்பதோடு பெரும்பாலான கதர் ஊழியர்கள் எதிர்பார்த்ததற்கு அதிகமாகவே பொதுவாக வெற்றியடைந்திருப்பதை இச் சபை அதிகத் திருப்தியுடன் குறிப்பிடுகிறது. நம்பிக்கை இருக்கும் மாகாணக் கிளைகள், மேற்கொண்டும் கூலி உயர்வைச் சீக்கிரமாக அமுலுக்குக்கொண்டு வரும் நோக்கத்துடன் யோசனையைச் சமர்ப்பிக்கும்படி இச்சபை ஆலோசனை கூறுகிறது."

"சென்ற வருடத்தில் புதிய திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்ததால் விலைகள் அதிகரித்ததன் காரணமாகச் சேர்ந்திருக்கும் அதிகப் பணத்தை, நூற்பவர்களுக்கும் மற்றத் தொழிலாளருக்கும், இன்னும் அதிகச் சிறப்பான ராட்டைகளையும் மற்ற அவசியமான கருவிகளையும் அளிப்பதன் மூலம் நூற்போரின், மற்றத் தொழிலாளரின் திறமையை அதிகரிப்பதற்கும், பயிற்சியளிப்போருக்கு அவர்களுடைய வேலையின் அவசியமான துறைகளில் விஞ்ஞான ரீதியில் பயிற்சியை அளித்து அவர்களைத் தயார் செய்வதற்கும் உபயோகிக்கலாம் என்று இச்சபை தீர்மானிக்கிறது. அகமதாபாத்திலுள்ள தலைமைக் காரியாலயம் இதில் சரியான நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். வேலையைப் பற்றிய யோசனைகளைக் கூடிய சீக்கிரத்தில் அனுப்பி வைக்கும்படி மாகாணக் கிளைகள் கேட்டுக்கொள்ளப்படுகின்றன."

இத்திட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டபோது இது வெற்றி பெறுமா என்பதைக் குறித்து அநேக ஊழியர்களுக்கு அதிகச் சந்தேகம் இருந்தது. கதரின் விலை ஏறுவதால், அதன் விற்பனை பாதிக்கப்பட்டுவிடும் என்று எண்ணினர்கள். அனுபவம், அந்தப் பயத்தையெல்லாம் போக்கிவிட்டது. நடவடிக்கை எடுக்க முடிந்தால், சீக்கிரத்திலேயே இன்னும் ஒரு படி மேலே போகும் நடவடிக்கையை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று இச்சபை ஆவலுடன் இருக்கிறது. ஆகையால், மேற்கொண்டும் ஒரு படி போவதில் அவசரம் இருக்க வேண்டியதில்லை என்பதோடு இதைக் குறித்து ஊழியர்கள் சோம்பலாக இருக்க வேண்டியதும் இல்லை. எட்டு மணி நேர வேலை செய்யும் ஒரு நாளைக்கு எட்டணுக் கூலி கிடைக்க வேண்டும் என்பதுதான் லட்சியம் என்பதை அவர்கள் அறிய வேண்டும். சாதாரணமாக மூன்றணு அளவுக்குத்தான் நாம் வந்திருக்கிறேம். அதுவும் அதிகரிப்பு, திறமை ஆகியவைகளிடையே சமமாக வினியோகிக்கப்படுகிறது. திறமையால் சம்பாதிப்பது, விற்பனை விலையை நேரடியாகப் பாதிப்பதில்லை. ஏதாவது ஏற்படுகிறது என்ருல், நூற்போரின் திறமை கதரின் ரகத்தை அபிவிருத்தி செய்கிறது. கூலியில் நேரடியான அதிகரிப்பு, விலைகளை அதிகரிக்கிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனல், அந்தச் சுமை தரத்தின் உயர்வால் அடிபட்டுப் போகிறது. பிறகு இந்த விலை அதிகரிப்பு, துணி வாங்கும் ஏழையைக் கொஞ்சங்கூடப் பாதிக்காதவாறு அல்லது மிகக் கொஞ்சமே பாதிக்கும் வகையில் சாமர்த்தியமாக அமைக்கப்பட்டிருக்கிறது. ஊழியர்கள் மாத்திரம் இன்னும் திறமையாகவும், கவனமாகவும், அதிக விசுவாசமாக இருப்பார்களாயின், கதரின் விற்பனை விலையில் அதிகமாக உயர்வு எதுவும் இல்லாமலேயே, தினம் எட்டு மணி நேர வேலைக்கு எட்டணுவை நெசவாளர்கள் எளிதாகச் சம்பாதிக்கும் நாள் சீக்கிரத்தில் வந்து விடும்படி செய்துவிட முடியும் என்பதில் எனக்குக் கொஞ்சமும் சந்தேகம் இல்லை. அதிகமாகும் விஞ்ஞான அறிவு, பஞ்சரைக்கும் கைமணை, பஞ்சடிக்கும் வில், ராட்டை ஆகியவைகளின் உற்பத்தி சக்தியை அதிகரிக்க வேண்டும். நூற்போர் செய்யும் வேலையை அதிகமாகக் கவனித்து வருவது, அதிகத் திறமையும் ஆற்றலும் ஏற்படுத்துவதாக இருக்க வேண்டும். நிர்வாக விவரங்களில் அதிகக் கவனமும், அதிக விசுவாசமும் நிர்வாகச் செலவை அதிகமாகக் குறைத்துவிடும். சுருங்கச் சொன்னல், தினத்திற்கு எட்டணுக் கூலி என்ற நம் லட்சியத்தை இன்னும் அடைய முடியாமல் நாம் இன்று இருப்பதற்கு மூல காரணம், கதர் விஞ்ஞானத்தை நாம் அறிந்துகொள்ளாமலிருப்பதுதான். முயற்சியைத் தூண்டும் நோக்கத்துடனேயே தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது. எப்பொழுதும் கவனத்தோடு இருப்பவருக்கே கடவுளும் உதவுவார்.

—'ஹரிஜன்' — 17—4—1937

# 12

# நூற்போரின் கூலி—2

வார்தாவில் 15-ஆம் தேதி நடந்த அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கூட்டத்தில் நிறைவேறிய தீர்மானத்தின் மொழி பெயர்ப்பு கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

"நூற்போருக்குக் கொடுக்கப்பட்டு வரும் கூலியைக் கிரமப்படி அதிகரிக்க வேண்டியது கடமை என்பதை அகில இந்திய நூற்போர் சங்கம் சென்ற நான்கு ஆண்டுகளாக அறிந்திருக்கிறது. இக்கடமையை நிறைவேற்றி வைப்பதில் சங்கத்தின் மகாராஷ்டிரக் கிளை எல்லாக் கிளைகளையும் விட மிக அதிகமான விகிதத்தைக் கொடுத்திருக்கிறது. ஆனால், இந்தக் கிளை செய்த இந்தப் பரீட்சையின் காரணமாக இந்தப் பளுவைக் கதர் தாங்க முடியாது என்று நிரூபிக்கப்பட்டிருப்பதோடு விற்பனையும் அதிகமாகக் குறைந்து விட்டது. கூலியில் செய்யப்படும் அதிகரிப்பு, வேலையில்லாமல் இருப்பவர்களுக்கு வேலை கொடுக்கக் கதருக்கு இருக்கும் சக்தியைக் குறைத்துவிடுவதாக இருக்கக்கூடாது. இப்பொழுது இருந்து வரும் சந்தர்ப்பத்தை முன்னிட்டு எட்டு மணி நேரம் நூற்பதற்கு மூன்று அணாவுக்கு மேல் கூலி கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்தப்படுவதை ஒத்தி வைத்துவிட வேண்டியது அவசியம் என்று தோன்றுகிறது. வேலையில்லாத் திண்டாட்டம் அதிகமாக இருக்கிறது. எட்டு மணி நேரம் நூற்பதற்கு ஓர் அணாவுக்கும் குறைவாக வாங்கிக்கொண்டு வேலை செய்ய ஆவலுடன் இருக்கும் நூற்பவர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். சங்கம் மேற்கொண்டிருக்கும் இக்கொள்கைக்கு அபாயத்தை உண்டாக்கும் வகையில் அத்தகைய குறைந்த கூலிக்கு வேலை கொடுக்க மற்றவர்கள் தயாராக இருக்கிறார்கள். அவர்களுக்கும் சங்கம் வேலை கொடுப்பதைத் தவிர இத்தீமையைச் சமாளித்துக்கொள்ளுவதற்கு வேறு வழி இருப்பதாத் தெரியவில்லை. இவ்வாறு சங்கத்தின் முன்பு இரு கடமைகள் இருக்கின்றன : ஒன்று, நூற்போரின் கூலியை எட்டு மணி நேர வேலைக்கு எட்டணாவாக உயர்த்துவது. இன்னுமொன்று, வேலையில்லாது கஷ்டப்படும் சகோதரிகளுக்கு வேலை கொடுப்பது. இந்த இரண்டு கடமைகளையும் ஒரே சமயத்தில் நிறைவேற்றிவைப்பதற்கு முன்னால் இடைக்காலம் ஒன்றும் வருகிறது.

"மேலும், நாட்டில் சில பகுதிகளில் பஞ்சம் ஏற்பட்டுவிடக்கூடும் என்ற அபாய நிலைமை இருக்கிறது. அத்தகைய நேரங்களில் மிகச் சிறந்த உதவியாக இருப்பது ராட்டையே என்பது நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், கூலி விகிதத்தை மூன்றணாவுக்கும் குறைவாகச் செய்ய வேண்டியது அவசியமா என்ற பிரச்னை எழுகிறது. வார்தாக் கல்வித் திட்டத்தின்படி பள்ளிக்கூடங்களில் நூல் உற்பத்தியாவதிலிருந்து மூன்றாவது பிரச்னை எழுகிறது. இவையெல்லாம் கவனித்துச் சங்கம் கீழ்க்கண்ட முடிவுக்கு வந்திருக்கிறது :

"பொதுவாக, எட்டு மணி நேரத்தில், குறிப்பிட்ட திட்டப்படியான வேலைக்கு மூன்று அணுக் கூலி என்று இருக்கும் விகிதத்தைத் தற்சமயத்திற்குத் தொடவேண்டியதில்லை. ஆனால், ஏதாவது ஒரு கிளை, இந்த உயர்ந்த கூலி விகிதத்தில் விற்பனையைச் சமாளித்துக்கொள்ளும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுவதானால், அந்தக் கிளை இந்த விகிதத்தைவிட அதிகம் கொடுக்கலாம். பஞ்சப் பிரதேசங்களில் தொழிலாளரின் கூலியைக் குறைக்க வேண்டிய அவசியம் ஏற்படும்போது, முன்கூட்டி காரியதரிசியின் அனுமதியைப் பெற்று அவ்வாறு குறைக்கலாம். பஞ்சப் பிரதேசங்களில் தயாராகும் கதரையும், வார்தாக் கல்வித் திட்டத்தின்படி நடக்கும் பள்ளிக்கூடங்களில் தயாராகும் கதரையும், அத்தகைய கதர்களை விற்பனை செய்வதால் ஏற்படும் நஷ்டங்களை மாகாண அரசாங்கம் ஏற்றுக்கொள்ளுவதாக இருந்தால், அந்தக் கதரையும் சம்பந்தப்பட்ட அரசாங்கங்களிடமிருந்து சங்கம் எடுத்துக்கொள்ள வேண்டும்."

இது முக்கியமான தீர்மானம். நூற்போருக்கு எட்டு மணி நேர வேலைக்கு எட்டு அணுக் கூலி கொடுக்கவேண்டும் என்று நான் சங்கத்தைத் தூண்டிக்கொண்டிருந்த வேகத்தைக் குறைத்துக்கொள்ளுவதையே இத்தீர்மானம் காட்டுகிறது. லட்சியத்தை ஒரே பாய்ச்சலில் அடைந்துவிட முடியாது என்பதை நான் அறிவேன். என்றாலும், ஒவ்வொரு சில மாதங்களிலும் கிரமமான அதிகரிப்பு இருக்கும் என்ற நம்பிக்கை வைத்திருந்தேன். ஆனால், பல கிளைகளிலுமிருந்து வந்திருக்கும் அறிக்கைகளும், என் கண் முன்னால் ஸ்ரீ விநோபாவின் ஆலோசனையின்படி ஸ்ரீ ஜாஜுஜி நடத்திய பரீட்சை ஓர் அளவுக்குத் தோல்வியடைந்திருப்பதும், என் கண்ணைத் திறந்துவிட்டன. கூலியை உயர்த்திக்கொண்டே போகலாம் என்ற மிகுந்த நம்பிக்கையின் பேரில் இப்பரீட்சை நடத்தப்பட்டது. கோடிக்கணக்கான பெண்களுக்கு எட்டு மணி நேர வேலைக்கு எட்டு அணு கூலி கொடுக்க முடியாத அளவுக்கு இந்நாடு பயங்கரமான வறுமையில் இருக்கிறது என்ற திடமான, துக்ககரமான உண்மையைத் தெரிந்துகொண்டேன். பொதுவாகக் கிராமப் பகுதிகளில், கிராமத் தொழிலாளர் யாரும் எட்டு மணி நேர வேலைக்கு எட்டு அணு சம்பாதிக்கவில்லை. மற்றவகைத் தொழிலாளர்கள் அவ்வாறு சம்பாதிக்காமல் நூற்போர் மாத்திரம் எட்டு அணு சம்பாதிக்க முடியாது. நிலைமையில் தீவிரமான மாறுதலின்றி, எல்லோருக்கும் தினத்திற்கு எட்டு அணுக் கூலி கொடுப்பதற்கு வாங்கும் மக்களிடம் பணம் இல்லை. உற்பத்தி எதுவுமே இல்லாத, தாங்க முடியாத ராணுவச் செலவின் சுமை நாட்டை வடித்து வரண்டு போகும்படி செய்கிறது. இது போதாது என்று அதிகாரிகளுக்கு மிக அதிகமான சம்பளமும், அதற்கு ஏற்றாற்போலப் பென்ஷனும் கொடுக்கப்பட்டு வெளி நாட்டில் செலவு செய்யப்படுகிறது. இந்தப் பயங்கரமான வறுமைக்குப் பல உள்நாட்டுக் காரணங்களும் இருக்கின்றன. ஆனால், இக் கட்டுரையை எழுத ஆரம்பித்த நோக்கத்திலிருந்து நான் இன்னொன்றுக்குப் போய்விடக் கூடாது.

காரணம், காரணங்கள் எதுவாகவாயினும் இருக்கட்டும். கதர் வாங்கும் மத்திய தர வகுப்பினருக்கு என்னதான் நல்ல மனம் இருந்தாலும் நூற்போருக்கு, மூன்று அணுவுக்கு மேல் கூலி கொடுப்பதால் கதர் விலையில் ஏற்ற நேர்ந்த அதிக விலையைக் கொடுத்து வாங்குவதற்கு அந்த நடுத்தர வகுப்பினரிடம் பணம் இல்லை. வருந்தத்தக்க இந்த உண்மையை நான் அறியும்படி கதர் ஊழியர்கள் செய்தனர். எப்படியும் இப்போதைக்கு அதுதான் உச்ச விகிதம் என்றும் அவர்கள் கூறுகிறார்கள். இந்த வருந்தத்தக்க நிலைமையை ஒப்புக்கொள்ளுவதுதான் மேற்கண்ட தீர்மானம்.

மாகாண அரசாங்கங்கள் உதவிக்கு வராது போனால், மூன்று அணுக் கூலி விகிதத்தைக் கூடத் தொடர்ந்து கொடுத்துக் கொண்டுவர முடியாது. சட்டம், நிர்வாக முயற்சி ஆகிய இரண்டின் மூலமும் அரசாங்கங்கள் உதவி செய்யலாம். அகில இந்திய நூற்போர் சங்கம், அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கம், ஹிந்துஸ்தானி தாலிமி சங்கம் ஆகியவைகளைத் தங்கள் சொந்த நிபுண, தாமே முன் வந்து செய்யும் சம்பளம் பெறாத ஸ்தாபனங்கள் என்று உபயோகித்துக்கொண்டால்தான் அரசாங்கங்கள் உதவி செய்யலாம். பஞ்சத்தில் அவதிப்படும் கிராம வாசிகளுக்கு, அவர்களுடைய ஒழிந்த நேரத்தில் செய்ய வேலை கொடுப்பதன் மூலம் பல லட்ச ரூபாய்கள் அவர்கள் மடிக்குப் போகும்படி செய்ய இருக்கும் வாய்ப்பை இந்த அரசாங்கங்களுக்கு நான் கூறுகிறேன். கிராமவாசிகள் உற்பத்தி செய்கிறவைகள் உடனுக்குடன் விற்பனையாகாது போனால், எந்த அபிவிருத்தியையும் செய்ய முடியாது.

சேவா கிராமம், 20—8—'39 —'ஹரிஜன்' - 26—8—1939

# 13

# வாழ்க்கைக்குப் போதுமான கூலி

**கேள்வி :** வாழ்க்கைக்குப் போதுமான கூலி கொடுக்கப்படுகிறதா என்பதைக் கவனிக்காமல், தங்கள் சொந்தக் கிராமங்களில் நூற்கப்படும் நூலைக் கிராமவாசிகள் தாராளமாக வாங்கிக்கொள்ளலாம் என்றும், இவ்விஷயத்தில் அவர்கள் இஷ்டப்படி செய்துகொள்ள அகில இந்திய நூற்போர் சங்கம் விட்டுவிடவேண்டும் என்றும் கருத்துப்பட ஒரு சமயம் நீங்கள் 'ஹரிஜன்' பத்திரிகையில் எழுதினீர்கள். அப்படிப்பட்ட நூலைக் கொண்டு தயாரான கதரை அணிபவர்கள் காங்கிரஸ் பிரதிநிதிகளாக இருப்

பதற்குத் தகுதியுடையவர்களாவார்களா? இது விஷயத்தில் கிராம ஊழியர் செய்யவேண்டியது என்ன? அவர் இயற்கையாகவே வாழ்க்கைக்குப் போதுமான கூலி கொடுக்கவேண்டும் என்று பிரசாரம் செய்து வருகிருர். எப்பொழுதும் அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கதரையே வாங்கும் கிராமவாசிகளும் சிலர் இருக்கிருர்கள். ஆனல், அப்படி வாங்கச் சக்தி இல்லாதவர்களும் பலர் இருக்கிருர்கள். அவர்கள் வாழ்க்கைக்குப் போதுமானதற்குக் குறைவான கூலியைக் கொடுத்தபோதிலும், நூற்போர் அதிக உதவியைப் பெறுகிருர்கள். கிராம வாழ்க்கையிலும் கதர் ஓர் இடத்தைப் பெறுகிறது என்பதில் சந்தேகம் இல்லே. அங்கிருக்கும் கிராம ஊழியர் அத்தகைய கதருக்கு ஊக்கமளிப்பதா?

பதில்: ஒரு விஷயத்தைக் குறித்து ஒருவர் எழுதுகிருர். என்ன காரியத்திற்காக அதை எழுதுகிருரோ அந்தக் காரியத்தையே தோற்கடித்துவிடும் வகையில் அவருடைய வாக்கியத்திற்குப் பொருள் செய்துகொண்டு விடாமல் எப்பொழுதும் நாம் கவனமாக இருப்போமானல், இத்தகைய கேள்விகள் எழவே மாட்டா. எவ்விதக் கூலியும் கொடுக்காமல் தானே நூற்ற நூலாக இருக்கும்போது எந்தவிதத் தடையும் விதிப்பதற்கில்லே. சுயதேவைப் பூர்த்தி என்ற பொய்யான காரணத்தைச் சொல்லி அகில இந்திய நூற்போர் சங்கத்தின் விதிகள் மீறப்படவில்லே என்று வைத்துக்கொண்டே சொல்லுகிறேன். இதுவே கிராம ஊழியருக்கும் பொருந்தும். ஆனல், உங்கள் கேள்விகளில் ஒரு முக்கியமான விஷயம் கிளப்பப்பட்டிருக்கிறது. ஒரு குறிப்பிட்ட கிராமத்திலிருக்கும் அகில இந்திய நூற்போர் சங்க ஊழியர், அவர் கிராமக் கதரை உபயோகிப்பதாயிருந்தால், வாழ்க்கைக்குப் போதுமான கூலியைக் கொடுக்க முடியாது. ஆகையால், அவர் குறைந்த கூலி கொடுத்து நூலே வாங்கி, வேறு எதுவுமே கிடைக்காத நிலேயிலிருக்கும் நூற்போருக்குக் கொஞ்சம் வேலே சொடுப்பார். ஆனல், அவர் காங்கிரஸ் உறுப்பினராக முடியாது. வெளியில் இருந்துகொண்டு அவர் காங்கிரஸுக்குச் சேவை செய்வார். இத்தகையவர்கள் சில சமயங்களில் காங்கிரஸுக்கு நன்ருகச் சேவை செய்பவர்களாகின்றனர். காங்கிரஸின் அங்கத்தினராக இருப்பதுடன் அடிக்கடி ஏற்படும் ஆசைகளிலிருந்தும் அவர் காப்பாற்றப்படுகிருர். அத்தகைய கதரைக் கிராமத்திற்கு வெளியில் விற்கக்கூடாது என்பது தெளிவானது. அக்கதரெல்லாம் கிராமத்திற்குள்ளேயே செலவாகிவிடவேண்டும். அத்தாட்சி பெருத கதரை விற்கக் கடைகளில் வைத்ததுமே அகில இந்திய நூற்போர் சங்கத்தின் விதியை மீறிவிட்டதாகிறது. உண்மையான கதருக்கும் கஷ்டமுண்டாகிறது. நூற்போரின் கூலியை உயர்த்தவேண்டும் என்பதற்காக அகில

இந்திய நூற்போர் சங்கம் அதிகக் கஷ்டப்பட்டு வருகிறது. கூலி வாங்குகிறவர்கள், கூலியை உயர்த்திக் கொடுக்க வேண்டும் என்று கேட்காமலேயே தினத்திற்குக் காலணு, அரையணு என்று இருந்ததிலிருந்து இரண்டணு, மூன்றணு வுக்குக் கூலி உயர்த்தப்படுவதை உலகத்தில் நான் கேள் விப்பட்டதே இல்லே. இவ்விஷயத்தில் அகில இந்திய நூற் போர் சங்கம் மறக்கவே முடியாததான வேலேயைச் செய் திருக்கிறது.

சேவா கிராமம், 27—8—'40 —'ஹரிஜன்'–1—9—1940

# 14

# அத்தாட்சி பெற்றதும் பெருததும்

நூற்பதற்குப் புதிய கூலி விகிதத்தை அமுலுக்குக் கொண்டு வந்ததனுல் தமிழ் நாட்டில் எழுந்த கஷ்டம், மற்ற இடங்களிலும், முக்கியமாக ஆந்திராவிலும் கிளம்பியிருக்கிறது. இந்தியாவின் அப்பகுதியிலிருந்து எனக்கு வந்திருக்கும் பல கடிதங்களிலிருந்து இது தெரிகிறது. அத்தாட்சி பெருத கதர் வியாபாரிகள், அதிகப்படியாக ஒரு காலணு சம்பாதிக்க முடியாத ஏழைப் பெண்களின் நன்மை விஷயத்தில் செய்து வரும் தீமைகளேக் குறித்து அக்கடிதங்களே எழுதியிருப்பவர்கள் அதிக வருத்தத்துடன் புகார் கூறுகிருர்கள். ஆயிரக்கணக் கான ஏழை நூற்போரிடமிருந்து காலணுக்களேத் தட்டிப் பறித்துவிடும் வகையில் அவ்வளவு சுயநலமுள்ளவர்களாகிவிட வேண்டாம் என்று நான் கேட்டுக்கொள்ளுவதை அத்தாட்சி பெருத கதர் வியாபாரிகள் கேட்பார்களா என்பது எனக்குத் தெரியாது. கேட்பார்கள் என்றே நம்புகிறேன். ஆனல், இதற்கு உண்மையான பரிகாரம், கதர் வாங்குவோரின் கைகளில் தான் இருக்கிறது. அகில இந்திய நூற்போர் சங்கத்தின் அத் தாட்சி பெற்ற கடைகளேத் தவிர மற்ற இடங்களில் கதர் வாங்கு வதில்லே என்று அவர்கள் இருந்துவிட்டால், அத்தாட்சி பெருத கதர்க் கடைகளே மூடிவிடவே நேரும். அகில இந்திய நூற்போர் சங்கம் இல்லாவிட்டால், கதரே இருக்க முடியாது என்பதைப் பொது ஜனங்கள் அறிந்துகொள்ள வேண்டும், கதர், உடனடி யாக விற்பனையாவதாக ஆகி, கிராமங்களிலும் அதற்குப் பொது வான ஆதரவு கிடைக்கும் வரையில், கஷ்டமான வேலேயைச் செய்துகொண்டு போவதற்கு வேண்டிய சக்தியுள்ள, கவனமான ஒரு ஸ்தாபனம் கதரை வளர்த்தே ஆக வேண்டும். அத்தகைய ஸ்தாபனமே அகில இந்திய நூற்போர் சங்கம். இது முற்றிலும் பரோபகார நோக்கம் கொண்ட ஸ்தாபனம். இந்தியக் கிராமங்

களின் கோடிக்கணக்கான ஏழைப் பெண்களின், நூற்போரின் நன்மையைக் கவனிப்பது என்ற ஒன்றைத் தவிர அதற்கு வேறு சிரத்தை எதுவும் இல்லை என்பதைப் பொது மக்கள் அறிவார்கள், அறிய வேண்டும். அதன் பெயர் எடுத்துக் காட்டுவதைப் போன்று, அதன் நடவடிக்கைகள் எல்லாம் நூற்போரின் நலனைக் காப்பாற்றுவதையே நோக்கமாகக் கொண்டவை. வருடத்தில் ஆறு மாதங்களுக்கு வேலை எதுவுமே இல்லாமலிருக்கும் கோடிக் கணக்கான பெண்களுக்கு, அவர்களுடைய நிலைமைக்குப் பொருத்தமானதும் நிரந்தரமானதும், லாபகரமானதுமான வேலை கிடைக்கும் வரையில், கிராமங்களுக்குப் பொருளாதார விமோசனம் என்பது முடியாத காரியம். கையினால் நூற்பதைப் போல எல்லோரும் செய்யக்கூடிய தொழில் வேறு எதுவும் இல்லை. அத்தாட்சி பெருத கதர்க்கடைகளுக்கு ஆதரவு தராமல் அத்தாட்சி பெற்ற கதர்க் கடைகளையே ஆதரிக்க வேண்டும் என்பதன் அவசியத்தைப் பொது மக்களுக்கு வற்புறுத்துவதற்காகவே, அடிக்கடி கூறி வந்திருக்கும் அந்த உண்மையை நான் திரும்பச் சொல்ல வேண்டியிருக்கிறது. அத்தாட்சி பெருத கடைகளில் குறைவான விலைக்குக் கதரை விற்றாலும் அங்கே வாங்க வேண்டாம். சங்கத்தின் விலை ஒன்றினால்தான் நூற்போருக்கு அதிகக் கூலி கொடுப்பது சாத்தியம் என்பதைப் பொது மக்கள் அறிய வேண்டும்.

—' ஹரிஜன் '–29—8—1936

## 15

# அத்தாட்சி பெருத கதர்

அத்தாட்சி பெருத கதர்க் கடைகளில் விற்கும் கதரை வாங்கிப் பொறுப்பு வாய்ந்த காங்கிரஸ்காரர்களும் உபயோகிக்கிறார்கள் என்று எனக்கு வந்திருக்கும் தகவல்கள் கிடைக்கின்றன. அத்தாட்சி பெருத கதர்க் கடைகள் பல இருக்கின்றன. அகில இந்திய நூற்போர் சங்கம், நூற்போரின் கூலியை அதிகமாக உயர்த்திவிட்ட பிறகு, இத்தகைய கடைகளின் எண்ணிக்கை அதிகமாகிவிட்டது. அங்கே விற்கும் கதர் சுத்தமானது என்று உத்தரவாதமுள்ளது அல்ல.

கேட்காமலேயே நல்ல கூலி தொழிலாளருக்கு எப்பொழுதும் கிடைத்து விடுவதில்லை. அப்படிக் கூலி கொடுப்பது நேர்ந்து விடும்போது யோக்கியப் பொறுப்பில்லாதவர்கள் பலர் கிளம்பி விடுகின்றனர். தொழிலாளரின் ஏழ்மையையோ, அறியாமையையோ பயன்படுத்திக் கொண்டு, பழைய குறைந்த கூலியை

அவர்களுக்குக் கொடுத்து, உயர்த்தப்பட்ட கூலி கொடுத்துத் தயாரான கதரைவிடக் குறைந்த விலைக்கும் விற்கிறார்கள். அதோடு மில் நூலைக் கொண்டு பாவு போட்டு நெய்த துணியைக் கதர் என்ற பெயரிலும் விற்கிறார்கள். அகில இந்திய நூற்போர் சங்கத்தின் விகிதப்படி நூற்போருக்குக் கூலி கொடுத்துக் கையினால் நூற்றுக் கையினால் நெய்த கதர்தான் சுத்தமான கதர். அத்தகைய கதர் அத்தாட்சி பெற்ற கடைகளில் மாத்திரம் கிடைக்கும்.

துரதிருஷ்டவசமாகக் காங்கிரஸ்காரர்கள், அறியாமையி யினாலோ அல்லது கதரிடம் அவர்களுக்கு நம்பிக்கை இல்லாத தனாலோ, வெளி வேஷத்திற்காக, அத்தாட்சி பெறாத கடைகளிற் மலிவான துணியை வாங்குகிறார்கள். இவ்விதம் அவர்கள் வாங்கு வதனால், கதர் பற்றிய காங்கிரஸ் கொள்கையை அவர்கள் மீறி விடுவதோடு அவர்கள் வாங்கிய துணியின் அளவுக்கு நூற்போ ருக்குக் கிடைக்க வேண்டிய கூலி உயர்வையும் மோசம் செய் கின்றனர். கதர் விலை அதிகமாகியிருக்கிறது என்றால், எவ்வளவு அதிகமாகியிருக்கிறதோ, குறைந்த பட்சம் அந்த அளவு, நூற் போருக்கு அதிகக் கூலி கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பொது மக்கள் அறியட்டும். 'குறைந்த பட்சம்' என்ற சொல்லை வேண்டுமென்றே நான் உபயோகித்திருக்கிறேன். ஏனெனில், கூலியில் செய்திருக்கும் அதிகரிப்பு முழுதும் கதர் வாங்குவோ ரிடமிருந்து வசூலிக்கப்படவில்லை.

அகில இந்திய நூற்போர் சங்கத்திற்கு அறிவிக்காமலும், அச்சங்கம் கேட்டுக் கொள்ளாமலும் கதர்க் கடைகளை ஆரம்பிக் கும் காங்கிரஸ் தலைவர்கள், தங்கள் சொந்த ஸ்தாபனத்திற்கே தீமை செய்கிறார்கள், மோசடியை ஆதரிக்கிறார்கள், காங்கிரஸ் கொள்கையையும் மீறுகிறார்கள். ஆனால், திக்கு எதுவுமே இல் லாத மக்களின் நிலை சீர்ப்பட வேண்டும் என்பதற்காக அகில இந்திய நூற்போர் சங்கம் செய்து வரும் முயற்சிக்கு எல்லா வகையிலும் உதவுவதையே கடமையாகவும் பெருமையாகவும் ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் கொள்ளவேண்டும்.

—'ஹரிஜன்'-15—10—1938

# 16

## கதர் கதரைக் கொல்லுமா?

நூற்போரின் கூலியை உயர்த்துவது என்று அகில இந்திய நூற்போர் சங்கம் முடிவு செய்ததும், இந்த யோசனைக்கு முதலில் உற்சாகமாக ஆதரவளித்தது, மகாராஷ்டிரக் கிளை.

இது ஸ்ரீ விநோபாவின் நேரடியான மேற்பார்வையில் இருக்கிறது. மற்ற மாகாணங்கள் செய்யாத வகையில் இக்கிளை, கூலி உயர்வுத் திட்டத்தைச் சரியான திட்டவட்டத்துடன் வேலை செய்தது. இதன் பலன் என்னவென்றால், மகாராஷ்டிரக் கிளையின் அளவுக்குக் கூலி உயர்வு கொடுக்காத மற்ற மாகாணங்கள் தங்கள் கதரைக் குறைந்த விலைக்கு விற்பதோடு மகாராஷ்டிரக் கிளையின் எல்லைக்குட்பட்ட பகுதிகளுக்குத் தங்கள் சரக்கை அனுப்பவும் தயங்குவதில்லை. யோக்கியப் பொறுப்பில்லாத வர்த்தகர்கள், நிலைமையைப் பயன்படுத்திக்கொள்ளப் பின்வாங்குவதில்லை. இவ்வாறு அத்தாட்சி பெறாத கதர்க் கடைகள் நாகபுரி, வார்தா முதலிய இடங்களில் அதிகமாக ஆரம்பமாகிவிட்டன. விஷயமறியாத பொது மக்கள், புதிய ஏற்பாடுகளைக் குறித்து ஒன்றும் அறியாமல், மலிவான கதரை வாங்கும் ஆர்வத்தில், அத்தாட்சி பெறாத கதர்க் கடைகளில் வாங்க ஆரம்பித்துவிடுகின்றனர். இவ்விதம் மகாராஷ்டிரக் கிளையின் கதர்க் கடைகளுக்குப் பலத்த நஷ்டத்தை உண்டாக்குகிறார்கள். இதன் பலன் என்னவென்றால், மகாராஷ்டிரக் கிளை, ஒன்று கூலியைக் குறைக்க வேண்டும். இல்லையானால் வியாபாரத்தையே நிறுத்திவிட வேண்டும் என்ற நிலைமை உண்டாகிறது. கதர், கதரைக் கொல்லுவதாகவே இது ஆகும். கதரின் பொருளாதார முறை வேறானது. போட்டி முறையைக் கொண்ட சாதாரணப் பொருளாதார வகைக்கு எப்பொழுதும் மாறுபட்டதாக இருப்பது இது என்பதைக் கதர் அன்பர்கள் அறிய வேண்டும். மற்ற முறை, எல்லோருக்கும் மிகுந்த நன்மை என்ற கொள்கையை, அதாவது தாழ்த்தப்பட்டோரிலும் மிகவும் தாழ்ந்தோருக்கு நன்மை என்பதைக் கொள்கையாகக்கொண்டது அன்று. இதனாலேயே கதர் தனது லட்சியத்தைப் பூர்த்தி செய்ய வேண்டுமானால், கீழ்க்கண்டவைகள் இருப்பது அவசியம் என்று அடிக்கடி எடுத்துக்காட்டி வந்திருக்கிறேன் :

1. நூற்பவர்களுக்கு ஒரு மணி நேர உழைப்புக்கு ஓரணாக் கூலி குறைந்த பட்சம் கிடைக்கும் வரையில் நூற்பவரின் கூலியில் கிரமமான உயர்வு இருந்துகொண்டு வரவேண்டும்.

2. ஒவ்வொரு கிராமமும் தன் சொந்தக் கதரை உற்பத்தி செய்து உபயோகிக்க வேண்டும் என்பது லட்சியம். இதிலிருந்து ஒவ்வொரு மாகாணமும் இப்போதைக்குக் குறைந்தது செய்ய வேண்டியது, தன்னுடைய தேவைக்குப் போதுமானதை மாத்திரம் உற்பத்தி செய்துகொள்ள வேண்டும் ; அதற்குமேல் உற்பத்தி செய்யக்கூடாது. அந்த மாகாணத்தினால் மாத்திரம் உற்பத்தி செய்ய முடியும் என்று இருக்கும் கதரை வெளி மாகாணங்களில் விற்க அனுமதி கொடுக்கப்படுகிறது. உதாரணமாக, ஆந்திரா 80-ஆம் நெம்பர் நூலில் தயாரான கதரை வெளியில் அனுப்பலாம். ஆனால், முரட்டுக் கதரை, அது என்னதான் மலிவாக இருந்தாலும், வெளியே அனுப்பக்கூடாது.

3. லாபத்திற்காக லாபம் சம்பாதிக்கக் கூடாது. உலகிலேயே மிகப் பெரிய கூட்டுறவு ஸ்தாபனமாகிய இதில், கூலி வாங்குகிறவர்களே பங்குதாரர்களும், சொந்தக்காரர்களும். ஆகையால், ஏதாவது ஒரு வருடத்தில் லாபம் கிடைக்குமானால், அப்பணத்தைக்கொண்டு வைத்துக்கொள்ள முடிந்த அளவுக்கு மேலும் நூற்போர் தொகையை அதிகரிக்க வேண்டும்; அப்படி இல்லையென்றால், இருக்கும் நூற்போருக்குக் கூலி உயர்வு கொடுக்க வேண்டும். கிடைக்கும் லாபத்தைச் சரியானபடி உபயோகிப்பதற்கு இவையே வழிகள்.

4. நூற்போரின் கூலியை விரும்பப்படும் அளவுக்கு உயர்த்த முயற்சி செய்யும் ஒரு மாகாணத்திற்கு, மற்றக் கிளைகளும் கதர் அன்பர்களும் உதவி செய்ய வேண்டும்.

5. பொது ஜனங்கள், தங்கள் மாகாணத்தில் உற்பத்தியாகும் கதர் மற்ற மாகாணங்களில் உற்பத்தியாகும் கதரைவிட அதிக விலையுள்ளதாக இருந்தாலும், தங்கள் மாகாணக் கதரையே உபயோகிப்பது என்று தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும். அகில இந்திய நூற்போர் சங்கம், ஒவ்வொரு மாகாணத்திற்கும் தன்னாலானதைச் செய்யும் என்று அவர்கள் நம்ப வேண்டும்.

6. இந்தியா முழுமைக்கும் ஒரே விதமான கூலியையும் விலையையும் அடைவது அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கொள்கை என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், அந்தத் திட்டமான நிலைமை ஏற்படுகிற வரையில், தங்கள் சொந்த மாகாணத்தில் கூலி வாங்குவோருக்குத் தாங்கள் செய்ய வேண்டிய கடமையும் ஒன்று இருக்கிறது என்பதை உணரும் அளவுக்கு ஜீவ காருண்யமுள்ளவர்களாகப் பொது மக்கள் இருக்க வேண்டும். வெளி உலகத்துடன் போட்டி இருப்பது எவ்வளவு கெடுதலோ அவ்வளவு கெடுதலானது, ஒரு மாகாணத்திற்கும் இன்னொரு மாகாணத்திற்கும் போட்டி இருப்பதும்.

அத்தாட்சி பெறாத கடைகளெல்லாம் மூடப்பட்டுவிட வேண்டும் என்பதுதான் விரும்பக்கூடிய உடனடியான காரியம். அத்தகைய கடைகளில் வாங்கக்கூடாது என்று பொது மக்களைக் காங்கிரஸ்காரர்களும் மற்றவர்களும் எச்சரிக்கை செய்ய வேண்டும். அகில இந்திய நூற்போர் சங்கத்தின் சம்பந்தப்பட்ட மாகாண ஸ்தாபனம் விரும்பினாலன்றித் தங்கள் சரக்கை வெளியில் விற்க மாகாணக் கிளைகள் கண்டிப்பாக மறுத்துவிட வேண்டும்.

சேவா கிராமம், 19—6—'39 'ஹரிஜன்'-24—6—1939

# 17

# இருந்துவரும் கஷ்டம்

நம்பிக்கை இல்லாதவருக்குக் கதர் திண்டாடிக் கொண்டிருப்பதாகத் தோன்றும். உண்மையில் அது பலம் பெற்றே வருகிறது. ஏழைக்கு வாழ்வின் ஊன்றுகோலாக அது இருப்பதோடு சுதந்திரத்தை அடைவதற்கு அகிம்சை உபாயமாவதற்கும் அது முயன்றுகொண்டு வருகிறது. தமிழ் நாட்டிலிருந்து வந்திருக்கும் ஒரு கடிதத்தில் கீழ்க்கண்ட பாராக்களில் இருக்கும் கஷ்டம் சரியானபடி எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது :

"அகில இந்திய நூற்போர் சங்கம், இப்பொழுது இரண்டு பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டியிருக்கிறது. அதில் ஒன்று, இப்பொழுதுள்ள முறைப்படி கதர் உற்பத்தியைச் செய்துகொண்டு போவது. மற்றொன்று, நாம் யாருக்குச் சேவை செய்கிறோமோ அந்தத் தொழிலாளர்கள், அவர்களுடைய கிராமங்கள் சம்பந்தமான நமது நடவடிக்கைகளுக்குப் புதிய மாறுதலை உண்டாக்குவது.

"கதரில் அத்தாட்சி பெறாத வியாபாரிகளின் போட்டியினால், சென்ற சில மாதங்களாக வர்த்தக உற்பத்தியைப் பொறுத்தவரையில் கடுமையாகப் பாதிக்கப்பட்டிருக்கிறது. நாம் கொடுக்கும் நல்ல பஞ்சைக்கொண்டு நூற்கும் நம் நூற்பாளர்களிடமிருந்து நூலை அத்தாட்சி பெறாத வியாபாரிகள் வாங்குகிறார்கள். நம் நூலைக்கொண்டு நெசவாளர்கள் நெய்யும் கதரை வாங்குகிறார்கள். அதை லாபம் வைத்து விற்கிறார்கள். அவர்கள் நம் நெசவாளர்களின் வீடுகளுக்குப் போய், அதிகப்படியாகக் கூலியையும் கதருக்குச் சமமான நூலையும் கொடுத்து நமக்காக நெய்யப்பட்ட கதரை வாங்குகிறார்கள். வீட்டிலேயே அவர்களுக்கு அதிகப்படியாகக் கூலியும் நூலும் கிடைப்பதால் நெசவாளர்கள் கதரைக் கொடுத்துவிடுகின்றனர். இவ்விதம் வாங்கிய கதரை விசேஷக் கதர் என்று சொல்லி அதிக விலைக்கு விற்கிறார்கள்.

"இந்தப் பகுதியில் அத்தாட்சி பெறாத கதர் வியாபாரிகள் ஐம்பது பேருக்கு மேல் இருக்கிறார்கள். மாதந்தோறும் ரூ 7 லட்சத்திற்கு இவர்கள் அத்தாட்சி பெறாத கதரை உற்பத்தி செய்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. இவர்களில் காங்கிரஸ்காரர்களும் இருக்கிறார்கள். காங்கிரஸ் நிர்வாக சபைகளில் இவர்கள் ஸ்தானங்களும் வகிக்கின்றனர்.

"தொழிலாளரின் டிபாசிட்டுகள் எங்களிடம் இருந்தபோதிலும், அத்தாட்சி பெறாத வர்த்தகர்களின் சுரண்டலுக்கு ஆளாக வேண்டாம் என்று கூறித் தொழிலாளரைத் திருப்ப எங்களால் முடியவில்லை. கதர் அணிய வேண்டும் என்பது போன்று நாம் விதிக்கும் நிபந்தனைகளை அவர்கள் வற்புறுத்தவில்லை; கதரின் ரகத்தையும் வற்புறுத்துவதில்லை; மட்டமான உழைப்புக்கு அதிகக் கூலியும் அவர்கள் கொடுப்பதால் அதனால் ஏற்படும் ஆசையை மீறிவிட தங்களால் முடியவில்லை என்று தொழிலாளர்கள் கூறுகிறார்கள். இதுவல்லாமல் நூற்போருக்கு 'போண்டா' என்று சொல்லப்படும் மட்டமான பஞ்சையும் அத்தாட்சி பெறாத வியாபாரிகள் கொடுக்-

கிறார்கள். அப்பஞ்சைப் பட்டை போட வேண்டியதில்லை. மில்களில் வீணாகும் பஞ்சு அது. நல்ல பஞ்சின் விலையில் முக்கால்வாசி விலைக்கு அது கிடைக்கிறது. நூற்கும் நூல், சிட்டமாக்கப்படாமல் சுற்றாகவே இருக்கிறது. இது எளிதான தாக இருப்பதால் நூற்பவர்கள் இந்தப் பஞ்சையே விரும்புகிறார்கள். அலட்சியமான வேலைக்கு அதிகக் கூலி கொடுக்கப்படுவதாலும், நூற்பவர்களிடமிருந்து கதருக்கென்று டிபாசிட்டு எதுவும் வாங்கப்படாததாலும், நூலின் தரம் முதலியவைகளைக் குறித்து எதுவும் வற்புறுத்தப்படாததாலும், அத்தாட்சி பெறாத வர்த்தகரின் கீழ் வேலை செய்ய வேண்டும் என்ற போக்கே நூற்போருக்கு இருந்து வருகிறது.

“இந்தப் போக்கு, ராட்டையின் மூலம் கிராமப் புனருத்தாரணம் ஏற்படும்படி செய்வதென்ற நம் கொள்கையோடு அவர்களை அணுகுவதற்குப் பெரும் இடையூறாக இருந்து வருகிறது.”

கதர் உற்பத்திக்கு இப்பொழுது இருந்துவரும் முறை, மாறுதலைச் செய்வதற்கு இடையூறாக இருக்குமானால், அதைத் தியாகம் செய்துவிட வேண்டியதுதான். இதற்கு நம்பிக்கையும், அந்த நம்பிக்கை அளிக்கும் உஷாரும் வேண்டும். சோம்பேறித்தனமாக இருப்பவர்களுக்கு நம்பிக்கை ஏற்படுவதே இல்லை.

ஏழையின் நிலைமையைக்கொண்டு கவனித்தாலும், அகிம்சையைக்கொண்டு பார்த்தாலும் கதருக்குப் பலமான ஆபத்தாக இருப்பவர்கள் அத்தாட்சி பெறாத கதர் வியாபாரிகள். ஏனெனில், தன் மடிக்கு வரவேண்டும் என்பது ஒன்றுதான் வியாபாரிக்குத் தெரியும்; மற்ற எதுவும் அவருக்கு முக்கியம் அல்ல. அகில இந்திய நூற்போர் சங்கத்தைக் கொன்றுவிட்டால், தம்மைத் தாமே கொன்றுகொண்டு விடுவார் என்பதை அறியாமல்தான் நூற்பவர்களிடமும் நெய்பவர்களிடமும் போய் எல்லாவிதமான ஆசை வார்த்தைகளையும் அவர் கூறி வருகிறார்.

இதில் பெரிய பரிதாபம் என்னவென்றால், இந்த அத்தாட்சி பெறாத கதர் வியாபாரிகளுக்குக் காங்கிரஸ்காரர்கள் விரும்பிக் கருவிகளாக இருந்து வருவதுதான். அவர்கள், நிபுணர்களைக் கொண்ட ஒரு சங்கத்தை அமைத்தார்கள். என்றாலும், விரும்பியோ, விரும்பாமலேயோ பொன் முட்டை இடும் வாத்தை அவர்கள் கொன்றுகொண்டிருக்கிறார்கள் என்பதை அவர்கள் அறியவில்லை. மேலும், பொதுஜன யோக்கியப் பொறுப்பைச் சோதிக்கச் சரியான உரைகல்லாக இருக்கிறது, கதர். பொதுக் காரியங்களில் யோக்கியப் பொறுப்பு இருக்கும்படி செய்வதற்கான சிறந்த வழியைக் கண்டு பிடிப்பதற்கு இது ஒரு பெரிய முயற்சி. ஏனெனில், கிராமங்களில் இருக்கும் கோடிக்கணக்கான ஆண்களுடனும் பெண்களோடும் நெருங்கிய தன்னலமற்ற தொடர்பைக் கொள்ளுவதாக இருக்கிறது, இது.

இவைகளுக்கெல்லாம் முடிவு என்னவென்றால், மேற்கண்ட கடிதத்தை எழுதியிருப்பவரைப் போன்ற ஊழியர்கள்

லட்சியத்தில் உறுதியான நம்பிக்கையோடு பலனை ஆண்டவனிடம் ஒப்படைத்துவிட்டுத் தங்கள் வேலையைச் செய்துகொண்டு போவதுதான்.

—'ஹரிஜன்' – 12—5—1946

# 18

# அத்தாட்சி பெருததாயினும்?

ஒரு குஜராத்தி நண்பர் கீழ்வருமாறு கேட்கிறார்:

"அநேக தேசீய ஸ்தாபனங்கள், அவைகளிலுள்ள சிப்பந்திகள் கதரைத்தான் கட்ட வேண்டும் என்று வற்புறுத்துவதோடு புத்தகங்களைப் பைண்டு செய்வதையும் கதரினாலேயே செய்ய வேண்டும் என்று கட்டாயப் படுத்தி வருகின்றன. அத்தாட்சி பெற்ற கதரை, ஓரளவு நூல் கொடுத்து, அத்தாட்சி பெற்ற கதர்க் கடைகளிலிருந்துதான் வாங்க வேண்டியிருப்பதால், இயற்கையாகவே அவர்கள் அத்தாட்சி பெருத கதரை வாங்கிவிடுகிறார்கள். இது சரியா? அத்தாட்சி பெருத கதரைவிட மில் துணியை வாங்குவதுமேல் அல்லவா? அத்தாட்சி பெருத கடைகளில் வாங்குவதில் போய் முடிவதால் கதர்தான் உபயோகிக்க வேண்டும் என்று வற்புறுத்துவது பொய்யான வேஷமாகவில்லையா?"

மற்றவைகளோடு போதுமான கதரும் கிடைப்பதில்லை என்று இருக்கும்போது, புத்தகங்களைப் பைண்டு செய்வது போன்றவைகளுக்கும் கதர்தான் உபயோகிக்க வேண்டும் என்று வற்புறுத்துவது சரியல்ல. கதர் ஏராளமாகக் கிடைத்துவந்த போது, இது போன்ற காரியங்களுக்கெல்லாம் அதை உபயோகிக்க வேண்டும் என்று நான்தான் சிபாரிசு செய்தேன். 1921-இல் அகமதாபாத்தில் காங்கிரஸ் பந்தல் முழுதும் கதரினாலேயே அலங்கரிக்கப்பட்டது. இன்று அத்தகைய காரியத்தைச் செய்ய முயற்சிப்பது பைத்தியக்காரத்தனம். காலமும் சந்தர்ப்பமும் முறைகளை மாற்றிவிடுகின்றன.

ஆனால், அத்தாட்சி பெருத கதருக்குப் பதிலாக மில் துணியை உபயோகிக்கலாம் என்று இக்கடிதத்தை எழுதியிருப்பவர் கூறுவது எனக்குப் புரியவில்லை. அத்தாட்சி பெருத கதர் என்பது என்ன? அத்தாட்சி பெருதது என்று இருந்தாலும் அது கையினால் நூற்கப்பட்டுக் கையினால் நெய்யப்பட்டதல்லவா? இதில் மோசடி இருக்கலாம்; அது வேறு விஷயம். அத்தாட்சி பெற்ற கதர் ஒவ்வொன்றும் நூற்றுக்கு நூறு சுத்தமானது என்று சர்க்கா சங்கம் உத்தரவாதம் அளிக்க முடியாது. மோசடியே இல்லாததும், எல்லாக் காலங்களிலும் உண்மையானதாகவே இருந்து வந்திருப்பதும் இந்த உலகத்தில் எதுவும் இல்லை.

அத்தாட்சி பெருத கதரில் இருக்கும் குறைபாடுகள் நன்ருகத் தெரிந்தது. நூற்போருக்கும் நெய்வோருக்கும் திட்டமான கூலி என்பது அதில் இல்லை. அதை விற்கிறவர்கள் விரும்புகிறபடி யெல்லாம் லாபம் சம்பாதிக்கிருர்கள். சர்க்கா சங்கக் கதர்க் கடைகளுக்குப் பாதகம் செய்யவேண்டும் என்பதற்காகவும் கடைகளை ஆரம்பித்து விடுகிருர்கள். என்ருலும், மோசடி எதுவும் இல்லாதபோது, கையினல் நூற்றுக் கையினல் நெய்யப் பட்ட துணியையெல்லாம் கதர் என்றுதான் சொல்ல வேண்டும். ஒருவர் தாமே நூற்று, தமக்காக அதைத் துணியாக நெய்து கொள்ளும்போது, சட்டப்படி பார்த்தால், அத்துணி அத்தாட்சி பெருததுதான். ஆனல், கதர் என்பதன் உயர்வான, புனிதமான பொருளில் பார்த்தால், அது கதர். தமது சொந்தக் கைகளின் உழைப்பினல் தயாரான துணிக்குப் பதிலாக ஒருவர் மில் துணி உபயோகிப்பாரானல், அவரளவில் அது குற்றமாகும்.

முடிவு என்ன என்ருல், மில் துணியை விலக்குவது என்பது அனுசரிக்கப்பட வேண்டும். சாத்தியமான வரையில் அத்தாட்சி பெருத கதரைத் தவிர்க்க வேண்டும். ஆனல், அத்தாட்சி பெற்ற கதர் கிடைக்காதபோது, மில் துணியை வாங்கவேண்டும், இல்லாவிடில் அத்தாட்சி பெருத கதரை வாங்க வேண்டும் என்ற நிலைமை இருக்கும்போது, அத்தாட்சி பெருத கதர் சுத்தமான கதராக இருந்தால், அந்தக் கதரையே வாங்க வேண்டும். ஒருவர் தமது கைகளின் உழைப்பினல் தயாரித்த கதரை, நீங்கள் விரும்பினல், அது அத்தாட்சி பெருத கதர் என்று கூறி நீங்கள் வெறுக்கலாம். ஆனல், அத்தாட்சி பெற்ற கதரைவிட உற்பத்தியில் அது சுத்தமானது என்பதுதான் உண்மை. தங்கள் தேவைக்குப் போதுமான துணியை நெய்து கொள்ளுவதற்கு வேண்டிய நூலை ஒவ்வொருவரும் நூற்றுக் கொள்ளுவார்களாயின், அப்பொழுது சர்க்கா சங்கம் இருப்பதற்கு என்ன அவசியம் இருக்கிறது? அப்பொழுது சர்க்கா சங்கம் வெற்றியடைந்துவிட்டதாக உலகமும் சுவர்க்கமும் வெற்றி முழக்கம் செய்யும்.

—'ஹரிஜன்' – 22—9—1946

## 19

# மில் துணியைவிட மேல்

"யோக்கியமாக இருக்க வேண்டும் என்றும், எல்லாவற்றிலும் யோக்கியமாக நடக்க வேண்டும் என்றும் நீங்கள் எங்களுக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறீர்கள்" என்று கேட்டார், மற்ெருரு உறுப்பினர். "அத்தாட்சி பெருத கதரைக் கட்டிக்

கொண்டு கதர் அணிவதற்குள்ள நிபந்தனைகளை ஒருவர் நிறைவேற்ருமல் இருக்கும்போது, தான் கதர்வாலா என்று சொல்லிக் கொள்ளுவது அயோக்கியத்தனமல்லவா? அதற்குப் பதிலாக மில் துணியைக் கட்டிக்கொண்டு யோக்கியமாக இருப்பது நல்லது அல்லவா?'' என்றும் கேட்டார்.

இதற்குப் பதிலளித்த காந்திஜி, அத்தாட்சி பெருத கதரைத் தாம் அங்கீகரிக்கவில்லை என்ருர். ஆனல், அது சுத்தமான கதராக இருக்குமானல், மில் துணியைவிட அது மேலானது என்ருர். அவர் மேலும் கூறியதாவது: ''அத்தாட்சி பெருத கதர் எல்லாமே அயோக்கியத்தனமானது அன்று. உதாரணமாக, தங்களுக்கு அல்லது தங்கள் குடும்பங்களுக்கு என்று நூற்று, அதை நெய்து அத்துணியை உபயோகிக்கிறவர்கள் அத்தாட்சி பெற்ற கதரை உபயோகிக்கவில்லை. என்ருலும், அந்தக் கதர் மிக உயர்ந்த மதிப்புடையது. அகில இந்திய நூற்போர் சங்கத்தின் விதிகள், உதாரணமாகக் குறிப்பிட்ட குறைந்தபட்சக் கூலியை நூற்போருக்குக் கொடுப்பது என்பது நிறைவேற்றப் பட்டிருக்கிறது என்பது, அத்தாட்சி பெற்ற கதரில் இருக்கிறது. அகில இந்திய நூற்போர் சங்கத்தின் திட்டப்படியான கூலியை நூற்போருக்குக் கொடுக்காது தயாரான கதராயினும் அதுவும் மில் துணியைவிட மேலானதுதான். நூற்கும் மில்களில் தொழிலாளருக்குக் கொடுக்கப்படும் அதிகக் கூலி, அதிகமாகத் தோன்றுகிறதேயன்றி உண்மையில் அப்படி இல்லை. இன்று மில் துணி கதரைவிட இரண்டரை மடங்கு மலிவாக இருக்கிறது. இப்பொழுது மில் தொழில் எத்தனையோ வகைகளில் விசேஷச் சலுகைகளையும் உதவிகளையும் பெற்று வருகிறது. அவைகளெல்லாம் அத் தொழிலுக்கு இல்லாது போகுமானல், கதரை விட மில் துணி மலிவாக விற்காது என்று நிபுணர்கள் என்னிடம் கூறியிருக்கிருர்கள். உதாரணமாக, மூலப் பொருள்களையும், ஏராளமாக உற்பத்தி செய்த பொருள்களையும் ஓர் இடத்திலிருந்து மற்ருேரிடத்திற்குக் கொண்டுபோக மில்களுக்கு மலிவான போக்குவரத்து வசதிகளை நாம் கொடுக்கிருேம். மேலும், நீளத் துசும்புப் பருத்தியைச் சாகுபடி செய்வதற்கும், நுட்பப் பயிற்சி நிலையங்களுக்கும், ஆராய்ச்சி வேலைகளுக்கும் ஏராளமான தொகை செலவு செய்யப்பட்டிருக்கிறது. இந்தியாவின் ஏழு லட்சம் கிராமங்களில், எதற்கும் எதுவும் செய்வதற்காக யாரும் கவலைப்படவில்லை. ஆகையால், மில்கள் உண்மையில் இன்று ஏதோ ஒரு வகையில் அரசாங்கத்தின் பொருளுதவியை அடைந்து வருகின்றன. இவைகளையெல்லாம் நீக்கிவிட்டு, அப்பொழுது கதரைவிட மில் மிணி மலிவாக இருக்கிறதா என்று பாருங்கள்.

''அத்தாட்சி பெருத கதருக்கு நான் ஆதரவளிப்பது சாத்தியமில்லையாயினும், மில் துணி முழுவதையும் நீக்கியே ஆக வேண்டும். அத்தாட்சி கொடுப்பதை அகில இந்திய நூற்போர்

சங்கம் நிறுத்திவிடும் நாள் ஒன்று வரும். அப்பொழுது யாரும் கதரைத் தாராளமாக விற்கலாம். கதர் எல்லோரிடத்திலும் பரவிவிடும்போது இந்த நிலைமை ஏற்பட்டே தீரும். அப்பொழுது சர்க்கா சங்கம், கதரின் தத்துவத்தையும் பொதுக் கொள் கையையும் பாதுகாப்பதாக மாத்திரம் வேலை செய்துவரும். அதன் வியாபார நடவடிக்கைகளெல்லாம் நின்றுவிடும். அப் பொழுது சுத்தமான கதரே விற்கப்பட்டு வாங்கப்படுவதாகவும் இருப்பதை முன்னிட்டு மக்கள் வழக்கமாக யோக்கியமானவர் களாவதோடு கதரில் உற்பத்தி செய்கிறவர்களும், வியாபாரி களும் சந்தேகத்திற்கு இடமின்றி நடந்துகொள்ளும்படியும் வற் புறுத்த வேண்டும்.''

—' ஹரிஜன் '–20—10—1946

# 20

# அத்தாட்சி பெற்ற கதரின் பொருள்

துணிப் பஞ்சத்தைக் கதரினால் போக்கிவிட முடியும் என்று கூறும் அதே நண்பர், இந்தியா சுதந்திரமடைந்துவிட்ட தால் இப்பொழுது அத்தாட்சி பெற்ற கதர், பெறாத கதர், மில் துணி, அந்நியத்துணி ஆகியவைகளுக்கிடையே எந்த வித்தியாச மும் இல்லை என்றும் எழுதுகிறார். தமக்கு வேண்டியதற்குத் தாமே நூற்று, நெய்து கொள்ளுகிறவருக்குக் கதரில் முக்கியத் துவம் இருக்கலாம். ஆனால், அப்படிச் செய்யவோ, கதர்க் கடை களில் துணி வாங்குவதற்காகக் கொடுக்க வேண்டியிருக்கும் நூலைக்கூட நூற்கவோ மக்களால் முடிவதில்லை என்கிறார். சுத்தக் கதரில் எந்த அபிவிருத்தியையும் காணோம். ஆனால், அத்தாட்சி பெறாத கதரிலோ அநேக பயனுள்ள தினுசுகள் கிடைக்கின்றன. மேலும், வாழ்க்கைக்குப் போதுமானது என்று சொல்லப்படும் கூலியை இக்காலத்தில் கதர்த்தொழிலில் கொடுப்பதும் கஷ்டமானதாக இருக்கிறது. இந்தக் காரணங்களை யெல்லாம் முன்னிட்டு அத்தாட்சி பெறாத கதரை வாங்க அனுமதித்துவிட லாம் என்று கடிதத்தை எழுதியிருப்பவர் கூறுகிறார். நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் துணிப் பஞ்சம் இருந்து வருவதாலும், யூனியன் அரசாங்கமே அந்நியத் துணியை இறக்குமதி செய்து வருவதாலும், அத்தகைய துணியை வாங்குவதற்குங்கூட எந்த வித ஆட்சேபமும் இருக்கக் கூடாது என்றும் வாதிக்கிறார்.

இத்தகைய கேள்விகளையும் கிளப்பலாம் என்பது, காலத்தில் ஏற்பட்டிருக்கும் மாறுதலையே காட்டுகிறது. 'அத்தாட்சி பெற்ற கதரை' மாத்திரம் உபயோகிக்க வேண்டும் என்பதுதான் என் பதில். 'அத்தாட்சி பெற்ற கதர்' என்பதன் பொருளை விளக்கு

கிறேன். சர்க்கா சங்கத்தின் விளக்கமும் பூர்த்தியானது அல்ல. நூற்பவர்களுக்கும் நெய்பவர்களுக்கும் நியாயமான கூலி கொடுக்கப்பட்டிருக்கிறது, கதரின் விலை பொது மக்களின் நன்மையைக் கருதி, லாப நோக்கமில்லாமல் நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது என்பதுதான் உண்மையில் அது காட்டும் பொருள். தங்கள் தேவைக்கு என்று தாங்களே தயாரித்துக் கொள்ளும் கதருடன் அதிகப்படியாக மக்கள் கதரைப் பொதுவாக வாங்க வேண்டியும் நேருவதால், சர்க்கா சங்கம் அத்தாட்சி கொடுப்பது என்பது அவசியமாகிறது. மற்ற எந்தக் கதரும் அத்தாட்சி பெருதது; ஆட்சேபிக்கக் கூடியது. ஆகையால், அதை உபயோகிக்கக்கூடாது. கதருக்கு அத்தாட்சியளிக்கும் நிபந்தனைகளில் ஏதாவது அபிவிருத்தி செய்யலாம் என்ருல் பொதுமக்கள் அதற்கு யோசனை கூறலாம். ஆனுல், அத்தாட்சி பெற்ற கதருக்கும், அத்தாட்சி பெருத கதருக்குமுள்ள வித்தியாசத்தை நீக்கிவிட வேண்டும் என்பது முற்றிலும் தவருனதாகும்.

மேலும், கதருக்கும், மில் துணிக்கும், அந்நியத் துணிக்கும் வித்தியாசம் பார்ப்பதில்லை என்று ஒருவர் எவ்வாறு கண்ணை மூடிக்கொண்டுவிட முடியும்? அல்லது அந்நிய ஆட்சி போய் விட்டது என்பதற்காக அந்நியத் துணியை இறக்குமதி செய்வது எப்படி நியாயமாகும்? நாட்டின் பொருளாதார நாசத்தை உண்டாக்குகிறது என்பதற்காகவே அந்நிய ஆட்சியை எதிர்த்தோம் என்பதை நினைவில் வைக்க வேண்டும். ஆகையால், இந்தச் சாபக்கேட்டுக்கு முடிவை உண்டாக்குவதுதான் சுதந்திரத்தின் முதல் பலனுக இருக்கவேண்டும்.

முடிவாக, சுயராஜ்யத்தில் சுத்தமான கதருக்குத்தான் இட மிருக்கிறது என்றும் ஆகிறது. உண்மையான சரக்கு என்பதோடு அதில்தான் மக்களின் நன்மையும் இருக்கிறது.

—'ஹரிஜன்' 11—1—1948

# 21

# கதர்க் கடைகள்

சுயதேவைப் பூர்த்திக்கான கதரின் சாத்தியங்களைக் குறித்தும், மற்ற கைத்தொழில்களின் அபிவிருத்தியைக் குறித்தும் அறிவதற்காக ஸ்ரீ சங்கரலால் பாங்கர் கிராமங்களில் சுற்றுப் பிரயாணம் செய்தார். சுயதேவைப் பூர்த்திக்கான கதர் என்பது, முதலாவது கிராமவாசிகள் தங்களுக்கு வேண்டியதைத் தாங்களே சாத்தியமான இடங்களிலெல்லாம், அந்தந்தக் கிராமங் களிலேயே பருத்தியைச் சாகுபடி செய்து, அரைத்துப் பட்டை

போட்டுத் தயாரித்துக்கொள்ள வேண்டும் என்பது. கதரின் உண்மையான பணி இதுதான். கிராமவாசிகளுடன் விடாமல் தொடர்பு கொள்ளுவதனுலேயே இதில் வெற்றியடைய முடியும். இதிலுள்ள பொருளாதாரப் பலன் ஒருபுறமிருக்க, உழைப்பின் கௌரவத்தையும், பலனையும் அவர்கள் உணரவேண்டும். இந்தத் திட்டத்தின்படி கிராமவாசிகள் விரும்புவதற்கு ஏற்றதான கதர் ரகங்கள் உற்பத்தி செய்யப்படும். ஒவ்வொரு கிராமவாசியும் தாமே துவைத்து வெளுத்துக்கொள்ளுவாராகையால் கதரை வெளுப்பதையும் துவைப்பதையுங்கூடத் தவிர்த்துவிடலாம். இவ்விதம் தயாரிக்கப்படும் கதர் நீடித்து உழைப்பதாக இருப்பதைக் கொண்டு கவனித்தால், வேறு எந்தத் துணியையும்விட இது மலிவானதாகும். பட்டணத்துக் கதரில் சலவைக் கூலி, இருப்பில் வைக்கும் செலவு, வண்டிச் சத்தம், வாடகை, கமிஷன் போன்ற அதிகப்படி செலவுகள் எல்லாம் இருக்கின்றன. கிராமத்துக் கதரில் இந்தச் செலவுகளில் எதுவும் இல்லை. பட்டணங்களும், நகரங்களும், கிராமங்களின் தேவைக்குப் போனது போக மிஞ்சும் கதரையே தங்கள் உபயோகத்திற்கு நம்பியிருக்க வேண்டும். எனவே, எந்தக் கதர்க் கடையையும் நஷ்டத்தில் நடத்தக்கூடாது. அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கதர்க் கடைகள், முக்கியமாகத் தரத்தில்தான் கவனம் செலுத்த வேண்டுமேயல்லாமல் கலை என்பதன் பெயரால் வெறும் ஆடம்பரங்களில் ஈடுபடக்கூடாது. உண்மையான கலை இன்னது என்பது யாருக்குத் தெரியும்? இன்னும் ஒன்ருேடு சம்பந்தப் படுத்திச் சொல்லப்படுவதுதான் கலை. அகில இந்திய நூற்போர் சங்கக் கடைகள் தங்களுக்கான சொந்தப் போக்கில் நடக்க வேண்டும். கிராமக் கலையைப் பட்டணங்களில் புகுத்தவேண்டும். தங்களுக்கு வெற்றி உண்டாகும் என்ற நம்பிக்கையையும் கொள்ளவேண்டும். கதர்த் துணி ஒவ்வொன்றும் பலமுள்ளதாகவும், நீடித்து உழைப்பதாகவும் இருக்கவேண்டும். நீடித்து உழைக்க வேண்டியதைத் தத்தம் செய்துவிட்டு நயமாக இருக்கும்படி நாம் செய்யக்கூடாது. உறுதியாக இல்லாதது போவது முடிவில் கதரையே கொன்றுவிடும். பலத்தைத் தியாகம் செய்யாமல் மெல்லிய ரகக் கதரை நம்மால் தயாரிக்க முடியாதென்ருல், நம்மால் முடியாது என்பதை நாம் ஒப்புக் கொள்ளவேண்டும். செய்யும் சலவை, துணியை முதல் தடவை கட்டினதுமே கிழிந்துவிடும்படி செய்துவிடுகிறது என்பதைக் கவனித்திருக்கிறேன். ஆகையால், சலவை என்ருலே எனக்குப் பயமாக இருக்கிறது. எல்லாக் கதர் விஷயத்திலும் இதுதான் உண்மை என்று நான் சொல்லவில்லை. சலவை செய்த கதர் நீடித்து உழைப்பதில்லை என்பது அடிக்கடி தெரிவதாக இருப்பதால் கதர் வாங்குவோரைக் குறைத்துவிட்டது என்பதை நான் சொல்ல முடிந்தாலே என் காரியத்திற்குப் போதும். ஆகையால், கதர்க் கடைகள் நான் இங்கே சொன்னவைகளைக் கொண்டு அவசியமானதற்கு ஏற்பத் தரத்தை மாற்றிக்கொள்ளுவார்களாக.

இங்கே நான் கதருக்குச் சொன்ன அவ்வளவும் தோல் பதனிடுவதற்கும் மற்ற கிராமக் கைத்தொழில்களுக்கும் பொருந்தும். ஊழியர்கள், அதிக அனுபவம் இல்லாமல் பழைய கருவிகள், பழைய முறைகள், பழைய ரகங்கள் ஆகியவைகளில் குறுக்கிட வேண்டாம். இப்பொழுது இருக்கும் பழைய முறைகளையெல்லாம் வைத்துக் கொண்டு அபிவிருத்தியைக் குறித்து எண்ணுவதுதான் பத்திரமான வழி. உண்மையில் அது தான் சிக்கனம் என்பதையும் காண்பார்கள்.

—'ஹரிஜன்' 29—3—1935

[கதர்க் கடைகளைக் குறித்து மகாத்மா மேற்கொண்டு எழுதியிருக்கும் கட்டுரைகளை இத்தொகுப்பில் பதின்மூன்றும் பகுதியிலும், பதினான்காம் பகுதியிலும் காண்க.]

பகுதி பன்னிரண்டு

# தனக்கென்று நூற்பது

## 1

## புதிய கதர்த் திட்டம்

நூற்போரின் கூலியைக் குறித்தும், பொதுவாகக் கதர்க் கொள்கையைப் பற்றியும் அகில இந்திய நூற்போர் சங்கம் செய்திருக்கும் தீர்மானத்தை ஒவ்வொரு கதர் ஊழியரும் கவனமாகப் படிக்க வேண்டியது அவசியம். இப்புதிய கொள்கையைச் சரியானபடி வேலை செய்தால் அதனால் அதிக மாறுதல் ஏற்படும். இதைச் சரியானபடி வேலை செய்வதற்குத் தலைமைக் காரியாலயம் அப்போதைக்கப்போது வெளியிட்டு வரும் கட்டளைகளைக் கண்டிப்பாக நிறைவேற்றியாக வேண்டும்.

சுயதேவைப் பூர்த்திக் கதர், எல்லாக் கதர் ஸ்தாபனங்களிலும் முதலிடம் பெற்றாக வேண்டும். ஒருவகையில் சுயதேவைப் பூர்த்திக்கான கதரும், விற்பனைக்காகக் கதர் உற்பத்தி செய்வதும் சேர்ந்தேதான் நடைபெறும். விற்பனைக்காக உற்பத்தி செய்வது, சுயதேவைப் பூர்த்திக் கதரிலிருந்து வரும் உபப் பொருளாக இருக்கவேண்டும். சுயதேவைக் கதர், விற்பனைக் கதர் உற்பத்திக்கு வெற்றி அளிக்கும். ஊழியர்கள் கதர் கட்டுபவர்களாக இருக்கவேண்டும் என்பது உற்பத்தியின் நிபந்தனையாக இருப்பதால், அவர்கள் தங்களுக்குக் கதரைத் தாங்களே தயாரித்துக்கொள்ள வேண்டும் அல்லது எடுத்துக்கொள்ள வேண்டும். அவர்கள் எதிர்பாராமல், கேட்காமல் அவர்களுடைய கூலியில் அதிக உயர்வு கிடைப்பதால் அதைக் கொண்டு அவர்கள் இதைச் சுலபமாகச் செய்யலாம். ஆனால், கூலியைப் பெறுவது, பயனுள்ளதான கதர் அதிகப்படியாக உற்பத்தியாகியவுடனே விற்பனையாகக் கூடியதாக இருப்பதைப் பொறுத்திருக்கிறது. இவ்விதம் கதர் உற்பத்தி நிலையங்கள் இருக்கும் இடங்களில் சுயதேவைக் கதர் முறை எளிதாக இருக்கும். ஏனெனில், தங்களுடன் தொடர்பே இல்லாத மற்றவர்கள் இதை உணரும்படி செய்வதை நூற்போரும் நெய்வோரும் உணரும்படி ஊழியர்கள் செய்ய முடியும்.

ஆனால், அதிக விலை கொடுத்துக் கதரை யார் வாங்குவார்கள் என்று சிலர் கேட்கிறார்கள். அத்தகைய கேள்வி, அவர்களுடைய அறியாமையையும், நம்பிக்கையின்மையையும், திற

மைக் குறைவையுமே காட்டுகிறது என்பதுதான் என் கருத்து. கதருக்கு நகரங்களில் கிராக்கியை அதிகரிப்பது என்பதிலேயே இதுவரை நம் கவனத்தை யெல்லாம் செலுத்திக்கொண்டு இருந்துவிட்டோம்; பட்டணப் புத்திப் போக்கோடு இருந்து வந்தோம்; உற்பத்தி நிலையங்களுக்கு அருகாமையில் சுற்றிலு முள்ள இடங்களை ஆராய்வதில் சிரத்தை இல்லாமல் இருந்து விட்டோம்; உற்பத்தியாளர்களையே உதாசீனம் செய்துவிட் டோம். உற்பத்தியாளரைச் சோதிப்பதற்கு முன்னால், அவர்கள் உடன்படுவார்கள் என்று நாம் நம்புவதாக இப்பொழுது தோன்றுகிறது. சுற்றுப்புறங்களிலுள்ள பகுதிகளில் இருக் கும் மக்களிடத்திலும் நமக்கு ஏன் இதே நம்பிக்கை இருக்கக் கூடாது? அவர்களுடைய அன்றாட உபயோகத்திற்கு நிச்சய மாக அவர்களுக்குத் துணி வேண்டியிருக்கிறது. பக்கத்தில் இருப்பவர்கள் தயாரிப்பதில் கொஞ்சம் கதரை அவர்கள் வாங்கிக்கொள்ள வேண்டும் என்று எதிர்பார்ப்பது அதிக மானதா? இதில் உண்மையான முயற்சி எடுத்துக்கொண்ட வர்கள் தோல்வியடைந்ததே இல்லை என்பதை நான் அறிவேன். தோல்வி நம்மிடம்தான் இருந்திருக்கிறதேயன்றிக் கதரை வாங்கக்கூடியவர்களிடம் இல்லை. அவர்கள் இன்று வாங்கு வதும், உபயோகிப்பதும் எதுவாக இருந்தாலும் அதைப் பற்றிக் கவலை இல்லை; அவர்கள் எப்பொழுதும் நம்முடன்தான் இருக் கிறார்கள். சுற்றுப்புறங்களிலுள்ளவர்களின் தேவைகளை நாம் ஆராய்ந்தால், அவர்கள் விரும்பக்கூடியதான கதரை நாம் உற்பத்தி செய்து, அவர்கள் கவனத்தையும் கவர்ந்துவிடலாம். நகரவாசிகளுக்காக இதே காரியத்தை முன்பு கதர் ஊழியர்கள் செய்து வந்திருக்கிறார்கள். இவர்கள் இப்பொழுது தங்கள் கவனத்தைக் கிராமப் பகுதிகளுக்குத் திருப்புவார்களா? கதரை மக்கள் வாங்காமற்போவது, அது அதிக விலையுள்ளதாக இருப்ப தனால் அல்ல. நமக்கு நம்பிக்கையும், திறமையும் இல்லாதது தான் அதற்குக் காரணம். நமக்கு நம்பிக்கை மாத்திரம் இருக்கு மாயின், தூரக் கிழக்கிலிருந்து வரும் துணியை விற்பவர்களிடம் போகும் அதே கோடிக்கணக்கானவர்கள், நம்மிடம் வருபவர் களாகி விடுவார்கள். அந்தத் துணிகளை விற்பவர்கள், தங்கள் சரக்குக்குக் கிராக்கி இருப்பதற்கு அச்சரக்கு மலிவாக இருப் பதை நம்பியிருக்கிறார்கள். உள்ளூர் அபிமானத்தையும், நமது சரக்கில் ருசியை உண்டாக்குவதையும் கொண்டு நாம் துணி வாங்குவோரைக் கவர்ந்துவிடலாம்.

ஒவ்வொரு கதர் ஸ்தாபனமும் தன்னைத் தானே சமா ளித்துக் கொள்ளுவதாகவும், அதனால் சுதந்திரமானதாகவும் இருக்க வேண்டும் என்று அகில இந்திய நூற்போர் சங்கத்தின் நிர்வாக சபை வற்புறுத்தியதில் முழு நியாயமும் இல்லாமல் இல்லை. தங்களுக்குப் பாலாடையைக் கொண்டு தலைமைக் காரி யாலயம் ஊட்டிக்கொண்டிருக்கும் என்று அவை இனியும் நம்பி யிருக்க வேண்டியதில்லை. தலைமைக் காரியாலயத்திலிருக்கும்

நிதியை, இதுவரை நாம் உதாசீனம் செய்துவிட்ட பகுதிகளில் வேலை செய்வதற்கு உபயோகிக்கலாம்.

—'ஹரிஜன்' – 26—10—1935

## 2

# பரோபகாரத்திற்காக வாங்குவோர்

பழுத்த வயதினராகிய டாக்டர் பி. ஸி. ரே தமது 75-ஆவது வயதிலும், இளைஞருக்குள்ள சக்தியுடன், துன்பப்படும் மக்கள் விஷயத்தில் சிரத்தை கொண்டிருக்கிருர்.

அவர் எழுதுவதாவது:

"அட்ராய், தாலோரா, சாரியாகண்டி ஆகிய இடங்களுக்குப் போயிருந்தேன். சாரியாகண்டியில்தான் கடைசியாக ராட்டை புகுத்தப்பட்டிருக்கிறது. இப்பகுதிகளில் முக்கியமான விவசாயப் பொருள்களான அரிசி, சணல் ஆகியவைகளின் விலை அதிகமாகக் குறைந்து வர்த்தக மந்தம் ஏற்பட்டிருப்பதால், விவசாயிகளின் நிலைமை மிகவும் கஷ்டமானதாகிவிட்டது. முக்கியமாக சாரியாகண்டியின் நிலைமை இதுதான். ரெயில்வே நிலையத்திலிருந்து ஆறு மணி நேரம் நான் படகில் பிரயாணம் செய்ய வேண்டியிருந்தது. திரும்பும்போது ஆற்றின் வேகத்தை எதிர்த்துப் படகு போக வேண்டியிருந்ததால் பதினைந்து மணி நேரம் பிரயாணம் செய்ய நேர்ந்தது. வழியில் படகு ஓட்டிகளின் தலைவர் என்னுடன் பேசிக்கொண்டிருந்தபோது, ராட்டை கைக்கொள்ளப்பட்டிருப்பதால் அநேகர் சாகாமலிருப்பதற்கு உபாயமாயிற்று என்ருர். நானூறு, ஐந்நூறு ராட்டைகள் அங்கே வேலை செய்துகொண்டிருக்கின்றன. இன்னும் ராட்டைகள் வேண்டும் என்று மக்கள் என்னைச் சூழ்ந்து கொண்டு விட்டார்கள்.

"இங்கே தயாராகும் நூல் உயர்ந்த நெம்பருள்ள நூலாக இருப்பதால், அதைக் கொண்டு தயாராகும் கதருக்கு வங்காளத்தில் விற்பனை இல்லை. இதைப் பம்பாய்க்குக் கொண்டுபோய் விற்க வேண்டியிருக்கிறது. எனவே, உற்பத்தியாகும் கதரை விற்பது அதிகக் கஷ்டமானதாகிறது; இதைப் பற்றியெல்லாம் நீங்கள் அறிவீர்கள். பம்பாயிலும் விற்பனையாகாவிடில், உள்ளூர் நூற்பவர்களே அத்துணியை உடுத்தும்படி செய்ய முரட்டு ரக நூலைத் தயாரிக்க வேண்டியதுதான்.

"நூற்கும் பாரம்பரியமே மறைந்து போய்விட்டது. இதைக் கொண்டு பார்க்கும்போது குறைந்த காலத்திற்குள், அதிகமானுல் ஒன்றரை ஆண்டுகளுக்குள்ளாக, விரைவில் ராட்டையில் பழகிப் போய்விட்டதோடு அதிக நயமான நூலையும் உற்பத்தி செய்வது ஆச்சரியமாகவே இருக்கிறது. மறைந்து போன இக்கலைக்குப் புத்துயிர் அளிக்கவும், அது உயிரோடு இருக்கும்படி செய்யவும், அதிகப் பொறுமையாக வேலை செய்ய வேண்டியிருப்பதோடு ஆரம்பச் செலவுகளுக்கு அதிகப் பணமும் வேண்டியிருக்கிறது. என்ருலும்,

வடக்கு வங்காளத்தில் புதிய இடத்தில் வேலை தொடங்கப்பட்டிருக்கிறது. சோர்வடைந்து விடுவதில்லை என்பதே நமது லட்சியமாக இருக்க வேண்டும்.

"இப்பொழுது நான் அடுத்ததாகவுள்ள பாட்ன ஜில்லாவில் படகில் சுற்றுப்பிரயாணம் செய்துகொண்டிருக்கிறேன். சுற்றிலுமுள்ள மக்களின் பொருளாதார நிலைமையைக் குறித்துக் கொஞ்சம் தெரிந்துகொண்டும் வருகிறேன்."

நயமான கதரை உபயோகிப்போர், எதிர்பார்த்த அல்லது பயமுறுத்திய விலை உயர்வு ஏற்படுவதற்கு முன்னலேயே போய் விட்டனர். இன்னும் அதிகமாகப் போய்விட்டால் அது விலை உயர்ந்துவிட்டது என்பதனல் அல்ல. ஆனல், வாங்குவோரிடம் அன்போ, பரோபகார எண்ணமோ இல்லாது போனதுதான் இதற்குக் காரணம். பேரம் பேசும் உணர்ச்சியோடு எங்கே மலிவாகக் கிடைக்கும் என்று பரோபகார சிந்தனை தேடிக் கொண்டிருப்பதில்லை. மனிதனிடமிருக்கும் பரோபகார உணர்ச்சி, அவன் எதையாவது வாங்குவதிலும், சேவைக்குச் சந்தர்ப்பத்தையே நாடுகிறது. ஆகையால், அது வாங்கும் பொருளின் விலை என்ன என்பதை முதலில் அறிந்துகொள்ள விரும்புவதில்லை. ஆனல், அப்பொருளை உற்பத்தி செய்தவரின் நிலையை அறிய விரும்புகிறது; அதிக வறுமையிலிருப்பவர் களுக்கு உதவிக்குத் தகுதியானவர்களுக்குச் சேவை செய்யும் வகையில் வாங்குகிறது. தங்களைப் போன்றவர்களேயான மனித ரிடம் அன்புணர்ச்சியைக் கொள்ளும் ஆண்களும், பெண்களும் போதுமான அளவு அதிகமாக இருப்பார்களாயின், கதருக்குக் கிராக்கி எப்பொழுதும் அதிகரித்துக்கொண்டே போவதோடு எப்போதையும்விட இப்பொழுது அதிகமாகவும் இருக்கும். ஏனெனில், மிகவும் தாழ்ந்த நிலையிலிருக்கும் நூற்போருக்கு வாழ்க்கைக்குப் போதுமான கூலியாவது கிடைக்கும்படி செய்ய வேண்டும் என்று விசேஷ சிரத்தை எடுத்துக்கொள்ளப் பட்டிருக்கிறது என்பதை அவர்கள் அறிவார்கள். நூற்கும் பெண்ணுக்குக் கொடுக்க முற்படும் கூலி, எப்படியோ வாழ்க் கையை நடத்திக்கொண்டு போக அவளுக்கு முடியும்படி செய்வதோடு சத்துள்ள உணவும் அவளுக்குக் கிடைக்கும்படி செய்யும்.

கதர்த் தொழிலாளருக்கு வாழ்க்கைக்குப் போதுமானதான கூலியைக் கொடுக்க முயற்சி செய்வதோடு கதருக்குச் சிறந்த, அதாவது அதிக இயற்கையான விற்பனை இடத்தைத் தேடவும் முயற்சி செய்ய வேண்டும். பம்பாய், கல்கத்தா, சென்னை போன்ற பெரிய நகரங்களில் கதர் வாங்குவோரைப் பெற்று விடும் எளிதான வழியில் திருப்தியடைந்து இதுவரை இருந்து விட்டோம். நிச்சயமாக இது தவறானது. டாக்டர் ரே, அவர் உடல் நிலை அனுமதித்தால், கதர் உற்பத்தி நிலையங்களைச் சுற்றிலுமிருக்கும் இடங்களில் தமது அன்புப் பணியைப் பரப்ப

வேண்டும் என்று அவருக்கு யோசனை கூறியிருக்கிறேன். வங்காளம் முழுவதிலும் நயமான துணியையே உடுத்துகிறார்கள். நயமான கதரை ஏன் உடுத்தக்கூடாது? வங்காளம் விலை ஏற்றத்தில் விற்று லாபம் சம்பாதிப்பதற்கென்று பருத்தியை உற்பத்தி செய்யாமல், கண்டிப்பாக உள்ளூர் உபயோகத்திற்குத்தான் என்று உற்பத்தி செய்யுமானால், கதரைப் புதிய திட்டத்தின்படி மலிவானதாக்கிவிடுவது சாத்தியம். ஆனால், அந்த நாள் தொலைவில் இருக்கலாம். இந்தியாவின் மற்றப் பகுதிகளைப் போல வங்காளம் இச்சமயத்தில் வர்த்தகப் புத்தியுடன் விலையைக் கணக்குப் போட்டுக் கொண்டிருக்காமல் பரோபகார உணர்ச்சியுடன் கதரை வாங்க வேண்டும். நமது குழந்தைகளினாலோ, வயோதிகப் பெற்றோரினாலோ நமக்கு எவ்வளவு செலவு ஆகிறது என்று நாம் கணக்குப் போட்டுப் பார்த்துக் கொண்டிருப்பதில்லை. என்ன செலவானாலும் அவர்களைப் பராமரிக்கிறோம். பல நூற்றாண்டுகளாக நாம் உதாசீனம் செய்துவிட்ட குற்றத்தின் காரணமாகப் பட்டினி கிடந்து வரும் நம் கோடிக்கணக்கான சகோதர சகோதரிகளுக்கு இதையாவது நாம் செய்ய வேண்டாமா? இந்தியாவின் எந்தப் பகுதியையும் நாம் கவனிக்காமல் இருந்துவிடக் கூடாது. உற்பத்தியையும் உபயோகிக்கப்படுவதையும், கதர் விஞ்ஞானத்தின்படி பரவல் முறையில் அமைக்க வேண்டும். கதர் எங்கே உற்பத்தி செய்யப்படுகிறதோ அங்கேயே சாத்தியமான வரை அது உபயோகிக்கப்படுவதும் நடக்க வேண்டும். இதற்காக எல்லா முயற்சிகளையும் எடுத்துக்கொள்ள வேண்டும். நகரங்களின் தேவைக்கும் நாம் உற்பத்தி செய்யலாம். ஆனால், உள்ளூர் விற்பனையை நம்புவதுபோல் நகரங்களின் விற்பனையை நாம் நம்பி இருக்கக்கூடாது. முதலில் உள்ளூர்த் தேவையை ஆராய்ந்து அதற்கு வேண்டியதை நாம் கொடுக்க வேண்டும். அகில இந்திய நூற்போர் சங்கம் அல்லது அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தின் கீழ் வேலை செய்பவர்களும், கதர் வேலையில் ஈடுபட்டிருக்கும் எல்லாத் தொழிலாளரும் கதரே கட்ட வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுமாகையால், இதனால் கதருக்குக் குறைந்த பட்சக் கிராக்கி எப்பொழுதும் இருந்து வரும். இதைக் குறித்து சதீஷ்பாபுவும், அனந்தப்பூர் ஸ்ரீ ஜேதாலாலும் தனித்தனியாகக் கணக்குப் போட்டிருக்கிறார்கள். சுய தேவைப் பூர்த்திக் கதர் என்றால், தொழிலாளர்கள் மூன்று கெஜம் கதர் உடுத்தினால், வெளியில் இரண்டு கெஜம் அளவில் விற்பனையாகும் என்கிறார்கள். இக்கணக்கு சரியானதாக இருந்தால், சுயதேவைக் கதரை எல்லோரும் அனுசரிப்பதற்கு உள்ளூரில் வாங்குவோருக்கு ஆதரவு அதிகம் இருக்கவேண்டும். மற்றக் கிராமக் கைத்தொழில்கள் கதருக்கு உதவியாக இருந்து வருமாகையால், சுயதேவைக் கதருக்குக் கதரல்லாத மற்றக் கைத்தொழில்களின் உதவியும் இருக்கும். சுயதேவைக் கதருக்குப் பரீட்சை, அதை உடுத்துபவருக்கு அவருடைய உழைப்பைத் தவிர வேறு விலை எதுவும் அதற்கு இல்லை என்ற உண்மையில்தான் இருக்கிறது. நாடு முழுவதும்

உள்ளூர்களிலேயே விற்பனைக்கு வசதியை உண்டாக்கிக் கிராக்கி நிரந்தரமாக இருந்தாலன்றிச் சுயதேவைப் பூர்த்திக் கதர் பரவாது. நிரந்தரமான விற்பனை நிச்சயமாக இருக்கும்படி செய்வதற்கு உற்பத்தி நிலையம் ஒவ்வொன்றுக்கும் இன்னின்ன பகுதி என்று பிரித்துவிடுவது அவசியம். அப்படிச் செய்தால்தான் அதிகப்படியாக வந்து குவிந்துவிடுவதும், ஒரே ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்களிடையே வீணான போட்டியும் இல்லாமல் இருக்கும்.

—'ஹரிஜன்' –2—11—1935

## 3

# கொள்கையும் நடப்பும்

ஸ்ரீ கோபபந்து சௌத்திரி கீழ்வருமாறு எழுதுகிறார் :

" 'பரோபகாரத்தால் வாங்குவோர் தேவை' என்று நீங்கள் எழுதியிருக்கும் கட்டுரையில், சுயதேவைப் பூர்த்திக்கான கதர் என்றால் தொழிலாளர் 3 கெஜம் உபயோகித்துக்கொள்ளுவதற்கு வெளியில் 2 கெஜம் விற்பனையாகும்' என்ற கணக்கைக் குறித்து நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். சுயதேவைக்காக நூற்பவர், பருத்தி விலை, நெய்யும் கூலி ஆகியவைகளுக்காக மேற்கொண்டும் கொஞ்சம் அதிகமாக நூற்க வேண்டியிருக்கும் என்பதைக் கொண்டே இது கணக்கிடப்பட்டிருக்கிறது எனத் தெரிகிறது. நூற்கிறவள், பருத்தியை வாங்குவதற்கும், நெசவுக்குக் கூலி கொடுப்பதற்கும் வேண்டிய வருமானத்திற்கு மற்றக் கிராமக் கைத்தொழில்களையும் அவள் எதிர்பார்க்கலாம் என்பதையும் நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்கள். ஆனால், அக்கட்டுரையைப் படித்தால், சுயதேவைப் பூர்த்திக் கதர் வெற்றி பெறுவது முற்றிலும் கதர் விற்பனையைப்பொறுத்துத்தான் இருக்கிறது என்ற அபிப்பிராயமே உண்டாகிறது. ஆனால், இது சரியான கொள்கையா ? நூற்போரில் பெரும்பான்மையானவர்கள், தாங்களே பயிரிட்டுக்கொண்ட பருத்தியினால் நூற்றுக் கொள்ளுவார்கள் அல்லது மற்றக் கைத்தொழில்கள் மூலமோ, விவசாயத்தில் உழைப்பை அளிப்பதன் மூலமோ கிடைக்கும் சம்பாத்தியத்தைக்கொண்டு பருத்தியை வாங்கிக்கொண்டு நெசவுக்காரருக்கும் கூலி கொடுப்பார்கள் என்பதுதான் சுயதேவைப் பூர்த்திக் கதரின் கொள்கை அல்லவா ?

" இதுவல்லாமல், கிராமத்தில் ஒவ்வொரு குடும்பமும் கதரில் சுயதேவையைப் பூர்த்தி செய்வதாக இருப்பதே நமது லட்சியமாக இருக்கும்போது வெளியில் விற்பதற்கு என்று தயாரிக்கும் அதிகப்படியான இரண்டு கெஜத்தை நூற்பவர்கள் எங்கே விற்பார்கள்? நகரங்களில் அவ்வளவு கதருக்குக் கிராக்கி இருப்பது சாத்தியமா ?

" சுயதேவைப் பூர்த்திக் கதரை, வியாபாரத்திற்கான கதருடன் சேர்த்துக் கோப்பதால், சுயதேவைக் கதரின் முக்கியத்தைப் பலவீனப்

படுத்திவிடுகிறோம் என்று தோன்றுகிறது. எந்தக் கதர் ஊழியர்களிடம் புரட்சிகரமான மாறுதலை உண்டாக்க நீங்கள் விரும்புகிறீர்களோ அவர்கள் மனத்தில் சுயதேவைப் பூர்த்திக் கதருக்கு இரண்டாம் பட்சமான இடத்தையே உண்டாக்கும். தேவையான பருத்தியைச் சாகுபடி செய்துகொள்ளுவதற்குப்போதுமான நிலம் இருக்கிறது. நூற்பதற்கும் வேலையில்லாத ஓய்வு நேரமும் இருக்கிறது. ஆகையால், சுயதேவைப் பூர்த்திக் கதர் சுயமாக அதன் பலத்தைக்கொண்டே ஓங்கவேண்டும்.''

ஒவ்வொரு குடும்பமும் நிலம் வைத்துக்கொண்டு உணவு தானியங்களைப் பயிரிட்டு, தாங்களே சமைத்துச் சாப்பிட வேண்டும். அதே போலவே ஒவ்வொரு குடும்பமும் சொந்தமாகப் பருத்தி பயிரிட்டு, அதை நூற்று, நெய்து, உடுத்தவேண்டும் என்பதுதான் கொள்கை என்பதில் சந்தேகமில்லை. ஆனால், இந்தக் கொள்கையை ஒவ்வொரு குடும்பமும் நிறைவேற்றி விடாது, நிறைவேற்ற முடியாது என்பது நமக்குத் தெரியும். கலப்பில்லாத சுயதேவைப்பூர்த்திக் கதரின் செய்தியைப் பிரசாரம் செய்ய ஆரம்பித்ததுமே ஊழியருக்கு வெற்றி கிடைத்துவிடாது என்பதையும் நாம் அறிவோம். ஒரு குடும்பத்தினர் போதுமான பருத்தியை வாங்கி, அதைத் தாமே நூற்றுத் தாம் சம்பாதித்து மிச்சம் வைத்திருப்பதிலிருந்து கூலிகொடுத்து நெய்துகொள்ளவேண்டும் என்று கோபபந்து பாபு கூறுவதும்கூட நடுவாந்தரமான ஒரு கட்டம்தான். ஆனால், சம்பாதித்து மிச்சம் வைத்திருப்பது என்பது எதுவுமே இல்லாத மக்கள் கோடிக்கணக்கில் இருக்கிறார்கள்; மேற்கண்ட முறைகளில் எதையும் அனுசரிக்காமல் துணியை வாங்கிக் கொண்டிருப்பவர்களும் கோடிக்கணக்கில் இருக்கிறார்கள். ஒருவர் தமக்கு வேண்டியதைத் தாமே நூற்றுக் கொண்டு, மற்றக் கைத்தொழில்களிலிருந்து கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு பருத்தியை வாங்கி, நெசவுக் கூலியையும் கொடுப்பது என்பது ஒரு நடுவாந்தரக் கட்டம். அதிகப்படியாக நூற்று, அந்த உழைப்பில் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு பருத்தி வாங்கி, நெசவுக் கூலியையும் கொடுப்பது என்பதும் ஒரு நடுவாந்தரக் கட்டமே. ஆனால், தொழிலாளர், நெசவாளர் சௌகரியத்தைக் கொண்டு பார்த்தால் இருவருக்கும் இது எளிதானதாக இருக்கும். இந்தக் கட்டத்தை வேலை செய்வதற்குத் தயாராக இருக்கும் கதர் நிலையங்கள் நம்மிடம் இருக்கின்றன. அங்கே, அகில இந்திய நூற்போர் சங்க ஸ்தாபனங்களின் மூலம் தொடர்ந்து வேலை கிடைக்க வேண்டுமானால், தொழிலாளர்கள் கதர் கட்ட வேண்டும் என்று ஊழியர்கள் அவர்களைத் தூண்டவேண்டும். நூற்பது, நெய்வது, பஞ்சுப் பட்டை போடுவது, சாயம் போடுவது ஆகிய வேலைகளைச் செய்வதனால் தான் தங்கள் ஜீவனம் நடக்கிறது என்ற நிலையிலுள்ளவர்கள் தொழிலாளரில் அநேகர் இருக்கிறார்கள். இவர்கள் தங்களுக்கு வேண்டியதற்கு அதிகமாகக் கதரை உற்பத்தி செய்து, அந்தச் சரக்கு விற்றால்தான் இவர்கள் கதர் கட்ட முடியும். நூற்போரின் கூலியை உயர்த்திவிட்டாலும் கதருக்கு இப்பொழுது இருக்கும்

கிராக்கி தொடர்ந்து இருந்து வருமானல், இது கஷ்டமானதா கவே இருப்பதற்கில்லை.

நடைமுறையில் எல்லாக் கட்டங்களிலும் ஒரே சமயத்தில் வேலை செய்யப்படும். புதிய திட்டம் செய்வதெல்லாம், சரியான இடத்தை வற்புறுத்தி லட்சியம் இன்னதென்பதைத் தெளிவாகச் சொல்லி வருவதேயாகும். கதர் விற்பனையை அதிகரிப்பதிலும், கதரின் விலையைக் குறைத்துக்கொண்டு போவதிலும் கதர் ஊழியர்கள் இனி தங்கள் கவனத்தையெல்லாம் செலுத்திக்கொண் டிருக்கமாட்டார்கள். இனி மக்கள், குறைந்த பட்சம் நூற்கும் அளவுக்காவது தங்களுடைய துணித் தேவையில் சுயதேவையைப் பூர்த்தி செய்துகொள்ளுபவர்களாக ஆகவேண்டும் என்பதிலேயே ஊழியர்கள் முழுக் கவனத்தையும் செலுத்துவார்கள். தொழிலாளருடன் அவர்கள் சொந்தத் தொடர்பு வைத்துக்கொண்டு அவர்களுக்கு நண்பர்களாக வேண்டும். அவர்களுடைய தேவைகள் யாவை என்பதை அறியவேண்டும். எல்லோருக்கும் சம சந்தர்ப்பம் என்பதற்கு ஏற்ற வகையில் சாத்தியமான வரையில், அவர்களுடைய ஓய்வு நேரத்தைப் பயன்படுத்துவதன் மூலம் அவர்களுடைய பொருளாதார நிலை மேலும் மேலும் அபிவிருத்தி அடைவதற்கான உதவியையும் ஊழியர்கள் செய்ய வேண்டும். அதிக ஆர்வமுள்ள ஊழியருக்கு இதுவே சிறந்த வேலைத் திட்டமாக வேண்டும். இதில் அதிகக் கஷ்டமான வேலை, ஒருபுறம் கோடிக்கணக்கான மக்களின் அறிவுக் கண்களைத் திறந்து தங்கள் மேம்பாட்டிற்காகத் தங்கள் ஓய்வு நேரத்தைப் பயன்படுத்திக்கொள்ளும்படி செய்வது. மற்றோர் புறத்தில், கிராமங்களில் தயாரான பொருள்களின் விலை, தாங்கள் இதுவரை வாங்கிக்கொண்டு வந்ததைவிடக் கொஞ்சம் அதிகமாக இருந்தாலும், அவற்றின் தோற்றம் இதுவரையில் அவர்கள் பழக்கப்பட்டு வந்திருப்பதைப்போல இல்லாது போயினும், கிராமத்தில் தயாரானவைகளை வாங்கினல் நாளாவட்டத்தில் அவர்களுக்கே நன்மை என்பதை நகர மக்களும் நடுத்தர வகுப்பாரும் உணரும்படி செய்வதும் அதிகக் கஷ்டமான வேலையாகும். இது மக்களின் செல்வ நிலையை உயர்த்தி, அவர்களுக்குள்ள வாங்கும் சக்தியை அதிகமாக்குமாகையால் இவர்களுக்கு இதனல் நன்மை உண்டாகும். ஆகையால், ஜாதி, நிற, மத பேதமின்றித் தேச மக்கள் எல்லோரிடமும் இருக்கும் சிறந்ததைக் கிரகிப்பதற் கென்று ஏற்பட்டதே புதிய திட்டம். முடிவாக இப்பிரச்னை இதற்குத்தான் வந்து சேருகிறது; இந்த வேலைக்குப் போதிய அளவு தூய்மையும், தன்னலத் தியாகமும், உழைப்பும், அறிவும் உள்ள ஊழியர்கள் நம்மிடம் இருக்கிறார்களா?

—'ஹரிஜன்' – 30—11—1935

## 4

# கிராமங்களுக்குக் கதர்

அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கதர் சம்பந்தமான கொள்கை முழுதும் மற்றப்பட்டுவரும் இச்சமயத்தில் அநேகக் கதர்க் கடைகளின் நிர்வாகத்தில் இருந்து வருபவர்களுக்கு ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்த வேண்டியதாகிறது. கடனுக்குக் கதரை விற்பது என்பது, மொத்தத்தில் கதருக்கு லாபத்தைவிட நஷ்டத்தில்தான் முடிந்திருக்கிறது என்பதே அது. நண்பர்களுக்கும், தெரிந்தவர்களுக்கும், பணக்காரர்களுக்கும் கடன் கொடுக்கலாம் என்ற ஆசை அதிகமாகவே இருக்கும். பணம் வராது என்ற பயமே இல்லை என்று அவர்கள் சொல்லும்போது கடன் கொடுக்க மறுத்தால் அவர்களுக்குக் கோபம் வரும். விற்பவர், வாங்க வருபவர்களிடையே வித்தியாசம் பாராட்ட வேண்டும் என்று எதிர்பார்ப்பது தவறு என்பதை இந்த நல்ல மனிதர்கள் உணருவதில்லை. நண்பர்களும் பணக்காரர்களும் வாங்கின கடனைக் கொடுக்கவில்லை என்று கதர்க்கடை மானேஜர்களிடமிருந்து ஏராளமான புகார்கள் வந்திருக்கின்றன. கடனை வசூலிக்கக் கோர்ட்டில் நடவடிக்கை எடுப்பதென்பது கஷ்டமான, அதிகச் செலவாகும் வேலை. இதில் அளவுக்கு மிஞ்சிய தொந்தரவும் இருக்கிறது. ஆகையால் சிலருக்குக் கோபம் வந்தாலும் வரட்டும், சில வாடிக்கைக்காரர்கள் போய்விட்டாலும் போகட்டும் என்று விட்டுவிட்டு ‘கடனுக்கு வியாபாரம் இல்லை’ என்ற பொன்னான விதியை அனுசரித்து நடப்பதுதான் பத்திரமான வழி.

நகரங்களுக்கு மாத்திரம் அல்ல, கதர் வேலை. கதரின் அழைப்பைக் கேட்கக் காத்துக்கொண்டிருக்கும் கிராமங்களிலிருக்கும் கோடிக்கணக்கான மக்களிடையே அது பரவவேண்டும் என்பதைக் கதர் ஊழியர்கள் உணரட்டும். இவர்களை அடைவது எப்படி என்பது நமக்குத் தெரியவில்லை. இதுவரையில் சுற்று வழியில்தான் நாம் முயற்சி செய்து வந்திருக்கிறோம். நகரங்களின் கதர்க் கடைக் கணக்குகளில் விற்பனை ஏறிக்கொண்டே போகிறது என்று காட்டும் வீணான முயற்சியில் நாம் நேரான, உண்மையான வழியைக் கண்டுகொள்ள முடியாது. கிராம மக்களுக்குப் போக அதிகப்படியாக இருக்கும் கதர் மாத்திரமே நகரங்களுக்குப் போக வேண்டும் என்பதை ஊழியர்கள் அறியட்டும். ஏராளமான கதரைக் கிராமவாசிகள் தயாரித்து உபயோகிக்க வேண்டும். கிராமவாசிகளை அடைவதற்குச் சரியான வழி, அவர்களுடைய குடிசைகளிலேயே அவர்களிடம் கவனம் செலுத்துவதுதான். ஆகையால், நகரங்களில் விற்பனையாகும் கதர், கதர் வேலையின் அபிவிருத்தியைக் காட்டுவதாக ஆகாது. கதரைப் பற்றி இனி தயாரிக்கும் புள்ளி விவரங்கள், வருடத்திற்கு வருடம்

கிராமங்களில் என்ன அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது என்பதைக் காட்டவேண்டும். கிராமங்களில் கதரைப் பரப்புவதற்கு அதிகமான தொண்டர்களுக்கு அவகாசம் கிடைக்க வேண்டுமாயின், நகரங்களில் நமக்குள்ள வேலைகளைக் குறைத்துவிட வேண்டும். இதைச் செய்வதற்குள்ள ஒரு வழி, கடனுக்கு விற்பதை அடியோடு ஒழித்துவிட்டு. உண்மையாகவே கதரை விரும்புகிறவர்களிடத்தும், ரொக்கம் கொடுத்து வாங்குவதன் மேன்மையை உணருகிறவர்களிடத்திலும் கவனம் செலுத்துவதோடு இருப்பதுதான். கடனுக்கு விற்பதென்றால் விலையை உயர்த்த வேண்டி வருகிறது. ஏனெனில், இதில் அதிக வேலை, அதாவது செலவு ஆகிறது. எல்லா வகையிலும் கவனித்தால், ஒரு வேளை சில வாடிக்கைக்காரர்களுக்குச் சௌகரியமாக இருக்கலாம் என்பதைத் தவிர கடன் வியாபாரத்தில் எந்த நன்மையும் இல்லை. ஆனால், ஒரு சிலருடைய சௌகரியத்திற்காக அல்ல, கதர். எல்லோருடைய நன்மைக்காகவும் இருக்கிறது, அது. ஆகையால், கதர் விற்பனையை ரொக்கத்துக்குத்தான் என்று கட்டுப்படுத்தி விடுவதால் அகில இந்திய நூற்போர் சங்கம், பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களின் நன்மையை மாத்திரமேயன்றி நகரங்களில் கதர் வாங்குவோரின் நன்மையையும் நாடுவதாகிறது.

—'ஹரிஜன்'–7—12—1935

## 5

# சுயதேவைக் கதர்

உழவனுக்கு உதவுவதற்கு உகந்தது கையினால் நூற்பது என்பதை மைசூர் எப்பொழுதும் உணர்ந்து வந்திருக்கிறது. அங்கே அத்தகைய கதர் நிலையங்கள் பலவற்றை நடத்தி வருகிறார்கள். அகில இந்திய நூற்போர் சங்கம் அப்போதைக்கப்போது செய்துவரும் ஆராய்ச்சிகள், அபிவிருத்திகள் ஆகியவைகளை உடனுக்குடன் அறிந்திருப்பதற்காகச் சங்கத்துடன் அந்த நிலையங்களின் மானேஜர்கள் தொடர்பு வைத்துக்கொண்டிருக்கிறார்கள். பதன்வால் நூற்பு நிலையம், அகில இந்திய நூற்போர் சங்கக் காரியதரிசிக்கு எழுதியிருக்கும் கீழ்க்கண்ட கடிதம் ருசிகரமானதாகும்:

"உள்ளூரில் கதர் விற்பனையை அதிகரித்து, கிராமங்களில் கதரைப் பரப்பும் கொள்கையைத் தொடர்ந்து நடத்திக்கொண்டு போக அரசாங்கத்தின் அங்கீகாரம் கிடைத்திருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அகில இந்திய நூற்போர் சங்கம் செய்திருக்கும் புதிய மாறுதல்களை

அனுசரித்துக்கொண்டு போக மேற்கொண்டிருக்கும் புதிய கொள்கைப்படியாகும் இது. இந்த நிலையத்தின் பிரதேசத்தில் இருக்கும் உண்மையான நூற்பவருக்கும் நெசவாளருக்கும் அடக்க விலையில் கதர் கொடுக்கப்படுகிறது. 1934 நவம்பரிலிருந்து இந்த வழியில் வேலை ஆரம்பமாயிற்று. இதுவரையில் ரூ. 50,000-க்குக் கதரை சுமார் ஆயிரம் நூற்போருக்கு விற்றிருக்கிறோம். துணியைக் கொடுத்துவிட்டு நூல் வாங்கிக்கொள்ளும் சமயத்தில் வாரத் தவணையில் பணத்தை வசூலித்துக் கொள்ளுகிறோம். ஏப்ரலிலிருந்து திரும்பவும் விற்பனையை ஆரம்பிப்பது என்று இருக்கிறோம். இத்தடவை ரூ. 2000-க்குக் கதரை, முக்கியமாகக் கிராமப் புடவைகளை விற்பது என்பது எங்கள் திட்டம். இவ்வேலைத் திட்டம் இங்கே ஒழுங்காக நடந்து வருவதைக் காண்கிறோம்.''

ஊக்கமளிக்கும் இதே போன்ற அறிக்கைகள் பல இடங்களிலிருந்தும் வந்து கொண்டிருக்கின்றன. உண்மையான கதர் வேலை இன்னது என்பது இப்பொழுது புரிந்துவிட்டதால், ஊழியர்கள் எல்லா நடவடிக்கைகளையும் ஒரே சமயத்தில் மேற்கொள்ள வேண்டும் என்று யோசனை கூறுவேன். பருத்தி சாகுபடி செய்வது எப்படி என்பதைக் குறித்து அறிந்துகொண்டு பருத்தி சாகுபடி செய்வதன் மூலம் வேலையை ஆரம்பித்துவிட வேண்டும். கிராம உபயோகத்திற்கு வேண்டிய பருத்தியை அநேகமாக எல்லா இடங்களிலுமே சாகுபடி செய்துவிடுவது சாத்தியம். உலகத்திற்கெல்லாம் பருத்தி விற்கவேண்டும் என்ற ஆசையிருந்தால் அதற்கான சிறந்த நிலம் எது என்பதில் கவனம் செலுத்த வேண்டும். ஆனால், கிராமத்தின் தேவைக்கு வேண்டியதற்குச் சாகுபடி செய்வது எனும்போது சாதாரணமான நிலமே போதுமானது. ஒரு வயலில் ஒரு மூலையில் பருத்தி போட்டால் ஒரு கிராம விவசாயிக்குப் போதுமான பருத்தி விளைந்துவிடும் அல்லது ஒரு கிராமம் தனக்குத் தேவையான பருத்தியைக் கூட்டுறவிலும் சாகுபடி செய்துகொள்ளலாம். இதைச் செய்துவிட்டால், உள்ளூரில் தயாராகும் துணியை விலையிலோ அல்லது நீடித்து உழைப்பதிலோ, இறக்குமதியாகும் எந்தத் துணியும் ஜெயித்துவிடாதபடி செய்துவிடுவது சுலபம். இந்த முறையானது, சக்தி விரயமாகாமல் திரண்டிருக்கும்படி செய்கிறது. இப்படிப்பட்ட சிறந்த நிலைமையில் பஞ்சு அரைப்பது, பட்டை போடுவது, நூற்பது ஆகியவை இன்பமானதாகவும், எளிதானதாகவும் ஆகிவிடுகின்றன. ராட்டையிலும் அதிக மாறுதலைச் செய்ய வேண்டியிருக்கிறது. கதிர் சுழல்வது சரியானபடி இல்லாது போகும்போது அதிகச் சக்தி விரயமாகிவிடுகிறது. இதைக் குறித்து என்றே சீக்கிரத்தில் ஒரு கட்டுரை எழுதுவது என்று இருக்கிறேன்.

—' ஹரிஜன் ' – 20—4—1935

## 6

# சுயதேவைக்குப் போதிய கதர்

சுயதேவைக்குப் போதிய கதர் என்பதற்கானதும், அதன் வெற்றிக்கானதுமான நிலைமைகள் வேறு; கதரின் உற்பத்தியில் எந்தக் கட்டத்திலும் அதைத் தயாரிப்பதற்காக உழைக்காத, உழைக்க முடியாத பட்டணவாசிகளுக்காகத் தயாரிக்கும் கதரைப் பற்றிய நிலைமை வேறானது. விற்பனைக்காகத் தயாரிக்கப்படும் கதரில் பருத்தி விதைத்துப் பஞ்சு எடுப்பதிலிருந்து நூலைத் துணியாக நெய்யும் வரையில் உள்ள வேலைகளைப் பலரிடம் பிரித்து விட்டுவிடுவது, முக்கியமான உழைப்புக்குக் கூலி ஒரே மாதிரியாகவோ, ஏறக்குறைய அது போன்றோ இருக்கும்போது சுலபமானது. இதைத் தக்க மேற்பார்வையில் கூட்டுறவு முறைப்படி தனியான வேலையாக்கும்போது நல்ல பலனையே அளிக்கும். ஆனால், சொந்த உபயோகத்திற்கு என்று ஒரு பொருள் தயாரிக்கப்படும்போது, அதே குடும்பத்திலோ அல்லது அதே கைகளிலோ அதிக கவனம் செலுத்தப்படும்போது, நேரமும் பணமும் அதிக மிச்சம் ஆகிறது. கொஞ்ச காலத்திற்காவது தன்னுடையது என்று சொல்லக் கூடியதாக ஒருவரிடம் கொஞ்சம் நிலம் இருந்து, அதில் தினமும் வேலை செய்து வருவாரானால், அவரும் அவருடைய குடும்பமும் ஓய்ந்த நேரங்களில் செய்யும் உழைப்புக்காகவே அவருக்கு வேண்டிய கதர் கிடைத்துவிடும். அவருக்கு வேண்டியதெல்லாம், ஒவ்வொருவரும் தமக்கு வேண்டிய கதரை எப்படி ஒரு செலவுமின்றித் தயாரித்துக் கொண்டுவிடலாம் என்பதைக் குறித்துச் சொல்லிக் கொடுக்கப்பட வேண்டியதே. உழைப்புக்குக் கூலி கொடுக்க வேண்டியிருக்கும்போது, நேரத்திற்குத் தகுந்த சயமான கூலி விகிதம் தரும்போது, செலவின் பெரும் பகுதியை நூற்பே எடுத்துக்கொள்ளும். ஏனெனில், ஒரு கெஜம் கதருக்கு வேண்டிய நூலை நூற்பதற்கு, அதற்கு முன்னும் பின்னும் செய்ய வேண்டியிருக்கும் வேலைகளுக்காகும் நேரத்தைவிட அதிக நேரம் வேண்டும். ஒருவர் தாமே பஞ்சை அரைத்துப் பட்டை போட்டு, நூற்பாரானால் இதை அவர் சுலபமாகச் செய்துவிடுவதோடு மில் துணி கிடைக்கும் விலைக்கே தமக்கு வேண்டிய கதரை அவர் பெற்றுவிடலாம். ஒரு பொருளின் விலை, அது தயாரிப்பதற்கு ஆகும் உழைப்பின் செலவையே காட்டுகிறது. ஆகவே, ஒரு பொருளை உபயோகிப்பவரிடமிருந்தே அந்த உழைப்பு வரும்போது, அந்த உழைப்பையும் அவர் தமது ஓய்ந்த நேரத்தில் அளிக்கும்போது, அப்பொருளுக்குச் செலவே இல்லாது போகிறது. சுயதேவைக் கதர், மத்தியில் யாரும் இல்லாதபடி அடியோடு விலக்கிவிடுகிறது. அரைப் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான கிராம மக்களுக்குக் குறிப்

பிடத்தக்க முறையில் வருமானத்தை அதிகப்படுத்துவதற்கு இதுவே எளிதான முறையாகும்.

ஆனல், கிராமவாசி சுயதேவைக்கு வேண்டிய கதரை உற்பத்தி செய்துகொள்ள எப்பொழுதாவது முற்படுவாரா? ஆம், நுட்பத் திறமையுடன் சேர்ந்து நம்பிக்கையும் நமக்கு இருக்குமானல் அல்லது மலையும் நகரச் செய்துவிடுவதான உயிர் நம்பிக்கை நமக்கு இருந்து, சந்தேகத்திற்கு இடமின்றிக் கஷ்டமான தேயான, அவசியமான எல்லா ஆற்றலையும் ஊழியர் கிராமவாசிக்கு அளிப்பாராயின், அவர் அதை மேற்கொள்ளுவார். ஆனல், கஷ்டமானதாயிருந்தாலும், எளிதானதாக இருந்தாலும், பெரிய அல்லது ஒழுங்கான அளவில், நன்ருகச் சிந்தித்துத் தயாரித்த திட்டத்தின்படி இது இன்னும் முயற்சி செய்து பார்க்கப் படவில்லை. கிராமவாசிகள் தங்களுக்கு வேண்டிய துணியைத் தாங்களே தயாரித்துக்கொள்ளுவதற்கு அவர்களுக்குச் சொல்லிக் கொடுத்து, அவர்களிடம் இருக்கும் மிகக் கொஞ்சமும் அவர்கள் கிராமங்களிலிருந்து அனுவசியமாக வடிகட்டிக்கொண்டு போகப்பட்டு விடுவதைத் தடுப்பதற்கு நன்ருகச் சிந்தித்து இந்தியா முழுவதற்குமான ஒரு முயற்சியைச் செய்தாலன்றி, அகில இந்திய நூற்போர் சங்கம் இருந்தும் பயனில்லை. ஏனெனில், சமீப காலமாக இப்பத்திரிகையில் நான் வற்புறுத்திக் கூறி வந்திருப்பது போல, உள்ளூரிலேயே கதரை உற்பத்தி செய்து, அங்கே உபயோகித்துக்கொண்டு கிராமங்களில் எல்லோரும் அதை உபயோகிக்கவேண்டும் என்பதைத் தவிர கதரின் உபதேசம் என்பது வேறு எதுவும் அல்ல. பருத்தி பயிரிட்டு, என்றுமே அறியாத இடங்களில்கூடப் பருத்தியைப் பயிரிடும்படி தூண்டுவதன் மூலம் இந்த வேலையை ஆரம்பிக்க வேண்டும். பருத்தி சாகுபடியைப் பரவலாக எங்கும் அனுசரித்தாலன்றி, கிராமங்களில் எல்லாம் கதர் உற்பத்தி செய்வது என்பது சாத்தியமாகாதிருக்கலாம். புத்திசாலித்தனமாக மண்ணைப் பண்படுத்திக் கொஞ்சும் நந்தவனங்களாக்கப்பட்டிருக்கின்றன என்பதற்கு ஆதாரபூர்வமான உதாரணங்கள் நமக்கு இருக்கின்றன. ஆகையால், உள்ளூர் உபயோகத்திற்கு வேண்டிய பருத்தியை ஒவ்வொரு கிராமமும் பயிரிட்டுக்கொள்ளுவது அசாத்தியமன்று. இது, கிராமங்களுக்குக் கதரை மலிவானதாக்குவதோடு கதரின் நாள் பட்டு உழைக்கும் தன்மையையும் அதிகரிக்கும். உபயோகிக்கும் பருத்தியின் ரகம், பருத்தி எடுப்பது, சுத்தம் செய்வது, அரைப்பது, பட்டை போடுவது, நூற்பது ஆகியவைகளில் அனுசரிக்கப்படும் முறை நூலின் பலத்தையும், அதிக நூல் நூற்பதையும் பாதிக்கிறது என்பதை அனுபவம் தெளிவாகக் காட்டியிருக்கிறது. ஷாப்னம் அல்லது காலைப் பனிப் படலம் போன்ற மென்மையான டாக்கா மஸ்லினைத் தயாரிக்க வேண்டுமானல், பஞ்சிலிருந்து அது சம்பந்தமான வேலைகளையும் பக்குவமாகக் கையாள வேண்டியிருக்கும்.

—'ஹரிஜன்' – 3—8—1935

# 7

## கிராம ஊழியருக்குத் தக்ளி

கிராமங்களில் துணி விஷயத்தில் மக்களிடம் தன்னம்பிக்கை உபதேசத்தைப் பரப்பும் வேலையை இந்தியாவின் பல பகுதிகளிலும் மேற்கொண்டிருக்கும் அநேக ஊழியர்களும், நூற்பதற்கு உபாயமான தக்ளிக்குள்ள ஆற்றலில் தங்கள் கவனத்தைச் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். கொஞ்ச காலத்திற்கு முன்னல் இதே விஷயத்தைக் குறித்து இப்பத்திரிகையில் எழுதியிருக்கிறேன். இன்னும் அதிகக் கவனத்துடன் ஆராயத்தக்க விஷயம் இது. தக்ளிக்கு இருக்கும் உற்பத்தி சக்தி, சரியானபடி கையாளப்படுமாயின், எல்லா வகையிலும் ராட்டைக்குச் சமமானது என்பதைச் சத்தியாக்கிரக ஆசிரமத்தில் இருப்பவர்களும், வார்தாவில் இதன் சகோதர ஸ்தாபனங்களில் இருப்பவர்களும் செய்து காட்டியிருக்கிருர்கள். முற்றிலும் பலவீனமான நிலையில் இல்லாதவருக்கு, ஊதியம் பெற வேண்டும் என்ற எண்ணமில்லாமல் ஓய்ந்த நேரங்களில் மாத்திரம் நூற்க விரும்புகிறவருக்கு, ராட்டையை முற்றிலும் விட்டுவிட்டு மேற்கொள்ளக்கூடியது, தக்ளி. ஆகையால், ஊழியர்கள் தக்ளியில் நூற்கும் புது முறையைக் கற்றுக்கொண்டு ராட்டைக்குப் பதிலாக இதைக் கிராமங்களில் புகுத்த வேண்டும். வயதானவர்களுக்கும் பலவீனமாக இருப்பவர்களுக்கும் இன்னும் ராட்டைதான் அவசியமானதாக இருக்கும். ஏனெனில், யந்திர சாஸ்திரத்தின்படி பல லீவர்களைக் கொண்டு இயங்கும் தக்ளியே ராட்டையாகிறது. ஒரு பாரத்தைக் கையினல் தூக்குவதற்கு வேண்டிய பலம் தசைகளுக்கு இல்லாத ஒருவருக்கு அதைத் தூக்குவதற்கு ஒரு நெம்புகோலின் உதவி வேண்டும். அதே போலத் தமது உள்ளங்கையின் தசைகளின் மூலம் தக்ளிக்கும் போதுமான வேகத்தைக் கொடுக்க முடியாதவருக்கோ, விடாமல் கையை மேலே தூக்கிக் கீழே தாழ்த்திக்கொண்டிருக்க வேண்டிய சிரமத்தைத் தாங்க முடியாதவருக்கோ ராட்டையே வேண்டியிருக்கும்.

—'ஹரிஜன்' – 22—3—1935

# 8

## தனுஷ் தக்ளி

சாதாரண ராட்டையில் நான் நன்ருக நூற்க முடியும் என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆனல், தனுஷ் தக்ளியில்தான் நூற்பது என்று நான் தீர்மானித்துக் கொண்டிருப்பதோடு இப்

பொழுது அநேகமாக அதில் நிபுணனுமாகிவிட்டேன். இதற்குக் காரணம், லட்சுமிதாஸ் பாய் இருபத்தைந்து லட்சம் ராட்டைக்கு வந்திருக்கும் கோரிக்கைப்படி செய்து கொடுக்க முடியாமலிருந்தாலும் மக்கள் அந்தத் தொகை தனுஷ் தக்ளியைத் தாங்களே செய்துகொண்டு விடலாம். இதைச் செய்வது மிகச் சுலபம்; அதிக மலிவானது. இதற்கு அதிகச் சாமான்களே வேண்டியதில்லை; நுட்பத் திறமையும் எதுவும் இல்லை. பஞ்சாபுக்கோ, தென்னிந்தியாவுக்கோ ஏற்றுமதி செய்வதற்காக சாபர்மதியில் ராட்டைகளைச் செய்வது என்பது தவறான கொள்கை. எங்கும் உள்ளூரிலேயே அவற்றைச் செய்துகொள்ள வேண்டும். அப்படிச் செய்து கொள்ளுவதற்கு ஏற்றது தனுஷ் தக்ளிதான். இதை எல்லோரும் உபயோகிப்பதானல் உற்பத்தி ஏராளமாக அதிகரித்துவிடும்.

—'ஹரிஜன்'–22—3—1935

## 9

# முக்கியமானவை மூன்று

கோடிக்கணக்கான மக்களிடையே உறுதி இருக்கிறது என்று வைத்துக்கொண்டாலும், கீழே கண்ட மூன்று காரியங்களை அனுசரிப்பதனல் மாத்திரமே கையினல் நூற்பது தீவிரமாகப் பரவுவது சாத்தியம் :

1. ஒருவருடைய சொந்த நிலத்தில் பயிரான பருத்தியாக இல்லாதபோது கிட்டத்திலிருக்கும் இடத்தில் கிடைக்கும் கொட்டை எடுக்காத பருத்தியை உபயோகித்துக் கொள்ளுவது.

2. மெருகிட்ட பலகை மீது வைத்து இரும்புக் கம்பி அல்லது வழுவழுப்பான மரக் கம்பி கொண்டு பருத்தியின் கொட்டையை நீக்கிக்கொண்டு, அங்கேயே செய்துகொள்ளும் மரக் கத்தியை உபயோகித்துக் கைவிரல்களின் திறமையாலேயே பஞ்சைக் கொட்டிக் கொள்ளுவது. இம்முறைக்குத் தூனை என்று பெயர்.

3. பட்டைகளைத் தனுஷ் தக்ளியில் நூற்றுக்கொள்ளுவது.

பஞ்சரைக்கும் கை மணைகளுக்கு இன்று ஆர்டர் கொடுத்து செய்துகொண்டு விட முடியாது. கிடைக்கும் கொட்டை எடுக்காத பருத்தி முழுவதையும் மேலே 2–வது முறையில் கண்டபடி முதலில் தயாரித்துக்கொள்ள வேண்டும்.

அரைக்காத பருத்தி கிடைக்காத இடங்களில் தொழிற் சாலைகளில் அரைத்த பருத்தியை உபயோகித்துக் கொள்ளும் போது, தூனை முறையினால் பட்டை போடுவதற்கு அதிக நேரம் வேண்டியிருந்த போதிலும் இதுவும் தூனையை உபயோகிக்கும் படியே செய்கிறது. பஞ்சு கொட்டும் வில் இருந்தால், இயற்கை யாகவே அதைத்தான் உபயோகிக்க வேண்டும். ஆனால், பஞ்சு கொட்டுவதற்குப் பொருந்துவதுதான் பட்டை போடுவதற்கும் பொருந்தும். வில்லையும் அதன் நாணையும் கணத்தில் தயாரித்து விட முடியாது. ஸ்ரீ வினோபா, ஒரு நிபுணரின் ஆற்றலுடனும் ஆர்வத்துடனும் கண்டுபிடித்துச் சரியானதாக்கியிருப்பதே தூனை முறை.

கையினால் நூற்பது கோடிக்கணக்கான மக்களிடையே பரவி விடும்போது அதற்கு வேண்டிய பட்டைகளை ஒரு நிலையத் திலிருந்தோ, நிலையங்களிலிருந்தோ கொடுத்துவிடுவது என்பது அசாத்தியமானது. அதிகப் பட்சம் சாத்தியமானதெல்லாம், குறிப்பிட்ட தொகை பட்டைகளைத் தயாரிப்பதற்கு என்று ஒரு குடும்பமோ அல்லது கோஷ்டியோ இரண்டொருவரைத் தனி யாக ஒதுக்கிவைத்து விடுவதுதான். சரியான, சிறந்த, பின்னால் அதிக வேகமானதாகவும் இருக்கக்கூடிய வழி, தங்களுக்குத் தேவையான பட்டைகளை ஒவ்வொருவரும் தயாரித்துக்கொண்டு விடுவதுதான். இது நூற்பதை இன்னும் அதிகக் கவர்ச்சிகர மானதாக்குவதோடு ஒரே மாதிரி வேலையில் தோன்றும் அலுப் பையும் இவ்விதமான பல வேலைகள் போக்கிவிடுகின்றன.

—'ஹரிஜன்' – 22—2—1942

# 10

# நூற்பதற்கு முன்னும் பின்னும்

நூற்புக்கு முன்னாலும் பின்னாலும் செய்ய வேண்டிய வேலை களையெல்லாம் நூற்பவரே செய்துகொள்ள வேண்டும். அதாவது, நெய்வது வரையில் உள்ள எல்லா முறைகளையும் அவர் தாமே செய்துகொண்டுவிட வேண்டும். சுயராஜ்யத்திற்கு இதுதான் வழி. இதுவரையில் வர்த்தகத்திற்கான கதரைத் தான் நாம் உற்பத்தி செய்துகொண்டு வந்தோம். வர்த்தகத்திற் கான கதர், நமக்குக் குழந்தைகள் நடைவண்டியைப் போன்றது. அது நமக்கு நடக்கக் கற்றுக்கொடுத்தது. இப்பொழுதும் அது அப்படியேதான் இருக்கிறது. பஞ்சரைப்பது போன்ற மற்ற வேலைகளை மற்றவர்கள் செய்வது குழந்தைகளின் நடைவண்டி போலவே இருந்தது, இன்னும் இருந்து வருகிறது. இந்த

நடைவண்டிகளைக் கைவிட்டுவிட்டு நாம் போகப்போக சுய ராஜ்யக் கதரின் கிட்டத்தில் போய்க்கொண்டிருக்கிறோம். அகில இந்திய நூற்போர் சங்கத்தின் உற்பத்தி நிலையங்களில் பஞ்சு அரைப்பது போன்ற முறைகள் தனியாகவே செய்யப்பட்டு வருகின்றன என்றால், சாத்தியமாயின் இப்பொழுது அவற்றை நிறுத்திவிட வேண்டும். சிலவற்றை விட்டுக் கொடுத்துவிடாமல் மனிதன் வாழ முடியாது. இந்த உதவிகள் நடைவண்டிகள் போன்று இருந்தன. ஆகையால், சாத்தியமான வரை சீக்கிரத்தில் அவற்றைக் கைவிட்டுவிட வேண்டும். நம்பிக்கை இருந்து, அதன் விளைவுகளை அறிபவர் முதலில் இவற்றைக் கைவிட்டு விடுவார்.

(ஹிந்தியிலிருந்து)

—'ராட்டையின் தத்துவம், பக்கம் 92.'-3—4—1946

பகுதி பதின்மூன்று

# சங்க வேலையில் புது மாறுதல்கள்

## 1

## புதிய திட்டம்

கதருக்குப் புதிய திட்டம் என்று சொல்லப்படுவதை வாசகர்கள் முற்றிலும் புரிந்துகொள்ளட்டும். கதர் கிராமவாசிகளை உடுத்த வேண்டும் என்றுதான் ஆரம்பம் முதற்கொண்டு நோக்கமாகக் கருதப்பட்டு வந்திருக்கிறது. அப்படி இருக்க வேண்டுமானால், இப்பொழுது செய்யப்படுவது அதை ஒட்டிய காரியமாகையால்தான் இதைப் புதிய திட்டம் என்று 'சொல்லப்படுவது' என்றேன். பட்டணவாசிகளுக்கு மாத்திரமே என்று கதர் எப்பொழுதும் கருதப்பட்டதில்லை. பட்டணவாசிகள் வாழ வேண்டும் என்பதற்காகக் கிராமவாசிகளின் ரத்தம் உறிஞ்சப்பட்டு வருவது போல இது கிராமவாசிகளை உறிஞ்சிக் கொண்டு வரப்பட்டதும் அன்று. பட்டணவாசிகளை உறிஞ்ச வேண்டும் என்றில்லாவிட்டாலும் இருக்கும் நிலைமையை மாற்றிவிட வேண்டும் என்பதற்காகவே ஆரம்பம் முதற்கொண்டு கதர் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இயற்கையான உறவு திரும்பவும் ஏற்படும்படி செய்வதுதான் இருந்த நிலையை மாற்றுவது என்பது. பிரிட்டிஷார் வருவதற்கு முன்னாலும் பட்டணங்கள் இருந்தன. நிலைமை அப்பொழுதும் மோசமாக இருந்தன. இப்பொழுதும் அவை படுமோசமாக இருக்கின்றன. பட்டணங்கள் நகரங்களாயின. நகரங்கள், அவைகளில் இந்திய லட்சாதிபதிகள் இருந்தும், முக்கியமாகப் பிரிட்டிஷ் எஜமானர்களின் நன்மைக்கென்றே வாழ்ந்தன. இந்தப் படுமோசமான அக்கிரமத்தை ஒழிப்பதற்குத்தான் கதர். இந்திய கிராம மக்களின் ராஜீய, பொருளாதார விடுதலையின் சின்னமாகக் கதர் இருக்கிறது, அல்லது இருக்க வேண்டும். ஆனால், மில் துணியோ, கிராம மக்களின் அடிமைத்தனத்தின் சின்னம். அம் மக்களின் விடுதலையின் சின்னமாகக் கதர் இல்லையென்றால் அது அர்த்தமில்லாதது. ஆகையால், கதர் அபிவிருத்தி முறையில் ஏற்படும் எந்த நல்ல மாறுதலும் வரவேற்கத்தக்கது.

இப்பொழுது இருக்கும் கதர் அபிவிருத்தி முறை நல்லது என்று தோன்றினாலும், அதில் ஒரு குறை இருக்கிறது. கிராம வாசிகள் நூற்கிறார்கள், கதர் நெய்கிறார்கள். ஆனால், அதை அவர்களே உபயோகித்துவிடுவதில்லை. இந்தக் கிராமவாசிகளுக்குப் போதிய அளவு நன்மையானதாக இல்லாததுதான் இன்று இருக்கும் முறையிலுள்ள குறை. இக்கிராமவாசிகள், கதரை உபயோகித்துக் கொள்ளுவதில் இருக்கும் கௌரவத்தையும் நன்மையையும் உணரவில்லை. தவறு அவர்களுடையது அல்ல. ஊழியர்களே இதைப் புரிந்துகொள்ளவில்லை. பட்டணவாசிகள் கதரை உடுத்த வேண்டியிருப்பதோடு அந்தத் தவத்தைச் செய்கின்றனர். கொஞ்சம் அதிக ரூபாய்களைச் செலவிட இவர்களால் முடியும். ஆகையால், கொஞ்சம் அதிகப்படியான ரூபாய் கொடுத்து, இத்தவத்தை வாங்கிக்கொள்ளப் பட்டணவாசிகள் தயாராக இருக்கிறார்கள். இந்தப் பேரத்தினால் தேசாபிமானிகள் என்றும் அழைக்கப்படுகின்றனர். ஆனால், இப்பொழுது நூற்போர் சங்கம், அதன் அடிப்படையையே அலட்சியம் செய்துவிடுவதன் மூலம் தன் நம்பிக்கையை எவ்விதம் பொய்யாக்கிக் கொள்ள முடியும்? ஆகவே, கிராமவாசிகள் கதர் கட்டும்படி செய்வதற்காக அது தனது சக்திகளையெல்லாம் உபயோகித்து வருகிறது. இந்த வேலை இயற்கையாகவே நூற்போர், கையினால் நூற்ற நூலை நெய்பவர்களிலிருந்தே ஆரம்பிக்கிறது. இது வெற்றி பெற்றே தீரும். அப்படி வெற்றி பெற்றால், கொஞ்ச காலத்திற்குப் பிறகு பட்டணங்களிலும் நகரங்களிலும் கடைகளில் அதிகமாகக் கதர் இருக்கும். பிறகு இந்தியாவில் கிடைக்கக்கூடிய ஒரே துணி கதராகவே இருக்கும். அத்தகைய நிலைமைக்காகவே அகில இந்திய நூற்போர் சங்கம் கஷ்டப்பட்டு வேலை செய்துகொண்டிருக்கிறது. அத்தகைய சக்தி கதருக்கு இல்லை என்று இச்சங்கத்தின் ஆராய்ச்சிகள் காட்டுமானால், தன்னால் கையாலாகாது என்பதைச் சொல்லிவிட அது தயங்காது. யந்திர யுகத்திலிருந்து வரும் நாற்பது கோடி மக்களின் மனோநிலையில் வேலை செய்யும் ஒரு விஞ்ஞானம் இது என்பதை வாசகர்கள் நினைவில் வைக்கவேண்டும். இதைக்கொண்டு பார்த்தால், இது கவர்ச்சிகரமாகவும் ருசிகரமாகவும் இருந்தாலும் இது மகத்தான பிரச்னை. தோல்வியே ஏற்படுவதாக இருந்தாலும், தோல்வியும் அதனளவில் தோல்வியாக இராது. பாமர மக்களைப் பொறுத்த வரையில் ராட்டை அடிமையின் சின்னமாக இருந்த அந்த இருண்ட பழங்காலத்திற்குத் திரும்பிப் போய்விடும் முயற்சி அல்ல இது என்பதையும் அறியவேண்டும். ராட்டையின் மூலம் இந்தியா தனது அடிமைத் தளைகளை உடைத்தெறிந்துகொண்டுவிட முயற்சி செய்யும்போது இந்தியாவின் ஆன்மாவாகிய மனித வர்க்கத்தைப் புரிந்துகொள்ளுவதற்கு நிச்சயம் அது வெற்றியாக இருக்கும். அடிமை சாப்பிடும் அதே சோற்றைத்தான் சுதந்திர மனிதனும் சாப்பிடுகிறான். ஒருவன் சாப்பிடுவது சுதந்திரச் சோறு; மற்றவன் தின்பது அடிமைச் சோறு.

ராட்டை கொடுக்க வேண்டியிருக்கும் சந்தோஷமான செய்தியை நகரவாசிகளும் பட்டணவாசிகளும் அறிவார்களானால், தங்களுடைய ஒழிந்த நேரங்களைக் குதிரைப் பந்தயத்திடல்களில் சூதாடுவதிலோ, கிளப்புகளில் குடித்துக்கொண்டு சோம்பிக் கழிப்பதிலோ செலவிடுவதற்குப் பதிலாகப் பஞ்சரைப்பது, நூற்பது, நெய்வது ஆகியவைகளில் செலவிடுவார்கள். அவர்கள் குழந்தைகளோ? ஏன், தங்களுடைய பெற்றோருக்காகவும், இந்தியாவின் விடுதலைக்காகவும் அவர்கள் நூற்று இந்தியாவுக்குத் தேவையான ரகக் கல்வியையும் அவர்கள் பெறலாம். நான் ரோமில் இருந்தபோது, குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்டிருந்த எல்லாக் கடற்படை வித்தைகளையும் அக் குழந்தைகள் அழகாகச் செய்து காட்டுவதைக் காண்பிப்பதில் முஸோலினியின் அதிகாரிகள் பெருமை கொண்டனர். இங்கிலாந்துக்குத் தேவையானதைத் தங்கள் தாய் மொழியிலேயே கற்றுக்கொள்ளுவதைத் தவிர ஆங்கிலக் குழந்தைகள் வேறு எதையாவது செய்கின்றனவா?

அகில இந்திய நூற்போர் சங்கக் கதர்க் கடைகள், முன்னை விட நல்ல காரியங்களுக்குப் பயன்படுத்தப்படும். அங்கே பெருங்கூட்டமாக மக்கள் திரண்டு போவார்கள் என்று நம்புகிறேன். அவர்களுக்கு நூற்கும், நெய்யும் வித்தைகளையெல்லாம் அங்கே கற்றுக் கொடுப்பார்கள். அவர்கள் கற்றுக் கொண்டால், அவர்களுக்குத் தேவையான கதர் அவர்களுக்குக் கிடைக்கும். மனம் இருந்தால் வழி உண்டு.

—'ஹரிஜன்'–21—7—1946

## 2

# கதரின் புதிய சகாப்தம்

கதரின் ஒரு சகாப்தம் முடிந்துவிட்டது. ஏழைகளின் நன்மைக்காகக் கொஞ்சம் வெற்றியை அடைந்திருக்கிறது. ஏழை மக்கள் சுயதேவையைப் பூர்த்தி செய்துகொள்ளுபவராக எவ்வாறு இருக்க முடியும், கதர் எவ்விதம் அகிம்சையின் சின்னமாக ஆகமுடியும் என்பதை இப்பொழுது நாம் செய்து காட்ட வேண்டும். நம் உண்மையான வேலை இதுதான். இதில் நமக்கு இருக்கும் நம்பிக்கையைச் செயலில் காட்டவேண்டும்.

('ராட்டையின் தத்துவம்' என்ற நூலிலிருந்து: பக்கம் 94. 1947 ஆகஸ்டில் சர்க்கா ஜெயந்திக்கு மகாத்மா அனுப்பிய செய்தி இது)

# 3

# மகாநாடு-1

## கதர் சம்பந்தமாகப் புதிய நோக்கு

[காந்திஜி கதர் இயக்கத்தை 1918-ஆம் ஆண்டில் தொடங்கினர். கதரை ஏழை மக்களுக்கு நிவாரணம் அளிக்கக்கூடிய ஒன்ருகவே முதலில் காந்திஜி வற்புறுத்தி வந்தார். ஆனல் 1934-லிருந்து, குறிப்பாக 1935-லிருந்து, விற்பனைக்காக மட்டும் கதரை உற்பத்தி செய்யாமல், கிராமவாசிகள் தங்கள் சொந்த உபயோகத்துக்காக உற்பத்தி செய்ய வேண்டும் என்று வற்புறுத்தத் தொடங்கினர். 1942, 1943 வருடங்களில் ஆகாகான் மாளிகையில் அவர் சிறைப்பட்டிருந்தபோது, தமது கதர் இயக்கம்பற்றி இன்னும் ஆழமாகச் சிந்தித்தார். சிறையிலிருந்து அவர் வெளியே வந்தபோது, கதர் பிரதானமாகக் கிராமவாசிகளின் தேவையைப் பூர்த்தி செய்யக்கூடிய விதத்தில் கதர்ப் பணிக்கு ஒரு புதிய திருப்பம் கொடுக்க வேண்டுமென்ற தீர்மானத்துடன் வந்தார். 1944, செப்டம்பர் மாதத்தில், 1, 2, 3 தேதிகளில் சேவா கிராமத்தில் நடைபெற்ற கதர் ஊழியர்களான அகில இந்திய நூற்போர் சங்க தருமகர்த்தாக்களின் கூட்டத்தில் காந்திஜி தம் கருத்துக்களை எடுத்துரைத்து, தாம் கூறும் மாறுதலைச் செய்ய வேண்டுமென்று வற்புறுத்தினர். அப்போது காந்திஜியின் சொற்பொழிவுகளை ஸ்ரீ சுவாமி ஆனந்தர் குறித்துக்கொண்டு வந்தார். அவருடைய குறிப்புக்கள் ஹிந்தியில் வெளியாகியிருக்கின்றன. அவற்றின் சுருக்கம் ஆங்கிலத்திலும் வெளி வந்திருக்கிறது. ஹிந்தியிலும், ஆங்கிலச் சுருக்கத்திலும் காணப்படும் காந்திஜியின் சொற்பொழிவுகளை ஒப்புநோக்கி, ஹிந்தி மூலத்தை ஒட்டியே இங்கே அவை தமிழாக்கிக் கொடுக்கப்படுகின்றன.]

### முதல் சொற்பொழிவு - 1—9—1944

நாம் சந்தித்து இரண்டு வருடங்களுக்கு மேல் ஆகின்றன. இந்த இரண்டு வருடங்களிலும் வெளியே நடந்தவை ஓரளவுக்கு எனக்குத் தெரியவந்தன. ஓரளவுக்கு என்று நான் சொன்னதற்குக் காரணம், முழுமையும் தெரியாது என்பதேயாகும். இந்த இரண்டு ஆண்டுகளும் ஒரு யுகம் கழிந்ததைப் போல் கழிந்திருக்

கின்றன. இது இந்தியா முழுவதற்குமே ஆபத்துக்கள் நேர்ந்த காலம். நூற்போர் சங்கம் மட்டும் தப்ப முடியுமோ ?

இங்கிலேயில் இன்று நாம் மீண்டும் கூடியிருக்கிறோம். நாம் வேலேயும் செய்யலாம். ஆனல், அது போதாது. நூற்போர் சங்கத்தின் அதிகமான சொத்துக்கள் அழிந்தும், சர்க்கார் கையில் சிக்குண்டுமிருக்கின்றன. நம் தோழர்கள் பலர் இன்று இங்கே இல்லே. நான் காங்கிரஸைப் பற்றிக் கூறவில்லே. நூற்போர் சங்கத்திற்குத் தீவிரமாக உழைத்தவர்களிலும், அதன் தருமகர்த்தாக்களிலும் பலர் இங்கே நம்முடன் இல்லே. இங்குள்ள இவர்களேக்கொண்டே நடவடிக்கைகள் நடத்தலாம் என்று தெரிந்தது. அவர்கள் நடத்துவார்கள். இவ்வளவு ஆறுதலாவது இருக்கிறதே ! கதரைப்பற்றிச் சிறையில் நான் ஆழ்ந்து சிந்தித்தேன். நான் செய்த முடிவுகளேச் சுருக்கமாகக் கூறுகிறேன் :

சிறையில் இருந்தபோது நான் கண்டறிந்த மிக முக்கியமான விஷயம், அகில இந்திய நூற்போர் சங்கத்தின் அடிப்படை பலவீனமாக இருக்கிறது என்பதும், அதனல் அதைச் சுலபமாக அழித்துவிட முடியும் என்பதுமாகும். மக்களின் வாழ்க்கையில் அது வேரூன்றவில்லே. அதன் தலேவர்களேச் சிறையிலிடுவதன் மூலம் அதை அரசாங்கம் அழித்துவிட முடியும். அதன் நடவடிக்கைகளில் சில தொடர்ந்து நடைபெற்றன என்ருலும், அரசாங்கம் நினேத்தால் அதை இல்லாமல் செய்துவிட முடியும் என்பதை நான் தெளிவாக அறியலானேன். அதாவது, ராட்டையின் புனருத்தாரணத்திற்கான இயக்கத்தை எப்படிப்பட்ட சந்தர்ப்பத்திலும் அழிக்கவே முடியாது என்ற என் கற்பனே அடியோடு தகர்ந்துவிட்டது. அழிக்கப்பட முடியாத ஓர் அடிப்படையில் இயக்கத்தை நான் உருவாக்கவில்லே. நான் சுலபமாகத் தோல்வியை ஒப்புக் கொள்ளுபவன் அல்ல. ஆனல், அரசாங்கத்தின் தயவில் நாம் உயிர் வாழ்கிறோம் என்பதைச் சிறையிலேயே கண்டு கொண்டேன். இது என்னேத் திடுக்கிடச் செய்கிறது. முடிந்தால், நான் கடவுளின் தயவில் இருக்க விரும்புவேனே ஒழிய, வேறு யாருடைய தயவிலும் இருக்க விரும்பமாட்டேன். ஒருவரும் பிறர் தயவின்றி உயிர்வாழ இயலாதுதான். ஆனல், நான் குறிப்பிடுவது அந்த உதவியை அல்ல.

என் முயற்சிகளெல்லாம் எனது மேற்கூறிய கற்பனேயை ஆதாரமாகக் கொண்டவை. நூற்போர் சங்கத்தின் அஸ்திவாரமும், அந்தக் கற்பனேயின் மீதே கட்டப்பட்டிருந்தது. அகிம்சை முறையில் இந்தியா வாழவும் முன்னேறவும் வேண்டுமானல், அது ராட்டையின் உதவியினலேயே முடியும். ராட்டையே அதன் சின்னம் என்பதை நான் தென்னப்பிரிக்காவில் உணர்ந்தேன். வேறு முறைகளாலும் நாம் சக்தி பெறலாம். ஆனல், அந்தச் சக்தி உலகத்துக்கு நன்மை பயப்பதாகாது. நம்முடைய கதர்ப் பணியின் முறையில் ஏதோ தவறு இருக்கிறது என்பதையும், அதைத் திருத்த வேண்டியது அவசியம் என்ப

தையும் நான் சிறையில் இருந்தபோது உணர்ந்தேன். தொடர்ந்து நூற்கும்படி இந்தியாவை நான் கேட்டுக் கொண்டேன். இந்த நூற்பு வேலையை எவ்வாறு செய்து வரவேண்டும் என்பதையும் நான் அறிந்திருந்தேன். ஆனல், எந்த நோக்குடன், எந்தக் கருத்துடன் நூற்கவேண்டுமென்பதைப் போதிய அளவு வற்புறுத்தவில்லை. அதன் உடனடியான நடைமுறை அம்சத்தைக் கொண்டே அதை நான் கவனித்தேன். என்னுடைய எல்லாச் சக ஊழியர்களும் இந்த நடைமுறை அம்சத்தையே முக்கியமானதாகக் கொண்டிருந்தனர். ஆகவே, நான் அதை அனுமதித்தேன்; உதவியும் செய்து வந்தேன். அந்த மார்க்கத்தில் நாம் வெகு தூரம் சென்றிருக்கிறோம். ஆனல், அந்த முறையில் நூற்கும்படி இன்று நான் மக்களைக் கேட்டுக் கொள்ள இயலாது.

எதிர்காலத்தில் எப்படி வேலை செய்வது என்பதைப் பற்றிச் சிந்தித்தேன். சங்கத்தை என் கையாலேயே ஏன் தகர்த்து விடலாகாதென்றும், உள்ள சொத்தையும் பணத்தையும் மக்களுக்குப் பிரித்துக் கொடுத்துவிட்டால் என்ன என்றும் யோசித்துக் கொண்டிருந்தேன். ராட்டையின் செய்தியை ஒவ்வொரு வீட்டிலும் பரப்பும் வரையில் நம்முடைய வேலை பூர்த்தியாகாது என்பதைக் கண்டேன். நம் லட்சியத்திலிருந்து நாம் வெகு தூரத்தில் இருப்பதற்குக் காரணம் இதுவே என்று நினைத்தேன். இந்தியாவில் ஏழு லட்சம் கிராமங்கள் இருக்கின்றன. அவற்றுள் ஆயிரக்கணக்கானவை, ராட்டை என்ருல் என்ன என்றே தெரியாமல் இருக்கின்றன. இது நம் குற்றமே. இந்தக் குற்றத்தினுல்தான், கதர் வேலை சரியான அடிப்படையில் நடைபெறும்படி செய்யத் தவறிவிட்டோம். இதைப்பற்றி நீங்கள் சிந்திக்க வேண்டும்.

இவ்விஷயமாகச் சமீபத்தில் என் முழுச் சிந்தனையையும் செலுத்தி ஆராய்ந்ததன் பலனுக, இந்தப் பணி எங்கும் பரவி நிரந்தரமாக வேர் கொள்ள வேண்டுமென்ருல் இதைப் பரவல் முறையில் செய்துவரவேண்டும் என்ற அபிப்பிராயத்துக்கு வந்தேன். இது கை கூடுமானல் எவ்வளவு நன்ருக இருக்கும் என்றும் யோசித்தேன். என் வழியில் மிகுந்த கஷ்டங்கள் இருக்கின்றன என்பதையும் சிந்தித்தேன். ராட்டை விஷயமாக என் அளவுக்கு வேறு யாரும் சிந்தனையோ முயற்சியோ செய்திருக்க முடியாது என்று நான் உரிமை கொண்டாடுகிறேன். நான் அதிகமாகவே உரிமை கொண்டாடுகிறேன். இதில் மமதையும் கலந்திருக்கலாம். ஆனல், இந்தச் சந்தர்ப்பத்தில் நான் இதைக் கூருதிருப்பது, தவருன அடக்கமாகும். சிறையிலும் நான் ராட்டையைத் தவிர வேறு எதைப் பற்றியும் சிந்திக்கவில்லை.

என் வேலைகள் அனைத்திற்கும் உதவும் சக்தியையும், சட்ட மறுப்புக்கு உதவும் எல்லாப் பலத்தையும் நான் ராட்டையி

லிருந்தே பெற்றேன். ராட்டையின் பொருட்டு நான் உழைப்பையும் பொருளையும் செலவு செய்துள்ள அளவுக்கு வேறு எந்த முயற்சியிலும் செய்ததில்லை. திலகர் சுயராஜ்ய நிதியான கோடி ரூபாயில் பெரும் பகுதி ராட்டை இயக்கத்திலன்றோ செலவாயிற்று ? இதற்காக என்னை எவ்வளவோ குறை கூறினர்கள். ஆனல், அதை யெல்லாம் புகழாகவே கருதுகிறேன். ஏனென்ருல், நான் செய்ததெல்லாம் தீர யோசித்து, தெரிந்தே செய்தவை ; யாரையும் ஏமாற்றிச் செய்தவையல்ல. மக்களின் சம்மதத்துடனேயே ராட்டைக்காக எல்லாப் பணமும் செலவு செய்யப்பட்டது. இதன் பயனகவே இந்த ஸ்தாபனம் தோன்றியது. என் சிந்தனை, படிப்பு ஆகிய இரண்டின் ஆதாரத்தின் பேரில், நான் உரிமையுடன் கூறக் கூடியது, என்னுடைய சாதனை (தவம்) தீவிரமாக இருந்ததென்ருலும், போதியதாக இல்லை என்பதுதான். இதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். இவ் விஷயங்களை நான் இன்று அதிகத் தெளிவாகக் காண்பதால், என்னுடைய இந்த வார்த்தைகளில் இன்று அதிகச் சக்தி இருக்கிறது.

இன்று இங்கே வந்திருக்கும் நீங்கள் நூற்போர் சங்கத்தாரும், சங்கத்திடமோ என்னிடமோ அன்பு கொண்டவர்களும், மக்களின் பிரதிநிதிகளும் ஆவீர்கள். நம்மிடம் மக்களுடைய பலம் எவ்வளவு இருக்கிறது என்பதைக் காட்டியிருக்க முடியும். இயக்கத்தில் இந்தியா வெளிப்படுத்திய பலத்தை உண்மையான வழியில் செலுத்தியிருக்கலாம். ஆனல், நம்மால் அது முடியவில்லை. இது உங்கள் குற்றமல்ல ; என்னுடையதே. நான் இப்பொழுது கூறுவது, உங்களைக் குறை கூறுவதற்காக அல்ல ; உங்களுடைய சிந்தனையையும் என்னுடைய சிந்தனையையும் தூண்டுவதற்காகவே கூறுகிறேன்.

நாம் ராட்டை சுற்றினேம்; ஆனல், தீர யோசித்துச் சுற்ருமல், யந்திரத்தைப்போல் இருந்தே சுற்றினேம். ராட்டையில் அடங்கியுள்ள பொருளனைத்தையும் மனத்தில் வாங்கி யிருந்தால், நான் அதற்குக் கூறும் பொருள் அவ்வளவையும் நீங்களும் கூறியிருப்பீர்கள். ஆட்சித் தத்துவமும் அதில் நிரம்பி யிருக்கிறது. அது சூதான ஆட்சித் தத்துவமல்ல ; சுத்தமான, சாத்வீகமான ஆட்சித்தத்துவம். அது ராட்டையில் அடங்கியுள்ள அளவுக்கு வேறு எதிலும் இல்லை.

அகில இந்திய நூற்போர் சங்கத்தையும், அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தையும் சேர்ந்த ஊழியர்கள்—காந்தீயவாதிகள் அனைவருமே அல்ல என்ருல்—புத்திக் கூர்மை இல்லாதவர்கள் என்றும், உயிர்த் தத்துவம் இல்லாதவர்கள் என்றும் அடிக்கடி கூறப்படுகிறது. அவர்களிடம் மக்கள் நம்பிக்கை வைக்கிருர்கள். ஆனல், அவர்கள் (காந்தீயவாதிகள்) நாட்டை எதிர் நோக்கியுள்ள பிரச்னைகள் என்ன என்பதையும் நமது வேலைத்திட்டம் இந்தப் பிரச்னைகளை எப்படித் தீர்த்து,

நம்மை நம்முடைய லட்சிய ஸ்தானத்துக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கப்போகிறது என்பதையும் மக்களிடம் திட்டமாக எடுத்துக் கூறும் சக்தியில்லாதவர்களாக இருக்கிறார்கள். அதே சமயத்தில், மார்க்ஸீய நூல்கள் நாட்டில் வேகமாகவும் அதிகமாகவும் பரவிக்கொண்டு வருகின்றன. இந்த வெளிச் சக்திகள் உண்டாக்கும் விளைவைக் காந்தீயவாதிகள் எதிர்க்க முடியாதவர்களாக இருக்கிறார்கள்.

நாம் நம்மை அகிம்சையின் பக்தர்கள் என்று கூறிக் கொள்ளுகிறோம். அப்படியானால், நாம் நம் வாழ்க்கையில் அகிம்சையின் சக்தியை வெளிப்படுத்தவேண்டும். நூற்போர் சங்கத்தின் ஒவ்வோர் அங்கத்தினரும் அகிம்சையே உருவெடுத்தவராக இருக்கவேண்டும். அவர் அகிம்சாவாதியாக அல்லது காந்தீயவாதியாக இருந்தால், அவர் அபார சக்தி வாய்ந்தவராக இருக்கவேண்டும். இன்று காந்தீயம் பழிக்கப்படும் ஒரு சொல்லாக இருக்கிறதே ஒழிய, உயர்ந்த சீலத்தைக் குறிக்கும் வார்த்தையாகவோ, போற்றுதற்குரிய ஒன்றாகவோ இல்லை. அகிம்சையை நம் வாழ்க்கையின் ஓர் அங்கமாக ஆக்கிக் கொள்ளத் தவறிவிட்டோம் என்பதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். இல்லையென்றால், ஒவ்வொரு கிராமத்திலுமே ராட்டை இருப்பதை நாம் காண்போம். நான் தவறிவிட்டேன் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். இந்தக் கலையில் நான் வல்லவனாக இருந்திருந்தால், எப்படியும் சேவாகிராமத்திலாவது, புனருத்தாரணம் செய்யப்பட்ட கிராம வாழ்க்கையின் உதாரணத்தைச் செய்து காட்டியிருப்பேன். ஆனால், இன்று சேவா கிராம மக்களின் கையில் நான் ராட்டையைக் கொடுத்தும்கூட அவர்கள் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. அதை எப்படி உபயோகிப்பது என்று அவர்களுக்கு நாம் கற்பிக்கிறோம்; வேலை கொடுத்து அவர்களுக்கு ஆசை காட்டுகிறோம்; அதிக ஊதியம் கொடுக்கிறோம்; பல வழிகளில் அவர்களுக்குச் சேவை செய்கிறோம். ஆனால், இவ்வளவு செய்தும் பயனில்லை.

அதனால், நாம் செய்த தியாகம் குறைவு என்று ஆகாது. அதிகமாகத் தியாகம் செய்துள்ள ஆடவரும் பெண்டிரும் நம்மிடையே இருக்கிறார்கள். அவர்களுக்கு நான் தலைவணங்குகிறேன். அவர்கள் ஒவ்வொருவரையும்பற்றி நான் நினைக்கும் போது, என் உள்ளம் ஆழ்ந்த உருக்கம் கொள்ளுகிறது. இப்படிப்பட்ட தியாக உணர்ச்சி நிறைந்தவர்கள் மிகுந்துள்ள ஒரு நாடு ஒரு போதும் தோல்வியுறாது என்று என் மனச்சாட்சி கூறுகிறது. ஆனால், இவ்வளவு தியாகம் செய்தும், நாம் இன்னும் நம் நாடு விடுதலை பெறும்படி செய்யவில்லை. விடுதலை வந்துகொண்டுதான் இருக்கிறது. ஒருகால் நாம் நினைப்பதை விடச் சீக்கிரத்திலேயே வரலாம். ஆனால், அது எனக்குத் திருப்தியளிக்கவில்லை. நான் யாரையும் குற்றஞ்சாட்டவில்லை; உள்ள நிலையை நான் சுட்டிக் காட்டுகிறேன். நாம் செய்ததைக் கொண்டு

திருப்தியடைந்துவிடக்கூடாது. நம்மால் முடிந்ததைச் செய்தோம் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், நாம் நம் முன் வைத்துக்கொண்ட உயர்ந்த திட்டத்திற்கேற்பச் சங்கத்தின் வேலையை விருத்தி செய்ய நம்மால் முடிந்திருக்குமென்றால், இன்று நம்மிடையே நாம் காணும் ஏமாற்றம் ஏற்பட்டிராது. நாம் அகிம்சா சுயராஜ்யத்தையும் அப்பொழுதே அடைந்திருப்போம்.

நான் உங்களுக்கு ஒரு கடினமான சோதனையை வைக்கிறேன். அதற்கு நீங்கள் தயாராக இருந்தால் நல்லது. ஆனால், அதை அறியாமையாலோ, அசட்டுத் துணிச்சலினாலோ ஏற்பது கூடாது. அதை நீங்கள் நன்றாக அலசி ஆராய்ந்து பார்க்க வேண்டும். என் கருத்தோடு நீங்கள் ஒத்துப்போனால், அகில இந்திய நூற்போர் சங்கத்தைக் கலைத்து, அதன் சொத்துக்களை, வேலையைச் செய்துவருவதற்காக அதன் ஊழியர்களிடம் பகிர்ந்து கொடுத்துவிடுவீர்கள். எதிர்கால வேலைகளுக்காகச் சங்கம் காலணாக்கூட வைத்துக்கொள்ள வேண்டியதில்லை. நாம் எல்லோரும், ராட்டையானது அகிம்சா பூர்வமான பொருளாதார சுயதேவைப் பூர்த்தியின் சின்னம் என்ற நம்பிக்கையுடையவர்களாக இருக்கவேண்டும். ராட்டையின் இந்த முக்கியத்துவத்தை நாமும் மக்களும் கிரகித்துக்கொண்டால், ராட்டையின் பிரசாரத்திற்காக நாம் காலணாக்கூடச் செலவழிக்க வேண்டியதில்லை. நன்கொடைகளுக்காக நாம் பணக்காரர்களை எதிர்பார்க்க வேண்டியதுமில்லை. யாதொரு பிரயாசையுமின்றி நாமே கேந்திரமாகிவிடுவோம். மக்கள் தாமாகவே நம்மிடம் வருவார்கள். வேலை தேடி வேறு எங்கும் அவர்கள் போகமாட்டார்கள். ஒவ்வொரு கிராமமும் சுதந்திர இந்தியாவின் மத்திய ஸ்தானமாகிவிடும். அப்பொழுது இந்தியா என்றால் பம்பாய், கல்கத்தா போன்ற அதன் நகரங்களாக இல்லாமல், ஏழு லட்சம் கிராமங்களில் வாழும் 40 கோடி மக்களாக இருக்கும். ஹிந்து-முஸ்லிம் வேற்றுமைகள், தீண்டாமை, சண்டை சச்சரவுகள், தப்பபிப்பிராயங்கள், போட்டாபோட்டிகள் ஆகிய எல்லாப் பிரச்னைகளும் அற்றுப் போய்விடும். இதுதான் சங்கத்தின் உண்மையான வேலை. இதற்காகவே நாம் வாழவும் சாகவும் வேண்டும்.

இது மிகப்பெரிய வேலை, இதற்கு மிகுந்த அறிவு தேவை என்றெல்லாம் நீங்கள் வாதிப்பீர்கள். இந்த அறிவை நூல் நிலையங்களில் உட்கார்ந்து படித்துத் தேடிக்கொண்டுவிட முடியாது என்று நான் உங்களுக்குக் கூறுகிறேன். நம் கைகளால் உழைத்தே அந்த அறிவை நாம் வளர்த்துக்கொள்ள வேண்டும். இதற்காகப் புத்தகங்களைக் கொளுத்திவிடும்படி நான் சொல்லவில்லை. அவற்றிற்கு முதல் இடம் இல்லை என்பதே என் கருத்து. முதல் இடம் ராட்டைக்குத்தான். அதன் வழிபாட்டிலிருந்தே கிராமக் கைத்தொழில், ஆதாரக் கல்வி ஆகியவை தோன்றின. கால்களையும் கைகளையும் கொண்டு உழைத்து அறிவைப் பெருக்குவதுதான் ஆதாரக்கல்வி முறை. அதேபோல, ராட்டைத்

தொழிலே, கிராமக் கைத்தொழில்கள், ஆதாரக் கல்வி போன்ற பல திறப்பட்ட வேலைகளுக்கு ஆதாரமாக இருக்கவேண்டும். நாம் புத்திசாலித்தனமாக ராட்டையைக் கைக்கொள்ளமுடிந்தால், நம் கிராமங்களின் பொருளாதார வாழ்க்கை முழுவதையும் மீண்டும் புத்துயிர் பெறச் செய்யமுடியும். இன்று சங்கத்தில் உள்ள தோழர்களின் சக்தியைக் கொண்டு முன்னேற முடிந்த அளவே நாம் போக இயலும். விசுவாமித்திரரைப்போல் புதிய உலகத்தைச் சிருஷ்டி செய்வதல்ல என் நோக்கம். அவர் திரிசங்குவைச் சுவர்க்கத்திற்கு அழைத்துச் செல்ல விரும்பினர். ஆனல், திரிசங்கு அந்தரத்திலேயே தொங்கிக்கொண்டிருந்துவிட்டார். ஆகையால், பூமாதேவி நமக்கு அளிக்கும் ஆற்றலைக் கொண்டே நாம் பணி புரிய வேண்டும்.

நாம் நம் கையாலேயே சர்க்கா சங்கத்தைக் கலைத்துவிடுவோமானல், அரசாங்கம் எதைப் பறிமுதல் செய்யும்? பீரங்கி முனையில் வைத்து யாரையும் சுடுமா? நாம் நாற்பது கோடியில் ஒருவராகக் கலந்து விடுவோம். நம்மை அழிக்க விரும்பினல், நாம் புன்முறுவலுடன் போவோம். நம்முள் ஒன்றிரண்டு கோடிப்பேர் போனல்தான் என்ன? சமுத்திரத்தில் ஒரு கைத் தண்ணீரை எடுத்தால் அது வறண்டு விடாது. அதன் சக்தியை யாரும் அழிக்க இயலாது, அதே போன்று நம்மை அழிப்பதற்கு முயற்சி செய்யச் செய்ய நமது சக்தி பெருகிக்கொண்டே இருக்கும். அகிம்சையின் சக்தியை நாம் உணர வேண்டும் என்பதே நிபந்தனை.

நாம் சோர்வின்றி ராட்டையில் ஆராய்ச்சி செய்துவர வேண்டும். ராட்டைக்காக நாம் பெரிதும் கஷ்டப்பட்டிருக்கிறோம். அதில் சில அபிவிருத்திகள் செய்திருக்கிறோம் என்பதில் சந்தேகமில்லை. பலவகையான ராட்டைகளைச் செய்திருக்கிறோம். ஆனல், இப்பொழுது யந்திரங்களைத் தயாரிப்பதில் திறமைகொண்ட ஓர் ஆராய்ச்சி நிபுணனை (சாஸ்திரியை) நாம் சிருஷ்டிக்க வேண்டும். இன்னும் அதிகமான, நேர்த்தியான நூலை நூற்கக்கூடிய ராட்டைகளை அவன் கண்டுபிடிக்க வேண்டும். இம்படிப்பட்ட நிபுணன் கிடைக்காவிட்டாலும் நான் சும்மா இருக்க மாட்டேன். என் கருத்து சரியே என்று புத்தி பூர்வமாகக் கூறுவேன். ராட்டையில் அவனுக்கு அழியாத விசுவாசம் இருக்க வேண்டும். இப்படிப்பட்ட விசுவாசம் அவனுக்கு நம்பிக்கையைக் கொடுக்கும்; அறிவைப் பிரகாசிக்கச் செய்யும். நம்பிக்கை ஒருபோதும் ஓய்ந்திராது; இடையருது முன்னேறிக்கொண்டுதான் இருக்கும். அதன் உதவி கொண்டு அறிவு ஒளி பெற்றவுடன், நம்பிக்கையினல் புத்திவாதத்தை எதிர்க்க இயலும். சொற்பொழிவுகள் மட்டும் செய்துகொண்டிருப்பதில் பிரயோசனமில்லை. விஞ்ஞான ரீதியான சோதனைகளை நாம் செய்யவேண்டும். அந்தச் சோதனைகளின் பலன்களைக் கோபுரத்தில் நின்று அறிவிக்க வேண்டும்.

இன்று நாம் வீழ்ச்சியடைந்திருக்கிறோம். இங்கிலேயிலேயே வேலே செய்யவேண்டும். ஆகையால், நமது வேலேயைச் சுலப மாக்குவோம். உள்ளத்தில் அழுக்குக்குச் சிறிதும் இடம் தராமல், சச்சரவுகளையெல்லாம் போக்கி, நம்முள் உள்ள சண்டைகளே நீக்குவோம். நம் பிரதிநிதிகளை நாம் பூரணமாக நம்ப வேண்டும். ஒவ்வொருவரும் ஒளிக்காமல் பேசவேண்டும். நாம் சத்தியத்தை ஆராதிப்பவராயின், முழு உண்மையை நாம் உரைக்க வேண்டும். நம்மிடம் எந்த அளவுக்குப் பயம் உண்டோ, அந்த அளவுக்கு நமது சத்தியமும் குறையும். இதனாலேயே கீதை அஞ்சாமைக்கு முதலிடம் அளித்திருக்கிறது.

இந்த விஷயங்களையெல்லாம் நுண்ணிய அனுபவத்திலிருந்து கூறுகிறேன். நாம் அச்சமின்றி விஷயங்களைச் சொல்ல வேண்டும். எதையும் மறைத்தல் கூடாது. சுயநலத்தைக் கட்டி வைத்துவிடவேண்டும். இல்லையேல், இந்தியத் தாய்க்குத் துரோகம் செய்தவர்களாவோம் ; நம் சக்திகளையும் திரட்ட இயலாது. சுயநலம், நமது வழியில் எழுப்பியிருக்கும் தடைகள் கொஞ்சமல்ல.

## 2வது சொற்பொழிவு - 2—9—1944

நேற்று நான் சிறிது அவசரப்பட்டுவிட்டேன். நேற்றுக் கொஞ்சம் வேலே செய்தது உண்மையே. ஆனால், பிறகு அதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தேன். நான் ஒரு பெரிய பாரத்தை ஏற்றிருந்தேன். அதாவது, ஸ்தூலமான திட்டமொன்று தயாரித்து, அதை உங்கள் முன் சமர்ப்பிக்க ஒப்புக் கொண்டேன். நேற்றிரவிலும் இன்று காலேயிலும் அதைப் பற்றிச் சிந்தித்தபின், திட்டத்தை எழுதினேன். அதை இப்போது உங்கள் முன் வாசிக்கிறேன் :

“ *1.* கிராமமே ராட்டையின் மத்திய ஸ்தானம். நூற்போர் சங்கத்தின் பணி கிராமங்களில் பரவலாக நடைபெற்றால்தான் அது தன் உயர்ந்த லட்சியங்களை அடைய முடியும். இதைக் கருத்தில் கொண்டு, அகில இந்திய நூற்போர் சங்கத்தின் இந்தக் கூட்டம், தன் தற்போதைய செயல் முறைகளில் கீழ்க்கண்ட மாறுதல்களைச் செய்ய வேண்டும் என்று தீர்மானிக்கிறது :

(அ) ராட்டை ஒன்றிலேயே ஈடுபாடு கொண்ட ஏராளமான ஊழியர்கள் அகில இந்திய நூற்போர் சங்கத்தின் சம்மதத்துடன் கிராமங்களுக்குச் செல்லவேண்டும்.

(ஆ) இப்போதுள்ள கதர் விற்பனைக் கிளைகளையும், உற்பத்தி நிலையங்களையும் மேலும் பெருகவிடாமல் கட்டுப் படுத்த வேண்டும்.

(இ) பயிற்சி நிலையங்களை விருத்தி செய்து, போதனை வகுப்புக்களையும் விஸ்தரிக்க வேண்டும்.

(ஈ) ஒரு மாகாணமோ ஜில்லாவோ சுதந்திரமானதாக இருக்கவும், சுயதேவைப் பூர்த்தி செய்துகொள்ளவும் விரும்பினால், அதற்குச் சங்கம் அனுமதிக்க வேண்டும்.

2. புதிய கொள்கையின்படி அவசியமான கட்டளைகள் பிறப்பிப்பதற்காக, அகில இந்திய நூற்போர் சங்கம், அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம், ஹிந்துஸ்தானி தாலிமி சங்கம் ஆகியவற்றின் அங்கத்தினர்களைக் கொண்ட ஒரு நிரந்தரக் கமிட்டி அமைக்கவேண்டும். பூரண அகிம்சையை அடையப்பெறுவதே தமது கடமை என்பதை மூன்று ஸ்தாபனங்களும் உணர வேண்டும். அதை அடைந்துவிட்டால், தொடர்ந்து பூரண சுயராஜ்யம் கிட்டும். அரசாங்கத்தின் ஸ்தாபன அமைப்பு முழுவதும் இந்த மூன்று ஸ்தாபனங்களையும் அண்டியிருக்க வேண்டிய வகையில் அம்மூன்றையும் பலப்படுத்த வேண்டுமே ஒழிய, அரசாங்கத்தை அவை நம்பிக்கொண்டிருக்கும்படி செய்துவிடக் கூடாது. இதன் பொருள் என்னவென்றால், இந்த மூன்று ஸ்தாபனங்களின் ஊழியர்களும் ஒரு வகையில் கீதையில் கூறப்படும் ஸ்திதப் பிரக்ஞர்களை (கலங்காத அறிவினரை)ப் போல் இருக்க வேண்டும். அது சாத்தியமில்லை என்றால், ராட்டையைப்பற்றி நாம் நீட்டி முழக்குவதை நிறுத்தவேண்டும். நமது லட்சியத்தைக் கீழே இறக்கி, அதற்கு ஏற்ப நமது வேலையைத் திட்டமிட வேண்டும்.

மேலே கூறியவாறு மூன்று சங்கங்களின் அங்கத்தினர்களைக்கொண்டு அமைக்கப்பட்ட கூட்டுக் கமிட்டி, ஆக்க வேலையை ஒழுங்குபடுத்தும்போது ராஜீய நடவடிக்கையெல்லாம் அந்த வேலையை அனுசரித்து நடக்கும் விதத்தில் ஒழுங்குபடுத்த வேண்டும். இன்று நமது நிலைமை மிகவும் பரிதாபகரமாக இருக்கிறது.''

காங்கிரஸ்காரர்களிடமிருந்து யாதொரு உதவியும் தங்களுக்குக் கிடைப்பதில்லை என்று அகில இந்திய நூற்போர் சங்கத்தின் ஊழியர்கள் சிலர் என்னிடம் கூறினார்கள். இந்த இரண்டு வருட அனுபவமும் நமக்கு உண்டு. சிறையில் இருந்த பொழுதும் பத்திரிகைகளில் எத்தனையோ படித்தேன். நம் ஊழியர்கள் கூறும் பரிதாப நிலையையும் கண்டேன். இப்பொழுது நேரே பேசியதில் எல்லாம் தெளிவாகி விட்டது.

சிறையில் நான் சோஷியலிஸம் பற்றிய நூல்களைப்படித்தேன். எனக்கு இது புதிதல்ல. மௌலானா ஹஸரத் மோஹானி ஆசிரமத்திற்கு வரும்பொழுதெல்லாம் நாள் முழுவதும் அவருடன் இந்த விஷயங்களைப்பற்றியே பேசுவது வழக்கம். சோஷியலிஸ்டுகளிடம் உழைப்பாளிகளும், படித்து உயர்ந்த பட்டம் பெற்றவர்களுமான ஊழியர்கள் போதிய அளவில் இருக்கிறார்கள். இவர்களுள் நடு நிலைமை வகிப்போர் என்னிடம் வருகிறார்கள். அவர்கள் என்னிடம், ''உங்களுடைய வாழ்க்கைத் தத்துவம் எதுவோ,

நீங்கள் எதை நம்புகிறீர்களோ, அதை உலகின் முன் வையுங்கள்" என்கிருர்கள். உலகின் முன் நான் வைத்தது ஒரு புதிய விஷயம். இதைப்பற்றிய சரித்திரம் இல்லை. நாற்பது வருஷங்களில் எனக்கு உண்டான அனுபவமே என் சொத்து.

நம்மிடம் பட்டம் பெற்றவர்கள் குறைவு என்பதை நாம் ஒப்புக் கொள்ளவேண்டும். நம்மிடம் பணம் இல்லை. ஆற்றலும் அவ்வளவு போதாது. இந்த இடையூறுகளை நான் அறிவேன். இவற்றினிடையில் சிரித்துக் கொண்டே 75 ஆண்டுகள் வரையில் நான் நடந்து வந்தேன். அச்சத்தை அகற்றி என் பாதையைக் கண்டு தெளிந்து நடந்தேன். உங்களுக்கும் அதே அஞ்சாமை கைகூட வேண்டுமென்று விரும்புகிறேன்.

இத்தகைய அஞ்சாமை நம்மிடம் இருந்தால், அறிவின் உதவியினல் வழியைத் தீர்மானித்துக் கொள்ளலாம். வழி மறிக்கும் பொருளை எதிர்க்க முடியும். ஒளிகாட்டுவது என்பதன் பொருள், முன்னேறும் போதே இருளை அகற்றிக்கொண்டிருத்தல் என்பதே. ஒளியின்மையே இருள். ஒளி இருந்தால் முன்னேற வேண்டும் என்பதே உலகின் விதி. அப்பொழுது தன்னை அழித்துக்கொள்ளுவதைத் தவிர்த்து இருளுக்குப் புகல் வேறில்லை. அகிம்சையின் முறை இதுவே. என் உள்ளத்தில் அது நிரம்பியிருப்பதால் நான் யாரிடமும் அஞ்சுவதில்லை. என் வண்டி பள்ளத்தில் இருப்பினும் நகர்ந்து கொண்டிருக்கிறது. அகிம்சையின் இந்த விளக்கம் நான் இறந்த பின்னரே உங்களுக்குத் தெளிவாகும். அதற்கு முன் அல்ல.

இதுவரையில் நாம் முடமாக இருந்ததால் காங்கிரஸின் கையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். காங்கிரஸ் உதவியளித்தால் நமது வேலை நடைபெறும் என்று எண்ணுகிருேம். ஆனல், காங்கிரஸில் நூற்போர் சங்கத்தின் தீர்மானங்களைத் தயாரிப்பது நானே. இதுவேதான் இனியும் நடக்கும் என்பதைக் கண்டேன். காங்கிரஸ்காரர்கள் நம்மிடம் வந்து கிராமங்களில் வேலை செய்யும் விதத்தைக் கேட்டறியும் அளவிற்கு நாம் அவர்களுடைய நம்பிக்கையைப் பெறவில்லை. இது நம் குற்றமே. இந்த நம்பிக்கையை நாம் பெறமுடியுமென்ருல், எந்தக்காங்கிரஸ்காரர், சங்கத்தில் சேராமல் வெளியே இருக்கத் துணிவார்? அப்பொழுது காங்கிரஸும் சங்கமும் ஒன்றே என்ற உணர்ச்சி ஏற்படும். இரண்டும் பரஸ்பரம் ஒன்றுக்கு ஒன்று உதவியாக வேலை செய்யும்; அதாவது, காங்கிரஸின் நிர்மாணத் திட்டத்தைச் சங்கம் நிறைவேற்றும் ; காங்கிரஸ், சட்ட சபைகளில் அரசாங்கத்துடன் போர் நடத்தும். அப்போது இரண்டுக்கும் இடையே விரோதப்பான்மை இராது.

ஆகையால், எல்லா விஷயங்களையும் புது முறையில், புது ஊக்கத்துடன் ஆலோசிக்க வேண்டும். நான் உங்கள் முன் புதிதாக எதையும் வைக்க வில்லை. நீங்கள் இதை உங்கள்

வாழ்க்கையில் நிறைவேற்றக் கூடுமானல், அது பெரிய காரியமாகும். நம் நிலைமை விசித்திரமானதாக ஆகிக்கொண்டிருக்கிறது. ராட்டையின் முக்கியத்துவத்தை நாம் உணரத் தவறிவிட்டோம் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. அதற்குக் காரணம், நாம் கதர்ப் பணியை அரைகுறையான முறையில் செய்து வந்ததுதான்.

யந்திரத் தொழில்களிலும், யந்திரத் தொழில்மயமாக்குவதிலும் நம்பிக்கையுள்ளவர்கள்கூட இந்தியாவின் நண்பர்கள்தான் என்பதையும் மறுக்கமுடியாது. ஆனல், அவர்களுக்கும் எனக்கும் உள்ள வித்தியாசம், இரண்டு துருவங்களுக்கும் இடையே உள்ள வித்தியாசத்தைப் போன்றதாகும். மில் உற்பத்தியை ஆதரிப்பவர்களை நகரவாசிகள் பின்பற்றலாம். ஆனல், கிராமப் பகுதியைச் சேர்ந்த நீங்கள், தப்பித் தவறி அந்த வழியில் சென்றீர்களானல், இந்தியாவின் சித்திரமே தலைகீழாக மாறிவிடும். அப்பொழுது இந்தியாவின் முகம் அடையாளம் தெரியாதபடி மாறுதல் அடைந்து விடும். அதன் காரணமாக, கோடிக்கணக்கான நம் ஏழை மக்கள் மடிவார்கள்; ஒரு கோடிப் பேர் மிஞ்சுவார்கள். நான் 125 ஆண்டுகள் வாழ ஆசைப்படுகிறேன். ஆனல், 39 கோடிப் பேரைச் சாம்பலாக்கிவிட்டு ஒரு கோடிப் பேர் வாழ்வதைப் பார்க்க எனக்குச் சகிக்காது. மிகவும் துன்பத்துக்குள்ளாகி, ஒடுங்கிக் கிடப்பவர்களுக்குப் பணி செய்து, அவர்கள் முன்னேற்றத்தோடு இணைந்து செல்லவே நான் முயன்றிருக்கிறேன். இத்தனை ஆண்டுகளாகக் கதரின் மூலம் இந்த வேலையைச் செய்ய முயன்று வந்தோம். சில ஆண்டுகளுக்கு முன்புதான் நமது பணியைத் தொடங்கினேம். ஒரு மாறுதலும் தேவையில்லை என்று நீங்கள் நினைத்தால் நினைத்துக் கொள்ளுங்கள். ஆனல், நான் தோல்வியை ஏற்றுக் கொள்ள மாட்டேன். நீங்கள் எல்லாச் சாதகபாதகங்களையும் யோசித்து ஒரு முடிவுக்கு வரவேண்டும். நாம் இவ்வளவு பேரும் திரும்பக் கூடுவது எப்பொழுது சாத்தியம் என்று யாருக்குத் தெரியும்? என் உள்ளத்தில் உள்ளதை உங்கள் முன் பகிரங்கமாக வைத்துவிட்டேன்.

ராட்டைதான் நமது லட்சியத்தின் தலைசிறந்த சின்னம் என்றும், இன்றைய முறைகளால் நமது லட்சியத்தை நம்மால் அடைய முடியவில்லை என்றும் நீங்கள் கருதினல், நம்முடைய செயல் முறையை மாற்றித்தான் ஆகவேண்டும்.

இதுவரையில் நாம் செய்ததெல்லாம் முழுக்க முழுக்கத் தவறு என்பது என் கருத்தல்ல. நாம் எதைச் செய்தாலும், சத்தியத்தினிடம் பக்தி வைத்தே செய்தோம். அது சிறு விஷயமல்ல. சிறிய மூலதனத்தைக் கொண்டு, நாலரைக் கோடி ரூபாயை இன்று (1944) வகையில் கிராமங்களில் வாழும் நம் சகோதரர்களுக்கு வினியோகம் செய்ய நம்மால் முடிந்தது. இதைப் பார்க்கும்போது, இந்த வேலையைச் செய்வதற்காக நாம் செலவிட்ட

தொகை சொற்பமே. ஆனாலும், நமது லட்சியத்தை நோக்கும் போது, நாம் செய்துள்ள வேலை இரண்டாந்தரமானதே. நம் வேலையின் வியாபார அம்சத்தில் நாம் மூழ்கிவிடக்கூடாது. சீனாவில் கூட்டுறவு இயக்கம் சாதித்துள்ளவற்றை விவரிக்கும் ஒரு புத்தகத்தை* ஜவாஹர்லால் எனக்கு அனுப்பியிருக்கிறார். நாம் இங்கே செய்து கொண்டிருக்கும் வேலையோடு ஒப்பிட்டால்,அந்த இயக்கம் ஒன்றுமே இல்லை என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால், நம் லட்சியத்தைக் கொண்டு பார்க்கும்போது, நாம் செய்திருப்பது கொஞ்சம்; மிகவும் கொஞ்சம் இன்னும் நாம் ஏழு லட்சம் கிராமங்களிலும் பரவவில்லை. மில்கள் செய்திருக்கும் வேலையில் நூற்றில் ஒரு பங்கைத்தான் நாம் செய்திருக்கிறோம். அப்படியிருக்கும் போது, நாம் பெருமைப்பட்டுக்கொள்ள என்ன இருக்கிறது? அதனால்தான், நம்முடைய முறைகளை மாற்றுவதற்கு நாம் தயாராக இல்லையென்றால், நமது சங்கம் ஒரு பரோபகார ஸ்தாபனமாக மட்டுமே இருந்துவரும் என்று நான் கூறுகிறேன். அதே சமயத்தில், கதர் சம்பந்தமாக நாம் பெரிதும் உரிமை கொண்டாடவிரும்பினால், அதற்கு ஏற்ப வாழவேண்டும். பொது மக்களை நாம் ஏமாற்றக்கூடாது. நமது பலத்தைப் பெருக்குவதற்கான வழிவகைகளை நாம் சிந்திக்க வேண்டும். நமது செயல் முறையை மாறுதல் செய்வதன் பொருட்டு, இன்றுள்ள அகில இந்திய நூற்போர் சங்கத்தை மூடிவிடுவது நல்லது என்று ஒப்புக்கொள்ள நீங்கள் சம்மதித்தால், அது உங்கள் பலத்தை அதிகமாக்கும் என்று நிச்சயமாகக் கருதுங்கள்.

## 3-வது சொற்பொழிவு - 3—9—1944

இன்று நான் எனது கருத்தை அதிகத் தெளிவாக வெளியிட விரும்புகிறேன். இரண்டு நாட்களாக நான் கூறியவற்றை வேறு முறையில் கூறுகிறேன்.

நமது வேலை சிறியதொரு விஷயத்திலிருந்து ஆரம்பமாயிற்று. நான் கதர் இயக்கம் தொடங்கியதிலிருந்து என்னுடன் விட்டல்தாஸும் வேறு சில சகோதரிகளும் இருந்தனர். அவர்களுக்கு என் கருத்தை நான் விளக்கமுடிந்தது. மகன்லால் முதலிய மற்றோரும் இருந்தனர். அவர்களுக்கு வேறு புகலிடம் ஏது? என்னுடன் வாழ்ந்து என்னுடன் சாகவேண்டியவர்கள் தான்!

அந்தக் காலத்தில் விட்டல்தாஸ் தொழிலாளிகளுக்காகப் போராடிக்கொண்டிருந்தார். அவர் தமது கடையை விட்டுவிட்டு இந்தப் பிச்சைக்காரப் பணியில் சேர்ந்தார். அப்போழுது, வருங் காலத்தில் நமக்கு என்ன நேரும் என்று எங்களுக்குத் தெரியாது.

* China Builds for Democracy by Nym Wales (Kitabistan publication.)

அதற்குப்பின் நாம் வெகுதூரம் சென்றிருக்கிறோம். இன்று சுமார் இரண்டு கோடிப்பேர் ராட்டையை உணர்ந்திருக்கிறார்கள். அதன் உதவியால், கிராமவாசிகளுக்குக் கடந்த ஆண்டுகளில் பெருந்தொகையை அளிக்க நம்மால் முடிந்திருக்கிறது. ஆனால், ராட்டையில்லாமல் சுயராஜ்யம் பெறுவது சாத்தியமில்லை என்று நாம் எப்பொழுதும் கூறிவந்திருப்பதைப்போல் இப்பொழுதும் நம்மால் கூறமுடியுமா? இந்தக் கூற்றை நாம் மெய்ப்பிக்க வேண்டும். இல்லையெனில், ராட்டையானது உண்மையில் நிவாரணம் அளிக்கும் ஒரு நடவடிக்கையாகத்தான் இருக்குமே ஒழிய அது விடுதலைக்கான சாதனமாக இராது.

இரண்டாவதாக, நம்முடைய இந்தச் செய்தியைக் கோடிக்கணக்கான நம் மக்களுக்கு உணர்த்தத் தவறிவிட்டோம். ராட்டை தங்களுக்கு என்ன செய்யமுடியும் என்பதை அவர்கள் அறியாதிருப்பதுடன், அதை அறியவேண்டுமென்ற ஆவல்கூட இல்லாதவர்களாக இருக்கிறார்கள்.

காங்கிரஸ் ராட்டையை ஏற்றது உண்மை. ஆனால், அது தன் விருப்பத்தின் பேரிலா அதை ஏற்றது? இல்லை. அது எனக்காகவே ராட்டையை அனுமதிக்கிறது. சோஷியலிஸ்டுகள் அதை ஏளனம் செய்கிறார்கள். அதை எதிர்த்து அவர்கள் ஏராளமாகப் பேசியும் எழுதியும் இருக்கிறார்கள். அவர்களுக்குச் சொல்லுவதற்கு நம்மிடம் தெளிவான, ஒப்புக்கொள்ளக்கூடிய பதில் இல்லை. ராட்டையே சுயராஜ்யத்தின் திறவுகோல் என்பதை அவர்கள் ஒப்புக்கொள்ளும்படி செய்யவேண்டுமென்று நான் எவ்வளவு ஆசைப்படுகிறேன்! அதுவே உண்மை என்று இத்தனை வருடங்களாக என்னால் காட்டமுடியவில்லை.

இப்போது மூன்றாவது விஷயத்துக்கு வருவோம்: அகிம்சை வேறோர் உலகத்தைச் சேர்ந்த ஒன்றல்ல. அது அப்படியிருந்தால், அதனால் எனக்கு யாதொரு பயனுமில்லை. நான் மண்ணுலகத்தைச் சேர்ந்தவன். அகிம்சை ஏதேனும் பயனுள்ள ஒன்றாக இருந்தால், அதை இந்த மண்ணுலகத்திலேயே, நான் உயிரோடு இருக்கும்போதே அடைய விரும்புகிறேன். இரக்கமும் அதைப் போன்ற நற்குணங்களும் இருக்கின்ற ஒரு சமூகத்தைத் தவிர வேறு எங்கு அதை அடைய முடியும்? ஹிம்சாவாதியின் வீட்டில் நுழைந்தால், அதன் முன் அறையில் புலித் தோல்களாலும், மான் கொம்புகளாலும், வாள், துப்பாக்கி முதலியவற்றாலும் அலங்கரிக்கப்பட்டிருப்பதைக் காண்பீர்கள். நான் வைஸ்ராயின் மாளிகைக்குப் போயிருக்கிறேன். முஸோலினியைப் பார்த்திருக்கிறேன். இந்த இருவரின் மாளிகைகளிலும், சுவரில் ஆயுதங்கள் தொங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்தேன். ஆயுத வணக்கமே எனக்கு அளிக்கப்பட்டது. அது ஹிம்சையின் சின்னம்.

ஆயுதங்கள் ஹிம்சையின் சின்னமாக இருப்பதுபோல், ராட்டை அகிம்சையின் சின்னமாகும். அதாவது, அதன்மூலம்

நாம் மிக மிக நேரடியான முறையில் அகிம்சையைப் பெறமுடியும். ஆனால், அதன் உணர்ச்சிக்கேற்ப நாம் வேலை செய்யாதவரையில் அது அகிம்சையின் சின்னமாக இருக்கமுடியாது. முஸோலினி யின் தர்பாரில் இருந்த வாள், "என்னைத் தொட்டால் உன்னை வெட்டுவேன்" என்று சொல்லுவதுபோலத் தோன்றியது. அது ஹிம்சையைத் தத்ரூபமாக எடுத்துக்காட்டியது. "என்னைத் தொட்டு, என் சக்தியைப் பார்" என்று சொல்லுவதுபோல் அது காணப்பட்டது. அதைப் போலவே, ராட்டையைப் பார்த்த மாத்திரத்தில் அது அகிம்சையைப் பற்றி நமக்குச் சொல்லக் கூடியவாறு அதன் சக்தியை நாம் எடுத்துக் காட்டவேண்டும். ஆனால், நாம் கையில் ஏதுமில்லாமல் உட்கார்ந் திருக்கிறோம். சோஷியலிஸ்டுகளுக்கு நாம் என்ன பதில் கூறுவது? வருடக்கணக்கில் நாம் ராட்டை ஜெபம் செய்தும், எதையும் சாதித்துவிடவில்லை என்று அவர்கள் குறைகூறுகிறார்கள்,

முஸ்லிம் ஆட்சியின்போதும் ராட்டை இருந்தது. டாக்கா, மஸ்லின் துணிக்குப் பெயர்போனது. அப்போழுது ராட்டை யானது வறுமையின் சின்னமாக இருந்ததே ஒழிய, அகிம்சையின் சின்னமாக இருந்ததில்லை. அரசர்கள் பெண்களையும், ஏழை மக்களையும் நிர்ப்பந்தித்து வேலை வாங்கிவந்தார்கள். பின்னால், கிழக்கிந்தியாக் கம்பெனியும் அதையே செய்தது. இப்படிப்பட்ட நிர்ப்பந்த வேலை பழக்கத்தில் இருந்து வந்ததாக கௌடில்யர் தமது அர்த்த சாஸ்திரத்தில் குறிப்பிடுகிறார். பல்லாண்டு காலமாக ராட்டை ஹிம்சைக்கும், நிர்ப்பந்தத்துக்கும் சின்னமாக இருந்து வந்தது. நூற்பவர்களுக்கு ஒரு பிடி தானியமோ, இரண்டு காசுகளோதான் கிடைத்தன. அதே சமயத்தில், இப்படிச் சுரண்டப்பட்ட உழைப்பினால் உற்பத்தியான மிக மெல்லிய மஸ்லின் துணிகளை அரண்மனைப் பெண்கள் ஆடம்பரமாக உடுத்தி மகிழ்ந்திருக்கிறார்கள்.

இதற்கெல்லாம் மாறுபட்ட முறையில், நான் அகிம்சையின் சின்னமாக உங்களுக்கு ராட்டையைக் கொடுத்திருக்கிறேன். இந்த விஷயத்தை இதுவரையிலும் நான் உங்களுக்குத் தெளி வாக்கவில்லை என்றால் அது என் தவறுதான். நான் நொண்டி களில் ஒருவனாக இருக்கிறேன் என்பதை நீங்கள் அறிவீர்கள். மெள்ள மெள்ளத்தான் என்னால் நடக்க முடியும். ஆனாலும், இது வரை நடந்திருக்கும் வேலை வீணாகவில்லை என்றே நான் கருதுகிறேன்.

இப்போது நான் நான்காவது அம்சத்துக்கு வருகிறேன். ராட்டையின்றி சுயராஜ்யம் பெறமுடியாது என்பதை நாம் இன்னும் நிரூபிக்கவில்லை. அதைக் காங்கிரஸ்காரர்களுக்கு நீங்கள் விளக்கிக் கூறாத வரையில் நிரூபிக்க முடியாது. ராட்டை யும் காங்கிரஸும் ஒரு பொருள் உள்ள இரு சொற்களாக வேண்டும்.

அகிம்சையின் மேல் நிலையை நிரூபிக்கும் காரியம் கடின மானது. அதன் உண்மையை நாம் உணரவேண்டுமாயின், அதன் ஆழத்தைக் கண்டறிய வேண்டும். உலகம் என்னைச் சோதிக்கப் போகிறது. ராட்டையைப் பற்றி நான் பெருமையாகச் சொல் லிக் கொண்டிருந்ததற்காக உலகம் என்னை முட்டாள் என்று கூறக்கூடும். பல நூற்றுண்டுகளாக வறுமைக்கும், அநீதிக்கும், நிர்ப்பந்தமான தண்ட வேலைக்கும் சின்னமாக இருந்து வந்த ராட்டையை இப்போது, மாபெரும் அகிம்சா சக்திக்கும், புதிய சமூக அமைப்புக்கும், புதிய பொருளாதார முறைக்கும் சின்ன மாக ஆக்கும் காரியம் நம்முடைய கடமை ஆகியிருக்கிறது. நாம் சரித்திரத்தை மாற்றவேண்டும். அதை உங்கள் மூலம் நான் செய்ய விரும்புகிறேன்.

நான் சொல்லுவது உங்களுக்குப் புரிகிறது என்று நம்பு கிறேன். இதைப் புரிந்துகொண்டும், ராட்டைக்குச் சுயராஜ்யம் பெறும் சக்தி இருக்கிறது என்பதை நீங்கள் நம்பவில்லை என்ருல், எனக்கு விடை கொடுக்கும்படி உங்களைக் கேட்டுக் கொள்ளு வேன். இப்போது நீங்கள் ஒரு திருப்பத்தில் நிற்கிறீர்கள். நம்பிக்கையில்லாமல் என்னேடு நீங்கள் தொடர்ந்து வந்தால், நீங்கள் என்னை ஏமாற்றுவதோடு, நாட்டுக்குப் பெருந் தீங்கும் செய்தவர்களாவீர்கள். என் வாழ்க்கையின் இறுதிக் காலத்தில் என்னை ஏமாற்றவேண்டாம் என்று உங்களைப் பணிவுடன் வேண்டுகிறேன்.

இன்று வரையிலும் நமது வேலையில் ஏற்பட்ட குறைகளுக்குப் பொறுப்பாளி நானே. குற்றம் என்னுடையதாக இருப்பதற்குக் காரணம், குறைகளைத் தெரிந்திருந்தும் நான் தலைவனுக இருந் திருக்கிறேன். ஆனுல், போனது போகட்டும். இன்று நாம் ராட் டையை அகிம்சையின் சின்னம் என்று அந்தரங்க சுத்தியோடு நம்புகிறேமா? மனப்பூர்வமாக அவ்வாறு நம்புகிறவர்கள் நம்மில் எத்தனை பேர் ?

நமக்கு மூவர்ணக் கொடி இருக்கிறது. அது குறிப்பிட்ட நீள அகலங்களுடைய ஒரு கதர்த் துணியைத் தவிர வேறு என்ன ? அதன் ஸ்தானத்தில் நீங்கள் வேருெரு துணியை வைத்துக்கொண்டுவிட முடியும். ஆனுல், அந்தக் கதர்த் துணி யின் பின்னணியில் உங்கள் உணர்ச்சிகள் நிரம்பியிருக்கின்றன. அது சுயராஜ்யத்தின் சின்னம் ; தேச விடுதலையின் சின்னம். அதை நாம் மறக்க முடியாது. அதை நாம் அப்புறப்படுத்த மாட்டோம். அதன் பொருட்டு நாம் சாவதற்குத் தயாராக இருக்கிறேம். அதைப் போலவே ராட்டை அகிம்சையின் சின்ன மாக இருக்க வேண்டும்.

ராட்டை, அகிம்சையின் சின்னம் என்ற முறையில், பொருளா தாரத் துறையில் எதைக் குறிப்பிடுகிறது ? அதைச் சுயதேவைப் பூர்த்தி என்ருலும் சரி ; வேறு எப்படி அழைத்தாலும் சரியே.

தேசீயப் புனருத்தாரணம், சுயதேவைப் பூர்த்தி என்ற பெயரால் மேல் நாடுகளிலும், மேல் நாடுகளுக்காக மற்ற நாடுகளிலும் கோடிக்கணக்கானவர்களின் ரத்தம் உறிஞ்சப்படுகிறது. நம்முடைய சுயதேவைப் பூர்த்தி அந்த வகையைச் சேர்ந்ததல்ல. சுரண்டலையும் ஆதிக்கத்தையும் ஒழிப்பதற்கான மார்க்கமே ராட்டை. விஷயத்தைப் பற்றித்தான் எனக்கு அக்கறையே ஒழிய, சொற்களைப் பற்றியல்ல. ஆனாலும், சொற்களில் சக்தி நிரம்பியிருக்கிறது, சொல் உணர்ச்சிக்கு உருவம் அளிக்கிறது. உணர்ச்சி சொல்லின் உதவிகொண்டு உருப் பெறுகிறது.

கடவுளுக்கு உருவம் உண்டா, இல்லையா என்பது குறித்து நமது மதத்தில் வாதப் பிரதிவாதங்கள் நடைபெற்றிருப்பதை நாம் அறிவோம். உருவம் உண்டு என்பதில் நம்பிக்கை உடையவர்கள் ஒரு சின்னத்தை வைத்துக் கடவுளை வழிபடுவதையே விரும்புகிறார்கள், அது போல, அகிம்சையை ஒரு லட்சியமாகப் பின்பற்ற வேண்டுமானால், ராட்டையை அதன் உண்மை உருவமாகவும் சின்னமாகவும் ஏற்றுக்கொள்ள வேண்டும் ; எப்போதும் அதைக் கண் முன் இருத்திக் கொள்ளவேண்டும். அகிம்சையைப் பற்றி நான் நினைக்கும்போதெல்லாம் ராட்டையின் சித்திரம் என் கண் முன் வந்து நிற்கிறது. உருவமற்ற அகிம்சையை நாம் சித்திரித்துப் பார்க்க முடியாது. அதனால் உருவமற்றதைக் குறிக்கக் கூடிய ஒன்றை நாம் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகிறோம். ராட்டையும் எனக்கு உருவமற்றதைக் குறிக்கிறது ; அதனால் நான் அதை வழிபடுகிறேன். என் ராட்டை வழிபாட்டில் உள்ள உணர்ச்சியை நீங்கள் புரிந்து கொள்ளவில்லையென்றால், அந்த உணர்ச்சி உங்களிடமும் ஏற்படவில்லை என்றால், நூறு வருடங்களானாலும் உங்களால் அகிம்சையை அறிந்து கொள்ள முடியாது. என்னைப் போன்ற உள்ளத்துடன் நீங்கள் ராட்டையை அணுகினால்தான், அதில் நான் காணும் அகிம்சையின் ஆற்றலை நீங்களும் காண முடியும். அதனால்தான், என்னைப் பின்பற்றுங்கள் அல்லது என்னை விட்டுவிடுங்கள் என்று சொல்லுகிறேன். நீங்கள் என்னோடு வர விரும்பினால், நான் உங்களுக்கு ஒரு திட்டத்தைக் கொடுப்பேன் ; முடிந்ததையெல்லாம் செய்வேன். நான் சொல்லுவதை நீங்கள் புரிந்து கொள்ளவில்லையென்றால், நான் உங்களோடு நாள் முழுவதும் உட்கார்ந்து அதை விவாதிக்கிறேன். ஆனால், உண்மையில் நீங்கள் புரிந்து கொள்ளாத போது புரிந்து கொண்டதாகச் சொன்னால், நீங்கள் உங்களையும் என்னையும் ஏமாற்றிக் கொள்ளுகிறவர்கள் ஆவீர்கள். நமது சங்கம் லாபம் சம்பாதிப்பதற்காக ஏற்பட்டதல்ல. சேவைக்காக நாம் லாபம் கேட்கவில்லை. நாட்டுக்கு நாம் பணி புரிய ஆயிரம் துறைகள் இருக்கின்றன. அப்படியிருக்க, நம்பிக்கையின்றி ஏன் ராட்டையைச் சுற்றிக்கொண்டு இருக்கவேண்டும்? அதனால் பொய் நம்பிக்கையோடு என்னுடன் தயவு செய்து இருக்க வேண்டாம். என் வழியே நான் தனியாகப் போக

விடுங்கள். ஆனல், நானும் ஒரு பொய் நம்பிக்கையினுலேயே உழன்று கொண்டிருப்பதாகவும், ராட்டையில் எனக்குள்ள நம்பிக்கை அர்த்தமில்லாத விக்கிரக வழிபாடாகவே இருப்பதாகவும் தெரிய வந்தால், என்னை நீங்கள் ராட்டையிலுள்ள கட்டையோடு சேர்த்து எரித்துச் சாம்பலாக்கி விடலாம்; அல்லது, நானே என் கையால் ராட்டையைக் கொளுத்துவேன்.

நூற்போர் சங்கம் வேண்டியதில்லை என்ருல், நாமே நம் கையால் அதைக் கலைத்து விடுவோம். அது நம் இன்னல்களையெல்லாம் தீர்த்துவிடும். தாற்காலிகமாக நம்மைச் சிரமங்களுக்குள் சிக்க வைத்திருந்த ராட்டை, அதில் நம்பிக்கையுள்ள ஒரு சிலரின் கையில் மட்டும் இருக்கும். அவர்களுடைய கைகளில் அது சக்தி வாய்ந்த ஆயுதமாக ஆகக்கூடும். அது வெறும் முட்டாள்தனமானது என்று நீங்கள் கருதினுல், நிச்சயமாக நான் மூடர்களின் சங்கத்தை நடத்தி வரவும், அந்த வகையில் நாட்டை இழிநிலைக்குத் தள்ளவும் விரும்பவில்லை. அதற்குப் பதிலாக, நீங்கள் ராட்டையின் மூலம் அகிம்சையை எடுத்துக் காட்ட முடியுமென்ருல், அது சாதாரணமாகச் சுற்றுவது மட்டுமல்ல, அதிவேகமாக ஓடவும் ஆரம்பிக்கும். அப்பொழுது, அதைக் காப்பாற்றி வருவதைப் பற்றி நீங்கள் கவலைப்பட்டுக்கொண்டிருக்க வேண்டியதில்லை.

நான் திரும்பவும் சொல்லுகிறேன்: ஒன்று, என்னைத் தனியே விட்டு விடுங்கள்; அல்லது நான் சொல்வதை ஏற்று என்னைப் பின்பற்றுங்கள். இரண்டு வருடத் தவத்திற்கும் சிந்தனைக்கும் பிறகு நான் உங்களிடம் இந்தப் புதிய கருத்துடன் வந்திருக்கிறேன். என் கருத்தை உங்களுக்குத் தெரிவிப்பதில் நான் வெற்றி பெற்றிருக்கிறேனு என்பது எனக்குத் தெரியாது. நான் சொல்வது உங்களுக்குப் புரிந்து விட்டதென்ருல், ஒன்று செய்யுங்கள்: என்னேடு இருக்க விரும்புகிறவர்கள், ராட்டையை அகிம்சையின் சின்னமாக இன்று முதல் கருதுவதாக எழுதிக் கொடுங்கள். இன்றே நீங்கள் முடிவு செய்தாக வேண்டும். ராட்டையை அகிம்சையின் சின்னமாக நீங்கள் கருதாமலோ, உங்களால் கருத முடியாமலோ இருந்து, என்னேடும் நீங்கள் இருந்து கொண்டிருப்பீர்களாயின், நீங்கள் அதன் மூலம் உங்களையே எக்கச்சக்கமான நிலைக்கு உள்ளாக்கிக் கொள்ளுவதுடன், என்னையும் சேர்த்து உங்களோடு இழுத்துக்கொண்டு போய்விடுவீர்கள்.

# 4

# மகாநாடு-2

## காந்திஜியுடன் 7-நாள் சம்பாஷணை

[இரண்டாவது தினத்தில் ஆலோசிப்பதற்காகச் சபையின் முன் சமர்ப்பிக்கப்பட்ட ஒரு தீர்மானம் பற்றிச் சிறிது விவாதம் நடைபெற்றது. ஆனால், நேரமில்லாததால் யாதொரு முடிவும் செய்ய முடியாமல் போய்விட்டது. தீர்மானத்தைப் பற்றி மேலும் தீர யோசிக்க வேண்டியது அவசியம் என்றும் கருதப்பட்டது. கூட்டம் முடிந்த பின்னர், அகில இந்திய நூற்போர் சங்கக் காரியதரிசி ஜாஜூஜி 1944 அக்டோபர் 7-ஆம் தேதியிலிருந்து 14-ம் தேதி வரை தினமும் ஒரு மணி நேரம் காந்திஜியுடன் இவ்விஷயத்தைப் பற்றி விவாதித்தார். அவர்களுடைய சம்பாஷணைகளை சுவாமி ஆனந்தர் குறித்துக் கொண்டு வந்தார். அவை திருத்தமான உருவில் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.]

## முதல் நாள் 7-10-1944
## ஒரு கூட்டுச் சங்கம்

அகில இந்திய நூற்போர் சங்க ஊழியர்களின் முன் செப்டம்பர் மாதக் கூட்டத்தில் காந்திஜி சமர்ப்பித்த தீர்மானத்தை முதலில் ஜாஜூஜி வாசித்தார். நூற்போர் சங்கத்தின் எதிர்கால வேலைத் திட்டத்தைத் தயாரிக்கும்போது அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தையும், ஹிந்துஸ்தானி தாலிமி சங்கத்தையும் கலந்து ஆலோசித்துக் கொள்ள வேண்டுமென்ற ஒரு யோசனை அந்த நகல் தீர்மானத்தில் தெரிவிக்கப் பட்டிருந்தது.

**ஜாஜூஜி :** இந்த ஜாபிதாவில் ஹரிஜன சேவா சங்கம், கோ-சேவா சங்கம், கஸ்தூரிபாய் டிரஸ்ட் ஆகியவற்றையும் சேர்த்துக் கொள்ள வேண்டுமா ?

**காந்திஜி :** ஆம். ஏனென்றால், அவை அகில இந்திய நூற்போர் சங்கத்தைப் போல் கிராமப் புனருத்தாரண வேலைத் திட்டத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டவையாகவும், பொருளாதாரப் பின்னணியும் நோக்குமுள்ளவையாகவும் இருக்கின்றன. சங்கங்களை ஒன்றாக இணைப்பதன் நோக்கம் கிராமங்களுக்குக் கூட்டாகச் சேர்ந்து சேவை செய்வதேயாகும். ஆனால், கஸ்தூரிபாய் டிரஸ்டை மட்டும் சேர்க்காமல் இருக்கலாம்.

**ஜா :** டிரஸ்டைச் சேர்க்காமல் இருப்பது, கூட்டுச் சங்கத்தின் ஓர் உறுப்பை முடக்கி விடுவதாக ஆகும். ஒவ்வொரு சங்கத்திலிருந்தும் ஒவ்வொரு அங்கத்தினரோ,

அதற்கு அதிகமான அங்கத்தினர்களோ கொண்ட ஒரு கூட்டு நிர்வாகக் கமிட்டியை நாம் சுலபமாக அமைத்து விடலாம்.

கா : நாம் கஸ்தூரிபாய் டிரஸ்டின் ஸ்தாபனங்கள் மூலம் நமது வேலையைச் செய்து கொள்ளலாம். ஏனென்றால். அவர்களுடைய வேலை, கிராமப் பணியினின்றும் வேறுபட்ட ஒன்றல்ல. நூற்போர் சங்கத்தின் முன் அந்தத் தீர் மானத்தை நான் வைத்தபோது, கஸ்தூரிபாய் டிரஸ்ட் என் கவனத்தில் இல்லை. அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தையும் ஹிந்துஸ்தானி தாலிமி சங்கத்தையுமே கருத்தில் கொண்டிருந்தேன். என்னுடைய கருத்து என்ன வென்றால், இந்தச் சங்கங்கள் ஒன்று சேர்ந்து, எல்லா வகையிலும் கிராம சேவை செய்வதை நோக்கமாகக் கொண்டு தங்கள் நடவடிக்கைகளை ஒன்றாக இணைக்க வேண்டும்; அவற்றில் எந்தச் சங்கமும் மற்றொரு சங் கத்தின் அன்றாட வேலைக்கு இடைஞ்சல் செய்யாமல் பரஸ்பரம் தார்மிக ரீதியில் தங்கள் செல்வாக்கைப் பிர யோகித்து வரவேண்டும்.

எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருப்பதும், தார்மிகமாக வழிகாட்டுவதும் அகில இந்திய நூற்போர் சங்க மத்தியக் காரியாலயத்தின் ஒரே வேலையாக இருக்க வேண்டும். பல்வேறு கிளைகளின் நடைமுறை விவரங்களைப் பற்றி அலட்டிக் கொள்ளாமல், மொத்த வேலையும் தார்மிக மார்க்கங்களில் நடைபெறும்படி ஒழுங்கு செய்துகொண் டிருப்பதில்தான் பரவல் முறை அடங்கியிருக்கிறது.

கோ-சேவா சங்கத்தையும், ஹரிஜன சேவா சங்கத்தை யும், மற்றச் சங்கங்களையும் இந்தப் பரவல் கொள்கையைக் கடைப் பிடிக்கும்படி செய்ய என்னால் இயலாது போகக் கூடும் என்பதை நான் அறிவேன். ஆனால், சேவையும் கிராமங்களை எல்லா வகையிலும் மேல் நிலைக்குக் கொண்டு வருவதுமே அவர்களுடைய நடவடிக்கைக்கு அடிப்படை யாக இருப்பதால், இந்தச் சங்கங்களின் தலைவர்களும் ஊழி யர்களும் தாமாக விரும்பியே சந்தித்து, தங்கள் வேலையை எந்த முறையில் மிகச் சிறப்பாக வகுத்துக் கொள்ளுவது என்பதைக் கூட்டாக ஆலோசிப்பார்கள் என்று நம்பு கிறேன். அத்துடன், அகில இந்திய நூற்போர் சங்கத்தின் வேலையை எதற்காகத் தடுத்து நிறுத்தவோ, மாற்றியமைக் கவோ நேர்ந்தது என்பதையும் அவர்கள் ஆலோசிக்க வேண்டியிருக்கும்.

இனிமேல் அகில இந்திய நூற்போர் சங்க ஊழியர் கதர் வேலை செய்வதோடு மட்டும் நின்றுவிட மாட்டார். ஆனால், அகில இந்திய கிராமக் கைத்தொழில்

சங்கம், கோ-சேவா சங்கம் முதலியவற்றிற்கு விரிவான பொருளில் தம்மை ஒரு பிரதிநிதி என்று கருதுவார். அப்படிக் கருதும் போது இந்தப் பிற வேலை முழுவதும் தம் துறைக்கு அப்பாற்பட்ட தென்றும் தம்மீது புதிய தொரு பாரம் சுமத்தப்படுகிறது என்றும் எண்ணக் கூடாது. அப்படி எண்ணினால், நம்முடைய கொள்கையும் நோக்கமும் உண்மையில் அகிம்சையை அடிப்படையாகக் கொள்ள வில்லை என்றே ஆகும். நம்முடைய ஊழியர், கிராமத்தில் செய்ய வேண்டிய எல்லா வேலைகளுடனும், அதாவது, கிராம வாழ்க்கை முழுவதுடனும் தொடர்பு கொள்ளக் கூடியவராக இருக்க வேண்டும். எனினும், எப்போதும் போலவே தாம் பாரமில்லாமல் இருப்பதாக உணர வேண்டும்.

ஜா : அகில இந்திய நூற்போர் சங்கத்தைப்போல, கோ-சேவா சங்கம், அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம், ஹிந்துஸ்தானி தாலிமி சங்கம் போன்ற ஸ்தாபனங்களும் இப்படிப்பட்ட ஊழியர்களைக் கிராமங்களுக்கு அனுப்ப வேண்டுமா ?

கா : ஆம், அனுப்பத்தான் வேண்டும். சங்கங்கள் ஒன்றாக இணைவதற்கும், கூட்டுக் கொள்கை யொன்றை வைத்துக் கொள்ளுவதற்கும் உண்மையான பொருள் அதுவே. இது ஒரே மாதிரியாக வேலை செய்ய வேண்டுமென்று நிர்ப்பந்திப்பதாக ஆகாது. ஆனால், எல்லாச் சங்கங்களின் ஐக்கிய தார்மிக பலத்துடனும், நல்ல முறையில் இணைந்த கண்ணோட்டத்துடனும் வேலை செய்வதை அது குறிக்கிறது.

ஜா : அகில இந்திய நூற்போர் சங்கம், வர்த்தகப் பிரிவையும், க்ஷேம நல சேவைப் பிரிவையும் தனித் தனியாக நடத்த வேண்டியிருக்குமா? சம்பூரணமான நோக்குடன் எல்லாக் கிராம வேலைகளையும் நடத்தி வருவதும், ஊழியர்களுக்குப் பொதுப்படையாக வழிகாட்டுவதும், எல்லாச் சங்கங்களினுடைய கூட்டுச் சங்கத்தின் விசேடச் செயல் முறையாக இருக்கும் என்று நான் நினைக்கிறேன்.

கா : நான் அப்படி நினைக்கவில்லை. வெவ்வேறு சங்கங்களின் கூட்டுச் சங்கம் நிரந்தரமான நிர்வாகக் கொள்கைகளை வகுத்துக்கொள்ளலாம். அவ்விதம் செய்து கொண்ட ஏற்பாடுகளை எல்லாச் சங்கங்களும் கௌரவிக்க வேண்டும். அது அவர்களுடைய நிர்வாக வேலைக்கு மிகவும் உதவியாக இருக்கும். கூட்டுச் சங்கத்தைப் பற்றிய என் கருத்து என்னவென்றால், அதன் வேலை பிரம்மாண்டமான கிருஷ்ணா நதியைப் போல் விரியும். அந்த நதி பத்திருபது துளிகளைக் கொண்ட சிறு ஊற்றாக ஆரம்பித்து, விசாலமான கிருஷ்ண சாகரமாக முடிவடைகிறது. அதைப்போலவே சர்வாம்சமும்

கொண்ட வேலையாகிய முடிவற்ற நீரோட்டம் பாயவேண்டும். இதுவே கூட்டுச் சங்கத்தைப் பற்றிய என் கற்பனை.

### ஊழியர்கள்

ஜா: தகுந்த ஊழியர்கள் கிடைப்பதுதான் உண்மையான பிரச்னையாக இருக்கிறது. நீங்கள் பற்பல விதமான வேலை களைச் செய்ய வேண்டுமென்று சொல்லுகிறீர்கள். ஆனால், ஊழியர்கள் இல்லாததால் அவற்றை நாம் மேற்கொள்ள முடியவில்லை. அப்புறம், நாம் ஏழு லட்சம் கிராமங்களையும் எட்டவேண்டும் என்றும் வற்புறுத்துகிறீர்கள்.

கா: ஆம், சொல்லத்தான் செய்கிறேன். ஆனால், நீங்கள் தோல்வியுறும்போது நான் நெடுகிலும் உங்களுடனேயே இருந்து, குற்றத்தை உங்களோடு பகிர்ந்து கொள்ளுவேன்.

ஜா: ஆகவே, நல்ல ஊழியர்களைப் பயிற்சி கொடுத்துத் தயா ரிக்க வேண்டியிருக்கிறது என்று ஆகிறது. தற்போதைக்கு, முழுக்க முழுக்கத் திறமை கொண்ட முதல் தர ஊழியர்கள் கிடைப்பார்கள் என்று நாம் எதிர்பார்க்க முடியாது. இரண் டாம் தர ஊழியர்களைக்கொண்டே நாம் வேலையைச் செய்து கொண்டு போகவேண்டும். அவர்களிடையே இருந்து அப் புறம் நாம் முதல்தர ஊழியர்களைப் பெற்றுக்கொள்ளுவோம்.

கா: அகில இந்திய நூற்போர் சங்கத்தில் சுமார் 2000 ஊழியர் கள் இருப்பார்களா?

ஜா: சுமார் 3000 பேர் இருக்கிறார்கள்.

கா: நல்லது, அப்படியானால் அவர்களைப் பயன்படுத்துங்கள். இந்தப் புதுமாதிரி வேலைக்கான பொறுப்பை அவர்களுக்குக் கொடுங்கள். அத்துடன் அவர்களுடைய வேலையில் அவர் களுக்கு அதிகச் சுதந்திரத்தையும் அனுமதியுங்கள். சிறிது நஷ்டம் ஏற்படக்கூடும் என்றாலும்கூட நாம் பரவல் முறையை அமுலுக்குக் கொண்டுவர வேண்டியதுதான்.

ஜா: பரவல் முறை என்று தாங்கள் எதைச் சொல்லுகிறீர்கள் என்பது எனக்குப் புரியவே இல்லை.

கா: ஒவ்வொரு கிராமத்தையும் எட்டக் கூடியவாறு நம் வேலையை நாம் விரிவுபடுத்த வேண்டும். இதை வெளியிடத் திலிருந்து சுமத்துவதன் மூலம் செய்துவிட முடியாது. ஊழியர்கள், ஏறக்குறைய மத்திய நிலையத்தின் அதிகாரக் கட்டுப்பாடு இல்லாமல் தாங்களாகவே வேலையைச் செய்து கொண்டுபோக அனுமதிக்க வேண்டும். இந்த அளவு சுமை யையும் சுமப்பதற்கு அவர்கள் மறுத்து, நம்மை விட்டுப் போய்விட விரும்புவார்களானால், நாம் மனக் கசப்பில்லாமல் அவர்களைப் போகும்படி விட்டுவிடுவோம். ஆனால், நாம் யாரையும் வெளியேற்றப் போவதில்லை. மகாராஷ்டிரத்தில்

சிட்டங்களை வாங்கிக்கொண்டு கதர் கொடுக்க வேண்டும் என்ற உங்கள் நோக்கம் எனக்குப் பிடித்திருந்தது. இது இன்னும் அதிகமாகப் பழக்கத்துக்கு வரவில்லை. ஆனால், நம் ஊழியர்களைக்கொண்டுதான் அந்த வேலை செய்யப்பட்டு வருகிறது. இப்படித்தான் வேலை தொடர்ந்து நடைபெறும்; அபிவிருத்தியாகும். ஆனால், தடங்கல்களை உண்டுபண்ணும் ஊழியர்கள் போய்விடத்தான் வேண்டும். அவர்களை நீக்கு வதில் நான் யாதொரு தயக்கமும் கொள்ளமாட்டேன். அவர்கள் அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கொள்கைக் குக் கீழ்ப்படியாவிட்டால், அவர்கள் அதை விட்டுப் போய் விட வேண்டும். அத்துடன் சங்கம் தனது கொள்கையை அவ்வப்போது மாற்றிக்கொள்ளுவதற்கு அதிகாரம் பெற் றிருக்கிறது. இப்படிப்பட்ட மாறுதல்கள் செய்யப்படும் என்பது தங்களுக்குத் தெரியாது என்று கூறி முறையிடும் ஊழியர்கள் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டார்கள். சங்கம் நடைபெற்றுவரும் போதே கட்டாயமாகக் கதர் உடுத்தல், பிராவிடண்டு நிதிக்குப் பணம் கட்டுதல் முதலியவை அமுலுக்குக் கொண்டுவரப்பட்டு, அவற்றிற்கு அனைவரும் கட்டுப்பட வேண்டும் என்று செய்யப்பட்டது. அவற்றை ஏற்றுக்கொள்ள முடியாதவர்கள் போய்விடும்படி நேர்ந்தது. இந்த விதமாக ஊழியர்கள் நம்மை விட்டுப் போகக்கூடும். ஆனால், அவர்களை நாமாக விலக்கமாட்டோம். அதற்குப் பதிலாக, நான் குறிப்பிட்ட புது வழிகளில் வேலை செய்யும் படியே அவர்களை வேண்டுவோம். தற்போதுள்ள ஊழியர் கூட்டத்தை நாம் கலைத்துவிட வேண்டியிருக்கும் என்றும், முற்றும் புதிய அடிப்படையில் வேலையைத் தொடங்க வேண்டியிருக்கும் என்றும் நான் ஒரு கணம் கூட நினைத்த தில்லை. ஒரு வேலை ஸ்தலத்தில் ஐந்து ஊழியர்கள் இருக்கி ருர்கள் என்றும், அங்கே வெவ்வேறு விதமான அதிக வேலை யைச் செய்யமுடியும் என்று நமக்குத் தோன்றுகிறது என்றும் வைத்துக்கொள்ளுவோம். அப்போது கையினல் காகிதம் செய்வதையும், மற்றக் கிராமக் கைத்தொழில் களையும்கூட மேற்கொள்ளும்படி அவர்களைக் கேட்டுக் கொள்ளுவோம். சாத்தியமானல், அதே சமயத்தில் மேலும் மேலும் அதிகமாகக் கதரை உற்பத்தி செய்து சுற்றுப் பகுதிகளில் அதை விற்கவேண்டும் என்றும் சொல்லுவோம். இதுதான் பரவல் முறை.

## 2-வது நாள் —8-10-1944

## ஊழியர்களின் யோக்கியதாம்சம், மொழியறிவு முதலியன

ஜா : ஊழியர்களின் தகுதியும் யோக்கியதாம்சங்களும் எவ்வாறு இருக்கவேண்டும் என்பதைத் தயவு செய்து விளக்குங்கள்.

கா : இப்போதைக்கு நான் மற்ற நிலையங்களைப் பற்றிப் பிரஸ்தாபிக்கப் போவதில்லை. அகில இந்திய நூற்போர் சங்க ஊழியரை மனத்தில் கொண்டே உங்கள் கேள்விக்குப் பதில் அளிக்கிறேன். முதலாவது, அவர் தமது தாய் மொழியோடு, தாம் வேலை செய்துகொண்டிருக்கும் மாகாணத்தின் மொழியையும், தேசீய மொழியையும் அறிந்திருக்கவேண்டும். ஆங்கில மொழியறிவு அத்தியாவசியமானதாக எனக்குத் தோன்றவில்லை. அவர் நாட்டின் பொருளாதார சமூக, அரசியல் நிலையையும், ஓரளவுக்கு உலக நிலையையும் அறிந்திருக்க வேண்டும். இது கஷ்டமானது என்பது உண்மைதான். ஆனால், அத்தியாவசியமானது. பிறநாடுகளில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதையும், அவற்றின் அரசியல் அமைப்பு போன்றவற்றையும் அவர் அறியாவிட்டால், இந்தியாவில் அந்த நிலைமைகள் எவ்வாறு இருக்கின்றன என்பதையும், நாம் எதை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறோம் என்பதையும் அவரால் எப்படிப் புரிந்துகொள்ள முடியும்? சிறப்பாக அவர் தம் வேலை ஸ்தலத்திலும், அதைச் சுற்றியும் உள்ள நிலைமைகளைப் பற்றி விவரமாகத் தெரிந்திருக்க வேண்டியது அவசியம்.

## கதர்

இவ்வளவும், அவர் பொதுப்படையாகத் தம்மைத் தயார் செய்து கொள்ளுவது பற்றியது. இது அவருக்கு இருக்கவேண்டிய தகுதியின் பூர்வாங்கப் பகுதியே ஆகும். கதரைப் பொறுத்தவரை, அவர் ராட்டையைப்பற்றி முழுக்க அறிந்திருப்பது மட்டுமின்றி, தக்ளியைப் பற்றியும் நன்கு அறிந்து கொண்டவராக இருக்கவேண்டும். நூற்பது மட்டும் போதாது. கதர் சாஸ்திரம் முழுவதையும், அதாவது, நூல் நெம்பரை மதிப்பிட்டு அறிதல், பட்டை போடுதல், பருத்தி வகையைக் கண்டுகொள்ளுதல், குறிப்பிட்ட மாதிரியான பட்டை போடுவதற்குத் தேவைப்படும் பருத்திவகை, நூற்றல் முதலியவற்றையெல்லாம் அவர் அறிந்திருக்க வேண்டும். தொழில் நுட்பம் சம்பந்தமாகச் செய்யப்பட்டுள்ள அபிவிருத்திகளின் வரலாற்றை, உதாரணமாக, பட்டை போடுதல் தற்போதைய நிலையை எய்தியது எப்படி என்பதையும் ராட்டையில் செய்துள்ள பலவகை அபிவிருத்திகளையும், அவர் தெரிந்திருக்க வேண்டியது அவசியம். அத்துடன் ராட்டைகளைப் பழுது பார்த்து, அதை வேலை செய்து வரும்படி செய்யவும் தெரிந்திருக்கவேண்டும். அதாவது, தச்சு வேலையின் ஆரம்ப அறிவும் ஊழியருக்கு இருக்க வேண்டியது அவசியம். கிராமவாசிகளின் பழுதடைந்த ராட்டைகளைச் சீர்ப்படுத்துவதற்கு அவரால் முடியவில்லையெனில், கிராமத்தில் நூற்பு வேலை நின்றுவிடும்; லட்சியமும் கெடும்.

## மற்றத் தொழில்கள்

ராட்டையைப் பற்றி நான் இவ்வளவு விரிவாகச் சொன்னதற்குக் காரணம், கிராமம் மேம்பாடு அடைவதற்கு அதையே நான் நடுநாயகமான அம்சமாகக் கருதுவது தான். அத்துடன், ஊழியர் தமது கிராமத்தில் வேறு எந்தக் கிராமக் கைத்தொழில்கள் வளர்ச்சியடைய முடியும் என்பதையும் பார்க்கவேண்டும். இந்தத் தொழில்களின் வரிசையில் முதலாவதாக இருப்பது மாட்டுச் செக்கு. மகன்வாடியில் இப்பொழுது விஞ்ஞான பூர்வமாக அபிவிருத்தி செய்யப்பட்டிருக்கும் அதன் தொழில் நுட்பத்தை நம் ஊழியர் தெரிந்துகொள்ள வேண்டும். ஆரம்பிக்கத்தக்க மற்ளெரு தொழில், கையினுல் காகிதம் செய்தல். நாடு முழுவதற்கும் காகிதம் தயாரித்துக் கொடுக்கும் நோக்கத்துடன் அல்ல, கிராமத்தைச் சுயம்பூரணமாக்குவதற்காகவும், சிறிது வருமானத்தைத் தேடிக்கொள்ள வழி செய்வதற்காகவுமே இதைக் கற்றுக்கொள்ள வேண்டும்.

செக்குக்கும், கைக்காகிதத்துக்கும் அடுத்தபடியாக, கையால் சுற்றும் திரிகையை மீண்டும் நாம் உபயோகத்திற்குக் கொண்டுவர வேண்டும். இது ஒவ்வொரு கிராமத்திற்கும் ஜீவாதாரமானது. இல்லையென்ருல், பல வருடங்களாக எனக்குக் கவலையை அளித்துக் கொண்டுவரும் மாவு மில்களே நமக்கு விதித்த விதி என்று ஆகிவிடும். அரிசி சம்பந்தப்பட்ட விஷயமும் இதே மாதிரித்தான்; கிராமங்களிலுள்ள நம் மக்கள், கையினுல் அரிசி குத்திக் கொள்ளும்படி அல்லது கோதுமை உமியைப் போக்கக் கைத்திரிகையை உபயோகிக்கும்படி நாம் செய்ய வேண்டும். ஏனென்ருல், மில்களில் தீட்டிய வெள்ளையரிசி ஆரோக்கியத்துக்குக் கேடு செய்கிறது என்பது நன்கு நிலை நாட்டப்பட்ட ஓர் உண்மையாகும்.

## விவசாயமும் கால்நடைப் பராமரிப்பும்

அடுத்தபடியாக, விவசாயத்தை எடுத்துக் கொள்ளுவோம். நம் கிராமங்கள் விவசாயத்தை நம்பி வாழ்கின்றன; உழுவதற்குக் கால்நடைகளையே பயன்படுத்துகின்றன. இந்த விஷயத்தில் எனக்கு எதுவுமே தெரியாது என்றே சொல்ல வேண்டும். ஏனென்ருல், எனக்குச் சொந்த அனுபவம் கிடையாது. ஆனுல், விவசாயமோ கால்நடைகளோ இல்லாத கிராமம் ஒன்றுகூட இல்லை. எருமையும் இருக்கிறது. ஆனுல், கொங்கணத்திலும், வேறு சில இடங்களிலும் தவிர அது விவசாயத்துக்கு அதிகம் பயன்படுத்தப்படவில்லை. நம் ஊழியர், தமது கிராமத்தின் கால்நடைச் செல்வத்தினிடம் கண்ணும் கருத்துமாக இருக்கவேண்டும். இந்தச் செல்வத்தைத் தக்கவாறு நம்மால் பயன்

படுத்த முடியவில்லை என்றால், இந்தியா நாசமடைவது திண்ணம்; நாமும் சாகவேண்டியதே. ஏனென்றால், இந்தப் பிராணிகள் அப்பொழுது, மேல் நாடுகளில் ஆனதைப்போல், நமக்கு ஒரு பொருளாதாரப் பாரமாக ஆகிவிடும் ; அவற்றைக் கொல்லுவதைத் தவிர நமக்கு வேறு வழி இல்லாமலும் போய்விடும்.

ஆகையால், நம் ஊழியர்கள் எப்படியும் இந்த விஷயங்களைப் பற்றி ஓரளவு ஞானத்தைத் தேடிக்கொள்ள வேண்டும் ; இந்தப் பிரச்னைகளைத் தீர்க்க அகிம்சை வழி யொன்றைக் கண்டுபிடிக்க வேண்டும். நமது அகிம்சை வழி வெற்றி பெறுமா, தோற்றுவிடுமா என்பதை நான் அறியேன். தோற்றுவிட்டால், அது நம் குற்றமே ஒழிய அகிம்சையின் குற்றமல்ல. விவசாயத்தைப் பொறுத்தவரையில், நிலம் மேலும் துண்டுபடுவதைத் தடுக்கவும் கூட்டுப்பண்ணை விவசாயத்தை மேற்கொள்ளும்படி மக்களை ஊக்குவிக்கவும் நம்மால் முடிந்ததையெல்லாம் செய்யவேண்டும்.

## குடிதண்ணீரும் சுகாதாரமும்

நிலத்துக்கு அடுத்தபடியாக இருப்பது தண்ணீர்ப் பிரச்னை. விவசாயத்துக்கு வேண்டிய தண்ணீர் அல்ல, குடிதண்ணீர்ப் பிரச்னை. ஊழியர், கிராமத்திலுள்ள எல்லாக் கிணறுகளுக்கும் போய், அவற்றைப் பரிசோதித்துப் பார்க்க வேண்டும். அவற்றின் உட்புறத்தையும் சுற்றுப்புறத்தையும் சுத்தம் செய்வது அவரது கடமையாக இருக்கவேண்டும். கிராமத்தில் எத்தனை கிணறுகள் குடிதண்ணீர்க் கிணறுகளாக இருக்க லாயக்குள்ளவை, சுற்றுப்புறங்கள் சுத்தமாக இருக்கின்றனவா, அவற்றின் அருகே பொதுக் கக்கூஸ்கள் உள்ளனவா என்பனவற்றை அவர் கவனிக்கவேண்டும். அவை கிணறுகளின் அருகே இருந்தால், அவற்றை அவ்வளவு பக்கத்தில் வைத்துக்கொண்டிருப்பதில் உள்ள ஆபத்துக்களை அவர் ஜனங்களுக்கு விளக்கிச் சொல்லுவார். கக்கூஸ்களைக் குறிப்பிட்ட தூரத்துக்கு அப்பால் மாற்றுவதற்கு அவர்களுடைய ஒத்துழைப்பை நாடுவார். இவ்விதமாக, கிராமம் முழுவதும் சுத்தமாக இருப்பதற்கான காரியத்தை அவர் கவனிக்க வேண்டும். கிராமச் சுகாதாரம், திறமான உரத் தயாரிப்பு ஆகிய விஷயங்களில் அவர் பூரண ஞானம் பெற்றிருக்க வேண்டும். இந்த ஞானத்தை அவர் நடைமுறைக்குக் கொண்டுவரவேண்டும். வேலையில் பல பிரிவுகள் உண்டு என்பது உண்மைதான். ஆனால், அந்தப் பிரிவு பச்சைக் கொடி காட்டும் ரெயில்வே போர்ட்டரின் வேலையைப் போலவோ, தோல் தொழிற்சாலையில் செருப்பின் அடிவில்லையை மட்டும் செய்யும் பெண் தொழிலாளியின் வேலையைப் போலவோ இருக்கக்கூடாது. இப்படிப்பட்ட

வர்கள் தங்கள் வேலையைத் தவிர வேறு எந்த வேலையையும் செய்ய முடியாதவர்களாக இருக்கிருர்கள். வேலையை இவ் வாறு மிகமிக அதிகமாகப் பிரிப்பது இழிவுபடுத்தும் காரிய மாகும். முழுக் கிராம நிர்மாணத்தைப் பற்றிய அனைத்தையும் கிராம ஊழியர் தெரிந்து கொள்ள வேண்டும். கிராமங் களில் சிறிது தையல் வேலையும், இரும்பு வேலையும், தச்சு வேலையும், தோல் வேலையும், விவசாயமும், மற்ற வேலை களும் இருக்கும். இந்த வெவ்வேறு தொழில்களைச் செய்து வரும் தொழிலாளிகளும், ஓர் உடம்பின் பல உறுப்புக்களைப் போன்று ஒன்றுபட்டுப் பணி புரியும் பொருட்டு அவர்க ளிடையே கூட்டுறவை உண்டுபண்ணக் கிராம ஊழியர் முயலவேண்டும். உடம்புக்கும் உள்ளத்துக்கும் முழுக்க வேலை கொடுக்கத் தீர்மானித்துவிட்ட ஓர் ஊழியருக்கு இது அதிகக் கஷ்டமானதாக இருக்கக் கூடாது.

இப்பொழுது எனது கடைசி விஷயத்துக்கு வருகி றேன். கிராமத்துக்குப் போகும் ஊழியருக்கு அகிம்சையில் நம்பிக்கை இல்லை என்ருல், நம் வேலை தோற்றுப் போக வேண்டியதுதான். பொருளாதார விஷயத்தில் மட்டும் அவர் சிரத்தை எடுத்துக்கொண்டு, ஒழுக்க, தார்மிக விஷயங்களில் அசிரத்தை காட்டினல் நம்முடைய எல்லா முயற்சிகளாலும் யாதொரு பயனும் இல்லை. அகிம்சையை அடிப்படையாகக் கொண்டே நமது வேலையை அமைக்கவேண்டும். நம் வேலை அதை அலட்சியம் செய்துவிட முடியாது. ஊழியர்கள் தாம் செய்யும் ஒவ்வொரு வேலையிலும் அகிம்சையை எடுத்துக்காட்ட வேண்டும். அகிம்சையே உருவானவர் களாக அவர்கள் விளங்க வேண்டும். இதை அவர்களால் செய்ய முடியவில்லை என்ருல், அவர்களுடைய வேலை வெறும் வெளித் தோற்றமாகவே இருக்கும். அகிம்சையைப் பற்றி வகுப்புகள் நடத்திக்கொண்டு வருவதால் மட்டும் யாதொரு பயனும் இல்லை.

ஜா: ஒரு கிராமத்திற்கு ஓர் ஊழியருக்குப் பதிலாக இரண்டு ஊழியர்களை அனுப்புவது உசிதமாக இராதா? அப்படிச் செய்தால், அவர்கள் தங்களுக்குள் வேலையைப் பகிர்ந்து கொண்டு ஒருவருக்கு ஒருவர் உதவியாக இருக்க முடியும்.

கா: என்னிடம் இந்தக் கேள்வியை அநேகர் கேட்டிருக்கின் றனர். இது சம்பந்தமாகத் திட்டவட்டமான விதி எதனை யும் நான் விதிக்கப் போவதில்லை. ஊழியர் தனியாகவே போய் வேலை செய்வதைத்தான் நான் விரும்புவேன். தனி யாக இருந்தே அவர் நிலைமையைச் சமாளித்து. அந்தச் செயல் முறையில் பயத்தை யெல்லாம் உதறிவிட வேண்டும். ஆனல், ஒருவர் போதாது என்ருல், இரண்டு ஊழியர்களை நீங்கள் அனுப்பிவைக்கலாம். நிதியின்மை வந்து குறுக் கிட்டால் நாம் நிலைமையைப் பரிசீலனை செய்வோம். ஆனல்,

என்னைப் பொறுத்தமட்டிலும், ஓர் ஊழியரை, அவர் கல்யாண மானவராக இருந்து, கணவரும் மனைவியும் ஒரே கிராமத்தில் சேவை புரியும்போது, இரண்டு ஊழியர்களாகக் கருதும் அளவுக்குச் செல்ல நான் தயாராக இருக்கிறேன்.

ஜா: அனுபவம் அதற்கு மாருக இருக்கிறது. ஊழியரின் மனைவி அவருக்கு ஆதரவாக இருப்பதைவிட இடைஞ்ச லாகவே இருக்கிருர்.

கா: அதனல்தான் அதைப் பற்றி எந்த விதிகளையும், சட்ட திட்டங்களையும் நான் செய்யப் போவதில்லை. ஊழியர்கள் கல்யாணம் செய்துகொண்டவர்களாக இருக்க வேண்டும் என்று ராஜாஜி வற்புறுத்துகிருர் என்பது உங்களுக்குத் தெரியுமா?

ஜா: சில ஊழியர்கள் மற்றவர்களைவிட உயர்ந்த தகுதியுடைய வர்களாக இருப்பார்கள். ஒரு நல்ல ஊழியரின் கீழே பக்கத்துக் கிராமங்களில் வேலை செய்யும் ஐந்து அல்லது ஆறு சாதாரண ஊழியர்களைப் பணி புரியும்படி செய்யும் யோசனை உங்களுக்குப் பிடித்திருக்கிறதா?

கா: அதைப் பற்றிப் பற்பல நண்பர்களுடனும் பேசினேன். எப்போதும் அது சாத்தியமாக இராது. ஏராளமான ஊழியர்களுக்குப் பயிற்சி கொடுக்கும்படி திம்மப்ப நாயக் கைக் கேட்டுக் கொண்டேன். இல்லை என்ருல், அவருடைய வேலை கெடும்போல இருந்தது. கர்நாடகத்தில் அவர் மிகவும் ஆற்றல் வாய்ந்த திறமையான ஊழியர். சுமார் ஆறு ரூபாயில் அவர் ஜீவனம் செய்துவருகிருர். உள்ளூர் ஊழியர்களுக்குத்தான் குறைந்த செலவில் பயிற்சி கொடுக்க முடியும் என்று அவர் அபிப்பிராயப்படுகிருர். இப்படிப்பட்டவர்களுக்கு அவர் பயிற்சியளித்திருக்கிருர். அவர்கள் அவரோடு வேலை செய்து வருகிருர்கள்.

## ஊழியருக்கான செலவு

ஜா: ஓர் ஊழியருக்கு நாம் எவ்வளவு செலவிட வேண்டும்?

கா: யுத்தத்தின் காரணமாக எல்லாம் கிராக்கியாகியிருக்கும் காலம் இது. இது சற்று நீண்ட காலத்துக்கு நீடிக்கக் கூடும் என்று அஞ்சுகிறேன். ஓர் ஊழியருக்கு ரூபாய் ஐம்பது அல்லது நூறுகூடச் செலவழிக்க நான் தயாராக இருக்கிறேன்.

ஜா: ஊழியரின் சாப்பாட்டுச் செலவு ஒரு புறமிருக்க, அவ ருடைய குடும்பம், அவருடைய குழந்தைகளின் கல்வி முதலிய பாரங்களும் இருக்கின்றன.

கா: நாம் மத்திய நெறியைக் கடைப்பிடிக்க வேண்டும். நிறையப் பாரங்கள் இருப்பவர்களை விட்டுவிட வேண்டும். கணவன், மனைவி, இரண்டு குழந்தைகள் ஆகிய நான்கு பேர் கொண்ட அல்லது அதிகப்பட்சமாக ஐந்து பேர் கொண்ட ஒரு குடும்பத்தை மட்டுமே சேர்த்துக் கொள்ளு வது என்று நாம் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும். இதைவிட அதிகமான பேர்களைக் கொண்ட குடும்பத்தைச் சேர்க்காமல் இருப்பது நல்லது என்று நான் கருதுகிறேன்.

ஜா: அநேக ஊழியர்கள், தங்கள் பெற்றோர்களையோ, சகோதர சகோதரிகளையோ அல்லது உறவினரையோ வைத்துக் காப் பாற்ற வேண்டிய பொறுப்பு தங்களுக்கு இருக்கிறது என்று வாதிக்கிறார்கள்.

கா: அவர்களை நாம் சேர்த்துக் கொள்ள முடியாது.

ஜா: ஊழியரின் சம்பளத்தை நிர்ணயிக்கும் போது எதை அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருத வேண்டும்—அவருடைய திறமையையா? அல்லது அவருடைய குடும்பப் பொறுப்புக்களையா?

கா: வல்லபசாமிக்கு நான் ஐந்து ரூபாய்தான் கொடுப்பேன்; நூறு ரூபாய் கொடுக்க மாட்டேன். ஆனால், பெரிய குடும்பம் உள்ள ஓர் ஊழியரைப் போகச் சொல்லுவதைவிட அவருக்கு நான் அதிகப்பட்சத் தொகையைக் கொடுப் பேன். அதாவது இரண்டு பேருமே வாழ வேண்டும்; ஒருவர் மீது ஒருவர் பொறாமை கொள்ளக் கூடாது. யாரும் பொய் நம்பிக்கைகளை வைத்துக் கொண்டிருக்கவும் கூடாது.

ஜா: கிராமவாசிகளிடமிருந்து நம் ஊழியர்கள் எந்த அளவுக்கு ஒத்துழைப்பை எதிர்பார்க்கலாம்? நாம் வேலை செய்யும் இடத்தைத் தேர்ந்தெடுக்கக் கூடிய சமயத்தில், கிராமங் களுக்குச் சில நிபந்தனைகளை விதிப்பது நன்றாக இருக்குமா? இன்றுள்ள நிலைமை இதுதான்: கிராமங்களுக்குப் போகும் நம் ஊழியர்களைப் பணம் வைத்திருப்பவர்கள் என்று நினைக் கிறார்கள். அவர்களிடமிருந்து எவ்வளவு தூரம் லாபம் அடைய முடியுமோ அவ்வளவையும் அடைய வேண்டும் என்று கிராமவாசிகள் நினைக்கிறார்கள். அதன் விளைவாக, ஊழியர் கிராமத்தில் இரண்டு ஆண்டுகள் வேலை செய்து விட்டுப் போகும்போது எல்லா வேலையும் யாதொரு பயனு மில்லாமல் போய்விடுகிறது.

கா: நாம் எந்த நிபந்தனைகளையும் விதிக்கக் கூடாது என்று நான் நினைக்கிறேன். உதாரணமாக, நான் ஆதிவாசி களிடையே சேவை செய்வதற்காகப் போய் அங்கே தங் கினால், அவர்கள் மீது நாம் எந்த நிபந்தனைகளை விதிக்க

முடியும்? ஏற்கனவே நாம் சிறிது அனுபவம் பெற்றுள்ள இடங்களில் தங்கி, ஒரே தீர்மானமாக வேலை செய்தால், நமது வேலை வளர்ச்சி பெறும்; விருத்தியாகும்.

முடிவில், எல்லாம் ஊழியரைப் பொறுத்தே இருக்கிறது. கிராமவாசிகளின் உள்ளத்தை அவர் கவர்ந்தால், அவர்களை அவர் தம்மோடு வேலை செய்ய வைத்துவிட முடியும்.

## ஊழியருக்கான பரீட்சை

ஜா: ஊழியர் சுயதேவைப் பூர்த்தி பெற்றவராக ஆவதற்கு எவ்வளவு காலமாகும்? ஐந்து ஆண்டுகள் ஆகுமா?

கா: நீங்களே ஐந்து ஆண்டுகள் என்று சொல்லுகிறீர்கள்.

ஊழியர் தமது சட்டைப் பையில் ஒரு மாதச் சம்பளத்தை வைத்துக்கொண்டு கிராமத்துக்குப் போவார். கிராமவாசிகளிடம் ஒரு துண்டு நிலத்தைக் கேட்டு வாங்கி, அதில் தமது குடிசையைக் கட்டுவார். ஒரு காலி வீடு கிடைத்தால் அதில் போய்க் குடியிருப்பார். தம்முடைய சட்டைப் பையிலிருந்து தக்ளியை எடுத்து ஒரு மரத்தின் அடியில் உட்கார்ந்து நூற்பார். கிராமவாசிகளிடம் அவர்களுடைய ராட்டைகள் இருந்தால், அவற்றை அவர் பழுது பார்ப்பார். கிராமவாசிகளோடு சேர்ந்து நூற்பார். கிராமத்துக் குழந்தைகளை ஒன்று கூட்டி அவர்களோடு விளையாடுவார்; அவர்களுக்குக் கதை சொல்லுவார்; அவர்களுக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுப்பார்; கிராமத் துப்புரவு வேலையைச் செய்வார். அவருக்கு அவருடைய சம்பளத்தைத் தவிர, ஒரு தொழிலோ வேறு எதுவுமோ ஆரம்பிப்பதற்கு மூலதனமாக ஒரு தம்படிகூட நான் கொடுக்கப் போவதில்லை. அவர் தம் திறமையினாலும், அன்பினாலும் எந்தக் காரியத்தையும் செய்துகொள்ள வேண்டியதுதான். இது அவருடைய அன்புக்கும், சேவை செய்ய வேண்டும் என்ற உணர்ச்சிக்கும், அவரது ஆற்றலுக்கும் ஒரு பரீட்சையாகும்.

ஜா: இது மிகவும் கடுமையான பரீட்சை.

கா: ஆம். அகிம்சை முறையில் நாம் சுயராஜ்யத்தை அடைய வேண்டுமென்றால், என்னிடம் வேறு வழி எதுவும் இல்லை.

## 3-வது நாள் 10-10-1944
## சுயதேவைப் பூர்த்தி அடைவது எப்படி?

ஜா: ஊழியர்கள் சுயதேவைப் பூர்த்தி செய்து கொள்ளுவது எப்படி? கிராமவாசிகள் அவர்களுக்குப் பணமோ தானியமோ கொடுக்கலாம்; அல்லது வேலை கொடுக்கலாம்.

இல்லையெனில், அவர்கள் ஒரு தொழில் நிலையத்தை நடத்தி அதிலிருந்து கிடைக்கும் லாபத்தில் ஒரு விகிதத்தை ஊழியருக்குக் கொடுக்கலாம்.

கா : இரண்டு வழிகளையுமே கைக்கொள்ளலாம். நிச்சயமாக நாம் ஊழியர்களுக்குச் சம்பளம் கொடுப்போம். அது போக, கிராமவாசிகள் அல்லது ஊழியரே கிராமத்தின் நலனுக்காக ஒரு கைத்தொழிலை மேற்கொள்ளலாம். புத்திசாலியான ஒரு நல்ல ஊழியர் கிராமத்தில் வேலை செய்து, தம் சொந்தச் செலவுகளைச் சமாளித்துக்கொள்ளுவது சாத்தியமாகக் கூடும். தம்முடைய மூளை வேலையினால் தம் நடவடிக்கைகள் அனைத்துக்கும் வேண்டிய செலவுகளையும் சமாளித்துக்கொண்டு, நண்பர்களிடமிருந்து எதுவும் வாங்காமல் இருந்துகொள்ளலாம். ஆனால், அறிவை மட்டும் பயன்படுத்தி இவ்வாறு பணம் சம்பாதிப்பது, நான் அடிக்கடி கூறியிருப்பதுபோல, அறிவைத் துஷ் பிரயோகம் செய்வதாகும். இப்படிப்பட்ட வருமானம் முழுவதும் தேசத்துக்குச் சேர வேண்டும்.

ஜா : கதர் உற்பத்தியைக் கொண்டு மட்டும் நமது ஊழியர் வாழ்வது என்றால், அதன் மூலம் அவர் சுயதேவைப் பூர்த்தி செய்துகொள்ளுவது சாத்தியமாக இராது. விற்பனைக்கும் அவர் கதர் உற்பத்தி செய்யவேண்டியிருக்கும். லாபம் சம்பாதிப்பதற்காக, அதை அவர் விற்கவேண்டும் ; வெளியிடத்துக்கு அனுப்பவேண்டும் ; மற்றப் பல காரியங்களையும் செய்யவேண்டும்.

கா : என் திட்டத்தில் நான் யோசித்திருக்கும் விஷயம் இதுவல்ல. கதர் உற்பத்தியின் மூலமாக மட்டும் ஒரு கிராமத்தைச் சுயதேவைப் பூர்த்தி செய்து கொள்ளக்கூடியதாக ஆக்கவேண்டுமென்றால், உபரியாக உள்ள கதரை வெளியில் அனுப்பத்தான் வேண்டியிருக்கும் என்பதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன்.

சுயதேவைப் பூர்த்திக்கு வேண்டிய கதருடன், மற்றக் கதரையும் ஓரளவுக்கு நாம் தயாரிக்கவில்லை என்றால், நம் கிராமவாசிகள் ஜீவனோபாயத்துக்கு நிலத்தைப்போன்ற எதுவும் வைத்திருக்கவில்லை என்றால், சுயதேவைப் பூர்த்திக் கதர் மட்டும் அவர்களுடைய எல்லாத் தேவைகளையும் ஈடு கட்டப் போதுமானதாக இராது என்று ஒரு சமயம் ஒருவர் விளக்கிச் சொன்னார். சுயதேவைப் பூர்த்தி பற்றிய எனது கருத்து என்னவென்றால், கிராமங்கள் உணவு, உடை, மற்ற அடிப்படைத் தேவைகள் ஆகியவை விஷயத்தில் சுய தேவைப் பூர்த்தி அடைந்தவையாக இருக்கவேண்டும். இதற்குமே வரம்புமீறிப்பொருள் கொள்ளக்கூடும். ஆகையால், என் கருத்தை நீங்கள் சரிவரக் கிரகித்துக்கொள்ள வேண்டும். சுயதேவைப் பூர்த்தி என்பது குறுகிய நிலையாக

ஆகாது. சுயதேவைப் பூர்த்தியோடு இருப்பது, முழுக்கச் சுயம்பூரணமாக இருப்பதல்ல. எந்த விதமான சந்தர்ப்பத்திலுமே, நமக்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் நாம் உற்பத்தி செய்துகொண்டு விடமுடியாது. ஆகவே, சுயதேவைப் பூர்த்தியே நமது லட்சியம் என்றாலும், கிராமத்தில் நாம் உற்பத்தி செய்துகொள்ள முடியாதவற்றைக் கிராமத்துக்கு வெளியிலிருந்து தருவித்துக் கொள்ளத்தான் வேண்டும். நம்மால் உற்பத்தி செய்ய முடியாதவற்றை வாங்கிக்கொண்டு அவற்றிற்குப் பதிலாகக் கொடுப்பதற்கு நம்மால் உற்பத்தி செய்ய முடிவதை அதிகமாக உற்பத்தி செய்யவேண்டும். ஆனால், நம்முடைய உபரி உற்பத்தி எதுவும் பம்பாய்க்கோ, தூரத்திலுள்ள நகரங்களுக்கோ அனுப்பப்படமாட்டாது. அந்த நகரங்களுக்கு அனுப்பும் நோக்கத்துடன் நாம் உற்பத்தி செய்யவும் மாட்டோம். அது என்னுடைய சுதேசிக் கருத்துக்கு மாறானதாக இருக்கும். சுதேசி என்பது, தூரத்தில் இருப்பவர்களைவிட என் அருகில் உள்ளவர்களுக்குச் சேவை செய்வதே ஆகும்.

நமது நோக்கம், முதலில் கிராமத்துக்குச் சேவை செய்வது, அப்புறம் சுற்றுப்புறத்துக்கு, அதற்கு அப்புறம் ஜில்லாவுக்கு, அதன் பின் மாகாணத்துக்கு என்று இருக்கவேண்டும் என்பதே. இந்த முறைகளின்படி வேலை செய்துவரும் அகில இந்திய நூற்போர் சங்கம், இந்தக் கொள்கையைப் பாதுகாக்கும் மத்திய நிலையமாக மட்டுமே வேலை செய்து வர வேண்டும். எல்லாவிதமான சிக்கல்களிலும் நாம் மாட்டிக் கொள்ளக் கூடாது. நம்மிடம் மூவாயிரம் ஊழியர்கள் இருக்கிறார்கள்; ஏராளமான விற்பனை நிலையங்களும் இருக்கின்றன. இன்றே அவற்றை நாம் கலைத்து விடமாட்டோம். ஆனால், நம்முடைய புதிய வேலை முறையைப் பற்றித்தான் உங்களுக்குச் சொல்லிக்கொண்டிருக்கிறேன்.

## வேலை ஸ்தலத்தின் அளவு

ஜா : ஊழியர் வேலை செய்யும் ஸ்தலத்தின் அளவு எதுவாக இருக்கவேண்டும்? அவருடைய வேலை ஸ்தலத்தைச் சுற்றி ஐந்து மைல் தூரத்துக்குட்பட்ட இடமாக இருக்கலாமா?

கா : ஆம். சில சமயங்களில் குறைவாகவும் இருக்கலாம். வங்காளத்திலும் பீகாரிலும் ஸ்தலத்தைச் சுற்றியுள்ள ஐந்து மைல் பிரதேசத்தில் அநேக கிராமங்கள் இருக்கும்.

ஜா : ஊழியர் காலையில் தமது ஸ்தலத்தை விட்டுச் சென்று, எல்லா இடங்களுக்கும் போய்விட்டு, மாலையில் திரும்பி வருவதற்குச் சாத்தியமாகக் கூடிய அளவுக்கு அவருடைய வேலை ஸ்தலத்தை நாம் ஏன் வரையறுக்கக் கூடாது?

கா : அப்படியே செய்யலாம்.

ஜா : அகில இந்திய நூற்போர் சங்கம் இந்த வேலையை முதலில் மேற்கொள்ளுமா ?

கா : நிச்சயமாக. ஏனென்றால், ராட்டைதான் சூரியன். அதைச் சுற்றித்தான் கிரககோளங்களைப்போல் மற்றத் தொழில்கள் சுழல்கின்றன. சூரியனுடைய சஞ்சாரங்கள் சரியாக இருந்தால்தான் அவை சரியான முறையில் சுழலும். இன்றேல், கிராமத்தொழில்கள் வால் நட்சத்திரங்களைப் போல் நடந்து கொள்ளுகின்றன.

## வேலை வரம்பு

ஜா : தீண்டாமையை எதிர்த்து வேலை செய்வது, ஊழியரை எல்லாவிதக் கஷ்டங்களிலும் சிக்கவைத்து விடுகிறது. நம் ஊழியர் எவ்வளவு தூரத்துக்கு அதில் தம்மை ஈடுபடுத்தலாம் ?

கா : ஊழியரின் வேலையை நிறுத்திவிடக்கூடிய கஷ்டங்களில் அவர் தம்மை ஈடுபடுத்திக் கொள்ளக்கூடாது. ஆனால், அவருடைய சொந்த வாழ்க்கையில் தீண்டாமைக்கு இடம் இருக்கவே கூடாது. ஹரிஜனங்கள் தண்ணீர் எடுக்கும் அதே கிணற்றிலிருந்துதான் நம் ஊழியர் தண்ணீர் எடுக்க வேண்டும். அவர்களுடைய கிணறுகளை அவர் சுத்தம் செய்து, தகுந்த முறையில் கழிவுநீர் ஓடுவதற்கு வேண்டிய சாத்தியமான எல்லாச் சுகாதார நடவடிக்கைகளையும் எடுக்க வேண்டும்.

ஜா : அப்புறம், அரசியல் விஷயம் இருக்கிறது. நான் என் கடமைகளைச் செய்யும்போது என் சுயமரியாதைக்குப் பங்கம் ஏற்படுகிறது என்றோ, என் சுதந்திரம் கட்டுப் படுத்தப்படுகிறது என்றோ வைத்துக் கொள்ளுவோம். அப்போது நான் சட்ட மறுப்புச் செய்வது சரியான காரியமாக இருக்குமா? எல்லா அரசியல் குழப்பங்களி னின்றும் நான் விலகி இருக்கக்கூடும். ஆனால், பொதுச் சட்ட மறுப்பு இயக்கம் ஒன்று நடைபெறும் போது, அதனோடு சம்பந்த மில்லாதவராக ஊழியர் இருக்க முடியாது. இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் அவர் என்ன செய்யவேண்டும் ?

கா : பொதுச் சட்ட மறுப்பு என்பது ஒவ்வொருவருமே தலைவ ராக நடந்துகொள்ளும் ஒரு வகை அராஜகம்தான். ஆனால், சாதாரணமாக நாம் தலைவருடைய அல்லது இயக்கத்தின் தளபதியினுடைய கட்டளைகளைத்தான் பின்பற்றவேண்டும். அம்மாதிரியான ஓர் இயக்கத்தின்போது நிச்சயமாக யாரும் சம்பந்தமில்லாதவராக இருந்துவிட முடியாது. ஆனாலும், ஊழியர் தமது நிலையை அகில இந்திய நூற்போர் சங்கத் தலைவரிடம் விளக்கிக் கூறவேண்டி

யிருக்கும். அவர் எல்லாச் சாதக பாதகங்களையும் ஆராய்ந்து பார்த்துவிட்டு ஊழியரிடம் தம் அபிப்பிராயத்தைத் தெரிவிப்பார். மேலும், நான் இன்று பொதுச் சட்ட மறுப்பு நடத்துவதைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்கவில்லை.

## 4-வது நாள் 11-10-1944
## பரவல் முறை

ஜா : பரவல் முறையைப்பற்றி உங்கள் கருத்துக்களை நான் சரிவரப் புரிந்து கொள்ள முடியவில்லை. அதைப்பற்றி இன்னும் கொஞ்சம் விளக்கமாக எனக்குக் கூறுவீர்களா?

கா : என்னுடைய கருத்து என்னவென்றால், எத்தனை மாகாணங்கள் தங்கள் விருப்பம்போல் தங்களுடைய வேலையை விருத்தி செய்துகொள்ளுவதற்குச் சுதந்திரம் வேண்டுமென்று விரும்புகின்றனவோ, அத்தனை மாகாணங்களும் அப்படியே நடந்துகொள்ள விட்டுவிட வேண்டும். அவை முழுப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டு, நம்முடைய அதிகாரத்தைத் தார்மிகத் துறையில் மட்டும் ஒப்புக்கொள்ள வேண்டும் என்றே நான் பெரிதும் விரும்புகிறேன். அவை என் செயல் முறைகளைப் பின்பற்றுவனவாகவும், சீரிய ஒழுக்கம் உடையனவாகவும், நமது கொள்கையை யோக்கியமாக நடைமுறைக்குக் கொண்டுவரும்போது அபாயகரமான சந்தர்ப்பங்களைச் சமாளிக்கத் தயாராக இருப்பனவாகவும் இருந்தால்அவை பூரண சுதந்திரத்துடன் வேலை செய்ய நான் அனுமதிப்பேன். அப்போது நான் ஒரே ஒரு நிபந்தனை மட்டும் விதிப்பேன். அதாவது, அவர்கள் கிராமங்களில் உற்பத்தி செய்யும் கதர் முழுவதையும், உற்பத்தி ஸ்தலத்திற்கு அருகில் உள்ள இடங்களிலும், பிறகு தாலுகாவிலும், அப்புறம் ஜில்லாவிலும், கடைசியில் மாகாணத்திலும் விற்க வேண்டும். அவர்கள் சிகாகோல் (ஸ்ரீகாகுளம்) வாசிகளைப் போல், உள்ளூரில் எதையும் உபயோகிக்காமல் பம்பாய்க்கே எல்லாவற்றையும் உற்பத்தி செய்யக்கூடாது.

ஜா : சிகாகோல் ஒரு விதிவிலக்கு. நாட்டில் அது ஒன்றுதான் நயமான கதரை உற்பத்தி செய்து வருகிறது.

கா : ஆம். சிகாகோல் விஷயத்திலும்கூட, உற்பத்தியாளர்களும் விற்பனையாளர்களும் தாங்கள் உற்பத்தி செய்பவற்றை, அல்லது விற்பவற்றைத் தாங்களே உடுத்த வேண்டும் என்று நான் கூறுவேன். அவர்கள் தங்கள் உற்பத்திப் பொருள்களை வெளியே அனுப்பலாம். ஆனால், அவர்களும் அவற்றை உடுத்த வேண்டும். பம்பாய்க்கே நயமான கதரை உற்பத்தி செய்துகொண்டு, தாங்கள் மில் துணியை மட்டுமே உடுத்திக்கொண்டு வந்தால், அவர்களுடைய உற்பத்தி ஸ்தலத்தை அகில இந்திய நூற்போர்

சங்கம் நடத்துவதை நிறுத்திவிட வேண்டும். அதை ஒரே யடியாக மூடிவிட வேண்டும் என்றுகூட நான் வற்புறுத் துவேன்.

## நமது பொருளாதாரம்

ஜா : தொழிலாளர்களுடைய அல்லது பெண்களுடைய வருமா னத்தில் ஓரளவு பிடித்துக்கொண்டு அவர்களுக்குக் கதரைக் கொடுத்துக் கட்டச்செய்கிறோம். ஆனால், இது ஒரு வகை நிர்ப்பந்தமாகவே தோன்றுகிறது. அவர்கள் தாமாக விரும் பிக் கதர் கட்டவில்லை.

கா : குறுகிய காலத்துக்கு இப்படிப்பட்ட ஒரு நிலையை நான் சகித்துக் கொள்ளக் கூடும். மக்கள் உடனடியாகக் கதரைக் கட்டுவார்கள் என்றோ, அகிம்சையைஏற்றுக்கொள்ளுவார்கள் என்றோ, நான் எதிர்பார்க்கவில்லை. தருமத்துக்கு விரோத மாக உள்ள ஒரு பொருளாதாரத்தை உண்மையான பொரு ளாதாரம் என்று கூறமுடியாது. நம் ஊழியர்கள் அகிம்சை யாலும், தார்மிக உணர்ச்சியாலும் தூண்டப்பெற்று வேலை செய்தால்தான் கிராமங்களில் அவர்கள் உண்மையான பொருளாதாரக் கண்ணோட்டத்தை விருத்தி செய்ய முடியும்.

அவர்களுடைய சொந்த நடத்தை தூய்மையானதாக இருக்க வேண்டும். மக்களை எந்த விதமாகச் சுரண்டுவதி லும் அவர்கள் பங்குகொள்ளக் கூடாது. இந்தியாவைக் கதரினால் நாம் போர்த்த முயன்று, அதே சமயத்தில் கதர்த் தொழிலாளிகளின் துன்பங்களைப் பற்றிக் கவலைப்படாமலும், அவர்களுக்கு ஜீவனச் சம்பளம் கொடுக்காமலும், அவர்களு டைய துயரங்களைப் பகிர்ந்து கொள்ளாமலும், அவர்கள் குடி காரர்களாக இருந்தாலும் அதற்காகச் சற்றும் கவலைப்படாம லும் இருந்தால், அதனால் யாதொரு பிரயோசனமும் இல்லை. இந்த விதமாக நாட்டு நலனுக்கு உழைப்பதாகப் பாசாங்கு செய்வதைவிட எல்லாக் கதரையும் எரித்துச் சாம்பலாக்கி விடுவது மேல். நான் குடிகாரனை வைத்துக் கொண்டு அவ னுக்கு வேலை கொடுப்பேன். ஆனால், அவனிடம் நட்புக் கொண்டு, குடியை விட்டொழிக்குமாறு தினமும் இனிய முறையில் அவனை வற்புறுத்துவேன். என்னுடைய லட்சியம் கதர் வேலையை மட்டும் செய்வதல்ல, கிராமவாசியின் வாழ்க்கை முழுவதிலுமே பிரவேசிப்பதாகும்.

சிகாகோவில் கதர் மிகவும் விரும்பப்படுகிறது என்பதை யும், அது தூரப்பகுதியிலுள்ள மாகாணங்களில் நன்றாக விற் பனையாகிறது என்பதையும் நான் அறிவேன். ஆனால், இது என்னை மிகவும் அதிகமாக வேதனைப்படுத்துகிறது. புது முறைப்படி நாம் எந்த மாகாணத்திலும், ஜில்லாவிலும், தாலுகாவிலும் அல்லது கிராமத்திலும் கதர் வேலையை

வெற்றிகரமாகச் செய்துவர விரும்பினல், ஒரு ஜில்லா மற்ருெரு ஜில்லாவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்படியாகவோ, அல்லது அதனேடு போட்டியில் இறங்கும்படியாகவோ நாம் செய்யக் கூடாது. எல்லா ஜில்லாக்களும் தங்கள் தேவைகளைத் தாங்களே சமாளித்துக் கொள்ள வேண்டும். இது விற்பனைபற்றிய நம் கவலைகளைப் போக்கிவிடும். இந்தப் புதுக் கொள்கையை அமுலாக்குவதால், தற்போதைக்கு ஒரு கிளை அடியோடு இல்லாமல் போய்விடுவதும் சாத்தியமே, ஆனல், நாட்கள் செல்லச் செல்ல வேலை விருத்தியடைந்தே தீரும். நான் செய்வதை நிரூபிப்பதற்கு என்னல் புள்ளி விவரங்கள் கொடுக்க முடியாதுதான். ஆனலும், கதரானது அகிம்சையைப் பரப்பவேண்டுமென்ருல், என்ன நேர்ந்தாலும் நாம் இந்தக் கொள்கையைப் பின்பற்றியே ஆகவேண்டும் என்பதை நான் அறிவேன்.

## தனித்தனி டிரஸ்டி சபைகள்

ஜா: இனிமேல் அகில இந்திய நூற்போர் சங்கத்தின் வேலை, ஒவ்வொரு மாகாணத்திலும் புதிதாக அமைக்கப்படவிருக்கும் தனித்தனி டிரஸ்டி சபைகளிடம் ஒப்படைக்கப்படும் என்பதுதான் தாங்கள் கூறுவதன் கருத்தா?

கா: திட்டவட்டமாக என்ன செய்யப்படும் என்பதை உடனடியாக என்னல் கூற முடியாது. ஆனலும், நான் விரும்பும் பரவல் முறையைக் கொண்டு வருவதற்கு, இப்போது நம்முடைய ஒவ்வொரு நடவடிக்கையின் மீதும் ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருக்கும் மத்தியக் கட்டுப்பாட்டை நாம் ஒழித்தாகவேண்டும் என்பதை நான் அறிவேன். இப்போது நமது ஸ்தாபனத்தின் தலைமை ஸ்தானம் மிகவும் கனத்திருக்கிறது, ஒவ்வொன்றையும் நாம் அணுகும் முறையும், செய்யும் முறையும் இதுவரை இருந்ததுபோல இருந்து வந்ததன் காரணமாக அது தவிர்க்க முடியாததாக இருந்தது. நாம் சரியான காரியத்தைச் செய்யவேண்டும் என்பதை ஆரம்பத்திலிருந்தே நான் பின்பற்றியும் வற்புறுத்தியும் வந்திருந்தால், அதைத் தவிர்த்திருக்க முடியும். வேலை சரியான வழியில் நடந்து வரவில்லை என்பதை நான் அறியாமல் இல்லை என்பதல்ல. ஆனல், ஏதாவது வேலையைச் செய்துகொண்டிருக்கும் கவர்ச்சிக்குப் பலியாகி, வேலை தானகவே அபிவிருத்தியடையட்டும் என்று விட்டுவிட்டேன். அதன் பலன்தான் இன்றைய மத்திய ஸ்தாபனம்.

ஜா: ஆயினும், ஏதாவது ஒரு வகை அமைப்பு முறையை நாம் உருவாக்கத்தான் வேண்டும். மாகாணங்களின் வேலையை ஒரு சங்கத்தினிடம் ஒப்படைக்க வேண்டுமாயின், குறைந்த பட்சம் ஒவ்வொன்றிலும் ஏழு டிரஸ்டிகள் உள்ள, ரிஜிஸ்தர் செய்யப்பட்ட சங்கங்களை அமைக்க வேண்டியிருக்கும்.

## விற்பனையில் பரவல் முறை

நீங்கள் என்னை அனுமதித்தால், நான் சீக்கிரமாக விற்பனையில் பரவல் முறையைக் கொண்டுவந்து விடுவேன். இன்று கதர் ஒரு லாபகரமான வியாபாரமாகவும், விரிவாக்குவதற்கான சந்தர்ப்பங்கள் நிறைந்தும் இருக்கிறது. அதனால் வர்த்தகர்கள் அந்த வியாபாரத்தை மேற்கொள்ளத் தயாராக இருக்கிறார்கள். ஏதேனும் ஒரு கதர்க் கடையைத் தங்கள் பெயருக்கு மாற்றிக் கொடுக்கும்படி எனக்குக் கடிதங்கள் வந்து குவிந்த வண்ணமாக இருக்கின்றன. ஆனால், வரப்போகும் பரவல் முறையைப் பற்றிய தெளிவான சித்திரம் இன்னும் மனக் கண்ணுக்குத் தோன்றாததலால், நான் அதைச் செய்வதற்கு இயலாமல் இருக்கிறேன். ஒரு டிரஸ்டினிடமோ, ஒரு ஸ்தாபனத்தினிடமோ நாம் கதர் வேலையை ஒப்படைத்தாலும், நாம் மூன்று விஷயங்களை வற்புறுத்தவேண்டி வரும்.

(அ) கதரின் தூய்மை, (ஆ) ஜீவனச் சம்பளம், (இ) லாப நோக்கம் இல்லாமை. இந்த மூன்று விஷயங்களையும் நம்மால் கட்டுப்பாடு செய்ய முடியாவிட்டால், கதர் விற்பனை முழுவதுமே ஒரு கேலிக் கூத்தாகிவிடும். எதைச் செய்வதானாலும், மிகவும் கவனமாகச் செய்யவேண்டும். உதாரணமாக, அகில இந்திய நூற்போர் சங்க விஷயத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அவ்வப்போது நாம் கூலிகளை உயர்த்துவதற்கும், நூற்பவர்களை எந்தவிதமான கஷ்டத்துக்கும் உள்ளாக்கக் கூடாது என்று ஊழியர்களுக்கு அறிவுறுத்துவதற்கும் தவறாமல் சுற்றறிக்கைகளை அனுப்புகிறோம். அப்படிச் செய்தும், நூலின் நெம்பரைத் துல்லியமாக நிர்ணயித்தல், இங்கும் அங்கும் காலணாவையோ அரையணாவையோ சேர்க்காமலும் கழிக்காமலும் கூலிகளைச் சரிவரக் கொடுத்தல் போன்ற விஷயங்கள் சம்பந்தப்பட்ட வரை ஒவ்வொரு வேலை ஸ்தலத்திலும் இருக்கும் ஒவ்வொரு ஊழியரையும் முழுக் கட்டுப்பாட்டின் கீழ் வைத்திருப்பது நமக்கு அநேகமாகச் சாத்தியமில்லாமலே இருக்கிறது என்பது தான் நம்முடைய அனுபவமாக இருக்கிறது. நம் ஊழியருக்குச் சொந்த லாபம் எதுவும் இல்லாமல் இருந்தும் இது நடக்கிறது. கதர் வாங்குபவர்களை அதிக விலை கொடுக்கும்படி நாம் கேட்டுக்கொண்டோம். ஆனால், கதர்த் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுக்குப் போதிய கூலி கிடைக்கவில்லை.

அகில இந்திய நூற்போர் சங்கத்தின் நேரடியான மேற்பார்வையில் இருக்கும்போதே ஊழியர்களின் நடத்தையும், ஸ்தலங்களின் போக்கும் இப்படி இருக்கின்றன. ஆனால், நாம் பரவல் முறையை அமுலுக்குக் கொண்டுவந்து, கட்டுப்பாட்டைத் தளர்த்தினால், அல்லது அநேகமாக

நிறுத்திவிட்டால், அத்தாட்சி பெற்ற விற்பனையாளர்கள் அதைப் பயன்படுத்தி எப்படிப்பட்ட பயங்கரமான மோசங்களையெல்லாம் செய்வார்கள் என்பதைக் கூறவே முடியாது. கதர் வேலையில் ஈடுபட்டுள்ள எல்லோரிடையிலும் கடும் போட்டி இருக்கிறது. ஸ்தாபனங்கள்கூட அமோகமான லாபம் திரட்டிக் கொண்டிருக்கின்றன. இந்த மாதிரியான சந்தர்ப்பத்தில், அகில இந்திய நூற்போர் சங்கம் வர்த்தகபூர்வமான விற்பனையிலிருந்து விலகிக் கொண்டுவிட்டால், இந்தப் பொறுப்பை யாரிடத்தில் ஒப்புவிப்பது அல்லது அவர்களுக்கு எப்படிப்பட்ட நிபந்தனைகளையும் வரம்புகளையும் விதிக்கவேண்டும் என்பது ஒரு பிரச்னையாக இருக்கும். மறுபடியும், மாகாணங்கள் தம்மைத் தாமே கவனித்துக் கொள்ளும்படி விட்டுவிடுவது என்றால், வேலையை ஒப்படைப்பதற்கு அவற்றினிடம் தக்க விதமான கதர் நோக்குக் கொண்ட ஊழியர்கள் போதிய அளவு இல்லை.

கா: இந்தக் கஷ்டத்தினின்றும் தப்புவதற்கு வழி இல்லையா?

ஜா: மாகாண சுதந்திரம் என்ற விஷயம் சில மாகாணங்களில் அவ்வளவு கஷ்டமானதாக இராது. ஆனால், பெரும்பாலான மாகாணங்களில் அது சிக்கல்களை உண்டு பண்ணுவது நிச்சயம். இப்போதைக்கு, பரவல் முறையை ஜில்லா அளவோடு நிறுத்திக்கொண்டு, மாகாண அளவுக்கு விஸ்தரிக்காமல் இருப்பதே அறிவுடைமை என்று நான் நினைக்கிறேன். ஒரே சமயத்தில் எல்லா மாறுதல்களையும் செய்துவிடக் கூடாது.

## உற்பத்தியில் பரவல் முறை

கா: இப்போதைக்கு உற்பத்தியில் மட்டும் நாம் பரவல் முறையைக் கொண்டு வரலாம். உற்பத்தியாளர்கள், தாம் உற்பத்தி செய்வதை அக்கம் பக்கத்திலேயே விற்க வேண்டும் என்று அவர்களுக்கு வரையறை விதிக்க வேண்டும். அத்துடன், தூரப் பகுதிகளில் விற்பனை செய்யும் விஷயம் பற்றி மத்தியக் காரியாலயத்தைக் கலந்துகொள்ள வேண்டும் என்பதை வற்புறுத்த வேண்டும்.

ஜா: ஒரு ஸ்தலத்தின் விற்பனைப் பிரதேசத்தை அது இருக்கும் தாலுகா அளவுக்குள் நாம் வரையறை செய்வதில் என்ன கெடுதல்?

கா: செய்யலாம். ஆனால், உற்பத்தியாளர்களோ, அந்தக் கிராமத்தில் வசிப்பவர்களோ, அக்கம் பக்கத்தில் வாழ்பவர்களோ, உற்பத்தி செய்யப்பட்ட கதரைக் கட்டும்படி நாம் பார்த்துக்கொள்ள வேண்டியது அவசியம். மற்ற இடங்களுக்கும் கதர் உற்பத்தி செய்யப்பட வேண்டியிருக்கும் என்பதையும் நாம் ஒப்புக்கொள்ளத்தான் செய்கிறோம்.

ஜா: நன்கு வளர்ச்சி பெற்றுள்ள உற்பத்தி ஸ்தலங்களுக்குப் போய், சாத்தியமான வரை புதிய முறைப்படி வேலையை விஸ்தரிக்கும்படி நாம் ஊழியர்களைக் கேட்போம். இப்படிப் பட்ட ஊழியர்கள் வேலையை மேற்கொள்ளும் இடங்களிலிருந்து அகில இந்திய நூற்போர் சங்கம் விலகிக்கொள்ளும். இவ்விதமாகப் பரவல் முறை வளர்ந்து வரும். ஆனால், ஒரு விஷயம் முக்கியமானது. கதரை உற்பத்தியான இடத்திலேயே அல்லது தாலுகாவிலேயே, கூடிய பட்சம் ஜில்லாவிலேயே விற்கும்படி நாம் ஊழியர்களுக்குக் கூறுவோம். இதன்பிறகும் எஞ்சுகிற கதரை விற்பதில் அகில இந்திய நூற்போர் சங்கம் உதவி புரியும். இந்த வேலையில் இப்போது நஷ்டம் எதுவுமில்லை என்பதை நாம் அறிவோம். இன்று உற்பத்தி செய்யப்படும் கதர் முழுவதையுமே சுலபமாக விற்றுவிடலாம். விற்பனை சம்பந்தப்பட்ட மட்டில் கவலையே இல்லை. ஆனால், கதரை அனுப்பி வைப்பதுதான் கஷ்டமாக இருக்கிறது.

கா: உற்பத்தியாகும் ஸ்தலங்களில் கதர் விற்பனையாகிறதா?

ஜா: இல்லை. அக்கம் பக்கத்தில்கூட விற்பனையாகவில்லை. இன்று நாம் ஜில்லா நகரங்களில், சில இடங்களில் தாலுகாத் தலைநகரங்களிலும், கதர்க் கடைகள் வைத்திருக்கிறோம். ஜில்லாக் கடையிலிருந்து கதரை எடுத்துச் செல்லவும், ஜில்லாவின் பிற இடங்களில் அதை விநியோகிக்கவும் நாம் ஏஜெண்டுகளும் வைத்திருக்கிறோம். கதர் வேலையில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு, ரூபாயில் இரண்டு அணாவோ, நாலணாவோ, எட்டணாவோகூடக் கழித்துக் கொண்டு, கதர் சப்ளை செய்கிறோம். ஆனால், அப்படிச் செய்தும், பெரும் பகுதிக் கதர் நகரங்களில் விற்கப்படுகிறது.

கா: இதற்குப் பதிலாக, ஊழியர் தமது வேலை ஸ்தலத்துக்குச் சென்று, அங்குள்ள மக்களை எந்த அளவுக்குக் கதர் கட்டும்படி தம்மால் செய்ய முடியுமோ அந்த அளவுக்கே உற்பத்தி செய்ய வேண்டும் என்று நான் விரும்புகிறேன். வெளியிடங்களில் உள்ளவர்களுக்காக அவர் உற்பத்தி செய்யக் கூடாது. அவர் கிராம வாசிகளுக்குக் கதர் உற்பத்தியில் மட்டும் பயிற்சி கொடுப்பதோடு திருப்தியடைந்து இருந்துவிடக் கூடாது; மற்றக் கைத்தொழில்களையும் அவர் கற்பிக்க வேண்டும். இந்தத் தொழில்களிலிருந்து கிடைக்கும் வருமானமும் கிராமவாசிகளிடம் போய்ச் சேரும்; அவருடைய சொற்பமான வருமானமும் சிறிது அதிகப்படும். கிராமவாசிகள் நம்மிடம், "நாங்கள் சொந்தத்துக்கு உபயோகிப்பதைவிட அதிகமான கதரை, எங்கள் மற்றத் தேவைகளுக்குப் பணம் வேண்டியிருப்பதால் உற்பத்தி செய்கிறோம். ஆகையால், எங்களிடம் மிஞ்சிக் கிடக்கும் கதரைத் தயவுசெய்து வாங்கிக் கொள்ளுங்கள்"

என்று சொன்னுல், உபயோகிக்கப்படாத அல்லது உபரி யான கதரை நாம் வாங்கலாம். தாம் உபயோகிப்பதற்கு அதிகமான கதரை உற்பத்தி செய்யும் இப்படிப்பட்ட கிராமங்கள், கதர் உற்பத்தியின் மத்திய ஸ்தலங்களாக வளர்ச்சியடைவது முற்றிலும் சாத்தியமே. ஆனல், நான் அந்தக் கிராமங்களைப் பற்றி இப்போது நினைத்துக்கொண் டிருக்கவில்லை. கதர் ஓர் உபத் தொழிலாக நடக்கக் கூடிய, அதனுல் ஜனங்கள் தங்கள் ஜீவனத்துக்குக் கதரை மட்டும் நம்பிக் கொண்டிராமல் வேறு தொழில் களையும் செய்து வரக்கூடிய கிராமங்கள்தான் என் மனத்தில் இருக்கின்றன. அந்த விதமாகத்தான் பெரும் பாலான கிராமங்களை அமைக்க வேண்டும். இதுதான் உண்மையான பொருளில் பரவல் முறையாகும்.

## கதர், வேலை இல்லாதவர்களுக்காக அல்ல

ஜா: கிராமப் புறங்களில் பிரதானமான தொழில் விவசாயம். மாட்டுச் செக்கும் ஆட்டலாம். ஆனுல், அது ஒரு சிலருக் குத் தான் பிழைப்புக் கொடுக்கும். கதர் ஒன்றுதான் ஏழைகளிடையே அதிக அளவில் வேலையில்லாக் கஷ்டத் தைப் போக்கமுடியும். ஆனுல், சுயதேவைப் பூர்த்திக்காக உற்பத்தி செய்யப்படும் கதரின் மூலம் பணம் சம்பாதிப் பதற்கு வாய்ப்பில்லை. கிராமவாசிகளின் கையிருப்பில் மேலும் ஒரு சில பைசாக்களை அதிகப்படுத்த வேண்டும் என்று நாம் ஆசைப்பட்டால், வெளியிடத்தில் விற்பதற் கான கதரை உற்பத்தி செய்வதற்கு நாம் ஊக்கம் அளிக்கத்தான் வேண்டும்; அதற்காக நாம் ஏற்பாடுகளும் செய்ய வேண்டும். இல்லையென்ருல், போதிய வேலை யில்லாமல், வருடத்தில் ஒரு பகுதியில் மட்டுமே வேலை செய்து வரும் கிராமவாசிகளுக்கு நிவாரணம் அளிப்பதில் நாம் வெற்றிபெற முடியாது.

கா: இதிலுள்ள கஷ்டம் என்னவென்ருல், இப்படிப்பட்ட கதர் எல்லா இடங்களிலும் பரவாமல் ஒரு சிலருக்கு மட்டுமே தொடர்ந்து வேலை கொடுத்துக் கொண்டிருக்கும்.

ஜா: நூற்றல் எங்கும் பரவும் என்பது என் நம்பிக்கை. நெசவு இன்றிருப்பது போலவே தொழில் நுட்பம் தெரிந்த ஒரு சிலர் செய்யும் தொழிலாகத்தான் இருந்துவரும். உண்மை என்னவென்ருல், மில்கள் இருக்கும் வரையிலும், கதர் உற்பத்தியை விரிவான அளவில் செய்துவர முடியாது. சூர் கிராமத்தில் நாம் கதர் சுயதேவைப் பூர்த்தி வேலையைத் தொடங்கினேம். நமது திட்டம் ஐந்தாண்டுத் திட்டம். ஜனங்கள் கதர் வேலையை மேற்கொள்ளுகிருர்கள்; ஆனுல், அதன் மகிமை தெரிந்து அல்ல. இது வல்லபசாமியின் அனுபவம். நாம் உற்பத்தி ஸ்தலத்திலிருந்து திரும்பி

வந்து விட்டால், கதரும் அந்த இடத்தைவிட்டு மறைந்து விடுகிறது. கிராமத்தின் சம்பூரணப் பொருளாதாரத்தில் கதருக்குள்ள ஸ்தானத்தை ஜனங்கள் உணர்ந்து கொண்டாலொழிய, அதை அவர்கள் தொடர்ந்து கைக்கொள்ள மாட்டார்கள். சுயதேவைப் பூர்த்திக் கதர், யாதொரு கவர்ச்சியும் அளிக்க முடியாதவாறு, அதனுல் பெறும் நன்மைகள் அவ்வளவு சொற்பமாக உள்ளன.

கா: அதுவும் என்னைக் கஷ்டப்படுத்துகிறது. வல்லபசாமியின் வார்த்தைகள் என் காதில் ஒலித்துக் கொண்டே இருக்கின்றன. அவருடைய கிராமத்தில் கட்சி உணர்ச்சி வளர்ந்துவிட்டது. அதனுல் உண்ணுவிரதம் இருக்க வேண்டிய நிலையும் ஏற்பட்டது. அனைத்துக்கும் மறைவில், அணுகும் முறையில் எங்கோ ஒரு தவறு இருந்ததாகவே எனக்குத் தோன்றுகிறது. நாம் ஜனங்களைத் தூண்டினேம்; அவர்களுக்கு வசதிகளை அளித்தோம். ஆனல், இவை நம் காரியம் நிறைவேறும்படி செய்யவில்லை. கதர் தன் இயல்பான பலத்தைக் கொண்டு இந்தியாவை எவ்வளவு தூரத்துக்கு முன்னேற்ற முடியும் என்பதை நாம் கண்டு பிடித்தாக வேண்டும். இது வரையில் நாம் ஆராய்ந்ததில், கதர் நகரங்களில் விற்கக் கூடியதாக இருக்கிறதே ஒழிய, கிராமங்களில் அல்ல என்பதை நாம் கண்டிருக்கிறேம். அதைக் கிராமவாசிகள் ஏற்கத்தக்கவாறு செய்வதில் நாம் இன்னும் வெற்றி பெறவில்லை. நாம் தோற்கடிக்கப்பட்டிருந்தால் நமது தோல்வியை நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். நமது பழைய அனுபவத்திலிருந்து நாம் பாடம் படித்துக் கொண்டு, அவசியமானல் புதிய வேலை முறைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். அதனுல்தான், நகரங்களுக்காகக் கதர் உற்பத்தி செய்வதை நாம் நிறுத்த வேண்டுமென்று கூறுகிறேன். இன்று சுமார் ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள கதர் நகரங்களில் விற்பனையாகிறது. நகரங்களுக்கு இனிமேல் நம்மால் கதர் சப்ளை செய்ய முடியாது என்பதை அவர்களுக்குத் தெள்ளத்தெளிவாக அறிவித்துவிட வேண்டும். ஆனல், கதரை உற்பத்தி செய்வது எப்படி என்பதை அவர்களுக்குக் கற்பிப்போம். அதை அவர்களே உற்பத்தி செய்து கொள்ளுவதா, உற்பத்தியாளரிடமிருந்து பெற்றுக் கொள்ளுவதா என்பதை அவர்களுடைய முடிவுக்கே விட்டு விடுவோம். ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள கதர் நகரங்களில் விற்கப்படுவதைக் கண்டு நான் மோகம் கொண்டு விடவில்லை. கதர் வேலையில் நாம் மூளையையும், இதயத்தையும் ஈடுபடுத்த வேண்டுமே ஒழியப் பணத்தை அல்ல. வேறு வார்த்தைகளில் சொன்னல், கதரின் உண்மையான ஆற்றல்களைக் கொண்டு அதன் மதிப்பை இப்போது நாம் தயவு தாட்சண்யம் இல்லாமல் ஆராய வேண்டும். அது

நம்மை எவ்வளவு தூரம் முன்னேற்றும் என்று நாம் கூறி வந்தோமோ, அவ்வளவுக்கு முன்னேற்றவில்லை என்ருல், அதை நாம் கைவிட்டு விடுவோம்; அல்லது அதன் சாதனை யைப் பற்றிக் கூறுவதைக் குறைத்துக் கொள்ளுவோம்; இல்லையென்ருல், விவசாயம் போன்ற வேறு ஏதாவது ஆதாரத் தொழிலை மேற்கொள்ளுவோம்.

## கதர் இல்லாவிட்டால் விவசாயம்

இந்நாட்டு மக்களுக்கு இடையருத, நிரந்தரமான ஒரே ஆதாரமாக இருப்பது விவசாயமே என்பது ஆரம்பத்தி லிருந்தே என் உறுதியான நம்பிக்கையாக இருந்து வரு கிறது. அதை நாம் மேற்கொண்டு, அதை ஆதாரமாக வைத்துக் கொண்டு நம்மால் எவ்வளவு தூரம் போக முடியும் என்பதைப் பார்க்க வேண்டும். கதருக்குப் பதி லாக விவசாயத்தில் நிபுணர்களாகப் பயிற்சி பெற்றுக் கொண்டு நம் இளைஞர்களில் சிலர் நாட்டுக்குச் சேவை செய்தால் அதைக் குறித்து நான் கவலைப்படவே மாட் டேன். விவசாயத்தில் நாம் கவனம் செலுத்த வேண்டிய காலம் இப்போது வந்திருக்கிறது. நாட்டு நிர்வாகம் நம் கையில் இருந்தாலொழிய விவசாயத்தை அபிவிருத்தி செய் வது என்பது சாத்தியமில்லாத காரியம் என்றே இதுவரை யில் நான் கருதி வந்தேன். இதைப் பற்றிய என் கருத்துக் கள் இப்போது மாறுதல் அடைந்துகொண்டு வருகின்றன. குடியானவன் வரிகளைச் செலுத்திய பிறகும்கூட நிலத்தி லிருந்து தனக்குச் சிறிது வருமானத்தைத் தேடிக்கொள்ளச் சாத்தியமாகக் கூடியவாறு, இன்றைய நிலையில்கூட நாம் அபிவிருத்திகளைச் செய்ய முடியும் என்று கருதுகிறேன். விவசாயத்தை அபிவிருத்தி செய்வதன் மூலம் குடியான வனுக்குக் கிடைக்கும் எந்த அதிக வருமானத்தையும் அந்நிய அரசாங்கம் ஏதாவது ஒரு சாக்கைக் கூறி விழுங்கிக் கொண்டுவிடும் என்று ஜவாஹர்லால் கூறுகிருர். அப் படியே ஆனலும், விவசாயத்தைப் பற்றிய ஞானத்தை நாம் சாத்தியமான அளவுக்குச் சம்பாதித்துக் கொள்ளுவதை யும், பரப்புவதையும் அது தடுக்கக்கூடாது என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். விவசாய அபிவிருத்தியின் காரணமாகக் கிராமவாசிகளுக்குக் கிடைக்கக்கூடிய எந்த அதிக வருமானத்தையும் அரசாங்கம் எடுத்துக் கொள்ளக் கூடும். அப்படி அவர்கள் செய்தால், நாம் ஆட்சேபிக்க முடியும்; அதை எதிர்ப்பதற்கும், அரசாங்கம் இந்த வித மாகக் கொள்ளையடிக்க முடியாது என்று அதற்குத் தெளி வாகப் புலப்படுத்துவதற்கும் நாம் மக்களுக்குக் கற்பிக்க முடியும். ஆகையால், விவசாயத்தில் தாமாகவே அக்கறை கொள்ளும் ஊழியர்களை இனிமேல் நாம் கண்டுபிடிக்க வேண்டும் என்பது என் அபிப்பிராயம்.

ஜா : ஆரம்பத்திலிருந்தே விவசாயப் பிரச்னை, குடியானவர்களின் பிரதானமான பிரச்னை என்ற முறையில், நம் கவனத்தில் இருந்து வருகிறது. ஆனல், அதை நாம் மேற்கொள்ளவில்லை. அதற்குக் காரணம், அது மிகவும் கஷ்டமான பிரச்னை என்றும், அத்துடன் நம்முடைய வரம்புகளை நாம் கவனத்தில் கொள்ளவேண்டும் என்றும் நாம் கருதியதுதான். அது போக, இன்று விவசாயம் செய்துவரும் குடியானவன் முற்றிலும் தன் சக்திக்கு அப்பாற்பட்ட வெளியிடத்து நிலைமைகளை நம்பி வாழ்ந்து வருகிறுன். உதாரணமாக, அவனுக்கு நாம் சிறந்த முறைகளைக் கற்றுக் கொடுத்து, அவனும் அதிகமாக உற்பத்தி செய்வதில் வெற்றிபெற்று விட்டான் என்று வைத்துக்கொள்ளுவோம். நடுவே, பருத்தி விலை பாதியாக இறங்கிவிட்டால்—அந்தச் சந்தர்ப்ப வசமான நிகழ்ச்சியைத் தடுக்க அவனல் எதுவும் செய்ய முடியாது—அவன் நிலைமை என்றும் இருந்தது போலவே தொடர்ந்து மோசமாகவே இருக்கும்.

கா : இதற்கும் பரிகாரம் இருக்கிறது. அவனை நாம் சரியான வழிகளில் பழக்கவில்லை. முதலாளிகள், தங்களுக்குப் பணத்தைக் கொடுக்கும் வர்த்தகப் பொருட்களையே பயிர் செய்யும்படி குடியானவனைத் தூண்டினர்கள். அதனல் உணவுப் பயிர்கள் மிகமிகக் குறைந்துவிட்டன.

ஜா : ஆட்சியாளர்களுக்கோ, முதலாளிகளுக்கோ பொருளாதாரமானது அடிமையாக இருக்கும் இடத்தில் இது தவிர்க்க முடியாததாகும்.

கா : கால் நடைப் பண்ணை, பால் பண்ணை ஆகியவற்றிலும் இதே நிலைமைதான். பசுவும் மாடும் விவசாயத்துடன் நெருக்கமான தொடர்புள்ளவை. இந்தத் துறையிலும்கூட நாம் நமது கடமையைச் செய்யத் தவறிவிட்டோம். ஆகையால், கிராமங்களுக்குச் செல்லும் நம் ஊழியர்கள் இனிமேல் விழிப்பாக இருக்கவும், பயனுள்ள பணியை இப்படிப்பட்ட வழிகளில் செய்வதற்காக அவசியமான அறிவைச் சம்பாதித்துக் கொள்ளவும் வேண்டியிருக்கும்.

## 5வது நாள் 12—10—1944
## கதர் வேலையின் பரப்பு

ஜா : பரவல் முறை பற்றிய கருத்தை மேற்கொண்டு விவாதிப்பதற்கு முன், கதர் வேலையின் இன்றைய நிலையை உங்கள் முன் படைக்க விரும்புகிறேன். அது நமது சம்பாஷணைக்கு உதவியாக இருக்கும். கதர் வேலை இரண்டு வழிகளில் செய்யப்பட்டு வந்திருக்கிறது :

1. மிகமிகக் கூடியபட்ச அளவுக்கு வர்த்தகத்திற்கான கதரை உற்பத்தி செய்வதும், விற்பதும்.

2. சாத்தியமானவரையில் துணியில் சுயதேவைப் பூர்த்தியை விஸ்தரிப்பது. இந்த இரண்டு அம்சங்களிலும் அகில இந்திய நூற்போர் சங்கம் தன் கடமைகளைப் பூரண மாகச் செய்யவில்லை என்று இன்று குற்றஞ் சாட்டப்படு கிறது.

கா : நான் இடைமறித்துப் பேசலாமா? சுயதேவைப் பூர்த்திக் கதர், மில் துணியைவிட மலிவானது என்பதை நிரூபிக்கக் கூடியவாறு சுயதேவைப் பூர்த்தி வேலைத் திட்டம் சம்பந்த மாக நாம் போதிய ஆராய்ச்சி செய்திருக்கிறோமா? அதை நம்மால் நிரூபிக்க இயலவில்லை என்றால், நம் கிராமவாசிகள் சுயதேவைப் பூர்த்தியைக் கைக்கொள்ளமாட்டார்கள்; ஊழியர்கள் ஏமாற்றத்தை எதிர்நோக்கும்படி நேரும். இப்போது நீங்கள் தொடர்ந்து சொல்லலாம்.

ஜா : கதர் வேலையை எந்த வரம்புக்கு உட்பட்டுச் செய்து வர வேண்டும் என்பதைத் தக்கவிதமாக நாம் ஒருமுறை அறிந்து கொண்டு விட்டோமென்றால், ஏமாற்றம் அடைவதற்குக் காரணமே இராது. உதாரணமாக, அதைத் திடீ ரென்று துரிதப்படுத்த முடியாது. ஏனென்றால், ஜவுளி மில்கள் இருக்கும் வரையிலும், பொதுஜன நல்லெண்ணத் தின் பேரிலேயே கதர் அபிவிருத்தியடைய முடியும். இது ஒரு புறமிருக்க, வேறு கஷ்டங்களும் இருக்கின்றன. உதாரண மாக, இன்று நாம் ஒரு கோடி ரூபாய் பெறுமானமுள்ள கதரை உற்பத்தி செய்கிறோம். அதை ஐந்து கோடிக்கு அதிகப்படுத்துவதற்காகச் சென்ற வருடம் ஒரு திட்டத்தை ஆராய்ந்தோம். மற்ற எல்லா விஷயங்களையும் கவனிக்காமல் நமது திட்டத்தை நிறைவேற்றுவதற்காக எந்த மாதிரியான ஊழியர்கள் கிடைத்தாலும், அவர்களுடைய தரத்தைப் பற்றிய யோசனையின்றி, அவர்களைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்பதே இதன் பொருள். கவனமாகக் கணக்குப் போட்டுப் பார்த்தபின், நாம் நம்மால் முடிந்த வரை முயற்சி செய்த பிறகும்கூட நம் அதிகபட்ச உற்பத் தியைப் போல் ஒன்றரை மடங்குக்கு அதிகமாக நம்மால் உற்பத்தி செய்ய முடியாது, உற்பத்தியை இரண்டு முதல் நான்கு மடங்குவரை அதிகப்படுத்துவதே அறவே முடியாத காரியம் என்ற முடிவுக்கு வந்தோம். மேலும், பலாபலன் களைப்பற்றி யோசிக்காமல் இப்படி உற்பத்தியைப் பெருக்கு வதில் வேறு அபாயங்களும் இருக்கின்றன. ஏனென்றால், அந்த நிலையில் நாம், கதர் வேலையைப் பற்றியும் எதுவும் தெரியாமல், உண்மையையும் அகிம்சையையும் கடைப் பிடிக் காமல் இருக்கும் எல்லா வித ஊழியர்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டியிருக்கும். இது அகில இந்திய நூற்போர் சங்கத்தின் அடிப்படைக் கொள்கைக்குக் கேடு விளைவிப்ப தோடு மட்டுமன்றி, புதிய ஊழியர்கள் நடந்துகொள்ளும் முறை எப்பொழுதும் ஒரே மாதிரி கௌரவமாகவும்,

தூய்மையாகவும் இராமல் போகக்கூடும் காரணத்தினுல் சங்கத்திற்குக் கெட்ட பெயரையும் தேடிக் கொடுத்துவிடும். ஆகையால், இந்த வழிகளில் வேலையை அபிவிருத்தி செய்வதை நான் ஆதரிக்கவில்லை.

## துணியில் சுயதேவைப் பூர்த்தி

அதனுல், துணியில் சுயதேவைப் பூர்த்தி சம்பந்தமாகவும் வரம்புகள் இருக்கின்றன. பருத்தி சாகுபடியிலிருந்து பஞ்சரைத்தல், பட்டை போடுதல், நூற்றல் ஆகியவை வரையிலும் உள்ள எல்லா வித வேலைகளையும் கிராமவாசிகள் தங்கள் வீடுகளிலேயே செய்தாலும், நெசவுக் கூலி அதிகமாக இருப்பதால், மில் துணியின் விலையோடு ஒப்பிடும்போது அவர்களுக்கு மிச்சப்படும் தொகை மிகக் குறைவாகவும் இருப்பதால், இந்தக் கஷ்டங்களுக் கெல்லாம் உட்படச் சாமான்யத்தில் அவர்கள் இணங்குவதில்லை. அது போக, மில் துணி கதரைவிட அவர்களுக்குக் கவர்ச்சியாகவும் தோன்றுகிறது.

மேலும், நமது சுயதேவைப் பூர்த்தித் திட்டத்தின் அடிப்படைக் காரணங்களைக் கிராமவாசிகளுக்கு உள்ளத்தைத் தொடக்கூடியவாறு நாம் விளக்கிச் சொல்ல வேண்டியது அவசியம். சுயதேவைப் பூர்த்திக்கு வேலை செய்வதன் மூலம் கிராமத்தின் பணம் முழுவதும் கிராமத்தில் தங்கும், அவர்களுடைய நல்வாழ்வுக்குக் காரணமான விஷயங்களை அவர்களே கண்காணித்துக் கொள்ளமுடியும், வேலையின்றிச் சோம்பியிருக்கும் நேரத்தை லாபகரமாகப் பயன்படுத்த முடியும், கிராமவாசிகள் நல்ல உழைப்பாளிகளாக ஆவார்கள் என்பவற்றை அவர்கள் அறியவேண்டும். வேறு விதமாகச் சொன்னுல், சுயதேவைப் பூர்த்திக் கதர் வேலையை, இன்னும் விரிவான திட்டமாகிய அகிம்சா பூர்வமான கிராம மேம்பாட்டின் அல்லது கிராமச் சீரமைப்பின் ஒரு பகுதியாகச் செய்துவந்தால்தான் அதனுல் நிரந்தரமான பலன் ஏற்படத் தொடங்கும். புத்திசாலித்தனமாக வேலை செய்வதற்கு நாம் கற்றுக்கொள்ளும் அளவுக்கும், கல்வி யறிவுள்ள பொதுஜன அபிப்பிராயத்தின் ஆதரவைக் கொண்டும்தான் நாம் வெற்றி பெற முடியும்.

## மற்றக் கிராமக் கைத்தொழில்கள்

மற்றக் கிராமத் தொழில்கள் விஷயத்திலும் அதுவே உண்மை. இப்போது மாட்டுச்செக்கு நாட்டுப் புறங்களில் நன்கு வேலை செய்து கொண்டிருக்கிறது. ஆனுல், எப்பொழுதும் அது அப்படியே வேலை செய்து வருமா என்பது பற்றிக் கடுமையான சந்தேகங்கள் இருந்து வருகின்றன, கதரும், திரிகையும், மற்றும் கிராமக் கைத்தொழில்களும்

உறுப்புக்களாக இருந்த நமது கிராமப் பொருளாதார ஸ்தாபனம் சரிந்து விழுந்து விட்டது என்பதுதான் உண்மை. மேலும், ஆலைகளின் போட்டியால் கிராமத்தில் தயாராகும் துணி, மாவு, அரிசி, எண்ணெய் போன்ற எல்லாவற்றின் விலைகளுமே உயர்ந்துவிட்டன. அவற்றை அவற்றிற்குரிய ஸ்தானத்தில் மீண்டும் நிலை நிறுத்த வேண்டுமென்றால், கிராமப் பொருளாதாரம் முழுவதையுமே சீர்ப்படுத்தி, புதிதாக உருவாக்க வேண்டும். ஏதேனும் ஒரே ஒரு அம்சத்தில் மட்டும் முழுக் கவனத்தையும் செலுத்துவதாலும், ஆராய்ச்சி செய்வதாலும் யாதொரு பயனும் கிட்டாது. நம் மக்களைச் சோம்பல் பற்றிப் பிடித்துக்கொண்டு விட்டது. தாவிக் குதித்து முன்னேற இயலாது; படிப்படியாகத்தான் முன்னேற்றம் காணமுடியும். பிரச்னை உண்மையில் மிகவும் சிக்கலானதுதான்.

கா : நீங்கள் சொல்லுவதையெல்லாம் நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அதனால்தான், மூன்று நாட்களாக அகில இந்திய நூற்போர் சங்கத்தின் முன் என் உள்ளத்தைத் திறந்து காட்டிப் பேசினேன். இந்தப் பிரச்னைகளை யெல்லாம் எழுப்பினேன்,

இப்போது சம்பூரணமான கிராம மேம்பாட்டை லட்சியமாகக்கொண்டு புதிதாக நாம் வேலை செய்யவேண்டும். நாம் எவ்வளவு தூரம் போக முடியும் என்பதைப் பார்ப்போம். இந்த மாறுதல்களின் காரணமாக நம்முடைய தற்போதைய நடவடிக்கைகளைத் தாமதப்படுத்த வேண்டியிருந்தாலும், அல்லது சிறிது காலத்துக்கு அறவே இல்லாமல் செய்யும்படி நேர்ந்தாலும் பரவாயில்லை. நாம் மக்களிடையே கதரைப் பற்றிய ஒரு மனோபாவத்தை உண்டு பண்ணியிருக்கிறோம். ஆனால், நாம் மக்களுக்குக் கதரின் மகிமைபற்றிச் சொன்னதில் ஏதேனும் தவறு இருந்தால், நாம் நின்று யோசிக்கவேண்டும். நாம் சொல்லி வந்தது தவறாகவே இருந்தால், நம் தவறை நாம் பகிரங்கமாகத் தெரிவித்து, நமது கூற்றை வாபஸ் பெற்றுக் கொள்ள வேண்டும்.

நகரவாசிகள் தங்களுக்கு வேண்டிய கதரை உற்பத்தி செய்துகொள்ளுமாறு அவர்களைக் கேட்பேன். அவர்களுக்குக் கதர் சப்ளை செய்யவேண்டும் என்ற ஆசையை நான் உதறி விடுவேன். நாம் கிராமங்களுக்குப் போய் அங்கேயே தங்கிவிடுவோம். இந்த மாறுதலின் காரணமாக ஊழியர்கள் நம்மைவிட்டுப் போய்விட விரும்பினால், அவர்களைப் போக அனுமதிப்போம், இந்த எல்லை வரையில் நமது அறிவும் உணர்ச்சியும் மாறுதல் அடைந்தாலொழிய, விரும்பிய பலனை நாம் அடைய முடியாது. அகில இந்திய நூற்போர் சங்கத்தைச் சேர்ந்த நாம் கொள்கையை மட்டும்தான் வரையறுத்துக் கூறிக்கொண்டிருப்போம். சாத்திய

மான அளவுக்கு நமது வேலையைப் பரவலாக்குவதனுல், அன்ருடக் கதர் வேலையிலிருந்து பூரணமாக நம்மை விடுவித்துக் கொள்ளுவோம். அதன் பிறகு, நம் சக்தியையும் கவனத்தையும் நாம் போய்த் தங்கும் கிராமப் பகுதியில் உள்ள பிற நடவடிக்கைகளில் அல்லது தொழில்களில் ஈடுபடுத்துவோம். அப்பொழுதுதான் நமது வேலையின் உண்மையான சாராம்சத்தை அடைவோம். நாலரைக்கோடி ரூபாயை ஏழைகளுக்குக் கிடைக்கும்படி நாம் செய்திருக்கிரும் என்பதைக் கொண்டு, நாம் நன்ருக வேலை செய்திருக்கிரும் என்ற மனப் பிரமையுடன் இத்தனை வருட காலமும் இருந்தேன். அதை அறுபது கோடி ரூபாயாக உயர்த்த வேண்டும் என்ற ஆவல் எனக்கு ஏற்பட்டது. ஒரு வருடத்தில் அறுபது கோடி ரூபாய் மதிப்புள்ள கதரை நாம் உற்பத்தி செய்துவிட்டால் சுயராஜ்யம் நம் கைக்குக்கிட்டிவிடும் என்றும் சொல்லிக் கொண்டேன். அந்த வழியை நான் பிடிவாதமாகக் கடைப்பிடித்திருந்தால், ஒரு வேளை நான் வெற்றி அடைந்திருக்கவும் கூடும். நான் வெற்றி பெற்றிருந்தாலும், ஒரு வருடத்தில் செய்யப்பட்டது மறு வருடத்தில் அழிக்கப்பட்டிருக்கவும் கூடும் என்பதை இப்போது நான் உணருகிறேன். இந்த வேலைக்கு எவ்வளவு முடியுமோ அவ்வளவு ஆழமாக அஸ்திவாரம் போடுவதில்தான் இன்று நாம் முக்கிய சிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டும்.

ஜா : அப்படியென்ருல், நகரங்களில் வேலை செய்யும் ஊழியர்கள் இன்று செய்யும் வேலையைக் குறைத்துக் கொண்டு—இன்றைய வேலை வர்த்தக முறையில் விற்பனையைப் பெருக்குவதில்தான் பிரதானமாக அக்கறை கொண்டிருக்கிறது—நூலுக்குப் பதிலாகக் கதரை விற்கத் தொடங்கவேண்டும். மற்றக் கிராமக் கைத்தொழில்களைப் புனருத்தாரணம் செய்வதற்கான திட்டத்திலும் அவர்கள் பங்கெடுத்துக் கொள்ள வேண்டும்.

கா : அதுதான் உண்மை. நாம் அதைச் செய்யவில்லை என்ருல், நாம் நமக்கும் உலகத்துக்கும் துரோகம் செய்பவர்களாவோம். பம்பாயிலுள்ள கல்பதேவி கதர்க் கடையில் ஒரு நாளில் பல்லாயிரம் ரூபாய் மதிப்புள்ள கதரை விற்றுவிடுவதைக் கொண்டு நாம் இன்று களிக்கூத்தாடுகிருேம்.

## கதர் அத்தாட்சிப் பத்திரம்

ஜா : நூலுக்குப் பதிலாகக் கதர் கொடுக்க நாம் ஏற்பாடு செய்தால், அந்த வேலையை அகில இந்திய நூற்போர் சங்கம் செய்யவில்லையென்ருல், தனிப்பட்ட வியாபாரிகள் முன் வந்து, அந்த வேலையைத் தாங்களே விரும்பி மேற்கொள்ளுவதாகச் சொல்லி, அவர்களுக்கு அத்தாட்சிப் பத்திரங்கள் மட்டும் கொடுத்தால் போதும் என்று நம்மைக் கேட்பார்

கள். அதற்கு நாம் சம்மதித்தால், நாம் அவர்களுடைய கணக்குகளையும், வேலையின் நடை முறையையும், வேலை முதலியவற்றையும் பார்க்கவேண்டும். நாம் கஷ்டங்கள் நிறைந்த சிக்கலுக்குள் அகப்பட்டுக்கொள்ளுவோம். அதிலிருந்து நம்மை விடுவித்துக் கொள்ளுவது கஷ்டமாக இருக்கும்.

கா : இந்த விஷயத்தில் நாம் அவர்களுக்குச் சுதந்திரம் கொடுக்க வேண்டும் என்று சதீஷ் பாபு சொல்லுகிறார்.

ஜா : உற்பத்தி முழுவதையும், விற்பனை செய்யும் வேலையையும் ஜனங்களுக்குக் கைமாற்றிக் கொடுத்துவிட்டு, அகில இந்திய நூற்போர் சங்கம் ஒதுங்கி நிற்கவேண்டும் என்பது அவர் அபிப்பிராயம்.

கா : அவருடைய யோசனையை விவரமாக நாம் ஆராய வேண்டியது அவசியம்.

ஜா : பண விஷயத்தில் நல்ல மனிதர்கள்கூட, அதிகப்படியாக லாபம் சம்பாதிக்கும் ஆசையை எதிர்த்து நிற்பதில் தோல்வியடைந்திருப்பதைக் கண்டிருக்கிறோம். கூலி கொடுப்பது, நூலின் நெம்பரை நிர்ணயிப்பது முதலிய எந்த வேலையை ஊழியர் செய்தாலும் அவருக்கு லாபத்தில் ஒரு கண் இருக்கிறது. உதாரணமாக, நூற்பவள் ஒருத்தி அவரிடம் நூல் கொடுக்கும்போது அவர், உள்ளதிலேயே மிகவும் கனமான நூல் உடைய ஒரு சிட்டத்தை எடுத்துப் பார்த்து, அந்தக் குறிப்பிட்ட சிட்டத்தின் நெம்பருக்குத் தகுந்தபடியே நூல் முழுவதற்கும் காசு கொடுக்கிறார். மறுபடியும், நெம்பர் 9½ யாக இருந்தால் 9-ஆம் நெம்பருக்குத்தான் அவர் காசு கொடுப்பார். இவ்வாறாகத் தம்மை யறியாமலே அவருக்கு லாபத்தில் நாட்டம் சென்று விடுகிறது. மற்றொரு புறத்தில், தொழிலாளியும் அதிகமாகச் சம்பாதிப்பதற்காகச் சாத்தியமான எல்லா உபாயங்களையும் செய்கிறார். மனித இயற்கை இவ்வாறு இருக்கும்போது தனிப்பட்டவர்களிடம் கதர் வேலையை ஒப்படைப்பது மிகவும் ஆபத்தானது.

## கதர் ஒரு வியாபாரம் அல்ல

கா : இதற்கு நான் பதில் சொல்லுவேன். சதீஷ் பாபுவின் யோசனையில் அடங்கியிருப்பது என்னவென்று எனக்கு நிச்சயமாகத் தெரியாது. நகரங்களில் வசிப்பவர்களுக்கு இதை மட்டும் நாம் கூறுவோம் : அவர்கள் கதர் அணிய விரும்பினால், நாம் வகுத்துள்ள கொள்கையின் பிரகாரம்தான் அணியமுடியுமே ஒழிய வேறு வழியில் முடியாது. அது ஒரு பொருளாதாரக் கொள்கை மட்டுமல்ல, தார்மிகம், ஒழுக்க இயல் ஆகியவற்றையும் கொண்ட கொள்கையுமாகும். அதன் பிரகாரம் ஒவ்வொரு ஆணும் பெண்ணும்

தத்தமக்கு வேண்டிய கதரைத் தாமே தயாரித்துக் கொள்ள வேண்டும். நகரத்தில் நெசவுக்கான ஏற்பாடு எதுவும் இல்லையென்றால், நகரங்களிலோ, அக்கம் பக்கத்திலுள்ள குடியிருப்புப் பகுதிகளிலோ நெசவாளர்களைக் குடியேற்ற முடியும். அங்கு நெசவு வேலை நடக்கும்படி செய்ய முடியும். போட்டா போட்டி எதுவும் இருக்க வேண்டிய அவசியமில்லை. நாம் இன்று நகரவாசிகளுக்குக் கொடுக்கும் கதரினால் யாதொரு பயனுமில்லை. ஏனென்றால் கதரின் மூலம் ஏழைகள் எந்த அளவுக்கு நிவாரணம் பெறுகிறார்கள் என்பதை அவர்களால் அறிந்துகொள்ள முடியவில்லை. அதனால் அவர்கள் தங்கள் கண் முன்பாகவே கதரை நெய்வித்துக் கொள்ளவேண்டும் என்பதை அவர்களுக்கு விளக்கிக் கூறுவோம். கதர் லட்சக்கணக்கான மக்களைக் காப்பாற்றுகிறது என்ற முறையீட்டின் பேரிலேயே அதை அணியும்படி நகர மக்களை இன்று நாம் கேட்கிறோம். ஆனால், இது அகில இந்திய நூற்போர் சங்கத்தை வர்த்தகத்தில் இறங்கும்படி நிர்ப்பந்திக்கிறது. சரி, வறுமையை நிவர்த்திப்பதே ஒரே நோக்கம் என்றால், எத்தனை பேருக்குத்தான் நம்மால் உணவு அளித்துவிட முடியும்?

ஆகையால், நாம் கதர் விற்பனையாளர்களுக்கு அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கௌரவத்தை அளிக்கப் போவதில்லை. நாம் அந்த வேலைக் களத்திலிருந்து விலகிக் கொள்ளுவோம். அதனால் அத்தாட்சிப் பத்திரங்களுக்கு அர்த்தமே இல்லாமல் போய்விடும். ஒரே ஒரு வரம்பைத் தான் நாம் அனுஷ்டானத்தில் கடைப்பிடித்து வருவோம். அதாவது, ஒரு கிராமத்திலோ, ஓர் இடத்திலோ, ஸ்தலத் தேவைக்குப் போனதுபோகச் சிறிது கதர் மிஞ்சியிருந்தால், அந்தக் கதர் நகர மக்களுக்குப் பிரயோசனமாகக் கூடியதாக இருந்தால், அதை நகரங்களில் விற்க நாம் அனுமதிப்போம். ஆனால், நகரங்களுக்கு அனுப்புவதற்குப் பிரத்தியேகமாகக் கதர் உற்பத்தி செய்யக் கூடாது. இதனால் நமது வேலை குறையும் பட்சத்தில் அது பெரிய விஷயமல்ல. இன்று நான் கதர் வேலை செய்யும் முறையின் மூலம் மக்களுக்கு உண்மையான நிவாரணத்தை நான் அளிக்கவில்லை என்று நிச்சயமாகக் கருதுகிறேன். நான் என்ன செய்துகொண்டிருக்கிறேன் என்றால், அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கவர்ச்சிகரமான கூலிகளைக் கொண்டு அவர்களுக்கு ஆசை காட்டிக்கொண்டிருக்கிறேன். வேலையை நிரந்தரமாக்குவதற்குரிய வழி இதுவல்ல. ஏழைகள் வேலை கேட்டால் நாம் கொடுக்க வேண்டும். ஆனால், அவர்கள் தூரத்திலுள்ள நகரங்களை நம்பிக்கொண்டிருப்பதற்குப் பதிலாகத் தங்கள் அக்கம் பக்கத்திலிருந்தே சம்பாதித்துக் கொள்ளக்கூடிய விதத்தில் அந்த வேலை அமைய வேண்டும்.

ஜா : இந்த விஷயத்தைக் குறித்துத் தாங்கள் இன்னும் கொஞ்சம் விளக்கமாகக் கூறவேண்டுமென்று விரும்புகிறேன்.

## அடிப்படை மாறுதலுக்கான அவசியம்

கா : இன்று நம்மால் உண்மையில் கிராமவாசிகளுக்கு உதவ முடியவில்லே. அவர்களுக்கு மூன்றணுவோ, நாலணுவோ, ஆறணுவோ, எட்டணுவோ கொடுப்பதன் மூலம், அவர்களுக்கு நான் ஜீவனத்லதை அளித்துவிட்டதாக நம்பி என்னே நானே தேற்றிக் கொள்ளுகிறேன். ஆனல், அது ஒரு யாசகமாகத்தான் இருக்கிறது. ஏனென்ருல், நான் அவர்களுக்குக் கொடுக்கும் வேலே நிரந்தரமான ஒன்ருக இல்லே. நாட்டு நிர்வாகம் நம் கைக்குக் கிட்டி, அதன் மூலம் எல்லா மில்களேயும் நாம் மூடிவிட்டால், அப்பொழுது ஒரு வேளே அவர்களுக்கு நிரந்தர வேலே கொடுப்பது சாத்தியமாகலாம். நான் அவர்கள் வேலேயின்றி இருக்கும் நேரத்தைப் பயன்படுத்தும்படி செய்வதற்கே முயன்று கொண்டிருக்கிறேன் என்ற உண்மையை அவர்களிடமிருந்து என்னுல் இன்று மறைக்க முடியாது. ஆனல், அது போதாது. நூற்பதைத் தவிரக் கிராமத்தில் வேறு என்ன வேலேயை அவர்களுக்குக் கொடுக்க முடியும் என்பதை நான் ஆராய வேண்டும். கிராமத்தின் பொருளாதார வாழ்க்கை முழுவதையுமே மாற்றி ய்மைப்பதன் மூலம்தான் நமது வேலே நிரந்தரமானதாக ஆக முடியும். ஆனல், கிராமத்தில் உற்பத்தி செய்யப்பட்ட கதரைப் பம்பாய்க்கு நாம் அனுப்பிக்கொண்டே இருந்தால், கிராமத்தில் நூற்பவர்களுக்கு எவ்வளவு கூடுதலான கூலியை நாம் கொடுத்தாலும் அந்த நோக்கம் நிறைவேருது.

உங்களோடு விவாதிப்பதற்கு ஒவ்வொரு நாளும் ஒரு மணி நேரத்தை நான் ஒதுக்கினேன். ஏனென்ருல், இப்படிப்பட்ட விவாதத்தினுல் என் சொந்தச் சிந்தனேயும் தெளிவடையும். நமது வேலே முறையில் அடிப்படையான மாறுதலே நாம் செய்ய வேண்டும் என்று நான் உறுதியாகக் கருதுகிறேன். உங்கள் அபிப்பிராயத்தை அறிய நான் விரும்புகிறேன்.

## புதிய வேலேத் துறைகள்

ஜா : கிராமங்களில் உற்பத்தி செய்யப்பட்ட கதரை நாம் நகரங்களுக்கு அனுப்பும்போது, கிராமவாசிகளுக்கு உடனடியான பொருளாதார லாபத்தை அளிக்கிருேம். ஆனல், அவ்விதம் செய்வதை நாம் நிறுத்திவிட்டால், அவர்களுக்கு வேறு எதை நாம் கொடுக்க முடியும் ?

கா : என் இஷ்டப்படி செய்வதென்ருல், இதுவரையிலும் நான் கதரைக் கொண்டு ஆதரவளித்து வந்தவர்களேப் பார்த்து,

இந்தப் பழைய தடத்தை விட்டு விலகி வேறு ஏதாவது வேலையை மேற்கொள்ளும்படி கூறுவேன். நாம் சேவா கிராமத்தில் செய்து கொண்டிருப்பதைப் போல், அவர்களுக்கு நாம் வேறு வேலையைத் தேடிக் கொடுக்க வேண்டும்.

ஜா : இங்கே சேவா கிராமத்தில் உள்ள நிலைமை ஒரு விதிவிலக்கு. இங்கே பல நிலையங்கள் இருக்கின்றன. புது வீடுகள் கட்டப்பட்டு வருகின்றன. மற்றப் பல்வேறு நடவடிக்கைகளும் நடைபெற்று வருகின்றன. இவையெல்லாம் மக்களுக்கு வேலை கொடுக்கின்றன.

கா : எல்லா இடங்களிலும் இதே மாதிரியான ஒரு நிலையை உண்டுபண்ண நான் முயல்வேன். புதிய வேலைத் துறைகளைக் கண்டுபிடிக்க நமது மூளையையும் சக்தியையும் நாம் செலவிட வேண்டும்.

## விரிந்த நோக்கு

ஜா : விவசாயத்தைப் பற்றியும், கால் நடை வளர்ப்பு முதலியவை பற்றியும் நீங்கள் கூறுவது முற்றும் சரி. ஆனால், கிராமவாசிகளுக்குக் கதரின் மூலம் நிரந்தரமான பொருளாதார நன்மையை அளிப்பது எப்படி என்பதையும் நாம் யோசிக்க வேண்டும். மில் துணி இல்லாமல் இருந்திருந்தால், அது சுலபமாக இருந்திருக்கும். ஆனால், மில்கள் இருக்கும்போது நாம் செய்ய வேண்டியது என்ன என்பது தான் பிரச்னை.

கா : மில் துணியைப் போலக் கதர் கிடைக்காது என்பதை ஜனங்களுக்கு நான் விளக்கிக் கூறுவேன். கதரின் விலை அதிகமாக இருக்கிறது என்றால், அதிகப்படியான பணம் கிராமவாசிக்கும், அவனுடைய குடும்பத்துக்கும், கிராமத்துக்கும் போய்ச் சேருகிறது என்பதையும், இது கிராமப் பொருளாதாரத்துக்குப் பாதுகாப்பை அளிக்கிறது என்பதையும் நான் அவர்கள் உள்ளத்தில் பதியவைக்க முயல்வேன். தார்மிக அம்சத்தையும்கூட அவர்களுக்கு நான் விளக்குவேன். அத்துடன், கிராமத்தில் சம்பாதிப்பதற்கான வேறு முறைகளையும் நான் அவர்களுக்குக் கற்பிப்பேன். கதர் வேலையின் மூலமாக மட்டும் கிராமவாசிகள் தங்கள் ஜீவனத்தைத் தேடிக்கொள்ள முடியும் என்ற அபிப்பிராயத்தை இப்போது நான் கைவிட்டு விட்டேன்.

ஜா : அப்படியானால், கதரின் தார்மிக, சமூக மதிப்பையும், பிற கிராமக் கைத்தொழில்களையும் அவர்களுக்கு அறிவுறுத்தி, அவர்களை வேலை செய்யும்படி செய்ய வேண்டும் என்று ஆகிறது.

ஜா: ஆம். இப்போது கதர் வேலையோடு மட்டும் என்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள நான் விரும்பவில்லை. ஆகையால், விவசாயம், கால்நடை வளர்ப்பு, மற்றும் கிராமக் கைத்தொழில்களின் புனருத்தாரணத்தின் மூலம் மக்களின் நிலையை அபிவிருத்தி செய்வதற்கான வழி வகைகளைப் பற்றி நான் சிந்தனை செய்துகொண்டிருக்கிறேன். ஓர் அரை டஜன் கிராமங்களில் நான் வெற்றி பெற்று விட்டாலும்கூட என் பிரச்னை தீர்ந்துவிடும். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறுதானே பதம்?

இந்தக் கண்ணோட்டத்துடன் பார்த்தால், வல்லப சாமியின் முறைகூட எனக்குத் திருப்தியளிக்கவில்லை. ஏனென்றால், அவர் கதரை மட்டுமே அழுத்திக் கூறுகிறார்; ஒரு குறிப்பிட்ட காலத்துக்குள் கிராமம் முழுவதையும் கதர் கட்டச் செய்துவிடுவதாக வாக்குறுதியளிக்கிறார். இந்த யோசனை என்னைப் பிரமாதமாகக் கவர்ந்த காலமும் ஒன்று உண்டு. ஆனால், கதர் மாத்திரம் கிராமங்களுக்குப் புத்துயிர் அளிக்க முடியாது என்பதை இப்பொழுது உணருகிறேன். கிராம வாழ்க்கை முழுவதற்கும், எல்லாக் கிராமக் கைத்தொழில்களுக்கும் புத்துயிர் அளித்து கிராமம் முழுவதும் உழைப்பில் ஈடுபடும்படி நாம் செய்யும் போதுதான் கிராமத்தை மேம்பாடுறச் செய்வது சாத்தியம்.

## 6வது நாள்—13-10-1944

## உண்மையான பரவல் முறையின் பொருள்

ஜா: பரவல் முறை பற்றி மேலும் விளக்கிச் சொல்லுமாறு இன்று தங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். குறுகிய அளவில் கவனித்தால், இப்பொழுதும்கூட உற்பத்தியில் பரவல் முறை இருக்கிறது. ஏனெனில், உற்பத்தி நிலையங்கள் நாடெங்கும் பரவிக் கிடக்கின்றன. ஆனாலும், மூலதனமெல்லாம் தலைமைக் காரியாலயத்தில்தான் குவிந்திருக்கிறது என்பது உண்மையே. இன்றுள்ள மத்தியக் காரியாலயத்தின் கட்டுப்பாட்டு அதிகாரம், கொள்கை சம்பந்தமாக அகில இந்திய நூற்போர் சங்கம் செலுத்தும் அதிகாரமாகவே இருக்கிறது என்று நான் கருதுகிறேன்.

மூலதனக் கண்ணோட்டத்துடன் விஷயத்தைக் கவனித்தால், யார் முயற்சி எடுத்து இனிமேல் கிராமங்களில் வேலை நடைபெறுவது என்பதையும், முடிவில் லாப நஷ்டத்தை யார் சுமப்பது என்பதையும் நாம் ஆலோசிக்க வேண்டும். இதைச் செய்வதற்கு இப்போது மூன்று வழிகள் இருக்கின்றன.

ஸ்தலத்தில் உள்ள நம் ஊழியர் எல்லா வேலையையும் செய்து கொண்டு போகலாம். அல்லது, தாமாகவே பங்கு

களையும் சந்தாக்கள் முதலியவற்றையும் சேர்க்கக் கூடிய கிராமவாசிகளைக் கொண்ட ஒரு கமிட்டியின் மூலம் நாம் வேலை செய்யலாம். அல்லது, மூன்றாவது வழியாக, கதர்த் தொழிலாளிகளே தங்கள் சங்கங்களை அமைத்துக்கொண்டு, வேலையைத் தங்கள் சொந்த வேலையாகச் செய்து வரலாம். ஊழியரே முழுப் பொறுப்பையும் ஏற்றிருந்தால், அவரிடம் நாம் எல்லாச் சொத்துக்களையும், பணத்தையும், உடைமைகளையும் ஒப்படைக்க வேண்டும். அப்புறம் அவர் ஒரு டிரஸ்டியாகக் கருதப்படுவாரா? அல்லது, அவருக்குச் சில நிபந்தனைகள் விதிக்கப்பட வேண்டுமா? சொந்த லாபத்தில் ஒரு கண் வைத்துக்கொண்டு ஊழியர் தம்முடைய காரியங்களைச் செய்துகொண்டு போனால், விரும்பத்தகாத விளைவுகள் ஏற்படுவதற்குச் சகல சாத்தியமும் உண்டு. ஆகையால், கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதுதான் சிறந்த வழி என்று நான் நினைக்கிறேன். சுயநல நோக்கங்களினால் நிர்வாகம் சரிவர நடைபெறாத ஒரு நிலைமை ஏற்படக் கூடும். ஆனால், இந்தப் பயம் நம்மைத் தடுத்து நிறுத்திவிடக் கூடாது. கதருக்கு மட்டுமல்ல, எண்ணெய்ச் செக்கு, கையினால் செய்யும் காகிதம் முதலியவற்றிற்கும்கூட நாம் கூட்டுறவுச் சங்கங்களை வைத்துக்கொள்ளலாம். காலப்போக்கில், பற்பல கிராமங்களிலும் உள்ள இந்தச் சங்கங்கள், அவசியம் ஏற்பட்டால், ஒரு ஐக்கிய சங்கமாக இணையலாம்.

கா : இவ்விஷயம் குறித்து நான் அதிகமாகச் சொல்லுவதற்கு எதுவும் இல்லை. நம்பகமான ஊழியர்கள் கிடைக்கும் இடங்களிலெல்லாம் வேலையைத் தொடங்க வேண்டும். நீங்கள் ஒவ்வொன்றாக எடுத்துக் கூறிய மூன்று வகைப் பரிசோதனைகளையும் ஏககாலத்தில் தொடங்குவதில் கெடுதல் ஒன்றுமில்லை. ஆனால், கதர் விற்பனையில் நாமே பொறுப்பை ஏற்காமல் இருந்தால் அநேக சிரமங்களை நாம் போக்கிக்கொண்டு விடலாம். கதரானது விற்பனைச் சரக்காக இருந்து கொண்டிருக்கும் வரையிலும் இந்தச் சிரமங்கள் இருந்தே தீரும். அவற்றை அறவே நம்மால் இன்று ஒழிக்க முடியாது என்பதையும் நான் உணருகிறேன். ஆனால், ரொட்டியைப் போலக் கதரானது வீட்டில் தயாரிக்கப்படும் பொருளாகவே இருக்க வேண்டும் என்றும், விலை மலிவாக இருந்தாலும் கடையில் செய்த பிஸ்கோத்துக்களை நாம் சாப்பிட்டுக்கொண்டிருக்கக் கூடாது என்றும் நாம் கருதுகிற வரையில், கடையில் தயாரான சரக்குகளை உபயோகிப்பது கேட்டை வருந்தி அழைப்பதாகும் என்று ஜனங்களுக்கு நாம் விளக்கிக் கூறவேண்டும். அந்தக் கருத்தை ஜனங்கள் புரிந்து கொண்டால், வீட்டிலேயே கதரைத் தயாரிக்கும் சுலபமான முறை ஒன்றை நாம் வகுக்க வேண்டும். "ரொட்டியைப் போலவே துணியும்" என்பதே நம் சுலோகமாக இருக்க வேண்டும். அப்பொழுது எல்லாக்

கஷ்டங்களும் மறைந்துவிடும். அப்புறம் கூட்டுறவுச் சங்கங்கள் தங்களுக்குரிய உருவும் அமைப்பும் கொண்டிருக்கும். அது எப்படி இருக்கும் என்று இப்போதே அறிய வேண்டிய அவசியமில்லை.

கதர் உற்பத்தியில் பரவல் முறை இருப்பதாக நீங்கள் சொன்னபோது நான் அதை மறுத்துக் கூறவிருந்தேன். லங்காஷயரில்கூட வீட்டிலேயே சிறிது துணி தயாரிக்கப்படுகிறது. ஆனால், அது வீட்டு உபயோகத்துக்கல்ல ; எஜமானர்களின் உபயோகத்துக்கு. இதைப் பரவல் முறை என்று கூறுவது அக்கிரமம். அதே போல ஜப்பானில் எல்லாமே வீட்டில் செய்யப்படுகின்றன. ஆனால், அவை வீட்டு உபயோகத்துக்கல்ல ; வர்த்தகம் முழுவதையும் குவியல் முறைக்குக் கொண்டு வந்திருக்கும் அரசாங்கத்துக்காகதான். சாமான்கள் வீட்டில் செய்யப்பட்டாலும், இங்கிலாந்தில் செய்யப்படுவதைவிட நல்ல முறையில் செய்யப்பட்டாலும், உற்பத்தி செய்பவர்கள் அவற்றில் எதையும் வீட்டு உபயோகத்துக்கு வைத்துக்கொள்ள முடியாது. அரசாங்கமோ, அரசாங்கத்தின் சார்பில் ஒரு சில வியாபாரிகளோ கட்டளையிட்ட பிரகாரம் வேலை செய்யப்படுகிறது. இப்படிப்பட்ட சாமான்களை உலகின் வெவ்வேறு மார்க்கெட்டுகளுக்கு அனுப்புவதற்குக் கப்பல்கள் கொடுப்பதும், சகல காரியங்களையும் செய்வதும் அரசாங்கமே. இந்த விதமாகப் பிற நாடுகளிலிருந்து அது செல்வத்தைக் கொண்டு வருகிறது. லங்காஷயரில் நடப்பதும் அதுவே. அங்கே லட்சக்கணக்கான வேட்டிகள் தயாரிக்கப்பட்டாலும், அந்த இடத்தில் யாரும் ஒரு வேட்டிகூட வாங்க முடியாது. எந்த நாட்டுக்காக அவை தயாரிக்கப்பட்டிருக்கின்றனவோ, அந்த நாட்டுக்கு—அது இந்தியாவாக இருந்தாலும் சரி, ஆப்பிரிக்காவாக இருந்தாலும் சரி, அல்லது வேறு எந்த நாடாக இருந்தாலும் சரி—ஏற்றுமதி செய்யப்படுகின்றன. நான் நிச்சயமாக இதைப் பரவல் முறை என்று சொல்ல மாட்டேன்.

## கதர்—விற்பனைக்காக அல்ல

கதர் சம்பந்தமான விஷயமும் அதுதான். நம் தொழிலாளிகள் தங்கள் தேவைக்காக உற்பத்தி செய்யவில்லை. ஆனால், அகில இந்திய நூற்போர் சங்கத்துக்காக உற்பத்தி செய்து, கொடுக்கப்படும் கூலியைப் பெற்றுக் கொண்டு, பூரணமாகத் தயாரித்து முடித்த துணியைக்கொடுக்கிறார்கள். பரவல் முறை என்று நான் சொல்லுவதன் பொருள், தொழிலாளி தன் சொந்த உபயோகத்துக்கோ, அக்கம் பக்கத்தில் இருப்பவரின் உபயோகத்துக்கோதான் உற்பத்தி செய்ய வேண்டுமே ஒழிய, விற்பனைக்காக உற்பத்தி செய்யக் கூடாது என்பதாகும். அரசியல் அதிகாரத்தை அடைந்த

பின் நாம் நாடு முழுவதையும் கதர் கட்டச் செய்து விடுவோம் என்று எதிர்பார்க்கப்படலாம். சுதந்திர இந்தியாவின் எதிர்கால அரசாங்கம், அகில இந்திய நூற்போர் சங்கத்துக்கு வேண்டிய வசதிகளை அளித்து, அது நிபுணத்துவம் உள்ள ஒரு சங்கம் என்ற முறையில், நாடு துணியில் சுயதேவைப் பூர்த்தி செய்து கொள்ளுவதற்கு வேண்டியவற்றைச் செய்யுமாறு அதைக் கேட்கிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது நாம் அவ்வாறு செய்ய முடியும் வகையில் இன்றிலிருந்தே ஏற்பாடுகளைச் செய்யவேண்டாமா? ஆனல், இன்றுள்ள அரசாங்கம், மில்களை யெல்லாம் மூடிவிட்டு இந்தப் பொறுப்பை நம்மிடம் ஒப்படைக்கும் பட்சத்தில், இன்றிருக்கும் நிலையில் நாம் அதில் தோற்றுப் போய்விடவே நேரும். ஆகையால், கதர் நம்மை எவ்வளவு தூரம் முன்னேற்றும் என்பதை நாம் அறியவேண்டும். அதை நிச்சயமாக அறிந்திருப்பதாக நானே சொல்லிக் கொள்ள முடியாது. ஆனல், கதர் விற்பனைக்காக இராமல், சொந்த உபயோகத்துக்காகவே இருக்க வேண்டும் என்பதில் நான் மிகவும் தெளிவோடு இருக்கிறேன். அதனல்தான், கதர் வேலை சம்பந்தமான இன்றையக் கொள்கையை மாற்றவேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது. நம் நாடு முழுவதையும் புனர் நிர்மாணம் செய்யும் பெரும் பணி நம் முன் இருக்கிறது. இதில் கதர் ஒரு முக்கியமான அம்சம். அதைப் போலவே, செக்கும் பிற தொழில்களும் இருக்கின்றன. விற்பனையைவிட உபயோகத்துக்காகவே உற்பத்தி செய்வது என்ற கண்ணோட்டத்துடன் பிரச்னையைக் கவனித்தால்தான், நம்முடைய வேலையால் நாடு எல்லா நன்மையும் அடைய வழி இருக்கிறது. அரசாங்க நிர்வாகத்தை நாம் ஏற்கும்போது, ஓர் அடிகூடப் பின்வாங்காமல் நிலைமையை நம்மால் சரிவரச் சமாளிக்க முடியும்.

ஜா: துணியின் சுயதேவைப் பூர்த்திக்காகவே, அதாவது சொந்த உபயோகத்துக்காக நூற்பதிலேயே நாம் நம்முடைய சகல முயற்சிகளையும் செய்யவேண்டுமென்று நீங்கள் சொல்லுவதாக எனக்குத் தோன்றுகிறது.

கா: நான் கூறுவது அதுவேதான். ஆனல், அதைப்பற்றி எனக்குச் சொந்த அனுபவம் இல்லாததால், அதை நான் வற்புறுத்திக் கூற இயலாது. முதலில் நான் கதரைக் கொண்டுவந்தேன். அதன்பிறகுதான் அதன் விளைவுகளை ஆராய்ந்தேன்; அதை வைத்துப் பரிசோதனை செய்தேன். நான் என்னையே ஏமாற்றிக் கொண்டு வந்திருப்பதாகக் கண்டுகொண்டேன். நான் ஜனங்களுக்குக் கொடுத்தது பணத்தையே ஒழிய, உண்மையான சாரத்தை-சுயபலத்தில் வாழ்வதை—அல்ல. கூலி என்ற பெயரில் நான் அவர்களுக்குப் பணம் கொடுத்தேன்; அதில் சுயராஜ்யம் இருக்கிறது

என்று அவர்களுக்கு உறுதி கூறினேன். ஜனங்கள் நான் சொன்னதை ஏற்றுக்கொண்டார்கள்; என்னை நம்பினார்கள்; தொடர்ந்து என்னை நம்புகிறார்கள். ஆனால், இப்படிப்பட்ட கதர் சுயராஜ்யத்தை நோக்கி எவ்வளவு தூரம் நம்மை அழைத்துச் செல்ல முடியும் என்பதில் இப்பொழுது எனக்கே சந்தேகங்கள் ஏற்பட்டிருக்கின்றன. கதரை நாம் இன்று வைத்திருப்பதைப் போல் தொடர்ந்து வைத்துக் கொண்டிருந்தால் அதற்கு எதிர்காலமே இல்லை என்று அஞ்சுகிறேன்.

ஜா: இப்பொழுது நகரங்களில் நடைபெற்றுவரும் கதர்க் கடைகள் மூடப்படும் ஒரு கட்டம் வரும் என்று நீங்கள் கற்பனை செய்கிறீர்களா?

கா: ஆம். செய்யத்தான் செய்கிறேன்.

ஜா: அப்படியானால், நாம் ஜனங்களிடம் நூலை வாங்கிக்கொண்டு அதற்குப் பதிலாக அவர்களுக்குக் கதர் கொடுக்கவேண்டும்.

கா: நூற்பில்லாமல் நாம் தொடர்ந்து வேலை செய்ய முடியாது என்பதை நாம் கண்டபோது, நூற்கக் கற்றுக் கொண்டோம். ஆனால், நாம் நெசவு வேலையைச் செய்யவில்லை. ஆனால், அதே போல நெசவாளிகளுக்கான பயிற்சியும் கொடுக்கவேண்டும் என்பதை இப்போது உணர்கிறோம். நாம் என்ன மாறுதல்களைச் செய்ய விரும்பினாலும், புத்திசாலித்தனமாக, தீர யோசித்துச் செய்ய வேண்டும்.

நூற்பதில் ஜீவனக் கூலி சம்பந்தமாக நாம் செய்ததை நினைவுக்குக் கொண்டுவருகிறேன். நாம் சில வழிகளைப் பின்பற்றிச் சென்றோம். அவ்வாறு உற்பத்தி செய்யப்படும் கதர் பரோபகாரமல்ல, ஆனால், நூற்போரைச் சுரண்டுவதே என்பது நமக்குக் கொஞ்சம் கொஞ்சமாகப் புலப்பட்டது. அப்புறம் நாம் கூலியை உயர்த்தினோம். எட்டணா கொடுக்க வேண்டும் என்று நான் சொன்னேன். நீங்கள் மூன்றணாவே கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்திக் கூறினீர்கள். உங்கள் மூன்றணாவுக்கு நான் சம்மதித்தேன். அப்புறம் அதை நீங்கள் நாலணாவாக உயர்த்தினீர்கள். அதேமாதிரி நமது புதிய முயற்சியிலும் நாம் வேலை செய்துகொண்டு போகலாம். முதலில் நீங்கள் கொள்கையை ஒப்புக்கொள்ள வேண்டும். பிறகு நம் அனுபவத்தைக் கொண்டு நாம் மேலே செல்லலாம். புதிய அடிப்படையில் நமது வேலையை மாற்றியமைப்பதற்கு நீங்கள் மூன்று சாத்தியமான வழிகளைக் குறிப்பிட்டீர்கள். அவைபற்றி யோசனை பண்ணுங்கள். ஒவ்வொரு மாகாணத்திலும் நமது ஸ்தாபன அமைப்பு இருக்கிறது. மாகாண நிர்வாகிகள் ஏற்கனவே அங்கே இருக்கிறார்கள். ஊழியர்களில் சிலரை அழைத்து, அவர்களோடு விஷயத்தை விவரமாக விவாதியுங்கள் அதனால் நமது

இன்றைய வேலை சிறிது குறையும் என்பது உண்மைதான். ஆனால், அது என்னைத் தடை செய்யாது. யாருமே நூற்க வில்லை என்றாலும்கூட, நான் தன்னந்தனியே நூற்றுக் கொண்டுதான் இருப்பேன். நாம் கதர் உற்பத்தியைத் தொடங்கியபோது, கதர்வேட்டியைத் தயாரிப்பது நடவாத காரியம் என்று என்னிடம் சொன்னார்கள். அதற்கு, நான் ஒரு சாக்குத் துணியையோ, ஒரு கம்பளியையோ கட்டிக் கொள்ளுவேனே ஒழிய மில் வேட்டியைக் கட்டமாட்டேன் என்று பதிலளித்தேன். ஒரு மாதம்கூட ஆகவில்லை. மகன்லால் ஒரு வேட்டியைத் தயாரித்துவிட்டார்; கங்காபஹன் மஜும்தாரும் எனக்கு ஒரு வேட்டி அனுப்பி, எத்தனை வேட்டிகளுக்கு வேண்டுமானாலும் ஆர்டர் கொடுக்கும்படி என்னைக் கேட்டார்.

## கதரின் மூலம் சுயராஜ்யம்

ஜா: கதர் கட்டுகிறவர்களை அவர்களுக்கு வேண்டிய நூலை நூற்கும்படி கேட்பதற்கு முன்னால் நாமே நூற்பதில் எந்த அளவுக்கு ஈடுபட்டிருக்கிறோம் என்பதை யோசிக்க வேண்டும். அகில இந்திய நூற்போர் சங்க ஊழியர்களின் உதாரணத்தை எடுத்துக்கொள்ளுகிறேன். ஒவ்வொரு ஊழியரும் மாதத்துக்குக் குறைந்தது $7\frac{1}{2}$ சிட்டமாவது நூற்க வேண்டும் என்று நமது விதி கூறுகிறது. ஆனால், அது திருப்திகரமாக நிறைவேற்றப்படவில்லை. மேலும், கதர் வாங்குவோரிடையே நூற்பவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாக இருக்கிறது. கிராமப் புறங்களில் உள்ள பெரும்பாலான நூற்பாளர்கள் கூலிக்குத்தான் நூற்கிறார்களே ஒழிய, தங்கள் சொந்த உபயோகத்துக்காக நூற்பது அபூர்வம். இதுதான் நிலைமை. இந்த நிலையில் தாங்கள் கூறும் பரிசோதனை எவ்வளவு தூரம் வெற்றி பெறும் என்பதை அறிய ஆசைப்படுகிறேன்.

கா: குறைந்தபட்சம் இந்த அளவுக்காவது எல்லோரும் தெளிவாக அறிந்து கொள்ளவேண்டும்; அதாவது, கதர் ஜீவனோபாயத்தை மட்டும் தேடிக்கொள்ளுவதற்கான ஓர் உத்தியோகமோ கைத்தொழிலோ அல்ல. நம்மில் யாரும் இந்த மாதிரியான எண்ணத்தை வைத்துக் கொண்டிருக்கக் கூடாது. ஏனென்றால், கதர் ஒரு தொழிலாக இருக்கும் பட்சத்தில், அதை முழுக்க வர்த்தக முறையிலேயே நடத்தி வரவேண்டும். அப்பொழுது கதருக்கும் மில் துணிக்கும் உள்ள வித்தியாசம் இந்த விதமாகத்தான் இருக்கும்: அதாவது, ஒரு மில் ஒரு நகரத்தில் சில ஆயிரம் பேருக்கு வேலை கொடுக்கிறது; கதர் பதினையாயிரம் கிராமங்களில் சிதறுண்டு கிடக்கும் மக்களுக்கு ஒரு கோடி ரூபாய் கிடைக்கும்படி செய்கிறது. இரண்டையுமே அப்போது தொழில்கள்

என்றுதான் சொல்ல வேண்டும்; நாமும் யாரையும் பார்த்து கதரை அணியும்படியும் மில் துணியைப் பகிஷ்காரம் செய்யும்படியும் கூறுவதில் நியாயம் இராது. இப்படிப்பட்ட கதரை சுயராஜ்யத்தின் முன்னோடி என்று சொல்லிக்கொள்ள முடியாது. அப்படியிருக்க, நாம் கதரின் உண்மையான முக்கியத்துவம், அது கிராமங்களை மேல் நிலைக்குக் கொண்டு வருவதும், அதன் காரணமாக மக்களிடம் சுயராஜ்யத்துக்கான தன்னிச்சையான பலத்தை உண்டுபண்ணுவதுமான சாதனமாக இருப்பதே என்று கூறி வந்திருக்கிறோம். இப்படிப்பட்ட கூற்றை அப்பொழுது நிலைநிறுத்த முடியாது.

## கிராமங்களைப் பலப்படுத்தல்

நகரவாசிகளின் தாராள குணத்துக்குக் கோரிக்கை விடுத்து கிராமவாசிகளுக்கு உதவி செய்துகொண்டிருப்பதில் பிரயோசனமில்லை. கிராமவாசிகள் வாழ்க்கைப் பிரச்னைகளை எதிர்நோக்கவும், முன்னேறிச் செல்லவும் கூடியவாறு அவர்களுக்குப் பலம் அளிப்பதுதான் செய்யவேண்டிய காரியம். நாம் மில்களுக்கு ஊக்கம் அளித்திருந்தால், நாட்டுக்குப் போதிய துணி கிடைத்திருக்கலாம். அத்துடன், மில்களைத் தேசத்தின் பொதுச் சொத்தாக்கிவிட்டால், துணி விலைகள் இறங்கவும் கூடும்; மக்களும் சுரண்டப்பட மாட்டார்கள்; அவர்கள் போதிய கூலியைச் சம்பாதிக்கலாம். ஆனால், நாம் கதரைக் கொண்டுவந்ததற்குக் காரணம், மக்களைச் சோம்பல் நோயிலிருந்து மீட்க அதுதான் ஒரே வழி, சுதந்திரத்திற்கான பலத்தை அவர்களிடம் உண்டுபண்ணுவதற்கும் அது ஒன்றே வழி என்பதுதான். மற்றக் கைத்தொழில்களையும் இவ்விதமாகப் புத்துயிர் பெறச் செய்தால், நம்முடைய கிராமங்களைச் சுயதேவைப் பூர்த்தி செய்து கொள்ளுபவையாகவும் சுய பலத்தில் வாழக் கூடியவையாகவும் செய்ய முடியும். அவர்கள் தங்களுக்கு வேண்டிய சோப்பை ஸஜ்ஜி–களிமண்ணிலிருந்து தயார் செய்துகொள்ளுவார்கள்; அந்தச் சோப்பு, டாட்டா, கோத்ரெஜ் தொழிற்சாலைகளில் செய்யப்படும் சோப்புக்களின் மயக்கும் மணத்தைக் கொண்டதாக இராது. ஆனால், கதரைப் போலவே சுயதேவைப் பூர்த்தி இயல்பைக் கொண்டிருக்கும். ஆனால், சம்பூரண கிராம முன்னேற்றத்திற்கான சாதனமாக நான் நீண்ட காலமாக எடுத்துரைக்கும் கதரைப்பற்றிய இந்தப் பிரமாதமான கனவு நனவாகவில்லை. ஆகவே, நான் ஆரம்பித்த இடத்துக்கே இப்போது திரும்பிச் செல்ல வேண்டும் என்று கருதுகிறேன். கதரின் ஸ்தாபகன் என்ற முறையில், அவ்வாறு செய்ய நான் தயங்கக் கூடாது. அது சத்தியத்தின் அழைப்பு. மனமார, என்ன செய்கிறோம் என்பதை அறிந்தே நான் திரும்பிச் செல்லுகிறேனே ஒழிய, தோல்வி உணர்ச்சியுடனே, கோழைத்தன

மாகவோ அல்ல. கதரைப் பற்றி நான் மிகையாக ஏதேனும் கூறியிருந்தால், அதை நான் பகிரங்கமாக ஒப்புக்கொண்டு, திருத்திக்கொள்ளுவது நியாயமானதே.

ஜா : கதர், வருடத்தில் சில மாதங்கள் வேலையின்றிச் சோம்பியிருக்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்குள்ளானவர்கள் சிறிது உப வருமானத்தைப் பெற வழி செய்யும் ஒரு கைத்தொழில் என்பதே நம்முடைய பிரதானமான கூற்று.

கா : இல்லை, அத்துடன் நான் நிறுத்தவில்லை. இன்னும் மேலே சென்று, அதற்குச் சுயராஜ்யத்தைக் கொண்டுவரும் ஆற்றல் இருக்கிறது என்றும் சொன்னேன்.

ஜா : அது உண்மைதான். ஆனால், வாழ்வளிக்கும் அதன் ஆற்றலை இன்று நீங்கள் அதிகமாக வற்புறுத்திக் கூறுவது போல முன்பு கூறவில்லை. சுமார் மூன்று லட்சம் பேர் கதர் வேலை செய்து வருகிறார்கள். நீங்கள் விரும்பும் (சுயதேவைப் பூர்த்தி சம்பந்தப்பட்டவை நீங்கலாக) பலவிதமான உயர்ந்த குணங்களை அவர்களால் விரைவில் வளர்த்துக்கொண்டு விட முடியாது. காலப் போக்கில் அவர்கள் அவ்வாறு செய்யக் கூடும். நீங்கள் இன்று செய்ய விரும்புவது, கதர் விற்பனையை நிறுத்திவிட்டு, மக்கள் தங்கள் சொந்தத் தேவைகளுக்கு நூற்கும்படி செய்ய வேண்டும் என்பதுதான். இல்லையா ?

கா : நீங்கள் சொல்லுவதே சரி.

ஜா : ஆனால், விற்பனையை நிறுத்திவிட்டால் கூலிக்காக நூற்பது நின்றுவிடும்.

கா : நிற்கத்தான் செய்யும். ஆனால், அப்புறம் நாம் சொற்ப அளவில் நூற்பது நிச்சயமாக சுயராஜ்யத்தைக் கொண்டு வரக் கூடியதாக இருக்கும். ஏனென்றால், அடிப்படையில், அந்தப் பலம் நூற்பதில் இயல்பாக இருக்கிறது.

ஜா : இன்று கதர் வேலை மூலமாக நாம் சுமார் மூன்று லட்சம் பேருடன் தொடர்பு கொண்டிருக்கிறோம். சுயதேவைப் பூர்த்திக்காக நூற்கும்படி கூறுவதன் பலனாக, அவர்களை முப்பதினாயிரத்துக்கு மேற்படாதவாறு குறைத்து விடுவோம்.

கா : இந்த முப்பதினாயிரம் பேர் பிறகு மூன்று கோடியாகப் பெருகுவார்கள். அது எப்படியானாலும், நான் லட்சியத்துக்குத் துரோகம் செய்யும் குற்றத்தைச் செய்யாதவனாகவாவது இருப்பேன். மேலும், கிராமவாசிகளையும், தொழிலாளிகளையும் நூற்கும்படி நாம் தாஜா பண்ணவேண்டிய நிலை இராது. இன்று நாம் செய்வது என்னவென்றால், பாங்கி முதலாளிகளைப் போல் பணப் பையுடன் கிராமத்

துக்குச் சென்று, நூற்பதற்காக நாலணுவோ, ஆறணுவோ கொடுப்பதாக வாக்களிக்கிறேம். அதற்குப் பதிலாக இனி நாம் கிராமவாசிகளின் வாழ்க்கையிலேயே பிரவேசிப்போம். ஊழியர்களும், கிராமவாசிகளும் பரஸ்பரம் தாராளமாகத் தங்கள் மனத்தில் உள்ளதைச் சொல்லுவார்கள். நூற்கின்ற பெண்ணின் கூலியை நாம் ஏற்றுவோம். ஆணுக்குக் கொடுப்பது போலவே பெண்ணுக்கும் நான் கொடுப்பேன். ஆனல், அவள் கூலிக்காக மட்டும் நூற்பதில் எனக்கு அக்கறையில்லே என்று அவளுக்குத் தெளிவாகச் சொல்லுவேன். அவள் தனக்காக நூற்க வேண்டும் என்பேன். அவளுடைய நூலே நெய்வித்துக் கொடுப்பதாகவும், அவளுடைய குழந்தைகளேப் படிப்பிப்பதாகவும், ஏதேனும் ஒரு தொழிலில் அவர்களேப் பயிற்றுவதாகவும் நான் வாக்குறுதியளிப்பேன். நான் முயற்சி செய்து அவளுடைய துன்பங்களேப் போக்குவேன். இதை நாம் ஆரம்பத்திலிருந்தே செய்து, நம்மோடு சரியான ஊழியர்களேச்சேர்த்துக் கொண்டிருந்தால், இதற்குள் நாம் நிச்சயம் சுயராஜ்யம் அடைந்திருப்போம். ஆனல், நடந்ததைக் குறித்து எனக்கு வருத்தமில்லே.

## நம்முடைய தவறு

ஜா : இந்த மாதிரியான ஊழியர்கள் தங்களுக்கு நிறையக் கிடைப்பார்கள் என்று நினேக்கிறீர்களா? அப்படிக் கிடைப்பதாக இருந்தால், வேலே சுலபமாகிவிடும்.

கா : தவறு நம்முடையதுதான். இதில் எந்தவிதமான சந்தேகமும் இல்லே. இந்தக் கண்ணேட்டத்தை எப்போதும் நாம் வைத்துக்கொண்டிருக்கவில்லே. அதற்காக ஊழியர்களேயும் நாம் தயாரிக்கவில்லே. நாம் மிகவும் அவசரமாக வேலேசெய்து கொண்டும் இருந்தோம். புத்தி பூர்வமாக நாம் இப்பணியில் ஈடுபட்டிருந்தால், தேவைப்படும் ஊழியர்கள் நமக்குக் கிடைத்திருப்பார்கள்.

ஜா : நல்ல ஊழியர்கள் கிராமங்களுக்குச் சென்று அங்கே தங்கிவிட வேண்டும் என்று தாங்கள் பலமுறை கூறியிருக்கிறீர்கள்.

கா : ஆம். அவர்கள் கதரை அகிம்சையின் சின்னமாகச் செய்ய வேண்டும் என்பதற்காக அப்படிச் சொன்னேன். நாம் இதில் தோற்றுவிட்டால், கதரைப் பற்றி நாம் கூறிக் கொள்ளுவதற்கு யாதொரு பலமும் இல்லாமல் போய்விடும்.

ஜா : எப்படியும், இன்று நமது நாட்டில் உள்ளவர்களிடமிருந்துதான் நமக்கு ஊழியர்கள் கிடைக்க வேண்டியிருக்கிறது.

கா : அதுவே நமது மனப்போக்கு என்ருல், அகிம்சையின் மூலம் சுயராஜ்யம் கிடைக்கப் போவதில்லே. வேறு விதமாகச் சொன்னுல், என்னுடைய சுயராஜ்யக் கற்பனேக்கு மக்கள் தயாராக இல்லே.

அப்படியானுல் நான் என் வழியில் செல்லுவேன்—தன்னந்தனியாக நான் வேலே செய்ய வேண்டியிருந்தாலும் சரி. அகில இந்திய நூற்போர் சங்கமோ, அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கமோ, ஹிந்துஸ்தானி தாலிமி சங்கமோ, வேறு சங்கங்களோ, என்னேடு ஒத்துழைத்தால் நான் சந்தோஷப்படுவேன். மக்கள் நம்மைப் பின்பற்றி வராமலிருப்பது முற்றிலும் சாத்தியமே. அப்பொழுது அது, நம்மிடம் ஹிம்சை நிறைந்திருக்கிறது, நாம் சொல்லிக் கொள்ளும் அகிம்சை அகிம்சையே அல்ல, ஆனுல் அது கோழைத்தனம் என்பதைக் காட்டும்.

ஜா : அது சரி. ஆனல், நடைமுறைக்குக் கொண்டு வருவது தான் பிரச்னே.

கா : அப்படியானுல், நாம் பிரமாதமாகக் கூறி வந்திருப்பதைக் கைவிட வேண்டும். தயக்கமின்றி, நம்மை நாமே முகஸ்துதி செய்து கொள்ளாமல் உண்மையை மட்டும் கைக்கொள்ள வேண்டும். மற்ற எல்லோரையும் போல நாம் பலவீனமாக இருக்கிறேம், எந்த வகையிலும் அவர்களேவிட விசேஷமாக இல்லே என்பதை நாம் அறிவித்துவிட வேண்டும். அப்பொழுது, சுயராஜ்யம் நமக்குக் கிடைத்தாலும், கிடைக்கும் போது, நம்முடைய எந்தவிதமான விசேஷ பலத்தினுலும் அது கிடைத்து விடவில்லே என்பது தெளிவாகிவிடும்.

## 7வது நாள்—14-10-1944

### ஊழியர்களின் பயிற்சி

ஜா : உங்களுடைய கிராமப் புனருத்தாரணத் திட்டம் முழுவதையும் மேற்கொள்ளுவதானுல், நாம் திறமை மிக்க ஊழியர்களேத் தேர்ந்தெடுத்துப் பயிற்சியளிக்க வேண்டும். விற்பனேக்காகக் கதர் உற்பத்தி செய்வதற்கு நாம் ஊக்கம் அளிக்கக் கூடாது. துணியில் சுயதேவைப் பூர்த்தி அடைவதற்காக—அதன் விளேவாக நமது இன்றைய வேலே குறைந்து போனுலும் சரி—கதர் உற்பத்தி செய்ய வேண்டும் என்று நாம் வற்புறுத்த வேண்டும். அதன் நேரடியான பொருள் என்னவென்ருல், இனிமேல் நூலுக்குத்தான் கதர் கொடுக்கப்படுமே ஒழிய, பணத்துக்குக் கொடுக்கப்பட மாட்டாது. அவ்வாறு பெற்றுக் கொள்ளும் நூலே நெய்ய வேண்டும். இந்தக் கொள்கையை எப்பொழுது, எவ்வளவு தூரம் அமுலுக்குக் கொண்டுவர வேண்டும், முழுக்க நூலாகக் கொடுத்தே கதர் வாங்க வேண்டும் என்ற

விதியை உடனடியாக அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமா, அல்லது துணியின் விலையில் கால்வாசியோ, மூன்றில் ஒரு பங்கோ, பாதியோ நூல் வாங்கலாமா, அதன் பிறகு நூற்றுக்கு நூறு நூலாகவே கேட்கும் கட்டத்தை அடையும் வரையில் அதை உயர்த்திக் கொண்டே போகலாமா என்பவற்றையும் நாம் முடிவு செய்ய வேண்டும். அது மிகவும் சிரமமான ஒரு காரியமே என்பதில் சந்தேகமில்லை. ஊழியர்கள் இந்தக் கொள்கையை அனுஷ்டிக்கும்படியும், ஜனங்கள் அதை முழுக்கப் புரிந்து கொள்ளும்படியும் செய்வதற்கு அரும்பாடுபட வேண்டும்.

அப்புறம், ஊழியர்களுக்குப் பயிற்சியளிக்கும் பிரச்னை ஏற்படும். அதற்கு நாம் ஒவ்வொரு மாகாணத்திலும் வித்தியாலயங்களை ஆரம்பித்து, அவர்களுக்குப் பாடத் திட்டங்களும் வகுக்க வேண்டும். திறமைசாலிகளான ஆசிரியர்களுக்கு அதிகப் பஞ்சமாக இருக்கிறது. நம்முடைய முதல்தர ஊழியர்கள் தங்களுடைய குறிப்பிட்ட பகுதிகளில் வேலை செய்வதோடு நின்று விடுகிறார்கள். அதுவே தங்களுடைய சாதன பூமி, அதாவது தங்கள் ஆன்மிக முயற்சிகளைச் செய்து கொண்டு போவதற்காகக் குறிக்கப்பட்ட இடம் என்றும், அதனால் அதை விட்டு வேறெங்கும் தங்களால் போக இயலாது என்றும் நினைப்பதாகத் தோன்றுகிறது. இதற்குத் தாங்கள் ஊக்கம் அளித்திருக்கிறீர்கள். இந்த ஊழியர்களில் சிலரை அவர்களுடைய செயற்களத்திலிருந்து பயிற்சி ஸ்தலங்களுக்கு நாம் திருப்பி விட்டாலொழிய புதிய வேலையை எப்படிச் செய்து முடிக்க முடியும் என்று எனக்குத் தெரியவில்லை. வேறு யார் கிராம ஊழியர்களுக்குச் சரியான மனப் போக்கையும், வேலையை அணுகும் முறையையும் கற்பிக்க முடியும்?

**கா:** கதர் வேலை ஆரம்பத்தில் ஒரே ஒரு ஸ்தலத்திலிருந்து தான் தொடங்கியது. அதைப் போலவே, ஒரே ஒரு பயிற்சி ஸ்தலத்திலிருந்து இப்போது நாம் ஆரம்பிக்கலாம். அங்கே நாம் பட்டதாரிகளைத் தயாரித்து, பிற ஸ்தலங்களுக்கு அனுப்பலாம். அவர்கள் வேறு ஊழியர்களைத் தயார் செய்வார்கள். அந்த ஊழியர்கள் இன்னும் அதிகமான ஸ்தலங்களைத் தொடங்குவார்கள்.

**ஜா:** அதற்கு அதிகக் காலம்—ஐந்து வருடத்திலிருந்து பத்து வருடம் வரையிலும்கூட—ஆகக்கூடும்.

**கா:** ஆகலாம். ஆனால், நான் அப்படி நினைக்கவில்லை. நமது முதல் கோஷ்டியில் ஏற்கனவே போதிய முன் பயிற்சி பெற்றவர்கள் இருப்பார்கள். ஆகையால், அவர்கள் பூரணத் தகுதி வாய்ந்த ஊழியர்கள் ஆவதற்கு அதிகக் காலம் பிடிக்காது. மறுபடியும், அவர்கள் ஓரளவு திறமையைச் சம்பாதித்துக்

கொண்டபின், அவர்களைக் கிராமத்துக்குப் போகும்படியும், களத்தில் பெறும் நடைமுறை அனுபவத்தைக் கொண்டு தங்கள் அறிவை பெருக்கிக் கொள்ளும்படியும் கூறுவோம். ஆகையால், பயிற்சிக்கு அதிகமான காலத்தைச் செலவிட வேண்டியிருக்கும் என்று நான் நினைக்கவில்லை. அப்படியே அதிகக் காலம் செலவாகும் என்றால் நாம் கவலைப்படக் கூடாது. உயர்தர ஊழியர்கள் நமக்குக் கிடைக்கவில்லை என்றாலும் பரவாயில்லை. மிகச் சிறந்த ஊழியர்களை அடைவதற்கே நாம் முயற்சி செய்வோம். ஆனால், தற்போது நமக்குக் கிடைப்பவர்களைக் கொண்டு வேலை செய்வதற்குத் தயாராக இருப்போம்.

ஜா: *1920*-இல் நமக்குக் கிடைத்த ஊழியர்கள் தகுதி வாய்ந்தவர்கள் என்பதை நிரூபித்தார்கள். அதன் பிறகு உயர்தர ஊழியர்கள் அவ்வளவு அதிகமாக நமக்குக் கிடைக்கவில்லை. சிலர் வரத்தான் செய்தார்கள்; வந்துகொண்டுமிருக்கிறார்கள். ஆனால், அவர்களுடைய எண்ணிக்கை மிகவும் குறைவு.

கா: உண்மை என்னவென்றால், நம்முடைய செயல் முறை குறைபாடு உடையதாக இருந்தது. சிறந்த ஊழியர்களைக் கவர்ந்திழுக்கக் கூடியவாறு நமது திட்டத்தில் எதுவும் இல்லை. நமது வேலையில் அறிவு விருத்திக்கு வாய்ப்பில்லாததுபோல் தோன்றியது. அதன் காரணமாக, ஏராளமான பேருக்கு அதில் கவர்ச்சி ஏற்படவில்லை. அது போக, வேறு துறைகளில் உள்ள வருமானக் கவர்ச்சியும் அதில் இல்லை. ஆனால், மிக மோசமான விஷயம் என்னவென்றால், ஒரு வகை அறியாமையும், சுறுசுறுப்பின்மையுமே கதர் ஊழியர்களின் இயல்புகளாக இருந்தன. அது மற்றவர்கள் அவர்களைப் பற்றித் தாழ்வாக நினைக்கும்படி செய்தது. கதர் ஊழியர்கள் நன்றாக உடை உடுத்தவில்லை என்றும், அழுக்கடைந்து காணப்படுவதாகவும், பெரும்பாலும் பொது அறிவு இல்லாதவர்களாக இருப்பதாகவும் ஜனங்களுக்குத் தோன்றியது. கதர் விஞ்ஞானத்தைப் பற்றி ஊழியர்களுக்குப் போதிய அறிவு இல்லாததால், அதைப்பற்றி ஜனங்களுக்கு அவர்கள் எதையும் விளக்கிச் சொல்லவில்லை. விஷயம் தெரிந்துகொள்ளுவதற்காகக் கேட்பவர்களின் சாதாரணக் கேள்விகளுக்கும் அவர்கள் பெரும்பாலும் பதில் அளிக்கும் நிலையில் இல்லாதிருந்தார்கள்.

கிராமவாசிகளுக்கு வேலை கொடுத்த கிராமங்களில் நாம் போய்த் தங்கினோம். ஆனால், நம்மிடையே அறிவாளிகளாக உள்ளவர்கள் அதிக அளவில் போய்த் தங்கவில்லை. ஜனங்களுக்குத் தமது நோக்கத்தை விளக்கிக் கூறும் ஆவல் கொண்ட, ஆர்வமுள்ள, உண்மையான ஒரு தொண்டருக்கு இருக்க வேண்டிய மனப்போக்கு, வேலை செய்த கொஞ்சம்

பேருக்கு இருந்ததில்லை. இருந்திருந்தால் நாம் பொருளாதார நிபுணர்களின் முன்பாக, "உங்களுக்குத் தெரிந்ததெல்லாம் எங்களுக்கும் தெரியும். ஆனால், எங்களுக்குள்ள அனுபவ ஞானம் உங்களுக்குக் கிடையாது. இதை நீங்கள் எங்களிடமிருந்து கற்றுக்கொள்ளலாம்" என்று சொல்லக்கூடியவாறு நமது வேலையில் நாம் நிபுணர்களாகியிருப்போம்.

## புதிய மதிப்பு

ஜா : உண்மை. நம்முடைய அறிவு அரைகுறையாக இருக்கிறது. நம்மிடம் எத்தனையோ குறைகள் இருக்கின்றன. ஆனால், மதிப்புகளை அளக்கும் நமது அளவுகோல் வேறானதாகவும் இருக்கிறது.

கா : இருக்கலாம். ஆனால், அவர்களுடைய அளவுகோல் சரியானதல்ல என்று அவர்களிடம் கூறக்கூடிய சக்தி நமக்கு இருக்க வேண்டும்.

ஜா : ஆனால், தார்மிக மதிப்புகளை லௌகிக மதிப்புகளுடன் ஒப்பிடுவது எப்படி ?

கா : அப்படியானால், நீங்கள் தார்மிக மதிப்புகளை அவர்கள் முன் வைத்து, அவற்றின் தகுதியையாவது நீங்கள் நிரூபிக்கலாம். கதரின் லௌகிக மதிப்பைப் பொறுத்தவரையில், கல் உடைப்பது, ரோடு போடுவது போன்று, நிவாரண வேலைக்கான ஒரு சாதனம் என்ற முறையில் ராட்டைக்கு ஓர் இடம் உண்டு என்பதை அரசாங்க தஸ்தாவேஜிகளும் எடுத்துக் காட்டுகின்றன. ஒரு நிவாரண நடவடிக்கை என்ற முறையில் கதருக்கு அசைக்க முடியாத ஓர் இடம் இருக்கிறது என்பதையாவது நீங்கள் நிலைநாட்டலாம். ஆனால், எல்லாவற்றையும் விட முக்கியமாக நாம் நிரூபிக்க வேண்டியது, பலமான, அகிம்சா பூர்வமான கிராமப் பொருளாதாரத்தை நிலைநாட்டுவதற்குக் கதர் அவசியம் என்பதைத் தான்.

சுயதேவைப் பூர்த்தித் திட்டத்தைச் செயலாக்குவதில் நமக்கு என்னென்ன சிரமங்கள் ஏற்படும் என்பதைப் பார்ப்போம். சிறிது காலத்துக்கு விற்பனைக்கான கதர் இருந்து வரும். ஆனால், இனிமேல் அகில இந்திய நூற்போர் சங்கத்தின் முக்கியமான செயல் திட்டமாக இருக்க வேண்டியது, சுயதேவைப் பூர்த்தித் திட்டமே. ஊழியர்கள் தங்கள் முழுச் சிந்தனையையும் சக்தியையும் அதிலேயே ஈடுபடுத்த வேண்டும்.

# 5
# மகாத்மாவின் விளக்கம்-1

[சென்ற பகுதியில் காணப்படும் சம்பாஷணைகளின் சாரம் அகில இந்திய நூற்போர் சங்கத்தின் காரியதரிசி ஸ்ரீ ஸ்ரீகிருஷ்ணதாஸ் ஜாஜுவின் பெயரால் சுற்றுக் கடிதமாக சங்கத்தின் மாகாணக் கிளைகளுக்கும் முக்கியமான கதர் ஊழியர்களுக்கும் அனுப்பப்பட்டது. அவர்களுள் பெரும்பாலோர் மிகவும் ஆழ்ந்து சிந்தனை செய்து அதைப்பற்றிய தமது அபிப்பிராயங்களையும் அநேக உபயோகமான ஆலோசனைகளையும் சங்கத்தின் காரியாலயத்திற்கு அனுப்பினார்கள். இந்தச் சுற்றுக் கடிதத்தைப் பார்த்த பல கதர் ஊழியர்களிடமிருந்து வந்த கடிதங்களில் சில காந்திஜிக்குப் படித்துக் காண்பிக்கப்பட்டன. இதனால் காந்திஜி தமது கருத்தை மேலும் தெளிவாக்கி உறுதி செய்து கொண்டார். தமது இந்த உறுதி பெற்ற கருத்துக்களை உணர்ச்சி ததும்பும் சொற்களின் மூலமாக அவர் 1944 டிசம்பர் 1,2,3 தேதிகளில் சேவாகிராமத்தில் சங்கத்தின் விசேஷக்கூட்டத்தில் கூடியிருந்த டிரஸ்டிகள், கதர் ஊழியர்கள் ஆகியோரின் முன்னிலையில் வெளியிட்டார். அவற்றில் முதல் தேதி அவர் செய்த சொற்பொழிவின் சாரம் கீழே தரப்படுகிறது.]

உலகத்தில் இன்று இரு வகைக் கருத்துக்கள் வழங்குகின்றன. ஒன்று நாடுகளை நகரங்களாகவும், மற்றது கிராமங்களாகவும் பாகுபாடு செய்ய விரும்புகிறது. கிராமப் பண்பும், நகரப் பகட்டும் வேறு வேறு பொருள்களாகும். நகரப் பகட்டு, யந்திரத்தை ஆதாரமாகக் கொண்ட தொழில்களின் மேல் எழுப்பப்பட்டிருக்கிறது. கிராமப் பண்போ, கையினால் ஆகும் வேலைகளை ஆதாரமாகக் கொண்டது. கிராமப் பண்பாட்டை நாம் விரும்பி ஏற்றிருக்கிறோம். பெருத்த அளவில் பொருள்களை உண்டாக்குவது என்ற முறை சமீப காலத்தில்தான் வளர்ந்திருக்கிறது. இதனால் நாம் எவ்வளவு விருத்தி அடைந்தோம் என்றும், நமக்கு இதனால் எவ்வளவு சுகம் கிடைத்தது என்றும் நமக்குத் தெரியாவிட்டாலும். இதனாலேயே உலகில் நடைபெறும் மகா யுத்தங்கள் மூண்டன என்று அறிவோம். இரண்டாவது மகா யுத்தம் இன்னும் நடந்து கொண்டிருக்கிறது. இது முடிவதற்கு முன்னமேயே, மூன்றாவது யுத்தத்தைப் பற்றிய பேச்சு காதில் விழுகிறது. இன்று நமது நாடு இருக்கும் எளிய நிலைமையும், இதற்கு உண்டாகியிருக்கும் கஷ்டங்களும் இதற்கு முன் எப்பொழுதும் இருந்ததில்லை. நகரங்களில் உள்ள ஜனங்களுக்கு நல்ல சம்பளமும் போதிய லாபமும் கிடைத்தாலும், அதெல்லாம் கிராமங்களின் ரத்தத்தை உறிஞ்சுவதாலேயே கிடைக்கிறது.

நாம் கோடிக் கணக்கில் பணம் சேர்க்க விரும்பவில்லை. நமது வேலை என்றும் பணத்தை அண்டியிருக்கும்படி செய்ய நாம் விரும்பவில்லை. கடமையை நிறைவேற்றும் பொருட்டு உயிரையே அர்ப்பணம் செய்ய விருக்கும் பொழுது, பணத்திற்கு மதிப்பேது? நமக்கு நம்பிக்கை வேண்டும். உண்மை தேவை. இவ்வகையில் முடிந்தால் நாம் முப்பது லட்சம் ரூபாய் மூலதனத்தைக் கிராமங்களில் வினியோகித்து முந்நூறு கோடி மதிப்புள்ள ஐஸ்வர்யத்தை உற்பத்தி செய்ய இயலும். இதற்கு, கிராமங்கள் சுயதேவைப் பூர்த்தி செய்வதும் தன்னம்பிக்கையுள்ளவையாயிருப்பதும் அவசியமாகும். சுயதேவைப் பூர்த்தி என்று நான் கூறுகையில் குறுகிய பொருளில் அதைக் கூறவில்லை என்பது நினைவிருக்கட்டும் கிராமங்கள் ஒன்றிற்கொன்று சம்பந்தமின்றி விலகிப் போக வேண்டுமென்று நான் போதிக்கவில்லை. லட்சியத்தை எய்தும் பொருட்டு நாம் நம்மைத் தூசிக்குச் சமமாக மதித்து அடக்கத்தைப் பெற வேண்டும். பாலுடன் சர்க்கரை சேருவதைப் போல் நாம் மக்களிடையே இரண்டறக் கலந்துவிட வேண்டும். கிராமவாசிகள் முடிந்தவரையில் சுயதேவைப் பூர்த்தி செய்துகொண்டு தமது அறிவு வளர்ச்சிக்குரிய தெல்லாம் செய்து வந்தால், நாம் கோரும் அகிம்சை மயமான சமூக முறைக்கு உகந்த வகையில் விழிப்பெய்துவார்கள்.

நமது மூலாதாரத் தேவைகளுள் உணவுக்கு அடுத்தது உடையேயாகும். ஒவ்வொரு கிராமமும் தனக்கு வேண்டிய துணியைத் தானே தயாரிக்கட்டும். இதனால் அதன் ஆற்றல் பெரிதும் பெருகும். ஆனால், இதற்காகச் சட்டத்தின் உதவி கொண்டு, மில்களை மூடிவிட நாம் விரும்பவில்லை. மக்களின் மனம் மாறச் செய்து லட்சியத்தை எய்தவே நாம் விரும்புகிறோம். பரவல் முறையின்படி, பருத்தி விளையும் இடங்களிலெல்லாம் நாம் கதர் உற்பத்தி செய்ய வேண்டும். 'ஆனால், கதர் உடுத்தும் நகரவாசிகள் என்ன செய்வது?' என்று நீங்கள் கேட்பீர்கள். அவர்கள் தமக்குத் தேவையான நூலைத் தாமே நூற்று, நெய்வதற்கும் நெசவாளர்களை அமர்த்திக் கொள்ள வேண்டியதே.

பம்பாயிலுள்ளவர்களுக்குக் கதர் உற்பத்தி செய்பவர்களுக்காக மான்செஸ்டரிலிருந்து துணி தருவிப்பதைவிடப் பெரிய முட்டாள்தனம் வேறில்லை. கூலியில் ஒரு பகுதியைக் கதராகப் பெற்றுக் கொள்ளும்படி ஏழைகளை நிர்ப்பந்தம் செய்வதும் உசிதமல்ல. அவர்கள் தாமே விரும்பி, அன்புடனும், அறிவுடனும் நூற்கும்படியும், தாமே நூற்றுத் தயாரித்த துணியை உடுத்துவதில் பெருமை கொள்ளுமாறும், அவர்களுக்குப் போதிக்க வேண்டும். பம்பாயிலிருப்பவர்கள் கதர் உடுத்த வேண்டுமானால், தாமே நூற்கட்டும்; அல்லது தம்மை அண்டியுள்ளவர்கள் அல்லது குழந்தைகளை நூற்கச் செய்யட்டும். கதர் விரதம் பூண்டவர்கள் தாமே நூற்கத் தொடங்கினால், அதுவே ஓர்

வழக்கமாகி, பிறகும் அவ்விதமே செய்யத் தொடங்குவார்கள். நாம் இன்று உற்பத்தி செய்யும் ஒரு கோடி மதிப்புள்ள கதரைப் போல் பத்து மடங்கு அதிகமாக உற்பத்தி செய்யினும், நாடு முற்றிலும் பரப்புதல் என்ற நமது லட்சியம் கைகூடாது.

இந்தியாவின் ஆட்சி முறைக்கே வழி காட்டுவோராக இருக்கும் வகையில், நிர்மாண வேலைத் திட்டத்தில் ஈடு பட்டுள்ள ஊழியர்கள் தமது அறிவாற்றலைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். ராஜாஜி சென்னைக்கு முதல் மந்திரியானால்தான், நமது வேலையை முன்னேறச் செய்ய முடியும் என்று நாம் இன்று எண்ணுகிறோம். இது முறையா? தற்போதைய ராஜீய அபிவிருத்தியின் பொருட்டு நாம் ராஜப்பிரதிநிதி யின் மாளிகையை ஆவலுடன் நோக்கிக் கொண்டிருப்பதா? நாம் நமது வேலையைச் சிறப்புடன் செய்தால், ராஜப் பிரதிநிதி நம்மைத் தேடிக்கொண்டு தாமே வருவார். அவர் நமது வேலையைக் கண்டதும், இவர்களைக் கட்டி ஆளுவதோ, இவர்களை அடக்கி வைத்திருப்பதோ இனி முடியாது என்று உணருவார். பொங்கியெழும் உற்சாகத்துடன் 7 லட்சம் கிராமங் கள் இவ்வேலையைச் செய்யத் தொடங்கியதும், நமது அடிமைத் தளைகள் தாமே தகர்ந்து போகும். அப்பொழுது நமது கிராமம் ஒவ்வொன்றும் சுதந்திரமுள்ளதாகவும், சுயதேவைப் பூர்த்தி செய்வதாயும் இருக்கும். அதுவே உண்மை சுயராஜ்யமும், சத்துள்ள ஆட்சி முறையுமாகும்.

## 6

# மகாத்மாவின் விளக்கம்-2

*[1944 டிசம்பரில் செய்த தீர்மானம் ஊழியர்களுக்கு எட்டியதும் பெருத்த பரபரப்பு ஏற்பட்டது. மீண்டும் அவர்களைக் கூட்டி, அவர்களுக்குள்ள சந்தேகங்களை நேரில் தெளிவுபடுத்தும் அவசியம் ஏற்பட்டது. இதற்காக மூன்றும் முறையாக 1945, மார்ச்சு 24, 25, 26 தேதிகளில் மாகாணக் காரிய தரிசிகளும் இதர கதர் ஊழியர்களும் அழைக்கப் பட்டார்கள். இந்தக் கூட்டம் மூன்று நாட்கள் நடந்தது. 1945 மார்ச்சு மாதம் 24, 25 தேதிகளில் மகாத்மா காந்தி தீர்மானத் தின் தத்துவத்தை விளக்கிப் பேசியதன் சாரம் கீழே தரப்படுகிறது.]*

கூட்டத்தின் நடவடிக்கைகள் முழுவதிலும் நான் கலந்து கொள்ள முடியாமைக்கு வருந்துகிறேன். நாட்டிற்கு வெகு காலம் வரையில் ஊழியம் செய்யும் பொருட்டு 125 வருடங்கள் நான் உயிர் வாழ விரும்புவதே இதற்குக் காரணமாகும். அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் ஆகஸ்டுக் கூட்டத்தில் 125 வரு

டங்கள் வாழ்வதைப் பற்றி நான் சொன்னது வேடிக்கை வார்த்தை அல்ல. ஏனெனில், ஆலோசனையின்றி சத்தியாக்கிரகி ஒரு வார்த்தையும் பேசமாட்டான். எனது இவ்வாசையை நிறைவேற்றுவதற்கான முயற்சிகளை நான் செய்து கொண்டேயிருக்கிறேன். அதை நிறைவேற்றும் பொருட்டு எனது சக்தியை அதிக அளவில் மிச்சப் படுத்தி வைக்கவும் முயன்று கொண்டிருக்கிறேன். 125 வருடங்கள் உயிர் வாழ்வதில் வெற்றி பெறுவது என்ருல், டாக்டர்களையும் அவர்களுடைய சாஸ்திரத்தையும் நம்பி முடியாது. இவை இரண்டிலிருந்தும் எனக்குகந்த வகையில் நான் உதவி பெற்று வருவது ஒருபுறமிருக்கட்டும். இதன் வெற்றி, சத்தியம், அகிம்சை என்ற தத்துவங்களைப் பூரணமாக அனுஷ்டிப்பதற்கு எனக்குள்ள யோக்கியதையைப் பொறுத்திருக்கிறது. அகிம்சையில் எனக்குள்ள அனுபவமானது, பணியையும் இந்தத் துரித கதியில் செல்லாதவாறு தடுத்தல் அவசியம் என்று போதிக்கிறது. இதில் ஓரளவுக்கே நான் வெற்றி பெற முடிந்திருக்கிறது என்று ஒப்புக்கொள்ளுகிறேன். நான் எனது வேலையின் வேகத்தைக் குறைக்க முடிந்ததில்லை. பழைய ஆழ்ந்த பழக்கங்களைப் பிடுங்கி எறிதல் சுலபமல்ல. வீண் அவசரம் நல்லதல்ல என்று நான் அறிவேன். அதனுல் வேலை தடைப்படுமே தவிர முன்னேருது.

ராஜீய வேலையையும், நிர்மாண வேலையையும் கலப்பது சரியா என்று என்னிடம் கேட்கிருர்கள். இப்பொழுது சிலர், காங்கிரஸ் ஸ்தாபனத்தைப் பலப்படுத்தும் பொருட்டு நிர்மாண வேலை செய்துகொண்டிருக்கிருர்கள். இரண்டு வேலைகளையும் ஒன்ருய்ச் சேர்ப்பதால் இரண்டும் நன்ருக நடைபெறுவதில்லை. நிர்மாண வேலை சரியாக இருக்க வேண்டுமாயின், அது சுதந்திரமாக நடைபெறுமாறு செய்ய வேண்டும் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ராஜீய வேலையுடன் அதை இணைக்கக் கூடாது. எனது இந்த வார்த்தைக்கு ஏதும் மதிப்பு இராதோ என்ற சந்தேகம் எனக்குண்டு. ஆனுல், ‘ நீ உண்மையை இடைவிடாமல் பறை சாற்றிக்கொண்டிரு. நீ சொல்வதை யாரும் கேட்கிருர்களா, இல்லையா என்பதைப் பற்றிச் சிந்தியாதே ’ என்று மகாபாரதக்காரர் கூறியிருப்பதிலிருந்து, எனக்குச் சமாதானம் உண்டாகிறது.

1920-இல் காங்கிரஸின் மூலமாக நாட்டின் முன் நிர்மாண திட்டத்தைச் சமர்ப்பித்தது முதல் அதன் ஆற்றலில் எனக்குள்ள நம்பிக்கை வளர்ந்து விட்டது. இன்று வரையில் அதில் ஏற்பட்ட அனுபவத்தையும், ஞானத்தையும் ஆதாரமாகக்கொண்டு அது இப்பொழுது விஸ்தரிக்கப் பட்டிருக்கிறது. எனது பதினைந்து பகுதிகள்* உள்ள நிர்மாண திட்டத்துள் எல்லாம் அடங்கும் என்பதும், இதை நாடு முழுமையும் அனுஷ்டிக்குமாயின் வேறு எந்த

---

* இது தற்சமயம் 21 பகுதிகளாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. பின் சேர்க்கைப் பகுதி பார்க்க.

முயற்சியுமின்றி சுயராஜ்யம் தானே கிடைக்கும் என்பதும் என் நம்பிக்கை. இதை நான் உரக்கப் பறை சாற்றியுமிருக்கிறேன். மக்கள் நிர்மாண திட்டத்தை ஏற்று நான் விரும்புகிற முறையில் செய்து வருவார்களா என்று கேட்கலாம். மக்கள் என் வார்த்தையைக் கேட்கவில்லையானல், என் பரிகாரத்திற்கு அதனல் தீங்கு ஒன்றும் இல்லை. அது அனுபவ சாத்தியமானது, தலை சிறந்தது என்பதே என் பதிலாகும்.

சிலர், ‘இதையொட்டியே, தீண்டாமை விலக்கு, விவசாயி, தொழிலாளர் கட்டுப்பாடு ஆகியவற்றை காங்கிரஸின் சார்பில் நடத்துவதால் டாக்டர் அம்பேத்கார் முதலிய எதிர்க் கட்சிக்காரர்கள், எதிர்ப்பை வெளியிடுவதற்குச் சந்தர்ப்பம் ஏற்படுகிறது. இதனல் தீண்டாமை விலக்கு முதலிய வேலைகள் தடைப்படுகின்றன ஆகையால், இவ்வேலைகளைச் சுதந்திரமாக நடத்துவது நல்லதல்லவா?’ என்று என்னிடம் கேட்டிருக்கிருர்கள். இவ்விஷயத்தில் என் அபிப்பிராயம் இதுதான்: அம்பேத்கார் முதலியவர்கள் இவ்விதம் சிறிது எதிர்ப்புக்காட்டினல், நாம் அதைக் கண்டு ஆத்திரமடைவதோ, அதற்காக வேலையை நிறுத்தி விடுவதோ கூடாது. நாம் அவர்களுடைய மனத்துள் புகுந்து அவர்களது உணர்ச்சிகளைப் புரிந்துகொள்ள வேண்டும். எத்தகைய கஷ்டங்களை யெல்லாம் ஹரிஜனங்கள் அனுபவித்திருக்கிருர்களோ அவற்றை நாம் அனுபவிக்க நேர்ந்திருக்குமானல், நம் உள்ளத்தில் எவ்வளவு கசப்பு உண்டாகியிருக்கும், அந்நிலையில் நமது அகிம்சை எவ்வளவு தூரம் நிலைத்திருக்கும் என்பதை என்னல் கற்பனை செய்து பார்க்க இயலவில்லை. ஆகையால், இத்தகைய சந்தர்ப்பங்களில் நாம் உள்முகமாகப் பார்வையைச் செலுத்தவேண்டும். அங்கே தீண்டாமை ஒரு சிறிதாவது ஒட்டிக் கொண்டிருப்பது தெரிந்தாலும் அதை விலக்க வேண்டும். ஹிந்து மதம் வாழ வேண்டுமானல், தீண்டாமை ஒழிய வேண்டுமென்பதில் எனக்குப்பூரண நம்பிக்கையுண்டு; அவ்வாறே தீண்டாமை நிலைக்குமானல், ஹிந்து மதத்தின் அழிவைத் தவிர்க்க முடியாது; தவிர்க்க வேண்டியதுமில்லை. வருத்தத்திற்குரிய விஷயம் என்னவெனில், இந்தச் சீர்திருத்தத்திற்காக அதிக வேலை செய்ய வேண்டியவர்கள், இதில் ஊக்கத்துடனும், உற்சாகத்துடனும் இறங்கத் தவறியதோடு நில்லாமல், இதை ஓர் வகைத் தமாஷாகவும் கருதி இருந்து விட்டதே. இதைக் கண்ட ஹரிஜன சகோதரர்களின் மனத்தில் சந்தேகம் உண்டாவதிலும், அவர்களிடையே எதிர்ப்பு மனப்பான்மை உதிப்பதிலும், அவர்கள் காரம் கொள்ளுவதிலும் ஆச்சரியமில்லை.

ஓர் ஹிந்து என்ற முறையில், தீண்டாமையை வேருடன் களைந்தெறிவது, என்னுடையதும், என்னைப் போன்ற மற்ற ஹிந்துக்களுடையதுமான மதக் கடமையாகிறது. அகிம்சையின் மூலமாக சுயராஜ்யம் பெறவேண்டுமானல், நாம் தீண்டாமையை

ஒழித்துத் தீரவேண்டும். அதைச் செய்யாதவரையில் நாம் சுய ராஜ்யம் அடைய இயலாது. நான் இப்படிக் கூறுவதில் எல்லாக் காங்கிரஸ்காரர்களுக்கும் நம்பிக்கையில்லை. காங்கிரஸ் ஒரு ஜனநாயக ஸ்தாபனமாகும்: அதில் பல வகை அபிப்பிராயம் கொண்டவர்களும் இருக்கலாம். ஆகையால், யாருக்கும் தன் அபிப்பிராயத்தைப் பிறர்மீது சுமத்தவோ, அவர்கள் அதை யொட்டியே நடக்கவேண்டு மென்று விரும்பவோ அதிகாரமில்லை. தீண்டாமை விலக்கை மதக்கடமையென்று கருதுகிறவர்கள், மற்ற எல்லா வேலைகளையும் விட்டு, அதிலேயே தம் ஆயுளைக் கழிப்ப தென்பது முற்றிலும் சரியே. இதைப் போன்றே தீண்டாமை விலக்கை காங்கிரஸின் கொள்கைகளின் ஒரு பகுதியென மதிப்பவர்களுக்கும், அதைக் காங்கிரஸின் ஒரு திட்டம் என்ற முறையில் அனுஷ்டிப்பதற்கு உரிமையுண்டென்பதும் சரிதான்.

தருமம், அல்லது கடமை என்பது மிகவும் நுண்ணியதும், சிக்கலானதுமான பொருள். சுலபமாக வாங்கவோ, விற்கவோ கூடிய கடைச் சரக்கல்ல அது. இதைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டுமானால், இடைவிடாது உள்ளத்தைச் சோதிக்க வேண்டியது அவசியம். தத்துவ ரீதியில் அது எங்கும், எப்பொழுதும் ஒன்றே. ஆனால், அதன் வெளியுருவம், அதை அனுஷ்டிக்கும் முறையையும், சமயத்தையும், நபரையும் ஒட்டி, வேறுபட்டுக்கொண்டே இருக்கிறது. சத்தியத்தின் பல வகை சொரூபங்களைப் பற்றிய ரகசியத்தை நன்கு உணர்ந்தோமாயின், கருத்திற்கும், காரியத்திற்கும் இடையில் தோன்றும் வேற்றுமை களை அனுதாபத்துடன் கவனிக்க முடியுமாகையால், சுதந்திர மாகவோ காங்கிரஸின் ஒரு திட்டமென்றோ தீண்டாமை விலக்கு வேலை செய்வோர் இரு வகையினரையும் நான் வரவேற்கிறேன்.

இரண்டாவது கேள்வியொன்று என்னிடம் கேட்கப் பட்டது. அது என்னவெனில், சர்க்கா சங்கத்தின் பணத்தைக் கதர் ஊழியர்களுக்கு, நிர்மாண திட்டத்தின் விவசாயம், கால் நடை அபிவிருத்தி, ஆதாரக் கல்வி முதலியவற்றைப் பரப்பும் பொருட்டுச்செலவு செய்து, அவர்களைப்பூரணமான கிராம சேவை புரிவதற்குத் தகுதியுள்ளவர்களாக்கலாமா என்பது. எனது பதில், 'கூடாது' என்பதாகும். ஒரு ஸ்தாபனத்திற்காகச் சேர்க்கப் பட்ட பணத்தை மற்றொரு ஸ்தாபனத்திற்குச் செலவு செய்யக் கூடாது. நூற்போர் சங்கத்தின் சட்டப்படி அதன் பணத்தைக் கதர் வேலையைத் தவிர வேறு வேலைக்குச் செலவு செய்யக் கூடாது. ஆகையால் விவசாயம், பசுப் பாதுகாப்பு முதலிய வற்றைப் போதிப்பதற்காகும் செலவை அந்தந்த ஸ்தாபனங் களே ஏற்கவேண்டும். இல்லையேல் பெருத்த சிக்கல்களும் குழப்ப மும் உண்டாகும். ஒரு ஸ்தாபனத்தின் பணம் மற்றொரு ஸ்தாபனத்திற்குக் கடனாகக் கொடுக்கப்படுவதானால், தகுந்த ஜாமீனின் பேரில் உசிதமான வட்டிக்குக் கொடுக்கவேண்டும். டிரஸ்டியின் வேலை கஷ்டமுள்ளதும் நாசூக்கானதுமாகும். நான்

ஐம்பது வருடங்களாகப் பல ஸ்தாபனங்களுக்கு டிரஸ்டியாக இருந்திருக்கிறேன். என் மேற்பார்வையிலிருந்த ஒவ்வொரு ஸ்தாபனமும் முன்னேற்றம் அடைந்திருக்கிறது. என் வெற்றிக்குக் காரணம் என் மகாத்மாப் பதவியல்ல; எனது வியாபார அறிவும், கணக்கு வைத்துக் கொள்ளுவதில் எனக்குள்ள கவனமும் ஆகும். பொது ஸ்தாபனங்களின் வெற்றி அல்லது தோல்வி, ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட நபர்களின் கூரிய புத்தியைச் சார்ந்ததாக இருக்கக்கூடாது. அது தன் நிர்வாகத்தின் நேர்மையையும், சிறந்த வியாபார முறையையும் பொறுத்திருக்க வேண்டும். நீங்கள் அந்தக் குணங்களைக் கைக் கொள்ளுவீர்களானல், பணம் தானக உங்களிடம் வந்து சேரும்.

கதர் வேலையைக் கிளைகளின் மூலமாக நடத்துவதற்குப் பதிலாக, புதிய திட்டத்தைப் புரிந்துகொண்டு பூரணமான கிராம சேவை செய்யும் ஊழியர்களிடம் குறிப்பிட்ட ஒரு காலத்திற்குள் ஒப்புவிக்கலாமே என்று ஒரு நண்பர் ஆலோசனை கூறியிருக்கிருர். நான் இந்த யோசனையை ஏற்கிறேன். ஆனல், கதர் உற்பத்தியின் எல்லா வேலைகளையும் நிறுத்தி விடுவதற்கு ஒரு காலம் குறிப்பிடுவதில் எனக்குச் சம்மதமில்லை. கிராமங்களுக்கு வேண்டிய கதரைக் கிராமத்தாரே உற்பத்தி செய்யவேண்டும் என்று நான் விரும்புகிறேன். இதனல் தொலைக்கு அனுப்புவதிலும், தருவிப்பதிலும் உண்டாகும் செலவு குறைந்து, வியாபாரப் போட்டிகளினின்றும் கதர் விடுபடும். இந்த வேலையை ஆதாரக் கல்வியின் மூலமாக வெகு நன்ருகச் செய்யலாம். ஆதாரக் கல்வியினுள் எல்லா வேலைகளும் அடங்கும். இதன் பொருள், அது தன்னிடம் உள்ள காந்த சக்தியினல் எல்லா வகையான விருத்தர் வாலிபரையும், பல வகைக் குணமுள்ளோரையும் தன் பக்கத்தில் இழுத்துக் கொள்ளும் என்பதே. அதனிடம் இந்தச் சக்தி இல்லாத வரையில், ஆன்மா இல்லாத உடலையே அது ஒத்திருக்கும். நூற்போர் சங்கம் தனது பாரத்திலிருந்து விடுதலை பெற விரும்பினல், இச்சமயம் மிகவும் அரிதாயுள்ள தகுந்த ஊழியர்களைத் தயார் செய்ய வேண்டும். ஆகையால் ஆதாரக் கல்வியின் தத்துவத்தை அறிந்துகொள்ளுவதற்கு முன் நீங்கள் சேவாகிராமத்தை விட்டுப் போகக் கூடாதென்பது என் விருப்பம்.

உங்களில் ஒவ்வொருவரும் தமது இலட்சியத்தை நிறைவேற்றுவதற்கு ஆத்திரப்படுவது போலவே நானும் ஆத்திரப்படுகிறேன். ஆனல், வேலை மிகவும் கடினமானதென்று எனக்குத் தெரியும். இந்திய நாடு வெகு காலமாக அடிமையாயிருக்கிறது. அது அடிமையான காலம் ஆங்கிலேயர் வருவதற்கும் முந்தியதாகும். இது நமது சுய அறிவையும், சுய முயற்சி மனப்பான்மையையும் அழித்து நம்மை நம்பிக்கையின்மை என்ற வியாதியால் பீடிக்கப்படுமாறு செய்து விட்டது. நாம் இழந்த குணங்களை மீண்டும் பெற்ருலொழிய நிர்மாண திட்டம் முன்னேற முடியாது. நாம் நிர்மாண திட்டத்தை வெற்றி பெறச் செய்யாத வரையில்

அகிம்சை, சத்தியத்தின் மூலமாக சுயராஜ்யம் பெறுவது வெறும் கனவே யாகும். சுதந்திரம் வருவது திண்ணம்; அது வந்து கொண்டுதானிருக்கிறது. ஆனால், ராஜீய விடுதலையில் மட்டும் எனக்குத் திருப்தியில்லை. இந்தியாவிடம் உன்னதமானவை களை எதிர்பார்த்து நிற்கும் உலகமும் நிச்சயமாகத் திருப்தியடை யாது. நம் உள்ளத்திலும் உலகிலும் பரம்பொருளைப் பிர திஷ்டை செய்வதே நான் நினைக்கும் விடுதலையின் பொருளாகும். இது எனக்கு என்றும் கிட்டாது போயினும், இந்தக் கனவு நனவாவதற்காக வேலை செய்தபடியே இறக்க விரும்புவேன். எல்லையற்ற தைரியமும் அடக்கமுமே இதன் பொருள். ராஜீய விடுதலையைப் பெற்று இந்தியா திருப்தி யடைந்து விட்டால், நான் செய்வதற்கு வேலை ஒன்றும் இல்லையேல், இமய மலையின் உச்சியில் சென்று நான் அமர்ந்து விடுவேன். ஆலோசனை கேட்க விரும்புவோர் என்னைத் தேடிக்கொண்டு அங்கு வரவேண்டி யிருக்கும்.

கதரின் விலையில், கதர் வாங்குகிறவர்கள் ரூபாய்க்கு அரையணு விகிதத்திற்கு நூல் தருவதற்குப் பதிலாக ஒரு சிட்டம் அல்லது $2\frac{1}{2}$ அணு நூல் தரும்படி செய்யவேண்டு மென்று ஸ்ரீ ஜாஜு சொன்னர். இந்த நிபந்தனை கடுமையாயில்லை. நான் இன்னும் மேலே செல்ல விரும்புகிறேன். முன்பு பம்பாய், கத ருக்கு மான்செஸ்டராக இருந்தது. வெகு தூரத்திலிருந்து கதர் அங்கே கொணர்ந்து விற்கப்பட்டு வந்தது. ஸ்ரீ விட்டல்தாஸ் ஜெராஜானியின் விற்பனைத்திறனுக்காக அவருக்கு நன்றி செலுத்த வேண்டும். அவருடைய முயற்சியினுலேயே பம்பாயில் முதலில் சுதேசிச் சாமான்களும், பிறகு கதரும் வந்தன. இது சரியான வழியல்ல என்று நான் இப்பொழுது தெரிந்து கொண்டேன். உற்பத்தியாகும் இடத்திலேயே கதர் முதலில் செலவாக வேண் டும். எங்காவது தமது தேவைக்கு அதிகமாகக் கதர் தயாரிக் கப்பட்டால், அருகிலுள்ள இடத்திற்கு அதை அனுப்பலாம். அந்த ஜில்லா, அதிகமானல், மாகாணத்திற்கு வெளியே அனுப் பக் கூடாது. மாகாணம் வரையில்கூட நான் போக விரும்ப வில்லை. ஜில்லாவே இதற்குப் போதுமான பிரதேசமாகும். நோக்கம், அந்தந்தக் கிராமத்தின் கதரை அங்கங்கே விற்றுவிட வேண்டுமென்பதே. ஏழு லட்சம் கிராமங்களில் எத்தனை இதைச் செய்வதாக உரிமை கொண்டாட முடியும்? கதர் உற் பத்தியாகும் கிராமங்களிலுள்ள நூற்போரும், நெசவுக்காரர்க ளும், நூற்போர் சங்கம் பெருத்த முயற்சி செய்த காரணத்தினல், அங்கு உற்பத்தியாவதில் ஒரு சிறு பகுதியையே உபயோகப் படுத்துகிறுர்கள். இது கதரின் லட்சியத்திற்கு உகந்ததல்ல. ரூபாயில் அரையணு மதிப்பிற்கு நூல் தரவேண்டுமென்ற விதி, கிராமவாசிகளுக்கல்ல. அங்கே நூலுக்குப் பதிலாகக் கதர் கொடுக்க வேண்டும். நகரங்களில் விற்பனை குறைந்து விடுமென்று நூல் நிபந்தனையை அமுலுக்குக் கொண்டுவர அஞ்சுகிறீர்களா? இந்தப் பயத்தை உங்கள் மனத்திலிருந்து அகற்றுதவரையில் நீங்

கள் கதரைக் கொன்று விடுவீர்கள். கதர் தனக்கெனச் சமூகத்தில் ஒரு மரியாதைக்குரிய இடம் தேடிக்கொண்டு விட்டது. ஏழைகள் உற்பத்தி செய்த கதரை வாங்குவதில் பணக்காரர்கள் பெருமை கொள்ளுகிருர்கள். ஆனல், இது போதாது. ஏழைகளுக்கு உணவளிப்பது என்பதோடு கதரின் லட்சியத்தை நிறுத்திக் கொண்டீர்களானல், அகிம்சை மூலமாக சுயராஜ்யம் பெறுவதற்கு அது உதவாது. நான் இதை விரும்பவில்லை. நூல் நிபந்தனையை வற்புறுத்துவதன் காரணமாக நான் ஒருவன் மட்டுமே கதரை உடுத்த நேர்ந்தாலும் நான் கவலைப்பட மாட்டேன். நீங்கள் கதரை அகிம்சையின் சின்னமென்று மதித்திருக்கிறீர்கள். நீங்கள் இதை சுயராஜ்யம் அடைவதற்கு உதவக் கூடியதென்றும் எண்ணியிருக்கிறீர்கள். கதர் சாக வேண்டு மென்பது கடவுளின் திருவுள்ளமானல், அதன் இயற்கையான சாவையே நான் விரும்புகிறேன். உங்களுடைய கோழைத்தனத்தாலும், நம்பிக்கையின்மையாலும் நீங்கள் அதைக் கொல்ல வேண்டாம். எந்தக் காரணத்தாலோ தாமே நூற்க இயலாதவர், தமது மனைவி, தாய், சகோதரிகள் அல்லது வேலையாட்களைக் கொண்டு நூற்கச் செய்யட்டும். அக்கம் பக்கத்திற்கு வெளியே செல்லாமல் நூல் தயாரித்துக்கொள்ளட்டும். ஆனல், விலைக்கு வாங்க வேண்டாம்.

நான் கதரைச் சூரியன் என்றும், மற்றக் கிராமக் கைத்தொழில்களை கிரகங்களென்றும் கூறியிருக்கிறேன். விவசாயம் சூரிய மண்டலத்தின் ஒரு கிரகமே. அது சூரியனுகாது. ஏனெனில், விவசாயம் சுதந்திரமான தொழில் அல்ல. மக்களுக்கு நிலத்தின் மீது உரிமையில்லை. சர்க்கார் தனது சிறிய சிப்பந்திகளின் மூலமாக அதில் அதிகாரம் செலுத்துகிறது. மக்களுக்குத் தன்னம்பிக்கை இல்லை. தீய வழக்கத்தினல் நிலம் துண்டாடப்பட்டுக் கிடக்கிறது. நான் இன்னும் ஐம்பது வருடம் வாழ்ந்து, மக்களுக்கு நிலத்தில் பூரண உரிமை கிடைத்து விட்டால், சூரிய மண்டலத்தில் உழவுக்கு இடம் கொடுப்பதைப் பற்றி மீண்டும் சிந்திப்பேன். கதரையும் மற்றக் கைத்தொழில்களையும் போல் உழவினல் மட்டும் அறிவு வளர்ச்சியுண்டாக இயலாது என்று கூறமுடியும். காலஞ்சென்ற ஸ்ரீ மதுசூதனர் கூறியபடி, எருதுகளுடன் இடைவிடாது பழகுவதால் மனிதரும் மாடுகளைப் போலாகி விடுகின்றனர்.

இரண்டு தினங்களில் நான் உங்களுக்குக் கூறியதன் சாரம் இதுதான் : உங்களுக்கு உங்களுடைய லட்சியத்தில் நம்பிக்கையிருந்தால், அதன் பொருட்டு உங்கள் முழு சக்தியையும் நீங்கள் உபயோகிக்கவேண்டும். சத்தியமே ஜெயிக்கும் என்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. இது உலகமே ஒப்பும் ஓர் உண்மையாகும். வாழ்க்கையில் எங்கேயாவது இது வெற்றி பெறவில்லையென்று தோன்றினல், அதற்கு இந்தத் தத்துவம் பூரணமாயில்லாதிருப்பது காரணமல்ல. இதை அனுஷ்டிப்பவரின் பூரணமில்லாத் தன்மையே இதிலிருந்து வெளியாகிறது. இந்தத் தத்துவத்தை

நீங்கள் அறிந்துகொண்டீர்களானல், எந்த லட்சியமும் கைகூடு வதற்கு அவசியமான லட்சியத்தில் நம்பிக்கையைப் போலவே அதற்கு இன்றியமையாததான பற்றின்மையும் அஞ்சாமையும் உங்களை வந்து அடையும்.

# 7

# மகாத்மாவின் விளக்கம்-3

சகோதரர் பரதன் குமரப்பா தமது பிரயாணத்தினிடையில் கீழ்க்கண்டவாறு எனக்கு எழுதுகிருர் :

" 'காந்தியடிகள் என்ன இப்படிச் செய்துவிட்டார்! அவர் கதரைக் கொன்று விடுவார். அவருடைய போதனையினல் கதர் உடுத்தும் எம்மைப் போன்றவர்கள் என்ன செய்வது? எங்களுக்கு நூற்கத் தெரியாது; அதைக் கற்கவும் நாங்கள் விரும்பவில்லை. கதர் வாங்க நூல் தர வேண்டும் என்ற நிபந்தனை காந்தியடிகளின் கடுரத்தைக் காட்டுகிறது' என்றவாறெல்லாம் மக்கள் என்னிடம் கூறியவண்ண மிருக்கின்றனர்."

சகோதரர் பரதன் குமரப்பாவின் கடிதம் ஆங்கிலத்தில் இருக்கிறது. அதன் சாரத்தைத் தந்திருக்கிறேன்.

நூலின் இழையில் சுயராஜ்யம் இருக்கிறதென்ருல், நூற்க வேண்டுமென்ற கோரிக்கையைக் கடுமையானதென்று கருது வதற்குப் பதிலாக நூற்பதில் தமக்கு ருசியுண்டாக வேண்டு மென்று மக்கள் உணர வேண்டும். அகிம்சை எவ்வாறு வேலை செய்கிறதென்று தெரியாதவர்களே இதைக் கடுமை என்று கருதுவார்கள். நான் இந்தியாவுக்குத் திரும்பியதிலிருந்து, நாம் அகிம்சையின் மூலமாக சுயராஜ்யம் எய்த வேண்டுமானல், வேலை களுக்கிடையே நாம் நூற்கவும் வேண்டுமென்று கூவிக்கொண்டே யிருக்கிறேன். 'ராட்டையே நமது துப்பாக்கி, நூற் கண்டுகள் நமது தோட்டாக்கள், அத்தோட்டாக்களினல் நாம் சுயராஜ்யம் பெறுவோம்' என்று காலஞ்சென்ற மௌலானு முகம் மதலி கூறுவது வழக்கம். இன்றும் அவரது சொற்கள் முற்றிலும் உண்மையே. நகரங்களிலும், கிராமங்களிலும் கதரை யாவரும் உடுத்த வேண்டுமென்ருல், நூலுக்கே அதை விற்க வேண்டுமென்று நான் அனுபவத்திலிருந்து அறிந்தேன். ஒரு ரூபாய்க்கு ஓர் அணு நூலே இன்று கேட்கப்படுகிறது. இது ஆரம்பமாகும். ஜனங்களுக்குப் புரிந்து விட்டால், அவர்கள் கற்றுக்கொண்டார்களானல், அவர்களே நூற்ற நூலுக்குத்தான் கதர் கொடுக்கப்படும். பிடிவாதமாக நூல் கொடுத்தே கதர் வாங்குவோமென்று ஜனங்களே கூறுவார்கள் என்று எனக்கு நம்பிக்கை யிருக்கிறது. இவ்வாறன்றி, ஜனங்கள் ஆத்திரத் தினல் எப்படியோ நூலைக் கொடுத்து கதர் வாங்குவார்களானல், அகிம்சையினல் சுயராஜ்யம் பெறுவது அசாத்தியம் என்று

நான் கருதுகிறேன். சுயராஜ்யத்திற்காக முயற்சி செய்துதான் ஆகவேண்டும். யாசிப்பதால் சுயராஜ்யம் கிட்டாது. துப்பாக்கியினால் ஒருவகை சுயராஜ்யம் கிடைக்கலாம். ஆனால், அதுசுயராஜ்யமாகாது. எனக்கு அதில் ஆசையுமில்லை. குண்டுமாரி பொழிந்து சுயராஜ்யம் பெறுவது என்பதை நினைத்தாலே எனக்குத் தலை சுற்றுகிறது ; என் முன் ஆபத்துக்கள் மலைபோல் எழுகின்றன. குண்டினால் சுயராஜ்யம் பெற விரும்புவோருக்கல்ல இந்தக் கட்டுரை. அவர்கள் எதற்காகக் கதர் உடுத்துவது ? அவர்களுடைய அபிப்பிராயத்தில் கதர் உபயோகமற்றதாய் இருக்கலாம். ஆனால், கதரைக் கிராமத்தில் உற்பத்தி செய்ய வேண்டியதானாலும் அதைக் கிராமத்தவர் உடுத்தப்போவதில்லை. அவர்கள் கோடிக் கணக்கில் மில் துணியைத்தான் உடுத்துவார்கள் என்று இதைப் படிப்பவர்கள் நம்பினால், அங்கிலையில் கதரின் சக்தி குன்றிப்போகும். கதரினால் ஏழைகளுக்கு இரண்டு காசு கிடைக்கச் செய்வதால் மட்டும் நாம் திருப்தியடைய முடியாது. இம்மாதிரி நினைப்பதால் ஏழைகளின் கதர் அழிந்துபோய், அது ஒரு சில நகரவாசிகளின் உல்லாசத்திற்கான பொருளாகிவிடும். ஏனெனில், அவர்களே நூற்று நெய்து கொள்ளுவார்களா என்று ஓர் ஆட்சேபம் எழுந்திருக்கிறது. இக்கருத்து அறியாமையைக் காட்டுவதாகும்.

ஜனங்கள் உயிர் வாழச் சாப்பிடுகிறார்களே யன்றி உல்லாசத்திற்கு அல்ல. அவர்கள் உடை அணிவதும் உடலை மூடவே தவிர, உல்லாசத்துக்கல்ல. ஆகையால், வீட்டுக்கு வீடு அடுப்பு இருப்பதைப்போல் ராட்டையும் இருக்கவேண்டும். திடமுள்ள ஒவ்வொருவரும் நூற்க வேண்டும். அப்பொழுதுதான் யாவரும் கதர் உடுத்த முடியும் ; சுயராஜ்யம் பெறமுடியும். உண்மையில், அங்கவீனர்களுக்காகவும் பிறர் நூற்கவேண்டும். ஜனங்கள் விளையாடுவதற்காக விளையாட்டுக் கூடம் அமைக்கிறார்கள். அங்கே தம் உடல், பொருள் இரண்டையும் கெடுத்துக் கொள்ளுகிறார்கள். இதைப்போல் சுயராஜ்யக் கூடம் அல்லது ராட்டைக் கூடம் நிறுவி, மக்கள் அங்கு சென்று பஞ்சு வெட்டிப் பட்டை போடுவதும், நூற்பதும், நூலைத் தந்து துணி பெறுவதும், தகாதா ? விஷயம் என்னவெனில், மனம் இல்லாத பொழுது எதிர்வாதங்கள் பல தோன்றுகின்றன. இஷ்டமிருந்தாலோ அவ்வளவும் சாதகமான யுக்திகளே உதிக்கின்றன. தீவிரமான ஆசையுண்டானால், ஆட்டத்தை விடாததுபோல் ஜனங்கள் ராட்டையையும் விடமுடியாது. விளையாட்டிற்கு உதவும் ஆசை சுயராஜ்யத்திற்குப் பயன்படாதா ?

நூல் கொடுத்துக் கதர் வாங்க வேண்டும் என்பதற்கு எதிராகக் கூறப்படும் அசைக்க முடியாத யுக்தி என்னவென்றால், நகரவாசிகள் தாமே நூல் கொடுக்கத் தொடங்கினால், ஏழைகளின் கதர் அழிந்து விடுமென்பது; கதரின் மூலமாக நடைபெறும் சிறு வேலையும் நின்றுபோகும், கிராமத்

தவர் கதர் அணிந்திருப்பதைக் காணலாம் என்பது வீண் கனவாகவே முடியும் என்பது. நகர வாசிகள் சோம்பலினுலோ, கோபித்துக் கொண்டோ கதர் அணிவதை நிறுத்திவிட்டாலும், கூலி கிடைக்கவில்லையென்று கிராமத்தவர் நூற்பதையும் நெய்வதையும் நிறுத்திவிட்டாலும், அதனுல் நாட்டிற்கு என்ன பெருத்த நஷ்டம் வந்துவிடப் போகிறது? இவ்விதமாக அவர்களுடைய நூற்புத் தொழில் நின்ருல், அவர்கள் வேருெரு வேலை செய்து எப்படியோ தம் வயிற்றை நிரப்புவார்கள். இன்றுபோல் லட்சக்கணக்கானவர்கள் அப்படிச் செய்ய முடியுமேயல்லாது கோடிக்கணக்கானவர்கள் செய்ய இயலாது. இன்று பீடி சுற்றும் தொழில் செய்கிறவர்கள் நூற்பவர்களைப் போல் நான்கு பங்கும், அதற்கு அதிகமாகவும் கூலி பெறுகிருர்கள். மில்களில் வேலை செய்யும் தொழிலாளிகளில் பலர் பணக்காரர்களாகி விட்டனர். இன்று பட்டினியால் வாடுகிறவர்கள் இன்னும் அதிகப் பசியைச் சகித்துக்கொண்டு இறப்பார்கள், பணம் சம்பாதிக்கும் ஏழைகளும் அவர்கள் மீது சவாரி செய்வார்கள் என்பதே இதன் பொருள். பல மில்கள் உண்டாகி, நகரங்கள் வளர்ந்தால், இந்தியா முழுவதும் வளம் பெற முடியாது. கோடிக்கணக்கானவர்கள் பசியினுலும், அதிலிருந்து விளையும் பல வியாதிகளினுலும் இறந்துபோவார்கள். இதை எல்லா நகரவாசிகளும் மகிழ்ச்சிக்குரிய விஷயமென்று கருதினுல், நான் ஏதும் கூறுவதற்கில்லை. அந்நிலையில் இந்தியாவில் ஹிம்சையின் ஆட்சி நடைபெறும்; அகிம்சையும் சத்தியமும் இரா. அந்த நிலையில் கதருக்கு இடமே இராது. இருக்கவேண்டியதும் இல்லை என்று நான் ஒப்புக் கொள்ளுகிறேன். அப்பொழுது எல்லோரும் விரும்பியோ, விரும்பாமலோ ராணுவப் பயிற்சி பெற வேண்டியிருக்கும். ஆனுல், நான் கூறுவது பசியால் மடியும் கோடிக்கணக்கானவர்களைப் பற்றியாகும். அவர்கள் உயிர் வாழ வேண்டுமானுல், திடமாய் இருக்க வேண்டுமானுல், ராட்டையை முக்கியமாய்க் கருதி, விருப்பத்துடன் நூல் நூற்கவேண்டும். அகிம்சை ஆயுதத்தை மக்கள் கையில் நிர்ப்பந்தத்தினுல் வைக்கக் கூடாது. ஆகையால், நூல் தருவதென்று ஆரம்பித்திருக்கும் பழக்கத்தை நடத்துவதுடன் நில்லாமல், விருத்தியும் செய்யவேண்டும். மேலே கண்ட காரணங்களினுல் கதர் வஸ்திராலயங்களுக்கு வேலையில்லாது போய், கதர் உடுத்துவோரும் கதரை விட்டு விட்டால் அதை நான் சத்தியத்தின் வெற்றியென்றே கருதுவேன். ஏனெனில், அப்பொழுது மக்கள் உண்மையில், அகிம்சையில் நம்பிக்கை கொள்ள வில்லையென்றும், அறியாமையினுல் கதரை உடுத்திக் கொண்டு, அதனுல் சுயராஜ்யம் வந்துவிடுமென்று தம்மையே ஏமாற்றி வந்தார்கள் என்றும் நான் அறிந்து கொள்ளுவேன். இத்தகைய கதரினுல் சுயராஜ்யம் கிட்டாதென்று நான் உணருகையில் மக்கள் ஏன் அறியாதிருக்க விட வேண்டும்? சுயராஜ்யம் கிடைத்தாலும், மக்கள் பிறகு இத்தகைய கதரைக் களைந்தெறிந்து விடுவார்கள், அப்பொழுது "காந்தி

இறந்தபின் காந்தியிடமும், கதரிடமும் கொள்ளும் வெறுப்பில், வீடுகளிலிருந்து ராட்டைகளை எடுத்து உடைத்து, அந்த விறகினால் காந்தியை எரிப்பார்கள்'' என்று காலஞ்சென்ற சிந்தாமணி* கூறிய ஜோஸ்யமும் உண்மையாகிவிடும். கையால் நூற்ற நூலில் உண்மையில் அகிம்சை யில்லையேல், நான் உயிர் வாழும் பொழுதே, எனது தவறைத் திருத்திக்கொண்டு ராட்டைக்குச் செலவாகும் மரத்தை ஏன் மிச்சப்படுத்தக் கூடாது? ஆனால், அந்த ஜோஸ்யத்தை உண்மையென்று நான் மதிக்கவேயில்லை. இந்தியாவின் கோடிக்கணக்கான மக்கள் ஹிம்சையின் மூலமாக விடுதலை பெற முடியாதென்பது ஜனங்களுக்குத் தெரிந்து விட்டது. இவ்வுலகில் இந்தியாவின் ஸ்தானம் மிகவும் உயர்ந்தது; இப்பொழுதில்லையானாலும், இனி உயர்ந்ததாகும். அது அகிம்சையினாலேயே ஆக முடியும். இங்குள்ள கோடிக்கணக்கான மக்கள் அகிம்சையின் உபதேசத்தைப் பிரத்தியட்சமாகக் காட்டுவதெனில், அவர்கள் ராட்டையை நடுநாயகமாக மதித்தே நடக்கவேண்டும். நகரவாசிகளிடையே சுதந்திர ஆசை பெருகியிருப்பதால், இதை உணர்ந்து அகிம்சை மயமான சுயராஜ்யம் பெறுவதற்காக நன்கு நூற்பதும், கதர் அணிவதும் அவர்களது கடமையாகிறது.

* ஸ்ரீ சிந்தாமணி இந்திய மிதவாதத் தலைவர்களில் ஒருவர். மிகத் திறமைவாய்ந்த பத்திரிகையாளர். அலகாபாத் 'லீடர்' பத்திரிகையின் ஆசிரியராக இருந்து காலமானார்.

பகுதி பதினன்கு

# புதிய கொள்கை: கேள்விகள், விவாதம்

## 1

## கதரில் சோதனை

அகில இந்திய நூற்போர் சங்கத்தின் புதிய கொள்கை ஒரு தோல்வி அல்லவா என்று ஒரு நண்பர் விசாரித்தார்.

இதற்குக் காந்திஜி விளக்கியதாவது: "அகில இந்திய நூற்போர் சங்கத்தின் இப்போதைய கொள்கையைப் பற்றி முழுதும் தெரிந்து கொள்ளுவதற்கு அது கொண்டிருக்கும் லட்சியத்தைக் கவனிக்க வேண்டும். ஆரம்பக் கட்டங்களில் ஏழைகளுக்குக் கஷ்ட நிவாரணம் அளிப்பதுதான் முக்கியமாகக் கொள்ளப்பட்டிருந்தது. இதிலிருந்து படித்த வகுப்பினருக்கும் பாமர மக்களுக்கும் ஒரு ஜீவத் தொடர்பு ஏற்பட்டதோடு ராஜீய முக்கியத்துவத்தையும் பெற்றது. அந்த வழியில் மேற்கொண்டும் போக முடியவில்லை. உதாரணமாக, கூலியை மேற்கொண்டும் உயர்த்திக் கொடுக்க முடியவில்லை. அப்படிக் கூலியை உயர்த்திக் கொடுப்பதைக் கதரால் தாங்க முடியாது. இது வரையில் கதர் பாமர மக்களால் நூற்கப்பட்டு, நெய்யப்பட்டு வந்தது. இப்பொழுது இன்னும் பாமர மக்களினல்தான் அது செய்யப்பட்டு வர வேண்டும். ஆனல், அது அவர்கள் உபயோகத்திற்கு என்று செய்யப்பட வேண்டும். அகில இந்திய நூற்போர் சங்கத்தின் புதிய கொள்கை தோற்றுப் போய்விடவில்லை. மெதுவாக என்றுலும், விடாமல் முன்னேறிக்கொண்டு வருகிறது என்பதைக் கடைசியாகக் கிடைத்துள்ள புள்ளி விவரங்கள் காட்டுகின்றன.

"கஷ்டங்களும் இருக்கின்றன. நெய்வதில்தான் அதிகக் கஷ்டம் இருந்து வருகிறது. நெசவாளரிடம் போதுமான பிடிப்பை நாம் உண்டாக்கிக்கொள்ள வில்லை. இதிலும் தவறு என்னுடையதுதான். நூற்பதோடு எல்லோரும் நெய்யவும் கற்றுக்கொள்ள வேண்டும் என்று ஆரம்பத்திலிருந்து நான் வற்புறுத்திக் கொண்டு வந்திருந்தால் இன்று விஷயம் வேறு மாதிரியாக இருந்திருக்கும். அகில இந்திய நூற்போர் சங்கத்திடம் வேலை

செய்வதற்கு இருக்கும் மூலதனம் இருபத்தைந்து லட்சம். இந்தத் தொகைக்கு வர இருபத்தைந்து வருடங்களாயின. இந்தக் காலத்தினிடையே ஏழு கோடி ரூபாயை, முக்கியமாக இந்தியாவின் இருபதினுயிரம் கிராமங்களில், நான்கரை லட்சம் ஏழை நூற்போருக்கும் நெசவாளருக்கும் கூலியாகக் கொடுத் திருக்கிறது. இவ்வளவு குறைந்த மூலதனத்தைக் கொண்டு, இவ்வளவு பரந்த பகுதிகளில் இவ்வளவு பிரம்மாண்டமான காரியத்தை வேறு எதுவும் செய்திருப்பதாக எனக்குத் தெரிய வில்லை.''

''அது நல்லதுதான். ஆனல், இணையில்லாதது அன்று. சீனவின் இண்டஸ்கோ இதைவிட நன்ருகச் செய்திருக்கிறது'' என்ருர், நண்பர்.

இதற்குக் காந்திஜி கூறிய பதிலாவது: ''அப்படி அதை ஒப்பிடுவது சரியானது அல்ல. நிம் வேல்ஸின் புத்தகத்தை எனக்குச் சிபார்சு செய்தார்கள். நான் சிறை வைக்கப்பட் டிருந்தபோது அதைப் படித்துப் பார்த்தேன். இண்டஸ்கோ வின் நடவடிக்கைகள் அசாதாரணமான சந்தர்ப்பத்தின் கீழ், சீன தேசீய சர்க்காரின் ஆதரவுடன் நிறைவேற்றப்பட்டிருக் கின்றன. மேலும், அதில் உற்பத்தியானவை யாவும் யுத்த காலப் பொருள்கள். உதாரணம் காட்டுவதற்கு அவ்வளவு தூரம் நீங்கள் சீனவுக்குப் போயிருக்க வேண்டியதில்லை. தென்னிந்தி யாவில் கோழிக்கோடு மிஷன் செய்திருக்கும் வேலை இன்னும் அதிகப் பொருத்தமான உதாரணமாக இருந்திருக்கும். அவை ஒவ்வொன்றிலும் வேலை செய்யுமிடம் குறிப்பிட்ட ஒரு எல்லைக் குட்பட்டது. கதர் விஷயத்திலோ, அது இந்தியா முழுவதுக்கும் சேவை செய்ய முயன்று வருகிறது.''

''நல்ல கூலி கொடுத்து அதிகம் பேர் இந்த வேலையைச் செய்யும்படி நாம் கவர்ந்துவிட முடியாது. நாட்டில் பொதுவாக கூலி அளவு இப்பொழுதே அதிகமாக உயர்ந்திருக்கிறது.''

''எங்களுக்குத் தொழிலாளர் வேண்டியதில்லை.''

''அவர்கள் சொந்த உபயோகத்திற்குக் கதரைத் தயாரித் துக்கொள்ள வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள் என் கிறீர்களா?''

''ஆம்.''

''அதை எப்படி அனுபவ சாத்தியமானதாக ஆக்க முடியும்?'' என்று நண்பர் கேட்டார்.

இதற்கு மகாத்மா கூறிய பதிலாவது: ''சென்ற வருடம் ஸ்ரீ கேஸிக்கு* இதை விளக்கிச் சொன்னேன். என் திட்டத்தை

* வங்காள கவர்னர். இவர் ஆஸ்திரேலிய ராஜீய வாதி. பின்பு இவர் ஆஸ்திரேலி யாவின் வெளிநாட்டு மந்திரியாகவும் இருந்தார்.

அனுசரிப்பதன் மூலம் வங்காளத்தின் துணிப் பிரச்னையையே அல்லாமல் இந்தியாவின் துணிப் பிரச்னையையும் தீர்த்து விடலாம் என்று அவருக்குச் சொன்னேன். அந்தத் திட்டத்தின் சாரம் என்னவென்ருல், மக்களுக்குத் துணியைக் கொடுப் பதற்குப் பதிலாகத் துணியைத் தயாரித்துக் கொள்ளுவதற்கு அவசியமான கருவிகள், மூலப் பொருள்கள் ஆகியவைகளை அவர் களுக்குக் கொடுத்துத் தங்களுக்கு வேண்டிய துணிகளை அவர் களே தயாரித்துக் கொள்ளுவதற்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும். இத்திட்டம் அனுசரிக்கப்படும் பிரதேசத்தில் நியாய மான ஒரு கால நிர்ணயம் செய்து, அதற்குப் பிறகு அந்தப் பகுதியில் துணிப் பங்கீடு கொடுப்பதை நிறுத்திவிட வேண்டும். முதல் உலக யுத்த சமயத்தில் கிழக்கு ஆப்பிரிக்காவில், தங் களுக்கு வேண்டிய துணியைத் தாங்களே தயாரித்துக்கொள்ளும் படி நீக்ரோவரைத் தூண்டியதன் மூலம் அங்கே துணிப் பஞ்சம் சமாளிக்கப்பட்டது என்று அறிகிறேன். அங்கே அப்படி நடந் தாலும், நடக்காது போனுலும், இந்தியா தன்னுடைய நூற்கும், நெய்யும் பாரம்பரியத்தையும், அத்தொழில் வல்லுநரின் பாரம் பரியமான இணையற்ற ஆற்றலையும் முற்றிலும் பயன்படுத்திக் கொள்ளுமாயின், இந்நாடு தன்னுடைய கஷ்டத்தைச் சமாளித் துக்கொண்டு விடலாம். அதோடு மில்லில் உற்பத்தியாவதைத் தானே உபயோகித்துக் கொள்ளுவதை விட்டுவிட்டு, துணி உற் பத்தியில் அவ்வளவு செளகரியமான நிலைமையில் இல்லாத மற்ற நாடுகளுக்கு அதை அனுப்புவதன் மூலம் இப்பொழுது இருக்கும் நெருக்கடியைச் சமாளித்துக்கொள்ளுவதில் உலகிற்கு இந்தியா உதவி செய்யலாம்.''

''இவ்வளவு மோசமான துணிப் பஞ்சம் இருந்தும், அந்த இடத்தில் கதர் புகுந்துவிடத் தவறியே இருக்கிறது என்பது தான் உண்மையான நிலை. இந்நிலைமையை கதர் பயன்படுத்திக் கொண்டுவிடவில்லை'' என்று பிடிவாதமாகக் கூறினர், நண்பர்.

''அரசாங்கம் குறுக்கிட்டது'' என்று காந்திஜி பதில் சொன்னர். ''கதர் ஊழியர்களைக் கைது செய்தார்கள். இருப்பிலிருந்த கதரையெல்லாம் கொளுத்திவிட்டனர். கதர் உற்பத்திக்கு எல்லா வகையிலும் இடையூறுகளையெல்லாம் செய் தார்கள்'' என்ருர்.

''எதுவும் இல்லாத சூன்ய நிலை வளர்ந்துகொண்டே போகிறது. உற்பத்திச் செலவுகள் இப்பொழுதே உச்சத்தை எட்டிவிட்டன. என்ருலும், நாம் கொடுக்க முன்வரும் கூலி, வேலை இல்லாமலிருப்பவரைக் கூடக் கவருவதற்குப் போதுமான தாக இல்லை.''

''வேலையில்லாத இவர்கள் எங்கே இருக்கிருர்கள்?''

''இந்திய தேசியப் படையைச் சேர்ந்தவர்கள் ஒரு லட்சம் பேர் இருக்கிருர்கள்.''

“அவர்களுக்கு நான் ஒரு யோசனையைக் கூறினேன். அதற்கு அவர்கள் உடன்படுவதாக இன்னும் தெரியவில்லை. குதிரையைத் தண்ணீர்த் தொட்டிக்குக் கொண்டு போகத்தான் முடியுமேயன்றி அது தண்ணீரைக் குடிக்கும்படியும் உங்களால் செய்துவிட முடியாது.”

“அரசாங்கம் ஒரு திட்டத்தைக் கொண்டு வரக் கூடாதா?”

“சென்னையில் செய்யப்பட்டிருக்கிறது. அது பரிசோதனையில் இருந்து வருகிறது. மேலிருந்து எதையும் திணித்துவிட முடியாது. எல்லாவற்றையும் கீழே இருந்துதான் வேலை செய்தாக வேண்டும். அதை அமுல் நடத்துகிறவர்களிடம் நம்பிக்கையும், உறுதியும், சேவா உணர்ச்சியும் இருக்க வேண்டும். அரசாங்கங்கள் உதவி செய்யலாம். ஸ்ரீ கேஸியிடம் நான் சொன்னது போல, என்னிடம் விட்டால் என் திட்டத்தின்படி வேலை செய்ய நான் தயாராக இருக்கிறேன். அவசியமான சௌகரியங்களை அரசாங்கம் செய்து கொடுக்கட்டும். நான் சொன்னபடி செய்ய இன்னும் தயாராக இருக்கிறேன்.”

நண்பர் குறுக்கிட்டுச் சொன்னதாவது: “இருக்கும் ஆபத்து என்னவென்றால், உங்கள் திட்டத்தில் கண்டபடி ஒரு பகுதிக்கு ஜவுளியை அனுப்புவதை நிறுத்திவிட்டால், அது இப்பொழுது இருக்கும் அதிருப்தியை இன்னும் அதிகமாக்கிக் கொந்தளிப்பு ஏற்படும்படியும் செய்துவிடும். எந்தக் கஷ்டத்தையும் பயன் படுத்திக்கொண்டு அதிருப்தியை அதிகரித்துவிடுவதில் குதிக்கச் சில சக்திகள் தயாராகக் காத்துக்கொண்டிருக்கின்றன. பம்பாயில் சிலர் மதுவிலக்கை ‘அட்டூழியம்’ என்றதைப் போல, ஜவுளி போவதில் தடை விதிப்பதையும் ‘அட்டூழியம்’ என்று அவர்கள் சொல்லவும் கூடும். அது போன்ற கலவரத்தை நாம் எப்படி எண்ணவோ, வருவித்துக் கொள்ளவோ முடியும்? பிரச்னைக்கு இது ஆக்கமான வழி அன்று. கட்டாயப்படுத்துவதாக அது ஆகும்.”

“கட்டாயப்படுத்துவது என்பது எங்கிருக்கிறது?” என்று காந்திஜி கேட்டார். “இப்பொழுது இருக்கிறபடி, எல்லோருக்கும் கிடைப்பதற்குப் போதுமான துணி இல்லை. வினியோகமாவதற்குக் கிடைக்கும் துணி, தேவைக்குக் குறைவாக இருப்பதால் பங்கீடு செய்ய வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. இருக்கும் பிரச்னை, புத்திசாலித்தனமாக வினியோகம் செய்ய வேண்டும் என்பது ஒன்றுதான். கொஞ்ச காலத்திற்கு வெளியிலிருந்து துணி வரும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. அமெரிக்காவும் இங்கிலாந்தும் தங்கள் துணி உற்பத்தியை அதிகரித்துக்கொள்ளுவதற்காகத் தீவிரமான முயற்சிகளைச் செய்து வருகின்றன. ஆனால், அவை உற்பத்தி செய்யும் துணியெல்லாம் அவர்களுக்கே வேண்டியிருக்கிறது. நமது ஜவுளி உற்பத்தித் தொழிலைப் பொதுச் சொத்தாக்கி, இரண்டு ஷிப்டு முறையில் அதை வேலை

செய்வோமாயின், ஒரு வேளை துணிப் பிரச்னையை நம்மால் தீர்க்க முடியலாம். ஆனால், பாமர மக்களின் வறுமையை அதனால் தீர்த்துவிட முடியாது. அப்பொழுது கதரின் விஷயத்தை நான் வற்புறுத்த இயலாது. இது கதருக்கு முக்கியமில்லை என்பதனால் அல்ல, பிறர் ஒப்புக்கொள்ளும்படி செய்ய என்னால் முடியாது என்பதனால்தான்'' என்றார்.

''நான் சொல்லுவது அதுவல்ல'' என்றார், நண்பர். அவர் மேலும் கூறியதாவது: ''அரசாங்கம் மேற்கொள்ளும் காரியங்களில் எல்லாம் கட்டாயப்படுத்துவது என்ற அம்சமும் இருக்கிறது. வரி, பாதுகாப்புத் தீர்வை, எக்ஸைஸ் வரி இவைகளெல்லாமே மறைவான வகையில் கட்டாயப்படுத்துவதுதான். தவறாகவோ, மிகையாகவோ அது உபயோகிக்கப்படும்போது, அது தீமையானதாகிறது. அரசாங்கம் கட்டாயப்படுத்துவதன் மூலம், அடிப்படையிலேயே சரியானதாக இல்லாத, நிலையானதாகாத பொருளாதார நிலைமையை உண்டாக்க முயற்சி செய்யப்படுமானால், அது ஒரு நாளைக்குச் சிதறுண்டு சுற்றிலும் நாசத்தைப் பரப்பிவிடும் அபாயம் இருக்கிறது. இப்பொழுது இருந்து வரும் முறைப்படி கதரை உற்பத்தி செய்வதற்கு இருக்கும் ஏற்பாடு அத்தகைய ரகத்திற்கு ஓர் உதாரணம் அல்ல என்றால், மாறுபட்டிருக்கும் நிலைமைக்கு ஒத்தவாறு, அனுபவ முறைக்கு ஏற்ற வகையில், தக்க ஏற்பாடுகளைக் கொண்டு வெறும் தத்துவமாக இருப்பதை மாற்ற வேண்டியது அவசியம் அல்லவா என்று நான் ஆச்சரியப்படுகிறேன். உதாரணமாகக் காஷ்மீரில் தயாரிக்கப்படும் கம்பளித் துணிகள் சொந்த உபயோகத்திற்காக அல்ல. காஷ்மீருக்கு வெளியில் வாங்குபவர்களின் விருப்பத்திற்கு ஏற்றபடி தயாரித்து அனுப்புகிறார்கள். அவைகளை எல்லோரும் அதிகமாக விரும்பி வாங்குகிறார்கள். இப்பொழுது நாம் யந்திரத்தில் பஞ்சை அடிப்பதைப் புகுத்திவிடுவோமாயின், எல்லாப் போட்டியையும் அவை எதிர்த்து நிற்க முடியும். ஆனால், அடிப்படையான கதரின் கொள்கைக்கு அது விரோதமானதாக இருக்கும். இதில் ஒரு சமரசமான ஏற்பாட்டைச் செய்யக்கூடாதா என்பதையே நான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். குடிசைத் தொழில்களை மனித சக்தியைக் கொண்டு மாத்திரமே நடத்திக்கொண்டு போவதாயிருந்தால், இந்த யந்திர யுகத்தில் அவை நிலைத்து இருக்கும் என்பதற்கான வாய்ப்பு இல்லை. பொருளாதாரப் போக்குகளைப் பயன்படுத்திக்கொள்ள நாம் முயற்சி செய்யலாம்; அவற்றுடன் நாம் மோதிக்கொண்டு விடாமலும் இருக்கலாம். உதாரணமாக, மலிவான மின்சார சக்தியின் உதவியைக்கொண்டு குடிசைத் தொழில்களை நாம் நடத்தி வருவதாயின், அவை தமது அவசியமான தன்மைகளை இழந்துவிடாமலேயே நிலை பெற்று நிற்க முடியும். நாம் விரும்புவதெல்லாம், உற்பத்தி, பரவல் முறையில் இருக்க வேண்டும் என்பதுதான். பாசனத் திட்டங்களுக்கு உதவியாக நீரைக் கொண்டு மலிவான மின்சாரத்தை அபிவிருத்தி செய்துகொள்ளுவதற்கும் நம்மிடம் திட்டம் இருக்

கலாம். இவை ஆறு முதல் பத்து வருடங்களுக்குள் அமுலுக்கு வந்துவிடும். அப்பொழுது, ஒவ்வொரு கிராமத்திற்கும் மின்சார சக்தியைக் கொண்டுபோய் விடுவது சாத்தியமாகும். அத்தகைய சந்தர்ப்பங்களில் இப்பொழுது இருக்கும் முறையில் கதர் வேலையை நாம் செய்துகொண்டிருக்க முடியுமா? சாதாரணமாகச் சொன்னுல், தேவைக்கு ஏற்றபடி உற்பத்தியும் இருக்க வேண்டும். ஆனல், கதரை நிரந்தரமான அடிப்படையில் அமைக்காமல், இயற்கையல்லாத கட்டுப்பாடுகளின் மூலம் அதை முடமாக்கிக் கொண்டு வருகிறோம். இதனல், ஏராளமான ஊழல்களும், யோக்கியமில்லாத காரியங்களும் உள்ளே புகுந்துவிட்டன. ஒரே நூல் கள்ள நாணயமாகத் திரும்பத் திரும்பக் கதர்க் கடைகளில் கொடுக்கப்படுகிறது. கதர், அதன் பொருளாதார அம்சம் ஒரு புறமிருக்க, கலாசார, ராஜீய முக்கியத்துவத்தையும் பெற்றிருக்கிறது; தங்களுடைய ஒரே மாதிரி உடையாகக் கதரைக் கட்டிக் கொள்ளுவதில் மக்கள் ஆர்வத்துடன் இருக்கிருர்கள். ஆஸ்பத்திரிகள், தங்களுக்கு வேண்டிய துணிக்குக் கதரையே வைத்துக் கொள்ள விரும்பும். இந்திய தேசீய ராணுவத்தைச் சேர்ந்தவர்கள் கதர் உடை தரிக்கவே விரும்புவார்கள். ஆனல், இன்ரூே புதிய கொள்கையின் காரணமாகக் கதர் எங்குமே கிடைப்பதில்லை. நயவஞ்சகமும் அயோக்கியத்தனமுமே தழைப்பதாகத் தோன்றுகிறது.''

இதற்குக் காந்திஜி கூறிய பதிலாவது: ''நூற்க முடியாதவர்கள், நூற்க விரும்பாதவர்கள் எல்லோரும் இந்திய அல்லது வெளிநாட்டு மில் துணிக்கு இஷ்டம் போல் போகலாம். நான் என் கண்களைத் திறந்துகொண்டுதான் நடந்துகொண்டிருக்கிறேன். உற்பத்தியைவிடத் தேவை அதிகமாகிவிட்டதோ, இதற்கு மாருனதாக நடந்ததோ, கதரின் சரித்திரத்தில் இது முதல் தடவை அல்ல. ஒவ்வொரு தடவையும் தீரமான முறைகள் அனுசரிக்கப்பட்டு நெருக்கடி சமாளிக்கப்பட்டிருக்கிறது. இத்தடவை அதற்கு மாருன பலனை நான் எதிர்பார்க்கவில்லை, சரியான பரிகாரத்தை அனுசரிப்பதற்கு நமக்கு நம்பிக்கையும், பொறுமையும், தைரியமும்தான் வேண்டும். இப்பொழுது நான் அதைத் தான் செய்துகொண்டிருக்கிறேன். இம்முறையில் கதர் செத்து விடுவதாக இருந்தாலும், அந்த அபாயத்தை ஏற்றுக்கொள்ளுவதற்கும் நான் தயாராகத்தான் இருக்க வேண்டும்.''

''அது, இதிலுள்ள உண்மையை ஒப்புக்கொள்ளுவதாகும். அது மக்களோடு மூழ்கிவிடாது. பொதுஜனத் தேவைக்கு ஏற்றபடி நம் கொள்கையை நாம் அமைத்துக்கொள்ள வேண்டும்'' என்ருர், நண்பர்.

காந்திஜி கூறியதாவது: ''நான் அதைச் செய்ய முடியாது. தவறைக் கண்டு பிடித்ததும் அதை நான் ஒழுங்குபடுத்த வேண்டும். அதற்குக் காலம் ஆகலாம். ஆகையால், கதரைப் பற்றிய

விதியைக் காங்கிரஸின் அமைப்பு விதிகளிலிருந்து எடுத்துவிடுமாறு யோசனை கூறியிருக்கிறேன். அஸ்ஸாம் காங்கிரஸில் அதை நீக்கிவிட முயன்று வெற்றி பெறாதது எனக்குத் திருப்தியளித்தது. இப்பொழுது அதை ரத்து செய்து விடுவதை உற்சாகப்படுத்தி வரவேற்பேன். கதருக்குச் சொந்தமான மதிப்பு இருக்குமாயின், காங்கிரஸ் அதை நீக்கிவிட்ட பிறகும் அது உயிருடன் இருக்கும். அது உயிரோடில்லை என்றால் அது அழிந்து போய்விட வேண்டியதுதான்.''

''என்றாலும், அது நமது அடிப்படைப் பிரச்னையைத் தீர்த்து விடாது''

"விவாதத்தின் மூலம் உங்களுக்குத் திருப்தியளித்துவிட முடியாது என்று அஞ்சுகிறேன். யார் செய்வது சரி என்பதைக் காலம் ஒன்றுதான் காட்ட முடியும்."

''நெய்வதில்தான் கஷ்டம் இருக்கிறது என்று நீங்கள் கூறினீர்கள்" என்றார், திரும்பவும் நண்பர். ''மில் நூலைக் கொண்டு நெய்கிற நெசவாளர் இன்று தினத்திற்கு ரூ. 3 சம்பாதிக்கிறார். நூற்பவரும், கையினால் நூற்ற நூலை நெய்பவரும் குறைந்த கூலிக்கு வேலை செய்யமாட்டார்கள்'' என்றார்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: ''அப்படி அவர்கள் செய்ய வேண்டும் என்று நான் விரும்பவில்லை. இதனால்தான் கையினால் நூற்கும் நூலை இரட்டிப்பாக்க வேண்டும் என்று சிபாரிசு செய்திருக்கிறேன். மில் நூலையே அவர் நம்பி இருப்பதானால் அவர் நாசமடைந்துவிடுவார். மில் சொந்தக்காரர்கள் பரோபகார எண்ணமுள்ளவர்கள் அல்ல. கைத்தறி நெசவாளர் தங்களுக்குப் போட்டியாக ஆகிவிடும் போது, இவருக்கு மில்காரர்கள் நூல் கொடுத்துக்கொண்டே போகமாட்டார்கள். ஆனால், கையினால் நூற்ற நூலை இரட்டிப்பாக்கிக்கொண்டு வேலை செய்துவரும் நெசவாளர், மில் நூல் நெய்பவரைவிட முடிவில் சௌக்கியமாக இருப்பார். ஏனெனில், கையினால் நூற்ற நூலைக் கொண்டு நெய்பவருக்கு வருடம் முழுதுக்கும் விடாமல் வேலை இருந்து வரும்."

''ஜவுளி உற்பத்தித் தொழிலின் அடிப்படையே முற்றிலும் மாற்றப்பட்டிருக்கிறது'' என்றார், நண்பர். ''நிலக்கரி, காற்று, நீர் ஆகியவைகளிலிருந்து போலி நார்களைத் தயாரித்து வருகின்கின்றனர். நெசவுக்குப் பதிலாக ஒருவகையான மரச் சத்தான ரெஸின்களைக் கொண்டு பருத்தி இழைகளைப் பக்குவப்படுத்தி வருகிறார்கள். நமது கதர்க் கொள்கை, சரியான நடைமுறை அடிப்படையில் அமைந்து நிலைமைக்குப் பொருத்தமாக இல்லாது போனால், கதர் தோல்வியடைந்தே தீரும்'' என்றார்.

"தோல்வியடைந்து போகலாம். ஆனால், அதற்காகச் செலவழித்த உழைப்பு வீண் போகாது'' என்றார், காந்திஜி.

"எந்த நல்ல முயற்சியும் வீண் போவதில்லை" என்ருர், நண்பர். "ஆனால், இப்பொழுது நமது கதர்க் கொள்கையில் செய்யப்பட்டிருக்கும் மாறுதல், அநேக கதர் அன்பர்களையும் ஊழியர்களையும் தொடர்ந்து திகைக்க வைத்து வருகிறது. அவர்கள் அடைந்திருக்கும் திகைப்பை நீக்கியாக வேண்டும். இவர்களில் சிலர், அத்தாட்சி பெருத கதரைக் கட்ட வேண்டியதுதான் என்றும் பேசுகிருர்கள்" என்ருர்.

"அவர்களுக்குக் கதரில் நம்பிக்கையில்லையென்ருல், அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் திகைப்பு நீங்காது" என்ருர் காந்திஜி.

"கதருக்குக் கிராக்கி இருந்து கொண்டிருக்கும் வரையில், கதரின் விலைகளை ஏற்ற வேண்டியிருந்தாலும், தேவையைப் பூர்த்தி செய்துதான் வரவேண்டும்."

"அப்படியானல், கதர் ஆடம்பரத்திற்கான பொருளாகிவிடும். அத்தகைய காரியத்திற்காக ஒரு பெரிய ஸ்தாபனத்தை உபயோகிப்பது நியாயமாகாது. நமது கதர்க் கொள்கையில் அடிப்படையான தவறு ஏதாவது இருக்குமாயின், அதைக் கண்டுபிடித்து அதற்குப் பரிகாரம் தேட வேண்டியதுதான் நமது கடமை. அப்படிச் செய்யும் போது, கதர் அடிப்படையிலேயே சரியான காரியம் அல்ல என்று காணப்படுமானல், அதை மரியாதையோடு புதைத்துவிட வேண்டியதுதான். இன்று கதர் சோதனையில் இருந்து வருகிறது. அதற்கே உரியதான பலத்தைக் கொண்டு அச் சோதனையிலிருந்து அது வெளியேறி வரவேண்டும். அப்படிப் பட்ட பலம் அதற்கு இல்லையென்ருல் அதற்காகச் செலவிட்ட உழைப்பெல்லாம் வீண்தான்" என்ருர், காந்திஜி.

"ஒரு சரக்குக்கு எங்கும் நியாயமான கிராக்கி இருக்கும் போது, அந்தச் சரக்கு போதுமான அளவு இல்லை என்ருல், இந்தப் பொருளாதாரத்தில் சம நிலை ஏற்படும்படி செய்வதற்கான வழிதுறைகளை அனுசரிப்பது சாத்தியமானதாக இருந்து சம்பந்தப்பட்ட கிராக்கியைத் திருப்தி செய்வதாக இருக்க வேண்டும். எனக்குத் தெரிந்ததெல்லாம் இதுதான்" என்ருர், நண்பர்.

காந்திஜி கூறிய பதிலாவது: "இதிலிருக்கும் ஆபத்தைக் குறித்து நான் உங்களுக்கு எச்சரிக்கை செய்யத்தான் முடியும். நூற்பதற்கு யந்திரத்தில் தயாரான பஞ்சுப் பட்டைகளை நாம் உபயோகித்து வந்த காலம் ஒன்று உண்டு. மில் நூலையும் கூட நாம் உபயோகித்திருக்கலாம். ஏனெனில், மில்லில் பட்டை போடுவது நூற்காத நூல் என்பதைத் தவிர வேறு என்ன? அந்த வழக்கத்திலிருந்து மாறிக் கையினல் பஞ்சரைத்துப் பட்டை போட்டுக்கொள்ளுவதைக் கொண்டு வராமல் இருந்திருந்தால், இதற்குள் கதரே மறைந்து போயிருக்கும். காலஞ் சென்ற ஸ்ரீ கங்காராம் என்னிடம் வருமாறு கூறினர்: "ராட்டையை

மாத்திரம் கைவிட்டுவிடுங்கள்; கைத்தறியிலேயே முழு கவனத்தையும் செலுத்துங்கள்; நானும் உங்களுடன் இருப்பேன்." கைத்தறி நெசவுத் தொழிலின் தொண்டையை முக்கியமாக நெறிப்பதாக இருப்பது, மில் நூலை உபயோகிப்பதுதான் என்பதை இன்று நாம் அறிகிறோம். இதை அன்று அவர் உணரவில்லை. கையினால் நூற்ற நூல் ஒன்றில்தான் கைத்தறி நெசவுக்கு விமோசனம் இருக்கிறது. ராட்டை போய்விட்டதென்றால், கைத்தறியும் அதோடு போய்விட வேண்டியதுதான். கோடிக் கணக்கானவர்களுக்குப் பயனுள்ளதான வேலையைக் கதர் அளிக்கவில்லையென்றால், என் கண்ணுக்குக் கதர் எந்த மதிப்பும் உள்ளதாகத் தோன்றாது. கதர்க் கொள்கையில் செய்துகொள்ள வேண்டும் என்று சொல்லப்படும் 'சமரசங்கள்' எல்லாம், கதரின் முக்கியமான தன்மையைப் போக்கிவிடுவனவாகவே இருக்கின்றன. காலஞ் சென்ற ஸர் பாஸல்பாயை முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் நான் பார்த்தபோது, முடிவில் கதர் தோல்வியடையத்தான் நேரும் என்று ஜோசியம் சொன்னார். அவர் போய்விட்டார். ஆனால், கதர் இருந்துகொண்டிருக்கிறது. அதில் புதிய சகாப்தம் ஏற்படுவதாக இருக்கக்கூடும். அதில் கதர் ஓர் அராஜகம். அப்படி நான் உணர மாத்திரம் இல்லை."

—'ஹரிஜன்' – 25-8-1946

## 2

# கதர் ஸ்தாபனத்தைப் பரவலாக்குவது

சர்க்கா சங்கத்தின் முந்திய கூட்டத்தில் விவாதிக்கப்பட்ட விஷயம், சர்க்கா சங்கத்தின் அதிகாரத்தை உள்ளூர்க் கதர் ஸ்தாபனங்களுக்கு மாற்றிவிடுவதைப் பற்றியது. ஒவ்வோர் இடத்திலும் இருக்கும் கதர் ஸ்தாபனமும், தலைமை ஸ்தாபனத்திலிருந்து சுயேச்சையானதாக இருக்க வேண்டும். ஒவ்வொன்றுக்கும் கதர்க் கொள்கையை நிர்ணயித்துக்கொள்ளுவதை உள்ளூர் ஸ்தாபனங்களுக்கே விட்டுவிடவேண்டும் என்று அக் கூட்டத்தில் யோசனை கூறப்பட்டது. இன்னது செய்வது என்பதை முடிவு செய்து கொள்ளுவதிலும், பொறுப்பிலும் அதிக அளவு பரவலானதாக்கி விடுவது என்பதைக் காந்திஜி முற்றிலும் ஆதரித்தார். ஆனால், கதர் ஊழியர்களுக்குப் பதிலாக, பயிற்சி பெறாத ஆண்களையும் பெண்களையும் கொண்ட உள்ளூர்க் கமிட்டிகளைச் சிருஷ்டித்து விடுவது என்பதைக் காந்திஜி எதிர்த்தார். ஏனெனில், கதர் வேலை ஒழுங்காக நடப்பதற்கு அதன் நுட்பம் தெரிந்தவர்களும் நிபுணர்களுமான ஒரு கோஷ்டியினர் தேவைப்படுவதோடு வர்த்தகத் திறமையுள்ளவர்களும் சேவா உணர்ச்சியுள்ளவர்களும் வேண்டும்.

சொந்த ஆசைகளுக்கோ, அதிகார ராஜீயங்களுக்கோ அதில் இடமே இல்லை. அதிகார ராஜீயம், காங்கிரஸில் ஒரு விஷமாகப் பரவிவிட்டது. காங்கிரஸ் ஸ்தாபனத்திலுள்ள ஊழல்களைப் போக்குவதற்கு, ஊழியர்களைக்கொண்ட ஸ்தாபனமாக அதை மாற்றிவிட வேண்டும் என்று காந்திஜி யோசனை கூறியிருக்கிறார். கதர் வேலையில் ஜனநாயகத் தத்துவத்தின் தன்மையைப் புகுத்திவிடுவது கதரைக் கொன்றுவிடுவதாகும். காங்கிரஸ் இருந்த வகையில் சர்க்கா சங்கம் ஒரு ஜனநாயக ஸ்தாபனம் அன்று. ஜனநாயகத்தைக் கொண்டு வளர்ப்பதற்காகக் காங்கிரஸ் உண்டாக்கிய ஒரு ஸ்தாபனமே அது. இங்கிலாந்து பாங்கின் நிர்வாகத்திற்கு டைரக்டர்கள் இருப்பதைப் போன்று, முதலிலும் முடிவிலும் அது ஒரு வர்த்தக ஸ்தாபனம். உண்மையான தான லாப ஆசை இல்லாத ஒரு நோக்கத்தை மாத்திரம் அது கொண்டிருந்தது. ஒரு ஜனநாயக ஸ்தாபனத்தின் ஒரு வர்த்தக ஸ்தாபனம், ஜனநாயக வோட்டு முறைக்குக் கட்டுப்பட்டதாக இருக்க முடியாது.

“கிராமங்களில் பிரிந்திருக்க நாம் விரும்புகிறோம்.” என்றார், காந்திஜி. விடாமல் தூண்டுவதும் சேவையும் அளிப்பதைவிட வேறு எந்த அதிகாரத்திற்கும் கதர் ஊழியர் உபயோககரமானவராக இருக்க முடியாது. வேறு எதையும் கொண்டவராகத் தம்மை ஆக்கிக்கொள்ள அவர் முற்பட்ட மாத்திரத்தில் அவர் கதரைக் கொன்று விடுகிறார்” என்றார்.

“கதர் எல்லோரிடமும் பரவும்படி செய்வதற்கு ஒவ்வொருவருடைய ஒத்துழைப்பையும் பெறுவது உங்களுக்குத் தேவையாக இருக்குமல்லவா?” என்று முடிவாகக் கேட்டார், ஒரு நண்பர்.

இதற்குப் பதிலளித்த மகாத்மா, கதர் ஊழியர்கள் மக்களின் முழு சேவகர்களாக இருக்க வேண்டும் என்று எதிர் பார்க்கப்படுவதால், அவர்களுக்கு மதிப்பும் ஏதாவது இருக்குமானால், பொதுஜன அபிப்பிராயம் தங்களுக்குச் சாதகமானதாக இருக்கும்படி அவர்கள் செய்துகொண்டு விடலாம் என்றார். அங்கத்தினர்களைக்கொண்ட ஒரு கமிட்டி இருக்க வேண்டிய அவசியம் இல்லை என்றும், அக்கமிட்டி உதவியாக இருப்பதற்குப் பதிலாக இடையூறாகத்தான் இருக்கும் என்றும் சொன்னார். ஆனால், ஆதரவாளரைச் சேவை கிரகிக்குமானால், அந்த ஆதரவாளர்கள் பலம் பொருந்திய உதவியாக இருப்பார்கள் என்றார்.

“கதர் பரவல் முறையில் கொண்டு வரப்பட்டுவிட்ட பிறகு, அகில இந்திய நூற்போர் சங்கத்தின் அதிகாரம் எதுவாக இருக்கும்?” என்பது மற்றோர் கேள்வி.

இதற்குக் காந்திஜி உடனே பதில் சொன்னார். சங்கத்தின் அதிகாரம் வெறும் ஒழுக்கத்தைப் பற்றியதாக மாத்திரமே இருக்கும் என்றும், எனவே அது இன்றிருப்பதைவிட அதிக சக்தி வாய்ந்ததாக இருக்கும் என்றும் கூறினார். பணத்திற்கும் பொருள்

களுக்கும் ஏற்பாடு செய்வது அதன் வேலையாக இராது ; ஆனல், ஒழுக்க ரீதியை உண்டாக்கிக் கதர் வேலை அமைதியாக நடந்து கொண்டு போகும்படி செய்வதுதான் அதன் வழியாக இருக்கும் என்ருர். கதர் ஊழியர்கள் அதன் பெயரை உபயோகித்துக்கொள்ளச் சங்கம் அனுமதிக்கும். ஆனல், அவர்கள் மீது தன் இஷ்டத்தைத் திணிக்க அது முற்படாது. அதன் கொள்கையை ஒப்புக் கொள்ளுகிறவர்கள் எல்லோருக்கும் அதன் ஒழுக்க அதிகாரம் கிடைக்கும். எந்தப் பகுதிக்காவது தேவை இருந்து, சுய அதிகாரம் பெறுவதற்கு அது தகுதியானது என்று கருதப் படுமானல், அளிக்கப்படும் சொத்தைச் சரியான வகையில் பயன்படுத்துவதாக உத்தரவாதம் அளித்து குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு அதைத் திருப்பிக் கொடுத்துவிடவும் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளுமானல், சங்கத்தின் சொத்துக்களும் எந்தப் பகுதிக்கும் கிடைக்கும். பரிசோதிக்கச் சர்க்கா சங்கத்திற்கு உரிமை உண்டு. ஆனல், சுய அதிகாரமுள்ள பகுதியின் இஷ்டத்தின் பேரில்தான் அந்தப் பரிசோதனையும் என்ருர் காந்திஜி.

—' ஹரிஜன் '–27 - 10 - 1946

## 3

# சுயதேவைப் பூர்த்தியும் கூட்டுறவும்

கே : கையினல் நூற்பதற்குச் சாதகமாகக் கூறப்படும் ஒரு காரணம், சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்ளுபவராக ஒருவரை அது செய்கிறது என்பது. மற்றவர்களை எதிர் பார்த்து வாழ வேண்டியவராக இருக்கும் ஒருவரைவிட, சுய தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளுபவராக இருப்பவர், சமூகத்திற்கு நன்ருகவும் அதிகமாகவும் சேவை செய்ய முடியுமா? சுயதேவைப் பூர்த்திக்கும் சமூக சேவைக்கும் தொடர்பு இருப்பதாகவோ, ஒருவர் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகச் சுயதேவைப் பூர்த்தி செய்து கொள்ளுபவராக இருக்கிருரோ அவ்வளவுக்குச் சமூகத்திற்குச் சேவை செய்யும் சக்தி அவருக்கு அதிகமாக இருக்கும் என்ருே நீங்கள் கூறுகிறீர்களா ?

ப : இந்தக் கேள்விக்குத் திருப்திகரமாகப் பதில் அளிப்பதற்கு அகிம்சை மனேபாவத்தை நாம் மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். ஏனெனில், நான் கருதும் ஒழுங்கிற்குச் சத்தியமும் அகிம்சையும்தான் அடிப்படை. சமூகத்திற்கு நாம் சுமையாக இருக்கக்கூடாது என்பது முதற் கடமை. அதாவது, நாம் நம்மைக் கொண்டே வாழ்பவர்களாக இருக்க வேண்டும். இந்தக் கருத்தோடு பார்த்தால், சுய தேவைப் பூர்த்தி ஒரு சேவையாகிறது. நம் தேவையை

நாமே பூர்த்தி செய்துகொண்டு விட்டபிறகு, ஒழிந்த நேரத்தை மற்றவர்களின் சேவைக்காக நாம் உபயோகிக்க லாம். எல்லோருமே சுயதேவையைப் பூர்த்தி செய்து கொண்டு விடுபவர்களாகி விடுவோமானல், யாரும் கஷ் டத்தில் இருக்கமாட்டார்கள். அத்தகைய நிலைமை இருக் கும்போது, ஒருவருக்குச் சேவை செய்யும் அவசியமே இருக் காது. நாம் இன்னும் அந்த நிலையை அடைந்து விடவில்லை. அதனுல்தான் சமூக சேவையைக் குறித்து எண்ண வேண்டி யிருக்கிறது. சுயதேவைப் பூர்த்தியில் நாம் பூரணமாக வெற்றி பெற்றுவிடுவதாக இருந்தாலும், மனிதன் சமூகத் தோடு வாழுபவனுக இருப்பதால், ஒன்றில்லாவிடில் இன்னு மொரு வகையில் சேவையை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டியே வரும். அதாவது, மனிதன் சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்ளுபவனுக இருப்பதைப் போன்றே ஒருவருக்கொருவர் எதிர்பார்த்து வாழ வேண்டியவனுகவும் இருக்கிறுன். சமூகத்தைச் சரியான நிலையில் வைத்திருப்ப தற்காக ஒருவரையொருவர் நம்பி வாழ்வது அவசியமாகும் போது, அது நம்பி வாழ்வதாக ஆவதில்லை. ஆனுல், அது கூட்டுறவாக ஆகிறது. கூட்டுறவில் இருக்கும் இனிமை யெல்லாம் இதுதான். கூட்டுறவில் ஈடுபடுகிறவர்களில், பலவீனர்கள் என்பவரோ, பலமுள்ளவர்கள் என்பவரோ யாரும் இல்லை. ஒவ்வொருவரும் இன்னெருவருக்குச் சமமானவர் ஆகிருர் பிறரை நம்பி வாழ்வது என்பதில், உதவியற்றிருக்கிறேம் என்ற உணர்ச்சி இருக்கிறது. ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், ஒருவர் உதவியை இன் னெருவர் நம்பி வாழ வேண்டியவர்களாக இருப்பதைப் போன்றே தன்னைத் தானே நம்பி வாழ்பவராகவும் இருக் கின்றனர். என்னுடையது, அவர்களுடையது என்ற உணர்ச்சியே அதில் இல்லை. அவர்கள் எல்லோரும் கூட் டுறவில் வாழ்கிறவர்கள். அதே போல, ஒரு சமூகத்தை எடுத்துக் கொண்டால், ஒரு நாட்டையோ, மொத்தம் மனித வர்க்கத்தையோ எடுத்துக் கொண்டால், ஒரு குடும்பமாக எல்லோரும் கூட்டுறவாளர்களாகின்றனர். அத்தகைய ஒரு கூட்டுறவை நாம் மனக் கண் முன்பு எண்ணிப் பார்ப் போமானல், உயிரற்ற யந்திரத்தின் ஆதரவு நமக்குத் தேவை இல்லை என்பதை நாம் காண்போம். யந்திரத்தை அதிக அளவு பயன்படுத்திக் கொள்ளுவதற்குப் பதிலாக, அதன் மிகக் குறைந்த உபயோகத்துடன் நாம் வாழ்ந்துவிட முடியும். அதில்தான் உண்மையான சமூக பந்தோபஸ்தும் சுய பாதுகாப்பும் இருக்கிறது.

—'ராட்டையின் தத்துவம்' என்ற நூலிலிருந்து (பக்கம் 86—88): -29—11—1945

# 4

# நூற்பும் விவசாயமும்

கே: விவசாயத்தை விட நூற்பதையே நீங்கள் அதிகமாக வற்புறுத்தி வருகிறீர்கள். இதற்கு ராஜீய காரணம் ஏதாவது உண்டா? அல்லது விவசாயத்தை விட நூற்பது எளிதானது என்பதனுலா? அல்லது, எல்லோரும் நூற்பதை மேற்கொள்ளுவதைப் போன்று எல்லோரும் விவசாயத்தை மேற்கொண்டுவிட முடியாது என்பதனுலா?

ப: என்னிடம் சமூகம், ராஜீயம், பொருளாதாரம் என்ற வகையில் தனித்தனிப் பகுதிகள் எவையும் இல்லை. ராஜீயமாக இருப்பதில் சமூகமும் பொருளாதாரமும் இருக்கின்றன. சரியானபடி தெரிந்து கொள்ளுவதற்காக அத்தகைய பிரிவினையை நாம் செய்யவேண்டி இருந்தாலும், ஒன்றில் மற்றவைகளும் சேர்ந்தே இருக்கின்றன. விவசாயத்தைக் குறித்து நான் அவ்வளவாக வற்புறுத்தாமல் இருப்பதற்குள்ள காரணங்களில் ஒன்று, அதைப் பற்றி எனக்குள்ள ஞானம் மிகச் சொற்பமாக இருப்பது. அப்படி இருக்கும் போது, அதை உங்களிடம் வற்புறுத்தி, அதைப் பற்றி நீங்கள் அறியும்படி நான் எப்படிச் செய்ய முடியும்? ராட்டையைப் பொறுத்த விஷயம் அப்படி அல்ல. அதைப் பற்றிப் போதிய ஞானம் பெற்றிருக்கிறேன். இரண்டாவது காரணம், அந்நிய ஆக்கிரமிப்பு, ராட்டையை நாசம் செய்திருக்கிறது என்பது. விவசாயத்தை அழித்துவிட முடியாது. அதன் முறை அதிகம் மாறியிருப்பதனுல் நமது அடிமைத்தனத்தை அது அதிகரித்துவிட்டது. விவசாயத்தில் கைத் திறனுக்கு இருக்கும் இடம் மிகக் கொஞ்சம் என்பது மூன்ருவது காரணம். கதரைத் தயாரிப்பதில் உள்ள ஒவ்வோர் முறைக்கும் கைத் திறனும் விரல்களின் சாமர்த்தியமும் முக்கியமாக வேண்டியிருப்பதைப் போன்று இந்த ஆற்றல்கள் வேண்டியிருக்கும் தொழில் வேறு எதுவும் இல்லை அந்நிய ஆட்சி முதலில் நிலத்தைக் கைப்பற்றிக் கொண்டு நிலத்தைக் கொண்டு மற்றவைகளில் ஆதிக்கம் செலுத்துகிறது என்பது நான்காவது காரணம். ஆகையால், விவசாயத்தில் அபிவிருத்திக்கு அரசாங்கத்தின் உதவி மிகவும் அவசியமாகிறது. இவற்றினுலும், மற்றக் காரணங்களை முன்னிட்டும் கையினுல் நூற்பதை நான் அதிகமாக வற்புறுத்தி வருகிறேன்.

[ஹிந்தியிலிருந்து]

—'ராட்டையின் தத்துவம்' என்ற நூலிலிருந்து (பக்கம் 89-90): 29—11—1945

# 5

# பட்டும் பருத்தியும்

கையினல் தயாரான பட்டுக்கும், பருத்தியைக் கொண்டு கையினல் தயாரான கதருக்கும் இப்பொழுது கொஞ்சம் போட்டி நடந்துகொண்டு வருகிறது. அகில இந்திய நூற்போர் சங்கத்தைப் பொறுத்தவரையில் இவ்விஷயம் முன்னடியே முடிவாகியிருக்கிறது. அத்தாட்சி பெற்ற கதர்க் கடைகள், உள் நாட்டுப் பட்டுத் துணியை வைத்து விற்க அனுமதிக்கப்பட்டிருக் கின்றன. கடைக்குக் கதர் வாங்க அதிகம் பேர் வரும்படி செய்யவும், பட்டுத் துணிக்கு அதிக விலே வைத்து விற்று அதில் கிடைக்கும் லாபத்தைக் கொண்டு கதரில் வரும் நஷ்டத்தை ஈடு செய்து கொள்ளுவதற்குமே பட்டை விற்க அனுமதிக்கப் பட்டது. அதிக உற்சாகமுள்ள கதர்க் கடைக்காரர்கள், இந்த அனுமதியின் நோக்க வரம்பைத் தாண்டிப் போய் விடுகிருர்கள். ஆனல், அகில இந்திய நூற்போர் சங்கத்தின் அங்கீகாரத்தை இதற்குப் பெறுவதும் இல்லே. பட்டுத் தயாரிப்பவர்கள், ஆந்திராக் கதருக்குப் பதிலாகத் தங்கள் பட்டைச் சுலபமாக விற்றுவிடலாம் என்பதை இப்பொழுது கண்டுகொண்டு விட்ட னர். ஏனெனில், ஆந்திரப் புடவைகளே மிகவும் குறைந்த விலேக்கு விற்க முடியாது. பட்டு வியாபாரிகள் இப்பொழுது தங்கள் சரக்கைத் தீவிரமாக விற்க முயன்று அகில இந்திய நூற்போர் சங்கத்தை மீறி நடக்கின்றனர். அதுவரையில் இந்த வியாபாரிகளேக் குறித்து எதுவும் சொல்லுவதற்கில்லே. ஏனெ னில், அகில இந்திய நூற்போர் சங்கத்தின் தொண்டை உணர்ந்து கொண்டாலன்றி அதன் கொள்கையை மதித்து நடக்க யாரும் கடமைப்பட்டிருக்கவில்லே. மற்ற இடங்களேப் போலவே பம்பாயிலும், பட்டு வியாபாரிகள், தங்கள் வியாபாரத்தை அகில இந்திய நூற்போர் சங்கத்தின் அங்கீகாரத்தின் பேரில் கதரின் நன்மைக்காகச் செய்து வருவதாக விஷயமறியாத பொது மக்கள் நம்பும்படி செய்துவரக் கூடும்.

ஆகையால், இத்தகைய தந்திரங்களினல் ஏமாறவேண்டாம் என்று பொது மக்களே எச்சரிக்க வேண்டியது அவசியமாகிறது. அகில இந்திய நூற்போர் சங்கம் தன்னிஷ்டமான கொள்கை எதையும் அனுசரித்துவிடவில்லே என்பதைப் பொது மக்கள் அறிய வேண்டும். கதருக்குப் புத்துயிரளிக்கும் வேலே ஆரம்ப மானபோது, உள்நாட்டுப் பட்டு வர்த்தகம் செத்து மறைந்து போயிருக்கவில்லே. கதர் கோடிக்கணக்கானவர்களுக்கு வேலே கொடுக்கமுடியும். ஆனல், பட்டு சில ஆயிரம் பேருக்குமேல் வேலே கொடுத்துவிட முடியாது. கதர், ஏழைகளுக்கேயன்றிப் பணக் காரர்களுக்கும் அவசியமானது. ஆனல், ஒரு மத உணர்ச்சியை வளர்ப்பதற்காகச் சில சந்தர்ப்பங்களில் பட்டுத்தான் உடுத்த

வேண்டும் என்று வற்புறுத்தும் ஒரு சிலரைத் தவிர மற்றவர்களுக்குப் பட்டு அவசியமானது அல்ல. ஆகவே, தேர்ந்தெடுப்பது பட்டா, கதரா என்று வரும்போது, பட்டினி கிடக்கும் கோடிக் கணக்கான மக்களின் நலனை எண்ணுகிறவர்கள், எப்பொழுதும் கதரையே விரும்பி ஏற்பார்கள். மேலும், பருத்தியினல் தயாரான கதருக்குத்தான் முதலிடம் கொடுக்க வேண்டும் என்பது தான் அகில இந்திய நூற்போர் சங்கத்தின் முக்கியமான நோக்கம். பருத்தி, பட்டு, கம்பளி ஆகியவைகளைக் கொண்டு கையினுல் நூற்றுக் கையினுல் நெய்த துணி எல்லாமே கதர்தான் என்ற விரிவான பொருளை மனத்தில் கொண்டிருப்போருக்குக் குழப்பம் ஏற்பட வேண்டாம் என்பதற்காகவே பருத்தியினுல் தயாரான கதர் என்று கூறுகிறேன். கையினுல் நூற்ற பருத்தித் துணிக்குப் பதிலாக என்றில்லாமல் அதற்கு உபரியானதாகக் கையினுல் நூற்ற கம்பளித் துணியும் பட்டுத் துணியும் உபயோகிக்கப்படும்போது அவைகளையும் சேர்த்துக்கொள்ள வேண்டியிருப்பதால் இந்த விரிவான பொருள் அவசியமாயிற்று. இவ்விதம் குளிர் காலத்தில் பலருக்கு உஷ்ணம் தருவதான கம்பளித் துணியும் பட்டும் வேண்டியிருக்கிறது.

இந்த முறையில் நான் எடுத்துக்காட்டும் கொள்கை, பட்டு நூற்போரையும் நெய்வோரையும் உதாசீனம் செய்வதாகிறது என்று யாரும் எண்ணிவிட வேண்டாம். அப்படி அவர்கள் நன்மையை உதாசீனம் செய்துவிட வேண்டும் என்பதும் என் எண்ணம் அல்ல. ஏனெனில், கதர் செத்துவிடுமானுல் உள்நாட்டுப் பட்டும் தானே செத்துவிடும் என்பதை நான் அறிவேன். ஜப்பான் பட்டும், வெளிநாடுகளிலிருந்து வரும் போலிப் பட்டுகளும் உள்நாட்டுத் துணி முழுவதையும் ஒழித்துவிடும். கதர் உணர்ச்சிதான் காஷ்மீரக் கம்பளியையும் அஸ்ஸாம்—வங்காளப் பட்டையும் நிலைத்திருக்கும்படி செய்திருக்கிறது. அகில இந்திய நூற்போர் சங்கத்தின் முன்யோசனையோடு கூடிய கொள்கை, எவ்வளவோ கஷ்டங்களினின்றும் பருத்திக் கதரைக் காப்பாற்றுவதோடு கையினுல் நூற்றுத் தயாரான பட்டையும் கம்பளித் துணியையும் தானே பாதுகாத்து வருகிறது. இந்த மூன்றையும் ஒன்றுக்கொன்று போட்டி போடும்படி வைத்தால், இந்த மூன்றுக்கும் சவக் குழியைத் தோண்டிவிடுவீர்கள். கடைசியாக இன்னுமொன்றையும் நினைவில் வைக்க வேண்டும். பட்டு செத்துப் பருத்திக் கதர் உயிர் வாழுமானுல், பட்டு செத்ததனுல் வேலையில்லாது போனவர்கள் சுலபமாகப் பருத்தியை நூற்பதிலும் நெய்வதிலும் ஈடுபட்டுவிடலாம். ஆனுல், பருத்திக்குப் பதில் பட்டு வந்துவிடுமானுல், பருத்திக் கதர் செத்துவிட்டதால் வேலையற்றுப் போகும் கோடிக்கணக்கானவர்களுக்குத் தொழிலையோ, அதற்குச் சந்தர்ப்பத்தையோ பட்டு அளித்துவிட முடியாது. ஆகையால், எதைத் தேர்ந்துகொளுள்வது என்ற நிலைமை வரும் போது, பருத்திக் கதரை ஏற்றுக்கொள்ளுவதுதான் தரித்திர நாராயணர்களிடம் அன்பு கொண்டுள்ளவர்களின் முக்கியமான

கடமை என்று எனக்குத் தோன்றுகிறது. உயர்ந்த பட்டை வாங்குவதைவிட இப்பொழுது இருக்கும் அதிக விலையில் நய மான பருத்திக் கதருக்குப் பணம் கொடுப்பது நாளாவட்டத்தில் சிக்கனமானதேயாகும்.

—'ஹரிஜன்' – 7—11—1936

## 6

## நூல் கொடுத்து வாங்குவது

கே: பருத்திக் கதரை வாங்குவதற்கு அதன் விலையில் ஒரு பகுதிக்குப் பதிலாக நூல் கொடுக்க வேண்டும் என்பது அவசியம் என்றால், அதே விதியைப் 'பட்டுக் கதரு'க்கும் ஏன் அனுசரிக்கக்கூடாது?

ப: இக்கேள்விக்கு ஒரே ஒரு பதில்தான் இருக்கமுடியும். பட்டுக் கதரும் கதர்தான். ஆகையால், அதை வாங்கு வதற்கும் கொடுக்க வேண்டிய நூலைக் கொடுக்க வேண்டும் என்றே இருக்க வேண்டும்.

கே: நூற்பது நிர்மாண வேலைத் திட்டத்தின் ஒரு பகுதியாக இருக்கும் போது, நிர்மாண வேலை ஊழியர்கள் வாங்கும் கதருக்கு நூல் கொடுக்க வேண்டியதில்லை என்று ஏன் விதி விலக்கு இருக்கக்கூடாது?

ப: இக்கேள்வியில் ஏதோ கருத்துக் குழப்பம் இருக்கிறது. கதர் வாங்கும்போது பணத்திற்குப் பதிலாக விலையில் ஒரு பகுதியை நூலாகக் கொடுக்க வேண்டும் என்பதற்குக் காரணம், கதருக்கு அதற்குரிய ஸ்தானத்தை அளித்துச் சீக்கிரத்தில் நூலையும் நாணயம் போன்றதாக்கிவிட வேண்டும் என்பதுதான். நிர்மாண ஊழியர்கள் நூற்காம லிருக்கலாம் என்று விதி விலக்கு அளிக்கப்படுவதில்லை. யக்ஞத்திலிருந்து இத்தகைய விலக்கு எவ்விதம் இருக்க முடியும்? ஒவ்வொருவருக்கும் நூற்பது அவசியமான யக்ஞம்.

—'ஹரிஜன்' – 28—4—1946

## 7

## நூல் பாங்க்

நூல் பாங்க் அமைக்க வேண்டும் என்று நான் எண்ணுவதில் இரு கருத்துக்கள் இருக்கின்றன. எவ்வளவு நூலாயினும், அதன் ரகம் எதுவானாலும், அது எங்கிருந்து வந்தாலும் எல்லா நூலையும்

ஓர் இடத்தில் சேகரித்து வைக்க வேண்டும் என்பது முதலாவது கருத்து. அங்கிருந்து அந்த நூலை, மில் நூலை நெசவாளர் என்ன வேகத்தில் நெய்வாரோ அதே வேகத்தில் இதையும் நெய்யக் கூடியதாகும் வகையில் நெசவாளருக்கு அனுப்ப வேண்டும். இதற்காக எல்லா நூலையும் ஈரிழையாக்கித் திரிக்க வேண்டும். இந்த முறையில் தயாரிக்கப்படாத நூலை, நூலாகவே கருதக்கூடாது. இவ்விதம் ஈரிழையாக்கி முறுக்கப்பட்ட நூல், ஓரிழை நூல் என்று இரு வகையான நூல் இருக்கும். ஈரிழை நூலுக்கு விலை அதிகம் இருக்கும். இன்று இல்லாததாக இருக்கும் இக்காரியத்தில் வெற்றியடைவதற்கு நாளாகும் என்பது உண்மை. இதற்கு மத்தியில் நூலைத் தனித்தனியாகப் பிரித்து, ஓரிழையை ஈரிழையாக்கித் திரித்து, அதன் பிறகு அதைத் துணியாக நூல் கிடங்கிலோ, அல்லது தகுதியான வேறு இடத்திலோ நெய்யவேண்டும்.

நினைவில் வைக்க வேண்டிய இரண்டாவது விஷயம், தங்கமும் வெள்ளியும் நாணயம் அச்சிடுமிடத்திலிருந்து நாணயமாக வெளி வருவதைப் போன்று கதர் பாங்கிலிருந்து கதர் மாத்திரமே வெளிவரவேண்டும் என்பது. இது போன்று செய்வதற்கான காலம் வரும் வரையில், கையினுல் நூற்ற நூலில் உள்ள குறைபாடுகள் நீங்கி, எதிர்பார்ப்பதற்கு அதிகமாகக் கதரின் தரத்தில் அபிவிருத்தி ஏற்பட்டுவிடாது. கட்டாயப் படுத்துவதன் மூலம் இந்த வேலையை நிறைவேற்றிவிட முடியாது. இந்த உயர்வான காரியத்தில் தானே, துரிதமாக வெற்றியை அடைவதற்குக் கதர் ஊழியர்கள், தன்னலமற்றவர்களாகவும், உண்மையானவர்களாகவும், விஞ்ஞான புத்தியுள்ளவர்களாகவும் இருக்கவேண்டும்.

இதில் வெற்றி பெறுவதே சர்க்கா சங்கத்தின் உண்மையான லட்சியம்.

—'ஹரிஜன்' – 7—7—1946

# 8
# நிலைமையை விளக்கும் பேச்சு

ஒரு கதர் ஊழியர் கீழே வருமாறு எழுதுகிருர்:

"ஒரு கதர்க் கடை மானேஜருக்கும் கதர் வாங்க வந்தவர்கள் சிலருக்கும் சமீபத்தில் நடந்த சம்பாஷணையைக் கீழே கொடுத்திருக்கிறேன். அப்படிப்பட்டவர்களுக்குக் கதரை விற்க வேண்டுமா?

கேள்வி: இது நீங்கள் நூற்ற நூலா?

பதில்: இல்லை. இந்த எட்டு சிட்டத்தையும் ரூ. 10 கொடுத்து வாங்கினேன்.

கேள்வி : (வாங்க வந்த இன்னொருவரிடம்) இந்த நூலையெல்லாம் உங்களால் நூற்க முடிகிறதா?

ப : இல்லை. இது என் மகள் நூற்றது. சிட்டம் 12 அணு என்று நாங்கள் நூலையும் விற்கிறோம்.

கே : (மற்றொருவரிடம்) அவசியமான அளவு நூல் கொடுக்காவிட்டால் நீங்கள் கதர் வாங்க முடியாது.

ப : பரவாயில்லை. எனக்கு நூல் கிடைக்கிற வரையில் அத்தாட்சி பெறாத கதரையே வாங்கிக்கொள்ளுகிறேன்.

கே : (இன்னுமொருவரிடம்) நீங்கள் ஏன் கதர் வாங்குகிறீர்கள்?

ப: இது சுலபமாகக் கிடைப்பதாக இருப்பதால்தான்.

கே : (மற்றொருவரிடம்) நீங்கள் வழக்கமாகக் கதர் கட்டுகிறவர்கள் அல்ல நீங்கள் வாங்கியிருக்கும் கதரை என்ன செய்யப் போகிறீர்கள்?

ப : இன்று கதர் அணிவதே நாகரிகமானதாகக் கருதப்படுகிறது.

கே : (ஆறும் ஆளிடம்) உங்களுக்கு வேண்டிய நூலை நீங்கள் நூற்பதில்லை. அப்படி இருக்கும்போது இந்த நூல் எங்கிருந்து உங்களுக்குக் கிடைக்கிறது?

ப : எனது நல்ல நண்பர் ஒருவர் எப்பொழுதும் எனக்கு நூல் கொடுத்துக் கொண்டிருக்கிறார்.

கே : (ஏழாவது ஆளிடம்) நீங்கள் எப்பொழுதும் பட்டையும் கம்பளிக் கதரையுமே ஏன் உடுத்துகிறீர்கள்?

ப : இவைகளை வாங்க நான் நூல் கொடுக்க வேண்டியதாக இல்லாததனால் தான்.

கே: (எட்டாம் ஆசாமியிடம்) நீங்கள் ஏராளமாகக் கதர் வாங்கியிருக் கிறீர்கள். இதையெல்லாம் என்ன செய்வீர்கள்?

ப : இவை எனக்கு இரண்டு மூன்று வருடங்களுக்கு வரும். பிறகு எனக்கு ஏதாவது கதர் கிடைக்குமா, கிடைக்காதா என்பதைப் பார்க்க வேண்டும்.

மேலே கண்ட கேள்விகளும் பதில்களும் நிலைமையை வெளிப் படுத்துபவையாக இருக்கின்றன. கதர் சம்பந்தமான புதிய கொள்கை சரியானதாக இருந்து, கதர் வாங்குகிறவர்களும் மேற்கண்ட தன்மையினராக இருப்பார்களாயின், காங்கிரஸின் அமைப்பு விதிகளிலிருந்து கதர் விதியை நீக்கிவிடுவது அவசியம் என்பதையே இது நிரூபிக்கிறது. எட்டுப் பேரைப் பொறுத்த கேள்விகளும் பதில்களும் கவனிக்கத் தக்கவைகளாகும். இவர் களில் எவருடைய தேவைக்கும் சர்க்கா சங்கம் கதர் விற்க வேண் டிய அவசியம் இல்லை. நூற்போர் சங்கம் ஏழைகளுக்காகவே இருந்து வருகிறது. கதர் உடுத்துபவர்கள், ஏழைகளின் நன்மைக் காகவோ, சுயராஜ்யத்திற்காகவோ, இரண்டுக்குமோதான் உடுத்துகின்றனர். மேலே குறிப்பிடப்பட்டிருக்கும் கதர் வாங்கு வோர் எட்டுப் பேரும், இதில் எதிலும் கவலை இல்லாதவர்கள்

கதர் எதற்காக இருக்கிறதோ அந்த லட்சியம் நியாயமானது என்பதைச் சர்க்கா சங்கம் நிரூபிக்க வேண்டுமானுல், புதிய கொள்கை விஷயத்தில் கதர் ஊழியர்கள் போதிய விசுவாசத்துடன் இருப்பதோடு கதர்க் கடைகளை மூடி விடுவதற்கும் பயப்படக்கூடாது. முன்னுல் நடந்துவிட்ட தவறுகளை ஒழுங்குபடுத்துவதில் நேரக்கூடிய எதையும் சகித்துக்கொள்ளும் பலம் அவர்களுக்கு இருக்க வேண்டும்.

மேலே கண்ட சம்பாஷணை, நன்ருக ஜாக்கிரதையுடன் இருக்கவேண்டும் என்று கதர்க் கடை மானேஜர்களுக்கு எச்சரிக்கையும் செய்கிறது. அவர்கள் கதர் விஞ்ஞானத்தில் நிபுணர்களாக இருக்கவேண்டும். கதர் வாங்க வருவோருக்குக் கதரின் உட்பொருளைப் பொறுமையாகவும் அடக்கத்துடனும் போதிக்கவும் அவர்கள் தயாராக இருக்கவேண்டும். இதற்குக் காலமாகலாம். என்ருலும், செய்யத் தகுந்த காரியம் இது. கதரின் சக்தியில் நம்பிக்கை இருக்குமாயின், நாம் உறுதியுடன் இருந்து வருவதோடு அதன்மூலம் மற்றவர்களுக்கும் நம்பிக்கை ஏற்படும்படி செய்துவிடலாம் என்பதில் எனக்கு எவ்விதச் சந்தேகமும் இல்லை. ஆனுல், கதர் ஊழியர்களுக்கே நம்பிக்கை இல்லை என்ருல், பிறகு கதரின் நோக்கமும் வீழ்ச்சியடைந்துவிடும்.

மேலே குறிப்பிடப்பட்டிருக்கும் சம்பாஷணை உண்மையில் நடந்ததே கூறப்பட்டிருக்கிறது என்றுதான் நான் எண்ணியிருக்கிறேன்.

—'ஹரிஜன்' – 9—6—1946

## 9

# கஷ்டமானது அன்று

ஒருவர் வருமாறு எழுதுகிருர்:

"நான் மத்தியதர வகுப்பினன். பம்பாயில் 12 அடி அகலமும் 20 அடி நீளமும் உள்ள ஓர் அறையில் வசிக்கிறேன். எனக்கு மனைவியும் குழந்தையும் உண்டு. நான் வசிக்கும் அந்த அறையில்தான் என் அடுப்பங்கரையும். கதரையே உடுத்துவது என்று விரதம் பூண்டிருக்கிறேன். இதுவரையில் அதன்படி நடந்தும் வருகிறேன். கதர் வாங்குவதானுல், அதன் விலையில் ஒரு பகுதிக்கு நூல் கொடுத்துத்தான் வாங்க முடியும் என்ற புது முடிவு அமுலுக்கு வந்துவிட்ட பிறகு, பம்பாயில் யந்திரம் போன்று வாழ்க்கையை நடத்தி வரும் என்னைப் போன்ற ஒருவனுக்கு நூற்பதற்கு வேண்டிய நேரம் கிடைப்பது அதிகக் கஷ்டமாக இருக்கிறது. என்ருலும், என் பிரதிக்ஞையை நிறைவேற்ற வேண்டும் என்பதற்காகத் தினமும் ஒன்றரை மணி நேரம் நூற்று வருகிறேன். ஒரு நாள் என்னிடம் இருந்த பஞ்சுப்

பட்டைகளெல்லாம் தீர்ந்துவிட்டன. கொஞ்சம் பஞ்சு வாங்கி வரலாம் என்று கதர்க் கடைக்குப் போனேன். எனக்கு வேண்டிய பட்டைகளை நானே போட்டுக்கொள்ளுவதற்குக் கடைக்கே வரும்படியும், இல்லாவிட்டால் அங்கே பஞ்சடித்துக்கொண்டு வீட்டுக்குப் போய்ப் பட்டை போட்டுக் கொள்ளும்படியும் கதர்க் கடை மானேஜர் எனக்குச் சொல்லிவிட்டார். நான் வசிக்கும் கொஞ்ச இடத்தில் வீட்டிலேயே நான் பட்டை போட்டுக் கொள்ளுவது என்பது முடியாத காரியம். என்னைப் போன்ற ஒருவனுக்குக் கதர்க் கடைக்குப் போய் அங்கே பட்டை போட்டுக்கொள்ளுவதற்கும் நேரம் இல்லை. "எனக்குப் பட்டைகளைக் கொடுங்கள். இல்லாவிட்டால், நான் நூற்பதை விட்டுவிட வேண்டியிருக்கும்" என்றேன். எனக்குச் சரியென்று தோன்றுகிறபடி நான் செய்துகொள்ளலாம் என்று கூறிவிட்டார்கள். ஒருவர் தம் தேவையைத் தாமே பூர்த்தி செய்துகொள்ள வேண்டும், தமக்கு வேண்டிய பட்டைகளைத் தாமே தயாரித்துக்கொள்ள வேண்டும் என்பதை நான் அறிகிறேன். ஆனால், பம்பாயில் நான் இருக்கிற நிலைமையில் இது என்னால் சாத்தியமில்லை என்று உணருகிறேன். ஆயிரக்கணக்கானவர்களும் என்னைப் போன்ற நிலைமையில்தான் இருக்கிறார்கள். நான் என்ன செய்ய வேண்டும்?

"பருத்திப் பட்டைகளை விற்பதைக் கதர்க் கடைகள் நிறுத்திவிட்டது, ஏழைகளுக்கு அதிகக் கஷ்டத்தை உண்டாக்கிவிட்டது. நூற்பதால் எவ்வளவு சம்பாதிக்கலாமோ அதைப் பட்டை போடுவதிலும் அவர்கள் சம்பாதிக்கலாம்."

மேற்கண்ட கடிதத்திற்குப் பதில் கூறவேண்டும். தினமும் ஒன்றரை மணிநேரம் நூற்கத் தமக்கு நேரம் இருக்கிறது என்று அவர் கூறுகிறார். இவ்விதம் தினந்தோறும் இவ்வளவு நூற்பவரிடம் தமக்குத் தேவையாகும் கதர் வாங்குவதற்கு வேண்டியதைவிட அதிகமாகவே நூல் சேர்ந்திருக்கும். பட்டைகளைக் கதர்க் கடைகளில் வாங்க அவர் விரும்பியது தவறாகும். மானேஜர் அவருக்குச் சரியான பதிலையே கூறியிருக்கிறார். நூற்பதற்கு இடம் இருக்கிறது என்றால், தூனையில் (புதிய முறைப்படி) அல்லது அதைவிட எளிதான பூணையில் பஞ்சரைத்துக்கொள்ளுவதற்கு வேண்டிய இடமும் இருக்கும். ராட்டையில் நூற்பதற்குப் போதுமான இடமில்லையானால் தக்ளியில் நூற்கலாம். தனுஷ் தக்ளிக்கும் குறைவான இடம் போதும். தனிப்பட்டவர்களுக்கு இருக்கும் கஷ்டமே எல்லோருக்கும் இருக்கும். கஷ்டங்களைச் சமாளித்து முன்னேறுவதுதான் சுயராஜ்யத்திற்கு வழியேயல்லாமல் கஷ்டங்களிடம் தோல்வியடைந்துவிடுவது அல்ல. அவசியம் இருந்தால் எதையும் சமாளித்துவிடலாம்.

பஞ்சு அரைப்பதற்கும், பட்டை போட்டுக்கொள்ளுவதற்கும், நூற்பதற்கும் கதர்க் கடை அளிக்கும் வசதியை ஏன் பயன்படுத்திக் கொள்ளக்கூடாது? புதிய முறைப்படி பட்டை போட்டுக்கொள்ளுவதற்கு அதிக இடம் தேவையில்லை; அது கஷ்டமும் அல்ல.

—'ஹரிஜன்' 19—5—1946

# 10

# கதர்க் கடைகளைக் குறித்து

மேலே கண்ட தலைப்புடன் ஜூன் 3-ஆம் தேதி 'கதர் பத்திரிகை'யில் ஒரு கட்டுரை வெளியாயிற்று. அது முக்கியமான தாகையால் அது முழுவதையும் கீழே கொடுக்கிறேன் :

"நமது கதர்க் கடைகளில் துரிதமான மாறுதல்களைச் செய்ய வேண்டும் என்பது எங்கள் நோக்கம். கதர் வாங்குவதற்கு விலையில் ஒரு பகுதியை நூலாகக் கொடுக்க வேண்டும் என்ற நிபந்தனை இருந்தும், பம்பாய் மக்கள் இன்னும் நூற்க ஆரம்பிக்கவில்லை. துணி வாங்குவதற்குக் கொடுக்கும் நூலில் பெரும் பகுதி விலைக்கு வாங்கப்பட்டது. ஜூலை 1-ஆம் தேதியிலிருந்து ஒரு சிட்டம் நூலுக்கு ரூ. 5 பெறுமானமுள்ள கதர்தான் கொடுப்போம். இதனால் கதர் விற்பனை மேலும் குறைந்துவிடும். கதர் அதிகமாக விற்பனையாவதற்கு ஒரு முக்கியமான காரணம், மில் துணி பங்கீட்டின்படி கொடுக்கப்படுவதாகும். மில் துணியைக் கட்டி வந்த அநேகருக்கு இப்பொழுது கதர் வாங்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. கதர் வாங்குகிறவர் ஒவ்வொருவரிடமிருந்தும், அவர் கொடுக்கும் நூல் தாமே நூற்றதா அல்லது அவர் குடும்பத்தில் ஒருவரோ, இல்லாவிட்டால் சிப்பந்தியோ நூற்றதா என்பதைக் கேட்டு எழுதுகிறோம். ஆனால், இதில் உண்மையைக் கூறவேண்டும் என்பதில் பெரும்பாலானவர்கள் தங்கள் பொறுப்பை உணர்வதில்லை என்பதை வருத்தத்துடன் ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கிறது. இந்தப் பொறுப்பற்ற போக்கு கதரின் நன்மைக்கு உகந்தது அல்ல. இந்தியாவின் கிராமங்கள் சுயதேவையைப் பூர்த்தி செய்துகொள்ளுவனவாக இருக்கவேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்டது, கதர் உற்பத்தி. ஆகையால், மற்ற மாகாணங்கள் நம் கதர்க் கடைக்கு மேலும் மேலும் குறைவாகவே கதரை அனுப்பி வரும். 'கதர் விற்பனை' என்ற சொற்களை உபயோகிப்பதே லட்சியத்திற்குப் பொருத்தமில்லாதது ஆகும். இந்நிலைமையில் கதர்க் கடைகளை நடத்துவதில் சீக்கிரத்தில் மாறுதல்களைச் செய்ய வேண்டியது அவசியமாகிறது. ஜூலை 1-ஆம் தேதியிலிருந்து மாதுங்காவிலும் தாதாரிலும் உள்ள இரு கிளைகளை மூடிவிடுகிறோம். சென்ற மூன்று மாத காலமாகக் கதர் தயாரிப்பு முறைகள் எல்லாவற்றிலும் மாதுங்காவில் பயிற்சி அளித்து வருகிறோம். தாதாரில் கொஞ்சம் கதர் விற்பனையும் இருந்தது. ஆனால், இந்த வேலைகளையெல்லாம் நிறுத்திவிடவேண்டும். கிர்காமிலுள்ள கதர் அச்சிடும் தொழிற்சாலையில் பயிற்சிக்கூடம் ஒன்றையும் அகில இந்திய நூற்போர் சங்கம் நடத்தி வந்தது. இந்தக் கடை திரும்பவும் கதர் அச்சிடும் தொழிற்சாலை டிரஸ்டிகளிடமே கொடுக்கப்பட்டுவிடும். அவர்கள் தொடர்ந்து எல்லாக் கதர் வேலைகளிலும் பயிற்சி அளித்து வருவதோடு கொஞ்சம் விற்பனைக்கும் ஏற்பாடு செய்வார்கள்.

"வேலை குறைக்கப்படுவதால் பதினைந்து ஊழியர்களை வேலையிலிருந்து நீக்கிவிட வேண்டி வருகிறது.

"புதிய கொள்கை அமுலுக்கு வந்ததிலிருந்து, கதர்க் கடைகளின் தன்மையை மாற்றிவிட வேண்டும் என்று காந்திஜி வற்புறுத்தி வருகிறார். அதன்

படி நடப்பதற்காகச் சில இடங்களில் நூற்கச் சொல்லிக் கொடுக்கவும் வசதி செய்தோம். ஆனால், இந்த வெளி மாற்றம் உண்மையான மாற்றத்தைக் காட்டுவதாக இல்லை. முக்கியமாக வேண்டியதெல்லாம், நமது மனப்போக்கில் மாறுதல் ஏற்பட வேண்டியதுதான் என்பதை உணர்ந்தோம். எனவே, ஊழியர்களுக்குப் பரீட்சை போன்ற சீர்திருத்தங்களெல்லாம் அமுலுக்கு வந்தன.

"மேலே சொன்ன மாறுதல்களெல்லாம் செய்யப்பட்டிருந்தும் நமது லட்சியத்தில் வெற்றி பெற்றுவிட முடியவில்லை. கதர், அணிவதற்கு நாகரிகமான உடை என்று கதர் வாங்கியவர்கள் எண்ணி வந்த சமயத்தில் கதர்க் கடைகள் வியாபாரக் கடைகளாகவே இருந்தன. இன்றோ, கதர் உடுத்துபவரின் மனோபாவத்தில் ஒரு மாறுதலை உண்டாக்கக் கதர்க் கடை விரும்புகிறது. விற்பனை இடமாக இனியும் இருந்துவர அது விரும்பவில்லை. கதர் உற்பத்தி சம்பந்தமான எல்லா வேலைகளையும் சொல்லிக் கொடுக்கும் இடமாக இருக்க வேண்டும் என்று அது விரும்புகிறது. நெசவாளருக்கும் மற்றத் தொழிலாளருக்கும் கவர்ச்சி தரும் இடமாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறது. இதற்காக அவசியமான மாறுதல்களை விடாமல் செய்துகொண்டு போவதுடன் பம்பாயிலுள்ள கதர் உடுத்துவோரின் மனோபாவத்திலும் மாறுதலை உண்டாக்க வேண்டும். அப்பொழுதுதான் உண்மை நிலையை எடுத்துக் காட்டுவனவாகக் கதர்க் கடைகள் இருக்கும். எமது முயற்சியில் பம்பாயிலுள்ள கதர் அணிவோர் விசுவாசத்துடன் இருப்பார்கள் என்று எதிர்பார்க்கிறோம்."

காரியத்தின் வெற்றி, இக்கட்டுரையில் கூறப்பட்டிருப்பதைப் போன்று ஊழியர்களின் நம்பிக்கை, அறிவு, ஆற்றல் ஆகியவைகளையே பொறுத்திருக்கிறது என்பதை வாசகர்கள் கவனிக்க வேண்டும்.

—'ஹரிஜன்'– 14—7—1946

## 11

# கதர்க் கடைகளின் புது வேலை

புதிய திட்டத்தின்படி கதர் விற்பனைக் கடைகள் மறைந்துவிடக்கூடும். கதர் உற்பத்தி சம்பந்தமான எல்லா வேலைகளையும் சொல்லிக் கொடுக்கும் பள்ளிக்கூடங்கள் என்ற வகையில் மாத்திரமே அவை மாற்றப்பட வேண்டும். ஆகையால், பருத்தி, ராட்டைகள், கதிர்கள் முதலிய நூற்பதற்கான சகல சாதனங்களும், பஞ்சரைப்பதும் பட்டை போடுவதற்கானவையும் நிச்சயமாக அங்கே கிடைக்கும். இவற்றிற்கெல்லாம் மேலாகக் கதர் ஊழியர், எப்பொழுதும் மரியாதையோடு கேட்ட உதவியைச் செய்பவராகவும் இருக்க வேண்டும். அவர் அப்படி இல்லையென்றால், கதருக்கு முடிவு என்பதுதான் அதன் பொருள்.

கதர் ஊழியர்களே அதன் சாவுக்குக் காரணமாகிவிடுவார்களானல், அது பெரிய துக்ககரமானதாகும்.

ஒழுங்காக நூற்று வரும் கதர் அணிபவர்கள், தாங்களே நூற்ற நூலைத் துணியாக நெய்வதற்காகக் கொடுக்கும்போது, மேலே கண்ட நூலுக்கு அவர்கள் எவ்வளவு கதர் வாங்கலாம் என்று அகில இந்திய நூற்போரின் சங்க விதி அனுமதிக்கிறதோ அவ்வளவு கதரை விலைக்கு வாங்கிக்கொள்ள உரிமை பெற்றவர்கள் ஆவார்கள்.

—'ஹரிஜன்'–18—8—1946

# 12

# புகார்க் கடிதங்கள்

கதர்க் கடைகளைக் குறித்துப் புகார்களைக் கூறும் கடிதங்கள் பல எனக்கு வந்திருக்கின்றன. அவற்றின் சாரம் கீழே கொடுக்கப்படுகிறது:

1. கதர்க் கடையில் இருக்கும் கதர், அக்கடைகளை நிர்வகிப்பவர்களின் நண்பர்களுக்கும் செல்வாக்குள்ளவர்களுக்கும் மாத்திரமே கிடைக்கிறது.

2. கதர்க் கடைகளில் நிறையக் கதர்த் துணிகள் இருந்தாலும், வாங்க வரும் சாதாரணமானவர்களுக்கு எப்பொழுதும் துணி இல்லை என்ற பதில்தான் கிடைக்கிறது.

3. சில கதர்க் கடைகளில் நூலைத் துணியாக நெய்துகொள்ளுவதற்கு வேண்டிய வசதி இல்லை. மற்றவைகளிலோ, ராட்டைகளையும் மற்றச் சாதனங்களையும் விற்பதில்லை.

4. இந்த நிலைமையில் பல கடைகளில் இருக்கும் கதர் ஊழியர்கள், ஒரு வேலையும் இல்லாமல் சம்பளம் வாங்கிக்கொண்டிருக்கிருர்கள். ஒருவர் நூலைக் கொண்டு போய்க் கொடுத்தால், அது முரட்டு நூலாக இருக்கிறது என்று சொல்லி வாங்கிக்கொள்ள எப்பொழுதும் மறுத்துவிடுகின்றனர்.

இந்தப் புகார்களெல்லாம் உண்மையல்ல என்று கூறி மனத்தைத் தேற்றிக்கொண்டு விடுவது சரியாகாது. மேலே விவரிக்கப்பட்டிருப்பதைப் போன்ற நடத்தை விவேகமற்றது, அக்கிரமமானது, விசுவாசமற்றது. எந்தக் கடைகளிலுமே, அதிலும் கதர்க் கடைகளில் இத்தகைய குறைபாடுகள் இருக்கவே கூடாது. விவரிக்கப்பட்டிருக்கும் விதத்தில்தான் கதரின் சேவகர்கள் நடப்பதாயிருந்தால், கதருக்கு எப்படி மதிப்பு இருக்க முடியும்?

ஒவ்வொரு கதர்க் கடையும் சேவைக்கு உதாரணங்களாக விளங்கி, அதன் மூலம் அதன் கௌரவத்தை உயர்த்திக்கொள்ளுவதோடு கதருக்கு இருக்கும் கௌரவத்தையும் காப்பாற்றும் என்று நம்புவோமாக.

—'ஹரிஜன்'—29—9—1946

# 13

# ஆராயத் தகுந்த குறிப்பு

1. ஒவ்வொரு கதர் விற்பனைக் கடையும், நூற்போரின் ராட்டையிலிருக்கும் எந்தக் கோளாறையும் சரிப்படுத்திக் கொடுத்துவிடக் கூடியதாக இருப்பதுடன், அதற்குப் பதிலாகப் புதிதாகக் கொடுத்துவிடுவதாகவும் இருக்க வேண்டும். இதற்குக் குறைந்த பட்சக் கட்டணமே வாங்க வேண்டும். அதே சமயத்தில் நூற்பவர் ஒவ்வொருவரும் தமது சொந்த ராட்டையைச் சரிப்படுத்திக்கொள்ளுவதற்கு வேண்டிய அனுபவத்தைப் பெற்றிருக்க வேண்டும்.

2. ராட்டை வாங்குகிறவர் ஒவ்வொருவருடைய பெயரையும், விலாசத்தையும் கதர்க் கடை பதிவு செய்து வைத்துக்கொள்ள வேண்டும்.

3, கோளாறு ஏற்பட்டால் எப்படி, எங்கே அதைச் சரிப்படுத்திக் கொள்ளலாம் என்பதை விளக்கிக் கூறும் துண்டுப் பிரசுரம் ஒன்றும், விற்கும் ஒவ்வொரு ராட்டையுடனும் கொடுக்கப்பட வேண்டும்.

4. விற்கப்பட்ட ராட்டையில் ஏதாவது கோளாறு இருக்கிறது என்று கண்டுபிடிக்கப்பட்டால், விலையில் குறைத்துக் கொடுக்க வேண்டும். அப்படிப் பட்ட கோளாறுகளைப் பணம் வாங்காமல் சரி செய்து கொடுக்க வேண்டும். கடைக்குக் கொண்டு வரப்படும் கோளாறுன ராட்டைக்குப் பதிலாகப் புதிய ராட்டையைக் கொடுத்துவிடுவதுதான் எப்பொழுதும் புத்திசாலித்தனமானதாகும்.

5. தூணையில் பஞ்சைப் பட்டை போட்டுக்கொள்ளுவதற்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும். தயாரான பட்டைகளை விற்பதை நிறுத்திவிட வேண்டும். அதற்குப் பதிலாகக் கொட்டையோடிருக்கும் பருத்தியை விற்க வேண்டும்.

6. ஒவ்வொரு குடும்பத்திலும் தறி வேலை செய்யாதபோது, தன்னிடம் வரும் நூலை நெய்து துணியாகக் கொடுப்பதற்கு வேண்டிய வசதியுடன் கடை இருக்க வேண்டும்.

இவைகளின் முடிவு என்னவென்றால், கதர்க் கடைகள் எல்லாம் விற்பனைக் கடைகளாக இருப்பதை விட்டுவிட வேண்டும். அதற்குப் பதிலாகத் தேச மக்களின் உண்மையான சேவகர்களைக்கொண்ட தொழில் பயிற்சி நிலையங்களாக வேண்டும்.

—கனு காந்தி.

ஸ்ரீ கனு காந்தியின் குறிப்பு ஆராயத் தகுந்ததாகும். ஓர் இடத்தில் ஏராளமாக உற்பத்தி செய்வதன் மூலம் ராட்டையை எல்லோரும் உபயோகிப்பதாகச் செய்ய நாம் விரும்பவில்லை. ராட்டையும் அதைச்சேர்ந்தவைகள் எல்லாமும், நூற்போர் எங்கே வசிக்கிறார்களோ அங்கே இருக்கும்படி செய்வதே நமது லட்சியம். ராட்டையின் மதிப்பு அதில்தான் அடங்கியிருக்கிறது. ராட்டையில் ஏதாவது கோளாறு ஏற்பட்டால், அந்த இடத்திலேயே அது ஒழுங்கு செய்யப்படுவதோடு அதை எப்படிப் பழுது பார்த்துக் கொள்ளுவது என்பதையும் நூற்போருக்குச் சொல்லிக்கொடுக்க வேண்டும். அவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பது சர்க்கா சங்கத்தின் கடமை. இந்த வழியில் நாம் போனாலன்றி மில் துணிக்குப் பதிலாகக் கதர் நிலவும்படி செய்துவிட முடியாது.

—'ஹரிஜன்'–20—10—1946

# 14

# இன்னும் நூற்பது!

ஒருவர் கீழ்வருமாறு எழுதுகிறார்:

"நானும் என் குடும்பத்தினரும் தொடர்ந்து நூற்று வருவதோடு கதரும் நெய்து வருகிறோம். இப்பொழுதோ நமக்குச் சுயராஜ்யம் வந்து விட்டது. இன்னும் நாங்கள் நூற்றுக் கதர் நெய்ய வேண்டும் என்கிறீர்களா?"

இது ஒரு விசித்திரமான கேள்வி. என்றாலும், அநேகருடைய நிலைமையை இது எடுத்துக்காட்டுகிறது. இத்தகையவர்கள் வெறும் யந்திரங்களைப் போன்றும், சுயராஜ்யத்தைப் பெறுவதற்கு ஓர் உபாயமாகவும், நூற்பதையும் கதரையும் கைக்கொண்டு வந்திருக்கிறார்கள் என்பது இதிலிருந்து தெரிகிறது. அந்நியரின் விலங்கை நீக்குவது சுதந்திரத்தின் முதல் அத்தியாவசியமான காரியம் என்றாலும், அது மாத்திரம் அல்ல சுதந்திரம் என்பதை இந்த நண்பர்கள் மறந்துவிடுகின்றனர். அகிம்சையை அடிப் படையாகக் கொண்ட ஒரு வாழ்க்கையைக் கதர் எடுத்துக்காட்டு கிறது, எடுத்துக் காட்டியது. அனுபவத்தில் கதரும் அகிம்சையும் மறைந்துவிடுவது, இத்தனை வருடங்களாகக் கதரின் உண்மை யான தத்துவத்தை நாம் தெரிந்துகொள்ளவில்லை என்பதையே காட்டுகிறது என்பதுதான் சரியோ, தவறோ என் அபிப்பிராயமா கும். எனவே, பல பக்கங்களிலும் சகோதரர்களுக்குள்ளே சச்சர வையும் குழப்பங்களையும் காண்கிறோம். இந்தியாவின் கிராமங்களி லிருக்கும் பாமர மக்கள் சுதாவாகவே உணரும்படி நாம் சுதந்தி ரத்துடன் இருக்க வேண்டுமாயின், முன்பைவிட இப்பொழுது, நூற்பதும், கதராக நெய்வதும் முக்கியம் என்பதில் எனக்கு எந்த

விதச் சந்தேகமும் இல்லை. அதுதான் பூலோக சுவர்க்கம். சக்தியைக்கொண்டு இயங்கும் யந்திரம், மனிதன் மீது உயர்வைப் பெற்றிருப்பதற்குப் பதிலாக மனிதனுடைய உயர்வை நிலைநாட்டுவதற்காகவே நாம் கதரின் மூலம் போராடிக்கொண்டிருக்கிறோம். உழைப்பின் பேரில் மானக்கேடான வகையில் மூலதனம் கொண்டிருக்கும் ஆதிக்கத்தைப் போக்கி, அதற்குப் பதிலாக உழைப்புக்கு மூலதனம் அடிமைப்பட்டிருப்பதை அடைவதற்காகக் கதரின் மூலம் பாடுபட்டு வருகிறோம். ஆகையால், இந்தியாவில் சென்ற முப்பது ஆண்டுகளாகச் செய்து வந்திருக்கும் முயற்சிகளெல்லாம் பிற்போக்கான காரியங்கள் அல்ல என்றால், கையினால் நூற்பதையும் அதில் அடங்கியவைகளையும் இதுவரையிலிருந்ததைவிட அதிக உற்சாகத்தோடும், இன்னும் அதிகப் புத்திசாலித்தனத்தோடும் செய்தே வர வேண்டும்.

—'ஹரிஜன்'–21—12—1947

பகுதி பதினைந்து

# காங்கிரஸும் கதரும்

## 1

## காங்கிரஸ் எப்படி உதவலாம்?

பொதுவாகக் காங்கிரஸ்காரர்கள், விசேஷ சமயங்களில் மாத்திரமல்லாமல் எப்பொழுதும் பழக்கமாகக் கதரை உடுத்துவதனாலும், தாங்களே நூற்பதனாலும், எங்கெங்கு உதவி அவசியமாகிறதோ அங்கங்கெல்லாம் கதர் ஊழியர்களுக்கு உதவி செய்வதன் மூலமும், தங்கள் அக்கம் பக்கத்திலிருப்பவர்களிடையே அவர்கள் கதரின் உபதேசத்தைப் பரப்ப வேண்டும்.

—'ஹரிஜன்' – 10—12—1938

* * *

இப்பத்திரிகையின் பக்கங்களையெல்லாம் ராட்டை, கதர் சம்பந்தமான விஷயங்களைக்கொண்டே நான் நிரப்பி வருவதைக் குறித்துக் காங்கிரஸ்காரர்கள் அலுப்படைந்து விடக்கூடாது. சமூகங்களிடையே உள்ளத்தில் அமைதியை உண்டாக்குவதும், ஒவ்வோர் வீட்டிலும் திரும்பவும் ராட்டை இருக்கும்படி செய்வதும் என்னுடைய ராஜீயம். ஏனெனில் ராஜீய, பொருளாதார அடிமைத் தனத்திலிருந்து நாட்டின் சுதந்திரத்தை, ரத்தம் சிந்தும் புரட்சிக்குப் பதிலாக இவற்றைக்கொண்டே அடையவேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

ஒவ்வொரு காங்கிரஸ்காரரின் முன்பும் இருக்கும் பிரச்னை, அந்நியத் துணியாயினும் உள்நாட்டுத் துணியாயினும் மில் துணியை எவ்விதம் விலக்கிவிடுவது என்பதே. உள்நாட்டு மில் துணி கதரைப் போன்றதுதான் என்றும், அது மலிவாக இருப்பதால் மேலானது என்றும் காங்கிரஸ் வட்டாரங்களில் அடிக்கடி நம்பப்படுகிறது. கோடிக்கணக்கான தொழிலாளரைப் பொறுத்தவரையில், மலிவு என்பது தவறு என்பது முன்பே அம்பலப்படுத்தப்பட்டிருக்கிறது. இக்கோடிக்கணக்கான மக்களுக்குக் கையினால் நூற்ற நூலைவிட மில் நூல் அதிக விலையுள்ளது. மில் துணி என்றால், அவர்களுடைய கூலியைப் பறித்துவிடுவதாகும். அந்நிய நாட்டுக் கோதுமை மலிவாக இருக்கிறது என்பதற்காக உள்நாட்டுக் கோதுமையை வாங்காமலிருந்து விடுவதால், கோதுமை சாகுபடி செய்கிறவர்களுக்கு வேலையில்லாது போனால் என்னவாகும் என்பதை யூகித்துப் பாருங்கள்!

கிராமத்திலிருக்கும் நூற்பவர்களும் நெய்பவர்களும், அவர்களுக்குரிய நிலையை அடைய வேண்டுமானால், அதுவும் சீக்கிரமாக அடைவதாயின், ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் கைதேர்ந்த நூற்பாளராகவும் நெசவாளராகவும் ஆக வேண்டும். ஏழைக் கிராமவாசிகளுக்குச் சொல்லிக் கொடுத்து அவர்களுக்கு வழி காட்டக்கூடியவர்களாக இருக்க வேண்டும். கதர் நுட்பம் தெரிந்த நிபுணராகவும் அவர் இருக்க வேண்டும். நாட்டுக்காக அவர் நூற்க வேண்டும். தியாகத்திற்காக நூற்கப்படும் நூல் போதிய அளவு இருந்தாலன்றி, எட்டு மணி நேரக் கடுமையான நூற்கும் வேலைக்குக் காலணா முதல் ஓர் அணா வரையில் கொடுப்பது என்ற அந்தப் பிச்சைக்காரக் கூலியில் நூற்பவரை வைக்காவிடில், மத்தியதர வகுப்பினருக்குக் கதரை மலிவானதாகச் செய்யவே முடியாது என்பதை நான் எடுத்துக் காட்டியிருக்கிறேன்.

உள்நாட்டுத் தொழிற்சாலை மில்களுக்குப் பதிலாக ராட்டையையும் கைத்தறியையும் கொண்டு வந்துவிட முடியும், கொண்டு வர வேண்டும் என்று காங்கிரஸ்காரர் நம்பினாலன்றி, எந்தக் காங்கிரஸ்காரரும் தேவையான உழைப்பையும் ஆற்றலையும் இதில் செலுத்தமாட்டார். காங்கிரஸ்காரர்களுக்கு இந்த நம்பிக்கை இருக்குமாயின், எல்லாக் காங்கிரஸ் ஸ்தாபனங்களும், திறமை வாய்ந்த நூற்கும், நெய்யும் பள்ளிக்கூடங்களாகிவிடும். 1921-இல் எவ்விதம் காங்கிரஸ் காரியாலயங்கள், அலட்சியமாக நூற்கப்பட்ட நூலையெல்லாம் சேகரித்து வைத்துக்கொண்டு அதை எப்படியாவது நெய்துவிடலாம் என்று எதிர்பார்த்தன என்பது எனக்கு நினைவு இருக்கிறது. அவையெல்லாம் அடியோடு வீணாயின. அதை என்ன செய்வது என்பதோ, நூற்பு நன்றாக இருக்கும்படிச் செய்வதற்கு என்ன செய்வது என்பதோ யாருக்குமே தெரியாது. இப்பொழுது நிலைமை வேறு. அகில இந்திய நூற்போர் சங்கம், இது சம்பந்தமாக அதிக விஷயங்களைத் தெரிந்துகொண்டிருப்பதோடு அனுபவத்தையும் பெற்றிருக்கிறது. இது சம்பந்தமாகச் சில நூல்களும் பிரசுரமாகியிருக்கின்றன. கிராமங்களில் இந்த வேலையைச் செய்வதற்கு ஒவ்வொரு காங்கிரஸ் காரியாலயமும் ஒரு மாதிரி ஆராய்ச்சி நிலையமாகவும்,நூற்பதும் நெய்வதும் கற்றுக் கொடுக்கும் பள்ளியாகவும் ஆக வேண்டும். நான் கூறி வருவதுபோல, கதரே கேந்திரமாக இருந்து, மற்றக் கிராமக் கைத்தொழில்களெல்லாம் அதைச் சுற்றி வருவதோடு அம்முறையில் அமைக்கவும் வேண்டும். இந்த வகையான சேவையின் பிரமாதமான சாத்தியங்களைக் காங்கிரஸ்காரர்களும் கண்டுகொள்ளுவார்கள். கிராமங்களில் துரிதமாகவும் வெற்றிகரமாகவும் வேலை நடப்பதற்குத் தடையாக இருப்பது, முக்கியமாக மனச் சோம்பல்தான். இந்தியா, அகிம்சை முறையில் உருவாக வேண்டுமானால், அநேக விஷயங்களை அது பரவலான முறையில் அமைக்க வேண்டும். போதுமான பலாத்காரமின்றிக் குவியல் முறையில் ஓர் இடத்தில் சேர்த்து வைக்கப்

படுவது நிலைத்திருக்கும்படி செய்யவோ, அதைக் காப்பாற்றி விடவோ முடியாது. எடுத்துக்கொண்டுபோய் விடுவதற்கு எதுவுமில்லாத ஏழை இல்லங்களுக்குப் போலீஸ் பாதுகாப்பு வேண்டியதில்லை. பணக்காரர்களின் இடங்களுக்கு, யாரும் கொள்ளையடித்துக்கொண்டு போய்விடாமல் இருப்பதற்குப் பலமான காவல் வேண்டும். பெரிய தொழிற்சாலைகளையும் அவ்வாறு பாதுகாத்தாக வேண்டும். பட்டண ரீதியில் அமைக்கப்பட்டு, ராணுவம், கடற்படை, விமானப்படை ஆகியவைகளின் பலத்தைக் கொண்ட இந்தியாவுக்கு இருக்கும் அந்நியப் படையெடுப்பு அபாயம், கிராம ரீதியில் அமைக்கப்படும் இந்தியாவுக்கு அவ்வளவாக இருக்காது.

ராட்டையின் பொருளையும், அதன் தன்மைகளையும் காங்கிரஸ்காரர்கள் புரிந்துகொண்டு விட்டார்கள் என்று வைத்துக் கொண்டால், ஒரு கண நேர தாமதமும் இல்லாமல் அவர்கள் தங்களைச் சேவைக்குத் தகுதியானவர்களாக்கிக் கொள்ள முற்படுவார்கள். அவர்கள் ஒன்றும் தெரியாதவர்கள் என்றும் வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுதும் அவர்கள் கொஞ்சம் பஞ்சை, அதுவும் தங்கள் கிராமங்களிலோ, தாலுகாக்களிலோ, ஜில்லாக்களிலோ பயிரான பருத்தியைச் சேகரிப்பார்கள். கையினுலேயே அப்பஞ்சில் இருக்கும் கொட்டையை நீக்குவார்கள்; இல்லாவிட்டால் ஒரு பலகையில் வைத்து ஒரு கம்பியினுல் உருட்டி அப்பஞ்சை அரைப்பார்கள். கொட்டையைத் தனியாக வைத்துக்கொள்ளுவார்கள். போதுமான கொட்டை சேர்ந்ததும் விற்றுவிடுவார்கள். இல்லாவிடில் தங்களுக்குக் கால்நடைகள் இருந்தால் அவற்றிற்கு உபயோகிப்பார்கள். பிறகு கை வில்லைக்கொண்டு பஞ்சு அடிப்பார்கள். அதற்கு எந்தச் செலவுமே ஆகாது. அவர்களே வில்லைச் செய்து கொண்டு விடலாம். அடித்த இந்தப் பஞ்சை பட்டையாக்கிக் கொள்ள வேண்டும். இது தக்ளியில் நூற்கப்படும். இந்த முறைகளிலெல்லாம் நல்ல தேர்ச்சியை அடைந்த பிறகு, இன்னும் வேகமாகச் செய்யக் கூடியவைகளுக்கு அவர்கள் போகலாம். கதரை உபயோகிப்பதில் தங்களையும் தங்கள் குடும்பத்தினரையும் ஒழுங்காக்கிக் கொள்ளுவார்கள். அன்ருடம் தாங்கள் அடைந்திருக்கும் முன்னேற்றத்திற்குச் சரியான கணக்கு வைத்திருந்து நூலின் கணக்கையும் கற்றுக் கொள்ளுவார்கள்.

அகில இந்திய நூற்போர் சங்கத்தின் உள்ளூர்க் கிளையின் உதவியைக்கொண்டு காங்கிரஸ் கமிட்டிகள் தங்கள் காரியாலயங்களை மாற்றி அமைத்துக்கொண்டு, அவற்றை நூற்கும் நெய்யும் ஸ்தல ஸ்தாபனங்களாக்கிவிடும். தாங்கள் நூற்கும் நூலைத் தூரத்திலிருக்கும் நிலையங்களுக்கு நெய்வதற்கு அனுப்புவதிலுள்ள மோசமான தவறைக் குறித்துக் காங்கிரஸ்காரர்களுக்கு நான் எச்சரிக்கை செய்ய வேண்டும். கதரின் பொருளாதாரத்தின்படி, பருத்தி சாகுபடியிலிருந்து அது கதராகத்

தயாரிக்கப்படும் வரையிலும், அது விற்கப்படும் வரையிலும், எல்லா வேலைகளும் சாத்தியமான வரையில் அதே கிராமத்தில், ஸ்தாபனத்தில் செய்துகொள்ள வேண்டியது முக்கியம். பஞ்சாபில் நூல் நூற்று, அதைப் பம்பாய்க்குக் கொண்டு போய் நெய்து, தயாரான கதரை மலையாளத்தில் கொண்டு போய் விற்பது தவறு. கதர் வேலையை ஆரம்பிக்கும்போது காங்கிரஸ்காரர்களும் கமிட்டிகளும் இந்தச் சாதாரணமான விதியைக் கவனிப்பார்களானால், இது கஷ்டமான வேலை என்ற பயம் அவர்களுக்கு ஏற்படாது. தங்கள் சொந்த ஜில்லாவில் அவர்கள் வெற்றி பெற்றுவிடுவார்களாயின், மற்ற 249 ஜில்லாக்களில் வெற்றிகரமாக வேலை செய்துவிட முடியாதுஎன்பதற்கு எவ்விதக் காரணமும் இல்லை. கிராமங்களை வேலைக்கு இடமாக வகுத்துக் கொண்டாலும் அதற்கும் இதுவே பொருந்தும். ஆனால், இந்த வகையில் இன்னும் ஒரு கிராமத்தில் கூட நாம் வேலை செய்ய ஆரம்பிக்கவில்லை என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். நான் சேவா கிராமத்தில் வசிக்கிறேன் என்றாலும், நிச்சயமாக அதுவும் அப்படி இல்லை. என்றாலும், தன்னுடைய கிராமத்தை இவ்வகையில் ஒழுங்குபடுத்துவதையே தனது ஒரே தொழிலாக மேற்கொண்டிருக்கும் ஓர் ஊழியர், என்னுடைய தோல்வியைக் கண்டு மனச்சோர்வு அடைந்துவிட வேண்டியதில்லை.

சேவா கிராமம்–25–12–'39 —'ஹரிஜன்'–30–12–1939

## 2

# நூற்பு ஓட்டுரிமை

அதிகமாக விவாதிக்கப்பட்டு வரும் 'நூற்பு ஓட்டுரிமை' என்பதைக் குறித்ததே ராமச்சந்திரனின் கடைசிக் கேள்வி. தாமும் நூற்பவர்தான் என்று ஆரம்பத்திலேயே அவர் காந்திஜிக்கு உறுதி கூறினர். ஆனால், உண்ணாவிரதத்தைக் குறித்து அறிந்த பிறகு தாமும் சாந்திநிகேதனத்தில் மூன்று நண்பர்களுடன் நூற்க ஆரம்பித்ததாக அவர் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. எல்லோரும் நூற்க வேண்டும் என்று தாம் நம்புவதாகவும் சொன்னர். ஆனல், காங்கிரஸ் அதன் உறுப்பினர்களை நூற்கும்படி எப்படிக் கட்டாயப்படுத்த முடியும் என்பது அவருக்கு விளங்கவில்லை. ''தாங்களாக நூற்பதற்குச் சம்மதிக்கத் தூண்ட வேண்டுமேயன்றி கட்டாயப்படுத்துவது சரியான முறையாகாது'' என்றார்.

---

* இங்கு கூறப்பட்டிருக்கும் ஸ்ரீ ராமச்சந்திரன் என்பது பிரபல காந்தீயவாதியான ஸ்ரீ ஜி. ராமச்சந்திரனேயே யாகும். இவர் இப்பொழுது காந்தி நினைவு நிதியின் காரியதரிசியாகவும் பணியாற்றி வருகிறார்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "ஸ்ரீ ஆண்டுரூஸ் சொல்லுவதற்கு அதிகமாகவும் நீங்கள் போகிறீர்கள் என்பதைக் காண்கிறேன். காங்கிரஸ், அதன் உறுப்பினர்களைக் கட்டாயப் படுத்துவதை அவர் விரும்பவில்லை. ஆனால், நூற்பதை விதி யாகக் கொண்ட, தாமே நூற்பவர்களைக் கொண்ட சங்கத்தில் சேர்ந்துகொள்ள அவர் தவறமாட்டார். அத்தகைய சங்கம் எதுவும் இருப்பதையும் நீங்கள் ஆட்சேபிக்கிறீர்களா?"

ராமச்சந்திரன் மௌனமாக உட்கார்ந்திருந்தார். இந்த வாதத்தை ரசித்த காந்திஜி கூறியதாவது: "சரி, அப்படி யானால் உங்களை ஒன்று கேட்கிறேன். தன் உறுப்பினர்கள் மதுபானம் செய்யக் கூடாது என்று சொல்லக் காங்கிரஸுக்கு உரிமை இருக்கிறதா? அப்படிச் சொல்லுவது தனிப்பட்டவரின் உரிமையைக் கட்டுப்படுத்துவதாக ஆகாதா? மதுபானம் செய்யாமலிருக்கும்படி கட்டுப்படுத்தும் உரிமையைக் காங் கிரஸ் அமுலுக்குக் கொண்டு வந்தால், அதற்கு எந்த ஆட்சேப மும் இருக்காது. ஏன்? ஏனெனில், குடிப்பழக்கத்தின் தீமை எல்லோருக்கும் தெரிந்தது. சரி, இந்தியாவில் இன்று கோடிக் கணக்கான மக்கள் பட்டினி கிடக்கும் நிலைமையில் இருக்கும் போது, மோசமான துயரத்தில் அவர்கள் ஆழ்ந்துகிடக்கும் போது; அந்நியத் துணியை இறக்குமதி செய்வது குடிப் பழக்கத் தினும் படுமோசமான தீமை என்று நான் கூறுகிறேன். ஒரிஸ்ஸா வில் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களை எண்ணிப் பாருங்கள். நான் அங்கே போயிருந்த போது, பஞ்சத்தில் அடிபட்ட மக்களை நான் பார்த்தேன். ஒரு கைத்தொழில் விடுதியின் நிர்வாகியான அன்புள்ள சூப்பரின்டெண்டின் உதவி யால் பஞ்சத்தில் அடிபட்டோரின் குழந்தைகளையும் கண் டேன். அக்குழந்தைகள் சமுக்காளம், கூடை முதலியவை களைச் செய்து கொண்டு தெளிவாகவும், ஆரோக்கிய மாகவும், சந்தோஷமாகவும் இருந்தார்கள். அங்கே நூற்பது இல்லை. ஏனெனில், இந்த மற்றச் சாமான்களைச் செய்வது தான் அந்தக் காலத்தில் அதிகமாக வழக்கத்தில் இருந்தது. ஆனால், ஆனந்தமான வேலையின் பிரகாசம், அக்குழந்தைகளின் முகத்தில் இருந்தது. எனினும், பஞ்சத்தில் அடிபட்டு வாடிய மக்களிடம் நான் சென்றபோது நான் கண்டது என்ன? அவர் கள் வெறும் எலும்பும் தோலுமாகச் சாவை எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தார்கள். எந்த நிலைமையிலும் அவர்கள் வேலை செய்யத் தயாராக இல்லாததனாலேயே அந்த நிலைமையில் இருந்தார்கள். வேலை செய்ய மறுத்தால் சுட்டுவிடுவதாக நீங்கள் அவர்களை மிரட்டினாலும், யோக்கியமாக எந்த வேலையையும் செய்வதை விடச் சுட்டுக் கொல்லப்படுவதற்குத் தயார் என்று தான் அவர்கள் சொல்லுவார்கள் என்பது நிச்சயம். வேலை செய் வதில் இருக்கும் இந்த வெறுப்பு, குடிப் பழக்கத்தைவிட அதிகத் தீமையானது. குடிகாரனிடமாவது ஏதாவது கொஞ்சம் வேலை வாங்கிவிடலாம். குடிகாரனுக்கு மனசாவது கொஞ்சம் மிஞ்சி

இருக்கும். அவனுக்குப் புத்தியும் இருக்கிறது. வேலை செய்யவும் மறுக்கும் இப்பட்டினி கிடப்போரோ, வெறும் மிருகங்களைப் போன்றே இருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்களிடம் வேலை வாங்கும் பிரச்னையை நாம் இப்பொழுது எப்படித் தீர்ப்பது? எல்லோரும் நூற்க வேண்டும் என்று செய்வதைத் தவிர வேறு வழி இருப்பதாக நான் காணவில்லை. இந்தியாவுக்குள் கொண்டு வரப்படும் ஒவ்வொரு கெஜ அந்நியத் துணியும், பட்டினி கிடக்கும் ஏழைகளின் வாய்ச் சோற்றைப் பறித்துவிடுவதாகும். இச்சமயத்திற்கு வேண்டியதான முக்கியமான தேவையை, பட்டினி கிடக்கும் இந்தியாவின் கோடிக்கணக்கான மக்களுக்குத் தங்கள் வயிற்றுச் சோற்றுக்குச் சம்பாதித்துக் கொள்ளுவதற்கான இன்பமான, ஆனந்தமான ஒரு சந்தர்ப்பத்தை அளிப்பதைக் குறித்து, நான் எண்ணிப் பார்ப்பதைப் போன்று நீங்களும் நினைத்துப் பார்ப்பீர்களாயின், நூல் சந்தாவை நீங்கள் ஆட்சேபிக்க மாட்டீர்கள். நூற்பது அதிக முக்கியமான அவசியம் என்பதை ஒப்புக்கொள்ளும் ஆண்களையும் பெண்களையும் கொண்ட ஸ்தாபனமே காங்கிரஸ் என்று நான் எண்ணுகிறேன். அதன் உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் கட்டாயமாக நூற்க வேண்டும் என்று செய்து, அவர்களின் யோக்கியப் பொறுப்பை ஏன் உறுதியானதாக்கக் கூடாது? தூண்டுவது என்பதைப் பற்றிப் பேசுகிறீர்கள்! காங்கிரஸ் உறுப்பினர் ஒவ்வொருவரும் மாதந்தோறும் ஒழுங்காக ஓரளவு நூலை நூற்கவேண்டும் என்பதைவிடச் சிறந்த தூண்டுதல் வேறு என்ன? நூற்கும்படி மக்களிடம் காங்கிரஸ் உறுப்பினர்கள் கேட்கும்போது தாங்கள் மாத்திரம் நூற்காமலிருப்பது எப்படி யோக்கியமானதாகும்?"

ராமச்சந்திரன் மிகுந்த பரிவுடனேயே பதில் சொன்னார். "ஆனால், நூற்காதவர்களை நீங்கள் எவ்விதம் காங்கிரஸிலிருந்து விலக்க முடியும்? மற்ற வழிகளில் அவர்கள் நாட்டு மக்களுக்குச் சிறந்த சேவையைச் செய்துகொண்டிருக்கக்கூடும்" என்றார்.

இதற்குக் காந்திஜி கேட்டார்: "ஏன் விலக்கக் கூடாது? சொத்தைக்கொண்டு ஓட்டுரிமை இருப்பதற்கு என்ன காரணம்? ஒருவர் அங்கத்தினராக இருப்பதற்கு நான்கு அணு கொடுப்பது ஏன் அவசியம்? வயது ஏன் அவசியமான தகுதியாகக் கருதப்படுகிறது? இத்தாலியின் அற்புதப் பிறவியான எட்டு வயது பிடில் வித்வானுக்கு ஓட்டுரிமை உண்டா? ஜான் ஸ்டுவர்ட் மில், ஏழு வயதிலேயே கிரேக்க, லத்தீன் மொழிகளில் பண்டிதராக இருந்தார். அவர் என்னதான் புத்திசாலியாக இருந்தாலும், அந்த வயதில் அவருக்கு ஓட்டுரிமை இல்லை. அற்புதப் பிறவிகளான இவர்களெல்லோரும் ஏன் விலக்கப்பட்டனர்? எந்த ஓட்டுரிமையின் கீழும் சிலர் விலக்கப்படவே வேண்டியிருக்கும். நான் சொல்லுவதை இன்று அநேகர் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். ஆனால், எப்படியும் காந்தி சொன்னதுதான்

சரியானது என்று எல்லோரும் சொல்லும் ஒரு நாள், அது நான் செத்த பிறகாகவும் இருக்கலாம், வரும் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு.''

—' எங் இந்தியா '-20—11—1924

['காந்திஜியுடன் ஒரு நாள் காலே' என்ற தலைப்பில் ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய ஒரு கட்டுரையிலிருந்து எடுத்தது]

## 3

# கதர் வாங்குவதற்கு நூல்

**கேள்வி:** காங்கிரஸ், அதன் உறுப்பினர்கள் கதர் அணிய வேண்டும் என்று விதிக்கும்படி செய்தீர்கள். அகில இந்திய நூற்போர் சங்கத்தில் கதர் வாங்குவதற்கு நூல் கொடுக்க வேண்டும் என்ற விதியைச் செய்துவிட்டீர்கள். அகில இந்திய நூற்போர் சங்கத்தின் அத்தாட்சி பெற்ற கதரைத் தவிர வேறு கதரை உபயோகிக்கக்கூடாது என்று காங்கிரஸ்காரர்கள் தடுக்கப்பட்டிருக்கிறார்கள். வாங்கும் கதருக்கு ஓரளவு நூல் கொடுத்தாலன்றிச் சங்கத்தினிட மிருந்து இப்பொழுது கதர் கிடைக்காது. இது கட்டாயப் படுத்துவது அல்லவா?

**பதில்:** கதரைக் கட்டவேண்டும் என்று காங்கிரஸ் தீர்மானித்ததும், வாங்கும் கதருக்கு ஓரளவு நூல் கொடுக்கவேண்டும் என்று நூற்போர் சங்கம் விதி செய்திருப்பதும், அச்சங்கத்தினிடம் அத்தாட்சி பெறாத கதரைக் காங்கிரஸ்காரர்கள் உபயோகிக்கக் கூடாது என்பதும் உண்மை. வாங்கும் கதரின் விலேயில் ஒரு பகுதியை நூலாகக் கொடுக்க வேண்டும். இதெல்லாம் உண்மைதான். இதில் எவ்வித தவறும் இருப்பதாக நான் காணவில்லே.

ஒரு குறிப்பிட்ட காரியத்தைச் செய்யாவிட்டால், அபராதம் போன்றது உண்டு என்று செய்யும் காரியம் மாத்திரமே கட்டாயப் படுத்துவது என்று ஆகும். தண்டனே, எந்த முறையில் இருக்க வேண்டும் என்பது வேறு விஷயம். கதருக்கு விலேதான் கொடுக்கவேண்டும் என்று சொல்லி, அதை இனமாகக் கொடுக்க மறுத்தால், அதில் கட்டாயப்படுத்துவது என்பது எதுவும் இல்லே. அதே போல, ஒரு ஸ்தாபனத்தின் உறுப்பின ராவதாக இருந்தால், அதற்கு ஏதோ சில நிபந்தனேகள் இருக் கின்றன. அந்த நிபந்தனேகளில் பின்னுல் சில மாறுதல்களேச் செய்தால், அதிலும் கட்டாயப்படுத்துவது என்பது எதுவும் இல்லே. அத்தாட்சி பெறாத கதரின் விஷயமும் அப்படிப்பட்டது

தான். அத்தாட்சி பெருத கதரை நாம் வாங்கினல், அது சுத்த மான கதர் என்பதற்கும், நூற்போருக்கும் நெசவாளருக்கும் நியாயமான கூலி கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதற்கும் உத்தரவாதம் எங்கே இருக்கிறது?

காலத்திற்கும் அனுபவத்திற்கும் ஏற்றபடி விதிகளிலும் கட்டு திட்டங்களிலும் சில மாறுதல்களைச் செய்ய வேண்டியிருக்கிறது. இதில் கவனிக்க வேண்டியிருக்கும் ஒரே விஷயம், மாறுதல் நோக்கத்தைப் பூர்த்தி செய்வதாக இருக்கிறதா, சத்தியம், அகிம்சை ஆகிய கொள்கைகளுக்குப் பொருந்துவதாக இருக் கிறதா, சுயநலத்துடன் இது செய்யப்படுகிறதா என்பதே ஆகும். அசல் நோக்கம் நிறைவேற வேண்டும் என்பதற்காகவே இந்த மாறுதல்கள் செய்யப்படுகின்றன என்பதை, இக்கேள்வி களுக்குக் கிடைக்கும் பதில்கள் காட்டும். எனவே கட்டாயப் படுத்துவது என்பதே இதில் எழவில்லை. நான் கொடுக்கும் சரக்கிற்குப் பணத்திற்குப் பதிலாக நூலோ அல்லது வேறு பொருளோ கொடுக்கும்படி நான் கேட்டால் அதற்காக எனக்கு நன்றியே செலுத்தவேண்டும்.

இன்னும் கொஞ்சம் ஆழ்ந்து கவனிப்போம்: கதரை எல்லோரும் உபயோகிப்பதாகச் செய்வது, அதனல் அகிம்சை யோடு கூடிய சுயராஜ்யத்தை அமைக்க முடியும் என்று நம்புகிற வர்களுக்கு மாத்திரமே என்பதை நாம் நம்புகிறோம். கொஞ்ச நேரத்திற்குத்தான் என்றாலும், அதிகப்படியான தொகையினர் நூற்பது சுயராஜ்யத்தை அடைவதற்கு உதவியாக இருக்கும். ஆகையால், நாமாகவே நூற்கிறோமேயன்றிப் பிறர் கட்டாயப் படுத்துவதற்காக நாம் நூற்கவில்லை. இதில் மேற்கொண்டும் இருக்கும் நன்மை என்னவென்றால், ஏழை மக்களுடன் நமக்கு நேரடியான தொடர்பு ஏற்படுகிறது.

ஆகையால், வாங்கும் கதரின் விலையில் ஒரு பகுதியை நூலாகக் கொடுக்கவேண்டும் என்பதில் கட்டாயப்படுத்துவது என்பது கொஞ்சமும் கிடையாது என்பது தெளிவானது.

[ஹிந்தியிலிருந்து]

['ராட்டையின் தத்துவம்' என்ற நூலிலிருந்து—செப்டம்பர், 1945—பக்கம்-83-85]

# 4

# சில கேள்விகள்

கேள்வி: காங்கிரஸின் சார்பில் தேர்தலுக்கு அபேட்சகர்களாக நிற்பவர்கள், கையினல் நூற்றுக் கையினல் நெய்ததான கதரை வழக்கமாக உடுத்துபவர்களாக இருக்கவேண்டும்

என்பதை அவசியமானதாகக் காங்கிரஸ் அமைப்பு விதி செய்கிறது. இதனால், அவர்கள் அகில இந்திய நூற்போர் சங்கத்தினுல் அத்தாட்சி பெற்ற கதரைத்தான் உபயோகிக்கலாம் என்ருகிறது அல்லவா?

**பதில்:** என் அபிப்பிராயத்தில் இது வேறு விதமாக இருப்பதற்கில்லை.

**கேள்வி:** அத்தாட்சி பெருத கதரை வியாபாரம் செய்கிறவர் காங்கிரஸ் கமிட்டிகளில் பதவிகளை வகிக்கலாமா?

**பதில்:** எந்தக் காங்கிரஸ் கமிட்டியிலும் பதவி வகிக்க ஆசைப்படுவது இருக்கட்டும். அத்தாட்சி பெருத கதரை வியாபாரம் செய்கிறவர், எப்படி காங்கிரஸ்காரராக இருக்க முடியும் என்பதையே என்னுல் எண்ண முடியவில்லை.

**கேள்வி:** அத்தாட்சி பெருத கதர் வியாபாரம் செய்து வருகிறவர், காங்கிரஸ் கமிட்டிகளில் பதவி வகிப்பது மாத்திரமல்ல, காங்கிரஸ்காரராகவே இருக்கமுடியாது என்று நீங்கள் கூறுகிறீர்கள். மில் துணி வியாபாரமும், அந்நியத் துணி வியாபாரமும் கூட செய்து வருபவர்கள், காங்கிரஸின் நிர்வாகப் பதவிகளில் இருக்கிருர்களே அவர்கள் சங்கதி என்ன?

**பதில்:** இரண்டாவது கேள்விக்கு நான் கூறியிருக்கும் பதில் மூன்ருவது கேள்விக்கும் பொருந்தும். இந்தக் காரணங்களுக்காகவே காங்கிரஸ் அமைப்பு விதிகளிலிருந்து இது சம்பந்தமான விதிகளை நீக்கிவிட வேண்டும் என்று நான் சிபார்சு செய்தேன். இந்த விதிகளின்படி நடந்து வர நம்மால் இயலவில்லை என்பதை அனுபவம் போதித்துவிட்டது.

—'ஹரிஜன்' –19—5—1946

## 5

# காங்கிரஸும் நூற்பதும்

ஒரு காங்கிரஸ்காரர் கீழே வருமாறு எழுதுகிருர் :

"நூற்பது பற்றியும், நெய்வது குறித்தும் எவ்வளவோ விளம்பரம் செய்யப்பட்டிருக்கிறது. என்ருலும், அது எவ்வளவு தூரம் செய்திருக்க வேண்டுமோ அந்த அளவுக்கு நூற்பதற்கும் நெய்வதற்கும் பொது மக்களிடையே ஆதரவு ஏற்பட்டு விடவில்லை என்பதை ஒருவேளை நீங்களும் ஒப்புக்கொள்ளக்கூடும். ஒவ்வொரு காங்கிரஸ் கமிட்டியும், பெரிய நகரங்களில் உள்ள கமிட்டிகளாவது, இக் காரியத்திற்காகப் பொது ஜனங்களுக்குச் சொல்லிக் கொடுக்கும் ஒருவகையான வகுப்புக்களை ஆரம்பித்தால், அதனுல் அதிக

நன்மை உண்டாகும் என எண்ணுகிறேன். அநேகர், முக்கியமாக ஏழைகள், நூற்க ஆரம்பிக்காததற்குக் காரணம், நூற்பதும் நெய்வதும் அவர்களுக்குத் தெரியாததுதான். என்ன ரக ராட்டை அதிகச் சௌகரியமானது, எதில் அதிகமாக நூற்கலாம், இவற்றில் சரியானபடி வேலே செய்வது எப்படி, நூற்பதன் மூலம் கிடைக்கும் நூலேச் சிறந்த வழியில் கொடுத்து விடுவது எப்படி என்பன போன்றவைகளெல்லாம் அவர்களுக்குத் தெரியாது. சரியானபடி விளம்பரப்படுத்திவிட்டு, இதற்கான வகுப்புக்களே வாரத்துக்கு ஒரு முறையோ, இரு முறையோ நடத்தினல், நடைமுறையில் செய்து காட்டுவதன் மூலம் இதிலுள்ள நுட்பத்தை மக்களுக்கு அவ் வகுப்புக்களில் சொல்லிக்கொடுத்தால் எவ்வளவோ அபிவிருத்தி ஏற்படும். காங்கிரஸ் இதில் ஒரு பரீட்சையாவது செய்து பார்ப்பது நல்லது. ஒழுங்காக வகுப்புக்களே நடத்தாவிட்டாலும், இவற்றின் நுட்பம் தெரிந்த நிபுணர்களேக் கொண்ட கோஷ்டியோ, கோஷ்டிகளோ சுற்றுப் பிரயாணம் செய்து, ஒவ்வொரு நகரத்திலும் மக்களுக்கு இவ்வேலேகளேச் செய்து காட்டினலே பெருமளவு இக் காரியத்திற்கு உதவியாக இருக்கும்.''

இதை எழுதியிருப்பவர் கூறுவதில் எவ்வளவோ உண்மை இருக்கிறது. நூற்கும் கலேயை, அதற்கு முன்னல் செய்ய வேண்டிய வேலேயிலிருந்து பின்னல் கதராக உற்பத்தி செய்யும் வரையிலுள்ள எல்லா வேலே முறைகளேயும் சொல்லிக் கொடுக்கும் பள்ளிக்கூடங்களாகக் காங்கிரஸ் காரியாலயங்கள் ஆகிவிடுமானல், கிராமங்களின் தோற்றமே மாறுதலடைந்துவிடும் என்பது தெளிவானது. கடிதத்தை எழுதியிருப்பவர் கூறும் விஷயங்களே வற்புறுத்தவே இதை எழுதுகிறேன்.

—'ஹரிஜன்'-18—8—1946



லண்டனுக்குக் கப்பலில் சென்றபோது பண்டித மதன மோகன மாளவியாவின் அறையில் அவருடன் பேசிக்கொண்டே மகாத்மா நூற்றுக்கொண்டிருந்தபோது எடுத்த படம். பண்டித மாளவியா மேலே படுத்திருக்கிறுர்.



கப்பல் யாத்திரையிலும் நூற்பதை மாத்திரம் மகாத்மா மறந்ததில்லை. 1931-இல் இரண்டாவது வட்ட மேஜை மகாநாட்டிற்குக் கப்பலில் போய்க்கொண்டிருந்தபோது கப்பலின் மேல் தளத்தில் உட்கார்ந்து அவர் நூற்பது வழக்கம். இரு பக்கங்களிலும் ஸ்ரீ மகாதேவ தேசாயும் மீரா பென்னும் உட்கார்ந்து நூற்றுக்கொண்டிருக்கிறார்கள்.

பகுதி பதினாறு

# அரசாங்கமும் கதரும்

## 1

## கதரைப் பரப்புவது எப்படி ?

சுயராஜ்யத்தை அடைந்த பிறகு, அத்தகைய சுயராஜ்ய அரசாங்கம் செய்ய வேண்டிய முதல் காரியங்களில் ஒன்று, அந்நியத் துணியைத் தடுத்துவிடுவது.

'எங் இந்தியா' – 19–3–1931

* * *

கதரில் உயிர் போன்ற நம்பிக்கை மிகச் சில காங்கிரஸ்காரர்களுக்கே இருக்கிறது என்பதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். மந்திரிகள் காங்கிரஸ்காரர்கள். தங்களைச் சுற்றிலும் இருப்பவைகளிலிருந்தே அவர்கள் உணர்ச்சியைப் பெறுகிறார்கள். அவர்களுக்குக் கதரில் உயிர் நம்பிக்கை இருக்குமானால், கதரை எங்கும் பரப்பிவிடுவதற்கு அவர்கள் எவ்வளவோ செய்ய முடியும்.

1920-ஆம் வருடத்து அசல் சுயராஜ்யத் திட்டத்தில் கதர் முக்கியமான பகுதியாக இருந்தது. 1921-22-இல் ஆயிரக்கணக்கான காங்கிரஸ்காரர்கள், நூற்றுக்கணக்கான மேடைகளில் இருந்துகொண்டு, கோடிக்கணக்கான மக்களுக்கு, 'சுயராஜ்யம் ஏற்படுவது ஒவ்வொரு கிராமத்திலும் ராட்டை சுழலுவதையே பொறுத்திருக்கிறது' என்று திரும்பத் திரும்பச் சொல்லி வந்தார்கள். காலஞ்சென்ற அலி சகோதரர்கள், அவர்கள் பேசிய அநேக கூட்டங்களிலும், 'ஒவ்வொரு குடிசையிலும் ராட்டையும் ஒவ்வொரு கிராமத்திலும் தறியும் இல்லாமல் சுதந்திரம் இல்லை' என்று கூறி வந்தார்கள். ராட்டைகளே நம்முடைய போர் ஆயுதங்கள் என்றும், நாம் நூற்கும் நூற்கண்டுகளே நமது துப்பாக்கிகளுக்கான தோட்டாக்கள் என்றும் மௌலானா முகமது அலி தம்முடைய அலங்காரமான பாஷையில் கூறுவது உண்டு. தமக்குள்ள உறுதியான நம்பிக்கையுடன் இதை அவர் கூறியதால், கேட்போரின் உள்ளங்களில் இது நன்றாகப் பதிந்தது. ஆனால், ஆரம்ப காலத்தில் இருந்த அந்த நம்பிக்கை நீடித்து இருக்கவில்லை. கதருடன் சுயராஜ்யத்தைச் சம்பந்தப்படுத்துவதைப் பொதுவாகக் காங்கிரஸ்காரர்கள் விட்டுவிட்டார்கள். கதரே, நம் விடுதலையின் சின்னம் என்று ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு கூறியிருக்கிறார். எத்தனைப் பேர் கதருக்கு

இவ்வாறு பொருள் கொள்ளுகின்றனர்? காங்கிரஸ்காரர்களுக்கு அந்த நம்பிக்கை இருப்பதானுல், கதர் நாணயம் போல் செலாவணியில் இருப்பதாக இருக்கும். சுதந்திரத்திற்கு என்ன விலே கொடுத்தாலும் அதிகமாகாது. வாழ்க்கையின் மூச்சு அது. உயிர் வாழ்வதற்காக மனிதன் என்னதான் கொடுக்கமாட்டான்? ஒரு கட்டமேயான சட்ட மறுப்பைக் காட்டுவதற்காக அமைக்கப்பட்டது அன்று, காங்கிரஸ் கொடி. ஆனுல், சுதந்திரத்தின் முக்கியங்களைக் காட்டுவதற்காக அமைக்கப்பட்டது, அது. அக்கொடிக்கு ஆதாரமாக இருப்பது, கதர். ராட்டை, அதில் நிரம்பியிருந்து, அது நிலே பெறும்படி செய்கிறது. சுதந்திரத்தை அடைவதற்குச் சமூக ஒற்றுமை எவ்வளவு முக்கியம் என்பதை அதன் நிறங்கள் காட்டுகின்றன. இந்த நிபந்தனைகளெல்லாம் நிறைவேற்றப்படுவதாக இருந்தால், சட்ட மறுப்போ, அதனுல் ஏற்படும் கஷ்டங்களோ அவசியமே இல்லாமல் போகும். கதரை அணிவது எனக்குச் சுதந்திரத்தை அணிவதாகும்.

கதருக்குள்ள இந்தப் பொருளை முழு மனத்துடன் ஏற்றுக்கொண்டால், காங்கிரஸ் மந்திரிகள், அவர்கள் மாத்திரமல்ல எல்லா மந்திரிகளும், கதர் ஊழியர்களும், காங்கிரஸ்காரர்களும் என்ன செய்ய முடியும் என்பதை என்னுல் கூற முடிகிறது.

கதரையும் கிராமக் கைத்தொழில்களையும் மாத்திரம் கவனிக்கும் மந்திரி ஒருவர் இருக்கலாம். ஆகையால், இக்காரியத்திற்கு என்றே ஒரு தனி இலாக்கா இருக்க வேண்டும். மற்ற இலாக்காக்கள் இத்துடன் ஒத்துழைக்கும். இவ்விதம் விவசாய இலாக்கா, பருத்தி சாகுபடியைப் பரவல் முறையில் நடத்துவதற்கு ஒரு திட்டத்தை வகுத்து, கிராம உபயோகத்திற்குப் பருத்தியைச் சாகுபடி செய்வதற்கான நிலத்தைக் கணக்கு எடுத்து, அந்த மாகாணத்திற்கு எவ்வளவு பருத்தி தேவை என்பதைக் கண்டுபிடிக்கும். வினியோகிப்பதற்காகப் பருத்தியைத் தக்க இடத்தில் சேகரித்தும் வைத்திருக்கும். மாகாணத்தில் கிடைக்கும் கதரை ஸ்டோர் இலாக்கா வாங்கிக்கொண்டு தனது துணித் தேவைக்கு ஆர்டரும் கொடுக்கும். நுட்பத் தொழில் இலாக்காக்கள், கையினுல் உற்பத்தி செய்வதற்குச் சிறந்த ராட்டையையும் மற்றக் கருவிகளையும் கண்டுபிடிக்க முழுச் சிரமமும் எடுத்துக்கொள்ளும். இந்த இலாக்காக்களெல்லாம் அகில இந்திய நூற்போர் சங்கத்தையும், அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தையும் தங்கள் நிபுணர்களாகக்கொண்டு அவைகளுடன் இடைவிடாது தொடர்பு வைத்துக்கொள்ளும்.

ரெவினியூ மந்திரி, மில் துணியின் போட்டியிலிருந்து கதரைக் காப்பாற்றுவதற்கான காரியங்களையெல்லாம் செய்வார்.

கதர் ஊழியர்கள், தளராத ஊக்கத்துடன் கதர் விஞ்ஞானத்திற்கான தத்துவங்களை ஆராய்ந்து, கதர் நீடித்து உழைப்பதாகவும் கவர்ச்சியானதாகவும் இருக்கும்படி செய்யப் பார்ப்பதோடு கதரை எல்லோரும் உபயோகிக்கும்படி செய்வதற்குத் தாங்களே பொறுப்பு வாய்ந்தவர்கள் என்றும் நம்புவார்கள். யார் எப்பொழுதும் கவனமாக இருந்து, தாங்கள் மேற்கொண்டிருக்கும் பணியிலேயே தங்கள் முழு ஆற்றலையும் ஈடுபடுத்துகிறார்களோ அவர்களுக்குத்தான் கடவுளும் உதவுகிறார்.

—'ஹரிஜன்' – 10—12—1938

## 2

# பஞ்சத்திற்குப் பாதுகாப்பு, போதன முறை

வார்தாவில் 12-ஆம் தேதியும் அதற்குப் பிறகும் நடந்த அகில இந்திய நூற்போர் சங்கக் கூட்டத்தில் கதர் ஊழியர்களிடையே முழு விவாதமும் நடந்தது. கதருக்குக் குறைந்தது மூன்று வேலைகள் இருக்கின்றன என்று கூறப்பட்டது. இந்தியாவில் அரைப் பட்டினியாகவும், அரை குறையான வேலை வாய்ப்போடும் இருக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு வேறு எந்தத் தொழிலினாலும் செய்ய முடியாத அளவுக்கு, துணைத் தொழிலாக அது இருக்கிறது. சாத்தியமான குறைந்த நஷ்டத்தில் பஞ்சப் பிரதேசங்களில் கதர் வேலை கொடுக்கிறது. ஆரம்பக் கட்டங்களில் இந்தியாவின் சிறுவர், சிறுமியருக்கு இது சிறந்ததோர் போதன முறையாகிறது.

ஆனால், பஞ்சத்திற்குப் பாதுகாப்பாகவோ, ஆரம்ப கட்டங்களில் போதன முறையாகவோ கதர் இருப்பதற்கு, ஒரு திட்டமான நிபந்தனை உண்டு. பஞ்சப் பிரதேசங்களிலும் பள்ளிக் கூடங்களிலும் தயாராகும் கதரை என்ன செய்வது? கதரை விற்க முடியவில்லை என்றால், இந்தியாவின் பல பகுதிகளில் பஞ்ச காலத்தில் உடைக்கப்பட்ட கற்களைப் போன்று கதரும் பயனில்லாததுதான். கடைசியாகக் கூறப்பட்ட இரு வகைகளிலும் உற்பத்தியாகும் கதர் முழுவதையும் அரசாங்கமே வாங்கிக் கொண்டுவிட வேண்டும் என்று நான் அடிக்கடி இப்பத்திரிகையில் யோசனை கூறி வந்திருக்கிறேன். அரசாங்கம், ரெயில்வேக்களில் போட்டிருக்கும் பங்குகளுக்கும், லாப விகிதத்திற்கும், மற்றவைகளுக்கும் இன்று உத்தரவாதம் செய்து வருவதைப் போன்று, இதில் வரும் நஷ்டத்தையும் ஈடு செய்வதென்று அரசாங்கம் உத்தரவாதம் அளித்தால், அகில இந்திய

நூற்போர் சங்கத்தின் மூலம் இதை மிக எளிதாகச் செய்துவிடலாம். விலையைப்பார்த்தால், மில் துணியைவிடக் கதரின் விலை அதிகமே என்பதில் சந்தேகம் இல்லை. ஆகையால், இதைத் தேசாபிமானமுள்ளவர்களும், பரோபகார சிந்தனை உள்ளவர்களுமே வாங்குவார்கள். ஆனால், பணம் இல்லாதவர்களுக்குப் பரோபகார எண்ணமோ, தேசாபிமானமோ சுலபத்தில் இதற்கு ஏற்பட்டுவிடாது. அவர்கள் அதிக மலிவாக இருப்பதைத்தான் வாங்குவார்கள். ஆகையால், பொதுவான நன்மையை முன்னிட்டு அதிகமாக விற்க வேண்டியது அவசியமாக இருக்கும் பொருள்களுக்குப் போட்டியாக இருப்பவைகளைத் தடுத்துவிட வேண்டியதோ, அதற்கு அதிக வரி விதித்துவிட வேண்டியதோ அரசாங்கத்தின் வேலை. அவ்விதப் பாதுகாப்பு அளிக்க வேண்டிய பொருளே கதர் என்பது நிரூபிக்கப்பட்டுவிட்ட விஷயமாகக் கொள்ளலாம் என்று நினைக்கிறேன். கதரையும் அது போன்றவைகளையும் காப்பாற்றுவதற்குப் போதிய அளவுக்கு எட்டு மாகாணங்களின் நிர்வாகம் காங்கிரஸின் கையில் இருந்து வருகிறது. கதர் விஷயத்தில் எவ்வித அபிப்பிராய பேதமும் இல்லை. எனவே, கதருக்குப் பாதுகாப்பு அளிப்பதில் மற்ற மாகாணங்களும் காங்கிரஸ் மாகாணங்களைப் பின்பற்றுவதற்கில்லை என்பதற்கு எந்தவிதமான காரணமும் இல்லை. நம்மில் அநேகர் விரும்புகிற அளவு சீக்கிரத்தில் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை ஏற்படாமல் இருக்கலாம். ஆயினும், பொதுவான காற்றையே எல்லோரும் சுவாசித்து, நதிகளும் கிணறுகளும் நீர்த் தேக்கங்களும் அளிக்கும் பொதுவான நீரையே எல்லோரும் குடித்தும் வருவதைப் போல, வாழ்க்கையின் மற்ற அத்தியாவசியங்களைப் பொறுத்தவைகளிலும் பொதுவான கொள்கைக்கு நாம் நிச்சயம் சம்மதிக்கலாம். துரதிருஷ்டவசமாக நம்முள் இருக்கும் வித்தியாசங்களை விடாமல் அப்படியே பிடித்துக்கொண்டு, ஒருவருக்கொருவர் சச்சரவிட்டுக்கொள்ளுவதற்காக அவற்றை உபயோகித்துக்கொள்ளவே வேண்டும் என்றாலும், அந்த வித்தியாசங்களில் குறுக்கிடாமலேயே மேலே கண்டதற்கு நாம் சம்மதிக்கலாம். ஆனால், மற்ற மாகாணங்களும் ஒத்து வந்தாலும், வராது போனாலும், காங்கிரஸ் மாகாணங்கள் அகில இந்திய நூற்போர் சங்கத்துடனும், அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தோடும் கலந்தாலோசித்து, நான் மேலே சொன்ன கஷ்டங்களைக் காலதாமதமின்றி நிவர்த்தித்துக்கொள்ளும் வகையில் நடவடிக்கைமுறையை வகுத்துக் கொள்ள வேண்டியது அவசியம்.

சேவா கிராமம்–14—8—'39 —'ஹரிஜன்' – 19—8—1939

3

# நெசவாளருக்கு உதவி

ஸ்ரீ அப்பா பட்டவர்தன் கீழ்வருமாறு எழுதுகிறார் :

"நெசவாளருக்கு உதவி செய்வதில் பம்பாய் அரசாங்கம் ஏராளமான தொகையைச் செலவிடுகிறது. விற்பனை அதிகாரியையும் விற்பனையாளரையும் நியமித்திருக்கிறார்கள். கடன் கொடுக்கிறார்கள். எனினும், மில்களுடன் போட்டி போட நெசவாளர்களால் முடியவில்லை. செலவழிக்கும் பணம் பயனை அளிக்கவில்லை என்பதுதான் என் கருத்து. மேலும், நெசவாளர்கள் வெளிநாட்டு நூலையும் உபயோகிக்கிறார்கள். இப்பயனில்லாத உதவியைச் செய்துகொண்டிருக்கும் அதே சமயத்தில், கதருக்கும்கூடக் கொஞ்சம் உதவியை அரசாங்கம் செய்து வருகிறது. இந்தப் பிளவுபட்ட விசுவாசம் எப்படி நியாயமானதாகும் என்பது எனக்குத் தெரியவில்லை."

அந்நிய அல்லது இந்திய மில் நூலை உபயோகித்து வரும் நெசவாளருக்கு உதவி செய்வது, பணமும் முயற்சியும் வீண் என்பதே எப்பொழுதும் என் அபிப்பிராயம். அனுபவமும் இந்தக் கருத்தை மாற்றிவிடவில்லை. சில மாகாணங்களில் காங்கிரஸ் ஆளுகிறது என்பதனாலும் என் கருத்து மறையவில்லை. மில் நூலால் நூற்கும் நெசவாளர்கள் மறைவதற்கு இருக்கும் காலம் கொஞ்சம்தான் என்பதனாலேயே நான் இந்தக் கருத்தைக் கொண்டிருக்கிறேன். இருக்கும் நிலைமையைக்கொண்டு கவனித்தால், இது வேறுவிதமாக இருப்பதற்கில்லை. கையினால் நூற்பதை எல்லோரும் செய்வதாகத் திரும்பவும் ஏற்பட்டுவிடுவது ஒன்றிலேயே நெசவாளர் வாழ்வின் நம்பிக்கை இருக்கிறது. கையினால் நூற்பதும், கையினால் நெய்வதும் ஒன்றை ஒன்று சார்ந்திருப்பவை. மில் நூலும் கை நெசவும் அப்படி அல்ல. இதனாலேயே நெசவாளருக்குத் தேவையான நூல், கை நூற்பின் மூலம் உடனே கிடைக்கவில்லையானால், நெசவாளர்கள் தாங்களே நூற்பவர்களாகாவிடில், தங்கள் குடும்பத்தினர் கையினால் நூற்பது, பஞ்சு அரைப்பது போன்ற வேலைகளைச் செய்யும்படி தூண்ட வேண்டும் என்று யோசனை கூறி வருகிறேன். இப்பொழுது பல மாகாணங்களில் காங்கிரஸ் ஆட்சி நடந்து வருவதால், நெசவாளரைக் காப்பது எளிதானதாகிறது. இவ்விதம் விசாலமான அளவில் நூற்பது ஏற்படும்படி செய்வதற்கு அரசாங்கம் உற்சாகமளிக்கலாம். அந்நிய நாட்டு ரெயில்வேக் கம்பெனிகளுக்கு லாபத்தைக் குறித்து அரசாங்கம் உத்தரவாதம் அளிப்பதைப் போன்று, கதர் விற்பதில் ஏற்படக்கூடிய நஷ்டத்தை ஈடு செய்வதாகவும் அரசாங்கம் உத்தரவாதம் அளிக்கலாம். வேலையில்லாது கஷ்டப்படும் ஒவ்வொருவருக்கும் அவர்கள் இஷ்டப்படும் வேலையைக் கொடுப்பதாக உத்தரவாதமளிக்க வேண்டியது ஓர் அரசாங்கத்தின் முதல் கடமை. அத்தகைய உத்தரவாதம்

பெற வேண்டியவர்களில் நெசவாளர்களும் சேர்ந்தவர்கள். ஒவ்வொரு நெசவாளிக்கும் நெசவு வேலையைக் கொடுப்பது இச்சந்திக் காலத்தில் கஷ்டமானதாக இருந்தால், அரசாங்கத்திற்கும் தனிப்பட்டவருக்கும் லாபகரமானதான ஒரு தொழிலை அரசாங்கம் கண்டுபிடிக்க வேண்டும். கையினால் நூற்பதிலுள்ள சாத்தியங்களை அரசாங்கம் இன்னும் ஆராய்ந்து விடவில்லை என்பதையும் மனதில் வைக்க வேண்டும். அத்தகைய ஆராய்ச்சி, ஆச்சரியகரமான ஊக்கமளிக்கும் பலனைத் தரும் என்பது என் கருத்து. எல்லா மில்களையுமே நமது கவனத்திலிருந்து விலக்கிவிடுகிறோம் என்பதைக் கொண்டதே என் வாதம் என்பதில் சந்தேகமில்லை. எந்தத் தொழிலும், அது அந்நியர் நடத்துவதாயினும் சரி, இந்தியர் நடத்துவதானாலும் சரி, வேலையில்லாத் திண்டாட்டத்தை அதிகரித்து, அதனால் பொதுவாகச் சமூகத்தின் உண்மையான நன்மைக்குத் தீமை விளைவிக்க அனுமதிக்க முடியாது.

—சிம்லாவுக்குப் போகும் வழியில்
ரெயிலில்-3—9—'39

—'ஹரிஜன்'–9—9—1939

4

# நிர்மாண வேலையும் அரசாங்க உதவியும்

**கேள்வி :** நிர்மாண வேலைத் திட்டம், வெறும் பிரசாரத்தினால் மாத்திரம் உங்கள் வாழ்நாளிலேயே அதன் லட்சியத்தை அடைந்துவிட முடியும் என்று நம்புகிறீர்களா ? மனிதனுக்கு இயற்கையான குறைபாடுகளும் இருப்பதால், நிர்மாண வேலைத் திட்டத்தை, எல்லோரும் அதில் ஈடுபடும் அளவில் மேற்கொள்ளும்படி மக்களைச் செய்வதற்காகச் செய்யவேண்டிய சட்டத்தின் உதவியும் இதற்குத் தேவையாகும் என்று நீங்கள் நினைக்கவில்லையா ? முக்கியமாக, நாம் இன்று யந்திர யுகத்தில் இருந்து வருவதால், மக்களினால் தேர்ந்தெடுக்கப் பெற்ற பிரதிநிதிகளிடமிருந்து அத்தகைய சட்ட உதவியைப் பெறுவது அகிம்சைக் கொள்கையை மீறுவதாகுமா ? மீறுவதாகும் என்றால், எப்படி ?

**பதில் :** நமது நிபந்தனைகளின் பேரிலேயே அரசாங்கத்தினிடமிருந்து நாம் உதவியைப் பெறவேண்டும். அநேக தடவைகளில் நான் கூறியிருக்கிறேன். இதற்கு மேலுங்கூட, உலகத்தின் உதவியையும் நாம் பெற்றுக்கொள்ள வேண்டும். நிர்மாண வேலைத் திட்ட விஷயத்தில் சட்டசபை உறுப்பினர்களிடமிருந்து எந்த ஒத்துழைப்பும் நமக்குக் கிடைக்காது என்று நான் எண்ணிய சமயம் ஒன்று உண்டு. ஆனால்

மக்களின் பிரதிநிதிகள் சட்டசபைகளுக்குப் போனுல், அவர்களுடைய உதவியை நாம் பெற முடியும் என்று இப்பொழுது அறிகிறேன். இதோடு இன்னுமொரு விஷயத்தையும் நாம் மனத்தில் வைக்கவேண்டும். நமது நிர்மாண வேலைத் திட்டத்தை நாமே நடத்திக்கொண்டு போனுலன்றி, மாறுபட்ட சந்தர்ப்பங்களில் கூட, அதன் மதிப்பை நாம் சரியானபடி உணர முடியாது; மற்றவர்கள் இன்னும் அறியவே முடியாது. நிர்மாண வேலைத் திட்டத்தின் அபிவிருத்திக்கு ஏற்றுற்போல மக்களின் பலமும் அதிகரித்திருக்கிறது. அனுபவத்தைக்கொண்டும், விருப்பு வெறுப்பின்றி நிலைமையைக் கவனிப்பதைக் கொண்டும் இதை நான் சொல்ல முடியும். எல்லோரும் அனுசரிக்கும்படி செய்யும் வகையில் இதற்கு ஆதரவு தேடி, பொது மக்களின் மூலம் இதை அமுலுக்குக் கொண்டு வந்துவிடுவோமானுல், பிறகு சுயராஜ்யம் நம் கையில் இருக்கும்.

['ராட்டையின் தத்துவம்' என்ற நூலிலிருந்து; 29—11—1945—பக்கம்-109–110]

# 5

# துணிப் பஞ்சம்

கதரிலும் மற்ற கிராமக் கைத்தொழில்களிலும் சிரத்தை எடுத்துக் கொள்ளுபவரான ஸ்ரீ மனு சுபேதார், கொஞ்சகாலத்திற்கு முன்னுல் கீழ்க்கண்ட குறிப்பை எனக்கு அனுப்பினுர், அதை 'ஹரிஜ'னில் வெளியிடுவது மாத்திரமேயன்றி அதை மேலும் சரியானபடியும் உபயோகித்துக்கொள்ள வேண்டும் என்பதற்காக அதை வெளியிடுவதைத் தாமதப்படுத்தினேன். வேறு எதுவும் செய்ய நான் எண்ணுவதற்கில்லை. எனவே, இது எவ்வளவுதான் குறைந்த துறையாக இருப்பினும், எல்லா மாகாண அரசாங்கங்களுக்கு மாத்திரமன்றித் தனிப்பட்ட நபர்களுக்கும் பயன்படுவதற்காக இதைப் பிரசுரிக்கிறேன்.

இதுதான் ஸ்ரீ சுபேதாரின் திட்டம்:

"ஒவ்வொரு கிராமத்திற்கும் பொதுவில் ஒரு பெரிய கட்டுப் பருத்தியைக் கொடுக்க வேண்டும். கிராமத்தின் மக்கள் இதை நூலாக நூற்கலாம். நூலை ஈரிழைக்கோ அல்லது பாவுக்கோ உபயோகித்துக் கொள்ளலாம், துணியும் தயாரிக்கலாம்.

"ஒரு கட்டுப் பருத்தியிலிருந்து 2,400 கெஜம் துணி (அல்லது நூலின் நயத்தைப் பொறுத்து) சுமார் 1,800 கெஜம் கிடைக்கும்.

"ராட்டையும் தக்ளியும் தேவைப்பட்டால் அரசங்கம் அவற்றைக் கொடுக்க வேண்டும். (இவைகளைச் சிறையில் தயாரிப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.)

"துணி தயாரானதும், ஆளுக்கு இவ்வளவு என்ற பங்கீட்டின் கீழ் அது கிராம மக்களுக்குக் கிடைக்கும்படிச் செய்ய வேண்டும்.

"அந்தக் கிராமங்களில் தானியங்களைச் சேகரிக்க வேண்டியது அவசியமாக இருக்கும்போது, கிராமவாசிகளின் தேவைக்கு அதிகமாக அவர்களிடம் மிஞ்சும் தானியம் இருக்குமானால், துணியைக் கொடுத்துத் தானியத்தை வாங்கிக்கொள்ள வேண்டும். மற்றவர்கள் விஷயத்தில், பொதிப் பருத்தியின் விலைக்குக்கொடுக்க வேண்டியதற்குப் போதுமான தொகையைக் கிராம மக்கள் வசூலித்துக்கொள்ள வேண்டும். அதாவது, பருத்தியின் விலைக்கு (இதற்கு முதலில் அரசாங்கம் பணம் கொடுத்திருக்கும்) அவர்களுக்குத் துணி கிடைக்கும்.

"இதனால், துணிப் பஞ்சம் குறைவதோடு, விவசாயிகளிடம் விற்காமல் பஞ்சு இருக்கிறது என்ற குறையும் நீங்கிவிடுமாகையால், பருத்தி சாகுபடி செய்வோருக்கும் இது உதவி செய்யும்.

"கிராமப் பஞ்சாயத்தாரே பருத்திப் பொதியை எடுத்துக்கொண்டு முழுக் காரியத்தையும் கவனிக்க வேண்டியிருப்பதால் கீழ்க்கண்டவைகளைக் கொண்டு ஆரம்பிக்க வேண்டும்:

1. கிராமத் தொழில்.

2. கூட்டு, ஒன்றுபட்ட முயற்சி.

3. சின்னவர்களும் பெரியவர்களும் ஈடுபட்டு உழைப்பை உதவ வேண்டும்.

4. மத்தியில் தரகர் முதலியவர்கள் யாருமில்லாதவாறு விலக்கிவிட வேண்டும்.

"பம்பாய் மாகாணத்தில் இருபதினாயிரம் கிராமங்களைக்கொண்டோ, அல்லது அவற்றில் இரண்டாயிரம் கிராமங்களைக்கொண்டோ முதலில் இந்தப் பரீட்சையைச் செய்து பார்த்தால், அடுத்த ஆறு வாரங்களில் பலனைக் காணலாம்.

"பொதிப் பருத்திக்கு ரூ. 225 வீதம் அரசாங்கம் பணம் முடக்க வேண்டியிருக்கும். இப்பணத்தில் பெரும் பகுதி தானியமாகவோ, ரொக்கமாகவோ திரும்பி வந்துவிடும். ஆனால், கிராமவாசிகள் தங்களுக்குத் தாங்களே செய்துகொள்ளக்கூடியதற்கு இது ஒரு ஆரம்பத்தை உண்டாக்குவதாக இருக்கும்.

"தறிகள் இல்லாத இடங்களிலோ, தயாராகும் நூல் அப்படியே நெய்வதற்கு உபயோகிக்க முடியாததாக இருக்கும் இடங்களிலோ உதவி அளிக்க வேண்டியிருக்கும். ஆனால், இவையெல்லாம் விவகாரங்களேயாகையால் இவற்றை ஒவ்வொரு ஜில்லாவிலும் தலைமைக் காரியாலயத்தில், இருக்கும் யாராவது கவனித்துக்கொண்டு விடலாம்.

"கிராமம் பருத்திக்கான விலையைத் திருப்பிக் கொடுத்துவிட்டதும், முன்கூட்டிப் புதிதாகப் பருத்திப் பொதியைக் கிராமத்திற்கு அரசாங்கம் அனுப்ப வேண்டும்."

நான் கூறிய திட்டத்தில் சில மாறுதல்களைக் கொண்டது, இது. அசல் திட்டமே மேலானது என்பது என் கருத்து. என்றாலும், ஸ்ரீசுபேதாரின் திட்டத்திற்குஅதிக மதிப்புக்கொடுக்கிறேன். ஏனெனில், அவர் கணக்குப் போட்டிருப்பதோடு, ஆரம்பத்தில் ஒரு பொதி பருத்தி கொடுக்க வேண்டும் என்றும் யோசனை கூறியிருக்கிறார். அவர் பொருளாதார நிபுணராகையால் என் திட்டத்திற்குப் புறம்பாகவே திட்டம் வகுத்துமிருக்கிறார். மனிதன் போடும் ஒவ்வொரு திட்டத்திலும் குறைபாடுகளைக் கண்டு பிடித்துவிடுவது எளிது. ஆனால், குறைபாடுகளை நாம் அறிந்தால் அவற்றை நீக்குவதும், நாம் அறிந்து குறைபாடுகளிலிருந்தும் திருத்த முடியாமலிருந்தாலும் வேலையை ஆரம்பித்து விடுவதுமே நம் வேலை. பூரணமாக ஒழுங்காகட்டும் என்று காத்துக்கொண்டிருந்தால் எந்தச் சீர்திருத்தமும் சாத்தியமில்லை.

'ஹரிஜன்'—4—8—1946

6

# நான் மந்திரியாக இருந்தால்?

நான் சென்ற ஏப்ரல் 28-ஆம் தேதி 'ஹரிஜ'னில் எழுதியிருந்த குறிப்பை வாசகர் கவனிக்க வேண்டும்.* அப்பொழுது நான் கூறிய அபிப்பிராயமே என்னிடம் இன்னும் மாறாமல் இருக்கிறது. ஒரு விஷயம் மாத்திரம் தவறான அபிப்பிராயத்தை உண்டாக்கியிருக்கிறது. அக் குறிப்பைப் படித்த சில நண்பர்கள், அதில் கட்டாயப்படுத்துவது இருப்பதாக உணர்ந்திருக்கிறார்கள். அது தெளிவானதாக இல்லாமலிருப்பதற்காக வருந்துகிறேன். மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட அரசாங்கங்கள் விரும்பினால் என்ன செய்ய முடியும் என்ற கேள்விக்கு நான் பதில் சொல்லியிருந்தேன். அத்தகைய அரசாங்கங்களின் அறிவிப்புகள்கூட, கட்டாயப்படுத்துவதாகப் பொருள் செய்யப்பட்டுவிட முடியாது என்று கொண்டேன். ஏனெனில், சரியானபடி மக்களின் பிரதிநிதித்துவம் பெற்ற அரசாங்கம் செய்யும் ஒவ்வொரு காரியமும், எந்த வாக்காளர்களின் பிரதிநிதியாக அந்த அரசாங்கம் இருக்கிறதோ அந்த வாக்காளர்களின் அங்கீகாரத்தைப் பெற்றதாகவே ஆகும். வாக்காளர் என்பது பதிவான வாக்காளர்களாக இருந்தாலும் இல்லாவிட்டாலும், எல்லா மக்களையும் குறிக்கும். இதைக் கொண்டு தான் கிராமவாசிகள் தாங்கள் தயாரித்துக் கொள்ளும் கதரையே தாங்கள் உடுத்திக் கொள்ளுவது சாத்தியமாவதற்காக ஒரு

---

* மகாத்மா குறிப்பிடும் இக்குறிப்பு, இத்தொகுப்பில் கிராமக் கைத்தொழிலைப் பற்றிய மூன்றும் பாகத்தில் பிரசுரமாகியிருக்கிறது.

குறிப்பிட்ட தேதிக்குப் பிறகு மில் துணி அவர்களுக்குக் கொடுக்கப்படமாட்டாது என்று அரசாங்கம் அறிவித்துவிட வேண்டும் என்று எழுதினேன்.

ஏப்ரல் 28ஆம் தேதி நான் எழுதிய கட்டுரையின் பொருள் எதுவானாலும், கதருக்காக மேற்கொள்ளும் எந்தத் திட்டத்திற்கும், அதில் சம்பந்தப்பட்டவர்களின் முழு ஒத்துழைப்பும் இல்லையானால், சுயராஜ்யத்தை அடைவதற்கு ஓர் உபாயமான தான கதருக்கு அது சாவாகவே ஆகும் என்பதைக் கூற விரும்புகிறேன். பிறகு, கதர் என்பது மத்திய கால இருளுக்கும் அடிமைத்தனத்திற்கும் திரும்புவதாகும் என்று வசை கூறப்படுவதும் உண்மையானதாகிவிடும். ஆனால், என் கருத்து இதற்கு மாறானது. கட்டாயத்தின் கீழ் கதர், அடிமைத்தனத்தின் சின்னமே. ஆனால், புத்திசாலித்தனமாகவும், தாமாகவும் முக்கியமாகத் தங்களுடைய உபயோகத்திற்கு என்றும் தயாரித்துக்கொள்ளப்படும் கதர், எளிதில் நமது சுதந்திரத்தின் சின்னமே ஆகும். எல்லாம் சுய உதவியாக இல்லையானால், சுதந்திரம் என்பதற்கே பொருள் இல்லை. சுதந்திரமான ஒருவரின் உரிமையாகவும் கடமையாகவும் கதர் இல்லாமலிருந்தால், என்னைப்பொறுத்தவரையில், கதருடன் எந்தச் சம்பந்தமும் கொள்ளமாட்டேன்.

இவ்விதம் தயாரான கதர், அதே சமயத்தில் விற்பனைக்கானதாகவும் இருக்க முடியுமா என்று, சிநேக முறையில் குணதோஷம் கூறும் ஒருவர் கேட்கிறார். விற்பனை, அதன் இரண்டாந்தர உபயோகமாக இருப்பின், விற்கலாம். ஆனால், விற்பது தான் அதன் ஒரே,அல்லது முக்கியமான உபயோகமாக இருக்குமாயின், கூடாது. கதர் விற்பனைக் காட்சிகள் மூலம் நாம் ஆரம்பித்தது, தாற்காலிகஅவசியத்திற்காகவும், நமதுஅளவிற்குப்பட்ட சிந்தனையினாலும் ஆகும். அனுபவமே பெரிய ஆசான். அது நமக்கு அநேக விஷயங்களைப் போதித்திருக்கிறது. அதன் முக்கியமான உபயோகத்தையும் அது போதித்திருக்கிறது. ஆனால், அது எந்த விதத்திலும் முடிவானது அல்ல. எனினும், இவ்விதம் கணக்குப் போட்டுக் கொண்டு போகும் கவர்ச்சிகரமான துறையை விட்டு விட்டுத் தலைப்பில் கொடுக்கப்பட்டிருக்கும் கேள்விக்குப் பதில் சொல்ல நிச்சயமாக நான் வரவேண்டும்.

சர்க்காரின் எல்லா நடவடிக்கைகளுக்கும் கிராமங்களே கேந்திரமாக இருப்பதற்குப் புத்துயிரளிக்கும் வேலையிலிருக்கும் மந்திரி என்ற முறையில், இருக்கும் நிரந்தர அரசாங்க உத்தியோகஸ்தர்களில் இந்த வேலைக்குத் தகுந்த, யோக்கியமான, ஊழல்களுக்காளாகிவிடாதவர்களைக் கண்டுபிடிப்பதுதான் என் முதல் வேலையாக இருக்க வேண்டும். அவ்விதம் தேர்ந்தெடுத்தவர்களில் சிறந்தவர்களாக இருப்பவர்களை, காங்கிரஸ் சிருஷ்டித்திருப்பவைகளான அகில இந்திய நூற்போர் சங்கத்துடனும், அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்துடனும் தொடர்பு கொள்ளும்படிச் செய்து, கிராமக் கைத்தொழிலுக்கு அதிக

உற்சாகமளிக்கக்கூடிய திட்டத்தைத் தயாரிக்கும்படி செய்வேன். கிராமவாசிகளைக் கட்டாயப்படுத்துவது இருக்கக் கூடாது, மற்றவர்களுக்கு அவர்கள் அடிமைகளாக வேலை செய்யக் கூடாது, அவர்கள் தங்களுக்குத் தாங்களே உதவியாக இருக்கும்படியும், உணவுப் பொருள்கள், துணி முதலிய மற்ற அவசியப் பொருள்களை உற்பத்தி செய்து கொள்ளுவதற்குக் கிராமவாசிகள் தங்கள் உழைப்பையும் திறமையையுமே நம்பி இருக்கும்படியும் அவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்றும் விதிப்பேன். இவ்வாறு இத்திட்டம் விரிவானதாக இருக்க வேண்டும். ஆகையால், ஹிந்துஸ்தானி தாலிமி சங்கத்தைப் பார்த்து, அது என்ன சொல்லுகிறது என்பதைக் கவனிக்கும்படி என் முதல் ஆளுக்கு அறிவிப்பேன்.

இவ்வாறு தயாரான திட்டத்தில், கிராமவாசிகள் தாங்களாகவே, குறிப்பிட்ட ஒரு தேதியிலிருந்து ஒரு வருட காலத்திற்குப் பிறகு தங்களுக்கு மில் துணி வேண்டியதில்லை என்று அறிவித்து விடும் விதி ஒன்றும் இருக்கும் என்று வைத்துக்கொள்ளுகிறேன். அப்பொழுது அவர்களுக்குப் பருத்தி, கம்பளி, அவசியமான கருவிகள், சொல்லிக் கொடுப்பது ஆகியவை வேண்டும். இவை இனமாக வேண்டியதில்லை. சுலபமான தவணையில் அவைகளுக்குப் பணம் கொடுத்துவிடுவார்கள். இது மாகாணம் முழுவதிலும் உடனே அமுலுக்கு வந்துவிடாது, முதலில் ஒரு பகுதியில்தான் ஆரம்பமாகும் என்றும் திட்டத்தில் இருக்கும். மேலும், இத்திட்டத்தை நிறைவேற்றுவதில் அகில இந்திய நூற்போர் சங்கம் வழிகாட்டி உதவும் என்றும் இத்திட்டம் சொல்லும்.

திட்டம் சரியானதுதான் என்பதில் எனக்குத் திருப்தி ஏற்பட்டதும், சட்ட இலாகாவுடன் கலந்தாலோசித்துக் கொண்டு அதைச் சட்டமாக்குவேன். திட்டத்தின் தன்மையை முற்றிலும் விளக்கி அறிவிப்பை வெளியிடுவேன். கிராமவாசிகளும், மில் சொந்தக்காரர்களும், மற்றவர்களும் கூட, இதற்கு உடன்படுபவர்களாக இருக்க வேண்டும். அரசாங்கத்தின் முத்திரையைக் கொண்ட மக்கள் நடவடிக்கையே இது என்று அறிவிப்பு தெளிவாகக் காட்டும். சம்பந்தப்பட்ட மக்களுக்கு அதிகப்பட்ச நன்மை கிடைக்கும் வகையில், அதிக ஏழைகளாக இருக்கும் கிராமவாசிகளுக்குப் பயன்படும் வழியில், அரசாங்கத்தின் பணம் உபயோகிக்கப்படும். ஆகையால், அது மிகுந்த லாபகரமான முதலீடாக இருக்கக் கூடும். இதில் நிபுணர்களின் உதவி இனமாகக் கிடைப்பதாகவும், நிர்வாகச் செலவு மிகவும் குறைந்ததாகவும் இருக்கும். இதனால், நாட்டிற்கு மொத்தம் எவ்வளவு செலவு ஏற்படும், மக்களுக்கு இதனால் என்ன நன்மை உண்டாகும் என்பன பற்றிய விவரங்கள் அறிவிப்பில் அடங்கியிருக்கும்.

ஒரு கதர்த் திட்டத்தைச் சிருஷ்டித்து, அதை வெற்றிகரமாக நடத்துவதற்கான பாரத்தை ஏற்பதற்கான சக்தியும் நம்பிக்கையும் அகில இந்திய நூற்போர் சங்கத்திற்கு இருக்கிறதா என்பதுதான் மந்திரி என்ற முறையில் நான் கவனிக்க வேண்டிய

ஒரே விஷயம். நூற்போர் சங்கத்திற்கு அவை உண்டு என்ருல், என்னுடைய சிறு படகை நம்பிக்கையுடன் கடலில் விட்டு விடுவேன்.

'ஹரிஜன்' - 1—9—1946

# 7

# கை நூற்பும் மில் நூற்பும்

இந்தியா முழுதும் மாகாண மந்திரி சபைகள் அமைக்கப்படுவதற்குக் கொஞ்சம் முன்னுல், க்திர்கள் விகிதாசாரத்தில் கொடுக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டிருப்பதாகவும், அளிக்கும் விகிதத்தை ஒரு மாகாணம் ஏற்றுக்கொள்ளாவிட்டால், ஏற்க மறுக்கப்பட்டுவிட்ட விகிதம் மற்ற மாகாணங்களுக்கு மாற்றப்பட்டுவிடும் என்று தெரிவித்திருப்பதாகவும் கேள்விப்பட்டேன். இப்பொழுது மாகாண நிர்வாகங்கள் முழு மூச்சில் நடந்து வருகின்றன. ஆகையால், இந்த அரசாங்கங்கள், புதிய மில்கள் ஏற்படுவதை அங்கீகரிக்குமா, அதே சமயத்தில் தேசம் முழுவதிலுமான வகையில் கையினுல் நூற்பதை இந்த அரசாங்கங்கள் வளர்க்குமா என்ற பிரச்னே எழுந்திருக்கிறது. கையினுல் நூற்பதற்கு அளிக்கும் ஆதரவை மனமாரச் செய்வதாயிருந்தால், புது மில்களே அமைக்கக் கூடாது என்பதுதான் என்னுடைய கண்டிப்பான பதில். இந்தியா முழுமைக்கும் நூற்பு யந்திரங்களே அளிப்பது என்ற கொள்கையில் ஓர் அடிப்படையான நம்பிக்கை இருந்து வருகிறது. இந்தியாவின் துணித் தேவையை மில்கள் மாத்திரமே பூர்த்தி செய்ய முடியும், செய்ய வேண்டும்; கொள்கைப் பித்தர்கள் சிலருக்காகக் கையினுல் நூற்பதும் இருந்து வர அனுமதித்துவிடலாம் என்பதுதான் அந்த அடிப்படையான நம்பிக்கை. காங்கிரஸ் தீர்மானங்கள், கையினுல் நூற்பதைக் குறித்துக் கொண்ட கருத்து அதுவல்ல. அகில இந்திய நூற்போர் சங்கம் அபிவிருத்தி அடைந்திருக்கும் வழியும் நிச்சயமாக அது அல்ல. கையினுல் நூற்பதற்கு எந்த எதிர் காலமும் இல்லே, இருக்கக் கூடாது என்ற முடிவுக்குத் தேசீய சர்க்கார்கள் வந்திருக்குமானுல், அகில இந்திய நூற்போர் சங்கம் பின்பற்றி வந்திருக்கும் முறைகளில் எதற்கும் ஒரு ரூபாய் கூட அந்த அரசாங்கங்கள் வீணுக்கக் கூடாது. இதற்கு மாருக இந்த அரசாங்கங்கள், அகில இந்திய நூற்போர் சங்கம் கொண்டிருக்கும் நம்பிக்கையில் பங்கு கொள்ளுவதாயின், தங்களுக்கு அளித்திருக்கும் நூற்கும் யந்திரக் கதிர் விகிதத்தை வேண்டாம் என்று சொல்லிவிடுவதால் கொஞ்சம் ஆரம்ப நஷ்டத்தை அடைய நேர்ந்தாலும், வேண்டாம் என்றுதான் விட்டுவிட வேண்டும். இந்த நஷ்டம், நன்ருகத் தெரியும் வகையில் பாமர மக்களுக்கு எதிர்கால லாபமாக இருக்கும்.

—'ஹரிஜன்' - 6—10—1946

# 8

# அரசாங்கத்திற்குச் சொந்தமாவதும் கட்டுதிட்டமும்

துணியில் சுயதேவைப் பூர்த்தி செய்துகொள்ளும் பரீட்சையை அனுசரித்துப் பார்க்க மக்கள் தயாராயிருக்கும் சில இடங்களில் மில் துணி வருவதை அரசாங்கம் தடுத்துவிட வேண்டும் என்று காந்திஜி யோசனை கூறினர். கதரையே எல்லோரும் உடுத்தும்படி செய்ய வேண்டும் என்பதில் மாகாண அரசாங்கங்கள் அதிகச் சிரத்தையுடன் இருப்பதாயிருந்தால், அவை புதிய ஜவுளி மில்களை அமைக்காததோடு அமைக்க அனுமதிக்கவும் கூடாது என்றும் சொன்னர். புதிய மில்களை அமைப்பதில் கோடிக்கணக்கான ரூபாயைச் செலவிட்டுவிட்டு, அதே சமயத்தில் தங்கள் கதர்த் திட்டத்தை அந்த ஆசாங்கங்கள் சிரத்தையுடன் நிறைவேற்றுவார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. கிராமவாசி புத்திசாலி. துணி விஷயத்தில் சுயதேவையைப் பூர்த்தி செய்துகொள்ள வேண்டும் என்று அரசாங்கம் தங்களிடம் சொல்லும் அதே சமயத்தில், தங்கள் மாகாணத்தில் புதிய ஜவுளி மில்களையும் அது அமைத்து வருவதைப் பார்த்து உடனே சந்தேகங் கொண்டுவிடுவார்கள்.

எல்லாப் புது மில்களையும், சாத்தியமானவுடன் இப்பொழுது இருக்கும் மில்களையுங்கூட, அரசாங்கத்திற்குச் சொந்தமானவைகளாக்கிவிட வேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக்கொள்ளும் தீர்மானம் ஒன்றை அகில இந்திய நூற்போர் சங்கம் நிறைவேற்ற வேண்டும் என்று ஓர் உறுப்பினர் யோசனை கூறினர். இந்த யோசனையை ஏற்றுக்கொள்ள காந்திஜி மறுத்துவிட்டார். கதரும், புதிய மில்களை அமைப்பதும் பொருந்தாத காரியங்கள் என்று அரசாங்கங்களுக்கு நாம் சொல்லிக்கொண்டிருக்கும்போது, புதிய மில்களை அரசாங்கத்தின் சொத்தாக்கிவிட வேண்டும் என்று நாம் கேட்க முடியாது என்று விளக்கினர். சென்னைப் பிரதமர் ஸ்ரீ டி. பிரகாசம், சென்னை மாகாணத்தில் புதிய மில்கள் அமைக்கப்பட மாட்டா என்று இப்பொழுதே அறிவித்திருக்கிருர். இப்பொழுது இருக்கும் மில்களை அரசாங்கத்தின் உடைமையாக்க வேண்டும் என்று கேட்கலாம். ஆனல், அவற்றை அரசாங்கத்தின் ஸ்தாபனங்களாக நடத்துவதற்குப் பதிலாக, அவற்றைக் கண்டிப்பான கட்டு திட்டங்களின் கீழ் கொண்டு வருவதுதான் மேலானது என்றும் காந்திஜியே கூறினர். அகிம்சையில் நம்பிக்கைகொண்டவர் என்ற முறையில், தருமகர்த்தா முறையை அவர் நம்புகிருர். மில் சொந்தக்காரர்களும், அவற்றில் வேலை செய்யும் தொழிலாளரும், எல்லோருமே வலிய சமூகத்தின் நிர்வாகத்தின் கீழ் வந்துவிடும் அமைதியான மாறுதலை மில் முதலாளிகள் அடைய வேண்டும் என்று விரும்பினர். அதாவது, ஒருவர் சட்டப்படி ஒரு மில்லின்

சொந்தக்காரராகத் தொடர்ந்து இருந்து வந்தபோதிலும், அவருடைய சேவைக்கு ஏற்றதையும், மக்களால் அனுமதிக்கப்படுவதையுமே லாபத்திலிருந்து அவர் கமிஷனாக எடுத்துக்கொள்ளுவார். மில்களில் இருக்கும் தொழிலாளரே, மில்களின் உண்மையான முதலாளிகள். டாட்டாவின் ஸ்தாபனங்களில் ஒன்றில், லாபத்தில் தொழிலாளர் பங்குதாரர்களாகிவிட்டதாகச் சொல்லப்படுகிறது. அதன் சம்பந்தமாக ஸ்ரீ ஜே. ஆர். டி. டாட்டா செய்திருக்கும் பிரசங்கம் கவனிக்கத்தக்கதாகும். அத்தகைய பரிகாரமே சிறந்தது என்று காந்திஜி கருதினர். விரும்பினுல், இத்தகைய திட்டத்தில் ஒத்துழைக்கத் தாங்கள் தயாராக இருப்பதாகவும், தங்கள் ஜவுளி மில்களை மேற்கொண்டும் விஸ்தரிப்பதைத் தடுத்துக்கொள்ளுவதாகவும் பல மில் முதலாளிகள் காந்திஜியிடம் உறுதி கூறியிருக்கிறார்கள். மில் தொழிலை அரசாங்கம், அகில இந்திய நூற்போர் சங்கம், மில் சொந்தக்காரர்கள் ஆகியோர் கூட்டாக நிர்வகிப்பது என்ற கருத்தைக் காந்திஜி ஆதரிக்கவில்லை. "சிறிய ராட்டையைக் கையினுல் சுற்றுவதுதான் நம் வேலையே யன்றி மில்களை நிர்வகிப்பது அன்று. நாம் செய்ய வேண்டியதற்குப் புறம்பானதான ஒரு காரியத்தைக் குறித்து விவாதிப்பதில் நாம் ஏன் நம் நேரத்தை வீணக்க வேண்டும்? எல்லா மில்களையும் மூடிவிட நேர்ந்தாலும் நான் ஒரு சொட்டுக் கண்ணீரைக் கூடச் சிந்தமாட்டேன். மில்கள் செழிக்க வேண்டுமானுல், கதர் சாக வேண்டும். ஏழைகளின் கஷ்ட நிவாரணத்திற்கு ஒரு துணைத் தொழிலாக அது இன்னும் இருந்துவர முடியும். ஆனுல், அதற்காகச் சர்க்கா சங்கத்தைப் போன்ற பெரிய ஸ்தாபனம் வேண்டியதில்லை" என்றார். அவர்களுடன் கலந்தாலோசித்து, அவர்களுடைய ஆலோசனைக்கு ஏற்ப, முடிந்தவரையில் ஜவுளி மில்கள் மீது கட்டு திட்டங்களை அரசாங்கம் அமுலுக்குக் கொண்டு வந்தாலே தாம் முழுதும் திருப்தியடையக் கூடும் என்றும் முடிவாகக் கூறினர்.

கதருக்குச் சகாய நிதிகொடுக்கும் விஷயமும் விவாதத்திற்கு வந்தது. கையினுல் நூற்ற நூலை நெய்வது, மேலும் மேலும் கஷ்டமானதாகிக் கொண்டு வருகிறது. மில் நூலை நெய்யவே நெசவாளர்கள் விரும்புகிறார்கள். சுயதேவைக்கான கதரும் அதிக விலையுள்ளதாக இருக்கும் வகையில் நெசவுக் கூலி அவ்வளவு அதிகமாகி இருக்கிறது. "தாங்களே நூற்றுக்கொள்ளுவோருக்கு நெசவுக்காகும் செலவு குறைவாக இருக்கும்படி செய்வதற்காகத் தங்களுக்கு வேண்டியதைத் தாங்களே நூற்றுக்கொள்ளுவோருக்கு அரசாங்கம் பண சகாயம் செய்ய வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்பது நல்லதா?" என்று ஸ்ரீ ஜாஜுஜி கேட்டார். இதற்குப் பதிலளித்த காந்திஜி, அரசாங்கத்தினிடம் பண சகாயம் கேட்கக்கூடாது என்றார். தங்கள் சொந்த துணித் தேவைக்காகத் தாங்களே நூற்றுக்கொள்ள முற்படுகிறவர்களுக்குப் பருத்தி, அவசியமான கருவிகள், சொல்லிக் கொடுப்பவர்கள், மற்ற நிபுணர்கள் உதவி ஆகியவைகளைக் கொடுக்கும்படி அர

சாங்கத்தைக் கேட்கலாம் என்ருர். கொள்கைப் பித்தர்களின், கிறுக்கர்களின் இஷ்டத்திற்கெல்லாம் அரசாங்கம் பணத்தை வாரி இறைக்கும்படி செய்யும் வகையில் சர்க்கா சங்கம் தனது செல்வாக்கை உபயோகித்து வருகிறது என்று சொல்லப்படுவதற்கு இடமளிக்கக் காந்திஜி விரும்பவில்லே. தன் தகுதியிலேயே நிற்கவோ, விழவோ வேண்டிய சர்க்கா சங்கத்திற்குத் தயவு காட்டப்படுவதை அவர் விரும்பவில்லே. ஒன்றுக்குப் பத்தாகப் பிரதி பலன் கிடைக்காத எதற்கும், சர்க்கா சங்கம் சொன்னதற்காக எதுவும் கொடுக்கப்பட்டு விடவில்லே என்று ஒவ்வொருவரும் உணர வேண்டும் என்றும் காந்திஜி விரும்பினர்.

—'ஹரிஜன்' – 20—10—1946

# 9
# துணிப் பஞ்சத்தைப் போக்கும்

துணிப் பஞ்சம் இருந்து வருவதை ஆறு மாதங்களில் நீக்கி விடுவதற்கான உதவியைக் கதர் செய்ய முடியும் என்று ஒரு நண்பர் எழுதுகிருர். இதற்கு இரண்டு காரியங்கள் அவசியம்: (1) ஒவ்வொரு கிராமத்திலும் நூற்பதையும் நெய்வதையும் உற்சாகப்படுத்தும் கொள்கையை மத்திய அரசாங்கமும், மாகாண அரசாங்கங்களும் அனுசரிக்க வேண்டும். (2) மாகாணத் தலேவர்களும், அகில இந்தியத் தலேவர்களும், கதரை எல்லோரும் உபயோகிக்கும்படி செய்வதற்கு இன்னும் அதிகமான முயற்சியை எடுத்துக்கொள்ள வேண்டும்.

துணிப் பஞ்சத்தைப் போக்கிக்கொள்ளுவதற்காக இந்தக் காரியங்களே நிறைவேற்றுவது அனுசரிக்கத்தக்கதாகவும், காங்கிரஸின் கடமையாகவும் இருக்க வேண்டும் என்பது என் கருத்து. இவ்விஷயத்தில் நாம் காட்டி வரும் சந்தேகத்திற்கிடமில்லாத அசிரத்தை, நமது கடமையில் நாம் தவறிவிட்டோம் என்பதைக் காட்டுகிறது. துணி விலே மிக அதிகமாக உயர்ந்துவிட்டது. நமது அசிரத்தையைப் போக்கி விடுவதற்கு இதுவே சரியான சமயம். கதரில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருப்பவர்களின் உதாரணத்தையும், நடத்தையையும், புத்திசாலித்தனத்தையும் கொண்டு இதைச் செய்துவிடலாம். கதரின் லட்சியத்தைப் பரப்பும் கொள்கையை அரசாங்கம் அனுசரிக்கும் போது, துணி மீதும் மற்றப் பொருள்கள் மீதும் இருக்கும் கட்டுப்பாடுகளெல்லாம் தாமே போய்விடும்.

—'ஹரிஜன்' – 11—1—1948

# 10

# அரசாங்கங்களுக்கு மகாத்மாவின் கதர்த் திட்டம்

[கீழே கொடுக்கப்பட்டிருப்பது, அரசாங்கங்களுக்கு மகாத்மா காந்தி தயாரித்த கதர்த் திட்டமாகும். இத்திட்டத்தைக் குறித்து 'ஹரிஜன்' பத்திரிகையில் 1948 செப்டம்பர் 26-ஆம் தேதி ஸ்ரீ கே. ஜி. மஷ்ருவாலா எழுதிய தலையங்கத்தில் வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கிருர் : 'புனுவில் நடந்த அகில இந்திய நூற்போர் சங்கத்தின் நிர்வாக சபைக் கூட்டத்தில் காந்திஜி, இப்பிரச்னைகளின் தன்மைகளைக் குறித்து டிரஸ்டிகளுடன் விவாதித்தார் என்று அறிகிறேன். பிறகு அச்சபையின் ஆலோசனைக்கு நகல் தீர்மானம் ஒன்றையும் காந்திஜி தயாரித்தார். ஏதோ சில சிரமங்களை முன்னிட்டு இந்தத் தீர்மானம், அக்கூட்டத்தில் கைவிடப்பட்டதாகத் தோன்றினும், சங்கத்தின் காரியதரிசி அத்தீர்மானத்தின் நகல் ஒன்றை அன்புடன் எனக்கு அனுப்பியிருக்கிருர். அது மிகவும் முக்கியமானதால் அதை மொழி பெயர்த்து, இந்த இதழில் கொடுத்திருக்கிறோம்.' அந்தத் தீர்மானமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

"இந்தியாவிலும், மலேயா போன்ற உலகின் பல பகுதிகளிலும், இப்பொழுது இருந்து வருவதைப் போன்ற துணிப் பஞ்சம் இருக்க வேண்டிய நிலைமையே இல்லாதபடி செய்து விடக்கூடிய சக்தி, ராட்டைக்கும் கைத்தறிக்கும் இருக்கிறது. அகில இந்திய நூற்போர் சங்கம், தனது சொந்த அனுபவத்தைக் கொண்டு இதை உணர்கிறது. பண்டைக் காலத்திலிருந்து கையினல் நூற்பதனுலும், கை நெசவினுலும் தொடர்ந்து துணி தயாரித்துக் கொண்டு வரும் ஒரே நாடு இந்தியாதான். ஜவுளி மில்கள் ஏற்பட்டிருக்கும் இக்காலத்தில்கூட, அகில இந்திய நூற்போர் சங்கத்தின் மூலம் அது சுத்தமான கதரை உற்பத்தி செய்து வருகிறது. கால் நூற்ருண்டாக, அகில இந்திய நூற்போர் சங்கம் வேலை செய்து வந்திருக்கும் காலத்தில், இந்தியாவின் ஏழைகளான நூற்போருக்கும் நெசவாளருக்கும் ஏழு கோடி ரூபாயைக் கூலியாக வினியோகித்திருக்கிறது.

"இப்பொழுது ஒவ்வொரு மாகாணத்திலும் மக்களுக்குப் பொறுப்பு வாய்ந்தவைகளான அரசாங்கங்கள் இருந்து வருவதால், எவ்வளவு சீக்கிரத்தில் எல்லா இடங்களிலும் கதர் உற்

பத்தியாகும்படி செய்ய முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக அது உற்பத்தியாகும்படி செய்வதை முன்னிட்டு, இந்த அரசாங்கங்கள் மில் துணியைப் பட்டணங்களுக்கும் இந்தியாவுக்கு வெளியிலுள்ள இடங்களுக்கும் மாத்திரம் போக அனுமதித்து, அத் துணி கிராமங்களுக்குச் செல்வதைத் தடுத்துவிட வேண்டும். அதிகப் பட்சமாக, மில் துணியைக் கிராமங்களுக்கு ஒரு வருட காலத்திற்கு மாத்திரம் அனுமதிக்கலாம். அதே சமயத்தில், ஒவ்வொரு கிராமத்திலும் கதரை உற்பத்தி செய்வதற்கான திட்டத்தை வகுத்து, அதை அமுலுக்குக் கொண்டுவர வேண்டும். நூற்பதற்கும் நெய்வதற்கும் வேண்டிய கருவிகளை மாகாண அரசாங்கங்கள், கஷ்டமில்லாத தவணை முறையில், மக்களுக்குக் கொடுக்க வேண்டும். இந்த வேலைத் திட்டத்தை நிறைவேற்றி வைப்பதற்குத் தங்களாலான எல்லா உதவிகளையும் செய்ய அகில இந்திய நூற்போர் சங்கமும் அதன் கிளைகளும் தயாராக இருக்கின்றன.

"பட்டணங்களிலும் கிராமங்களிலும் இருக்கும் ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும், குறைந்தது தினத்திற்கு ஒரு மணி நேரம், மாணவர்களுக்கு நூற்பதிலும் நெய்வதிலும் பயிற்சி அளிக்க வேண்டும். சாத்தியமான வரையில் சிறுவரும் சிறுமியரும் நூற்கும் நூலை அவர்களே துணியாக நெய்து கொள்ளுவதற்கும் கற்றுக்கொடுக்க வேண்டும்.

"ஒவ்வொரு காங்கிரஸ் உறுப்பினரும், கதர் உற்பத்திக்குச் சாதகமான சூழ்நிலையை உண்டாக்குவதற்காகத் தம்மாலியன்ற முழு முயற்சியையும் செய்தாக வேண்டும் என்று ஒரு முடிவுக்கு வர வேண்டும் என்று காங்கிரஸ் காரியக் கமிட்டியை அகில இந்திய நூற்போர் சங்க டிரஸ்டிகள் கேட்டுக் கொள்ளுகிறார்கள். இந்த முக்கியமான வேலைக்குத் தங்கள் உதவியையும் அளிக்க வேண்டும் என்று மில்களின் சொந்தக்காரர்களும் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர். கையினால் நூற்பதற்கும் நெய்வதற்கும் வாய்ப்பு இருக்கும் பகுதிகளுக்கு மில் துணி போகாத வகையில், அகில இந்திய நூற்போர் சங்கத்தைக் கலந்துகொண்டு அரசாங்கங்களும் மில்களும் செய்ய வேண்டும். இதோடு, புதிய மில்களை அமைக்கக்கூடாது ; பழைய மில்களில் புதிதாக யந்திரங்களைப் பொருத்தக் கூடாது. அரசாங்கங்கள், அகில இந்திய நூற்போர் சங்கம் ஆகியவைகள் கூறும் யோசனைகளை அனுசரித்து மில்களில் வேலை நடக்க வேண்டும். இக்காரியத்திற்கு அவசியமாகும் சட்டங்களை மாகாண அரசாங்கங்கள் நிறைவேற்றி அவற்றை அமுலுக்குக் கொண்டு வர வேண்டும்."

[ஹிந்துஸ்தானி மூலத்திலிருந்து மொழிபெயர்ப்பு]

—'ஹரிஜன்'–26—9—1948

பகுதி பதினேழு

# கைத்தறிகள்

## 1

## கைத்தறியும் ராட்டையும்

பம்பாய் தகவல் இலாகா டைரக்டர், கைத்தொழில் வர்த்தக இலாகாவில் நடந்திருக்கும் கைத்தறி நெசவைக் குறித்துக் குறிப்பு ஒன்றை வெளியிட்டிருக்கிருர். அக்குறிப்பின் முக்கியமான பகுதிகளைக் கீழே கொடுக்கிறேன் :

கைத்தறி நெசவிலும், சாயம் போடுவதிலும், அச்சிடும் வேலையிலும் சிறந்த, அதிகச் சிக்கனமான முறைகளைப் புகுத்துவதற்காகச் சென்ற பதினைந்து ஆண்டுகளாக அரசாங்கம் முயற்சி செய்துகொண்டு வருகிறது. கைத்தறி நெசவு இம்மாகாணத்தில் இன்னும் முக்கியமான தொழிலாகவே இருந்துவருகிறது. ஏனெனில், இம்மாகாண மக்களுக்குத் தேவையான துணியில் கால்வாசிக்கு அதிகமான துணியை இது தயாரித்துக் கொடுத்து வருகிறது. சென்ற முப்பது ஆண்டுகளில் யந்திரத் தறிகள் உற்பத்தியை எவ்வளவு வேகமாக அதிகரித்துக்கொண்டிருக்கின்றனவோ அவ்வளவு வேகத்தில் கைத்தறிகளும் உற்பத்தியை அதிகரித்திருக்கின்றன.

கைத்தொழில் இலாகாவின் நிர்வாகத்தில் நான்கு நெசவுப் பள்ளிக்கூடங்களும், நெசவு செய்து காட்டும் ஸ்தாபனங்கள் ஏழும் நடந்து வருகின்றன. இவை சென்ற ஆண்டிலும் தொடர்ந்து நடத்தப்பட்டன. இந்த ஸ்தாபனங்களின் வேலைகளில் ஒன்று, நாடாத் தறிகளைக்கொண்டு வருவதற்கு உதவுவது. இது தனிப்பட்ட நெசவாளர் நூற்கும் துணியின் அளவை 40 சதவிகிதம் அதிகரிக்கிறது. இந்தப் பள்ளிக்கூடங்களில் பருத்தி நூலை நெய்யவும், மெர்ஸரைஸ் செய்த கரை போட்ட புடவைகளும், பட்டுப்புடவைகளும், வேட்டிகள், சட்டைத் துணிகள் நெய்யவும், மிகச் சிக்கலான தினுசுகளையும் கவர்ச்சியான அமைப்புள்ளவைகளையும் நெய்யவும் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. இது, பள்ளிக்கூடம் இருக்கும் பகுதிகளில் உள்ள மற்ற நெசவாளிகளுக்கு இதைப் பார்த்துக் கற்றுக்கொள்ள ஒரு படிப்பினையாக இருந்து வருகிறது. இந்தப் பள்ளிக்கூடங்களில் புதிதாகக் கற்றுக்கொள்ளுகிறவர்களுக்குக் கதர் குழித் தறிகளும், தேர்ச்சி பெற்றுவிட்டவர்களுக்குப் புடவைத் தறிகளும் இருக்கின்றன. போன வருடம் மில் ஜவுளித் தொழிலுக்குச் சுபிட்சமான வருடமாக இல்லாதிருந்தபோதிலும் கைத்தறித் தொழிலாளருக்கு அதிக சௌகரியமாக இருந்திருக்கிறது என்பது கவனிக்கத்தக்கதாகும். பட்டும் மற்றக் கவர்ச்சியான ரகங்களும் தயாரிக்கப்படும் பகுதிகளில் இருக்கும் கைத்தறித் தொழிலாளர்கள் மாதம் ரூ. 50 முதல் ரூ. 60

வரை சம்பாதிக்க முடிந்தது. ஆனால், கதர் குழித் தறிகள், மற்ற பருத்தி நூல் தறிகளில் வேலை செய்தவர்களுக்கு மாதம் ரூ. 35-க்கு மேல் கிடைக்கவில்லை.

தார்வார் ஜில்லாவில் ஹோஷாலி என்ற இடத்தில் விவசாயிகளுக்கு ஓய்வு நேரத் தொழிலாகக் கைத்தறி நெசவைச் சொல்லிக் கொடுக்கும் சோதனை தொடர்ந்து நடந்து வந்தது. பள்ளிக்கூடத்தில் எட்டு விவசாயி களுக்கு ஒரே சமயத்தில் சொல்லிக் கொடுக்க வசதி செய்யப்பட்டது. இதன் பலனாக, முதல் கோஷ்டியில் பயிற்சி பெற்றவர்களில் ஆறு பேர் கைத்தறி நெசவில் தீவிரம் கொண்டு நாடாத் தறிகளை வாங்கிவிட்டனர். மற்றவர்களும் அதே போல வாங்கப் போவதாக அறிவித்திருக்கிறார்கள். முந்திய வருடம் இச்சோதனை செய்யப்பட்ட ஹூல்கோட்டியில் விவசாயிகளிடையே இரு டஜன் நாடாத் தறிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

தூலியாவிலுள்ள நெசவாளர் சங்கம், விசைத் தறிகள், அவைகளின் சாதனங்கள் ஆகியவைகளைச் செய்து காட்டுவதற்கு ஏற்பாடு செய்யும்படி இலாகாவுக்கு மனுச் செய்து கொண்டது. அவ்வாறே செய்யப்பட்டது. இந்த யந்திரங்களின் விலை அதிகமாக இருப்பதால் நெசவாளரால் வாங்க முடிய வில்லை. ஆனால், கஞ்சி போடுவதற்கான ஒரு கை யந்திரம், இப்பொழுதுள்ள முறையைவிட அதிக அபிவிருத்தியுள்ளதாகக் காணப்பட்டது. உள்ளூரிலேயே அதே போன்று செய்வதற்காக ஏற்பாடுகள் செய்யப்பட்டன. கைத்தறிகள் ஏராளமாக இருக்கும் இடமான ஷோலாப்பூரில் பல யந்திரங்களில் இலாகா வேலை செய்து காட்டிக்கொண்டிருக்கின்றது. இந்த இடத்தில் யந்திர மில் களுடன் போட்டி போட்டு நூற்றுக்கணக்கான நாடாத் தறிகள் லாபகரமாக வேலை செய்து வருகின்றன. நெசவு சம்பந்தப்பட்ட வரையில் கைத்தறி நெச வாளர், மில்லில் நெய்கிறவருடன் போட்டி போடமுடியும். ஆனால், பாவு போடுவது, தாறு திரிப்பது, ஈரிழையாக்குவது போன்றவைகள் மெதுவான வைகளாகவும் குறைபாடுள்ளவைகளாகவும் இருப்பது கஷ்டமாக இருந்து வருகின்றன.

கைத்தொழில் இலாகா செய்து காட்டி வரும் வேலை எவ்வளவு பய னுள்ளதாக இருக்கிறது என்பதைத் தானா ஜில்லாவில் பிவாண்டி என்ற இடத்தில் காணலாம். 1916-இல் இங்கே நெசவுப் பள்ளிக்கூடம் ஆரம்ப மாயிற்று. நெசவாளரிடம் நாடாத் தறிகள் பல புகுத்தப்பட்டன. இந்த டவுனின் கைத்தறி நெசவுத் தொழில் நிலையைக் குறித்துச் சென்ற ஆண்டில் கணக்கு எடுத்துப் பார்த்ததில், அங்கே இருக்கும் மொத்தக் கைத்தறிகளில் 1,800-இல் 1,500-க்கு நாடாத் தறிப் பகுதிகள் இணைக்கப்பட்டிருக்கின்றன என்பது தெரிந்தது. கைத்தறி நெசவில் அபிவிருத்தியைக் கொஞ்ச அளவில் புகுத்திய கைத்தறி நெசவுப் பள்ளிக்கூடம் பிறகு மூடப்பட்டுவிட்ட போதிலும் இந்நெசவில் எவ்வளவு அபிவிருத்தியான முறைகள் தொடர்ந்து வளர்ந்திருக்கின்றன என்பதை இது காட்டுகிறது.

சாயம் போடுவதில் அபிவிருத்தியான முறைகளைச் செய்து காட்டியது பெய்ஜ்பூர், தூலியா, சார்ணி, மாலேகான் ஆகிய இடங்களில் வெற்றி பெற் றிருக்கிறது.

விவ்சாயிகளின் இல்லங்களில் கைத்தறியைப் புகுத்துவதன் தலையில் தோல்விதான் என்பது முன்கூட்டியே விதிக்கப்பட்டிருக் கிறது என்பதை இந்த இலாகாவுக்கு நான் சொல்லவும் வேண்

டுமா ? விவசாயி வாழ்க்கையைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்திருந்தாலும், அதைப் புகுத்துவது தோல்வியில்தான் முடியும் என்பதைக் காணலாம். கை நெசவு தொடர்ந்து செய்ய வேண்டியதாக இருக்கும் ஒரு வேலை. அதனளவில் செய்யவேண்டியதாயுள்ள பல காரியங்களுக்கு, ஒரே சமயத்தில் அநேகர் சேர்ந்து வேலை செய்ய வேண்டியும் இருக்கிறது. விவசாயியின் குடிசையில் இது சாத்தியமல்ல. இதனுலேயே அநாதி காலம் தொட்டு அது தனியான தொழிலாகவும், ஜீவனத்திற்கான தனித்த ஒரே தொழிலாகவும் இருந்து வந்திருக்கிறது. விவசாயிக்குத் துணைத் தொழில் ஒன்று வேண்டும். அது, இஷ்டப்படி செய்யவும், விட்டுவிடவும் கூடியதாகவும் இருக்க வேண்டும். கோடிக்கணக்கானவர்களுக்கு அவ்விதமான ஒரு தொழில், கையினுல் நூற்பதுதான். ஒழிந்த நேரத்தில் செய்வதற்கு இது போன்ற வேறு தொழில்களும் இருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. ஆனுல், கோடிக்கணக்கான ஆண்களுக்கும் பெண்களுக்கும் கையினுல் நூற்பதைத் தவிர வேறு எதுவும் அவ்வளவு ஏற்றதாக இருக்க முடியாது. எனவே, கைத்தொழில் இலாகா, தான் இருந்து வருவதற்கு ஏதாவது நல்ல வேலையைச் செய்ய வேண்டுமானுல், தனிப்பட்டவர்களைப் பற்றி எண்ணுவதற்குப் பதிலாகக் கோடிக்கணக்கானவர்களைக் குறித்து அது எண்ண வேண்டும். இங்கிலாந்தைக் குறித்து எண்ணுமல் இந்தியாவைப் பற்றி நினைப்பதாயின், கையினுல் நூற்பதிலேயே அதன் கவனம் முழுவதையும் செலுத்த வேண்டும். கிராம மக்களிடையே அதைப் பரப்புவதற்கான ஏற்பாட்டைச் செய்து, கையினுல் நூற்பதிலுள்ள பல முறைகளிலும் அபிவிருத்தியைக் கொண்டு வர வேண்டும். வங்காளத்தில் இதே போன்ற இலாகா, இன்னும் திட்டமான முறையில் இல்லாவிட்டாலும், கையினுல் நூற்பதில் தனது கவனத்தைத் திருப்பியிருக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் இங்கே குறிப்பிடுகிறேன். நல்ல எண்ணத்துடன் வேலை செய்ய அரசாங்கம் விரும்பினுல், கையினுல் நூற்பது வெற்றியடையும்படி செய்வதற்கு மக்களுடன் அது ஒத்துழைக்கலாம். அரசாங்கத்துடன் ஒத்துழைக்க வேண்டும் என்று அடிக்கடி சொல்லப்படுகிறது. என்றுலும், சரியான, இயற்கையான காரியம், மக்களின் தேவைகளை முன்கூட்டி அறிந்து, அவைகள் கிடைக்கும்படி செய்து, மக்களுடன் அரசாங்கம் ஒத்துழைப்பதே ஆகும். அந்த இலாகாவுக்கு இன்னும் ஒன்றையும் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். தறிகளுக்குக் கொண்டு வருவதற்கு முன்னுல் பருத்தி அடைய வேண்டியிருக்கும் முறைகளையெல்லாம் கட்டு திட்டத்தின் கீழ் கொண்டு வந்தாலன்றித் தறிகள், மான்செஸ்டருக்கும், ஜப்பானுக்கும், பம்பாய்க்கும்கூடப் பணம் தேடிக்கொடுப்பவைகளாகவே இருக்க முடியும். கிராமவாசி, தன் வயலில் உற்பத்தியாகும் பொருள் சம்பந்தமான எல்லா முறைகளையும் தன் வீட்டிலோ, கிராமத்திலோ தயாரித்துக் கொள்ளும்படி செய்து, அவனுக்குப் பலரகமான வேலைகள் இருக்கும்படி பார்த்து, பஞ்சமோ பிரவாகமோ ஏற்பட்டு விளைச்சல் இல்லாமலும் வேலையில்லாமலும் அவன் திக்கற்றுத்

திண்டாடாமல் இருக்கும்படி செய்வதுதான் இந்த இலாகா செய்ய வேண்டிய வேலே ; இதைத்தான் அது செய்ய வேண்டும்.

—'எங் இந்தியா' - 14—5—1925

## 2

## எது சரியானது ?

இந்தியாவின் ஜனத்தொகையில் 72 சத விகிதத்திற்கு அதிகமானவர்கள் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிருர்கள். இவர்களில் பெரும்பான்மையோர் வருடத்திற்கு ஆறு மாத காலம் எந்த வேலேயும் இல்லாமல் சும்மா இருக்கிருர்கள். இவர்களுக்குத் துணையான ஒரு தொழில் தேவை. அந்தத் தொழில் எல்லோரும் செய்யக்கூடியதாக இருக்க வேண்டுமானல், அது கையினல் நூற்பதாகவே இருக்க முடியும். ஏனெனில், அது அதிக லாபகரமானது, சிறந்தது என்பது பொதுவாக ஒப்புக் கொள்ளப்படுவதாகவே தோன்றுகிறது.

இப்பொழுது இந்த வாதத்தையும் கொஞ்சம் விவரமாகத் தெரிந்துகொள்ளுவோம்: கை நெசவு தினத்திற்கு எட்டணு கொடுக்கும். கையின்ல் நூற்பதால் ஓர் அணுதான் கிடைக்கும் என்று சொல்லப்படுகிறது. ஆகையால், ஒருவர் தினத்திற்கு இரண்டு மணி நேரம் மாத்திரம் வேலே செய்தால் அவர், கைத் தறியில் இரண்டணு சம்பாதிக்க முடியும். ஆனல், அதே நேரத்தில் கையினல் நூற்ருல் காலணுதான் கிடைக்கும். காலணு கிடைக்கிறது என்பது பொருளாதார விஷயத்தில் யாருக்கும் கவர்ச்சியானதாக இராது என்றும் சொல்லப்படுகிறது. கையினல் நெய்யும் வேலேயை மக்களுக்கு அளிக்க முடியும் எனும் போது, அதற்குப் பதிலாகக் கையினல் நூற்கும்படி அவர்களிடம் சொல்லுவது தவறு என்றும் சொல்லுகிருர்கள். இந்தியாவுக்குத் தேவையான மில் நூல் கிடைப்பதில் எந்தவிதமான கஷ்டமும் இல்லே என்றும், கைத் தறிக்காகப் பரிந்து பேசுகிறவர்கள் கூறுகிருர்கள். நெசவுமில்களே இதுவரையில் எதிர்த்துச் சமாளித்து வந்திருக்கும் கைத்தறி நெசவு, உயிரோடு இருந்து வரும்படி செய்வதற்கும்கூட அதைத் தீவிரமாகவும் உறுதியோடும் முன்னுக்குத் தள்ளவேண்டும் என்றும் சொல்லுகிருர்கள். கையினல் நூற்க வேண்டும் என்ற இயக்கம் விஷமத்தனமானது என்று சொல்லும் அளவுக்கும் கைத்தறிப் பிரசாரம் செய்கிறவர்களில் சிலர் போய் விடுகின்றனர். சாத்தியமானதான கைத்தொழிலான கை நெசவிலிருந்து மக்களின் கவனத்தை அது வேறு இடத்திற்குத் திருப்பிவிடுகிறது என்றும், தன்னுள்ளே கொண்ட பலவீனத்தின் காரணமாகச் செத்துவிட்ட அசாத்தியமான ஒரு தொழிலே

ஆதரிக்கும்படி மக்கள் மனத்தைத் தவருன வழியில் திருப்பி விட்டு விடுகிறது என்றும் அவர்கள் கூறுகிருர்கள்.

மெய் போலத் தோன்றும் இந்த வாதத்தை ஆராய்வோம். முதலாவதாக, துணைத் தொழிலாக இருப்பதற்குக் கைத்தறி நெசவுஅனுபவ சாத்தியமான யோசனை அன்று. ஏனெனில், அது சொல்லிக் கொடுப்பதற்கு எளிதானது அல்ல; இந்தியாவில் அது என்றும் எல்லோரும் செய்யும் தொழிலாக இருந்ததும் இல்லை; அதில் வேலை செய்வதற்குப் பலர் வேண்டும், நினைத்த நேரத்தி லெல்லாம் அதைச் செய்ய முடியாது. பொதுவாக அது தனியான தொழிலாகவே இருந்து வந்திருக்கிறது. அப்படி மாத்திரமே இருக்க முடியும். பெரும்பான்மையானவர்கள் விஷயத்தில் அது, செருப்புத் தைப்பதையும், கருமான் வேலையையும் போல ஏகத் தொழிலாகவும் இருந்து வருகிறது.

மேலும், கையினுல் நூற்பது இருக்கக்கூடியதைப் போன்று கை நெசவு எல்லோரும் செய்வதாக இருக்க முடியாது. இந்தியாவுக்கு வருடத்திற்கு 46,610 லட்சம் கெஜம் துணி வேண்டியிருக்கிறது. ஒரு நெசவாளி, முரடான கதரை மணிக்குச் சராசரி முக்கால் கெஜம் வீதம் நெய்கிருர். ஆகையால், வெளி நாட்டு, உள்நாட்டுத் துணியை எல்லாம் நீக்கிவிட முடியுமானல், நமது வருடத் தேவைக்கு வேண்டிய துணியை நெய்வதற்கு 90 லட்சம் நெசவாளர்கள், மணிக்கு இரண்டு மணி நேரம் வீதம் நெய்ய வேண்டும். அத்தனை நெசவாளர்கள் அல்ல, அத்தனை குடும்பங்கள் வேலை செய்வார்கள் என்று வாதிப்பதாயிருந்தால், இரண்டு மணி நேர வேலைக்குக் கிடைக்கும் இரண்டு அணுவை இன்னும் அதிகத் தொகையினருக்குள் வினியோகிக்க வேண்டிவரும். இதனல், தனிப்பட்டவரின் தின வருமானம் இன்னும் குறைந்து போகும்.

நூற்பின் சாத்தியங்களைக் குறித்து இப்பொழுது பார்ப்போம். ஒரு சமயம் இந்தியாவில் இது எல்லோரும் செய்யும் துணைத் தொழிலாக இருந்து வந்திருக்கிறது என்பதை நாம் அறிவோம். இக்கலையைக் கோடிக்கணக்கானவர்கள் இன்னும் மறந்துவிடவில்லை. பத்தாயிரக்கணக்கானவர்களின் வீடுகளில் இன்னும் ராட்டை இருந்து வருகிறது. ஆகையால், எல்லையில்லா வகையில் உடனே விஸ்தரித்துவிடக்கூடியது, கையினுல் நூற்பது. நூற்பவர்கள் பத்துப் பேர், ஒரு நெசவாளருக்குப் போதுமான நூலை நூற்றுக் கொடுத்துவிட முடியும் என்பது காணப்பட்டிருக்கிறது. 60 லட்சம் நெசவாளருக்கு 9 கோடி பேர் நூற்க வேண்டும். அவர்களுக்கு நல்ல வருவாயாக இருக்கக் கூடிய வருமானமும் கிடைக்கும். தலைக்குச் சராசரி வருட வருமானம் அதிகத் தொகையாக நாற்பது ரூபாய் கிடைக்கும் என்று கணக்கிடுகிறேன். நெசவைப் போல அல்ல நூற்பது; நினைத்த போதெல்லாம் இதைச் செய்யலாம். நூற்பதை எளிதாகவும் சீக்கிரமாகவும் கற்றுக்கொண்டு விடலாம். நூற்பவர், ஆரம்பத்திலேயே கொஞ்சம் நூலை நூற்றுவிடுவார்.

மேலும், மில் நூல் தங்குதடையின்றிக் கிடைத்துக் கொண்டே இருக்கும் என்று நம்பிக் கொண்டிருப்பதும் தவறு. மில்லில், நெய்வதும் கையால் நெய்வதும் ஒன்றுக்கொன்று உதவியாக இருப்பவை அன்று. இவை பரஸ்பரம் ஒன்றுக் கொன்று விரோதமானவை. எல்லா யந்திரங்களையும் போன்றே மில் நெசவின் போக்கும், கையினுல் தயாரானவைகளை ஒழித்து, அதற்குப் பதிலாகத் தனது உற்பத்தியைப் பரப்பிவிடுவதுதான். ஆகையால், பெரும் அளவில் துணைத் தொழிலாகக் கையினுல் நெய்வது இருக்க முடியுமாஞல், அது முற்றிலும் மில்லையே நம்பி இருக்க வேண்டிவரும். மில்களோ, இயற்கையாகவே நெசவாள ரிடம் இருக்கும் கடைசிப் பைசா வரையில் உறிஞ்சிவிடுவதோடு முதல் சந்தர்ப்பம் கிடைத்ததும் அதை அழித்தும்விடும்.

ஆனல், இதற்கு மாருகக் கையினுல் நூற்பதும், கையினுல் நெய்வதும் இயற்கையாகவே ஒன்றுக்கொன்று உதவியாக இருப்பவை. அவ்விதம் இருக்க முடியும் என்பது, இப்பொழுது இருந்து வரும் நூற்கும் நிலையங்களின் அனுபவங்களிலிருந்து நிரூபிக்கப்படுகிறது. இப்பொழுது இதை நான் எழுதிக்கொண் டிருக்கும் போது, என் சகா ஊழியர்களிடமிருந்து வந்திருக்கும் கடிதங்களில், போதுமான நூல் இல்லாததால் வரும் நெசவாளரை அனுப்பிவிட வேண்டியிருக்கிறது எனக் கூறுகின்றனர்.

மில் நூலை நெய்யும் நெசவாளர்களில் அநேகர், வட்டிக்குப் பணம் கொடுக்கும் சௌக்கார்களின் கையில் சிக்கியிருக்கிருர்கள் என்பது அநேகருக்குத் தெரியாது. அவர்கள் மில் நூலை எதிர் பார்த்திருக்கிற வரையில் அவர்கள் இப்படித்தான் இருக்க வேண்டிவரும். நெசவுக்காரர் தமக்கு வேண்டிய நூலைத் தரகனிடமிருந்து வாங்காமல் தம்மைப் போல உழைப்பவரான விவசாயியிடமிருந்து வாங்கவேண்டும். கிராமத்தின் பொருளா தாரத்திற்கு இதுதான் ஏற்றது.

தெரிந்தவரையில், இப்பொழுது இருபது லட்சம் நெச வாளர்கள் வேலை செய்து வருகிருர்கள். அதிகப்படியாக ஒரு தறியைப் போடுவது என்ருல், குறைந்த பட்சம் ரூ. 15 வேண்டும். அதிகப்படியாக ஒரு ராட்டை என்ருல், ரூ. 3½—க்கு மேல் ஆகாது. காதி பிரதிஸ்தான் தயாரிக்கும் ராட்டை ரூ. 2¼ ஆகிறது. இதற்குக் கூடப் பணம் இல்லாத சமயத்தில், ஒரு செலவுமே இல்லாததான சாதாரண தக்ளியைக் கொண்டும் நூல் நூற்று விடலாம்.

இவ்விதம் திருப்திகரமான கிராம வாழ்க்கையை அமைப் பதற்கு ராட்டை ஒன்றுதான் சரியான அஸ்திவாரம் என்று தோன்றுகிறது. இதை மையமாகக்கொண்டு அதைச் சுற்றிலும் கிராமச் சீரமைப்பைச் செய்வதுதான் சாத்தியம்.

ஆனல், இரண்டு மணி நேர வேலைக்குக் காலணு கிடைக் கும் என்பது, ஏழை கிராமவாசிக்கும் பொருளாதாரக் கவர்ச்

சியை அளிக்காது என்று சொல்லப்படுகிறது. முதலாவதாக அதிக வருவாயுள்ள தொழில்களைச் செய்து வருபவர்களுக்காக ஏற்பட்டது அன்று, ராட்டை. அவர்களுக்கு என்று இதைக் கொடுக்கவும் இல்லை. பருத்தியையும், தாங்கள் கொண்டுவந்து கொடுக்கும் நூலுக்குப் பதிலாகச் சில காலணுக்களையும் பெறுவதற்காகத் தினமுமோ, வாரத்தில் ஒரு முறையோ சில மைல்கள் தூரம் ஆயிரக்கணக்கான பெண்கள் இன்று நடந்து வந்துகொண்டிருக்கிறார்களே அது எப்படி? தறியில் வேலை செய்யும்படி அவர்களிடம் சொன்னால், அதை அவர்கள் செய்ய மாட்டார்கள். அதற்கு அவர்களுக்கு நேரமோ, ஆற்றலோ இராது. இந்தியாவின் பாமர மக்கள் எவ்வளவு கொடிய வறுமையில் இருந்து வருகிறார்கள் என்பது பட்டண வாசிகளுக்குத் தெரியாது. இவர்கள் விஷயத்தில் யந்திர யுகத்தைப் பற்றி நாம் பேசக் கூடாது. இவர்களின் சோற்றுக்கு நெய்யாக இருந்து வந்த ராட்டையை மான்செஸ்டர் யந்திரங்கள் பறித்துக் கொண்டு போய்விட்டன. பறித்துவிட்ட ராட்டைக்குச் சமமான ஒன்றையோ சிறந்ததான ஒன்றையோ அதற்குப் பதிலாக இவர்களுக்குக் கொடுக்கவில்லை. ஆகையால் இவர்களுக்கு நம்பிக்கை உண்டாகக்கூடிய ஒன்றே ஒன்று, ராட்டை தான்.

விவசாய அபிவிருத்தியைக் குறித்துப் பிரமாதமாகவும் ஆடம்பரமாகவும் கூறப்படும் திட்டங்களைப் பற்றி நான் இங்கே ஆராயவில்லை. அவைகளுக்குப் போதிய இடம் உண்டு என்பதிலும் எனக்குச் சந்தேகமில்லை. ஆனால், அதற்குக் காலமாகும்; பயிற்சியும் வேண்டும். வளர்ந்துகொண்டே வரும் வறுமைக்கு உடனே செய்ய வேண்டிய பரிகாரம் தேவை. ராட்டை ஒன்றுதான் அந்த உடனடிப் பரிகாரம். மேலே சொன்ன அபிவிருத்திகளால் ஏற்படக்கூடிய நன்மைகளை ராட்டை உதாசீனம் செய்யவுமில்லை; விலக்கவும் இல்லை. அந்த நன்மைகளுக்கு ராட்டை ஒரு பீடிகை. ராட்டை சென்றிருக்கும் இடங்களிலெல்லாம் அங்குள்ள மக்களின் வாழ்க்கையில் அது மாறுதலை உண்டாக்கியிருக்கிறது. பட்டணத்து மக்களைக் கிராமவாசிகளுடனும், அவர்களுடைய கிராமங்களுடனும் வாழ்வுத் தொடர்பு கொள்ளும்படியும் ராட்டை செய்திருக்கிறது.

'நீங்கள் சொல்லுவதெல்லாம் கையினால் நூற்பதனால் ஏற்படும் என்றால், அதை ஏன் இன்னும் எல்லோரும் மேற்கொள்ளவில்லை?' என்றுகுறை கூறும் ஒருவர் கேட்கிறார். கேள்வி நியாயமானதுதான். பதிலும் எளிதானது. நம்பிக்கையோ, தன் முயற்சியோ கொஞ்சமும் எஞ்சியிராத மக்களிடம் ராட்டையின் உபதேசத்தைக் கொண்டுபோக வேண்டியிருக்கிறது. அம்மக்களை அவர்கள் போக்கில் விட்டுவிட்டால், வேலை செய்து வாழ்வதை விடப் பட்டினி கிடந்தே அவர்கள் மடிவார்கள். முன்னால் நிலைமை இப்படி இருந்ததில்லை. நீண்டகாலம் கவனிப்பாரற்றுப் போனதால் சோம்பேறித்தனம் அவர்களுக்குப் பழக்கமாகிவிட்டது.

ஒழுக்கமும் சுறுசுறுப்புமுள்ளவர்கள் அவர்கள் முன்னால் ராட்டையில் நூற்று, மெல்ல வழி காட்டி, வாழ்க்கைத் தொடர்பாகவும் உதாரணமாகவும் இருப்பதனால் மாத்திரமே அந்தச் சோம்பேறித்தனத்தைப் போக்க முடியும். இருக்கும் இரண்டாவது பெரிய கஷ்டம், கதரை உடனே விற்றுவிட முடியாமல் இருப்பது. இப்போதைக்கு மில் துணியுடன் அது போட்டிபோட முடியாது என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். இப்படிப்பட்ட கொல்லும் போட்டியில் நான் ஈடுபடவும் மாட்டேன். முதலாளி, விற்பனையைக் கைப்பற்றிக் கொண்டுவிடுவதற்காகத் தமது மில் துணியை இனாமாகக் கூடக் கொடுப்பார். உழைப்பு ஒன்றையே மூலதனமாகக் கொண்ட உற்பத்தியாளர், அவ்வாறு செய்ய முடியாது. உயிரில்லாத செயற்கை ரோஜா, ரோஜாவைப் போன்று இருப்பதோடு அதன் இதழ்களும் ஒரே மாதிரியாக இருக்கலாம். என்றாலும், தனது இரண்டு இதழ்கள் ஒன்று போல் இல்லாமலிருக்கும் உயிருள்ள ரோஜாவுடன் அது போட்டி போட முடியுமா? கிராம் வெல்லின் மெழுகுச் சிலை, உயிரோடிருக்கும் கிராம் வெல்லுக்குப் போட்டியாகுமா? உயிருள்ள பொருள் கதர். ஆனால், இந்தியா உண்மைக் கலையை ரசிக்கும் கண்களை இழந்துவிட்டது. ஆகையால், பளபளப்பான வெளித் தோற்றத்தைக் கண்டு திருப்தியடைகிறது. கதரின் மீது பிரியம் கொள்ளும் ஆரோக்கியமான தேசீய ருசி திரும்பவும் ஏற்படும்படி செய்துவிட்டால், தேன்கூடு போன்று ஒவ்வொரு கிராமமும் சுறுசுறுப்பாக வேலை செய்து கொண்டிருப்பதை நீங்கள் காண்பீர்கள். கதர் விற்பனையாகும்படி செய்வதில் கதர் ஸ்தாபனங்கள் தங்கள் சக்தி முழுவதையும் உபயோகித்து வேலை செய்ய வேண்டியிருப்பதுதான், இப்பொழுதுள்ள நிலைமை. இதிலிருக்கும் அதிசயம் என்ன என்றால், சமாளிக்க வேண்டிய கஷ்டங்கள் எவ்வளவோ இருந்தும் இயக்கம் முன்னேறிக் கொண்டு வருவதுதான். சென்ற ஆண்டு மாத்திரம் பன்னிரண்டு லட்சத்திற்கு அதிகமான கதர் விற்பனையாகி இருக்கிறது. ஆனால், செய்ய வேண்டியிருப்பது எவ்வளவு என்பதை எண்ணிப் பார்க்கும்போது, இதற்காக யாரும் பெருமைப்படுவதற்கு இல்லை.

இவ்வாறு துணைத் தொழிலாக இருக்கக்கூடியது ராட்டையே யன்றிக் கைத்தறி அல்ல என்பதற்குள்ள நியாயத்தைச் சுருங்கச் சொல்லியிருக்கிறேன். இதில் எண்ணக் குழப்பம் எதுவும் வேண்டாம். கைத்தறியை நான் எதிர்க்கவில்லை. அது செழித்துவரும் பெரிய குடிசைத் தொழில். ராட்டை வெற்றி பெறுமானால், அது தானே அபிவிருத்தியடைந்துவிடும். ராட்டை தோற்றுவிட்டால் கைத்தறியும் செத்துவிடும்.

இந்த என் வாதத்தைக் குறித்து அபிப்பிராயம் கூறுவதை நான் வரவேற்கிறேன். என் வாதமோ அல்லது உண்மைகளோ நிலைக்க முடியாதவை என்றால், நான் மகிழ்ச்சியுடன் பின் வாங்கிக் கொள்ளுவேன்.

—'எங் இந்தியா' – 11—11—1926

# 3

# துணைத் தொழில் ராட்டை

பம்பாய் மாகாண கூட்டுறவுக் கலாசாலையின் கௌரவக் காரியதரிசி ராவ்பகதூர் எஸ். எஸ். தால்மாகி, துணைத் தொழில்களைக் குறித்துப் படித்த ஓர் அறிக்கையின் நகல் என் முன்னால் இருக்கிறது. இது ஒரு விரிவான அறிக்கை. கிராமவாசிகளுக்குத் துணைத் தொழிலாக இருக்கக் கூடியவை என்று அப்போதைக்கப்போது யோசனை கூறப்பட்டிருக்கும் பல தொழில்களை இது விரிவாக ஆராய்கிறது. அவர் சிலவற்றை ஏற்றுக்கொள்ள வில்லை; சில சாத்தியம் என்கிறார். சாத்தியமானது, பயனளிக்கக் கூடியது என்று அவர் சொல்லுகிறவைகளில் கையினால் நூற்பதும் ஒன்று. இதைக் குறித்து அவர் கூறியிருப்பவைகளை, சந்தேகிக்கிறவர்களாக இருப்போர் கவனமாகப் படித்துப் பார்க்க வேண்டும். அவற்றைக் கீழே கொடுக்கிறேன் :

''விவசாயிகளுக்கு அவர்கள் வீட்டு வாசலிலேயே மலிவாக நூல் கிடைக்கும்படி செய்ய வேண்டும். நெய்த துணியை விற்றுவிடுவதற்கான ஏற்பாடுகளையும் சரியானபடி செய்ய வேண்டும். இவற்றையெல்லாம் செய்வதற்கு முன்னால் நெய்வதைச் சிறு தொகையினரான விவசாயிகளுக்குத் துணைத் தொழிலாகக் கொண்டு வருவது என்பதும் முடியாது.

''என்றாலும், இப்பொழுது வீணாகிக்கொண்டிருக்கும் விவசாயிகளின் ஏராளமான ஓய்வு நேரத்தையும் சக்தியையும் பயன்படுத்தக்கூடியதான துணைத் தொழிலாக இருக்க முடியுமா என்பதைக் காண, இப்பொழுது இருந்து வரும் ஒவ்வொரு தொழிலின் சாத்தியங்களையும் நாம் ஆராய வேண்டும். துணி என்ற வகையில் சாத்தியமானதாக இருக்கும் ஒரே தொழில் கையினால் நூற்பதுதான். நாட்டிலுள்ள ஒவ்வொரு விவசாயியின் குடும்பத்திற்கும் இதைப் பயனுள்ள உபத் தொழிலாக்கிவிட முடியும். பஞ்சப் பிரதேசங்களுக்கு மற்றத் தொழில்களெல்லாம் தவறிவிட்டபோது இதுவே மிகவும் தகுதியானது. வயது வந்த ஆண்கள், மேலும் லாபகரமான தொழில்களைத் தேடித் தாற்காலிகமாக வெளியிடங்களுக்குப் போய் விடுவதாக இருந்தாலும், பெண்களும் குழந்தைகளும் கஷ்டம் எதுவும் இல்லாமல், நுட்பத் திறமை எதுவும் வேண்டாமல் ராட்டையில் நூற்கலாம். இதில் சாதி வெறுப்பு எதற்கும் இடமில்லை. உண்மையில், யந்திரத்தில் தயாரான நூல் வருவதற்கு முன்னால், விவசாயிகளின் குடும்பப் பெண்கள் நூற்று, நாட்டுக்கு வேண்டிய நூலைக் கொடுத்து வந்திருக்கிறார்கள். ராட்டைக்கு ஆரம்பத்தில் கொஞ்சம் பணம் இருந்தால் போதும். குடிசையின் சிறு மூலையில் அதை வைத்துவிடலாம்.

''ராட்டை முன்னாளில் செய்திருக்கும் சேவையை யாரும் மறுக்க வில்லை. ஆனால், இப்பொழுதுள்ள நிலைமையில் விவசாயிகளுக்குத் துணைத் தொழிலாக இருக்கக்கூடிய தகுதி, அதற்கு இருக்கிறதா என்பதைக்

குறித்தே அநேக ஆட்சேபங்கள் கூறப்படுகின்றன. முதல் ஆட்சேபம், அதில் வேலை செய்வதால் தினத்திற்கு இரண்டு அணுவுக்குமேல் வருமானம் கிடைப்பதில்லை என்பது. ஆனால், எதுவுமே இல்லை என்பதைவிட ஏதாவது கொஞ்சம் கிடைப்பது எவ்வளவோ மேல் அல்லவா? விவசாயத்தில்கூடச் சாதாரண விவசாயிக்கு வருடத்திற்கு ரூ. 50-க்குமேல் கிடைப்பதில்லை. இது தினத்திற்கு இரண்டணுவுக்கு அதிகமல்ல. இதற்காக விவசாயத்தைக் கைவிட்டு விடும்படி யாரும் யோசனை சொல்லத் துணியமாட்டார்கள். இன்னுமொரு ஆட்சேபம், நூற்ற நூல் உடனே விற்பனையாகி விடுவதில்லை என்பது. ஆனால், ஒவ்வொரு கிராமத்திலும் அதன் தேவைக்குப் போதுமான நூலை மாத்திரம் உற்பத்தி செய்வதன் மூலம் இக்கஷ்டத்தை எளிதில் சமாளித்துக்கொண்டு விடலாம். நயமான துணியை உடுத்தி இன்று பழக்கப் பட்டுப்போன விவசாயி, அத்துணியை விட்டுவிட்டு முரடாக இருக்கும் கதரை வாங்க விரும்பமாட்டான் என்பது மூன்றாவது ஆட்சேபம். ஆனால், தனக்குத் தேவையான துணியை விவசாயி தன் வீட்டிலேயே தயாரித்துக் கொள்ளும்போது, கடையில் துணி வாங்குவது என்பதற்கே இடமில்லை. ஆகையால், ஒன்றைவிட்டு இன்னுமொன்றை அவன் விரும்பிவிடுவான் என்பதற்கும் இடமில்லை. இவ்விதம் கிராமவாசிகளுக்குப் போதுமானதை விவசாயிகள் உற்பத்தி செய்வது என்ற அளவில் கையினால் நூற்கும் தொழில் இருந்துவிடுவதாயின், உற்பத்தியாவதற்கு விற்பனையைத் தேட வேண்டிய கஷ்டமே கிடையாது. என்னதான் கரடு முரடாக இருந்தாலும், தம் உழைப்பினாலேயே தயாரான கதரை உடுத்திக்கொள்ளுவதில் ஒவ்வொரு விவசாயியும் பெருமைப்படுவார். ஒருவரைக் கதர் வாங்கும்படி தூண்டுவது கஷ்டமாக இருக்கலாம். ஆனால், தானே தயாரித்த ஒன்றை உபயோகிக்கும்படி செய்வதற்கு எந்தத் தூண்டுதலும் தேவையில்லை. விற்பனை, வாங்குவது, சலுகை என்பனவெல்லாம் தவிர்க்கப்படும்போது, கதருக்காகப் பரிந்து பேசுவோர் சிலர் சொல்லி வருவதைப் போன்று, கதர் வாங்குவோருக்குப் பண சகாயம் அளிக்கவேண்டும் என்ற பிரச்னையும் எழவில்லை. மேலும், அரசாங்கப் பண சகாயத்தைப் பெற்றுவிடுவது என்பது, கேட்பதைப் போன்று கிடைப்பது அவ்வளவு எளிதானதும் அன்று. அதிகப் பட்ச மிச்சம் இருப்பதை முன்னிட்டும், கிராமத்திற்கு இன்னும் கொஞ்சம் அதிக வேலையைக் கொடுப்பதை முன்னிட்டும் பஞ்சரைப்பது, பட்டை போடுவது போன்ற வேலைகள் அங்கேயே, முக்கியமாக ஒவ்வொரு குடும்பத்திலுமே செய்யப்பட வேண்டும். நூலை நெய்யும் வேலையைக் கிராமத்திலேயே தனிப்பட்ட நபர்களிடம் அல்லாமல், ஒன்று அல்லது இரண்டு குடும்பங்களிடம் கொடுத்துவிடவேண்டும். இது அவர்களுக்கு முழு நேர வேலையை அளிப்பதோடு அக்கலையில் அவர்கள் திறமையைப் பெறும்படியும் செய்யும். செய்யும் வேலைக்குப் பொருளாக, முக்கியமாக நூலாகவே கூலியைக் கொடுத்து விடுவதும் நல்லதாகலாம். கையினால் நூற்ற கனமான நூலைக் கொண்டு கிராமவாசிகள் உபயோகிக்கும் மட்டமான துப்பட்டிகள், விரிப்புகள் போன்ற சாயம் போட்ட கனமான 'ரகங்களைக் கிராம நெசவாளர்கள் தயாரிக்கலாம். இத்தகைய சாத்தியங்களெல்லாம் நம் முன்னால் இருக்கும்போது, கிராம மக்கள் எல்லோருக்குமே வேண்டிய துணியைக் கொடுத்துவிடக் கூடியதான ஒரு தொழிலை, நெய்பவர்கள் என்ற வகையில் அதிகப்படியாக இரு குடும்பங் களுக்கு முழு நேர வேலையையும் கொடுக்கும் இத்தொழிலை, தச்சர்களைக் கொண்ட இன்னுமொரு குடும்பத்திற்கு ஒவ்வொரு கிராமத்திலும் அதன்

எல்லைக்குள்ளேயே வேலை கொடுக்கும் இதை அலட்சியம் செய்து விடுவதோ, கேவலமாக நினைத்துவிடுவதோ அதிகக் கஷ்டமானது.

"எங்கெங்கே கையினால் நூற்பதும் நெய்வதும் வெற்றிகரமாகச் செய்யப்பட்டு வருகிறதோ அங்கெல்லாம், ருசிகரமில்லாததான கஷ்ட வேலைகள் சிலவற்றை நீக்கி, நூற்பதிலும் அது சம்பந்தமான வேலைகளிலும் அதிக நேரத்தையும் சக்தியையும் உபயோகிக்கும்படி செய்வதற்கானவைகளையும் கவனிக்க வேண்டும். உதாரணமாக, மாவு அரைக்கும் வேலையில் பெண்களுக்கு அதிக நேரம் போய்விடுகிறது. இந்த வேலை பஞ்சாபில் குர்கான் ஜில்லாவின் கிராமங்களில் ஸ்ரீ பிரேய்னேயின் முயற்சியினால் வெற்றிகரமாகச் செய்யப்பட்டு வருவதுபோன்று, இரு எருதுகள் பூட்டிய பொதுவான யந்திரத்தில் அரைத்துக்கொண்டு விடலாம். உண்மையில், கிராமத்திற்காகக் கிராமத்திலேயே துணியைத் தயாரித்துக்கொள்ளுவது கிராம வாழ்க்கையில் அதிக அபிவிருத்தியை உண்டாக்கும். ஆனால், இதற்காகச் செலவிடுவதற்குத் தற்சமயம் பணம் இல்லாததால், இதைத் தவிர வேறு வழியில் இந்த வாய்ப்பு இல்லை. ராட்டையில் அபிவிருத்திகளைச் செய்வதன் மூலம் நூற்கும் நேரத்தை நாளாவட்டத்தில் குறைத்துக்கொண்டு விடவும் முடியும். இத்தொழில், தேசம் முழுதும் பரவினாலோ அல்லது ராட்டையில் இப்பொழுது ஓர் இழை நூற்பதற்குப் பதிலாக இரண்டு மூன்று இழைகளை நூற்க முடியும்படி செய்துவிடுவதானாலோ, நூற்பதில் நேரம் குறைவது நிச்சயம் வந்தே தீரும். இப்பொழுது இருந்துவரும் கைத்தறி நெசவாளருக்கு நூல் கொடுப்பது என்ற இயக்கத்தின் முடிவான லட்சியம் நிறைவேற வேண்டுமானால், இன்னுமொரு நோக்கத்தைக் கொண்டும், நூலில் அபிவிருத்தியும் அது துரிதமாக உற்பத்தியாவதும் அத்தியாவசியமானதாகிறது. பாடுபட்டு உழைக்கக்கூடியவர்களான இம்மக்களுக்கு இதில் இருக்கும் கஷ்டமெல்லாம், நூலில் ஏகபோகத்தை அடைந்திருக்கும் மில்கள், மில்லில் தயாரான துணியை மலிவான விலைக்கு விற்பது சாத்தியமாவதற்காக நூலை அதிக விலைக்கு அவர்களுக்கு விற்று வருவதுதான். ராட்டைப் பிரசாரம் வெற்றியடைய வேண்டுமானால், பட்டணங்கள் விஷயத்தில் செய்வதைவிட இன்னும் அதிகமான பலத்துடனும் சிறந்த ஸ்தாபனத்தின் மூலமும் கிராமங்களில் நன்றாக வேலை செய்யவேண்டும். பட்டணத்து மக்களின் ஆதரவைப் பெறுவதற்கு அப்போதைக்கப்போது அவர்களுக்கு உற்சாகத்தை மூட்டிக்கொண்டிருக்க வேண்டும். ஆனால், கிராமத்தின் விஷயத்திலோ, அது தங்கள் சொந்த வாழ்விற்கான விஷயம். படிப்பின்மையினாலும், கிராமவாசிகளுக்கு இருக்கும் சிரத்தையின்மையாலும் கிராமப் பகுதிகளில் வேலை செய்வது ஆரம்பத்தில் கஷ்டமானதாக இருந்தாலும், அதன் பலன்களைக் கிராம மக்கள் அறிந்துகொண்டு விடுவார்களாயின் அங்கே அது ஆழமாக வேர் விடுவது நிச்சயம். என்றாலும், வெற்றி நிச்சயமாவதற்கும், தோல்வியைத் தடுப்பதற்கும் பிரசாரம் செய்துகொண்டே இருக்கவேண்டும். கையினால் நூற்பதைக் கற்றுக்கொள்ள இரண்டு மாதங்களுக்கு மேல் ஆகாது. இதன் நுட்பத்தை நன்றாய் அறிந்துகொண்டவர்கள் பிரசாரம் செய்ய வேண்டுமேயன்றி ஒன்றும் தெரியாத வெறும் உற்சாகிகளைக் கொண்டு பிரசாரம் செய்யக்கூடாது. இதோடு கூட, கால்நடைகளை விருத்தி செய்வது போன்றவைகளிலும், கால்நடைகளின் தீவனத்தைப் பயிரிட்டு அவற்றைப் பக்குவப்படுத்தி வைப்பதிலும் சுமார் மூன்று அல்லது ஆறு மாத

காலம் பயிற்சி பெற்றுவிடுவார்களானல் கிராமவாசிகளுக்கு இரண்டு விதத்திலும் சேவை செய்யக்கூடியவர்களாக அவர்கள் இருப்பார்கள்.

“கையினல் நூற்பதுடன் சேர்த்துக் கை நெசவையும் இந்திய கிராமங்களில் பரப்பிவிட்டால், அதனல் அதிக சமூகப் பொருளாதார நன்மைகள் ஏற்படும். இந்தியாவில் சராசரி ஒவ்வொருவரும் 15 கெஜம் துணி உபயோகிக்கிருர்கள் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. கிராமவாசிகளைப் பொறுத்த வரையில் ஆளுக்குச் சராசரி 10 கெஜம் துணிதான் உபயோகிக்கிருர்கள் என்று நிதானமாகக் கணக்குப் போட்டாலும், 1921–ஆம் வருட ஜன விகிதக் கணக்குப்படியுள்ள 2,880 லட்சம் கிராம மக்களுக்கு 288 கோடி கெஜம் துணி வருடத்திற்கு வேண்டியிருக்கும். விரிவான, ஒழுங்கான பிரசாரத்தின் மூலம் கிராமவாசிகள் தங்களுக்குத் தேவையான துணியைத் தாங்களே உற்பத்தி செய்யும்படி உற்சாகப்படுத்தினல், தங்கள் துணிக்காகக் கொடுக்கும் பணம் முழுவதும் கிராமங்களிலேயே தங்கும். கதர்த் துணியின் குறைந்த விலை கெஜத்துக்கு நான்கு அணு என்று வைத்துக்கொண்டால், கிராமவாசிகளுக்கு வருடத்தில் ஏற்படும் மொத்த மிச்சம் 72 கோடி ரூபாய். மார்க்கெட்டில் துணி வாங்குவதற்காக இவர்கள் கொடுக்கவேண்டியிருக்கும் விலையையும் கவனிக்க வேண்டும். அந்த விலை கெஜத்திற்கு ஆறு அணு முதல் எட்டு அணுவுக்குக் குறைவில்லை. குறைந்த விலையான ஆறு அணுவை வைத்துக் கணக்குப் பார்த்தாலும், வீட்டிலேயே தயாரித்துக் கொள்ளுவதால் கெஜத்திற்கு இரண்டு அணு வீதம் ஏற்படும் மிச்சத்தினல் மொத்தமாக இன்னும் 36 கோடி ரூபாய் மிச்சமுண்டாகும். ஆகையால், குறைத்துக் கணக்குப் போட்டாலும் இவ்விதம் வருடத்திற்கு நூறு கோடி ரூபாய் கிராமங்களுக்கு மிச்சம் இருக்கும். கல்வி, சுகாதாரம், வைத்திய உதவி, கால்நடை, விவசாய அபிவிருத்தி போன்றவைகளுக்கு மேற்கண்ட தொகையில் ஒரு பகுதி கிடைக்குமானல், அது கிடைப்பது நிச்சயம், கிராம வாழ்க்கையின் நிலை வெகு துரிதமாக முன்னேறிவிடும்.

“இதெல்லாம் அல்லாமல், இவ்வளவு பெரிய தொகையினரான மக்களின் வாங்கும் சக்தி வெகு தூரம் உயர்ந்துவிடும் என்பதையும் கவனிக்க வேண்டும். நாட்டில் ஆரம்பிக்கப்படும் பெரும் தொழில்களுக்கும் இதனல் நல்ல மார்க்கெட் இருக்கும். சாமான்களைத் தயாரிப்பதைவிட அதிகக் கஷ்டமானது விற்பனைக்கு இடத்தைத் தயாரிப்பது. விற்பனைக்குச் சரியான வசதி இல்லாததனலேயே தொழிற்சாலை ரகத் தொழில்கள் பல நாட்டில் இன்னும் ஆரம்பிக்கப்படவில்லை. தொழில்களில் அதிக தூரம் அபிவிருத்தியடைந்திருக்கும் வெளிநாடுகள், வெளிநாட்டு மார்க்கெட்டுகளையெல்லாம் இப்பொழுதே பிடித்துக்கொண்டிருப்பதால் அந்த மார்க்கெட்டுகளை நம்ப இடமே இல்லை. முன்னேறுமலிருக்கும் நாடுகளில்கூடத் தங்களுடைய சாத்தியங்களைக் கவனித்துக்கொள்ள வேண்டும் என்ற நினைவு அதிக வேகமாக வளர்ந்துகொண்டு வருகிறது. ஆகையால், நாடு தொழில் முன்னேற்றத்தை அடைய வேண்டுமானல், உள்நாட்டிலேயே விற்பனைக்கு வசதி இருப்பது அவசியம். சாதாரணமானதான ராட்டை, இந்தச் சாத்தியத்தை அளிக்கிறது. ஆகையால், அதை அற்பமானதாக எண்ணிவிடக் கூடாது.”

ராவ்பகதூர் கூறும் யோசனையைப் போன்று, கிராமங்கள் சுயதேவையைப் பூர்த்தி செய்துகொள்ள வேண்டும் என்ற அடிப்

படையில் கிராமங்களில் நூற்பதைப் பரப்புவதில் அகில இந்திய நூற்போர் சங்கம் தனது கவனம் முழுவதையும் செலுத்தி வருகிறது என்பதை அவர் அறிந்திருக்கக் கூடும். பிஜோலியா, பர்டோலியின் உதாரணங்களைப் பார்க்கும்படியும் அவருக்குக் கூறுகிறேன். அதே சமயத்தில் பட்டணங்களையும் தள்ளி விடுவதற்கில்லை. பட்டண வாழ்க்கை, கிராமங்களில் இப்பொழுது அதிகமாக ஆதிக்கம் பெற்றிருக்கிறது. ஆகையால், கதர் அணிவதைப் பட்டணங்கள் நாகரிகமாகக் கொண்டாலன்றிக் கிராமவாசிகள் தங்கள் சொந்த நன்மைக்காகவும், தங்கள் உபயோகத்திற்குப் போதுமான அளவும் நூற்கும்படி கிராமவாசிகளைத் தூண்டுவது அதிகக் கஷ்டமானதாகிறது. ராவ் பகதூர் நினைப்பது போலச் செலவைப் பற்றிய விஷயமும் அவ்வளவு சாமான்யமானதல்ல. பருத்தி வியாபாரிகளும், வெளிநாட்டில் பருத்தியை வாங்குவோரும், பருத்தி விலையையும் பருத்தி சாகுபடியையும் அதிகமாகக் குழப்பியிருக்கிறார்கள். இதனால் கிராமவாசி, பருத்திக்கும் அதை நெய்வதற்கும் கொடுப்பதைவிடத் துணியை வாங்கிவிடுவதே மலிவானது என்று எண்ணுகிறார். சில சமயங்களில், ஒரு கெஜம் அந்நியத் துணியின் விலை, இதே அளவு துணியை நெய்வதற்காகும் கூலியைவிட மலிவாக இருக்கிறது. பல சமயங்களில், அந்நியத் துணியின் விலை அதே அளவு கைத்தறித் துணி தயாரிப்பதற்குவேண்டிய பருத்தியின் விலைக்குச் சமமாக இருக்கிறது. இது விசித்திரமாகக்கூடத் தோன்றும். இந்தச் சிக்கலான விஷயங்களையெல்லாம் நான் இப்பொழுது ஆராய்ந்து கொண்டிருக்க வேண்டியதில்லை. அரசாங்கத்தின் உதவி இல்லாதபோது, மறைமுகமான, தந்திரமான எதிர்ப்பும், இதனிடம் எப்பொழுதும் அலட்சியமும் இருக்கும் போது, இந்த வேலை எவ்வளவு கஷ்டமானதாக ஆகிறது என்பதையே, அனுபவத்தில் நூற்பவன் என்ற முறையில் கூறுகிறேன். இதனாலேயே ஆரம்ப காலத்தில் அரசாங்கத்தின் பண சகாயமும், பட்டணவாசிகளின் ஆதரவும் அவசியமாகிறது. மேலும், ஜனநாயக உணர்ச்சி இருந்துவரும் இந்தக் காலத்தில் கிராமங்களுக்கும் பட்டணங்களுக்கும் வித்தியாசம் காட்டப்படுமானால், கதரின் தத்துவத்தையும் உண்மையையும் கிராமவாசிகள் அறிந்து கொள்ளமாட்டார்கள். கடைசியாக, நாடு முழுமைக்கும் பரப்ப வேண்டும் என்று ராவ்பகதூர் நன்குணர்ந்து எடுத்துக் காட்டும் இந்தச் சீர்திருத்தம், அப்படிப் பரப்புவதற்கு முன்னோடிகளாக இருந்து வேலை செய்வதற்கானவர்களைப் பட்டணங்களிலேயே கண்டுபிடிக்க வேண்டியிருப்பதால், பட்டணங்களில் கதர் சூழ்நிலை இருப்பது முற்றிலும் அவசியமானதாகிறது.

—'எங் இந்தியா' – 7—3—1929

# 4

# கைத்தறி நெசவும் மில் நூலும்

மதுரையில் சௌராஷ்டிரர்கள் அளித்த உபசாரப் பத்திரத்திற்குக் காந்திஜி கூறிய பதிலாவது :

" என் இளமைப் பருவத்தில் நான் இருந்த இடமான ராஜ்கோட்டுடன் உங்களுக்குள்ள தொடர்பைக் குறித்து நீங்கள் கூறியிருப்பது எனக்கு அதிக மகிழ்ச்சியை அளிக்கிறது. ஆனால், என்னோடு இத்தகைய நெருங்கிய உறவைக் கொண்டாடிக் கொள்ளுவது கஷ்டத்தை உண்டாக்கிக் கொள்ளும் காரியம் என்பதைத் தயவு செய்து நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். ஏனெனில், நான் செய்துவரும் வேலைகளில் உங்களுக்குத் தெரிந்ததாக எது எது இருக்கிறதோ அதில் அதிகப் பொறுப்பை இதன் மூலம் நீங்களே உண்டாக்கிக் கொண்டவர்களாகிறீர்கள். இவ்வளவு அதிகமான உற்றார் உறவினர்களைக் கொண்ட ஒருவர், ஆபத்தான சமயம் வந்துவிடும்போது அவர்களுடைய உதவியை நாட முடியவில்லையென்றால், அந்த உற்றார் உறவினர் இருந்துதான் என்ன பயன்? ஆனால், உங்களுக்கு மாத்திரம் மனம் இருந்தால், என்னுடன் இன்னும் அதிக நெருங்கிய உறவை நீங்கள் கொண்டாடிக் கொள்ள முடியும். ஏனெனில், ஒரு சமஸ்தானத்தின் மந்திரியாக இருந்த ஒருவரின் மகன் நான் என்பதற்காக நான் பெருமையடைந்தாலும், சாத்தியமானதாக மாத்திரம் இருக்குமாயின், உங்களுடன் சேர்ந்த நெசவாளியாகி விடுவதில் இன்னும் அதிகப் பெருமை அடைகிறேன். ஏனெனில், என் தந்தையார், அச்சமயத்திற்கு தம் அதிகாரத்தின் கீழ் வைக்கப்பட்டிருந்த சிறு சமஸ்தானத்தின் கதியை நெய்துகொண்டிருந்தார் என்றால், நீங்களும் நானும், நாம் விரும்பினால், உங்களுக்குப் பரம்பரையான தொழிலும், ஆனால் எனக்கு நானே சுவீகரித்துக்கொண்ட தொழிலுமான இதைக் கொண்டு, இப்பெரிய நாட்டின் விதியையே நெய்துவிட முடியும். நம்மிடையேயுள்ள இந்த உறவைக் குறித்து நான் அதிகப் பெருமை அடைவதை நினைவுபடுத்துவதன் மூலம், என் தந்தையாரின் தெய்வீகமான நினைவுக்கு, அவர் கீர்த்திக்கு, நான் இழுக்குத் தேடிவிடவில்லை. ஏனெனில் அவர் அடிச்சுவட்டைப் பின்பற்றி இன்னும் அதிகமான மக்களின் நன்மையையே தேடி வருகிறேன். உங்களுடன் இந்த நெருங்கிய உறவைச் சொல்லிக் கொள்ளும் போது, உங்கள் உபசாரப் பத்திரத்திலுள்ள ஒரு முக்கியமான பகுதி என் நினைவுக்கு வருகிறது.

" கையினால் நூற்ற நூல், உங்களுக்குத் தேவைப்படும் மெல்லிய ரகத்திலும், வேண்டிய அளவும் கிடைப்பது இப்பொழுது

சாத்தியமில்லாமலிருக்கிறது என்று உங்கள் உபசாரப் பத்திரத்தில் கூறுகிறீர்கள். ஆகையால், அந்நிய நூலையோ, மில் நூலையோ கொண்டு கையினால் நெய்வதற்கு நான் உற்சாகமளிக்க வேண்டும் என்றும் கேட்கிறீர்கள். உங்கள் சிபார்சை, உங்களைப் போன்ற நெசவாளியான நான் ஏன் ஆதரிக்க முடியாமலிருக்கிறது என்பதை இப்பொழுது கூறுகிறேன். உங்கள் சிபார்சை நான் அங்கீகரித்தால் அது உங்களுக்கும், நான் கருதுபவர்களும் நீங்களும் கருத வேண்டியவர்களுமான வகுப்பார்களுக்கும் நல்லது அல்ல என்பதை உங்களுக்கு என்னால் எடுத்துக்காட்ட முடியும் என்றே நம்புகிறேன். உங்களில் சிலர் சாமர்த்தியசாலிகள், வர்த்தகத்தில் நுட்மான அறிவு படைத்தவர்கள். ஆகையால், அந்நிய நாட்டு மில்களும், இந்திய மில்களும்கூடக் கொடுக்கும் நூலைக் கொண்டு நெய்யும் ஒவ்வொரு நெசவாளியும், அந்த மில்களின் இஷ்டத்திலும் தயவிலும் வாழ்பவர்களாகத் தங்களை ஆக்கிக்கொண்டவர்களாகிறார்கள் என்பதை நீங்கள் அறியவேண்டும். நெசவாளர்கள் என்ற முறையில் நீங்கள் இன்னுமொன்றையும் உணரவேண்டும். கை நெசவை இன்று ஓரளவுக்கு நீங்கள் உங்கள் ஆதிக்கத்தில் வைத்திருக்கிறீர்கள். நீங்கள் மாத்திரமே தயாரிப்பவைகளாக என்னென்ன ரகங்களை நீங்கள் இன்று நெய்து வருகிறீர்களோ அந்த ரகங்களைத் தாங்களே நெய்துவிடுவதற்கு உலகத்திலுள்ள மில்களும் இந்தியாவிலிருக்கும் மில்களும் தயாராகிவிடும்போது, இன்று உங்கள் ஆதிக்கத்தில் வைத்திருக்கும் கை நெசவும் உங்கள் கையைவிட்டுப் போய்விடும். விஷயம், உங்களுக்கு இன்னும் தெரியவில்லை என்றால் அதையும் சொல்லுகிறேன். எந்த ரகங்களை நெய்வது இன்று உங்களுக்கு ஏகபோகமாக இருக்கிறதோ அந்த ரகங்களை மில்களே நெய்துவிடுவதற்கான சோதனைகளைத் திறமை வாய்ந்த உலக மில் முதலாளிகள் இப்பொழுதே செய்துகொண்டிருக்கிறார்கள். உங்களுக்கு இதில் இருக்கும் ஏகபோகத்தை எடுத்துக்கொண்டு விடவும், இத்தொழிலையே தங்கள் கைக்குள் கொண்டு வந்துவிடவும் மில் தொழில் நாள்தோறும் முயற்சி செய்துகொண்டு வருகிறது என்றால், அது மில் முதலாளிகளின் குற்றமோ, அத்தொழிலின் குற்றமோ அல்ல. யந்திரத்தில் தொடர்ந்து அபிவிருத்திகளைச் செய்துகொண்டு போவதும் உலகத்தில் கைத்தொழில்களையெல்லாம் தொடர்ந்து ஆக்கிரமித்துக்கொண்டு விடுவதும்தான் உண்மையில் பெரிய யந்திரத் தொழில் முதலாளிகளின் நோக்கமும் லட்சியமுமாகும். உங்களுடைய இந்தத் தொழிலையும் உங்களிடமிருந்து எடுத்துக்கொண்டு விடுவதற்கான முயற்சிகளைச் செய்ய வேண்டியது அவர்கள் நிலைபெற்றிருப்பதற்கே அவசியமானதாகிறது. நான் சொல்லுவதை நெசவாளர்கள் உணராது போவார்களாயின், கையினால் நூற்கும் தொழிலுக்கு என்ன கதி ஏற்பட்டதோ அதே கதியே கையினால் நெய்யும் தொழிலுக்கும் நிச்சயமாக ஏற்பட்டுத் தீரும்.

''இன்னுமொரு முக்கியமான விஷயத்தையும் நீங்கள் யோசிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்தியாவின் கை நெசவுத் தொழிலின் சரித்திரத்தை நீங்கள் ஆராய்ந்தால், இச்சமயம் ஆயிரக்கணக்கான நெசவாளர்கள் தங்கள் கைத்தொழிலைக் கைவிட நேர்ந்திருக்கிறது என்பதை நீங்கள் கண்டுகொள்ளலாம். உங்கள் தொழிலைச் சேர்ந்தவர்களான நெசவாளர்கள், சௌராஷ்டிரர்கள், இன்று பம்பாயில் தோட்டிகளாக வேலை செய்துகொண்டிருக்கிறார்கள். பஞ்சாபைச் சேர்ந்த நெசவாளர்கள் சிலர், கூலிச் சிப்பாய்களாக இன்று இருந்து வருவதுடன் மற்றுஞ் சிலர் கசாப்புக் கடைக்காரர்களாகி விட்டனர். ஆகையால், நீங்கள் சிபார்சு செய்வதை நான் ஏன் ஏற்றுக்கொள்ள முடியவில்லை என்பதை நீங்கள் இப்பொழுது புரிந்துகொள்ள முடியும். மில் நூலை நூற்பதை இன்று முதலே நீங்கள் விட்டுவிடலாம் என்பது இதன் பொருள் அல்ல. என்னுடைய ஆதரவு உங்களுக்குத் தேவையில்லை. ஆனால், மிகுந்த பணிவுடன் நான் ஆரம்பித்திருக்கும் இந்த இயக்கத்தில் மில் நூலையும் கலந்து கொள்ளும்படி என்னை நீங்கள் கேட்டுக் கொள்ளாமலிருப்பது உங்களுடைய நன்மைக்கு நல்லது என்பதை உங்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதே போல, இந்த இயக்கத்தை நீங்கள் ஆதரிப்பதும் உங்களுக்கு நல்லது. இது நிலைபெற்று, அசைக்க முடியாததாகவும் சுபிட்சமானதாகவும் வளருமானால், உங்கள் ஒவ்வொருவருக்கும் கௌரவமான பிழைப்பு இருக்கும். ஆகையால், கையினால் நூற்பது என்ற இந்த இயக்கம் வேகமாக வளருமானால், உங்களுக்கும் உதவியாக இருக்கும் என்று உங்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.''

—'எங் இந்தியா'–13—10—1927

## 5

# யந்திர நூற்பும் கை நூற்பும்

ஒரு சமயம் ராட்டையில் அதிக ஆர்வம் கொண்டிருந்த நண்பர் ஒருவர், பின்வரும் கருத்துப்பட எழுதுகிறார்:

''உங்கள் நடவடிக்கையெல்லாம் வீண். 'எங் இந்தியா', 'நவஜீவன்' பத்திரிகைகளில், ஊசிப்போனதற்குச் சூடு காட்டுவதில் ஏன் உங்கள் உடலையும் புத்தியையும் வீணைச் செலவழித்துக் கொண்டிருக்கிறீர்கள்? அவற்றை இனியும் படித்துக்கொண்டிருப்பதில் எனக்கு எந்தப் பிரயோசனமும் இல்லை. ராட்டையால் எவ்விதப் பிரயோசனமும் இல்லை என்பதை அனுபவத்தில் பார்த்துவிட்டேன். ஆரம்ப உற்சாகத்தில் மக்கள் வாங்கிய ராட்டைகளெல்லாம் இப்பொழுது மடித்துப் போய்க்கொண்டிருக்கின்றன என்பது உங்களுக்குத் தெரியுமா? இவற்றால் லாபமில்லை.

“இன்னும் ஏதாவது நல்ல காரியத்தில் உங்கள் கவனத்தைத் திருப்பும்படி உங்களுக்கு யோசனை கூறுகிறேன். கையினல் நூற்பதற்குப் பதிலாக யந்திரத்தில் நூற்பதைக் கொண்டு வாருங்கள். ஒவ்வொரு தாலுக்காவிலும் ஒரு நூற்கும் யந்திரத்தை அமையுங்கள். லாபத்தை மக்கள் உடைமையாக்குங்கள். மில்களைத் தேசாபிமானிகள் நடத்த வேண்டுமேயன்றி லாபத்திற்கு நடத்தக் கூடாது. தேசத்தினிடம் கொள்ளும் அன்பினல் நடத்த வேண்டும். அந்த நூலை அப்பகுதியிலிருக்கும் நெசவாளருக்கு மாத்திரம் வினியோகியுங்கள். இதிலிருந்து நெய்த துணி, அந்தத் தாலுக்காவோடு இருக்கவேண்டும். இப்படிச் செய்வதால் நேரமும் வண்டிச் சத்தமும் மிச்சமாகும். முதலில் இந்த வகையில் ஒரு தாலுக்காவில் ஏற்பாடு செய்யுங்கள். நீங்கள் பெரிய சேவை செய்தவர்களாவீர்கள்.’

இந்த வாதம் நல்லது போன்று தோற்றமளிக்கிறது. மேலும், தம் வழியில் ராட்டையை உபயோகித்துப் பார்த்த ஒருவர் இதைக் கூறுகிறுர். ஆகையால், இந்த நண்பரைப் போன்ற கருத்தையே கொண்டிருப்பவர்களுக்காக இதை ஆராய்கிறேன். இத்திட்டம், கதர் இயக்கம் எவ்வளவு பழைமையானதோ அவ்வளவு பழைமையானது என்பதை வாசகருக்குச் சொல்ல வேண்டியதில்லை. செல்லாக் காசைப் போல இதுவும் திரும்பத் திரும்பத் தலையைக் காட்டிக்கொண்டிருக்கிறது.

கோடிக்கணக்கான மக்கள் பட்டினி கிடக்காமலிருக்க வேண்டுமானல், அவர்களுக்கு உபரி வருமானம் ஏதாவது வேண்டும். அந்தச் சிறு வருவாயையும் வேலையையும் ராட்டை கொடுக்கிறது என்ற முக்கியமான உண்மையை நண்பர் மறந்துவிட்டார். வீடு தோறும் ஒரு கைத்தறியை அமைத்துவிடுவது என்பது சாத்தியமல்ல. வீடுதோறும் ஒரு ராட்டை, ஊருக்கு ஒரு கைத்தறி என்பதுதான் முறை. தாலுக்காவுக்கு ஒரு நூற்கும் மில்லை அமைத்துவிடுவது என்றுல், சிலர் பலரைச் சுரண்டுவது என்பதைத் தேசீயமயமாக்கி விடுவதில்தான் முடியும். ஒரு தாலுக்கா மில்லில் எல்லோருக்கும் வேலை கொடுத்துவிட முடியாது. மேலும், 2000-க்கு அதிகமாகவுள்ள தாலுக்காக்களில் அமைக்க நாம் யந்திரங்களை இறக்குமதி செய்ய வேண்டும். இந்த மில்களை நிர்வகித்து வேலை செய்யக்கூடிய நிபுணர்களுக்கு வேறு பயிற்சியளிக்க வேண்டும். காளான்களைப் போன்று மில்கள் முளைத்துவிட முடியாது. ஆனல், ராட்டையால் அது முடியும். ஒரு ராட்டை வேலை செய்யாது போனல், அதனல் யாருக்கும் கஷ்டமில்லை. ஆனல், ஒரு தாலுக்கா மில் வேலை செய்யாது போனல், சம்பந்தப்பட்ட அந்தத் தாலுக்கா மக்கள் சங்கடப்படுவார்கள். நண்பர் கூறியிருக்கும் யோசனை முற்றிலும் தவருனது என்பதுதான் என் கருத்து. என்றுலும், அவர் திட்டத்தில் அவருக்கு நம்பிக்கை இருந்தால், அதை அவர் செய்து பார்க்கும்படி அவருக்குக் கூறியிருக்கிறேன். வேறு எதுவும் எனக்குக் கவர்ச்சியளிக்கவில்லையாகையால் என் படகை நான் ஓட்டிக்கொண்டுதான் போக வேண்டும். ராட்டையில் அதற்கேயான எல்லா அழகையும் நான் காண்கிறேன். அதன் தோல்வியைக்

காண முடியாத அளவுக்கு என் புத்தி மந்தமாக இருக்கலாம். என் தவறை எனக்கு நிருபித்துக் காட்டினல் ஏற்றுக்கொள்ள நான் தயாராக இருக்கிறேன்.'

இந்த நண்பரின் கடிதம் கிடைத்த அன்றே இன்னுமொரு நண்பர் எனக்கு எழுதியிருக்கிருர். மில் தொழிலில் தமக்குப் பத்து வருட அனுபவம் இருக்கிறது என்று அவர் கூறுகிருர். யந்திர நூற்பையும் கை நெசவையும் அவர் அனுபவித்துப் பார்த்திருக்கிருர். அவர் இப்பொழுது கை நூற்பு, கை நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருக்கிருர். பொருளாதாரக் கஷ்டத்திற்கு முடிவான பரிகாரத்தில் அவர் தம் உழைப்பை இப்பொழுது ஈடுபடுத்தியிருக்கிருர். அந்த அனுபவத்தை இங்கே கூறுகிறேன். இந்தச் சோதனை முழுவதும் ஆரம்பக் கட்டத்திலேயே இருப்பதால் அதைக் குறித்து எந்தத் திடமான கருத்தையும் கூறுவதற்கில்லை. ஆனல், ஒன்று மாத்திரம் தெளிவானது. அநேக ஏழைகளின் இல்லங்களுக்கு ராட்டை ஒன்றே இன்று கொஞ்சம் ஆறுதலை உண்டாக்குவதாக இருக்கிறது. இதற்குப் பதிலாக வேறு எதுவும் இதைச் செய்துவிட முடியாது. "இதில் எந்த முயற்சியும் வீணுகவில்லை; ஏமாற்றமும் இல்லை. இதில் மிகக் கொஞ்சம் கூட ஒருவரைப் பெருங் கஷ்டத்திலிருந்து பாதுகாக்கிறது" என்று உண்மையில் ராட்டையைக் குறித்துத்தான் சொல்ல முடியுமேயல்லாமல் வேறு எதைக் குறித்தும் அவ்வாறு சொல்ல முடியாது.

—'எங் இந்தியா'—26—6—1924

## 6
# கைத்தறிப் பிரச்னை

உள்நாட்டு மில் நூலையும், வெளிநாட்டு மில் நூலையும் உபயோகித்துக் கைத்தறிகள் *1934*–ஆம் ஆண்டு வரையில் மொத்தம் எவ்வளவு உற்பத்தி செய்திருக்கின்றன என்பதைக் கீழ்க்கண்ட புள்ளி விவரம் காட்டும் :

| வருடம் | சராசரி துணி உற்பத்தி—லட்சம் கெஜத்தில் |
|---|---|
| *1911—14* | *101* |
| *1921—24* | *117* |
| *1925—28* | *124* |
| *1930* | *134* |
| *1931* | *134* |
| *1932* | *140* |
| *1933* | *172* |
| *1934* | *170* |

இந்தப் புள்ளி விவரம் எவ்வளவு தூரம் சரியானது என்பதைச் சொல்லிவிடுவது கஷ்டம். ஆனால், இதில் தவறு ஏதாவது இருக்குமானால், அது குறைத்துக் கூறிய அளவில்தான் இருக்கலாம் என்று எண்ணிக்கொள்ளுவது சரி என்று நினைக்கிறேன். கைத்தறிகளில் உண்மையாக உற்பத்தியாகி இருப்பது அநேகமாக இன்னும் அதிகமாகவே இருக்கலாம். இந்தக் கைத்தறிகளையெல்லாம், கையினால் நூற்ற நூலை உபயோகிப்பவைகளாக மாற்ற நம்மால் முடிய வேண்டும். ஆனால், இன்று அதை நாம் செய்ய முடியாதவர்களாக இருந்து வருகிறோம். நமது ராட்டை நூல் இப்பொழுது போதிய பலமுள்ளதாக இல்லை ; போதுமான அளவும் உற்பத்தியாகவில்லை. பலத்திலும், ஒரே மாதிரியாக இருப்பதிலும் மில் நூலுடன் ஒப்பிடக்கூடியதான கையினால் நூற்கும் நூலை நாம் உற்பத்தி செய்ய முடியாமலிருக்கும் வரையில், கைத்தறி நெசவாளர் இதை உபயோகிக்க மறுத்துத்தான் வருவார். அப்படி மறுப்பதற்கு நியாயமான காரணங்களும் இருக்கின்றன. முதலாவதாக, பலமில்லாத, ஒரே மாதிரியாக இல்லாத நூலை உபயோகித்தால் குறிப்பிட்ட நேரத்தில் நெய்யும் துணியின் அளவு குறைகிறது. இதனால் நெசவாளரின் வருமானம் குறைந்துவிடுகிறது. இரண்டாவதாக, கைத்தறி நெசவாளர் இன்று அநேகமாக உயர்ந்த ரகத் துணி உற்பத்தியில்தான் விசேஷப் பயிற்சி பெற்றிருக்கிறார். ஆனால், கையினால் நூற்பதில் கிடைக்கும் மெல்லிய ரக நூல் மிகக் குறைவாகக் கிடைப்பதோடு அதுவும் பெரும்பாலும் ஆந்திராவில் மாத்திரம் உற்பத்தியாகிறது. இக்கஷ்டத்திற்குப் பரிகாரம், கதர் விஞ்ஞானத்தில் பூரணமான தேர்ச்சியைப் பெறுவதையே பொறுத்திருக்கிறது. ஆனால், இப்பிரச்னையை இன்று சமாளிக்கும்படி நான் யாரையும் கேட்கவில்லை. இப்போதைக்கு நான் பொறுத்திருக்கலாம். கைத்தறியைப் பற்றிய பிரச்னையைச் சமாளிக்க முற்படுவதற்கு முன்னால், வெற்றிகரமாகச் சமாளித்தாக வேண்டிய பிரச்னைகள் பல இருக்கின்றன. நாடு முழுவதிலும் கதரைப் பரப்பிவிடுவது என்ற கனவு நனவாவதற்கு முன்னால் இப்பிரச்னையையும் வெற்றிகரமாகச் சமாளித்துத்தான் ஆகவேண்டும் என்பதை மாத்திரம் நினைவில் வைக்க வேண்டும்.

—'ஹரிஜன்' – 17—4—1937

## 7

# நெசவாளரைக் காப்பது எப்படி?

கைத்தறி நெசவுத் தொழில், மில்களின் போட்டியைச் சமாளித்து நின்றிருக்கிறது என்பது ஓரளவுக்குத்தான் உண்மை. முன்னால், அதாவது இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு இருந்த கைத்தறி நெசவாளரின் தொகையில் இப்பொழுது பாதி

கூட இல்லை. நாட்டு மக்களுக்குத் தேவையான நூல் முழுவதையும் ராட்டையே நூற்று வந்த காலத்தில், தேவைப்பட்ட துணி முழுவதையும் கைத்தறிகளே நெய்து வந்தன. நூற்கும் மில்கள் தோன்றியதும் ராட்டை அடியோடு செத்துவிட்டது. நூற்பதால் கிடைத்து வந்த ஊதியம் சொற்பமாக இருந்ததும், முழு நேரமும் செய்யும் தொழிலாக அது இல்லாததுமே இதற்குக் காரணம். ஆனால், கைத்தறி, மில்களைப் பலமாக எதிர்த்து நின்று வந்தது. இதற்குள்ள பல காரணங்களில் முக்கியமானவை, அதனளவில் அது முழு நேர வேலையாக இருந்ததும், வாழ்க்கைக்குப் போதுமானது அதில் கிடைத்து வந்ததுமாகும். நூற்கும் மில்கள் வந்ததும், நெசவாளி தனக்குத் தேவையான நூலுக்கு அவைகளை நாடினான். இம்மாறுதலை அவன் வரவேற்கவும் செய்தான். ஏனெனில், ஒரே மாதிரியாகவும் பலமாகவும் இருக்கும் நூல் அவனுக்குக் கிடைத்தது. ஏதாவது ஒரு காரணத்தை முன்னிட்டு அவனுக்கு மில்கள் நூல் கொடுத்து வராது போனால் திக்கற்ற நிலையை தான் அடைய வேண்டி வரும் என்பது பற்றி அவனுக்கு ஒன்றுமே தெரியாது. நூற்கும் கிராமவாசியைப் போல் அல்ல மில் முதலாளி ; நூலுக்கு இவர் வைத்ததுதான் விலை. அதோடு சாதாரண, ஒரே மாதிரியான கதரை நெய்து வந்த நெசவாளி, மில்லின் போட்டியைச் சமாளித்து நிற்க முடியாமல் செத்துவிட்டான். பகட்டான துணியை நெய்து வந்த கைத்தறி நெசவாளர்கள், சென்ற சில வருடங்களாக நெய்யும் மில்களின் போட்டியை அனுபவித்து வருகிறார்கள். பொது மக்களின் ருசியும் மெதுவாக, நிச்சயமாக மாறிக்கொண்டு வருகிறது. கிராமத்து நெசவாளி நெய்கிற ரகத்தைப் போன்றே மில்களினால் நெய்துவிட முடியாது போனால், புதிய ரகங்களைத் தயாரித்து, அவற்றைத் திறமையாக விளம்பரப்படுத்தி வாங்குவோரைக் கிரகித்துவிட மில்களினால் முடியும். இதைத்தான் அவர்கள் செய்து வருகிறார்கள். ஆகையால், தங்கள் துணியை வாங்குவோரில்லாததால் பல்லாயிரக் கணக்கான ஒரிஸ்ஸா நெசவாளர்கள் வேலையில்லாது தவிக்கின்றனர். நெசவுக்குப் பெயர் போன இடமான அகமத்நகரிலிருந்தும் இன்னொரு நாள் என்னிடம் இதே கூக்குரல் வந்தது. இந்த நெசவாளர் குடும்பங்களெல்லாம், தங்கள் இல்லங்களில் பஞ்சரைப்பதையும் நூற்பதையும் கொண்டுவந்து, மில் நூலை நம்பி இருப்பதையும் விட்டுவிட்டு, அகில இந்திய நூற்போர் சங்கத்தின் என்றுமே தவறாத உதவியையும் பெற வேண்டும் என்பதுதான் இவர்கள் எல்லோருக்கும் நான் கூறும் யோசனை. தங்கள் நேரத்தில் ஒரு பகுதியை நூற்பதற்கும் செலவிட வேண்டியிருப்பதால் நெசவாளர்கள் முன்னால் சம்பாதித்த அளவு சம்பாதிக்காமல் இருக்கலாம். அகில இந்திய நூற்போர் சங்கத்தின் மாற்றப்பட்டிருக்கும் கொள்கையின்படி, நூற்பதற்கு மணிக்கு ஓர் அணா கிடைக்க வேண்டும் என்று முயற்சிக்கப்படுகிறது. ஆனால், இப்பொழுது உண்மையில் மணிக்கு ஒன்றரை அணா கொடுத்து வருவதால், வருமானம் குறைந்துவிட்டதாகவே

நெசவாளி உணரமாட்டார். அது எப்படியானலும், பட்டினி கிடப்பதைவிடக் குறைந்த கூலி எவ்வளவோ மேல்.

நெசவாளர், தம் குடும்பத்தில் நூற்பதையும் பஞ்படிப்பதையும் மேற்கொள்ளுவதால், மிகக் குறைந்த மூலதனமே இதற்காக அவர் போட வேண்டியிருக்கும் என்பதும் நினைவு இருக்கட்டும். ராட்டை முன்னடியே அவரிடம் இருக்கிறது. அதில் கொஞ்சம் மாறுதலைத்தான் செய்ய வேண்டும். சில அணுவிலைக்கு பஞ்சடிக்கும் வில்லை அவர் வாங்க வேண்டியிருக்கும்.

ஒரிஸ்ஸா அரசாங்கம், தங்கள் சிறைச்சாலையில் மில் நூல் வாங்கக்கூடாது என்று தடுத்துத் தங்களுக்கு வேண்டிய துணியையெல்லாம் கதராகவே வாங்கி வருகிருர்கள் என்று அறிகிறேன். காங்கிரஸின் நிர்மாண வேலைத் திட்டத்தை அனுசரித்து நடந்து வருவதற்காக அந்த அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன். இங்கு கூறப்படும் பரிகாரம், ஸ்தாபனத்தை நடத்தி வரும் ஊழியர்களுக்கு நினைவு இருக்கட்டும். நெசவாளர்கள் நூற்பதையும் மேற்கொள்ளும்படி செய்துவிடுவதால், தேவையான நூலை உற்பத்தி செய்து விடுவது எளிதானதாகிவிடும். புதிதாகக் கிராமவாசிகளுக்குப் பயிற்சி அளித்து அவர்கள் திறமை வாய்ந்த நூற்போராவதற்காகக் காத்துக் கொண்டிருப்பதைவிட இம்முறையில் கதரை உற்பத்தி செய்வது, ஒப்பிட்டுப் பார்த்தால், கதரை மலிவாக உற்பத்தி செய்யலாம் என்பதையும் ஊழியர்கள் காணக்கூடும். கிராமங்களிலெல்லாம் கையினல் நூற்பதை அவர்கள் பரப்ப வேண்டும் என்பதில் சந்தேகம் இல்லை. ஏனெனில், அதுதான் அகில இந்திய நூற்போர் சங்கத்தின் லட்சியம். ஆனல், உயர்வான நோக்கம் நிறைவேறும் வரையில் கைத்தறி நெசவாளரை ஊழியர்கள் கவனிக்காமல் இருந்துவிட வேண்டியதில்லை.

—' ஹரிஜன் '–20—8—1938.

## 8

# ஊழியர்கள் நெசவு கற்க வேண்டும்

கதர் இயக்கம் ஆரம்பமாகி இருபத்தொரு ஆண்டுகளுக்கு மேலாகிறது. ஒரு பக்கத்தில் நம்முடைய நூலை நெய்வதற்குப் போதுமான நெசவாளர்கள் இல்லை. மற்ருேர் பக்கத்தில், கையினல் நூற்ற நூலை நெய்யும்படி செய்யப்படாத நெசவாளர்கள் நம் நாட்டில் லட்சக் கணக்கில் இருக்கிருர்கள் என்பதை இப்பொழுதுங்கூட காண்கிறேன். இந்த விசித்திரமான நிலைமை இருந்து வருவதற்கு நம்மிடம் ஏதாவது தவறு

இருக்கிறதா என்பதை நாம் கவனிக்க வேண்டும். நெசவு வேலையை ஒரு தவமாகவேனும் கதர் ஊழியர்கள் கற்றுக் கொண்டு விடுவதில்தான் இதற்குப் பரிகாரம் இருக்கிறது. மிகச் சிறந்த நூற்பாளர்களை நமது கதர் ஊழியர்களிடமிருந்து தான் கண்டோம். நூற்பதில் அபிவிருத்தியைச் சாத்தியமாக்கி யவர்களும் அவர்கள்தான். அதே போல, நம் கதர் ஊழியர்கள் நெய்யும்படியும் நாம் செய்திருக்க வேண்டும். நெய்யும் கலை யையும் நாம் கற்றுக்கொண்டால்தான், கையினால் நூற்ற நூலை நெய்வதில் நெசவாளருக்கு என்ன கஷ்டங்கள் இருக்கின்றன என்பதை நாம் கண்டுபிடித்து அவற்றிற்குப் பரிகாரங்களையும் நாம் கண்டுபிடிக்க முடியும். நாம் செய்துவிட்ட தவறுக்குப் பிராயச்சித்தம் செய்து கொண்டு விடுவோமாயின், மில் நூலுக்கு இணையானதாக இருக்கும் வகையில் கையினால் நூற்ற நூல் அபிவிருத்தியை அடைந்துவிடும். மில் நூலைப் போல உறுதி யாக இருக்கும் நூலை நாம் இன்று நூற்க முடியாமலிருக்கலாம். என்றாலும், இந்த இரண்டுக்கும் உள்ள வித்தியாசம் இப் பொழுது இருப்பதைப் போல இருந்து கொண்டிருக்காது; நெசவாளருக்கு இப்பொழுது கையினால் நூற்ற நூலின் பேரில் இருந்து கொண்டிருக்கும் வெறுப்பும் அப்படியே இருக்காது.

(ஹிந்தியிலிருந்து மொழிபெயர்ப்பு)

]''ராட்டையின் தத்துவம்'' என்ற நூலிலிருந்து—பக்கம் 74—அக்டோபர் 1941]

# 9

# கஷ்டத்தை அறியவேண்டும்

கைத்தறி நெசவாளருக்கு இருக்கும் கஷ்டங்களைச் சர்க்கா சங்க ஊழியர்கள், அன்போடுகூடிய பொறுமையைக்கொண்டும், விஷயத்தைத் தெரிந்துகொண்டிருப்பதனாலும் உணர்ந்து, அவற் றைப் போக்குவது எப்படி என்பதையும் அறிய வேண்டும். ஆச்சாரிய வினோபா, இதற்கு ஒரு பரிகாரத்தைக் கூறியிருக்கிறார். கண்டிலிருந்து நூலைப் பிரிக்கும்போதே ஈரிழையாக்கித் திரித்து விடுவது என்பது அது. இந்த வழக்கத்தை எல்லோரும் கைக் கொள்ளுவதாக இருந்தால், நெய்வதற்கு முறுக்கு ஏற்றாத நூலே கிடைக்காமற் போய்விடும். மில் நூலைவிட அதிக சௌகரிய மானதாக இல்லாவிட்டாலும், கையினால் நூற்ற முறுக்கிய நூல் நெய்வதற்கு எளிதானதாக இருக்கிறது என்பது அனுபவத்தில் தெரிந்திருக்கிறது. என் கடைசி சிறைவாசம் தீர்ந்து நான் விடுதலையடைந்ததிலிருந்து, கதர் ஊழியர்கள் நூற்கும் கலையில் எவ்விதம் ஆற்றல் அடைந்திருக்கிறார்களோ அதே போன்று நெய்யும் கலையிலும் திறமையடைந்துவிட வேண்டும் என்று என்னால் முடிந்த வரையில் தீவிரமாகக் கூறிக்கொண்டு வரு

கிறேன். ஊழியர்களே நூற்கவும் கற்றுக்கொள்ளாமல் இருந்திருந்தால், நூற்போருக்கு இருந்த அநேக கஷ்டங்களை அவர்களால் நிவர்த்தி செய்திருக்க முடியாது. என்னதான் அறியாமல் செய்துவிட்டதாக இருந்தாலும், முன்னால் அலட்சியம் செய்து விட்டதற்கு ஈடுசெய்துவிடுவதற்காக அவர்கள் நெய்யும் கலையைக் கற்றுக்கொண்டு அதில் விடாமுயற்சியுடன் பயிற்சி பெற வேண்டும். அப்பொழுதுதான், அப்பொழுது மாத்திரமே, கை நெசவைத் தொழிலாகக் கொண்டவர்களுக்குக் கையினால் நூற்ற நூலை நெய்வதில் இருக்கும் கஷ்டத்தை அறிந்து அதை நிவர்த்திக்க முடியும்.

—'ஹரிஜன்'–31—3—1946

# 10

# கட்டாயப்படுத்தக்கூடாது

கையினால் நூற்ற நூலை நெசவாளர்கள் ஓரளவு நெய்தாகும்படிச் செய்ய வேண்டும்; அந்த அளவு அவர்கள் நெய்யாவிட்டால் அவர்களுக்கு மில் நூல் பங்கீடு தரக்கூடாது என்று மெம்பர் யோசனை கூறினர். அதற்குப் பதில் சொன்ன காந்திஜி, 'எந்தவிதமான கட்டாயமும் கதர் மீது வெறுப்பையே உண்டாக்கும்' என்றார். பிறகு அது 'சுதந்திரத்தின் சின்னமாக' இருக்காது என்றார். 'சுதந்திர உணர்ச்சி எங்கும் பரவியிருக்கிறது. கட்டாயப்படுத்தப்படுவதற்கு உடன்பட நெசவாளி மறுத்து விடுவார்' என்றார்.

'உணவு, துணி முதலிய எல்லாவற்றிற்குமே கட்டுப்பாடு இருக்கிறதே' என்று வாதித்தார், ஜாஜூஜி. 'நெசவாளர் விஷயத்திலும் ஏன் கட்டுப்பாட்டை அமுலுக்குக் கொண்டு வரக்கூடாது?' என்று கேட்டார்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "இந்த யோசனையே எனக்குப் பிடிக்கவில்லை. நூற்போர் விஷயத்தில் நாம் கட்டாயப் படுத்தவில்லை. நெசவாளர் விஷயத்திலும் அதை அனுசரிக்கக்கூடாது. இதில் கஷ்டம் எங்கிருக்கிறது என்பதைக் கவனிப்போம். ஆரம்பத்தில் நாம் செய்துவிட்ட தவறு, நூற்கக் கற்றுக்கொண்டு நெய்வதை அலட்சியம் செய்துவிட்டதுதான். எல்லோரும் நூற்பது என்பதோடு எல்லோரும் நெய்யவும் கற்றுக்கொள்ள வேண்டும் என்று செய்திருந்தால், இந்தக் கஷ்டங்களெல்லாம் வந்திருக்கமாட்டா. இந்நூலை நெய்வதில் நெசவாளருக்குச் சாத்தியமான வரையில் சிரமம் இருக்காதாகையால் நூலை அபிவிருத்தி செய்வதுதான் இதற்குள்ள பரிகாரம். நெசவாளர்கள் மில் நூலை நம்பிக்கொண்டிருப்பது முடிவில் அவர்கள் தொழிலையே கொன்று

விடும் என்பதை அவர்களுக்கு எடுத்துக் கூறி அறியும்படிச் செய்ய வேண்டும். மில் முதலாளிகள் பரோபகார சிந்தையுள்ளவர்கள் அல்ல. மில் துணியோடு சரியானபடி போட்டி போடும் அளவுக்குக் கைத்தறி நெசவாளர்கள் வந்துவிடும்போது, கைத்தறி நெசவாளர்கள் கழுத்தில் போட்டிருக்கும் தூக்குக் கயிற்றை மில் முதலாளிகள் இழுத்து இறுக்கிவிடுவார்கள்.

'ராட்டையில் நமக்கு நம்பிக்கை இருக்குமானல், தாற்காலிகமான இந்தச் சிரமங்களை யெல்லாம் கண்டு திகைத்துவிடாமல் நாம் முன்னேறிப் போக வேண்டும். கையினல் நூற்ற நூலை நெய்யும் கைத்தறிகளின் தொகை நாளாவட்டத்தில் அதிகமாகும். நமக்காக வேண்டிய துணி முழுவதையும் தயாரித்துக்கொண்டு விடுவதற்குப் போதுமான தொழில் திறமை வாய்ந்தவர்களும், சொந்த ஆற்றலும் நம் நாட்டில் உண்டு.'

ஜா: அப்படியானல், எப்பொழுதும் போல நத்தை வேகத்தில் வேலை நடந்து கொண்டிருக்க வேண்டும் என்ருகிறது. நான்கு லட்சம் பேர் சீக்கிரத்தில், துணிக்கு இருக்கும் தேவையை அவர்களே சுயமாகப் பூர்த்தி செய்துகொண்டு விடுவது என்ற திட்டம் இந்த வகையில் வெற்றி பெருது.

கா: வெற்றி பெறவில்லையானல், தவறு நம்முடையதே.

ஜா: முடிவான கருத்தில் அது சரி. ஆனல், சந்தர்ப்பத்தையும் கவனிக்க வேண்டும்.

கா: எதிராக உள்ள சந்தர்ப்பங்களைச் சமாளித்துக்கொள்ளுவது மனிதனுக்கு இருக்கும் உரிமை. இயற்கையை வெல்லுவது என்பதே நாம் வாழும் இந்த யுகத்தின் முழக்கமல்லவா? சந்தர்ப்பம் ஒன்றே முக்கியம் என்று இருந்தால், ஜெர்மனியும் ஜப்பானும் யுத்தத்தில் வெற்றி பெற்றிருப்பார்கள். தோல்வியை ஒப்புக்கொண்டு வீடுவது என்பதையே அறியாத ஆங்கில மக்களின் உதாரணத்திலிருந்து இவ்விஷயத்தில் நாம் கற்றுக்கொள்ள வேண்டும். நமது வாழ்க்கையில் எளிமையையும் தவத்தையும் நாம் வளர்த்துக் கொள்ள வேண்டும். தவத்தின் சக்தியால் அடைய முடியாதது எதுவும் இல்லை.

—'ஹரிஜன்'-20—10—1946

# 1

# ராட்டை

*[1922 பிப்ரவரி 15–ஆம் தேதி மகாத்மா பர்டோலியிலிருந்து ஸர் டானியல் ஹாமில்டனுக்கு ராட்டையைக் குறித்து ஒரு கடிதம் எழுதினர். அக்கடிதமும் ஸர் டானியலின் பதிலும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.]*

## காந்திஜியின் கடிதம்

அன்புள்ள ஐயா,

என்னுடன் ஒரு மணி நேரம் பேச நீங்கள் விரும்புகிறீர்கள் என்று ஸ்ரீ ஹாட்ஜ் எனக்கு எழுதுகிறார். நானே இப்பேச்சை ஆரம்பிக்க வேண்டும் என்றும் அவர் யோசனை கூறுகிறார். அதை மகிழ்ச்சியுடன் ஆரம்பிக்கிறேன். ராட்டையைத் தவிர என்னுடைய நடவடிக்கைகளில் வேறு எதைக் குறித்தும் உங்களிடம் பேசி உங்கள் நேரத்தை வீணாக்க நான் விரும்பவில்லை. வெளிப்படையான என்னுடைய காரியங்கள் எல்லாவற்றிலும் அதிக நிரந்தரமானதும், அதிகப் பயனுள்ளதும் ராட்டைதான். இந்தியாவின் கோடிக்கணக்கான குடும்பங்களின் துயரமாக இருந்து வரும் பிரச்னையை ராட்டை தீர்த்துவிடும். பஞ்சம் ஏற்படாமலிருப்பதற்கும் அதுதான் சரியான பாதுகாப்பு என்று நான் கூறி வருகிறேன். இதை நிரூபிப்பதற்கு வேண்டிய அத்தாட்சிகள் இப்பொழுது என்னிடம் ஏராளமாகவும் இருக்கின்றன.

பிரபலமான விஞ்ஞானியான டாக்டர் பி. ஸி. ரேயை நீங்கள் அறிவீர்கள். ஆனல், இவர் தீவிரமான ராட்டை பக்தராகிவிட்டார் என்பது உங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். இக்காலத்தில் கொள்ளப்படும் அர்த்தத்தில், இந்தியா யந்திரத் தொழில் மயமாக வேண்டிய அவசியம் இல்லை. இந்தியா 1,900 மைல் நீளமும் 1,500 மைல் அகலமும் உள்ள பரந்த நாடு. அதில் 7,50,000 கிராமங்கள் எங்கும் பரவலாக இருந்து வருகின்றன. இம்மக்கள் பூமியையே நம்பி வாழ்பவர்கள். கைக்கும் வாய்க்கு மாகக் கஷ்ட ஜீவனம் நடத்தி வருகின்றனர். இந்நாடு முழுவதிலும் சுற்றியிருக்கிறேன். அவர்கள் நிலைமையைக் கவனித்துப் பார்த்திருக்கிறேன். கோடிக்கணக்கானவர்களு டன் பழகியும் இருக்கிறேன். மாருக என்னதான் கூறப் பட்டாலும், அவர்களுடைய வறுமை வளர்ந்துகொண்டு வரு கிறது என்பதில் சந்தேகமே இல்லை. வருடத்தில் குறைந் தது நான்கு மாதங்கள் ஒரு வேலையுமில்லை என்ற பலவந்த மான சோம்பலில் கோடிக்கணக்கானவர்கள் வாழ்ந்து வரு கின்றனர் என்பதிலும் சந்தேகமில்லை. விவசாயத்தில் புரட்சி கரமான மாறுதல்கள் அவசியம் இல்லை. இந்திய விவசாயிக்கு ஒரு துணைத் தொழிலே வேண்டும். அவர்களிடம் புகுத்த வேண்

டிய இயற்கையான தொழில், ராட்டையில் நூற்பது ; கைத்தறி அல்ல. கைத்தறியை ஒவ்வொரு வீட்டிலும் அமைத்துவிட முடியாது. ஆனால், ராட்டையை அமைத்துவிடலாம். ஒரு நூற்றாண்டுக்கு முன்னால்கூட ராட்டை ஒவ்வொரு வீட்டிலும் இருந்திருக்கிறது. பொருளாதாரத்தின் நிர்ப்பந்தத்தினால் ராட்டை விரட்டப்பட்டு விடவில்லை. ஆனால், பலாத்காரத்தைத் திட்டமிட்டு உபயோகித்து ராட்டை விரட்டப்பட்டிருக்கிறது. ஆதாரபூர்வமான தஸ்தாவேஜிகளைக்கொண்டு இதை நிரூபிக்க முடியும். ஆகையால், ராட்டை திரும்பவும் ஒவ்வோர் வீட்டிலும் இருக்கும்படிச் செய்வதனால், ஒரே மூச்சில் இந்தியாவின் பொருளாதாரப் பிரச்னையைத் தீர்த்துவிட முடியும். நீங்கள் இந்தியாவினிடம் அன்புள்ளவர்கள், பொருளாதாரத்திலும் ஒழுக்கத்திலும் என் நாடு உயர்வு அடைய வேண்டும் என்பதில் சிரத்தையுள்ளவர்கள் என்பதை அறிவேன். உங்களுக்கு அதிக செல்வாக்கு இருக்கிறது என்பதையும் அறிவேன். அந்தச் செல்வாக்கை ராட்டைக்கு உதவியாகப் பெற நான் விரும்புகிறேன். கூட்டுறவு சங்கங்களை ஆரம்பித்து, அவை வெற்றியடையும்படிச் செய்வதற்கு மிகச் சரியான சக்தி அது. கோடிக்கணக்கான மக்களின் ஒத்துழைப்பு இல்லாமல் முயற்சி வெற்றியடைய முடியாது. இப்பொழுதே ஆயிரக்கணக்கான பெண்களை, அவர்களுடைய மானக்கேடான வாழ்க்கையிலிருந்து ராட்டை மீட்டிருக்கிறது. பொருளாதாரத்திற்கு இது கருவியாக இருப்பதைப் போன்று ஒழுக்கத்திற்கும் ஏற்ற கருவியாக இருக்கிறது.

யந்திரங்களைக் குறித்து விசித்திரமான கருத்துக்களை நான் கூறி வருகிறேன் என்று நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். ஆனால், அவற்றைக்கொண்டு நீங்கள் எந்தவித ஒருதலைப்பட்சமான முடிவுக்கும் வந்துவிட மாட்டீர்கள் என்று நம்புகிறேன். யந்திரங்களைக்கொண்டு இந்தியாவில் நடக்கும் வேறு எந்தத் தொழிலுக்கும் எதிராக நான் சொல்லக்கூடியது எதுவும் இல்லை. ஆனால், இந்தியாவுக்கு வெளியிலிருந்தோ, உள்ளிருந்தோ பிரமாண்டமான யந்திரங்களின் மூலம் உற்பத்தியாகும் துணியை இந்தியாவிற்குக் கொடுத்து வருவது, முதல்தரமான, மிகப் பெரிய தவறு என்றுதான் கூறுவேன். இந்தியாவின் முக்கியமான இடங்களில் பிரமாண்ட சமையலை வைத்து மலிவான சாப்பாட்டைத் தயாரித்துக் கொடுத்து வீட்டுச் சமையலை அழிப்பதைப் போன்ற பெருந் தவறு இது என்பேன்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

## ஹாமில்டனின் பதில்

வாரன்ஹில், லாப்டன்,
எஸ்ஸக்ஸ், மார்ச், 1922.

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

தங்கள் 15-ஆம் தேதி கடிதம் இப்பொழுதுதான் எனக்குக் கிடைத்தது. இது கிடைத்ததற்காக நான் அதிக மகிழ்ச்சியடைகிறேன். இதற்காக நமது நண்பரான ஸ்ரீ ஹாட்ஜுக்கு நான் அதிகம் கடமைப்பட்டிருக்கிறேன். என்றாலும், எனக்கு அபாயகரமான சத்திர சிகிச்சை நடந்து இப்பொழுதுதான் குணமடைந்து வருகிறேன். இன்னும் வெளியில் போகாமலிருக்கிறேன். ஆகவே, இன்று தபாலில் தங்கள் கடிதத்திற்கு நான் விவரமாகப் பதில் எழுதாதிருந்தால் அதற்காக என்னைத் தயவு செய்து மன்னிப்பீர்கள் என்று நம்புகிறேன். பிறகு விவரமாக எழுதலாம் என எதிர்பார்க்கிறேன்.

இதற்கிடையில் ராட்டையைக் குறித்து நீங்கள் தெரிவித்திருக்கும் கருத்து சம்பந்தமாக, இந்திய கிராம வாழ்க்கையைக் குறித்து எனக்குள்ள சொந்த அனுபவத்தைக் கொண்டு நான் ஒன்று கூற முடியும். சரியான சந்தர்ப்பமளித்து, இக்கால நிதி உதவியும் இருந்தால், ராட்டை மாத்திரம் அல்ல கைத்தறியும் கூட, நீராவிச் சக்தியுடன் வெற்றிகரமாகப் போட்டி போட முடியும். இப்பொழுது பெரும்பாலும் வீணாகிக் கொண்டிருக்கும் விவசாயிகளின் ஓய்வு நேரத்திற்கு எந்த விலையுமே இல்லாதது தான் இதற்குக் காரணம். உபயோகிக்கும் கச்சாப் பொருளைத் தவிர வேறு விலை இல்லை என்று இருக்கும் நூலையோ, துணியையோ விட வேறு எந்த நூலும் துணியும் மலிவானதாக இருக்க முடியாது.

மிகப் பெரிய யந்திரத் தொழில் முறையிலுள்ள தீமைகளைக் குறித்து நீங்கள் கூறும் கருத்தையும் நான் முற்றிலும் ஒப்புக்கொள்ளுகிறேன். ஒரு தொழிலின் மதிப்பை, அதில் வேலைக்கு அமர்த்தப்படும் மக்களின் உடல்களிலும், ஆன்மாக்களிலும், உணர்ச்சியிலும் உண்டாக்கும் சாதகபாதகங்களைக்கொண்டு தான் கவனிக்க வேண்டுமேயன்றி, ஒரு வேலையுமே செய்யாமல் இருந்து வரும் பங்குதாரர்களுக்கு அது எவ்வளவு லாப விகிதம் கொடுக்கிறது என்பதைக்கொண்டு பார்க்கக்கூடாது. ஒரு துணி, வாங்குவோருக்குச் சில அணாக்கள் மலிவானதாக இருக்கலாம். ஆனால், பம்பாயில் மிகவும் நெருக்கமான பகுதிகளில் வாழும் ஆண், பெண், குழந்தைகளின் வாழ்க்கையைக் கேவலமாக்கி விடும் துணியாக அது இருக்குமானால் அத்துணி, அதிக விலையுள்ளதே ஆகும்.

இந்தியாவில் ஒரு வகையான சுயராஜ்யம் வளர வேண்டும் என்று நான் விரும்புகிறேன். அந்தச் சுயராஜ்யத்தின் சக்தி,

தீமையால் வந்த பணத்தைக் கொண்டல்லாமல் ஆரோக்கியமான வாழ்க்கையைக்கொண்டு அளக்கப்படுவதாக இருக்க வேண்டும். நீங்களும் இதைத்தான் விரும்புகிறீர்கள் என்று எண்ணுகிறேன். பணத்தின் சக்திக்கு அடிமைகளாக இல்லாமல் அதற்கு எஜமானர்களாக இருக்கும் முப்பத்திரண்டு கோடி மக்களைக் கொண்ட நாடு, உலகத்திலேயே மிகப் பெரிய நாடாகத்தான் இருக்கும். சில ஆண்டுகளில் சுயராஜ்யத்தை அடைந்துவிடலாம். ஆனால், அடைவதற்கான வழி, நெல்லும் கோதுமையும் விளையும் நிலங்களை விஸ்தரிப்பதில்தான் இருக்கிறதேயன்றிப் புரட்சியாகிய சகாரா பாலைவன முறையில் இல்லை. நிதி விஷயம் பெரிய விஷயம். சீக்கிரத்தில் அதைக் குறித்து நான் சொல்லக்கூடுமெனினும் இன்று சொல்லுவதற்கில்லை.

இதற்கிடையில் அரசாங்கத்தினிடம் அதிகக் கடுமையாக இருக்கமாட்டீர்கள் என்றே நம்புகிறேன். மற்றெல்லாரையும் போலவே நானும் அரசாங்கத்தின் மீது கடுமையாகக் குறை கூறியிருக்கிறேன். உப்பு வரியை இரட்டிப்பு மடங்காக்கி, தபால் கட்டணத்தையும் உயர்த்தியிருப்பதை நான் பலமாக ஆட்சேபிப்பதால், மீண்டும் நான் கடுமையாகக் குறைகூற வேண்டியிருக்கும் என்றே நம்புகிறேன். செய்திருப்பதும், சொல்லியிருப்பதும் எதுவாக இருந்தாலும், இந்தியாவை இந்த அரசாங்கம்தான் ஒன்றுபடுத்தி, ஒரே தேசீய இனமாக இருப்பதையும் சாத்தியமாக்கி இருக்கிறது. பழைய ஆட்சியை அழிக்கும் சக்தி என்று உங்களை எண்ணாமல், புதிய ஆட்சியை அமைக்கும் கை தேர்ந்த சிற்பி என்று உங்களை எண்ணவே நான் விரும்புவேன். இதில் எனக்குச் சுயநலம் எதுவும் இல்லை. நவ இந்தியாவை உருவாக்குவதில் நான் செய்யக்கூடியது ஏதாவது இருக்குமாயின் அதைச் செய்வதே எனக்கு மகிழ்ச்சி அளிக்கும்.

தங்கள் உண்மையுள்ள,
டி. எம். ஹாமில்டன்

—'எங் இந்தியா'–6–4–1922

## 2

# தடையில்லா வர்த்தகம் - பாதுகாப்பு

டாட்டா எஃகுத் தொழிற்சாலைக்குப் பாதுகாப்பு அளிக்க யோசித்து வரும் இச்சமயத்தில், பாதுகாப்பைக் குறித்து என் கருத்து என்ன என்பதைக் கூறுமாறு பலர் கேட்கிறார்கள். இச்சமயம் என் கருத்தைக் கூறுவதனால் என்ன பயன் என்பது எனக்குத் தெரியவில்லை. எஃகுத் தொழிற்சாலை சம்பந்தமாக

இருக்கும் யோசனையின் தன்மை இன்னது என்பதும் எனக்குத் தெரியாது. ஆனால், பெரும் மூலதனம் போட்டுத் தொழில் நடத்துவதற்கு நான் விரோதி என்றும், எனக்கு அதிகாரம் இருந்தால் யந்திரங்களையும் அவற்றில் உற்பத்தியானவைகளையும் நான் அழித்துவிடுவேன் என்றும் ஏற்பட்டிருக்கும் தவறான அபிப்பிராயத்தைப் போக்கிக்கொள்ளுவதற்கு இதை ஒரு வாய்ப்பாகக் கொள்ளுகிறேன். உண்மை என்னவென்றால், நான் பாதுகாப்பு வேண்டும் என்று உறுதியாக நம்புகிறவன். திக்கற்றவர்களான மக்களிடையே, தாங்கள் உற்பத்தி செய்யும் பொருள்களைக் கொண்டு வந்து குவித்துத் தங்கள் தேவைக்கான பொருள்கள் குறைந்த விலைக்கு வெளியிலிருந்து வர வேண்டும் என்று விரும்புகிற இங்கிலாந்திற்குத் தடையில்லாத வர்த்தகம் நல்லதாக இருக்கலாம். ஆனால், இந்தத் தடையில்லாத வர்த்தகம், இந்தியாவின் குடிசைத் தொழிலை அநேகமாக நாசமாக்கி, இந்நாட்டின் விவசாயிகளை அழித்துவிட்டது. மேலும், புதிய தொழில் எதுவும் பாதுகாப்பு இல்லாமல் வெளிநாட்டு வர்த்தகத்தோடு போட்டிபோட முடியாது. நேட்டால் பணவுதவி செய்து, இறக்குமதித் தீர்வை விதித்தே தனது சர்க்கரை உற்பத்தித் தொழிலை வளர்த்தது. ஜெர்மனியும், அரசாங்கப் பண உதவி முறையைக் கொண்டே பீட் சர்க்கரைத் தொழிலை வளர்த்தது. கையினால் நூற்று நெய்த துணிக்குத்தான் ஆதரவு அளித்து வருவேன். என்றாலும், ஜவுளி மில் தொழிலுக்குப் பாதுகாப்பு அளிப்பதை எப்பொழுதும் வரவேற்பேன். உண்மையில் பயனுள்ள எல்லாத் தொழில்களுக்கும் நான் பாதுகாப்பு அளிப்பேன். இந்தியாவின் பொருளாதார, ஒழுக்க நலனுக்கு அரசாங்கம் உண்மையாகவே ஆதரவாக இருக்கிறது என்பதை நான் காண்பேனாயின், அரசாங்கத்தை நான் எதிர்த்து வருவது அதிகமாகக் குறைந்துவிடும். அந்நியத் துணி முழுவதையும் விலக்கிவிடும் வகையில் ஜவுளித் தொழிலுக்கு அரசாங்கம் பாதுகாப்பு அளிக்கட்டும். அரசாங்கம் தனக்குத் தேவையாகும் துணிக்குக் கதரையே வாங்கி ராட்டையை எங்கும் பரப்பப் பாடுபடட்டும். வருமானம் குறைந்துவிடுமே என்பதைப் பொருட்படுத்தாமல் மதுபானங்களையும் லாகிரி வஸ்துக்களையும் அது ஒழிப்பதனால் தனது வருமானத்தில் ஏற்படும் குறைவுக்கு ஏற்றபடி ராணுவச் செலவையும் அரசாங்கம் குறைத்துக் கொள்ளட்டும். அரசியல் சீர்திருத்தத்தைக் குறித்து விவாதிப்பதற்கான வழியை இவை சரி செய்யும். கௌரவமான சமரசம் ஏற்படுவதற்கு முன்னால் மனமாற்றம் உண்டாக வேண்டும். மேற்கண்ட இரு காரியங்களும், மனமாற்றம் ஏற்பட்டிருக்கிறது என்பதற்கு அறிகுறியாகும் என்று நான் கொள்வேன்.

—'எங் இந்தியா' – 15—5—1924

# 3

# சாம்ராஜ்ய சரக்குகள் பகிஷ்காரம்

சாம்ராஜ்ய சரக்கு பகிஷ்கார விஷயம் எப்படி தொடர்ந்து கிளம்பி, அப்போதைக்கப்போது பொது ஜனங்களின் கவனத்தைக் கவர்ந்து வருகிறது என்பது விசித்திரமாகவே இருக்கிறது. அகிம்சையோடு கூடிய ஒத்துழையாமை நோக்குடன் கவனித்தால், அது முற்றிலும் ஏற்கக்கூடியதே அல்ல என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. பதிலுக்குப் பதில் செய்வது என்பதுதான் அது. ஆகவே, அது தண்டிப்பதாகிறது. ஆகையால், அகிம்சா வழியில் ஒத்துழையாமை என்ற கொள்கையைக் காங்கிரஸ் அனுசரித்து வருகிறவரையில், மற்ற அயல் நாட்டுச் சரக்குகளிலிருந்து பிரிட்டிஷ் சரக்குகளை வேருகப் பிரித்துப் பகிஷ்கரிப்பது என்பதை நாம் கைவிடவே வேண்டும். இத்தகைய கருத்தைக் கொண்டிருக்கும் காங்கிரஸ்காரன் நான் ஒருவனே என்ருல், இது சம்பந்தமாகச் சமீபத்தில் நடந்த காங்கிரஸ் விசேஷ மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானத்தை ரத்துச் செய்துவிட வேண்டும் என்று அடுத்த காங்கிரஸ் மகாநாட்டில் நான் தீர்மானம் கொண்டு வரவேண்டும்.

பதிலுக்குப் பதில் செய்யவேண்டும் என்பதற்காகப் பகிஷ்கரிப்பது என்பதன் தத்துவத்தைக் குறித்து இப்போதைக்கு நான் ஆராயவில்லை. ஆனல், அதன் பலனைக் குறித்து மாத்திரமே ஆராய்கிறேன். இந்தப் பகிஷ்கார இயக்கத்தில் மிதவாதிகளும் கலந்துகொண்டிருக்கிருர்கள் என்று அறிந்திருப்பதனல், ஆய்ந்து பார்ப்பதை யாரும் கைவிட்டுவிடக் கூடாது. இதற்கு மாருக, பதிலுக்குப் பதில் பகிஷ்காரம் செய்வதென்று அவர்களும் காங்கிரஸும் மேற்கொண்டது பயனற்றது என்பது மாத்திரமல்ல, நம்முடைய கையாலாகாத கோபத்தை மற்ருேர் முறையும் காட்டிக்கொண்டதாவதோடு நம்முடைய அருமையான சக்தியையும் வீணக்கிக் கொள்வதுமாகும் என்று நான் நம்புகிறேன். அதே நம்பிக்கையை அவர்களும் கொள்ளுவதாயின், எல்லா அந்நியத் துணியையும் பகிஷ்கரித்துவிட்டு, அதற்குப் பதிலாக இந்திய மில் துணியை உபயோகிப்பதற்குப் பதிலாகக் கையினல் நூற்ற கதர்த் துணியை உபயோகிப்பது என்ற ஆர்வத்தையும் உறுதியையும் கொள்ளும்படி அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

பகிஷ்காரக் கமிட்டியின் அறிக்கையைப் படித்துப் பார்த்தேன். பிரிட்டிஷ் அல்லது சாம்ராஜ்ய சரக்கு பகிஷ்காரம் என்ற வகையில் என்ன செய்யக்கூடுமோ அவ்வளவும் அதில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த அறிக்கை, பகிஷ்காரத்திற்கு ஆதரவாக இல்லாமல் பகிஷ்காரத்திற்கு எதிராகவுள்ள மிகப் பலமான ஆதா

ரங்களேயே எடுத்துக் காட்டுவதாக இருக்கிறது என்பதுதான் என் அபிப்பிராயம். சாம்ராஜ்ய சரக்குகளில் பெரும்பாலானவை, உதாரணமாக ரெயில்வே சாமான்கள் முதலியன, அரசாங்கத்தினுலோ அல்லது ஆங்கிலேய கம்பெனிகளினுலோ இறக்குமதி செய்யப்படுகின்றன. வாசனைகள், சோப்புகள், பூட்ஸ்கள் போன்ற சில்லறைச் சாமான்கள் போன்றவைகளே, இந்தப் பகிஷ்காரத்தில் எப்பொழுதும் சேர்த்துக்கொள்ளக் கூடாதவர்களான, உல்லாசமாகக் காலங்கழித்து ஆடம்பர வாழ்க்கை நடத்தி வரும் இந்தியரே உபயோகிக்கிருர்கள் என்று அறிக்கை பகிரங்கமாக ஒப்புக்கொள்ளுகிறது. இந்தச் சில்லறைச் சாமான்களின் பகிஷ்காரத்தை ஒவ்வொரு காங்கிரஸ்காரரும், ஒவ்வொரு மிதவாதியும் சரியானபடி நிறைவேற்றி வைத்தாலும், அவ்விதம் பகிஷ்கரிக்கப்படும் சரக்குகளின் தொகை வருடத்திற்கு ஒரு கோடி ரூபாய்க்கு மேல் போகாது என்பதைப்புள்ளி விவரங்களே அமைதியாகக் கவனித்தால் அறியலாம். இப்படிப்பட்ட ஒரு பகிஷ்காரம் காரணமாக கெனியா ஆங்கிலேயர் தங்கள் கொள்கையை மாற்றிக் கொள்ளும்படி செய்து விடலாம் என்று யாராவது எண்ணினல், அவர் துணிச்சலான நம்பிக்கைவாதியாகவே இருக்கவேண்டும்.

"பம்பாய் முனிஸிபல் கார்ப்பரேஷன் சாம்ராஜ்ய சரக்குகள் பகிஷ்காரத் தீர்மானம் நிறைவேற்றிய செய்தியை, ராய்டர் செய்திஸ்தாபனம் எந்தவிதக் கட்டணமுமின்றி அனுப்பியதும் எவ்வளவு பரபரப்பு ஏற்பட்டு விட்டது என்பதைப் பாருங்கள்" என்று என்னேக் குறைகூறுகிறவர் சொல்லுகிருர். பிரிட்டிஷ் வர்த்தக முறை நிச்சயமாக நமக்கு நன்ருகத் தெரியுமாகையால், இப்படிப்பட்ட பரபரப்புகளேப் பார்த்து அனுவசியமாக நாம் மகிழ்ச்சியடைந்து விடுவதற்கில்லே. ஒன்றுமறியாத பொதுமக்களின் மனதில், 'இங்கிலாந்துக்குத் தீமை செய்தே தீருவது என்று முனேந்திருக்கும் முறை கெட்ட இந்திய கிளர்ச்சிக்காரர்' மீது ஆத்திரத்தை உண்டாக்குவதற்காகவே, இத்தகைய காரியங்களெல்லாம் அடிக்கடி செய்யப்படுகின்றன. இத்தகைய பரபரப்பு உண்டாக்கப்படாமலிருக்கும்போது, வர்த்தகத்தின் ஒவ்வொரு ஏற்றத்தாழ்வுக்கோ, போக்குக்கோ பிரிட்டிஷ் வர்த்தக உணர்ச்சி எவ்விதம் பாதிக்கப்படுகிறது என்பதற்கு இது ஓர் அடையாளமாகிறது. இந்த உணர்ச்சியே, எந்த வகையான அவசர நிலேமை ஏற்பட்டாலும், எப்பொழுதும் சமாளித்துக்கொள்ளக் கூடியதாகத் தயாராகவும் இருந்து வருகிறது. ஆகையால், பரபரப்போ அல்லது பாராட்டோ இங்கிலாந்திலிருந்து வருவதானுலும், வேறு எந்த நாட்டிலிருந்து வந்தாலும், அதையெல்லாம் நம்பிவிட வேண்டாம் என்று பொதுமக்களேக் கேட்டுக்கொள்ளுகிறேன். அஞ்சப்படுகிற அல்லது பாராட்டப்படுகிற நமது செய்கை, அதனளவில் போதிய அளவு பயனுள்ளதாக இருந்தாலன்றி, நமது செய்கையால் ஏற்படும் அச்சமோ அல்லது கிடைக்கும் பாராட்டோ நம் நிலேமைக்கு ஆக்கம் அளித்துவிடாது.

நம் நாட்டின் தேவைகள் சிலவற்றிற்குப் பிரிட்டிஷ் சரக்கு களையே நாம் நம்பி வாழ்கிறோம். இதை நாம் உணரும்போது, நமது ஆத்திரம் நம்மைக் குருடர்களாக்கிவிட வில்லையானால், பகிஷ்காரத் தீர்மானத்திற்காக நாம் வெட்கப்படவே வேண்டும். ஆங்கில புத்தகங்களும் ஆங்கில மருந்துகளும் இல்லாமல் நமக்கு முடியாது எனும்போது, ஜெனிவா கடிகாரங்களை நாம் வாங்கிக் கொள்ள முடியும் என்பதற்காக ஆங்கில கடிகாரங்களை நாம் பகிஷ்கரிக்க வேண்டுமா? ஆங்கில புத்தகங்கள் நமக்குத் தேவையாகின்றன என்பதனால் அவற்றை விட்டுவிடமாட்டோம் என்றால், பிரிட்டிஷ் கடிகாரங்களையும் வாசனை சாமான்களையும் இறக்குமதி செய்து கொண்டிருப்பவர் தமது வர்த்தகத்தைத் தியாகஞ் செய்துவிடுவார் என்று நாம் எப்படி எதிர்பார்க்க முடியும்? நான் நோயுற்றிருந்தபோது திறமை வாய்ந்த ஆங்கிலேயத் தாதி ஒருவர் எனக்குப் பணிவிடை செய்து வந்தார். அத் தாதியை நான் அன்போடு 'கொடுங்கோலாள்' என்று சொல்லுவது உண்டு. ஏனெனில், நான் சாப்பிடுவதையும் தூங்குவதையும் விட அதிகமாகச் சாப்பிட்டு அதிகமாகத் தூங்க வேண்டும் என்று அம்மாது அன்பான எல்லா வழிகளிலும் என்னை வற்புறுத்திக்கொண்டே இருந்தார். என்னை ஆஸ்பத்திரியில் தனிப்பட்ட வார்டுக்குப் பத்திரமாகக் கொண்டு போயினர். என்னை ஒரு டாக்டரும் அத்தாதியுமே இட்டுச் சென்றனர். அங்கே போய்ச் சேர்ந்த பிறகு அத்தாதி, உதட்டில் புன்னகை தவழ கண்களைச் சிமிட்டிக்கொண்டு அமைதியாகக் கூறினர்: "உங்கள் மீது வெயில் படாமல் என் குடையைப் பிடித்துக்கொண்டு வந்தபோது என்னால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. நீங்கள், பிரிட்டிஷ் சாமான்கள் ஒவ்வொன்றையும் கடுமையாகப் பகிஷ்கரிப்பவர்கள். ஒரு பிரிட்டிஷ் டாக்டர், பிரிட்டிஷ் சத்திர சிகிச்சை ஆயுதங்களைக்கொண்டு உங்களுக்குச் சிகிச்சை செய்து, பிரிட்டிஷ் மருந்துகளையும் கொடுத்து, ஒரு பிரிட்டிஷ் தாதியும் பணிவிடைசெய்ததனாலேயே நீங்கள் உயிர்பிழைத்திருக்கக்கூடும் என்பதை நினைத்தபோது எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. உங்களை இங்கே கொண்டு வந்தபோது வெயில் படாமல் நான் உங்களுக்குப் பிடித்த குடையும் பிரிட்டிஷ் குடைதான் என்பதும் உங்களுக்குத் தெரியுமா?" கண்யமான அத்தாதி வெற்றிகரமான தனது கடைசிச் சொல்லை முடித்தபோது, அன்போடு கூடிய தனது தருமோபதேசத்தைக் கேட்டு அதற்குப் பதில் சொல்ல முடியாமல் அடியோடு தோற்றுவிடுவேன் என்று ஒரு வேளை எண்ணியிருக்கக்கூடும். ஆனால், நல்ல வேளையாக அச்சமயம் அவர் கொண்டிருந்த நம்பிக்கையை வருமாறு சொல்லி மாற்ற என்னால் முடிந்தது. "நீங்கள் காரியங்களை உள்ளபடி எப்பொழுதுதான் தெரிந்துகொள்ளப் போகிறீர்கள்? பிரிட்டிஷாருடையது என்பதற்காக நான் எதையும் பகிஷ்கரித்து விடுவதில்லை என்பது உங்களுக்குத் தெரியுமா? எல்லா அந்நியத் துணிகளையும் மாத்திரமே நான் பகிஷ்காரம் செய்கிறேன், ஏனெனில், அந்நியத் துணிகளை இங்கே கொண்டுவந்து குவிப்பதால் என் நாட்டு மக்களில்

கோடிக்கணக்கானவர்கள் பரம ஏழைகளாகிவிட்டார்கள்'' என்றேன். கதர் இயக்கத்தில் அவருக்குச் சிரத்தை உண்டாகும்படி செய்யவும் என்னால் முடிந்தது. ஒரு வேளை அவர் கதருக்கு மாறியிருக்கவும் கூடும். எப்படியும் கதரின் நியாயத்தையும். அவசியத்தையும், உபயோகத்தையும் அவர் தெரிந்துகொண்டுவிட்டார். ஆனால், முற்றிலும் பயனில்லாத, பொருளற்ற பிரிட்டிஷ் சரக்கு பகிஷ்காரத்தைக் குறித்து அவர் சிரிக்கத்தான் முடியும் ; அவர் சிரித்ததும் சரிதான்.

பதிலுக்குப் பதில் செய்வதற்காகப் பகிஷ்காரத்தை நடத்த வேண்டும் என்று பேசுகிறவர்கள், தங்கள் வீடுகளையும், தங்களிடமுள்ள பொருள்களையும் பார்ப்பார்களாயின், நானும் அந்தப் பகிஷ்காரப் புத்திப் போக்குடையவர்களில் சேர்ந்தவன் என்று எண்ணிக்கொண்டு என் தாதி நண்பர் என் நிலைமையை எண்ணி எப்படி சிரித்தாரோ அதே போலத் தாங்களும் எவ்வளவு சிரிப்புக்கிடமான நிலையில் இருக்கிறார்கள் என்பதைக் காண்பார்கள்.

கெனியாவிலிருக்கும் நம் நாட்டினருக்கு நியாயம் கிடைக்கும்படிப் பார்க்க வேண்டும் என்பதிலோ, சாத்தியமான வரையில் சீக்கிரத்திலேயே நாம் சுயராஜ்யத்தை அடைந்துவிட வேண்டும் என்பதிலோ, நான் யாருக்கும் பின்வாங்கினவன் அல்ல. ஆனால், எந்த முடிவை நாம் கருத்தில் கொண்டிருக்கிறோமோ அதைக் கோபத்தோடு கூடிய அவசரப்போக்கு கெடுத்துவிடும் என்பதை நான் அறிவேன். அப்படியானால், நமது லட்சியத்தை அடைவதற்காக எல்லா கட்சியினரும்—மிதவாதிகள், சட்டசபைக்குப் போக வேண்டும் என்போர், மாறுதல் வேண்டாதார்,[1] மற்றவர்கள்—ஆகிய யாவரும் எதில் வெற்றிகரமாக ஒன்றுபட முடியும்? இதற்குப் பதிலை நான் முன்னாடியே கூறிவிட்டேன். எனினும், சாத்தியமான ஒரே பரிகாரம் அதுதான் என்று இருப்பது ஏன் என்பதைக் குறித்து அடுத்த இதழில் நான் விவரமாக ஆராயவேண்டும்.[2]

—'எங் இந்தியா'–15—5—1924

---

1. மகாத்மாவின் ஒத்துழையாமை இயக்கத்தில் சட்டசபை பகிஷ்காரமும் ஒரு பகுதி. ஆனால், தேசபந்து தாஸின் தலைமையில் காங்கிரஸுக்குள் சுயராஜ்யக் கட்சி தோன்றி, சட்ட சபைக்குச் சென்று சட்ட சபைக்குள்ளிருந்து இரட்டை யாட்சி நடக்காதபடி முட்டுக்கட்டை போடவேண்டும் என்ற கருத்து வளர்ந்து அதைக் காங்கிரஸும் ஏற்றுக் கொண்டு விட்டாலும் காங்கிரஸ்காரர்களில் சிலர் பிடிவாதமாக சட்ட சபை பகிஷ்காரத்தை வற்புறுத்தி வந்தனர். இவர்களையே அக்காலத்தில் காங்கிரஸில் 'மாறுதல் வேண்டாதார்' என்று சொல்லப்பட்டது.

2. 'அடுத்த வாரத்தில் நான் விவரமாக ஆராய வேண்டும்' என்று மகாத்மா கூறும் கட்டுரை 22—5—1924-இல் 'எங் இந்தியா'வில் பிரசுரமாயிற்று. அதே கட்டுரை இத்தொகுப்பில் 'மில்களின் பொறுப்பு' என்ற தலைப்பில் 241–ஆம் பக்கத்தில் பிரசுரமாகியிருக்கிறது. சாம்ராஜ்ய சரக்கு பகிஷ்காரத்தைக் குறித்து அக்கட்டுரையிலும் காந்திஜி விரிவாகத் தமது கருத்தை விளக்கியிருக்கிறார்.

# 4
# ஊழியர் ஒருவரின் கஷ்டம்

எனது வங்காள சுற்றுப்பிரயாணத்தின்போது அநேக யோசனைகள் என்னிடம் கூறப்பட்டன. அவற்றை நான் அனுசரிக்க முடியாவிட்டாலும் அந்த யோசனைகளையெல்லாம் நான் பாராட்டுகிறேன். ஒரு தீவிரமான ஊழியரிடமிருந்து வந்த யோசனை பின்வருமாறு :

"இங்கே பருத்தி விலை அதிகமாக இருப்பதும், பொதுவாக அது உடனே கிடைப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் எவையும் இல்லாததும் மிகப் பெரிய கஷ்டமாகிறது. இதன் பலனாக, கடைகளில் கதரை வாங்குகிறவர்கள், மில் துணியைவிட இரண்டு மடங்கு விலை கொடுத்து அதை வாங்க வேண்டியிருக்கிறது. ஒருவர் தமக்கு வேண்டிய துணிக்குப் போதுமான நூலைத் தாமே நூற்றுக்கொண்டு, அதை உள்ளூர் நெசவாளரிடம் கொடுத்து நெய்து கொண்டாலும், மில் துணியைவிடக் கதர்த் துணி மலிவானது அல்ல என்பதையே முடிவில் காண்கிறார். பருத்தி விலை அதிகமாக இருப்பதும், அதனால் கதர் விலை அதிகமாக இருப்பதுமே, இம்மாகாணத்தைப் பொறுத்த வரையிலுமாவது, கதரை எல்லோரும் மேற்கொள்ளுவதற்கு முட்டுக்கட்டையாக இருந்து வருகிறது.

"இருந்துவரும் இந்த நிலைமைக்குச் சரியான பரிகாரம், நாட்டில் பருத்தி ஏராளமாகச் சாகுபடியாகும்படிச் செய்வதுதான். ஆனால், துரதிருஷ்டவசமாக இந்த முக்கியமான விஷயத்திற்கு ஏற்றவகையில் இதில் கவனஞ் செலுத்தப்படவில்லை. நூற்பது எல்லோரிடத்திலும் பரவும்படிச் செய்ய அங்குமிங்குமாகச் சில இடங்களில் முயற்சி செய்யப்படுகின்றன. ஆனால், வங்காளத்தில் பருத்தி சாகுபடியைக் கொண்டுவரவோ, அதில் ஊக்கம் ஏற்படும்படிச் செய்யவோ கட்டுப்பாடான முயற்சி எதுவும் செய்யப்படவில்லை. ஆகையால், தங்களுடைய வங்காளச் சுற்றுப் பிரயாணத்தின்போது, உள்நாட்டிலேயே பருத்தியைச் சாகுபடி செய்துகொள்ள வேண்டியதன் மிக முக்கியத்தை மக்களும் ஊழியர்களும் உணரும்படிச் செய்வீர்கள் என நம்புகிறேன்."

எனது மௌன விரத தினத்தன்று இக்குறிப்புகளை நான் எழுதுகிறேன். காதி பிரதிஸ்தானின் சதீஷ் பாபு என் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறார். வங்காளத்தின் நிலைமையை நான் என்றும் அறிந்துகொள்ள முடிந்ததைவிட, அவர் அந்நிலைமையை நன்றாக அறிவார். ஆகையால், பதில் கூறுவதற்காக அந்த யோசனையை அவரிடம் கொடுத்தேன். அவர் அளித்த பதில் இதுதான் :

"பருத்தி விலை அதிகமாக இருப்பதுதான் வங்காளத்தில் கதர் பரவுவதற்கு இருந்துவரும் உண்மையான கஷ்டம் என்று அதை எழுதியிருப்பவர் கருதுகிறார். இதற்கு அவர் கூறும் பரிகாரம், பருத்தி சாகுபடியைக் கொண்டு வந்து அதை ஊக்குவிப்பதாகும். வங்காளத்தில் எல்லா இடங்களிலும் பருத்தி சாகுபடி செய்யப்படுவதில்லை என்பது நிச்சயமாக ஒரு கஷ்டம்தான்.

ஆனல் அது, இருக்கும் ஒரே கஷ்டமோ, கடுமையான கஷ்டமோ ஆகாது. மான்செஸ்டர், அமெரிக்காவிலும் பம்பாயிலும் பருத்தியை வாங்கித் தனது மில்களில் தயாரித்த துணியை இந்தியாவுக்கு அனுப்புகிறது. வங்காளம் தனக்குத் தேவையான பருத்தி முழுவதையும் இந்தியாவின் பருத்தி மார்க்கெட் எதிலும் நிச்சயமாக வாங்கிக் கொண்டுவிட முடியும். லட்சக்கணக்கான ரூபாய் பெறுமானமுள்ள பருத்தி, வங்காளத்தில் உற்பத்தியாகிச் சிட்டகாங், கல்கத்தா துறைமுகங்களின் வழியாக வெளியே போகிறது. தான் உற்பத்தி செய்யும் பருத்தியில் ஒரு பகுதியைக்கூடக் கையினல் நூற்பதற்கு வங்காளம் உபயோகித்துக் கொள்ளுவதில்லை. சிட்டகாங்கிலும் கோமில்லாவிலும் உற்பத்தியாகும் பருத்தியைக் கையினல் நூற்பதற்கு வங்காளம் உபயோகித்துக் கொண்டு, போதாததற்குப் பீஹாரிலும், ஐக்கிய மாகாணங்களிலும் வாங்கிக் கொண்டுவிடலாம்.

"கதர் பரவுவதிலுள்ள உண்மையான கஷ்டம், அதிக விலையிலோ அல்லது பருத்தி சாகுபடியாகாததிலோ இல்லை. நூற்பதிலும் கதரை உபயோகிப்பதிலும் விருப்பம் இல்லாமலிருப்பதும், அந்த விருப்பத்தை உண்டாக்கி அதன் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு வேண்டிய ஒரு ஸ்தாபனமும் இல்லாதிருப்பதுமே கதர் பரவ முடியாமலிருப்பதற்குக் காரணங்களாகும்.

"இவர் எந்த ஆசிரமத்திலிருந்து எழுதுகிருரோ அந்த ஆசிரமத்தையே, மலிவான பருத்தியை, அதாவது நியாயமான விலைக்குப் பருத்தியை விற்கும் இடமாகச் செய்துவிடலாம். அந்த ஆசிரமம், நூற்பதிலும், பஞ்சை அரைப்பதிலும் நிபுணராகும்படி ஒருவருக்குப் பயிற்சி அளித்து, அக்கம் பக்கங்களிலுள்ள சகோதரிகளுக்கு நூற்றும், பட்டை போட்டும் காட்டலாம். நல்ல பட்டையும் நல்ல ராட்டையும் இருந்தால் நூற்பது ஆனந்தமாக இருக்கும். நூற்பது சங்கடமானதாக இருக்கும்போதுதான் கதர் பரவுவதற்குள்ள கற்பனைக் கஷ்டங்களெல்லாம் தோன்றுகின்றன.

"சேவை செய்யும் நோக்கமுள்ள ராட்டை நிபுணர்கள் இருக்கும் ஸ்தாபனங்கள் வங்காளத்தின் சகோதரிகளுக்கு உதவி செய்வார்களானல், கஷ்டங்களெல்லாம் போய்விடும். விவசாயிகளும், அதிகத் தூண்டுதல் அவசியமில்லாமலேயே பருத்தியைச் சாகுபடி செய்ய ஆரம்பித்து விடுவார்கள்.

"இதில் முக்கியமான வேலை நூற்பது. அதற்கு முன்னலும் பின்னலும் செய்ய வேண்டிய வேலைகளும் இருக்கின்றன. முன்னல் செய்ய வேண்டியிருப்பவை, பருத்தி சாகுபடி, பருத்தியை அரைப்பது, பட்டை போடுவது பின்னல் செய்ய வேண்டியவை, நூற்பதும் நெய்வதும். திறமையாகப் பட்டை போடுவதிலும் நூற்பதிலும் நெய்வதிலும் மாத்திரமே நாம் இப்பொழுது கவனஞ் செலுத்த வேண்டும். திறமை வாய்ந்த ஸ்தாபனங்களைச் சேர்ந்த மன உறுதி கொண்டவர்கள், கடுமையான முயற்சியைச் செய்வார்களானலும் கஷ்டங்களையெல்லாம் சமாளித்து நூற்பு வங்காளத்தில் வெற்றிபெறும்படிச் செய்துவிடலாம். அந்நாளைச் சீக்கிரத்தில் காணலாம் என்றே நம்புகிறேன்."

இந்தப் பதிலை நான் முழுதும் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனல், பெண்களுக்கு மாத்திரமேயன்றி ஆண்களுக்கும் அவர்கள் நூற்கும்படி செய்வதற்கு ஏற்பாடுகள் வேண்டும்

என்பேன். இதற்கு வேண்டிய காரியங்களை ஆண்கள் செய்தாலன்றிப் பெண்களை நூற்கும்படி செய்வது அதிகக் கஷ்டமாக இருக்கும். கூலிக்காகப் பெண்கள் நூற்கும்படி செய்வதற்கு முன்னுல், தாங்களாகவே நூற்கும் ஆண்கள் ஏராளமாக வேண்டும். கணவன்மார்கள், தந்தைகள், சகோதரர்கள் மூலமே ராட்டையில் அபிவிருத்தியைச் செய்ய நாம் நம்ப முடியும். ஊழியர்களில் பெரும்பாலானவர்கள் ஆண்கள். பெண்கள் எப்படி வேலை செய்து வருகிருர்கள் என்பதைப் பார்க்கவும் அவர்களால் ஆகவில்லை. ஆனுல், நான் பார்க்கும் காட்சிகளிலிருந்து, மறைவில் நடந்துகொண்டிருப்பது என்ன என்பதை என்னுல் யூகித்துக்கொள்ள முடிகிறது. ராட்டையைச் சரியானபடி கவனித்து வந்தால், இப்பொழுது நூற்பதைவிட இரட்டிப்பு மடங்கு நூல் நூற்றுவிடலாம். இதனுல், கொஞ்சப் பிரயாசையில் வருவாயை இரட்டிப்பாகச் செய்துவிடலாம். நூற்பவர்கள், அதிக ஆட்டமுள்ள ராட்டைகளில் கதிருக்குப் பதிலாகக் கம்பியைப் போன்ற ஒன்றையே மாட்டிக்கொண்டு நூற்பதைப் பார்க்க மனதிற்கு வேதனையாக இருக்கிறது. ராட்டை, ஆட்டமில்லாதபடி செய்து, கம்பியாக இருப்பதற்குப் பதிலாக நல்ல கதிரை அமைத்துவிட்டால், அதில் நூற்கும் நூலும் உடனே இரண்டு மடங்காக ஆகிவிடும்.

பருத்திச் சாகுபடியைப்பொறுத்த வரையில், வங்காளத்தின் எல்லாப்பகுதிகளும் பருத்திச்சாகுபடிக்கு ஏற்றவை அல்ல. ஆகையால், கொஞ்ச அளவு பருத்தியை வெளியிலிருந்து கொண்டு வர வேண்டியிருக்கும். எந்தப் புதுத் தொழிலுக்கும் பாதுகாப்பு அவசியம். அரசாங்கத்தின் பாதுகாப்பு நமக்குக் கிடைக்காது. ஆகையால், ஒரே பரிகாரம், நாமாகப் பாதுகாத்துக்கொள்ளுவதுதான். இனமாக நூற்பதன் மூலம் இப்பாதுகாப்பைச் செய்துகொள்ளலாம். காங்கிரஸுக்கு நூல் சந்தா வைத்திருப்பதன் ஒரு நோக்கம் இதுதான். இரண்டாவது முறை, பருத்தியை யாசகமாக வாங்கி, குஜராத்தில் செய்வதைப் போல, பருத்தியையோ, பட்டைகளையோ பாதி விலைக்கு விற்று, தங்கள் தேவைக்கு வேண்டியதைத் தாங்களே நூற்றுக்கொள்ளுகிறவர்களுக்கு அவர்கள் நூலைப் பாதிக் கூலிக்கு நெய்தும் கொடுக்கலாம். மில்களோடு ஒப்பிட்டுச் சொல்லிக் கொண்டிருப்பது பயனில்லாத பொழுதுப் போக்கு. கிராமக் கைத்தொழிலும், வீட்டிலேயே நூற்பதும் புத்துயிர் பெறுவதைக் கொன்றுவிடுவதற்காக, ஜப்பானும், மான்செஸ்டரும் தங்கள் துணிகளை இனமாகக்கூட கொடுக்கக்கூடும். அப்பொழுதும் அந்நியத் துணியையோ, மில் துணியையோ இனமாகக் கொடுத்தாலும் வாங்கிக் கொள்ளாத மக்கள் இருக்கவேண்டும். இப்படிப்பட்டவர்கள் மூலமே ராட்டையைப் பரப்பி, அதை வெற்றிகரமானதாகச் செய்ய முடியும் என்று நாம் எதிர்பார்க்க இயலும்.

—' எங் இந்தியா '–21—5—1925

## 5

# விவசாயமும் கதரும்

எம். ஏ., பி. எல். பட்டம் பெற்றிருக்கும் ஒருவர் கீழ் வருமாறு எழுதுகிறார் :

"நமது தேசபந்துவின் ஞாபகார்த்தமாக இந்தியப் பெண்களைத் தாதி (நர்ஸுகள்)களாகவும், மருத்துவப் பெண்களாகவும் பயிற்றுவிப்பதற்கான பயிற்சிப் பள்ளிக்கூடத்தை அமைக்க நீங்களெல்லோரும் முயன்று வருகிறீர்கள். ஆனால், வங்காளத்தில் வேலையில்லாது திண்டாடும், தகுதியில்லாத வேலைகளைச் செய்துவரும் இளைஞருக்காக நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? புரட்சி இயக்கம் கூடாது என்று நீங்கள் உபதேசம் செய்து வருகிறீர்கள். ஆனால், ரத்தஞ் சிந்தப்பட்ட புரட்சிகளுக்கெல்லாம் காரணமானதான பசியை, எவ்வளவுதான் உபதேசம் செய்தாலும் தணித்துவிட முடியாது. வேலையில்லாத் திண்டாட்டத்தையும் சரியான வேலை கிடைக்காத பிரச்னையையும் சிந்தித்தாக வேண்டிய சமயம் வந்துவிடவில்லையா? நீங்கள் பத்து லட்சம் நிதி திரட்டுகிறீர்கள். நீங்கள் ஒரு கோடி நிதி திரட்டக் கூடாதா? எங்களுக்கு நிலமும், கால்நடைகளும், கொஞ்சம் பணமும் கொடுங்கள். விவசாயத்திற்கும் சிறு கைத்தொழில்களுக்குமே திரும்பிப் போய்விடுவோம்! வக்கீல் தொழிலில் என் மனம் செல்லவில்லை. என்னிடம் பணம் இல்லை; நிலமும் இல்லை. நான் என்ன செய்வது? கல்கத்தா சர்வ கலாசாலை சமீபத்தில் கொஞ்சம் நிலம் வாங்கிற்று. அதில் கொஞ்சம் நிலத்தை எனக்குக் கொடுக்கும்படிக் கேட்பதற்காக அச்சர்வகலாலையின் ரெஜிஸ்டிராரிடம் போயிருந்தேன். 2,000 பிகாஸ் நிலம் மேய்ச்சல் பகுதியாக மாற்றப்பட்டு விட்டது என்று அறிந்தேன்.

"இங்கே விவசாயத்திற்கு நல்ல வாய்ப்பு இருக்கிறது. என் வக்கீல் தொழிலை விட்டுவிட்டு விவசாயிகளிடம் போய் அவர்களுடனேயே இருந்து விட நான் மனப்பூர்வமாக விரும்புகிறேன். ஆனால், இதற்குப் பணவுதவி செய்வது யார்? கடனாக ரூபாய் இரண்டாயிரம் மாத்திரம் எனக்குக் கொடுங்கள். அதுவும், வாங்கும் நிலத்தின்பேரில் அடமானமாகக் கொடுங்கள். அதை இரண்டு ஆண்டுகளில் நிச்சயமாகத் திருப்பிக் கொடுத்துவிடலாம் என்று எண்ணுகிறேன்.

"உங்களிடமே நான் வேண்டிக்கொள்ளுகிறேன். கதர் இயக்கத்திற்கு நீங்கள் உதவி செய்திருக்கிறீர்கள். விவசாயத்திற்கும் நீங்கள் உதவி செய்யக் கூடாதா? கதரைப்போலவே நெல்லும் கோதுமையும் அத்தியாவசியமானவை. எனக்கு வயிறு நிறைய சோறு கிடைத்தால் எதையும் என்னால் செய்ய முடியும். இரண்டாயிரம் மிக அதிகமானது அல்ல. நான் கடனைக் கேட்கிறேனேயல்லாமல் யாசகம் கேட்கவில்லை."

இக்கடிதத்தில் கிளப்பப்பட்டிருக்கும் வேலையில்லாத் திண்டாட்ட விஷயத்தைக் குறித்து மற்றோர் இடத்தில் ஆராய்ந்திருக்கிறேன். ஆனால், இக்கடிதத்தை எழுதியிருப்பவரேயன்றி மற்றவர்களும், கதர் சம்பந்தமாக விவசாயப் பிரச்னையையும்

கிளப்பி இருப்பதால், என் வக்கீல் நண்பருடைய கோரிக்கையுடன் அதையும் கவனிப்பதே சரியானதாகும்.

முதலில் அவருக்கு ஒரு விஷயத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். தாம் யோசிக்கும் விவசாயப் பரீட்சை 'பிரமாதமான வெற்றி'யை அடைவதற்கு இரண்டாயிர ரூபாய் கடன் கிடைத்து விட்டாலே போதும் என்று அவர் நினைப்பது தவறானது. உண்மையில், சட்டப்படிப்புக்கு எப்படி ஆற்றலும் பயிற்சியும் வேண்டுமோ அதேபோலவே விவசாயத்திற்கும் அவை வேண்டும். நிர்வாணமாக இருக்கும் மக்கள் துணியை உடுத்த வேண்டும் என்பதற்காகவே இந்தியாவுக்குக் கதர் உபதேசம் கொண்டு வரப்பட்டிருக்கிறது என்ற தவறான கருத்தில் இக்கடிதத்தை எழுதியவரும் இருந்து வருகிறார் என்று தோன்றுகிறது. இதற்கு மாறாக, நெல் என்ன காரியத்திற்கு அவசியமாகிறதோ அதே காரியத்திற்காகவே கதரும் கொண்டு வரப்பட்டிருக்கிறது. கோடிக்கணக்கான மக்களுக்குக் கொஞ்சம் உபரி வேலையை ராட்டை கொடுக்கும். இன்று அவர்களுக்குக் கிடைத்துக்கொண்டிருக்கும் போதாத உணவுடன் இன்னும் கொஞ்சம் அதிக உணவு கிடைப்பதற்கு ராட்டை வகை செய்யும்.

இந்தியாவில் செத்துக்கொண்டிருக்கும் ஒரு தொழில் அல்ல விவசாயம். அதில் சீர்திருத்தமும் அபிவிருத்தியும் வேண்டும். ஆனால், விவசாய சீர்திருத்தங்களைச் செய்வது என்பது ஒரு தேசீய அரசாங்கத்தின் கீழேயே சாத்தியம். விவசாயம், பாமர மக்களின் ஒரே தொழிலாக இருந்து வருகிறது. ஆனால், அவர்கள் நல்ல தேக திடத்துடனிருப்பதற்குத் தேவையானதற்குக் குறைவான வருவாயையே விவசாயம் இப்பொழுது அவர்களுக்குக் கொடுத்து வருகிறது. ஆகையால், தனிப்பட்டவர்கள் செய்யும் எந்த விவசாய முயற்சியும் பாமர மக்களின் மனதில் எந்த மாறுதலையும் உண்டாக்கிவிடாது. கடிதம் எழுதியிருப்பவருக்குத் தமது வக்கீல் தொழிலில் உண்மையாகவே வெறுப்பு உண்டாகி, அதை விட்டுவிட வேண்டும் என்று விரும்புவாராயின், அவர் ஆகாசக் கோட்டை கட்டிக்கொண்டிருக்கக் கூடாது. அவர் கைதேர்ந்த நூற்பாளராகிவிட வேண்டும். அப்பொழுது அவர், தமது ஜீவனத்திற்காக நூற்றுக்கொண்டிருப்பவராக இல்லாமல், நூற்பதையும் கதரையும் பரப்புவதற்காக வங்காளத்தில் நடத்தப்பட்டு வரும் ஸ்தாபனங்களில் தாமும் இருப்பதாகக் காண்பார்.

—' எங் இந்தியா ' – 30—7—1925

# 6
# நாணயச் செலாவணியும் பருத்தி மில்களும்

திருச்சிராப்பள்ளியிலிருந்து கொதித்து வழிந்த அழுகுரல் இது :

"இந்திய நாணயச் செலாவணியைக் குறித்தோ, லண்டன் வர்த்தகர்களுக்கு நன்மையாக இருக்கும் வகையில் நாணய மாற்ற விகிதத்தை இந்திய அரசாங்கம் உயர்த்தி, இந்த அரசாங்கம் உள்நாட்டுத் தொழில்களை எவ்விதம் நாசப்படுத்திக்கொண்டு வருகிறது என்பதைக் குறித்தோ, உங்களுடைய பிரசங்கங்களில் ஒரு வார்த்தைகூட நீங்கள் கூறுமலிருப்பது வருந்தத்தக்கதாகும். இந்தியாவில் ஆரம்பிக்கப்பட்டிருக்கும் 300 பருத்தி மில்கள் தேசத்தின் சொத்து அல்ல என்றும், லங்காஷயரிலிருந்து மலிவாகத் துணி வருவதால் மக்கள் நன்மை அடைவார்கள் என்றும் ஒரு வேளை நீங்கள் கருதலாம். ரூபாய்க்கு ஒரு ஷில்லிங் 4 பென்ஸ் என்ற விகிதம் சென்ற முப்பது ஆண்டுகளாக சரியாக வேலை செய்து வந்தது. அச்சமயத்தில்கூட, நசுக்கும் எக்ஸைஸ் தீர்வையின் காரணமாகப் பம்பாய் பருத்தி மில்களினுல் லங்காஷயருடன் போட்டி போட முடியவில்லை. கல்கத்தாவிலிருக்கும் சணல் மில்களின்மீது எக்ஸைஸ் தீர்வை இல்லை. அதனுல் அந்த மில்கள் சென்ற எட்டு ஆண்டுகளாக 100 முதல் 400 வரையில் லாப விகிதம் கொடுத்து வருகின்றன. பிரிட்டனிலிருந்து இங்கே இறக்குமதி அதிகமாகும்படிச் செய்வதற்காக 1923-இல் ரூபாய்க்கு ஒரு ஷில்லிங் 4 பென்ஸ் என்றிருந்த நாணயமாற்று விகிதத்தை இந்திய அரசாங்கம் 1924-இல் ஒரு ஷில்லிங் 6 பென்ஸுக்கு உயர்த்திவிட்டது. இதனுல் லங்காஷயரிலிருந்து ஏராளமான துணி இந்தியாவில் கொண்டு வந்து குவிக்கப்பட்டுவிட்டது. எனவே, இப்பொழுது இந்தியப் பருத்தி மில்கள் மோசமான வர்த்தக மந்தத்தில் அவதிப்பட்டுக்கொண்டிருக்கின்றன. கதரை மிதமான விலைக்கு விற்றுலன்றி அந்நியத் துணியைக் கொளுத்தும்படியோ, நூல் நூற்கும்படியோ, கதரைக் கட்டும்படியோ மக்களைக் கேட்டுக்கொள்ளுவதில் எந்தப் பயனுமில்லை. இப்பொழுது இருக்கும் உயர்ந்த நாணய மாற்று விகிதத்தின் காரணமாக ஏற்படும் லங்காஷயர் போட்டி, ஜவுளி மில் தொழிலைவிட அதிக வேகத்தில் கதரையே கொன்றுவிடும்.

"இந்த நிலைமையில், இப்பொழுது அனுசரிக்கப்பட்டு வரும் நாணய மாற்று விகித உயர்வுக் கொள்கையையும், லங்காஷயருக்கு உதவ வேண்டும் என்பதற்காகவே இந்தியப் பருத்தி மில்களுக்கு அநியாயமாக விதிக்கப்பட்டிருக்கும் எக்ஸைஸ் தீர்வையையும் எதிர்ப்பதன் மூலம், மகாத்மா தமது கவனத்தைத் தொழில்கள் புத்துயிர் பெறுவதில் திருப்ப வேண்டும் என்று பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்."

மேலே கண்ட கடிதத்தை, அதிலுள்ள எந்த மதிப்பிற்காகவும் நான் பிரசுரிக்கவில்லை. போராட்ட முறையில் இருந்து வரும்

வருந்தத்தக்க அறியாமையை இக்கடிதம் வெளிப்படுத்துகிறது. அந்த அறியாமையைப் போக்க வேண்டும் என்பதற்காகவே இதைப் பிரசுரிக்கிறேன். இப்பொழுதுள்ள அரசாங்கத்தின் மற்றும் அநேக தீமைகளை, உதாரணமாக ஏராளமான ராணுவச் செலவைக் குறித்து, நான் 'எங் இந்தியா'வில் எடுத்துக் காட்டாததைப் போன்றே நாணயச் செலாவணியைக் குறித்தும் நான் எழுதவில்லை என்பது உண்மை. நான் எழுதுவதனால் இந்தப் பிரமாண்டமான தீமைகளைப் போக்கிவிட முடியுமானால், அவற்றைக் குறித்து வாரந்தோறும் எழுதி வந்திருப்பதோடு, அதே விஷயத்தில் பல வகைகளில் சொல்லுவது சாத்தியமாவதற்காக, மற்றும் பல நண்பர்களின் உதவியையும் இதற்காகத் தேடிக்கொண்டிருப்பேன். ஆனால், இக்கடிதத்தை எழுதியிருப்பவரைப் போன்று எண்ணுகிறவர்கள், ஒரு விஷயத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். நமக்குத் தெரியும் இத்தீமைகள் இன்னும் இருந்து கொண்டிருக்கின்றன என்றால், அதற்குக் காரணம், அவை தீமைகள் என்று பகிரங்கமாகச் சொல்லப்படாததனாலோ, அல்லது அவை தீமைகளே என்பதை ஆளுவோர் அறியாததனாலோ அன்று. அரசாங்கத்தின் நாணய மாற்றுக் கொள்கையின் மோசத்தை என்னைவிடத் திறமை வாய்ந்தவர்கள் எடுத்துக் கூறியிருக்கிறார்கள். ஆனால், அவர்கள் பகிரங்கப்படுத்தியதனாலும் எந்தவிதமான நன்மையும் ஏற்படவில்லை. நியாயத்தின் பலம் எதுவும் இக்கொள்கைக்கு ஆதரவாக இருக்கவில்லை. ஆனால், 'கூர்மையான வாள்முனையே' இதற்கு ஆதரவாக இருந்து வருகிறது. காலத்தையும், உழைப்பையும் பற்றிய பொருளாதாரப் பண்டிதன் நான். விரும்பினால் அவர்களே ஏதாவது செய்துகொள்ளக் கூடியதான காரியங்களை மாத்திரம் வாசகர்களுக்கு அறிவிப்பது என்பதில் நான் நம்பிக்கையுள்ளவன். நாம் கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டு வரும் தீமைகளின் சம்பந்தமாக வாசகர்களின் உணர்ச்சியை நான் கிளப்பிவிட வேண்டிய அவசியம் இல்லை. அத்தீமைகளைக் குறித்து அவர்கள் தினமும் உணர்ந்துதான் வருகிறார்கள். ஆனால், அவர்கள் வேறு கதியற்று இருக்கின்றனர். ஆகையால், பரிகாரத்தை என்னால் எண்ண முடிந்தால், பரிகாரங்களை வாசகர்களுக்கு எடுத்துக்கூறுவதுதான் என் பாக்கியம். எனவே, சோர்ந்து கிடக்கும் இந்நாட்டின் விமோசனத்தைத் துரிதப்படுத்துவதற்கு உதவி செய்ய வாசகர் என்ன செய்யலாம் என்பதைக் குறித்து எனது முழு சக்தியையும் கொண்டு எடுத்துக் கூறி வருகிறேன். இதனால் பொதுஜன வெறுப்பு ஏற்படுவதைக் குறித்தோ, திரும்பத் திரும்பச் சொல்லுவதால் அலுப்புத் தட்டிவிடுவதைப் பற்றியோ நான் கவலைப்படுவதில்லை.

நமக்கு இருந்து வரும் அநேக தீமைகளுக்கு மிகச் சரியான, காரிய சாத்தியமான பரிகாரங்களில் ஒன்று, அந்நியத் துணியை விலக்கிவிடுவது. ஆகையால், எனக்கு இன்பமான அந்த ஒரு பிரபந்தத்தையே நான் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருக்க வேண்டும்.

அந்நியத் துணியை விலக்குவதற்குக் கதரின் விலையிலோ, அல்லது உள்நாட்டு மில் துணியின் விலையிலும்கூட, அதிகக் குறைப்பு ஏற்படும் வரையில் நாடு காத்திருக்க வேண்டியதே என்று கடிதம் எழுதியிருப்பவர் எண்ணுவதானால், அது முற்றிலும் தவறாகும். விலை எதுவாக இருந்தாலும், தேச மக்கள் தாங்கள் செய்தாக வேண்டிய தேசீய தருமத்தை உணர்ந்தால் தான் அந்நியத் துணியை விலக்க முடியும். ஒரு நல்ல ஹிந்து, தாம் செய்ய வேண்டிய காயத்திரி விஷயத்திலோ, பலவிதமான சடங்குகள் விஷயத்திலோ செலவைப் பொருட்படுத்துவது இல்லை. ஒரு நல்ல முஸ்லிம், தினம் ஐந்து தடவை பிரார்த்தனை செய்வதனால் ஏற்படும் செலவைக் குறித்துக் கவலைப்படுவதில்லை; சுவர்க்கத்திற்கு எளிதான வழிக்காக பேரம் பேசிக்கொண்டிருப்பதும் இல்லை. இந்தியாவின் மூலை முடுக்கிலிருக்கும் கிராமத்திற்கெல்லாம் சாத்தியமான அளவு குறைந்த விலையில் தங்கள் மில் துணிகளைக் கொண்டு போக வேண்டியது மான்செஸ்டர் வர்த்தகர்களின் வேலை. பண விஷயத்தைக்கொண்டு மாத்திரம் பார்த்தால், மான்செஸ்டர் துணியை விட கதரின் விலை அதிகமாக இருக்கலாம். என்றாலும், அவ்வளவு நயமாகத் தயாரிக்கப்படாததான கதரே மேல் என்று கூறி, மான்செஸ்டர் துணியை நிராகரித்துவிட வேண்டியது கிராமவாசியின் கடமை. இங்கே இருக்கும் அரசாங்கம், அவர்கள் அரசாங்கம். இத்தகைய அரசாங்கத்தினிடம் நாணயச் செலாவணியின் மூலமோ, பிற வழிகளிலோ அதிகாரத்தோடு தாங்கள் பெற்று வரும் சலுகைகளை மான்செஸ்டர் வர்த்தகர்கள் வேண்டாம் என்று விட்டு விடும் தரும குணம் படைத்தவர்களாகி விடும்படி நாம் செய்யும் கிளர்ச்சி மாற்றிவிடும் என்று நான் ஏன் எண்ண வேண்டும்? இதே நிலைமையில் ஓர் இந்திய வர்த்தகர் இருந்தால், மான்செஸ்டர் சகோதரர் நடப்பதைவிட இவர் மாத்திரம் வேறு விதமாக நடந்து கொண்டு விடுவாரா? ஆகையால், பொருத்தமானதும் பலனுள்ளதுமான ஒரே கிளர்ச்சி, மான்செஸ்டர் துணியோ, மற்ற வெளிநாட்டுத் துணிகளோ இந்தியாவின் இப் புண்ணிய பூமியில் கொண்டு வந்து குவிக்கப்படாமல் சரியானபடி தடுப்பதற்கான ஏதோ ஒரு வகை சக்தியை வளர்த்துக் கொள்ளுவது தான். இக் கடிதத்தை எழுதியிருப்பவர், 'எங் இந்தியா' வைச் சரிவரப் படிக்காதவராக இருக்க வேண்டும். படித்திருப்பாரானால், என் நாட்டின் ஜவுளி மில் தொழில் விஷயத்தில் நான் அசிரத்தையுடன் இருந்துவிடவில்லை என்று அவர் அறிந்திருப்பார். அத்தொழிலுக்கு என்னால் பெற முடிந்த எல்லாப் பாதுகாப்புகளும் வேண்டும் என்றும், எனக்கு அதிகாரம் இருக்குமானால், எல்லா அந்நியத் துணியையும் தடுப்பதற்குத் தீர்வையை விதித்துவிடுவேன் என்றும், பொருத்தமான ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நான் பகிரங்கமாகக் கூறிக்கொண்டு வருகிறேன். ஆனால், அதோடு என் கடமை தீர்ந்துவிடுகிறது. இந்திய ஜவுளி மில் தொழிலுக்கு என்னிடமிருந்து வேறு எந்த உதவியும் தேவை இல்லை. அதற்கு மூலதனம் இருக்கிறது. அதில் உற்பத்தியாகும்

சரக்குகளை இந்தியாவின் எல்லாப் பகுதிகளுக்கும் கொண்டு போவதற்கு அதன் ஏஜெண்டுகள் இருக்கிறார்கள். அதன் நலனை அது தானே கவனித்துக்கொண்டு விடும். துரதிருஷ்ட வசமாக அத்தொழில், கோழையானதாக இருப்பதோடு தேசீய உணர்ச்சி யில்லாமலும் இருக்கிறது. சில பங்குதாரர்களுக்கு லாபம் கிடைத் தால் போதும் என்ற வகையில்தான் அது எண்ணுகிறது. தான் தயாரிக்கும் துணிகளை வாங்குபவரான பாமர மக்களைக் குறித்தே அது கவனிப்பதில்லை. அத் தொழிலுக்குக் கதர் விரோதி அல்ல. இதன் குழந்தைச் சகோதரனே கதர். அன்போடு ஒரு தாதி அளிக்கவேண்டிய எல்லாப் பாதுகாப்புகளுடன் வளர்க்கப்பட வேண்டிய நிலையிலும் கதர் இருக்கிறது. இதனாலேயே இதனிடம் மாத்திரம் என் கவனத்தைச் செலுத்தி வருவதோடு மற்றவர் களும் அப்படிச் செய்யவேண்டும் என்று ஆதரவுதேட முயன்றும் வருகிறேன். இது வளர்ந்து வயதை அடைந்துவிட்ட பிறகுதான் பெரிய சகோதரனாகிய மில் தொழில் போட்டிபோட்டுக் கேட்க லாமேயன்றி அதற்கு முன்னால் அல்ல. ஒரு வேளை இனி வரும் ஒரு தலைமுறைக் காலம் வரையில் பாதுகாப்பு அளிப்பது, கதர் திரும் பவும் நிலை பெறுவதற்கு அவசியமானதாக இருக்கலாம் என் பதை அறிவதற்குக் கொஞ்சம் தெளிவான சிந்தனைதான் வேண் டும். ஆனால் நமது அறியாமையினால் கதர்மீதே நம் முழு கவனத் தையும் செலுத்தாது போவோமாயின், கதர் அழிந்துவிடுவதோடு அதனுடன் இந்தியாவின் மில் தொழிலும் அழிந்துவிடும்.

—'எங் இந்தியா'–13—8—1925

# 7

# ராட்டையைக் குறித்து

ராட்டையைக் குறித்த பொருளாதார வாதத்தைத் திரும்பவும் சொல்லிக்கொண்டிருப்பது அவசியம் என்று நான் கருதவில்லை. 'எங் இந்தியா'வின் வாசகர்கள் அதை நன்றாக அறிவார்கள். காந்திஜி தாம் செல்லும் இடங்களுக்கெல்லாம் தம்முடன் எடுத் துச் செல்லும் தக்ளி (டாக்டர் பெசண்டின் 'சுழலும் கருவி') நூற் கும் மில்களுக்குப் போட்டி என்று காந்திஜி சொல்லிக்கொண்டு போகும்போது, அதிக கவனத்தோடு கேட்கிறார்கள். நாட்டின் விசாலமான பரப்பில் பரவிக்கிடக்கும் ஏழு லட்சம் கிராமங்களில் வசிக்கும் கோடிக்கணக்கான மக்களில், மிகச் சிறு பகுதியின ரைக்கூட அடைந்துவிடுவது மில்களுக்குச் சாத்தியமல்ல. ரெயில் பாதைகூட, இவர்களில் பெரும்பாலானவர்களை எட்டி விடவில்லை. ஜனத்தொகையில் பத்தில் ஒரு பகுதியினர், தினத் திற்கு ஒரு வேளை சாப்பாட்டோடு உயிர் வாழ்ந்து வருகிறார்கள். வறட்டுச் சோறும் ஒரு சிட்டிகை அமுக்கு உப்பும்தான் அந்தச்

சாப்பாடு. லார்டு கர்ஜானின் தாராளமான கணக்குப்படிக்கூட, மாதத்திற்கு ஆளுக்கு ரூ. 3 தான் கிடைக்கிறது. இந்தச் சொற்ப வருமானத்தோடு ரூ. 5 அல்லது 6 சேர்த்துக் கிடைப்பதாயிருந் தால் அது அவர்களுக்குப் பெருந்தொகை அல்லவா? அப்படி யானுல் கோடிக்கணக்கான மக்களுக்கு ஏற்றது ராட்டைதான். எல்லோரும் அனுசரிப்பதாகச் செய்யக்கூடியதும் அது ஒன்று தான். இதைக் கற்றுக் கொள்ளுவதற்கு அதிகத் திறமை எதுவும் தேவை இல்லை. அதோடு, அது எளிமையின் அற்புதம். இந்தியா வின் பொருளாதாரக் கஷ்டம், பஞ்சம், பிரவாகம் ஆகிய பிரச்னை களைத் தீர்ப்பதற்கு இதைவிட அதிகச் சிறந்ததான உபாயம் வேறு எதையும் தாம் காணமுடியவில்லை என்றும் காந்திஜி கூறினர்.

பொருளாதார வாதம் அசைக்க முடியாதது என்றால், அதி லிருந்து தொடர்வதான ஆன்மிக வாதமும் அதே போன்றது தான். இப்பொழுதே பணக்காரர்களாக இருப்போரின் பொக் கிஷங்களை மில்கள் மிகவும் அதிகப்படியாகப் பெருக்கிக்கொண் டிருக்கின்றன என்றால், இப்பொழுதே ராட்டை, பணக்காரர்களாக இருப்பவர்களின் பைகளை நிரப்பாமல் பட்டினி கிடக்கும் ஏழைக ளான கோடிக்கணக்கானவர்களின் மடியை நிரப்புகிறது. இதனுல் ராட்டை ஆன்மிகத்தில் உயர்வானதாகிறது. "டிரமண்ட், 'ஆன்மிக உலகில் இயற்கை தருமம்' என்பதைக் குறித்து எழுதி யிருக்கும் நூலை ஆழ்ந்த சிரத்தையுடன் நான் படித்தேன். அவ ருடைய எழுத்துத் திறமை எனக்கு இருக்குமானுல், இயற்கை யான உலகத்தில் ஆன்மிக தருமம் இருக்கிறது என்பதைக் குறித்து இன்னும் சிறப்பாக நான் காட்டுவேன்" என்ருர், காந்திஜி. பட்டினி கிடக்கும், நோயுற்ற, உடல் வலிவில்லாத இனத்தினரை மின்சார சக்தியைப் பாய்ச்சிக் கொன்றுவிட வேண்டும் என்று உண்மையாகவே யோசனை கூறிவரும் புத்தி சாலிகள் எழுதியிருக்கும் புத்தகங்களை அவர் படித்திருக்கிருர். அது மிகச் சிறந்த பொருளாதார பரிகாரமாக இருக்கலாம். ஆனல், அது மனிதத் தன்மையுள்ள அல்லது ஆன்மிகப் பரிகாரம் அன்று. நூற்கும் ராட்டையைக் கொண்டு தமது நாட்டு மக்க ளுக்கு அவர் ஓர் ஆன்மிகப் பரிகாரத்தை அளித்திருக்கிருர். வெகு நீண்ட காலமாக மக்களுக்குப் பழக்கமானது இந்தப் பரிகாரம். இந்தப் பரிகாரத்தைச் சரியானபடி கைக்கொண்டால், பட்டண, தொழிற்சாலை வாழ்க்கையினுல் ஏற்படும் படுமோசமான விளைவு களிலிருந்து அது மக்களைப் பாதுகாக்கும். எளிமையான இந்தக் கருவியினுல் மனதில் ஏற்படக்கூடிய ஆன்மிக மாறுதலைக் குறித்து அவர் சொல்லவும் வேண்டுமா? நிலையற்று அலைந்து துன்புற்றிருந்த மனதிற்கு ராட்டை அமைதியை அளித்திருக் கிறது என்ற உண்மைக்கு, அதைப் பரீட்சித்துப் பார்த்த அநேக ருடைய சாட்சியம் இருக்கிறது. இதைக் குறித்து கோதே என்ற பேரறிஞர், பல்நெடுங் காலத்திற்கு நிலைபெற்று நிற்பதானதோர் கவிதையையே புனைந்திருக்கிருர். மார்க்கரெட் என்பாள், ராட்டை

யில் நூற்றுக் கொண்டிருக்கும்போதே அதனால் அடைந்த உணர்ச்சியினால் தமது உதடுகளிலிருந்து ராட்டையின் நூலைப் போன்று சிறந்ததான ஒரு கீதத்தையும் நூற்றுக்கொண்டிருக் கிறாள் என்று அவர் பாடலில் கூறியிருக்கிறார். இந்த வாதத்தை விடாமலிருப்பதால், புதிதாகக் கண்டுபிடிக்கப்படும் யந்திரங் களுக்குத் தாம் விரோதி அல்ல என்றும் காந்திஜி கூறினார். வைக்கவேண்டிய இடந் தவறிப் போட்டுவிடும் சாமான்கள் எப் படிக் குப்பையாகின்றனவோ அதேபோலப் புதிதாகக் கண்டு பிடிக்கும் தவறானவை யெல்லாம் வெறுக்கத்தக்கனவே என்றார். மனிதனுடைய கௌரவத்திற்கும் அமைதிக்கும் அவை உதவியாக இல்லையாயின் அவற்றை வெறுத்துத் தள்ளிவிட வேண்டியது தான் என்றார்.

காந்திஜி பேசி முடித்ததும் அக்கூட்டத்தின் தலைவர், கேள்வி கேட்க விரும்புவோர் கேட்கலாம் என்று அழைத்தார். எதிர் பார்த்த அளவுக்கு விவாதம் உயிருள்ளதாக இல்லை என்றுதான் அஞ்சுகிறேன். அச்சங்கத்தில் தமாஷ்காரரான ஸ்ரீ ஹாப்பஸ் பேசினார். ஆனால், அவர் பேசியதை யாரும் கேட்பாரில்லை. கைத் தொழில் டைரக்டர், நூல் என்றுமே விற்பனைக்குரிய பொருளா காது என்று கூறினார். வங்காள கிராமத்தைக் குறித்துத் தமக்கு எதுவுமே தெரியாது என்பதை இதனால் வெளிப்படுத்திக் கொண் டார். கையினால் நூற்ற நூலைக்கொண்டு துணி நெய்யமுடியாது என்று அவர் கூறியதனால், தம் நாட்டுச் சரித்திரத்தைக்கூட அச் சமயம் அவர் மறந்து விட்டார் என்றே தோன்றுகிறது. யந் திரத்தை உபயோகிக்கலாம் என்பது யாருக்குமே தெரியாம லிருந்த காலத்தில், ஆயிரக்கணக்கான கெஜத் துணிகள் இந்தியாவின் துறைமுகங்களிலிருந்து வெளிநாடுகளுக்கு ஏற்று மதியாகி வந்தன என்பதை அவர் அறிந்திருக்க வேண்டும்.

காந்திஜி, தமது பிரசங்கம் முழுவதிலும் ராட்டையிலுள்ள ராஜீய அம்சத்தைப் பற்றி, வேண்டும் என்றே எதையும் கூறாமல் விட்டுவிட்டார். ஆனால், கடைசியாகப் பேசிய ரோட்டரி சங்கத் தினராகிய டாக்டர் சர்வாதிகாரி, காந்திஜி அதையும் சொல்லி விடும்படி வற்புறுத்திவிட்டார். 'ஹிந்துக்களின் சடங்குகளில் ராட்டை அப்படிப்பட்ட முக்கியமான ஸ்தானத்தை வகிக்கு மாயின், வங்காளிகளின் குடும்பங்களில் ஜீவனுள்ள காரியமாக அது இருந்தால், அது உபயோகத்தில் இல்லாமல் ஏன் போய் விட்டது? ராட்டையைக் கொண்டு துணியை உற்பத்தி செய் வதற்குச் செலவு அதிகமாவதுதான் அதை விரட்டி விட்ட தல்லவா?' என்று அவர் கேட்டார். அதில் ஆன்மிக விஷயமும் அடங்கியிருக்கிறது என்றார், காந்திஜி. எலிஜபெத் ராணிக்கு இருந்த அதிகாரம் தமக்கும் இருக்குமானால், அவர் செய்ததைப் போன்றே தாமும் இவ்விஷயத்தில் செய்திருப்பார் என்றார். ஹாலந்து ஜரிகையைத் தம் நாட்டு மக்கள் உபயோகிப்பது குற்றம் என்று அந்த ராணி செய்துவிட்டார். ஜரிகை செய்வது

எப்படி என்பதைக் கற்றுக் கொடுப்பதற்காக வெளிநாடுகளிலிருந்து ஆட்களைக் கொண்டு வந்தார். உள்நாட்டில் ஜரிகை உற்பத்தியாகிற வரையில் தம் நாட்டு மக்கள் ஜரிகையையே உபயோகிக்கக் கூடாது என்றும் தடுத்துவிட்டார். தடையில்லாத வியாபாரம் வேண்டும் என்று வற்புறுத்துபவன் அல்ல தாம் என்றார். தம்மால் முடிந்தால், எல்லா அந்நியத் துணி இறக்குமதிக்கும் கடுமையான தீர்வை விதித்து அந்நியத் துணி இறக்குமதியையே தடுத்துவிடுவார் என்றார். 'ராட்டையில் நூற்கும் தொழில் செத்தது எப்படி என்று நீங்கள் கேட்டீர்கள். இதற்குச் சொல்லக்கூடிய பதில் வேதனையானது. என்றாலும், அப்பதிலை நான் சொல்லியே ஆகவேண்டும். சாகும்படி அது செய்யப்பட்டுவிட்டது' என்றார், காந்திஜி. கிழக்கு இந்தியா கம்பெனிக்குப் பெரும் அவமானகரமான, ரத்தத்தைக் கொதிக்கும்படி செய்வதான அக்கதையைக் காந்திஜி விரும்பினால் சொல்லியிருக்கக் கூடும். ஆனால், அதைச் சொல்லாது நிறுத்திக் கொண்டார். 'இந்தியர் எழுதியது அல்ல, அந்தக் கம்பெனியின் ஊழியர்களே எழுதியதான அந்த வரலாற்றின் ஏடுகளைப் புரட்டிப் பார்க்கும் யோக்கியமான ஒவ்வோர் ஆணின், பெண்ணின் ரத்தமும் கொதிக்கும். அந்தக் கம்பெனியாரின் கொடுஞ் செயல்களிலிருந்து தப்புவதற்காக மக்கள் தங்கள் கைக் கட்டை விரல்களை வெட்டிக்கொண்டு விட நேர்ந்தது. இதை நான் சொல்வதைக் கொண்டே நிலைமையை நீங்கள் புரிந்துகொள்ளலாம்' என்றார், காந்திஜி. டாக்டர் சர்வாதிகாரி சொன்னது போல, ராட்டை ஒவ்வொரு வீட்டிலும் உயிரோடு இருந்து வரவில்லை ; அது கொல்லப்பட்டுவிட்டது. இப்பொழுது அதற்குப் புத்துயிர் அளிக்கப்பட்டு வருகிறது. ஒவ்வொரு நாடும் தன் தொழில்களை அமைத்து, வளர்த்துக்கொள்ள வேண்டியிருக்கிறது ; அவற்றில் உற்பத்தியாகிற பொருள்களை ஆரம்பத்தில் அதிக விலை கொடுத்து வாங்க வேண்டி வந்தாலும், அதனால் எந்தப் பாதகமும் இல்லை. 'தன் காரியத்திற்கும் முன்னால் சேவை' என்பது காந்திஜி பேசிய அந்தச் சங்கத்தின் குறிக்கோள். இதைக் காந்திஜி அவர்களுக்கு ஞாபகப்படுத்திவிட்டுக் கூறியதாவது : 'இந்திய மக்களின் நலனைக் கவனிக்க வேண்டிய தருமகர்த்தாக்கள் நீங்கள். உங்கள் நலனைக் கவனிப்பதற்கு முன்னால் நீங்கள் மற்றவர்களுக்குச் சேவை செய்ய வேண்டும். தங்களுக்கு வேண்டிய துணிகளைத் தாங்களே தங்கள் வீடுகளில் தயாரித்துக்கொள்ள முடியும்போது, மான்செஸ்டர் மில் துணியையோ, இந்திய மில் துணியையோ மக்கள் உபயோகிக்கக் கூடாது என்று நீங்கள் அவர்களுக்குப் போதிக்க வேண்டும்.' ஓர் அந்நிய நாட்டுக் கப்பல் கம்பெனிக்கும் ஒரு பிரிட்டிஷ் கப்பல் கம்பெனிக்கும் போட்டி ஏற்பட்டு, அந்த அந்நியக் கம்பெனி, டெக் பிரயாணிகளுக்குக் கப்பல் கட்டணம் முன்னால் ரூ. 91 என்று இருந்திருந்தும், இனமாகவே டிக்கெட்டுகளைக் கொடுத்த ஓர் உதாரணத்தையும் காந்திஜி எடுத்துக் காட்டினார். மேலும், 'கிரமமான தொழில் இந்த விதமான

போட்டியைச் சமாளித்து நிற்க முடியாது. அத்தகைய ஒழுக்கக் கேடான போட்டிக்கு எதிரான உலக அபிப்பிராயத்தை நீங்கள் வளர்க்கவேண்டும். நான் விரும்புவது, நியாயமான போட்டியையேயன்றிப் பிறர் தய்வை அல்ல' என்ருர் காந்திஜி. இந்தப் பதிலைச் சொன்ன பிறகு டாக்டர் சர்வாதிகாரி, தாம் கேட்ட கேள்விக்காக வருத்தப்பட்டிருக்கமாட்டார் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை.

['ரோட்டரி கிளப்பில்' என்ற தலைப்பில் ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய ஒரு கட்டுரையிலிருந்து எடுத்தது.]

—'எங் இந்தியா' – 27—8—1925

# 8

# போலிக் கதர்

இந்திய மில் ஒன்றில் நெய்த போலிக் கதரின் மீது ஒட்டப் பட்டிருந்த பட அட்டை ஒன்றை ஒரு நண்பர் எனக்கு அனுப்பி யிருக்கிருர். அப்படத்தில் ஒரு ராட்டையும், பக்கத்தில் ஒரு கூடை நிறையப் பட்டை போட்ட பஞ்சும், அதற்கு முன்ஞல் நூல் சுற்றிய கண்டுகளும் அச்சிடப்பட்டிருக்கின்றன. இத்தகைய போலிக் கதர், அநேகமாக எல்லா இந்திய மில்களிலும் தயாரிக் கப்படுகிறது என்றும், இதே போன்ற சரக்கை ஜப்பானும் இங்கே அனுப்புகிறது என்றும் இதை அனுப்பியிருப்பவர் எனக்கு அறிவிக்கிருர். தாங்கள் கதர் உடுத்த வேண்டும் என்பதை அறிந்திருக்கும் ஏழை மக்கள், கடைகளில் கேட்டதும், கதரைப் போன்ற துணியை அவர்களுக்குக் கொடுக்கும்போது, அதில் ராட்டை முத்திரையும் இருப்பதைப் பார்த்துவிட்டுச் சந்தேகப்படாமல் இத்துணியை வாங்கி விடுகிருர்கள் என்றும் எனக்கு எழுதியிருப்பவர் கூறுகிருர். இப்படி இத்துணியை வாங்கி விட்டதால், இந்தியாவின் பொருளாதாரக் கஷ்டத்தைப் போக்குவதற்குத் தாங்கள் ஏதோ காரியம் செய்துவிட்டதாக நம்பிக்கொண்டு பெருமைப்படுகிருர்கள் என்றும் சொல்லுகிருர். மில்காரர்கள், கொஞ்சமும் தேசாபிமான உணர்ச்சியே இல் லாமல், தங்கள் லாபத்தைப் பெருக்கிக் கொள்ளுவதற்காகவோ அல்லது இப்பொழுது மில்கள் எப்படியாவது நடந்துகொண்டு வந்தால் போதும் என்பதற்காகவோ, நாடு கொண்டிருக்கும் உறுதியைக் குறித்துக் கொஞ்சமும் கவனிக்காமல் இவ்விதம் செய்து வருவது பெரிதும் வருந்தத்தக்கதாகும். நிலைமை இவ் விதம் இருந்தும், இந்திய மில்களின் உதவியைக் கொண்டு அந்நியத் துணி பகிஷ்காரத்தில் வெற்றி பெற்றுவிட முடியும் என்று நம்புகிறவர்களும் இன்னும் இருந்துதான் வருகிருர்கள். கதர் சரியான வர்த்தக நிலையை அடைவதற்கு முன்ஞல், தேசீய

காரியங்களுக்கு இந்திய மில் தொழிலை உபயோகித்துக் கொள்ளலாம் என்று எண்ணுவதுதான் இந்த நம்பிக்கையி லிருக்கும் பெரிய தவறு. மகத்தான தேசீய காரியத்தில் எல்லா மில்களும் ஒரு நாளைக்கு ஒன்றுபட்டு நிற்கும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. ஆனால், உலகமே எதிர்த்து நின்றாலும், அதையும் சமாளித்துக் கதர் தனது நிலையை அடைந்து விடுவதற்கு முன்னால், அதாவது கதரைத் தவிர வேறு எதையும் உடுத்த மறுத்துவிடும் வகையில் பொதுமக்களின் ருசி புரட்சிகரமான மாறுதலை அடைந்துவிடுவதற்கு முன்னால், உண்மையான கதர் இன்னது, கேவலமான போலி இன்னது என்பதை மக்கள் எளிதில் கண்டுகொள்ளும்படி செய்யும் அளவுக்கு அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கப்படுவதற்கு முன் னால், அந்தக் காலம் வராது.

—'எங் இந்தியா'–29—10—1925

# 9

# பண்டித மோதிலாலும் கதரும்

'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகைக்கு விருப்பமான வராக என்றுமே பண்டித மோதிலால்ஜி இருந்தது இல்லை. சமீபத்தில் அவர் செய்துவிட்ட குற்றம், சில ஆண்டுகளுக்கு முன்னால் வரையில் பெரிய மோட்டாரில் ஏறிக்கொண்டு போவதைத் தவிர வேறு எங்கும் நடந்து போய் அறியாத அவர், அலகாபாத்தில் தெருக்களில் அங்காடிக்காரர் போல் கதர் விற்றதேயாகும். 'பண்டித நேரு தம்மைக் கேவல மாக்கிக் கொண்டிருக்கிறார் என்பதை இந்தியாவிலும் ஒப்புக் கொண்டுதான் ஆக வேண்டும்' என்று அப்பத்திரிகைக்காரர் தம்முடைய அழகான பாஷையில் எழுதியிருக்கிறார். இன்னும் பல தலைவர்களும் பண்டிதர் செய்ததைப் போன்று செய்து, 'டைம்ஸ் ஆப் இந்தியா' அவருக்கு அவ்வளவு கௌரவத்தோடு அளித்திருக்கும் பட்டத்தை அவர்களும் பெற வேண்டும் என்று தான் ஆசைப்பட வேண்டும். எதிரியிடமிருந்து திட்டு கிடைக்கும்போதுதான், பொதுவாகச் சந்தோஷப்பட வேண்டிய சமயம். அவர்கள் புகழ்ந்துவிட்டாலோ, உஷாராக இருக்க வேண்டும். முக்கியமாக கிரேக்கர்கள் சன்மானங்களைக்கொண்டு வந்த போதுதான், ரோமர்கள் அதிகம் அஞ்சினர்.

காங்கிரஸ்மீதும், கதர்மீதும், காங்கிரஸ்காரர்கள்மீதும் தமக் கிருக்கும் வெறுப்பைக் காட்டிக்கொள்ளுவதில் 'டைம்ஸி'ல் எழுதி யிருப்பவர் தம்மையும் மிஞ்சிப் போயிருக்கிறார். இதைக் குறித்து வாசகரே முடிவுக்கு வர நான் அனுமதிக்க வேண்டும். எழுதி யிருப்பவர் கூறுவதாவது :

"அலகாபாத்திலிருந்து முழு ஆர்வத்துடன் அனுப்பப்பட்டிருக்கும் ஒரு தந்தியிலிருந்து, காங்கிரஸின் வீழ்ச்சி பூரணமாகிவிட்டது என்பதும், காங்கிரஸ் லட்சியம் என்று சொல்லப்படுவதெல்லாம் ஒன்றுக்கும் உதவாதது என்பதும், காங்கிரஸ் ஆதரவாளரிடையே நியாயமான ராஜீயக் கருத்து எதுவுமே இல்லை என்பதும் தெளிவாகிவிட்டன."

எழுதியிருப்பவர் மேற்கொண்டும் கூறுவதாவது :

"லார்டு பர்க்கென்ஹெட், பிரிட்டிஷ் கொடியான யூனியன் ஜாக் அரைச் சட்டையை அணிந்துகொண்டு லண்டன் டிரபால்கர் ஸ்கொயரின் சிங்கச் சிலைகளுக்குக் கீழிருந்து கன்சர்வேடிவ்களின் நல்ல நீல நிறமுள்ள சின்னங்களை விற்கிறார் என்றோ, ஸ்ரீ பால்டுவின், சாம்ராஜ்யக் கைத்தொழில்களை வளர்ப்பதற்காகப் பிக்கடல்லியில் தட்டில் பிரிட்டிஷ் பொம்மைகளை வைத்து விற்றுக் கொண்டிருக்கிறார் என்றோ, ஸ்ரீ ராம்ஸே மாக்டொனால்டு, சாதாரணமாகத் தொழிலாளர் அணியும் முரட்டுத் துணியாலான சட்டையையும் மப்ளரையும் அணிந்துகொண்டு லயம் ஹவுஸில் தொழிலாளரிடையே செங்கொடியை விற்றுக்கொண்டிருக்கிறார் என்றோ, அல்லது கிளைட்ஸைடிலிருக்கும் போல்ஷ விக்கர்கள் பொம்மை அரிவாளும் கத்தியும் விற்பதற்காகக் கிளைட்ஸைடில் ஒரு கடை வைத்திருக்கிறார்கள் என்றோ பிரிட்டிஷ் பொதுமக்கள் அறிந்தால், தங்கள் தலைவர்களுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்ற ஏகோபித்த முடிவுக்கே எல்லா வகுப்பினரும் வந்துவிடுவார்கள்."

பண்டித நேருவுக்கும், அவருடன் தெருவில் கதர் விற்றுக் கொண்டு போன ஸ்ரீ ரெங்கசாமி அய்யங்காருக்கும், அவர்கள் போன்று தெருவில் கதர் விற்கும் பிரபலமானவர்களுக்கும் பைத்தியம் பிடித்துவிட்டது என்பதுதான் இயற்கையாக இதிலிருந்து தெரிந்துகொள்ளவேண்டியதாகும். எழுதியிருப்பவர் உபயோகித்திருக்கும் பாஷை, அவமதிப்பதாக இருப்பதோடல்லாமல் தவறான அபிப்பிராயத்தை அதிகமாக உண்டாக்குவதாகவும் இருக்கிறது. கதர், படித்தவருக்கும் பாமரருக்குமிடையே உண்மையான பந்தத்திற்குச் சின்னம் என்று ஆயிரக்கணக்கான இந்தியர்கள், சரியாகவோ தப்பாகவோ கருதுகிறார்கள். அப்படிப்பட்ட கதருக்கும், பிரிட்டிஷ் கன்சர்வேடிவ்கள் விற்கும் 'நல்ல நீல நிற கன்சர்வேடிவ் கட்சிச்சின்ன'த்திற்கும் என்ன பொருத்தம் இருக்க முடியும்? பாடுபட்டு உழைக்கும் வாயில்லாப் பூச்சிகளான கோடிக்கணக்கான மக்கள் மீது, படித்த வகுப்பினரின் மூலம் பிரிட்டிஷ் அரசாங்கம் ஆதிக்கம் செலுத்தி வருகிறது. பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குத் தீனிபோட்டு வருவதற்காகப் பாமர மக்களின் ரத்தம் உறிஞ்சப்பட்டு வருவதற்குப் பரிகாரமாகப் படித்த வகுப்பினர் ஏதாவது பரிகாரம் தேடுவதானால், அது கதரின் மூலமே முடியும். கதரையும் அதன் எல்லாத் தத்துவங்களையும் பழித்துக் கூறுவதையே மிதவாத ராஜீயவாதிகள் நாகரிகமாகக் கொண்டுவிட்டதனாலேயே இந்த அவமதிப்பு சாத்தியமாயிற்று. யுத்தம் மூண்டுவிட்டதுமே' இளைஞர்களும் வயோதிகர்களும், ஆண்களும் பெண்களும், பெரியவர்களும் சின்னவர்களும், ராணுவத்தில் சிப்பாய்களாகச் சேர்க்கப்படாதவர்கள் அல்லது சிப்பாய்

களாகச் சேர்க்க முடியாதவர்கள் எல்லோரும், போரில் காய மடைந்து அநேக ஆஸ்பத்திரிகளில் கொண்டுவந்து போடப்பட்ட சிப்பாய்களுக்காக ஆடைகள் தைத்துக்கொடுக்கவேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டதையும், உண்மையில் அவர்கள் ஆடைகளைத் தைத்ததையும் யார் மறந்து போய்விட்டார்கள்? அச்சமயம் இச்சிறு சேவையைச் செய்வதற்கு மக்கள் போட்டி போட்டுக் கொண்டு முன்வந்தார்கள். தையல் வேலை தெரியாதவர்கள், அக்கம் பக்கத்திலிருந்தவர்கள் தங்களுக்கு ஆரம்பப் பயிற்சியை அளித்ததால், அதற்காக நன்றியுள்ளவர்களானார்கள். பிரிட்டிஷ் மக்களுக்கு ஏற்பட்ட பயங்கரமான ஆபத்து வேளையில், உயர்வு தாழ்வு என்பதெல்லாம் மறைந்து போய்விட்டன. தங்களுடைய சாதாரண வாழ்க்கையில் செய்தறியாத தையல் வேலையையும், மற்றும் நூற்றுக்கணக்கான எத்தனையோ வேலைகளையும், ஒவ் வொருவரும் செய்ய வேண்டியது தேசாபிமானமானது, அவசிய மானது என்றால், ஒவ்வோர் இந்தியரும் அந்நியத் துணிகளை யெல்லாம் விலக்கிவிட்டுக் கதர் அணிய வேண்டியதும், அதன் மூலம் ஒரு வேலையை, அதாவது கையினால் நூற்பதை மேற் கொள்ள வேண்டியதும் ஆயிரம் மடங்கு அதிக அவசியமானது, தேசாபிமானமானது என்று துணிந்து கூறுவேன். இந்திய மக்களில் கோடிக்கணக்கானவர்களுக்குச்சாத்தியமானதும் இது.

ஓர் இயக்கம் எதிராளியால் பரிகசிக்கப்படும்போது, அந்த இயக்கம் முன்னேறிக் கொண்டு போகிறது என்று சொல்லலாம் என்றும், அந்த இயக்கம் எதிராளிகளுக்குக் கோபத்தைக் கிளப்பிவிடுமானால், எதிர்பார்த்த பலன் உண்டாகிக்கொண்டு வருகிறது என்று சொல்லலாம் என்றும் ஆங்கிலப் புத்தகங் களில் படிக்கிறோம். பிரிட்டிஷ் பொதுஜன அபிப்பிராயத்தையே 'டைம்ஸ் ஆப் இந்தியா' பிரதிபலிப்பதாக இருக்குமானால், விரும்பும் பலனைக் கதர் அளித்து வருகிறது என்றாகிறது.

சம்பந்தப்பட்ட கட்டுரையை எழுதியிருப்பவர், கதரை, 'காங்கிரஸின் பிணத் துணி' என்கிறார். 'இந்தியாவின் எந்தப் பகுதியிலும் மக்கள் அத்துணியை விரும்பாததைப் போன்றே அலகாபாத் பொது மக்களும் அதை விரும்பவில்லை' என்று தமது வாசகர்களுக்கு அவர் உறுதி கூறுகிறார். அப்படி கதரை விரும்பு வாரே இல்லையென்றால், கதரின் மீது இவ்வளவு துவேஷத்தைப் பொழிவானேன் என்பது விளங்கவில்லை. கதர், காங்கிரஸ் 'பிணத் துணி' அல்ல என்பதையும், அது காங்கிரஸுக்கும் மக்களுக்கு மிடையே தகர்த்துவிட முடியாத பிணைப்பை உண்டாக்குகிறது, அதன்மூலம் இதற்கு முன்பு எப்பொழுதும் இருந்திராத நிலையில் அம்மக்களுக்கு அதிகப் பிரதிநிதித்துவம் வாய்ந்ததாகவும் காங் கிரஸைச் செய்கிறது என்பதை நிரூபிப்பது காங்கிரஸ் தலைவர்களின் கடமை.

என்றாலும், ஐரோப்பியர்களுக்கு நியாயம் செய்வதை முன்னிட்டு ஒரு விஷயத்தை நான் கூறிவிட வேண்டும். 'டைம்ஸ்

ஆப் இந்தியா'வில் எழுதியிருப்பவர் கதர் மீது பொழிந்திருக்கும் விஷமான வசவு எந்த வகையிலும் பொதுவான ஐரோப்பிய அபிப்பிராயமாக ஆகாது. இந்தியாவிலிருக்கும் ஐரோப்பியர் களில் அநேகர், கதரின் உபதேசத்தை நம்புவதோடு சிலர் கதரையும் உடுத்தி வருகிறார்கள் என்பதை அறிவேன். கதரின் உபதேசம் ஐரோப்பாவுக்கும் எட்டியிருக்கிறது. கதர் சம்பந்த மாக வெகு தொலைவிலுள்ள போலந்திலிருந்து ஒரு பேராசிரியர் எழுதியிருக்கும் கடிதம் இது :

"ஐரோப்பாவிலிருக்கும் இந்தியாவின் நண்பர்களுக்கு இந்தியாவின் சிறந்த ரகத் துணிகளை விற்க முயற்சி செய்வது நல்ல காரியம் என்று நீங்கள் எண்ணு கிறீர்களா? உங்கள் துணியின் சில ரகங்களை எனக்கு அனுப்பி, ஆங்கிலப் பணத்தில் அவற்றின் விலை இன்னது என் பதையும், பணத்தை அனுப்ப வேண்டியதற்கு ஆங்கிலத்தில் விலாசத்தையும் அறிவித்தால், சிறிய அளவில் நான் முயற்சி செய்கிறேன். விற்பனை மிக அதிகமாக இருக்காது. என்றாலும், பிரசாரத்திற்கு அது பயனுள்ளதாக இருக்கும் என்று நினைக் கிறேன். போலந்திலிருக்கும் அநேக மக்களாவது, உங்கள் வேலையில் தங்கள் ஆதரவைக் காட்டிக்கொள்ளுவதற்காக அத் துணியைச் சந்தோஷமாக உடுத்திக்கொண்டு பெருமை யடைவார்கள்... இந்தியாவின் விடுதலைக்கு எல்லோருடைய அனுதாபத்தையும் பெறுவதற்கு இதுவே மிகச் சிறந்த வழியாக இருக்கக்கூடும். நானே நூற்பதாக எளிதில் மேற்கொண்டுவிட முடியாது. என்றாலும், இந்தியத் துணி எங்கள் துணியைவிட விலை அதிகமானதாக இருந்தாலும், வீடுதோறும் போய் அதை வாங்கும்படி உற்சாகப்படுத்த என்னால் முடியும்."

'எங் இந்தியா' – 15—4—1926

## 10

## 'சுபிட்சமான இந்தியா'

பிரிட்டிஷ் வெளிநாட்டு வர்த்தக மந்திரி ஸ்ரீ ஏ. எம். சாமு வல், லிங்கன் வர்த்தக சங்கத்தில் பேசும்போது கீழ்வருமாறு கூறியதாகச் சொல்லப்படுகிறது :

"நமது சரக்குகள் விற்பனையாவதற்குச் சிறந்த இடம் இந்தியா. அந் நாடு நம்மிடமிருந்து ஆண்டுக்கு 9,00,00,000 பவுனுக்குச் சரக்குகளை வாங்கு கிறது. இந்தச் சரக்குகள், பிரிட்டிஷ் உழைப்பைக்கொண்டு தயாரிக்கப்பட்ட உயர்ந்த சரக்குகள். ஆகையால், இந்தியாவுடன் நம் வர்த்தகம் அதிக மாவது வரவேற்கத்தக்கதாகும். ஏனெனில் அதிகத் தொழிலாளருக்கு வேலை கொடுப்பதன்மூலம் வேலையில்லாது திண்டாடுகிறவர்களின் தொகை

யைக் குறைப்பது என்று இப்பொழுது இருக்கும் அரசாங்கத்தின் முக்கியமான கொள்கையை நாம் நிறைவேற்றியவர்களாவோம்.

"இந்தியா நம்மிடமிருந்து ஏராளமான இரும்பு, எஃகுச் சாமான்களையும் ரெயில்வே சாமான்களையும் வாங்கியது. அந்நாடு சுபிட்சமாக இருந்தது; இறக்குமதியாகும் சரக்குகளை வாங்க அதனிடம் பணம் அதிகமாக இருந்தது. தன் கருத்துக்குப் பொருத்தமான அளவுக்கு விலைகள் வரவேண்டும் என்றே அது காத்துக்கொண்டிருந்தது. நாணயத்தில் பிரிட்டனுக்கு அடுத்தபடி இந்தியாவுக்கு அதிக மதிப்பு உண்டு. லிங்கன் ஜில்லாவிலிருக்கும் அநேக கம்பெனிகளுக்கு இந்தியாவில் சரியானபடி அமைந்துள்ள விற்பனை, தொழில் நுட்ப ஸ்தாபனங்களும் இப்பொழுதே இருந்து வருகின்றன. ஆனால், இந்தியாவிலிருக்கும் அரசாங்கத்தின் பிரதிநிதிகள், திறமை வாய்ந்த, நுட்பந் தெரிந்த பிரதிநிதிகளை அந்த இடத்தில் வைக்கவேண்டும் என்று கம்பெனிகளிடம் கூறுகிறார்கள். அதிகச் சிக்கலானவைகளான யந்திரங்களை விற்பதற்கு நுட்பந் தெரிந்தவர்களின் உதவி அதிகமாகக் கிடைப்பது அவசியமாகிறது. தொடர்புகளை உண்டாக்கிக்கொள்ளுவதற்கு உதவி செய்வதற்கு, விற்பனையாளர்களுக்கு எப்பொழுதும் வலக்கையில் நுட்பந் தெரிந்த ஆலோசனைகள் இருந்து வரவேண்டும். விற்பதற்குக் காட்டும்' விற்கும் யந்திரங்கள் சம்பந்தமான விவரங்களை, அவற்றை வாங்கும் இந்தியாவிலுள்ள இன்ஜினியர்களுக்கு விளங்குவதற்கு அவர்களுடன் பிரிட்டிஷ் நிபுணர்களின் பிரதிநிதிகள் தொடர்புகொள்ள வேண்டும். இப்பொழுதும் இந்தியாவில் இறக்குமதியாகி வரும் யந்திரங்களில் 80 சதவிகிதத்தை நாம்தான் விற்று வருகிறோம். பிரிட்டிஷ் கம்பெனிகளில் பலவற்றில் நுட்பத் திறமை வாய்ந்த ஏஜெண்டுகள் இந்தியாவில் இருக்கிறார்கள். என்றாலும், இந்தியாவில் வாங்கும் அதிகாரிகள், தாங்கள் விரும்பும் வகையில் பிரிட்டிஷ் நிபுணர்களான சிப்பந்திகளின் உதவி கிடைக்கவில்லை என்று கூறிக்கொண்டிருப்பதையே இன்னும் அறிந்து வருகிறேன். யந்திரங்களையும், அவற்றின் பாகங்களையும் போதுமான அளவுக்கு நாம் இந்தியாவில் வைத்திருக்கவில்லை என்றும் அவர்கள் புகார் சொல்லுகிறார்கள்.

"விவசாய சம்பந்தமான யந்திரங்களின் விற்பனையை இந்தியாவில் விருத்தி செய்வது சம்பந்தமாகப் பிரிட்டிஷ் கம்பெனிகள் அதிக சிரமம் எடுத்துக்கொண்டிருப்பதோடு இதற்காகச் செலவும் செய்திருக்கின்றன என்பதை அறிவேன். ஆனால், வெற்றி பெற முடியவில்லை. என்றாலும், இந்திய அரசாங்கம், இந்திய விவசாயிக்கு உதவி செய்யப் பாடுபட்டு வருகிறது. இதற்குள்ள சிறந்த முறை, இந்திய விவசாயியின் கையில் சிறந்த விவசாயக் கருவிகளைக் கொடுப்பதேயாகும். இக்கால யந்திர சாதனங்களை எப்படிப் பழுது பார்த்துக்கொள்ளுவது என்பதை இந்திய மக்களுக்குக் காட்டவும், இந்த யந்திர சாதனங்களை வாங்குவதற்கு அவர்களுக்கு உதவி செய்யவும், விவசாய இலாகாவும், கூட்டுறவுக் கடன் இலாகாவும் இந்தியாவில் அமைக்கப்பட்டு வருகின்றன."

நாம் சுபிட்சமாக இருக்கிறோம் என்றும், இங்கிலாந்து உற்பத்தி செய்யும் விவசாய சம்பந்தமான, மற்ற யந்திரங்களையெல்லாம் வாங்கிக்கொள்ளுவதாலும், அவர்களுடைய நுட்பத் திறமையைப் பெறுவதனாலும் நாம் அதிகச்சுபிட்சத்தை அடையலாம் என்

றும் யோக்கியமாகவே ஸ்ரீ சாமுவல் நம்புகிருர் என்பதில் சந்தேக மில்லே. ஆனல், இந்த இரண்டு கூற்றுக்களும், நம்மைப் பொறுத்த வரையில், உண்மைக்குப் பொருத்தமில்லாதவைகளாக இருந்து வருகின்றன ! இந்தியா சுபிட்சமாக இல்லே, நாளுக்கு நாள் அது அதிக வறுமையடைந்துகொண்டு வருகிறது என்பதை நாம் அறிவோம். இங்கிலாந்திலிருந்தோ அல்லது மற்ற வெளிநாடுகளிலிருந்தோ, தங்கு தடையின்றி யந்திரங்களேயும் நுட்பத் திறமையையும் இறக்குமதி செய்வதால் இந்தியாவின் ஏழ்மைப் பிரச்னேயைத் தீர்த்துவிடவே முடியாது என்பதையும் நம்மில் சிலர் நன்ருக அறிவோம். பல ஆண்டுகளுக்கு முன்னல் கோகலே சொன்னதைப் போன்று, இத்தகைய இறக்குமதி நமது வளர்ச்சியை முடக்கி விடுகிறது. நாம் வெறும் மரம் பிளப்பவர்களாகவும் தண்ணீர் இறைப்பவர்களாகவும் நாளுக்கு நாள் ஆகிக் கொண்டிருக்கிருேம். நாம் இப்பொழுது செய்யக்கூடியதெல்லாம் இதுதான்: நமது தேவைக்கு ஏற்றதான யந்திரங்களே நாமே செய்துகொண்டு விடும் வகையில், நமது கைகளினுலும், கால்களினுலும் உழைப்பதற்கு வேண்டிய சக்திக்கு அவசியமான நுட்பத் திறமையை அதிகரித்துக்கொள்ள வேண்டும். அடிமைத்தனமாக மேற்கத்திய நாட்டினரைப் பின்பற்றுவது, நம்முடைய சுய முயற்சியையோ, ஆற்றலேயோ கொன்றுவிடும். இதனல் நல்ல சௌகரியத்தோடு வாழ்வதற்கு வேண்டிய தகுதியும் நமக்கு இல்லாது போய்விடும். பிரிட்டிஷ் அரசாங்கம் நியமித்திருக்கும் விவசாயக் கமிஷனேக் குறித்துச் சமீபத்தில் இப்பத்திரிகையில் எழுதப்பட்டதுபோல, ஸ்ரீ சாமுவல் பேசியிருப்பதைப் போன்ற பேச்சுக்களே இத்தகைய கமிஷன்களின் நோக்கத்தைக் குறித்துச் சந்தேகத்தைக் கிளப்பிவிடுகின்றன.

'எங் இந்தியா' – 16—12—1926

## 11

# மில்காரர்களும் கதரும்

[அமலனேர், ஜவுளி மில் இருக்கும் பகுதி. அது போன்ற இடத்தில் கதர் பிரசாரம் செய்வதால் என்ன பிரயோசனம் என்ற சந்தேகம் கிளப்பப்பட்டது. 'இங்கே இரண்டாயிரம் தொழிலாளர்கள் இருக்கிருர்கள்; இங்குள்ள ஜனத்தொகையில் பெரும் பகுதியினர் இவர்களே. இவர்கள் கதர் கட்டுவார்கள் என்று எதிர்பார்க்கிறீர்களா? மில் சொந்தக்காரர்கள் கதர் கட்டுவார்கள் என்று எதிர்பார்க்கிறீர்களா?' என்று கேட்டனர். அதற்குக் காந்திஜி கீழ் வருமாறு பதில் கூறினர்—மகாதேவ தேசாய்]

இது, நீங்கள் கேட்க வேண்டிய கேள்விதான். ஆனால், இக் காலத்தில், இந்த நேரத்தில், இதைக் கேட்க வேண்டிய அவசியம் இல்லை. உண்மையை எல்லோரும் அறிந்து கொள்ளவில்லை யென்றால், பத்து லட்சம் தடவையாயினும் அதைத் திரும்பத் திரும்பச் சொல்லியே ஆகவேண்டும். உண்மையை ஒரு முறை சொன்னாலே போதும் என்று இருக்குமானால், இதற்குள் ஒவ் வொருவரும் கடவுள் நம்பிக்கையுள்ளவர்களாக ஆகியிருப் பார்கள். ஆனால், உண்மை என்னவென்றால், கடவுள் ஒருவரே என்ற உண்மையைப் பத்து லட்சக்கணக்கான தடவைகள் சொல்லியாகிவிட்டது. என்றாலும், சிலருடைய உள்ளங்கள் மாத்திரமே அதை ஏற்றுக்கொள்ள முடிந்திருக்கிறது.

எனக்கு அளிக்கப்பட்டிருக்கும் பண முடிப்பிற்குத் தொழி லாளர்கள் ரூ. 330 கொடுத்திருக்கின்றனர். இதன் நிறைக்கு அவர்கள் எனக்குப் பொன்னைக் கொடுத்திருப்பதாகவே நான் மதிக்கிறேன். இதே போலத் தொழிலாளர்கள் தங்களுடைய ஆதரவைத் திட்டமான வகையில் காட்டிக்கொண்டிருப்பது இது முதல் தடவை அன்று. மில் சொந்தக்காரர்களும் இவ்விதம் செய்திருக்கிறார்கள். ஒரு நல்ல காரியத்திற்கு உதவி செய்கி றோம் என்ற நம்பிக்கையுடன் இன்னும் செய்து வருவார்கள். தங்களைப் போன்ற சகோதரத் தொழிலாளியான என் மீது கொண்டிருக்கும் அனுதாபத்தினால், தொழிலாளர்கள் ஆதரவு காட்டி வருகிறார்கள். ஆனால், ஒருவருடைய கடமை என்ன என் பதைப் புரிந்துகொள்ளுவதும், அதை அனுசரிப்பதும் வெவ்வே றான விஷயங்கள். இவ்விரண்டும் சேர்ந்து நடந்துவிடுமானால், நாம் ராமராஜ்யத்தை அடைந்துவிடுவோம். உதாரணமாக, பிர மச்சரியத்தின் பெருமையை அறிந்தவர்கள் இருக்கிறார்கள். ஆனால், அதை அவர்களால் அனுசரிக்க முடியவில்லை. அதே போலவே, கதரின் தத்துவத்திலுள்ள முக்கியத்தை அறிபவர்கள் இருக்கிறார்கள். ஆனால், சுகபோகத்தில் தங்களுக்கு இருக்கும் ஆசையை வென்று கதரை மாத்திரமே உடுத்துவது என்பது அவர்களால் ஆவதில்லை. அநேகர் என்னிடம் வந்து, ‘உங்கள் உபதேசத்தைப் பெரிதும் மதிக்கிறோம். ஆனால், அவற்றை நிறைவேற்றி வைக்கும் வழியை எங்களுக்குக் காட்டுங்கள்’ என் கிறார்கள். ஒருவருக்கு உண்மையான நம்பிக்கை மாத்திரம் உண்டாகிவிடுமானால், உடனே என்றில்லாவிட்டாலும் பிறகாவது அவர் அதைப் பின்பற்றி நடந்தே தீருவார். இந்த மனப்போக்கு எனக்கு அதிக நம்பிக்கையை அளிக்கிறது. இங்கே நீங்கள் 2,000 தொழிலாளருக்கு வேலை கொடுத்திருக்கலாம். ஆனால், இவர்களை நிலத்திலிருந்து பிய்த்து நீங்கள் கொண்டு வந்திருக் கிறீர்கள் என்பதை மறந்துவிடாதீர்கள். உங்கள் ஆலைகள், மிகச் சிலருக்குத்தான் வேலை கொடுக்க முடியுமேயன்றி நிலத்தி லேயே வேரூன்றி இருக்க வேண்டியவர்களும், அதிக வேலை வேண்டியிருப்பவர்களுமான கோடிக்கணக்கானவர்களுக்கு வேலை கொடுத்துவிட முடியாது என்பதையும் நீங்கள் மறந்து

விட வேண்டாம். இப்பிரச்னை விவசாயக் கமிஷனின் முன்னுல் இருக்கிறது ; இவ்விஷயம் வைசிராயின் முன்பும் இருந்து வருகிறது. இதற்கு நாட்டினிடம் நான் காட்டியிருப்பதைவிடச் சிறந்ததான ஒரு பரிகாரத்தை வேறு யாராவது காட்ட முடியுமா என்று நான் கேட்கிறேன். டாக்டர் ராய், தமது ரசாயனத் தொழிற்சாலையை பஞ்சப் பிரதேசமான போக்ராவுக்கும் கூல்னுவுக்கும் கொண்டு போய்விட முடியாது. அவர், ராட்டைகளுக்குத்தான் திரும்ப வரவேண்டும். ஒரே ஆலேயில் ஆயிரக் கணக்கான கதிர்களே அமைப்பதில் நீங்கள் உங்கள் ஆசையையெல்லாம் செலுத்திவிட வேண்டாம். ஆனுல், ஒவ்வொரு வீட்டையும் நூற்கும் ஆலேயாக ஆக்கிவிடுவதில் ஆசையைச் செலுத்துங்கள்.

ஜவுளி மில் தொழிலே நாசம் செய்துவிட நான் விரும்புகின்றேனு என்று என்னே அடிக்கடி கேட்கிருர்கள். அப்படி மில்களே அழித்துவிட நான் விரும்பினுல், எக்ஸைஸ் வரியை ரத்துச்செய்துவிடவேண்டும் என்று நான் வற்புறுத்தியிருக்க மாட்டேன். மில் தொழில் சுபிட்சமடையட்டும் என்றுதான் நான் விரும்புகிறேன். ஆனுல், நாட்டிற்குத் தீங்கை விளேவித்து இத்தொழில் சுபிட்சமடைவதை நான் விரும்பவில்லே. இதற்கு மாருக, இத்தொழில் போய்விட வேண்டியது நாட்டின் நன்மைக்கு அவசியமானதாக இருக்குமானுல், பச்சாதாபம் என்பது கொஞ்சமும் இல்லாமல் அது ஒழியும்படி நான் விட்டுவிடவே வேண்டும். என்னே ஆதரிக்கும் மில் சொந்தக்காரர்கள், என்னுடைய மனப்போக்கைப் புரிந்து கொண்டிருக்கிருர்கள் இந்த இயக்கத்தின் சுபிட்சம், தங்களுக்கு நஷ்டத்தை உண்டாக்குவதாக இருந்தாலும், இது சுபிட்சமடையவே வேண்டும் என்றும் பலர் விரும்புகின்றனர்.

மில் துணியை உற்பத்தி செய்கிறவர்கள், வேறு ஒன்றை எப்படி உடுத்த முடியும் என்று நீங்கள் என்னேக் கேட்கிறீர்கள். மான்செஸ்டரில் துணியை உற்பத்தி செய்கிறவர்கள், தங்கள் துணியை உடுத்துவது இல்லே என்பது உங்களுக்குத் தெரியுமா? உங்கள் சொந்த மில்களில் தயாராகும் துணியை உபயோகிக்க உங்களால் முடியாது போவதைக் குறித்து நீங்கள் கவலேப்பட வேண்டியதில்லே. நல்லவரான சதர்லாந்து டச்சஸ், ஹெப்ரைட்ஸ் தீவிலிருக்கும் ஏழை மக்களின் துயரமான நிலேமையைக் கண்டாள். அவர்களுக்கு ராட்டைகளேயும் கைத்தறிகளேயும் கொடுத்தாள். மான்செஸ்டர் நகரவாசிகள், மில் சொந்தக்காரர்கள் உட்பட, மில் துணியைவிட மூன்று மடங்கு அதிக விலேயும் கொடுத்து ஹெப்ரைட்ஸ் மக்கள் கையினுல் நூற்றுத் தயாரித்த துணியையே வாங்கி உடுத்துகின்றனர்.

மலிவாக இருக்கிறதா, நேர்த்தியாக இருக்கிறதா என்பதைத் தேடி அலேயாதீர்கள். உங்களுக்கு மலிவான, நேர்த்தியான துணிகள் வேண்டும் என்ருல், காலஞ் சென்ற ஜோகேஷ்

சாட்டர்ஜி செய்ததைப்போன்று நீங்களும் நேர்த்தியான நூலை நூற்கவேண்டும். இல்லாவிட்டால், அதற்காக நீங்கள் அதிகப் பணத்தைச் செலவிடவேண்டும். சுயராஜ்யம் வேண்டும் என்கிறவர்கள், மலிவு, நேர்த்தி ஆகிய இரண்டையும் அடையமுடியாது. லோகமான்யர் செய்த தியாகங்களையும், நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்று அவர் எதிர்பார்த்தார் என்பதையும் எண்ணிப் பாருங்கள். போராட்டத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் எல்லோரும் செய்ய வேண்டியிருக்கும் தியாகங்களையும் நினைத்துப் பாருங்கள். ராணி எலிஜபெத் இங்கிலாந்தில் ஆண்ட காலத்தில், அங்கே அந்நியத் துணிக்கெல்லாம் கடுமையான தீர்வை விதிக்கப்பட்டது. ஹாலந்து ஜரிகையை வாங்கினால் கடுமையான தண்டனையும் விதிக்கப்பட்டது. உங்கள் ஏழைகளை எண்ணுங்கள், அவர்கள் தயாரிக்கும் கதரை வாங்குங்கள் என்று நான் உங்களைக் கேட்பதில், அதிகமாக எதையாவது உங்களைக் கேட்கிறேனா? ஏழைகளுக்குத் தருமம் செய்து காப்பாற்றுகிறோம் என்று நீங்கள் சொல்லுவதில்லையா? மக்களில் இரண்டு ரகத்தினர் மாத்திரமே அப்படி தருமத்தைப் பெறத் தகுதியுடையவர்களேயன்றி வேறு யாரும் இல்லை. உடைமை என்பது எதுவுமே இல்லாமல், தெய்வீகமான சாஸ்திர அறிவைப் பரப்புவது ஒன்றையே தொழிலாகக்கொண்ட பிராமணர்கள் அதில் ஒரு ரகத்தினர். மற்றொரு ரகத்தினர், அங்கவீனர்களும் குருடர்களும். ஆனால், பூரிஜகநாதத்தில் நல்ல உடல் பலத்தோடிருக்கும் சோம்பேறிகளுக்குச் சோறு போடும் பாபகரமான காரியம் நடந்து கொண்டிருக்கிறது. அது நமக்கு நிரந்தரமான மானக்கேடாகவும் அவமானமாகவும் இருந்து வருகிறது. அந்த அவமானத்தைப் போக்கிக்கொண்டு விட வேண்டும் என்பதற்காகவே ராட்டை உபதேசத்துடன் நாட்டில் அங்குமிங்குமாக நான் போய்க் கொண்டிருக்கிறேன்.

—'எங் இந்தியா' – 24—2—1927

## 12

# இல்லை, உண்டு

'தோழர்' சக்லத்வாலா*, பயங்கரமான வகையில் அதிக ஆர்வத்துடனிருக்கிறார். அவர் மனப்பூர்வமாகவே அவ்வாறு

* தோழர் சக்லத்வாலா, இந்தியப் பார்ஸி சமூகத்தைச் சேர்ந்தவர். இங்கிலாந்தில் வசித்து அங்கேயே வக்கீல் தொழிலை நடத்தி வந்தார். பொதுவுடைமைவாதி. இங்கிலாந்தில் பார்லிமெண்டு தேர்தலுக்கு நின்று வெற்றி பெற்று சில காலம் பார்லிமெண்டு உறுப்பினராகவும் இருந்தார். 1927–ல் அவர் இந்தியாவுக்கு வந்திருந்த போது, மகாத்மாவின் இயக்கத்தை எதிர்த்துப் பிரசாரம் செய்தார். காந்தீய முறைகளைக் கண்டித்து ஒரு பகிரங்கக் கடிதத்தைப் பத்திரிகைகளுக்கும் விடுத்தார். இதற்கு பதிலாக மகாத்மா எழுதிய கட்டுரையே இது.

இருக்கிருர் என்பது வெளிப்படை. அவர் மகத்தான தியாகங்களைச் செய்திருக்கிருர். ஏழைகள் விஷயத்தில் அவருக்கு இருக்கும் அதிக அன்பும் மறுக்க முடியாதது. ஆகையால், அவர் எனக்கு ஆர்வத்தோடு விடுத்திருக்கும் பகிரங்க வேண்டுகோளை, உண்மையான தேசாபிமானமும் பரோபகார சிந்தனையுமுள்ள விஷயத்தில் செலுத்தவேண்டிய உன்னிப்பான கவனத்தோடு நான் கவனித்தேன். அவருடைய வேண்டுகோளுக்கு 'ஆம்' என்று பதில் சொல்லவேண்டும் என்று எனக்கு முழு ஆசையும் உண்டு. ஆனால், உண்மையானதற்கு உண்மையானதையே நான் திருப்பிச் சொல்ல வேண்டுமாயின், என் கொள்கைப்படி நான் நடப்பதாயிருந்தால், 'இல்லை' என்ற பதிலையே அவருக்கு நான் சொல்லவேண்டும். என்ருலும், என்னுடைய முறையை அனுசரித்து அவருடைய கோரிக்கைக்கு 'ஆம்' என்று நான் பதில் சொல்ல முடியும். ஏனெனில், அவருடைய நிபந்தனைப்படி நான் அவருடன் ஒத்துழைக்க வேண்டும் என்று அவர் தீவிரமாக விரும்புவதில், மறைந்திருக்கும் திட்டமான நிபந்தனை ஒன்றும் இருக்கிறது. அவருடைய வாதம் என் அறிவுக்கும் மனத்திற்கும் திருப்தியளிப்பதாக இருந்தால்தான் 'ஆம்' என்று நான் சொல்லவேண்டும் என்பதே அது. திருப்தியளித்துவிடுவதற்காக மாத்திரம் 'ஆம்' என்று சொல்லி விடுவதைவிட, மனப்பூர்வமான முடிவின் பேரில் 'இல்லை' என்று சொல்லிவிடுவது எவ்வளவோ சிறந்தது, மேலானது. சங்கடத்தைத் தவிர்த்துக்கொள்ளலாம் என்பதற்காக 'ஆம்' என்று சொல்லிவிடும் முறை இன்னும் மோசமானது.

---

மனப்பூர்வமான ஒத்துழைப்பை அளிக்கவேண்டும் என்று எனக்கு எவ்வளவோ ஆசை இருந்தும், மத்தியில் பெருஞ் சுவர் இருப்பதையே காண்கிறேன். அவர் சொல்லும் ஆதாரங்களெல்லாம் வெறும் கற்பனைகளே. அந்தக் கற்பனைகளைக்கொண்டு அவர் செய்துகொண்டிருக்கும் முடிவுகளும், அவசியமாகவே, ஆதாரமற்றவைகளாக இருக்கின்றன. இந்த ஆதாரங்கள் உண்மையானவைகளாக இருக்குமிடத்தில், அவற்ருல் விளையக்கூடிய விஷமான பலன்கள் என்று நான் எண்ணுகிறவைகளைப் போக்குவதிலேயே என் முழு கவனத்தையும் செலுத்தி வருகிறேன். நாங்கள் இருவரும் சேர முடியாமல் வெகு தொலைவில் இருந்து வருகிருேம். இதற்காக வருந்துகிறேன். என்ருலும், எங்கள் இருவருக்குமிடையே பொதுவானதாக இருக்கும் ஒரு பெரிய விஷயமும் உண்டு. நாட்டின், மனித வர்க்கத்தின் நன்மை ஒன்றையே லட்சியமாகக்கொண்டிருப்பதாக நாங்கள் இருவரும் சொல்லிக்கொள்ளுகிருேம். ஆகையால், இச்சமயத்திற்கு நாங்கள் இருவரும் வெவ்வேறு திக்கில் போய்க்கொண்டிருப்பதாகத் தோன்றினுலும், ஒரு நாளைக்கு நாங்கள் சந்தித்துவிடுவோம் என்றே நான் எதிர்பார்க்கிறேன். என் தவறை நான் கண்டுகொண்டால், போதிய அளவுக்குத் திருத்திக்கொண்டு விடுவேன் என்று உறுதி கூறுகிறேன். என்ருலும், இதற்கு மத்தியில் தவறு

என்று எனக்குத் தோன்றுதவையான என் தவறுகளே, எனக்குப் பாதுகாப்பு அளிப்பவைகளாகவும், ஆறுதல் அளிப்பவைகளாகவும் இருந்து வரவேண்டும்.

ஏனெனில், தேவைகளைப் பெருக்கிக்கொண்டே போய், அந்தத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக யந்திரங்களை அமைத்துக் கொண்டு போவதும் லட்சியத்தை அடையும் வழியில் முன்னேறிப் போவதாகும் என்று 'தோழர்' சக்லத்வாலா நினைப்பது போல நான் நினைக்கவில்லை. இன்றைய} வேகமான போக்கே மிகச் சரியானது என்று 'தோழர்' சக்லத்வாலா உறுதியாக நம்புகிறார். தூரத்தையும் நேரத்தையும் அழித்து விடுவதற்கும், மிருகப் பசிகளை அதிகரித்துக் கொள்ளுவதற்கும், அந்தப் பசியைத் தீர்த்துக் கொள்ளுவதற்காக உலகின் எந்தக் கோடிக்கும் போகத் தயாராக இருப்பதற்கும் கொள்ளும் இந்த வெறி பிடித்த ஆசையை நான் மனதார வெறுக்கிறேன். இக்கால நாகரிகம் அப்படித்தான் இருக்கிறது என்று நான் புரிந்து கொண்டிருக்கிறேன். இந்த நாகரிகம் அதற்காகத்தான் இருக்கிறது என்றால், இதைச் சைத்தான் நாகரிகம் என்றே சொல்லுவேன். இந்த நாகரிகத்தையே பின்பற்றி வருவதாக இருக்கும் இப்பொழுதுள்ள அரசாங்க முறையும் அப்படிப்பட்டது என்று நான் சொல்லுவேன். ஏழை மக்களின் நிலையை உயர்த்துவதற்கு என்று சொல்லி அது வகுக்கும் திட்டங்களில் எனக்கு நம்பிக்கை இல்லை; அதன் நாணயச் செலாவணி சீர்திருத்தத்திலும் எனக்கு நம்பிக்கை இல்லை; அதன் ராணுவத்தையும் கடற்படையையும் சந்தேகிக்கிறேன். நாகரிகம் என்பதன் பெயராலும், தன் சொந்த பாதுகாப்பு என்பதன் பெயராலும், இந்த அரசாங்கம் பாமர மக்களின் ரத்தத்தைத் தொடர்ந்து உறிஞ்சிக்கொண்டு வந்திருக்கிறது. அது மக்களை அடிமைப் படுத்தியிருக்கிறது. பலமுள்ளவர்களுக்குக் கௌரவத்தையும் செல்வத்தையும் லஞ்சமாகக் கொடுத்து அது வசப்படுத்திக் கொண்டிருக்கிறது. புகழ்ச்சியைக் கொண்டோ, செல்வங்களைக் கொண்டோ வசப்படுத்திவிட முடியாதவர்களை, விடுதலையை விரும்பும் தேச பக்தர்களை, எதேச்சாதிகாரமான கொடுஞ் சட்டங்களைக்கொண்டு நசுக்கிவிடவும் முற்பட்டிருக்கிறது. எனக்கு சக்தி மாத்திரம் இருக்குமாயின், இந்த ஆட்சி முறையை நான் இன்றே அழித்து விடுவேன். மிகவும் பயங்கரமான ஆயுதங்களைக் கொண்டு இதை அழித்துவிட முடியும் என்று நான் நம்பினால், அத்தகைய ஆயுதங்களையும் நான் உபயோகிப்பேன். ஆனால், அந்த ஆயுதங்கள், இந்த அரசாங்கத்தில் இப்பொழுதிருக்கும் நிர்வாகிகளை அழித்துவிடும் என்றாலும், அந்த ஆட்சி முறை நிரந்தரமாக இருந்து வரும்படியே செய்யும். இதனாலேயே அந்த ஆயுதங்களை நான் உபயோகிக்காமல் இருக்கிறேன். மனிதரோடு அவர்களுடைய போக்கும் செத்துவிடும் என்ற தவறான எண்ணத்தின் பேரில், மனிதர்களின் போக்கை அழிப்பதற்குப் பதிலாக மனிதரையே அழித்துவிட முற்படுகிறவர்கள், பயங்கர

மான ஆயுதங்களை உபயோகிக்கிறார்கள். இதனால், யாரை அழித்தார்களோ அவர்களைவிட தாங்களே அதிக மோசமானவர்களாகிவிடுகின்றனர். தீமையின் வேர் எங்கிருக்கிறது என்பது அவர்களுக்குத் தெரிவதில்லை.

ஆன்மாவே இல்லாத ஆட்சி முறையைப் பலாத்காரத்தைக் கொண்டு மாற்ற முற்பட்டு, அதனால் நாமும் ஆன்மா இல்லாதவர்களாகிவிட முடியாது. ஆனால், அந்த முறைக்குப் பலியாகிவிடாமல், அதாவது, சைத்தான் விரித்திருக்கும் வலையில் சிக்க வைத்துவிடக் காட்டப்படும் ஒவ்வொரு முயற்சிக்கும் 'முடியாது' என்று கண்டிப்பாகக் கூறி நாம் ஒத்துழையாமை செய்வதனாலேயே, ஆட்சி முறையை நம்மால் மாற்ற முடியும். இதைக் காட்டுவதற்கு என்றே 1920-ஆம் வருடத்திய இயக்கம் உருவாக்கப்பெற்றது.

அந்த இயக்கம் நடப்பதில் ஒரு தடை ஏற்பட்டது. ஆனால், அது செத்துவிடவில்லை. நான் நிபந்தனை கூறியே வாக்குறுதி அளித்தேன். அந்த நிபந்தனைகள் சாதாரணமானவை, எளிதானவை. ஆனால், இயக்கத்தில் முக்கிய பங்கு வகித்தவர்களுக்கு, அந்த நிபந்தனைகளை நிறைவேற்றுவது அதிகக் கஷ்டமானதாகிவிட்டது.

என்னுடைய தவறு என்றும், தோல்வி என்றும் 'தோழர்' சக்லத்வாலா எவற்றைக் கூறுகிறாரோ அவை, என் பலத்தையும் ஆழ்ந்த உறுதியையும் காட்டுகின்றன என்று நான் கருதுகிறேன். அது தவறாகவே இருக்கலாம். ஆனால், அதில்தான் உண்மை இருக்கிறது என்ற நம்பிக்கை எனக்கு இருக்கும் வரையில், அது செய்து வருவது போல, அத்தவறே எனக்கு ஊக்கமளித்தும் வருகிறது. பர்டோலியில் நான் முன் வைத்த காலைப் பின் வாங்கியது* அறிவு மிக்கச் செய்கை, நாட்டிற்கு மகத்தானதோர் சேவை என்று நான் கொள்ளுகிறேன். அந்த முடிவினால் அரசாங்கம்தான் மேலும் பலவீனமடைந்தது. வைசிராய்க்கு நான் விடுத்த இறுதி எச்சரிக்கை என்று கருதப்பட்ட முறைகளின் படி, சௌரி சௌராவுக்குப் பிறகும் நான் பிடிவாதமாகச் செய்து கொண்டு போயிருந்தால், அரசாங்கம் தான் இழந்துவிட்ட நிலையையெல்லாம் திரும்ப அடைந்திருக்கும்.

---

* 1922 ஜனவரி 21-ஆம் தேதி காங்கிரஸ் காரியக் கமிட்டி சூரத்தில் கூடி சட்ட மறுப்புப் போராட்டத்தை ஆரம்பிக்க சூரத் ஜில்லாவின் பர்டோலி தாலூக்காவுக்கு அனுமதி அளித்தது. பிப்ரவரி 1-ந்தேதி வைசிராய்க்கு மகாத்மா விடுத்த இறுதி எச்சரிக்கையில், 'பர்டோலி தீர்மானம் முடிவானது, மாற்ற முடியாதது' என்றும் எழுதினார். ஆனால், இந்நிலையில் வங்காளத்தில் சௌரி சௌரா என்ற இடத்தில் நடந்த தேசிய ஊர்வலத்தினர், போலீஸ் ஸ்டேஷனைத் தாக்கி பல போலீஸ்காரர்களைக் கொன்று விட்டார்கள் என்ற சம்பவத்தை மகாத்மா அறிந்ததும், சட்ட மறுப்புக்கான பக்குவத்தை நாடு இன்னும் அடையவில்லை என்று கூறி பர்டோலி சத்தியாக்கிரகத்தை நிறுத்திவிட்டார். இதில் தாம் பின் வாங்கியதையே மகாத்மா இங்கே குறிப்பிடுகிறார்.

தென்னாப்பிரிக்க இயக்கம் ஒரு தோல்வி என்று என் 'தோழர்' சொல்லுவது தவறானதாகும். அது தோல்வியாக இருந்திருக்குமாயின், என் வாழ்க்கை முழுவதையும் தோல்வி என்றே எழுதிவிடவேண்டும். அப்பொழுது, தம்முடைய கொடியின்கீழ் வந்து சேர்ந்து கொள்ளும்படி அவர் என்னை அழைப்பதையும் அர்த்தமில்லாததாகவே கொள்ளவேண்டும். என் வாழ்க்கையின் பணியில், தென்னாப்பிரிக்கா ஆரம்பத்தை உண்டாக்கியது. போன யுத்தத்தின்போது, அப்பொழுது எனக்கு இருந்த நம்பிக்கையின் பேரில், என் சேவையையும் என் சகாக்களின் சேவையையும் வைத்தியப் படைத் தொண்டர்களாக அளித்துக் கொண்டது தவறு என்று இன்றும் நான் கருதவில்லை.

இப்பெரிய பார்லிமெண்டு மெம்பர், மிகவும் அவசரப்படுகிறார். உண்மைகளை ஆராய்ந்து பார்க்கவே வெறுக்கிறார். கதர் இயக்கம் இப்பொழுது தேய்ந்துகொண்டு போகவில்லை என்பதை அவருக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். 1920-இல் அது செய்ததைவிட, சென்ற ஆண்டு அது குறைந்தது இருபது மடங்கு வேலையையாவது செய்திருக்கிறது. இப்பொழுது அது 1,500 கிராமங்களில் 56,000-க்குக் குறையாத நூற்போருக்குப் பயனளித்து வருகிறது. இவர்களல்லாமல் நெசவாளர்கள், சலவை செய்வோர், அச்சுப்போடுகிறவர்கள், சாயம் போடுகிறவர்கள், தையற்காரர்கள் முதலானவர்களும் அநேகர் பயனடைந்திருக்கிறார்கள்.

கதர் எதற்காக இருக்கிறது என்று ஸ்ரீ சக்லத்வாலா கேட்கிறார். ஆடம்பரத்திற்கு அல்ல, எளிமைக்குச் சின்னமாகக் கதர் இருக்கிறது. அதை உடுத்தும் ஏழைகளுக்கு அது பொருத்தமானதாக இருக்கிறது. பணக்காரர்கள், மிகச் சிறந்த கலைஞர்கள், பெண்கள் ஆகியோரின் உடல்களை அலங்கரிப்பதாகப் பண்டைக் காலத்தில் கதர் செய்யப்பட்டதைப் போன்று இப்பொழுதும் அது செய்யப்படலாம். புராதனக் கலைக்கும் கைத்தொழிலுக்கும் புத்துயிர் அளிப்பதுதான் அது. எல்லா யந்திரங்களையும் அழித்துவிட அது முற்படவில்லை. ஆனால், யந்திரங்களின் உபயோகத்தைக் கதர் ஒழுங்குபடுத்தி, அவை களைகளைப் போன்று வளர்ந்து விடுவதையும் தடுக்கிறது. அதிக ஏழைகளாக இருப்பவர்களுக்கு, அவர்களுடைய குடிசைகளிலேயே சேவை செய்ய அது யந்திரத்தை உபயோகிக்கிறது. ராட்டையே அதனளவில் அரியதோர் யந்திரம்தான்.

ஏழைகளைப் பணக்காரர்களின் தளைகளிலிருந்து கதர் விடுவிக்கிறது. படித்தோருக்கும் பாமரருக்குமிடையே ஒழுக்க, ஆன்மிக பந்தத்தையும் அது உண்டாக்குகிறது. ஏழைகளிடமிருந்து பணக்காரர்கள் எடுத்துக்கொண்டுவிட்டதில் கொஞ்சம், அந்த ஏழைகளுக்குத் திரும்பக் கிடைக்கும்படியும் கதர் செய்கிறது. கதர், எந்த ஒரு கிராமக் கைத்தொழிலையும் போக்கிவிடவில்லை; இதற்கு மாறாக, மற்ற கிராமக் கைத்தொழில்களுக்

கெல்லாம் கதர் நடுநாயகமாகி வருகிறது என்பது தினமும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. குடும்ப வாழ்வு சிதைந்து போய்விட்ட விதவைகளின் வாழ்வில் நம்பிக்கை ஒளியைக் கதர் அளிக்கிறது. ஆனால், அவர்களால் முடிந்தால், அதிகம் சம்பாதித்துக்கொள்ளு வதைக் கதர் தடுக்கவில்லை. அதைவிட அதிக வருவாயுள்ள தொழிலைச் செய்வதிலிருந்து அது யாரையும் தடுத்துவிடவில்லை. எந்த வேலையுமே இல்லாமலிருப்பவர்களுக்குக் கௌரவமான ஒரு பிழைப்பைக் கதர் அளிக்கிறது. நாட்டு மக்கள் சோம்பிக் கழிக்கும் நேரத்தை அது பயன்படுத்திக்கொள்ளுகிறது. இன்னும் அதிக வருவாயைத் தரும் வேலையைக் கொடுப்பதாகச் சொல்லுவோரின் வேலையை, மதிப்பு மிக்க 'தோழர்' பெருமையுடன் எடுத்துக் காட்டுகிறார். கதர், அதைத் தானே செய்கிறது என்பதை அவர் அறியட்டும். ஒரு சிலருடைய பைகளில் ரூபாயைப் போடாமல் ஏழைகளின் பைகளில் அணுக்களை அது போடமுடியாது. தங்கள் வேலைகளை நகரங்களில் ஆரம்பிக்கிறவர்கள், நல்ல வேலையையே செய்து வருகிறார்கள் என்பதில் சந்தேகமில்லையென்றாலும் இப்பிரச்னையின் விளிம்பை மாத்திரமே அவர்கள் தொட்டிருக்கிறார்கள். கதரோ, பிரச்னையின் கேந்திரத்தையே தொடுவதால், அவசியமாகவே மற்றவைகளும் அதில் சேர்ந்து விடுகின்றன.

ஆனால், ஆத்திரப்படும் இந்தக் கம்யூனிஸ்டின் கடிதம் முழுவதும், கவனத்தையெல்லாம் நகரங்களின் மீதே செலுத்துகிறது. இதனால் இந்தியாவையும், அதன் ஏழு லட்சம் கிராமங்களிலேயே காணப்படுவதாயிருக்கும் இந்தியாவின் நிலைமைகளையும் அது அலட்சியம் செய்துவிடுகிறது. இக்கால நாகரிகத்தைக் கொண்டிருக்கும் அரை டஜன் நகரங்கள், அனாவசியமான அழிவின் வளர்ச்சிகள். அவை, இப்போதைக்குக் கிராமங்களின் ஜீவ ரத்தத்தை உறிஞ்சும் தீய காரியத்தையே செய்துகொண்டிருக்கின்றன. அந்த வேலையை மாற்றி, மாறுபட்டதாகச் செய்வதோடு, நகரங்களுக்கும் கிராமங்களுக்குமிடையே நல்லுறவு ஏற்படும்படி செய்யவும் கதர் முயன்று வருகிறது. வெறுக்கத்தக்க தவறுகளைக் கொண்ட நகரங்கள், கிராமவாசிகளின் வாழ்வுக்கும் சுதந்திரத்திற்கும் இடையறாத ஆபத்தாக இருந்து கொண்டிருக்கின்றன.

கதர், அதனிடம் மிகப் பெரிய நிர்வாக சக்தியைக் கொண்டது. ஏனெனில், அது தன்னைத் தானே நிர்வகித்துக்கொள்ள வேண்டியதாக இருப்பதோடு அகில இந்தியாவிலும் அது இயங்குவதாகவும் இருக்கிறது. கதர் வானத்திலிருந்து பொழிவதாக இருந்தால், அது கேடாக முடிந்துவிடும். ஆனால், பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களும், ஆயிரக்கணக்கான மத்திய தர வகுப்பு ஆண்களும் பெண்களும், விரும்பி ஒத்துழைத்து உற்பத்தி செய்தாக வேண்டியதாக கதர் இருக்கிறது. இதனால், அதன் வெற்றி, சமாதான முறையில் சிறந்த கூட்டமைப்பு என்றாகிறது. சமையலுக்குப் புத்துயிரளிக்க வேண்டி

யிருந்தால், இதே போன்ற கூட்டமைப்பே அதற்கு வேண்டியிருந்தால், கதருக்கு என்ன பெருமை இருக்கிறது என்று சொல்லுகிறேனே அதே பெருமை அதற்கும் இருக்கிறது என்பேன்.

ஜாம்ஷெட்பூர் தொழிலாளரிடையே நான் செய்யும் வேலைகளைக் குறித்து என் கம்யூனிஸ்டு தோழர் குறை கூறுகிறார். ஏனெனில், டாட்டாக்களிடமிருந்து உபசாரப் பத்திரத்தை நான் பெற்றுக்கொள்ளாமல் ஜாம்ஷெட்பூரில் தொழிலாளரிடமிருந்து அதைப் பெற்றுக்கொண்டதற்காகக் குற்றங்கூறுகிறார். காலஞ்சென்ற ஸ்ரீதரன் டாட்டா, அக்கூட்டத்திற்குத் தலைமை வகித்ததற்காகவே அவர் ஆட்சேபிக்கிறார் என்று எண்ணுகிறேன். அந்தக் கௌரவத்தைப் பெற்றதற்காக நான் வெட்கப்படவில்லை. ஸ்ரீ டாட்டா, காருண்யமுள்ள, அன்புள்ள முதலாளியாகவே எனக்குத் தோன்றினர். தொழிலாளரின் கோரிக்கைகளுக்கெல்லாம் அவர் உடனே ஒப்புக்கொண்டு விட்டார் என நினைக்கிறேன். ஒப்புக்கொண்டவை கௌரவமாக நிறைவேற்றப்பட்டன என்றும் பிறகு கேள்விப்பட்டேன். என்னுடைய வேலைகளுக்காக நன்கொடைகளைக் கேட்கிறேன்; பணக்காரர்களிடமிருந்தும் ஏழைகளிடமிருந்தும் வாங்கிக்கொண்டு வருகிறேன். பணக்காரர்கள் நன்கொடைகளை மகிழ்ச்சியுடன் எனக்குக் கொடுக்கின்றனர். இது என் சொந்த வெற்றி அல்ல. நான் கடைப்பிடிக்க முயன்று வரும் அகிம்சை, அரை குறையானதாகவே இருந்தாலும், அந்த அகிம்சையின் வெற்றியே இது. நான் யாருடைய தத்துவங்களையும் கொள்கைகளையும் எதிர்க்கிறேனே அவர்களிடம், பொதுவாக அன்பையும் நம்பிக்கையையும் மாத்திரம் விடாமல் வைத்துக்கொண்டிருப்பதுதான் எனக்கு நிரந்தரமான திருப்தியை அளிப்பதாக இருந்து வருகிறது. தென்னுப்பிரிக்கர்கள் என்னிடம் சொந்த முறையில் நம்பிக்கை வைத்தார்கள்; நட்புக் கொண்டார்கள். பிரிட்டிஷ் கொள்கையையும் முறையையும் நான் கண்டித்த போதிலும், ஆண்களும் பெண்களுமாக ஆயிரக்கணக்கான ஆங்கிலேயர்களின் அன்பை நான் அனுபவித்து வருகிறேன். சுகத்தையே தேடுவதாக இருக்கும் இக்கால நாகரிகத்தை மிகக் கடுமையாக நான் கண்டித்து வந்தபோதிலும், என் ஐரோப்பிய, அமெரிக்க நண்பர்களின் தொகை அதிகமாகிக்கொண்டு போகிறது. இவையெல்லாம்கூட அகிம்சையின் வெற்றிதான்.

கடைசியாக நகரங்களிலிருக்கும் தொழிலாளரைப் பற்றிய விஷயத்திற்கு வருந்துகிறேன். இதில் தவருன அபிப்பிராயம் எதுவும் வேண்டாம். தொழிலாளர்கள் ஸ்தாபன ரீதியில் ஒன்றுபடுவதை நான் எதிர்க்கவில்லை. ஆனல், மற்ற எல்லாவற்றையும் போலவே இதிலும் அதன் அமைப்பு இந்திய முறையில் இருக்க வேண்டும். நீங்கள் விரும்பினல் என் முறையில் இருக்கவேண்டும் என்றுதான் விரும்புகிறேன். அதையே நான் செய்துவருகிறேன். இந்தியத் தொழிலாளர்கள் இயல்பாகவே இதை அறிவார்கள்.

முதலாளிகள், தொழிலாளருக்கு 'விரோதிகள் என்று நான் கருதவில்லை. அவர்களுடைய ஒத்துழைப்பு முற்றிலும் சாத்தியம் என்றும் கருதுகிறேன். தென்னாப்பிரிக்காவிலோ, சம்பரானிலோ, அகமதாபாத்திலோ நான் மேற்கொண்ட தொழிலாளர் ஸ்தாபனங்கள், முதலாளிகளுக்கு விரோதமான உணர்ச்சியைக் கொண்டவை அல்ல. ஒவ்வொன்றின் விஷயத்திலும், எதிர்ப்பு அவசியம் என்று கருதப்பட்ட அளவுக்கு, முற்றிலும் வெற்றிகரமானதாகவே முடிந்தது. சொத்து சமமாக வினியோகிக்கப்பட வேண்டும் என்பது என் லட்சியம். ஆனால், எனக்குப் புலனாகிற வரையில் அது கைகூடுவதாக இல்லை. ஆகையால், சமமான வினியோகத்திற்காக நான் வேலை செய்கிறேன். இதைக் கதரின் மூலம் அடைந்துவிடப் பார்க்கிறேன். இதை அடைவதற்குப் பிரிட்டிஷ் சுரண்டலை அதன் தலைமை ஸ்தானத்தில் சக்தியற்றதாகச் செய்துவிட வேண்டியிருப்பதால், பிரிட்டிஷ் உறவைப் புனிதப்படுத்த முயற்சிக்கப்படுகிறது. எனவே, கதர் அந்த வகையில் சுயராஜ்யத்திற்கு வழி செய்கிறது.

என் மகாத்மா பட்டத்தை அதன் கதிக்கே நான் விட்டுவிட வேண்டும். நான் ஒத்துழையாமைக்காரன் தான். என்றாலும், என்னை மகாத்மா என்று அழைப்பதையும், என் பாதங்களைத் தொட்டு வணங்குவதையும், பெரிய குற்றம் என்று செய்துவிட ஒரு மசோதா கொண்டு வந்தால், அதற்கு நான் சந்தோஷமாக ஆதரவு அளிப்பேன். சட்டத்தை நானே விதிக்கக் கூடிய இடத்தில், அதாவது ஆசிரமத்தில், இப்பழக்கம் குற்றமே.

—'எங் இந்தியா' 17—3—1927

# 13

# லங்காஷயர் தடை

தீர்வை விதிப்பு போர்டின் அறிக்கையை வெளியிடுவதில் அதிகக் காலதாமதம் செய்யப்படுகிறது. பெரியதான இந்திய மில் தொழிலுக்கு மேற்கொண்டும் பாதுகாப்பை அளிக்கும் சிபாரிசு அநேகமாக நிராகரிக்கப்பட்டுவிடுவது நிச்சயம் என்பதற்கு இத்தாமதம் அறிகுறியாகிறது. ஜப்பானுக்கு எதிராக நடந்து, லங்காஷயருக்குச் சாதகமாக பாரபட்சம் காட்டி, ஜப்பானின் விரோதத்தை அரசாங்கம் சம்பாதித்துக்கொள்ளாது. லங்காஷயரின் மீது பாதுகாப்புத் தீர்வையை விதித்து, அதன் அதிருப்தியைத் தேடிக் கொள்ளவும் அரசாங்கம் துணியாது. ஏனெனில், லங்காஷயருக்கு எதிராக இந்தியாவுக்குச் சரியான பாதுகாப்பை அளிப்பதென்பது, அதற்குத் தற்கொலை செய்து கொள்ளுவதைப் போன்றதே ஆகும்.

லங்காஷயர், மற்ற அந்நிய நாடுகளின் போட்டிக்கு எதிராக இந்திய ஜவுளி மில் தொழிலுக்குப்பாதுகாப்பு அளிக்கும் விஷயம், இருப்பதா, சாவதா என்ற பிரச்னையாக லங்காஷயருக்கு எப்படி இருக்கக்கூடுமோ அதே போன்று இந்தியாவுக்கும் இது இருப்பதா, சாவதா என்ற பிரச்னை. இதிலிருக்கும் உண்மையைத் தெரிந்துகொள்ளுவதற்கு இறக்குமதிப் புள்ளி விவரங்களை ஒருவர் பார்த்தாலே போதும். லங்காஷயரிலிருந்து இறக்குமதியாவது, மற்றெல்லா இறக்குமதிகளையும் விட அதிகம். எல்லா பிரிட்டிஷ் இறக்குமதியிலும் பாதி லங்காஷயரிலிருந்து இறக்குமதியாகிறது. இந்தியாவின் மிகப்பெரிய கிராமக் கைத்தொழிலைச் சுட்டெரித்துவிட்டு அந்தச் சாம்பலில் லங்காஷயர் வளர்ந்திருக்கிறது. இந்நாட்டிலிருக்கும் கதியற்ற கோடிக்கணக்கான மக்களைச் சுரண்டுவதன் மூலம் அது வாழ்ந்தும் வருகிறது. தங்கள் காரியத்தில் அனாவசியமாகத் தலையிடுவதாக இருப்பதாகவே இந்திய ஜவுளி மில் தொழில் என்றும் உண்மையில் கருதப்படுகிறது. லங்காஷயரின் நன்மையை முன்னிட்டு இந்திய மில் தொழிலை நல்லபடியாகவே நசுக்கிவிட முடிந்தால், அதைப்பற்றிக் கவலைப்படாமல் நசுக்கியே விடுவார்கள். லங்காஷயரின் முக்கியமான நன்மை என்ற விஷயத்தில், ஒழுக்கம் என்பதைப் பற்றிப் பொருட்படுத்திக்கொண்டிருப்பதே இல்லை. அந்தத் தொழில் இருந்து கொண்டிருப்பது, லங்காஷயர், இந்தியா ஆகிய இரண்டுக்கும் தீமை விளைவித்து வருகிறது. அது, இந்தியாவை ஓட்டாண்டியாக்கிவிட்டது; இந்தியாவில் மிகுந்துவிட்ட ஏழ்மை லங்காஷயரை ஒழுக்க சூன்யமாக்கிவிட்டது.

இந்தியாவிலிருக்கும் மில் சொந்தக்காரர்கள், இந்திய மக்களின் நன்மையே தங்களுடைய நன்மை என்று தைரியமாகக் கொண்டு, பாதுகாப்பு அளிக்கும்படி அரசாங்கத்தைக் கட்டாயப் படுத்தினாலன்றி, அநேகமாகத் தாண்ட முடியாததாகவே இருந்து வரும் இத்தடையை எதிர்த்து மில்காரர்கள் தங்கள் நிலைமையைச் சரி செய்துகொண்டுவிட என்றுமே முடியாது. பாதுகாப்பைப் பெறுவது நாட்டிற்குள்ள உரிமை. ஒரு நாட்டிற்கு, அதில் வாழ்வோர் யாராக இருக்கவேண்டும் என்பதை நிர்ணயித்துக் கொள்ளவும், தன் வாழ்வுக்கு அபாயமானவர்கள் என்று தான் கருதுகிறவர்களை விலக்கிவிடவும் உரிமை உண்டு என்றால், தன் எல்லைக்குள் இறக்குமதி செய்யப்படும் பொருள்கள் எவையாக இருக்கவேண்டும் என்பதை நிர்ணயித்துக்கொள்ளுவதிலும் அந்நாட்டுக்கு அதிக உரிமை உண்டு. தன் மக்களுக்குத் தீமை விளைவிக்கக்கூடியவை என்று தான் எண்ணும் பொருள்களை விலக்கிவிடவும் அந்நாட்டுக்கு உரிமை உண்டு.

நம் நாட்டில் இறக்குமதியாகும் பொருள்கள் எல்லாவற்றிலும் அந்நியத் துணியே அதிகத் தீமையானது என்பதில் எவ்விதமான சந்தேகமும் இருப்பதற்கு இல்லை. இந்திய ஜவுளி மில் தொழில், எப்படியோ கொஞ்ச காலத்திற்கு சுபிட்சமடையக் கூடும். பலவித மாயங்களினாலோ, அல்லது சாதக

மான எதிர்பாராத சம்பவங்களினுலோ, தாற்காலிகமான சுபிட்சம் இருப்பதாகவும் தோன்றக்கூடும். ஆனுல், எல்லா அந்நியத் துணிகளுக்கும் எதிராக அது சரியான பாதுகாப்பைப் பெற்ருலன்றி, சீக்கிரத்திலோ, அல்லது கொஞ்ச காலம் கழித்தோ அது அழிந்து போய்விடவே நேரும். எதிர்பார்ப்பதற்கு அதிக சீக்கிரத்திலேயே அது நிச்சயம் அழிந்துவிடும் என்ருே ஒரு நாளைக்கு உண்மையான, நிலையான பொதுஜன விழிப்பு ஏற்பட்டே தீரும். அந்த விழிப்பு பைத்தியக்காரத்தனமாகவும், கட்டுப்பாடற்றதாகவும் இருக்கக்கூடும். ஆனுல், பைத்தியக்காரத்தனத்திலும் கட்டுப்பாடுடையதாகவோ, அல்லது நான் நம்புகிறபடி கட்டுப்பாடுள்ளதாகவும் அகிம்சை முறையில் அமைக்கப்பட்டதாகவும் அது இருக்கவும் கூடும். அந்த நிலைமை வரும்போது உள்நாட்டு மில் தொழில் தங்களுக்குச் சொந்தமானதாக பொது மக்களின் அங்கீகாரத்தைப் பெற்றிருந்தாலன்றி, அந்நியத் துணியை எரிக்கும் தீயில் இதுவும் அழிந்து போகும். மில் சொந்தக்காரர்கள், கதரின் லட்சியத்துடன் தாங்களும் ஒன்றுபட்டு பாதுகாப்பு அளிக்க விரும்பாத அரசாங்கத்தினிடமிருந்து அதைப் பறித்துக் கொள்ளுவதற்கான சமயம் இதுதான். கதருக்கும் மில்லுக்குமுள்ள எல்லையை வகுத்து, அதைக் கண்டிப்பாக மதித்து நடப்பதாகவுமிருந்தால், பல வருட காலத்திற்கு இரண்டுக்கும் போதிய இடம் உண்டு. அரசாங்கம் அசட்டையாக இருந்தாலும், அதன் விஷமத்தனமான எதிர்ப்பு இருந்தாலும், அவர்கள் அப்பொழுது சுபிட்சமாக இருப்பதற்குச் சாத்தியம் உண்டு. ஆனுல், இதற்கு மில் சொந்தக்காரர்கள் முதலில் புத்திசாலித்தனமான தியாகத்தைச் செய்வதோடு, தங்களுக்குள் சக்தி வாய்ந்த வகையில் ஒற்றுமையடைந்து, தங்களுடைய வேலைத் திட்டத்தை நிறைவேற்றி வைப்பதில் திடமான உறுதியையும் கொள்ள வேண்டும்.

அரசாங்கம் செய்த முடிவுக்கு ஒரு பதிலாக, மில் தொழிலாளரின் கூலியைக் குறைப்பதென்று யோசித்திருக்கிருர்கள் என்ற வதந்தியை அதிகார பூர்வமாக மில்காரர்கள் மறுத்திருப்பதைக் கண்டு மகிழ்ச்சியடைகிறேன். அப்படிக் கூலியைக் குறைத்திருந்தால், அது தற்கொலை செய்து கொள்ளுவதாகியிருக்கும். மில் தொழிலாளருடன் ஒன்றுபட்டு, மில்களின் பங்குதாரர்களும் ஏஜெண்டுகளும் எப்படி மில்களின் சொந்தக்காரர்களோ அதே போல மில் தொழிலாளரும் மில்களின் சொந்தக்காரர்களே என்று கருதவேண்டியதுதான் இச்சமயத்திற்கு வேண்டியதேயன்றித் தொழிலாளரைப் பகைத்துக் கொள்ளுவது அல்ல. பங்குதாரர்கள் பணத்தைக் கொடுக்கிருர்கள் என்ருல், அப்பணத்தைத் துணியாக மாற்றுவதற்கு வேண்டிய உடலுழைப்பைத் தொழிலாளர்கள் அளிக்கிருர்கள். ஆகையால், மில் சொந்தக்காரர்கள், மில் தொழிலாளர்கள், பொதுமக்கள் ஆகியவர்களைக் கொண்ட இணைப்பு, எதிர்க்க முடியாததான இணைப்பாக இருக்கும். இதை அலட்சியம் செய்துவிட அரசாங்கமும் துணியாது. இக்

காரியத்திற்கு வேண்டிய முன்யோசனையும், தைரியமும், தேசாபிமானமும் மில் சொந்தக்காரர்களுக்கு இருக்குமா? ரூபாய்க்கு ஒரு ஷில்லிங் 6 பென்ஸ் என்ற நாணய மாற்று விகிதம், இப்பெரிய தொழிலுக்கு ஓர் அடி என்றும், லங்காஷயருக்கு அது ஒரு நன்கொடை என்றும் சொல்லப்படுகிறது. அப்படிச் சொல்வதில் அதிக அளவு நியாயமும் உண்டு. தீர்வை போர்டு அறிக்கையின் மீது அரசாங்கம் செய்திருக்கும் முடிவும் அதே போல மற்ருேர் பலத்த அடியாவதோடு அதனுல் லங்காஷயருக்கு இன்னுமொரு நன்கொடை அளித்ததுமாகிறது. இந்தக் கடைசி அடியாவது மில் சொந்தக்காரர்களேச்சரியான நடவடிக்கையில் இறங்கும்படித்தூண்டிவிடாதா என்று நான் எண்ணுகிறேன். பொதுஜன நடவடிக்கைகளின் ஆதரவும் இருந்தாலன்றி, மனுச் செய்துகொள்ளுவதோ, அல்லது சட்டசபையில் தீர்மானம் நிறைவேற்றுவதோ எந்தவிதமான பயனேயும் அளிக்காது. நான் கூற முற்பட்டிருக்கும் பொதுஜன நடவடிக்கையை விட லேசானதாக ஒரு நடவடிக்கையை எண்ணுவதும் சாத்தியமில்லே என்பதே என் பணிவான கருத்து.

—'எங் இந்தியா' – 23—6—1927

# 14

# கலாச்சார நூற்பு

'ஸ்காட்ச்மன்' பத்திரிகையின் ஏப்ரல் 21-ந் தேதி இதழிலிருந்து ஒரு விஷயத்தைக் கத்தரித்து ஆங்கில நண்பர் ஒருவர் எனக்கு அனுப்பியிருக்கிருர். 'தாள நயத்தின் சிறப்பு' என்ற தலேப்பைக் கொண்டது, அது. எடின்பரோவில் உபாத்தியாயர்களின் கைத்தொழில் பள்ளியின் ஆதரவில் ஈஸ்டர் மகாநாட்டின் போது நடந்த ஒரு நூற்புக் காட்சியின் விவரம் அதில் கூறப்பட்டிருக்கிறது. அக்கூட்டத்திற்கு ஸ்ரீ ஜான் கன் தலேமை வகித்தார். ஸ்ரீ வில்லியம் கிர்க்னஸ் எப். எஸ். ஏ. (ஸ்காட்) நூற்றுக் காட்டிப் பிரசங்கமும் செய்திருக்கிருர். இதைக் குறித்து 'ஸ்காட்ச்மன்' பத்திரிகையில் வெளியாகியிருக்கும் ருசிகரமான விவரத்தைக் கீழே அப்படியே கொடுக்கிறேன்:

"நூற்பதும் நெய்வதும், ஆரம்ப காலம் முதற்கொண்டே மிகவும் முக்கியமான வீட்டுத் தொழிலாக இருந்து வந்திருக்கின்றன என்று ஸ்ரீ கிர்க்னஸ் கூறினர். ஆதிகாலத்தில் பெனலோப்பும் அராச்னே என்ற மாதும் நூற்ருர்கள் என்று பழைய கிரேக்க இதிகாசங்களில் கூறப்பட்டிருக்கிறது என்ருர். சரித்திர காலத்திற்கும் முந்தியதான நூற்பு வரலாற்றையும் எடுத்துக் கூறினர். ஆரம்ப காலத்தில் மனிதன் காற்றின் செயலேத் தானும் பின்பற்றி நூல் நூற்கக் கற்றுக்கொண்டான் என்ருர். பிறகு நாளாவட்டத்தில் நூற்பதற்கு ராட்டை போன்ற கருவிகள் எவ்வாறு உரு

வாயின என்பதையும் எடுத்துக் காட்டினர். கம்பளியை நெய்வதற்கு முன்னல் ரோமத்தை அடித்துப் பட்டை போட்டுவந்த பல விதங்களையும் அவர் செய்து காட்டினர். பிறகு பின்னுவதற்கு வேண்டிய கம்பளி நூலைத் தயாரித்ததோடு கையினல் நெய்யும் கட்டங்களையும் செய்து காட்டினர். மேடைமீது அமைந்திருந்த பல வகையான கைத்தறிகளிலும் பிரசங்கியார் தாமே நெய்தும் காண்பித்தார்.

"நெசவு, நீண்ட காலமாகவே பள்ளிக்கூடங்களில் போதிக்கப்படுவதாக இருந்திருக்கிறது என்றும், நூற்பது மாத்திரம் தமக்குத் தெரிந்த வரையில் சரியாகப் பரிசீலனை செய்யப்பட்டதாகத் தெரியவில்லை என்றும் ஸ்ரீ கிர்க்னஸ் கூறினர். அநேக ஆண்டுகளாக இதில் தாம் செய்து வந்திருக்கும் சோதனைகளைக் குறித்தும் சொன்னர். இதற்காக அவர் நடத்திய முதல் வகுப்பில் பதின்மூன்று வயதுள்ள பெண்கள் மூவர் இருந்தனராம். நூற்பது அவர்களுக்குக் கஷ்டமாக இருந்ததாம். பிறகு ஏழு வயதுப் பெண்களுக்கும் சொல்லிக்கொடுக்கக்கூடியதான எளிய முறை ஒன்று அனுசரிக்கப்பட்டதாம். சில வகையான மனப்போக்குள்ள குழந்தைகளின் படிப்பு விஷயத்தில் நூற்பு அதிக பயனுள்ளதாக இருக்கிறது என்று கூறி அவர் அதை மிகவும் புகழ்ந்து சொன்னர். பொதுவாக, நூற்பது அக்குழந்தைகளின் மனம் நிலைபடும்படி செய்கிறதாம். நரம்புக் கோளாறு இருக்கும் குழந்தைகளுக்கு, நூற்பது குணப்படுத்துவதாகிறது என்று ஒரு டாக்டர் கூறியிருப்பதையும் அவர் எடுத்துக் காட்டினர்.

"அந்தச் சமயத்தில் ஸ்ரீ கிர்க்னஸின் வகுப்பில் படிப்பவர்கள் மேடைக்கு வந்து, ஒவ்வொரு பெண்ணும் வகுப்பில் நூற்பதற்குத் தேர்ந்தெடுத்துக்கொண்ட அதே ராட்டை முன்பு உட்கார்ந்து நூற்க ஆரம்பித்து விட்டார்கள். தாள லயத்தோடு கூடிய அசைவுடன் நூற்றனர். இப்படி நூற்பது, களைப்பை உண்டாக்குவதற்குப் பதிலாக அயர்வைப் போக்குவதாக இருந்தது. இப்பெண்களில் இருவர், தூங்கும்நோயினல் பீடிக்கப்பட்டவர்கள். மற்றவர்களும் குழந்தைகளே. இவர்களெல்லோரும் மன நிலை காரணமாகவோ, வேறு காரணங்களினலோ. சாதாரணமான பள்ளிக்கூடப் பாடங்களைப் படித்துப் பயனடைய முடியாதவர்களாக இருந்தனர். இப்பெண்கள் நூற்பதற்கு ராட்டையைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுவதில் ஒரு விஷயம் தெரிந்தது. இப்பெண்களில் மிகக் குறைந்த சுறுசுறுப்புள்ள பெண், மெதுவாகச் சுழலும் ராட்டையை எடுத்துக்கொண்டாள். சும்மா உட்கார்ந்து கொண்டிருப்பதை அதிகக் கஷ்டமாகக் கருதும் அதிகச் சுறுசுறுப்பான பெண், வேகமாகச் சுழலும் ராட்டையை எடுத்துக்கொண்டாள்.

"பள்ளிக்கூடங்களில் சொல்லிக் கொடுக்கும் கைத்தொழில்களில் நூற்பதையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்ட ஸ்ரீ கிர்க்னஸ், நூறு ஆண்டுகளுக்கு முன்னல் வரையில் நூற்பது ஒவ்வொரு பெண்ணுக்கும் தெரிந்திருக்க வேண்டிய குடும்ப வேலையாக இருந்திருக்கிறது என்றார். நூற்பதில் உண்டாகும் லயம் தசைகளின் அசைவுக்கு மிகவும் முக்கியமானது என்றும், திருப்திகரமான அம்சம் என்றும் சொன்னர். பலக்குறைவாக இருப்பவர்கள், லயத்தோடு ஒத்து வேலை செய்யும்போது அதிக நேரம் வேலை செய்கின்றனர் என்றும் கூறினர்.

"அதற்குப் பிறகு நடந்த விவாதத்தில் கலந்துகொண்ட டாக்டர் டிரவேர், குழந்தைகளில் சில ரகத்தினருக்குக் கல்வி அளிப்பதில் முதல்

தரமான தொழிலின் மேன்மையை ஸ்ரீ கிர்க்னஸ் சுட்டிக் காட்டியிருக்கிறார் என்றார். இந்த வேலையின் பொதுக் கல்விப் பலனைக் குறித்து அவர் கூறியிருப்பவையும் சரியானவையே என்றார்.''

—'எங் இந்தியா' – 4—8—1927

# 15

# 'மஜோர்க்கா தீவின் மனிதச் சிலந்தி'

பத்திரிகையிலிருந்து கீழ்க்கண்ட விஷயத்தைக் கத்தரித்து அனுப்பியிருக்கும் கோயம்புத்தூர் ஸ்ரீ ஸி. பாலாஜி ராவுக்கு நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன்:

''பாம் டி மலோர்க்காவின் கடலை அடுத்துள்ள மாதா கோவிலின் நிழலில், நாளெல்லாம் பன்னிரண்டு மணி நேரமும் அவன் இங்குமங்குமாகப் போய்க்கொண்டே இருக்கிறான். போகும் போதே நூற்றுக்கொண்டும் போகிறான். நூற்ற நூலைப் பின்னால் போட்டுக்கொண்டே போகிறான். இதில் அவனுக்கு ஆற்றல் அதிகம் இருப்பதால் ஒவ்வொரு விநாடிக்கும் ஒரு கெஜம் நூலை நூற்றுவிடுகிறான். இதனால் ஒன்றரை நிமிடத்தில் நூறு கெஜத்திற்கு அதிகமான நூலை நூற்றுப் போட்டுவிடுகிறான்.

''அவன் செய்யும் தொழில் எளிதானதாகத் தோன்றுகிறது. இத்தொழில், பதினைந்து தலைமுறையாகப் பாரம்பரியத் தொழிலாக அவனுக்கு வந்திருப்பதால் அது அவனுக்கு எளிதானதாகிறது. ஆனால், அப்படிப் பாரம்பரியமாக வராதவர்களுக்கு அவனைப் போன்று நூற்றுவிடுவது மிகவும் அசாத்தியமானது. அவன் தன் இடுப்பைச் சுற்றி, தான் ஒரு புழுக்கூடு என்று தோன்றும் வகையில், மிருதுவான ரோமத்தைப் போன்ற புல் போலுள்ள நாரைக் கட்டிக்கொண்டிருக்கிறான். அதில் கொஞ்சத்தை முரடான சக்கரத்தின் நடுவில் மாட்டிவிட்டு மெள்ள அதனிடமிருந்து அப்பால் நடந்து போகிறான். சிறு குழந்தையான அவன் மகன், அச்சக்கரத்தைச் சுழற்றுகிறான். சுழற்றிக் கொண்டே நீலக்கடலையும் பார்த்துக்கொண்டிருக்கிறான். தான் என்றுமே ஏற முடியாத கப்பல்களைக் குறித்துக் கனவு காண்கிறான். ஏனெனில், மனிதச் சிலந்திகளான நீண்ட பரம்பரையைச் சேர்ந்தவனே அவனும்.

''நூற்பவன் வெயிலில் நடக்கும்போது, வீணை வாசிப்பவரின் மென்மையான விரல்கள் தந்திகளை வருடுவதைப்போன்று இவன் கை விரல்களும் இடுப்பிலிருக்கும் நாரை இழுத்துக்கொண்டே இருக்கின்றன. சுழலும் சக்கரத்துடன் இவனைப் பிணைத்துக் கொண்டு மென்மையான நூல் வருவது அற்புதமாகவே இருக்

கிறது. தூரத்தில் இவன் நடக்க நடக்க வேகமும் அதிகமா கிறது. தொப்பியிலிருந்து ஓயாமல் நூலை உருவிப் போட்டுக் கொண்டே இருக்கும் பழைய ஜால வித்தைக்காரன் செய்வதைப் போன்றே இது இருக்கிறது.

''இவனும், இவனுடைய மூதாதைகளும் ஐந்நூறு ஆண்டுக ளாகத் திறந்த வெளியில் நூற்றுக்கொண்டே இருக்கிறார்கள். மாதா கோயிலின் நிழலில் இருந்துகொண்டு இவன் மூதாதை, அடிவானத்தில் தோன்றிய பயங்கரமான கப்பல் பாய்மரத்தைப் பன்முறை கண்டிருக்கிறான். அந்நியரான கடற்கொள்ளைக்காரர் கள் வருகிறார்கள் என்பதற்கு அது அவர்களுக்கு எச்சரிக்கை. ஒரு காலத்தில் இத்தீவு மூர் ஜாதியினரின் ஆதிக்கத்தில் இருந்தது. தோல்வியடைந்துவிட்ட மூர்கள், திரும்பவும் இத்தீவைப் பிடித் துக் கொள்ளுவதற்காகக் கடற்கரையைச் சுற்றி அலைந்துகொண் டிருந்ததையும் இவர்கள் கண்டிருக்கிறார்கள்.

''தனது விரல்களால் இவ்வளவு அற்புதமாக எப்படி நூற்கி றான் என்று நீங்கள் அவனைக் கேட்டால், அவன் தோளை உலுக் கிக்கொள்ளுகிறான். அவனுடைய கரிய முகம் உங்களைப் பார்த் துச் சிரிக்கிறது. அதை அவனால் சொல்ல முடியாது; அது அவ னுக்கும் தெரியாது. வலை பின்ன வண்டுக்குச் சிலந்தி எவ்விதம் சொல்லிக் கொடுத்துவிட முடியாதோ அதே போல இவனும் உங்களுக்குச் சொல்லிக் கொடுக்க முடியாது. அத்தொழிலுக்கே பிறந்தவன் அவன். 'இருபது வார்த்தைகள் பேசக் கற்றுக் கொள்ளுவதற்கு முன்னால், நடக்கக்கூட நன்றாகத் தெரிவதற்கு முன்பு, சிறு வயதிலேயே இது எனக்குத் தெரியும். இது எளிதா னது. பாருங்கள்' என்கிறான்.

''சிசு நடையில் தட்டுத் தடுமாறி நடக்கும் இன்னும் சிறிய குழந்தையை அழைக்கிறான். அச் சிறு குழந்தை தன் தகப்ப னிடமிருந்து மஞ்சள் நிற நாரை எடுத்துக்கொண்டு அதைச் சக்க ரத்தில் நுழைத்து நூற்றுக்கொண்டே மெள்ள, ஆனால் திடமாக அடிபோட்டு நடக்கிறான். அக்குழந்தையின் தடித்த விரல்கள் நாரை உருவிக் கொடுத்துக்கொண்டே இருக்கின்றன. தந்தை நூற்பதைப் போன்றே நூற்கிறான். ஆனால், இவன் நூற்கும் நூல் முரடானது; அவ்வளவு திறமையாக நூற்கப்பட்டது அன்று. என்றாலும், அதைத் திரித்து யாரும் தன் கழுதையைக் கட்டிப் போடலாம்; தானே தூக்கும் போட்டுக் கொள்ளலாம். தன் குழந்தை நூற்பதைத் தந்தை பார்க்கிறான்; பெருமையால் அவன் முகம் பிரகாசிக்கிறது.''

— 'எங் இந்தியா' – 12—4—1928

# 16

# சென்னைப் பிரசங்கம்

[மகாத்மா காந்தி, சென்னை ஒய். எம். ஸி. ஏ. யில் செய்த பிரசங்கம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

சமய சம்பந்தமாகப் பேசுமாறு தலைவர் என்னைக் கேட்டுக் கொள்ளுகிறார். நான் எப்பொழுதேனும் சமயப் பிரசங்கம் செய்ததாக எனக்குத் தெரியவில்லை. இன்னுமொரு விதமாகச் சொன்னால், என் நினைவுக்கு எட்டிய வரையில், சமயப் பிரசங்கமாக இல்லாத ஒரு பிரசங்கமோ, பேச்சோ ஒன்றேனும் நான் நிகழ்த்தியதாக அறியேன். நான் ஏமாந்துவிட வில்லை என்றால், பொது வாழ்க்கை இன்னது என்பதை நான் அறிந்துகொண்டதிலிருந்து, நான் பேசியிருக்கும் ஒவ்வொரு வார்த்தையிலும், நான் செய்திருக்கும் ஒவ்வோர் காரியத்திலும் சமய உணர்ச்சியும், திட்டமான ஒரு சமய நோக்கமும் இருந்திருக்கின்றன என்றே நான் எண்ணுகிறேன். என் பேச்சைக் கேட்டவர்களுக்கும், நான் எழுதியவைகளைப் படித்தவர்களுக்கும், ராஜீயம், பொருளாதாரம், "மற்றும் பல விஷயங்களைக் குறித்தே நான் காரியங்களைச் செய்து வந்திருப்பதாகத் தோன்றியிருக்கக்கூடும். ஆனால், அக்காரியங்கள் ஒவ்வொன்றின் நோக்கமும், சமயத்தையே முக்கியமாகவும், மிக அதிகமாகவும் கொண்டது என்று நான் கூறுவதை ஒப்புக்கொள்ளும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். இன்று பேசப் போவதும் அவ்விதமே இருக்கும்.

எதைக் குறித்து நான் பேச வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறேன் என்று நான் கேட்டபோது, நான் விரும்புவதைப் பேசலாம் என்று சொன்னார்கள். இக்கூட்டத்திற்கு நான் வரும் வழியில் நான் பேச வேண்டிய விஷயம் எனக்கு உதயமாயிற்று. என் மனத்தைத் திறந்து உங்களுடன் பேசுவது என்று இருக்கிறேன்.

வேலூரில் ஒரு பாதிரி நண்பருடன் கொஞ்ச நேரம் மிகச் ...றந்த வகையில் பொழுது போயிற்று. அவ்வூர் மாணவர் ...ளுடன் மனம் விட்டுப் பேசிக் கொண்டிருந்தேன். மறுநாள் ...லையில் என்னிடம் இது போல் சொன்னார்: "உங்கள் ...ரசங்கம் மிகவும் நன்றாக இருந்தது. ஆன்மார்த்த விஷயங் ...ளைக் குறித்துப் பேசினீர்கள்; ஆனால், பேச்சின் நடுவே கதர் ...ந்து புகுந்ததே அது ஏன்? ஆன்மார்த்திக விஷயங்களுக்கும் ...தருக்கும் என்ன சம்பந்தம் இருக்க முடியும் என்பதை விளக்கு ...ர்களா?" என்று கேட்டார். அவர் மேலும் சொன்னார்: "குடிப் ...ழக்கத்தைக் குறைப்பதைப் பற்றிப் பேசினீர்கள். அதைக் ...றித்து நாங்கள் மகிழ்ச்சியடைந்ததோடு அது நிச்சயமாக

ஆன்மிகமானதே. தீண்டாமையைப் பற்றிப் பேசினீர்கள். ஆன்மார்த்த விஷயத்தில் பற்றுள்ள கூட்டத்திற்கோ, பேச்சாளருக்கோ பேசுவதற்கு அது சிறந்த விஷயம்தான். ஆனால், உங்கள் பிரசங்கத்தில் இந்த இரண்டு விஷயங்களும் கதருக்குப் பின்னாலேயே வந்தன. எங்களில் சிலருக்கு இது பிடிக்காததாக இருந்தது." நாங்கள் பேசிக் கொண்டிருந்ததின் சாராம்சத்தை என் வார்த்தைகளில், ஆனால், விஷயத்தை விடாமல், உங்களுக்குச் சொல்லியிருக்கிறேன். என் மனத்தில் தோன்றிய பதிலை அப்பொழுது அவருக்குச் சொன்னேன். அந்தப் பதிலையே இன்று காலை சற்று விரிவாக உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன்.

## நூற்பது உயர்ந்த ஆன்மிக உபதேசம்

கதரை நான் முதலாவதாக வைத்து, அதற்குப் பிறகுதான் தீண்டாமையையும் குடிப் பழக்கக் குறைப்பையும் வைக்கிறேன் என்பது முற்றிலும் உண்மை. இவைகளையெல்லாம் வேலூரில் மாணவருக்கு நான் செய்த பிரசங்கத்தில் கடைசியாகக் கூறினேன். அப்பிரசங்கத்தில் புனிதமான வாழ்க்கை நடத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டேன். வாழ்க்கை புனிதமானதாக இல்லாது போகுமாயின், அவர்களுடைய படிப்பெல்லாம் வெறும் தூசு போல்தான் ஆகுமென்றும், உலகத்தின் உண்மையான அபிவிருத்திக்கும் அது இடையூறாகவும் ஆகிவிடக் கூடும் என்றும் சொன்னேன். பிறகு, உதாரணமாகக் காட்டுவதற்காக இந்த மூன்று விஷயங்களையும், மற்றும் சிலவற்றையும் எடுத்துக் கொண்டேன். சென்ற முப்பத்தைந்து ஆண்டுகளாக இடைவிடாமல் உலகத்தின் பல பகுதிகளிலும் பொதுஜன சேவை செய்த அனுபவம் எனக்கு இருக்கிறது. ஆயினும், வேலைக்கும் செயலுக்கும் புறம்பாக ஆன்மிக அல்லது ஒழுக்க நன்மை என்பது எதுவும் இருப்பதாக நான் இதுவரையில் அறிந்ததில்லை. 'கடவுளே, கடவுளே என்று என்னைச் சொல்லிக் கொண்டிருக்கிறவர்கள் எல்லோரும் சுவர்க்கத்தை அடைந்து விட முடியாது. ஆனால், சுவர்க்கத்திலிருக்கும் பரம பிதாவின் கட்டளையை நிறைவேற்றுபவர்கள் மாத்திரமே சுவர்க்கத்தை அடைய முடியும்' என்ற அருமையான பாசுரத்தை இது போன்ற கூட்டங்களிலெல்லாம் நான் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டு வருகிறேன். இப்பாசுரத்தை நான் படித்தது முதல் என் உள்ளத்தில் அது அப்படியே இருந்து வருகிறது. அந்தப் பாசுரத்தை நான் சரியாகச் சொல்லவில்லை. ஆனால், அப்பாசுரம் உங்களுக்குத் தெரிந்திருப்பதோடு அது மிகவும் உண்மையானது என்பதையும் நீங்கள் அறிவீர்கள். ஆங்கிலப் பொது வாழ்வில் ஈடுபட்டிருந்த இரண்டு பெரியர்களின் உதாரணம் என் நினைவுக்கு வருகிறது. அவர்கள் காலத்தில் அவர்கள் மிகச் சிறந்த சீர்திருத்தக்காரர்கள் என்று கருதப்பட்டனர். ஆன்மார்த்திகத்திற்குத் தூண்கள் என்றும் அர்

களைக் கருதினார்கள். 1889, 1890-ஆம் ஆண்டுகளில் நடந்ததைக் குறித்தே உங்களுக்குச் சொல்லுகிறேன். அப்பொழுது உங்களில் அநேகர் பிறக்கக்கூட இல்லை. அக்காலத்தில் குடிப் பழக்க ஒழிப்புக் கூட்டங்களுக்கு நான் போய்க் கொண்டிருந்தேன். அந்தச் சீர்திருத்தத்தில் எனக்கு சிரத்தை உண்டாயிற்று. நான் சொன்ன அந்த இரு ஆன்மிகத் தூண்களும், குடிப் பழக்க ஒழிப்பு ஊழியர்கள் என்று கருதப்பட்டனர். ஆனால், அவர்கள் பிரசங்கம் செய்யும் ஊழியர்கள்தான். குடிப் பழக்க ஒழிப்பு சம்பந்தமாகப் பிரசங்கம் நடக்க வேண்டியிருந்தால், அவர்களுக்கு அதிக கிராக்கி இருக்கும். அவர்களுடைய வீழ்ச்சியையும் நான் காண நேர்ந்தது என்பதையும் உங்களுக்குச் சொல்ல வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். அவர்களுடைய உண்மை வெளிப்பட்டுவிட்டது. அவர்கள் உண்மையான ஊழியர்களே அல்ல; கடவுள், பரம பிதா என்ற சொற்கள் அவர்கள் உதடுகளில் எப்பொழுதும் இருந்து கொண்டிருக்கும். ஆனால், அச் சொற்கள் அவர்களுடைய உதடுகளுக்குத்தான் அலங்காரமாக இருந்தனவே அன்றி அவை அவர்கள் உள்ளத்தில் இல்லை. அவர்கள் குடி ஒழிப்புப் பிரசாரத்தைத் தங்களுடைய கேவலமான காரியங்களை நிறைவேற்றிக் கொள்ளுவதற்குப் பயன்படுத்திக் கொண்டார்கள். அவர்களில் ஒருவர், பணத்தைப் போட்டுக் கொள்ளை லாபம் அடிப்பவர். மற்றவரோ, மிகுந்த ஒழுக்கக் கேடானவர். நான் சொல்ல விரும்புவது என்ன என்பதை நீங்கள் ஒரு வேளை இப்பொழுது புரிந்து கொண்டிருக்கக்கூடும். இந்தியாவில்கூட, குடி ஒழிப்புப் பிரசாரம் ஆன்மிகப் பிரசாரமாகவே இருந்து வருகிறது என்றோ, தீண்டாமை ஒழிப்பு மேடை அவசியமாக ஆன்மிக மேடையாகத்தான் இருக்க வேண்டும் என்றோ சொல்ல முடியாமல் இருக்கிறேன். இந்த நாட்டிலேயே இன்று அநேகர் இவ்விரு மேடைகளையும் துஷ்பிரயோகம் செய்து வருகின்றனர் என்பதை நான் அறிந்திருக்கிறேன்; இப்பொழுது நான் உங்களிடம் பேசும் போதே அறிகிறேன். மற்றவர்கள் அவற்றைச் சரியாக உபயோகிக்கின்றனர். ஒவ்வொரு காரியத்தையும் ஆன்மார்த்திக நோக்கத்துடனேயே செய்ய வேண்டும், எண்ண வேண்டும், எடுத்துக்காட்ட வேண்டும். இல்லையானால், எதுவுமே செய்யாமல் இருப்பதே மேல். இந்த நீதியையே உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். ராட்டை, கதரின் உபதேசம், ஒரு உயர்வான ஆன்மிக உபதேசம் என்பதை இன்று உங்கள் முன்பு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்நாட்டிற்கு அது ஒரு உயர்வான ஆன்மிக உபதேசமாக இருப்பதனாலேயே ராஜீய விளைவுகளையேயன்றி மகத்தான பொருளாதார விளைவுகளையும் கொண்டதாக அது இருக்கிறது.

## பொருளாதாரமும் சமயமும்

சில தினங்களுக்கு முன்னால்தான் அமெரிக்க நண்பரான பேராசிரியர் சாம் ஹிக்கின்பாதம், அவருக்கும் எனக்கும் அதிக

சிரத்தையுள்ளதான ஒரு விஷயத்தைக் குறித்து எனக்கு எழுதினார். அக்கடிதத்தின் சாராம்சத்தை உங்களுக்குக் கூறுகிறேன். அவர் கூறியதாவது: "பொருளாதாரமில்லாத சமய விஷயங்களில் எனக்கு நம்பிக்கை இல்லை. மதத்தினால் ஏதாவது பயன் இருக்கிறது என்றால், அவசியமிருக்கும்போது, அது பொருளாதார பயன் அளிக்கக்கூடியதாகவும் இருக்க வேண்டும்." ஒரு பெரிய நிபந்தனைக்கு உட்பட்டே இக்கூற்றை நான் முற்றிலும் ஆமோதிக்கிறேன். அந்த நிபந்தனை ஸ்ரீ ஹிக்கின்பாதமுக்கும் இல்லாமல் இல்லை. ஆனால், அவருக்காக நான் கூற முடியும் என்று நான் சொல்லிக்கொள்ளுவதற்கில்லை. மதத்தினால் ஏதாவது பயன் இருக்கிறது என்றால், அது பொருளாதார பயன் அளிக்கக்கூடியதாகவும் இருக்க வேண்டும் என்று கூறுவதாயின், பொருளாதாரத்தினாலும் ஏதாவது பயன் உண்டு என்றால், அது சமய அல்லது ஆன்மிக நன்மையை உண்டாக்கக்கூடியதாகவும் இருக்க வேண்டும். இதுதான் என் நிபந்தனை. ஆகையால், சமயமும் பொருளாதாரமும் சேர்ந்ததான இத்திட்டத்தில் சுரண்டலுக்கோ, இதைக் குறித்துச் சொல்லப்படுவதைப் போன்று அமெரிக்க மயமாக்குவதற்கோ இடமே இல்லை. இந்தியாவில் மிக முக்கியமானவரான ஸர் எம்.விஸ்வேஸ்வரய்யா கூறுவது போல, ஓர் ஆங்கிலேயனுக்கு 30 அடிமைகள்—அல்லது 36 அடிமைகளா என்பது எனக்குச் சரியாகத் தெரியவில்லை—இருக்கிறார்கள் என்றால், ஓர் அமெரிக்கருக்கு 33 அடிமைகள் இருக்கின்றனர். என்னைப் பொறுத்த வரையில், சமயத்தோடு மாற்றிக்கொள்ளக் கூடியதான உண்மையான பொருளாதாரத்தில், மனித அடிமைகளாயினும், கால்நடைகள், யந்திரங்களாயினும், அடிமைகளை வைத்துக்கொண்டிருப்பதற்கு இடமே இல்லை என்று கருதுகிறேன். பொருளாதாரத்தில் அடிமைகளுக்கு இடமே இல்லை. அப்பொழுது, கதருக்கு எல்லை மிக அதிகமாக இருப்பதால் நீங்கள் கதரைத் தவிர்த்துக்கொண்டு விடமுடியாது என்றும் உங்களுக்குக் கூறுகிறேன். மக்களில் சிலரையே கேந்திரமாகக் கொண்டது குடி ஒழிப்பு. குடிகாரனை மது பானம் செய்யாதவனாக மாற்றி விடுபவருக்கு அது நன்மையளிக்கிறது. சீர்திருத்தக்காரரின் பேச்சைக் கேட்டு குடிப் பழக்கத்தை விட்டுவிட்டவருக்கும் அது நன்மை அளிக்கிறது என்பதிலும் சந்தேகமில்லை. இத்துர்ப்பாக்கிய நாட்டில், அதிகப் பட்சம் ஏழு கோடி மக்களைக் கேந்திரமாகக் கொண்டிருப்பது தீண்டாமை. நாம் ஒவ்வொருவரும் தீண்டாமை ஒழிப்பு வேலை செய்ய முடியாது. தீண்டாதாருக்கு நீங்கள் கல்வி அளிக்கலாம்; அவர்களுக்காக கிணறுகள் வெட்டி, கோயில்களும் கட்டிக் கொடுக்கலாம். ஆனால், தீண்டக்கூடியவர்கள் என்று சொல்லப்படுவோர், தங்களுடைய மானக்கேடான உச்சத்திலிருந்து இறங்கி வந்து தீண்டாதாரோடு சகோதரத்துவம் கொண்டாலன்றி இவைகளெல்லாம் தீண்டாதாரைத் தீண்டக்கூடியவர்களாக்கிவிட மாட்டா. ஆகையால், சாதாரணமான ஆணுக்கோ, பெண்ணுக்கோ இது சிக்கலான பிரச்னையாக இருப்பதை

நீங்கள் காணலாம். எப்பொழுதுமே, மிகப் பணிவானதாகவே இருந்து வந்தாலும், சத்தியத்தைக் காண்பது என்பது ஒன்றே என் வாழ்க்கையின் ஒரே வேலையாக இருந்து வந்திருக்கிறது. அந்த வகையில், விலக்கின்றி ஒவ்வொருவரும் செய்யக்கூடிய, இந்த அறையில் இருப்போர் எல்லோரும் செய்யக்கூடிய, இந்தியாவில் மிகவும் ஆழ்ந்து வேரூன்றிவிட்ட நோய்க்குப் பரிகாரமாக இருக்கக்கூடிய ஒன்றுக்காக நான் ஆராய்ந்து கொண்டிருந்தேன்.

## கதரின் கேந்திரம்

இந்தியாவில் மிக ஆழமாக வேர் ஊன்றிப் போய்விட்ட நோய், நிச்சயமாகக் குடிப் பழக்கம் அல்ல; தீண்டாமையும் அல்ல என்பதிலும் சந்தேகமில்லை. இவை கடுமையான நோய்கள் தான்; இவற்றால் பாதிக்கப்பட்டு வருந்துவோருக்கு இவை இன்னும் அதிக மோசமானவையே. ஜன சங்கியைக் கணக்குகளை நீங்கள் பார்க்க வேண்டும். ஸர் வில்லியம் ஹண்டரின் சரித்திரம் போன்ற உண்மையான சரித்திர புத்தகங்களையும் நீங்கள் பார்க்க வேண்டும். இல்லையானால், இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால்தான் ஒரு கமிஷன் முன்னால் ஸ்ரீ ஹிக்கின்பாதம் சொன்ன சாட்சியத்தை நீங்கள் அறிய வேண்டும். இந்தியாவில் ஏராளமான மக்கள் வறுமையால் வாடுகிறார்கள் என்று அவர் கூறினார். ஸர் வில்லியம் ஹண்டரோ, இந்தியாவின் ஜனத்தொகையில் பத்தில் ஒரு பகுதியினர், தினத்திற்கு ஒரு வேளை சாப்பாட்டோடுதான் உயிர் வாழ்ந்து வருகிறார்கள் என்கிறார். வெறும் வறட்டுச் சோறும் அழுக்கு உப்பும்தான் அந்த ஒரு வேளைச் சாப்பாடும் என்கிறார். இந்தியாவில் விடாமல் இருந்து வரும் நிலைமை இதுதான். இவைகளை யெல்லாம் நீங்கள் பார்த்தால், ஆழமாக வேர் ஊன்றியிருக்கிறது என நான் கூறும் நோய் பற்றியிருக்கும் மனிதர் தொகை மிக அதிகம் என்பதை என்னோடு நீங்களும் காண்பீர்கள். ரெயில் பாதைக்கு அப்பால் உள்ளே போய் நீங்கள் பார்ப்பீர்களாயின், கிராமங்களெல்லாம் சாணிக் குப்பைகளாகிவிட்டன என்பதை நீங்கள் காண்பீர்கள். கிராம வாசிகளை அங்கே காணோம். கழுகுகளே அங்கே காணப்படுகின்றன. ஏனெனில், கிராமவாசிகளால் அங்கே வாழ முடியவில்லை; அவர்கள் வெறும் நடைப் பிணங்களாகிவிட்டார்கள்.

இந்தியா இப்பொழுது மூளை சுரத்தினால் பாதிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு அவசியமான சத்திர சிகிச்சையை நீங்கள் செய்து, பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு நீங்கள் ஏதாவது நற்காரியத்தைச் செய்வதாயிருந்தால், நீங்கள் செய்யக்கூடியது கதரைத் தவிர வேறு எதுவும் இல்லை என்று நான் கூறுகிறேன். ஆன்மிக எண்ணமுள்ளவர்கள் என்ற வகையில், உங்களைவிடக் குறைவான அதிர்ஷ்ட முள்ளவர்களாய், சோற்றுக்கும் உடுத்தத் துணிக்கும் கூட போதியது இல்லாதவர்களாய் இருப்போரைக் குறித்து நீங்கள் நினைத்தால், அவர்களுக்

கும் உங்களுக்குமிடையே அழித்துவிட முடியாத பந்தத்தை நீங்கள் கொள்ள வேண்டுமானல், இதற்கு உங்களுக்குக் கதரைத் தவிர வேறு எதுவும் இல்லை என்று மீண்டும் ஒரு முறை உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆனல், இதைச் சொல்லுவது உங்களுக்குப் பிடிக்கவில்லை. அப்படிப் பிடிக்காததாக இருப்பதற்குக் காரணம், இது புது விஷயமாக இருப்பதோடு கற்பனையிலிருப்பதாகவும் இருக்கிறது. அநேகருக்கு இது வெறும் பகற் கனவாகவும் தோன்றுகிறது. நான் சற்று முன்பு கூறிய வேலூர் பாதிரி நண்பர், எங்கள் பேச்சின் முடிவில் என்னிடம் வருமாறு சொன்னர்: "ஆம். ஆனல், இக்கால முன்னேற்றத்தின் வேகத்தை நீங்கள் தடுத்துவிட முடியுமா? காலத்தின் போக்கைப் பின்னுக்குப் போகும்படி செய்து, மக்கள் கதரை மேற்கொண்டு அற்ப ஊழியத்திற்காக வேலை செய்யும்படி நீங்கள் செய்துவிட முடியுமா?" தமது இந்தியாவை அவர் தெரிந்து கொள்ளவில்லை என்றுதான் சொல்லுவேன். வேலூர் கூட்டத்திற்குப் பிறகு ஆற்காடு, ஆரணி ஆகிய இரு இடங்களுக்கும் சென்றேன். அங்கே உள்ள மக்களைக் குறித்து நான் அதிகமாகப் பார்க்கவில்லை என்று உங்களுக்கு உறுதியாகக் கூறுகிறேன். ஆனல், கிராமவாசிகள் என்னைவிட மோசமாகத் துணி உடுத்தியிருந்தார்கள் என்பதைக் கண்டேன். நான் பார்த்தது, அவர்களின் சிறு கூட்டத்தை அல்ல; பத்தாயிரக்கணக்கானவர்களைக் கண்டேன். கந்தைகளையே அவர்கள் கட்டிக் கொண்டிருந்தனர். வருடத்தில் நான்கு மாதங்களுக்கு அவர்களுக்குக் கூலி என்பதே இல்லை. அவர்களிடம் இருந்ததை எனக்கு அளித்தார்கள். அவர்கள் எனக்குக் கொடுப்பதை அதிக ஆர்வத்தோடு பார்த்தேன். அவர்கள் காலணுக்களை எனக்குக் கொடுக்கவில்லை; தம்படிகளையே கொடுத்தார்கள்.

## ஆண்டவன் பணி

நவம்பரில், ஒரிஸ்ஸாவில் க்ஷேத்திரமும் ஆரோக்கிய ஸ்தலமுமான பூரிக்கு என்னுடன் வாருங்கள். கோடை மாதங்களில் கவர்னர் அங்கே வசிக்கிறார்: சிப்பாய்களும் இருக்கிறார்கள். பூரிக்குப் பத்து மைல் சுற்றிலும் எலும்பையும் தோலையுமே நீங்கள் காண்பீர்கள். அவர்களுடைய கந்தைகளில் பத்திரமாக முடிபோட்டு வைத்திருந்த அழுக்குப் படிந்த தம்படிகளை இந்த என் கையினலேயே வசூலித்தேன். கோலாப்பூரில் என் கைகள் விரைத்துப் போனதைவிட அவர்கள் கைகள் அதிகமாக விரைத்துப் போயிருந்தன. இக்கால அபிவிருத்தியைக் குறித்துப் பேசுங்கள். அவர்களுக்கு முன்னல் கடவுளின் பெயரை வீணைக் கொண்டு போய் அவர்களை அவமதியுங்கள். கடவுளைக் குறித்து நாம் அவர்களிடம் பேசினல், உங்களையும் என்னையும் பேய் பிசாசு என்றுதான் அவர்கள் சொல்லுவார்கள். கடவுள் ஏதோ ஒன்று இருக்கிறது என்று அவர்கள் அறிந்தால், கொடுமைப் படுத்தும், பழி வாங்கும், இரக்கமற்ற கொடியனை கடவுளே

அவர்களுக்குத் தெரியும். அன்பு இன்னது என்பதே அவர்களுக் குத் தெரியாது. அவர்களுக்கு நீங்கள் என்ன செய்ய முடியும்? இங்கே அமர்ந்திருக்கும் நாகரிகமான சகோதரிகளை (அங்கிருந்த பெண்களைச் சுட்டிக்காட்டி), இவர்களுடைய பட்டாடைகளி லிருந்து அந்த மரத்துப்போன, நாகரிகமற்ற கரங்களினால் தயா ரித்த கதருக்கு இவர்களை மாற்றிவிடுவது கஷ்டமானதே. கதர் முரடாக இருக்கிறது! அதிக கனமாகவும் இருக்கிறது! தொடு வதற்குப் பட்டு மிருதுவாக இருக்கிறது. ஒன்பது கெஜப் பட் டுப் புடவையைக் கட்ட முடியும். ஆனால், ஒன்பது கெஜ கதரைக் கட்ட முடியாது. ஒரிஸ்ஸாவின் ஏழைச் சகோதரிகளுக்குக் கட்டப் புடவை இல்லை. கந்தலையே கட்டிக்கொண்டிருக்கிறார் கள். ஆனால், அவர்கள் மான உணர்ச்சியை இழந்துவிடவில்லை. ஆனால், நாம் இழந்துவிட்டோம் என்று உங்களுக்கு நிச்சயமாகக் கூறுகிறேன். நாம் உடையணிந்திருந்தும் நிர்வாணமாக இருக் கிறோம். அவர்களோ நிர்வாணமாயிருந்தும் உடையணிந்திருக் கிறார்கள். இதனாலேயே நான் ஊர் ஊராகப் போய் என் மக்களை நான் உற்சாகப்படுத்தி வருகிறேன். என் அமெரிக்க நண்பர் களையும் உற்சாகப்படுத்துகிறேன். ஹாவார்டு சர்வகலாசாலை யிலிருந்து வந்த இரு இளம் அமெரிக்க வாலிபரையும் உற்சாகப் படுத்தினேன். என் கையெழுத்து வேண்டும் என்று அவர்கள் கேட்டார்கள். 'அமெரிக்கருக்கு என் கையெழுத்து இல்லை' என்று சொன்னேன். பேரம் பேசி ஒரு முடிவுக்கு வந்தோம்; 'என் கையெழுத்தைத் தருகிறேன். நீங்கள் கதர் அணிய வேண் டும்' என்றேன். அவர்கள் வாக்குறுதி அளித்திருக்கிறார்கள். ஒரு அமெரிக்க கனவானின் பேச்சை நான் நம்புகிறேன். அவர் களில் அநேகர் இந்த வேலையைச் செய்து வருகிறார்கள். இதில் தவறாக எண்ணிவிட வேண்டாம். இது அவர்களுக்குப் பிடித்தும் இருக்கிறது.

ஆனால், இந்தியாவிலிருக்கும் ஒவ்வொரு ஆணும் பெண்ணும், தமது ராட்டையின் முன்பு உட்கார்ந்து நூற்கும் வரையில் நான் திருப்தியடைய மாட்டேன். இதற்குப் பதிலாக இருக்கக்கூடிய தான சிறந்தது ஒன்றை நீங்கள் கண்டுபிடித்துவிட்டால், அந்த ராட்டையைக் கொளுத்திவிடுங்கள். கோடிக்கணக்கான மக்க ளுக்கு, அவர்களுடைய வீடுகளிலிருந்து அவர்களைக் கலைத்து விடாமல், அவர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்யும் வேலை இது ஒன்றே ஒன்றுதான். இது ஒரு மகத்தான வேலை. இதை நான் செய்துவிட முடியாது என்பதையும் அறிவேன். கடவுளால் இதைச் செய்துவிட முடியும் என்பதையும் அறிவேன். கடவுளுக் குத் திருவுளமிருந்தால் மிகப் பெரிய, அதிக பலமான விஷயமும் அவருக்கு அதிகச் சின்ன சங்கதி. குஜராத்தில் ஆயிரக்கணக் கான வீடுகளை இப்பொழுது அழித்தது போல, சில ஆண்டுக ளுக்கு முன்னால் தென்னிந்தியாவில் ஆயிரக்கணக்கான வீடுகளை அழித்துவிட்டதைப் போன்று, கண்மூடி கண் திறப்பதற்கு முன்னால் எல்லாவற்றையும் அவர் அழித்துவிட முடியும். கட

வுளிடம் பூரணமான நம்பிக்கையுடனேயே கதரின், ராட்டையின் இந்த உபதேசத்தை நான் நிறைவேற்றி வருகிறேன். இதனல், கடவுளின் படைப்பான மனிதனிடமும் எனக்குப் பூரணமான நம்பிக்கை இருக்கிறது. இன்று நீங்கள் என்னைப் பார்த்து ஏளன மாகச் சிரிக்கலாம். இது மிகவும் இழிவான காரியம் என்றும் நீங்கள் சொல்லலாம். நீங்கள் விரும்பினல், என் மீது அவநம் பிக்கையும் கொள்ளலாம். கதரை உங்கள் முன்னல் கூற வந் திருக்கும் நான் ஒரு ராஜீய தந்திரக்காரன் என்றும், ஏதோ பல காரியங்களை நான் ஒளித்து வைத்திருக்கக்கூடும் என்றும் நீங்கள் நினைக்கலாம். என்னையும் என் வார்த்தைகளையும், தவருன பொருள்படும்படியும் நீங்கள் திரித்துக் கூறலாம். ''இக்காரி யங்களைச் செய்வதற்கு வேண்டிய பலமும் பணமும் உம்மிடம் இல்லை" என்றும் நீங்கள் சொல்லலாம். உங்களுடைய வாதங் களினல் என்னை முறியடித்து, நான் பேச முடியாதபடி நீங்கள் செய்துவிடுவதும் சாத்தியம் என்பதையும் நான் அறிவேன். ஆனல், கடவுளிடம் கொண்டிருக்கும் நம்பிக்கையை நான் இழந்து விடாமல் இருக்கும் வரையில், உங்களிடமும் நம்பிக்கையை இழந்துவிடமாட்டேன். அந்த நம்பிக்கையை நான் இழந்துவிடு வது அசாத்தியமானது. ஆகையால், கதரின், ராட்டையின் உப தேசத்திலும் நான் நம்பிக்கையை இழந்துவிட முடியாது.

என் உள்ளத்தை உங்களுக்குத் திறந்து காட்டுவதில் நான் வெற்றி பெற்று விடவில்லையென்ருல், கதரின் உபதேசத்தில் முழுக்க முழுக்க அடங்கியுள்ள ஆன்மார்த்திக தருமத்தை உங் களுக்குக் காட்டுவதில் நான் வெற்றி பெறவில்லை என்ருல், இதைச் செய்வதில் பிறகு எப்பொழுதாவது வெற்றி பெற முடியும் என்று நான் எண்ணவில்லை. நான் வெற்றியைப்பெற விரும்புகிறேன் என்பதுதான் நான் உங்களுக்குச் சொல்லக்கூடியதாகும். உண் மையான உபதேசத்தைச் செய்ய என் உதடுகளுக்கு முடியா மலிருக்கலாம். கடவுள் பெயரால் இந்த உபதேசத்தை உங்க ளிடம் கூறியிருக்கிறேன். எல்லாம் அவர் செய்வார். கடவுள் உங்களுக்கு அருள் புரிவாராக.

—'எங் இந்தியா' - 15—9—1927

## 17

# கதரே முக்கியமானது

இதற்கு மத்தியில் மிகப் பெரிய நிர்மாண வேலையான கதரில் கவனஞ் செலுத்துமாறு 'மாறுதல் வேண்டாத'வர்களை, நான் அழைக்கத்தான் முடியும். இதை உணர்ந்துகொள்ளாத வர்கள், ஒத்துழையாமையை, அதாவது அகிம்சையின் மிகச் சக்தி வாய்ந்ததும், அதிகச் செயல் வாய்ந்ததுமான பகுதியைத்தெரிந்து கொள்ளாதவர்களே. அகிம்சை இல்லாத ஒத்துழையாமை, ஒரு

லட்சியம் என்பதற்கான கௌரவத்தை என்றும் அடையவே முடியாது. அப்போது அது, ஒரு போராட்டத்தின் பல தந்திரங் களில் ஒன்ருகத்தான் ஆகும். அகிம்சையோடுகூடிய ஒத்துழை யாமை, மற்றெல்லாப் பரிகாரங்களுக்கும் பதிலான, தவருத, கைகண்ட பரிகாரமாகவே உருவாக்கப்பட்டிருக்கிறது. அதன் தீர்மானமான பகுதியில் உறுதிப்படுத்தும் மூலைக் கல் போன்று இருப்பது கதர். 'டெயிலி டெஸ்பாச்' என்ற பத்திரிகையில் ஸ்ரீ ஹார்கோர்ட் ராபர்ட்ஸன், கதருக்கு ஆதரவாக மனமில்லா மலேயே கூறுகிருர். இவரைப் பற்றிக் கூறும் அப்பத்திரிகையின் ஆசிரியர், 'இவர் பிரிட்டிஷ் இந்தியாவில் பல ஆண்டுகள் இருந் திருக்கிருர். அங்கே மார்க்கெட் நிலவரங்களையும், இந்தியரின் மனேதத்துவங்களையும் நன்ருய் அறிந்திருக்க வேண்டிய அவசிய மான தொழில்களில் ஈடுபட்டிருந்தவர்' என்று கூறுகிருர். கீழ்க் கண்டவாறு வெளியிட்டிருந்ததை 12 ஆம் தேதி பிரசுரித்திருப் பதற்காக 'லீடர்' பத்திரிகைக்கு நன்றி செலுத்தக் கட்மைப் பட்டிருக்கிறேன்.

"அவர் (ஸ்ரீ ராபர்ட்ஸன்), இந்தியா வாங்கி வந்த பிரிட்டிஷ் பருத்தி ஜவுளி அதிகமாகக் குறைந்துவிட்டதற்குக் காரணத்தைக் குறித்து வருமாறு கூறுகிருர் :

"யுத்தத்திற்குப் பிறகு ஏற்பட்ட கஷ்டங்களோ, பணக் கஷ்டமோ, பொதுமக்களின் ஏழ்மையோ இதற்குக் காரணம் அல்ல. ஏனெனில், இந்திய விவசாயி எப்பொழுதுமே மோசமான ஏழ்மையில்தான் இருந்து வருகிருன். பஞ்சங்கள் ஏற்பட்டதும் இதற்குக் காரணம் அன்று. ஏனெனில், இந்தியாவில் பஞ்சங்கள் ஏற்படுவது ஆண்டுதோறும் நேர்ந்துவரும் சம்பவம். ஆனல், இந்திய, ஜப்பானிய மில்களின் போட்டியினலும், அதையும்விட அதிகமாகக் கதரினலுமே பிரிட்டிஷ் துணி விற்பனை குறைந்திருக்கிறது. மற்ற காரணங்கள் எல்லாவற்றிலும் கதர்தான் பெரிய பூதம்போலத் தலையாய காரணமாகிறது. கதரையே உண்மையான விரோதியாக நான் கருதுகிறேன்.'

"கதரைக் குறித்தும், அதன் மூல புருடரான மகாத்மா காந்தியைப் பற்றியும் அவர் விவரித்திருப்பது மிக ருசிகரமானது. அவர் கூறுவதாவது :

"'நுட்பத் திறமையில்லாத, சாதாரணமான தொழிலாளர்கள் கையி ஞல் நூற்ற நூலைக்கொண்டு, நாகரிகமில்லாத தறிகளில் கிராமங்களிலேயே நெய்யப்பட்ட துணிதான் கதர். அது முரடாக இருக்கிறது. அத்துணியில் நிறைய முண்டு முடிச்சும் தப்பிழைகளும் உள்ளன. பார்க்க எப்பொழுதும் ஆபாசமாகவே இருக்கும். என்ருலும்,' அதையே விரும்புகிருர்கள். அதஞ லான உடைகளை அணிவதில் பணக்கார சுதேசிகளும் பெருமைப்படுகின்றனர். ஏனெனில், 'இந்தியா இந்தியருக்கே' என்று அதிக வேகமாக வளர்ந்து கொண்டு வரும் தேசீயக் கட்சியின் முழக்கத்திற்கு இதுவே திட்டமான உருவாக இருந்து வருகிறது. கதர் வாங்குவதற்குச் செலவிடும் பணத்தில் காலணவும் நாட்டைவிட்டுப் போவது இல்லை. அதை அணிபவர்கள், பட்டினி கிடக்கும் இந்தியாவின் கோடிக்கணக்கானவர்களுக்கு உணவு அளிக்கிருர்கள்; தம் நாட்டின் சுதந்திரத்தையும் முழங்குகிருர்கள்; கதர் அணிபவரே முதல் தர மான தேசபக்தர் என்கின்றனர். இந்தியாவிலிருக்கும் அந்நிய ஆட்சியை

எதிர்த்துப் போராடுவதற்கு, உண்மையில் மகாத்மா காந்தி கண்டுபிடித்திருக்கும் ஆயுதங்களில் கதரும் ஒன்று. பாதி முனிவரும், பாதிப் பித்தரும், முழு தேசாபிமானியுமான மகாத்மா காந்தி, தமது வாழ்க்கையின் மூலமும், இந்தியப் பத்திரிகைகளின் மூலமாகவும், இந்தியாவின் படித்த வகுப்பாரின் இதயங்களுக்கு இப்பொழுது பேசுகிறார். ஒத்துழையாமையைப் பற்றி இப்பொழுது பேசப்படவில்லை என்பதனால் இந்தியாவில் ஒத்துழையாமை செத்துவிடவில்லை. சந்தடியில்லாத, ஆபத்தான நடவடிக்கை என்ற கட்டத்திற்கு அது வந்துவிட்டது......ஸ்ரீ காந்தியின் சீடர்கள் பாமர மக்களை வசப்படுத்திக்கொண்டு விடுவார்களானால், பிரிட்டிஷ் சரக்கைக் குறைவாக வாங்கும் நாடாக இந்தியா இனி இராது; பிரிட்டிஷ் சரக்கை வாங்கவே வாங்காது......இந்தத் தாக்குதல் பருத்தி ஜவுளிக்கு எதிராக மாத்திரமல்ல. எல்லாப் பிரிட்டிஷ் சரக்குகளின் விற்பனையையும் அழித்துவிடுவதற்கு நிச்சயமான முயற்சியே இது.'

"இவர் இவ்விதம் கூறியிருப்பது, மகாத்மா காந்தியின் சிறந்த தலைமையின்கீழ் கதரைப் பரப்புவதற்காக வேலை செய்துகொண்டு வருவோருக்கு அதிக ஊக்கத்தையே அளிக்கும். அப்பெரும் அகிம்சா மூர்த்தி, ராட்டையின் மூலம் பொருளாதார சுதந்திரத்தை அடைந்துவிட முடியும் என்றும், அதைத் தொடர்ந்து அரசியல் சுதந்திரமும் தானே வரும் என்றும் நம்புகிறார். ஸ்ரீ ராபர்ட்ஸன் பீதியடைகிறார். ஒரு பரிகாரத்தையும் கூறுகிறார். இதுதான் அது: 'பிரிட்டிஷ் ராஜ்யத்தில் நம்பிக்கை ஏற்படும்படிச் செய்யவேண்டும். சாம்ராஜ்ய உணர்ச்சியை ஊட்டவேண்டும். பிரிட்டிஷ் ஆட்சிக்குத் தாங்கள் எவ்வளவு தூரம் கடமைப்பட்டிருக்கிறார்கள் என்பதைப் பாமர மக்கள் உணரும்படி செய்யவேண்டும். இவற்றையெல்லாம் பிரிட்டன் செய்தால், இந்தியாவில் திரும்பவும் நம் சரக்குகள் விற்பனையாகும்படி செய்துவிடலாம்.' சினிமாப் படங்களின்மூலம் பிரிட்டனுக்குச் சாதகமான பிரசாரத்தைச் செய்ய வேண்டும் என்கிறார். அப்படங்களை, ஒன்றுமறியாத இந்திய மக்களுக்கு இனமாகக் காட்ட வேண்டும் என்கிறார். மற்ற வகையிலும் பிரசாரம் செய்ய வேண்டும் என்கிறார். பத்திரிகைகளையும் அவர் அலட்சியம் செய்துவிடவில்லை. இந்த யோசனைகளையெல்லாம் நிறைவேற்றினால், 'இப்பொழுதாவது இந்தியாவை நமக்காகப் பாதுகாத்துவிட்லாம், அங்கே நமது சரக்குகளின் விற்பனையைத் திரும்பப் பெற முடியாத அளவுக்கு நாம் இன்னும் இழந்துவிடவில்லை' என்கிறார். வீண் தாமதம் செய்துவிடக் கூடாது என்கிறார். ஏனெனில், 'பிரைவார்க்கப்பட்டிருக்கும் தேசீய உணர்ச்சி இன்னும் கொஞ்ச வருடங்களுக்குள் முழுதும் அதன் வேலையைச் செய்துவிடும். அதை நீக்குவதற்காகச் செய்யும் முயற்சி காலங் கடந்து செய்யப்படுவதால் பலனளிக்காது போய்விடும்' என்கிறார். இதற்கு மத்தியில், 'இந்தியப் பருத்தியால் தயாரித்த லங்காஷயர் துணி,' 'இந்தியாவினிடம் அதிகம் வாங்குவது லங்காஷயரே', 'லங்காஷயர் துணியை வாங்குவது இந்திய விவசாயிக்கு உதவி செய்வதாகும்' என்பன போன்ற கருத்துக்களை நன்றாக விளம்பரப் படுத்துவதற்கான ஏற்பாடு எதையாவது செய்தாக வேண்டும். 'இவைகளையும், இவை போன்ற மற்ற பரிகாரங்களையும் உடனே அனுசரிக்காது போனால், லங்காஷயர் ஜவுளிக்கு இந்திய மார்க்கெட் நோய் பிடித்துவிட்டது என்பதல்ல, செத்துக்கொண்டிருக்கிறது என்பதே நிச்சயமாகிவிடும் எனத் தோன்றுகிறது' என்றும் முடிவாகக் கூறுகிறார் இவர் யோசனை கூறுவதைப் போன்ற முதலாளித்துவப் பிரசாரம்,

தேசீய இயக்கத்தின் வேகத்தைத் தடுத்துவிடும் என்று இவர் தவருக எண்ணுகிரூர். இந்தியாவிலிருக்கும் படித்தோரும் பாமரரும், என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ள முடியாத அப்பாவிகள் அல்ல. பொருளாதாரச் சுரண்டலுக்காக ஏற்பாடு செய்யப்படும் பிரசாரம், கதர் இயக்கத்திற்கு அதிகத் தீவிரத்தை அளித்து விடுவதோடு, ராட்டையின் பொருளாதார சாத்தியங்கள் முக்கியமானவை என்று இந்தியரில் இன்று எண்ணுமலிருப்பவர்களையும் ராட்டையைப் புதிய நோக்கோடு பார்க்கும்படியும் செய்துவிடும். யோசனை கூறப்பட்டிருப்பதைப் போன்ற பிரசாரம், கதர் வெற்றியடைந்துகொண்டு வருகிறது என்பதைத் தெளிவாக ஒப்புக்கொண்டு விடுவதாகவே ஆகும். சந்தேகிக்கிறவர்கள் என்ற ரகத்தில் இன்று இருப்பவர்களையும் இது கதரில் நம்பிக்கை கொள்ளும்படி தூண்டிவிடும். இரு நாடுகளுக்குமிடையே சரியான வகையில் உறவு இருந்துவரும்படி செய்து, இந்தியாவில் லங்காஷயர் வர்த்தகத்திற்கு ஆபத்தாக இருப்பதைப் போக்குவதைச் சுயநலப் பிரசாரத்தினுல் அடைந்து விட முடியாது. இந்தியரின் தேசீயக் கோரிக்கைகளைப் பெருமளவு ஏற்றுக்கொண்டு நிறைவேற்றி வைப்பதுதான் அதற்குச் சரியான வழி.''

கதர் ஒரு மிரட்டல் அல்ல என்பதைச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. சுயராஜ்யத்தைப் போன்று இது தேசீய வாழ்வின் உயிர். எவ்வளவுதான் தாராளமாக விட்டுக் கொடுத்தாலும், அதற்காக எப்படி சுயராஜ்யத்தை விட்டுக் கொடுத்து விட முடியாதோ அதே போலக் கதர் இயக்கத்தையும் விட்டுக் கொடுத்துவிட முடியாது. கதரைக் கைவிட்டுவிடுவது, பாமர மக்களை, இந்தியாவின் ஆன்மாவை விற்றுவிடுவதே ஆகும்.

—' எங் இந்தியா ' – 15—1—1928

# 18

# கைத்தறியும் ராட்டையும்

பாதுகாப்பதற்குத் தகுதியானது கைத்தறி ஒன்றுதான் என்றும், மில் நூலைக் கொண்டுதான் அதைப் பாதுகாக்க முடியும் என்றும் யோசனையே இல்லாமல் அடிக்கடி கூறப்பட்டு வருகிறது. இந்தக் கூற்றைக் குறித்து ஸ்ரீ ஸி. பாலாஜி ராவ் கீழ்வருமாறு எழுதுகிரூர் :

"ராட்டையின் முக்கியத்தைக் குறைத்துக் கூறிக் கைத்தறியைப் பிரமாதப்படுத்திக் கூறுவோருக்குச் சரியான பதில் இங்கே கொடுக்கப்பட்டிருக்கிறது: 'கையினுல் இழுக்கப்படும் பங்காவுக்குப் பதிலாக எவ்விதம் மின்சார விசிறி புகுத்தப்படுகிறதோ அதே போலக் கைத்தறிகளுக்குப் பதிலாக விசைத் தறிகளை அமைப்பது தவிர்க்க முடியாதது என்று லார்டு கர்ஜான் டில்லி தர்பாரில் தமது இலாகா விஞ்ஞான ஆலோசகர்களின் அபிப்பிராயங்களை எடுத்துக் கூறுகையில் சொன்னுர்.''

ராட்டையைக் கொண்டல்லாமல் மில் நூலைக்கொண்டோ, வேறு வகையிலோ கைத்தறி நீண்ட காலம் உயிர் பெற்றிருக்கும் படிச் செய்ய முடிவதாக இருந்தால், லார்டு கர்ஜானின் கூற்று முடிவான பதில் என்று கொள்ள வேண்டியது இல்லை. லார்டு கர்ஜானின் ஜோசியம் எதுவாக இருந்தாலும், கையினால் நூற்பது கைத்தறியைக் காப்பாற்றும் என்பதைத் தினமும் இப்பத்திரிகையில் தெளிவாக எடுத்துக் காட்டி வந்திருக்கிறேன் என்றே நம்புகிறேன். உண்மையில் நமது தேசீய வாழ்வில் ராட்டை அதன் புராதனமான அந்தஸ்தைத் திரும்பவும் பெற்றுவிடுமாயின், கைத்தறியும் நமது மற்றும் பல குடும்பத் தொழில்களும் தாமே புத்துயிர் பெற்றுவிடும்.

—' எங் இந்தியா '— 23—2—1928

# 19

# நிச்சயமான தேவை ராட்டையே

ஐக்கிய மாகாணத்தில் அக்பர்பூர் என்பது சிறிய ஊர். இங்கே பேராசிரியர் கிருபளானியின் கதர் கோஷ்டியினர் ஏழு ஆண்டுகள் வேலை செய்தனர். பிறகு அக்கோஷ்டியினர் அவ்வூரை விட்டுப் போய்விட நேர்ந்தது. அதன் காரணத்தைக் குறித்து இப்பொழுது நான் கவனித்துக்கொண்டிருக்க வேண்டியது இல்லை. அக்கதர்த் தொண்டர்கள் போய்விட்ட பிறகு அங்கே ஏற்பட்டிருக்கும் உள்ளத்தை உருக்கும் காட்சியைக் குறித்தும், எப்படியாவது அங்கே எவ்விதம் கதர் நிலையத்தை நடத்தியாக வேண்டிவந்தது என்பதைப் பற்றியும் பண்டித ஜவாஹர்லால் நேரு விவரிக்கிறார் அகில இந்திய நூற்போர் சங்கத்திற்கு அவர் எழுதியிருக்கும் கடிதத்தின் கீழ்க்கண்ட பகுதி மிகவும் ருசிகரமானதாக இருக்கும் :

'' அக்பர்பூரிலிருந்து காந்தி ஆசிரமம் போய்விட்டது என்பதை உங்களுக்கு முன்னாடியே கூறியிருக்கிறேன். உங்கள் முடிவை எதிர்பார்த்து நாங்கள் அவ்வேலையை நடத்திக்கொண்டு போகவேண்டியிருப்பதால், தாற்காலிகமாக அவ்வேலையை நாங்கள் ஏற்றுக்கொண்டிருக்கிறோம். நாங்கள் மேற்கொள்ளாது போனால், வேலை அடியோடு நின்று போய், திரும்பவும் புதிதாக ஆரம்பிப்பது அதிகக் கஷ்டமானதாக இருக்கும். அதோடு பச்சாதாபம் காரணமாகவும் அந்த இடத்தைக் கைவிட்டுவிடுவது கஷ்டமானதாக இருக்கிறது. அநேக ஆண்டுகளாக அது பிரபலமான கதர் உற்பத்தி நிலையமாக இருந்து வந்திருக்கிறது. ஏராளமான நெசவாளர்களும் மற்றவர்களும் அதனுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்திருக்கிறார்கள். அப்படி இருக்க, அதைத் திடீரென்று கைவிட்டுவிடுவதால் அதைச் சுற்றிலுமே கெடுதல் உண்டாவதோடு அதை நம்பி வாழ்ந்துகொண்டிருந்த அநேக குடும்பத்தினரின் செல்வ நிலையும் சிதறுண்டு போகும். உண்மையில், காந்தி ஆசிரமத்தை மூடிவிடப் போவதாக

அவர்கள் அறிவித்த போது, நெஞ்சை உருக்கும் சில சம்பவங்கள் அங்கே நிகழ்ந்ததாகவும் கேள்விப்படுகிறோம். நூற்கும் அநேக கிழவிகள், தாங்கள் நூற்கும் நூலைத் தூரத்திலுள்ள கதர் நிலையத்தில் விற்றுவந்தார்கள். அந்த நிலையம் மூடப்பட்டுவிட்டது என்பதை அறிந்ததும், அநேக மைல்கள் தூரம் நடந்து தலைமைக் காரியாலயத்திற்கே வந்தார்கள். அங்கும் தங்கள் நூல் வாங்கப்படாததைக் கண்டதும் அழுதுவிட்டார்கள். அநேக நெசவாளர்கள், தங்கள் மனைவிகளுடனும் குடும்பத்துடனும் அக்பர்பூர் காரியாலயத்திற்கு வந்து தாங்கள் சத்தியாக்கிரகம் செய்யப் போவதாகவும் சொன்னார்கள். ஏழு ஆண்டுகளாக அவர்கள் ஆசிரமத்திற்காக வேலை செய்து வந்தனர். இப்பொழுது அவர்கள் நடுத்தெருவில் விடப்பட்டுவிட்டார்கள். இந்த நிலைமையில் அந்த வேலையை மேற்கொண்டு நடத்த நாங்கள் மறுத்துவிடுவது எவ்வளவு கஷ்டமானது என்பதை நீங்கள் அறியலாம். ஆனால், பச்சாதாபம் என்ற காரணம் மாத்திரம் இவ்விஷயத்தை முடிவு செய்துவிட முடியாது என்பது உண்மை. அக்பர்பூரில் குறிப்பிடத்தக்க சில சௌகரியங்கள் இருக்கின்றன. அதே சமயத்தில் ஒரு பெரிய அசௌகரியமும் இருக்கிறது. நெசவுத் திறமைக்கு இது பிரபலமான இடம். இன்றுகூட இந்தியாவிலேயே மிக உயர்ந்த நெசவு வேலை பக்கத்திலிருக்கும் தண்டா என்ற இடத்தில் நடந்து வருகிறது. ஜம்தானி வேலை என்று சொல்லப்படும் இந்த உயர்ந்த ரக நெசவை, துரதிருஷ்டவசமாக அந்நிய நாட்டு நூலைக்கொண்டு செய்து வருகின்றனர். ஆனால், இதற்கு நேர்மாறாக, அக்பர்பூர் பக்கத்தில் கையினால் நூற்கப்படுவது மிகவும் குறைவு. இந்த நிலையத்தில் வேலை நடந்து வர வேண்டுமானால், அதற்கு அவசியமான நூலை வேறு இடங்களிலிருந்துதான் கொண்டுவர வேண்டும். காந்தி ஆசிரமம், எல்லை தாண்டி பீகாரிலிருந்தும், முஜபர்பூரிலிருந்தும் நூலைக் கொண்டு வந்தது என்றே எண்ணுகிறேன் ஐக்கிய மாகாணத்தின் வடக்கு ஜில்லாக்களான மோரதாபாத், பிஜ்னோர் முதலிய இடங்களிலிருந்து நூலைக் கொண்டு வருவது எங்களுக்குச் சுலபமாக இருக்கும். நூலை அனுப்பும் செலவும் அதிகம் அல்ல.''

நெய்யையோ, உணவு தானியங்களையோ போன்று எளிதில் செலவழிந்து விடுவதாகக் கதர் இருக்குமாயின், ஒரு நிலையத்திலிருந்து போய்விட வேண்டியதைக் குறித்து எண்ணவேண்டியே வராது. நமக்கு நிதியும் ஊழியர்களும் இருந்தால், 1,600 கிராமங்களில் மாத்திரம் அல்ல, ஏழு லட்சம் கிராமங்களிலும் நமக்குப் பிரதிநிதிகள் இருப்பார்கள். இந்தக் கிராமங்கள் ஒவ்வொன்றிலும் அந்நிய ஆட்சியின் பிரதிநிதிகள் இரண்டு பேராவது இருக்கிறார்கள் என்ற உண்மையை எண்ணிப்பார்க்கும்போது, இது காரியத்தில் நடக்க முடியாத ஆசையே அல்ல. பிரிட்டிஷ் ஆட்சி இங்கே ஏற்படுவதற்கு முன்னால், அத்தகைய யோசனையை யாராவது சொல்லியிருப்பாரானால், அவரைப் பார்த்துச் சிரித்துப் பரிகசித்திருப்பார்கள். ஜனநாயக ஆட்சி நடந்து வந்த இந்தியாவின் கிராமங்களில், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிரதிநிதிகள் இருப்பார்கள் என்று நம்புவது 17-ஆம் நூற்றாண்டில் அதிகச் சிரிப்புக்கிடமானது. ஆனால், ஒவ்வொரு கிராமத்திலும் திரும்பவும் ராட்டை இருக்கும்படி செய்வது என்பது, அதில் பாதிக்கூட சிரிப்புக்கு இடமானதாக இராது. ஆழ்ந்து சிந்தித்தால் இது

விளங்கும். புராதனமான இந்நாட்டின் ஒவ்வோர் கிராமத்திலும் உணரப்படும் முக்கியமானதோர் தேவையை ராட்டை எவ்விதம் பூர்த்தி செய்கிறது, பூர்த்தி செய்யும் என்பதை, அக்பர்பூருக்கு அருகிலுள்ள பெண்கள் கூறியதாகச் சொல்லப்படுவது தெளிவாக எடுத்துக்காட்டுகிறது. அக்பர்பூரிலிருக்கும் நெசவாளர்கள், அரை நூற்ருண்டுக்கு முன்னுல் வரையில், தங்களுக்கு அக்கம்பக்கத்தில் வசிக்கும் தங்கள் சொந்த சகோதரிகளின் தெய்வீகமான கரங்களினுல் நூற்ற நூலைக்கொண்டு, எங்கும் புகழ் பெற்றதான தங்கள் ஜம்தானியை நெய்து பெருமைப்பட்டு வந்தனர். அதே திறமை மிக்க அக்பர்பூர் நெசவாளர்கள் தங்கள் ஜம்தானியை நூற்பதற்கு அந்நியநாட்டு நூலுக்குப் போக வேண்டியிருக்கிறது என்ருல், அது நமது தேசாபிமானத்திற்குக் கௌரவம் ஆகாது. இன்று நம் கடைகளில் வந்து குவியும் அந்நிய நாட்டு நூல் எதையும்விடச் சிறந்ததும், பலமானதுமான நூலை நமது கிராமங்களிலிருக்கும் நூற்போரால் சீக்கிரத்திலேயே நூற்க முடியும்.

—'எங் இந்தியா' – 23—3—1928

# 20

# கதருக்கு உரிய இடம்

அந்நியத் துணி பகிஷ்காரத்தை நடத்துவதில், நாட்டின் நன்மைக்கான முறையில், மில் சொந்தக்காரர்களின் தீவிரமான ஒத்துழைப்பைப் பெறலாம் என்று நான் நம்புவது வீணை நம்பிக்கை என்று கதர் அன்பர்கள் எனக்குக் கூறுகின்றனர். மில் சொந்தக்காரர்களுடன் நான் உறவுகொள்ளுவதைக் குறித்து என்னைத் தீவிரமாக எச்சரிக்கை செய்தும் எனக்கு எழுதுகிருர்கள். அவர்களுடைய எச்சரிக்கையைப் பாராட்டுகிறேன். இவர்களில் சிலர், கதர் இயக்கத்தில் தேர்ந்த, அனுபவமுள்ள ஊழியர்கள். ஆனுல், மில் சொந்தக்காரர்கள் என்ருவது ஒரு நாள் தேசீயக் கருத்துக்குத் திரும்புவார்கள் என்ற நம்பிக்கையை நான் கைவிட்டுவிடவில்லை. அகிம்சா முறையில் முழுக்க முழுக்க நம்பிக்கையுள்ளவன் நான். அந்த வகையில், இந்தியாவின் நன்மைக்கான இந்தியக் கருத்துக்கு ஆங்கிலேயரை மாற்றுவதற்குள்ள எந்தச் சந்தர்ப்பத்தையும் நான் எப்படிக் கைவிட்டுவிடக் கூடாதோ அதே போல, தேசீயக் கருத்துக்கு மில் சொந்தக்காரரை மாற்றுவதற்குள்ள சந்தர்ப்பத்தையும் நான் நழுவ விட்டுவிடக்கூடாது. எப்படியும் அகிம்சா முறையைக் கொண்டுதான் நாம் சுதந்திரத்தை வென்ருக வேண்டும் என்ருல், இதற்குள்ள வழியில் முட்டுக்கட்டை போடுகிறவர்களின் வீடுதோறும் நாம் சென்று, அந்த முட்டுக்கட்டையை நீக்கும்படி அவர்களை நாம் கேட்டுக் கொள்ளவே

வேண்டும். ரத்தத்தைச் சிந்தும் புரட்சியின் வழியில் முட்டுக் கட்டையாக நிற்கிறார்கள் என்று கருதப்படுகிறவர்கள், அவர்கள் சொந்த நாட்டினராயிருந்தாலும் அந்நியராயிருந்தாலும், அதற்காக அவர்கள் உயிரையே முடிவில் கொடுக்க நேருகிறது. அதே போல, அகிம்சைப் புரட்சியிலும், அவர்கள் சொந்த நாட்டினராயினும் அந்நியராயினும், நியாயத்திற்கு உடன்பட மறுப்பார்களாயின், பிடிவாதமாக இடையூறாக இருந்து வருவார்களானால், அவர்களை எதிர்த்துச் சத்தியாக்கிரகமே செய்ய வேண்டி வரும்.

ஆகையால், மில் சொந்தக்காரர்கள் என்ன நிபந்தனையின் பேரில் நாட்டு மக்களுடன் ஒத்துழைக்கலாம் என்று சொன்னதில் தீமை எதுவும் இருப்பதாக நான் காணவில்லை. அப்படிச் சொல்லாமலிருந்தால்தான் தவறாக இருக்கும். நிபந்தனையை அவர்கள் ஒப்புக் கொள்ளுவார்களானால், கதருக்கு, அதாவது பாமர மக்களுக்கு அதனால் நஷ்டம் எதுவும் இல்லை என்பதை அறிவேன். ஏனெனில், மில்கள் இப்பொழுது செய்து கொண்டிருப்பதைப் போன்று பாமர மக்களைச் சுரண்டுவதற்கு வேலை செய்யாமலிருந்தால், குடிசையிலிருக்கும் ராட்டையும் கைத்தறியும் உற்பத்தி செய்வது போக மீதமிருக்கும் தேவைக்கு உற்பத்தி செய்பவைகளாக இருந்தும் வரும். ராட்டையும் கைத்தறியும் உற்பத்தி செய்பவைகளுக்குப் பதிலாக மில்கள் இப்பொழுது உற்பத்தி செய்து வருவதைப் போன்று இருக்க மாட்டா. நான் கூறியிருக்கும் நிபந்தனைகளை அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை என்றால், அதற்கு ஒரு காரணம் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. உண்மையில், இந்நாட்டு மக்களின் ஊழியர்களாக இருப்பது என்பது ஆங்கிலேயருக்கு அருவருப்பானதாக இருப்பதைப் போன்று, நான் கூறும் நிபந்தனைகளினால் ஏற்படுவதான முடிவும் மில்காரர்களுக்கு அருவருப்பாக இருப்பதனாலேயே அவற்றை ஏற்றுக்கொள்ளத் தயங்குகிறார்கள். ஆகையால், அவர்களுடன் நான் ‘உறவு கொண்டாட’ப் பார்ப்பதைக் குறித்துப் பயந்துவிட வேண்டாம் என்று கதர் அன்பர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். நமது நம்பிக்கையில் நாம் உறுதியுடன் இருந்து வருவோமானால், கதருக்கு இயல்பாகவே என்னென்ன சக்திகள் இருக்கின்றன என்று நாம் சொல்லி வருகிறோமோ அவை அதற்கு இருக்குமாயின், அது பாமர மக்களுக்குத் தேவையே என்றால், நாம் தொடர்ந்து அவர்களோடு விடாமல் முயற்சியும் செய்துகொண்டு வருவோமானால், மில்காரர்கள் அதை உணரத் தவறிவிடமாட்டார்கள். கதரினிடமிருக்கும் நம்பிக்கையைக் கதர் அன்பர்கள் இழந்து விடும் போதோ, அல்லது அவர்கள் நம்பிக்கை வெறும் நிழலையே அடிப்படையாகக் கொண்டதாக இருக்கும் போதோ, அதாவது பாமர மக்களிடையே வறுமைப் பிணி கொடுமையாக இல்லாத போதோதான் கதர் தோற்றுப் போகும். அல்லது, அநேக கோடிக்கணக்கானவருக்கு ஓய்வு நேரம் இருந்தும், அவர்களுக்கு

மிகவும் ஏற்றதாகவும், அனுபவ சாத்தியமானதாகவும் ராட்டை இல்லாதிருக்கும்போதும் கதர் தோற்றுப் போகும்.

மேலே சொன்னவைகளைப் பொறுத்த வகையில், கதரில் எனக்குத் திடமான நம்பிக்கை இருப்பதனாலும், அந்த நம்பிக்கையினால் பிறந்த பலத்தைக் கொண்டும் மில்காரர்களுடன் உறவு கொண்டாட நான் முயன்று வருகிறேன். இந்தச் சமரசப் பேச்சுக்களினால் உடனடியான நன்மை எதுவும் ஏற்படாது என்றிருக்கலாம்; ஏற்படாது என்பது இன்று ஒரு வேளை நிச்சயமாகவும் இருக்கக்கூடும். ஆனால், இதற்குள் நாம் அந்நியத் துணி பகிஷ்காரத்தை அடைந்து விடாமலிருந்தால், மேற்கொண்டு நடவடிக்கை எடுக்க வேண்டியதற்கும், வழிகாட்டியாக இருப்பதற்கும் அது பயன்படும்.

ஆகையால், திரும்பத் திரும்பச் சொல்லுவதாக இருந்தாலும், பகிஷ்காரத் திட்டத்தில் கதருக்கு இருக்கும் இடம் என்ன என்பதை ஆராய்வது பயனுள்ளதாகும். அந்நியத் துணி பகிஷ்காரம் பாமர மக்களைத் தூண்டுகிறது; அவர்களுக்கு நன்மை அளிக்கிறது. அவர்கள் ஒத்துழைத்தால்தான் இதில் வெற்றி பெற முடியும். எனவே, இந்தப் பகிஷ்காரம் அவசியமானது, சாத்தியமானது என்பது என் கருத்து. இந்த அந்நியத் துணி பகிஷ்காரத்தை இந்திய மில்களை மாத்திரமே கொண்டு நிறைவேற்றிவிடுவதானால், அதனால் கிடைக்கும் பலம் தாற்காலிகமானதாகவே இருக்கும். இந்திய மில்கள் என்ற ஒன்றை மாத்திரம் கொண்டு பகிஷ்காரத்தை நிறைவேற்றிவிடுவது இப்போதைக்குச் சாத்தியமானது அல்ல என்றும் கருதுகிறேன். அத்தகைய பகிஷ்காரத்தை நடைமுறை சாத்தியமான காரியமாகச் செய்திருப்பது கதர் ஒன்றுதான் என்பதும் என் அபிப்பிராயம். ராஜீய அறிவு படைத்த இந்திய மக்கள் கதர் விற்பனையை மேற்கொள்ளுவார்களானால், அந்நிய மில் துணியோ, இந்திய மில் துணியோ ஒரு கெஜம்கூட கிடைக்காது என்றாலும், நாட்டுக்கு வேண்டியிருக்கும் கதர் முழுவதையும் ஒரே ஆண்டில் உற்பத்தி செய்துவிடுவது சாத்தியம். உண்மையில் கதரே அவ்வாறு காரிய சாத்தியமானது. கிராமங்களில் பெரும்பாலும் தங்களுக்கு வேண்டிய கதரையே உற்பத்தி செய்து கொண்டிருப்பார்கள், ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் கதர் நிலையங்கள் சுயதேவைக்காக நூற்காதவர்களுக்காக கதரை உற்பத்தி செய்யும் என்பதை அடிப்படையாகக் கொண்டே இதை நான் உறுதியாகக் கூறுகிறேன். நாட்டில் திடீரென்று துணிப் பஞ்சம் ஏற்பட்டு, பொது மக்கள் ஊக்கமளிக்கப்படுவார்களானால், அவர்களுக்கு வேண்டிய துணியை அவர்களே தயாரித்துக் கொள்ளுவதற்கு வேண்டிய ஆற்றலும் சுதேசி யந்திரங்களும் இருக்கின்றன. சென்ற ஏழு வருட அனுபவம் இதைத் தெளிவாகக் காட்டுகிறது. ராஜீய அறிவு படைத்திருக்கும் இந்தியர்களின் புத்திப் போக்கிலும், உடை

யைப் பற்றிய ருசியிலும் புரட்சிகரமான மாறுதல் ஏற்படுவது அவசியம் என்பதில் சந்தேகமில்லை. மில்காரர்களில் பெரும்பாலானவர்கள் இப்பொழுது உடன்பட்டு வரவில்லை என்றால், கதர் எதிர்க்க முடியாததாகிவிட்டது என்பதை அவர்கள் அறிந்து கொண்டதும் அவர்கள் உடன்பட்டே ஆவார்கள். கதரை எதிர்க்க முடியாததாகச் செய்வதற்குக் கதர் ஊழியர்கள் உறுதியோடும், யோக்கியப் பொறுப்போடும், விஞ்ஞானத் திறமையோடும், நுட்பமாகவும் வேலை செய்ய வேண்டும். மில்காரர்களோடு உறவு கொண்டாடப் பார்த்தேன். அவர்களுடன் சேர்ந்து அந்நியத் துணி பகிஷ்காரத்தை உடனே நிறைவேற்றி விடுவதற்கான சாத்தியங்களைக் குறித்து அவர்களோடு விவாதித்தேன். இதை அவர்கள் ஏற்று நடந்தால், அவர்கள் தங்களுடைய நன்மையைத் தேடிக்கொள்ளும் அதே சமயத்தில் நாட்டு மக்களுக்குச் சேவை செய்யும் பாக்கியத்தையும் தாங்களே தேடிக்கொள்ளலாம் என்பதை அவர்களுக்குக் காட்டுவதற்காகவே முயன்றேன். இதற்கு மத்தியில் கதர், சந்தடி எதுவும் இல்லாமல், நாட்டு மக்களின் உடை சம்பந்தமான ருசியில் பெரிய மாறுதலை உண்டாக்கி வருகிறது. பகிஷ்காரம், நான் யோசனை கூற முற்பட்ட கூட்டினால் நிறைவேறிவிடும் என்று எதிர்பார்க்க முடியாவிட்டாலும், கதர் அதற்குரிய காலத்தில் அதை நிறைவேற்றிவிடும் என்பதில் யாருக்கும் சந்தேகம் வேண்டாம்.

—'எங் இந்தியா' – 12—4—1928

## 21

# பாதையை விட்டு

சில்லறை விஷயங்களை யெல்லாம் கிளப்பியும், முக்கியமான விஷயத்திற்கு ஆதாரமானவைகளில் குற்றங் குறைகளைக் கண்டு பிடித்துக்கொண்டும், கண்டுபிடிப்பதாகச் சொல்லிக்கொண்டும் மக்களின் மனதைக் குழப்புவதற்காக அரசாங்கமும், அரசாங்கத்தின் சார்பிலும் அற்புதமான முயற்சிகள் செய்யப்படுகின்றன. இந்தியாவின் கைத்தொழில் நாசத்தையும், இந்தியரின் மனிதத் தன்மையின் நாசத்தையும் கொண்ட சரித்திரமே தனது சரித்திரம் என்பதை அரசாங்கத்தினால் ஒப்புக்கொண்டுவிட முடியவில்லை. கிழக்கிந்தியா கம்பெனியின் எமகிங்கரர்கள், நெசவாளர்கள் பட்டைத்தான் சுற்ற வேண்டும் என்று கட்டாயப்படுத்தியபோது, அவர்கள் தங்கள் கட்டை விரல்களையே துண்டித்துக் கொண்டுவிட்டார்கள் என்ற கதை பத்திரிகைகளிலும் மேடைகளிலும் அடிக்கடி சொல்லப்பட்டு வருகிறது. இக்கதை உண்மையல்ல என்று சொல்லிவிட அரசாங்கம் முற்பட்டிருப்பது,

அரசாங்கம் சமீபத்தில் செய்திருக்கும் முயற்சிகளில் ஒன்று. நெசவாளிக்குக் கைக் கட்டைவிரல் இல்லையானால், அவர்கள் செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கப்படும் வேலையை அவர்களால் செய்ய முடியாது. கைக் கட்டைவிரல் வெட்டப்பட்டதைக் குறித்து முதன் முதலில் கூறியவர், ராமேஷ் சந்திர தத். வில்லியம் போல்ட்ஸ் என்பவரின் சாட்சியத்தை ஆதாரமாகக் கொண்டே அவர் கூறினர். அந்த வில்லியம் போல்ட்ஸின் யோக்கியப் பொறுப்பைக் குறித்து இப்பொழுது தோண்டியெடுத்துச் சரித்திரம் உண்மையல்ல என்று மறுக்கப்படுகிறது. வில்லியம் போல்ட்ஸ் கூறியது பொய்ச் சாட்சியம் என்று சொல்லிவிட, இதை மறுத்து எழுதியிருப்பவரால் முடியவில்லை. ஆனல், வில்லியம் போல்ட்ஸ் நல்லொழுக்கமுள்ளவர் அல்ல என்றும், ஆகவே அவருடைய சாட்சியம் நம்பக்கூடியது அல்ல என்றும் சொல்லுகிறர். மேலும், அவர் கம்பெனியின் வேலையிலிருந்து நீக்கப்பட்டுவிட்டவர் என்கிறர். கம்பெனி அவரை நீக்குவதற்குப் பிறப்பித்த உத்தரவில், "இவன் கம்பெனியின் ஊழியர்களில் யோக்கியமற்றவன்; கம்பெனிக்குப் பயனில்லாதவன். உள்நாட்டு வர்த்தக சம்பந்தமான அழிக்கத்தக்க கொள்கையைப் பிடிவாதமாகக் கொண்டதில் இவன் முக்கியமானவன். இதில் அதிகக் கொடுமையாகவும் நடந்துகொண்டதாகத் தெரிகிறது" என்று கூறப்பட்டிருக்கிறதாம். நல்ல ஒழுக்கம் இல்லாதவன் எப்பொழுதும் உண்மையைச் சொல்லவே முடியாது என்பதைப் போலச் சில அற்பமான வக்கீல்கள், சாட்சிகள் கெட்ட நடத்தையுள்ளவர்கள் என்று கூறி அவர்கள் சாட்சியம் மெய்யல்ல என்று நிரூபித்துவிடச் செய்யும் தந்திரங்கள் யாருக்குத்தான் தெரியாது? வில்லியம் போல்ட்ஸின் நடத்தை எப்படியிருந்தாலும், கைக் கட்டைவிரல்கள் வெட்டப்பட்டது சம்பந்தமான அவன் சாட்சியம் உண்மையல்ல என்று வேறு வகையில் நிரூபிக்கப்பட்டாலன்றி, அவன் சாட்சியம் பொய்யாகிவிடாது. அவன் சாட்சியம் நம்பக் கூடியது அல்ல என்று காட்டுவதற்குத் தக்க ஆதாரங்களும் கூறப்படவில்லை. இதை நான் தைரியமாகக் கூறுவேன். நெசவாளர்கள் தொடர்ந்து சகிக்க முடியாத கொடுமைகளுக்கு ஆளாகி வந்திருக்கின்றனர். ஆகையால், தாங்க முடியாத தண்டனையாகத் தங்களுக்கு விதிக்கப்பட்டிருக்கும் வேலையைச் செய்து துன்பப்படுவதைவிட, அந்த வேலைக்குத் தகுதியற்றவர்களாகத் தங்களைச் செய்துகொண்டு விடுவதற்காக நெசவாளர்கள் தங்கள் கைக் கட்டைவிரல்களைத் துண்டித்துக் கொண்டிருக்கக்கூடும் என்பதில் என்ன சந்தேகம்? ராமேஷ் சந்திர தத், இந்தியாவின் கைத்தொழில்கள் நாசமாக்கப்பட்ட கதையை விளக்கமாகக் கூறியிருக்கிறர். இதற்கு ஆதாரமாக அநேகருடைய சாட்சியங்களையும் எடுத்துக்காட்டியிருக்கிறர். அந்த சாட்சியங்களினல், அந்த விவரம் மறுக்கவே முடியாததாகிறது. இதில் வில்லியம் போல்ட்ஸின் சாட்சியம் ஒரு பகுதி மாத்திரமே. இக்கைத்தொழில், வேண்டும் என்றே பெரிய திட்டமிட்டு அழிக்கப்பட்டதா, இல்லையா என்பதுதான் முக்கியமான

விஷயம். அப்படி அழிக்கப்பட்டது உண்டு என்ருல், ஒருவரின் சாட்சியம் நிராகரிக்கப்படுவதனுல் மாத்திரம் வித்தியாசம் எதுவும் ஏற்பட்டுவிடாது. நூறு சாட்சிகளில் ஒரு சாட்சி கூறியது பொய் என்று குற்றவாளி சொன்னுல், அதை நம்புவதற்கு மில்லே. ஆனுல், இவ்விஷயத்தில் நான் கூறியதைப் போல, வில்லியம் போல்ட்ஸின் சாட்சியம் நம்பக்கூடியது அல்ல என்று காட்டுவதற்குப் பொருத்தமானது எதுவும் எடுத்துக் காட்டப்பட்டுவிடவில்லே. என்ருலும், 'இந்தியாவின் பொருளாதார சரித்திரம்' என்று தத் எழுதிய நூலின் முதல் பாகத்தில் இது சம்பந்தமாகக் கூறப்பட்டிருப்பதை வாசகர் முன்பு வைக்கிறேன். அவர் கூறுவதாவது :

"முந்திய இரு அத்தியாயங்களில் எடுத்துக்காட்டப்பட்டிருக்கும் உண்மைகளிலிருந்து, பத்தொன்பதாம் நூற்ருண்டின் ஆரம்ப காலங்களில் இந்திய மக்களில் பெரும் பகுதியினர் பல தொழில்களிலும் ஈடுபட்டிருந்தார்கள் என்பது தெரியவரும். அப்பொழுதும், மக்களின் தேசீயத் தொழிலாக நெசவு இருந்து வந்தது. கோடிக்கணக்கான பெண்கள், நூற்பதால் கிடைக்கும் வருவாயைக் கொண்டு குடும்பத்தை நடத்திக்கொண்டிருந்தார்கள். சாயம் போடுவது, தோல் பதனிடுவது, உலோகங்களேக்கொண்டு வேலே செய்வது ஆகியவைகளில் கோடிக்கணக்கில் ஈடுபட்டிருந்தனர். இந்தியத் தொழில்களே வளர்ப்பது என்பது கிழக்கிந்தியாக் கம்பெனியின் கொள்கை அல்ல. வங்காளத்தில் கோராப் பட்டு உற்பத்தியை ஊக்குவிப்பது, பட்டாடைகள் உற்பத்தியாகாமல் செய்வது என்று 1769-ஆம் ஆண்டிலேயே டைரக்டர்கள் விரும்பினர்கள் என்பது முந்திய அத்தியாயம் ஒன்றில் கூறப்பட்டிருக்கிறது. பட்டு நூல் சுற்றுகிறவர்கள், கம்பெனியின் தொழிற்சாலேகளிலேயே வேலே செய்யும்படிச் செய்ய வேண்டும், வெளியில் வேலே செய்வதைத் தடுத்துவிடவேண்டும் என்றும் அவர்கள் உத்தரவு போட்டார்கள். தனியாக வேலே செய்தவர்களுக்கு, அரசாங்கத்தின் அதிகாரத்தின் பேரில், கடுமையான தண்டனேயையும் விதித்தார்கள். இந்த உத்தரவினுல் அவர்கள் விரும்பிய பலன் கிடைத்தது. இந்தியாவில் பருத்தி, பட்டு ஜவுளி உற்பத்தி குறைந்து போயிற்று. முந்திய நூற்ருண்டில் இந்த ஜவுளியை ஐரோப்பிய, ஆசிய மார்க்கெட்டுகளுக்கு ஏற்றுமதி செய்துகொண்டிருந்த மக்கள், நாளுக்கு நாள் ஜவுளிகளே வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்துகொள்ள ஆரம்பித்தார்கள்."

இத்தகைய முறைகளினுல் இங்கிலாந்திலிருந்து பருத்தி, பட்டு ஜவுளி இறக்குமதி ஊக்குவிக்கப்பட்டது. 1794-இல் 156 பவுனுக்கு இறக்குமதியான அந்த ஜவுளி, 1813-இல் 1,08,824 பவுனுக்கு அதிகரித்தது. கம்பெனியின் சாசனம் 1813-இல் புதுப்பிக்கப்பட்டது. அப்படிப் புதுப்பிப்பதற்கு முன்னுல் நடந்த விசாரணேயில் முக்கியமான சாட்சியம் வாங்கப்பட்டது. இந் நூலாசிரியர் கூறுவதாவது: "இந்தியாவில் உற்பத்தியான பொருள்கள் சம்பந்தமாக, அவைகளுக்குப் பதிலாகப் பிரிட்டிஷ் சரக்குகளே எப்படிப் புகுத்துவது, இந்தியத் தொழில்களே அழித்துப் பிரிட்டிஷ் தொழில்களே எப்படி வளர்ப்பது என்பதைக் காமன்ஸ் சபையினர் ஆராய்ந்தார்கள்."

ஹென்றி செயிண்ட் ஜார்ஜ் டக்கர், இங்கிலாந்தின் வர்த்தகக் கொள்கையைக் குறித்துக் கீழ் வருமாறு விவரிக்கிறார் :

"இந்தியாவின் சம்பந்தமாக நாம் இந்நாட்டில் அனுசரித்து வந்திருக்கும் வர்த்தகக் கொள்கை என்ன? பட்டுத் துணிகளும், பட்டும் பருத்தியும் சுலந்து நெய்த துணிகளும் நீண்ட காலமாகவே நமது மார்க்கெட்டுகளிலிருந்து விலக்கப்பட்டுவிட்டன. இறக்குமதியாகும் ஜவுளிக்கு இப்பொழுதே 67 சத விகிதம் தீர்வையை நாம் விதித்திருப்பதனாலும், ஆனால், முக்கியமாக உயர் வான யந்திரங்கள் நம்மிடம் இருப்பதாலும், இதுவரையில் இந்தியாவிலிருந்து மாத்திரமே வந்துகொண்டிருந்ததான ஜவுளிக்குப் பதிலாக இந்நாட்டில் நாம் தயாரிக்கும் ஜவுளி புகுத்தப்பட்டிருப்பதோடு நம் ஆளுகையில் இருந்துவரும் ஆசிய நாடுகளின் உபயோகத்திற்கு ஒரு பகுதியாக நமது பருத்தி ஜவுளியை ஏற்றுமதியும் செய்து வருகிறோம். இவ்விதம் பல பொருள்களை உற்பத்தி செய்துகொண்டிருந்த இந்தியா, வெறும் விவசாய நாடு என்ற நிலைமைக்குக் கொண்டு வரப்பட்டுவிட்டது."

ஹெச். ஹெச். வில்ஸனின் இதே போன்ற மற்றொரு சாட்சியம் பின்வருமாறு :

"இந்தியா எந்த நாட்டிற்கு அடிமைப்பட்டதாகி விட்டதோ அந்த நாடு, இந்தியாவுக்குச் செய்த தவறுக்கு இதுவும் மற்றுமோர் துக்ககரமான விஷயம். அந்தக் காலம் வரையில், இந்தியாவின் பருத்தி, பட்டு ஜவுளிகள், இங்கிலாந்தில் தயாரான ஜவுளியைவிட, பிரிட்டிஷ் கடைகளில் 50 முதல் 60 சத லாபத்திற்கு விற்க முடிந்தது என்று 1813-ல் அளித்த சாட்சியங்களில் கூறப் பட்டது. எனவே, இந்திய ஜவுளியை அதன் விலையின் மீது 70, 80 சத விகிதம் தீர்வையை விதிக்க வேண்டியதோ, தடுத்துவிட வேண்டியதோ அவசியமாயிற்று. இவ்விதம் செய்யப்படாமலிருந்தால், இத்தகைய தடை வரிகளும் உத்தரவுகளும் இல்லாதிருந்தால், பெய்ஸ்லியிலும், மான்செஸ்டரிலும் அமைக் கப்பட்ட மில்கள் ஆரம்பத்திலேயே நின்றுபோயிருக்கும். நீராவியின் சக்தியைக் கொண்டும் அவற்றைத் திரும்பவும் ஆரம்பிக்க முடிந்திருக்காது. இந்தியக் கைத்தொழில் உற்பத்தியைத் தியாகஞ்செய்து இம்மில்களை உண்டாக்கினார்கள். இந்தியா சுதந்திர நாடாக இருந்திருந்தால், அது பதிலுக்குப் பதில் செய்திருக்கும். பிரிட்டிஷ் சரக்குகளுக்கு இந்தியா தடை வரியை விதித்து தன்னுடைய உற்பத்தித் தொழில் அழிந்து போகாமல் காப்பாற்றிக்கொண் டிருக்கும். தற்பாதுகாப்புக்கான இதைச் செய்துகொள்ள இந்தியா அனுமதிக்கப்படவில்லை. அந்நியரின் தயவில் அது இருக்கவேண்டியதாயிற்று. தீர்வை எதுவுமே இல்லாமல் பிரிட்டிஷ் சரக்குகள் இந்தியாவில் திணிக்கப் பட்டன. அந்நிய உற்பத்தியாளர்கள் இந்திய உற்பத்தியாளருடன் நியாயமான முறையில் போட்டிபோட்டு வெற்றி பெற்றிருக்க முடியாது. ஆகவே, இந்திய உற்பத்தியை ஒடுக்கி, நெறித்துக் கொன்றுவிடுவதற்கு அந்நிய உற்பத்தியாளர்கள் ராஜீய அநீதியாகிய கரத்தை உபயோகித்தார்கள்."

"கம்பெனியின் சிப்பந்திகள், முக்கியமான நெசவாளர்களையெல்லாம் ஒருங்கு கூட்டினர். கம்பெனிக்கு மட்டும்தான் கொடுப்பது என்று அவர்கள் ஓர் உடன்பாட்டிற்கு வரும்வரையில் அவர்களைக் காவலிலும் வைத்தார்கள்" என்று தாமஸ் மன்ரோ கூறுகிறார்.

ஸ்ரீ தத் மேலும் கூறுவதாவது :

"நெசவாளர் ஒரு முறை முன்பணம் வாங்கிவிட்டால் பிறகு அக்கடனிலிருந்து மீளுவதே இல்லை. சரக்கு கொடுப்பதில் அவன் தாமதம் செய்தால், அவன் சீக்கிரமாகக் கொடுக்கும்படிச் செய்ய அவனுக்கு மேல் ஒரு வேலைக்காரனை வைத்துவிடுவார்கள். நெசவாளன் தவறினல், அவன் மீது கோர்ட்டுகளில் வழக்கும் தொடரப்படும். வேலைக்காரனை ஒரு நாள் அனுப்ப நேர்ந்தால், அதற்காக நெசவாளன் ஓர் அணு அபராதம் செலுத்த வேண்டும். அந்த வேலையாள் கையில் பிரம்பு வைத்திருப்பான். அதை அடிக்கடி அவன் உபயோகிப்பதும் உண்டு. சில சமயங்களில் நெசவாளருக்கு அபராதம் விதித்து, அந்த அபராதத்தை வசூலிப்பதற்காக அவனுடைய பித்தளை சாமான்களைப் பறித்துக்கொண்டு போய்விடுவார்கள். இவ்விதம் கிராமங்களில் நெசவாளராக இருப்பவர்கள் எல்லோரும், இவ்வாறு கம்பெனியின் தொழிற்சாலைகளுக்கு அடிமைகளாக வைக்கப்பட்டிருந்தனர். நெசவாளர்கள் மீது கம்பெனி செலுத்திய ஆதிக்கம் வெறும் பழக்கம் மாத்திரமல்ல, அது சட்டத்தின் மூலம் சட்ட ரீதியானதாகவும் செய்யப்பட்டிருந்தது. சம்பெனியிடம் முன்பணம் வாங்கிவிட்ட ஒரு நெசவாளி, 'தன் உழைப்பையோ, கம்பெனிக்கு உற்பத்தி செய்து கொடுப்பதாக ஒப்புக்கொண்ட பொருளையோ, கம்பெனியைத் தவிர வேறு எக்காரணத்தைக் கொண்டும் வேறு எந்த ஐரோப்பியருக்கோ சுதேசிக்கோ கொடுக்கக்கூடாது' என்று சட்டம் செய்யப்பட்டிருந்தது. நிர்ணயித்த துணியை நெசவாளி கொடுக்கத் தவறினல், 'அவற்றைத் துரிதமாகக் கொண்டுவந்து கொடுக்கும்படிச் செய்ய அந்நெசவாளருக்கு மேல் வேலைக்காரனை வர்த்தக ரெஸிடெண்டு அனுப்பலாம். தான் தயாரித்த துணியை நெசவாளி வேறு யாருக்காவது விற்றுவிட்டால், திவானி அடலத்தில் அவன் மீது வழக்குத் தொடரலாம். ஒரு தறிக்கு மேல் வைத்துக்கொண்டு ஒன்றோ, அதிகமாகவோ தொழிலாளரை வைத்திருக்கும் நெசவாளிக்கு, எழுத்து மூலமான ஒப்பந்தத்தின்படி நெய்து கொடுக்கத் தவறிவிட்ட துணி ஒவ்வொன்றுக்கும், அத்துணிக்குக் குறிப்பிட்டிருக்கும் விலையில் 35 சத விகிதத் தொகையை அபராதமாக விதிக்கலாம்; நெசவாளி இருக்கும் வீட்டுச் சொந்தக்காரரோ, குடியிருப்பவரோ, வர்த்தக ரெஸிடெண்டுக்கும் அவருடைய அதிகாரிகளுக்கும் நெசவாளரை அணுகுவதற்கு இடையூறு செய்யக்கூடாது; வர்த்தக ரெஸிடெண்டுகளிடம் மரியாதைக் குறைவாக நடப்பதிலிருந்தும் அவர்கள் கண்டிப்பாகத் தடுக்கப்படுகின்றனர்' என்றும் சட்டம் செய்திருந்தார்கள்."

இந்த விதமான சகிக்க முடியாத தடைகளின் கீழ் வாழ்ந்து கொண்டிருந்த நெசவாளர்கள், இவைகளிலிருந்து விடுபடுவதற்காகத் தங்கள் கைக் கட்டை விரல்களை வெட்டிக்கொண்டிருந்தார்களானல், அதில் என்ன ஆச்சரியமிருக்கிறது? வேண்டுமென்றே திட்டமிட்டு அழிக்கப்பட்டுவிட்ட ஒரு தொழிலுக்கு, கோடிக்கணக்கான மக்களுக்கு உபரியான வருவாயை அளித்து வந்த ஒரு தொழிலுக்குப் புத்துயிரளிப்பது, நாட்டினிடம் அன்புள்ள ஒவ்வொரு இந்தியரின் தெய்வீகக் கடமையாகும். ஒவ்வொரு ஆங்கிலேயரும், தமது மூதாதைகள் பெரியதோர் நாட்டிற்கு இழைத்திருக்கும் பெருந் தீமைக்காக வருந்துவதை அவர் தமக்கு ஒரு பாக்கியம் என்று கருத வேண்டும். ஆனல்,

செய்துவிட்ட தவறுக்காக வருந்துவதற்குப் பதிலாக, 150 ஆண்டுகளுக்கு முன்னுல் ஆரம்பிக்கப்பட்ட ஒரு கொள்கையையே விடாமல் மேற்கொண்டும் செய்யப்பட்டுவரும் ஒரு வேதனையையும், அந்தத் தவறைப் பெருமையாகக் கூறிக்கொள்ள எல்லாவிதமான முயற்சிகளும் செய்யப்படும் வேதனையையுமே நாம் காண்கிருேம்.

—'எங் இந்தியா' - 19—4—1928

# 22

# நாகரிகத்தின் ஆபத்தான போக்கு (?)

"இதை எழுதுகிற சமயம் (1917–இல்), ஷான் சமஸ்தானங்களில் ஓரளவுக்கு அந்நியத் துணி இறக்குமதியானலும், தங்களுடைய ஆடைகளுக்கும் தங்கள் குடும்பத்தினரின் ஆடைகளுக்கும் தாங்களே துணியை நெய்து கொள்ளுவதுதான் ஷான் பெண்களின் வழக்கம்...இந்தத் துணிகளுக்கு வேண்டிய பருத்தியை உள்ளூரிலேயே பயிர் செய்துகொண்டு, பெண்களே அப்பருத்தியைத் தயாரித்தும் கொள்ளுகிருர்கள். ஷான் கிராமங்களில் ஒவ்வொரு வீட்டிலும் கைத்தறி இருக்கும். இவைகளில் சில மூங்கிலினுல் செய்யப்பட்டவை; சில கனமான மரத்தினுல் செய்யப்பட்டவை. பொதுவாக வீட்டில் குடியிருக்கும் இடத்திற்கு வெளியில், காலியாகவுள்ள இடத்தில் தறி போட்டிருப்பார்கள். பருத்தியை அப்படியே வெயிலில் காய வைத்து, சாதாரணமாக இரு உருளைகளைக்கொண்ட பஞ்சரைக்கும் மணையில் கொடுத்து கொட்டையை நீக்கிவிட்டு, அவ்விதம் அரைத்த பஞ்சை அதனுடன் இணைத்திருக்கும் சுழலும் கூடையில் பிடித்து எடுத்துக்கொள்ளுகின்றனர். ஒரு வகை வில்லினுல் பஞ்சை வெட்டுகின்றனர். பருத்தியின் இழைகள் இவ்வாறு பிரிக்கப்பட்ட பிறகு அதைப் பட்டை போட்டு 8 அங்குல நீளமும் முக்கால் அங்குல கனமுமுள்ள குச்சியில் சுற்றிக் கொண்டு பிறகு அதை ஒரு வகையான ராட்டையில் நூலாக நூற்றுக்கொள்ளுகிருர்கள்"—ஷான், கச்சின் ஜில்லாக்களில் 'பர்மிய டெக்ஸ்டைல்' என்ற பத்திரிகையிலிருந்து எடுத்தது இது...லொரா ஈ ஸ்டார்ட் 1917–இல் எழுதியது. பாங்க் பீல்டு பொருட்காட்சியிலிருந்து குறிப்புகள் எடுக்கப்பட்டன.

நம்முடைய இக்காலத்துப் படிப்பு, நாம் புத்தி மயங்கிப் போய் அதன் மந்திர சக்தியினுல் கட்டுண்ட ஒரு வாழ்க்கையை நடத்திவரும்படி நம்மைச் செய்துவிட்டது. அப்படி இல்லாமலிருந்தால், மக்களுக்கு ஓடிக்கொண்டிருக்கும் வாழ்க்கை நிலையைச் சிறந்ததாக்கிவிட முடியும் என்ற வீணுன நம்பிக்கையில், அவர்கள் இப்பொழுது செய்துகொண்டிருக்கும் கௌரவமான தொழில் அவர்களுக்கு இல்லாது போகும்படி செய்வது பாபகரமானது என்று நாம் கருதுவோம். நாகரிகம் என்பது, பொருளில் மாற்றமில்லாமல் வெறும் சொல்லளவில்தான் மாற்றம் என்ருல், அது

சந்தேகிக்கக்கூடிய பலனுள்ளதேயாகும். என்ருலும், ஸ்ரீ பாலாஜி ராவ் அனுப்பியிருக்கும் மேலே கண்ட விஷயத்தின் பொருள் அதுதான். வர்த்தகத்தின் நாகரிகப்படுத்தும் அம்சம் என்ற வேஷத்தில், ஒரு பாவமும் அறியாத பர்மிய மக்கள் பரம ஏழைகளாக்கப்பட்டு கால்நடைகளின் நிலைமைக்குக் கொண்டு போகப்பட்டிருக்கின்றனர். ஸ்ரீ மதுசூதனதாஸ் சுட்டிக் காட்டியிருப்பதைப் போன்று, கைத்தொழில்களைக் கைவிட்டுவிட்டதனுல் கைத்திறனை மறந்துவிட்டு கால்நடைகளோடு மாத்திரம் வேலை செய்துகொண்டிருக்கும் மக்கள், உடலில் மாத்திரமேயன்றி அறிவிலும் பரம ஏழைகளாகிவிட்டார்கள்.

—' எங் இந்தியா '–10—5—1928

## 23

# நாம் இந்தியாவை இழந்த விதம்

ஜபைகுரியில், தேசபந்து தாஸ் இறப்பதற்குச் சில நாட்களுக்கு முன்னுல், வர்த்தகர்களைக் கொண்ட ஒரு கூட்டத்தில், வர்த்தகர்கள் அளித்த உபசாரத்திற்குப் பதிலளிக்கையில், 'நாம் வர்த்தகர்களின் மூலம் இந்தியாவை இழந்துவிட்டோம்; அவர்களின் மூலமே அதை நாம் திரும்ப அடைந்தாக வேண்டும்' என்று கூறினேன். நான் கூறியதிலுள்ள உண்மையைக் காட்டுவதற்கு ஏதாவது ஆதாரம் வேண்டும் என்ருல், ஒரு வர்த்தக சங்கம், அதே போன்ற மற்றச் சங்கங்களுக்கு அனுப்பியிருக்கும் கீழ்க்கண்ட சுற்றறிக்கையே சரியான உதாரணம்:

" மான்செஸ்டர். ஜவுளி, நூல் வியாபாரம் கொஞ்ச காலமாக அதிகமாகக் குறைந்துவிட்டது என்பதை நீங்கள் அறிவீர்கள். இன்னும் குறையும் என்பதற்கான அறிகுறிகளே இருந்து வருகின்றன. வர்த்தகர்கள் இந்த வியாபாரத்தில் முன்னுல் சிரத்தை காட்டியதைப் போல இப்பொழுது சிரத்தை காட்டுவதில்லை. இந்த அசிரத்தையின் காரணமாக நம் நாட்டவர்கள், தங்களுக்கு நல்ல லாபமும் வருவாயுமாக இருந்ததை, இனியும் இருக்கக்கூடியதை நாளாவட்டத்தில் இழந்துகொண்டு வருகிருர்கள். மற்ற வியாபார சமூகங்களுடன் மார்வாரி வகுப்பாரும் ஜவுளி, நூல் வியாபாரத்தில் அதிக சிரத்தையுள்ளவர்களாகையால், என் கமிட்டி, அதன் 7-ஆம் தேதி கூட்டத்தில் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. இந்த வியாபாரம் குறைந்ததன் காரணத்தை ஆராய்ந்து, வியாபாரத்தின் இந்த முக்கியமான பகுதிக்குத் திரும்பவும் புத்துயிர் அளிப்பதற்கு வேண்டிய திட்டமான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளுவது என்பதே அந்தத் தீர்மானம்.

" இந்த விஷயம் எல்லோருக்கும் முக்கியமானதாக இருப்பதால், இந்த வியாபாரத்தில் சிரத்தையுள்ள எல்லாப் பொது ஸ்தாபனங்களின் பிரதிநிதிகளும் கொண்ட மகாநாட்டைக் கூட்டிச் சாத்தியமானுல் ஒன்று

பட்ட நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவது நல்லது என்று என் கமிட்டி கருதுகிறது.

"இந்த யோசனையை உங்கள் வர்த்தக சங்கம் ஏற்றுக்கொள்ளும் என்றே என் கமிட்டி நம்புகிறது. அப்படி ஏற்றுக்கொள்ளுவதானல், சாத்திய மான வரையில் சீக்கிரத்திலேயே பல பொது ஸ்தாபனங்களின் பிரதிநிதிகளையும் கொண்ட மகாநாட்டிற்கான ஏற்பாட்டை மகிழ்ச்சியுடன் செய்வதற்குத் தயாராக இருக்கிருர்கள். ஆகையால், உங்கள் பதிலை உடனே அறிவிக்கும்படிக் கோருகிறேன்."

இந்தச் சுற்றறிக்கை, 1928 ஜூலை 19-ஆம் தேதி இடப்பட்டிருக்கிறது. இம்முயற்சியின் முடிவு என்னவாயிற்று என்பது எனக்குத் தெரியாது. என்ருலும், இப்போதைக்கு அதன் பலனைக் குறித்து நமக்குக் கவலை இல்லை. ஆனல், அந்நியத் துணி எல்லாவற்றையும் பகிஷ்கரித்து விடுவதற்காக நாடு முழுவதும் முயன்று வரும் இச்சமயத்தில், மான்செஸ்டர் நூல், ஜவுளி வியாபாரம் இந்நாட்டில் நிலைபெற்றிருக்கும்படிச் செய்து விடும் உபாயங்களைத் தேடி வரும் மதிப்பு வாய்ந்த வர்த்தக ஸ்தாபனங்களும் நம்மிடையே இருந்து வருவது ஒரு சரியான எச்சரிக்கை. தேச ஊழியர் ஒவ்வொருவரும் இதைக் கவனிக்க வேண்டும்.

ஆங்கிலேயர்கள், தங்களுடைய வியாபாரத்திற்காகவே இந்தியாவை அடிமைப்படுத்தி வைத்திருக்கிருர்கள். இந்நாட்டில் அவர்களுடைய இறக்குமதியில் மிக அதிகமாக இருப்பது ஜவுளி தான் என்பதற்குப் போதுமான ஆதாரங்கள் அப்போதைக்கப் போது இப்பத்திரிகையில் எடுத்துக் காட்டப்பட்டு வந்திருக்கின்றன. நம் நாடு இவ்விதம் சுரண்டப்படுவதை நாம் அனுமதித்துக் கொண்டிருக்கும் வரையில், தங்களாலான எல்லா வகைகளைக் கொண்டும் பிரிட்டிஷார் இந்தியாவை விடாமல் அடிமையாக வைத்துக் கொண்டுதான் இருப்பார்கள். இதை நிரூபிப்பதற்குக் கமிட்டியோ, கமிஷனே நிச்சயமாகத் தேவையில்லை. ஆகையால், எல்லாவற்றையும்விட இப்பொழுது நமக்கு வேண்டியதெல்லாம், தங்களுடைய சுயநலத்திற்காகத் தங்கள் நாட்டை விற்றுக் கொண்டிருக்கும் நம் சொந்த வர்த்தகப் பிரமுகர்களை மாற்றுவதேயன்றி, இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷாரையோ அல்லது ஆட்சியாளரையோ மாற்றுவதோ, வெளியேற்றுவதோ அல்ல.

நமது வர்த்தகப் பிரமுகர்கள், நாட்டிற்காகத் தங்களைத் தாங்களே அழித்துக் கொள்ள வேண்டியதில்லை. அவர்கள் இப்பொழுது இறக்குமதி செய்துகொண்டிருக்கும் அவ்வளவு துணியும் நூலும் இந்தியாவுக்குத் தேவைதான். இந்த அளவு துணியை நமது ஏழு லட்சம் கிராமங்களிலேயே உற்பத்தி செய்து கொண்டு விடுவதிலேயே அவர்கள் தங்களுக்குள்ள நிச்சயமான ஆற்றலை உபயோகிக்க வேண்டும். இவ்விதம் செய்வதால் இயல்பாகவே தங்களுக்கும் நன்மை தேடிக் கொண்டவர்களா

வார்கள். அவர்கள் இவ்விதம் செய்வதானல், தாங்கள் இப்பொழுது அனுசரித்து வரும் வர்த்தக தந்திரம், சூது முதலியவைகளையும், தங்கள் சுற்றுப்புறத்தில் வாழ்வோர் நிலைக்குக் கொஞ்சமும் பொருத்தமில்லாததான தங்கள் அரண்மனை வாழ்வையும் அவர்கள் கைவிட வேண்டியிருக்கும். அவர்கள் யாருக்காக, யாருடன் வியாபாரம் செய்கிருர்களோ அவர்களுடைய நிலைமைக்குக் கொஞ்சம் பொருத்தமானதான வருவாயோடு அவர்கள் திருப்தியடைந்திருக்க வேண்டியிருக்கும் என்பதிலும் சந்தேகம் இல்லை. அதாவது, அவர்கள் இப்பொழுது செய்துகொண்டிருப்பதைப் போலக் கிராமங்களின் ரத்தத்தை உறிஞ்சுவதில் பங்கு கொள்ளுவதற்குப் பதிலாக, அவர்கள் யாரைக் கொண்டு சுபிட்சமடைகிருர்களோ அவர்களுக்கு, காலங் கடந்து போனதாக இருந்தாலும், பதிலுக்குக் கொஞ்சம் நன்மையைச் செய்து வர வேண்டும். வயிற்றுக்கும், உடலின் மற்ற அங்கங்களுக்கும் உள்ள சம்பந்தத்தைப்பற்றிய கதை, இதற்கு எப்பொழுதும் பொருந்தக் கூடியதாகும். கோடிக்கணக்கான பாட்டாளி மக்களே வயிறு. வர்த்தகர்களும் மற்றவர்களும் உடலின் மற்ற உறுப்புக்கள். வயிறு பட்டினி கிடந்தால், உடல் வாடி வதங்கிப் போகும். அந்த வயிறு வெகு நீண்ட காலமாகவே, மானக் கேடான வகையில், பட்டினி கிடந்து வந்திருக்கிறது என்பதைக் கண்ணுள்ளவர்கள் பார்க்கலாம். இரவுக்குப் பின் பகல் வருவது எவ்விதம் நிச்சயமோ அதே போல, இந்த அங்கங்களும் வாடி வதங்கிப் போவது தொடர்ந்து நடக்கப் போகிறது என்பது நிச்சயம். ஆகவே, அதிகமாகக் காலங் கடந்ததாகி விடுவதற்கு முன்னல், செய்துவிட்ட தவறுக்காக வருந்துவோமாக.

— 'எங் இந்தியா' –25—10—1928

# 24

# அந்நியத் துணியும் கதரும்

கதரின் மூலம் அந்நியத் துணியைப் பகிஷ்கரிப்பதன் சம்பந்தமான காங்கிரஸ் வேலைத் திட்டத்தை நிறைவேற்றி வைப்பதற்கான ஒரு திட்டத்தைத் தயாரிக்குமாறு என்னைக் கேட்டுக்கொண்டு காங்கிரஸ் காரியக் கமிட்டி ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. காங்கிரஸ் காரியதரிசிக்கு நான் அனுப்பிய திட்டம் மற்ருேர் இடத்தில் பிரசுரமாகியிருக்கிறது. (210-ம் பக்கம் பார்க்கவும்) அதைக் கவனத்துடன் ஆராயுமாறு வாசகரைக் கேட்டுக் கொள்ளுவதோடு அதில் அபிவிருத்தி செய்வதற்கான யோசனை ஏதாவது இருந்தால் தெரிவிக்கவும் கோருகிறேன். இந்த முயற்சியில் காங்கிரஸ்காரர்கள் உறுதியுடன்

கவனஞ் செலுத்துவார்களானல், அந்நியத் துணி பகிஷ்காரத்தில் வெற்றி பெற்றுவிடுவது என்பது எளிதானது என்பது தான் என் கருத்து. காங்கிரஸ்காரர்களால் இதைச் செய்ய முடிவதற்கு, அவர்களுக்குக் கதரில் உயிர் நம்பிக்கை இருந்தாக வேண்டியது அவசியம். காங்கிரஸ்காரர்கள் இனியும் மன மாற்றமடைய வேண்டியவர்களாகவே இருந்து வருவார் களாயின், இத்திட்டத்தை நிறைவேற்றிவிட முடியாது. இத்திட்டத்தில் நம்பிக்கை இல்லாதிருக்குமானல், இத்தீர்மானத்தை நிறைவேற்றவே வேண்டாம் என்று என்னல் முடிந்த வரையில் காங்கிரஸின் பிரதிநிதிகளுக்கு எச்சரிக்கை செய்தேன். நான் எச்சரிக்கை செய்திருந்தும், எந்தவித எதிர்ப்பும், ஆட்சேபமும் இல்லாமல் அவர்கள் தீர்மானத்தை நிறைவேற்றிவிட்டார்கள். இதிலிருந்து அவர்களுக்குக் கதரில் நம்பிக்கை இருக்கிறது என்ருகிறது. நம்பிக்கை அவர்களுக்கு இருக்குமானல், நிறைவேற்றிவிடக் கூடியதே இத்திட்டம். கதரல்லாமல் வேறு எதைக் கொண்டும் பகிஷ்காரத்தில் வெற்றி பெற்றுவிடுவது சாத்தியமல்ல என்பதை நாம் முற்றிலும் அறிந்துகொள்ள வேண்டும். பகிஷ்காரத்தில் உள்நாட்டு மில் துணிக்கு இருக்கும் இடம் என்ன என்பதைக் குறித்து யாரும் கவலைப்பட்டுக் கொள்ள வேண்டாம். இத்துணி, தன் காரியத்தைத் தானே கவனித்துக்கொண்டு வந்திருக்கிறது; இனியும் அது கவனித்துக் கொள்ளும். நாம் யாரை அணுகுகிருேமோ அவர்கள் கதர் அணியும்படிச் செய்வதுதான் நாம் இப்பொழுது செய்ய வேண்டியதெல்லாம். நம்மிடம் இரு விதமான அபிப்பிராயங்கள் இருந்து விடுமாயின், பகிஷ்காரத்தை நிறைவேற்றுவதில் நாம் தோல்வியையே அடைவோம். உள்நாட்டு மில் துணியின் விலை அதிகமாக ஏறிவிடும்படிச் செய்து விடுவதிலும், யோக்கியப் பொறுப்பே இல்லாத மில் சொந்தக்காரர்கள், எதையும் எளிதில் நம்பி விடுகிறவர்களான பொது மக்களிடம் மோசடிகளைச் செய்யத் தூண்டி விடுவதிலுமே நாம் வெற்றி பெற்றவர் களாவோம்.

முடிவாக, அத்திட்டத்தின் அடியில் நான் எழுதியிருக்கும் குறிப்பையும் சம்பந்தப்பட்டவர்கள் எல்லோரும் கவனிக்க வேண்டும். காங்கிரஸ் தன்னிடம் எந்தக் குறைபாடுகளும் இல்லாதவாறு தன்னை ஒழுங்குபடுத்திக்கொண்டு, 1921-ஆம் ஆண்டில் இருந்தது போன்று ஜீவனுள்ள அமைப்பாக அது ஆகாது போனல், காங்கிரஸ் வேலைத்திட்டத்தை நிறைவேற்றி வைப்பதில் எந்த அபிவிருத்தியும் சாத்தியமில்லை.

—'எங் இந்தியா' – 24—1—1929

# 25

# கதருக்குள்ள வேலை

ஆக்ரா நண்பர் ஒருவர் கீழ் வருமாறு எழுதுகிறார் :

''கதர் நிரந்தரமானதாக உபயோகத்தில் இருந்து வரவேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா, அல்லது ராஜீய சுதந்திரத்தை அடைவதற்காகத் தாற்காலிகமான உபயோகத்திற்கு மாத்திரம் அதை நீங்கள் சிபாரிசு செய்கிறீர்களா? முந்தியதுதான் உங்கள் விருப்பமாயின், கலை உணர்ச்சியைக் கதர் பாதிப்பதாக இருக்கவில்லையா? உணர்ச்சியைப் பற்றிய இயற்கையான குறையைப் பொது மக்கள் பொருட்படுத்தக் கூடாது என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா?"

உண்மையில் கதர் நிரந்தரமாக இருந்து வர வேண்டும் என்றுதான் நான் முயன்று வருகிறேன். ஏனெனில், விவசாயிகள் அடியோடு அழிந்து போய்விடுவதிலிருந்து காப்பதற்குள்ள ஒரே உபாயம் கதர்தான். விவசாயிகளுக்குப் பொருளாதார சுதந்திரத்தை அளிக்கும் சக்தி மாத்திரமல்ல, விவசாயிகளுக்குப் பட்டினிப் பசி இல்லாதபடிச் செய்யும் சக்தியும் கதருக்கு இருக்கிறது என்று நான் கூறிவருகிறேன் மேலே கண்ட கடிதத்தை எழுதியிருப்பவருக்குத் தமது நாட்டின் முந்திய சரித்திரமோ, கதரின் இன்றைய வளர்ச்சியைப் பற்றியோ ஒன்றுமே தெரியாது போலும். பருத்தியின் உபயோகத்தைப் பற்றி உலகத்தின் மற்றப் பகுதிகளுக்கு எதுவுமே தெரியாமலிருந்த காலத்தில், இந்தியாதான் கலையுணர்ச்சியின் தரத்தை உண்டாக்கியதோடு, மேற்கு நாடுகளில் செல்வம் படைத்தவைகளுக்கு உயர்ந்த ரகத் துணிகளை அநேக நிறங்களில் இந்தியா அனுப்பிக்கொண்டும் இருந்திருக்கிறது. கதர், மெதுவாக என்றாலும் நிச்சயமாக, நாளுக்கு நாள் கலையுணர்ச்சி கொண்ட மக்களை அடைந்து வருகிறது என்பதைக் கதரின் இன்றைய அபிவிருத்தி காட்டியும் வருகிறது. உண்மையான கலையை ஆண்களின், பெண்களின் ஜீவனுள்ள கைகளின் ஸ்பரிசத்தினால்தான் வெளிப்படுத்த முடியுமேயன்றி, உயிரில்லாததும் சக்தியினால் இயங்குவதுமான யந்திரங்களைக்கொண்டு உற்பத்தி செய்து குவித்துவிடுவதனால் கலையை வெளிப்படுத்திவிட முடியாது. ஆச்சாரிய கிருபளானியின் மாணவர்களும் சகாக்களும், கதரை அழகானதாக்குவதற்காகப் பல, சோதனைகளையும் செய்து வருகின்றனர். இக்கடிதம் எழுதியிருப்பவர் அவற்றைப் பார்க்கட்டும்.

கதரின் விலை அதிகமாக இருக்கிறது என்று சொல்லப்படும் பிரச்னையையும் இக்கடிதத்தை எழுதியிருப்பவர் கிளப்பியிருக்கிறார். இதைக் குறித்து நான் முன்பே எழுதி வந்திருப்பதால் அதைப் பற்றி நான் இங்கே மீண்டும் எழுதவில்லை.

**—'எங் இந்தியா' – 14—3—1929**

# 26

## ஆதாயத்தைப் பற்றித் தப்பெண்ணம்

இந்தியாவின் வறுமை வளர்ந்துகொண்டே வருகிறது என்று நான் கூறி வரும்போது, 'இந்தியாவின் இறக்குமதியைவிட ஏற்றுமதி அதிகமாக இருப்பதால் வர்த்தக ஆதாயம் தொடர்ந்து இருந்துகொண்டு வருகிறது. ஆகையால், இது ஒன்றுக்கொன்று முரணாக இருப்பது ஏன்?' என்று ஒரு ஹங்கேரியப் பேராசிரியர் சில தினங்களுக்கு முன்னால் என்னைக் கேட்டார். இப்பேராசிரியர், இந்தியாவின் நகரங்களுக்கு அப்பால் போகவில்லை. அதோடு, வழக்கமான புள்ளி விவரங்களை வைத்துக்கொண்டுதான் இவர் கூறுகிறார். புள்ளி விவரங்களிலிருந்து இவர் தெரிந்து கொண்டிருப்பதை, சுபிட்சமாக இருப்பதாக நகரங்களில் தென் படும் வெளித்தோற்றம் பலப்படுத்தியிருக்கிறது.

அறிவாளியான இப்பேராசிரியருக்கு நியாயமாகவே தோன்றியிருக்கும் இந்த சந்தேகம்தான், வைதிகமான பொருளாதார சாஸ்திரத்தை, அந்தச் சாஸ்திர ரீதியிலேயே படித்தவர்கள் அநேகருக்கும் ஏற்படுகிறது. ஆகையால், இதற்கு நான் சொன்ன பதிலை இங்கே சுருக்கமாகச் சொல்லுவது அவசியமாக இருக்கும். நான் வாதித்தது இதுதான்: ஒரு நாடு சில பங்குதாரர்களுக்குச் சொந்தமானதாக இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுவோம். அவர்கள், உணவு தானியங்களையும், உலகத்திற்குப் பயன்படக்கூடியதுமான பொருள்களையுமே உற்பத்தி செய்யும் படித் தங்கள் அடிமைகளைக் கட்டாயப்படுத்துகிறார்கள் என்றும் வைத்துக்கொள்ளுவோம். இந்த அடிமைகளுக்கு வயிற்றுக்குப் போதுமான கூலியைக் கூட அவர்கள் கொடுப்பதில்லை. ஆனால், இந்த அடிமைகளைக்கொண்டு உற்பத்தி செய்த தானியங்கள் முதலியவைகளை ஏற்றுமதி செய்து அந்த பங்குதாரர்கள் ஏராளமான லாபத்தைச் சம்பாதிக்கிறார்கள். மேலும், இந்தத் தானியங்கள் முதலியவைகளின் ஏற்றுமதி, இந்நாட்டில் இறக்குமதியாகிறவைகளையெல்லாம்விட அதிகமாக இருக்கிறது என்றும் வைத்துக்கொள்ளுவோம். இந்த வியாபாரத்தில் இருக்கும் ஆதாயம் (இறக்குமதியைவிட ஏற்றுமதி அதிகமாக இருப்பது), பொதுவாக மக்களுக்கு இருந்து வரும் சுபிட்சத்திற்கு ஒரு சோதனையாக ஆகாது. அடிமைகளுக்கு வறுமையும் அவமானமும் அதிகரித்துக்கொண்டு வரும் அதே சமயத்தில் இந்த ஏற்றுமதி ஆதாயமும் இருந்து வரமுடியும். நான் கற்பனை செய்து காட்டிய அடிமைகளைக்கொண்ட நாட்டிற்கும் இந்தியாவின் நிலைமைக்கும் அதிக வித்தியாசமில்லை என்றும் இப்பேராசிரியருக்குக் கூறினேன். ஆகையால், அவருக்கு இன்னும் ஒன்றும் எடுத்துச் சொன்னேன். தொடர்ந்து இருந்து வரும் வெளிநாட்டு வர்த்தக ஆதாயம் என்பதில் மறைந்திருக்கும்

பொருளைப் புரிந்துகொள்ளுவதற்கு, இந்தியாவில் குறிப்பான சில கிராமங்களின் நிலைமையை ஆராய்வதோடு கிராமவாசிகளையும் நேருக்கு நேராகப் பார்க்க வேண்டியதும் அவசியம் என்றேன். அகில இந்தியாவுக்கும் கிடைப்பதான இந்த ஏற்றுமதி ஆதாயத்தின் பலனைக் கிராமவாசிகள் அடைவதில்லை. அவர்கள் வஞ்சிக்கப்படுகின்றனர். நான் கூறி வருவது போல, அவர்கள் தொடர்ந்து சக்தியற்றவர்களாக்கப் படுகின்றனர் என்றால், இந்த ஆதாயத்தினால் என்ன பயன்? இதையும் அவரிடம் சொன்னேன்.

அந்நிய ஆட்சியாளர்கள், பெயரளவுக்கு இந்தியாவில் வசித்து வந்தாலும் இந்தியாவுக்கு வெளியில் உண்மையில் ராஜ போகத்திற்கும் அதிகமான வாழ்க்கையையே நடத்திக்கொண்டு வருவதால், இந்தியாவின் செல்வமெல்லாம் ஆண்டுதோறும் எவ்விதம் வடிகட்டிக்கொண்டு போகப்பட்டுவிட்டது என்பதைக் காலஞ் சென்ற தாதாபாய் நௌரோஜி சரியான புள்ளிவிவரங்களின் மூலம் எடுத்துக் காட்டியிருக்கிறார். இந்தியாவிலிருக்கும் ஆட்சி, மக்களின் நல்லெண்ணத்தை அடிப்படையாகக் கொண்டது அன்று. ஆனால், படை பலத்தைக் காட்டி இந்த ஆட்சி நடத்தப்படுகிறது. இதற்காக மிக ஏராளமான செலவில் படை பலம் வைக்கப்பட்டிருக்கிறது. இதற்காகும் செலவில் பெரும் பகுதி இந்தியாவிற்கு வெளியே போய்விடுகிறது. இத்தகைய ஆட்சியைத் தொடர்ந்து நடத்திக்கொண்டு போவதற்காக இந்தியாவின் ரத்தம் தொடர்ந்து உறிஞ்சப் பட்டு வரும் விதத்தையே இந்தியாவின் ஏற்றுமதி ஆதாயம் காட்டுகிறது.

ஒன்றுக்கொன்று மாறுபட்டதாகவுள்ள இரு விஷயங்களும் சரியானவையே என்று காட்டுவதற்குப் புள்ளி விவரங்களைச் சொல்லிவிட முடியும் என்று, உண்மையில் பொருளாதாரப் பண்டிதர்களே சொல்லி வருகிறார்கள். ஆகையால், முன் கூட்டியே ஒரு முடிவுக்கு வந்துவிட்ட ஒரு விஷயத்தை நிரூபிக்க வேண்டும் என்பதில் மாத்திரம் கவலை கொண்டு விடாமல், உண்மையைக் கண்டு கொள்ள வேண்டும் என்பதில் மட்டும் கவலை கொள்ளும் ஒரு விவேகி, புள்ளி விவரத்திற்குள் நுழைந்து பார்த்து, அதிலிருந்து கிடைக்கும் ஒவ்வொரு விஷயத்தையும் சுயேச்சையாகச் சோதித்துக் கண்டறிய வேண்டியது அவசியம். ஓர் ஆற்றின் சராசரி ஆழம் என்ன என்பதை அறிவது நல்லதுதான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், நீந்தத் தெரியாத ஒருவர், அந்தச் சராசரி ஆழம் தன் உயரத்திற்குக் குறைவாகவே இருக்கிறது என்று கணக்குப் போட்டுக்கொண்டு ஆற்றைக் கடந்துவிட முயற்சி செய்வது ஆற்றில் மூழ்கி மாண்டு போவதில் முடிந்துவிடக்கூடும். அதே போல, தன்னை ஏமாற்றுவதற்கென்றே தயாரித்து வைக்கப்பட்டிருக்கும் புள்ளி விவரமாகிய கானல் நீரை நம்புகிறவர், புத்திசாலி என்ற பெருமையை

இழந்து விடுவார். ஆற்றைக் கடக்க விரும்புகிறவர், அதன் அதிகப் பள்ளத்தின் ஆழம் எவ்வளவு, அதிக மேட்டின் அளவு என்ன என்பதை அறிந்தாக வேண்டும். அதே போலவே, புள்ளி விவரங்களை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறவர், அதற்குள் மறைந்து கிடக்கும் புள்ளி விவரங்களைத் தேடிக் கண்டு அவற்றை எப்படிக் கையாளுவது என்பதை அறிய வேண்டும். ஆனால், சாதாரணமான ஒருவருக்கு, குழப்பத்தை உண்டாக்குவதாக இருக்கும் புள்ளி விவரங்களை ஆராய்வதற்கு வேண்டிய அவகாசமோ, ஆற்றலோ இருப்பதில்லை. அப்படிப்பட்டவர், உண்மையான இந்தியாவின் நிலைமையைத் தெரிந்துகொள்ள வேண்டுமானால், கிராம வாழ்க்கையின் அனுபவத்தைப் பெறுவதுதான் சரியான சோதனை. புள்ளி விவர ஜால வித்தையைக்கொண்டு அத்தகைய அனுபவத்தைப் பொய்ப்பித்துவிட முடியாது.

பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இந்தியா மேலும் மேலும் ஏழ்மையடைந்து வருகிறது என்று நேரில் கண்டவர்கள் கூறுகிறார்கள். இதற்கு மாறானதைக் காண வேண்டியதில் சிரத்தையுள்ளவர்களான ஆங்கிலேய நிர்வாகிகளும்கூட, இதை ஒப்புக்கொள்ளுகிறார்கள். கிராமங்களுக்குப் போய்ப் பாருங்கள். துயரமும் ஏக்கமுமே கிராமவாசிகளின் முகத்தில் எழுதப்பட்டிருப்பதை நீங்கள் காண்பீர்கள். அவர்களுக்கும், அவர்களுடைய கால் நடைகளுக்கும் வயிற்றுக்குப் போதுமானது இல்லை; இறப்போர் தொகை அதிகரித்துக்கொண்டு போகிறது: நோய்வாய்ப்பட்டால் அந்நோயை எதிர்த்துத் தாங்கிக் கொள்ளும் சக்தியும் அவர்களுக்கு இல்லை. கொயினா மருந்தும், நல்ல பாலும் தாராளமாகக் கிடைத்தால், மலேரியா நோயைக் குறித்துப் பயப்படவே வேண்டியதில்லை என்பது எல்லோருக்கும் தெரியும். என்றாலும், மலேரியா ஜுரம் வருடந்தோறும் பல்லாயிரக்கணக்கான கிராமவாசிகளைக் கொன்று விடுகிறது. தங்களிடம் எறியப்படும் கொயினா அவர்களுக்கு இருக்கலாம். ஆனால், ஜுரம் நின்ற பிறகு உடம்பைத் தேற்றிக்கொள்ள வேண்டிய காலத்தில் சாப்பிட வேண்டிய பால் அவர்களுக்குக் கிடைக்காது. அவர்களுக்கு இருக்கும் கடன் சுமை அதிகமாகிக் கொண்டே போகிறது. கல்யாணச் செலவு போன்றவைகளினால்தான் இக்கடன் சுமை அதிகமாக இருக்கிறது என்று கூறுவது வீண் நிந்தனையாகும். அவர்களிடம் குறைந்துகொண்டே வரும் பணத்திற்கு இவையெல்லாம் புதிய செலவுகள் அல்ல. பணத்தை அவர்கள் குவித்து வைத்திருக்கிறார்கள், தங்கம், வெள்ளி நாணயங்களையெல்லாம் நகைகளாக மாற்றி வருகிறார்கள் என்பதெல்லாம் கட்டுக்கதைகள். கோடிக்கணக்கானவர்களுக்கு வெள்ளி, தங்க நகைகளே இல்லை. தாராளமாக நடமாடுவதற்கு இடையூறானதும், தேகாரோக்கியத்தைக் கெடுப்பதுமான, மரத்தினாலும் கல்லினாலுங்கூட செய்த ஆபாசமான வளையல்களையும் மோதிரங்களையுமே

அவர்கள் அணிகிருர்கள். அவர்களிடையே இருந்துவரும் படிப் பின்மை, ஏதாவது ஆகிறது என்ருல் அதிகரித்துக்கொண்டு தான் வருகிறது. இவையெல்லாம் வளர்ந்துவரும் சுபிட்சத் தின் அறிகுறிகளாக மாட்டா.

ஏற்றுமதி, இறக்குமதியின் தன்மைதான் என்ன என்பதை இனி பார்ப்போம். *1927—28-ல்* ரூ. *309* கோடிக்கு ஏற்றுமதி யாயிற்று. அச்சமயம் ரூ. *231* கோடிக்கு மேல் இறக்குமதியாகி யிருக்கிறது. ஏற்றுமதியானவை முக்கியமாகப் பருத்தி, உணவு தானியங்கள், எண்ணெய் வித்துக்கள், பதனிட்ட தோல், பத னிடாத தோல், உலோகங்கள், உலோகத் தாது போன்ற கச்சாப் பொருள்கள். நமக்கு ஆற்றல் இருந்து, இவைகளில் ஈடுபடுத்துவதற்கு வேண்டிய மூலதனமும் நமக்கு இருந்தாலோ, அல்லது இதற்கு அவசியமான ஆற்றலையும் மூலதனத்தையும் நமக்கு அளிக்கவேண்டியது தனது முக்கியமான கடமை என்று கருதும் அரசாங்கம் நமக்கு இருந்தாலோ, ஏற்றுமதியாகும் இப்பொருள்களெல்லாம் இந்தியாவிலேயே இருந்துவிடலாம். நமது கையாலாகாத்தனத்தையும், மக்களின் நலனில் அரசாங்கம் கொண்டிருக்கும் அக்கிரமமான அசிரத்தையையும் பற்றிய கதைதான் இந்தியாவின் ஏற்றுமதியைப் பற்றிய கதையும்.

இறக்குமதியாகும் பொருள்களில் சேர்ந்தவை இவை: ரூ. *65* கோடிக்குப் பருத்தி ஜவுளி; ரூ *4* கோடிக்குப் போலிப் பட்டு ஜவுளி; ரூ. *18* கோடிக்குச் சர்க்கரை; ரூ. *23* கோடிக்கு உலோகப் பொருள்களும் அவற்ருல் தயாரானவைகளும்; ரூ. *5* கோடிக்கு மோட்டார் வண்டிகள்; ரூ. *3* கோடிக்குச் சாராய வகைகள்; ரூ. *2* கோடிக்குச் சிகரெட்டுகள். அதிகக் கேவலமான நம் நிலைமையை இவை காட்டாவிட்டாலும், இந்த இறக்குமதிகளும் நமது கையாலாகாத்தனத்தைப் பற்றிய அந்தக் கதையைத்தான் கூறுகின்றன. அபிவிருத்திக்கான நல்ல நிலைமையிலிருக்கும் ஒரு நாட்டின் இறக்குமதிகள், அந்த நாட்டின் வளர்ச்சிக்குத் தேவையானவைகளைக் கொண்டதாக இருக்க வேண்டும். சாராய வகைகளும் சிகரெட்டுகளும் நமது வீழ்ச்சியை அதிகமாக்குபவை, இறக்குமதியில் மிக அதிகமான தாக இருக்கும் பருத்தி ஜவுளி, நமது மானக்கேடான, படுமோச மான நிலைமையை வெளிப்படுத்துகிறது. நமது கிராமங்கள், தங்களுக்கு வேண்டிய துணிகளையெல்லாம் தங்கள் இல்லங்களி லேயே உற்பத்தி செய்துகொண்டு வந்த காலத்தில் அவை எப்படி இருந்திருக்கும் என்பதை, ஜவுளி இறக்குமதிகள் நமக்கு நினைவுபடுத்துகின்றன. கிராமவாசிகளுக்கு, அவர்களுக்கு வேலை யில்லாமல் சோம்பிக் கழிக்கும் நேரத்தில் வேலை கொடுப்பதற்கு ராட்டைக்குப் பதிலாக வேறு என்ன இருக்கிறது? பலமில்லாத அந்நிய மில் துணியை வாங்குவதற்காக அவர்கள் செலவிடும் கோடிக்கணக்கான தொகை வடிகட்டிக்கொண்டு போகப்பட்டு

விடுவதற்குப் பதிலாக இருக்கக்கூடியது எது? இத்தகைய மக்கள், அதிகரித்துக் கொண்டு வருவதைப் போன்று மேலும் ஏழைகளாகவும் மந்தமானவர்களாகவும் நிச்சயம் வளர்ந்து கொண்டுதான் வருவார்கள்.

'எங் இந்தியா'—28—3—1929

# 27

# பர்மிய இளைஞருக்குப் புத்திமதி

[அகில பர்மியர் சங்கத்தின் பொதுச் சபையின் ஆதரவில் காந்திஜிக்கு ரெங்கூனில் அளித்த வரவேற்புக்கு அவர் பதிலளித்துப் பேசியதன் முழு விவரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

பர்மாவில் நான் வந்து இறங்கியதுமே, பர்மிய நண்பர்களுடனும், ஆண்களுடனும் பெண்களுடனும், பர்மிய எண்ணங்களோடும், அவர்களுடைய அபிலாஷைகளோடும் நான் நெருங்கிய தொடர்புகொண்டுவிடுவதைக் காணுவது எனக்கு விசேஷமான ஆனந்தத்தை அளிக்கிறது.

என்னுடைய ஆன்மிக நன்மையைக் கோரி இப்பொழுது நீங்கள் எனக்கு வாசித்தளித்த வரவேற்பிதழுக்காக நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதில் நீங்கள் பல விஷயங்களைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அவைகளையெல்லாம் குறித்து நான் அபிப்பிராயம் கூறவேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்க மாட்டீர்கள். இப்பொழுது நீங்கள் கூறியவைகளின்மீது நான் என் அபிப்பிராயத்தைச் சொல்ல முற்படுவேனாயின், அது வெறும் அதிகப் பிரசங்கித்தனமேயாகும். ஆனால், உங்களோடு வாழ்ந்து வரும் இந்தியர்கள், உங்களுடைய அபிலாஷைகளிலோ, உங்களுடைய துன்பங்களிலும் துயரங்களிலுமோ சிரத்தை எடுத்துக் கொள்ளுவதில்லை என்பது உண்மை என்பதை நான் உங்களிடம் ஒப்புக்கொள்ளுகிறேன். இதைக் கண்டுகொள்ள வேண்டியிருந்ததற்காக நான் அதிக வருத்தப்படவே வேண்டும். உங்களுடன் வசித்துப் பிழைப்புத் தேடிக்கொள்ளுபவர்கள், உங்கள் நடுவே நடமாடிக் கொண்டிருப்பவர்கள், உங்களுடைய அபிலாஷைகளில் சம்பந்தம் வைத்துக்கொண்டு உங்களுடைய சுக துக்கங்களைப் பகிர்ந்து கொள்ளுபவர்களாகவும் இருக்க வேண்டும். உண்மையேயான இந்த விஷயத்தைச் சொல்லுவதற்கு, உண்மையான நிலையை நான் ஆராய்ந்துகொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை.

22-ஆம் தேதியோ, 23-ஆம் தேதியோ, நீங்கள் ஒரு பெரிய மகாநாட்டை நடத்தப் போவதாகவும், அதில் பிரிட்டிஷ் சரக்குகளைப் பகிஷ்கரிப்பதென்று தீர்மானம் செய்யப் போவதாகவும் நீங்கள் எனக்கு அறிவிக்கிறீர்கள். அத்தகைய நடவடிக்கையில் நீங்கள் இறங்குவதைக் குறித்து முழுப் பணிவுடன் நான் உங்களை எச்சரிக்கை செய்யவே வேண்டும். வேறு எதற்குமல்லாவிடினும், அந்தத் தீர்மானம் ஒன்றுக்கும் உதவாது, ஏனெனில், உங்களில் ஒருவர்கூட காரியத்தில் அதன்படி நடக்க முடியாது. அனுபவவாதிகளான ஆண்களும் பெண்களுமாகிய நீங்கள், உங்களைச்சுற்றிப் பார்த்துக்கொள்ளுவீர்களானல், இதை நீங்களே கண்டுகொள்ளுவீர்கள். இவ்விஷயத்தில் நிபுணன் நான் என்று சொல்லிக்கொள்ளுகிறேன். ஆகையால், உங்கள் கடமை எதுவோ அதை நீங்கள் செய்யவேண்டும் என்றே நான் பலமாக உங்களுக்கு யோசனை கூறுவேன். பிரிட்டிஷ் சரக்குகள் பகிஷ்காரப் பிரகடனம் செய்வது அல்ல உங்கள் கடமை. ஆனல், பிரிட்டிஷ் துணியும் சேர்ந்ததாக இருக்கும் எல்லா அந்நியத் துணிகளையும் பகிஷ்கரிப்பதாகப் பிரகடனம் செய்வதே உங்கள் கடமை.

இதில் எனக்கு அனுபவ ஞானம் உண்டு என்று கருதுகிறேன். அதை அடிப்படையாகக் கொண்டது நான் கூறும் வரையறை. இரண்டாவதாக, அகிம்சைத் தத்துவத்தை மிகுந்த பக்தியோடும், அதே போன்ற மிகுந்த பொறுமையோடும், விடா முயற்சியுடனும் நான் ஆராய்ந்திருக்கிறேன் என்று சொல்லிக் கொள்ளுகிறேன். நான் கூறும் வரையறை அதையும் அடிப்படையாகக் கொண்டது. அகிம்சா உணர்ச்சியிலேயே முற்றும் ஊறிப் போனவருக்குத் தனிப்பட்டவர் யாருடனும் சச்சரவே இல்லை. அவருடைய எதிர்ப்பெல்லாம் ஒரு முறைக்கும், மனிதனிடமிருக்கும் தீமைக்குமேயன்றி மனிதனுக்கு அல்ல.

ஆகையால், உங்கள் சச்சரவெல்லாம், உலகத்திலுள்ள பலமில்லாத இனத்தினரைச் சுரண்டும் ஏகாதிபத்திய உணர்ச்சிக்கு எதிராகவே அல்லாமல் பிரிட்டிஷ் மக்களுக்கு எதிராக அல்ல. இதற்கான திட்டம் முழுவதையும் அமைக்க நான் முயற்சிக்கக் கூடாது. ஆனல், நீங்கள் திட்டத்தை அமைத்தால், அதிலிருந்து நீக்கவேண்டியது இன்னது என்பதற்குத்தான் நான் யோசனை கூறவேண்டும். நான் மேலே சொன்ன வகையில் நீங்கள் வேலை செய்வீர்களானல், அதிலிருந்து கழிவது என்னவென்றால், இந்த அகிம்சைப் பகுத்தறிவு உங்களுடைய பகிஷ்கார நடவடிக்கையில் தானே கட்டுதிட்டத்தை உண்டாக்கிவிடும். அந்த எல்லை அந்நியத் துணியே.

இப்பொழுது அந்நியத் துணி பகிஷ்காரம் மாத்திரம் பர்மிய விவசாயிகளின் நிலைமையைச் சீர்ப்படுத்துவதில் உங்களுடைய அபிவிருத்தியை ஒரு கெஜம்கூட முன்னல் கொண்டுபோய்விடவில்லை. இன்று மாலைக் கூட்டத்தில் கார்ப்பொரேஷன் அளித்த

உபசாரப்பத்திரத்திற்குப் பதிலளிக்கையில், பர்மிய நண்பர்களின் பரோபகார சிந்தனையையும் பாராட்டினேன். ஆனால், பர்மிய ஆண்களின் உழைப்பைக் குறித்து அதேபோல நான் பாராட்ட முடியாமல் இருப்பதற்காக வருந்துகிறேன். நிலத்தைக் கொஞ்சம் கிளறிவிட்டு, ஏராளமாக நெல் சாகுபடி செய்துவிட்டால், அதுவே போதும் என்று திருப்தியடைந்து நீங்கள் இருந்துவிடுகிறீர்கள். இந்தியாவின் பல பகுதிகளில் நாங்களும் இதைத்தான் செய்துகொண்டிருக்கிறோம். ஆனால், இதில் கிடைப்பது வருடம் முழுமைக்கும் போதுவதில்லை. வருடத்தில் குறிப்பிட்ட காலத்திற்கு மாத்திரமே வேலை செய்துவிட்டு, வருடம் முழுவதற்கும் சுகமாக வாழ்ந்துவிடும் விவசாய சமூகத்தை உலகத்தில் எங்குமே கண்டதில்லை. அப்படியிருக்க, நீங்கள் அந்நியத் துணியை இறக்குமதி செய்வீர்களானால், உங்கள் கையினாலேயே வேலை செய்து உங்களுக்கு வேண்டிய துணியை நீங்களே தயாரித்துக்கொள்ளுவதற்கான பாக்கியத்தையும் கடமையையும் உங்களுக்கு நீங்களே மறுத்துக்கொள்ளுகிறீர்கள். உங்கள் இரு கைகளையும் வெட்டிக்கொண்டு விடுவதைப் போன்றது இது.

ராட்டையையும் கதரையும் குறித்து நீங்கள் அலட்சியமாகப் பேசியிருக்கிறீர்கள் என்றே அஞ்சுகிறேன். ஒரு பக்கம் அந்நியத் துணியைப் பகிஷ்கரிப்பது என்பதற்கும், மற்றோர் பக்கம் பிரிட்டிஷ் துணியை மாத்திரம் பகிஷ்கரிப்பது என்பதற்கும் உள்ள அடிப்படையான வித்தியாசத்தை நீங்கள் அறியாது போனால், ராட்டையைப் பரப்பவோ, அல்லது அதைத் திரும்பவும் நிலைநாட்டவோ நீங்கள் தவறிவிடுவீர்கள். நான் இதைக் கூறுவதை நம்புங்கள்.

ஆகையால், இந்தியாவில் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களின் வாழ்க்கையில் ராட்டைக்கு மகத்தான முக்கியத்துவம் இருப்பதைப் போன்று உங்களுடைய வாழ்க்கையிலும் அதற்கிருக்கும் முக்கியத்துவத்தைக் குறித்து இன்னும் கொஞ்சம் ஆழ்ந்து ஆராயுமாறு உங்களில் புத்திசாலிகளாக இருப்போரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

—'எங் இந்தியா' 4—4—1929

# 28

# அந்நியத் துணி பகிஷ்காரம்

காங்கிரஸ் காரியக் கமிட்டி நியமித்த அந்நியத் துணி பகிஷ்காரக் கமிட்டியின் காரியதரிசியான ஸ்ரீ ஜெயராம்தாஸ், சுறுசுறுப்பாகவே வேலை செய்திருக்கிறார். இக்கமிட்டியின்

தலைமைக் காரியாலயம், பம்பாய் காங்கிரஸ் மாளிகையில் இருக்கிறது. அங்கே இருந்து காரியதரிசி பிரசுரங்களையும், துண்டுப் பிரசுரங்களையும் வெளியிட்டுக் கொண்டிருப்பதோடு முனிசிபல் ஸ்தாபனங்களுக்கும் மற்றவர்களுக்கும் கடிதங்களும் எழுதிக் கொண்டிருக்கிறார். கதரை உற்பத்தி செய்து விற்கும் இந்தியா முழுவதிலுமுள்ள கதர் நிலையங்களையும், அவற்றின் விலாசங்களையும் ஒரு முக்கியமான பிரசுரம் அறிவிக்கிறது. இத்தகைய நிலையங்கள் மொத்தம் 328 இருக்கின்றன. அவற்றில் வங்காளத்தில் 66, தமிழ் நாட்டில் 64 இருக்கின்றன என்பதை அறிந்து கொள்ளுவதில் வாசகர்கள் சிரத்தை கொள்ளுவார்கள். அடுத்தபடியாக ஆந்திராவில் 39 நிலையங்களும், பீகாரில் 33 நிலையங்களும் இருக்கின்றன. இந்த ஜாபிதாவைப் பொறுத்த வரையில் அது உற்சாகமளிப்பதாகவே இருந்த போதிலும், நாட்டிலிருக்கும் அந்நியத் துணிக் கடைகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் சமுத்திரத்தில் ஒரு துளியைப் போன்றதே இது. பம்பாயில் மாத்திரம் அந்நியத் துணி விற்பனைக் கடைகள் 328-க்கு மேல் இருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. இந்தியாவிலிருந்து வருடந்தோறும் கோடிக்கணக்கான ரூபாயை வடிகட்டிக்கொண்டு போய்விடும் இந்த வியாபாரத்தை மக்கள் கைப்பற்றியாக வேண்டும். கதருக்காகச் செலவிடும் ஒரு ரூபாய், வாழ்வை அளிக்கிறது. ஆனால், அந்நியத் துணியை வாங்குவதற்குச் செலவிடும் ஒரு ரூபாய், வாழ்வைக் கொல்லுகிறது.

பகிஷ்காரக் கமிட்டிக் காரியாலயம் வெளியிட்டிருக்கும் பிரசுரம், பகிஷ்காரம் அடைந்திருக்கும் முன்னேற்றத்தைப் பற்றிய விவரங்களைக் கூறுகிறது. முதல் பிரசுரம், பகிஷ்காரத்தின் அவசியத்தைக் கூறுகிறது. அப்பிரசுரத்திலிருந்து ருசிகரமான கீழ்க்கண்ட பகுதியைக் கொடுக்கிறேன் :

**நாம் தலைக்கு 13 கெஜம் வீதம் துணி உபயோகிக்கிறோம் :**

"1899-ஆம் ஆண்டிலிருந்து 1928-ஆம் ஆண்டு வரையில் 29 ஆண்டுகளில் தயாரிக்கப்பட்டுள்ள, இந்தியாவில் இறக்குமதியாகியுள்ள துணியின் புள்ளி விவரத்தைக் கொண்டு, வருடத்திற்கு இந்தியாவில் ஒருவர் 12.86 கெஜம் துணி வாங்குகிறார் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. சென்ற பத்து வருடங்களின் கணக்கை மாத்திரம் வைத்துப் பார்த்தால், சராசரி ஒருவர் உபயோகிக்கும் துணி 13.08 கெஜம், அதாவது தலைக்கு 13 கெஜம் என்றாகிறது. இதற்கு மாறாகத் தலைக்குச் சராசரி 9 கெஜம் துணியைக் கொண்டே இந்தியா காலந்தள்ளவும் முடிந்திருக்கிறது. 1919-20-இல் தலைக்குச் சராசரி 8.8 கெஜம் துணியையே உபயோகித்திருக்கிறார்கள்.

**பகிஷ்காரப் பிரச்னை :**

சாதாரணமாகத் தலைக்குச் சராசரி துணிச் செலவு 13 கெஜம் என்று வைத்துக்கொண்டு, அந்நியத் துணி முழுவதையும் பகிஷ்கரிப்பதில் என்ன பிரச்னை இருக்கிறது என்று பார்ப்போம். இந்த 13 கெஜம் துணியில் வெளி

நாட்டிலிருந்து வருவது எவ்வளவு? சென்ற பத்து ஆண்டுகளில் இந்தியா, தான் உபயோகிக்கும் மொத்தத் துணியில் 33 சத விகிதத்தை, அதாவது தலைக்கு 4-1/3 கெஜம் வீதம் வெளிநாட்டுத் துணியை உபயோகித்திருக்கிறது. தலைக்கு வேண்டியதான மீதமிருக்கும் 8-2/3 கெஜம் துணியை நாட்டிலேயே மில்களும் கைத்தறிகளும் தயாரித்திருக்கின்றன.

**அந்நியத் துணியை அடியோடு பகிஷ்கரிப்பதால், இந்தியாவில் மேற்கொண்டும் ஆளுக்கு 4-1/3 கெஜம் வீதம் தயாரித்தாக வேண்டும் என்ற பிரச்னை ஏற்படுகிறது. அதைச் சமாளிப்பது எப்படி ? :**

மேலே கண்ட கணக்குப்படி நாட்டு மக்களுக்கு அதிகப்படியாக வேண்டியிருக்கும் மொத்தத் துணி 4-1|3 × 31.89 லட்சம், அதாவது சுமார் 138 கோடி கெஜம். சாதாரணமாக நூற்கக்கூடிய ஒருவர், எட்டு மணி நேரத்தில் 10 ஆம் நெம்பர் நூலை (சராசரி மணிக்கு 350 கெஜம் நூல் வீதம்) ஒரு கெஜம் துணிக்குப் போதுமானது நூற்றுவிட முடியும் என்று நிபுணர்கள் கணக்குப் போடுகிறார்கள். அவர் தினம் 8 மணி நேரம் வீதம் 300 நாட்கள் வேலை செய்தால் 300 கெஜம் துணியை உற்பத்தி செய்துவிட முடியும். நமக்கு அதிகப்படியாகத் தேவைப்படும் 138 கோடி கெஜம் துணியை உற்பத்தி செய்வதற்கு அத்தகைய நூற்போர் 46 லட்சம் பேர் நமக்குத் தேவை. இந்தியாவிலிருக்கும் 50 லட்சம் ராட்டைகளில் இன்று 40 லட்சம் ராட்டைகள் சும்மா இருக்கின்றன. நூற்போரைக் கண்டுபிடித்து, அந்த ராட்டைகள் வேலை செய்யும்படிச் செய்யவேண்டும். சுமார் 32 கோடி மக்களைக் கொண்ட ஒரு நாட்டிற்கு இது அசாத்தியமான வேலையா?

**இதன் பொருள் என்ன என்றால், இந்தியாவிலுள்ளவர்களில் ஒவ்வொரு 200 பேருக்கும் 3 பேர் வீதம் அத்தகைய நூற்பு வேலையைச் செய்வார்களாயின் இக்காரியத்தைச் செய்துவிடலாம்! இதற்கான முயற்சியைச் செய்வதில் நமக்கு உறுதி இல்லாததுதான் நம்மிடம் இருக்கும் குறை.**

இந்தியாவில் கிராமங்களில் வருடத்திற்கு மூன்று மாத காலத்திற்கு ஒரு வேலையும் இல்லாமலிருக்கும் தொழிலாளரின் தொகை 11 கோடி என்று மதிப்பிடப்படுகிறது. வேலையில்லாதிருக்கும் அத்தகைய கிராமத் தொழிலாளரில் 184 லட்சம் பேர் (அதாவது, வேலையில்லாதிருப்பவர்களில் ஆறு பேருக்கு ஒருவர் வீதம்) நூற்பதில் ஈடுபடுவார்களானால், நிர்ப்பந்தமாக அவர்கள் எந்தவித வேலையுமில்லாதிருக்கும் காலத்திற்குள்ளேயே அந்நியத் துணியைப் பகிஷ்கரிப்பதற்கு வேண்டியிருக்கும் முழு நூலையும் நாம் பெற்றுவிடலாம். நூற்பதால் அவர்களுக்கு வருவாய் கிடைக்கும். குறைத்துக் கணக்குப் போட்டாலும், தினத்திற்கு ஓர் அணா வீதம் கிடைக்கும். வேறு வகையில் சராசரி ஓர் அணா 7 தம்படி வருமானத்தைப் பெற்று வரும் கோடிக் கணக்கான மக்களுக்கு இந்த அதிகப்படியான வருமானம் வரப்பிரசாதம் போன்றதே."

பிரசுரம் முடிவில் கீழ்வருமாறு கூறுகிறது :

**" இவ்விதம் இப்பிரச்னை, எளிதான, புரியக்கூடிய வகையில் குறுகிவிடுகிறது. எல்லா வகையிலுமோ, அல்லது கீழ்க்**

கண்டவைகளில் ஏதாவது ஒரு வழியிலோ நீங்கள் இயக்கத்திற்கு உதவி செய்யலாம் :

1. அந்நியத் துணிக்குப் பதிலாக அசல் கதரையே உபயோகிப்பது.

2. இயக்கத்திற்குப் பண உதவி செய்வது.

3. தினமும் குறைந்த பட்சம் அரை மணி நேரத்திற்காவது தியாகத்திற்காக நூற்பது. உடனே, இப்பொழுதே, இன்றே காரியத்தில் இறங்குங்கள்.''

—'எங் இந்தியா' – 18—4—1929

# 29

# பட்டணமும் கிராமமும்

ஸ்ரீ கிரக்கின் புத்தகத்தையும், அதைக் கொண்டு ராட்டையின் தத்துவம் முழுவதையுமே கண்டித்து 'பிரபுத்த பாரத்' என்ற பத்திரிகை எழுதியிருக்கும் விரிவான கண்டனங்களைக் கத்தரித்துப் பல நண்பர்கள் எனக்கு அனுப்பியிருக்கிறார்கள். அக்கட்டுரைகள் அதிக நீளமானவைகளாக இருப்பதால் இப்பத்திரிகையில் அவற்றைப் பிரசுரிப்பதற்கில்லை. அதைப் படிக்க ஆர்வமுள்ளவர்கள் அசல் கட்டுரையைப் படித்துக் கொள்ளட்டும். ஆனால், அவை கீழ்க்கண்ட யோசனைகளைக் கூறியிருக்கின்றன :

''1. மேனாட்டு வகையில் இந்தியா யந்திரத் தொழில் மயமாக வேண்டும்.

2. உயிருடன் வாழ்வதென்ற பிரச்னையை ராட்டையினால் தீர்த்துவிட முடியாது.

3. ராட்டையின் வெற்றிக்கு அவசியம் என்று கூறப்படும் நிபந்தனைகள், இப்பொழுது இருந்து வரும் மனப்போக்கிலும், மனித சுபாவத்திலும் முடியாததான மாறுதல்களை விரும்புகின்றன.

4. யந்திரங்கள் ஒரு நாட்டின் உள்நாட்டுத் தேவையைப் பூர்த்தி செய்வதைப் பொறுத்தது அல்ல, அவற்றின் அவசியமும் உயர்வும். ஆனால், பிற நாடுகளுக்குச் சென்று அந்நிய வர்த்தகத்தைக் கைப்பற்றுவதைப் பொறுத்திருக்கிறது.

5. இந்தியா வாழ்ந்து, மனிதரிடையே தனது ஆன்மப் பணியையும் அது நிறைவேற்ற வேண்டுமானால், அது இக்கால நாகரிகத்திற்கு ஏற்ற வகையில் நாகரிகமடைய வேண்டும்... இக்கால யந்திரத் தொழில் முறைகளைத் தயக்கமின்றித் தீவிரமாக நாம் கிரகித்துக்கொள்ளுவோமாக... ஆனால்,

அதோடு ஆன்மிகத்தையும் நாம் தீவிரமாக அனுசரித்து நாட்டு மக்களின் புத்தியில் மகத்தான ஆன்மிக லட்சியத்தை உண்டாக்குவதோடு, நாட்டின் மீது அதிக அன்பையும் உண்டாக்க வேண்டும். அவற்றின் சிறகுகள் மீது ஏறி, நாம், மேற்கத்திய நாடுகள் வருந்தத்தக்க வகையில் இப்பொழுது வழி தெரியாமல் தடவிக்கொண்டிருக்கும் இக்கால நாகரிகமாகிய இருண்ட பள்ளத்தாக்கைக் கடந்து விடலாம். ஆன்மிக லட்சியம் இல்லையானல், இக்கால நாகரிகம் சீக்கிரத்தில் அழிந்தே போகும்.''

சாத்தியமான வரையில் அக்கட்டுரைகளின் ஆசிரியரின் சொற்களையே கொடுத்திருக்கிறேன். இந்தக் கருத்துக்களை நான் ஏற்றுக்கொள்ள முடியாமல் இருப்பதைக் குறித்து வருந்துகிறேன். எப்படியும் இக்கால நாகரிகம் நல்லதுதான், அதை எதிர்த்து வெற்றி பெற்றுவிட முடியாது என்ற எண்ணத்தையே அந்த யோசனைகள் அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. ஆனல், மேற்கு நாடுகளில், இந்த நாகரிகத்தின் மீது நம்பிக்கை இழந்து வரும் அறிவாளிகளின் தொகை அதிகமாகி வருகிறது. ஏனெனில், இந்த நாகரிகம், ஒரு பக்கத்தில் திருப்தி செய்துவிட முடியாததான பொருளாசையையும், மற்றோர் பக்கத்தில் அதனல் விளைவதான போரையும் கொண்டிருக்கிறது.

ஆனல், நல்லதோ கெட்டதோ, மேனாட்டு முறையில் இந்தியா ஏன் யந்திரத் தொழில் மயமாக வேண்டும்? மேற்கத்திய நாகரிகம் பட்டணங்களைப் பற்றியது. இங்கிலாந்தையோ, இத்தாலியையோ போன்ற ஒரு சிறு நாடு, தனது முறைகளைப் பட்டண மயமானதாக்கிக் கொள்ள முடியும். ஜனத்தொகையை மிகக் குறைவாகக் கொண்ட அமெரிக்கா போன்ற பெரிய நாட்டுக்கு, இதைத் தவிர வேறு வழியில்லாமலும் இருக்கலாம். ஆனல், நம் நாடோ பெரிது. இது ஏராளமான ஜனத்தொகையைக் கொண்டது. நமக்குப் புராதனமான கிராமப் பாரம்பரியமும் உண்டு. இது இந்நாட்டுக்கு உகந்ததாகவும் இருந்து வந்திருக்கிறது. ஆகையால், இந்நாடு மேனாட்டு முறையைப் பின்பற்றக் கூடாது என்றுதான் யாரும் நினைக்கவேண்டும். குறிப்பிட்ட ஒரு நிலையில் இருக்கும் ஒரு நாட்டிற்கு நல்லதாக இருப்பது, அதற்கு மாறுபட்டதான நிலையிலிருக்கும் இன்னுமொரு நாட்டிற்கும் நல்லதாகவே இருக்க வேண்டும் என்பதில்லை. ஒருவருக்கு உணவாக இருப்பது இன்னெருவருக்கு விஷமாகவும் ஆகிவிடுகிறது. ஒரு நாட்டின் பண்பாட்டை நிர்ணயிப்பதில், அந்த நாட்டின் இயற்கை அமைப்பிற்குப் பிரதானமான பங்கு உண்டு. துருவப் பிரதேசத்தில் வசிப்பவருக்கு ரோமத் தோலினலான பர் சட்டை அவசியமாக இருக்கலாம். ஆனல், உஷ்ணப் பிரதேசத்தில் இருப்போர் அதை அணிந்தால் உடல் வெந்து போகும்.

'உயிருடன் வாழ்வது என்ற பிரச்னையை ராட்டையினல் தீர்த்துவிட முடியாது' என்பது அக்கட்டுரையை எழுதியிருப்பவர் கூறும் இரண்டாவது விஷயம். இந்த வாதம், செல்லாத வாதம்.

இதற்கு மாருக, ராட்டையினுலோ, அல்லது அது போன்ற வேறு ஒன்றினுலோதான் இப்பிரச்னையைத் தீர்க்க முடியும். இந்தியா உயிருடன் வாழ வேண்டுமானுல், கிராமக் கைத்தொழில்கள் அவசியம் என்பதை முக்கியமானவர்கள் ஒவ்வொருவரும், ஆங்கிலேயரும் இந்தியரும் ஒப்புக்கொண்டிருக்கிருர்கள். இங்கே சம்பந்தப்பட்ட கட்டுரைகளை எழுதியிருப்பவர், ஸ்ரீ கிரக் பட்சபாதமின்றிக் கூறியிருப்பதைச் சரியல்லவென்று அடியோடு மறுத்திருப்பதன் மூலம், தமக்கும், ஸ்ரீ கிரக்குக்கும், தமது சொந்த நாட்டிற்கும் நியாயத்தைச் செய்யவில்லை. ஸ்ரீ கிரக்கிற்கு இன்ஜினீயரிங் தொழிலில் அதிக அனுபவம் உண்டு. இந்தியாவின் முப்பது கோடி மக்களின் கைகளிலும் கால்களிலும் தேங்கிக் கிடக்கும் சக்தி வீணுகப் போய்விடும்படிச் செய்து, அதற்குப் பதிலாக நீராவி அல்லது வேறு சக்தியை அவர்கள் உயிருடன் வாழும்படிச் செய்வதற்கு உபயோகிக்க முற்பட்டால், அது தற்கொலையாகவே முடியும். இந்திய மக்களில் கோடிக்கணக்கானவர்கள் செத்து மடியும்படியே செய்யும் என்று ஸ்ரீ கிரக் திட்டமாகக் காட்டியிருக்கிருர். இப்படி மற்ற சக்திகளை உபயோகிப்பது, தன் உணவைத் தன் கையால் எடுத்து வாயில் வைத்துக் கொள்ளுவதற்குப் பதிலாக அந்த வேலையை ஒரு யந்திரம் செய்யும்படிச் செய்வதற்கே சமமாகும். வாய்க்குப் போகும் உணவு அதிகச் சூடாக இல்லாமல் இருக்கிறதா என்பதைப் பார்த்துக் கொள்ளும் உணர்வு, மூளையுடன் இணைக்கப்பட்டுள்ள கையின் நரம்புகளுக்கு இருக்கிறது. உதடுகளுக்கு இயல்பாக இருப்பதான இந்தப் பாதுகாப்பு யந்திரத்தில் இல்லாததால், யந்திரம் உணவை ஊட்டுவதில் உதடு வெந்துவிடும் அபாயம் இருக்கிறது.

கட்டுரைகளில் கூறப்பட்டிருக்கும் மூன்ருவது கருத்துக்குப் பதில் எளிதானது. 'ராட்டையின் வெற்றிக்கு அவசியம் என்று கூறப்படும் நிபந்தனைகள்', 'இப்பொழுது இருந்து வரும் மனப்போக்கிலும் மனித சுபாவத்திலும் அதிக மாறுதல்களை' விரும்பவில்லை என்பது மாத்திரமல்ல, 'இப்பொழுது இருந்து வரும் மனப்போக்கிலும் மனித சுபாவத்திலும்' இப்பொழுது இந்தியாவில் காணப்படும் முறையில்தான் அவை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. இது வேறு விதமாக இருந்திருக்குமானுல், பலவித தேசீய நடவடிக்கைகளுக்குமிடையே, எவ்வளவோ குழப்பங்களும் ஏமாற்றங்களும் இருந்து வரும் போது, 2,000 கிராமங்களினூடே ராட்டை பரவியிருக்க முடியாது. ராட்டை புத்துயிர் பெற்றிருக்கும் இந்த எட்டு ஆண்டுகளுக்குள், மெதுவாகவே எனினும் உறுதியுடன், நன்ருக விளங்கும் வகையில் அது இவ்வளவு முன்னேற்றத்தையும் அடைந்திருக்க முடியாது.

கட்டுரையை எழுதியிருப்பவர் தெரிவித்திருக்கும் நான்காவது விஷயத்தில், யந்திர யுகத்தை யூகிக்க வேண்டியதன் நியாயத்தை எடுத்துக் கூறுகிருர். உள்நாட்டுத் தேவையை அது

பூர்த்தி செய்யும் என்பதற்காக அதைப் பூசிக்க வேண்டும் என்று அவர் சொல்லவில்லை. ஆனால், 'வெளிநாட்டுக்குச் சென்று அந்நிய வியாபாரத்தைக் கைப்பற்றிக்கொள்ளுவதற்காக' என்கிறார். அதிருஷ்டவசமாகவோ, துரதிருஷ்டவசமாகவோ, இந்தியா படையெடுத்துப் போய் பிடித்துக்கொண்டு விடக்கூடிய அந்நிய நாட்டு மார்க்கெட்டு எதுவும் இப்பொழுது இல்லை. கைதேர்ந்தவர்களான மேனாட்டுச் சுரண்டல்காரர்கள், அவ்வேலையைச் செய்து பிடித்துக்கொண்டு விட்டார்கள். பொருள்களை உற்பத்தி செய்து வரும் அந்நிய நாடுகளின் மீது அதே சமயத்தில் படையெடுத்துப் பிடித்துக்கொண்டால், வெளிநாட்டு மார்க்கெட்டுகளையும் நாம் பிடித்துக்கொண்டு விடலாம். இக்கட்டுரையை எழுதியிருப்பவரின் ஆலோசனையில் அத்தகைய மகத்தான திட்டம் ஒன்றும் இருக்குமானால், ராட்டை அன்பர்கள் தங்களுக்கென்று வகுத்துக்கொண்டிருக்கும் பணியைவிட இதை நிறைவேற்றுவது என்பது அதிகக் கஷ்டமானது என்று எண்ணுகிறேன்.

கட்டுரையாளர் கூறியிருக்கும் கடைசி யோசனை, அவருடைய கட்சி முழுவதையுமே தோற்கடித்து விடுகிறது. இந்தியா நாகரிகமடைய வேண்டும் என்கிறார். அதே சமயத்தில் இக்கால நாகரிகம் ஆன்மிகத்தை அழித்துவிடுமாகையால் ஆன்மிகத்தைப் பத்திரமாக வைக்க வேண்டும் என்கிறார். அடைய முடியாதது என்று அனுபவம் மிக்க மகரிஷிகள் நமக்கு என்ன சொல்லியிருக்கிறார்களோ, அதை இந்தியா செய்யவேண்டும் என்று இவர் கூறுகிறார். 'கடவுளுக்கும் தொண்டு செய்து பணத்திற்கும் தொண்டு செய்ய முடியாது' என்றே அவர்கள் சொன்னார்கள். இந்த இரண்டையும் இணைக்க மேற்கத்திய நாடு முயன்று தோல்வியடைந்துவிட்டது என்பதைக் கட்டுரையாளர் ஒப்புக்கொள்ளுவதாகவே தோன்றுகிறது. அசாத்தியமான அக்காரியத்தை இந்தியா செய்துவிட முடியும் என்று இவர் ஏன் எதிர்பார்க்கிறார்? நம் முன்னோர்களால் இதைச் செய்ய முடிந்திருந்தால், அவர்கள் இதை முன்னடியே செய்திருப்பார்கள் என்று ஏன் எண்ணிக்கொள்ளக்கூடாது? உண்மையில் அம்முயற்சியையெல்லாம் செய்து பார்த்துவிட்ட பிறகே உபநிஷதை எழுதியவர்கள், 'எல்லாம் கடவுளுக்குச் சொந்தமானவை. ஆகையால், அக்கம் பக்கத்தில் இருப்பவரின் சொத்துக்கு ஆசைப்படாமல் வாழ்' என்று சொன்னார்கள். சுரண்டுவது என்றால், அபகரித்தல் என்றுதான் நிச்சயமாகப் பொருள்படும். இப்படி அபகரிப்பதற்கும் ஆன்மிகத்திற்கும் எப்பொழுதும் பொருந்தாது. ஆகையால், ஆன்மிகப் பண்பாட்டிற்கு என்றே இருக்கும் ஒரு பத்திரிகையில் இத்தகைய மோசமான முடிவைக்கொண்ட கட்டுரையைப் படிக்க வேண்டியிருந்தது எனக்கு வேதனையாக இருந்தது.

ஒன்றுக்கொன்று முரண்பட்டதான இரு கருத்துக்களைக் கூறும் இக்கட்டுரையாளர், இது சம்பந்தமாகச் சுவாமி விவேகா

னந்தரின் பெயரையும் பயன்படுத்திக்கொண்டிருப்பது எனக்கு இன்னும் அதிக மனவேதனையை அளிக்கிறது. காலஞ்சென்ற பெரியவர்களின் பெயரை, தம் கட்சிக்குப் பிறரை மாற்றுவதற்காகச் செய்யும் வாதங்களில் யூகமான ஆதாரங்களுக்குப் பயன்படுத்துவது அபசாரமான காரியம் என்றே கருத வேண்டும். படித்த இந்தியரான நாம் மிகச் சிலர் இருந்துகொண்டு, வாயில்லாப் பூச்சிகளான கோடிக்கணக்கான இந்தியருக்கு நாமே தருமகர்த்தாக்கள் என்றும் சொல்லிக்கொண்டு, அம்மக்களின் நன்மையை வைத்துச் சூதாடி வருவதால், மிகப் பெரிய பொறுப்பைச் சுமப்பவர்களாகிறோம். கொஞ்சம் ஆன்மிக அறிவும் பெற்றிருக்கிறோம் என்று சொல்லிக்கொள்ளும் நம்மைப் போன்றவர்களுக்கு, அதைவிட இன்னும் அதிகக் கடுமையான பொறுப்பும் இருந்து வருகிறது.

'எங் இந்தியா' – 25—7—1929

# 30

# பஞ்ச நிவாரணத்திற்கு ராட்டை

வங்காள அபய ஆசிரமத்தின் பிரபுல்ல பாபு, சமீபத்தில் ஏற்பட்ட வெள்ள சம்பந்தமாக மேற்கொண்டிருக்கும் நிவாரண வேலைகளைக் குறித்து எழுதுகிறார் :

''வெள்ளத்தினால் பாதிக்கப்பட்டிருக்கும் பிரதேசமான திப்பேராவில் ராட்டையைப் பரப்புவதற்காக சேத் ரமண்லால்ஜி நன்கொடை அளித்திருப்பது தங்களுக்கு நினைவு இருக்கும். அதன் பிறகு ராட்டை வேலைக்கு என்றே முக்கியமாகக் குறிப்பிட்டு ஸ்ரீ ஹரிவல்லப ஸி. ஷாவின் மூலம் இந்தியர் ஊழியர் சங்கத்தின் நிவாரண நிதியிலிருந்து ரூபாய் ஆயிரமும், மற்றவர்களிடமிருந்து இன்னும் கொஞ்சம் தொகையும் கிடைத்திருக்கிறது. நிவாரண வேலையின் ஆரம்ப காலத்தில், மக்களை அவர்களுடைய சாமான்களுடன் மேடான பகுதிகளுக்குக் கொண்டுபோய் அவர்களுக்கு இனமாக அரிசி கொடுத்து வருவதே எங்கள் வேலையாக இருந்தது. பிறகு, மலைகளில் வேலை செய்வதற்கு அவர்களுக்கு அனுமதிச் சீட்டு வாங்கிக் கொடுத்து, குத்துவதற்கு நெல்லும் கொடுத்ததோடு நூற்கும்படி ராட்டையையும் கொடுத்து முயற்சித்தோம். மழை அதிகமாக இருந்ததால் நெல் குத்தும் வேலையில் எந்த அபிவிருத்தியையும் அடைய முடியவில்லை. ஆனால், கோமில்லாவிலிருந்து 6 மைல் தூரத்திலுள்ள கஷ்ட நிவாரண முகாம்களில் ஒன்றான மைனமதியில் ராட்டையை அதிக சந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்டார்கள். கரை உடைப்பு எடுத்துக்கொண்ட பிறகு ஆறு வாரத்திற்கு அப்பால், ஜூலை மாதக் கடைசியில் இவ்வேலை ஆரம்பமாயிற்று. பலன் அதிகத் திருப்திகரமானதாக இருக்கிறது. ஜூலை மாதக் கடைசியில் 57 ராத்தல் நூல் தயாராயிற்று. ஆகஸ்டு மாதத்தில் இது 375 ராத்தலுக்கு உயர்ந்தது. நூற்றவர்கள் 227 பேர் மொத்தம் ரூ. 193-11-9 சம்பாதித்தனர். செப்டம்பரில் 1,034 ராத்தல் நூல்

உற்பத்தியாயிற்று. இதனல் நூற்பவர்கள் 414 பேர் ரூ. 588-6-0 சம்பாதித்தார்கள். நூற்போரின் தொகை வேகமாக அதிகரித்துக்கொண்டு போகிறது. நிவாரண நிதியிலிருந்து ரூ. 10,000 ராட்டை வேலைக்காகச் செலவிடப் போகிறேம். அவர்கள் நூற்பதனல் மாத்திரம் ஒவ்வொரு மாதமும் ரூ. 1,000 சம்பாதிப்பது நிச்சயம் என்று கருதுகிறேம். இந்த மூலதனத்தைக் கொண்டு கிராமவாசிகள், இதைவிட அதிக வருவாய் வரத்தக்க வேலை எதுவும் தங்களுக்கு இல்லாதபோது, மாதந்தோறும் ரூ. 1,000 உபரி வருமானமாகச் சம்பாதிப்பது உண்மையில் மிகப் பெரிய காரியமே.

"இதோடு, நாங்கள் அரிசியைக் கொள்முதல் விலைக்கும் விற்று வருகிறேம். இவ்விதம் அரிசியை மலிவாக விற்பதனல் மக்களுக்குச் சில அணக்கள் மிச்சப்பட நாங்கள் உதவியதோடு இன்னுமொரு நன்மையும் ஏற்பட்டது. எங்கள் கடைகள் இல்லாமல் இருந்தால், உள்ளூர் வியாபாரிகள் வைத்ததுதான் விலையாக இருந்திருக்கும். நாங்கள் அரிசியை அடக்க விலைக்கு விற்றது அதைக் கட்டுப்படுத்தியது.

"இம்மக்கள் விதைக்க முடிந்த உயரமான பகுதிகளில் இரண்டாம் போகப் பயிர் மிக நன்ருக இருக்கிறது என்பதை அறிந்து ஆனந்தமடைவீர்கள். அவரவர்கள் அடைந்துவிட்ட நஷ்டத்தை ஈடு செய்துகொள்ள அநேகமாக முடியும். ஆனல், பள்ளமாகவுள்ள பகுதிகளில் நிலைமை அதிகப் பரிதாபகரமானதாக இருக்கிறது. அடுத்த ஜூலைக்கு முன்னல் அவர்கள் எவ்வித வெள்ளாமையையும் எதிர்பார்ப்பதற்கில்லை.''

கிழக்கிலிருந்தும் மேற்கிலிருந்தும், வடக்கிலிருந்தும் தெற்கிலிருந்தும், பல தரப்பட்ட நிலைமைகளின் கீழும், பலரிடமிருந்தும் இது போன்ற உண்மைகள் வந்துகொண்டிருக்கின்றன. இவ்விதமிருக்க, பஞ்ச காலத்திற்குச் சரியான உதவியாக இருக்கக் கூடியது ராட்டை என்பதில் அதற்குள்ள மதிப்பை யாரும் மறுக்க முடியாது.

—'எங் இந்தியா' – 31—10—1929

# 31

# அந்நியத் துணியும் மற்ற பிரிட்டிஷ் சரக்குகளும்

தீராத நோய் போல் இருந்து வரும் பட்டினியிலிருந்து இந்தியா விடுபட வேண்டுமானல், ஆங்கிலத் துணியாக இருந்தாலும், ஜப்பான் துணியாக இருந்தாலும், வேறு நாட்டுத் துணியாக இருப்பினும், அந்நியத் துணி எல்லாவற்றையும் இந்தியா தடுத்துவிட வேண்டும் என்பதைப் பொதுவாக ஆங்கிலேயர்கள், முக்கியமாக லங்காஷயர் மில் முதலாளிகள் உணர வேண்டும் என்பது பக்தியுடன் விரும்ப வேண்டியதாகும். இது ஒரு பொருளாதார அவசியம். இந்தியா, முற்றிலும் பூரணமான சுதந்தி

ரத்தை அடைந்துவிட்ட பிறகுங்கூட, இந்த அவசியம் நீக்கப்பட்டு விடாது. மக்களின் அரசாங்கம் ஏற்பட்டதும், அது உடனே செய்யும் முதற் காரியங்களில் அந்நியத் துணியை அடியோடு தடுத்துவிடுவதும் நிச்சயம் இருக்கும்.

நீக்கப்படும் அந்நியத் துணிக்குப் பதிலாக உள்நாட்டு மில் துணி கொடுக்கப்படமாட்டாது. ஆனால், இந்தியாவின் ஏழு லட்சம் கிராமங்களில் கையினாலேயே நூற்று, நெய்த கதரே அளிக்கப்படும். அந்நியத் துணி பகிஷ்காரத்தினால் உள்நாட்டு மில்கள் சந்தேகத்திற்கிடமின்றித் தாமே நன்மையை அடையும் என்றாலும், இந்தப் பகிஷ்காரத்தில் கதரின் சார்பாக, அதாவது பாடுபடும் கோடிக்கணக்கான மக்களின் சார்பாகவே காங்கிரஸ் தனது முக்கியமான சக்தியை யெல்லாம் உபயோகித்து வருகிறது. இந்தப் பகிஷ்கார இயக்கம் ஒரு பொதுஜன இயக்கம், பரோபகார இயக்கம் என்பதை அந்நியர் யாவரும் புரிந்துகொள்ள வேண்டும். இந்த இயக்கத்தின் தீவிரத்தையும் தூய்மையையும் அந்நிய உற்பத்தியாளர்கள் உணர்ந்து, ஒப்புக் கொண்டுவிடுவார்களாயின், முடிவில் தங்கள் நன்மையையும், தங்கள் தொழிலாளர் நன்மையையும் மேன்மைப்படுத்திக் கொண்டவர்களாவார்கள். இதில் ராஜீய விளைவுகளும் இருக்கின்றன. ஆனால், முற்றிலும் பொருளாதார, பரோபகார இயக்கமாகவே இது இருப்பதால், இதற்கு உலகம் முழுவதன் ஆதரவும் கிடைக்க வேண்டும்.

என்றாலும், அந்நியத் துணி பகிஷ்காரத்திற்கு எதிராக இங்கிலாந்தில், அவசியமில்லாமல் கசப்பான, வேண்டாத கிளர்ச்சி நடத்தப்பட்டு வருகிறது. பிரிட்டிஷ் சரக்குகள் பகிஷ்காரத்தை நீக்கியிருப்பதனால் இங்கிலாந்திற்கு ஏற்பட்டிருக்கும் மிகப் பெரிய சாதகத்தை அவர்கள் கவனிக்கவே இல்லை. இது நியாயம் அல்ல. அதிக முக்கியமான உண்மையை இவ்விதம் மறைத்துவிடுவது, இப்பொழுதே கஷ்டமானதாக இருக்கும் இந்தியப் பிரச்னையைத் தீர்ப்பதை இன்னும் அதிகக் கஷ்டமானதாக்கிவிடுகிறது. பிரிட்டிஷ் சரக்குகள் பகிஷ்கார இயக்கம் முப்பது வருடங்களாக நடந்துவரும் இயக்கம் என்பதை ஆங்கிலப் பொதுமக்கள் அறிவார்களா? முந்திய போராட்ட சமயத்தில் அது மிகுந்த பலத்தைப் பெற்றுவிட்டது என்பதையும், அந்நியத் துணிக்கு எதிரான இயக்கம் எவ்வளவு வெற்றியை அடைந்ததோ அதே அளவு அதிக வெற்றியை இந்த இயக்கமும் அடைந்தது என்பதையும் அவர்கள் உணருகிறார்களா? எப்போதைக்கும் என்று இல்லாவிட்டாலும், இன்னும் அதிக காலத்திற்கு, அந்நிய நாடுகளிலிருந்து சில பொருள்கள் இந்தியாவுக்குத் தேவை. இன்று ஏற்பட்டிருக்கும் சமரசம் தாற்காலிகமானது. சமரசம் நிரந்தரமானதாகி, இங்கிலாந்திற்கும் இந்தியாவுக்குமிடையே கௌரவமான பங்காளித்துவமும் ஏற்பட்டு விடுகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது இந்தியா தனக்குத் தேவைப்படும் மற்ற சாமான்களுக்கு இங்கிலாந்துடன்

செய்யும் வியாபாரம், இங்கிலாந்து எப்படியும் இழக்க வேண்டிய தாக இருக்கும் ஜவுளி, நூல் வியாபாரம் இல்லாது போவதால் ஏற்படும் நஷ்டத்தை ஈடு செய்வதற்கு அதிகமாகவே இருக்காதா ?

இந்தியா விரும்பினாலும், விரும்பாது போனாலும், பிரிட்டிஷ் சரக்குகளையோ, அந்நியப் பொருள்களையோ கொண்டுவந்து குவிப்பதற்கு ஏற்ற இடமாக இந்தியா இனி இருக்கப் போவது இல்லை என்பதையே அவர்கள் உணர வேண்டும். சுரண்டும் காலம் போய்விட்டது. சமூக ஒற்றுமையை நாம் அடைந்துவிடலாம், அடையாமலும் போகலாம். இதில் நாம் வெற்றி பெருது போனால், நாம் சுதந்திரத்தை உடனே அடையாது போகலாம். ஆனால், இந்தியாவைத் தாயகமாகக்கொண்டுள்ள ஹிந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்கள், கிறிஸ்தவர்கள், பார்ஸிகள், யூதர்கள் ஆகிய எல்லோரும், அந்நியரின் நன்மைக்காக இந்தியாவின் செல்வங்கள் சுரண்டப்படுவதை ஒன்றுபட்டு எதிர்த்துப் போராடுவார்கள் என்பதை உலகம் கண்டுகொள்ளும். அக்கிரமமாகப் பாகுபாடின்றி எல்லாச் சமூகத்தினரையும் பட்டினி போடும் வகையில் இடைவிடாமல் ஆண்டுதோறும் செல்வம் வடிகட்டப் படுவதை அவர்கள் எதிர்த்தே தீருவார்கள்.

—'எங் இந்தியா' – 23—4—1931

## 32

## கோவண ஆடை

மேற்கத்திய நாட்டு சம்பந்தத்தினால் இந்திய நாகரிகம் அழிக்கப்பட்டுவிட அனுமதித்துவிடக் கூடாது என்று டில்லியில் வர்த்தக சங்கங்களின் பெடரேஷனில் நான் கூறியதை ஒருவர் கண்டிக்கிறார். இவர், கோவண ஆடைதான் இந்திய நாகரிகம் என்று குழப்பிக்கொண்டு அதைக் கண்டித்திருக்கிறார்.

என்னுடைய கோவண ஆடையைக் குறித்து ஸ்ரீ சர்ச்சில் அன்புடன் இலவசமாக உலகத்திற்கு விளம்பரப்படுத்திவிட்டார். ஆகையால், மேலே சொன்னவர் செய்திருப்பதைப் போன்று அதைப் பரிகசிப்பது இப்பொழுது நாகரிகமாகிவிட்டது. ஆகவே, அதன் பொருள் என்ன என்பதை விளக்குகிறேன்.

*1921*-இல் நானும் மௌலானா முகமது அலியும் தென்னிந்தியாவில் சுற்றுப்பிரயாணம் செய்துகொண்டிருந்த போது, அவரை வால்டயரில் கைது செய்துவிட்டார்கள். எங்களுடன் பிரயாணம் செய்துகொண்டிருந்த அவருடைய மனைவியாரிடமிருந்து அவரைப் பிரித்துக்கொண்டு போய்விட்டார்கள். இது என் மனதை அதிக

மாக வாட்டியது. பீகம் முகமது அலி, அப்பிரிவைத் தைரியமாகச் சகித்துக்கொண்டார். சென்னையில் பொதுக்கூட்டங்களுக்கும் வந்தார். அவரைச் சென்னையிலேயே விட்டுவிட்டு நான் மதுரை வரை சென்றேன். போகும் வழியில், நடந்துவிட்டதைக் குறித்து எதுவுமே கவலைப்படாதவர்களாக நாங்கள் இருந்த வண்டியில் கூட்டம் இருந்ததைக் கண்டேன். அவர்கள் எல்லோரும் உயர்ந்த அந்நிய ஆடைகளினால் அலங்கரித்துக்கொண்டிருந் தார்கள். அவர்களில் சிலருடன் பேசினேன்; கதர் கட்டும்படிக் கேட்டுக்கொண்டேன். ஏனெனில், அலி சகோதரர்களின் விடு தலையைப் பெறுவதற்குக் கதரின் மூலமின்றி எனக்கு வேறு வழி எதுவும் இல்லை. 'கதர் வாங்குவதற்கு எங்களிடம் பணம் இல்லை; அதன் விலை அதிகமாக இருக்கிறது' என்று அவர்கள் சொல்லித் தலையை ஆட்டிவிட்டார்கள். அப்பொழுது நான் மார்புச் சட்டை போட்டுக்கொண்டு முழு நீள வேட்டி கட்டி, குல்லாவும் வைத்திருந்தேன். இவர்கள் கொஞ்ச உண்மையைத் தான் வெளிப்படுத்தினார்கள். ஆனால், நான்கு அடி அகலமும் நான்கு அடி நீளமும் உள்ள லங்கோட்டைத் தவிர வேறு எதுவும் இல்லாமல் நிர்ப்பந்தமாக நிர்வாணமாகவே இருந்த கோடிக் கணக்கான மக்களின் வெற்றுடலின் உறுப்புக்கள் எனக்கு அப் பட்டமான உண்மையைக் கூறின. நியாயமாக நான் நீக்கி விடக் கூடிய ஒவ்வொரு அங்குலத்துணியையும் என்னுடலிலிருந்துநீக்கி, போதிய துணி அணியாமலிருக்கும் பாமர மக்களின் நிலைக்கு அதிகமாகவே என்னை நான் கொண்டு வராவிட்டால், அவர் களுக்கு நான் சரியானபடி என்ன பதிலைச் சொல்ல முடியும்? மதுரைக் கூட்டத்திற்குப் பிறகு அடுத்த நாள் காலையிலேயே இதை நான் செய்தேன்.

எனவே, கோவண நாகரிகம் என்ற பேச்சிற்கே இடமில்லை. தவிர்க்க முடியாத அவசியத்தை முன்னிட்டே நான் கோவண ஆடையை மேற்கொண்டேன். ஆனால், இக்கோவண ஆடை. எளிமையையும் காட்டுவதாக இருப்பதால், இந்திய நாக ரிகத்தையும் அது எடுத்துக் காட்டுவதாக இருக்கக்கூடும். பல தரப்பட்ட சமயங்களின் சம்பந்தமான கலாச்சாரங்களும், அவை சந்தித்த இடத்தின் சூழ்நிலைக்கும் பூகோள அமைப்புக்கும் ஏற்றாற் போல மாறுதலை அடைந்து கலந்ததே இந்திய நாகரிகம். இவ்விதம், இஸ்லாமியக் கலாச்சாரம் என்றால், அது அரேபியா விலும், துருக்கியிலும், எகிப்திலும், இந்தியாவிலும் ஒரேமாதிரி யாக இருக்கவில்லை. ஆனால், அது இருக்கும் நாட்டிற்கு ஏற்றாற் போன்ற மாறுதலை அடைந்திருக்கிறது. ஆகையால், இந்தியக் கலாச்சாரம் என்பது, இந்தியாவினுடைய கலாச்சாரம். அது, முற்றிலும் ஹிந்து, அல்லது முற்றிலும் இஸ்லாம் அல்லது வேறு கலாச்சாரம் அன்று. எல்லாம் சேர்ந்தது அது; முக்கியமாகக் கீழ்நாட்டினுடையது. இந்தக் கலாச்சாரமே என் மனத்தில் இருந்தது. தம்மை இந்தியன் என்று சொல்லிக்கொள்ளும் ஒவ்வொரு ஆணும் பெண்ணும், இந்தக் கலாச்சாரத்தைத் தங்

கள் பொக்கிஷமாகக் கருத வேண்டும். அதற்கு அவர்கள் தருமகர்த்தாக்களாக இருப்பதோடு, அதற்கு ஏதாவது தாக்குதல்கள் வந்தாலும் அவற்றை எதிர்க்கவும் வேண்டும்.

ஐரோப்பிய நாகரிகம் ஐரோப்பியர்களுக்கு ஏற்றது என்பதில் சந்தேகமில்லை. ஆனால், அதையே நாமும் பின்பற்ற முயல்வோமானால், அது இந்தியாவுக்கே அழிவாக முடிந்துவிடும். அவர்களின் நாகரிகத்தில் நல்லதாக இருப்பவைகளையும், நமதாக்கிக் கொள்ளக்கூடியவைகளையும் நாம் அனுசரிக்கக் கூடாது, நமதாக்கிக் கொள்ளக்கூடாது என்பதல்ல; ஐரோப்பியர்களும் தங்கள் நாகரிகத்தில் புகுந்துவிட்ட தீமைகளை விலக்கிக் கொள்ள வேண்டியதில்லை என்பதும் அல்ல. உலக சுகத்திற்கானவைகளையே ஓயாமல் தேடியலைந்து அவற்றைப் பெருக்கிக் கொண்டும்போவது, அவர்கள் நாகரிகத்திலிருக்கும் அவ்விதமான தீமைகளில் ஒன்று. இந்தச் சுகங்களுக்கு ஐரோப்பியர்கள் அடிமைகளாகிக் கொண்டு வருகின்றனர். இந்தச் சுகங்களின் சுமையால் அவர்கள் அழிந்துபோய்விடாமல் இருக்க வேண்டுமானால், ஐரோப்பியர்கள் தங்கள் புத்திப் போக்கையே வேறு விதமாக மாற்றிக் கொள்ள வேண்டும் என்று துணிந்து கூறுவேன். நான் கருதும் முடிவு தவறானதாக இருக்கலாம். ஆனால், இந்தியா அந்த மாயப் பொன்மானின் பின்னால் ஓடுவது என்பது நிச்சயமாக அழிவில்தான் கொண்டுபோய் விடும் என்பதை நான் அறிவேன். 'எளிய வாழ்க்கையும் உயர்ந்த எண்ணமும் வேண்டும்' என்று மேற்கத்திய ஞானி ஒருவர் கூறினார். அந்தக் குறிக்கோளை நம் மனத்தில் பதியவைப்போமாக. கோடிக்கணக்கான மக்கள் உயர்ந்த வாழ்க்கை வாழ முடியாது என்பது இன்று நிச்சயமானது. பாமர மக்களுக்காக உயர்ந்த எண்ணத்தை வைத்திருக்கிறோம் என்று சொல்லிக் கொண்டிருப்பவர்களான நாம் சிலர், உயர்ந்த வாழ்க்கையைத் தேடியலையும் வீண் முயற்சியில் உயர்ந்த எண்ணத்தை இழந்துவிடும் ஆபத்திற்கு ஆளாகிறோம்.

—'எங் இந்தியா'—30—4—1931

# 33

# லங்காஷயரில்

இந்த நண்பர்களைச் சந்தித்ததில் ஆனந்தத்தோடு வருத்தமும் கலந்தே இருந்தது. அவர்கள் எல்லோரும் சொன்னவைகளையெல்லாம் காந்திஜி பொறுமையோடு கேட்டுக் கொண்டார். ஆனால், அவர்களுக்கு எந்த ஆறுதலையும் உண்டாக்குவது தம்மால் முடியாது என்று அவர்களுக்குச் சொல்ல வேண்டி

யிருந்தது காந்திஜிக்கு வருத்தமாகவே இருந்தது. ஒரு வேளை அவர்கள் அதிகமாக எதிர்பார்த்து வந்திருக்கக்கூடும். ஆனால், தாமும் தம் நாடும் எதுவும் செய்வதற்கில்லை என்பதைத் தெரிவிக்கும் காரியத்தைத் தாம் செய்ய வேண்டியிருப்பதைக் குறித்து மிகுந்த துக்கத்தோடேயே அவர்களுக்குத் தெளிவாக எடுத்துக் கூறினர்: "உங்களுடைய துயரத்திற்காக வருந்தாமலோ, அல்லது அதற்காக மகிழ்ச்சியடையவோ கூடியவகையில் என் தேசீயம் அவ்வளவு குறுகிய மனப்போக்குடையது அன்று. இன்னொரு நாட்டின் இன்பத்தைத் தியாகஞ் செய்து, அதன் மூலம் என் நாடு இன்பமாக இருக்கவேண்டும் என்று நான் விரும்பவில்லை. நீங்கள் கஷ்டத்தில் இருக்கிறீர்கள் என்பதை நான் பார்க்கிறேன். ஆனல், உங்கள் கஷ்டம் பெருமளவுக்கு இந்தியாவினால் அல்ல. சில ஆண்டுகளாகவே நிலைமை மோசமாக இருந்து வந்திருக்கிறது. பகிஷ்காரம் கடைசிக் கஷ்டமாகத்தான் வந்திருக்கிறது." ஸ்பிரிங் வேல் கார்டன் கிராமத்தில் காந்திஜி கூறியதாவது: "மார்ச் 5–ஆம் தேதி சமரச ஒப்பந்தம்* கையெழுத்தானதிலிருந்து, அந்நியத் துணி பகிஷ்காரம் என்பதுதான் இருக்கிறதேயன்றிப் பிரிட்டிஷ் துணியை மாத்திரம் பகிஷ்கரிப்பது என்பது இல்லை. எங்கள் நாட்டு மக்கள் என்ற வகையில், எல்லா அந்நியத் துணியையும் பகிஷ்கரிக்கப் பிரதிக்ஞை கொண்டிருக்கிறோம். ஆனல், இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கு மிடையே கௌரவமான சமரசம் ஏற்படுமானல், அதாவது நிரந்தரமான சமாதானம் ஏற்பட்டால், எங்கள் துணி போக உபரியாக வேண்டிய அளவுக்கு, ஒப்புக் கொள்ளும் ஒரு முறையின்படி, மற்றெல்லா அந்நியத் துணிகளுக்கும் எதிராக லங்காஷயர் துணிக்குச் சலுகை காட்ட நான் தயங்கமாட்டேன். ஆனல், இது உங்களுக்கு எவ்வளவு நிவாரணத்தை அளிக்கும் என்பது எனக்குத் தெரியாது. உலகத்திலுள்ள எல்லா மார்க்கெட்டுகளிலும் நீங்கள் தாராளமாக உங்கள் சரக்கை விற்கும் நிலைமை உங்களுக்கு இன்று இல்லை என்பதை நீங்கள் அறிய வேண்டும். இந்திய மில்களும்கூட தினமும் அதிகமான துணிகளையே உற்பத்தி செய்துகொண்டு போகும். லங்காஷயரின் நன்மைக்காக இந்தியத் தொழிலை நான் கட்டுப் படுத்த வேண்டும் என்று நிச்சயமாக நீங்கள் விரும்ப மாட்டீர்கள்."

மற்ருேரிடத்தில் அவர் கூறியதாவது: "இங்கே வேலையில்லாத் திண்டாட்டம் இருப்பதைக் குறித்து என் மனம் வேதனையடைகிறது. ஆனல், இங்கே பட்டினியோ, அரைப் பட்டினியோ இல்லை. இந்தியாவில் இவை இரண்டும் எங்களுக்கு இருக்கின்றன. இந்தியாவின் கிராமங்களுக்கு நீங்கள்

* மகாத்மா இங்கே குறிப்பிட்டிருக்கும் சமரசம், காந்தி—இர்வின் ஒப்பந்தமாகும். 1931-இல் ஏற்பட்ட இந்த ஒப்பந்தத்திற்குப் பிறகே மகாத்மா இரண்டாவது வட்ட மேஜை மகாநாட்டிற்குச் சென்ருர். அப்பொழுது இங்கிலாந்தில் இருந்தபோதுதான் லங்காஷயருக்கும் சென்ருர். அந்த விவரங்களே இக்கட்டுரையில் கூறப்படுகின்றன.

போய்ப் பார்ப்பீர்களாயின், முற்றிலும் கதியற்ற நிலைமையில் இருக்கிறார்கள் என்பதைக் கிராமவாசிகளின் கண்களில் நீங்கள் காணலாம். அரைப் பட்டினி கிடக்கும் எலும்புக்கூடுகளையும் நடைப்பிணங்களையும் நீங்கள் பார்க்கலாம். அவர்களுக்கு வேலையின் ரூபத்தில், அவர்களுக்குள் வாழ்வையும் உணவையும் வைத்து அவர்களுக்கு இந்தியா புத்துயிர் அளிக்க முடிந்தால், இந்தியா உலகிற்கே உதவி செய்யும். இன்று இந்தியா, சாபக் கேடாக இருந்து வருகிறது. மற்றவர்கள் வாழ்வதற்காக, அரைப் பட்டினி கிடக்கும் இம்மக்களையெல்லாம் சீக்கிரமே கொன்றுவிட வேண்டும் என்று விரும்பும் ஒரு கட்சி என் நாட்டில் இருக்கிறது. இதற்கு ஜீவகாருண்யத்தோடு கூடியதான ஒரு முறையை நான் எண்ணினேன். அவர்களுக்குப் பழக்கமான, அவர்கள் தங்கள் குடிசைகளில் இருந்தபடியே செய்யக் கூடிய, கருவிகளுக்காக அதிக மூலதனம் போட வேண்டியில்லாத, உற்பத்தி செய்யும் பொருள் எளிதில் விற்பனையாகி விடக் கூடியதான வேலையை அவர்களுக்குக் கொடுப்பது என்பதுதான் அது. லங்காஷயரும்கூட கவனிக்கத்தக்கதான ஒரு பணி அது.''

''ஆனால், இந்த மில்களைப் பாருங்கள். முன்னால் தேன் கூடுகளைப் போலச் சுறுசுறுப்பாக வேலை நடந்து வந்த மில்கள், இப்பொழுது முற்றிலும் வேலையே இல்லாது கிடக்கின்றன. பிளாக்பர்ன், டார்வன், கிரேட் ஹார்வுட், அக்கிரிஸ்டன் ஆகிய இடங்களில் நூற்றுக்கு அதிகமான மில்களை மூட வேண்டியதாயிற்று. கிரேட் ஹார்வுட் பிரதேசத்தில் 17,436-க்குக் குறையாத தறிகள் வேலையில்லாது கிடக்கின்றன. இந்திய ஜவுளியை நெய்வதற்கு நாங்கள் கல்லூரிகளில் விசேஷப் பயிற்சி பெற்றோம். இந்தியாவுக்கு வேட்டிகளை மாத்திரமே நாங்கள் நெய்கிறோம். அதே வேலையை நாங்கள் இன்றும் செய்து இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்குமிடையே ஏன் நல்ல உறவை உண்டாக்கக்கூடாது?'' என்று சில தொழிலாளர்கள் கூறினார்கள். ''1897—99-இல் ஏற்பட்ட பஞ்சத்தின்போது நாங்கள் இந்தியாவுக்கு உதவி செய்தோம். ஏழைகளுக்காக நாங்கள் பணத்தை வசூல் செய்து, அவர்களுக்கு அனுப்பினோம். தாராளமான கொள்கை வேண்டும் என்பதைத்தான் நாங்கள் எப்பொழுதும் ஆதரித்து வருகிறோம். எங்களுக்கு எதிராகப் பகிஷ்காரத்தைக் கொண்டு வருவானேன்?'' என்று சில தொழிலாளர்கள் சொன்னார்கள். அவர்களில் சிலர், தங்கள் தனிப்பட்ட கஷ்டங்களைக் காந்திஜியிடம் சொல்லிக்கொண்டார்கள். அவைகளிலெல்லாம் அதிகப் பரிதாபகரமானது இதுதான்: ''நான் ஒரு பருத்தி மில் தொழிலாளி. நான் நாற்பது ஆண்டுகளாக மில்லில் நெசவு வேலையில் இருந்தேன். இப்பொழுது வேலை இல்லாமல் இருக்கிறேன். வறுமைக்காகவோ, கஷ்டத்திற்காகவோ நான் கவலைப்படவில்லை. என்னைக் குறித்து நான் வைத்திருந்த மதிப்பே போய்விட்டது. வேலையற்றோருக்குக் கொடுக்கும்

பணத்தை நான் வாங்கிக்கொண்டு வருவதால், என்னைக் குறித்து நானே இழிவாக எண்ணிக்கொள்ளுகிறேன். எந்தச் சுயமதிப் போடும் என் வாழ்க்கையை நான் முடிக்கப் போவதாக எண்ண வில்லை.''

ஹேய்ஸ் பண்ணை என்பது யார்க்ஷயரில் முதலாளிகளின் ஓய்வு விடுதி. தொழிலாளரில் சுபிட்சமாக இருப்பவர்கள், வாரக் கடைசி நாட்களில் அங்கே போய்த் தங்க விரும்பினால் தங்கலாம். அங்கே வேலையில்லாது திண்டாடுகிறவர்களின் கோஷ்டிகள் பல காந்திஜியைச் சந்தித்தன. அநேகமாக அதே கதையைத்தான் அங்கேயும் சொன்னார்கள். ஓய்வு விடுதியில் இருந்த சகோதரர்கள். விசேஷப் பிரார்த்தனையையும் நடத்தினர். கடவுள் சித்தம் நிறைவேற வேண்டும் என்று பிரார்த்தனை செய்தார்கள். காந்திஜிக்கு ஏற்பட்ட வருத்தத்தை அவரால் மறைக்க முடியவில்லை. ''உங்களிடம் நான் மனம் விட்டுப் பேசி விடாவிடில் நான் உங்களிடம் உண்மையற்றவனாவேன்'' என்றார், காந்திஜி. முக்கால் மணி நேரம் அங்கே பேசித் தம் மனத்தில் இருந்ததையெல்லாம் கொட்டிவிட்டார். பொருளாதாரம், கோட்பாடு, ராஜீயம் ஆகியவைகளெல்லாம் தம் வாழ்க்கையில் எவ்விதம் பிரிக்கமுடியாத வகையில் கலந்திருக்கின்றன என்பதை விவரித்தார். எல்லாவற்றிற்கும் மேலாக சத்தியத்தையே தாம் மேலாகக் கூறி வரும் விதத்தையும் சொன்னார். பலனைப் பற்றிய விஷயங்களில் தாம் எவ்விதம் தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ளவில்லை என்பதைக் கூறினார். நாட்டு மக்களின் முன்பு ராட்டையைத் தாம் வைக்க நேர்ந்த விதத்தையும் சொன்னார். உலக நிலைமை எவ்விதம் அவர்களை இந்த நிலைமைக்குக் கொண்டு வந்துவிட்டது என்பதையும் விளக்கினார். அவர் மேலும் கூறியதாவது: “மதுபான வகைகளையும் அன்னியத் துணியையும் பகிஷ்கரிக்கும் உரிமை வேண்டும் என்று சென்ற மார்ச் மாதத்தில் லார்டு இர்வினுடன் மன்றாடினேன். இந்தப் பகிஷ்காரத்தை ஒரு சமிக்ஞையாக மூன்று மாதங்களுக்கு நிறுத்தி வைத்துப் பிறகு ஆரம்பித்துக்கொள்ளும்படி அவர் எனக்கு யோசனை கூறினார். அதை மூன்று நிமிடங்களுக்குக்கூட விடமுடியாது என்று அவரிடம் சொன்னேன். உங்களில் முப்பது லட்சம் பேர் வேலையில்லாது திண்டாடுகிறார்கள். ஆனால், எங்களில் முப்பது கோடிப் பேர் பாதி வருடத்திற்கு வேலையே இல்லாது திண்டாடுகிறார்கள். நீங்கள் சராசரி 70 ஷில்லிங்கை வேலையில்லாததற்குச் சகாயத் தொகையாகப் பெறுகிறீர்கள். எங்கள் சராசரி வருமானமே மாதத்திற்கு ஏழரை ஷில்லிங்குதான். தம்மைப் பற்றிய மதிப்பு தமது எண்ணத்திலேயே குறைந்துகொண்டு வருகிறது என்று அந்தத் தொழிலாளி சொன்னது மிகவும் சரி. வேலை இல்லாமல் சோம்பி இருந்து பிறர் அளிக்கும் தருமத்தில் ஜீவிக்கவேண்டியிருப்பது மனிதனுக்கு மானக்கேடானது என்று நான் நம்புகிறேன். வேலைநிறுத்தத்தை நடத்தும்போது, வேலைநிறுத்தம் செய்திருப்பவர்கள் ஒரு நாளைக்கேனும் வேலை செய்யாமல்

சும்மா இருப்பது என்பதை நான் சகிக்கமாட்டேன். தெருக்களில் கல் உடைத்தோ, மணலைத் தூக்கிச் சென்றோ அங்கே வேலை செய்யும்படிச் செய்வேன். அந்த வேலையில் அவர்களுடன் கலந்துகொள்ளும்படி என் சக ஊழியர்களையும் கேட்டுக் கொள்ளுவேன். ஆகையால், முப்பது கோடி மக்கள் வேலை இல்லாமல் இருப்பதும், அநேகக் கோடிப் பேர் வேலையில்லா ததால் இழிவடைவதும், சுயமரியாதையை இழப்பதும், கடவுள் நம்பிக்கையை இழப்பதும் எவ்வளவு பெரிய துக்ககரமானவை என்பதை எண்ணிப்பாருங்கள். கடவுளின் செய்தியை அவர்களிடம் கொண்டுபோகும் துணிச்சல் எனக்கு இல்லை. பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான அம்மக்களின் கண்களில் பிரகாசமே இல்லை. சோறு ஒன்றுதான் அவர்களுக்குக் கடவுள். இப்படிப்பட்ட மக்களிடம் கடவுளின் செய்தியைக் கூறுவதற்குப் பதிலாக அங்கே இருக்கும் நாயிடம் அந்த உபதேசத்தை நான் செய்வது மேல். காலையில் நன்றாகச் சாப்பிட்டுவிட்டு, இன்னும் நல்ல மத்தியான சாப்பாட்டை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்போது கடவுளைக் குறித்து நன்றாகப் பேசலாம். ஆனால், தினம் இரண்டு வேளைச் சோறும் இல்லாது தவிக்கும் கோடிக்கணக்கான மக்களிடம் போய் கடவுளைப் பற்றி நான் எப்படிப் பேசுவது? அவர்களுக்குச் சோற்றின் ரூபத்தில்தான் கடவுள் தோன்ற முடியும். இந்தியாவின் விவசாயிகள், தங்கள் மண்ணிலிருந்து உணவைப் பெறுகிறார்கள். அவர்களுக்கு இன்னும் கொஞ்சம் அதிகமாக உணவு கிடைக்க வேண்டும் என்பதற்காக அவர்களுக்கு நான் ராட்டையை அளித்தேன். இன்று நான் பிரிட்டிஷ் மக்கள் முன்னால் என் கோவண ஆடையில் தோன்றுகிறேன் என்றால், இது அரைப்பட்டினி கிடக்கும், அரை நிர்வாணமாக இருக்கும் வாயில்லாப்பூச்சிகளான அந்தக் கோடிக் கணக்கான மக்களின் ஏகப்பிரதிநிதியாக நான் வந்திருப்பதனால் தான். கடவுளின் கருணை ஒளியில் சுகித்திருப்போம் என்று நாம் பிரார்த்தனை செய்தோம். கோடிக்கணக்கான மக்கள் உங்கள் தலைவாயில் கதவைத் தட்டிக்கொண்டிருக்கும்போது, அப்படி நீங்கள் சுகித்திருப்பது முடியாது என்பதை உங்களுக்குச் சொல்லுகிறேன். உங்கள் கஷ்டத்திலும் நீங்கள் ஓரளவுக்குச் சந்தோஷமாகவே இருக்கிறீர்கள். அப்படி நீங்கள் சந்தோஷமாக இருப்பதைக் குறித்து நான் பொறாமைப்படவில்லை. நீங்கள் நன்றாக இருக்கவேண்டும் என்றுதான் நான் விரும்புகிறேன். ஆனால், இந்தியாவின் கோடிக்கணக்கான மக்களைச் சாக அடித்துவிட்டு நீங்கள் சுபிட்சமடைய வேண்டும் என்று மாத்திரம் விரும்பாதீர்கள். இந்தியா மாத்திரம் தனியான வாழ்வு வாழ வேண்டும் என்று நான் விரும்பவில்லை. என்றாலும், என் உணவுக்கும் உடைக்கும் நான் இன்னொரு நாட்டை எதிர்பார்த்துக்கொண்டிருக்க விரும்பமாட்டேன். இப்பொழுது இருக்கும் நெருக்கடியைத் தீர்த்துக்கொள்ள நாம் ஏதாவது வழியை வகுத்துக்கொள்ளலாம். ஆனால், பழைய லங்காஷயர் வர்த்தகத்தைத் திரும்பவும் பெற்றுவிட முடியும்

என்ற நம்பிக்கையை மாத்திரம் வைக்கவேண்டாம் என்று நான் உங்களுக்குச் சொல்லவே வேண்டும். அது நடக்காத காரியம். இக்காரியத்தில் நான் மனதார உதவ முடியாது. எனக்குத் திடீரென்று மூச்சுப் போய் செயற்கை வகையில் மூச்சு விடுவதற்கான உதவி எனக்குக் கொஞ்சநேரம் செய்யப்படுகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அதனால், நான் மீண்டும் சுவாசிக்க ஆரம்பிக்கிறேன். ஆகவே, எப்பொழுதுமே நான் செயற்கைச் சுவாச சாதனத்தையே நம்பிக்கொண்டிருந்து என் சொந்த நுரையீரல்களைக் கொண்டு சுவாசிக்க மறுத்துவிட வேண்டுமா? மறுக்கக்கூடாது; அது தற்கொலைக்கு ஒப்பாகும். நான் என் சொந்த நுரையீரல்களைப் பலப்படுத்திக் கொண்டு என் பலத்தினாலேயே நான் வாழ வேண்டும். இந்தியா தனது நுரையீரல்களைப் பலப்படுத்திக்கொள்ள வேண்டும் என்று நீங்கள் கடவுளைப் பிரார்த்திக்கவேண்டும். உங்களுடைய கஷ்டங்களுக்கெல்லாம் இந்தியாதான் காரணம் என்று சொல்லிவிடாதீர்கள். உங்களுக்கு எதிராகப் பலமாக வேலை செய்துகொண்டு வரும் உலக சக்திகளை எண்ணிப் பாருங்கள். பகுத்தறிவின் வெளிச்சத்தில் விஷயங்களைக் காணுங்கள்.''

டார்வென் மேயரின் முன்னால் காந்திஜி கூறியதாவது: மனித வர்க்கத்தில் ஐந்தில் ஒரு பகுதியினர், சுயமதிப்பு உணர்ச்சி என்பதே அற்றுப் போய் பட்டினி நிலையில் வாழ்ந்து வருகிறார்கள். இவர்களை நான் என்ன செய்வது என்பதைத் தயவுசெய்து எனக்குச் சொல்லுங்கள். லங்காஷயரில் வேலையில்லாது திண்டாடுகிறவர்களும் இதைக் கவனிக்க வேண்டும். 1899—1900–இல் இந்தியாவில் பஞ்சம் ஏற்பட்டபோது லங்காஷயர் செய்த உதவியைப் பற்றி எங்களிடம் கூறினீர்கள். ஏழைகள், உங்களை வாழ்த்துவதைத் தவிர வேறு நாங்கள் என்ன கைம்மாறு செய்யமுடியும்...? நியாயமான பேரம் செய்யவே நான் வந்திருக்கிறேன். அதைச் செய்யாமல் நான் போய்விடுவேனாயின், அப்படி நான் போய்விடுவது என் தவறினாலானதாக இராது. என்னிடம் எந்தவிதமான துவேஷமும் இல்லை. இழிந்த மிருக வர்க்கத்துடனும் நான் தோழமை கொள்ளுகிறேன். அப்படியிருக்க, நல்லதற்கோ, கெட்டதற்கோ ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக நாங்கள் பிணையுண்டுவிட்ட, இவர்களில் என் ஆப்த நண்பர்களும் இருக்கிறார்கள் என்று நான் கூறிக்கொள்ளும் ஆங்கிலேயரிடம் மாத்திரம், நான் ஏன் தோழமை கொள்ளக்கூடாது? என்னைச் சமாளிப்பது எளிது என்பதை நீங்கள் காண்பீர்கள். ஆனால், தோழமை கொள்ள நான் செய்யும் முயற்சியை நீங்கள் வெறுத்துத் தள்ளிவிட்டால், நான் போய்விடுவேன். உங்கள் மனத்தில் இடம் பெறுவதற்கான தூய்மை என்னிடம் இல்லை என்ற எண்ணத்துடன் தான் நான் போவேனேயன்றி உங்களிடம் மனக்கசப்புடன் செல்ல மாட்டேன்.''

எட்ஜ்வொர்த் என்ற இடத்தில் மிகுந்த நட்பு முறையில், விருப்பு வெறுப்பு இல்லாத உணர்ச்சியுடனேயே பேச்சு நடந்தது. அந்நியத் துணி பகிஷ்காரத்திலிருக்கும் பொருளாதாரத் தன்மையை அங்கேதான் காந்திஜி பலமாக எடுத்துக் காட்டினர்.

**கேள்வி:** ஸ்ரீ காந்தியவர்களே! பொருளாதார காரியங்களுக்காகப் பகிஷ்கரிப்பதிலிருந்து ராஜீய காரியத்திற்கான பகிஷ்காரத்தைப் பிரித்துவிடுவது சாத்தியமா?

**பதில்:** 1930-இல் பிரிட்டிஷ் சாமான்களுக்குப் பதிலாக மக்கள் அமெரிக்க, ஜெர்மன் சாமான்களையே வாங்கிவந்தார்கள். அவ்விதம் பிரிட்டிஷாரைத் தண்டிப்பது என்பது ஒன்றே நோக்கமாக இருக்கும்போது, பகிஷ்காரம் ராஜீய காரியத்திற்காகவே. பிரிட்டிஷ் யந்திரங்களைக்கூட பகிஷ்கரித்தார்கள். ஆனல், இப்பொழுது அசல் பொருளாதார பகிஷ்காரம் இருந்துவருகிறது. அதைப் பகிஷ்காரம் என்று நீங்கள் சொல்லலாம், ஆனல், இது முற்றிலும் படிப்பிக்கும் முயற்சி, அல்லது தூய்மைப்படுத்திக் கொள்ளும் பிரயத்தனமேயாகும். பழைய தொழிலுக்குத் திரும்பிப் போய், சோம்பலை உதறித் தள்ளிவிட்டு, என்னதான் ஏழையானலும் பிறர் இடும் பிச்சையைக்கொண்டு வாழாமல் பாடுபட்டு அதைக்கொண்டு வாழும்படிக் கேட்டுக்கொள்ளுவதே அது.

**கே:** ஆனல், மற்றெல்லா அந்நியப் பொருள்களுக்கும் பதிலாக உங்கள் மில்களில் உற்பத்தியாகும் பொருள்களுக்கே நீங்கள் சலுகை அளிப்பீர்களாகையால் பொருளாதார அம்சம் அதில் இருந்துதான் வரும்.

**ப:** மில்களுக்காகப் பரிந்துகொண்டு பகிஷ்காரம் அனுசரிக்கப் படவில்லை. உண்மையில் எங்கள் நாட்டு மில் சொந்தக்காரர்களுடன் தகராறு ஆரம்பமானபிறகு முதல் ஆக்கவேலை முயற்சியே இது. மில் சொந்தக்காரர்கள் எங்கள் இயக்கத்தை ஆதரித்தபோதிலும், எங்கள் கொள்கையை நிர்ணயிப்பதில் அவர்கள் ஆதிக்கஞ் செலுத்தவில்லை. நாங்களே அவர்களைத் திருப்ப முயற்சி செய்து வருகிறோம். நாங்கள் கிராமங்களுக்குப் போகும்போது, இந்திய மில்துணியை உடுத்தும்படி நாங்கள் கிராமவாசிகளிடம் சொல்லுவதில்லை. அவர்கள் கதர் கட்ட வேண்டும், அல்லது அவர்களுக்கு வேண்டிய கதரை அவர்களே தயாரித்துக்கொள்ள வேண்டும் என்றுதான் சொல்லுகிறோம். ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் கதர் கட்டியாக வேண்டும்.

**கே:** நீங்கள் என்னதான் சொல்லுங்கள், அதிக ராஜீய அதிகாரத்தைப் பெற்றுவிடவே நீங்கள் விரும்புகிறீர்கள். அது நிச்சயமாக உங்களுக்குக் கிடைத்துவிடும். இந்த மில்காரர்

களோ, எதையும் செய்யத் துணியும் பேராசைக்காரர்கள். ராஜீய அதிகாரம் வந்ததும் பெரும் தடை வரிகளைப் போட்டுத் தடுத்துவிடுவார்கள். அப்பொழுது இம்மில்கள், லங்காஷயர் ஜவுளி வியாபாரத்தைவிட உங்கள் கிராமங் களுக்கே அதிக ஆபத்தானவைகளாகிவிடும்.

ப: அப்பொழுதும் நான் உயிரோடு இருந்தால், அப்படிப்பட்ட ஆபத்து ஏற்படுமாயின், அந்த மில்கள் இக்காரியத்தில் அழிக்கப்பட்டுவிடும் என்று நான் துணிந்து கூறுவேன். உண்மையான ராஜீய அதிகாரம் வந்துவிடும் போது, வயது வந்தவர்கள் எல்லோருக்கும் வாக்குரிமை இருக்கும். அப் பொழுது ஏழைக் கிராமவாசிகளின் நன்மையை நசுக்கி விடுவது என்பது பணக்காரர்களால் முடியாது.

**கே:** அமெரிக்கர் திரும்பவும் மதுபானத்திற்கே போய்க் கொண்டிருப்பதைப் போன்று மக்கள் மில் துணிக்கே திரும்பிவிடுவார்கள் என்று நீங்கள் நினைக்கவில்லையா?

ப: இல்லை. பலம் பொருந்திய நாடு, விரும்பாத மக்கள்மீது உப யோகித்த மகத்தான ஆயுதமாக அமெரிக்காவில் மதுபான விலக்கு ஆயிற்று. குடித்துப் பழகியவர்கள் அம்மக்கள். குடிப்பது அங்கே நாகரிகமாகவும் இருந்தது. இந்தியாவில் மில் துணி உடுத்துவது நாகரிகமாக இருந்ததே இல்லை. இதற்கு மாறாகக் கதரை உடுத்துவதுதான் இப்பொழுது நாகரிகமாயிருப்பதோடு மதிப்பு வாய்ந்த சமூகத்திற்கு இதுவே அனுமதிச் சீட்டாகவும் ஆகி வருகிறது. நடக்கப் போவது எதுவானாலும் சரி, என் மக்களின் விமோசனத்திற் காக நான் போராடிக்கொண்டுதான் வருவேன். இதற்காக வாழ்ந்து, இதற்காகச் சாகலாம் என்பதையும் நீங்கள் ஒப்புக்கொள்ளுவீர்கள்.

**கே:** அது சம பலமில்லாத போராட்டமாக இருக்கும். பொரு ளாதாரப்போட்டியின் பொறாமை, அதற்கு எதிர்ப்படுபவை களையெல்லாம் முறியடித்துவிடும்.

ப: பணத்தினிடம் கடவுளே தோல்வியடைந்து விட்டார் என்றும், இவ்வாறு தோல்வியடைந்துகொண்டுதான் வரு வார் என்றும் நீங்கள் கூறுகிறீர்கள். சரி, கடவுள் இந்தி யாவில் தோல்வியடைந்து விடமாட்டார்.

பருத்தி நூற்போர், உற்பத்தியாளர் சங்கத்தின் தலைவ ரான ஸ்ரீ கிரேயே இந்தப் பேச்சுக்களில் அதிகப் பங்கு எடுத்துக் கொண்டார். குறிப்பிட்ட பகுதியைக் குறித்தே தாங்கள் அதிக மாக எண்ணுவதால்தான் கஷ்டம் அதிகமாக உணரப்படுகிறது என்பதை அவர் ஒப்புக்கொண்டார். இந்த பிளாக்பர்ன் பகுதியில் வேலையில்லாதிருப்பவர்களில் 50 சத விகிதத்தினர் இந்தியாவினால் வேலையிழந்திருக்கும்போது, தமது சொந்தப்

பகுதியான பர்ன்லியில் வேலையற்ரோரில் 15 சதவிகிதத்தினரே இந்தியாவினுல் வேலையிழந்தவர்கள் என்று அவர் சொன்னுர். காங்கிரஸ், பிரிட்டிஷ் சரக்குகளைப் பகிஷ்கரிப்பதென்று பிரகடனம் செய்வதற்கு முன்னுலேயே அநேக மில்கள் மூடப் பட்டுவிட்டன என்றும், இருக்கும் கஷ்டத்தில் பெரும் பகுதி உலக நிலைமையினுல்தான் என்றும் அவர் ஒப்புக்கொண்டார். பகிஷ்காரத்தை அடியோடு நீக்கிவிட்டாலும், இப்பொழுது இருந்து வரும் கஷ்டத்தை அது அதிகமாகப் போக்கிவிடப் போவதில்லை என்பதையும் ஒப்புக்கொண்டார்.

காந்திஜியைச் சந்தித்த வேலையில்லாது திண்டாடியவர்கள் மனக்கசப்போடு கூடிய போக்கில் இல்லை. இதற்கு மாருக அவர்கள், இந்தியாவில் இருந்துவரும் விவசாய நிலைமையைப் பற்றிக் கேட்டார்கள். வருடத்தில் ஆறு மாதங்களுக்கு விவ சாயிகள் ஏன் வேலையில்லாமல் இருக்கிருர்கள் என்றும், அவர் களுடைய வாழ்க்கை நிலை ஏன் அவ்வளவு மோசமாக இருக் கிறது என்பதைப் போன்றவைகளையெல்லாம் கேட்டார்கள். அவர்களுக்குள்ள பிரச்னை, அவர்கள் மனம் விட்டுச் சொன்ன தைப் போன்று, வாழ்க்கை நிலை தாழ்ந்துவிட்டது என்பதைப் பற்றியதேயன்றிப் பட்டினி கிடக்கிருர்கள் என்பது அல்ல. ஒரு ஷில்லிங் செலவழிக்கக்கூடியதற்கு அரை ஷில்லிங் செலவழிப்ப தோடு அவர்கள் திருப்தியடைய வேண்டியிருக்கிறது. அவர் களில் அநேகருக்கு மிச்சம் வைக்க எதுவும் இல்லாததோடு பலர் தாங்கள் சேமித்து வைத்திருந்ததை வைத்து வாழ வேண்டி யிருக்கிறது. அவர்களுக்கு வேலையில்லாத் திண்டாட்ட நிவா ரணமாக வாரத்திற்கு ஆணுக்கு 17 ஷில்லிங், பெண்ணுக்கு 15 ஷில்லிங், (மனைவி தொழிலாளியாக இல்லாதிருந்தால் 9 ஷில்லிங்), குழந்தைக்கு 2 ஷில்லிங் வீதம் கொடுக்கிருர்கள். காந்திஜி கூறியதாவது: ‘‘இந்தத் தொகையே பெருஞ் செல்வ மாகும். சாமர்த்தியம் வாய்ந்த இனத்தினராகிய உங்களுக்குப் புதிய தொழில்களையும் வேலைகளையும் கண்டுபிடித்துக்கொள்ளு வது கஷ்டமானதாக இருக்காது. பட்டினி கிடக்கும் கோடிக் கணக்கான என் மக்களுக்கோ, வேறு தொழிலே இல்லை. நிபுணர் களான உங்களில் யாராவது, வேறு ஏதாவது தொழிலைக் கண்டு பிடித்துச் சொல்லுவீர்களானுல், ராட்டைக்குப் பதிலாக அதைப் புகுத்த நான் தயாராக இருக்கிறேன். இதற்கு மத்தியில் சுதந்திர இந்தியா, பிரிட்டனுடன் சமத்துவமான பங்காளி என்ற வகையில், இந்தியாவுக்குத் தேவைப் படுவதும், லங்காஷயர் மாத் திரமே உற்பத்தி செய்யக்கூடியதுமான லங்காஷயர் துணிக்கு, மற்றெல்லா அந்நியத் துணிகளுக்கும் பதிலாகச் சலுகை அளிக் கும். இதற்கு அதிகமானதான நம்பிக்கை எதையும் நான் உங்க ளுக்குச் சொல்லுவதற்கில்லை.”

இது அவர்களுக்கு அவ்வளவாக ஆறுதல் அளிக்கக்கூடியது அல்ல. இதை அவர்கள் உணர்ந்தாலும். அவர்களிடம் எந்தவித மான மனக்கசப்பையும் நான் காணவில்லை. அவர்களில் ஒருவர்

கூறியதாவது: "இதிலிருந்து ஏதாவது நன்மை ஏற்பட்டே தீரும். நல்லது எதுவும் ஏற்படாது போனாலும் தீமை மாத்திரம் ஏற்படாது. நல்லெண்ணமே நிச்சயமாக உடனடியாக ஏற்படும் பலனாக இருக்கும். இப்பொழுது நாம் ஒருவரையொருவர் நன்றாகப் புரிந்துகொள்ளுகிறோம். கிழக்கில் ஏற்பட்டிருக்கும், கிழக்கு வெளிக் கிளப்பியிருக்கும் மகத்தான சக்தியான ஸ்ரீ காந்தியைப் பார்த்ததே ஒரு பாக்கியமாகும்." இன்னுமொருவர் கூறியதாவது: "வேலையில்லாது திண்டாடுகிறவர்களில் நானும் ஒருவன். ஆனால், நான் இந்தியாவில் இருப்பேனாயின் ஸ்ரீ காந்தி என்ன சொல்லுகிறாரோ அதையேதான் நானும் சொல்லுவேன்."

—'எங் இந்தியா'-15—10—1931

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'லண்டன் கடிதங்கள்' ஒன்றிலிருந்து எடுத்தது]

# 34
# இதைவிடச் சிறந்தது இல்லை

ஒரு பகிஷ்காரத்தை மாத்திரம் வைத்துக்கொண்டிருக்கிறோம் என்பதை நீங்கள் கவனிக்கவேண்டும். ஓர் ஆங்கில நண்பரின் உணர்ச்சிக்கு மதிப்புக் கொடுப்பதற்காக, 'பகிஷ்காரம்' என்ற சொல், 'அந்நியத் துணியை உபயோகிக்க மறுப்பது' என்று ஒப்பந்தத்தில் மாற்றப்பட்டிருக்கிறது. 'பகிஷ்காரம்' என்ற சொல் அவ்வளவு நன்றாக இல்லை என்பதில் சந்தேகமில்லை. சாதாரணமாக அது துவேஷத்தையே காட்டுகிறது. என்னைப் பொறுத்தவரையில், அச்சொல்லுக்கு அத்தகைய பொருள் இருக்கவேண்டும் என்று நான் எண்ணியதே இல்லை. பகிஷ்காரம் என்பது, அந்நியத் துணியையே அன்றிப் பிரிட்டிஷ் துணியை மாத்திரம் அல்ல. அந்தப் பகிஷ்காரம் வெறும் உரிமை மாத்திரம் அன்று ; அது ஒரு கடமை. இந்திய நதிகளின் நீருக்குப் பதிலாக அந்நிய நீரை இங்கே இறக்குமதி செய்தால் அதைப் பகிஷ்கரிக்க வேண்டியது எவ்விதம் நம் கடமையோ அதே போன்று இதுவும் நம் கடமை.

அந்நியத் துணி பகிஷ்காரத்தை ஒப்பந்தம் பாதுகாத்து வற்புறுத்துகிறது என்பதையே நான் சொல்ல விரும்புகிறேன். என்னைப் பொறுத்தவரையில், பலாத்காரமான முறைகளுக்கு இது சரியான மாற்று. திட்டுவது, ஆத்திரத்தை மூட்டும் நடத்தை, பொய் சொல்லுவது, காயப்படுத்திவிடுவது, கொலை ஆகியவை பலாத்காரத்தின் சின்னங்களாக இருப்பது போன்று மரியாதை, அருவருப்பு உண்டாக்காத நடத்தை, உண்மை பேசுவது முதலியன அகிம்சையின் அடையாளங்கள். அதே போல, அந்நியத்

துணி பகிஷ்காரம் எனக்கு அகிம்சையின் அடையாளம். பலவந் தப்படுத்துவதனுல் ஒரு காரியத்தை நிறைவேற்றிக்கொள்ளும் நோக்கம் கொண்டது, புரட்சிக் குற்றம். ஆனுல், அது கோபத்திறைலும் துவேஷத்திறைலும் ஏற்படும் பைத்தியக்காரத் தனமாக வற்புறுத்தல். பலாத்காரச் செயல்களைவிட அகிம்சை யோடுகூடிய காரியங்கள், அதிகப் பலனுள்ள வகையில் அதிக சக்தி வாய்ந்தவையாகின்றன என்று நான் கூறுகிறேன். அதிக மான அந்நியத் துணியை நாம் லங்காஷயரிலிருந்து இறக்குமதி செய்கிறேம், நமது இறக்குமதிகளிலெல்லாம் மிகவும் அதிகமாக இருப்பதும் இதுதான். இதற்கு அடுத்தபடியானதாக இருப் பது சர்க்கரை இறக்குமதி. பிரிட்டனின் முக்கியமான சிரத்தை யெல்லாம், இந்தியாவுடனிருக்கும் லங்காஷயர் வர்த்தக சம்பந்த மாகத்தான். இந்திய விவசாயிகளை நாசமாக்கி, அவர்களுக்கு இருந்த ஒரே ஒரு தொழிலையும் பறித்து விட்டு, ஓரளவுக்கு வேலையில்லாது போகும்படியும் அவர்களைச் செய்துவிட்ட ஒரு காரியமும் இதுதான். ஆகையால் விவசாயி வாழவேண்டு மானுல், அந்நியத் துணி பகிஷ்காரம் அவசியமானதாகிறது. எனவே, மலிவானதும், பார்ப்பதற்கு அழகாக இருப்பதுமான அந்நியத் துணியை வாங்க மறுத்துவிடும்படி விவசாயியைத் தூண்டுவது மாத்திரமல்ல, இத்திட்டம். ஆனுல், விவசாயியின் ஓய்வு நேரத்தைப் பயன்படுத்தி, பருத்தியைப் பட்டை போட்டு, நூற்று, கிராமத்து நெசவாளரைக்கொண்டு அந்த நூலைத் துணி யாக நெய்துகொண்டு, அப்படி நெய்த கதரை உடுத்துவதற்கு விவசாயிக்குச் சொல்லிக் கொடுத்து, அதன் மூலம் அந்நியத் துணியையோ, இந்திய மில் துணியைக்கூட வாங்குவதற்கு அவன் செலவிடும் பணத்தை அவனுக்கு மிச்சப்படுத்துவதுதான் திட்டம். இவ்விதம் கையினுல் நூற்றுக் கையினுல் நெய்த துணி, அதாவது கதரைக் கொண்டு அந்நியத் துணியைப் பகிஷ்காரம் செய்வது, விவசாயியின் பணத்தை மிச்சப்படுத்துகிறது என்பது மாத்திரமல்ல, ஊழியர்களாகிய நமக்கும் முதல் தரமான சமூக சேவை செய்வதற்கு இது வாய்ப்பு அளிக்கிறது இது நமக்குக் கிராம வாசிகளுடன் நேரடியான தொடர்பை உண்டாக்குகிறது. அவர்களுக்கு உண்மையான ராஜீய அறிவை உண்டாக்கி, அவர் கள் சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்ளுகிறவர்களாகவும், தன்னம்பிக்கை உள்ளவர்களாகவும் ஆகும்படியும் நாம் அவர் களுக்குப் போதிக்கவும் முடிகிறது. எனவே, கூட்டுறவு சங்கங் களையோ, வேறு எந்த வகையான கிராம ஸ்தாபனங்களையோ விட கதர் ஸ்தாபனம் நிச்சயமாக மேலானதாகும். மிக உயர்ந்த ராஜீய விளைவுகளைக்கொண்டது இது. ஏனெனில், மிகப் பெரிய ஒழுக்கக் கேடான ஆசையைப் பிரிட்டனிடமிருந்து இது போக்கி விடுகிறது. லங்காஷயரின் வர்த்தகம் ஒழுக்கக்கேடானது என்று நான் கூறுகிறேன். ஏனெனில், கோடிக்கணக்கான இந்திய விவசாயிகளை நாசப்படுத்தி அந்த வர்த்தகம் உண்டாக் கப்பட்டு, அது நிலை நிறுத்தப்பட்டும் வருகிறது. ஓர் ஒழுக்கமற்ற செய்கை இன்னுமோர் ஒழுக்கமற்ற செய்கையில் கொண்டு

போய்விடுவதைப் போன்று, இந்த ஓர் ஒழுக்கமற்ற செய்கையே பிரிட்டனின் நிரூபிக்கப்பட்டவையான பல ஒழுக்கக் கேடான காரியங்களுக்கும் காரணமாகிறது. ஆகையால், பிரிட்டனிட மிருந்து இந்த ஒரு பெரும் ஆசையை இந்தியா, தானே செய்யும் இம் முயற்சியினால் நீக்கிவிடுமானால், அது இந்தியா வுக்கு நல்லது, பிரிட்டனுக்கும் நல்லது. பிரிட்டன் இன்று பிரதானமான உலக வல்லரசாக இருப்பதால், இது மனித வர்க்கத்திற்கே நல்லதாகும்.

தேவைக்கு ஏற்றபடி சரக்குகள் வருகின்றன என்ற தத்துவத்தை நான் ஒப்புக்கொள்ளவில்லை. இதற்கு மாறாக, யோக்கியப் பொறுப்பில்லாத விற்பனையாளர்கள் போலியான வகையிலும் அடிக்கடி தேவையை உண்டாக்கி விடுகிறார்கள். நல்லொழுக்கத்தைக் கடைப்பிடித்து நடக்க தனிப்பட்ட மனிதர்கள் கடமைப்பட்டிருப்பதைப் போன்று நாடுகளும் கடமைப்பட்டிருக்குமாயின், ஒரு நாடு, யாருடைய தேவைக்குச் சரக்குகளை அனுப்ப முற்படுகிறதோ அவர்களின் நலனையும் அந்நாடு கவனிக்க வேண்டும். ஒரு நாடு, உதாரணமாக, குடிப் பழக்கம் உள்ளவர்களுக்கு குடி வகைகளை அனுப்பி விற்பது தவறும், ஒழுக்கக் கேடு மாகும். ஒரு நாட்டுக்கு இன்னொரு நாடு உணவு தானியங்களையும் துணியையும் அனுப்புவதால், அதை வாங்கும் நாட்டில் அவர்களுடைய விவசாயமோ, உற்பத்தியோ நின்று போய், அதனால் அம்மக்களுக்கு நிர்ப்பந்தமான சோம்பலோ, ஏழ்மையோ ஏற்படுவதாயின், குடிவகையை இறக்குமதி செய்வது போன்றதுதான் இந்த உணவு தானியங்களையும் துணியையும் இறக்குமதி செய்வதும். மது வகைகளைப் போன்றே இவையும் மனிதனின் ஆன்மாவையும் உடலையும் பாதிக்கின்றன. பரபரப்பு தலைகீழாவதுதான் மனச்சோர்வு. எனவே, அதே போல ஆபத்தான பலனை அளிக்கக்கூடியது. சோம்பலினாலோ. ஏழ்மையினாலோ ஏற்படும் மனச்சோர்வும் ஒழுக்கக் கேடானது, பாவமானது என்பதை நாம் இன்னும் அறிந்துகொள்ளவில்லை யாகையால், எப்பொழுதும் அது அதிகத் தீமையையே உண்டாக்கும்.

எனவே, இந்தியா தனது சொந்த நலனை முன்னிட்டுத் தனது இறக்குமதிகளை ஒழுங்குபடுத்திக் கொள்ளவேண்டியது எவ்விதம் இந்தியாவின் கடமையோ அதே போல, இந்தியாவின் நன்மையைக் கருதித் தனது ஏற்றுமதிகளை ஒழுங்குபடுத்திக் கொள்ளவேண்டியதும் பிரிட்டனின் கடமை என்று கருதுகிறேன். ஒழுக்கத்தின் மதிப்பைக் கவனிக்காத, அல்லது புறக்கணித்து விடும் பொருளாதாரம் போலியான பொருளாதாரமே. அகிம்சையின் நியதிகளைப் பொருளாதாரத் துறைக்கும் விஸ்தரிப்பது என்பது, சர்வதேச வர்த்தகத்தை ஒழுங்குபடுத்துவதில் ஒழுக்கத்தின் மதிப்பையும் முக்கியமானதாகக் கருதுவது என்பதேயாகும். இந்தியாவின் முயற்சியினால் சர்வதேச உறவுகளை ஒழுக்க அடிப்படையில் வைத்துவிடவேண்டும் என்பதுதான்

என்னுடைய பெரிய ஆசை என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஒரு குறிப்பிட்ட அளவில் பொது மக்கள் அனுசரிக்கும் அகிம்சையை வளர்த்துவிட முடியும் என்பதைக் குறித்து எனக்கு மனச் சோர்வு எதுவும் இல்லை. மனித சுபாவத்தின் போக்கு எப்பொழுதுமே கீழ் நோக்கித்தான் போய்க்கொண்டிருக்கும் என்பதை நம்ப நான் மறுக்கிறேன்.

கையினால் நூற்பது, கதர் ஆகியவைகளைக்கொண்டு அந்நியத் துணி பகிஷ்காரத்தில் வெற்றி பெறுவது, முதல் தரமான ராஜீய பலனை அடைவதற்கு மாத்திரம் அல்ல. ஆண்களாயினும் பெண்களாயினும், இந்தியாவில் பரம ஏழைகளாக இருப்பவர்கள், தங்கள் பலத்தை உணரவேண்டும், இந்தியாவின் சுதந்திரப் போராட்டத்தில் அவர்களையும் பங்கு கொள்ளுகிறவர்களாக்க வேண்டும் என்பதும் அதன் நோக்கமாகும்.

பிரிட்டிஷ் துணியை, இன்னும் பிரிட்டிஷ் சரக்குகளையே பகிஷ்கரித்துவிட வேண்டும் என்று தேச பக்தர்கள் கூறுகிறார்கள். இது பயனில்லாதது என்பது மாத்திரமல்ல, பலாத்காரத் தன்மையுடையதுமாகும் என்பதை இப்பொழுது எடுத்துக் காட்டிக்கொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை. இந்தியாவின் நன்மை என்ற ஒரே நோக்கத்தைக்கொண்டு பகிஷ்காரத்தைக் கவனிக்கிறேன். எல்லா பிரிட்டிஷ் சரக்குகளும் நமக்குத் தீமை விளைவிக்கவில்லை. ஆங்கிலப் புத்தகங்கள் போன்ற சில சரக்குகள், நமது அறிவு அல்லது ஆன்மிக வளர்ச்சிக்கு அவசியமானவை. துணியைப் பொறுத்த வரையில் நமக்குத் தீமையாக இருப்பது பிரிட்டிஷ் துணி மாத்திரம் அல்ல ; எல்லா அந்நியத் துணிகளும் தீமையாகின்றன. இதில் குறைந்த அளவுக்கு நம் நாட்டு மில் துணிகளும் நமக்குக் கெடுதி செய்கின்றன. கையினால் நூற்பதன் மூலமும் கதரின் மூலமும் பகிஷ்காரம் வெற்றி பெறுவதால் உண்டாவதைப் போன்ற நன்மை, எப்படியாவது பிரிட்டிஷ் துணியைப் பகிஷ்கரித்து விடுவது என்பதால் உண்டாகாது. இதனாலேயே எல்லா அந்நியத் துணிகளையுமாவது விலக்கவேண்டியது அவசியமாகிறது. இப்படி விலக்குவது, தண்டிக்க வேண்டும் என்ற நோக்கத்தினால் அல்ல; தேச மக்கள் உயிர் வாழ்வதற்கு அவசியமானது இது.

ஆனால், ராட்டை எங்கும் பரவிவிடவில்லை, அது போதிய உற்சாகத்தை உண்டாக்குவதாக இல்லை, பெண்கள் மாத்திரமே செய்யக்கூடிய ஒரு வேலைதான் ராட்டையில் நூற்பது, ராட்டையில் நூற்பது பழங்காலத்திற்குத் திரும்பிவிடுவதாகிவிடும், விஞ்ஞான அறிவு யந்திரங்களை முக்கியமாகக்கொண்டிருக்கும்போது அதனுடைய கம்பீரமான முன்னேற்றத்திற்கு எதிராகச் செய்யப்படும் வீண் முயற்சியே ராட்டை என்றெல்லாம் குறை கூறுவோர் சொல்லுகிறார்கள். இந்தியாவுக்கு இப்பொழுது வேண்டியது உருப்படியான வேலையேயன்றி வெறும் உற்சாகம் அல்ல என்பதே என் பணிவான அபிப்பிராயம்.

உருப்படியான வேலையே கோடிக்கணக்கானவர்களுக்கு உற்சாக மாவதோடு, அதே சமயத்தில் வளர்ச்சிக்கான மருந்துமாகும். ராட்டையைப் போதிய அளவுக்கு நாம் பரீட்சித்துப் பார்க்கவில்லை என்பதுதான் உண்மையான விஷயம். நம்மில் அநேகர் அதைக் குறித்து சரியானபடி சிந்திக் கவும் இல்லை என்பதைச் சொல்ல வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். கையினால் நூற்பதைக் குறித்து அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அநேக தீர்மானங்களைச் செய்திருக்கிறது. என்றாலும், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர்கள், தாங்கள் அப்போதைக்கப்போது செய்திருக்கும் தீர்மானங்களை நடைமுறையில்நிறைவேற்றிவைக்கத்தவறியிருக்கிறார்கள். நம்மில் பெரும் பகுதியினர் அதில் நம்பிக்கை கொள்ளக் கூட இல்லை. இந்த நிலைமையில் அதன் சம்பந்தமாக மக்களுக்கு உற்சாகம் ஏற்படாததனால் அது தோல்வியடைந்துவிட்டது என்று சொல்லி விடுவது நியாயமன்று. ராட்டையில் நூற்பது இழுக்கான வேலை என்று சொல்லுவது உண்மையை அலட்சியம் செய்வதாகும். நூற்கும் ராட்டைகளின் பெருக்கமே நூற்கும் மில்கள். அந்த மில்களை ஆண்கள்தான் நிர்வகிக்கிறார்கள். சில தொழில்கள் ஆண்களின் கௌரவத்திற்குக் குறைவானது என்ற இந்த மூட நம்பிக்கையை நாம் விட்டொழித்தாக வேண்டிய காலம் வந்து விட்டது. நூற்பது, சாதாரண காலங்களில் பெண்களின் வேலை யாகவே இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. நூற்பது, குடிசைத் தொழில் என்ற வகையில் அதற்கு வேண்டியதான அபிவிருத்தி களை அதில் செய்வதை முன்னிட்டு எதிர்கால அரசாங்கம் எப்பொழுதும் சில ஆண்களை அதில் வைத்திருக்கும். ஆண் களில் நம்மில் சிலர், ராட்டையில் வேலை செய்யாமலிருந்தால், இரவு பகல் அதைக் குறித்தே எண்ணுமலிருந்தால், ராட்டையின் யந்திரத்தில் ஏற்பட்டிருக்கும் அபிவிருத்தி உண்டாகி இராது என்பதை நான் உங்களுக்குத் தெரிவித்தே ஆகவேண்டும்.

யந்திரங்களைக்குறித்து நான் கொண்டிருப்பதாகச் சொல்லப் படும் கருத்துக்கள் என்பவைகளையும் உங்கள் மனத்திலிருந்து நீக்கிக்கொண்டு விட வேண்டும் என்று நான் விரும்புகிறேன். அகிம்சையைக் குறித்து நான் கொண்டிருக்கும் நம்பிக்கை களையெல்லாம் எல்லோரும் ஏற்றுக்கொண்டு விடவேண்டும் என்று நான் சொல்லவில்லை. அதே போல, யந்திரங்களைக் குறித்து நான் கொண்டிருக்கும் கருத்துக்களையெல்லாம் தேச மக்கள் ஒப்புக்கொண்டு விடும்படிச் செய்யவேண்டும் என்றும் நான் முயற்சி செய்யவில்லை. ராட்டையே அதனளவில் ஓர் அற்புதமான யந்திரம்தான். அதைக் கண்டு பிடித்தவர் யார் என்று தெரியாவிட்டாலும், அவருக்கு என் தலை தினமும் வணங்குகிறது. 1900-மைல் நீளத்திற்கும் 1500-மைல் அகலத் திற்குமுள்ள பிரதேசத்தில், ஆங்காங்கு சிதறுண்டிருக்கும் ஆயிரக்கணக்கான இல்லங்களில் பட்டினி இல்லாதபடிச் செய்து வந்த இந்தியாவின் ஒரு குடிசைத் தொழில், வேண்டுமென்றே

அக்கிரமமாக நாசமாக்கப்பட்டு விட்டது என்பதையே நான் எடுத்துக்காட்டி வருகிறேன்.

ராட்டையினிடம் நான் கொண்டிருக்கும் ஆர்வத்தைக் குறித்து இப்பொழுது நீங்கள் ஆச்சரியப்பட மாட்டீர்கள். வாக்குரிமையில் அதை ஏன் நான் புகுத்தியிருக்கிறேன் என்பதைப் பற்றியும், பண்டித மோதிலால் நேருவும் தேசபந்து தாஸும் சுயராஜ்யக் கட்சியின் சார்பாக அதை ஏன் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்பதைப் பற்றியும் நீங்கள் ஆச்சரியப்பட மாட்டீர்கள். என் இஷ்டம் போலவே எல்லாம் நடப்பதாக இருந்தால், நூற்க விரும்பாதவர்கள், எல்லா சமயங்களிலும் கதரையே உடுத்தாதவர்கள் யாரும் காங்கிரஸ் பட்டியலில் இருக்கவே மாட்டார்கள். என்றாலும், சுயராஜ்யக் கட்சி ஏற்றுக் கொண்டிருப்பதற்காக நான் நன்றி கூறுகிறேன். செய்யப்பட்டிருக்கும் திருத்தம், பலவீனத்திற்கும் நம்பிக்கையின்மைக்கும் காட்டப்பட்டிருக்கும் சலுகையாகும். ஆனால், ராட்டையிலும் கதரிலும் பூரணமான நம்பிக்கை கொண்டிருப்போர் இன்னும் அதிகமான முயற்சி செய்யவேண்டும் என்பதற்கு இது ஒரு தூண்டுகோலாக இருக்கவேண்டும்.

ராட்டையைவிட நாட்டு மக்களுக்கு நான் சொல்லக்கூடிய வேறு சிறந்த செய்தி எதுவும் இல்லை என்பதனாலேயே ராட்டையைக் குறித்து இவ்வாறு நான் வளர்த்திப் பேசியிருக்கிறேன். அமைதியான, நியாயமான முறையைக்கொண்டு நாம் சுயராஜ்யத்தை அடைவது என்றால், அதற்கு இதைவிட சரியான முறை எதையும் நான் அறியேன். நான் முன்பே கூறியது போல், ஹிம்சைக்குப் பதிலானதாக நாடு முழுதும் ஏற்றுக் கொள்ளக்கூடியது இது ஒன்றேதான். சட்ட மறுப்பு ஒன்றே வழி என்று நான் உறுதியாகக் கூறுகிறேன். ஆனால், அந்நியத் துணி பகிஷ்காரத்தில் வெற்றி பெறுவதற்கான சக்தியை நான் அடைந்துவிடும் வரையில், சுயராஜ்யத்தை அடைவதற்குச் சட்ட மறுப்புச் செய்வதென்பது சாத்தியமில்லாததே. ராட்டையைக் குறித்த என் கருத்துக்கள், நீங்கள் ஏற்றுக்கொள்ளக்கூடியவைகளாக இல்லை என்றால், காங்கிரஸுக்கு நான் ஏன் பிரயோசனமில்லாத வழிகாட்டியாகவே ஆவேன் என்பதை இப்பொழுது நீங்கள் தெளிவாக அறிந்துகொள்ளலாம். தேச முன்னேற்றத்திற்கு நான் ஓர் இடையூறு என்று சில நண்பர்கள் கருதுகிறார்கள். ராட்டையில் அடங்கியிருக்கும் தத்துவத்தைக் குறித்து நான் எடுத்துக் கூறுவதில் தவறு செய்கிறேன் என்று நீங்கள் கருதுவதானால், நான் தேச முன்னேற்றத்திற்கு இடையூறு என்று அந்நண்பர்களைப் போன்றே நீங்களும் கருதுவது உண்மையில் நியாயமேயாகும். நான் கூறுவது உங்கள் அறிவுக்கோ, மனத்திற்கோ பிடிக்காமலிருந்தும் என் தலைமையை நீங்கள் நிராகரிக்காதிருந்தால், நீங்கள் கடமையில் தவறியவர்களாவீர்கள். லார்டு வெல்லிங்டன் ஒரு சமயம் சரியாகவே

சொன்னதைப் போன்று, 'இல்லை' என்று சொல்லிவிடும் பலமோ, தைரியமோ நமக்கு இல்லை என்று இனியும் சொல்லப் படாமலிருக்கட்டும். என்னுடைய யோசனையில் உங்களுக்கு நம்பிக்கை இல்லையென்றால், அதை நீங்கள் நிராகரித்துவிடுவது உண்மையில் சுயராஜ்யத்தை நோக்கி ஒரு அடி முன்னேறிய தாகும்.

—'எங் இந்தியா'–26—12—1924

[பெல்காம் காங்கிரஸில் தலைமைவகித்து காந்திஜி பேசியதிலிருந்து எடுத்தது.]

# 35

# கவனமாக நூற்பவர்

ஹரிஜன பள்ளிக்கூடம் ஒன்றில் வேலை செய்துவரும் ஹரிஜன சேவகர் ஒருவர், மாணவர்கள், பெற்றோர்களிடையே கையினால் நூற்பதையும் பரப்புவதற்கு முயற்சி செய்து வருகிறார். அவர் எழுதியிருக்கும் பல விஷயங்களுடன் வருமாறும் கூறியிருக்கிறார்:

"தேசீய வாரத்தின்போது அதற்கு முன்பு நூற்றதையெல்லாம்விட அதிகமாக உழைத்தும், அதிகக் கவனத்தோடும் நூற்றேன். நான் சராசரி மணிக்கு 300 கெஜம் நூற்கும் வேகத்தில் நூற்கிறேன். 40 தோலா பருத்தியில் 16-ஆம் நெம்பர் நூல் 37 தோலா நூற்கிறேன். மொத்த உற்பத்தி 9,700 சுற்று—ஒரு சுற்று 4 அடி நீளம். பருத்தியைச் சுத்தம் செய்து பட்டை போட்டதில் இரண்டரை தோலா பருத்தி குறைந்துவிட்டது. நூற்றதில் மேலும் அரைத் தோலா குறைந்தது. வீணான பஞ்சையெல்லாம் பத்திரமாக வைத்திருக்கிறேன். இதைத் தலையணைக்குப் பஞ்சு போடுவது போன்றவைகளுக்கு உபயோகிப்பது என்று இருக்கிறேன். நூற்பவர்கள் அநேகர், பஞ்சை நூற்றால் அதனால் எவ்வளவு கூலி கிடைக்குமோ அவ்வளவு விலையுள்ள பஞ்சைச் சில சமயங்களில் கழிவாக்கிவிடுகிறார்கள் என்பதைப் பார்க்கிறேன். எனக்கு இருக்கும் ஓய்வு நேரங்களில் மாத்திரமே நான் நூற்கிறேன் என்பது தங்களுக்கு நினைவிருக்க வேண்டும். என் சொந்த உபயோகத்திற்குத் தேவையான கதருக்கு வேண்டியதற்கு அதிகமாகவே நான் நூற்றிருப்பேன். அதிகப்படியாகவுள்ளதை விற்று, அப்பணத்தை என் நிர்வாகத்திலிருக்கும் ஹரிஜனப் பள்ளிக்கூடத்தின் செலவுக்கு உபயோகிப்பது என்று இருக்கிறேன். என் நூல் அதிக பலமானதாகவும் நல்லதாகவும் கருதப்படுகிறது. ஆகையால், மற்ற நூல்களைவிட என் நூலையே நெசவாளர்கள் விரும்புகிறார்கள்."

நூற்கும் இவரை அறிவேன். உண்மையான உழைப்பினாலும், நல்ல முறையை அனுசரிப்பதனாலும் இந்த நிலைமைக்கு வந்திருக்கிறார். சாதாரணமாக நூற்பவரைவிட இவரிடம் சிறப்பு எதுவும் இல்லை. ஆனால், இந்த ஹரிஜன சேவகரால் செய்து

காட்ட முடிந்திருப்பதைப் போன்ற சாதனையைத் தாமே நூற்பவர்களாக இருப்பவர்களில் மிகச் சிலரே செய்ய முடியும். உத்கல கிராமங்களில் சுற்றி, அம்மக்களுடன் பேசி, அவர்களோடு நெருங்கிய தொடர்புகொண்டதில், கையினால் நூற்பதிலுள்ள ஏராளமான சாத்தியங்களை நான் தினமும் காண முடிந்தது. ஏழை விவசாயிகளிடையே சோம்பல் புகுந்துவிட்டது முதல்தர மான பயங்கரக் கேடாகும். நூற்றுக்கணக்கானவர்கள், ஆயிரக் கணக்கில்கூட, நாள் முழுவதும் ஒரு வேலையும் செய்யாமல் என்னைச் சுற்றிக்கொண்டிருப்பதைப் பார்க்கிறேன். என்னைச் சுற்றிக்கொண்டிருப்பவர்கள், எந்த வகையிலும், ரூபத்திலும் வசதிகளுள்ளவர்கள் அல்ல. இவர்களின் சாப்பாடோ மிகவும் சாமான்யமானது. அவர்களுக்குப் பாலோ, நெய்யோ கிட்டு வதே இல்லை. அரிசிச் சோறும், பருப்பும், எண்ணெயும் கொண் டதுதான் அவர்கள் சாப்பாடு. இம்மக்கள் வாழ்க்கையில் எந்த வித ஆசையோ, நம்பிக்கையோ இல்லாமல் இருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. என்றாலும், அவர்களுடைய சொந்த வாழ்க்கையில் ஓர் அற்புதமான பண்பாடு தென்படுவதை நீங்கள் கவனிக்காமலிருக்க முடியாது. ஆனால், அவர்களுக்குச் சோம்பலில் கழிந்துகொண்டிருக்கும் ஒவ்வொரு மணி நேரத்தை யும் லாபகரமான காரியத்தில் உபயோகித்துக்கொள்ளும் கலையை அவர்கள் கற்றுக்கொள்ளும்படி அவர்களைத் தூண்டாது போனால், அவர்களிடம் இப்பொழுது இருந்து வரும் பண்பாட்டி னால் அவர்களுக்கு ஒரு பயனுமில்லை. கோடிக்கணக்கான மக்கள் ஏற்றுக்கொண்டு, தங்களுக்கு வேலையில்லாமல் இருக்கும் நேரத்தில் உபயோகிப்பதற்கு அவர்களுக்குக் கொடுப்பதற்கு ராட்டையைத் தவிர வேறு எதுவும் இல்லை என்ற தவிர்க்க முடியாத முடிவுக்கே வருகிறேன். கோடிக்கணக்கான மக்களுக்கு வேலை கொடுப்பதற்காக என்று ஏற்படுத்தும் எந்தத் தொழிலும் நிச்சயமாக லாபகரமானதே.

—'ஹரிஜன்' – 8—6—1934

# 36

# சுயதேவைப் பூர்த்திக் கதர்

பத்து கிராமங்களில் 19 பேர், தாங்கள் நூற்ற நூலைக் கொண்டு தங்கள் சொந்த உபயோகத்திற்காக 166½ கெஜம் நெய்துகொண்டிருக்கிறார்கள். 22 கிராமங்களில் 82 பேர் தாங் கள் நூற்ற நூலைக் கொடுத்துவிட்டு 709 கெஜம் துணி வாங்கிக் கொண்டிருக்கிறார்கள் என்ற செய்தி பீஹாரில் மாதேப்பூர் நிலை யத்திலிருந்து கிடைத்திருக்கிறது. இது நல்ல செய்தியே ஆகும்.

தாங்களே நூற்றுக்கொள்ளுவதற்கு வேண்டிய பருத்திக்காக, பருத்தி சாகுபடி செய்துகொள்ள பருத்தி விதை வினியோகிக்

கப்பட்டிருக்கிறது என்ற நல்ல செய்தி, மலபாரில் பையனூரி லிருந்தும் நீலேஸ்வரிலிருந்தும் கிடைத்திருக்கிறது. தாங்களே நூற்றுக்கொள்ளுவதற்காக நாடெங்கும் எல்லோரும் பருத்தி யைச் சாகுபடி செய்துகொள்ளுவது என்ருகிவிடும்போது, பட்டு நூலைத் தயாரித்துக்கொள்ளுவதற்கு அஸ்ஸாமில் அநேக வீடு களில் செய்து கொள்ளுவதைப் போன்று, பருத்தியைத் தாங் களே பக்குவப்படுத்திக்கொள்ளும் முறைகளைப் பருத்தியைத் தாமே பயிரிட்டுக்கொள்ளுகிறவர்களும் கற்றுக்கொண்டு விட் டால், ஓய்வு நேரத்தில் தாங்கள் உழைப்பதற்கு அவர்களுக்கு கதர் கிடைத்துவிடும். பட்டு சம்பந்தமான வேலையில் எல்லோரும் ஈடுபடும்படிச் செய்துவிடமுடியாது. ஆனால், பருத்தி வேலையில் ஈடுபடச் செய்ய முடியும். இது ஒரு சமயத்தில் அநேகமாக எல்லோரும் ஈடுபடுவதாக இருந்தும் வந்திருக்கிறது. இம்முறை, தேச மக்களின் வருமானத்தில் நல்ல அதிகரிப்பு ஏற்படச்செய்யும். இந்நாட்டில் போதுமான வேலை இல்லாம லிருக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு வேலை கொடுப்பதற்கு இது சிறந்த திட்டமாகும்.

சொல்லுவதற்கு எளிதானதாக இத்திட்டம் இருந்தபோதி லும், நடத்துவதற்கு இது அதிகக் கஷ்டமானது என்பதில் சந்தேகமில்லை. ஆனால், இது எந்த வகையிலும் அசாத்திய மானது அன்று. இதற்குப் பெரிய மூலதனம் எதுவும் தேவை யில்லை. கற்றுக்கொள்ளவேண்டிய முறைகளும் எளிதானவை. இதற்குத் தேவையான கருவிகளும் கிராமங்களில் தயாராக இருக்கின்றன; இல்லாவிடில் சீக்கிரத்தில் செய்துகொண்டு விடலாம். இதில் பெரிய முட்டுக்கட்டையாக இருப்பதெல்லாம், புதியவைகளில் வேலைசெய்து அறிவை உபயோகிக்க நம் மக்க ளுக்கு விருப்பமில்லாமல் இருப்பதுதான். இம்மக்கள் பல தலை முறைகளாக நிர்ப்பந்தமாகச் சோம்பலாகவே இருந்தவர்கள். அதனுல் பட்டினியும் கிடப்பதால் இவர்களுக்கு நம்பிக்கை அடி யோடு போய்விட்டதோடு மனவுறுதியும் இல்லை. வாழ்ந்தாக வேண்டும் என்ற உறுதியும் இவர்களுக்கு இல்லை. வாழவேண்டும் என்ற உறுதிகூடப் போய்விடும் அளவுக்கு அவர்கள் நம்பிக் கையை இழந்திருப்பதைவிட ஒரு நாட்டு மக்களுக்கு வேறு பெரிய துர்ப்பாக்கியம் இருக்கமுடியாது. ஆனால், அந்த நம்பிக்கையை இன்னும் இழந்துவிடாமல் இருப்பவர்கள், தாங்கள் மேற்கொண்டிருக்கும் பணியில் தணிக்கமுடியாத நம்பிக்கையுடன் முன்னைவிட இன்னும் அதிக உற்சாகத்துடன் வேலை செய்யவேண்டும். அப்பொழுது அவர்களுடைய நம்பிக்கை, மலைபோன்ற தடைகளையும் சமாளித்துவிடும். போதுமான உணவையும் உடையையும், அதிக உழைப்போ, ஆற்றலோ இல்லாமலேயே உற்பத்தி செய்துவிடக்கூடிய கீர்த்தி வாய்ந்த இந்நாட்டில், நம்பிக்கையை இழந்து விடவேண்டிய அவசியம் எப்பொழுதுமே இல்லை.

ஆனுல், அந்த நம்பிக்கையை, முன்னேற்றமான நடவடிக்கை யாக்க வேண்டும். அந்த நடவடிக்கை, அதிகரித்துக்கொண்டே போகும் கதர் விஞ்ஞான அறிவை அடிப்படையாகக்கொண்ட தாகவும் இருக்க வேண்டும். தலைமைக் காரியாலயத்திலிருந்து அப் போதைக்கப்போது வரும் யோசனைகளை அனுசரித்து ஊழியர்கள் நடக்கவேண்டும். தாங்கள் யாருக்காகச் சேவை செய்கிருர்களோ அந்தக் கிராமவாசிகளிடமிருந்து ஆட்சேபங்களும் வரும் என் பதையும் அவர்கள் எதிர்பார்க்கவேண்டும். இதை முன்னிட்டு அவர்கள் கிராமவாசிகளுடன் மிக நெருங்கிய தொடர்பு வைத் துக்கொள்ளவேண்டும். அவர்களை அணுகுவதில், அனுதாபமும் நம்பிக்கையும் சேர்ந்திருக்கவேண்டும். தாங்கள் கிராமவாசி களின் போஷகர்கள் என்பதாக அவர்கள் முன்பு ஊழியர்கள் தோன்றவே கூடாது. கடமையை இதுவரையில் செய்யத் தவறி, இப்பொழுது அதைச் செய்ய வந்திருக்கும் சேவகர்கள் தாங்கள் என்றுதான் இவர்கள் கிராமவாசிகளுக்குத் தோன்ற வேண்டும். தவிர்க்க முடியாததான இந்த முக்கியமான நிபந்தனை யைச் சரியானபடி நிறைவேற்றிவிட்டால், இரவுக்குப் பின் பகல் வருவது போன்று, மற்றதெல்லாம் தானே வந்துவிடும்.

—'ஹரிஜன்'-24—8—1935

# 37

# தவருன பீதி

பண்டித ஜவாஹர்லால் நேரு சமீபத்தில் பம்பாயில் காதி பந்தாருக்கு விஜயம் செய்தபோது, கதரைக் குறித்து அவர் சொன்னதன் சாரம் என்பதாகப் பத்திரிகையில் வெளியாகி யிருந்த செய்தியைப் பார்த்ததும், அதை நான் நம்பவில்லை. கத ரைக் குறித்து அவர் திட்டவட்டமாகக் கொண்டிருக்கும் கருத்து எது என்று நான் அறிந்துகொண்டிருக்கிறேனே அதற்கு இது முற்றிலும் மாறுனதாக இருந்ததாகவும் எனக்குத் தோன்றியது. எனவே, பத்திரிகையில் வெளியான செய்தியைக் கத்தரித்துப் பண்டிதருக்கு அனுப்பினேன். அவர் உடனே எழுதியிருக்கும் பதில் கீழே வருமாறு:

"பம்பாயில் பல டஜன் கணக்கான கூட்டங்களுக்குப் போயிருந்ததோடு அவற்றில் பேசினேன். எத்தனை கூட்டங்கள் என்பது எனக்கு நினைவில்லை. பத்திரிகைகளில் வெளியான என் பிரசங்கங்களைப் பார்க்க எனக்கு நேரம் இல்லை. ஹிந்துஸ்தானியில்தான் பேசினேன். அதைக் குறிப்பெடுத்துப் பத்திரிகைகளில் வெளியிடுவது எளிதானது அல்ல. அதோடு சுருக்கிப் பிரசுரிக்கும்போது, பிரசங்கம் தவருன கருத்தை உண்டாக்கிவிடக்கூடிய தாகவும் ஆகிறது. என்ருலும், நான் கதரைப் பற்றிச் சொன்னதைக் குறித்து வெளியான செய்தி எனக்கு அறிவிக்கப்பட்டது. அன்ருே, மறுநாளோ

திருத்தமும் செய்யப்பட்டது. பொருளாதாரம், ராஜீயம், சமூகம் ஆகிய அநேக காரணங்களை முன்னிட்டு, நமது இப்போதைய வேலைத் திட்டத்தில் கதர் முக்கியமான விஷயமாக இருந்துவருகிறது என்றும், இதற்கு ஆதரவு அளிக்க வேண்டும் என்றும் நான் சொன்னேன். ஆனல், முக்கியமாக இப்பொழுது இருந்துவரும் சமூக ஒழுங்கே தொடர்ந்து இருந்து வருமானல், ஏழ்மையைப் பற்றிய நம் பிரச்னையை இது முடிவாகத் தீர்த்துவிடும் என்று நான் எண்ணவில்லை என்றும் சொன்னேன். இந்தச் சமூக முறை, விவசாயி களுக்குள்ள அபிவிருத்திகளையும், அதிகப்படி வருவாயையும் நிலச்சுவான்தார் களுக்கு மாற்றிவிட்டது என்றேன். ஆனல், பேச்சளவில் இருந்துவரும் இந்த வாதம் இன்றைக்குப் பொருந்தாது என்றும் எடுத்துக் காட்டினேன். இதற்காக இன்னும் ஒன்றும் சொன்னேன். பெரிய தொழிற்சாலைகள் ஏற்பட வேண்டும் என்பதை நான் ஆதரித்தபோதிலும், யந்திரமயமாவது அதிகரித் தாலும், இந்தியாவில் கிராமக் கைத்தொழில்கள் வளருவதற்கு அதிக வாய்ப்பு இருந்தே வரும் என்றேன். ஆயினும், இன்றைக்கு அநேக காரணங்களை முன்னிட்டுக் கிராமக் கைத்தொழில்கள் இன்னும் அதிக முக்கியமானவைகளா கின்றன என்றும் கூறினேன்.''

கிராமக் கைத்தொழில்களைத் தவிர வேறு எதுவுமே கூடாது என்கிறவர்களுக்குப் பண்டித நேருவின் கடிதத்தின் இப்பகுதி திருப்தியளிக்காமல் இருக்கலாம். ஆனல், தவருன அபிப்பிராயத்தை உண்டாக்குவதாக இருந்த பத்திரிகைச் செய்திக்கு, இது அதிக வித்தியாசமானது. இவ்விதம் தவருகச் செய்திகள் பிரசுரிக்கப்பட்டுவிடுவதுதான், முக்கிய மாக இந்தியாவில், பொது வாழ்வில் ஈடுபட்டிருப்பவர் களின் விதியாக இருந்து வருகிறது. இங்கே அவர்கள் ஒரு இந்திய மொழியில் பேசவேண்டியிருக்கிறது. அந்த மொழியோ, அநேகமாக நிருபர்களுக்குத் தெரிவதில்லை. அதோடு அப் பிரசங்கங்களைத் தந்தியில் அனுப்புவதற்காகப் பிறகு ஆங்கிலத் திலும் மொழிபெயர்க்க வேண்டியிருக்கிறது. ஆகையால், இதி லிருந்து தெரிந்துகொள்ள வேண்டியது ஒன்று உண்டு: முக்கிய மான விஷயங்களில் தலைவர்கள் சொன்னதாக வெளிவரும் கருத்துக்களை நம்பிவிடுவதற்கு முன்னல், ஆதாரபூர்வமான தகவல் கிடைக்கும் வரை பொது மக்கள் காத்திருக்க வேண்டும்.

பத்திரிகையில் வெளியான செய்தி சில கதர் ஊழியர் களிடையே அதிகக் கவலையை உண்டாக்கிவிட்டது என்று எனக்கு வந்திருக்கும் கடிதங்களிலிருந்து தெரிகிறது. அவர் களுக்கெல்லாம் ஓர் எச்சரிக்கையைச் செய்ய விரும்புகிறேன். காரியத்தில் கவனித்தால், பண்டித ஜவாஹர்லால் கூறுவது திருப்திகரமானதாக இருப்பது அதிர்ஷ்டவசமானதாகும். ஒரு விஷயத்தைக் குறித்து அவருக்கு நம்பிக்கை யில்லை என்ருல், பிற ருக்குத் திருப்தியாக இருக்கட்டும் என்பதற்காக எதையும் அவர் சொல்லிவிட மாட்டார். அப்படிப்பட்ட உயரிய குணமுடைய வர் அவர். ஆகையால், காங்கிரஸ் தலைமையில் இருப்பவர் கதருக்கு ஆதரவான கருத்துடையவராக இருக்கிருர் என்பதை அவருடைய கடிதத்திலிருந்து குறிப்பிடப்பட்டிருப்பது காட்டுவ

தால், இது அதிகப்படியான பலத்தைக் கதருக்கு அளிக்கிறது. ஆனல், கதரைப் பழிக்கிறவர்களும், அதை என்றும் தீண்டாதவர்களுமான முக்கியமான பொதுஜனத் தலைவர்கள் பலரும் காங்கிரஸுக்கு வெளியில் இருக்கிருர்கள் என்பதைக் கதர் ஊழியர்கள் அறியவேண்டும். கதரில் கொஞ்சமும் நம்பிக்கையே இல்லாதவர்கள் சிலரும் காங்கிரஸுக்குள் இருக்கிருர்கள். கதரைப் பழிப்பதில் அவர்கள் சளைப்பதே இல்லை. காங்கிரஸின் வேலைத் திட்டத்திலிருந்து கதரை நீக்கி விடுவதில் வெற்றி பெறும் வரையில் கட்டுதிட்டத்திற்காகக் கதரைக் கட்டுவோம் என்பதற்காகவே இவர்கள் கதரை அணிந்து வருகிருர்கள். இதையும் கதர் ஊழியர்கள் அறிய வேண்டும். இவ்விதமான தடைகளெல்லாம் இருந்தும் கதர் அபிவிருத்தி அடைந்திருக்கிறது. ஆனல், இந்த விதமான எதிர்ப்புகளெல்லாம் இல்லாமல் இருந்தால் கதர் இன்னும் அதிக முன்னேற்றத்தை அடைந்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை. பண்டித ஜவாஹர்லால் நேரு, அவர் கூறுவதைப் போன்று, கதரில் நம்பிக்கையுள்ளவராக இருப்பது மிகப் பெரிய ஆறுதலை அடைய வேண்டிய விஷயம். ஆனல், அவர் மேற்கொண்டும் ஆராய்வதில், தாம் கதருக்கு எதிராக இருப்பதாகச் சொல்லிவிட வேண்டியதுதான் அவசியம் என்று காண்பாராயின், அப்பொழுது கதர் ஊழியர்கள் என்ன செய்வார்கள்? கதரைப் பற்றிய பதினைந்து ஆண்டுகள் அனுபவத்திற்கும், அதன் சாத்தியங்களுக்கும் பிறகு, அது வேலை செய்து வருவதை அறிந்திருப்பதன் அடிப்படையில் கதரில் திடமான நம்பிக்கை கொண்டிருப்பவர்கள் போதிய தொகையினர் இருக்கிருர்கள் என்றே நம்புகிறேன். இந்த நம்பிக்கை பிறரிடமிருந்து வருவித்துக் கொண்டதாகவே இன்னும் இருக்குமானல், ஒரு பெரிய பத்திரிகையாளர் சொன்ன ஜோசியம் நிச்சயம் உண்மையாகிவிடும். அதாவது, என் மரணத்தோடு கதரும் செத்துவிடும்; நான் இறந்த பிறகு உடைக்கப்படும் ராட்டைகள் என் உடலைப் பூரணமாகத் தகனம் செய்துவிடுவதற்குப் போதுமானவைகளாக இருக்கும் என்ருர் அவர்.

தவருன பீதியின் பேரில் ஏற்பட்ட இந்த நடுக்கம், கதர் ஊழியர்களிடமிருக்கும் பலவீனமான நம்பிக்கைக்குத்தான் அறிகுறி என்ருல், அது கெட்ட சகுனமேயாகும். அவர்கள் தங்கள் நிலைமையைச் சோதித்துக் கொள்ளட்டும். கதரிலிருக்கும் பெரும் பொருளாதார முக்கியத்துவத்தில் அவர்களுக்குச் சந்தேகம் இருந்தால், அவர்களுடைய போக்கையே மாற்றிக் கொள்ளட்டும் என்று கதர் ஊழியர்களுக்கு யோசனை கூறுகிறேன். இந்தச் சோதனையை அவர்கள் செய்து பார்த்துக் கொள்ளுவதற்காக, இந்தியாவுக்குப் பலவித நோக்கங்களிலும் கதர் எவ்விதம் முக்கியமானதாகிறது என்பதைக் குறித்து என் அபிப்பிராயங்களை, சாத்தியமானல் அடுத்த வார இதழில் எடுத்துக் கூறலாம் என்று இருக்கிறேன்.

—'ஹரிஜன்'–6—6—1936

# 38

# அத்தாட்சி பெருத கதர் வியாபாரிகளுக்கு

கையினல் நூற்போருக்கு, அகில இந்திய நூற்போர் சங்கத்தின் சார்பில், அதிகரிக்கப்பட்டுள்ள விகிதத்தில் கூலி கொடுக்கப்படுகிறது. இதனல், சில ரக கதரின் விலேயும் கொஞ்சம் ஏறியிருக்கிறது. இதைச் சாதகமாக வைத்துக் கொண்டு அத்தாட்சி பெருத கதரை விற்கும் வியாபாரிகள் அநேகர், துரதிருஷ்டவசமாகத் தங்கள் கதரை, அகில இந்திய நூற்போர் சங்கத்தின் அத்தாட்சி பெற்ற கதர் என்று சொல்லி விற்று வருகிருர்கள். அவர்களில் சிலரோ, அகில இந்திய நூற்போர் சங்கம் ரிஜிஸ்டரான ஸ்தாபனம் அல்ல என்று சொல்லித் தங்களுடைய தேசாபிமானமற்ற, ஜீவகாருண்யமில்லாத காரியத்திற்குச் சமாதானம் கூறத் தயங்குவதுமில்லே. இவ்விஷயத்தில் சட்ட நிலேமை என்ன என்பதை நிச்சயம் செய்து கொள்ளுவதற்குத் தமது பழைய சட்ட ஞானத்தை நம்புவதற்குப் பதிலாக ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார், இதில் அபிப்பிராயம் கூறுமாறு ஒரு பிரபல வக்கீலுக்கு அறிவித்தார். அந்த வக்கீலின் திட்டமான கருத்து பின்வருமாறு :

“திருப்பூர் வர்த்தகர் சட்ட சம்பந்தமாகத் தவருன அபிப்பிராயம் கூறப்பட்டிருக்கிருர் என்பதில் சந்தேகமில்லே. இவ்விஷயத்தில் சட்டம், ரிஜிஸ்டரான ஸ்தாபனங்களேப் போலவே ரிஜிஸ்டராகாத ஸ்தாபனங்களுக்கும் பாதுகாப்பு அளிக்கிறது. ரிஜிஸ்டராகாத ஒரு பெயரை உபயோகிப்பது, அவனல்லாத வேறு ஒருவனுகப் பாசாங்கு செய்வது. ரிஜிஸ்டரான பெயரை உபயோகிப்பதைப் போன்றே இதுவும் பொதுஜனங்களே ஏமாற்றுவதாகும். ஒரு சட்டத்தின் பிரகாரம் ரிஜிஸ்டர் செய்து கொள்ளுவதால் சட்டப்படியான பலன்களும் பாதுகாப்புகளும் கிடைக்கலாம். ஆனல், ஏமாற்றப்படுவதிலிருந்து பொதுமக்களேப் பாதுகாக்கும் விஷயத்தில் ரிஜிஸ்டரான பெயருக்கும் ரிஜிஸ்டராகாத பெயருக்கும் எந்தவிதமான பேதமும் இல்லே. ஒரு பெயர் ரிஜிஸ்டர் செய்யப்படவில்லே என்பதனல், ஒருவர் அதே பெயரை வைத்துக் கொண்டு அகில இந்திய நூற்போர் சங்கத்தின் அத்தாட்சி பெற்றதாக விற்று விடலாம் என்பது, பார்த்த மாத்திரத்திலேயே மிகவும் ஆபாசமானது என்பது விளங்கும். இதை நிறுத்தும்படித் தடை உத்தரவு வாங்கவும், நஷ்ட ஈட்டுக்காகவும் வழக்குத் தொடரலாம். தடை செய்து உத்தரவு கிடைத்து விடும். நஷ்ட ஈடு கிடைப்பது, கதர் வாங்கினவர் அத்துணி அகில இந்திய நூற்போர் சங்கத்தின் அத்தாட்சி பெற்றது என்று நம்பித்தான் வாங்கினுர் என்பதை நிரூபிப்பதைப் பொறுத்திருக்கிறது.

இதற்குள்ள ஆதாரங்களுடன் அபிப்பிராயம் வேண்டும் என்று நீங்கள் விரும்பினல், சீக்கிரமே அதைத் தயாரித்து அனுப்புகிறேன்.

உதகமண்டலம்,
23, மே, 1936

(ஒப்பம்) டி. ஆர். வி. சாஸ்திரி

முன்னுள் சென்னை அட்வொகேட் ஜெனரலான ஸ்ரீ டி. ஆர். வேங்கடராம சாஸ்திரியே இப்பிரபல வக்கீல். இவர் தெரிவித்திருக்கும் அபிப்பிராயத்தைப் பார்த்த பிறகாவது, அகில இந்திய நூற்போர் சங்கத்தின் அத்தாட்சியைத் தாங்கள் பெற்றிருப்பதைப் போல் அத்தாட்சி பெருத கதர் விற்பனையில் ஈடுபட்டிருக்கும் வியாபாரிகள், மோசடியானது என்று விவரிக்கப்பட்டிருக்கும் இக்காரியத்தைச் செய்யாமல் இருப்பார்கள் என்று நம்புகிறேன். நான் கோர்ட்டுக்குப் போவதை எதிர்ப்பவன். என்ருலும், கோர்ட்டுக்குப்போக வேண்டியது அவசியமாகுமானல், வாயில்லாப்பூச்சிகளான ஏழை நூற்போரின் நன்மையை முன்னிட்டு, அறிந்தே ஏழைச் சகோதரிகளுக்குத் தீமை விளைவித்து வருகிறவர்கள் மீது சட்டப்படி நடவடிக்கை எடுத்துக் கொள்ளும்படி ஆலோசனை கூறத் தயங்கமாட்டேன்.

—'ஹரிஜன்'–6–6–1936

# 39

# கதர் கட்டுவோருக்கு

பீகாரிலிருந்து ஒருவர் எழுதியிருக்கும் நீண்ட கடிதத்திலிருந்து சில பகுதிகளைக் கீழே கொடுத்திருக்கிறேன்:

"உங்கள் மீது நான் ஒரு குறை கூற வேண்டியிருக்கிறது. நான் வழக்கமாகக் கதர் உடுத்துபவன். கதர் முதன் முதலில் தோன்றிய காலம் முதல் நான் கதர் கட்டி வருகிறேன். இன்றுங்கூட அதையே கட்டுகிறேன். அதைத் தேசீய ஆடை என்று கருதுகிறேன். என்னுடைய ஏழ்மை நிலைமையை முன்னிட்டுக் கதர் கட்டுவதை நான் கைவிடும்படி எப்பொழுதாவது நேர்ந்துவிடுமாயின், அதற்காக நான் அதிக மனவேதனை அடைவேன். எதிர்பாராத விதமாக அளவில்லாமல் இப்பொழுது கதர் விலையில் செய்யப்பட்டிருக்கும் அதிகரிப்பு, என்னை அந்த நிலைமைக்கே இழுத்துக்கொண்டு போய்விடும் என்று அஞ்சுகிறேன். என் நிலைமையிலேயே இருந்து வரும் என் நண்பர்கள் பலரும், மனவேதனையோடும் வெட்கத்தோடும் மில் துணியைக் கட்ட வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு ஆளாகிவிடுவார்கள் என்று எண்ணுகிறேன். இது, கதர் இயக்கமே விழுந்துவிடும்படிச் செய்துவிடும் என்றும் நினைக்கிறேன்.

"நூற்கும் ஏழைகளுக்கு அதிகக் கூலி கொடுக்க வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள் என்று சொல்லப்படுகிறது. அது ரொம்ப சரி. ஆனல், யார் பையிலிருந்து எடுத்துக் கொடுப்பது? இந்த இயக்கத்தில் அனுதாபமுள்ள பணக்காரர்கள் மிகக் கொஞ்சம். கதர் உடுத்தி வரும் ஏழைகள், இந்த லட்சியத்தில் நின்று தைரியமாகப் போராடி வந்திருக்கிருர்கள். இவர்கள் இந்த லட்சியத்தைக் கைவிட வேண்டியவர்களாவார்களாயின் நிச்சயமாக இது இவர்களுக்குச் சாவாகவே முடியும். இவ்விதம் விலையை அதிகரிப்பதென்று தாங்கள் பொருத்தமில்லாத சமயத்தில் ஆரம்பித்திருக்கிறீர்கள். தாங்கள்

தண்டி யாத்திரை நடத்திய சமயத்தில் இதைச் செய்திருந்தால், இதில் வெற்றி கிடைத்திருக்கும். ஆனால், இப்பொழுது இம்முடிவுக்கு வந்திருப்பது பெரும் தவறாகும். இதன்மூலம் இயக்கத்தை நீங்கள் புதைத்துவிடுகிறீர்கள் என்றே அஞ்சுகிறேன்.''

ஐக்கிய மாகாணத்திலிருந்து ஒருவர் கீழ் வருமாறு எழுதுகிறார்:

''கதரில் நான் திடமான நம்பிக்கை கொண்டுவந்திருக்கிறேன். நமக்குள்ள அநேக கேடுகளுக்கு அது பரிகாரம் தேடிவிடும் என்ற நம்பிக்கை எனக்கு இன்னும் இருக்கிறது. அநேகருடைய மனநிலையில் கதர் அற்புதமான பலனை உண்டாக்கியிருக்கிறது. 1920–ஆம் ஆண்டிலிருந்து நான் கதரைப் பக்தியுடன் உடுத்திக்கொண்டு வருவதோடு கதர்ப் பிரசாரமும் செய்து வருகிறேன். ஆனால், பண்டித ஜவாஹர்லால் நேரு, கதரின் முக்கியத்தையும், அதன் அவசியத்தையும், உபயோகத்தையும் குறித்துக் குறைத்துக் கூறிவிட்டதால், தீவிர பக்தியுடன் கதர் உடுத்தி வந்தவர்கள் என்ன செய்வது என்று தெரியாத சங்கடமான நிலைமையில் இப்பொழுது இருந்து வருகிறார்கள். கதர் விஷயத்தில் அவ்வளவு பலமான நம்பிக்கை இல்லாதவர்களுக்குப் பண்டித நேரு சொன்னது சரியான சாக்குப் போக்காகிவிட்டது. கதரை அணிந்தாக வேண்டும் என்பதில் இருந்த கண்டிப்பையும் காங்கிரஸ் தளர்த்திவிட்டது. நீங்களோ, உங்களுடைய உறுதியான மௌனத்தில் மன ஆறுதல் அடைந்துகொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. இப்பொழுதுள்ள நிலைமையில் எங்கள் கடமை என்ன என்பதை நாங்கள் அறியும்படிச் செய்து எங்களுக்கு வழி காட்டுவீர்களா? கதரை சப்ளை செய்வதற்கு என்று இருந்து வரும் அகில இந்திய நூற்போர் சங்கத்தினால் இன்னுமொரு கஷ்டமும் இருக்கிறது. இப்பொழுதுள்ள நிலைமையில் கதரின் விலை ஏறிக்கொண்டே போகிறது; அது கிடைப்பதும் கஷ்டமாகிக்கொண்டு வருகிறது. சுயேச்சையான, தனிப்பட்ட கதர் உற்பத்தியாளர்கள் எல்லோரும், ஒரு கெஜம்கூடக் கதர் உற்பத்தி செய்ய முடியாதபடித் தடுக்கப்பட்டுவிட்டனர். விதிகளும், கட்டுதிட்டங்களும், முதலாவதாக, நியாயமில்லாதவை என்று தோன்றுகின்றன. இரண்டாவதாக, அவை அனுசரிக்க முடியாதவை. மூன்றாவதாக, நீங்கள் என்ன நோக்கத்தில் அவைகளை விதித்தீர்களோ அது இல்லாமல் ஆட்சேபகரமான வகையில் அந்த விதிகள் அனுசரிக்கப்படுகின்றன. என்னைப் பொறுத்தவரையில், நானே என் வீட்டில் எல்லோரும் ராட்டையில் நூற்கும்படிச் செய்தேன். அதில் தினமும் நூற்று வருகிறோம். என்றாலும், என் தேவைக்கு மாத்திரம் நான் கடைகளில் கதர் வாங்கியாக வேண்டியிருக்கிறது. அங்கோ கிடைப்பதும் கஷ்டமாக இருப்பதோடு விலையும் அதிகமாக இருக்கிறது. கதர் உற்பத்தி செய்து வந்தவர்கள், அந்த உற்பத்தியைக் கைவிடும்படி கட்டாயப்படுத்தியிருப்பது நியாயம் என்று நீங்கள் எப்படிக் கூற முடியும்?''

மத்திய மாகாண தேசீய சாரணர்களிடமிருந்தும் இதே போன்ற புகார் ஒன்று வந்திருக்கிறது. பண்டித ஜவாஹர்லால் நேரு, தெளிவாக எடுத்துக் காட்டியிருப்பதைப் போன்று, அவர் பேசியது பத்திரிகைகளில் தவறாகப் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. கதரில் நம்பிக்கை கொண்டிருக்கும் மற்றவர்களைப் போன்றே அவரும், நாடு சுதந்திரத்தை அடையும் வரையில்

கதர் முக்கியமானதோர் அவசியம் என்று கருதினர். கதரின் பொருளாதாரப் பலனைக் குறித்து அவருக்குச் சந்தேகம் ஏதாவது இருக்குமானல், நாடு சுதந்திரம் அடைந்து, நாட்டில் பெருமளவுக்கு யந்திரத் தொழிலின் அபிவிருத்தியும் ஏற்பட்ட பிறகுதான் அத்தகைய சந்தேகத்திற்கு இடமுண்டு. வருங்காலத்தில் வெகு காலம் கழித்து இந்தியா, யந்திரத் தொழில் மயமானலும் ஆகலாம், ஆகாமலும் போகலாம். ஆனல், அப்படி யந்திரமயமாவதால் கதர் தோற்றுப் போய்விடுமே என்று அஞ்சிப் புத்திசாலியாகவுள்ள யாரும் இப்பொழுது கதரைக் கைவிட்டு விடமாட்டார்கள். தொழிலாளரின் நன்மையை, முக்கியமாக நூற்போரின் நன்மையையும் கதர் வாங்குவோரின் நன்மையையும் கருதியே, தனிப்பட்ட கதர் உற்பத்தியாளருக்குத் தடைகளை விதிக்க யோசிக்கப்படுகிறது. இத்தடைகளை நீக்கிவிட்டால், கடைகளில் போலிக் கதர் விற்பனைக்கு வந்து குவிந்துவிடும். இதனல் நூற்போருக்கு வேலையில்லாது போவதோடு கதர் வாங்குவோரும் ஏமாற்றப்பட்டு விடுவார்கள். இத்தடைகளை நடைமுறையில் கொண்டு வருவதில் ஏதாவது தவறுகள் இருந்தால், அதைக் குறித்து உடனே காரியதரிசியின் கவனத்திற்குக் கொண்டு போக வேண்டும். அப்பொழுது எந்தவிதமான காலதாமதமும் இல்லாமல் தவறுகள் ஒழுங்கு படுத்தப்பட்டுவிடும்.

திருப்தி ஏற்படும் வகையில் பதில் சொல்ல வேண்டியிருக்கும் ஒரே விஷயம், கதர் விலையில் செய்யப்பட்டிருக்கும் அதிகரிப்பைப் பற்றியது. கதர் இப்பொழுது இருப்பதில் பாதி அளவுகூட நன்ருக இல்லாத காலத்தில், இப்பொழுது இருப்பதைப் போன்று கதரில் இவ்வளவு தினுசுகளும் இல்லாத சமயத்தில், புதிய விகிதத்தின்படி இன்று கதருக்கு இருக்கும் விலையைவிட, அப்பொழுது விலை அதிகமாகவே இருந்தது. அப்பொழுது இருந்த விலையைக் குறித்துப் புகார் எதுவுமே இருந்ததும் இல்லை. இதை நினைவில் வைக்க வேண்டும். கதர் வாங்குவோர்கள் இத்தனை ஆண்டுகளாக நன்மையடைந்து வந்திருக்கும்போது, நூற்போர்களைப் பொறுத்தவரையில், கூலி உயர்வு வகையில் இதுவரையில் எந்த நன்மையையும் அடையவில்லை. அவர்கள் வாயில்லாப் பூச்சிகளாகவும், திக்கற்றவர்களாகவும் இருந்து வந்தார்கள். சங்கத்திற்கு எதிராக வேலை நிறுத்தஞ் செய்வதாக அவர்கள் சொல்ல முடியாது. இருக்கும் நிலையில் அவர்கள் தனித்தனியாக வெவ்வேறு இடங்களில் இருந்து வருவதால், அதிகக் கூலி கிடைப்பதற்கோ, மற்றவைகளுக்கோ அவர்கள் ஒன்றுபட முடியாதவர்களாகவும் இருக்கிருர்கள். அகப்படும் தம்படிக் காசும்கூட அவர்களுக்குத் தேவையாக இருப்பதால், சரியானபடி எந்த ஆட்சேபமும் செய்ய முடியாதவர்களாக அவர்கள் இருக்கின்றனர். நூற்போருக்குக் கொடுக்கப்பட்டு வந்த படுமோசமான குறைந்த கூலியைக் குறித்து நம்மில் சிலருடைய

மனச்சாட்சி இப்பொழுது புரட்சிசெய்ய ஆரம்பித்திருக்குமாயின், கதர் விலையின் மலிவின் பயனை இதுவரை அனுபவித்துக்கொண்டு வந்திருப்பவர்களான கதர் வாங்குவோர், இப்பொழுது நமக்கு உதவி செய்ய வேண்டும். கதர் வாங்குவோரில் ஏழைகளாக இருப்போருக்கு இதில் கஷ்டம் இருக்கும் என்பது தெரிந்தது தான். ஆனால், சமூக, ஒழுக்க மதிப்பிலேயே கதரின் மதிப்பும் இருக்கிறது. கதர் வாங்குவோர் கதரின் பொருளைப் புரிந்து கொண்டிருப்பார்களாயின், சம்பந்தப்பட்ட நூற்போருக்குக் கூலியை உயர்த்திக் கொடுத்ததனாலேயே கதரின் விலை ஏறி விட்டது என்பதை, இவ்விஷயத்தில் எடுத்துக்காட்ட முடிவதைப் போல அவர்களுக்குத் திட்டமாக எடுத்துக்காட்டினால், விலை ஏறிவிட்டது என்று அவர்கள் புகார் சொல்லவே மாட்டார்கள். அவர்களுக்கு மனம் மாத்திரம் இருக்குமானால், கதர் வாங்கு வதால் அதிகப்படியாக வரும் செலவை ஈடு செய்துகொள்ளு வதற்குப் பல வழிகளையும் அவர்கள் கண்டுபிடித்துக்கொள்ளு வார்கள். ஆனால், தாங்கள் இந்தியாவில் இருக்கும் வரையில் கதரைத் தவிர வேறு எதையும் கட்டுவதில்லை என்ற திடமான உறுதியை அவர்கள் செய்துகொண்டால்தான் இதை அவர் களால் செய்ய முடியும். அப்படியின்றி இதிலிருந்து தப்புவதற்கு ஏதாவது ஒரு வழியை அவர்கள் விட்டுவைத்திருப்பார்களாயின், அவசிய நிலைமை வரும்போது அந்த வழியை அவர்கள் உப யோகித்துக்கொண்டு விடுவார்கள். அவசியம் இருக்கும் போது தான் பொதுவாக ஏதாவது ஒன்றைக் கண்டுபிடிப்பது என்பதும் ஏற்படுகிறது. மேலே கண்ட கடிதங்களை எழுதியிருப்பவர்கள், தங்களுக்குக் கதரைத் தவிர வேறு துணி இல்லை என்ற திடமான முடிவுக்கு வந்திருப்பார்களானால், அவர்கள் இப்பொழுது எழுதி யிருப்பது போன்று எழுதியிருக்கவே மாட்டார்கள். ஆனால், இவர் களைவிட எல்லா விதத்திலும் நல்ல நிலைமையில் இல்லாத மற்றும் அநேகரைப் போன்றே இவர்களும், கதர் விலையில் ஏற்பட்டிருக் கும் கொஞ்ச உயர்வைத் தாங்களே சரிசெய்துகொண்டு போயிருப்பார்கள்.

ஏழைகளான கதர் அன்பர்களை முன்னிட்டுக் கதர் விலையில் எவ்வளவு கொஞ்சமாக அதிகரிக்க முடியுமோ அவ்வளவு கொஞ் சமே அதிகரிப்பது என்பதில் முழு கவனமும் செலுத்தப்படு கிறது. இந்த வாக்குறுதியைக்கொண்டு கடிதம் எழுதியிருப்போர் ஆறுதல் அடைவார்களாக. நூற்போர் கூலியை, அவர்கள் கேட்கா மலேயே அதிகரிக்கும் இப்புதிய பரீட்சையில் ஏற்பட்டிருக்கும் பெரிய வெற்றியைக் குறித்து ராஜன் பாபுவும், தமிழ்நாடு அகில இந்திய நூற்போர் சங்கக் காரியதரிசியும் அனுப்பியிருக்கும் அறிக்கைகளையும் அவர்கள் பார்க்கட்டும். கதர் அன்பர்களுக்குப் பொறுமை மாத்திரம் இருக்குமாயின், கதரின் விலையைக் கொஞ் சம் உயர்த்தியதனால் அதையொட்டிக் கதரின் தரமும், நீடித்து உழைக்கும் தன்மையும் அதிகரித்திருக்கின்றன என்பதை அவர்கள் காண்பார்கள்.

—'ஹரிஜன்' – 4—7—1936

# 40

# கதர் உடுத்துவோர் கடமை

என் முன்பு பல கடிதங்கள் இருக்கின்றன. தொடர்ந்து கதர் விலை ஏறிக் கொண்டே போவதைச் சிலர் ஆட்சேபிக்கிறார்கள். மற்றுஞ் சிலரோ, அதிக விலையாக இருக்கும் கதரை ஏழை மத்திய தர வகுப்பினர் வாங்குவதற்கான வழியைக் காட்டும்படி பரிதாபத்துடன் என்னைக் கேட்டுக்கொள்ளுகின்றனர்.

கதர் உற்பத்தி செய்வோரை நல்ல நிலைமைக்குக் கொண்டு வருவதற்கு என்றே அகில இந்திய நூற்போர் சங்கம் இருக்கிறது. அவர்களில் பெரும்பாலானவர்கள், நூற்கும் ஏழைப் பெண்கள். நூற்பதில் யோக்கியமாக ஒரு மணி நேரத்தைச் செலவிடும் ஒவ்வொரு பெண்ணுக்கும், மணிக்கு ஓர் அணா கிடைக்காது போனால், சங்கம் திருப்தியடைந்துவிட முடியாது என்று நான் கருதுகிறேன். அவர்களுக்கு மணிக்கு அரை அணா கிடைக்கும் கட்டத்தை அடையும் நிலையில்தான் இப்பொழுது இருக்கிறோம். கதர் வாங்குகிறவர்களும், காங்கிரஸ் அரசாங்கங்களும் தங்கள் கடமையைச் செய்வார்களானால், அநேகர் எதிர்பார்ப்பதைவிட அதிக சீக்கிரத்திலேயே, மணிக்கு ஓர் அணாவை அவர்களுக்குக் கொடுத்துவிட முடியும் என்று சங்கம் எதிர்பார்க்கிறது.

இப்படிச் செய்வதானால், கதர் விலையில் கொஞ்சம் அதிகரிப்பு ஏற்பட்டே தீரும். ஆனால், அந்த அதிகரிப்பு, கூலி அதிகரிப்பை ஒட்டியதாக இராது. கொடுக்கும் கூலி உயர்வு முழுதும் கதரின் மீதே சுமந்துவிடாமலிருப்பதற்காகக் கதர் தொழிலாளரிடையே திறமை அதிகமாக இருக்கும்படிச் செய்வதற்காக இடைவிடாத முயற்சிகளும் எடுத்துக் கொள்ளப்படுகின்றன. நகரங்களில் வசிப்பவர்கள் இதை அறிய வேண்டும். நிர்வாகச் செலவுகளும் தொடர்ந்து குறைக்கப்பட்டு வருகின்றன. அனுபவத்தோடு நிர்வாகத் திறமையும் வளர்ந்து கொண்டு வருகிறது. ஆனால், நூற்போருக்குக் கொடுக்கும் பதினாறு மடங்குக் கூலி உயர்வு முழுவதையும் திறமையை அதிகரிப்பதனால் மாத்திரம் அடைந்துவிட முடியாது. ஆகையால், கூலி உயர்வு கொடுப்பதால் கதரின் விலையில் கொஞ்சம் அதிகமாவது தவிர்க்க முடியாததாகும். விலை உயர்வு பணக்காரர்கள் வாங்கும் கதரிலேயே அதிகமாக இருக்கும்படிச் செய்யும் வகையில் பலதரப்பட்ட ரகங்களுக்கிடையே இவ்வுயர்வு ஈடு செய்யப்பட்டிருக்கிறது. கதர் வாங்கும் ஏழைகளுக்குச் சுமை அதிகமாகிவிடாத வகையில் செய்யக்கூடியதெல்லாம் செய்யப்பட்டு வருகிறது; சங்கம் செய்து வரும்.

ஆனல், சாதாரண பொருளாதாரத்திற்கும், கதரின் பொருளாதாரத்திற்கும் அதிக வித்தியாசமிருக்கிறது என்பதைக் கதர் உடுத்துவோர் அறியவேண்டும். சாதாரண பொருளாதாரம், போட்டியை அடிப்படையாகக் கொண்டது. அதில் தேசாபிமானம், உருக்கம், ஜீவகாருண்யம் ஆகியவைகளுக்கு அவ்வளவு இடமில்லை; இடமே இல்லை எனலாம். கதரின் பொருளாதாரமோ, தேசாபிமானம், உருக்கம், ஜீவகாருண்யம் ஆகியவைகளை அடிப்படையாகக் கொண்டது.

சங்கத்தின் புதிய கொள்கை அமைக்கப்படுவதற்கு முன்னல், கதரை மலிவாக விற்பது என்பதே அதன் நோக்கமாக இருந்தது. உலகத்தில் தொழிலாளரில் மிகவும் திக்கற்றவர்களாக இருக்கக் கூடியவர்களான நூற்போரின் கூலியைக் குறித்துச் சங்கம் பெரும்பாலும் கவலைப்படவே இல்லை. சுமார் பத்து ஆண்டுகள் வரையில் இது தொடர்ந்து நடந்து வந்தது. இது தவருன கொள்கை. ஆனல், அறியாமலேயே, தவருன நியாயத்தின் அடிப்படையில் நடந்துவிட்டது, இத்தவறு. இத்தவறின் குற்றத்திற்குப் பொறுப்பு பெரும் பகுதி என்னையே சாரும். கதர் நெய்பவர்கள் இத்தவறின் நன்மை முழுவதையும் அனுபவித்து வந்தார்கள். இத்தவறு கண்டு பிடிக்கப்பட்டுத் திருத்தப் பட்டால், நூற்போருக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டியதை நாளாவட்டத்தில் கொடுத்து வந்தால், நெசவாளர்கள் புகார் சொல்லுவது நியாயமா?

கதர் உடுத்துபவர்கள், இதில் மனப்பூர்வமாக ஒத்துழைப்பார்கள் என்று சங்கம் எதிர்பார்த்தது. கதர் விலையில் ஏற்பட்டிருக்கும் அதிகரிப்பைப் பொதுவாக அவர்கள் வெறுக்கவில்லை என்பதைக் கூற முடியும் நிலைமை இருப்பதற்காக நான் மகிழ்ச்சியடைகிறேன். கதர் நெய்பவர்களின் தேவையை விட, நூற்கும் வாயில்லாப் பூச்சிகளான சகோதரிகளின் தேவை நிச்சயமாக அதிகமானது. ஆகையால், காலதாமதமாகி அவர்களுக்குச் செய்யப்படும் இந்த நீதியில் தாங்களும் பங்கு கொள்ளுவதை ஒரு பாக்கியமாகவே கதர் உடுத்துபவர்கள் அநேகர் கருதுகிருர்கள்.

வருகிறதை வைத்துக் கொண்டு ஜீவனத்தை நடத்திக் கொண்டு போவதே கஷ்டமாக இருக்கும் நடுத்தர வகுப்பினர் அநேகருக்கு, அதிகப்படியாகச் செலவாகும் ஒவ்வோர் அணுவும் ஒரு பிரச்னையாகிறது என்பதை நான் அறிவேன். அவர்கள் நூற்கவும் மாட்டார்கள். அவர்களுக்காக அனுதாபப்படுகிறேன். ஆனல், நூற்கவும் முடியாது, கதரும் மலிவாகக் கிடைக்கவேண்டும் என்ருல், அதுதான் முடியாது. அவர்கள் நூற்பதில்லையாயின், அவர்கள் தங்கள் தேவைகளைக் குறைத்துக்கொள்ள வேண்டும், அல்லது செலவையாவது குறைத்துக்கொள்ள வேண்டும். நமக்கு இருக்கும் உஷ்ண நிலையில், நாம் உடுத்தும் இவ்வளவு துணி நமக்குத் தேவை இல்லை. மனம் இருந்தால் வழி பிறக்கும்.

ஏழை மத்திய தர வகுப்பினரே முக்கியமாகக் கதரை ஆதரித்து வருகிறார்கள் என்று எனக்குக் கடிதம் எழுதியிருக்கும் ஒருவர் கூறுகிறார். அவர்கள் வாங்கக் கூடிய தான அளவுக்குக் கதர் விலையைக் குறைக்காது போனால், என்னோடு கதரும் செத்துப் போய்விடும் என்கிறார். இந்த நிபந்தனையில்தான் கதர் உயிரோடு இருக்க முடியும் என்றால், எனக்கு முன்னாடியே அது செத்துப் போவதே மேல். ஆனால், இத்தகைய வாதத்தில் ஒரு தவறு இருப்பது மகிழ்ச்சியடைய வேண்டியதாகும். மலிவு என்ற விஷயம், முக்கியமாக நகரங்களில் வசிப்பவர்களையே பாதிக்கிறது. அவர்களில் ஏழைகள், பணக்காரர்கள் எல்லோரும் கதரே கட்டுவதானால், சாத்தியமாகும் கதர் உற்பத்தியில் பத்து சத விகிதத்தைக்கூட அவர்கள் உபயோகிக்கமாட்டார்கள். கதரில் மீதத்தையெல்லாம் கதரை உற்பத்தி செய்பவர்களான கிராம வாசிகளே உபயோகிக்கவேண்டும். விலை விஷயம் அவர்களைப் பாதிப்பதானாலும், அவ்வளவாகப் பாதித்துவிடாது. கதர், எதிர் பார்த்த அளவுக்கு இன்னும் கிராமங்களில் பரவிவிடவில்லை என்பது உண்மை. ஆகையால், நடுவிலிருக்கும் இந்தச் சந்திக் காலத்தில், பணக்காரர்களும் ஏழைகளுமான நகர மக்களின் தேசாபிமான உணர்ச்சியையே கதர் நம்பியிருக்க வேண்டியிருக்கிறது. கதரின் தத்துவத்தில் நம்பிக்கை இருப்பவர்கள், கதருக்குக் கொடுக்கும் விலை எதுவும் அதிகம் என்று எண்ணவே மாட்டார்கள். பஞ்சமும், வேலையில்லாத் திண்டாட்டமும் ஏற்படாமலிருப்பதற்கு இது ஒன்றே உண்மையான பாதுகாப்பு. இந்தியா திடீரென்று யந்திரத்தொழில் மயமாகிவிட்டாலும் கூட, வேலையில்லாத் திண்டாட்டத்தின் பெரும் பகுதி இருந்து கொண்டுதான் வரும். கொள்ளை நோய்கள், வறுமை, ரத்தக் களறி ஆகியவைகளைத் தவிர்க்கவேண்டுமாயின், கதரையும் மற்ற கிராமக் கைத்தொழில்களையும் தவிர வேறு பரிகாரமே இல்லை. கதரின் இப்பணியில் நம்பிக்கை இருப்பவர்கள், நூற்போருக்கு ஜீவனத்திற்குப் போதுமான கூலி கொடுக்கவேண்டும் என்பதை நம்புகிறவர்கள், கதர் விலையில் செய்யப்பட்டிருக்கும் அதிகரிப்பைக் குறித்துக் குறைகூற மாட்டார்கள். மிகுந்த ஜாக்கிரதையுடனேயே சங்கம் காரியங்களைச் செய்யும் என்று அவர்கள் நம்பலாம். நூற்போர் பெற்று வரும் கூலி உயர்வைப் பொது மக்கள் வரவேற்கிறார்கள் என்று நம்புவதற்குச் சென்ற இரண்டாண்டு அனுபவம் இடமளிக்கிறது.

—'ஹரிஜன்'—23—7—1938

# 41

## கருத்தைத் திரும்பவும் கூறுதல்

25-ஆம் தேதி பொருட்காட்சியின் ஆரம்பத்தில் காந்திஜி செய்த பிரசங்கம் மிக எளிமையானதாக இருந்தும் பத்திரிகை நிருபர்களைத் திகைக்க வைத்துவிட்டது என்றால், (அவர் பேசியது சரியாகக் காதில் விழாததும் காரணமாக இருக்கலாம்) 27-ஆம் தேதி பொருட்காட்சி மைதானத்தில் அவர் பேசியது அவர்களை இன்னும் அதிகமாகத் திகைக்க வைத்துவிட்டது. அவர் பேசியது சரியாகக் காதில் விழவில்லை என்பதனால் அல்ல. அவர் பேச்சை நன்றாகக் கேட்டார்கள். ஆனால், அப்படிப்பட்ட பேச்சை அவர்கள், அதற்கு முன்னால் நீண்ட நாட்களாகக் கேட்டதே இல்லை. அவருடைய நிர்மாண வேலைத் திட்டத்தில், மிகத் தெளிவாகத் தெரிவதாகவுள்ளதைவிட இன்னும் மற்ற நோக்கங்களும் அதில் இருக்கின்றன என்று சிலர் கருதினார்கள். எத்தனையோ சந்தர்ப்பங்கள், கஷ்டங்கள், ஆட்சேபங்கள் எல்லாம் எழுப்பப்பட்டன. அவைகளுக்கெல்லாம் முழுதும், முற்றிலும் அப்பேச்சில் காந்திஜி பதில் அளித்தார். அது மிகவும் தந்திரமான பேச்சு என்று சில வட்டாரங்களில் கூறப்படுகிறது. 'மன்னிப்புக் கோரும் பேச்சு,' சவால் விடும் பேச்சு, புரட்சிப் பேச்சு, தேர்தல் பிரசாரப் பேச்சு எல்லாம் அடங்கியது அப் பேச்சு' என்றும் விவரிக்கப்படுகிறது. திரும்பவும் ராஜீயத் திற்குள் பிரவேசித்துவிடுவதைக் குறித்து அவர் யோசித்து வருகிறார் என்பதற்குத் தெளிவான அறிகுறி இருக்கிறது என்பதை, என்ற அபிப்பிராயத்தை, பத்திரிகைத் தந்திரமும் உண்டாக்கியது. "திரும்பி வந்துவிட காந்தி தயாராக இருக்கிறார்," "எப்பொழுதும் போலவே நான் சக்தி வாய்ந்தவனாக இருக்கிறேன்; சமயம் வரும்போது இதை நிரூபிப்பேன்" என்பன போன்ற பத்திரிகைத் தலைப்புக்கள் இவ்வித விசித்திரமான வியாக்கியானங்களை உண்டாக்கிவிட்டதில் ஆச்சரியம் இல்லை.

பத்திரிகைகள் மீது குற்றம் சொல்லிப் பயனில்லை. காந்திஜியின் அநேக, இணையற்ற ஆன்மிக முயற்சிகளில் ஒன்று அப்பிரசங்கம். அத்தகைய பேச்சைச் சரியானபடி பத்திரிகைகளில் பிரசுரித்துவிட முடிவதில்லை. காங்கிரஸின் 1920-ஆம் வருடத்திய நான்கு அம்ச நிர்மாண வேலைத் திட்டம் நிறைவேற்றப்பட்டிருந்தால் பூரண சுயராஜ்யம் வந்திருக்கும் என்று காந்திஜி கூறியதோடு, அவ்வேலைத் திட்டத்தை நிறைவேற்றி வைக்க வேண்டும் என்ற கோரிக்கையும் அப்பேச்சில் இருந்தது. இதைக் கொண்டு அவர் பேச்சு ராஜீயப் பேச்சு என்று சொல்லப்படலாம். நிச்சயமாக அது ஆவேசமான பேச்சே அல்ல. தேர்தல் பிரசாரப் பேச்சுக்கள் அநேகவற்றில் இருக்கும் ஆபாசத்தின் சாயல் எதுவும் அதில் நிச்சயமாக இல்லை. உள்ளத்தி

லிருந்து எழுந்தது அப்பேச்சு. நிர்மாண வேலையில் ஈடுபட்டிருக்கும் ஏராளமான சகா ஊழியர்களுக்காகச் செய்த பிரசங்கம் அது. அந்த ஊழியர்கள், சந்தேகங்களினால் அடிக்கடி மனந்தடுமாறிப் போகிறார்கள். ஆட்சேபங்கள் அவர்களைத் திகைக்க வைத்துவிடுகின்றன. நிலைமையில் ஏற்படும் சில சங்கடங்கள் அவர்களை நடுங்கும்படிச் செய்து விடுகின்றன. கஷ்டங்கள் அதிகமாக வளர்ந்துகொண்டிருப்பதால் மேலும் பிரகாசமடைந்து வரும் நம்பிக்கையைத் திரும்பக் கூறியதுதான் அப்பேச்சேயன்றி வேறு அல்ல. அவருடைய நிர்மாண வேலைத் திட்டத்தின் லட்சியத்திற்கு என்று தங்களை அர்ப்பணம் செய்துகொண்டிருக்கும் ஊழியர் பட்டாளத்திற்கு மன உறுதியை உண்டாக்கும் நோக்கத்துடன் செய்த பிரசங்கம் அது. அது ஆன்மிகப் பிரசங்கம் என்று நான் மீண்டும் கூறுகிறேன்.

காந்திஜி கூறியதை அப்படியே எழுதிவிட முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. அவர் பேசிக்கொண்டு போகும் போது அவர் பேசியபடியே அப்படியே எழுதினேன். அதைச் சுருக்கிக்கொடுக்கும்படி அவரிடமே கொடுத்துவிட்டேன். இதன் பலனை அசலைத் தம் முன்பு வைத்துக்கொள்ளாமலேயே அவர் தனியாக ஒரு கட்டுரை எழுதிவிட்டார். சில வாதங்களை இக்கட்டுரை விரிவாகக் கூறுகிறது. அச்சில் வரும்போது திரும்பக் கூறப்பட்டிருப்பதாகத் தோன்றும் சில பகுதிகள் விலக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால், அப்பிரசங்கத்தைக் குறித்துக் காந்திஜியே கொடுத்திருக்கும் விவரம் கீழே கொடுக்கப்படுகிறது—மகாதேவ தேசாய்]

## புதிது எதுவும் இல்லை

நான் புதிதாக எதையும் இன்று சொல்லப் போவதில்லை. ராட்டைத் தருமம் பதினெட்டு வயதானது. ராட்டையின் மூலம் நாம் சுயராஜ்யத்தை அடைந்துவிட முடியும் என்று நான் 1918-இல் சொன்னேன். ராட்டையின் ஆற்றலைப் பற்றி என் நம்பிக்கை, 1918-இல் நான் முதன் முதலில் சொன்னபோது இருந்ததைப் போன்றே இன்னும் பிரகாசமாக இருந்து வருகிறது. இத்தனை வருடங்களாக அதில் செய்து வந்திருக்கும் சோதனைகளினாலும், அனுபவத்தினாலும் அது மேலும் வளம் பெற்றிருக்கிறது.

ஆனால், ராட்டையின், அல்லது அதிலிருந்து உற்பத்தியாகும் கதரின் முழுக் கருத்தையும் நீங்கள் அறியவேண்டும். முக்கியமான சமயங்களில் மாத்திரம் கதர் உடுத்துவதோ, மற்றெல்லாவற்றிலும் தன்னைச் சுற்றி விதேசிப் பொருள்கள் இருக்கும்போது மற்றெல்லாத் துணிகளையும் விலக்கிவிட்டுக் கதர் மாத்திரம் கட்டுவது என்பது மாத்திரமோ போதாது. பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுடன் தானும் ஒன்றாகி உண்மையான சுதேசி உணர்ச்சியை அடைவதுதான் கதரின் பொருள்.

நான் எண்ணும் சுயராஜ்ய விஷயத்தில் யாரும் தவருக எண்ணிக்கொண்டுவிட வேண்டாம். அந்நிய ஆதிக்கம் ஒழிந்த பூரண சுயேச்சையும், பூரணமான பொருளாதார சுதந்திரமுமே அது. ஆகவே, ஒரு பக்கத்தில் ராஜீய சுதந்திரம், மற்ளுேர் பக்கத்தில் பொருளாதார சுதந்திரம். அதற்கு மற்றும் இரு பக்கங்களும் இருக்கின்றன. அதில் ஒன்று ஒழுக்கமும் சமூகமும். மற்ளுேர் பக்கம் தருமம். அதாவது, அதன் உயர்வான பொருளில் சமய ஒழுக்கம். ஹிந்து தருமம், இஸ்லாம், கிறிஸ்தவம் முதலிய தருமங்களும் அதில் அடங்கும். ஆனல், அது அவைகளுக்கெல்லாம் மேலானது. சத்தியம் என்ற பெயரால் அதை நீங்கள் அறியலாம். சந்தர்ப்பத்திற்கு ஏற்ற நேர்மை என்பது அல்ல அது. ஆனல், எல்லாவற்றிலும் வியாபித்து, எல்லாவித நாசங்களிலுைம் மாறுதல்களினுலும் அழியாமல் இருக்கும் ஜீவனுள்ள சத்தியம் அது. நமக்குப் பழக்கமாகியிருக்கும் அகிம்சை என்ற சொல்லேக்கொண்டு ஒழுக்க, சமூக மேம்பாடு என்பது இன்னது என்பதை அறிந்துகொள்ளலாம். இதைச் சதுரமான சுயராஜ்யம் என்று சொல்லுவோம். இதன் கோணங்களில் ஏதாவது ஒன்று சரியாக இல்லாது போகுமாயின், அது சரியான சுயராஜ்யமாகாது. காங்கிரஸின் பாஷையில் சொன்னல், திட்டமான முறையில் சத்தியமும் அகிம்சையும் இல்லாமல், கடவுளிடம் ஜீவ நம்பிக்கை கொள்ளாமல், நாம் ராஜீய, பொருளாதார சுதந்திரத்தை அடைவதும், அதனுல் ஒழுக்க, சமூக மேம்பாட்டை அடைவதும் முடியாது.

## ராஜீய சுதந்திரம்

ராஜீய சுதந்திரம் என்ருல், பிரிட்டிஷ் பார்லிமெண்டைப் போன்ருே, ரஷ்யாவின் சோவியத் ஆட்சியைப் போன்ருே, இத்தாலியில் இருக்கும் பாசிஸ்டு ஆட்சியைப் போன்ருே, அல்லது ஜெர்மனியிலுள்ள நாஜி ஆட்சி போன்ருே அவற்றைப் பின்பற்றிச்செல்வது என்று நான் சொல்லவில்லே. அவர்கள் பண்புக்கு ஏற்ற ஆட்சியை அவர்கள் அமைத்துக்கொண்டிருக்கிருர்கள். நமக்கு ஏற்றதான ஆட்சி நமக்கு வேண்டும். அது எப்படிப்பட்டதாக இருக்கும் என்பதை நான் சொல்லிவிட முடியாது. ராமராஜ்யம், அதாவது முற்றிலும் ஒழுக்க பலத்தையே அடிப்படையாகக் கொண்டதான மக்களின் ஆதிபத்தியம் என்று நான் அதை விவரித்திருக்கிறேன். காங்கிரஸின் நாகபுரி, பம்பாய் அமைப்பு விதிகளேத் தயாரித்தவன் நானே. இத்தகைய சுயராஜ்யத்தை அடைவதற்கான முயற்சியே அவை.

இனி, பொருளாதார சுதந்திரத்தை எடுத்துக்கொள்ளுவோம். இக்கால, அல்லது மேற்கத்திய முறையை அனுசரித்து யந்திரத் தொழில் மயமாவதிலிருந்து ஏற்படுவது அல்ல அது. தனிப்பட்ட ஒவ்வொருவரும், ஆணும் பெண்ணும், அவரவர்களின் மனப்பூர்வமான முயற்சியினுல் பொருளாதார மேம்பாட்டை அடைவது தான் இந்தியப் பொருளாதார சுதந்திரம் என்பதற்கு நான்

கொள்ளும் பொருள். அந்த முறையின் கீழ், ஒவ்வொரு ஆணுக்கும் பெண்ணுக்கும் போதுமான துணி இருக்கும். வெறும் கோவணத் துணி மாத்திரம் அல்ல. ஆனல், உடைக்கு அவசியமானவை என்னென்ன என்று நாம் கருதுகிருேமோ அவை இருக்கும். இன்று கோடிக்கணக்கான மக்களுக்கு மறுக்கப்படுவதாகவுள்ள பாலும் வெண்ணெயும் உள்பட ஒவ்வொருவருக்கும் போதுமான உணவும் இருக்கும்.

இது என்னைச் சமதருமத்திற்கு (சோஷியலிஸத்திற்கு)க் கொண்டு போகிறது. உண்மையான சோஷியலிஸம், நமது மூதாதைகள் காலத்திலிருந்து வந்திருக்கிறது. அவர்கள் நமக்கு வருமாறு போதித்தார்கள் : " நிலமெல்லாம் கோபாலனுக்குச் சொந்தம். அப்படியிருக்க அதற்கு எல்லை எங்கே இருக்கிறது ? அந்த எல்லையை வகுத்தவன் மனிதனே. ஆகையால், அவன் அந்த எல்லையை நீக்கிக் கொண்டும் விடலாம்." சாதாரணமாக கோபாலன் என்பது இடையருக்குப் பெயர். அச்சொல்லுக்குக் கடவுள் என்ற பொருளும் உண்டு. இக்கால பாஷையில் அது அரசாங்கம், அதாவது மக்கள் என்று பொருள்படும். இன்று நிலம் மக்களுக்குச் சொந்தமானதாக இல்லை என்பதும் உண்மை. இப்படி இருக்கிறதென்ருல், அது அந்த உபதேசத்தின் குற்றம் அல்ல. அந்த உபதேசத்தின்படி நடக்காதவர்களான நம் குற்றம்தான் அது.

ரஷ்யாவுள்பட எந்த நாட்டுக்கும் சாத்தியமாவதைப் போன்றே நாமும் அந்த போதனையை அனுசரித்து நடக்க, அதுவும் பலாத்காரமில்லாமல் அதைச் செய்ய, நம்மால் முடியும் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. நிலத்தைப் பறித்து விடுவதற்குப் பலாத்காரத்திற்குச் சரியான மாற்று ராட்டையும் அதிலடங்கிய மற்றவைகளுமாகும். நிலமும் எல்லாச் சொத்துக்களும், அவற்றில் யார் பாடுபடுகிருர்களோ அவர்களுடையவை. துரதிருஷ்ட வசமாக இந்தச் சாதாரணமான உண்மையைப் பாட்டாளிகள் அறிய முடியாதபடி வைக்கப்பட்டிருக்கின்றனர்.

இந்தியா இவ்வளவு படுமோசமான வறுமை நிலைக்கு எப்படி வந்தது என்பதை இனி பார்ப்போம். கிழக்கிந்தியா கம்பெனி, இந்தியாவின் பருத்தித் துணி உற்பத்தியை அழித்துவிட்டது. உணவுக்கு அடுத்தபடியாக மனிதனின் பெருந் தேவையான துணி விஷயத்தில், லங்காஷயருக்கு இந்தியா அடிமையாக இருக்கும்படி எல்லாவிதமான முறைகளைக் கொண்டும் செய்து விட்டார்கள் என்று சரித்திரம் சொல்லுகிறது. இப்பொழுதுங்கூட, இறக்குமதியாகும் சரக்குகளில் அதிகமாக இருப்பது துணிதான். இவ்விதம் கோடிக்கணக்கில் எண்ணக்கூடிய, பாதி நேரம் வேலையில்லாத ஆண்களையும் பெண்களையும் அது உண்டாக்கிவிட்டது. இழந்துவிட்ட வேலைக்குப் பதிலாக அவர்களுக்கு வேறு எந்த வேலையும் கொடுக்கப்படவில்லை. கையினல் பஞ்சரைப்பது, பட்டை போடுவது, நூற்பது, நெய்வது

ஆகியவை ஓரளவுக்கு அழிக்கப்பட்டுவிட்டதால், இந்தியாவின் கிராமங்களில் இருந்த மற்ற தொழில்களும் அழிந்துவிட்டன. தொடர்ந்து வேலையில்லாமலிருந்து விட்டது, மக்களிடம் ஒரு வகையான சோம்பேறித்தனத்தை உண்டாக்கிவிட்டது. இதுதான் அதிகக் கவலைப்பட வேண்டியதாக இருக்கிறது. இவ் விதம் மக்களின் வறுமை வளர்ந்துவிட்டதற்கு அந்நிய ஆட்சி தான் பொறுப்பாளி என்பதில் சந்தேகமில்லையெனினும், இதற்கு நாமும் அதிகப் பொறுப்பாளிகளாவோம். மக்களில் மத்திய தர வகுப்பினராக இருப்பவர்கள், தங்களிடம் வைத்த நம்பிக்கை யைத் துரோகம் செய்து, தங்களுடைய அற்ப சுகத்திற்காக இந்தியாவின் பொருளாதார சுதந்திரத்தை விற்றுவிட்டார்கள். இவர்கள் தாங்கள் செய்துவிட்ட தவறை இப்பொழுது உணர்ந்து, ராட்டையின் உபதேசத்தைக் கிராமவாசிகளிடம் பரப்பி, அவர்கள் தங்கள் சோம்பலை விட்டொழித்து ராட்டையில் வேலை செய்யும்படித் தூண்டுவார்களானால், மக்களின் நிலைமையை நாம் அதிக அளவுக்கு அபிவிருத்தி செய்துவிட முடியும். உழைப்புப் போய் அதற்குப் பதிலாகச் சோம்பல் வந்துவிட்டாலும், நம்பிக்கையை மனச்சோர்வு வென்று விட்டாலும், அது மிகப் பயங்கரமான விஷயமே.

## சட்டசபை வேலைத் திட்டம்

சட்டசபை வேலைத் திட்டத்தைக் குறித்துப் பேசப்படு கிறது. நியாயமாகவே அவ்வேலை நிலைபெற்றும் விட்டது. ஆனால், அது நமக்குச் சுதந்திரத்தைக் கொண்டு வந்துவிடமுடியாது. அதன் வேலை அவசியமானதுதான் என்றாலும், அது கண்டிப்பான ஒரு எல்லைக்குட்பட்டது. அவசரச் சட்ட ஆட்சியோ, அல்லது நமது லட்சியத்தை நோக்கி நாம் முன்னேறுவதைத் தடுக்கும் மற்ற காரியங்களோ, பொதுஜனப் பிரதிநிதிகளின் அங்கீகாரத் தின் பேராலேயே செய்யப்பட்டு வருகின்றன என்று அரசாங்கம் சொல்லிக்கொண்டு வருவதைச் சட்டசபை வேலையின் வெற்றி தடுக்கும். எனவே, வாக்காளர்கள் காங்கிரஸ் அபேட்சகர் களுக்கே வோட்டுப் போட வேண்டியது அவசியம். இவர்கள் காங் கிரஸின் கட்டுதிட்டங்களை மீறிப் பொதுஜனங்களுக்கு விரோத மான முறைகளுக்கு வோட்டுப் போடத் துணியமாட்டார்கள். இந்த வேலைத் திட்டம் வெற்றியடைவதால், தனிப்பட்டவர்கள் சிலர் விஷயத்தில் நிவாரணமும் ஏற்படலாம். சிறை வைக்கப்பட் டிருக்கும் ஸ்ரீ சுபாஷ்போஸ் போன்றவர்கள் விடுதலையடையக் கூடும். ஆனால், அதுவல்ல ராஜீய, பொருளாதார சுதந்திரம்.

இதோடு, இதை வேறு விதமாகவும் கவனியுங்கள். ஆண் களும் பெண்களுமாக ஒரு குறிப்பிட்ட தொகையினர், சுமார் 1,500 பேர்தான், சட்டசபை உறுப்பினர்களாக முடியும். இப்பொதுக் கூட்டத்திலிருப்பவர்களில் எத்தனைப் பேர் சட்டசபை உறுப் பினர்களாக முடியும்? இந்த 1,500 உறுப்பினர்களைத் தேர்ந் தெடுக்க இப்பொழுது மூன்றரைக் கோடிப் பேருக்கு மேல் வாக்

களித்துவிட முடியாது. மீதமிருக்கும் முப்பத்து ஒன்றரை கோடி மக்களின் விஷயம் என்ன? சுயராஜ்யம் என்பதற்கு நாம் கொண்டுள்ள கருத்துப்படி, இவர்கள்தான் உண்மையான எஜமானர்கள். அந்த ஒன்றரைக் கோடிப் பேர், முந்தியவர்களின் ஊழியர்கள். இவர்கள், 1,500 சட்டசபை உறுப்பினருக்கு எஜமானர்கள். இவ்விதம் சட்டசபை உறுப்பினர்கள், அவர்களுடைய பொறுப்பில் உண்மையுடன் நடந்துகொள்ளுவதாக இருந்தால், அவர்கள் இரு மடங்கு ஊழியர்களாவர்.

ஆனல், முப்பத்தொன்றரை கோடி மக்களும், தங்கள் விஷயத்திலும், தனிப்பட்ட முறையில் தாங்கள் மிகச் சிறு பகுதியாகவுள்ள தங்கள் நாட்டின் விஷயத்திலும் நிறைவேற்ற வேண்டிய ஒரு பொறுப்பும் இருக்கிறது. அவர்கள் சோம்பலாகவே இருந்து வருவார்களானல், சுயராஜ்யத்தைக் குறித்தும், அதை அடைவது எப்படி என்பது பற்றியும் அவர்கள் ஒன்றுமே அறியவில்லை என்ருல், அவர்களே 1,500 சட்டசபை உறுப்பினருக்கு அடிமைகளாகி விடுவார்கள். என்னுடைய வாதத்திற்கு, மூன்றரை கோடி வாக்காளர்களும் இங்கே முப்பத்தொன்றரை கோடி மக்களின் அதே ரகத்தைச் சேர்ந்தவர்களே. ஏனெனில், அவர்கள் பாடுபட்டு உழைப்பவர்களாகவும், புத்திசாலித்தனமுள்ளவர்களாகவும் ஆகவில்லை என்ருல், ஆட்டம் ஆடுகிறவர்களான 1,500 சட்டசபை உறுப்பினர்களின் கையில் சொக்கட்டான் காய்களாகவே அவர்கள் ஆகிவிடுவார்கள். அவர்கள் காங்கிரஸ்காரர்களாக இருந்தாலும், வேறு யாராக இருந்தாலும், பலன் ஒன்றுதான். வாக்காளர்கள் மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறையோ, அல்லது அதற்கு அதிகமான காலத்திற்கொரு முறையோ தங்கள் வாக்குகளை அளிப்பதற்கு மாத்திரம் விழித்துக்கொண்டு, பிறகு திரும்பவும் தூங்கப் போய்விடுவார்களாயின், அவர்களின் ஊழியர்களே அவர்களுக்கு எஜமானர்களாகிவிடுவார்கள்.

அத்தகைய அபாயம் ஏற்பட்டுவிடாதபடித் தடுப்பதற்கு எனக்குத் தெரிந்த ஒரே வழி, பாடுபட்டு உழைத்துப் புத்திசாலித்தனமாக இருப்பதுதான். அவர்கள் ராட்டையில் நூற்பதையும் மற்ற கிராமக் கைத்தொழில்களையும் மேற்கொள்ளுவார்களாயின், அவர்கள் அப்படி மாத்திரமே இருக்க முடியும். அவற்றை அவர்கள் கண்மூடித்தனமாக மேற்கொண்டுவிட மாட்டார்கள். அனுபவத்தைக்கொண்டு உங்களுக்கு ஒன்று கூறுகிறேன். இதற்கான முயற்சியைச் செய்வதென்ருல், சரியான வகையில் அது முதியோர் கல்வியாகவே ஆகும். இதற்கென்று தாம் தேர்ந்தெடுத்துக்கொண்ட கிராமத்தில் இவ்வேலையைச் செய்ய முற்படும் ஊழியருக்குப் பொறுமையும், ஒழுக்க சீலமும், அக்கைத்தொழிலின் விஞ்ஞான, அனுபவ ஞானமும் இருக்க வேண்டும்.

## பொருளாதார சூரிய மண்டலம்

இத்தகைய திட்டத்தில் ராட்டை அதன் கேந்திரமாகிறது. அதைச் சூரிய மண்டலம் என்று நீங்கள் சொல்லுவதானல், ராட்டையே தங்க மயமாகப் பிரகாசிக்கும் சூரியனாகிறது. மற்றக் கைத்தொழில்கள், அம்மண்டலத்தின் நியதிக்குட்பட்டுச் சூரியனைச் சுற்றி வரும் கிரகங்களாகின்றன. கிழக்கிந்தியக் கம்பெனி எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளினல், சூரியன் தனது பிரகாச சக்தியை இழந்துவிட்டது. அப்பொழுது கிரகங்களும் அவற்றின் சக்திகளை இழந்து கண்ணுக்குத் தெரியாதவைகளாகவோ, அநேகமாக அந்த நிலையையோ அடைந்துவிட்டன. இப்பொழுது சூரியன் அதன் பழைய அந்தஸ்தில் திரும்பவும் வைக்கப்பட்டிருக்கிறது. கிரகங்களும், சூரியனுக்குள்ள பலத்திற்கு ஏற்றாற்போலச் சுற்றி வரும் சக்தியைப் பெற்று வருகின்றன.

ராட்டையின் பொருளையும் அதன் உபதேசத்தையும் ஒருவேளை நீங்கள் இப்பொழுது புரிந்துகொண்டிருக்கலாம். கதர், சமூக ஒற்றுமை, மதுவிலக்கு, ஹிந்துக்கள் தீண்டாமையை ஒழிப்பது ஆகிய நான்கு அம்சங்களைக்கொண்ட, *1920*-இல் வகுத்த நிர்மாண வேலைத் திட்டத்தைக் காங்கிரஸ் உண்மையாகவும் வெற்றிகரமாகவும் நிறைவேற்றிவிடுமானல், ஒரு ஆண்டிற்குள் சுயராஜ்யத்தை அடைந்துவிடுவது நிச்சயம் என்று நான் *1920*-இல் சொன்னேன். நான், அதைச் சொன்னதற்காக வருத்தப்படவோ, வெட்கப்படவோ இல்லை. அந்த அறிவிப்பையே இன்று திரும்பவும் உங்கள் முன்னல் சொல்ல விரும்புகிறேன். நான்கு அம்சங்களைக்கொண்ட அந்த நிர்மாண வேலைத் திட்டத்தை நீங்கள் எப்பொழுது நிறைவேற்றிவிடுகிறீர்களோ அப்பொழுதே நீங்கள் கேட்ட மாத்திரத்தில் சுயராஜ்யம் தானே வரும். ஏனெனில், சுயராஜ்யத்தை எடுத்துக் கொண்டுவிடும் சக்தி அப்பொழுது உங்களுக்கு உண்டாகிவிடும். உங்களுடைய நம்பிக்கையிலோ, செயலிலோ, ராட்டை எந்த இடத்தில் இருக்கிறது என்பதைக் குறித்து நீங்கள் ஒரு கணம் சிந்தித்துப் பாருங்கள். பம்பாயில் பரஸ்பரம் ஒருவரையொருவர் ரகசியமாகக் கொலைசெய்துகொண்டு வருவது சமூக ஒற்றுமைக்கு அறிகுறியா? பூரண மதுவிலக்கு எங்கே? ஹிந்துக்கள் தீண்டாமையை அடியோடு விட்டொழித்து விட்டார்களா? யாரோ ஒருவர் செய்துவிட்டார் என்பதனல் மாத்திரம் காரியம் முற்றிலும் நிறைவேறிவிட்டதாகாது. திருவாங்கூரின் பிரமாதமான தீண்டாமை ஒழிப்புப் பிரகடனம், முடிவின் ஆரம்பமாக இருக்கலாம். ஆனல், அதுவே முடிவு அல்ல. ஹரிஜனங்களைப் பற்றிய தீண்டாமையை நாம் நீக்கிவிட்டு, முஸ்லிம்களையோ, மற்றவர்களையோ தீண்டாதவர்களாக நாம் நடத்துவோமானல், அத்தீமையை நாம் நீக்கிவிட்டதாகாது. 'நிலம் எல்லாம் கடவுளுக்கே சொந்தம்' என்பதில் ஓர் ஆழ்ந்த பொருளும் இருக்கிறது. பூமியைப் போன்றே அதில் இருப்பவர்களான

நாமும் கடவுளுக்கே சொந்தம். ஆகவே, நாம் எல்லோரும் ஒன்று என்று உணர்வதோடு, ஒருவருக்கும் மற்றொருவருக்குமிடையே எல்லைச் சுவரை எழுப்பிக்கொண்டு ஒருவருக்கொருவர் தடையுத்தரவுகளையும் பிறப்பித்துக் கொள்ளக் கூடாது.

## திட்டத்தை நிறைவேற்றினால்?

இதுவே செயலில் ஈடுபடுவதற்கான அகிம்சை வழி. இந்த வேலைத் திட்டத்தை நிறைவேற்றிவிட நம்மால் முடிந்தால், சட்ட மறுப்பை ஆரம்பிப்பதற்கு அவசியமே இல்லை. பலாத்காரச் செயலுக்கும் நிச்சயமாக அவசியம் இல்லை. அழித்து விடுவதிலோ, கணத்தில் விஷ வாயு செலுத்தி லட்சக்கணக்கானவரைக் கொன்று விடுவதிலோ வெள்ளைக்காரர்கள் என்னதான் சக்தி வாய்ந்தவர்களாக இருந்தாலும், அது பெரியதல்ல. ஆனால், இந்தியாவிலிருக்கும் வெள்ளையரோ 70,000 பேர்தான். தாங்களோ முப்பத்தைந்து கோடிப் பேர் என்பதை இந்தியர் உணர்வார்களாயின், இந்தியாவிலிருக்கும் வெள்ளையரிடம் பலாத்காரச் செயல்களைச் செய்வதைக் குறித்து இந்தியர் யாவரும் ஒருவர்போல் வெட்கப்படுவார்கள். ராட்டையைப் புத்திசாலித்தனமாகப் புரிந்து கொண்டு விட்டால், பொருளாதார விமோசனத்தையே நூற்றுவிடுவதோடு நம் புத்தியிலும், உள்ளத்திலும் புரட்சிகரமான மாறுதலையும் உண்டாக்கிவிடலாம். சுயராஜ்யத்தை அகிம்சை வழியில் அடையப் பார்ப்பதே பத்திரமானது, எளிதானது என்பதையும் அது நமக்கு எடுத்துக் காட்டும். இதன் மூலம் அபிவிருத்தி மெதுவானதாக இருப்பதாகத் தோன்றலாம். ஆனால், அதுவே வேகமானது என்பது நாளடைவில் நிரூபிக்கப்படும்.

ஜவாஹர்லால் இன்று சிறையில் இல்லை என்றால், அதற்குக் காரணம் அவர் சிறை செல்ல பயப்படுவதனால் அல்ல என்று நான் கூறுவதை நம்புங்கள். புன்னகை தவழ சிறைக்குப் போகவும், தூக்குமேடை மீது ஏறவும் கூடியவர் அவர். அத்தகைய துன்பங்களை அனுபவிப்பதில் இருக்கும் நன்மையில் நம்பிக்கையையோ, சக்தியையோ நான் இழந்துவிட்டதாக எண்ணிவிடாதீர்கள். ஆனால், நான் காணும் அதற்கான சந்தர்ப்பம் எதுவும் இப்பொழுது இல்லை. எனினும், நாம் ஒன்றுபட்ட நம்பிக்கையுடனும், உறுதியோடும் நிர்மாண வேலைத் திட்டத்தில் வெற்றி பெற்று விடுவோமானால், அத்தகைய துன்பங்களையெல்லாம் நாம் தவிர்த்துவிடலாம் என்று தான் நான் உணருகிறேன். இது நம்மால் முடியுமானால், பிரிட்டிஷாருடனோ அவர்களுக்கு எதிராகவோ நாம் போராட வேண்டிய அவசியம் இல்லை. ஆனால், லார்டு லின்லித்கோவே நம்மிடம் வந்து, நமது அகிம்சையையும் சத்தியத்தையும் நம்பாது போனதில் தாம் பெரும் தவறு செய்துவிட்டதாக ஒப்புக்கொள்ளுவார். நாம்

செய்யும் முடிவை ஏற்றுக்கொள்ளுவதாகவும் தமது நாட்டு மக்களின் சார்பாக வாக்குறுதியளிப்பார். இது நிச்சயம் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். அவர் அப்படிச் செய்தாலும், செய்யாது போனாலும், நான் பாடுபட்டு வருவது அதை அடைய வேண்டும் என்பதற்காகவே யன்றி வேறு எதற்கும் அல்ல.

நிலம் எல்லாம் கடவுளுக்கே சொந்தம்.

—'ஹரிஜன்'—2—1—1937

# 42

# கதரால் உண்டாகிறவை

[தம்மைத் தாமே அறிந்துகொள்ளும் உணர்ச்சியின் பேரிலேயே காந்திஜி 16-ஆம் தேதி காலையில் பொருட்காட்சியில் தம் மனதில் இருந்தவைகளைப் பொழிந்தார். பெயிஸ்பூரில் 1936 டிசம்பர் 25-ஆம் தேதி அவர் செய்த ஆன்மிகப் பிரசங்கத்தில் காணப்பட்ட அந்தத் தொனியும் ஸ்வரமும் இதில் இல்லை. ஆனால் அதே ஆழ்ந்த கருத்தும் ஆன்மிக வேகமும் இப்பேச்சிலும் இருந்தன. அதே கோரிக்கை, மேலும் எதிர்த்துவிட முடியாததாகவும் இருந்தது.—மகாதேவ தேசாய்.]

காந்திஜி கூறியதாவது:

ஐக்கிய மாகாண, பீகார் மந்திரிகள் தங்கள் பதவிகளை ராஜிநாமாச் செய்துவிட்டு இங்கே வந்திருக்கிறார்கள். இதில் அபூர்வமானது எதுவும் இல்லை. அரசியல் சட்டம் ஒன்றுக்கும் உதவாதது என்பதை நன்றாக அறிந்தே அவர்கள் மந்திரி பதவிகளை ஏற்றுக்கொண்டார்கள். பீகாரிலும், ஐக்கிய மாகாணத்திலும் நடந்திருப்பதே நாளைக்குப் பம்பாயிலும், இன்னுமொரு நாள் சென்னையிலும் நடக்கலாம். ஆனால், அங்கே நடந்தது எதற்காக என்பதையே நான் இன்று உங்களுக்குச் சொல்லப் போகிறேன். நான் மந்திரியாக இருந்தால், கைதிகள் மூவாயிருந்தாலும் முப்பது பேராக இருந்தாலும், அவர்களை விடுதலை செய்வது என் அதிகாரத்திற்கு உட்பட்டது. இதில் குறுக்கிட கவர்னருக்கு என்ன நியாயம் இருக்கிறது? பெரும்பான்மை வோட்டு பலம் எனக்கு இருப்பதாலேயே நான் மந்திரியாக இருக்கிறேன். நான் மந்திரியாக இருந்துகொண்டிருக்கும் வரையில், கைதிகளை விடுதலை செய்வதற்கு எனக்குள்ள அதிகாரத்தை யாரும் ஆட்சேபிக்க முடியாது. ஆனால், அந்த இரு மாகாண கவர்னர்களும் இதில் குறுக்கிட்டிருக்கிறார்கள். அவர்கள் ஏன் குறுக்கிட்டிருக்கிறார்கள் என்பதையும் சொல்லுகிறேன். நமது சோஷலிஸ்டு நண்பர்கள் என்ன சொன்னாலும் சரி, கதரால் உண்டாகக்கூடியவை யாவை என்பதைநாம் அறிந்துகொள்ளாத

தனுல்தான் அந்தக் கவர்னர்கள் குறுக்கிட்டிருக்கிருர்கள் என்று நான் கருதுகிறேன்.

அகிம்சையின் அடிப்படையாகவும் உருவமாகவும் கதர் கருதப்பட்டிருக்கிறது. உண்மையாகக் கதர் உடுத்தும் ஒருவர், ஒரு பொய்யும் சொல்லமாட்டார். உண்மையாகக் கதர் உடுத்துபவர் மனத்தில் பலாத்காரத்தையோ, ஏமாற்றத்தையோ, கெட்ட எண்ணத்தையோ கொள்ளமாட்டார். 'இதுதான் கதர் என்ருல், அதை நாங்கள் உடுத்திக்கொள்ளமாட்டோம்' என்று சொல்லுகிறவர்களுக்கு நான், 'உங்கள் விருப்பம் எதுவோ அதைத் தாராளமாகச் செய்துகொள்ளுங்கள். ஆனுல், சத்தியத்தையும் அகிம்சையையும் கொண்டு சுயராஜ்யத்தை அடைவது என்பதை அப்பொழுது நீங்கள் மறந்துவிட வேண்டும். சத்தியத்தையும் அகிம்சையையும் கடைப்பிடிக்கும்படி உங்களைக் கட்டாயப்படுத்த மாட்டேன்; என் முறையைக் கொண்டு சுயராஜ்யத்தை அடையும்படியும் கட்டாயப்படுத்தவும் மாட்டேன்' என்று கூறிவிடுவேன்.

விதல் நகரை அமைக்கும் வேலைக்கு ஏழரை லட்ச ரூபாய் போயிருக்கிறது. எனக்குப் பிடித்தமானவை இங்கு அநேகம் இருக்கின்றன. ஆனுல், அவற்றில் கதர் உணர்ச்சி இல்லை. சர்தாரும் நானும் ஒருவருக்கொருவர் நெருங்கிப் பழகுகிருேம். நாங்கள் இருவரும் ஒன்று. ஒரே மாதிரி வேலை செய்து, ஒரே மாதிரி எண்ணுகிருேம். ஆனுல், கதரின் ரகசியத்தை அவர் கூட சரியாகத் தெரிந்து கொள்ளாமல் இருக்கக்கூடும். கதரின் உணர்ச்சியை நிறைவேற்றுவதற்கு எங்கே மனப்பூர்வமான முயற்சி இருக்கிறதோ அங்கே ஏழரை லட்சம் செலவு செய்யப்படுவதற்கு இடமில்லை. ரூ. 5,000க்கு மேற்போகாத செலவில் கிராமத்தில் காங்கிரஸ் மகாநாட்டை நடத்த முடிவதாக இருக்க வேண்டும் என்று நான் சொன்னேன். பெயிஸ்பூர் காங்கிரஸுக்கு முன்னுல் தேவிடம், அந்தக் காங்கிரஸ் மகாநாட்டை ரூ. 5,000க்கு அதிகமாகாத செலவில் முடித்துவிடத் தவறிவிடுவாரானுல் அவரிடம் நான் கொண்டிருக்கும் மதிப்பு குறைந்துவிடும் என்றேன். அந்தக் கருத்து என் மனத்தைவிட்டு இன்னும் போய்விடவில்லை. இதை நம்மால் செய்ய முடியவில்லையென்ருல், நாம் உண்மையான சுயராஜ்யப் போர்வீரர்கள் அல்ல; நாம் உண்மையான கிராமவாசிகளாகவும் ஆகிவிடவில்லை. கிராம மனப்போக்கும், மின்சார விளக்கு அலங்காரங்களும் ஒன்றுக்கொன்று பொருந்தாதவை. மோட்டார்களுக்கும் மோட்டார் லாரிகளுக்கும் அங்கே இடமும் இல்லை. என்னை மோட்டாரில் பெயிஸ்பூருக்குக் கொண்டு போனுர்கள்; மோட்டாரிலேயே ஹரிபுராவுக்குக் கொண்டு வந்தார்கள். அதிலிருந்து கீழே அடி வைக்க அவர்கள் என்னை அனுமதிக்கவில்லை. மாட்டு வண்டியில் கூட அவர்கள் என்னை ஏற்றிச் செல்லவில்லை. சுபாஷ்பாபுவுக்கு என்று அதை ஒதுக்கிவைத்திருக்கிருர்கள். அவர்கள் என்னை

மாட்டு வண்டியில் அழைத்து வந்தால், அதனால் கொஞ்சம் நேரம் வீணாகியிருக்கும். அதனால் என்ன? நாமெல்லோரும் ராஜாக்களாகிவிட்டோம். நடந்து வந்தவர்கள் சிலர், மோட்டார்களை மறித்துக் கொண்டு தங்களுக்கு மோட்டார் கொடுக்கா விட்டால் சத்தியாக்கிரகம் செய்வதாக மிரட்டினார்கள் என்று அறிகிறேன். நாம் கதர் மனோபாவம் பெற்றிருந்தால், இங்கே ஏழரை லட்ச ரூபாய் செலவழிக்கப்பட்டிருக்காது. இங்கே பெட்ரோல், எண்ணெயால் இயங்கும் யந்திரங்கள், தண்ணீர்க் குழாய்கள், மின்சாரம் ஆகியவைகளிருப்பதோடு, பல் துலக்கும் பசை, பிரஷ், தலைக்குத் தடவும் வாசனைத் தைலம் உள்பட இக்கால நகரவாசிகளுக்கான எல்லா வசதிகளும் இருக்கின்றன. இவைகளால் கிராமவாசி கெடாமலிருக்கிறார்; கெட்டுவிடாமலிருக்க வேண்டும். அப்பொழுது ஒடித்த கருவேலங்குச்சியே அவர்களுக்குப் பல் துலக்கும் பிரஷ். உப்பும் கரியுமே அவர்களுக்கு பல் தூள். நீங்கள் கதர் உடுத்துகிறீர்கள். ஆனால், கதருக்குப் பொருந்தாதவையாக உங்களைச் சுற்றிலும் இருக்கும் மற்றவைகளின் சங்கதி என்ன?

கதர் மந்திரத்தை நன்றாகக் கிரகித்துக்கொண்டு அதற்கு ஏற்றபடி நாம் வாழாததனால், சில சோஷியலிஸ்டு நண்பர்கள் நம் மீது ஆத்திரப்படுகிறார்கள். காந்தியின் காலம் போய் விட்டது என்றும், நமக்குப் புதிய யுகம் ஆரம்பமாகிவிட்டது என்றும் சொல்லுகிறார்கள். இதை நான் பொருட்படுத்தவில்லை. மனம்விட்டுப் பேசுவதை உண்மையில் நான் வரவேற்கிறேன். நான் சொல்லுவது நிராகரிக்கப்பட வேண்டியதே என்று நீங்கள் எண்ணினால், அப்படியே நிராகரித்துவிடுங்கள். நீங்கள் செய்வதை எனக்காகச் செய்யாமல் இந்தியாவுக்காகச் செய்யுங்கள். நான் வெறும் களிமண் பொம்மை. அது சுக்கலாகப் போய் விடுவது நிச்சயம். எனக்காக நீங்கள் கதர் உடுத்துவதாக இருந்தால், என் சவத்தை நீங்கள் கொளுத்தும் அன்றே கதரையும் கொளுத்திவிடுவீர்கள். ஆனால், கதரின் உபதேசத்தை நீங்கள் முற்றிலும் அறிந்து கொண்டிருப்பீர்களாயின். அதை முழுவதும் நீங்கள் கிரகித்துக்கொண்டிருந்தால், நான் இறந்த பிறகும் நீண்டகாலம் கதர் இருந்துவரும். வெளிப்படையான பூஜையைச் செய்துகொண்டிருப்பதற்கான உயிரற்ற விக்கிரகம் அல்ல, கதர். விக்கிரக ஆராதனையல்ல உண்மையான ஆராதனை. விக்கிரகத்திலுள்ள கடவுளை ஆராதிப்பதே அது. கதர் உணர்ச்சியை இழந்துவிட்டு, அதை வெறும் ஆடம்பரமாகவே நாம் செய்துவிடுவோமானால், கண்மூடித்தனமாக விக்கிரக ஆராதனை செய்கிறவர்களைவிட எந்த விதத்திலும் நாம் மேலானவர்களாக மாட்டோம்.

சென்ற இருபது ஆண்டுகளாக என் நாட்டு மக்களுக்கு நான் கதர்த் தத்துவத்தை உபதேசித்து வருகிறேன். நான் மரணத்தின் வாசலில் இருந்து வரும் இன்றும் அதே தத்துவத்தையே உபதேசிக்க விரும்புகிறேன். கதர், ஆரம்ப காலத்தில் கரணப்

பட்டது போல பழைய கந்தையாக இன்று இல்லை. அதனிடம் வாலிபத்திற்குரிய எல்லா ஆரோக்கியமும், அழகும், தைரியமும் இருக்கின்றன. ஆகையால், நான் இன்று இரட்டிப்பு தைரியத்துடனும் நம்பிக்கையுடனும் கதரின் தத்துவத்தை உபதேசிக்க முடியும். இவ்விதம் நான் செய்வது தவறு அல்ல என்று என்னுள்ளிருந்து ஏதோ ஒன்று எனக்குச் சொல்லுகிறது. கதரில்தான் சுயராஜ்யம்—சுதந்திரம் இருக்கிறது.

—'ஹரிஜன்'–26—2—1938

## 43

# காங்கிரஸ்காரர்களைக் குறித்துப் புகார்

ரங்கூன் கதர்க் கடையிலிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது. இன்னுமொன்று கர்னாடகத்திலிருந்து வந்திருக்கிறது. அகில இந்திய நூற்போர் சங்கம் அத்தாட்சி அளிக்க மறுத்துவிட்ட கதருக்குக் காங்கிரஸ் கமிட்டிகள் அத்தாட்சி அளித்துவிட்டன என்று அக்கடிதங்கள் புகார் கூறுகின்றன. புகார்கள் உண்மையானவை என்பதில் எந்த விதமான சந்தேகமும் இல்லை. இரு காங்கிரஸ் ஸ்தாபனங்கள் அளித்திருக்கும் அத்தாட்சிகளின் நகல்கள் என்னிடம் இருக்கின்றன. இந்த அத்தாட்சிகள் சட்ட விரோதமானவை என்பதை அந்தக் காங்கிரஸ் கமிட்டிகள் அறியவேண்டும். இத்தகைய அத்தாட்சிகளை அளிப்பதற்கு அதிகாரமுள்ள ஒரே ஸ்தாபனம், அகில இந்திய நூற்போர் சங்கம்தான். இந்தச் சங்கத்தை அமைத்த காங்கிரஸின் தீர்மானத்தை மாற்றிவிட்டாலன்றி இதைச் செய்ய எந்தக் காங்கிரஸ் கமிட்டிக்கும் அதிகாரம் இல்லை; அதிகாரம் கொடுக்கவும் முடியாது.

அத்தாட்சி பெற்ற கதர் என்ற எதுவும் இல்லை. கதரைக் கொண்ட ஒவ்வொரு துணிக்கும், ஒவ்வொரு பொருளுக்கும் அத்தாட்சிகொடுத்துவிடமுடியாது. அகில இந்திய நூற்போர் சங்கத்தின் அங்கீகாரத்தைப் பெற்ற கதரை விற்பதற்குக் கடைக்கும், ஆட்களுக்குமே அத்தாட்சி அளிக்க முடியும். கதரை உற்பத்தி செய்பவர்களுக்குப் போதுமான கூலி நிச்சயமாகக் கிடைக்கும்படிச் செய்வதை முன்னிட்டுக் கதரைப் பற்றிய ஆரம்ப விளக்கம் விசாலமாக்கப்பட்டிருக்கிறது. வேறு எந்தக் கதரையாவது விற்கிறவர்கள், அகில இந்திய நூற்போர் சங்கம் அதை உற்பத்தி செய்வோருக்குக் கொடுப்பதாகத் தானே வாக்குறுதியளித்திருக்கும் கூலி அவர்களுக்குக் கிடைக்காதபடிச் செய்து விடுகிறார்கள். அகில இந்திய நூற்போர் சங்கம், தேச முன்னேற்றத்திற்கான ஒரு சோதனையைச் செய்துகொண்டிருக்கிறது. கோடிக்கணக்கான சகோதரிகளின் உடல் செத்துக் கொண்

டிருக்கும் நிலையில், அவர்களுக்குத் தினத்திற்கு அரையணுவுக்குக்கூட வழி செய்ய எந்த ஸ்தாபனமும் முன்வராமலிருக்கும் போது, அகில இந்திய நூற்போர் சங்கத்தின் இந்தச் சோதனை அச்சகோதரிகளின் கண்களில் உயிரையும் பிரகாசத்தையும் உண்டாக்கி வருகிறது. இதில் காங்கிரஸ்காரர்களும், காங்கிரஸ் கமிட்டிகளும் குறுக்கிட்டார்கள் என்று சொல்ல இடமில்லாமலிருக்க வேண்டும். ஆகையால், காங்கிரஸ் கமிட்டிகளும் காங்கிரஸ்காரர்களும், அகில இந்திய நூற்போர் சங்கத்தின் வேலையில் குறுக்கிடாமல் இருப்பதோடு மாத்திரமன்றி, அகில இந்திய நூற்போர் சங்கத்தின் பல ஸ்தாபனங்களுக்கும், முக்கியமாகக் கதர் விற்பனையில் முழு மனதோடுகூடிய ஒத்துழைப்பையும் அளிப்பார்கள் என்று நம்புகிறேன். நிதானமாகக் கிராக்கி அதிகரித்துக்கொண்டே போகுமானால், பஞ்சப் பிரதேசம் ஒவ்வொன்றிலும் லாபகரமான வேலையை மக்களுக்குக் கொடுப்பது சாத்தியமாக இருக்கும்.

'ஹரிஜன்'—24—12—1938

# 44

# பெண்களின் மூலம் சுயராஜ்யம்

சாத்வீக சட்ட மறுப்புக்கு நூற்பதை இன்றியமையாத ஓர் அம்சமாக இப்பொழுது காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானித்திருக்கிறது. ஆகவே, நாட்டிற்குச் சேவை செய்வதற்கு இந்தியப் பெண்களுக்கு அரியதோர் வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. உப்புச் சத்தியாக்கிரகத்தின்போது, தனித்து இருந்து வந்ததைக் கைவிட்டுப் பத்தாயிரக்கணக்கான பெண்கள் வெளிவந்தார்கள். நாட்டுக்கு ஆண்களுடன் தாங்களும் சரி நிகராகச் சேவை செய்யமுடியும் என்பதைக் காட்டிவிட்டனர். இது கிராமப் பெண்களுக்கு, அவர்கள் என்றுமே அனுபவித்து அறியாததோர் கௌரவத்தை அளித்தது. ஏகாதிபத்தியத்தின் தளையிலிருந்து விடுவிப்பதற்கு நடக்கும் சமாதானத்தோடுகூடிய இந்தியாவின் போராட்டத்தில், நூற்பது நடுநாயகமாகத் திரும்பவும் அமைக்கப்பட்டிருப்பது, இந்நாட்டின் பெண்களுக்கு விசேஷமான அந்தஸ்தை அளிக்கிறது. நூற்பதில் ஆண்களைவிட இயல்பாகவே பெண்களுக்கு அதிகச் சௌகரியம் உண்டு.

செய்யும் வேலையில் ஆண்களுக்குரியது, பெண்களுக்குரியது என்ற பாகுபாடு ஆதிகாலம் முதலே இருந்து வருகிறது. ஏவாள் நூற்றாள், ஆதாம் நெய்தான். அந்தப் பாகுபாடு இன்றும் தொடர்ந்து இருந்து வருகிறது. ஆண்கள் நூற்பது என்பது மிக அரிதானது. *1920–21*-இல் பஞ்சாபில் ஆண்களை நூற்கும்படிக் கேட்டுக்கொண்டேன். நூற்பது ஆண்களின் கௌரவத்

திற்குக் குறைவானது என்றும், அது பெண்களே செய்ய வேண்டிய வேலை என்றும் கருதப்படுவதாகவும் அவர்கள் சொல்லி வந்தார்கள். ஆண்கள், நூற்பது கௌரவக்குறைவானது என்று சொல்லி இப்பொழுதெல்லாம் நூற்க மறுப்பதில்லை. தியாகமாகவே நூற்கும் ஆண்கள் ஆயிரக்கணக்கில் இருக்கிறார்கள். தேசாபிமான நோக்கத்தின் பேரில் ஆண்கள் நூற்க ஆரம்பித்த பிறகுதான் நூற்பும் ஒரு விஞ்ஞானமாக மாறியதோடு, மற்ற துறைகளில் புதிதாகப் பல விஷயங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருப்பது போல இதிலும் பல புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. என்றாலும், நூற்பு விசேஷமாகப் பெண்களுக்கு உரியதாகவே இருக்கும் என்று அனுபவத்திலிருந்து தெரிகிறது. முக்கியமாக நூற்பு மெதுவான, அதிகப் பொறுமையான வேலை. தியாகமே உருவானவள் பெண். எனவே அகிம்சை உருவானவள். ஆகையால், அவள் செய்யும் வேலை சாந்தத்தை அளிப்பதாக இருக்கவேண்டுமே ஒழிய யுத்தத்தை உண்டாக்குவதாக இருக்க முடியாது. பெண்களின் வேலை அவ்வாறேதான் இருந்து வருகின்றது. இப்பொழுது பலாத்காரப் போர்க் காரியங்களுக்காகப் பெண்களும் இழுக்கப்பட்டுவிடுவது, இக்கால நாகரிகத்திற்குப் பெருமையாகாது. பலாத்காரக் கொடுமை பெண்களின் இயல்புக்கே கொஞ்சமும் பொருந்தாததாவதால், இந்த அடிப்படையான தங்கள் இயல்புக்கு எதிரான இக்காரியத்தை எதிர்த்துப் பெண்கள் புரட்சி செய்வார்கள் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. ஆணும், அவன் செய்துவிட்ட தவறுக்காக வருந்துவான் என்று எண்ணுகிறேன் ஆணும் பெண்ணும் சமம் என்றால், செய்யும் வேலைகளிலும் சமமாகவே இருக்க வேண்டும் என்பது இல்லை. ஒரு பெண் வேட்டையாடுவதற்கோ, அல்லது ஈட்டி ஏந்திப் போராடுவதற்கோ, சட்டப்படிக்கான தடை எதுவும் இல்லாமல் இருக்கலாம். ஆனால், ஆண்கள் செய்யவேண்டிய வேலைகள் விஷயத்தில் இயல்பாகவே அவள் அவற்றிலிருந்து ஒதுங்கிக்கொள்ளுகிறாள். ஒருவருக்கொருவர் துணையாக இருக்கும் வகையிலேயே ஆணையும் பெண்ணையும் இயற்கை படைத்திருக்கிறது. உடலமைப்புகள் வெவ்வேறாக அமையப் பெற்றிருப்பது போன்றே அவர்கள் செய்யவேண்டிய வேலைகளும் வெவ்வேறாக வரையறை செய்யப்பட்டுள்ளன.

ஆனால், ஆண் பெண்களின் வெவ்வேறான வேலைகளை நிரூபித்துக்கொண்டிருப்பது இங்கே என் காரியத்திற்கு அவசியமானது அல்ல. அது எப்படியானாலும், நூற்பது தங்களுடைய இயல்பான வேலை என்று இந்தியாவில் கோடிக்கணக்கான பெண்கள் கருதுகிறார்கள் என்பது உண்மை. காரியக் கமிட்டியின் தீர்மானம், பொறுப்பை ஆண்களிடமிருந்து பெண்களுக்குத் தானே மாற்றிவிடுகிறது. தங்கள் ஆற்றலை அவர்கள் காட்டிக் கொள்ளுவதற்கான ஒரு வாய்ப்பையும் அது அளிக்கிறது. எனது வருங்காலப் பட்டாளத்தில் ஆண்களைவிடப் பெண்களே மிக ஏராளமாக இருப்பதைக் காணவே நான் ஆசைப்படுவேன். போராட்

டம் வந்தால், ஆண்கள் மிகுந்திருக்கும் பட்டாளத்தைவிட இப் பட்டாளத்தையே மிக அதிகமான நம்பிக்கையோடு நான் அப் போராட்டத்தில் ஈடுபடுத்துவேன். ஆண்களின் பலாத்காரம் எனக்குத் திகிலை உண்டாக்கும். அத்தகைய பலாத்காரம் மூண்டு விடுவதற்கு எதிரான உத்தரவாதமாகப் பெண்கள் எனக்கு இருப் பார்கள்.

சேவா கிராமம், 27—11—'39 —'ஹரிஜன்' – 2—12—1939

# 45

## 'சுயராஜ்யத்திற்காக நூற்கவும்'

சில தினங்களுக்கு முன்பு சில சிறுவர்களும் சிறுமிகளும் வந்து என் கையெழுத்து வேண்டும் என்று கேட்டார்கள். அதோடு, ஒரு நற்செய்தி எழுதித் தர வேண்டும் என்றும் கேட்ட னர். அவர்களுக்கெல்லாம், 'சுயராஜ்யத்திற்காக நூற்கவும்' என்ற செய்தியை எழுதிக்கொடுத்தேன். ஏனெனில், இப்பொ ழுது என் மூளையில் நூற்பதையும் சுயராஜ்யத்தையும் தவிர வேறு எதுவும் இல்லை. சம்பிரதாயமான ஏதோ ஓர் உபதேசத்தை எழுதிக் கொடுப்பதற்குப் பதிலாக, எதையோ செய்யச் சொல் லும், அதிலும் ருசியானதாக இல்லாத நூற்பு வேலையைச் செய் யும்படி கூறும் ஒரு செய்தியை நான் எழுதிக் கொடுத்ததைக் கண்டு, என்னைப் பார்க்க வந்த அச்சிறுவர், சிறுமியர் மனம் வாடிப் போவார்கள் என்று எதிர்பார்த்தேன். ஆனால், நான் கேட்ட தற்கு அவர்கள் நூற்பதாகச் சொன்னார்கள். ராட்டை முதலியன வேண்டும் என்று மக்கள் கேட்கிறார்கள் என்று ஸ்ரீ சீதாராம சாஸ்திரி என்னிடம் கூறுகிறார். சிறைவாசத்தில் பழகிப் போன வரான இன்னுமொரு நண்பரோ, நூற்கும் வேலைக்கும், கதரை எல்லோரும் உபயோகிக்கும்படிச் செய்வதற்கும் ஓர் ஆண்டைத் தனியாக ஒதுக்கி வைத்துவிட வேண்டும் என்கிறார். ஆனால், இவ் வளவுக்கும் நேர்மாறாகப் பம்பாய் வக்கீல் ஒருவரிடமிருந்து கீழ்க் கண்ட கடிதம் வந்திருக்கிறது:

"'என்னைப் பார்த்து நீங்கள் சிரிக்காமலிருந்தால், எல்லோரும் நூற்கும் திட்டமே அது என்று நான் தயங்காமல் கூறுவேன்' என்று ஐக்கிய மாகாண காங்கிரஸ்காரர்களிடம் நீங்கள் பேசுகையில் கூறினீர்கள். 'ராட் டையையும் அகிம்சையையும் ஏளனம் செய்து சிரித்தவர்களும்' அவர்களில் சிலர் இருந்தனர் என்றும் நீங்கள் கூறுகிறீர்கள். ஆயினும், அவர்கள் 'இந்த இரண்டுக்கும் உடன்பட்டுவிட்டதைக் கண்டு' நீங்களே வியப்படைகிறீர்கள்.

"மேலே குறிப்பிட்ட ஐக்கிய மாகாண காங்கிரஸ்காரர்களுக்காக நான் பேச வரவில்லை. 'சுயராஜ்யத்திற்காக நீங்கள் நூற்பீர்களானால், அகிம்சை உணர்ச்சியோடு நூற்றால், சட்ட மறுப்பை நடத்துவதற்கு அநேகமாக

அவசியமே இராது' என்று நீங்கள் கூறுகிறீர்கள். சொல்லிலும், செயலிலும், எண்ணத்திலும் அகிம்சையோடு இருக்க வேண்டும் என்று நீங்கள் கூறுவது பின்பற்றமுடியாதது என்பதை அநேக காங்கிரஸ்காரர்கள் அறிவார்கள். இத் தத்துவத்தின் கர்த்தாவான உங்களாலேயே அதை அடைந்துவிட முடிய வில்லை என்பதை நீங்களே ஒப்புக்கொள்ளுகிறீர்கள். அப்படியிருந்தும் உங்களுடைய இத்தகைய கூற்றுக்களைப் பெரும்பாலான காங்கிரஸ்காரர்கள் தீவிரமாக எதிர்க்காமலிருக்கும் காரணத்தைச் சொல்லுகிறேன். காங்கிரஸின் பலத்திற்கு நீங்கள் சின்னமாயிருப்பதுதான் இந்தப் போக்கிற்குக் காரணம். பாமர மக்களுக்கு, 'காந்தி', 'காங்கிரஸ்' என்பன ஒரே பொருளைக் கொண்ட இரு சொற்களாகிவிட்டன. எனவே, சுதந்திரப் போராட்டத்தின் இந்தக் கட்டத்தில் அத்தகையதோர் ஆயுதத்தை இழந்துவிட காங்கிரஸ்காரர்கள் விரும்பவில்லை. காந்தி இல்லாத காங்கிரஸுக்கு, காந்தியோடு கூடிய காங்கிரஸுக்கு இருக்கும் பலத்தில் பாதிகூட இருக்காது. இந்த உண்மையை எல்லோரும் அறிந்திருக்கிறார்கள். இதனால்தான் நீங்கள் சொல்லுவது போல, 'நம்பிக்கையில்லாமலேயே உங்களுக்கு அடங்கிப் போகிறார்க'ளே யன்றி, நீங்கள் காங்கிரஸிலிருந்து போய்விடுவதற்கும் சம்மதிக்காமலிருக் கிறார்கள். உண்மையில் இதுதான் முக்கியமான காரணம் என்றபோதிலும், காங்கிரஸின் யந்திரத்தில் சக்கரத்திற்குள் சக்கரங்கள் வேறு இருந்து கொண்டிருக்கின்றன. அதில் 'வலதுசாரிகள்', 'இடதுசாரிகள்' போன்ற வர்கள் இருப்பதோடு மற்றும் பல கருத்தினரும் இருந்து வருகின்றனர். 'இடதுசாரி'களைக் குறித்தும், அவர்கள் போக்கு சோஷியலிஸமாக மாறியதும் 'வலதுசாரிகள்' அதிகமாக அஞ்சுகிறார்கள். உங்கள் பெயருக்குள்ள சக்தியை அவர்கள் அறிவார்கள். பாமர மக்கள் விஷயத்தில் இடதுசாரிகளின் பொருளாதார முயற்சி பலிக்காதபடி செய்வதற்கு உங்கள் பெயரை முற்றிலும் பயன்படுத்திக்கொள்ளுகின்றனர். மில் சொந்தக்காரர்கள் கதரை ஆதரிக் கும்போது, முற்றிலும் சாதாரணமான மனிதர்கள், தங்கள் சொந்த நன்மைக்கு எதிராக நடந்துகொண்டு வருவதையே பார்க்கிறோம். இப்படி இருப் பானேன்? முதலாளிகளுக்கு இருக்கும் கடைசி நம்பிக்கை நீங்கள்தான் என்று உங்களுக்கு வேண்டியவரான ஒரு பொருளாதார பண்டிதர் ஒருசமயம் என்னிடம் சொன்னார். பாமர மக்களுக்குக் கதர் எப்பொழுதும் மலிவானதாக இருக்கப்போவதில்லை. எனவே, தங்கள் நன்மைக்கு அதனால் ஆபத்து உண்டாகிவிடப் போவதில்லை என்பதை அவர்கள் நன்றாக அறிவார்கள். இதற்கு மாறாக, சொல்லளவில் உங்கள் கதருக்கும் 'அகிம்சை'த் தத்துவத் திற்கும் ஆதரவளிப்பதன்மூலம் தங்கள் தொழிலாளர் விஷயத்தில் நடந்து கொள்ளுவதில் உங்களுடைய 'தருமகர்த்தா'த் தத்துவத்தைப் பயன்படுத்திக் கொண்டு அகமதாபாத் முறையில் நடக்கும் தொழிற் சங்கங்கள் தவிர மற்ற சாதாரண தொழிற்சங்கங்கள் நடக்க முடியாதபடியும் அவர்கள் செய்து கொண்டு விடலாம். முதலாளிகள், நிலச்சுவான்தார்கள், சுதேச மன்னர்களும் கூட (எல்லோரும் அல்ல) தங்கள் சௌகரியத்திற்கு ஏற்றதாக இருக்கும் வரையில் 'அகிம்சை', 'சத்தியம்' ஆகிய சொற்களைத் தாராளமாக எடுத்து வீசிக் கொண்டிருக்கிறார்கள். 'இடதுசாரி'களைப் பொறுத்தவரையில் அவர்கள் 'வலதுசாரி'களுக்கு எந்த வகையிலும் இளைத்தவர்கள் அல்ல. பாமர மக்களிடம் தொடர்பு கொள்ளுவதற்கு உபாயமாக அவர்களுக்கும் உங்கள் பெயர் வேண்டியிருக்கிறது. இதனாலேயே அவர்கள் காங்கிரஸில் வந்து குவிகிறார்கள். உங்களைத் திருப்திப்படுத்துவதற்காக அகிம்சையைக்

கொள்ளுவது குறித்து அவர்கள் கவலைப்படவில்லை. தங்கள் மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டுவிட்டதாகவும் அவர்கள் கூறுவார்கள். உங்களுடைய கொள்கைகளை உண்மையாகவே பின்பற்றி நடக்கும் காங்கிரஸ் காரர்கள் அநேகர் இருக்கிறார்கள் என்பதை நான் மறுக்கவில்லை. ஆனால், பெரும்பாலானவர்கள் தங்கள் சொந்த நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளுவதற்காகவே இருந்து வருகின்றனர்.

"காங்கிரஸ்காரர்களைக் குறித்து உங்களைவிட எனக்கு அதிகமாகத் தெரியும் என்று நான் சொல்லத் துணிய முடியாது. ஆனால், நீங்கள் கூறுவது போல நீங்கள் 'சேவா கிராமத்தில் அடைபட்டுக் கிடக்கிறீர்கள்', உங்களுக்கு 'மக்களுடன் நேரிடையான தொடர்பு கிடையாது' என்பதனால் அல்லாமல் நீங்கள் 'முற்றிலும் திகைப்படைவதாக' இருந்தால் நானும் அதிகமாகத் திகைப்பையே அடைகிறேன். அன்புள்ள காந்திஜி! உங்களுக்கு ஒன்று உறுதி கூறுகிறேன். சாதாரணமான, சாதாரணமானவர்களுக்கும் அதிகமானவர்களுக்குங்கூட, சாதாரணமான நோக்கங்கள் எப்படி இருந்து வருகின்றன என்பதை மாத்திரம் நீங்கள் அறிந்தால் சூரியனின் கிரணத்தின் முன்பு காலைப் பனி மறைவது போன்று உங்கள் 'திகை'ப்பெல்லாம் மறைந்து விடும்."

இதை எழுதியிருப்பவர் கூறும் வாதத்திலுள்ள பலத்தை நான் மறுக்க முடியாது. ஆனால், யோக்கியப் பொறுப்பில்லாதது என்று வெளிப்படையாகத் தெரிந்தாலன்றி என் சகா ஊழியர்கள் கூறியதையெல்லாம் நான் வாழ்நாளெல்லாம் அப்படியே ஏற்றுக்கொண்டு வந்திருக்கிறேன். இவ்விதம் நம்பியதனால் எனக்கு நஷ்டம் ஏற்பட்டதில்லை. இதற்கு மாறாக, ஆரம்பத்தில் அரை மனத்தோடு இருந்தவர்கள் முடிவில் தீவிரமானவர்களானதை நான் நினைத்துப் பார்க்க முடியும். ஏராளமான ஆண்களுடனும் பெண்களுடனும் பழக வேண்டியிருக்கும்போது, அவநம்பிக்கையுடனேயே பழக ஆரம்பிப்பது தவறானதாகும்.

ராட்டைக்குக்கூட எனக்குப் பணம் கொடுக்கும் மில் சொந்தக்காரர்கள், அதன் போட்டிக்குத் தாங்கள் பயப்படவில்லை என்று மனம் விட்டு என்னிடம் கூறுகிறார்கள். இதில் அவர்களுக்கு வேறு நோக்கம் ஏதாவது இருக்குமானால், அது தெரியும் படி மேலேயே இருக்கிறது. எதுவும் ஒளித்து வைக்கப்படவில்லை. ராட்டையின் பொருளாதாரம் கெடுதலானதாக இருந்தால், இயல்பான சாவை அது அடைந்துவிடும். ஆனால், நாட்டு மக்களின் உறுதி மாத்திரம் இருக்குமானால், கடைசியில் மூடப்பட்டுவிடும் போதும் ராட்டை உயிருடன் இருந்து வரும். மில் துணிகளுடன் போட்டியாகப் பார்த்தால், கதர் அதிக விலையுள்ளதாக இருக்கிறது. ஆனால், அது இப்பொழுது செய்து வருவது போல, இந்தியாவில் வேலையில்லாமலிருக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு ஓரளவுக்கு லாபகரமாக இருக்கும் வேலையை அது கொடுக்குமானால், கதர், மில் துணியைவிட மலிவானதே.

பம்பாய் வக்கீல் சொல்லுவது உண்மையானல், பாமர மக்கள் என்னை ஏன் பற்றிக்கொண்டிருக்கிருர்கள்? காங்கிரஸின் சக்தியாக நான் இருப்பானேன்? கலப்பில்லாத அகிம்சையை நான் எடுத்துக்காட்டுவதாக இருக்கிறேன் என்ற பிரகாசமான உண்மையே அக்கேள்விக்குத் தெளிவான பதிலை அளிக்கவில்லையா? சூதுவாது அறியாத பாமர மக்கள், தாங்களும் அறியாமலேயும் இயல்பாகவும் என்னைத் தங்களுடைய நண்பனுகவும், வழிகாட்டியாகவும், ஊழியனுகவும் ஏற்றுக்கொண்டிருக்கிருர்கள். அவர்களில் நானும் ஒருவன் என்று உணர்வதிலோ, தங்களில் நானும் ஒருவன் என்று அவர்கள் உணர்ந்துகொள்ளுவதிலோ கொஞ்சமேனும் கஷ்டம் இருந்ததில்லை. இங்கேயோ, தென்னைப் பிரிக்காவிலோ, என்னிடம் அவர்களைக் கிரகித்துக் கொள்ளுவதற்கு எவ்விதமான முயற்சியையும் நான் எடுத்துக்கொள்ள வேண்டியிருந்ததில்லை. எங்களுக்கிடையே ஏற்பட்ட இந்தப் பந்தத்தை, அன்பின் சக்தியின் அற்புதம் என்று சொல்லுவதைத் தவிர வேறு எக்காரணத்தையும் நான் சொல்லுவதற்கில்லை.

முதலாளிகளில் அநேகர் என்னிடம் சிநேகமாக இருக்கிருர்கள், என்னைக் குறித்து அவர்கள் பயப்படுவதில்லை என்று சொல்லிக் கொள்ளுவதைக் குறித்து நான் வெட்கப்படவில்லை. தீவிரமான சோஷியலிஸ்டோ, கம்யூனிஸ்டும்கூட எண்ணும் அளவுக்கு, முற்றிலும் என்று இல்லாவிட்டாலும் அநேகமாக அந்த அளவுக்கு, முதலாளித்துவம் ஒழிந்துவிட வேண்டும் என்றுதான் நான் விரும்புகிறேன் என்பதை முதலாளிகள் அறிவார்கள். ஆனல், சோஷியலிஸ்டுகளின், கம்யூனிஸ்டுகளின் முறைக்கும் என் முறைக்கும் வித்தியாசமுண்டு; எங்கள் பாஷையிலும் வித்தியாசம் இருக்கிறது. 'தருமகர்த்தா முறை' என்ற என் தத்துவம் தற்கால சாந்தியானது அன்று; நிச்சயமாக ஏமாற்றுவதற்காகச் செய்யும் வேஷமும் அன்று. மற்றக் கொள்கைகள் போய்விட்ட பிறகும் இது இருந்துவரும் என்ற திடமான நம்பிக்கை எனக்கு உண்டு. வேதாந்தமும் சமயமும் இதற்கு ஆதரவு அளிக்கின்றன. பணம் படைத்தவர்கள், இத்தத்துவத்தை அனுசரித்துச் சரிவர நடந்து கொள்ளவில்லை என்பதனல் இக்கொள்கை பொய்யானது என்று நிரூபிக்கப்பட்டுவிட்டதாக ஆகாது. பணக்காரர்களின் பலவீனத்தைத்தான் இது நிரூபிக்கிறது. அகிம்சைக்கு வேறு எந்தக் கொள்கையும் பொருத்தமானதாக ஆகாது. அகிம்சை முறையில், கெடுதி செய்கிறவர் தம் கெடுதிக்குப் பரிகாரத்தைச் செய்ய முடியாவிட்டால் தன் முடிவைத் தாமே தேடிக் கொள்ளுகிருர். ஏனெனில், அவர் அகிம்சையோடுகூடிய ஒத்துழையாமையின் மூலம் தம் தவறைத் தாமே கண்டுகொள்ளும்படிச் செய்யப்படுவார்; அல்லது தாம் முற்றிலும் ஒதுக்கப்பட்டவராகிவிட்டார் என்பதைக் காண்பார். ஆகையால், காரியத்தில் இறங்கும் சமயம் வரும்போது, புத்திசாலிகளான சோஷியலிஸ்டுகளும்

இடதுசாரியினரும், என் வழிக்குக் குறுக்கே நிற்பதற்கில்லை என் முறை வெற்றி பெறுமானால், ஏழைகளும், ஒடுக்கப்பட்டிருப் போரும் ஆனந்தமடைவார்கள் என்பதை அவர்கள் அறிவார்கள். அவர்களின் முறைகளைக்கொண்டு காரியத்தில் இறங்க அவர்கள் தயாராயில்லை. என்னுடைய யோக்கியப் பொறுப்பையும், நாட்டினிடம் எனக்குள்ள அன்பையும் அவர்கள் நம்புகிற வரை யில், என் வேலைக்குத் தடையாக இல்லாத அளவுக்கு அவர் களுக்குத் தேசாபிமானம் உண்டு.

என்றாலும், நயவஞ்சகத்திலிருந்து நான் என்னைப் பாதுகாத் துக்கொள்ளவேண்டும். எனக்கு இருக்கும் சோதனை ராட்டையே. சமூக ஒற்றுமை சம்பந்தமாகவும், தீண்டாமை ஒழிப்பு சம்பந்த மாகவும் ஒரு காங்கிரஸ்காரர் எவ்வளவு தூரம் செய்திருக்கிறார் என்பதை நான் அறிவதற்கு எளிதான சோதனை எதுவும் இல்லை. ஆனால், அவர் எவ்வளவு நூற்றிருக்கிறார், குறிப்பிட்ட பகுதியில் கதர் எந்த அளவுக்குச் செல்லுபடியாகும் நாணயம் போல் பரவியிருக்கிறது என்பதை நான் எளிதில் கண்டுகொள்ள முடியும். ஆகையால், முற்றிலும் கதர் வேலைக்கு என்றே ஒரு காலத்தை ஒதுக்கிவைத்துவிட வேண்டும் என்று நண்பர் எனக்குக் கூறும் யோசனையை நான் ஏற்றுக் கொள்ளவில்லை. பலனைக் கொண்டு முழு முயற்சியின் தன்மையை அறிந்து கொண்டுவிட எண்ணுகிறேன். கிராமவாசிகளில் பரம ஏழை களாக இருப்பவர்களும்கூட தாமே நூற்பதன் மூலம் கதரை உடுத்த முடியும் என்பதைச் சரியான கணக்குகளுடன் திட்ட வட்டமாக நான் எடுத்துக் காட்டியிருக்கிறேன். மிக ஏராள மான தொகையினரான கிராமவாசிகளுக்கு, மிகக் குறைவான மூலதனத்தையும் ஸ்தாபன முயற்சியையும் கொண்டு நூற்பும், அது சம்பந்தமான வேலைகளும் எவ்வளவு பணத்தை அவர்கள் மடியில் சேர்க்க முடியுமோ அவ்வளவைக் கொடுக்கும் சக்தி, வேறு எந்தக் கிராமத் தொழிலுக்கும் இல்லை.

இந்தியா முழுமைக்கும் கதர் வேலை வெற்றிகரமாக நடந் திருக்கிறது என்பது திட்டமாக எனக்கு நிரூபிக்கப்பட்டா லன்றி, மற்றக் கஷ்டங்களையெல்லாம் சமாளித்து விட்டாலும், நேரடியான போராட்டத்தில் இறங்குவதற்கு என்னிடமோ, அவர்களிடமோ எனக்கு நம்பிக்கை இருக்காது என்பதைக் காங்கிரஸ்காரர்கள் அறியட்டும். ஏராளமான காங்கிரஸ்காரர் கள், இதில் தீவிரமாகவும், விடாமுயற்சியுடனும், புத்திசாலித் தனமாகவும் முயற்சி செய்தாலன்றிக் கதர் வேலை வெற்றி பெற முடியாது. இதனாலேயே, 'சுயராஜ்யத்திற்காக நூற்கவும்' என்று கூறுகிறேன்.

சேவா கிராமம், -11—12—'39 —'ஹரிஜன்'-16—12—1939

# 1

# எது சுதேசி?

சுதேசி என்பதை விளக்கி, அதன் எல்லா அம்சங்களுக்கும் பொருந்தக் கூடிய ஒரு வியாக்கியானம் தரவேண்டுமென்று ஊழியர்கள் காந்தி அடிகளைக் கேட்டுக் கொண்டனர். அவ்வாறு விளக்கம் செய்யும் பொருட்டு தென்னிந்திய ஊழியர்களுடன் காந்திஜி, ஆலோசனைகள் நடத்திய பின், சுதேசி என்பதை விளக்கிக் கூறமுடியாதென்றும், சுதேசியின் வியாக்கியானம் சுதேசியே என்றும் கண்டார். சுதேசி உணர்வு நாளுக்கு நாள் வளர்வது, விரிவது, மாறுவது. எந்த விளக்கமும் சுதேசி உணர்ச்சியின் வளர்ச்சியைக் கட்டுப்படுத்திச் சிறைப்படுத்துவதாகவே முடியும். ஆகவே, அகில இந்திய சுதேசிச் சங்கமும், அதற்கு இயைந்த மற்ற சங்கங்களும் பின்பற்றுவதற்காகக் காந்திஜி கீழ்க்கண்டவாறு சுதேசிக்கு இலக்கணம் கூறினர் :

"உபயோகமான பொருள்களாக இருக்கவேண்டும். இந்தியாவிலேயே சிறு கைத்தொழில்கள் மூலம் உற்பத்தி செய்யப்படும் பொருள்களாக இருக்கவேண்டும். அக் கைத்தொழில்கள், பொது மக்களின் சுதேசி உணர்வையும் ஆதரவையும் நம்பி நடக்க வேண்டும். தொழிலாளரின் நலவுரிமைகள், கூலி, விலை நிர்ணயம் முதலியவற்றைப் பொறுத்தவரை, அகில இந்திய சுதேசிச் சங்கம் காட்டும் வழியைப் பின்பற்றும் தொழில்களாகவும் இருக்கவேண்டும். அகில இந்திய சுதேசிச் சங்கத்தைப் பொறுத்த வரை, அத்தகைய பொருள்களே 'சுதேசிப் பொருள்கள்' எனப்படும். ஆகவே, அகில இந்திய சுதேசிச் சங்கத்தின் உதவி பெற அவசியமில்லாமலே சர்க்காரின் உதவி பெற்று நடக்கும், அல்லது பெற்று நடக்கக்கூடிய பெரிய கட்டுப்பாடான தொழில் முறைகளின்படி உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் சுதேசி எனப்படா."

இந்த விதி ஊழியர்களிடையே திகைப்பை உண்டாக்கியது. *1934*-ஆம் வருடம் ஜூன் மாதத்தில், காந்திஜியின் ஹரிஜன சுற்றுப் பிரயாணத்தின்போது, சுதேசி சங்கத்தின் அங்கத்தினர் சிலர் காந்திஜியைப் பம்பாயில் சந்தித்துப் பேசினர். அப்பொழுது காந்திஜி அவர்களிடம் கூறியதன் சுருக்கம் பின்வருமாறு :

நான் வகுத்த விதி, சுதேசிச் சங்கம் கடைப்பிடிப்பதற்காகத்தான் என்பதை ஏற்கெனவே தெளிவுபடுத்தியுள்ளேன். சுதேசியின் எல்லா அம்சங்களுக்கும் அவ்விதி பொருந்தும் என்று நான் கூறவில்லை. பெரிய, கட்டுப்பாடான தொழில்கள் நீங்கலாக, சிறிய, குறிப்பாகக் குடிசைத் தொழில்களை ஆதரித்துப் பரப்பும் வேலையில், சங்கம் தன் கவனத்தைச் செலுத்தவேண்டும் என்று நான் சங்கத்துக்கு யோசனை கூறியுள்ளேன். இதனால் பெரிய

தொழில்களைக் கண்டிப்பதோ, அவற்ருல் நாட்டுக்கு ஏற்பட்டுள்ள நன்மையையும், இனியும் ஏற்படக்கூடிய நன்மையையும் புறக் கணிப்பதோ என் நோக்கமல்ல. ஆனல், சுதேசிச் சங்கம் போன்ற தொரு சங்கம், இதுவரை செய்து வந்துள்ளது போல், இந்தப் பெரிய தொழில்களை விளம்பரப்படுத்தும் வேலையைத் தானே வலிய ஏற்றுக்கொள்ள வேண்டியதில்லை. பெரிய யந்திரத் தொழில்களுக்குப் பல வசதிகள் இருக்கின்றன. தங்கள் நலனைக் காத்துக்கொள்ள அவைகளால் முடியும். சுதேசி உணர்வு நாட்டில் பரவியுள்ளது. சுதேசிச் சங்கத்தின் முயற்சி இல்லாமல், அந்த உணர்ச்சி மக்களிடையே பரவியுள்ளதைக் கொண்டே பெரிய தொழில்கள் நன்மை அடைய முடியும். சங் கங்களால் உண்மையான உதவி ஏற்பட வேண்டுமானல், மிகுந்த சிரமத்துடன் நடந்துவரும் சிறிய தொழில்களுக்கு அவை உதவ வேண்டும். பெரிய கட்டுப்பாடான தொழில் முறைகளால் உற்பத்தி செய்யப்படும் பொருள்களை விளம்பரப்படுத்துவது, விலைவாசிகளை உயர்த்துவதற்குத்தான் பயன்படும். இது, பொருள்களை வாங்கும் பொது மக்களுக்குப் பாதகமானது. வெற்றிகரமாக நடந்துவரும் ஒரு வியாபார முறைக்கு உதவி செய்ய, தரும சிந்தையும் சேவா நோக்கமும் கொண்ட ஒரு சங்கத்தை ஏற்படுத்துவது, நம் சக்திகளை விரயம் செய்வதாகும். அந்தத் தொழில்கள், நம் ஆதரவால் முன்னேற்றம் அடைந்து விடும் என்று நினைப்பது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளுவ தாகும். அவ்வாறு நாம் நினைத்துப் போலித் திருப்தி அடை வதில் பலனில்லை ; நடைமுறையில் அது பொய்ப்பிக்கப்படும். 1920-ஆம் ஆண்டில், சுதேசி இயக்கம் தொடங்கும் தறுவாயில் பஸல்பாய்க்கும் எனக்கும் இடையே நடந்த பேச்சு என் நினைவுக்கு வருகிறது. "காங்கிரஸ் வாதிகளாகிய நீங்கள் எங்கள் தொழில்களுக்கு விளம்பர ஏஜண்டுகளாக வேலை செய்ய வந்தால், அதனல் எங்கள் பொருள்களின் விலைகள் உயருமே ஒழிய நாட்டுக்கு ஒரு நன்மையும் ஏற்படாது" என்று அவர் ஆணித்தரமாகக் கூறினர். அவர் சொன்னது உண்மையே. அது வரை புறக்கணிக்கப்பட்டுச் சீர்கேடான நிலையில் உள்ளதும், வேலையில்லாமலும் உணவில்லாமலும் திண்டாடும் கோடிக்கணக் கான மக்களைக் காப்பாற்ற அவசியமானதுமான, கையால் நூற்றுக் கையால் நெய்யப்படும் கதர்த் தொழிலைத்தான் நான் ஆதரிக்க விரும்புகிறேன் என்று நான் சொன்னபோது, அவர் பதில் கூருது பேசாதிருந்துவிட்டார்.

இவ்வாறு சீர்கேடான நிலையில் உள்ள தொழில் கதர் மட்டு மல்ல ; சிரமப்பட்டு நடந்துவரும் சிறிய கைத்தொழில்கள், குடிசைத் தொழில்கள், எல்லாவற்றிற்கும் இன்று மிக அவசிய மான, பொது மக்களின் ஆதரவைத் தேடித் தருவதில் நீங்கள் உங்கள் கவனத்தைச் செலுத்தவேண்டும். அவற்றிற்கு உதவி செய்யாவிடில், அவை அடியோடு அழிந்து விடக்கூடும். யந்திர உற்பத்தி முறையில் பெருவாரியான பொருள்களை

உற்பத்தி செய்து குவிப்பதால், இச்சிறிய கைத்தொழில்களிற் சில சீரழிந்து வருகின்றன. இத்தகைய கைத்தொழில்களுக்கே நீங்கள் ஆதரவளிக்கவேண்டும்.

சர்க்கரைத் தொழிலே எடுத்துக் கொள்ளுங்கள். துணிக்கு அடுத்தபடியாக அதிகப்படியாக யந்திர முறைப்படி உற்பத்தி செய்யப்படுவது சர்க்கரைதான். இத்தொழிலுக்கு நம் ஆதரவு அவசியமில்லே. சர்க்கரை உற்பத்தி செய்யும் ஆலேகள் நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே வருகின்றன. பொது மக்களின் சங்கங்கள், இத்தொழில் வளர்ச்சிக்கு உதவி செய்யவில்லே. சாதகமான சட்டங்கள் இயற்றப்பட்டதாலேயே இத் தொழில் வளர்ச்சியடைந்தது. இன்று இத்தொழில் அடைந்துள்ள முன்னேற்றத்தினுல் பனே வெல்லம் காய்ச்சுவது அடியோடு நின்று விடக்கூடிய நிலே வந்துவிட்டது. சர்க்கரையைக் காட்டிலும் பனே வெல்லத்தில் அதிக உணவுச் சத்து உள்ளது. இந்தப் பனே வெல்லம் காய்ச்சும் தொழிலுக்குத்தான் உங்கள் ஆதரவு உடனடியாகத் தேவையாயுள்ளது. இத்துறையில் நாம் ஆராய்ச்சி நடத்தி ஆதரவளிக்க எவ்வளவோ இடமுள்ளது. இத்தொழில் அழியாமல் காக்க, நாம் முயற்சி செய்யவேண்டும். நான் மேலே சொன்ன கருத்துக்கு இது ஒரு உதாரணம்.

இச்சிறிய தொழில்களுக்கு உதவி செய்வதால், நாம் நாட்டின் செல்வத்தைப் பெருக்குகிறோம் என்பதில் எனக்கு ஐயமில்லே. இக்குடிசைத் தொழில்களுக்குப் புத்துயிரும் பேராதரவும் அளிப்பதுமே உண்மையான சுதேசி உணர்வு ஆகும் என்பதையும் நான் நிச்சயமாக நம்புகிறேன். வாயில்லாப் பூச்சிகளாக வாழும் கோடிக்கணக்கான ஏழைகளுக்கு அதுதான் உதவி செய்ய முடியும். மக்களின் ஆற்றலேயும் ஆக்க சக்தியையும் வளர்க்க அது ஒரு அரிய வாய்ப்பு அளிக்கும். வேலேயில்லாமல் திண்டாடும் நூற்றுக்கணக்கான இளேஞருக்கு அது நல்ல பலன் தரும் வேலேயளிக்கும். இன்று வீணுகி விரயமாகும் சக்தி அனேத்தையும், நாட்டுக்குகந்த நல்வழிகளில் பாய்ச்ச அது பயன்படும். இதைவிட லாபம் தரும் தொழில்களில் உள்ளவர், அவற்றைப் புறக்கணித்து விட்டு இச்சிறிய தொழில்களே நடத்த முன்வர வேண்டுமென்று நான் கூறவில்லே. ராட்டையைப் பொறுத்தவரை நான் சொன்னது போலவே, வேலேயில்லாமல் வறுமையில் உழல்வோர் மட்டுமே இக் கைத்தொழில்களில் சிலவற்றை நடத்திச் சிறிது வருவாயைத் தேடலாமென்றே நான் கூறுகிறேன்.

ஆகவே, உங்கள் வேலேத்திட்டத்தில் நான் ஆதரிக்கும் மாறுதல், பெரிய யந்திரத் தொழில்களின் நலனுக்கு எவ்வகையிலும் முரண்பட்டதல்ல என்பது தெளிவாகும். தேசத் தொண்டர்களாகிய நீங்கள், குடிசைத் தொழில்களே ஆதரிக்கும் வேலேயில் முழு கவனத்தையும் செலுத்தவேண்டும் என்று மட்டுமே நான் கூறுவேன். பெரிய யந்திரத் தொழில்கள், தங்கள்

நலனை இன்று காத்துக்கொள்ளும் வகையிலேயே காத்துக் கொள்ளட்டும். கைத்தொழில்கள், யந்திரத் தொழில்களை விரட்டிவிட்டு அவை இருந்த இடத்தைக் கைப்பற்ற வேண்டும் என்று நான் கருதவில்லை. யந்திரத் தொழில் நடந்து கொண்டிருக்கையிலேயே கைத்தொழில்களும் தங்களுக்குரிய இடத்தைப் பெற்று நாட்டின் செல்வத்தைப் பெருக்கத் துணையாயிருக்க வேண்டுமென்றே நான் கூறுகிறேன். யந்திரத் தொழில் முதலாளிகளே, மக்களுக்குச் சேவை செய்யும் நோக்கத்துடன் இச்சிறு கைத்தொழில்களையும் பரப்பும் முயற்சியில் சிரத்தை எடுத்துக் கொள்ளும்படி செய்யவும் நான் விரும்புகிறேன். ஆலை முதலாளிகள் நலனிலும் எனக்கு அக்கறை உண்டு. என்னால் முடிந்தபோதெல்லாம் அவர்களுக்கு உதவி செய்ய நான் தவறியதில்லை என்பதை அவர்களே ஒத்துக்கொள்ளுவார்கள்.

[1934–ஆம் ஆண்டு ஜூலையில் இது பத்திரிகைகளில் பிரசுரமானது.]

## 2

# கிராமக் கைத்தொழிலும் ஆலைத் தொழிலும்

சுதேசி வேலையில் தங்களுக்கு எழும் பல கஷ்டங்களுக்கும் பதில் கூறும் வகையில், சுதேசி என்ன என்பதற்குத் தெளிவான விளக்கம் ஒன்று தரவேண்டுமென்று, சில நண்பர்கள் கேட்டனர். சென்ற ஆண்டில் எனக்குற்ற நோய் நீங்கி நான் குணமடைந்த உடனேயோ, அல்லது இவ்வாண்டு ஆரம்பத்திலேயோ கேட்டனர் என்று நினைக்கிறேன். துணித் தொழிலில், சுதேசியின் பல அம்சங்களையும் நான் மனத்திற் கொண்டு, ஒரு விளக்கம் தர முயன்றேன். மற்றவர்கள் கூறிய விளக்கங்களை யெல்லாம் ஒன்ருய் இணைத்துப் பார்த்தேன். ஸ்ரீமான்கள் சிவ ராவ், ஜலபாய் நவரோஜி ஆகியோருடன் கடிதப் போக்குவரத்து நடத்தினேன். எல்லா நிலைமைகளுக்கும் பொருந்தக் கூடிய ஒரு விளக்கம் தர என்னால் முடியவில்லை. எல்லா அம்சங்களையும் தழுவும்படியான ஓர் விளக்கம் தருவது அசாத்தியம் என்று நான் உணர்ந்தேன். நாட்டின் பல பாகங்களிலும் நான் சுற்றுப் பிரயாணம் செய்தபோது, சுதேசிச் சங்கங்கள் எவ்வாறு வேலை செய்து வருகின்றன என்பதை நேரில் கண்டேன். இப்பொழுது நடந்து வரும் முறையால் அச்சங்கத்தினர், தாங்களே அறியாமலேயே, மக்களை ஏமாற்றி வருகின்றனர் என்ற முடிவுக்கு வந்தேன். திறமை வாய்ந்த ஊழியர்களும் தங்கள் சக்தியை வீணான முயற்சியில் விரயம் செய்து வந்தனர்; தங்களைத்

தாங்களே ஏமாற்றி வந்தனர். என் மனத்தில் எழுந்த உணர்ச்சியை இச் சொற்கள் பிரதிபலிக்கின்றன. இவை கடுமையான சொற்களாயிருக்கலாம். ஆனல், சுதேசிச் சங்க ஊழியர்கள் மீது பழி சுமத்தவோ, அவர்களைக் குறைகூறவோ எனக்கு உத்தேசமில்லை. தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்ளுகின்றனர் என்பதையும், குருட்டுப் பாதையில் செல்கின்றனர் என்பதையும் உணராமல் அவர்கள் தங்களால் இயன்றவரை நன்ருகத்தான் வேலைசெய்து வருகிருர்கள்.

சில உதாரணங்கள் தருகிறேன்: எந்தப் பொருள்களுக்கு நம் ஆதரவோ, விற்பனைக்கு விளம்பரமோ தேவையில்லையோ, அவற்றை விளம்பரப்படுத்த நாம் பொருட்காட்சிச் சாலைகள் நடத்துகின்ருேம். அத் தொழில்களில் நாம் தலையிடுவதால், அப் பொருள்களின் விலைவாசி ஏறுவதற்கோ, அல்லது லாபகரமாக நடந்து ஒன்றுக்கொன்று போட்டி போட்டுக்கொண்டு வரும் கம்பெனிகளிடையே விரோதத்தை மூட்டி விடுவதற்கோ தான் உதவியவராவோம்.

ஆலைத் துணித் தொழிலுக்கு ஆதரவளிப்பதாக முன்வருவது, கிராமத்தின் நூல் நூற்புக்கும் கை நெசவுக்கும் கெடுதல் விளைவிப்பதில்தான் முடியும். சர்க்கரைத் தொழிலுக்கு உதவ வருவது, கிராமத்தில் கரும்பு ஆட்டிச் சாறு பிழிபவரின் பிழைப்புக்கு உலை வைக்கும்; உணவுச் சத்தும் ஊட்டப் பொருளும் நிறைந்த பனை வெல்லத்தின் உபயோகம் குறைந்து போகும். அரிசி தீட்டும் ஆலைகளுக்கு ஆதரவளிப்பது, நெல் குத்துபவர்கள் நிலையைச் சீரழிக்கும். யந்திரத்தில் தீட்டும்போது, இழக்கப்படும் ஊட்டப் பொருட்கள் அனைத்தும் கைக்குத்தல் அரிசியில் கிடைக்கும். அத்தகைய கைக்குத்தல் அரிசியின் உபயோகத்தைக் குறைக்கத்தான் நாம் உதவியவராவோம். ஆகவே, கிராமத்தில் நூல் நூற்பவர், கரும்பு ஆட்டுபவர், நெல் குத்துபவர் ஆகியோரின் தொழிலுக்கு ஆதரவளிக்க நாம் வழி தேட வேண்டும். அவர்கள் பொருட்களின் குணங்களை அறிந்து, விளம்பரப் படுத்தவேண்டும். அத் தொழிலாளரின் நிலைமையை அறியவேண்டும். ஆலைத் தொழில்களால் அவர்களில் எத்தனை பேர் வேலை இழந்தனர் என்ற புள்ளி விவரங்களைச் சேகரிக்க வேண்டும். கிராமத் தொழிலாளராகவே அவர்கள் இருந்து கொண்டு ஆலைகளின் போட்டியால் வேலை இழக்காமல் இருக்க வழி தேடவேண்டும். அவர்களை இதுவரை நாம் அசட்டை செய்து வந்ததே பெரும் பாவம்; மன்னிக்க முடியாத குற்றம். அவ்வாறு அவர்கள் நலனைக் காப்பதால், ஆலைத் துணிக்கோ, சர்க்கரைத் தொழிலுக்கோ, அரிசி தீட்டும் ஆலைகளுக்கோ, கெடுதல் செய்தவராக மாட்டோம். அயல் நாட்டுப் பொருள்களை வாங்குவதைவிட நம் நாட்டு ஆலைப் பொருள்களை வாங்குவது நல்லது. அயல்நாட்டுப் பொருள்களின் போட்டியினுல், நம் நாட்டு ஆலைப் பொருள்கள் அழிந்துபோகுமென்ருல், நம் பொருள்களுக்கு ஆதரவு தருவது நம் கடமைதான். ஆனல், இன்று

அந்த நிலைமை இல்லை. அயல் நாட்டுப் பொருள்களின் போட்டி இருந்தபோதிலும், நம் ஆலைகள் முன்னேறி வருகின்றன. ஆகவே, ஆலைத் தொழிலால்—அது நம் நாட்டு ஆலைத் தொழிலாயிருந்தாலும் சரி, அயல் நாட்டுத் தொழிலாயிருந்தாலும் சரி—கிராமத் தொழில்கள் அழியாமல், கிராமத் தொழிலாளரின் பிழைப்பு போகாமல், காப்பதுதான் இன்று நம் கடமை. கதர், பனை வெல்லம், கைக்குத்தல் அரிசி ஆகியவற்றில் உண்மையில் விசேஷ குணம் இல்லாமல் போகலாம். ஆதலால் அத் தொழில்கள் சீக்கிரம் அழிந்து போகலாம். ஆனால், இன்று உண்மையில் நிலைமை என்னவென்றால், கதர் வேலை நடக்கிறதே ஒழிய, கரும்பு ஆட்டி, நெல் குத்திப் பிழைத்து வந்த பல்லாயிரக் கணக்கான தொழிலாளரின் நிலையை அறிய, நலனைக் காக்க, ஒரு சிறிதும் முயற்சி நடந்ததாகக் காணோம். தேசத் தொண்டர் படைக்கு இதுதான் இன்று முக்கியமான வேலை. கடினமான வேலை இது என்று சொல்வீர்கள். ஒத்துக்கொள்ளுகிறேன். ஆனால், இதுதான் இன்று இன்றியமையாத கடமை; மிகுந்த பலனும் மன மகிழ்ச்சியும் அளிக்கக்கூடிய வேலை. இதுதான் உண்மையான சுதேசி, நூற்றுக்கு நூறு சுதேசி, பரிபூர்ண சுதேசி என்று நான் நம்புகிறேன். நான் மேற்சொன்னவை, ஒரு சில உதாரணங்களே. மூன்று பெரிய யந்திரத் தொழில்களை உதாரணமாகக் காட்டி, அதே தொழில்களை கிராமத்திலும் குடிசையிலும் நடத்திவரும் கைத்தொழில்கள் எவ்வளவு சீர்கேடான நிலையில் உள்ளன என்பதை எடுத்துக்காட்டி, அவற்றிற்கு உதவி செய்ய, தெளிவுடனும், உறுதியுடனும், கட்டுப்பாட்டுடனும் முன்வர வேண்டுமென்று கூறினேன்.

பல்லாயிரக்கணக்கான பாமர மக்கள் பிழைக்கவேண்டுமென்றால், நம் ஆதரவை எதிர்பார்க்கும் பல கிராமத் தொழில்களும், நகரங்களில் கூட பயிலப்படும் சில கைத்தொழில்களும் உள்ளன. இவற்றிற்கு ஆதரவளிக்கும் துறையில் வேலை செய்வது நாட்டுக்கு மிகுந்த நன்மை பயக்கும். இதற்காகச் செய்யும் ஊழியம், ஏழைத் தொழிலாளர் பிழைப்பைக் காக்கச் செய்த உதவியாகும்.

இந்தத் துறையில் கட்டுப்பாடாக வேலைசெய்தால், இவ் வேலையைச் செய்யும் சங்கம், நஷ்டமின்றி வேலைசெய்ய முடியும். மக்களின் ஆக்கல் சக்தியும், தொழில் திறமையும் பெருகும். இன்று படித்தும், படிக்காமலும், வேலையில்லாமல் திண்டாடும் பலருக்கும் நல்ல கௌரவமான தொழில் கிடைக்கும். அவர்கள் செய்யும் தொழிலினால், வேறு எவருடைய பிழைப்பும் கெடாது. இன்று படிப்படியாகக் குறைந்து வரும் நாட்டின் செல்வத்துக்கு, ஆண்டு தோறும் பல கோடிக்கணக்கான ரூபாய் சேரும்.

எல்லா சுதேசி சங்கங்களும் சேர்ந்து வேலை செய்தாலும், பயனுடன் செய்யக் கூடிய வேலை இத் துறையில் எவ்வளவோ

இருக்கிறது. சுதேசி பற்றிக் காரியக் கமிட்டி சமீபத்தில் நிறைவேற்றிய தீர்மானம்* இதைத் தெளிவுபடுத்துகிறது. தொண்டர்களின் திறமைக்கும், ஆக்கல் சக்திக்கும் இத் துறையில் எவ்வளவோ இடம் இருக்கிறது என்பதை அத் தீர்மானம் உணர்த்தும்.

—'ஹரிஜன்' – 10—8—1934

## 3

## சில உதாரணங்கள்

சுதேசியைப்பற்றி ஆகஸ்ட் *10*-ம் தேதி 'ஹரிஜ'னில் எழுதியதைத் தொடர்ந்து மேலும் சில வார்த்தைகள் எழுத விரும்புகிறேன். ஹரிஜனங்கள் செய்து வரும் தொழில்களை எடுத்துக் கொள்ளுங்கள். ஹரிஜன வகுப்புக்குள்ளாகவே *2,000* உட் பிரிவுகளுக்கு மேல் உள்ளன. அவை, அந்தந்தப் பிரிவு பின்பற்றும் தொழிலைக் குறிக்கும். கூடை பின்னுவது, துடைப்பம் கட்டுவது,

---

* 1934, ஜூலை 30-ம் தேதி காசியில் காங்கிரஸ் காரியக்கமிட்டி நிறைவேற்றிய தீர்மானம் பின்வருமாறு :

''சுதேசியைப் பொறுத்தவரை, காங்கிரஸின் கொள்கையைப்பற்றி சில சந்தேகங்கள் எழுந்துள்ளதால், அக் கொள்கையைத் தெளிவுபடுத்தி வலியுறுத்துவது அவசியமாகியுள்ளது. சட்ட மறுப்பு இயக்கத்தின்போது என்ன நடந்திருந்தபோதிலும், காங்கிரஸ் இயக்கத்திலும் கண்காட்சியிலும், ஆலைத் துணிக்கும், கையால் நூற்று நெய்யப்படும் கதர்த் துணிக்கும் போட்டிக்கு இடமே இல்லை. காங்கிரஸ் வாதிகள், கையால் நூற்று நெய்யப்படும் கதர்த் துணியைத் தவிர வேறெந்தத் துணியையும் உபயோகிக்கவும், ஆதரிக்கவும் மாட்டார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

'' துணியைத் தவிர மற்ற பொருள்களைப் பொறுத்தவரை, காங்கிரஸ் ஸ்தாபனங்கள் பின்பற்றுவதற்குக் காரியக் கமிட்டி கீழ்க்கண்ட விதி வகுத்துள்ளது:

''சுதேசியைப் பொறுத்தவரை, உபயோகமான பொருள்களை உற்பத்தி செய்யும் குடிசைத் தொழில்களையும் மற்ற சிறு கைத்தொழில்களையுமே காங்கிரஸ் ஸ்தாபனங்கள் ஆதரிக்கவேண்டுமென்று காரியக்கமிட்டி கருதுகிறது. இத் தொழில்கள் பொது மக்களின் ஆதரவை அவசியம் எதிர்பார்ப்பவையாயிருக்க வேண்டும். தொழிலாளரின் நல உரிமை, கூலி, விலை நிர்ணயம் முதலியவற்றில், காங்கிரஸ் ஸ்தாபனங்கள் காட்டும் வழியை ஏற்றுக் கொள்ளச் சம்மதிக்கும் ஸ்தாபனங்களால் இப்பொருள்கள் உற்பத்தி செய்யப்படுபவையாக இருக்கவேண்டும்.

''சுதேசிப் பொருட்களையே ஒவ்வொருவரும் தனிப்பட்ட வாழ்விலும் உபயோகிக்க வேண்டுமென்ற கொள்கையையோ, சுதேசி உணர்ச்சியை நாட்டில் பரப்ப வேண்டும் என்று காங்கிரஸ் இடைவிடாது பின்பற்றி வந்துள்ள கொள்கையையோ மாற்றிவிட்டதாக இவ்விதி குறிக்காது. அரசாங்கத்தின் உதவி பெறக்கூடிய, அல்லது பெற்று நடந்துவரும் பெரிய, கட்டுப்பாடான யந்திரத் தொழில்களுக்கு, சுதேசிச் சங்கங்களின் ஆதரவோ, காங்கிரஸின் உதவியோ அவசியமில்லை என்ற உண்மையைத்தான் இது உணர்த்துகிறது.''

கயிறு திரிப்பதுபோன்று பற்பல தொழில்கள் உள்ளன. அத் தொழில்களின் பட்டியல் எவரையும் பிரமிக்க வைக்கும். அத் தொழில்கள், பயன் தருபவையாயிருந்தால், அவற்றிற்கு ஆதர வளிக்கவேண்டும். பயனற்றவை, அல்லது லாபமில்லாத தொழில்கள் என்ருல், அவற்றை நாமே அழிக்கவேண்டும். ஆனல், பயன் தருபவையா, அல்லவா என்று யார் முடிவு செய்வது? உண்மையான சுதேசி ஸ்தாபனம் இருந்தால், அத் தொழில் களின் உண்மை நிலையை ஆராய்ந்தறிந்து, அத் தொழிலாளர் நலனில் அக்கறை எடுத்துக் கொள்ளும். நான் இக் கட்டுரையை எழுத உபயோகிக்கும் மை, தெனலியிலிருந்து வருவது. அத் தொழில் பன்னிரண்டு ஊழியருக்குப் பிழைப்புக்கு வசதி தருகிறது. பல தடைகளையும் எதிர்த்து அத்தொழில் முன்னேறி வருகிறது. தெனலியில் போல், வேறு மூன்று ஊர்களில் தாங் கள் உற்பத்தி செய்யும் மையையும் எனக்குச் சில நண்பர்கள் அனுப்பியுள்ளனர். அவர்கள் அனைவரும் மிகவும் கஷ்டப்பட்டுத் தொழிலை நடத்தி வருகின்றனர். நான் சிரத்தை கொண்டு அவர் களுக்குக் கடிதங்கள் எழுதினேன். ஆனல், என்னல் அதற்கு மேல் ஒரு உதவியும் அவர்களுக்குச் செய்ய முடியவில்லை. ஒரு சுதேசி ஸ்தாபனம் இருந்தால், அந்தப் பல ரக மையையும் பரிசோதித்து, ஆராய்ச்சியின் பயனய் எது சிறந்தது என்ற முடிவுக்கு வந்து, அதற்கு ஆதரவு அளிக்கும்; தொழில் முன்னேற வழி காட்டும். அது, முன்னேறி நல்ல பலனளிக்கக் கூடிய தொழில்; நுட்பமான ரசாயன அறிவும் தேர்ச்சியும் அத் தொழிலுக்குத் தேவை.

கான்பூருக்கருகில் ஒரு கிராமத்தில், கையால் செய்யப்படும் காகிதத்தை ஒரு நண்பர் எனக்கு அனுப்பியிருந்தார். அந்த உற் பத்திச் சங்கத்தைப் பற்றி நான் விசாரித்தேன். ஒன்பது பேருக்கு அது வேலை தருகிறது. காகிதம், உறுதியாகவும் பள பளப்பாகவும் இருந்தது. ஆனல், எழுதுவதற்கு உபயோகிக்கும் அளவுக்கு அது உயர்ந்ததாயில்லை. அத் தொழிலில் ஈடுபட்டு வந்தவருக்கு, வயிற்றுப் பிழைப்புக்குக் கஷ்டப்பட்டுச் சமாளித் துக் காலம் தள்ளும் அளவுக்குத்தான் ஊதியம் கிடைக்கிறதாம். தொழிலை நடத்தும் முறையை, வயதான கிழவர் ஒருவர் சொல்லிக் கொடுத்து வருகிருர். அவர் போய்விட்டால், அவருடன் அந்த உற்பத்திச் சங்கமும் அழிந்து போகக்கூடும். அந்தக் காகிதத்துக்குப் போதுமான அளவு வியாபாரம் இருந் தால், யந்திரத்தால் செய்யப்படும் காகிதம் எந்த விலைக்கு விற்கிறதோ அதே விலைக்கு விற்கமுடியுமென்று அந்த நண்பர்கள் கூறுகின்றனர். நமக்குத் தேவையாயுள்ள காகிதம் அனைத்தையும் கையால் செய்துவிட முடியாது என்பதை நான் உணர்வேன். ஆனல், நாட்டிலுள்ள ஏழு லட்சம் கிராமங்களிலும், அங்கு உற்பத்தி செய்யப்படும் பொருள்களில் சிரத்தையும் பற்றுதலும் கொண்டவர்கள், கையால் செய்த காகிதம் எளிதில் கிடைக்குமானல், அதை மகிழ்ச்சியுடன் உபயோகிப்

பார்கள். அக்காகிதத்தில் ஒரு தனி அழகு உள்ளது. அதை உபயோகிப்பவர்களுக்கு அது தெரியும். அகமதாபாத்தில் கையால் செய்யப்படும் காகிதத்தின் உயர்வை அறியாதார் யார்? உறுதியிலோ, உயர்விலோ, எந்த யந்திரத்தால் செய்யப்படும் காகிதத்துக்கும் அது சளைத்ததாகுமா?

பழைய காலப் பாணியில் உள்ள கணக்குப் புத்தகங்கள் இன்றும் கையால் செய்யப்படும் காகிதத்தால்தான் செய்யப் படுகின்றன. ஆனல், மற்றத் தொழில்களைப் போலவே, அதுவும் விரைவில் அழிந்துவிடக்கூடும். அதற்குச் சிறிது ஆதரவளித்தால், அத்தொழில் மறையாமல் காத்துக் கொள்ளலாம். நிபுணர்களின் மேற்பார்வையிருந்தால், உற்பத்தி முறையில் முன்னேற்றம் உண் டாக்கலாம். இப்பொழுது சில வகைக் காகிதங்களில் காணப் படும் சில குறைகளை எளிதில் நீக்கலாம். இத் தொழில்களில் ஈடு பட்டுள்ள எண்ணற்ற ஏழைகளின் பொருளாதார நிலை பற்றிப் புலன் தேடி ஆராய்வது பலனளிக்கும். அத் தொழிலாளரும், தங்கள் நலனில் அக்கறை எடுத்துக்கொள்ளுவோரிடம் நன்றி செலுத்தி, அவர்கள் கூறும் ஆலோசனையையும், காட்டும் வழியை யும் ஏற்றுக்கொள்ளச் சித்தமாயிருப்பார்கள்.

உண்மையான சுதேசித் துறையில், இதுவரை நடந்துள்ள வேலை எவ்வளவு குறைவு, இனியும் பயனுடன் வேலை செய்ய எவ் வளவு இடமும் வசதியும் தேவையும் உள்ளன என்பதை மேற் சொன்ன உதாரணங்கள் தெளிவுபடுத்தியிருக்கும் என்று நம்பு கிறேன். இத் துறையில் ஏற்படக்கூடிய தொழில் முன்னேற்றத் துக்கு அளவேயில்லை. அதிக முதலீடு இல்லாமலேயே, நாட்டின் உற்பத்தியும் செல்வமும் பெருக அது வழி காட்டும். இன்று வேலையில்லாமல், வறுமையில் வாடும் பலருக்கு, அது கௌரவ மான வேலை தரும்.

—'ஹரிஜன்' – 14—9—1934

## 4

# புதிய சுதேசிக் கொள்கை

[சுதேசி பற்றிக் காந்திஜி எழுதிய கட்டுரைகள் பல நண்பர் களின் சிந்தனையை எழுப்பின. சிலர் அவரைக் கண்டு பேசினர். நிலைமையைத் தெளிவுபடுத்தும் நோக்கத்துடன் அவர்களிடையே நடந்த விவாதத்தின் சுருக்கம் கீழே தரப்பட்டுள்ளது.]

**கேள்வி :** இந்தப் புது சுதேசிக்கொள்கைக்கும், பழைய சுதேசிக் கொள்கைக்கும் வேறுபாடு என்ன?

**பதில் :** ஆலை முறைப்படி உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களா, கைத்தொழில் முறைப்படி உற்பத்தி செய்யப்பட்ட

பொருள்களா என்பதையும், அப் பொருட்களுக்கு நல்ல செல்வாக்கும், எதிர்காலமும் உள்ளனவா என்பதையும் பொருட்படுத்தாமல், நம் நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் என்பதற்குப் பழைய கொள்கை முக்கியத்துவம் தந்தது. கட்டுப்பாடான பெரிய தொழில்கள் சுதேசி அல்ல என்று கருதி நான் அவற்றை விலக்கவில்லை. அவற்றிற்கு நம் ஆதரவு அவசியமில்லை என்பதற்காகத்தான் விலக்கினேன். அவை, நம் ஆதரவில்லாமலே நடக்க முடியும். அதுவும் இன்று நாம் விழிப்புற்றுள்ள நிலையில், அவற்றிற்கு நல்ல செல்வாக்கு இருக்கும். புது சுதேசிக் கொள்கைப்படி-அது புதிது என்று நாம் வைத்துக்கொண்டால்-நமது சுதேசி சங்கங்கள், எல்லாக் கிராமக் கைத்தொழில்களையும் கவனித்து, அவை எப்படி நடந்து வருகின்றன என்று விசாரிக்க வேண்டுமென்று நான் யோசனை கூறுவேன். கைத்தொழில்களின் முன்னேற்றத்திற்கு வழி கூறத் தொழில், விஞ்ஞான நிபுணர்களின் உதவியையும் நாம் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். அந்த நிபுணர்களின் உதவியைக் கொண்டு, கிராமத்தில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களைப் பரிசோதித்து, அவை முன்னேற்றமடைய யோசனைகள் கூறவேண்டும். நம் நிபந்தனைகளை ஏற்றுக் கொண்டால், அப்பொருள்களை விற்கவும் நாம் ஏற்பாடு செய்யலாம்.

கே: எந்தக் கைத்தொழிலாயிருந்தாலும், அதை ஆதரிக்க முன்வருவீர்களா?

ப: எல்லாக் கைத்தொழில்களையும் ஆதரிக்கவேண்டுமென்று அவசியமில்லை. ஒவ்வொரு தொழிலையும் ஆராய்ந்து, கிராமப் பொருளாதாரத்தில் அதற்குள்ள இடத்தை அறிந்து, உண்மையில் தகுதி வாய்ந்த தொழிலாயிருந்தால் அதை ஆதரிக்கவேண்டும். உதாரணமாக, பழைய காலத் துடைப்பத்தைப் புறக்கணித்துவிட்டு, இந்தக் காலத்தில் உபயோகிக்கப்படும் துடைப்பத்தையோ, பிரஷையோ (Brush) ஆதரிக்க எனக்கு மனமொப்பாது. இந்த இரண்டு வகைத் துடைப்பங்களைப் பற்றியும், என் மனைவியிடத்திலும், வீட்டில் மற்றப் பெண்களிடத்திலும் விசாரிப்பேன். எல்லா வகைகளிலும், அவற்றின் பலனைப் பற்றி ஆராய்வேன். சிறிய உயிர்களைக் கிராமத் துடைப்பம் கொன்றுவிடாமல் அப்புறப் படுத்தும். பிரஷ், அவற்றை அடியோடு கொன்றுவிடும். அந்தக் காரணத்திற்காகக் கிராமத் துடைப்பத்தை நான் ஆதரிப்பேன். ஆண்டவன் கண்ணுக்குச் சிறிய பூச்சி புழுக்களுக்கும் சிறிய மனிதர்களுக்கும் வித்தியாசமில்லை என்று நான் நம்புவதால், துடைப்பத்தின் உபயோகத்திலே நான் ஒரு தத்துவத்தைக் காண்பேன்.

தொழிலின் தகுதியையும் மற்ற அம்சங்களையும் கவனித்து, எந்தத் தொழில்கள் ஆதரவு பெறத் தகுதி

யுள்ளனவோ, எவை இன்று சீர்கேடான நிலேயில் உள்ளனவோ, அவற்றிற்கு நான் ஆதரவு அளிப்பேன். இதன் மூலமே நான் பல உண்மைகளேக் காண்பேன். ஓர் உதாரணத்திற்கு, பல் குச்சிகளே எடுத்துக்கொள்ளுவோம், பல் குச்சி உபயோகத்தை நிறுத்திவிட்டால், பலருடைய பல் கெட்டுவிடும் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். பல் குச்சிக்கு இருந்த இடத்தை, பல் தேய்க்கும் பிரஷ் கைப் பற்றிக்கொண்டு வருவதைக் காண என் மனம் ஒப்பவில்லே. இந்தப் பிரஷ்கள், ஆரோக்கியத்துக்கு உகந்தவை அல்ல. ஒரு தடவை உபயோகித்த பின் தூர எறிவதற்குத்தான் அவை லாயக்குள்ளவை. கிருமிகளே நீக்கி பிரஷைச் சுத்தப்படுத்த எந்த முறையைக் கையாண்டாலும், அவை புது பிரஷ்களுக்குச் சமமாகா. ஆனல், வேப்பங் குச்சியை எவ்வளவு காலத்துக்கும் உபயோகிக்கலாம். கிருமிகளேக் கொல்லும் குணம் அதற்குள்ளது. நாக்கு வழிப்பதற்கும் அது பயன்படும். இந்தியாவில் உபயோகிக்கப்படும் பல் குச்சியைப்போல் அவ்வளவு சுத்தமான பிரஷை மேல் நாட்டில் இதுவரை கண்டுபிடித்ததில்லே. தென்னுப்பிரிக்காவில் பாண்டு என்ற வகுப்புச் சுரங்கத் தொழிலாளரைக் காசநோயிலிருந்து குணப்படுத்த,அவர்கள் தினமும்பல் குச்சியை உபயோகிக்க வேண்டுமென்று கட்டாயப்படுத்தி, அதனல் பலனும் அடையச் செய்ததாக ஒரு டாக்டர் கூறியுள்ளார். பல் தேய்க்கும் பிரஷ்கள் இந்தியாவிலேயே செய்யப்பட்டவையாயிருந்தாலும், அவற்றை விளம்பரப்படுத்துவதற்கு நான் உடந்தையாயிருக்க மாட்டேன். பல் குச்சியை ஆதரிப்பேன். அதுதான் பரிபூரண சுதேசி. அதை ஆதரிக்க நான் அக்கறை எடுத்துக்கொண்டால் போதும்; மற்றவை தங்களேத் தாங்களே கவனித்துக் கொள்ளும். நேர்க் கோணம் என்றுல் என்ன என்று என்னேக் கேட்டால் நான் எளிதில் சொல்லி விடுவேன். ஆனல் மிகக் குறுங் கோணத்துக்கும், மிக விரிகோணத்துக்கும் நடுவே பல கோணங்கள் போட்டு, இவை என்ன என்று என்னேக் கேட்காதீர்கள். நேர்க் கோணம் எது என்று தெரிந்துகொண்டால் அதைக் கொண்டு வேறெந்தக் கோணத்தையும் போட்டுக் கொள்ளலாம்.

சுதேசி என்பதே சுதேசியின் சிறந்த விளக்கம் என்ற போதிலும், சுதேசியில் கலப்பும் களங்கமும் ஏற்படக்கூடும் என்று அஞ்சியே, நான் இதைப் பரிபூரண சுதேசி என்று குறிப்பிட்டேன். சேவை செய்ய எல்லேயற்ற பற்றுதலும் ஆர்வமும் கொண்டவர்களுக்குப் பரிபூரண சுதேசி இடம் தருகிறது. எந்த விதத் தொழில் திறமையைப் பயன்படுத்திக் கொள்ளவும் அது வசதி செய்கிறது.

கே: இந்தச் சுதேசிக் கொள்கை நம்மை சுயராஜ்யத்துக்கு அழைத்துச் செல்லும் என்று நம்புகிறீர்களா?

ப: இக் கொள்கை ஏன் நம்மை சுயராஜ்யத்துக்கு அழைத்துச் செல்லக்கூடாது? ராட்டையில் சுயராஜ்யம் அடங்கியுள்ளது என்று ஒரு முறை கூறினேன். மது விலக்கில் சுயராஜ்யம் அடங்கியுள்ளது என்று அடுத்தபடியாகக் கூறினேன். அதுபோலவே, பரிபூரண சுதேசியில் சுதந்திரம் அடங்கியுள்ளது என்று இப்பொழுது கூறுவேன். குருடர்கள் யானையைச் சித்திரித்த கதைதான். அனைத்தும் உண்மைதான். ஆனல், முழு உண்மையல்ல.

நாட்டிலுள்ள வசதிகளை யெல்லாம் நன்கு பயன்படுத்தினுல், நாம் முன்னொரு காலத்தில் இருந்தது போலவே, மீண்டும் உலகத்திலேயே மிகுந்த செல்வம் படைத்த நாடாக விளங்குவோம் என்று உறுதியாய் நம்புகிறேன். சோம்பலை ஒழித்து, ஆயிரக்கணக்கான மக்கள் இன்று வீணுக்கும் நேரத்தைப் பயன்படுத்தினுல், அந்நிலையை நாம் திரும்பவும் எய்த முடியும். விடா முயற்சியுடன் வேலை செய்யவேண்டும்—உணர்வற்ற யந்திரங்களைப் போலல்ல; சுறுசுறுப்பான தேனீ போல். 'குற்றமற்ற தேன்' என்று நான் இப்பொழுது விளம்பரப் படுத்திக் கொண்டிருப்பது உங்களுக்குத் தெரியுமா?

கே: குற்றமற்ற தேன் என்ருல் என்ன?

ப: விஞ்ஞான முறைப்படி தேனீ வளர்த்துச் சேகரிக்கப்படும் தேன் குற்றமற்ற தேன். தேனீக்களைக் கொன்று தேன் பெருமல், தேனீக்களை வளர்த்துத் தேன் பெறுகின்றனர். அதனுல்தான் குற்றமற்ற தேன் என்று கூறுகிறேன். இத்துறையில் எவ்வளவோ முன்னேற்றத்திற்கு இடமுள்ளது.

கே: கன்றுக்குப் பால் இல்லாமல் செய்வது போலவே, தேனீயிடமிருந்து தேனைப் பிடுங்குகிறீர்கள். அது சுத்த அகிம்சையாகுமா?

ப: நீங்கள் கேட்பது சரிதான். ஆனல், உலக வாழ்க்கை, அவ்வளவு தத்துவார்த்தமாக நடக்கவில்லை. வாழ்க்கையிலேயே சற்று ஹிம்சை அடங்கியுள்ளது. அந்த ஹிம்சையின் பிரயோகத்தை எவ்வளவு குறைக்க முடியுமோ, அவ்வளவு குறைக்க முயலவேண்டும். சைவ உணவில்கூட ஹிம்சை இருக்கத்தான் செய்கிறது. ஆகவே, எனக்குத் தேன் வேண்டுமானுல் நான் தேனீயிடம் அன்பு காட்டி, அது எவ்வளவு தேன் தருமோ அவ்வளவு பெற முயலவேண்டும். மேலும், முறைப்படி தேனீ வளர்த்தால், தேனீயிடமிருந்து எல்லாத் தேனையும் அபகரித்துக் கொள்ள வேண்டியதில்லை.

—'ஹரிஜன்'–28—9—1934

# 5
# கிராம சேவை

மதிப்பிற்குரிய நண்பர் ஒருவர், சில தினங்களுக்குமுன் எனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதில் அவர் குறிப்பிட்டிருந்தவற்றில் ஒன்று, கிராமக் கைத்தொழில் சேவை என்று நான் கூறுவதை அவர் சரிவர விளங்கிக்கொள்ள முடியவில்லை என்பது. இது நல்ல கேள்வி. பலருக்கும் இந்தச் சந்தேகம் எழுந்திருக்கும். நான் அவருக்கு எழுதிய பதிலின் கருத்து பின் வருமாறு:

கிராமங்களில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களையே நாம் வாங்கி உபயோகிக்கவேண்டும். அப்பொருள்கள் உயர்ந்ததாய் இல்லாமல் இருக்கலாம். அப்பொருள்கள் முன்னேற்றமடைய நாம் வழி காட்டவேண்டும். ஆனால், அயல் நாட்டுப் பொருள்களோ, பெரிய நகரங்களிலிருந்து வரும் பொருள்களோ, அவற்றைவிட நேர்த்தியாயிருக்கின்றன என்ற காரணத்தால், கிராமப் பொருள்களைப் புறக்கணிக்கக் கூடாது. கிராமவாசியின் தொழில் திறமையையும் தேர்ச்சியையும் வளர்க்க நாம் பாடுபட வேண்டும். அவ்வாறு செய்வதன் மூலம், அவர்களுக்கு நாம் செய்ய வேண்டிய கடமையின் ஒரு சிறு பகுதியாவது செய்தவர்களாவோம். அந்தக் கடமையை நாம் என்றாகிலும் முற்றிலும் தீர்க்க முடியுமா என்பது குறித்து, நாம் கவலைப்படவேண்டியதில்லை. நாட்டின் முன்னேற்றத்திற்கு அவசியம் என்று நாம் கருதிய வேலைகளில், தடைகளும் முட்டுக்கட்டைகளும் பல இருந்தபோதிலும், அவற்றையெல்லாம் தாண்டி நாம் வெற்றியடைந்துள்ளதற்குச் சமீப காலத்திலேயே பல உதாரணங்கள் உண்டு. ஆகவே, நம் வாழ்விற்கும், நலனுக்கும் கிராமக் கைத்தொழில்களைப் புதுப்பிப்பது அவசியம் என்று நம்பினால், அதன் மூலம், மத, சாதிப் பாகுபாடு இன்றி அனைவரையும் ஒன்றாகச் சேர்க்கவும், தீண்டாமையை அகற்றி அனைவரையும் சமமாக நடத்தவும் முடியுமென்று நாம் கருதினால், நாம் கிராமங்களுக்குத் திரும்பிச் செல்லவேண்டும். நகர வாழ்க்கையைப் பின்பற்றாமல், கிராம வாழ்க்கையை ஏற்றுக்கொள்ளவேண்டும். அக்கொள்கையை முதலில் நம் அன்றாடப் பழக்க வழக்கங்களில் புகுத்துவோம். யந்திரத்தால் செய்யப்பட்ட காகிதத்துக்குப் பதிலாகக் கையால் செய்யப்பட்ட காகிதத்தை உபயோகிப்போம். பவுண்டன் பேனாவுக்குப் பதிலாக, கிராமத்தில் தொன்று தொட்டு வழங்கிவந்த எழுதுகோலை உபயோகிப்போம். பெரிய யந்திரத் தொழிற்சாலைகளில் செய்யப்படும் மைக்குப் பதிலாகக் கிராமத்தில் செய்யப்படும் மையை உபயோகிப்போம். இவ்வாறு பல உதாரணங்களை எடுத்துக்காட்டலாம். நம் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களில், கிராமவாசிகள்

முன்பு செய்யாததும், இனியும் செய்ய முடியாததுமான பொருள் ஒன்றுகூட இல்லை. அவர்கள் உற்பத்தி செய்யும் பொருள்களை யெல்லாம் நாம் உபயோகித்தால், கோடிக்கணக்கான ரூபாய் கிராமவாசியைச் சேரும். இன்றோ, நாம் கிராமவாசிகளைச் சுரண்டுகிறோம். அவர்கள் உழைப்பை உறிஞ்சிவிட்டு, ஓர் உதவியும் செய்யாமலிருக்கிறோம். இந்தப் பரிதாபகரமான நிலை இனியும் வளராமல் தடுக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தின் உட்கருத்து, இன்று தீண்டாதார் என்று ஒதுக்கப்பட்டுள்ளோருக்குச் சாதியின் காரணத்தால் உள்ள இழி நிலையை நீக்குவது மட்டுமல்ல என்று நான் கருதுகிறேன். நகரத்தில் வாழ்வோரைப் பொறுத்தவரை, கிராமத்தில் வாழ்பவர்கள் தீண்டாதாராகவே இருக்கின்றனர். நகரவாசிகள் கிராமவாசிகளை அறியார்; அவர்களோடு வாழமாட்டார்கள். தப்பித்தவறி கிராமத்திற்கு நகரவாசிகள் சென்று விட்டாலும், அங்கும் நகர வாழ்க்கையையே புகுத்த முயல்வார்கள். கிராமத்தில் இன்று வாழும் முப்பது கோடி மக்களும் நகரங்களில் வசதியாக வசிக்கும்படி நகரங்களை ஏற்படுத்த முடிந்தாலாவது, அதை ஒத்துக்கொள்ளலாம். ஆனால், வேலையின்மையால் வறுமையுற்று வாடும் கிராம வாசிகளைக் காக்கக் கிராமக் கைத்தொழில்களைப் புதுப்பிக்கும் வேலையை விட, அனைவரும் வசதியாக வாழ நகரங்கள் உண்டாக்குவது அசாத்தியமே.

'ஹரிஜன்' - 30—11—1934

## 6

# கிராமக் கைத்தொழில் சங்கம்

கிராமக் கைத்தொழில்கள் பற்றிப் பம்பாய் காங்கிரஸில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தை* வகுத்தவன் என்ற முறை

---

*1934–ஆம் வருஷம் அக்டோபர் மாதம் 27–ஆம் தேதி பம்பாய் காங்கிரஸில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் பின்வருமாறு :

காங்கிரஸ்வாதிகளின் உதவியைக் கொண்டும், உதவி இல்லாமலும், சுதேசியை வளர்ப்பதாகக் கூறி நாட்டில் பற்பல சங்கங்கள் எழுந்துள்ளதாலும், சுதேசியின் உண்மையான தன்மைபற்றிப் பொதுமக்கள் மனத்தில் மிகுந்த குழப்பம் ஏற்பட்டுள்ளதாலும், காங்கிரஸ் தொடங்கியது முதற்கொண்டே பாமர மக்கள் நலனையே தன் நலனாகக் கருதி வந்துள்ளதாலும், கிராமச் சீர்திருத்தமும் புனருத்தாரணமும், காங்கிரஸின் நிர்மாணத் திட்டத்தில் ஒரு முக்கியமான அம்சம் என்பதாலும், அந்தப் புனருத்தாரணத்திற்கு கிராமத் தொழிலில் முக்கியமாக உள்ள நூல் நூற்பை வளர்ப்பதுடன், மறைந்துவிட்ட அல்லது மறைந்துகொண்டிருக்கும் மற்றக் கைத்தொழில்களை வளர்ப்பதும் அவசியமானதாலும், ராட்டை வேலையைப் போலவே, மற்ற கைத்தொழில்களை வளர்க்கும் வேலையும், விசேஷ கவனத்துடனும் ஈடுபாட்டுடனும், காங்கிரஸின் ராஜீய நடவடிக்கைகளுடன் சம்பந்தப்படாமலும் அவற்றால் பாதிக்கப்படாமலும் நடப்பது அவசியமானதாலும், காங்கிரஸின் வேலைத் திட்டத்தில் ஓர்

யிலும், இக் கைத்தொழில்களின் வளர்ச்சிக்காக அமைக்கப்பட்டுள்ள சங்கத்துக்கு வழி காட்டும் பொறுப்பு என்னை மட்டுமே சார்ந்துள்ளது என்ற வகையிலும், இக் கைத்தொழில்கள் வளர்ச்சி பற்றியும், வளர்ச்சியால் நாட்டுக்கு ஏற்படக்கூடிய சமுதாய, தார்மிக நலன் பற்றியும் என் மனத்தில் எழுந்துள்ள எண்ணங்களைப் பொது மக்களுக்குத் தெரியப்படுத்துவது என் கடமை என்று கருதுகிறேன்.

ஹரிஜன சுற்றுப் பிரயாணத்தின்போது நான் மலபாருக்குச் சென்ற போதே, சங்கத்தைத் தொடங்க வேண்டுமென்ற எண்ணம் என் மனத்தில் உதித்தது. கிராமவாசியிடமிருந்து இன்று, கவலையின்றியும் கருணையின்றியும் நகரவாசியால் பறித்துச் செல்லப்படும் செல்வத்தைக் கிராமவாசியிடம் மீண்டும் சேர்ப்பிக்கும் உறுதியுடன் முயற்சி செய்ய ஒரு சங்கம் எவ்வளவு அவசியமானது என்பது ஒரு கதர் ஊழியருடன் சாதாரணமாகப் பேசிக் கொண்டிருந்தபோது எனக்குப் புலப்பட்டது. கிராமவாசிகளில், மிகுந்த கஷ்டத்துக்கு உள்ளாக்கப்படுபவர் ஹரிஜனங்கள். மற்றக் கிராமவாசிகள் பல தொழில்கள் செய்யக்கூடுமென்றால், ஹரிஜனங்கள் செய்யக்கூடிய தொழில்கள் வெகு சில. ஆகவே, அச்சில தொழில்களையும் அவர்களிடமிருந்து கைப்பற்றி விட்டால், அவர்கள் சுமை தூக்கும் பிராணிகளுக்குச் சமமாகி விடுகிறார்கள்.

ஆனால், இன்று பொதுவாக எல்லாக் கிராமவாசிகளும் அதே நிலையில்தான் உள்ளனர். உழுவதைத் தவிர, உய்ய வேறு வழியில்லாத நிலை அவர்களுக்கு ஏற்பட்டு வருகிறது. இங்குமங்கும் சிதறிக் கிடக்கும் சிறிய நிலங்களில் விவசாயம் நடத்துவது, பிழைப்புக்கு வழி காட்டுவதில்லை என்பது இன்று அநேகருக்குத் தெரியாது. கிராமவாசிகள் உயிரற்ற வாழ்க்கை நடத்துகின்றனர். பட்டினியால் பையப்பையச் சாவை நோக்கிச் செல்லும் யாத்திரையே அவர்கள் வாழ்க்கை. கடன் சுமை அவர்களை என்றும் கவலையில் ஆழ்த்துகிறது. தனக்கு வேறு வேலையில்லாததால், லேவாதேவிக்காரர் பணம் கடன் கொடுக்கிறார். அந்த வேலையும் இல்லாவிடில், அவருக்குப் பிழைப்பே போய்விடும். கிராமத்தில் வழங்கும் கொடுக்கல் வாங்கல் முறை, யாருக்குமே விளங்காத புதிர். எவ்வளவோ விசாரணைகள் நடத்தியும், நாம் அதைப்பற்றி இதுவரை மேல்வாரியாகத்தான் அறிந்துள்ளோம்.

---

அம்சமாக அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கம் என்ற சங்கத்தைக் காந்திஜியின் ஆதரவுடனும், அவர் ஆலோசனையைப் பின்பற்றியும் அமைக்க ஸ்ரீ ஜே. ஸி. குமரப்பாவுக்கு இதன்படி அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது. கிராமக் கைத்தொழில்களுக்குப் புத்துயிரளித்து வளர்க்கவும், கிராமங்கள் பொருளாதார, தார்மீக உயர்வு அடையவும் சங்கம் பாடுபடும். அந்த நோக்கம் ஈடேற அவசியமான நடவடிக்கைகள் எடுக்கவும், நிதி திரட்டவும், சங்க விதிகளையும் திட்டத்தையும் வகுத்துக் கொள்ளவும் சங்கத்துக்கு அதிகாரம் உண்டு.

ஆகவே கிராமக் கைத்தொழில்கள் அழிந்தால், இந்தியாவில் உள்ள ஏழு லட்சம் கிராமங்களின் அழிவு பூர்த்தியாகிவிடும்.

என்னுடைய திட்டங்களைக் குறைகூறித் தினசரிகள் எழுதியுள்ளதை நான் பார்த்தேன். மனிதன், தன் ஆற்றலாலும், அறிவாலும், இயற்கையை அடிமைப்படுத்தி அதன் சக்தியைப் பயன்படுத்துவதன் மூலம்தான் சமூகத்துக்கு நன்மை ஏற்பட முடியும் என்று அவை கூறியுள்ளன. முன்னேற்றப் பாதையில் சென்று வரும் மேனாடுகளில் செய்யப்படுவது போலவே, நீர், காற்று, எண்ணெய், மின்சார சக்தி ஆகியவற்றை முழுதும் பயன்படுத்த வேண்டும் என்று அவை கூறுகின்றன. இயற்கையில் மறைந்து கிடக்கும் இந்தச் சக்திகளையெல்லாம் கட்டுப்படுத்தியுள்ளதால், ஒவ்வொரு அமெரிக்கருக்கும் 33 பணியாட்கள், இட்ட வேலையெல்லாம் செய்ய இருக்கும் நிலை ஏற்பட்டுள்ளது என்று அவை கூறுகின்றன.

அதே முறையை இந்தியாவில் கையாளுங்கள். ஒவ்வொரு இந்தியனுக்கும் 33 பணியாட்கள் தருவதற்குப் பதிலாக, ஒவ்வொருவரையும் 33 தடவை அடிமைப்படுத்தும் என்பதில் எள்ளளவும் எனக்குச் சந்தேகமில்லை.

செய்யவேண்டிய வேலை அதிகமிருந்து, செய்வதற்கு ஆட்கள் குறைவாக இருந்தால், யந்திரத் தொழில் முறை நல்லதுதான். ஆனால், இந்தியாவில் இன்று இருப்பதுபோல், செய்ய வேண்டிய வேலைக்கு, ஆட்கள் பலமடங்கு அதிகமாயிருக்கும்போது, யந்திரத் தொழில் முறையால் கெடுதல்தான் ஏற்படும். இன்று நாம் தீர்க்க வேண்டிய பிரச்னை, நம் கிராமங்களில் வாழும் கோடிக்கணக்கான கிராமவாசிகளுக்கு உழைப்பையும் நேரத்தையும் எப்படி மிச்சப்படுத்துவது என்பதல்ல. ஆண்டில் ஆறு மாதம், வேலையே இல்லாமல் வீணாக்கும் நேரத்தை, அவர்கள் பயன்படுத்த வழிகாட்டுவதுதான் நம் பிரச்னை. ஒவ்வொரு ஆலையும், கிராமவாசிகளின் பிழைப்புக்கு உலைவைப்பதாகும். இது ஆச்சரியமாகத் தோன்றலாம்; ஆனால், இதுதான் உண்மை. நான் சரியாகக் கணக்குப் போட்டுப் பார்த்ததில்லை. ஆனால், கிராமத்தில் பத்துப் பேர் செய்யும் வேலையை ஆலைத் தொழிலாளி ஒருவர் செய்துவிட முடியும் என்று கூறலாம். அதாவது, அந்தப் பத்துப் பேர் வேலையை இழப்பதால், ஒருவர், தாம் முன்பு கிராமத்தில் சம்பாதித்ததை விட அதிகம் சம்பாதிக்கிறார். ஆகவே, துணி ஆலைகள் வந்தால், கையால் நூற்று நெய்து வந்த கிராமவாசிகள் தங்கள் வேலையை இழக்கின்றனர். ஆலைகள், கிராமத்தில் உற்பத்தி செய்யப்படும் துணியைவிட நல்ல துணியை, மலிவான விலைக்கு உற்பத்தி செய்கின்றன என்பதை ஒத்துக்கொண்டாலும், அது உண்மையில் நாட்டுக்கு லாபம் ஆகாது. ஆலைத் துணியால், ஆயிரக்கணக்கான கிராமவாசிகள் வேலை இழந்தனரென்றால், குறைந்த விலைக்கு விற்கப்படும் ஆலைத் துணியின்

விலை அதிக விலைக்கு விற்கப்படும் கதர்த் துணியைக் காட்டிலும் அதிகம் என்றே உண்மையில் பொருள்படும். நிலக்கரியை, அங்கேயே, அப்பொழுதே உபயோகிக்கும் சுரங்கத் தொழிலாளிக்கு அது அதிக விலையுள்ளதாய்த் தோன்றுது. அது போலவே, தன் கிராமத்திலேயே கதரை உற்பத்தி செய்து அணியும் கிராம வாசிக்குக் கதர் அதிக விலையாகத் தோன்றுது. துணி ஆலைகளாவது, ஆயிரக்கணக்கான கிராம மக்கள் வேலையை இழக்கச் செய்வதோடு நிற்கின்றன. அரிசி, மாவு ஆலைகள், ஆயிரக் கணக்கானவர்களின் வேலையைப் பறிப்பதுடன் நாட்டு மக்களின் ஆரோக்கியத்தையும் கெடுக்கின்றன. மாமிச உணவு சாப்பிட விருப்பமும் வசதியுமுள்ளவர்க்குத் தீட்டப்பட்ட அரிசியாலும், ஆலையில் அரைக்கப்பட்ட மாவாலும் கெடுதல் ஏற்படாமலிருக்கலாம். ஆனால், நம் நாட்டில் பெரும்பாலோர், மாமிச உணவு உண்ண விரும்பினாலும், விலை கொடுத்து வாங்க வசதி அற்றவர்கள். முழுக் கோதுமையிலும், கைக்குத்தல் அரிசியிலும் இருக்கக் கூடிய உணவுச் சத்தும், ஊட்டப் பொருட்களும் கூட அவர்களுக்குக் கிடைக்காமல் செய்வது பெரிய பாவம். தீட்டிய அரிசி, ஆலையில் அரைக்கப்பட்ட கோதுமை மாவு ஆகியவற்றின் உபயோகத்தால் ஏற்படும் அபாயத்தை மக்களுக்கு உணர்த்த வைத்தியர்களும் மற்றவர்களும் முன்வரவேண்டும்.

கிராமவாசிகளுக்கு வேலை தரும் வழி, யந்திரத்தைப் பரப்புவதனுல் அல்ல; அவர்கள் இதுவரை பின்பற்றி வந்த கைத்தொழில்களைப் புதுப்பிப்பதுதான் வழி என்பதற்கு ஒரு சில எடுத்துக்காட்டுகள் கூறியுள்ளேன்.

ஆகவே, இப்பொழுதுள்ள கைத்தொழில்களை வளர்ப்பதும், மறைந்துவிட்ட அல்லது மறைந்து கொண்டிருக்கும் கைத்தொழில்களில், எவற்றைப் புதுப்பிப்பது சாதகமாகவும் சாத்தியமாகவும் உள்ளதோ அவற்றை வளர்ப்பதும், அதன் மூலம் தொன்றுதொட்டு வழங்கிவந்த தொழில் முறையாகிய கிராமக் குடிசைக் கைத்தொழில் முறைக்குப் புத்துயிர் தருவதும், அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கத்தின் கடமை என்பது என் கருத்து. கையால் நூற்றல், நெய்தல் ஆகிய தொழில் முறைகளில் இப்பொழுது பல முன்னேற்றங்கள் செய்யப்பட்டுள்ளது போலவே, இக்கிராமக் கைத்தொழில் முறைகளிலும் பலவிதத் திருத்தங்களுக்கும் முன்னேற்றத்துக்கும் இடமுண்டு.

இப் பண்டைக்காலத் தொழில் முறை, தனி மனிதன் தன் போக்குப்படியே உழைக்க உதவுமே ஒழிய, பல பேர் ஒன்று சேர்ந்து, கூட்டுறவுடன் வேலை செய்ய வசதி அளிக்காது என்று ஒரு நண்பர் குறை கூறுகிருர். சரியாக ஆராயாமல், மேல்வாரியாக நோக்கியதால் எழுந்த எண்ணம் இது என்றே நான் கருதுகிறேன். கிராமவாசிகள் தத்தம் குடிசைகளிலேயே பொருட்களை உற்பத்தி செய்கிற போதிலும், அவற்றை ஒன்று சேர்த்துக் கூட்டுறவு முறைப்படி விற்கலாம்; லாபத்தைப் பகிர்ந்து கொள்

ளலாம். எல்லாக் கிராமவாசிகளும் ஓர் உற்பத்தித் திட்டத்தைப் பின்பற்றியும், மேற்பார்வைக்கு உட்பட்டும் வேலை செய்யலாம். மூலப்பொருட்களைக்கூடப் பொதுவாக வைத்து, அவரவர்களுக்கு அவசியமானதை வாங்கிக் கொள்ளலாம். கூட்டு முயற்சி மனப் பான்மை வளர்ந்தால், கூட்டுறவுக்கும், தொழிலைப் பங்கிட்டு ஒவ்வொரு அம்சத்தை ஒவ்வொருவரிடமும் ஒப்புவிப்பதற்கும், அதன் மூலம் நேரத்தை மிச்சப்படுத்துவதற்கும், தொழில் திறமையை வளர்ப்பதற்கும் எவ்வளவோ வசதியுண்டு. ஐயா யிரத்துக்கு மேற்பட்ட கிராமங்களில், இவ்வேலைகள், இன்று அகில இந்திய சர்க்கா சங்கத்தால் செய்யப்பட்டு வருகின்றன.

கிராமக் கைத்தொழில் என்னும் சூரிய மண்டலத்தில், சூரி யனைப்போல் விளங்குவது கதர். மற்றக் கோளங்கள் சூரியனிட மிருந்து உஷ்ணம் பெற்று, சூரியனுக்கு அனுசரணையாய் இருப் பதுபோலவே, மற்றக் கைத்தொழில்களும் கதரைச் சுற்றியே நடக்கின்றன. கதர் இல்லாவிடில், அவை வளர்ச்சி அடைய முடியாது. ஆனால், மற்றக் கைத்தொழில்கள் புத்துயிர் பெருவிடில், கதர் மேலும் முன்னேற முடியாது என்ற உண்மையையும் நான் சென்ற சுற்றுப் பிரயாணத்தின்போது கண்டேன். கிராம வாசிகள், இப்பொழுது வீணாக்கும் நேரத்தைப் பயன்படுத்தி நன்மை அடைய வேண்டுமானால், கிராம வாழ்க்கை, எல்லா அம்சங்களிலும் வளர்ச்சி அடைய வழி தேடவேண்டும். இதுவே, இந்த இரண்டு சங்கங்களின் கடமையாகும்.

இந்தச் சங்கங்களுக்கும், அரசியலுக்கும், அரசியல் கட்சி களுக்கும் சம்பந்தம் இருக்கக்கூடாது என்பதுதான் முறை. இந்த இரண்டு சங்கங்களும், அரசியல் பற்றற்றவை, சுயேச்சை யானவை என்று காங்கிரஸ் நிர்ணயித்தது மிகவும் நல்லது என்பது என் கருத்து. சமூக, பொருளாதார, ஆன்மிகத் துறைகளில் கிராம வாசிகள் முன்னேற்றமடைய எல்லாக் கட்சியினரும் வகுப்பினரும் சேர்ந்து வேலை செய்யலாம்.

கதரால் பொருளாதாரத் துறையில் லாபம் இல்லை என்று சிலர் கருதுகின்றனர் என்பதை நான் அறிவேன். கிராமக் கைத் தொழில்களுக்கெல்லாம் நடுநாயகமாய் விளங்குவது கதர் என்று நான் சொன்னதைக் கண்டு, அவர்கள் பயந்துவிடமாட் டார்கள் என்று எதிர்பார்க்கிறேன். கதருக்கும் மற்ற கைத் தொழில்களுக்கும் உள்ள நெருங்கிய உறவை விளக்காமல், என் உள்ளத்தில் இருந்த கருத்தை வெளியிட்டிருக்க முடியாது. அந்த உறவைக் காணாதவர்கள், அதை விட்டு, மற்ற கைத் தொழில்களை வளர்க்கவாவது வேலை செய்யட்டும். ஆனால், நிலைமையைப்பற்றிப் பொதுப்படையாக நான் மேலே கூறி யுள்ளதை உணர்ந்தால் அவர்கள் மற்றக் கைத்தொழில்கள் வளர்ச்சிக்காகவும் இச்சங்கத்தின் மூலம் நன்கு பாடுபட முடியும்.

—'ஹரிஜன்' – 16—11—1934

# 7

# சோம்பலை பகிஷ்கரிப்போம்!

காந்தி சேவா சங்கத்தின் ஆண்டு விழாவின் போது, சங்க ஊழியர்களுக்கு அகில இந்திய கைத்தொழில் சங்கத்தின் கொள்கையையும் வேலைத் திட்டத்தையும் விளக்கிக் காந்திஜி பேசியதன் சாரம் பின்வருமாறு:

கிராமக் கைத்தொழில் சங்கம் தொடங்கிய வரலாறு உங்களில் சிலருக்குத் தெரிந்திருக்கலாம். நாம் இதுவரை வேலை செய்து வந்த முறை, கதரைப் பரப்புவதற்கோ, கிராமங்களுக்குப் புத்துயிரளிக்கவோ பயன்படாது என்பதைச் சென்ற ஆண்டில் செய்த ஹரிஜன சுற்றுப் பிரயாணத்தின்போது நான் உணர்ந்தேன். கதர் வேலையில் ஒரு சிலரே ஈடுபட்டு வந்தனர் என்பதையும், அவர்கள்கூட, கதரை உபயோகித்தால் மட்டும் போதும் என்று கருதியிருந்ததையும், தாங்கள் உபயோகிக்கும் மற்றப் பொருட்கள் எங்கு, எப்படிச் செய்யப்படுகின்றன என்பதைப் பற்றிக் கவலைப்படாமலிருப்பதையும் நான் கண்டேன். கதர் ஓர் உயிரற்ற, உணர்வற்ற சின்னமாகவே இருந்ததையும், அந்நிலையில் கதர் அழிந்தே போகக்கூடும் என்பதையும் உணர்ந்தேன். கதர் வேலையில் மட்டும் முழு மனத்துடன் ஈடுபட்டுத் தீவிரமாக வேலை செய்தால்கூட நல்ல பலன் ஏற்பட்டிருக்கும். ஆனால், அந்த ஈடுபாடோ, உறுதியோ, தீவிரமோ இருந்ததாகவும் காணோம். எல்லோரும், தங்கள் ஓய்வு நேரம் எல்லாவற்றையும் கதர் வேலையில் ஈடுபடுத்தவில்லை. கதரை மட்டுமே உபயோகிப்பவரின் எண்ணிக்கை, நூற்பவர் எண்ணிக்கையைவிட அதிகமாயிருந்தபோதிலும், கதரை மட்டுமே உபயோகிப்பதென்று எல்லோரும் இன்னும் உறுதிகொள்ளவில்லை. ஏராளமான மக்களுக்கு எவ்வளவோ ஓய்வு நேரம் இருக்கிறது. இத்தகைய நிலை நம் நாட்டின் அழிவுக்கே அடிகோலும். வேலையில்லாத நிர்ப்பந்தத்தினாலோ, வேண்டுமென்றே சோம்பலாலோ, மக்கள் தங்கள் நேரத்தை வீணாக்கும் வரை, அயல் நாட்டினரும், நம் நாட்டினில் சிலரும், அவர்களைச் சுரண்ட முடியும் என்பதையும், மக்கள் சுயராஜ்யம் அடைய முடியாது என்பதையும் உணர்ந்தேன். அவர்களைச் சுரண்டுவோர், அயல் நாட்டினராயிருந்தாலும் சரி, இந்திய நகரவாசியாயினும் சரி, அவர்கள் சுயராஜ்யம் அடைய முடியாது என்பது மட்டும் நிச்சயம். ஆகவே, அவர்கள் கதர் வேலை செய்யாவிடினும், நம் முன்னோர்கள் பயின்று வந்ததும், இன்று மறைந்துள்ளதுமான தொழில் எதையாவது செய்வது அவசியம். பழைய காலத்தில், நம் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான பொருட்கள் பலவற்றையும் நாமே நம் கிராமங்களில் உற்பத்தி செய்து வந்ததுண்டு. இன்றோ, அப் பொருட்களுக்காக, அயல் நாட்டை நம்பி நிற்கிறோம்; அல்லது நகரங்களில் ஆலையில் உற்பத்தி

செய்யப்படும் பொருட்களை இறக்குமதி செய்கிறோம். இன்று வீணாக்கும் நேரத்தைக் கிராமவாசிகள் நன்கு பயன்படுத்தி, உபயோகமான பொருட்களை உற்பத்தி செய்து, நகரவாசிகளும் கிராமங்களில் உற்பத்தி செய்யப்படும் பொருட்களை உபயோகிக்கத் தொடங்கினால், நகரத்துக்கும் கிராமத்துக்குமிடையே இன்று அற்றுப்போயுள்ள தொடர்பு மீண்டும் ஏற்பட்டுப் பலப்படும். மறைந்து போன தொழில்களில் எவற்றை மேற்கொள்வது மிகுந்த பலனளிக்கும் என்பதை அறிய, கிராம நிலைமையை அறிந்து ஆராய்ந்து தீர்மானிப்பது அவசியம். உணவு, உடை ஆகிய இரண்டு இன்றியமையாத தேவைகளைப் பூர்த்திசெய்யும் பொருட்களை நான் முதலில் தேர்ந்தெடுத்துள்ளேன். கதர் இப்பொழுது பரவி வருகிறது. ஆனால், உணவைப் பொறுத்தவரை, நமக்குத் தேவையான உணவுப் பொருட்களை இங்கேயே உற்பத்தி செய்வதை விட்டுப் பிறரை நம்பி நிற்கும் நிலையை அடைந்து வருகிறோம். ஒரு சில ஆண்டுகளுக்கு முன்பு, நமக்கு வேண்டிய நெல்லை நாமே குத்தி, மாவை நாமே அரைத்து வந்தோம். ஆலையில் தீட்டிய அரிசி ஆரோக்கியத்தைப் பாதிக்கும் என்பது ஒருபுறமிருக்க, இந்த ஆலைகள் வந்ததால், ஆயிரக்கணக்கான மக்கள் வேலை இழந்து, பிழைப்புக்கு வழியில்லாமல் திண்டாடுகின்றனர் என்பதை யாரும் மறுக்க முடியாது. வெல்லத்துக்குப் பதிலாக சர்க்கரை இன்று உபயோகிக்கப்படுகிறது. பிஸ்கோத்துகள் முதலியன நம் கிராமங்களிலும் இன்று இறக்குமதி செய்யப்படுகின்றன. கிராமக் கைத்தொழில்கள், கிராமவாசிகள் கையிலிருந்து நழுவி வருகின்றன என்பதற்கே இது அறிகுறி. தங்களைச் சுரண்டுவோருக்கு, மூலப்பொருட்களை உற்பத்தி செய்பவர்களாகவே கிராமவாசிகள் ஆகிவிடுகிறார்கள். அவர்களிடமிருந்து எல்லாம் எடுத்துக்கொள்ளப்படுகிறதே ஒழிய, அதற்குப் பதிலாக அவர்களுக்கு எதுவும் கிடைப்பதில்லை. தாங்கள் உற்பத்தி செய்யும் மூலப்பொருட்களுக்காகக் கிடைக்கும் சிறிது பணத்தையும், சர்க்கரை, துணி வியாபாரிகளிடம் கொட்டிவிடுகிறார்கள். அவர்களுடன் வாழும் மிருகங்களைப்போலவே அவர்கள் மனமும் உடம்பும் ஆகிவிடுகின்றன. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் கிராமவாசிக்கு இருந்த அறிவிலும் ஆற்றலிலும் பாதி கூட இன்றைய கிராமவாசிக்குக் கிடையாது. முன்பு கிராமவாசி, தனது சக்தியைப்பயன்படுத்தித் தனக்குத் தேவையான பொருட்களைத் தானே உற்பத்தி செய்து கொண்டான். இன்றோ, கிராமவாசி அடிமைப்பட்டு, சோம்பலுக்கிரையாகி, இழி நிலையை அடைந்துள்ளான். பொதுவாகக் கிராமவாசிகள் அடைந்துள்ள செயலற்ற நிலையைக் கிராமத் தொழிலாளிகளும் அடைந்துள்ளனர். கிராமத்தில் தச்சனிடம் சென்று ராட்டை செய்யச் சொல்லுங்கள்; அல்லது கருமானிடம் சென்று, கதிர் செய்யச் சொல்லுங்கள். அவர்களால் செய்து தரமுடியாது. இது மிகவும் கேவலமான நிலை. இந்நிலைக்குப் பரிகாரம் தேடுவதற்குத்தான், கிராமக் கைத்தொழில் சங்கம் அமைக்கப்பட்டுள்ளது.

"கிராமத்திற்குத் திரும்பிச் செல்" என்ற இந்தக் கோஷம், முன்னேற்றத்திற்கு உலை வைத்து, பிற்போக்கைப் புகுத்துவது என்று சிலர் குறை கூறுகின்றனர். ஆனல், உண்மை அது தானு? திரும்பியும் கிராமத்துக்கே செல் என்பது இதன் உட்கருத்தா? அல்லது, கிராமத்துக்குச் சேரவேண்டியதை, அதற்கு உரியதை அதனிடம் சேர்ப்பது என்று பொருளா? நகரவாசிகள், கிராமத்துக்குச் சென்று வசிக்க வேண்டுமென்று நான் கூறவில்லை. ஆனல், கிராமவாசிகளுக்கு உரியதை அவர் களிடம் கொடுத்துவிடும்படிதான் நான் கூறுகிறேன். கிராம வாசியிடமிருந்து மூலப்பொருட்களைப் பெருவிடில், அப்பொருட் கள் நகரவாசிக்கு வேறு யாரிடமிருந்தாவது கிடைக்குமா? அப்படியானல், அம் மூலப்பொருட்களை உபயோகித்து உற்பத்தி செய்வதைக் கிராமவாசிக்கே கற்றுக் கொடுத்து விடுவது தானே? முன்பு அவ்வாறுதானே நடந்து வந்தது? நாம் தலை யிட்டுச் சுரண்டியிராவிடில், இன்னும் அவ்வாறு தானே நடந்து கொண்டிருக்கும்?

முன்பு இயற்கையாகக் கிராமவாசி இருந்த உயர்ந்த இடத் திற்கு மீண்டும் அவனைக் கொண்டு வருவதென்பது எளிதான காரியமல்ல. சங்கத்திற்கு ஒரு வேலைத் திட்டத்தை வகுத்து, ஸ்ரீ குமரப்பாவின் உதவியுடன் வேலையை விரைவில் தொடங்கி விடமுடியும்என்று நான் எண்ணியிருந்தேன். ஆனல், உள்ளே செல் லச் செல்ல, ஆழம் அதிகரித்துக்கொண்டே செல்கிறதைக் காண்கிறேன். ஒரு வகையில், கதர் வேலையை விட இவ்வேலை கடினமானது. கதரில் இத்தகைய சிக்கலான பிரச்னை எதுவு மில்லை. அயல் நாட்டுத் துணியையும் ஆலைத் துணியையும் விலக்கி விட்டால், கதரை ஸ்திரப்படுத்தி விட முடியும். ஆனல், இத்துறையிலோ, எண்ணற்ற கைத்தொழில்கள் இருக்கின்றன. இவ்வேலையில் ஈடுபடத்தொழில் திறமை, பயிற்சி, நிபுணத்துவம் ஆகியவை அவசியம். ஒருமனத்துடன் வேலை செய்து நம் ஆற்றலையும், ஆக்கல் சக்தியையும் முழுதும் பயன்படுத்தினல் ஒழிய, இதில் வெற்றி காண முடியாது கைக்குத்தல் அரிசிக்கும் யந்திரத்தால் தீட்டப்பட்ட அரிசிக்கும், வெல்லத்துக்கும் சர்க் கரைக்கும் உணவுச் சத்திலும் குணத்திலும் உள்ள வித்தியாசங் களை விளக்குமாறு கேட்டுப் பிரபல வைத்தியர்களுக்கும், விஞ் ஞான நிபுணர்களுக்கும் கேள்விகள் அனுப்பியிருந்தேன். பலர் உடனே பதில் அனுப்பியிருந்தனர். ஆனல், அத்துறையில் இது வரை ஆராய்ச்சி எதுவும் செய்யப்படவில்லை என்பதுதான் அவர்கள் அனுப்பியிருந்த பதில். வெல்லத்தின் குணத்தையும், ரசாயனத் தன்மையையும் பற்றி எந்த விஞ்ஞான நிபுணராலும் விளக்க முடியவில்லை என்பது மிகவும் வெட்ககரமானதுஅல்லவா? கிராமவாசியைப் பற்றி நினைப்பதில்லை என்பதுதான் இதற்குக் காரணம். தேனை எடுத்துக் கொள்ளுவோம். மேல் நாடுகளில் தேனை விஞ்ஞான முறைப்படி சோதித்து, அச் சோதனையில் திருப்தி அளிக்கும் தேனை மட்டுமே வியாபாரத்துக்கு

அனுப்புகின்றனர் என்று கூறுகிறார்கள். இந்தியாவிலோ, மிகச் சிறந்த தேன் உற்பத்தி செய்ய வசதி உள்ளது. ஆனால், அதைப் பற்றி ஆராய்ச்சி அறிவு நம்மிடம் இல்லை; நிபுணர்கள் உதவியும் இல்லை. எலிகளையும் மற்ற விலங்குகளையும் கொண்டு சோதனை நடத்திப் பார்த்ததிலிருந்து, யந்திரத்தில் தீட்டப் பட்ட அரிசி ஆரோக்கியத்துக்குக் கெடுதல் விளைவிக்கும் என்று நிரூபிக்கப்பட்டுள்ள தென்றும், தம்முடைய சிகிச்சைச் சாலையில் அதை உபயோகிப்பதேயில்லை என்றும் என் மதிப்பிற் குரிய வைத்திய நண்பர் ஒருவர் எழுதியுள்ளார். ஆனால், இந்த ஆராய்ச்சி முடிவுகளை வெளியிட்டு, அத்தகைய அரிசி, கெடுதல் விளைவிக்கும் என்று பொதுமக்களுக்குக் கூற எல்லா வைத்திய நிபுணர்களும் ஏன் முன்வரவில்லை?

இத்துறையில் உள்ள கஷ்டங்களுக்கு ஓரிரண்டு உதாரணங் களே நான் எடுத்துக் காட்டியுள்ளேன். நமக்கு எத்தகைய ஸ்தா பனம் வேண்டும்? எந்த முறைப்படி நாம் ஆராய்ச்சி நடத்த வேண்டும்? பல விஞ்ஞான நிபுணர்கள் நமக்கு யோசனை கூறுவ துடன், நமது ஆராய்ச்சிச் சாலைகளுக்கு வந்து இத்துறைகளில் இலவசமாக ஆராய்ச்சி செய்து, முடிவுகளைப் பொதுமக்களுக்குத் தெரியப்படுத்தவேண்டும். ஆராய்ச்சி முடிவுகளை அவ்வப்போது வெளியிடுவதுடன், உற்பத்தி செய்யப்படும் பல பொருட்களையும் சோதனைசெய்து, அத்தாட்சிப் பத்திரம் தர வேண்டும். கிராம வாசி இவ்வாறு உற்பத்தி செய்யும் பொருளைத் தானே உபயோ கிக்கிறானா, அல்லது, அதைப் பிறர் உபயோகத்துக்கு ஏற்றுமதி செய்துவிட்டு, அதற்குப் பதிலாக உபயோகிக்கப்படக்கூடிய மட்டமான பொருளை வெளியிலிருந்து வருவித்துக்கொள்ளுகிறானா என்பதையும் ஆராயவேண்டும். கிராமவாசிகள் முதலில் தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்துகொண்டு, அதன் பின் நகர வாசிகளுக்குப் பொருட்களை அனுப்பும்படி செய்ய வேண்டும். இதற்காக ஜில்லா ஸ்தாபனங்கள் அமைக்க வேண்டும். ஒரு ஜில்லா மிகப்பெரிதாக இருந்தால், அதைப் பிரித்து, உப ஸ்தா பனங்கள் ஏற்படுத்த வேண்டும் இவ்வாறு ஏறக்குறைய 250 ஸ்தாபனங்கள் நிறுவுவதாக வைத்துக்கொள்ளுவோம். ஒவ்வொரு ஸ்தாபனத்திலும், புலன் விசாரித்து ஆராய்ந்து அறிக்கை தயா ரிக்க ஒருவர் நியமிக்கப்படவேண்டும். இவ்வாறு நியமிக்கப் படுபவர்கள் இதையே முழு நேர வேலையாகக் கொள்ள வேண்டும்; முழு மனத்துடனும் வேலையில் ஈடுபடவேண்டும். திட் டத்தில் அவர்களுக்குத் தீவிர நம்பிக்கை இருக்க வேண்டும். அதற்கேற்றபடி, தங்கள் சொந்த வாழ்க்கையையே திருத்தி அமைத்துக் கொள்ள அவர்கள் ஆயத்தமாயிருக்க வேண்டும். இவ்வேலைக்கு ஏராளமாகப் பணம் தேவையாயிருக்கும்; அதை விட முக்கியமாக, உறுதியும் ஊக்கமும் கொண்ட ஊழியர்கள் அவசியம்.

**கேள்வி:** இன்னும் பூர்த்தியாகாத கதர் வேலையை, இவ்வேலைத் திட்டம் பாதிக்காதா?

பதில்: பாதிக்காது. கிராமக் கைத்தொழில்களுக்கெல்லாம் நடுநாயகமாய் விளங்குவது கதர். அந்த இடத்திலிருந்து அதை அசைக்க முடியாது. கதர்த் தொழிலிலிருந்து, மற்றக் கைத்தொழில்களுக்கு ஆதரவும் பக்கபலமும் கிடைக்கும்.

கே: நாம் புதுப்பிக்க, அல்லது வளர்க்க வேண்டிய கைத் தொழில்கள் எவையெவை?

ப: எந்தெந்தக் கைத்தொழில், ஒரு சில காலத்துக்கு முன்புவரை இருந்ததோ, எது மறைந்ததால் பல பேருக்கு வேலையில்லாமல் போனதோ, அந்தத் தொழில்களை யெல்லாம் நாம் வளர்க்க வேண்டும்.

கே: அரிசி, மாவு யந்திரசாலைகளை நாம் பகிஷ்கரிக்க வேண்டுமா?

ப: பகிஷ்காரப் பிரகடனம் ஒன்றும் செய்ய வேண்டியதில்லை. ஆனால், மக்கள், தங்களுக்குத் தேவையான நெல்லைத் தாங்களே குத்தி, மாவைத் தாங்களே அரைக்க வேண்டுமென்று நாம் இடைவிடாது பிரசாரம் செய்ய வேண்டும். ஆரோக்கியத்துக்கு உகந்தது அதுவே என்பதை உணர்த்த வேண்டும். சோம்பலைப் பகிஷ்கரிப்போம் என்று மட்டும் நாம் பிரகடனம் செய்ய வேண்டும்.

கே: இந்த வேலையில், காங்கிரஸ் கமிட்டிகளைப் பயன்படுத்திக் கொள்ளலாமா?

ப: தாராளமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம். இதில் எல்லோருடைய உதவியையும் நாம் பெறலாம். இதில் கட்சிச் சார்போ, அரசியல் பற்றோ நமக்குக் கிடையாது.

கே: ஒரு மத்திய போர்டு அமைப்பதென்றால், அந்த மத்தியக் குழுவிடம் எல்லா அதிகாரமும் சிக்கிவிடாதா?

ப: அப்படி நேரிட அவசியமில்லை. வேலைத்திட்டத்தை அமல் நடத்தும் பொறுப்பு ஜில்லா ஸ்தாபனங்களிடம்தான் இருக்கும். மத்திய குழு நிலைமையைக் கவனித்து, அகில இந்தியத் திட்டம் வகுத்துத் தருமே ஒழிய நிர்வாகத்தை மேற்கொள்ளாது. மத்திய ஸ்தாபனத்தின் மூலம் எல்லா ஊழியர்களும் ஒன்றுகூடி ஆலோசித்து ஒருமித்த திட்டத்தை வகுக்க வசதி ஏற்படும். நிர்வாக அதிகாரம் ஒரு மத்தியக் குழுவிடம் சிக்குவதை நாம் எதிர்க்கிறோம். ஆனால், ஒரு மத்தியக் குழு ஆராய்ச்சி நடத்தி, அறிவை ஒன்று திரட்டி, நிபுணத்துவத்தை வளர்ப்பதை நாம் வரவேற்கத்தானே வேண்டும்?

—'ஹரிஜன்'–7—12–1934

# 8

# முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டையா?

"தற்கால நாகரிகத்தை எதிர்த்து, முடிவில்லாத. கண்மூடித்தனமான போராட்டத்தின் முதல் படலத்தை நீங்கள் தொடங்குவதாகத்தான் என் சிற்றறிவுக்குத் தோன்றுகிறது. தற்கால நாகரிகத்தை எதிர்த்து ஓய்வின்றிப் போராடுவீர்கள் என்று பல ஆண்டுகளுக்கு முன் நீங்கள் கூறினீர்கள். இப்பொழுதோ, பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக அது அடைந்துள்ள முன்னேற்றத்தை ரத்துச் செய்து, பின்னால் தள்ள நீங்கள் முயற்சிக்கிறீர்கள். இதைப்பற்றி நினைத்தாலே எனக்குத் திகைப்பும் குழப்பமும் ஏற்படுகின்றன."

மேற்கண்டது என் நெருங்கிய நண்பர் ஒருவரிடமிருந்து வந்த கடிதத்தில் ஓர் பகுதி. என் வேலைத்திட்டத்தில் சேர்ந்து ஒத்துழைக்க முடியுமா என்று நான் கேட்டெழுதியதற்கு அவர் எழுதிய பதில் அது. நண்பர் வெளிப்படையாகவும், ஒளிவு மறைவில்லாமலும் கூறியுள்ளது போலவே, பல நண்பர்களும் கருதுகிறார்கள் என்பதை நான் அறிவேனாதலால், என்னுடைய நிலைமையைத் தெளிவு படுத்துவது நலம். என் கொள்கைதான், அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தின் கொள்கை என்பதால்தான் இந்த விளக்கம் அவசியமாகிறது.

எந்தெந்தத் தொழில்களுக்குப் புத்துயிரளிக்க முடியுமோ, அவற்றை வளர்க்கப் பாடுபடுவதால், நண்பர் சொல்வது போல், முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை போடவில்லை. கிராமங்கள் மீது பற்றுதல் கொண்டவர், கிராமங்களின் சீரழிவினால் ஏற்பட்டுள்ள நாசத்தை உணர்ந்தவர் ஒவ்வொருவரும், செய்து கொண்டு அல்லது செய்ய முயற்சி செய்து கொண்டிருப்பதைத்தான் நான் செய்ய விரும்புகிறேன். யந்திரத்தில் தீட்டிய அரிசியை உபயோகித்து உணவுச் சத்தை இழக்காமல் கைக்குத்தல் அரிசியைச் சாப்பிட்டுச் சத்து பெறும்படி கிராமவாசியிடம் சொல்வது நாகரிகத்தை எதிர்ப்பதாகுமா? கரும்புச் சாற்றை வெல்லமாகக் காய்ச்சி, தாமே உபயோகிக்கும்படி, அல்லது விற்றுப் பணம் பெறும்படி கிராமவாசியிடம் சொல்வது, நாகரிகத்துக்குச் செய்யும் துரோகமா? மூலப் பொருட்களைப் பிறரிடம் கொடுத்து விடாமல், தாங்களே உற்பத்தி செய்து, சற்று அதிக ஊதியம் பெறும் வகையைக் கிராம வாசிகளிடம் சொல்வது, முன்னேற்றத்துக்கு முட்டுக் கட்டையா?

பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக வழங்கி வந்தது தற்கால நாகரிகம் என்று நண்பர் கூறுவது தவறு. இந்த நாகரிகம் பிறந்த தேதியை நாம் நிர்ணயித்துச் சொல்ல முடியும். நவீன நாகரிகம் என்ற பெயரால் வழங்கி வருவதில் பல அம்சங்களை, எனக்குச் சக்தியிருந்தால், அழித்து விடுவேன், அல்லது

அடியோடு மாற்றி விடுவேன் என்பது நிச்சயம். அவ்வாறு செய்ய முயற்சி நடந்துகொண்டுதான் இருக்கிறது. அது வெற்றி பெறுமா, இல்லையா என்பது ஆண்டவனைப் பொறுத்தது. கிராமவாசிக்கு ஊதியம் தரும் கைத்தொழில்களை வளர்க்கவேண்டும் என்று நான் கூறுவது, இம்முயற்சியைச் சேர்ந்ததல்ல. ஒரு வகையில் பார்த்தால், அகிம்சையைப் பரப்ப நான் பாடுபடுவது கூட, இம் முயற்சியைச் சேர்ந்தது என்று சொல்லலாம். கிராமக் கைத் தொழில்களை வளர்க்க வேண்டுமென்ற கொள்கை, கதர்க் கொள்கையிலிருந்து பிறந்ததுதான். கையால் செய்த காகிதம், நெய்த துணி, கைக்குத்தல் அரிசி, வீட்டிலேயே செய்யப்பட்ட ரொட்டி முதலியன மேல்நாடுகளிலும் உபயோகிக்கப் படுகின்றன. ஆனால், இந்தியாவில் கிராமக் கைத்தொழில்களுக் குள்ள முக்கியத்துவத்தில் நூற்றில் ஒரு பங்கு கூட, அவற்றிற்கு மேல்நாடுகளில் கிடையாது என்பதுதான் வித்தியாசம். நம் நாட்டிலோ, கிராம வாசிகளின் வாழ்வே, அக்கைத்தொழில்களை நம்பியுள்ளது; அக்கைத்தொழில்களின் அழிவு கிராமவாசிகளின் அழிவையே குறிக்கும். யந்திர யுகம் எதைச் சாதித்தாலும், எல்லாத் தொழில்களிலும் யந்திரத்தைப் புகுத்துவதால் வேலையை இழக்கும் ஆயிரக்கணக்கானவருக்கு, வேலை தேடித் தர முடியாது.

—'ஹரிஜன்'-4—1—1935

## 9

# "வீட்டிலேயே தொடங்குங்கள்"

கிராமக் கைத்தொழில் வேலையை எப்படித் தொடங்குவது, முதலில் எதை எடுத்துக்கொள்ளுவது என்று கேட்டு நண்பர்கள் கடிதம் எழுதியுள்ளனர்.

முதலில் உங்களுடன் ஆரம்பியுங்கள்; நீங்கள் மிகவும் எளிதாகச் செய்யக்கூடிய காரியத்தை எடுத்துக் கொள்ளுங்கள் என்று நான் கூறுவேன்.

ஆனால், இந்தப் பதில் என் நண்பர்களைத் திருப்திப்படுத் தாது. ஆகவே, விளக்கிச் சொல்கிறேன்.

ஒவ்வொருவரும், அன்றாட வாழ்க்கையில் தாம் உபயோ கிக்கும் பொருட்கள், உணவு, உடை முதலியவற்றை ஆராய்ந்து பார்க்கட்டும். அவற்றில் அயல்நாட்டுப் பொருட்களையும், நகரத் தில் உற்பத்தி செய்யப்படும் பொருட்களையும் எவ்வளவு தூரம் விலக்கிவிட்டுக் கிராமத்தில், கிராமவாசிகளால், அவர்களின் சிறிய கருவிகளைக் கொண்டு செய்யப்படும் பொருட்களை உப யோகிக்க முடியுமோ, அதை முதலில் செய்யவேண்டும்.

அதுவே பெரிய முன்னேற்றமாகும். அந்த மாறுதல், நம் மனப் பான்மையிலேயே ஒரு மாறுதலை ஏற்படுத்தும். அடுத்தபடி செய்யவேண்டியது, நமக்குத் தானுகப் புலனுகும். உதாரண மாக, பம்பாய் யந்திரத் தொழிற்சாலையில் உற்பத்தி செய்யப் பட்ட பல் தேய்க்கும் பிரஷ் ஒன்றை ஒருவர் உபயோகிக் கிருர் என்று வைத்துக்கொள்ளுவோம். கிராமத்தில் செய்யப் பட்ட பிரஷை உபயோகிக்க அவர் விரும்புகிருர். வேப்பங் குச்சியை அவர் உபயோகிக்கலாம். பல் இல்லாமலிருந்தால், அல்லது பல் ஆடிக்கொண்டிருந்தால், குச்சியின் ஒரு நுனியை நன்ருகத் தட்டி, மெதுவாக்கிக் கொள்ளலாம். மற்ருெரு நுனியைக் கத்தியால் இரண்டாய்ப் பிளந்து, நாக்கு வழிக்க உபயோகிக்கலாம். யந்திரத் தொழிற்சாலையில் செய்யப்படும் பிரஷை விட இது நயமாகவும் சுத்தமாகவும் இருக்கும். நகரத்தில் செய்யப்படும் பல் பொடிக்குப் பதிலாக, மரக் கரியையோ, சுத்தமான உப்பையோ பொடியாக்கி உபயோகிக்கலாம். ஆலைத் துணிக்குப் பதிலாகக் கதரையும், யந்திரத்தில் தீட்டிய அரிசிக்குப் பதிலாக கைக் குத்தல் அரிசியையும், சர்க்கரைக்குப் பதிலாக வெல்லத்தையும் உபயோ கிக்கலாம். கைக் குத்தல் அரிசி, மில் அரிசியைவிட அதிக விலையா கிறதே என்று சிலர் கூறலாம். கையால் குத்தும் தொழில் மறைந்து விட்டதே, குத்துவதற்குக்கூட இப்பொழுது ஆட்கள் கிடைப்பதில்லையே என்று சிலர் கூறலாம். இன்னும் சிலர், "எங்கள் ஊர்களில் மில் அரிசியையே வாங்குவதில்லை. கைக் குத்தல் அரிசி ரூபாய்க்கு 19 சேர் விற்கிருேம்" என்று கூறு கிருர்கள். இவர்கள் அனைவர் சொல்வதிலும் உண்மை இருக் கிறது; தவறும் இருக்கிறது. தங்கள் சொந்த ஜில்லாக்களில் தங்களுக்கு ஏற்பட்ட அனுபவத்தைப் பற்றி அவர்கள் கூறுவதைப் பொறுத்தவரை அது உண்மைதான். ஆனல், முழு உண்மை அவர் களுக்குத் தெரியாததால், அவர்கள் அனைவர் சொல்வதும் தவறு. நான் என்மீதே பல சோதனைகளை நடத்திக் கொண்டே வருவ தால், தினமும் புதுப் புது அனுபவங்களைப் பெற்று வருகிறேன். அவற்றின் பயனுய், நான் கீழ்க்கண்டவற்றை அறிந்துள்ளேன்:

தீட்டப்படாத, உடைக்கப்படாத அரிசி கடைகளில் கிடைப்பதில்லை. அந்த அரிசி பார்வைக்கு அழகாகவும், சாப்பிடு வதற்குச் சுவையாகவும் சத்தாகவும் இருக்கும். அந்த அரிசி யோடு, ஆலைகள் போட்டியிட முடியாது. மிக எளிய முறையில், திரிகையை உபயோகித்து, உமியை அகற்ற முடியும். சில வகை நெல்லின் உமி அவ்வளவு எளிதில் நீங்காவிடில், நெல்லைப் புழுக்கிய பின்னர், உமியை அகற்ற முடியும். அந்த அரிசி மிகவும் மலிவான விலைக்குக் கிடைக்கிறது. அது சத்து அதிகம் கொண் டது. கிராமங்களில் கிராமவாசியே குத்தும் அரிசி, மில் அரிசியை விட, தீட்டிய அரிசியாயிருந்தாலும் சரி, தீட்டாததாயிருந்தாலும் சரி, மலிவான விலைக்குத் தானே கிடைக்கும். கடைகளில் சாதாரணமாய்க் கிடைக்கும் அரிசி, கையால் குத்தப்பட்டதா

யிருந்தாலும் சரி, மில் அரிசியாயிருந்தாலும் சரி, ஓரளவுக்குத் தீட்டிய அரிசியேயாகும். முழுவதும் தீட்டப்படாத அரிசியா யிருக்க வேண்டுமானால், கைக்குத்தல் அரிசியாகத்தான் இருக்கமுடியும். அது மில் அரிசியை விட நிச்சயமாக மலிவான விலைக்குக் கிடைக்கும். அதிக விலை கொடுத்துக் குறைந்த சத்துள்ள அரிசியைப் பல்லாயிரக் கணக்கான பேர் சாப்பிடுவதற்குக் காரணம், நம் அறியாமையே என்பது இதுவரை செய்த ஆராய்ச்சியிலிருந்து தெளிவாகும். கிராமவாசி இதைப் பரீட்சித்துப் பார்க்கட்டும்.

—'ஹரிஜன்'–25—1—1935

## 2

அரிசிக்கு அடுத்தபடியாக, கோதுமையை எடுத்துக் கொள்ளுவோம். அதைப் பிரதான உணவுப்பொருள் என்று சொல்லாவிடினும், பிரதான உணவுப்பொருள்களில் இரண்டாவது என்று சொல்ல வேண்டும். சத்தைப் பொறுத்தவரை, தானிய வகைகளில் அது தலை சிறந்தது. அதைமட்டும் எடுத்துக்கொண்டால், அரிசியைவிட அதில் அதிகச் சத்து உள்ளது. தவிடு நீங்கிய கோதுமையில், தீட்டிய அரிசியைப் போலவே சத்தில்லை. தவிடு இல்லாத மாவும், தீட்டிய அரிசியும் கெடுதலானவை என்பது எல்லா வைத்தியர்களுடைய முடிவும் ஆகும். திரிகையில் நாமே அரைத்துக் கொள்ளும் முழுக் கோதுமை மாவு, கடைகளில் கிடைக்கும் தவிடு இல்லாத கோதுமையைவிடச் சத்தில் உயர்ந்தது; விலையும் குறைந்தது. அரைக்கும் கூலியையும் மிச்சப்படுத்தலாம். மேலும், முழுக் கோதுமை மாவில் நிறையும் குறைவதில்லை. தவிடு இல்லாத மாவில் நிறை குறைகிறது. கோதுமையில் மிகுந்த சத்துள்ளது தவிடு. அதை நீக்கி விடுவது பெரும் நஷ்டமாகும். தாங்களே அரைத்த முழுக் கோதுமை மாவை உபயோகிக்கும் கிராமவாசிகள் தங்கள் பணத்தையும் மிச்சப் படுத்தி, அதைவிட முக்கியமான தங்கள் ஆரோக்கியத்தையும் பாதுகாத்துக்கொள்ளுகிறார்கள். இன்று மாவு அரைக்கும் யந்திரங்கள் சம்பாதிக்கும் பணமெல்லாம், கிராமக் கைத்தொழில்கள் வளர்ந்தால் கிராமத்திலேயே இருந்து, கிராம வாசிகளிடையே சுற்றிக் கொண்டிருக்கும்.

திரிகையில் அரைப்பது மிகவும் சிரமமானதென்றும், கோதுமை சரியாக அரைபடுவதுமில்லை யென்றும், தாங்களே அரைத்துக்கொள்ளுவதால் கிராமவாசிக்கு உண்மையில் லாபமுமில்லை யென்றும் சிலர் குறைகூறுகிறார்கள். மில்கள் வருவதற்கு முன், கிராமவாசிகள் மாவைத் தாங்களே அரைத்துக் கொள்ளுவது லாபகரமாய் இருந்திருந்தால், இப்பொழுது அந்நிலைமை மாறுவதற்கு நியாயமில்லை. அரைக்க, தங்களுக்கு அவகாசமில்லை என்று கிராமவாசிகள் சொல்ல முடியாது.

திறமையும், உழைப்பும், ஊக்கமும் சேர்ந்தால், திரிகையில் பல முன்னேற்றங்களைச் செய்ய முடியும். திரிகையில் சரியாக அரை படுவதில்லை என்பது உண்மையல்ல. திரிகையால் பலனில்லை யென்றால், அது இத்தனை காலமாக, மறையாமல் உபயோ கத்தில் இருந்திருக்க முடியாது. அப்படி சரியாக அரைபடவில்லை யென்று வைத்துக் கொண்டாலும், அந்த மாவை முறத்தில் புடைத்துக் கஞ்சியாகக் காய்ச்சிச் சப்பாத்தியுடனே, பின்போ சாப்பிடலாம். இதனால் அரைப்பதும் சுலபமாகிறது; வேலையும் நேரமும் மிச்சமாகிறது.

கிராம வாசிகளுக்கு இதையெல்லாம் சொல்லி, அவர்கள் மனப்பான்மையிலேயே ஒரு மாறுதல் ஏற்படுத்தினால்தான், இந்த முறைகளைக் கையாள முடியும். இந்த வேலையில் ஈடுபடு வோருக்கு இதனால் பிரதிபலன் கிடைக்காது. ஆனால், கிராம வாசிகள் ஆரோக்கியமாகவும், கூடியவரை வசதியுடனும் இருந் தால், அதுவே போதிய பலனாகும்.

அடுத்தபடியாக வெல்லத்தைக் கவனிப்போம். சர்க் கரையைவிட வெல்லத்தில் உணவுச் சத்து அதிகம் என்பது நிபுணர்களால் ஒத்துக்கொள்ளப்பட்ட உண்மை. வெல்லம் காய்ச்சுவதைக் கிராமவாசிகள் இப்பொழுதுதான் நிறுத்தத் தொடங்கி விட்டார்கள். இதனால் அவர்கள் ஆரோக்கியத் துக்கும், அவர்கள் குழந்தைகளின் ஆரோக்கியத்துக்கும்தான் கெடுதல் விளையும். வெல்லம் இல்லாமல் அவர்கள் தங்கள் ஆரோக்கியத்தைக் காத்துக் கொண்டாலும், அவர்கள் குழந் தைகள் ஆரோக்கியத்தைக் காக்க முடியாது. சர்க்கரையிலும் தித்திப்புப் பலகாரங்களிலும் இருப்பதைவிட வெல்லத்தில் அதிக உணவுச் சத்து உள்ளது. வெல்லத்தைப் பொது மக்கள் உபயோகிப்பதால், கோடிக்கணக்கான ரூபாய் கிராமவாசிகளைச் சேரும்.

வெல்லம் காய்ச்சுவதில், செலவுக்குத் தகுந்த பலன் கிடைப்பதில்லை என்று சிலர் கூறுகின்றனர். விளைந்த கரும்பை விற்று உடனே பணம் பெற வேண்டிய நிர்ப்பந்த நிலையில் உள்ளவர்கள், கரும்புச் சாற்றை வெல்லமாகக் காய்ச்சி அதை விற்கும்வரை காத்திருக்க முடியாது. சிலருக்கு இந்த நிர்ப் பந்தம் இல்லையெனினும், பொதுவாக இந்த வாதத்தில் உண்மை இருக்கிறது என்பதை ஒத்துக்கொள்ளுகிறேன். இதற்கு என்னால் உடனடியாகப் பதில் ஒன்றும் கூறமுடியாது. மூலப் பொருள் எந்த இடத்தில் உற்பத்தியாகிறதோ அந்த இடத்தில், அதைக் கொண்டு செய்யப்படும் உபயோகமான பொருளில் செலவுக்குத் தகுந்த பலன் கிடைப்பதில்லை என்றால், அதில் அடிப்படையான தவறு ஏதோ இருக்கவே வேண்டும். ஒவ்வொரு ஊரின் நிலைமையையும் மனத்திற் கொண்டு இதை ஆராய வேண்டும். கிராமவாசிகள் கூறும் இந்தக் கஷ்டங்களைக் கண்டு ஊழியர்கள் மலைத்து விடக்கூடாது. வெல்லம் காய்ச்சும்

தொழில் போன்றவற்றில் உள்ள சிக்கல்களைத் தீர்ப்பதைப் பொறுத்ததுதான் நாட்டின் நலனும், கிராமங்களின் முன்னேற்றமும். வெல்லத்துக்காக ஒரு காசு அதிகம் கொடுத்து வாங்க வேண்டியிருந்தாலும், அத்தொழில் கிராமங்களிலிருந்து மறையாமலிருக்கும் பொருட்டு அதை ஆதரிக்க நாம் முடிவு செய்ய வேண்டும்.

—'ஹரிஜன்'– 1—2—1935

## 3

உணவுப் பொருட்களில் சிலவற்றை உதாரணமாக எடுத்து, அவற்றால் கிராமவாசிகளுக்கு ஆரோக்கியத்திலும், பொருளாதாரத் துறையிலும் எவ்வளவு நன்மை ஏற்படுகிறது என்பதைக் காட்டினேன். இவற்றைப் போலவே, முக்கியமான சுற்றுப்புறச் சுகாதாரம் போன்ற துறைகளில் கவனம் செலுத்தினால், நாட்டின் ஆரோக்கியம், சக்தி, செல்வம் ஆகியவற்றில் நேரடியான முன்னேற்றமும், மொத்தத்தில் நன்மையும் ஏற்படும்.

தனி மனிதர்கள், சொந்த வாழ்வில், (இந்தியாவில்) சுத்தமாயிருப்பது போல் வேறெந்த நாட்டிலும் இல்லை என்று அயல் நாட்டு அறிஞர்களே கூறியுள்ளனர். ஆனால், பொது சுகாதாரத்தை எடுத்துக்கொண்டால், இந்தப் பெருமை நம்மைச் சேராது என்றே அஞ்சுகிறேன். தனிப்பட்டவர்கள் சுத்தமாயிருக்கின்றனர்; ஆனால் ஊர்களும், கிராமங்களும் சுத்தமாயிருப்பதில்லை. நம் குடும்பம் வரை நாம் கவனித்துக்கொள்ளுகிறோமே ஒழிய, பொது நலனைப்பற்றி நமக்கு அக்கறையில்லை. ஊர் அல்லது நாட்டின் பொது நலனுக்கும் நம் குடும்ப நலனுக்கும் முரண்பாடு ஏற்பட்டால், குடும்ப நலனுக்காக எதையும் பலி கொடுத்துவிடுவோம்.

ஒரு குடும்பத்தினர், தம் வீட்டைச் சுத்தமாய் வைத்துக் கொள்ளுவார்கள். ஆனால், பக்கத்து வீட்டைப் பற்றி அவர்களுக்கு அக்கறையில்லை. தங்கள் வாசலில் குப்பை, பூச்சி, புழு ஒன்றும் இல்லாமல் பார்த்துக்கொள்ளுவார்கள். ஆனால், அவற்றையெல்லாம் பக்கத்து வீட்டு வாசலில் வீசத் தயங்க மாட்டார்கள். இதுமாதிரி, கூட்டுப் பொறுப்பு இல்லாததால்தான் நம் கிராமங்கள் குப்பைக் கிடங்குகளாகிவிட்டன. நம் மக்களில் பெரும்பாலோர் செருப்பில்லாமலே நடக்கின்றனர். ஆனால் நாமோ, செருப்பில்லாமல் தெருவில் காலெடுத்து வைக்க முடியாதபடி தெருவை அசுத்தப்படுத்துகிறோம். கிராமக் கிணறுகளிலும், ஏரி குளங்களிலும், குடிக்கச் சுத்தமான தண்ணீர் கிடைப்பது அரிது. கிராமத்துக்குச் செல்லும் பாதைகளிலெல்லாம் குப்பையும் கூளமும் குவிந்து கிடக்கும்.

அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தின் வேலைகளில் மிக முக்கியமானதும், மிகக் கடினமானதும் கிராம சுகாதாரத்தைச் சீர்ப்படுத்துவதுதான். மக்கள் மனமுவந்து ஒத்துழைத்தால் ஒழிய, அவர்கள் பழக்க வழக்கங்களை மாற்றிவிட எந்தச் சர்க்காராலும் முடியாது. மக்கள் ஒத்துழைப்பு பூரணமாயிருந்தால், சர்க்கார் செய்ய வேண்டியது அதிகமாகவே இருக்காது.

வைத்திய நிபுணர்களும், அக்கலை பயிலும் மாணவர்களும், மனப்பூர்வமாகவும், ஆர்வத்துடனும், ஆற்றலுடனும் கிராம வேலையில் ஈடுபட்டால், இந்தப் பிரச்னையை வெற்றிகரமாய்த் தீர்க்க முடியும். தனிப்பட்ட முறையிலும், கூட்டு வாழ்விலும் சுத்தமாயிருப்பதே எல்லாக் கல்விக்கும் அடிப்படை.

கிராமக் குளங்களையும் கிணறுகளையும் சுத்தப்படுத்த வேண்டும். சாணிக் குழிகளை அப்புறப்படுத்த வேண்டும். ஊழியர்கள், தாங்களே இவ்வேலைகளை மேற்கொண்டு, தோட்டி வேலை முதற்கொண்டு தினமும் செய்து வந்து, கிராமவாசிகளும் அவ்வேலையில் பங்கெடுத்துக் கொள்ளும்படி ஊக்குவித்தால், கிராமவாசிகளின் ஒத்துழைப்பும் முடிவில் கிடைப்பது நிச்சயம். தென்னாப்பிரிக்காவிலும், சம்பாரனிலும், சென்ற ஆண்டில் ஒரிஸ்ஸாவில் நடைப் பிரயாணத்தின் போதும் நான் அனுபவத்தில் கண்ட உண்மை இது.

சந்துகளிலிருந்தும் தெருக்களிலிருந்தும் குப்பைகளை அப்புறப்படுத்த வேண்டும். இக் குப்பைகளையும் பலவிதமாகப் பிரிக்க வேண்டும். ஒரு பகுதி, உரமாகப் பயன்படும். சில குப்பைகளைப் புதைத்து விடவேண்டும். சிலவற்றை உடனடியாகப் பயன்படுத்திக் கொள்ளலாம். உதாரணமாக, எலும்பைக் கொண்டு உபயோகமான பொருட்கள் பல செய்யலாம்; இல்லாவிடில் அதைப் பொடி செய்து, மிக நல்ல உரமாகப் பயன்படுத்தலாம். கந்தையையும் குப்பைக் காகிதத்தையும் கொண்டு நல்ல காகிதம் செய்யலாம். மலம், கிராம வயல்களுக்கு சிறந்த உரமாகப் பயன்படும். மேலாக, அதாவது ஓர் அடி ஆழத்தில் உள்ள மண்ணுடன் மலத்தைக் கலந்து உபயோகிப்பது நலம். ஒன்பது அல்லது பன்னிரண்டு அங்குல ஆழத்துக்கு மேல் போகாமல், மலத்தைப் பூமியில் புதைத்து வைக்க வேண்டும் என்று, கிராம சுகாதாரத்தைப் பற்றிய தம் புத்தகத்தில் டாக்டர் பூர் எழுதியுள்ளதாக எனக்கு நினைவிருக்கிறது. மேலாக உள்ள மண்ணில், சிறிய உயிர் வகைகள் உள்ளன என்றும், எளிதில் புகும் காற்றுடனும் வெளிச்சத்துடனும் அவை கலந்து, மலத்தை ஒரு வாரத்தில், மெதுவான, பண்பட்ட நல்ல வாசனையுள்ள மண்ணாக்கிவிடுமென்றும் அவர் கூறுகிறார். இதன் உண்மையை, எந்தக் கிராமவாசியும் பரீட்சித்துப்பார்த்து அறிந்து கொள்ளலாம். இரும்பு அல்லது மண் வாளிகள், அல்லது பானைகள் கொண்ட கக்கூசுகள் கட்டி, மலத்தைத் தினமும்

குறிப்பிட்ட இடத்தில் கொட்டிச் சேகரிக்க வேண்டும். அல்லது பூமியில் தோண்டிய சதுரக் குழிகளிலேயே மலம் கழிக்க வேண்டும். மலத்தைக் கிராமப் பொதுவிலோ, தனிப்பட்டவர் வயலிலோ புதைத்து வைக்கலாம். கிராமவாசிகள் எல்லோரும் ஒத்துழைத்தால் இதை நல்ல பயன் தரும் முறையில் செய்யலாம். இல்லாவிடில், துணிவுடன் யாராவது ஒரு கிராமவாசி முன்வந்து இதைச் செய்து காட்ட வேண்டும். லட்சக்கணக்கான ரூபாய்க்கு மதிப்பிடப்பட்டுள்ள இந்த உரத்தை இன்று நாம் வீணுக்குவதுடன், மலத்தால் துர்நாற்றமும் சுகாதார கேடும் பரவவும் இடம் கொடுக்கிறோம்.

கிராமக் குளங்களில் உள்ள தண்ணீர்தான், குடிப்பதற்கும், சமையலுக்கும், குளிப்பதற்கும், துணி துவைப்பதற்கும் உபயோகப்படுகிறது. பல கிராமக் குளங்களில் கால் நடைகளும் இறங்கிக் குளிக்கும். எருமைகள் தண்ணீரைக் குழப்பிக் கொண்டே நிற்கும். கிராமக் குளங்களை இவ்வளவு கண்மூடித்தனமாக உபயோகித்தும், கொள்ளை நோய்களால் கிராமங்கள் அழியாமல் இருக்கின்றன என்பதுதான் ஆச்சரியம். கிராமவாசிகளுக்கு இன்றுள்ள நோய்களிற் பலவற்றிற்குக் காரணம், கிராமங்களில் தண்ணீர் இப்படி அசுத்தப்படுத்தப்படுவதுதான் என்பது வைத்தியர்களின் முடிவு.

இக் கெடுதல்களைப் போக்கி, சுகாதாரத்தை வளர்க்க உழைப்பது, ஊழியர்களுக்கு மிகுந்த உற்சாகமும், கோடிக் கணக்கான மக்களுக்கு அளவற்ற நன்மையும் பயக்கும். பேனு பிடித்து எழுதுவது எவ்வளவு கௌரவமான தொழில் என்று இன்று எண்ணுகிறுர்களோ, அது போலவே, துடைப்பத்தை எடுத்துத் தோட்டி வேலை செய்வதும் என்று எண்ணும் ஊழியர்கள்தான் தேவை. இவ்வேலைக்குப் பணம் அதிகம் தேவையில்லை. துடைப்பம், கூடை, சம்மட்டி, கோடாலி இவை வாங்க மட்டுமே பணம் தேவை. கிருமிகளைக் கொல்வதற்கு ஏதாவது மருந்து தேவை. இந்த ரசாயன மருந்துகளை யெல்லாம் விடச் சிறந்தது காய்ந்த சாம்பல். அதைத் தவிர, கிராமவாசிகளே அதிகச் செலவின்றி எந்த மருந்தைத்தயாரித்துக் கொள்ளமுடியும் என்று பரோபகார சிந்தையுள்ள ரசாயனவாதிகள் கூறட்டும்.

—'ஹரிஜன்' – 3—2—1935

## 10

# தோல் பதனிடும் தொழில்

கிராமத்தில் தோல் பதனிடுவது தொன்று தொட்டு வழங்கி வந்த தொழில். அது ஓர் இழி தொழிலாக ஆனது எப்பொழுது என்பதை யாரும் சொல்ல முடியாது. பண்டைக் காலத்தில்

அது இழி நிலையில் இருந்திருக்க முடியாது. நாட்டுக்கு மிகவும் உபயோகமான, அவசியமான ஒரு தொழிலைச் செய்வதால், ஏறக் குறையப் பத்து லட்ச மக்கள், பரம்பரைத் தீண்டாதாராகத் தள்ளி வைக்கப்பட்டுள்ள பரிதாப நிலையை இன்று காண்கிறோம். உழைப்பை இழிவாகக் கருதி உதாசீனம் செய்யத் தொடங்கிய நாளன்றே நாட்டுக்கு நாசம் பிறந்துவிட்டது. நாட்டுக்கு உயிர் நாடியாக இருந்த உண்மையான உழைப்பின் மூலம் நாட்டை உயிர்ப்பித்து வந்த லட்சக்கணக்கான ஏழைத் தொழிலாளர் இழி குலத்தினராக மதிக்கப்பட்டனர். உழைக்காமல், உடல் வாடா மல் சுகித்து வந்த ஒரு சிலர் உயர்ந்தோராகி விட்டனர். இத னல் நாட்டுக்கு ஆன்மிகத் துறையிலும், பொருளாதாரத் துறையி லும் நஷ்டம் ஏற்பட்டது. ஆன்மிகச் சீர்கேடு, பொருளாதார நஷ்டம் ஆகிய இரண்டில் எது பெரிய நஷ்டம் என்று மதிப்பிடு வது அரிது. உழவரையும் தொழிலாளிகளையும் நாம் உதாசீனம் செய்து விட்டதால், நாம் வறுமைக்கும் சோம்பலுக்கும் அடிமை யாகி விட்டோம். மிகப் பக்குவமான தட்ப வெப்ப நிலையும், வானை முட்டும் மலைகளும், பெரிய ஆறுகளும், பரந்த கடற்கரைப் பரப்பும் கொண்ட நம் நாட்டின் இயற்கை வளமோ அளவிடற்கரி யது. கிராமங்களில் இவ்வளத்தை நாம் சரியாகப் பயன் படுத்தியிருந்தால், வறுமையும் பிணியும் நம்மை வாட்டியிருக்க மாட்டா. ஆனால், உடல் உழைப்புக்கும், அறிவுவேலைக்கும் சம்பந்த மில்லாமல் நாம் செய்து விட்டதால்தான், உலகிலேயே மிக மோசமான நிலையை அடைந்துவிட்டோம். கொடிய சுரண்ட லுக்கு ஆளானோம். நம் நாட்டு மக்களோ, அற்ப ஆயுள் கொண் டவராகி விட்டனர். தோல் பதனிடும் தொழில் சீர்கெட்டுள்ளது, கிராமங்கள் இன்று அடைந்துள்ள இழி நிலைக்கு நல்ல எடுத்துக் காட்டு. மனித சமுதாயத்தில் ஒரு பகுதியினருக்கு நாம் செய்யும் இத்துரோகத்தை நாம் உணரும்படி செய்தது, காலஞ் சென்ற மதுசூதன் தாஸ். முறைப்படி தோல் பதனிடும் தொழிலில் பயிற்சி தர, அவர் ஒரு தொழிற்சாலையை நிறுவினர். அவர் எதிர்பார்த்த அளவுக்கு அது வெற்றி தரவில்லை. ஆனல், கட்டாக் ஊரைச் சேர்ந்த நூற்றுக்கணக்கான செருப்புத் தொழி லாளிகளுக்கு அவர் பிழைக்கும் வழி தேடித் தந்தார்.

ஆண்டுதோறும் ஒன்பது கோடி ரூபாய் மதிப்புள்ள தோல் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்படுகிறதென்றும், இதில் பெரும் பகுதியைக்கொண்டு உற்பத்தி செய்யப்படும் சாமான்கள் மீண்டும் இந்தியாவுக்கு இறக்குமதி செய்யப்படுகின்றன என்றும் மதிப்பிடப்பட்டுள்ளது. இதனல் நம் நாட்டின் செல்வமும் ஆற் றலும் அழிகின்றன. தோல் பதனிடுவதிலும், நம் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான பல பொருட்களை அத் தோலி லிருந்து செய்வதிலும், நாம் அடையக்கூடிய பயிற்சியையும் தேர்ச் சியையும் நாம் இழக்கிறோம்.

தோல் பதனிடுவதற்கு, அதிகத் தொழில் திறமையும் நுட்ப அறிவும் தேவை. கணக்கற்ற விஞ்ஞான நிபுணர்கள், இத்

தொழிலில் ஈடுபட்டுத் தங்கள் ஆற்றலையும், ஆக்கல் சக்தியையும் நன்கு வளர்க்கலாம். கிராமத்திலிருந்தும் ஒதுக்கப்பட்டு, அசுத்தமான சேரிகளில், வறுமையிலும் இழிவிலும் உழன்று, அன்றாட வாழ்க்கைக்குப் போராட்டம் நடத்திவரும் ஹரிஜனங்களின் நிலையை உயர்த்த வேண்டும். இதன் மூலம் கிராமங்களைச் சீர்ப்படுத்திக் கல்வி, கலை, சுத்தம், சீர், செழிப்பு ஆகியவை கிராமங்களில் பரவும்படி செய்ய வேண்டும். கிராம வளர்ச்சிக்காக, விஞ்ஞான அறிவையும் பயன்படுத்த வேண்டும். தோல் பதனிடும் தொழில் முறையில் பலவகை முன்னேற்றங்களை ரசாயன நிபுணர்கள் கண்டுபிடிக்க வேண்டும். விஞ்ஞான நிபுணர், கிராம மக்கள் போக்கை அறிந்து, அதைத் திருத்துவதற்காக, விட்டுப் பிடிக்கவேண்டும். கிராமங்களில் இன்னும் தொங்கிக் கொண்டிருக்கும் தொழில் முறையை அறிந்து அதை அபிவிருத்தி செய்ய முயலவேண்டும். அந்த முறையை உடனடியாக அடியோடு ஒழித்துவிட முடியாது. அது பல காலமாக நிலைத்து வந்துள்ளது. அம் முறையில் நன்மையில்லாவிடில், இவ்வளவு காலம் நிலைத்திருக்க முடியாது. கிராமத்தில் தோல் பதனிடும் முறை பற்றி, நான் அறிந்தவரை, சாந்திநிகேதனத்தில்தான் ஆராய்ச்சி நடந்து வருகிறது. இப்பொழுது மூடப்பட்டுவிட்ட சாபர்மதி ஆசிரமத்திலும் இந்த ஆராய்க்சி ஆரம்பிக்கப்பட்டது. சாந்திநிகேதனத்தில் நடந்துவரும் ஆராய்ச்சியின் முன்னேற்றத்தை என்னால் கவனிக்க முடியவில்லை. சாபர்மதி ஆசிரமம் இப்பொழுது ஹரிஜன ஆசிரமமாக மாற்றப்பட்டுள்ளது. இந்த ஆசிரமத்தில் ஆராய்ச்சி மீண்டும் தொடங்கக் கூடும். ஆனால், ஆராய்ச்சிக் கடலில், இம் முயற்சிகள் ஒரு சில துளிகளே.

பசுப் பராமரிப்பு, ஹிந்து மதக் கோட்பாடுகளில் ஒன்று. உணவுக்காக மாட்டை உண்மை ஹரிஜன் யாரும் கொல்ல மாட்டார். ஆனால், தீண்டப்படாதாரான பின்பு, செத்த மாட்டிறைச்சியைத் தின்னும் தீய பழக்கம் அவர்களுக்கு ஏற்பட்டுள்ளது. பசுவைக் கொல்லமாட்டார்கள்; ஆனால், இறந்துபோன பசுவின் இறைச்சியை விரும்பித் தின்பார்கள். இதனால் உடம்புக்குக் கெடுதல் இல்லாமலிருக்கலாம். ஆனால், அதைத் தின்பது, மனநிலையை இழிவுபடுத்துவதுபோல், வெறெதுவும் செய்யாது. அது உண்மையில் அருவருக்கத்தக்க பழக்கமாயிருந்தபோதிலும், இறந்த பசு ஒன்று, தோல் பதனிடும் ஹரிஜனர் வீட்டுக்கு எடுத்துவரப்பட்டால், அன்றைய தினம் அவர்கள் வீட்டில் பெரும் கொண்டாட்டமாகத்தான் இருக்கிறது. செத்த பசுவைச் சுற்றிச் சிறுவர்கள் குதித்துக் கும்மாளம் போடுவார்கள். பசுவை உரிக்கும் போது, இறைச்சித் துண்டுகளையும் எலும்புகளையும் எடுத்து ஒருவரொருவர் மீது வீசி விளையாடுவார்கள். குடும்பம் முழுதும் ஒரே குதூகலமாயிருக்கும் என்று, இப்பொழுது தன் வீட்டை விட்டு ஹரிஜன ஆசிரமத்தில் வசித்துவரும் தோல் பதனிடும் தொழிலாளி கூறுகிறார். செத்த பசுவின் இறைச்சியைத் தின்னும் பழக்கத்திலிருந்து ஹரிஜனங்களை மீட்பது எவ்வளவு கடின

மான வேலை என்பதை நான் அனுபவத்தில் கண்டறிந்துள்ளேன். தோல் பதனிடும் முறையைத் திருத்தி, அதில் முன்னேற்றம் ஏற்படுத்தினால், இறைச்சி தின்னும் இப் பழக்கம் தானாகப் பட்டொழியும்.

கூறுபோட்டுச் சோதனை செய்யும் கலையையும் திறமையையும் பயன்படுத்த இது நல்ல வாய்ப்பு. பசுப் பராமரிப்பிலும் இது பெரிய முன்னேற்றமாகும். கசாப்புக் கடைக்காரர் கத்தியிலிருந்து பசுவை நாம் காக்கவேண்டுமானால், அதிகப்படியாக பால் தரும்படி நாம் பசுவை புஷ்டியாக வளர்க்கவேண்டும். உழுவதற்கு நல்ல வலுவுள்ள மாடுகளை ஈன்றெடுக்கும்படி வளர்க்க வேண்டும். சுமை தாங்குவதற்கு நல்ல வலுவுள்ள மாடுகளை வளர்க்க வேண்டும். சாணத்தை நல்ல உரமாகப் பயன்படுத்த வேண்டும். பசுவோ, கன்றோ இறந்துவிட்டால் தோல், எலும்பு, இறைச்சி முதலியவற்றை நாம் சிறந்த வழிகளில் பயன்படுத்த வேண்டும். இவற்றையெல்லாம் செய்ய நாம் பழகிக்கொண்டால் தான், பசுவைக் கசாப்புக்கடைக்காரரிடமிருந்து காக்க முடியும்.

இப்பொழுது செத்த மாட்டின் உடலை மட்டும் கவனிப்போம். தோல் பதனிடுவோருக்கு நல்ல வேலையாக, செத்த மாட்டில் சிரத்தையேயன்றிக் கசாப்பில் அடிக்கும் மாட்டு விஷயத்தில் சிரத்தை இல்லை. செத்த மாட்டை ஒழுங்கான முறையில் வீட்டுக்கு எடுத்துவர அவருக்கு வசதி கிடையாது. மாட்டைத் தூக்கி வருவார்கள்; அல்லது இழுத்து வருவார்கள். இதனால் தோல் பாதிக்கப்பட்டு நஷ்டம் ஏற்படுகிறது. தோல் பதனிடுவோர் செய்யும் அரிய சேவையையும், மாட்டை அவ்வாறு இழுத்து வருவதால் ஏற்படும் சேதத்தையும் கிராமவாசிகள் உணர்ந்தால், தோலைப் பாதிக்காத வகையில் செத்த மாடுகளைத் தூக்கிச் செல்ல வசதிகள் செய்து தருவார்கள்.

அதற்கடுத்தபடியாக மாட்டின் தோலை உரிக்க வேண்டும். இதற்கு அதிகத் திறமை தேவை. கிராமத்தில் தோல் பதனிடுவோர் தங்கள் கத்தியைக் கொண்டு இதைச் செய்வதைவிட மேலாகவோ, விரைவிலோ ரண சிகிச்சை நிபுணர்கள்கூட செய்ய முடியாது என்று சொல்லுகிறார்கள். இவ்வேலையை அறிந்திருக்க வேண்டியவர்களை விசாரித்தேன். கிராமவாசியின் முறையைவிடச் சிறந்த முறையை யாரும் இதுவரை எனக்குக் காட்டியதில்லை. சிறந்த முறை வேறு இருக்க முடியாது என்று சொல்லவில்லை. என் அனுபவத்தில் கண்டவரை, இல்லையென்று கூறுகிறேன். கிராமத்தில் தோல் பதனிடுவோருக்கு எலும்பு உபயோகமில்லை. ஆகவே, எலும்பைத் தூக்கி எறிந்து விடுகிறார்கள். மாட்டை உரிக்கும்போதே நாய்கள் சுற்றி நின்று கொண்டு, எல்லாவற்றை யல்லாவிடினும், சில எலும்புகளை எடுத்துக்கொண்டு ஓடிவிடுகின்றன. இது நாட்டுக்கு பெரும் நஷ்டம். எலும்புக்கு எத்தனையோ உபயோகங்கள் உண்டு. அதை

நன்ருகப் பொடியாக்கி, உரமாக உபயோகித்தால் அது மிகச் சிறந்தது. நாய்கள் எடுத்துச் சென்ற பின் எஞ்சியுள்ள எலும்பு களை நாம் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிரேம். அவர்கள் அவற்றிலிருந்து பொத்தான், கைப்பிடி முதலிய சாமான்களைச் செய்து நமக்கே விற்றுவிடுகிருர்கள்.

தோல் பதனிடும் தொழிலைச் சீர்ப்படுத்த மற்ருெரு வழி, இதை நகரங்களில் தொழிற்சாலைகளில் செய்வது. இந்தியா வில் இப்பொழுது தோல் பதனிடும் தொழிற்சாலைகள் பல உள்ளன. அவற்றைப்பற்றி நாம் இங்கு ஆராய வேண் டியதில்லை. அதனல் ஹரிஜனங்களுக்கோ, கிராமவாசிகளுக்கோ நன்மை ஏற்படப்போவதில்லை. கிராமங்களுக்கு இதனல் இரு வகை நஷ்டம் ஏற்படுகிறது. நகரங்களில் அம்முறைப்படி இத் தொழிலை நடத்துவது, கிராமங்களுக்கும் கிராமவாசிகளுக்கும் அழிவையே தேடித் தரும். ஏழு லட்சம் கிராமங்களில் வசிக்கும் கிராமவாசிகளுக்கு நகரத் தொழில் முறை ஆதரவளிக்காது. கிராமங்களில் இங்குமங்கும் இன்னும் தொங்கிக்கொண்டிருக்கும் தோல் பதனிடுவது போன்ற ஒரு சில தொழில்களையும் கிராமங் களிலிருந்து எடுத்துவிடுவது, கிராமவாசிகள் அறிவையும் ஆற் றலையும் பயன்படுத்திக்கொள்ள இப்பொழுதுள்ள சிறிது வாய்ப்பும் இல்லாமல் செய்துவிடும். கிராமக் கைத்தொழில்கள் மறைந்துவிட்டால், வயல் வேலைமட்டும் செய்துகொண்டு வரு டத்தில் ஐந்து, ஆறு மாதங்களுக்கு வேலையில்லாமல் சோம்பலா யிருக்கும் கிராமவாசிகள், அறிவு உயர்வோ, உடல் வளர்ச்சியோ இல்லாமல், சந்தோஷமோ, நம்பிக்கையோ இல்லாமல், மிருகங் களைப்போல்தான் வாழவேண்டி வரும்.

ஆகவே, இத் துறையில் சுதேசிப் பிரியர் வேலை செய்வதற் கும், நிபுணர்களின் அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்திக் கொள்ளுவதற்கும் நல்ல வாய்ப்பும் வசதியும் உள்ளன. இந்த வேலையைச் செய்வதால், ஒரே கல்லால் மூன்று கனிகளை வீழ்த்த முடியும். இதனல் ஹரிஜனங்களுக்குச் சேவை செய்யமுடியும். கிராம வாசிகளுக்குச் சேவை செய்ய முடியும். வேலையில்லாமல் இன்று திண்டாடும் நடுத்தர வகுப்பைச் சேர்ந்த அறிவாளி களுக்கு, இதனல் கௌரவமான வேலை கிடைக்கும். மேலும், அறி வாளிகள் பாமர மக்களுடனும், கிராமவாசிகளுடனும் நெருங்கிப் பழகவும், தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளவும் இது வாய்ப்பளிக் கிறது.

—'ஹரிஜன்' – 20—10—1934

# 11

# உழைப்பை மிச்சப்படுத்துவதா? பிழைப்பைக் கெடுப்பதா?

பூர்வாங்க வேலைத்திட்டத்தைப் பற்றி நான் எழுதியிருந்ததைப் படித்துவிட்டு, அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கத்தை நிறுவுவதில் சிரத்தையும் உற்சாகமும் கொண்ட பெண் நண்பர் ஒருவர் எனக்குப் பின்வருமாறு கடிதம் எழுதியுள்ளார் :

''கிராமங்களிலாவது நெல்லைக் கையால் குத்தவேண்டுமென்பதும், மாவரைப்பதற்குத் திரிகையை உபயோகிக்கவேண்டும் என்பதும் எனக்குத் திகைப்பை உண்டாக்கிக் கிராம சேவையில் எனக்கிருந்த உற்சாகத்தைத் தணித்துவிட்டன. இந்த அபிவிருத்தித் திட்டத்தில் மனிதன் உழைப்பையும் நேரத்தையும் மிச்சப்படுத்த உதவும் பலவித சாதனங்களையும் பயன்படுத்திக் கொள்ளாதது, நமது சக்தியையும் நேரத்தையும் விரயமாக்குவதாகும் என்று எனக்குத் தோன்றுகிறது. நெல் குத்துவதிலும் மாவரைப்பதிலுமே கிராம வாசிகளும் கிராம ஊழியர்களும் தங்கள் நேரத்தைச் செலவு செய்தால் வேறு அபிவிருத்தி வேலை எதற்கும் அவர்களுக்கு நேரம் இருக்காது. பண்டைக் காலத் தொழில் முறைகளை மீண்டும் புகுத்தினுல், முதலில் உற்சாகத்துடன் ஆண்கள் அந்த வேலையைச் செய்வார்கள். சிறிது காலம் சென்றபின் குத்துவது, அரைப்பது போன்ற வேலையின் முழுச் சுமையும் பெண்களாகிய எங்கள் மீது சுமத்தப்படும். இதனுல் பெண்கள் இப்பொழுது அடைந்துள்ள ஒரு சிறிது முன்னேற்றத்தையும் இழக்க நேரிடும்.''

இந்த வாதத்தில் ஒரு தவறு உள்ளது. உழைப்பை மிச்சப்படுத்தும் சாதனங்களை உபயோகிக்க மறுப்பது என்ற பிரச்னையே இல்லை. கிராமவாசிகளுக்கு உண்ணவும் உடுத்தவும் போதிய வசதி இருந்தாலாவது நெல் குத்தல், மாவரைத்தல் போன்ற வேலைகளை அவர்களே வீட்டிலேயே செய்யவேண்டுமென்று வற்புறுத்தாமலிருக்கலாம். கைக்குத்தல் அரிசிக்கும், யந்திரத்தில் அரைக்கப்பட்ட மாவுக்கும், வீட்டில் அரைக்கப்பட்ட மாவுக்கும் வித்தியாசமில்லை யென்றே வைத்துக்கொள்ளுவோம். இவற்ருல் ஆரோக்கியம் பாதிக்கப்படுமா என்றபிரச்னையும் ஒருபுற மிருக்கட்டும். ஆனுல், இன்ரு, நெல் குத்தல், மாவரைத்தல் போன்ற வேலைகளையும் விட்டு, உபயோகமான வேலை வேறெதுவும் செய்யாமலும் கிராமவாசிகள் தங்கள் நேரத்தை வீணுக்குகிருர்கள் என்பதுதான் பிரச்னை. நேரத்தை வீணுக்கிக் கொண்டு பட்டினியால் வாடிக்கொண்டிருக்கும் மனிதன், நாணயமான உழைப்பில் அந்த நேரத்தைப் பயன்படுத்தி ஓரணு சம்பாதிக்க முடியுமென்ருலும் அந்த வாய்ப்பை வரவேற்பான். அதைவிட்டு, அந்த உழைப்பை மிச்சப்படுத்தச் சொன்னுல்,

ஓரணு சம்பாதிக்கும் வாய்ப்பை அவன் இழக்க வேண்டியது தான். கிராம ஊழியர்கள் நெல் குத்தவேண்டும், மாவரைக்க வேண்டும் என்று என் நண்பர் கூறுவது சரியல்ல. நெல் குத்துவது போன்ற வேலைகளைக் கிராம ஊழியர்கள் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்தான். தெரிந்தால்தான் அம் முறைகளைத் திருத்தவோ, முன்னேற்ற முறைகளைச் சிபாரிசு செய்யவோ அவர்களால் முடியும். ஆரம்ப உற்சாகத்தில் ஆண்கள் எல்லா வேலைகளையும் செய்வார்களென்றும், பிறகு வேலைகள் முழுவதும் பெண்கள் மீது சுமத்தப்படுமென்றும் அவர் கூறுவதும் சரியல்ல. நெல் குத்துவது, மாவரைப்பது போன்ற வேலைகள் பெண்களுக்கே உரியன. அவை கௌரவமான வேலைகள் என்பது மட்டுமல்ல. அவற்றால் தேக-ஆரோக்கியமும் வளரும். அத் தொழிலைச் செய்து, பல்லாயிரக்கணக்கான பெண்கள் பிழைப்புக்கு வழி தேடிவந்தனர். அவர்கள் இன்று வேலையில்லாமல் திண்டாடுகின்றனர். அவர்களிடமிருந்து அபகரிக்கப் பட்ட இந்த இரு தொழில்களுக்கும் பதிலாக, அவர்களுக்கு வேறு தொழில் கிடைக்கவில்லை.

பெண்கள் இப்பொழுது அடைந்துள்ள ஒரு சிறிது முன்னேற்றம் என்று அப் பெண்மணி எழுதும்போது, நகரங்களில் வசிப்பவர்களை மட்டுமே அவர் குறிப்பிட்டிருக்கவேண்டும். ஏனென்றால், கிராமங்களில் சேவை செய்ய ஊழியர்கள் இன்னும் செல்லவேயில்லை. ஏழு லட்சம் கிராமங்களில் மக்கள் வசிக்கும் நிலைகூட, அந்த ஊழியர்களில் பெரும்பாலோர்க்குத் தெரிந்திருக்காது. சத்துள்ள உணவும், போதிய உடையுமில்லாமல், அவர்கள் வாடிவருவது அந்த ஊழியர்களுக்குத் தெரியாது. சத்து இழந்த அரிசியையும், மாவையும் சாப்பிட்டு, அவர்களும் அவர்கள் குழந்தைகளும், அவர்களுக்குள்ள சிறிது பலத்தையும் இழந்து வருவதும் அந்த ஊழியர்களுக்குத் தெரியாது.

நெல் குத்துவது, மாவரைப்பது போன்ற பண்டைக்கால முறைகளிடம் எனக்குத் தனி அபிமானம் ஒன்றும் கிடையாது. இன்று சோம்பலாயுள்ள கோடிக்கணக்கான கிராமவாசிகளுக்குக் கொடுக்கக் கூடிய வேலை வேறெதுவும் இல்லை என்பதால் தான் நான் அவற்றை ஆதரிக்கிறேன். கிராமவாசிகளை வாட்டும் பொருளாதார நெருக்கடியைத் தீர்த்தால் ஒழியக் கிராம முன்னேற்றம் சாத்தியமில்லை என்று நான் கருதுகிறேன். ஆகவே, வீணகக் கழிக்கும் நேரத்தில் உபயோகமான ஒரு வேலையைச் செய்யும்படி கிராமவாசிகளைத் தூண்டுவதே பெரிய முன்னேற்ற வேலையாகும். எனக்குக் கடிதம் எழுதியுள்ள பெண்மணியும், அவ்வரைப் போன்றவர்களும், ஒரு கிராமத்திற்குச் சென்று கிராம வாசிகளிடையே அவர்களுடன் சிறிது காலம் வசித்துப் பார்த்தால் நான் சொன்னதன் உண்மையை வெகு விரைவில் உணர்வார்கள்.

—'ஹரிஜன்' – 30—11—1934

# 12

# கைத்தொழில் சங்கத்தின் லட்சியம்

1935, ஜனவரி 28–ஆம் தேதி ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த நண்பர் ஒருவர் காந்திஜியைக் கேட்ட கேள்விகளும், அவற்றிற்குக் காந்திஜி அளித்த பதில்களும் தினசரிப் பத்திரிகைகளில் பிரசுரிக்கப் பட்டன. பிரசுரமாவதற்கு முன் காந்திஜி அவற்றைச் சரி பார்த்தார். அவை பின் வருமாறு :

**கேள்வி :** கிராமக் கைத்தொழில் சங்க வேலையை எப்பொழுது தொடங்க முடியும் என்று எண்ணுகிறீர்கள் ?

**பதில் :** "தொடங்குவது" என்பதற்குச் சரியான பொருள் கண்டு பதில் கூறுவது கடினம். கிராமங்களில் ஸ்தாபனங் களை நிறுவி, வேலை எப்பொழுது நடத்தப்படும் என்று கேட் பதானால், அதை நான் இப்பொழுது நிர்ணயித்துக் கூற முடியாது. நம் வேலையோ விரிவானது ; பல வகைப்பட்டது. தவறுகள் எதுவும் செய்யாமலிருக்கும் பொருட்டு, நாம் மிகவும் ஜாக்கிரதையாகச் சென்று வருகிறோம். திக்குத்தெரியாமல் கடலில் செல்வது போன்றது இன்றைய நிலை. மத்திய போர்டு அடுத்த மாதம் முதல் தேதி வார்தாவில் கூடுகிறது. அதற்கிடையில் நாம் ஒரு கணமும் வீணாக்காமல் வேலை செய்யவேண்டியிருக்கிறது. பல முக்கியமான தகவல் களைச் சேகரித்துள்ளோம் ; பலரும் நமக்கு உதவி செய் வதாக வாக்களித்துள்ளனர்.

**கே :** எல்லா மாகாணங்களிலும் சங்கத்தின் கிளைகளை ஏக காலத்தில் நிறுவ உத்தேசித்திருக்கிறீர்களா ? அல்லது தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சில இடங்களில் முதலில் தொடங்குவீர்களா ? சங்கத்தின் தலைமைக் காரியாலயம் எங்கிருக்கும் ?

**ப :** கிளைச் சங்கங்கள் நிறுவ உத்தேசமில்லை. எத்தனை கிராமங்கள் இருக்கின்றனவோ, அத்தனை சங்கங்கள் நாடெங்கும் ஏற்படுத்தப்படும். ஒவ்வொரு சங்கத்துக்கும், உரிய வேலை பகிர்ந்து தரப்படும். ஒரு மத்திய ஸ்தாபனத் திடம் அதிகாரம் சிக்காமல், எல்லாச் சங்கங்களும் சுயேச்சை யுடன் வேலை செய்வதுதான் வெற்றிக்கு வழி தேடும். தலைமைக் காரியாலயம் டில்லியில் இருக்கும். சங்கத்துக்கு ஒரு பெரிய தோட்டமும் பங்களாவும் சேத் ஜம்னலால் தந்துள்ளார். அவசியமானல் இன்னும் அதிக நிலம் தருவ தாகவும் வாக்களித்துள்ளார்.

கே : கைத்தொழில்கள் பற்றிய புள்ளி விவரங்களைச் சேகரிப்பதில் சங்கம், தன் முயற்சியையே நம்பியிருக்குமா? அல்லது, இப்போது இந்தியாவிலுள்ள அதிகாரபூர்வமான ஸ்தாபனங்கள், பொது ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் உதவியை நாடுவீர்களா?

ப : வேலை மிகவும் விரிவாயுள்ளதால், சங்கம் எல்லா ஸ்தாபனங்களின் உதவியையும் நாடிப் பெறும். அரசாங்கத்தைச் சேர்ந்த ஸ்தாபனங்களின் உதவியையும் நாடுவோம்.

கே : மற்ற நாடுகளிலும் இந்தியாவிலும் பொருளாதார வர்த்தகத் துறைகளில் உள்ள போக்குகளை அனுசரித்து அவற்றிற்கு முரண்படாமல் உள்ள கைத்தொழில்களை மட்டுமே சங்கம் வளர்க்குமா? அல்லது, அப்போக்குகளைப் பொருட்படுத்தாமல் கைத்தொழில்கள் செழிப்பாயிருந்த காலத்தில் லட்சக்கணக்கான கிராமவாசிகளுக்குப் பிழைப்புத் தேடித் தந்தன என்ற காரணத்திற்காக அவற்றைச் சங்கம் வளர்க்குமா?

ப : கிராமங்கள் ஆன்மிக, பொருளாதாரத் துறைகளில் முன்னேறுவதற்கு உதவும் எல்லாக் கைத்தொழில்களையும் வளர்க்கச் சங்கம் பாடுபடும். முரண்பட்ட உலக சக்திகள் என்று சொல்லப்படுவனவற்றுல் சங்க வேலை தடைப்படாது.

கே : இந்தியாவில் பருத்தி ஆலைகள் கதர் இயக்கத்தை வரவேற்கவில்லை என்பது அனைவரும் அறிந்த உண்மை. ஸ்திரமான சுதேசி ஆலைத் தொழில்களுடன் போட்டி போடக்கூடிய கைத்தொழில்களை நீங்கள் வளர்த்தால், சங்கத்துக்கு எதிர்ப்பு ஏற்படும் என்று நீங்கள் அஞ்சவில்லையா?

ப : சர்க்கரை ஆலைகள், அரிசி, மாவு மில்கள் போன்றவற்றின் எதிர்ப்பு சங்கத்துக்கு ஏற்படக்கூடும். ஆனல், அதை நாம் சமாளிக்க வேண்டியதுதான். சமாளிக்க முடியுமென்று நம்புகிறேன்.

கே : சர்க்கரை, வெல்லம் ஆகியவற்றை உதாரணத்துக்காக எடுத்துக்கொள்ளுவோம். சர்க்கரைத் தொழில் நல்ல ஸ்திரமான வகையில் அமைந்துள்ளது. அரசாங்கம் பண உதவி செய்து ஆதரவளித்து வருகின்றது. சங்கம், வெல்லத்தின் உபயோகத்தைப் பரப்பப் பாடுபடும் என்று சில நாட்களுக்கு முன் பத்திரிகைகளில் செய்தி வெளியாகியது. அப்படியானல், சர்க்கரைத் தொழிலின் எதிர்ப்பை அது உண்டாக்காதா?

ப : எதிர்ப்பை ஏற்படுத்தக்கூடும். சர்க்கரையை விட வெல்லத்தில் அதிக உணவுச் சத்துள்ளது என்பது வைத்தியர்கள் கண்ட முடிவு. ஆகவே, சர்க்கரையைக் குறைத்துக்கொண்டு

மக்கள் வெல்லத்தை அதிகமாக உபயோகிக்கத் தொடங்கினுல், அது நாட்டுக்குப் பெரிய நன்மை பயக்கும். எந்த ஆலேத் தொழிலினுலும் பொது மக்கள் ஆரோக்கியத்துக்குக் கெடுதல் ஏற்படாமலிருக்கும்படி பார்த்துக்கொள்ளுவது சங்கத்தின் வேலேயும் பொதுமக்களின் கடமையுமாகும்.

கே: ஏற்கனவே நாட்டில் வேலே செய்துவரும் கட்டுப்பாடான ஆலேத் தொழில்களுக்கு ஆதரவாகவும், துணையாகவும் சங்கம் வேலே செய்வதுபற்றி நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?

ப: அதற்கு நான் ஏற்கனவே பதில் சொல்லிவிட்டேன்.

கே: நீங்கள் விரும்புவதுபோல், மறைந்துள்ள கைத்தொழில்களே வளர்ப்பதற்கும், முதலாளித்துவப் பேராசைக்குப் பலியாகாமல், விவேகத்துடனும், மக்கள் நலனே மனத்திற்கொண்டும் இந்தியாவில் யந்திரத் தொழிலேப் பரப்புவதற்கும் அடிப்படையில் முரண்பாடு இல்லே என்று நான் நினைப்பது தவரு?

ப: இந்தியாவைப்போன்ற பரந்ததோர் நாட்டில், லட்சக்கணக்கான மக்கள் ஆண்டில் நான்கு மாதம் வேலேயில்லாமல் திண்டாடிக்கொண்டிருக்கும் நிலேயில் யந்திரத் தொழிலேப் பரப்பினுல், பாமர மக்களுக்குச் சௌகரியமாக வாழ வசதி கிடைக்குமா என்று என்னுல் சொல்வதற்கில்லே. கிராமங்களிலே நடக்கக்கூடிய தொழில்கள் நீங்கலாக, மற்ற ஆலேத் தொழில்களால் ஏழைகள் தங்கள் வேலேயை இழந்து பட்டினி கிடக்கத்தான் வேண்டும். அவ்வாறு வேலேயில்லாமல் திண்டாடும் லட்சக்கணக்கான மக்களுக்கு வேறு வேலே தேடித் தரவேண்டும்.

கே: சங்கம் செய்யப் போகும் வேலேயைச் சங்கத்திற்கு முன்பாகவே அரசாங்கம் செய்ய உத்தேசித்துள்ளதாகப் பத்திரிகைகளில் வெளிவந்துள்ள செய்தி உண்மையாயிருக்குமானுல், சங்கத்துக்கும் சர்க்காருக்குமிடையே போட்டியோ, பூசலோ ஏற்படும் என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா?

ப: சங்கத்துக்கும் சர்க்காருக்குமிடையே போட்டி ஏற்பட இடமில்லே. நான் அறிந்தவரை, சுகாதாரம் நீங்கலாக மற்ற அம்சங்களில் சங்கத்தின் வேலேத் திட்டத்துக்கும் சர்க்காரின் வேலேத் திட்டத்துக்கும் லட்சியத்திலேயே வேறுபாடு உள்ளது. சர்க்கார் ஸ்தாபனங்கள், சுகாதார வேலே செய்துவரும் கிராமங்களில் நாம் வேலே செய்யக்கூடாது. சர்க்காருடன் போட்டிபோட்டு அவர்கள் வேலேயைப் பறித்துக்கொள்ள வேண்டுமென்ற எண்ணமில்லே. அவர்கள் செய்யும் வேலேக்குத் துணையாக நாமும் செய்யலாம்.

கே: இச்சங்கத்தின் மூலம், கிராமங்களுடன் நெருங்கிய தொடர்பு ஏற்படுத்திக்கொண்டு, மீண்டும் பொதுஜன சட்ட



1940–மகாத்மா எரவ்டா ராட்டையில் நூற்றுக்கொண்டிருக்கிறார்.



அன்னை கஸ்தூரிபாய் நூற்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறார்.

மறுப்பு இயக்கம் தொடங்க அதைப் பயன்படுத்திக் கொள்ளுவீர்கள் என்று சர்க்கார் சந்தேகிப்பதை நீங்கள் அறிந்திருக்கக்கூடுமே?

ப: கிராமங்களுடன் ஏற்படும் தொடர்பை அவ்வாறு பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்ற எண்ணம் என் மனத்தில் உதிக்கவே இல்லை. அம்மாதிரி மறைமுகமாய் வேலை செய்யும் வழக்கம் என்னிடமில்லை. எந்த லட்சியத்திற்காக நான் பாடுபடுகிறேனே, அதையே அது தோற்கடித்து விடும். கிராமங்கள், ஆன்மிக, பொருளாதாரத் துறைகளில் முன்னேறவேண்டும் என்பதே என் லட்சியம். முன்னேற்றத்தை முன்னேற்றத்துக்காக விரும்புகிறேனே ஒழிய, வேறெதற்காகவும் அல்ல. அந்த முன்னேற்றம் ஏற்பட்டு விட்டால், என் லட்சியம் ஈடேறிவிடும். அது போலவே சட்ட மறுப்பு இயக்கம் தொடங்கவேண்டிய அவசியம் இனி எப்பொழுதாவது ஏற்பட்டால், அதைச் சுயேச்சையாகச் செய்வேன். வேறெந்த வேலையையும் அதற்காகப் பயன்படுத்திக்கொள்ளமாட்டேன். சாத்வீக சட்ட மறுப்பு இயக்கத்தில், சாத்வீகம் என்பதன் பொருளையும் தன்மையையும் உணர்ந்தால், இந்தச் சந்தேகத்துக்கே இடமில்லை. நான் சொல்வது உண்மையானல், வேறு முயற்சி இல்லாமல், சந்தேகம் தானுக நீங்கிவிடும் என்ற நம்பிக்கை எனக்குண்டு. அதற்காகக் காத்திருக்கப் பொறுமையுண்டு.

கே: உங்கள் கிராம வேலைத்திட்டத்தின் கொள்கையை சர்க்கார் சரியாக அறிந்து உங்களுக்கு உதவி செய்தால் பல அரிய காரியங்களைச் சாதிக்க முடியும் என்று நீங்கள் கூறினீர்களே? உதவியென்ருல் என்ன, பண உதவியா?

ப: என் வேலைத் திட்டத்தையும், செயல் முறையையும், லட்சியத்தையும் சர்க்கார் உணர்ந்து, என் வேலைக்கு பூரண ஒத்துழைப்புத் தந்தால், பல அற்புதங்களைச் செய்து காட்டமுடியும் என்று நான் கூறினேன். நான் பண உதவியை எதிர்பார்க்கவில்லை. அரசாங்கத்தின் ஒழுக்க, மனப்பூர்வமான ஆதரவையே நான் கோருகிறேன்.

—'ஹரிஜன்'–8–2–1935

## 13

# முன்னேற்றத்திற்கு அஸ்திவாரம்

இந்தியாவிலேயே வயது முதிர்ந்த ஊழியரும், தலைவரும், ஸ்ரீ ஹரிதயாள நாக் தான் என்று கருதுகிறேன். அவர் பின்வருமாறு எழுதியுள்ளார்:

"அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்க வேலையில் உங்களுக்குப் போதிய ஆதரவளிக்க ஊழியர்கள் முன்வராதது கண்டு நான் வருந்துகிறேன். நானும் இதில் என் கடமையிலிருந்து தவறிவிட்டேன் என்று நீங்கள் கூறினால், அந்தக் குற்றச்சாட்டை ஒப்புக்கொள்ள வேண்டியதுதான். என்னுடைய பொதுவாழ்வின் ஆரம்பம் முதற்கொண்டே, கிராமக் கைத்தொழில் பிரச்னையின் பொருளாதார அம்சங்களை நான் ஆராய்ந்து வந்துள்ளேன். உங்கள் திட்டத்தில் அந்தப் பொருளாதார அம்சம் இல்லாததால்தான் அதில் எனக்கு உற்சாகம் ஏற்படவில்லை. அது என் தவறாய் இருக்கலாம். அப்படியானால் என் தவறுதலைத் திருத்தவேண்டும்.

"நம் கிராமக் கைத்தொழில்களை விழுங்கிய அயல் நாட்டு வர்த்தகம் என்னும் ஓநாய், நாடு முழுவதும் இன்னும் திரிந்துகொண்டுதானிருக்கிறது. 'நயமான விலைக்குக் கிடைக்கும் பொருளை வாங்கு' என்ற வியாபார தந்திரத்தின் கோஷம்தான் இன்னும் ஒலித்துக்கொண்டிருக்கிறது. குடிசைக் கைத்தொழில் முறையால் உற்பத்தி செய்யப்படும் பொருட்கள் ஒரே அடியாகக் குவிந்து விடுகின்றன என்று வைத்துக்கொள்ளுவோம். ஆனால், வாங்குவதற்கு ஆளில்லாதபோது பொருளை உற்பத்தி செய்துகொண்டே போவதால் நஷ்டம்தானே? கைத்தறி, கதரை உற்பத்தி செய்ய முடியுமே ஒழிய, கதரை வாங்குவதற்கு ஆளையும் உற்பத்தி செய்ய முடியாது. நூல் நூற்கும் பலரும், தாங்கள் நூற்கும் நூலைக்கொண்டு நெய்த துணியை அணிவதில்லை என்பது நான் அனுபவத்தில் கண்ட உண்மை. அவர்களிற் பலர், கதரே அணிவதில்லை. நூலை விற்பதால் அவர்களுக்கு லாபம் ஒன்றும் கிடைப்பதில்லை. சிலர், நூற்ற நூலை விற்பதிலோ, நன்கொடையாக அளிப்பதிலோ சிரத்தை எடுத்துக் கொள்ளுவதில்லை. இத்தகையவர்கள் வெகு காலம் நூற்கமாட்டார்கள். கிராமத்தில் உள்ள கிராமவாசிகள் எல்லோரும் குடிசைத் தொழில் முறைப்படி உற்பத்தி செய்த பொருட்களையெல்லாம் தாங்களே உபயோகிக்காமல், விற்க முன்வந்தால், வாங்குவதற்கு யார் இருக்கிறார்கள்? இந்தியா அரசியலில் அடிமையாயிருக்கும் வரை, எந்த அயல் நாடும், அப்பொருள்களை வாங்காது. வெல்லம் உற்பத்தி செய்பவர், பெயருக்கு நாட்டுக்கு விசுவாசம் காட்டும் பொருட்டு அந்த வெல்லத்தைக் கொஞ்சம் ருசி பார்க்கலாம். ஆனால், காப்பியுடனோ, பாலுடனோ வெல்லத்தைக் கலந்து சாப்பிடுவாரா? கிராமத்தில் செருப்புகளை உற்பத்தி செய்யும் தொழிற்சாலையின் சொந்தக்காரர், இறக்குமதி செய்யப்படும் நல்ல நயமான, நேர்த்தியான செருப்புகளை வாங்காமல், தம் கிராமத்தில் செய்த முரடான செருப்புகளை உபயோகிப்பாரா? விற்பனைக்காகப் பொருட்கள் உற்பத்தியை நடத்தி வந்த பல சிறிய கம்பெனிகள் முறிந்து போனதை நான் கண்டுள்ளேன். விற்பனையின் மூலம் பணம் சம்பாதிப்பது மட்டுமே அவற்றின் நோக்கமாயிருந்ததால், அவை தோல்வி அடைந்தது தவிர்க்க முடியாதது. தங்களுடைய ஓய்வு நேரத்தில் தங்களுக்குச் சொந்தமான மூலப் பொருள்களைக் கொண்டு தங்கள் உபயோகத்திற்காக உற்பத்தி செய்யும் பொருள்களைவிட அயல்நாட்டுப் பொருள்கள் உண்மையில் நயமானவை அல்ல என்பதை இந்தியக் கிராமவாசிகள் உணர்ந்தாலொழிய அவர்கள் அயல் நாட்டுப் பொருள்களை உபயோகிப்பதை நிறுத்தமாட்டார்கள். இறக்குமதி செய்யப்படும் பொருள்களை வாங்குவதற்குக் கிராமவாசிகள் பணம் கடன் வாங்கவேண்டும். ஆனால், அன்றாட வாழ்க்கைக்கு

அவசியமான பொருள்களை அவர்கள் உற்பத்தி செய்வதற்குப் பணம் கடன் வாங்கவேண்டியதில்லை. கிராமவாசிகளைப் பொறுத்தவரை கூட்டுறவுப் பண்ட மாற்று முறை நாணய முறையைவிடச் சிறந்தது. அயல் நாட்டு வர்த்தகத்தால், சீரழிந்துள்ள இந்தியக் கிராமவாசிகள், இன்று பணத்தை அடிப்படையாகக் கொண்டுதான் தங்கள் எண்ணங்களை அமைக்கக்கூடிய நிலைக்கு வந்துள்ளனர்.''

ஸ்ரீ ஹரிதயாள பாபு வெகு நாள் உழைப்புக்குப் பின் இன்று ஓய்வு எடுத்துக்கொள்ள உரிமை பெற்றவர். அவர் பொது வேலையிலிருந்து விலகினால், அதை யாரும் இப்பொழுது குறைகூற முடியாது. ஆனால், அவருடைய நண்பர்களான பண்டித மாளவியாஜி, அப்பாஸ் தயாப்ஜி, விஜயராகவாச்சாரியார் ஆகியோரைப் போலவே, அவர் இன்னும் விடாமல் வேலை செய்து வருகிறார். ஆகவே, வயதாகிவிட்டதென்ற காரணத்தால், மற்றவர்கள் அவருக்குச் சலுகை காட்டவேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது. வயோதிகத்தால், அவருடைய உடல் வலியோ, மனோ திடமோ, புத்திக் கூர்மையோ பாதிக்கப்படாமல் உள்ளன; அவை நாட்டுக்குச் சேவை செய்ய என்றும் காத்துக்கொண்டிருக்கின்றன.

ஊழியர்களுக்கு ஏமாற்றம் ஏற்படவில்லை என்பதை நான் அவருக்குக் கூற விரும்புகிறேன். இத்துறை புதிது; வேலை எல்லையற்றது. ஊழியர்களால் சமாளிக்க முடியாத அளவுக்கு வேலை இருக்கிறது.

தம் கடமையிலிருந்து தவறிவிட்டதாக ஹரிதயாள பாபு ஒத்துக்கொள்ளுகிறார். அதனால்தான் அவருக்கு ஏமாற்றம் ஏற்பட்டுள்ளது. அவர் தம்முடைய இயல்புக்கிணங்க, இவ்வேலையில் இறங்கியிருந்தால், வேலை கடினமானது என்பதை உணர்ந்திருப்பார். ஆனால், அவருக்கு ஏமாற்றம் ஏற்பட்டிருக்காது. பொருளாதார அம்சத்தைக் காண அவர் வேலை செய்யாததால் தான், அந்த அம்சமில்லை என்று அவர் குறை கூறுகிறார்.

ஹரிஜன வேலையில் ஈடுபட்டதன் பயனாக, நம் நாட்டுக்கு விமோசனம் ஏற்படவேண்டுமென்றால், நாம் முதல் படியிலிருந்து ஏற ஆரம்பிக்கவேண்டும் என்ற உண்மையை உணர்ந்தேன். முதல் படியே ஆட்டம் கொடுத்தால், மற்றவை ஸ்திரமாக இருக்க முடியாது.

இன்று நாட்டின் முன்னுள்ள வேலைத் திட்டத்தில் பொருளாதார அம்சம் மட்டுமல்ல, எத்தனையோ அம்சங்கள் இருக்கின்றன. அவ்வேலைத் திட்டத்தில் கண்டுள்ளபடி நாட்டு மக்களுக்கு நல்ல உணவு கிடைக்கும்படி செய்வது, நாட்டுக்குச் செல்வத்தையும் ஆரோக்கியத்தையும் தேடித் தருவதாகும். தங்கள் சொந்த அரிசியை, ஆலையில் கொடுத்துத் தீட்டாமல் கிராமவாசிகள் சாப்பிட்டால், ஆரோக்கிய வளர்ச்சியைத் தவிர, ஒவ்வொரு ஆண்டும் முப்பது கோடி ரூபாயாவது மிச்சமாகும். ஆனால், துரதிருஷ்டவசமாக, தீட்டப்படாத அரிசி கடையில் கிடைப்பதே

இல்லை. நாட்டு மக்களுக்குத் தெளிவான வழி காட்டுவதற்குச் சங்கம் சற்று பொறுத்திருக்கவேண்டும். சீரான உணவு எது, அதைச் சமைக்கும் விதம் எது என்பது குறித்து நாட்டு மக்களுக்குக் கல்வி புகட்டவேண்டும்.

மட்டமான பொருட்களைக் கிராமங்களில் உற்பத்தி செய்து, அவற்றை வாங்க மனமில்லாதவர்கள் மீது அவற்றைச் சுமத்துவது திட்டத்தின் நோக்கமல்ல. சுதேசி ஆலைச் சரக்குகளுடனோ, அயல்நாட்டுச் சரக்குகளுடனோ போட்டி போட்டால் அப்போட்டியில் தோல்வியுறுவதுதிண்ணம். கிராமவாசிகள் உற்பத்திசெய்யும் பொருட்களை, முக்கியமாக அவர்களே வாங்கவேண்டும். தாங்கள் உற்பத்தி செய்யும் பொருட்களைத் தாங்களே உபயோகிக்க வேண்டும். அவர்கள்தான் நாட்டின் மொத்த ஜனத் தொகையில் 90 சத விகிதத்தினர். தாங்கள் லாபகரமாய் உற்பத்தி செய்யக் கூடியதும், நகர மக்களுக்குத் தேவையானதுமான பொருட்களை அவர்கள் உற்பத்தி செய்வார்கள். பாலுடனும், தேநீருடனும் வெல்லத்தைக் கலந்து சாப்பிடும்படி மக்களிடையே பிரசாரம் நடக்கவேண்டும். அவ்வாறு வெல்லத்தைக் கலப்பது தேக ஆரோக்கியத்தைக் கெடுக்கும் என்ற எண்ணம் தவறான எண்ணம், மூட நம்பிக்கை என்பதை அவர்களுக்கு உணர்த்த வேண்டும். சர்க்கரைக்குப் பதிலாக, வெல்லத்தைத் தேநீருடன் கலந்து சாப்பிடத் தொடங்கியதால், தம் மனைவிக்கு மலச் சிக்கல் நீங்கிவிட்டதாக ஒரு நண்பர் எழுதியுள்ளார். இதில் ஆச்சரியமில்லை. குடலைச் சுத்தப்படுத்தும் குணம் வெல்லத்தில் உள்ளது ; சர்க்கரையிடம் கிடையாது. நடுத்தர வகுப்பினர் கிராம மக்களை இதுவரை சுரண்டி வந்துள்ளனர். நாட்டின் முன்னேற்றத்தில் கிராமவாசிகளுக்குள்ள முக்கியமான ஸ்தானத்தை அவர்கள் உணரும்படி செய்து, அவர்களுக்கு இதுவரை செய்து வந்த அநீதிக்குப் பரிகாரம் தேட இப்பொழுது முயற்சி நடந்து வருகிறது.

சுகாதாரப் பிரச்னையை எடுத்துக் கொள்ளுங்கள். அதைச் சரியாகக் கவனித்தால், ஆண்டுதோறும் தலைக்கு இரண்டு ரூபாய் வீதம் லாபம் கிடைக்கிறது. அதாவது, ஆரோக்கியத்திலும் திறமையிலும் ஏற்படும் வளர்ச்சிக்கு மேலாக, ஆண்டுக்கு அறுபது கோடி ரூபாய் கிடைக்கும். இந்தியாவின் ஏழு லட்சம் கிராமங்களின் சீர்கெட்ட நிலையை மாற்றி, எல்லாத் துறைகளிலும் முன்னேற்றம் ஏற்படுத்த இந்த வேலைத்திட்டம் அடிகோலும். இந்த முன்னேற்ற வேலை வெகு காலத்துக்கு முன்பே நடந்திருக்க வேண்டும். நாட்டின் ராஜீய நிலைமை எதுவாயிருந்தாலும், இவ்வேலையைச் செய்வது அவசியம். தோட்டி முதல் லேவாதேவி செய்யும் சௌகார் வரை, கிராமவாசிகள் அனைவரையும் இவ்வேலை தழுவும். இவ்வேலையில், எல்லா அரசியல் கட்சிகளும் முழுமனத்துடன் ஈடுபடலாம். ஆர்வத்துடன் வேலை செய்யும் ஊழியர்கள் முன்வந்தால், வேலை வெற்றி பெறுவது திண்ணம்.

—'ஹரிஜன்'-13—4—1935

# 14

# எல்லோருக்கும் சுக வாழ்வு

தீர ஆராய்ந்து நிதானிக்கும் இயல்புடைய நண்பர் ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார் :

"நீங்கள் கடிதத்தில் எழுதியுள்ளதுபோல் அத்துறைகளில் வேலை செய்ய நிறைய வாய்ப்பு உள்ளது என்பதை நான் ஒத்துக்கொள்ளுகிறேன். குடிசைக் கைத்தொழில்களுக்கு உரிய ஒரு ஸ்தானம் உண்டு. ஆனால், உண்மையில் நமது ஆலைத் தொழில்களின் இடத்தை அவை கைப்பற்ற முடியும் என்று நான் கருதவில்லை. அத்தொழில் முதலாளிகளின் நலவுரிமைகள் ஒரு புறமிருக்க, நாட்டில் நிறுவப்பட்டுள்ள ஆலைத் தொழில்களையும், இனி தொடங்கக்கூடிய தொழில்களையும் அழிப்பது நாட்டின் பொது நலனுக்கு உகந்ததல்ல என்று நான் கருதுகிறேன். யந்திரத்தினால், மனிதன் வேலை இழக்க நேரிடுகிறது என்பதுதான் அம்முறைக்குள்ள குறை. அதனால் வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படுகிறது. இப்பொழுது லாபம் பகிர்ந்துகொள்ளப்படும் முறையில் மாறுதல் அவசியமாயிருக்கலாம். ஆனால், ஓய்வு நேரத்தைச் சரியாகப் பயன் படுத்திக்கொண்டால் அதனால் அளவற்ற நன்மை ஏற்படும். பலருக்கு வேலை தரவேண்டும் என்ற ஒரு காரணத்திற்காக மட்டும், சிக்கனமாகவும், திறமையுடனும் வேலை செய்யும் யந்திரங்களைப் புறக்கணிக்க அவசியமில்லை என்று நான் கருதுகிறேன். யந்திரத்தினால், பலருக்கு ஓய்வு நேரமும் உணவும் கிடைக்கும். அந்தப் பலரில் அத்தொழிலுடன் ஒருவிதத் தொடர்பும் இல்லாதவர்களும் அநேகர் இருப்பார்கள். இந்தியாவில் உள்ள பெரிய ஜனத் தொகையையும், அது பெருகிக்கொண்டே போகும் வேகத்தையும் பார்த்தால் எல்லோரும் சௌகரியமாக வாழ வசதி செய்யக்கூடிய நிலை என்றுமே ஏற்படாது என அஞ்சுகிறேன். கல்வித் தரம் உயர்ந்து, சுகாதாரம் பரவினால், வாழ்க்கை நீடித்து, மரண விகிதாசாரம் குறையும். ஆனால், ஜனத் தொகையைக்கொண்டு பார்த்தால், நிலைமை இன்னும் மோசமாகும். ஆகவே, நாம் முதலில் செய்யவேண்டியது ஜனத்தொகையைக் கட்டுப் படுத்துவது என்றுதான் நான் கருதுகிறேன். கர்ப்பத்தடை இல்லாமல், அந்தக் கட்டுப்பாடு செய்ய முடியாது. நீங்கள் கர்ப்பத்தடையை ஆதரிக்கவில்லை என்பதை நான் அறிவேன். ஆனால், சுகாதார முன்னேற்றம், சத்துணவு, குடிசைக் கைத்தொழில் ஆகியவற்றின் மூலம் பொருளாதாரப் புனருத்தாரணத்தில் மட்டும் நீங்கள் கவனத்தைச் செலுத்தி வருவதால், இப் பிரச்னையும் உங்கள் கவனத்துக்கு உரியதல்லவா என்பதை நீங்கள் ஆராய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்."

நண்பரின் நேர்மையை நான் பாராட்டுகிறேன். ஆனால், அவர் குறிப்பிடும் இரண்டு சங்கங்களின் வேலைத் திட்டத்தின் லட்சியத்தை அவர் சரியாக உணர்ந்துகொள்ளவில்லை என்றே அஞ்சுகிறேன். பெரிய ஆலைத் தொழில்களைக் கைப்பற்றுவதோ, அழிப்பதோ, அவற்றின் நோக்கமல்ல. மறைந்துவிட்ட, அல்லது மறைந்துகொண்டிருக்கும் கைத்தொழில்களைக் காத்து, வளர்த்து,

அதன் மூலம் இன்று வேலையில்லாமல் திண்டாடி, வறுமையிலும், பட்டினியிலும் வாடும் லட்சக்கணக்கான பேருக்குப் பிழைப்பு தேடித் தருவதே அத்திட்டத்தின் நோக்கம். ஆக்கல் வேலையே இத்திட்டத்தின் அடிப்படையேயன்றி, அழிவுவேலையல்ல. பெரிய ஆலைத் தொழில்களில், லட்சக்கணக்கான ஏழைகளுக்கு என்றும் பங்கு இருக்க முடியாது. ஒரு சில முதலாளிகளுக்குப் பணம் தேடித் தருவது அந்தத் தொழில்களின் நோக்கமே யொழிய, வேலையில்லாமல் திண்டாடும் ஏழைகளுக்கு வேலை தேடித்தருவது அல்ல. சமீப காலத்தில் பெரிய ஆலைத் தொழில்களைப் பாதிக்க முடியும் என்று கதர் இயக்க ஊழியர்களும், கிராமக் கைத் தொழில் ஊழியர்களும் எதிர்பார்க்கவில்லை. கிராமங்களில், குடிசைகள் என்று மங்கல வழக்காய்ப் பெயர்கொண்ட இருட் டுக் குகைகளில், ஒரு சுடரொளியைப்பரப்ப முடியுமென்றே அவர் கள் எண்ணுகிறார்கள். ஓய்வு நேரத்தைச் சரியாகப் பயன்படுத் தினால், அதிக நன்மை ஏற்படும் என்று என் நண்பர் கூறும் போது, தமது வாதத்தைத் தாமே முறியடித்துக் கொள்ளுகிறார். அவர் எதிர்க்கும் வேலைத் திட்டம், அவர் ஆதரிக்கும் லட்சி யத்துக்காகவே பாடுபடுகிறது. சோம்பலிலும் வறுமையிலும் வாடும் லட்சக்கணக்கான ஏழைகளின் ஓய்வு நேரத்தைச் சரி யாகப் பயன்படுத்திக்கொள்ளுவதே அந்த வேலைத் திட்டத்தின் நோக்கம்.

ஏழை மக்களின் நலனுக்குப் பாதகமான முறையில் யந்தி ரத்தைத் துஷ்பிரயோகம் செய்வதை எதிர்த்துப் போராட்டம் நடத்துவதற்கே இதில் இடமில்லை. ஏழு லட்சம் கிராமங்களில் வசிக்கும் கிராமவாசிகள் உயிருள்ள யந்திரங்கள். உயிரற்ற யந்திரங்களுக்கும் உயிருள்ள யந்திரங்களுக்குமிடையே போட்டி இருக்க முடியும். யந்திரம், மனிதனின் முயற்சிக்குத் துணையாகவும் உதவியாகவும் இருந்து அவன் உழைப்பை மிச் சப்படுத்தவேண்டும். இன்றோ, யந்திர முறை லட்சக்கணக்கான ஏழைகள் வாயில் மண்ணைப்போட்டு, ஒரு சிலர் கையில் செல்வம் சிக்குவதற்கு உதவுகிறது. உணர்வுள்ள, உயிருள்ள கருவி களான மனிதர்களைக்கொண்டு வேலை வாங்கினால், அவர்களுக் கும் ஒரு சிறிய பங்காவது கொடுக்கவேண்டும் என்றஞ்சி, உயி ரற்ற கருவிகளை உபயோகித்து எல்லையற்ற லாபம் சுருட்டும் பேராசையால் ஏற்பட்டுள்ள கெடுதலைத் தடுப்பதே சர்க்கா சங்கம், கிராமக் கைத்தொழில் சங்கம் ஆகியவற்றின் நோக்க மாகும்.

எல்லோரும் சௌகரியமாக வாழ வசதியான நிலையை எப் பொழுதுமே ஏற்படுத்த முடியாதென்று நண்பர் அஞ்சுகிறார். கிராம ஊழியர்கள் அவ்வாறு கருதவில்லை. கிராமவாசிகளுக்குப் பழக்கமாகிவிட்ட சோம்பலை நீக்கிவிட்டால், எல்லோரும் சௌகரியமாக வாழ எளிதில் வசதி கிடைக்கும் என்று, கிராம நிலைமையையும் கிராமவாசிகளின் மன நிலையையும் அறிந்ததன் பயனாய் ஊழியர்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டுள்ளது. பெரிய

புரட்சிகரமான மாறுதலோ, குழப்பமோ இல்லாமல் இந்நிலையை ஏற்படுத்தலாம். இப்போது நடக்கும் சில சுரண்டல் முறைகள் நிற்க வேண்டும். முதலாளி வர்க்கம் என்று சொல்லப்படுவதன் ஒத்துழைப்பு ஓரளவு இருந்தால், பிரமாதமான குழப்பம் ஒன்று மில்லாமலே இந்நிலையை ஏற்படுத்த முடியும்.

இப்போதுள்ளவர்கள் அனைவரும் சௌகரியமாக வாழ வசதி கிடைக்காது என்ற பயத்திலிருந்து, ஜனத்தொகை பெருகக் கூடாதென்ற கவலை நண்பருக்கு ஏற்படுவது இயற்கை. கர்ப்பத் தடை ஒன்றுதான் இதற்குரிய வழி என்ற நிலை ஏற்படுகிறது. கர்ப்பத் தடை, நாம் ஆழம் அறிய முடியாத ஒரு குழி என்று நான் கருதுகிறேன். நாம் நிதானிக்க முடியாத சக்திகளுடன் விளையாடுவது அபாயமானது. ஒரு சில சந்தர்ப்பங்களில், செயற்கை முறைப்படி கர்ப்பத்தடை செய்வது நியாயம் என்று ஏற்பட்டாலும், அது பாமர மக்கள் அனைவரும் கையாளுவதற்கு ஏற்றதல்ல. கர்ப்பத்தடைக் கருவிகளை அவர்கள் உபயோகிக்கும்படி தூண்டுவதைவிட, புலனடக்கத்தை மேற்கொள்ளும்படி செய்வதானது எளிது என்று எனக்குத் தோன்றுகிறது. நம்முடைய உலகம், நேற்று இன்று உண்டானதல்ல; விளையாட்டுப் பொம்மையல்ல. கோடிக்கணக்கான ஆண்டுகளாக ஜன நெருக்கடியால் பாதிக்கப் படாமல் உலகம் நடந்து வந்துள்ளது. கர்ப்பத்தடை மூலம் ஜனத்தொகையைக் கட்டுப்படுத்தாவிடில், உணவுப் பற்றுக்குறையால் உலகமே அழிந்துவிடும் என்ற உண்மை திடீரென ஒரு சிலருக்கு புலப்பட்டுவிட்டதன் காரணமென்ன? ஒரு தவறான எண்ணம் மற்றொன்றிற்கு இழுத்துச் செல்ல, கடைசியில் கர்ப்பத்தடையென்னும் சகதியில் சிக்கி நண்பர் திகைக்கிறார் என்றே நான் கருதுகிறேன்.

—'ஹரிஜன்' – 14—9—1935

# 15

# அரசியல் அதிகாரமும் நிர்மாண வேலையும்

ஒரு நண்பர் 'ஹரிஜ'னுக்கு அனுப்பியிருந்த கேள்வி ஒன்றுக்கு நான் பதில் எழுதாமல் கொஞ்ச காலம் வைத்திருந்தேன். அக் கேள்வி பின்வருமாறு :

" அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றாமல், எந்தப் பெரிய சீர்திருத்தமும் செய்வது அசாத்தியம் என்று நீங்கள் கருதவில்லையா? இப்போதுள்ள பொருளாதார அமைப்பையும் நாம் சீர்ப்படுத்தவேண்டும். அரசியலில் அதிகாரம் இல்லாமல், எந்தப் புனருத்தாரணமும் சாத்தியமில்லை. கைக்

குத்தல் அரிசி சீருணவு என்பது பற்றிப் பேசுவதெல்லாம் வெறும் பேச்சு என்றுதான் நான் நினைக்கிறேன்.''

பல காரியங்கள் செய்யத் தவறியதற்குச் சாக்காக, இந்தக் காரணம் சொல்லப்படுவதை நான் பல முறை கேட்டுள்ளேன். அரசியல் அதிகாரம் இல்லாமல் செய்ய முடியாத காரியங்கள் சில இருக்கின்றன என்பதை நான் ஒத்துக்கொள்ளுகிறேன். ஆனால், அரசியல் அதிகாரத்துக்குச் சம்பந்தமில்லாத காரியங்கள் கணக்கற்றவை உள்ளன. ஆதலால்தான் மிகக் குறைந்த அரசாங்கமே மிகச் சிறந்த அரசாங்கம் என்று தோரோ போன்ற அறிஞர் கூறினர். அரசியல் அதிகாரம் மக்கள் கைக்கு வந்த பின், மக்கள் சுதந்திரத்தில் தலையீடு மிகவும் குறைந்துவிடும். அரசாங்கத்தின் தலையீடு அதிகமில்லாமல், ஒழுங்காகவும், திறமையாகவும் நிர்வாகத்தை நடத்திவரும் நாடே உண்மையில் ஜனநாயக நாடாகும். அங்ஙிலை இல்லாத நாட்டில் ஜனநாயகம் பெயரளவில்தான் நிலவும்.

கருத்துச் சுதந்திரத்துக்கு எல்லையோ, கட்டுப்பாடோ இருக்க முடியாது. புரட்சிகரமான புது அடிப்படைக் கொள்கை வேண்டுமென்று பல சீர்திருத்தவாதிகள் இன்று வற்புறுத்தி வருகின்றனர். நமது கருத்தில் சீர்திருத்தம் செய்துகொள்ளவேண்டிய அவசியத்தை நம்மில் வெகு சிலரே உணர்கின்றனர். சிந்தனையின் சக்தியைத் தற்கால நிபுணர்கள் உணர்ந்துள்ளனர். அதனால்தான் எண்ணமே மனிதனை உருவாக்குகிறது என்று கூறுகின்றனர். கொலையைப் பற்றியே எப்பொழுதும் எண்ணிக்கொண்டிருப்பவர், கொலைகாரராகிவிடுவார். அதுபோலவே, சத்தியம், அகிம்சை பற்றியே எப்பொழுதும் எண்ணிக் கொண்டிருப்பவர், அவற்றைக் கடைப்பிடிப்பவராகிவிடுவார். கடவுளையே கருத்தில் பதித்து வைப்பவர், சிறந்த பக்திமானுகி விடுவார். இந்தச் சிந்தனை உலகில், அரசியல் அதிகாரத்துக்குச் செல்வாக்கில்லை. ஆகவே, அரசியல் அதிகாரமோ, அது இல்லாமையோ நம் நடவடிக்கைகள் பலவற்றைப் பாதிக்காது என்பது தெளிவாகிறது. நான் நண்பருக்கு ஒரு யோசனை கூறுகிறேன். அன்றாட நடவடிக்கைகள் அனைத்தையும் அவர் விவரமாகக் குறித்து வைத்துக் கொள்ளட்டும். அவற்றில் பல அரசியல் அதிகாரமில்லாமலே செய்யப்படும் என்பதை அவர் உணர்வது திண்ணம். அரசியல் அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டிருந்தால் அது நம் தவறேயாகும். நாம் விரும்பினுல் சுயேச்சையாக இருக்க முடியும்.

பெரிய சீர்திருத்தம் என்று பிரமாதமாகப் பேசி, அது பெரிதாக இருப்பது கண்டு மலைத்துப் பின்வாங்கியுள்ளார் நண்பர். சிறிய சீர்திருத்தங்களுக்கே தயாராக இல்லாதவர், பெரிய சீர்திருத்தங்களுக்கு எப்பொழுதுமே ஆயத்தமாக இருக்கமாட்டார். தம்முடைய சக்திகளைத் திறமையுடன் உபயோகிப்பவர்தான் அச்சக்திகளை வளர்க்க முடியும். ஒரு காலத்தில் பெரிய சீர்திருத்தமாகத் தோன்றியது, உண்மையில் சிறிய சீர்திருத்தமே

என்பதை அவர்கள் உணர்வார்கள். இம்முறைப்படி வாழ்பவர் தான் இயற்கையோடமைந்த வாழ்வு வாழ முடியும். அதை அடையவேண்டுமானால், நாம் அரசியல் லட்சியத்தை மறந்து விடவேண்டும். ஒவ்வொரு கட்டத்திலும், பிரச்னையிலும் அரசியல் லட்சியத்தைப்பற்றிப் பேச்சு எடுப்பது வீணாகப் பிரச்னையைக் குழப்பிப் புழுதி எழுப்புவதில்தான் முடியும். தவிர்க்க முடியாததொன்றைப் பற்றி நாம் ஏன் ஒவ்வொரு முறையும் கவலைப்பட்டுக்கொண்டே இருக்கவேண்டும்? சாவு வருவதற்கு முன்பே ஏன் செத்துச் செத்துப் பிழைக்க வேண்டும்?

ஆதலால்தான் உயிர்ச் சத்துக்களைப் பற்றியும், பச்சைக் காய்கறிகள் பற்றியும், தீட்டாத அரிசி பற்றியும் நான் சிரத்தை எடுத்துக்கொள்ளுகிறேன். ஆதலால்தான் கக்கூசுகளைச் சுத்த மாக்கும் வழியிலும், துர்நாற்றம் பரவாமல் தடுப்பதிலும் நான் தீவிரமாக ஈடுபட்டுள்ளேன்.

இப்பிரச்னைகளை ஆராய்ந்து தீர்க்க வழியைக் கண்டுபிடிப்பதற்கும் அரசியலுக்கும் ஏன் சம்பந்தமில்லை என்பதும், சர்க்காரின் நிதிக்கொள்கையைப்பற்றி ஆராய்வதுதான் அரசியல் முக்கியத்துவம் வாய்ந்தது ஏன் என்பதும் எனக்கு விளங்கவில்லை. நான் செய்யும் வேலையும், மற்றவர்களைச் செய்யச்சொல்லும் வேலையும், பாமர மக்கள் அனைவரும் செய்யக்கூடியது. ஆனால், நம்மை ஆள்வோரின் கொள்கையை ஆராய்வது, ஒரு சிலரே செய்யக்கூடியது. பாமர மக்களால் செய்ய முடியாது. அவ்வேலைக்குத் தகுதியுள்ளவர்கள், அதைச் செய்யட்டும். ஆனால், அத்தலைவர்கள் புரட்சிகரமான மாறுதல்களை ஏற்படுத்தும்வரை, பாமர மக்கள் தங்களுக்கு ஆண்டவன் அளித்துள்ள சக்திகளைத்தங்களுக்கியன்ற வழிகளில் ஏன் உபயோகித்து வரக்கூடாது? மேன்மேலும் சேவை செய்யத் தங்களை ஏன் பக்குவப்படுத்திக் கொள்ளக் கூடாது? தங்கள் வீட்டையும், சுற்றுப் புறத்தையும் சுத்தப் படுத்தும் வேலையை ஏன் செய்யக்கூடாது? பிணிவாய்ப்பட்டு, தங்களுக்கோ, பிறருக்கோ உதவி செய்ய வகையில்லாமல் அவர்கள் ஏன் வாழ வேண்டும்?

நண்பர், சோம்பலுக்கும், நம்மில் பலரைக் கவ்வியுள்ள சோர்வுக்கும் இரையாகிவிட்டார் என்றே அவர் கேள்வியின் மூலம் நான் அறிகிறேன். சுதந்திர ஆர்வத்தில் நான் யாருக்கும் சளைத்தவனல்ல. நான் சோர்ந்துவிடவில்லை; என் உற்சாகம் குறைந்துவிடவில்லை. நான் ஈடுபட்டுள்ள வேலைகள் நாட்டின் சுதந்திரத்துக்கு வழிகாட்டும்; சாத்வீக சுதந்திரத்துக்கு அது தான் வழி என்ற உண்மையைப் பல வருட அனுபவம் எனக்கு உணர்த்தியுள்ளது. ஆதலால்தான் இப்பெரிய வேள்வியில், ஆணும் பெண்ணும், சிறுவரும் வயோதிகரும் தங்களாலியன்றதைச் செய்யவேண்டுமென்று அழைக்கிறேன்.

—'ஹரிஜன்'–11–1–1936

## 16

# அகமதாபாத் தொழிற் சங்கத்தின் முயற்சி

அகமதாபாத் தொழிற் சங்கம் சமீப காலமாகச் செய்து வரும் முயற்சி வெற்றியடைந்தால், மற்றத் தொழில் ஸ்தாபனங்களுக்கும் ஒரு வழிகாட்டியாகவும், சிறந்த உதாரணமாகவும் இருக்கும் என்பதில் ஐயமில்லை. தொழிற் சங்க அங்கத்தினர்கள் சாதாரணமாய்ச் செய்துவரும் பிரதான தொழிலுக்கு மேலாக இன்னுமொரு தொழிலைப் பயிலும்படி செய்வதே அம்முயற்சியின் நோக்கம். அதன் பயனாய் வேலை நிறுத்தத்தினாலோ, கதவடைப்பினாலோ, ஆள் குறைப்பினாலோ ஒரு தொழிலாளி வேலையிழந்துவிட்டால், அவர் பட்டினி கிடக்காமல் வேறு தொழில் ஏதாகிலும் செய்ய முயற்சிக்கலாம். ஒரு மில் தொழிலாளியின் வாழ்விலோ பல மேடு பள்ளங்கள் உள்ளன. செட்டாகவும், சிக்கனமாகவும் வாழ்ந்தால் தொழிலாளி, கஷ்ட காலத்தைச் சற்றுத் துணிவுடன் சமாளிக்கலாம். அந்த நற்பழக்கத்தை அவர்கள் புறக்கணிக்கக் கூடாது. ஆயினும், இவ்வாறு மிச்சப்படுத்தி அவர்கள் அதிகப் பணம் சேர்த்துவிடமுடியாது. ஏனென்றால், நமது தொழிலாளர் வாங்கும் சம்பளத்தில் அன்றாட வாழ்க்கையே பெரும் போராட்டமாகிவிடுகிறது. மேலும், வேலை நிறுத்தத்தின்போதோ, வேலை இல்லாதபோதோ, தொழிலாளி வீட்டில் சும்மா இருப்பது சரிப்படாது. வேலையில்லாத நிர்ப்பந்தத்தால் சும்மா இருப்பதைவிட தொழிலாளியின் தன்மதிப்புக்கும் தன்னம்பிக்கைக்கும் பாதகமானது வேறெதுவுமில்லை. நெருக்கடியான காலத்தில், அவர்களுக்குத் துணை நிற்க வேறொரு வேலை இல்லாவிடில், தொழிலாளருக்கு உறுதியோ, உத்தரவாதமோ இருக்கமுடியாது.

*1918*–இல் அகமதாபாத் ஆலைத் தொழிலாளிகள் 28 நாள் வேலைநிறுத்தம் செய்தபோதுதான், தொழிலாளிகளுக்கு மாற்றுத் தொழில் ஏதாகிலுமொன்று தெரிந்திருக்க வேண்டுமென்ற எண்ணம் எனக்குத் தோன்றியது. வேலை நிறுத்தம் வெற்றிகரமாய் முடிய வேண்டுமானால், அவர்கள் ஏதாவது வேறு தொழில் செய்து பிழைக்க வழி இருக்க வேண்டும் என்பது தெளிவானது. பிறர் கொடுக்கும் உதவிப் பணத்தை நம்பி அவர்கள் இருக்க முடியாது. வேலை நிறுத்தத்தின்போது அவர்களிற் பலர் கூலி வேலை போன்ற சில்லரை வேலைகள் செய்து வந்தனர். அப்பொழுதுதான் அவர்களுக்கு வேறு தொழில் கற்றுக்கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் என் மனத்தில் தோன்றியது. ஆனால், அடுத்த வேலை நிறுத்தம் வரை என் யோசனையைப் பின்பற்றி எதுவும் செய்ய இயலவில்லை. அடுத்த வேலை நிறுத்தத்தின்போது ஏதோ ஒரு வகையில்

ஆரம்பம் செய்யப்பட்டது. ஆனல், மாற்றுத் தொழில்களில் முறைப்படி பயிற்சி தர உடனடியாக ஒரு ஸ்தாபனம் ஏற்படுத்துவது எளிதாயில்லை. இரண்டாவது வேலை நிறுத்தத்துடன், அம்முயற்சியும் முடிந்துவிட்டது.

இப்பொழுது, தொழிற் சங்கம் மீண்டும் அத்துறையில் முயற்சி செய்துவருகிறது. ஓய்வு நேரத்தில் வீட்டில் பயிலக்கூடிய கைத்தொழில்களைத் தொழிலாளரே தேர்ந்தெடுத்து, அவற்றில் பயிற்சி பெற ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. வேலையில்லாதபோது, இத்தொழில்களில் அவர்களுக்கு வேறு வேலை கிடைக்கக்கூடும். பஞ்சு அடித்தல், பஞ்சரைத்தல், பட்டை போடுதல், நூல் நூற்றல், நெய்தல், தையல், சோப்பு, காகிதம் முதலியன செய்தல், அச்சு வேலை ஆகியவை இத்தொழில்களில் சில.

ஒரு தொழிலாளிக்குப் பல்வேறு தொழில்களிலும் ஓரளவு பயிற்சி இருக்கவேண்டியது அவசியம். ஒரு தொழிலாளியின் தொழில் திறமை, ஒரு முதலாளியின் கையில் உள்ள பணத்துக்குச் சமம். அதுதான் தொழிலாளியின் மூலதனம். தொழிலாளியின் உழைப்பும் ஒத்துழைப்பும் இல்லாமல், முதலாளி தன் முதலைப் பயன்படுத்த முடியாது. அது போலவே, முதலாளியின் ஒத்துழைப்பு இல்லாமல் தொழிலாளியும் தன் திறமையைப் பயன்படுத்த முடியாது. தொழிலாளியும் முதலாளியும், தங்கள் தங்கள் சக்திகளை நன்கு வளர்த்து. அபிவிருத்தி செய்து, இருவரும் நியாயமாக நடந்துகொள்ள முடியும் என்ற நம்பிக்கையையும் உண்டாக்கினல், தொழிலில் இருவரும் பங்காளிகளாய் இருந்து, பரஸ்பர மதிப்புடன் பொது நலனுக்காகப் பாடுபடுவார்கள். ஜன்ம விரோதி என்று ஒருவரையொருவர் மதிக்கவேண்டிய அவசியமில்லை. ஆனல், இன்றைய நிலைமையில் என்ன நெருக்கடியென்ருல், முதலாளிகள் தங்கள் நிலைமையை ஸ்திரப்படுத்திக் கொண்டுள்ளனர். தொழிலாளி, அத்தகைய நிலைமையில் இல்லை. உணர்வற்று, யந்திரம்போல் வேலை செய்யும் தொழிலாளியின் மனம் மலடாகிறது; சக்தி முடங்குகிறது. அறிவைக் காக்கவோ, வளர்க்கவோ அவருக்கு வாய்ப்பு இல்லை. ஆகவே அவர் வளர்ச்சியையும் விருத்தியையும் அடைய முடியவில்லை. முதலாளி கொடுக்கும் சம்பளத்தை வாங்கிக் கொள்ள வேண்டுமே யொழிய, தன் சக்திக்கேற்ப சம்பளம் கேட்க உரிமையில்லை யென்ற நிலையைத் தொழிலாளி இன்று ஒப்புக்கொள்ள வேண்டியதாகிவிட்டது. தொழிலாளிகளும் ஒன்று சேர்ந்து பலம் திரட்டித் தங்கள் திறமையை வளர்த்துப் பல தொழில்கள் கற்று, நிலைமையை அரண் செய்துகொண்டால், நிமிர்ந்து நடக்க முடியும்; வேலையில்லாமல் போய் விடுமோ என்ற பயமும் வேண்டியதில்லை.

முதலாளியின் முன், தாம் சக்தியற்றவர் என்று தொழிலாளி நினைப்பது, அவர்களை அடிமையாக்கியுள்ள மூட நம்பிக்கைகளில்

மிகக் கொடியது. அந்தத் தவருன எண்ணத்தைப் போக்கு வதே அகமதாபாத் தொழிற் சங்கத்தின் முயற்சியின் நோக்கம். ஆகவே, அந்த முயற்சி, அனைவராலும் வரவேற்கத் தக்கது. விடாமுயற்சியுடனும், தளராத உறுதியுடனும், தொழிலாளர் தாங்கள் தொடங்கியுள்ள பயிற்சியைக் கடைப்பிடித்துத் தேர்ச்சி அடையவேண்டும். தொழிற் பயிற்சி புகட்டும் ஆசிரியர்கள், தொழிலாளருக்குத் தொழிலில் உற்சாகம் ஊட்டக் கூடியவர்களாய் இருக்க வேண்டும். உணர்வற்ற முறையில், யந்திரம் போல் ஒரு கைத்தொழிலைப் பயின்ருல், அது மற்ற தொழில்களைப் போலவே மனவளர்ச்சிக்கும், ஆன்மிக உயர்வுக்கும் முட்டுக்கட்டையாகவே இருக்கும். விவேகமற்ற வேலே, உயிரற்ற பிணத்துக்கே சமம்.

—'ஹரிஜன்'–3—7—1937

# 17

# "உண்மை இந்தியாவைக் காண்பீர்!"

லட்சுமணபுரி காங்கிரஸின் ஆதரவில், கிராமக் கைத்தொழில், சர்க்கா சங்கங்களின் காரியதரிசிகள் உதவியுடன் ஏற்பாடு செய்யப் பட்ட கண்காட்சிச் சாலேயைத் திறந்து வைத்துக் காந்திஜி செய்த பிரசங்கத்தின் சாரம் பின் வருமாறு :

கதர், கைத்தொழில் பொருட்காட்சியைத் திறந்து வைப்பது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்துள்ளது. திறப்பு விழாவுக்கு வர வேண்டுமென்று எனக்கு அதிக ஆவல். இக் கண் காட்சிச் சாலேயை ஏற்பாடு செய்ய டாக்டர் முராரிலால், சங்கர லால் பாங்கர் ஆகியோர் அல்லும் பகலும் உழைத்தனர். இப் பொருட்காட்சிச் சாலேக்கு அடிப்படையாக இருப்பது என் கொள்கையே. ஓர் உண்மையான கிராமக் கண்காட்சியை ஏற்பாடு செய்ய வேண்டுமென்று பல ஆண்டுகளாக என் மனத்தில் இருந்த ஆசை இக் கண்காட்சியில் பூர்த்தியாகியுள்ளது. 1921-இல் அகமதாபாத்தில், புது காங்கிரஸ் விதிகளின்படி முதல் மகாநாடு நடந்தபோது, கிராம மனப்பான்மையை வளர்க்கும் பாதையில் முதல் அடி எடுத்துவைத்தோம். அன்று காங்கிரஸின் ஆதரவில் நடந்த சிறு கண்காட்சிச் சாலே பதினைந்து ஆண்டுகளாகப் பெருகி, வளர்ந்து, முன்னேறி, இன்று இந்நிலேக்கு உயர்ந்துள்ளது. உண்மை இந்தியாவைக் காண வேண்டுமானல் ஒரு சில நகரங்களில் காண முடியாதென்றும், ஏழு லட்சம் கிராமங்களில்தான் காண முடியுமென்றும் நான் உறுதியாக நம்புகிறேன். அதைப் பன்

முறை வலியுறுத்தியுமுள்ளேன். இன்று இங்கு கூடியுள்ள நாம் கிராமவாசிகளல்ல; நகரவாசிகள். உண்மை இந்தியாவை நகரங்களில்தான் காண முடியுமென்றும், நம் தேவைகளைப் பூர்த்தி செய்யவும், ஏவலுக்குப் பணியவுமே கிராமங்கள் உள்ளன என்றும் கருதுபவர்கள், கிராமவாசிகளுக்கு உண்ண உணவு, உடுக்க உடை, குடியிருக்கக்குடிசை முதலியன உள்ளனவா என்று ஒரு கணம்கூட எண்ணிப் பார்க்காதவர்கள். சென்ற இருபது ஆண்டுகளாக, நான் நாட்டின் ஒவ்வொரு மூலைக்கும் சென்றுள்ளதுபோல், வேறெந்தக் காங்கிரஸ் ஊழியரும் சென்று பார்த்துள்ளார் என்று நினைக்கவில்லை. அது ஒன்றுமட்டும் பெருமைக்குரிய விஷயமாகி விடாது. ஆனால், இந்தச் சுற்றுப் பிரயாணங்களின் பயனாய் வேறெந்தக் காங்கிரஸ் ஊழியரும் கிராமவாசியை அறிந்ததற்கு மேலாக நான் அறிந்துள்ளேன் என்றுமட்டும் துணிவுடன் கூற முடியும்; நகரவாசி, கிராமவாசியின் உழைப்பைச் சுரண்டி, உறிஞ்சி வாழ்ந்து வந்துள்ளார் என்பதை நான் கண்டேன். இந்திய மக்களின் நிலையைப்பற்றி பல பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் புத்தகங்கள் எழுதியுள்ளனர். ஆனால், கிராமவாசிக்கு பிழைப்பு நடத்தப் போதிய வருவாய் கிடைக்கிறது என்று யாரும் எழுதியதில்லை. பெரும்பாலோர் பட்டினியோடு நிரந்தரமாய்ப் போராடிக்கொண்டிருக்கின்றனர். பத்து சதவிகிதத்தினர் பாதிப் பட்டினியாய் கிடக்கின்றனர். தீட்டிய அரிசியையோ, உலர்ந்த தானியத்தையோ, அழுக்கு நிறைந்த உப்பு மிளகாயுடன் சாப்பிட்டு லட்சக்கணக்கானவர் காலம் தள்ளி வருகின்றனர். அந்தச் சாப்பாட்டை நம்மில் யாராவது சாப்பிட்டால் ஒரு மாதத்துக்குமேல் பிழைக்கமாட்டோம். இல்லையேல், புத்திசுவாதீனத்தையாவது இழந்துவிடுவோம். ஆயினும், கிராமவாசிகளுக்கு நிரந்தரமாய் அதே நிலைதான். கிராமவாசிகள் வாழ்க்கை நிலை பற்றி விசாரிக்கவும், கைத்தொழில்கள் பற்றி ஆராயவும், எவற்றை வளர்க்கவோ, காக்கவோ முடியுமோ அவற்றிற்கு ஆதரவளிக்கவும் கிராமக் கைத்தொழில் சங்கம் சென்ற ஆண்டில் அமைக்கப்பட்டது. அதே சமயத்தில் இனி நடத்தப்படும் கண்காட்சிகள் கிராமக் கைத்தொழில் சங்கத்தாலும், சர்க்கா சங்கத்தாலும் நடத்தப்படவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. அத்தகைய கண்காட்சிகளில் முதலாவது இது.

அடிப்படைக் கொள்கை என்னுடையதென்று கூறினேன். ஆயினும், அந்தக் கொள்கையைப் பூரணமாய் அறிவதற்கோ, அமலில் கொண்டு வருவதற்கோ இன்னும் வெகுதூரம் உள்ளது என்பதையும் நான் ஒத்துக்கொள்ளுகிறேன். செயலாளரின் அரிய ஆற்றலுக்கு இது அத்தாட்சி. ஆயினும், இக்கண்காட்சி ஆதர்சக்கண்காட்சியாக அமையவில்லை. நம் முன்னுள்ள நேரத்தில் அதைச் சாதிக்க நமக்கு அவகாசமில்லை. கிராமத் தொழிலாளிகளைக் கிராமத்திலிருந்து அழைத்து வருவது எளிதல்ல. இந்தக் கண்காட்சிக்குத் தென்னிந்தியாவிலிருந்து சில தொழிலாளிகள் வந்துள்ளனர். அவர்கள் இப்பொழுது வந்து சேர்ந்துள்ள ஊரின் பெயர்

கூட அவர்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். பட்டினியுடன் போராடிக் கொண்டிருக்கும் கிராம இந்தியா கூட இவ்வளவு ஆற்றல் கொண்டுள்ளது என்பதை உணர்த்துவதே இக் கண் காட்சியின் நோக்கம். அந்த ஆற்றலை நம் நன்மைக்காகவும் கிராமவாசிகள் நன்மைக்காகவும் பயன்படுத்திக் கொள்ள வேண்டியது நம் கடமை.

முன்பு நடந்த பொருட்காட்சிகளைப் போல் இது படாடோப மானதல்ல. முன்பு நடந்தவை பிரமாதமான காட்சிகள். ஏனென்ருல், அவற்றின் நோக்கமே வேறு. இந்தப் பொருட்காட்சிகளிலிருந்து வந்த நிதியிலிருந்தே காங்கிரஸின் செலவுகள் எல்லாம் நடந்தன. ஆனால், சென்ற ஆண்டில் அந்த நோக்கத்திலேயே அடிப்படை மாறுதல் ஏற்பட்டது. படாடோபமான பொருட் காட்சிகள் வேண்டியதில்லை ; ஆனால், கிராமவாசிகளின் வாழ்வையும், அவர்கள் உற்பத்தி செய்யும் பொருட்களையும் நகரவாசி ஓரளவிலாவது தெரிந்துகொள்ள இக்காட்சிகளை நடத்தவேண்டுமென்று தீர்மானித்தோம். கிராம நிலைமைபற்றிப் பொது அறிவு புகட்டுவதே இக்கண்காட்சியின் நோக்கம். இதில் பண வசூல் இருக்காது என்பதல்ல. சுதந்திர ஆர்வமும், கிராம முன்னேற்றத்தில் நம்பிக்கையும் உள்ளவர்களிடமிருந்து இந்தப் பணம் வசூலிக்கப்படும். காண்காட்சிக்குக் குழுமி, அங்கு நடத்திக் காட்டப்படும் பல்வேறு கைத்தொழில்களை ஆராய்ந்தறிவதன் மூலம், நகரங்களுக்கும் கிராமங்களுக்குமிடையே நெருங்கிய தொடர்பு ஏற்படுத்த முடியும்.

கண்காட்சியை ஒரு தடவை பார்த்துவிட்டுப்போவதால் இத் தொடர்பு ஏற்பட்டு விடாது. தினமும் வந்து கண்காட்சியின் ஒவ்வொரு பிரிவையும் கவனமாகப் பார்க்கவேண்டும். அவ்வாறு பார்த்தால், இந்தக் கண்காட்சி ஏற்பாடு செய்வதில் எவ்வளவு சிரத்தையும் சிரமமும் எடுக்கப்பட்டுள்ளது என்பது புலனாகும். சேவை நோக்கத்துடன் நீங்கள் பார்த்தால், அதில் மிகுந்த சிரத்தை எடுத்துக்கொள்ளுவீர்கள். காஷ்மீரிலிருந்தும், தென்னிந்தியாவிலிருந்தும், அஸ்ஸாமிலிருந்தும் வந்துள்ள தொழிற் கலைஞர்களைக் காண்பீர்கள். தங்கள் சொற்ப வருவாயை அவர்கள் எப்படிச்சம்பாதிக்கிருர்கள் என்பதைக்காணலாம். நீங்கள் விரும்பினுல், அவர்கள் சொற்ப வருவாயைச் சற்று அதிகரித்து, அவர்களுக்குச் சரியான சாப்பாடு கிடைக்கவாவது வழி செய்ய முடியும். அவர்களுக்குப் போதிய ஊதியம் கிடைக்கும்படி செய்ய அவர்கள் உற்பத்தி செய்த பொருள்களை வாங்க நீங்கள் முடிவு செய்ய வேண்டும்.

இக்கண்காட்சியின் பிரிவுகள் அனைத்தையுமோ, பிரிவுகளில் ஒன்றையோ நான் விவரித்துக் கூறவேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்க மாட்டீர்கள். விவரித்துக் கூறவும் முடியாது. நீங்கள் உட்கார்ந்துகொண்டிருக்கும் இடத்திலிருந்தே கண்காட்சியின் தன்மையைத் தெரிந்து கொள்ளலாம். உங்கள் முன்னுல் தோர

ணங்களோ, வெற்றி அலங்கார வளைவுகளோ இல்லை. ஆனால், சாந்திநிகேதனத்திலிருந்து ஸ்ரீ நந்தலால் போஸும் அவர் சகாக்களும் கலை உணர்ச்சியுடன் நேர்த்தியான, ஆனால் ஆடம்பரமற்ற முறையில் கிராமக் கைத்தொழில்களைச் சித்திரித்து வரைந்துள்ள சித்திரங்கள் கொண்ட சுவர்கள் நிற்கின்றன. கச்சேரி, அல்லது படக்காட்சிபோல் கேளிக்கைகளுக்கும் வேடிக்கைக்கும் இங்கு வாய்ப்பு இருக்காது. ஆனால், நீங்கள் இங்கிருந்து கற்றுக் கொள்ள வேண்டியது எவ்வளவோ இருக்கின்றன என்பது மட்டும் நிச்சயம்.

நீங்கள் இக் கண்காட்சியைப்பற்றி விளம்பரம் செய்ய முன்வந்து, மற்றவர்களும் இதைப் பார்க்கும்படி தூண்டவேண்டும். இக் கண்காட்சி கிராமவாசிக்காக ஏற்பாடு செய்யப்படவில்லை. கிராமவாசி வாழும் முறையையும், நிலையையும், அவருக்குள்ள ஆற்றலையும் நகரவாசி அறிந்துகொள்ளும் பொருட்டே இது ஏற்பாடு செய்யப்பட்டது. இக் கண்காட்சியை ஏற்பாடு செய்வதற்கு ஏறக்குறைய 35,000 ரூபாய், வரவேற்புக் கமிட்டியாரால் செலவு செய்யப்பட்டுள்ளது. அந்தப் பணத்தையாகிலும் வசூல் செய்ய நீங்கள் உதவவேண்டும். இந்தக் கண்காட்சியைப் பற்றி நீங்கள் மற்றவர்களிடம் உற்சாகத்துடன் பேசுங்கள். இம் மாதிரி விளம்பர ஏஜெண்டாக வேலை செய்வதற்கு உங்களுக்கு வெகுமதி எதுவும் என்னால் தர முடியாது. ஆண்டவன் சந்நிதானத்தில் உங்கள் கடமையைச் செய்ததற்காக வெகுமதி கிடைக்கும். செலவு செய்த பணம் வசூலாகிவிட்டால், இந்தக் கண்காட்சிக்குக் கிராமவாசிகளை இலவசமாக அனுமதிக்க ஏற்பாடு செய்யலாம்.

இக் கண்காட்சியில் பல குறைகளிருக்கலாம். அதற்கு நீங்களும் நானும் பொறுப்பே ஒழிய, கிராமவாசி பொறுப்பாளியல்ல. சரியாகச் செய்யவேண்டுமானால் பல மாதகாலம் பிடிக்கும். வேலையைச் செயலாளர் ஒரு சில வாரங்களிலே செய்து முடித்துள்ளனர். ஆதலால் இதில் காணும் குறைகளைப் பொறுத்தருள்வீர்கள் என்று நம்புகிறேன்.

—'ஹரிஜன்' – 4—4—1936

## 18

# அறிவுக்கு விருந்து

1936, ஏப்ரல் 12–ஆம் தேதி லட்சுமணபுரி கண்காட்சிச் சாலையில் காந்திஜி அரை மணி நேர முன்னறிவிப்புடன் பேச ஒத்துக் கொண்டு, செய்த பிரசங்கத்தின் சாரம் பின் வருமாறு :

பொருட்காட்சி, சினிமாபோல் அல்ல என்று நான் அன்று கூறியதில் உட்கருத்து அதிகமிருந்தது. சினிமாவுக்குப் போனல், கண், செவி ஆகிய புலன்களுக்கு விருந்து கிடைக்கிறது. அறிவு புகட்டக் கூடிய தன்மை அற்றது அனைத்தையும், இக் கண்காட்சி யிலிருந்து நீக்கிவிட நாங்கள் முயற்சி செய்துள்ளோம். இக் கண் காட்சியை ஒரு புனிதமான, தூய்மையான இடமாக்க முயற்சித் துள்ளோம். கண், செவி ஆகிய புலன்களுக்கு இங்கும் விருந்து கிடைக்கும். ஆனல், அது புலன்களைத் தூய்மைப் படுத்தும் விருந்தாக இருக்கும். ஒரிஸ்ஸாவையும் அங்கே பஞ்சத்தாலும் பட்டினியாலும் பெருகியுள்ள எலும்புக் கூடுகளையும் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். வறுமையும் பட்டினியும் பீடித்துள்ள அம் மாகாணத்திலிருந்து வந்துள்ள தொழிற் கலை ஞர்கள், எலும்பிலும், கொம்பிலும், வெள்ளியிலும் அற்புதங்கள் செய்வதை நீங்கள் இங்கே காணலாம். அவர்கள் செய்துள்ள பொருட்களைப் பாருங்கள்; அப் பொருட்களை உங்கள் முன்ன லேயே அவர்கள் செய்யும் வகையையே காணுங்கள். பட்டினி யுடன் போராடிக் கொண்டிருக்கும் ஒரு மனிதன், உயிரற்ற கொம்பு, எலும்பிலும் உயிர் ஊட்டிச்செய்யும் பொருட்களைப் பாருங்கள். ஒரு ஏழைக் குயவர், மண்ணைக்கொண்டு வித் தைகள் புரிந்துள்ளார். அதிக விலையிருக்கும் என்று நான் நினைத்த பொருட்களெல்லாம், கொஞ்ச விலைக்கு, ஒரு சில பைசாக்களுக்கு இங்கே கிடைக்கும். ஒவ்வொன்றிலும் கலை யழகு ததும்பும். அன்ருெரு நாள் ஒரு சகோதரி, தந்தத்தில் கிருஷ்ணர் பொம்மை வாங்கிச் சென்ருர். அவர் கண்ணனை வழிபடுபவரல்ல. ஆயினும், அந்த எழில் மிக்க உருவைக் கண்டு இப்பொழுது கண்ணனை வழிபடுகிருராம்.

இக் கண்காட்சி, ஆடம்பரக் காட்சி அல்ல; ஆனல், அற் புதக் காட்சி, நம் கண் முன்னல் நடக்கும் அற்புதங்களைத் தூசிக்குச் சமமாக மதித்துவிட்டு, அயல் நாடுகளிலிருந்து வரும் அற்பப் பொருட்களையும் அருமையாக மதிக்கும் இழி நிலைக்கு நாம் வந்துவிட்டோம். ஐரோப்பாவில் ஊர் பேர் தெரியாத ஒரு இடத்திலிருந்து வரும் ஊற்றுத் தண்ணீரில், அற்புத சக்தி இருக்கிறதென்று பிரமாதப்படுத்துகிறோம். ஆனல், இயற்கை யாகவே சுத்தப்படுத்திக் கிருமிகளைக் கொன்று, ஆரோக்கி யத்தை வளர்க்கும், புனித கங்கையின் நீரை நாம் ஒரு குட்டை யில் உள்ள அசுத்த நீர்போல் மதிக்கும் நிலைக்கு வந்து விட்டோம்.

இதுவரை நான் சித்திரித்துள்ள லட்சியக் கனவு, உங்கள் உள்ளத்தை உருக்கித் தியாக சிந்தையைத் தூண்டாவிடில், போதிய உணவு கிடைக்காததாலும் சீருணவு கிடைக்காததாலும் அல்லல்படும் ஏழைகளுக்கு உதவி செய்ய உங்களை உந்தாவிடில், கடவுள்தான் உங்களைக் காப்பாற்றவேண்டும். நம் இதயத் தைத் தொடும் கீதமான, 'ஹிந்துஸ்தான் ஹமாரா' வை, கவி

இக்பால் பாடிய போது, இத்தகைய லட்சியக் கனவை அவர் கண்டிருக்கவேண்டும். இந்தியாவையும், நாட்டின் நிரந்தரமான மெய்காவலராம் இமயமலையையும், கங்கை நதியையும், பல் வேறு பருவங்களையும் தாண்டிப் பண்பட்டுள்ள நம் நாகரிகச் சிறப்பையும், கவி சித்திரிப்பதில், அக் கனவைக் காணலாம். நாம் பல கொடியேற்று விழாக்களில் கலந்து கொள்ளுகிறோம். நம் தேசியக் கொடியில் பெருமை கொள்ளுகிறோம். நம் நாட்டில் உற்பத்தி செய்யப்படும் பொருட்களை விரும்பாமல், அயல் நாட்டுப் பொருட்கள் மீது மோகம் கொண்டால், நம் தேசியக் கொடியில் நாம் பெருமை கொள்ளுவதில் அர்த்தமேயில்லை. ஏழ்மையுடன் போராடிக்கொண்டு, எழிலை வளர்க்கும் நம் தொழிற் கலைஞர்கள் செய்யும் அற்புதங்களைக் கண்டு உளம் உருகி, அவர்களுக்கு உதவிசெய்ய முன்வராதவர்கள், இந்தியாவின் சுதந்திரத்தைப் பற்றிப் பேச அருகதையற்றவர்கள்.

—'ஹரிஜன்'– 18—4—1936

# 19

# கிராமியக் கலை விழா

[1936 டிசம்பர் 25–ஆம் தேதி, பெய்ஸ்பூரில், கதர், கைத் தொழில் கண்காட்சியைத் திறந்து வைத்துக் காந்திஜி செய்த சொற்பொழிவின் சுருக்கம் கீழே தரப்பட்டுள்ளது. அப் பிரசங்கத்தில் பல வேடிக்கைத் துணுக்குகள் இருந்தன. ஆனால், அவற்றைச் சில பத்திரிகைகள் குதர்க்கம் செய்துள்ளன. ஒரு கூட்டத்தில் காந்திஜி சில பொருட்களை ஒவ்வொன்றாக எடுத்துக் கூட்டத்தினருக்குக் காட்டிவந்தார். ஒரு நரித் தோலைக் காட்டிக் கொண்டிருக்கும்போது கூட்டத்தில் ஒருவர் அதைப் பார்க்க முடியாததால், "கையை உயர்த்திக் காட்டுங்கள்" என்று கூறினார். அப்பொழுது காந்திஜி, "காத்திருங்கள், கையை உயர்த்திப் பின்னால் காட்டுகிறேன்" என்று கூறினார். அதாவது பின்னால் அதை ஏலம் போட்டு, சரியான விலைக்கு விற்பதாகப் பொருள்படும்படி அவர் கூறினார். பிறகு நேரம் இல்லாததால், ஏலம் கைவிடப்பட்டது. ஆனால், காந்திஜி கூறியதைக் குதர்க்கம் செய்து, சில பத்திரிகைகள் பிரசுரம் செய்தன. "டைம்ஸ் ஆப் இந்தியா" பத்திரிகை பின் வருமாறு எழுதியது: "ஸ்ரீ காந்தி, தமது சக்திகளையெல்லாம் செலவு செய்து விட்டுச் சும்மா இருக்கிறார் என்று எண்ணுபவர்கள், பெருந்

தவறு செய்கிறார்கள். அவர் தமது சட்டைப் பையில் ஏதோ ஒளித்து வைத்திருக்கிறார். 'நான் என் கைவரிசையை இன்னும் காட்டவில்லை; கொஞ்சம் பொறுத்திருங்கள்; காட்டுகிறேன்' என்று அவர் தற் செயலாகக் கூறிய போது, அது பலத்த கரகோஷத்துடன் வரவேற் கப்பட்டது."

காந்திஜி, தம் சட்டைப் பையில் எப்பொழுதும் எதையும் ஒளித்து வைப்பதில்லை. அவர்தான் சட்டையே போடுவதில்லையே!

—மகாதேவ தேசாய்.]

ஒரு கிராமத்தில் காங்கிரஸ் மகாநாட்டை நடத்த முடிவு செய்ததன் பொறுப்பு முற்றிலும் என்னைச் சார்ந்தது என்பதை நீங்கள் பத்திரிகைகளிலிருந்து படித்திருக்கலாம். டிசம்பர் ஆரம்பத்தில் நான் பெய்ஸ்பூர் சென்று கண்காட்சிக்கான ஏற் பாடுகளை மேற்பார்வை செய்வேன் என்றும் செய்தி வெளியாகி யிருந்தது. அச் செய்தியில் பின் பகுதி உண்மைதான். நீங்கள் இங்கே காணும் குறைபாடுகளுக்கு நான்தான் பொறுப்பு என்று மிகைப்படுத்தாமலும், போலிப் பணிவு இல்லாமலும் நான் கூறவேண்டும். காங்கிரஸ் மகாநாட்டையும் கண்காட்சியையும் ஒரு கிராமத்தில் நடத்த வேண்டுமென்ற எண்ணம் என்னிட மிருந்து உதித்தது. அதனால், இதில் ஏற்பட்டுள்ள குறைபாடு களுக்கும் நான்தான் பொறுப்பு. இங்கே ஏதாவது பாராட்டு தலுக்கு உரியதாயிருந்தால், அப்பெருமை செயலாளரைச் சேர்ந்தது. கிராமத்தில் நடத்தவேண்டுமென்ற யோசனையை தோழர்கள் தஸ்தனேயும், தேவும் ஏற்றுக் கொண்டு, மராட்டி யருக்கே இயல்பான உறுதியுடனும் ஊக்கத்துடனும், மகா நாட்டையும் கண்காட்சியையும் நடத்திவிட்டனர். என்னைத் தலைவனாகக் கொண்டுள்ள சர்க்கா சங்கத்தாலும், என் யோச னையைப் பின்பற்றி நடக்கும் கிராமக் கைத்தொழில் சங்கத்தா லும், இந்தக் கண்காட்சி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதால், என் அடிப்படைக் கொள்கையைப் பின்பற்றியே இக் கண் காட்சி அமைக்கப்பட்டுள்ளது. ஒரு மகாராஷ்டிர கிராமத்தில் மகாநாட்டை நடத்துவதன் மூலம் அங்கே லட்சுமணபுரி அல்லது டில்லி போன்றதோர் நகரத்தை உண்டாக்கிவிடக்கூடாது என்று செயலாளரை நான் எச்சரித்திருந்தேன். அப்படிச் செய் வதானால், மகாநாட்டையும் கண்காட்சியையும் புனாவிலேயேதான் நடத்தியிருக்கலாமே? கிராமத்தில் நடக்கவேண்டுமென்றால், கிராம வாழ்க்கை முறையோடு இயைந்ததாய் இருக்கவேண்டும். நானே வெகு காலமாகக் கிராமவாசியின் வாழ்வை விரும்பி ஏற்றுக்கொண்டுள்ளதாலும், மற்றவர்கள் சமீபத்தில்தான் கிராமவாசிகள் ஆகியுள்ளதாலும் மற்றவர்களைவிட நான் இதை நன்கு நடத்த முடியும். ஒரு சில மாதங்களுக்கு முன்புதான் நான் சேகானுக்குச் சென்று குடியேறினேன் என்பது உண்மைதான். நகரத்திலேயே பிறந்து, வளர்ந்து, கல்வி பயின்று வந்ததால், கிராம நிலைக்குத் தகுந்தாற்போல், என்னைச் சரிப்படுத்திக்

கொள்ள முதலில் கஷ்டமாயிருந்தது. ஆரம்பத்தில் எனக்கு மலேரியா வந்துவிட்டது. ஆனால், விரைவில் அதை விரட்டி விட்டுக் குணமடைந்து, இப்பொழுது ஆரோக்கியமாயிருப் பதுடன் ஆர்வத்துடன் வேலை செய்தும் வருகிறேன். எந்தச் சுமையையும் தாங்கச் சக்திவாய்ந்துள்ள ஜவாஹர்லால், சர்தார் ஆகியோர் தோள்மீது என் பொறுப்பைச் சுமத்திவிட்டு, 'இப் பொழுது கவலையில்லாமல் இருப்பதும், என் ஆரோக்கியத் துக்கு ஒரு காரணம். ஆனால், உண்மையில் என் ஆரோக்கிய ரகசியத்தை உங்களிடம் சொல்லிவிடுகிறேன். எப்படி இருக்க வேண்டுமென்று என் மனம் விரும்புகிறதோ, அப்படி என் உடம்பு இருக்கும். அதுதான் அந்த ரகசியம்.

இந்தக் கண்காட்சி ஏற்பாடுகள் செய்த பெருமை, சிற்பி ஸ்ரீ மைத்ரேயையும், ஓவியக் கலைஞர் ஸ்ரீ நந்தலால் போஸையும் சேரும். சுமார் இரண்டு மாதங்களுக்குமுன் என் அழைப்பிற் கிணங்கி ஸ்ரீ நந்தலால் போஸ் இங்கே வந்தபோது, நான் என் எண்ணத்தை அவரிடம் தெளிவாக்கிவிட்டு அதை உருவாக்கும் பொறுப்பை அவரிடம் விட்டுச் சென்றேன். அவர், கற்பனை சக்தி யுள்ள கலைஞர்; எனக்கு அச்சக்தி கிடையாது. கலை உணர்வை எனக்குக் கடவுள் தந்துள்ளார்; ஆனால், அதை உருவாக் கும் சக்தியை எனக்குக் கொடுக்கவில்லை. ஸ்ரீ நந்தலால் போஸுக்கோ, அவர் இரண்டையும் கொடுத்தருளியுள்ளார். கண்காட்சியின் கலைப் பகுதியை அமைக்கும் பொறுப்பு முழு வதையும் அவர் ஏற்றுக்கொண்டதற்காக அவருக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன். அவர் சில வாரங்களுக்கு முன்பு இங்கே வந்து தங்கி, எல்லா ஏற்பாடுகளையும் தாமே மேற் பார்த்து வந்துள்ளார். திலகர் நகர் முழுவதுமே ஒரு கண் காட்சிக் கலைக்கூடமாகிவிட்டது. அவர் அமைத்துள்ள வாயில், கிராமக் கலையின் சிகரமேயாகும். எல்லா ஏற்பாடுகளையும் பூர்த்தி செய்து ஒழுங்கு செய்த ஸ்ரீ மைத்ரேக்கும் நாம் கடமைப் பட்டிருக்கிறோம். இக் கலைக் கோவிலை உண்டாக்க, ஸ்ரீ நந்த லால் பாபு, உள்ளூர் ஆட்களையே கொண்டு, உள்ளூர்ப் பொருட் களையே பயன்படுத்தியுள்ளார் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

இப்பொழுது கண்காட்சியைப் பாருங்கள். முடிந்தால், என் கண்ணோட்டத்துடன் பாருங்கள். கிராமக் கைத்தொழில் சங்கம், சர்க்கா சங்கம் ஆகியவற்றால் ஏற்பாடு செய்யப்பட்ட கண்காட்சி என்பதை மனத்திற்கொண்டு பார்த்தால், கண் காட்சியில் எதைக் காண எதிர்பார்க்கலாம் என்பது உங் களுக்கே தெரியும். இந்தியர்கள் அனைவரும் கதர் அணியும்படி செய்வது சர்க்கா சங்கத்தின் நோக்கம். துரதிருஷ்டவசமாக, நாம் இன்று அங்கிலையிலிருந்து வெகுதூரத்தில் உள்ளோம். மறைந்துவிட்ட, அல்லது மறைந்து கொண்டிருக்கும் கிராமக் கைத்தொழில்களுக்கு உயிர்கொடுப்பது, கைத்தொழில் சங்கத்

தின் நோக்கம். கதரும், குடிசைக் கைத்தொழில்களும் கிராமங்களின் பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படையானவை.

ஆடம்பரக் காட்சியால், மக்கள் கண்ணைக் கவர்ந்து, கருத்தை மாற்றி, ஏமாற்றும் நோக்கம் எங்களுக்கில்லை. கிராமவாசிகளின் உழைப்பினால் அமைக்கப்பட்ட உண்மையான கிராமக் கண்காட்சி இது. அறிவை வளர்ப்பதே இதன் நோக்கம். தங்களைச் சுற்றியுள்ள வளத்தையும், தங்களுக்கு இயல்பாயுள்ள திறமையையும் பயன்படுத்தினால், தங்கள் வருவாயை இரண்டு மடங்கு பெருக்கிக் கொள்ளலாம் என்பதை கிராமவாசிகளுக்கு இக் கண்காட்சி உணர்த்தும். என்னை ஐக்கிய மாகாணத்தில் எந்தக் கிராமத்துக்கும் அழைத்துச் செல்லுங்கள். கிராம மக்கள் மட்டும் தங்கள் திறமையையும், தங்களைச் சுற்றியுள்ள வளத்தையும் பயன்படுத்தச் சித்தமாய் இருந்தால், கிராமத்தையே சீர்ப்படுத்திப் புது கிராமமாக்கி விடுகிறேன். அதற்கு ஸ்ரீ ஜம்னாலால் பஜாஜின் பண உதவிகூடத் தேவையில்லை. கிராமவாசிகள் தங்கள் வருவாயைப் பெருக்கிக் கொண்டவுடன் ஸ்ரீ ஜம்னாலால் போன்ற ஒரு ஜமீன்தார், குத்தகைத் தொகையை அதிகரித்து, அதிகமாய்க் கிடைத்த வருவாயை அபகரித்துக் கொள்ளுவார் என்று நீங்கள் சொல்லலாம். ஆனால், அந்த மாதிரி எந்த ஜமீன்தாரும் செய்ய இடம் கொடுக்கமாட்டோம். வேலையில்லாமல் லட்சக்கணக்கான மக்கள் திண்டாடிக் கொண்டிருக்கும் நம் நாட்டில், அவர்கள் கௌரவமாக வேலை செய்து, பிழைப்புக்கு வழிதேட வசதி செய்யும் வேலைத்திட்டம் ஒன்று தேவை. அவர்களுக்காகத் தான் கதர், குடிசைத் தொழில் ஆகிய திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. இன்றைய நிலையில் அவை மிகவும் இன்றியமையாதவை என்பது எனக்கு வெள்ளிடைமலைபோல் தெளிவாகிறது. வருங்கால நிலைமை அந்த வேலைத் திட்டங்களை எப்படிப் பாதிக்கும் என்பது எனக்குத் தெரியாது; தெரிந்துகொள்ள அக்கறையுமில்லை.

கிராமவாசிகள் உற்பத்தி செய்து, இங்கே நீங்கள் காணும் பொருட்களால், அந்த ஏழைகளின் வருவாய் மதிக்கத்தக்க அளவுக்கு அதிகரிக்கிறது. இன்று அவர்களுக்குக் கிடைக்கும் மூன்று காசுக்குப் பதிலாகத் தினமும் மூன்றணா அவர்களுக்குக் கிடைக்கும்படி செய்தால், தங்களுக்கு சுயராஜ்யம் கிடைத்து விட்டது என்று அவர்கள் பூரிப்படைவார்கள். அதை அவர்களுக்குச் சம்பாதித்துத் தரவே, கதர் வேலை நடந்து வருகிறது.

இன்று வீணாகி, விரயமாகும் பலத்தைப் பயன்படுத்திச் செல்வமாக்கும் வழியை அவர்களுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும். அதுதான் இந்தக் கண்காட்சியின் நோக்கம். நான், ஸ்ரீ நந்தலால் போஸை இரண்டு மாதங்களுக்கு முன்பு கண்டபொழுது, சாந்தி நிகேதனத்திலிருந்து விலை உயர்ந்த ஓவியங்களைக் கொண்டுவர வேண்டாமென்றும், அவை இங்கே மழை

யால் கெட்டுவிடக் கூடுமென்றும் கூறினேன். அவர் என் யோசனையை ஏற்றுக்கொண்டு எல்லாவற்றையும் உள்ளூரிலேயே சேகரித்துக் கொண்டார். அவர் தம் கலைக் கண்ணுடன் கிராமத்தைச் சுற்றிப் பார்த்து, குடியானவனின் குடிசையிலிருந்து கலையழகு கொண்ட பல பொருட்களைத் திரட்டினார். சாதாரணமாக நம் பார்வையை அவை கவர்ந்திருக்க மாட்டா. ஆனால், அவர் கலைக்கண், அவற்றைக் கண்டெடுத்துவிட்டது. அருமையை உணர்ந்து, அவற்றை இங்கு அடுக்கிவைத்துள்ள விதத்தில், அந்த அழகை நாமும் உணரும்படி செய்துவிட்டார்.

முன்பு நடந்த கண்காட்சிகளைவிட இக்காட்சி சிறியதாயிருக்கிறது என்ற காரணத்திற்காக ஸ்ரீ வைகுந்த மேத்தா, நம்மிடம் மன்னிப்புக் கேட்டார். உண்மையில் அவர் மன்னிப்புக் கேட்க அவசியமேயில்லை. அனாவசியமான, அர்த்தமற்ற பொருள் ஒன்றுகூட இங்கே வைக்கப்படவில்லை. இங்கே சேர்க்கப்பட்டுள்ள கைத்தொழில்கள் எல்லாம், உற்பத்திப் பெருக்கைக் குறிக்கின்றன. ஒருவகைப் புல்லிலிருந்தும், வாழைப் பட்டையிலிருந்தும், மூங்கிலிலிருந்தும் செய்யப்படும் காகிதங்களைப் பாருங்கள். இங்கே கட்டப்பட்டுள்ள பல கட்டடங்களிலும் மூங்கில்தான் முக்கியமாக உபயோகிக்கப்பட்டுள்ளது. மகாநாடு கலைந்த பின் இந்த மூங்கிலையெல்லாம் பிரித்துத் தொண்டர்கள் சரியான முறையில் பயன்படுத்திக் கொள்ளுவார்கள் என்பதில் உங்களுக்குச் சந்தேகம் வேண்டியதில்லை.

நமது தலைவருக்காக ஏற்பாடு செய்யப்பட்ட ஆடம்பரமற்ற, ஆனால், அழகு நிறைந்த ஊர்வலத்தை நீங்கள் கண்டிருப்பீர்கள். குறிப்பாக ஆறு ஜதை மாடுகளால் இழுக்கப்பட்ட, அழகாக அலங்கரிக்கப்பட்ட ரதத்தை நீங்கள் கண்டு களித்திருப்பீர்கள். கண்காட்சியில் நீங்கள் காணப் போவதற்கு, அவையெல்லாம் முன்னோட்டம் ஆகும். நகரத்தில் உள்ள வசதிகளோ, சுகங்களோ இங்கே கிடையாது. ஆனால், ஏழைக் கிராமவாசிகள், தங்களால் செய்து தரக்கூடிய வசதிகளையெல்லாம் செய்துள்ளனர். இவ்விடம் நமக்குப் புண்ணிய இடம், யாத்திரைத் தலம் ஆகிவிட்டது. நமக்குக் காசியும் மெக்காவும் ஆகிவிட்டது. சுதந்திர தேவியைப் பூசித்து, நாட்டின் சேவைக்கு நம்மைத் தத்தம் செய்ய, நாம் இங்கே குழுமியுள்ளோம். ஏழைக் குடியானவர்கள்மீது உங்கள் ஆதிக்கத்தைச் செலுத்த நீங்கள் இங்கு வரவில்லை. அவர்கள்மீது சவாரி செய்வதைவிட்டு, அவர்களுடைய அன்றாட வேலையில் பங்கெடுத்துக்கொள்ளும் வகையைக் கற்றுக்கொள்ளவே இங்கே வந்திருக்கிறீர்கள். தோட்டி வேலையானாலும் சரி, துணி துவைப்பதானாலும், மாவரைப்பதானாலும் சரி, அதை நீங்களே செய்யக் கற்றுக்கொள்ள வந்திருக்கிறீர்கள். காங்கிரசின் சரித்திரத்தில் முதன் முறையாக, தீட்டாத அரிசி, கையால் அரைக்கப்பட்ட மாவால் சப்பாத்தி ஆகியவை உங்களுக்குச் சாப்பாடாகத் தரப்பட்டுள்ளது. நல்ல சுத்தமான காற்றைச் சுவாசித்து, சுத்தமான தரையில்

படுத்து ஓய்வு எடுக்க வாய்ப்பு அளிக்கப்பட்டுள்ளது. செயலாளர் ஏற்பாடுகளில் குறைபாடு ஏதேனும் இருந்தால், நீங்கள் பொறுத்தருள வேண்டும். ஏனென்ருல், கான்சாஹிப் சொல்லுவதுபோல், நாம் எல்லோரும் ஆண்டவனின் அடியார்கள். பிறரிடத்திலிருந்து வேலைவாங்க வரவில்லை. பிறருக்கு வேலை செய்து, சேவை செய்ய வந்துள்ளோம்.

—'ஹரிஜன்' - 2—1—1937

# 20

# கண்காட்சியே கல்விக்கூடம்

**1938,** *பிப்ரவரி 10-ஆம் தேதி, ஹரிபுரா கண்காட்சியில் செய்த பிரசங்கம்:*

இது போன்ற கண்காட்சி முதன் முறை லட்சுமணபுரியில் திறக்கப்பட்டபோது, கண்காட்சிகள் கல்விக் கூடங்களாக விளங்க வேண்டுமென்று கூறினேன். அந்த லட்சியத்தை நோக்கி நாம் மிகவும் முன்னேறியுள்ளோம். இன்று நடக்கும் கண்காட்சி, உண்மையில், ஒரு வருடாந்திரப் பயிற்சிப் பள்ளிக் கூடமாகவே அமைந்துள்ளது. முந்திய கண்காட்சிகளைப்போல் இது வேடிக்கைக் காட்சி அல்ல. இதைப் பார்க்க வரும் லட்சக் கணக்கான மக்களுக்குக் கல்வி புகட்டும் காட்சியாகவே இது இருக்கும். இதைப் பார்க்கும் ஏழையை, ஒரு தொழிலைக் கற்றுக் கொள்ள இது தூண்டுகிறது. அத்தொழிலைத் தினமும் எட்டு மணி நேரம் பயில்வதன் மூலம், அவர் தம்மையும், தம் குடும்பத்தையும் காக்க முடியும். கல்வி அறிவு இல்லாதவர்கூட, தம் உடல் உழைப்பால் கௌரவமான தொழில் செய்து, நேர்மையான பிழைப்பு நடத்த இது பயிற்சி தரும்.

இன்று காலை, கண்காட்சியை நான் ஒரு மணி நேரம் சுற்றிப் பார்த்தேன். சர்க்கா சங்கத்தின் தலைவராகவும், கிராமக் கைத் தொழில் சங்கத்தின் வழிகாட்டியாகவும் உள்ள எனக்குக் கண் காட்சியில் புதிதாகப் பார்க்க என்ன இருக்க முடியும் என்று எண்ணுதீர்கள். நீங்கள் அவ்வாறு நினைத்தாலும் நான் அவ்வாறு நினைத்து என்னை ஏமாற்றிக்கொள்ளப் போவதில்லை. இங்கே ஒரு மணி நேரம் அல்ல, பல மணி நேரம் இருந்து, ஏதாவது புதிய தொழில் ஒன்றைக் கற்றுக் கொள்ள ஆசைப்படுகிறேன். ஆனல், நான் இங்கே கற்றுக்கொள்ளக்கூடிய தொழிலைக்கொண்டு பிழைப்பை நடத்த முடியாது என்பதை ஒத்துக்கொள்ளுகிறேன். தற்சமயம் நான் பிச்சை எடுத்து வாழ்ந்து வருகிறேன். என்னைப் போல் உள்ளவர்களுக்கு அதைத் தவிர வேறு வழி இல்லை. ஆனல், உடல்வலியுள்ள ஆணே, பெண்ணே, இங்கே நடத்திக் காட்டப்

படும் தொழில்களில் ஒன்றைக் கற்று, கௌரவமான பிழைப்பு நடத்த முடியும் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

இந்தியாவின் ஏழு லட்சம் கிராமங்களுக்கும் புத்துயிரூட்ட வேண்டுமானால், நாகரிகத்துக்கு அடிப்படையாயுள்ள சமாதானத்தை நிலை நாட்டவேண்டுமானால், கை ராட்டையைச் சுற்றி நாம் எல்லாக் கைத்தொழில்களையும் அமைக்கவேண்டுமென்று நான் பல முறை கூறியுள்ளேன். கைராட்டையில் எனக்குள்ள நம்பிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. கை ராட்டைதான், மற்றெல்லா கைத்தொழில்களுக்கும் ஆதாரமாகவும், நடு நாயகமாகவும் விளங்கும் என்பது எனக்கு மேலும் மேலும் நன்கு தெளிவாகிறது. கைத்தொழில்களென்னும் சூரிய மண்டலத்தில், கதர்தான் சூரியன். மண்டலத்தில் பல புதிய நட்சத்திரங்களும் கோளங்களும் கண்டுபிடிக்கப்படுவது போலவே, புதுப் புதுக் கைத்தொழில்களை நாம் கண்டுபிடிக்க முடியும். கதரைச் சூரியன் போல பாவித்து, அதிலிருந்து ஆதாயம் பெற்றால்தான் இது சாத்தியமாகும். *1921*-ல் பர்தோலியில், ஒவ்வொரு வீட்டிலும் ராட்டை சுழன்றால்தான் சத்தியாக்கிரகம் தொடங்குவேன் என்று நிபந்தனை விதித்தேன். அந்த நிபந்தனை பூர்த்தி செய்யப்படவில்லையென்று நான் அறிந்திருந்த போதிலும், காலஞ்சென்ற வித்தல்பாய் பட்டேல் வேண்டிக் கொண்டதன்பேரில், அந்த நிபந்தனையைத் தளர்த்திச் சத்தியாக்கிரகம் தொடங்கினேன். அதன் முடிவு என்ன என்பது உங்கள் அனைவருக்கும் தெரிந்ததே. ஒவ்வொரு வீட்டிலும் ஒரு ராட்டை சுழல வேண்டுமென்ற நிபந்தனையை இன்றாவது பூர்த்தி செய்யுமாறு பர்தோலிவாசிகளைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அவர்களின் சொற்ப வருவாயை அதிகரிக்கவும், தங்கள் தேவைகளைத் தாங்களே பூர்த்தி செய்யவும் அது உதவும்.

—'ஹரிஜன்'–19—2—1938

## 21

# இந்தியத் தொழில் எது?

இந்தியத் தொழில் என்றால் என்ன என்று பலர் கேட்கின்றனர். இந்தியக் கண்காட்சிச் சாலைகளைப் பற்றி இக் கேள்வி பொதுவாகக் கேட்கப்படுகிறது. இந்தியாவில் நடக்கும் எந்தத் தொழிலும் இந்தியத் தொழில் என்று ஒரு காலத்தில் கருதப்பட்டது. அக் கருத்தின்படி, அயல் நாட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட மூலதனம், யந்திரங்கள், நிபுணர்கள் உதவி ஆகியவற்றைக்கொண்டு ஐரோப்பியரால் இந்தியாவிலேயே நடத்தப்படும் தொழிலும் இந்தியத் தொழில் எனக் கருதப்பட்டது. இந்தியப் பாமர மக்கள் நலனுக்குப் பாதகமாக அத் தொழில்

இருந்தாலும் அதைப்பற்றிக் கவலைப்படவில்லை. அந்நிலை இன்று மாறிவிட்டது. இந்தியத் தொழில் என்று இன்று மதிக்கப்பட வேண்டுமானால், அது பாமர மக்கள் நலனுக்கு உகந்ததாயிருக்க வேண்டும். தொழிலை நடத்தும் தேர்ச்சி பெற்ற தொழிலாளரும், தேர்ச்சியில்லாத தொழிலாளரும் இந்தியர்களாயிருக்க வேண்டும். மூலதனமும், யந்திரங்களும் இந்தியாவைச் சேர்ந்தவையாயிருக்கவேண்டும். தொழிலாளிகளுக்கு, வாழ்க்கைக்குப் போதுமான, நியாயமான கூலி கொடுக்க வேண்டும். அவர்களுக்குக் குடியிருப்பு வசதி செய்து கொடுக்க வேண்டும். தொழிலாளிகளின் குழந்தைகள் நலனையும் முதலாளிகள் கவனிக்க வேண்டும். அத்தகைய முறையில் நடத்தப்படும் தொழிலே இந்தியத் தொழில் என மதிக்கப்படும். சர்க்கா சங்கமும், கைத்தொழில் சங்கமும்தான் இந்த நிபந்தனைகளை ஓரளவு பூர்த்தி செய்ய முடியும். இந்தச் சங்கங்களும் இன்னும் எவ்வளவோ முன்னேற வேண்டியிருக்கின்றன. ஆனால், அந்த லட்சியத்தைக் கடைப்பிடிப்பதே, சங்கங்களின் உடனடியான வேலைத் திட்டம்.

இந்தியத் தொழில் என்பதற்கு நான் மேலே சொன்ன வியாக்கியானத்துக்கும், 1920-க்கு முன் காங்கிரசே ஏற்றுக் கொண்ட கொள்கைக்கும் இடையே, பல தரப்பட்ட வியாக்கியானங்கள் இருக்கலாம். இந்தியாவில் உற்பத்தி செய்யப்படும் மில் துணி நீங்கலாக மற்றப் பொருட்களையெல்லாம் இந்தியப்பொருட்களாய் மதிப்பதே காங்கிரஸின் கொள்கையாய் இருந்து வந்துள்ளது. மிகவும் முன்னேற்ற மடைந்துள்ள மில் தொழில், இந்தியத் தொழில்தானே என்று சாதாரணமாகக் கேட்கலாம். ஆனால், ஜப்பானுடனும், லங்காஷயருடனும் போட்டி போடக் கூடிய அளவுக்கு முன்னேறியுள்ளது என்றபோதிலும், அது பாமர மக்களைச் சுரண்டும் தொழில். அத்தொழில், கதருக்கு மேலாக, எவ்வளவுக் கெவ்வளவு வெற்றி பெறுகிறதோ, அந்த அளவுக்குப் பாமர மக்களின் வறுமை அதிகரிக்கும். எல்லாவற்றையும் யந்திர மயமாக்க வேண்டும் என்ற மோகம் பரவியுள்ளதால் என் கொள்கை புறக்கணிக்கப்பட்டுள்ளது ; மறுக்கப்பட்டுள்ளது. யந்திரத் தொழில் பரவுவதால் பாமர மக்களிடையே வறுமை பரவுவது தவிர்க்க முடியாததென்றும், அதைச் சகித்துக்கொள்ளத்தான் வேண்டும் என்றும் கூறப்படுகிறது. சகித்துக் கொள்ளுவது ஒருபுற மிருக்க, அது தவிர்க்க முடியாதது என்று நான் கருதவில்லை. இப்போதுள்ள ஓய்வு நேரத்தைப் பயன்படுத்துவதால், இந்தியாவுக்குத் தேவையாயுள்ள துணி அனைத்தையும் கிராமத்திலேயே உற்பத்தி செய்யலாமென்பதை சர்க்கா சங்கம் வெற்றிகரமாய் நிரூபித்துள்ளது. மில் துணி உபயோகிக்கும் பழக்கத்திலிருந்து மக்களை விடுவிப்பதுதான் இன்றையப் பிரச்னை. அதை எப்படிச் செய்வது என்று இங்கே ஆராய வேண்டியதில்லை. இந்தியத் தொழில் என்றால் என்ன என்ற கேள்விக்கு, லட்சக்கணக்கான கிராம வாசிகளை மனத்திற் கொண்டு, ஒரு வியாக்கியானம் தருவதே இக் கட்டுரையின்

நோக்கம். பொது ஜன ஆதரவு எந்தத் தொழில்களுக்கு அவசியமாயுள்ளதோ, அவற்றிற்காகவே கண்காட்சிகள் நடத்த வேண்டும். கண்காட்சிகளின் உதவி இல்லாமலேயே லாபகர மாய் நடக்கும் தொழில்களுக்கும், தாமே சொந்தத்தில் கண் காட்சிகள் நடத்தக்கூடிய நிலையில் உள்ள தொழில்களுக்கும் இது அவசியமில்லை.

—'ஹரிஜன்'-23—10—1937

# 22
# போலிச் சுதேசி

உண்மைச் சுதேசி என்று கூறினால், போலிச் சுதேசியும் ஒன்றிருக்கிறதா என்று சிலர் கேட்கலாம். துரதிருஷ்டவசமாக, போலிச் சுதேசியும் இருக்கிறது. கதர் இயக்கம் தொடங்கிய காலம் முதற்கொண்டு, அதில் ஒரு நிபுணர் என்று என்னை மதித்து வருவதால், பல நண்பர்கள் எனக்குப் பல கேள்விகள் அனுப்பிப் புதிர்கள் போடுகின்றனர். அவற்றின் பலனாய், போலிச் சுதேசிக்கும், உண்மைச் சுதேசிக்கும் உள்ள வித்தியா சத்தை எடுத்துக்காட்ட அவசியம் ஏற்பட்டுள்ளது. அந்நிய மூல தனத்தையும், சுதேசி மூலதனத்தையும், அந்நியர் தொழில் நிபுணத்துவத்தையும் நம் நாட்டு நிபுணத்துவத்தையும் சேர்த்து நடத்தும் தொழில் சுதேசித் தொழிலாகுமா? இன்னும் பல கேள்விகள் வருகின்றன. சில தினங்களுக்கு முன்பு, ஒரு மந்திரி யிடம், சுதேசிக்கு ஒரு வியாக்கியானம் கூறினேன். அயல்நாட்டு மூலதனத்துடனும் நிபுணத்துவத்துடனும் தொழில் நடத்தப் பட்டாலும்கூட, அத்தொழிலின் நிர்வாகத்தில் இந்தியருக்கு ஸ்திரமான அதிகாரம் இருந்தாலும், உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் லட்சக்கணக்கான பாமர மக்களுக்குப் பயன்படும் பொருட்களாய் இருந்தாலும் அவை உண்மையில் சுதேசிப் பொருட்களேயாகும். சர்க்கா சங்கத்தில் அயல்நாட்டு மூலதனம் உபயோகிக்கப்பட்டு, நிர்வாகக் குழுவிலும் அந்நிய நிபுணர்கள் இருந்தாலும், கதர், சுதேசிப் பொருளாகவே இருக்கும். அது போலவே இந்திய மூலதனமும் தொழிலாளரும் கொண்டு நடத்தப்பட்டாலும், பாட்டாவின் செருப்புக்கள் அந்நியச் சரக்கு களாகவே இருக்கும். நிர்வாகம் அயல்நாட்டினர் கையில் இருப்பதாலும், சரக்கு எவ்வளவு நயமாக இருந்தாலும், கிராமத்தில் தோல் பதனிடும், செருப்புத் தைக்கும் தொழி லாளர் பிழைப்பில் மண்ணைப்போடும் என்பதாலும், அவை இரு வகைகளிலும் அயல் நாட்டுச் சரக்கு களாகவே இருக்கும். பாட்டாவின் வியாபாரத்தில், பீகாரில் செருப்பு தைக்கும் தொழிலாளியின் பிழைப்பு திண்டாட்டமாகி வருகிறது. பாட்டாவினால், ஐரோப்பாவுக்கு நன்மை இருக்க

லாம். நம் கிராமத்தில் உள்ள தோல், செருப்புத் தொழிலாளரின் அழிவில்தான் அது முடியும். இவ்விரண்டையும் நான் உதாரண மாகத்தான் எடுத்துக் கையாண்டுள்ளேன். உதாரணத்துக்காகத் தான் சொன்னேனே ஒழிய, உண்மையில் அகில இந்திய நூற் போர் சங்கத்தின் மூலதனமெல்லாம் இந்திய மூலதனம்; தொழில் திறமை அனைத்தும் இந்தியர்களுடையது. ஆனால், கிராம ராட்டையை இன்னும் பயனுள்ளதாக்க, மேனாட்டு நிபுணர் களால் முடியுமானால், அவர்கள் உதவியை நான் வரவேற்பேன். ராட்டைக்கு இப்பொழுது நம் நாட்டினரால் செய்யப்பட்டுள்ள சீர்திருத்தங்களே ஓரளவுக்குப் பயன் தருபவை என்று நான் கருதுகிறேன். அது ஒரு புறமிருக்க, மந்திரிகளும், பொதுஜன சேவை செய்யும் மற்ற ஊழியர்களும் போலிச் சுதேசிக்கும் உண்மைச் சுதேசிக்குமுள்ள வித்தியாசத்தை உணர்ந்து நடப் பார்கள் என்று நம்புகிறேன்.

—'ஹரிஜன்' – 25—2—1939

# 23
# மலையும் மடுவும்

ஸ்ரீ வால்சந்த் ஹீராசந்த், *1931*, மார்ச் மாதம் 19-ஆம் தேதி மகாத்மாவுக்குப் பின்வரும் கடிதம் எழுதியிருந்தார் :

அன்புள்ள மகாத்மாஜி,

செவ்வாய்க்கிழமை பிற்பகல் பல தொழில் பிரமுகர்கள் உங்களைப் பேட்டி கண்டபோது நடந்ததன் விவரம், பல பத்திரிகைகளில் பல்வேறு விதமாகப் பிரசுரமாகியுள்ளது. பிரச்னை மிக முக்கியமானதால், பேட்டியின் உண்மை விவரங்கள் பொதுமக்களுக்குத் தெரிவது அவசியம் என்று நான் கருதுகிறேன். நானும் என் நண்பர்களும் தெரிந்துகொண்டவரை, நீங்கள் சொன்னதன் சாரம் பின்வருமாறு :

"காங்கிரஸ் பிரதிநிதிகள் வட்டமேஜை மகாநாட்டில் கலந்துகொள்ளு வார்களா, மாட்டார்களா என்று நான் இப்பொழுது சொல்ல முடியாது. ஆனால், வட்டமேஜை மகாநாட்டில், சம உரிமை என்ற சாக்கில் வற்புறுத்தப் பட்டுள்ள கோரிக்கையை, உங்களைப்போலவே காங்கிரஸும் எதிர்க்கும் என்று மட்டும் உறுதியாகக் கூறமுடியும்.

மற்ற நாடுகள் என்ன செய்திருந்தாலும் சரி, செய்யாதிருந்தாலும் சரி, இந்தியா, தன் நலனுக்குகந்தவாறு, தன் தொழில்களைக் காக்கவும், வளர்க் கவும் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டும்.

இந்தியர் நலனைக் காக்க அவசியமாயிருந்தால், இந்தியப் பிரஜை களுக்கும், பிரஜைகள் அல்லாதாருக்குமிடையே வித்தியாசம் பாராட்டுதற்கு, வருங்கால இந்திய சட்டசபைக்குள்ள அதிகாரம் பாதிக்கப்படாது.

ஐரோப்பியர் சிறுபான்மை வகுப்பினராக மதிக்கப்படவேண்டு மென்றும், அவர்களுக்கு விசேஷச் சலுகைகள் தரப்படவேண்டுமென்றும் கோரப்படுவதை ஏற்றுக்கொள்ள முடியாது.

நேரு திட்டத்தின் மற்றெல்லாப் பகுதிகளேயும் புறக்கணித்துவிட்டு, ஒரு பகுதியை மட்டும் எடுத்து, நம் முகத்தில் வீச, யாருக்கும் உரிமை இல்லே.

இந்த முக்கிய பிரச்னையைக் குறித்து, நீங்கள் பிரசாரம் செய்யவேண்டு மென்று நான் யோசனே கூறுவேன்.

பிரஜா உரிமை பற்றி நேரு திட்டத்தில் உள்ள பகுதி பற்றி சர் தேஜ் பஹதூர் சாப்ரு வெளியிட்டுள்ளதாகக் கூறப்படும் அறிக்கையைப் பொறுத்த வரை, அசெம்பிளியில் பண்டித மோதிலால் நேருவின் அறிக்கையுடனும், கல்கத்தாவில் கூடிய சர்வகட்சி மகாநாட்டில், பிரஜை என்பதன் வியாக்கியானம்பற்றிச் செய்யப்பட்ட முடிவுடனும் சேர்த்தே, சாப்ருவின் அறிக்கையை வாசிக்க வேண்டும்.''

மகாத்மாஜி, நாங்கள் தெரிந்துகொண்டவரை, நீங்கள் சொன்னதன் சாரம் இதுதான். உங்கள் கருத்தை இதில் நான் சரியாக வெளியிட்டுள்ளேன் என்று நீங்கள் கருதினல், இக்கடிதத்தைப் பிரசுரிக்க அனுமதி கோருகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

வால்சந்த் ஹீராசந்த்.

ஸ்ரீ வால்சந்த் ஹீராசந்த் கடிதத்தை ஒட்டிக் காந்திஜி பின்வருமாறு எழுதினர் :

என்னுடைய கருத்தைச் சரியாகத் தெளிவாக்கும்பொருட்டு, நான் அக்கடிதத்தில் சில திருத்தங்கள் செய்துள்ளேன். இந்தியப் பிரஜைகளின் உரிமைகளுக்கும், இந்தியாவில் வர்த்தகம் நடத்தி வரும் பிரிட்டிஷ் வர்த்தக சமூகம், கம்பெனிகள் ஆகியவற்றின் உரிமைகளுக்கும் வித்தியாசம் இருக்கக்கூடாது என்ற கோரிக்கையின் பேரில் நடந்த விவாதத்தை அக்கடிதம் குறிப்பிடுகிறது. அக்கோரிக்கை, மேல்வாரியாகப் பார்க்கும் போது, நியாயமாகத் தான் தோன்றுகிறது. ஆனல், உண்மையில் அதில் சூது பொதிந்துள்ளது. இன்றுள்ள நிலேமையில் ஆங்கிலேயர் கையில் ஆதிக்கம் இருக்கிறது. இந்தியர், தம் சொந்த நாட்டிலேயே சுரண்டப்படுகின்றனர். தன் சொந்த நாட்டை ஆளும் நிர்வாக அமைப்பில், இந்தியன் கேவலம் ஒரு குமாஸ்தா. வர்த்தகத்தில் இந்தியர் ஒரு கமிஷன் ஏஜெண்டுதான். வெள்ளேயருக்கு 95 சதவிகித லாபம் கிடைக்கையில் அவருக்கு ஐந்து சதவிகிதம் கமிஷன் கிடைக்கிறது. ஆளும் வர்க்கத்தைச் சேர்ந்தவர் என்ற காரணத்தால், எல்லாத் துறைகளிலுமே ஆங்கிலேயர் ஆதிக்கம் செலுத்துகின்றனர். இந்தியாவின் வர்த்தகத்தையும் தொழில்களேயும் அழித்து, அவற்றின் சமாதி மீது, ஆங்கிலேயர் தம் செழிப்பெனும் உல்லாச உப்பரிகையைக் கட்டியுள்ளனர். லங்காஷயருக்கு லாபம் கிடைக்கவேண்டு மென்பதற்காக, நம் நாட்டுக் குடிசைக் கைத்தொழில்கள் அழியவேண்டியதாயிற்று.

பிரிட்டிஷ் கப்பல் கம்பெனிகள் பெருகுவதற்காக, இந்தியக் கம்பெனிகள் அழியவேண்டியதாயிற்று. சுருங்கக் கூறின், சிம்லாவின் சிகரத்தின் மீது ஆங்கிலேயர் அமரவேண்டுமென்பதற்காக, நாம் அனைவரும் நசுக்கப்பட்டோம். நம் வளர்ச்சி குன்றி விட்டது, முடங்கிவிட்டது என்று கோகலே கூறிய போது மிகைப்படுத்திக் கூறிவிடவில்லை. இங்கிலையில் இந்தியருக்கும், ஆங்கிலேயர் அல்லது ஐரோப்பியருக்குமிடையே வித்தியாசம் பாராட்டக்கூடாதென்று கூறுவது, இந்தியாவின் அடிமைத் தனத்தை நீடித்து ஸ்திரப்படுத்துவதேயாகும். மலைக்கும் மடுவுக்கும் என்ன சம உரிமை இருக்கமுடியும்? சம உரிமை பற்றிப் பேசுவதற்கு முன்பு, மடுவை மலை அளவுக்கு உயர்த்தவேண்டும். சமவெளியில் வாழும் லட்சக்கணக்கான மக்கள் அனைவரையும் சிம்லாவின் உச்சிக்கு அழைத்துச் செல்லுவது அசாத்தியம் என்பதால், சிம்லாவில் இருக்கும் சிலர்தான் சமவெளிக்கு இறங்கி வரவேண்டும். அது சற்று கடுமையான நடவடிக்கையாகத் தோன்றலாம். ஆனால், சமவெளியில் சிரமப்படும் கோடிக் கணக்கானவர், உச்சியில் உள்ள ஒரு சிலரோடு சமநிலை அடைய வேண்டுமானால், அந்த நடவடிக்கை அவசியம்தான்.

சமநிலையை அடைவதற்குமுன், முதலில் சரிசமமாக்கும் வேலை நடக்கவேண்டும். அதுதான் நியாயம். அதை இன வெறி என்று கூறுவது அர்த்தமற்ற பேச்சு. தாங்கள் உட்கார்ந்துள்ள ஒய்யாரக் கிளையிலிருந்து மட்டும் இறங்கிவிட்டால், ஒவ்வொரு பிரிட்டிஷ் ஆண், பெண், குழந்தையும் வசதியாக வாழ இந்நாட்டில் இடமுண்டு. நம் கஷ்ட நஷ்டங்களை அவர்களும் பகிர்ந்து கொள்ளவேண்டும். அவர்கள், பிரிட்டிஷ் ராணுவத்தையும், நகரங்களின் அரணையும் நம்பியிராமல், நாட்டு மக்களின் நன்மதிப்பை நம்பி வாழட்டும். அவர்கள் விரும்பினல், நம் நன்மதிப்பையும் நட்பையும் பெறலாம். அதுதான் அவர்களுக்கு உறுதியான துணை; சிறந்த உத்தரவாதம். நம் இருவருடைய நன்மைக்கும் கௌரவத்துக்கும் அதுதான் ஏற்றது. அந்நிலையை ஏற்படுத்தும் வரை, ஒரு சிலரிடையே வித்தியாசம் காட்டவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும். ஆனால், இப்போதுள்ள நிலைமை நேர்மைக்கும் இயற்கைக்கும் விரோதமான நிலை என்பதை உணர்வோர் யாரும், அவ்வாறு வித்தியாசம் காட்டப்படுவதைக் கண்டு வருந்த வேண்டியதில்லை. பிரிட்டிஷார் தயவில், அவர்களுக்குப் பின்னல், உயர்ந்த இடத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கும் இந்தியர்களும், பள்ளத்தில் கிடக்கும் தங்கள் சகோதரர் நிலைக்கு இறங்கி வரவேண்டும். இனவெறி எதுவுமில்லை என்பதற்கு இதுவே சிறந்த அத்தாட்சி. இயற்கைக்கு விரோதமான ஏற்றத் தாழ்வுகளைப் போக்குவதற்கு, ஆளும் வர்க்கத்தினருக்கும் அவர்களைச் சார்ந்தோருக்கும் உள்ள சலுகைகளை நீக்கிவிட்டு, மற்ற வகுப்பினருடன் அவர்கள் சமநிலையை அடையும்படி செய்வது தான் வழி.

நம்மைப் பொறுத்தவரை, பிரிட்டிஷாரின் உயிரையும் கௌரவத்தையும், நம் உயிரையும் கௌரவத்தையும் போலவே, புனிதமாக மதிப்பது நம் கடமை. பிரிட்டிஷ் வர்த்தகமோ, நலன்களோ அழிந்துவிடும் என்று அர்த்தமில்லை; அர்த்தமாகாது. இந்தியாவில் குடியேறியுள்ளவர்கள் தங்கள் கட்டுப்பாடான நடத்தை, விவேகம், விடாமுயற்சி, செயலாற்றல் ஆகியவற்றைக் கொண்டு தங்கள் எதிர்காலத்தை இங்கேயே சிறப்பாக அமைத்துக் கொள்ளலாம். தங்கள் தாய்நாட்டுக்குக் காட்டி வந்துள்ள விசுவாசத்தை தங்கள் சுவீகார நாட்டுக்கும் காட்டலாம்.

இத்தகைய கௌரவமான, கண்ணியமான உறவை ஏற்படுத்திய பின், இந்தியாவின் வர்த்தகத்துக்குக் குந்தகம் ஏற்படாத வகையில், பிரிட்டிஷ் வர்த்தகத்துக்குச் சலுகை காட்டலாம். உள்நாட்டிலும், அயல் நாட்டினராலும் சுரண்டப்படுவதிலிருந்து விடுதலை பெற்ற இந்தியா, மிகவும் அதிசயிக்கத்தக்க வேகத்தில் செழிப்பு அடைந்து முன்னேறும். செழிப்பு அதிகரிப்பதுடன், நாட்டின் தேவைகளும் அதிகரிக்கும். தேவைகள் அதிகரிப்பதால் இறக்குமதிகளும் அதிகரிக்கும். அங்கிலையில் பிரிட்டன், இந்தியாவின் பங்காளி அல்லது நேச நாடாக இருந்தால், இந்தியாவுக்கு வேண்டிய பொருட்கள் அனைத்தையும் தானே அனுப்பித் தன் வர்த்தகத்தை வளர்த்துக் கொள்ளலாம்.

இந்தக் கனவு ஈடேற வேண்டும் என்று எனக்கு வெகு ஆவல். இந்தக் கனவு நனவாகும் பொருட்டுச் செய்யப்பட்டுள்ள ஒப்பந்தத்தில் எனக்குப் பங்குண்டு. இந்தியா அங்நிலையை அடைய ஒவ்வொரு பிரிட்டிஷ்காரரும் உதவி செய்ய வேண்டுகிறேன். நான் விரும்பும் பூர்ண சுயராஜ்யம், மற்ற நாடுகளிலிருந்து ஒதுங்கித் தனியாக இருப்பதைக் குறிக்காது. அது கௌரவமான, கண்ணியமான சுதந்திரமாகவே இருக்கும். என்னுடைய தேசியம் தீவிரமாக இருந்தபோதிலும், மற்ற நாடுகளிலிருந்து ஒதுங்கி நிற்க வேண்டும் என்று விரும்பவில்லை. எந்த நாட்டுக்கும், தனிப்பட்ட மனிதருக்கும் தீங்கு செய்ய எண்ணமில்லை. நான் சட்டத்தை சட்டத்துக்காகப் பெரிதாக மதிக்கவில்லை. அதில் அடங்கியுள்ள தருமத்துக்காகவே பெரிதாக மதிக்கிறேன். பிறர் சொத்துக்குப் பாதகம் ஏற்படாத வகையில் என் சொத்தை உபயோகிக்கும் கொள்கையில் நான் உறுதியான நம்பிக்கை கொண்டவன்.

—'எங் இந்தியா'—26—3—1931

# 24

# கதரும் அகிம்சையும்

கிராமக் கைத்தொழில் சங்கத்தை அமைத்து, வழிகாட்டி நடத்துபவன் நான்தான் என்றபோதிலும், அதைச் சக்களத்தி பிள்ளையாகவே நடத்துகிறேன் என்று என்மீது பேராசிரியர் குமரப்பாவுக்குக் கோபம். அவர் குறைகூறுவது, அவர் சரியாக ஆராய்ந்து உண்மையை அறியாததால் என்று நான் அவருக்குப் பதில் கூறியுள்ளேன். ஆனாலும், அவர் அதையே மீண்டும் மீண்டும் வற்புறுத்தி வருகிறார். அவர் தோல்வியை ஒப்புக்கொண்டு சும்மா இருப்பவரல்ல. கதரைப் போலவே மற்றக் கைத்தொழில்களையும் முக்கியமாக மதிக்கிறேன் என்று நான் உலகுக்குப் பிரகடனம் செய்தால் ஒழிய, அவர் திருப்தியடைய மறுக்கிறார். அது ஒரு வெளிப்படையான உண்மை என்பதால், அதை எடுத்துக்கூற வேண்டிய அவசியமில்லையே என்று நான் கருதினேன். ஆனால், நடைமுறையைப் பொறுத்தவரை, பேராசிரியர் குமரப்பா சொல்வது சரிதான். மக்கள் எப்பொழுதும் ஒரு தத்துவத்தின்படி நடப்பதில்லை. கதரை உபயோகிக்கும் பலர், மற்றக் கிராமப் பொருள்களை உபயோகிப்பதில்லை என்று பல நண்பர்கள் என்னிடம் கூறியுள்ளனர். கதர் அணிய வேண்டுமென்று காங்கிரஸ் விதிகள் வற்புறுத்துவதால்தான் பலர் கதர் அணிகின்றனர் என்று கூறுகிறார்கள். அவர்களுக்குக் கதரில் உண்மையான நம்பிக்கை இல்லாததால், மற்றப் பொருட்களைப் பொறுத்தவரை, தங்கள் சௌகரியத்தைத் தவிர வேறெதையும் கருதுவதில்லை என்கிறார்கள். அவ்வாறு நடப்பது, விதியைப் பெயரளவில் கடைப்பிடித்துவிட்டு, அதன் அடிப்படைக் கொள்கையை அழிப்பதேயாகும். கொள்கையைக் கொன்றுவிட்டு விதியைக் கடைப்பிடிப்பது, உயிரற்ற சவத்துக்குச் சமம். சூரிய மண்டலத்தில் கதர்தான் சூரியன் என்றும், மற்றக் கைத்தொழில்கள் அதைச் சுற்றியுள்ள கோளங்கள் என்றும் நான் பன்முறை கூறியுள்ளேன். கதரை நீக்கி அவை நிற்க முடியாது. அவையில்லாமல் கதரும் இருக்க முடியாது. அவை ஒன்றை ஒன்று நம்பி நிற்பவை. தொன்றுதொட்டு நிலைத்து வந்துள்ள கிராம இந்தியாவை நாம் போற்றுவோமா, அல்லது அந்நியர் ஆதிக்கத்தால் சமீபத்தில் உண்டாகிய நகரங்களைப் போற்றி வளர்ப்போமா என்பதை நாம் முடிவுசெய்து கொள்ள வேண்டும். இன்று நகரங்கள் ஆதிக்கம் செலுத்துகின்றன. கிராமங்கள் சுரண்டப்பட்டு அழிகின்றன. அந்த ஆதிக்கம் மறைந்த பின்பு, கிராமங்களுக்கு நகரங்கள் பணிய வேண்டுமென்று, கதர்ப் பற்றுதல் கொண்ட என் மனம் கூறுகிறது. கிராமங்களைச் சுரண்டுவதே, மிகக் கட்டுப்பாடான, கொடுமையான பலாத்காரம். சாத்வீக அடிப்படையில் நாம் சுயராஜ்யம் அமைக்க விரும்பினால், கிராமங்களுக்கு அவற்றிற்குரிய ஸ்தானத்தைத் தர வேண்டும். அயல்நாட்டு ஆலைகளிலோ, நம் நாட்டு ஆலைகளிலோ

உற்பத்தி செய்யப்படும் பொருட்களுக்குப் பதிலாகக் கிராமப் பொருட்களை உபயோகித்துக் கிராமக் கைத்தொழில்களை வளர்த்தாலொழிய, கிராமங்களை அவற்றிற்குரிய ஸ்தானத்துக்குக் கொண்டுவர முடியாது. கதரையும் சாத்வீகத்தையும் நான் ஏன் இணைக்கிறேன் என்பது இப்பொழுதாவது தெளிவாகியிருக்கும் என்று நம்புகிறேன். கதரே கிராமக் கைத்தொழில்களில் பிரதானமானது. கதரை அழித்தால், அத்துடன் கிராமங்களையும், அகிம்சையையும் அழித்ததாகும். இதற்கு ஆதாரம் நான் புள்ளி விவரங்களிலிருந்து காட்ட முடியாது, ஆனால், இதற்கு ஆதாரம் நம் கண்முன் நடப்பதே.

—' ஹரிஜன் '–10—1—1940

# 25

## உணவுப் பொருளா ? புகையிலையா ?

அயல் நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் பொருட்களை ஆதரிப்பதோ, அவற்றை நம்பியிருப்பதோ, அடிப்படைக்கொள்கையிலேயே முற்றிலும் தவறு என்று 'கிராம உத்யோக்' பத்திரிகையில் ஸ்ரீ ஜே. ஸி. குமரப்பா எழுதுகிறார். மழை பெய்யாததால் ஐக்கிய மாகாணத்திலும் பீகாரிலும், பனியினால் பஞ்சாபிலும் எல்லைப்புற மாகாணத்திலும் ஏற்படுமென்று எதிர்பார்க்கப்படும் சர்க்கரைப் பற்றாக்குறையைச் சமாளிக்க, காட்டுப் பிரதேசங்களில் உள்ள பனை மரத்திலிருந்து பதனீர் இறக்கி, அதிலிருந்து பனை வெல்லமும் சர்க்கரையும் காய்ச்ச வேண்டும் என்று அவர் யோசனை கூறுகிறார்.

மண்ணெண்ணெய் போன்றதொரு அத்தியாவசியமான பொருளைப் பொறுத்தவரை, அயல் நாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதை நம்பியிராமல், நம் தேவைகளைப் பூர்த்தி செய்யத் தாவர எண்ணெய்களை உபயோகிக்க வேண்டுமென்று கூறுகிறார். சில பொருட்களை இறக்குமதி செய்தால், அவற்றிற்குப் பணம்கொடுக்கும் வாயிலாக, நாம் உற்பத்தி செய்யும் பொருட்கள் சிலவற்றை வெளிநாடுகளுக்கு அனுப்பவேண்டும். இதனால் நமக்குத்தான் முடிவில் அதிக நஷ்டம் ஏற்படும்.

விவசாய ஆராய்ச்சிக்காக அரசாங்கத்தின் ஆதரவில் நடக்கும் இம்பீரியல் கவுன்ஸிலின் உபத் தலைவரான ஸர் ஹெர்பர்ட் ஸ்டுவார்ட், விர்ஜினியா சிகரெட் புகையிலையைப் பீகாரில் பரப்பப் பிரேரேபித்துள்ள சூதான திட்டத்தையும் அவர் கண்டித்துள்ளார். அத்திட்டத்தின்படி, புகையிலை ஆராய்ச்சி நிலையங்கள் பல இடங்களில் நிறுவப்படும். புகையிலை பயிர் செய்வதில்,

அயல் நாடுகளில் பயிற்சி பெற்று வர, இரு மாணவர்களுக்கு 500 பவுன் உபகாரச் சம்பளம் தர, இம்பீரியல் புகையிலைக் கம்பெனி முன்வந்துள்ளது. இன்றைய நிலையில் புகையிலை ஆராய்ச்சிக்காகப் பணத்தையோ, நேரத்தையோ அரசாங்கம் செலவு செய்யாமல், உணவு உற்பத்தியில் ஈடுபடுவதே உடனடியான தேவை. ஆனால் "இந்தியா லிமிட்டெட்" என்ற போர்வை போர்த்துக் கொண்டு புகையிலை, ஆலைகளுக்குப் பருத்தி, கரும்பு, ஏற்றுமதிக்கு வேர்க்கடலை போன்றவைபற்றித்தானே இம்பீரியல் கவுன்சில்கள் கவலைப்படமுடியும்.

—'ஹரிஜன்'–28—4—1946

# 26
# மந்திரிகள் கடமை

"காங்கிரஸ் மந்திரிகள் பதவி ஏற்றுள்ளனரே? கதருக்கும் மற்றக் கைத்தொழில்களுக்கும் அவர்கள் இனி என்ன செய்யப் போகிறார்கள்?" என்பது நியாயமான கேள்வி. காங்கிரஸ் மந்திரி சபைகள் மட்டுமல்ல, இந்தியாவிலுள்ள எல்லா மாகாண சர்க்கார்களுமே என்ன செய்யப்போகின்றன என்று கேட்க விரும்புகிறேன். வறுமை அனைவருக்கும் பொது. ஆகவே, பாமர மக்களின் முன்னேற்றத்துக்காகப் பாடுபடுவது அனைவருடைய கடமையாகும். சர்க்கா சங்கம், கைத்தொழில் சங்கம் ஆகியவை அனுபவத்தில் கண்டறிந்த உண்மை இது. இவ்வேலையைச் சரியாகச் செய்ய வேண்டுமானால், தம் முழு நேரத்தையும் கவனத்தையும் இதற்கே ஒரு மந்திரி செலுத்துவது அவசியமாதலால், இதற்கென தனி மந்திரியை நியமிக்கவேண்டுமென்று சிலர் யோசனை கூறுகிறார்கள். ஆங்கிலேயர் பாணியில் நம் தரத்துக்கு மிஞ்சிச் செலவு செய்யும் பழக்கத்தை நாம் இன்னும் விட்டபாடில்லை. அதனால்தான், இன்னொரு மந்திரியை நியமிக்க வேண்டுமென்று யோசனை கூற அஞ்சுகிறேன். தனி மந்திரி நியமிக்கப்பட்டாலும் சரி, நியமிக்கப்படாவிடினும் சரி, அந்த வேலைக்கு ஒரு தனி இலாகா அவசியம். உணவு, உடை பற்றுக்குறை ஏற்பட்டுள்ள இக்காலத்தில், இந்த இலாகா அதிக உதவி செய்யக்கூடும். சர்க்கா சங்கம், கிராமக் கைத் தொழில்கள் சங்கம் ஆகியவற்றின் நிபுணர்களைச் சர்க்கார் பயன்படுத்திக் கொள்ளலாம். மிகக் குறைந்த மூலதனத்தைக் கொண்டும், குறைந்த காலத்துக்குள்ளாகவும், இந்தியர் அனைவரும் அணியக் கதர் உற்பத்தி செய்யலாம். தன் சொந்த உபயோகத்துக்கு வேண்டிய கதரை ஒவ்வொரு கிராமமும் உற்பத்தி செய்துகொள்ள வேண்டுமென்று அரசாங்கம் கூறவேண்டும். அம்முறைப்படியே உள்ளூரிலேயே உற்பத்தியும் வினியோகமும் நடக்கும். எஞ்சிய துணியை நகரங்களுக்கு அனுப்பலாம். மில் துணியை நம்பி நிற்கும் அவசியம்

அப்பொழுது ஓரளவு குறையும். ஆகவே மில்கள், உலகின் மற்ற பாகங்களுக்கு வேண்டிய துணியை உற்பத்தி செய்வதில் கவனம் செலுத்தலாம்.

இந்நிலையை எப்படி ஏற்படுத்த முடியும்? ஒரு குறிப்பட்ட தேதிக்குக்குப் பிறகு கிராமவாசிகளுக்குத் துணி வினியோகம் செய்யப்படாதென்றும், அதற்குள் தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள அவர்கள் கதரை உற்பத்தி செய்துகொள்ள வேண்டும் என்றும் அரசாங்கம் அறிவிக்க வேண்டும். கிராமவாசிகளுக்கு உதவி செய்ய, பருத்தி விதை, அல்லது பருத்தி உற்பத்திக் கருவிகள் ஆகியவற்றை அசல் விலைக்குச் சர்க்கார் கிராமவாசிகளுக்குத் தரவேண்டும். உற்பத்திக் கருவிகள் விலையைச் சிறு சிறு பகுதியாக, ஐந்து வருடங்களுக்குள், சர்க்கார் கிராமவாசிகளிடமிருந்து வசூலித்துவிடலாம். தொழிற் பயிற்சி ஆசிரியர்களின் உதவி அவசியமிருந்தால், அதற்கும் சர்க்கார் வசதி செய்யவேண்டும். கிராமவாசிகள், தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்துகொண்ட பின்பு எஞ்சியுள்ள கதரைச்சர்க்காரே வாங்கிக் கொள்ளவேண்டும். அதிகச் செலவில்லாமலும், சிரமமில்லாமலும், துணிப் பற்றுக்குறை தீர இம்முறை.

கிராம நிலைமையை ஆராய்ந்து, கிராமத்திற்குத் தேவையான பொருட்கள் எவை, அவற்றில் எவை கிராமங்களிலேயே உற்பத்தி செய்யப்படலாம், அந்த உற்பத்திக்கு வெளியூர்களிலிருந்து உதவி அவசியமா, அவசியமானல் எந்த அளவுக்கு அவசியம் என்பவற்றை அறியவேண்டும். கைக்குத்தல் அரிசி, செக்குப் பிண்ணக்கு, தேன், விளையாட்டுச் சாமான்கள், பாய், கையால் செய்த காகிதம், கிராம உபயோகத்திற்கு சோப் முதலியவற்றைக் கிராமங்களிலேயே உற்பத்தி செய்ய வேண்டும். இவ்வாறு கைத்தொழில்களை வளர்த்தால், இப்பொழுது சீர்கெட்டுள்ள கிராமங்கள், புத்துயிர் பெற்றுத் தங்கள் தேவைகளை மட்டுமல்ல, இந்தியாவில் உள்ள நகரங்களின் தேவைகளையும் பூர்த்தி செய்யும் அளவுக்கு உற்பத்தியைப் பெருக்கலாம்.

அது மட்டுமல்ல, இந்தியாவின் கால்நடைச் செல்வத்தை நாம் இன்று புறக்கணித்து வருவது மிகவும் கேவலமானது. கோசேவா சங்கம், இன்னும் அதிக அனுபவம் பெருவிடினும் தன்னலியன்றவரை இவ்வேலையில் உதவி செய்யும்.

ஆதாரக் கல்வியில்லாமல், கிராமவாசிகள் அறியாமையில் மூழ்கியுள்ளனர். இத்துறையில் ஹிந்துஸ்தானி தாலிமி சங்கம் சேவை செய்யலாம். அம்முயற்சி காங்கிரஸ் மந்திரி சபைகளால் தொடங்கப்பட்டது. ஆனல், அவை இடையில் ராஜிநாமா செய்ததால், அம்முயற்சி தடைப்பட்டது. அவ்வேலையை இப்பொழுது தொடர்ந்து நடத்தலாம்.

—'ஹரிஜன்' – 28—4—1946

# 27

# பணக்காரன், பஞ்சை என்னும் இரு புண்கள்

ஒரு நண்பர் பின்வருமாறு கடிதம் எழுதியுள்ளார் :

"தனக்கு அவசியமான கப்பல்கள், ரயில்கள், ஆகாய விமானங்கள் முதலியவற்றைத் தானே உற்பத்தி செய்யும் அளவுக்கு இந்தியா யந்திரத் தொழிலை வளர்ப்பது அவசியம் என்று நீங்கள் கருதுகிறீர்களா? இல்லாவிடில், சுதந்திர இந்தியா இப்பொறுப்புகளை எப்படி நிர்வகிக்க முடியும் என்று நீங்கள் யோசனை கூறமுடியுமா ?

"இந்த யந்திரத் தொழில்கள் அவசியம் என்றால், அவற்றின் நிர்வாக அதிகாரம யார் கையில் இருக்கவேண்டும், லாபம் யாரைச் சேரவேண்டும் என்று நினைக்கிறீர்கள் ?"

எந்தச் சந்தர்ப்பத்திலும், எந்த நாட்டிலும் தொழிலை யந்திர மயமாக்குவது அவசியம் என்று நான் நினைக்கவில்லை. இந்தியாவைப் பொறுத்தவரை, அந்த அவசியம் இன்னும் குறைவு. கிராம வாழ்வை அபிவிருத்தி செய்து, மற்ற நாடுகளுடன் சமாதானமாய் வாழ்ந்து, எளிய ஆனால், உயர்ந்த வாழ்வுக்கு உதாரணமாக விளங்கினால்தான், உய்யும் வகை அறியாது உழலும் உலகுக்கு, இந்தியா, தன் கடமையைச் செய்ய முடியுமென்று நான் நம்புகிறேன். பணத்தையே தெய்வமாகத் தொழுது, வசதிகளை அதிகரிக்க விரும்பித் தேவைகளைப் பெருக்கிக் கொண்டுபோகும் வாழ்க்கை முறை, உயர்ந்த சிந்தனை வளர இடம் கொடுக்காது. எளிய, ஆனால் உயர்ந்த வாழ்க்கை நடத்த நாம் கற்றுக்கொண்டால்தான் வாழ்க்கைக் கலை பண்படும்.

அமைதியற்ற, அபாயம் நிறைந்த வாழ்க்கை நடத்துவதில் ஒரு வகை வீரமும் பரபரப்பும் இருக்கலாம். அபாயம் எதிர்நோக்கியபோதும், கலங்காமல் வாழ்வது ஒன்று; ஆனால், வேண்டுமென்றே அபாயத்தை வருவித்துக்கொண்டு வாழ்வது, வேறொன்று. இரண்டுக்கும் வித்தியாசம் உண்டு. கொடிய மிருகங்களும், அவற்றிலும் கொடிய காட்டு மிராண்டிகளும் நிறைந்த காட்டில், ஆயுத பலமின்றி, ஆண்டவனிடத்தில் நம்பிக்கையையே உறுதுணையாகக் கொண்டு தனியாக வாழ்பவர், அபாயத்தின் நடுவில்தான் வாழ்கிறார். ஆனால், அதில் உயர்ந்த லட்சியம் உள்ளது. நடு வானிலிருந்து பூமியை நோக்கிக் கீழே குதித்து இதைப் பார்ப்பவரின் பாராட்டுதலைப் பெறுபவன், அபாயத்தை வருவித்துக் கொள்ளுகிறான். அதில் லட்சியமோ, உயர்ந்த கொள்கையோ இல்லை.

ஜனத்தொகையிலும் நிலப் பரப்பிலும் பெரிய நாடாயினும், ஆயுத பலத்தையே நம்பி, ஆடம்பர வாழ்வை நடத்திவரும் உலகின் நடுவில் இருந்துகொண்டே ஒதுங்கியிருந்து எளிய வாழ்க்கை நடத்துவது சாத்தியமா என்று சந்தேகப்படலாம். அதற்கு ஒரே ஒரு பதில்தான் கூறமுடியும். எளிய வாழ்க்கை நடத்துவது உயர்ந்த லட்சியமானுல், ஒருவராவது அல்லது ஒரு நாடாவது அந்த லட்சியத்துக்குப் பாடுபடுவது அவசியம் தானே.

சில பிரதான யந்திரத் தொழில்கள் அவசியம்தான் என் பதை ஒத்துக்கொள்ளுகிறேன். சாய்வு நாற்காலியில் படுத்துக் கொண்டே பேசும் சோஷலிஸத்திலோ, ஆயுத பலத்தில் நம்பிக்கை கொண்டுள்ள அபேதவாதத்திலோ எனக்கு நம்பிக்கை இல்லே. அனைவரையும் அடியோடு என் கொள்கைக்கு மாற்ற முடியாவிடிலும், நான் ஒருவனுவது, தனியாக லட்சியப் பாதையில் செல்ல வேண்டுமென்று நம்புகிறேன். பிரதான யந்திரத்தொழில்கள் அவசியமாயிருந்தால், அவை அரசாங்கத் தால் நடத்தப்படும். அத்தொழிலாளரின் உழைப்பின் பலன், அரசாங்கத்தின் மூலம், தொழிலாளரின் உடைமையாகவே இருக்கும். அத்தகைய அரசாங்கம் அகிம்சையின் அடிப் படையில்தான் நடக்க முடியும் என்று நான் நம்புகிறேன். அத்தகைய அரசாங்கத்தில் செல்வந்தர்களின் பணம், அவர் களிடமிருந்து பலவந்தமாகப் பறிமுதல் செய்யப்படாது. ஆனுல், அரசாங்கத்தின் உடைமையாக்குவதில், அவர்கள் ஒத்துழைப்பை நாடுவோம். பணக்காரரோ, பஞ்சையோ சமூகத்தில் ஒதுக்கப்பட்டவராக மதிக்கப்பட மாட்டார்கள். சமுதாயக் கோளாறு என்னும் ஒரே நோயால் ஏற்பட்ட புண்களே பணக்காரன், பஞ்சை இருவரும். அவற்றை நீக்கி அனைவரையும் மனிதராக மதித்து நடத்தவேண்டும்.

இந்தியாவிலும் உலகின் மற்றப் பாகங்களிலும் இதுவரை நடந்துள்ள அநீதிகளும், இனி நடக்கக் கூடிய அநீதிகளும் இதில் எனக்குள்ள உறுதியான நம்பிக்கையை அசைக்கவில்லே. அபாயத் தின் நடுவிலும், அதைச் சமாளிக்கும் உறுதியுடன் நாம் வாழ்வோம்.

—'ஹரிஜன்'— 1—9—1946

# 28

# ஒவ்வொரு கிராமமும் ஒரு பிருந்தாவனம்

கிராமக் கைத்தொழில்கள் பற்றி, நல்ல அறிவாளியான ஒரு நண்பர் பின்வருமாறு எழுதுகிறார் :

“உங்கள் கருத்துக்களில் பல, உண்மையில் சிறந்தனவே. ஆனால், அவற்றை நீங்கள் வெளியிடும் வகையில், உயர்ந்த தார்மிக லட்சிய மனப்பான்மை உள்ளவர்களைத் தவிர மற்றவர்கள் அவற்றைப் புரிந்துகொள்ள முடியாமலிருக்கிறது. தன்னுடைய தேவையையும் சுயநலனையும் பூர்த்தி செய்வதே, மனிதனின் முக்கிய நோக்கமாக இருந்து வருகிறது. ஆகவே, தார்மிக லட்சியத்துக்கு மட்டும் உகந்ததாயுள்ள ஒரு பொருளாதார அமைப்பு, அவர்களைக் கவராது. இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகும், கதர்த் திட்டம் குறிப்பிடத்தக்க அளவுக்குப் பலனளிக்காததற்குக் காரணம், உங்களைப் பின்பற்றுபவர்களும், பிரிட்டிஷ் முதலாளிகளும், இந்திய முதலாளிகளும், துணி விற்பனையாளரும் தங்கள் தங்கள் சொந்த நலனையே பெரிதாக மதித்து நடந்ததுதான். அதுதான் மனித இயற்கை.

நேர்மை, தருமம் ஆகிய உயர்ந்த லட்சியங்களின் அடிப்படையில் உள்ள சமூக அமைப்பைத்தான் நானும் விரும்புகிறேன். வியாபார மனப்பான்மையையும் லாப நோக்கத்தையும் அடியோடு ஒழித்தால் ஒழிய, அங்ஙனே சாத்தியமில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. உணவுக் கட்டுப்பாடு, போக்குவரத்துக் கட்டுப்பாடுபோல் பல கட்டுப்பாடுகள் இப்பொழுது அமல் நடந்து வருகின்றன. லாப நோக்கத்தையும் அடியோடு ஒழிப்பதற்கு நடவடிக்கை எடுப்பதற்கு இதுதான் சரியான நேரம்.

கிராமக் கைத்தொழில்களுக்காக பம்பாய் சர்க்கார் ஒரு கமிட்டி நியமித்துள்ளனர். அதில் மனு சுபேதார், லட்சுமிதாஸ் ஆசார், தோத்ரே ஆகியோர் உள்ளனர். என் திட்டம் பின்வருமாறு :

ஒரு கிராமத்தையோ, இரண்டு, மூன்று கிராமங்கள் கொண்ட தொகுதியையோ அடிப்படையாக எடுத்துக்கொண்டு, குழந்தைகள், பெண்கள், வயோதிகர்கள், உடல் உழைப்புக்குத் தகுதியானவர்கள், ஆரோக்கியமான இளைஞர்கள் என்று ஜனத் தொகையைப் பல பிரிவுகளாகப் பிரிக்கவேண்டும். முழு நேர வேலையோ, ஆண்டு முழுவதும் வேலையோ செய்ய முடியாதவர்களையும் ஒரு பிரிவாக வைக்கவேண்டும். ஒரு குறிப்பிட்ட தொழிலைச் செய்ய வசதியோ, தேர்ச்சியோ இல்லாதவர்கள் மற்றொரு பிரிவினர்.

அதிகச் சிரமமும் களைப்பும் ஏற்படுத்தாத வேலையாயிருந்தால், தினம் மூன்று அல்லது நான்கு மணி நேர வேலை குழந்தைகளால் செய்ய முடியும். மற்ற நேரத்தில், அவர்கள் பள்ளிக்கூடம் செல்லலாம்.

வேலை செய்ய ஆரம்பித்த நாளிலிருந்து, ஒரு நாள் வேலைக்கு ஓரணா வீதம் குழந்தைகளுக்கும், நான்கணு வீதம் வயது வந்தோர்க்கும் கூலி தர வேண்டும். தொழிலில் தேர்ச்சியும் திறமையும் அதிகரிப்பதற்கேற்ப, குழந்தை

களுக்கு 5 அணு வீதமும், வயது வந்தோருக்கு எட்டு அணு வீதமும் சம்பளம் கொடுக்கவேண்டும்.

ஒரு கிராமத்தில் குறிப்பிட்ட ஒரு பொருளை உற்பத்தி செய்வதில் முழுக் கவனத்தையும் செலுத்தவேண்டும். அவ்வாறு செய்தால், இரண்டு மாத காலத்தில், தொழிலாளர் தொழிலில் தேர்ச்சியடைந்து தவறுதல்களைத் தவிர்க்க முடியும். அவ்வாறு உற்பத்தி செய்யப்படும் பொருள், அங்கேயே உபயோகப்படுவதாய் இருக்கவேண்டும். அரசாங்கம் மூலம் பொருட்களை விநியோகிக்க ஏற்பாடு செய்வதுடன், தொழிலாளருக்குப் பயிற்சி அளிக்க இரண்டு, மூன்று நிபுணர்களையும் நியமிக்கவேண்டும். உற்பத்தி செய்யப்படும் பொருளைப் பிரபலமாக்குவதற்கும், பொருள் போக்குவரத்துக்கும், ஏழைகளுக்கும் அவை எளிதில் கிடைப்பதற்கும் அரசாங்கம் வசதி செய்ய வேண்டும்.

அவ்வாறு உற்பத்தி செய்யப்படும் பொருட்களில் பல, பெரிய தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் பொருட்களைவிடக் குறைந்த விலைக்கு உற்பத்தி செய்யப்படலாம். கூலியில் சிக்கனமும், இக் குறைந்த செலவுக்கு ஒரு காரணமாகும். ஆகவே செலவைக் குறைத்துச் சேமிக்கும் பணத்தைத் தொழிலாளரின் நலனுக்காகப் பயன்படுத்தலாம். உடல் வலிவுள்ளவரில் பெரும்பாலோர், விவசாயம், ரயில்வே போன்ற தொழில்களில் ஈடுபட்டு, குடிசைக் கைத்தொழில்களில் ஒரு சிலரே ஈடுபடுவதால், உற்பத்தி குறைந்தாலும் பரவாயில்லை.

இத்திட்டத்தினுல் பல்லாயிரக்கணக்கான மக்கள் தங்கள் வருவாயைப் பெருக்கிக்கொள்ளவும், தன் மதிப்பை இழக்காமலும், வேலையில்லாத் திண்டாட்டத்தைச் சமாளிக்க தரும சகாயத்தை நம்பியிராமலும் தங்கள் பிழைப்பை நடத்தவும் வசதி ஏற்படும். இந்தச் சமூக இன்ஷ்யூரன்ஸ் திட்டம் நம் இந்தியப் பண்பாட்டுக்கு ஏற்றது. முப்பத்தைந்து ஆண்டுகளாக என் சொந்த அனுபவமும் இதையே சிபார்சு செய்கிறது. விசேஷத் தேர்ச்சியோ பூர்வாங்கப் பயிற்சியோ பெறுதவர்களுக்கும் இது பிழைக்கும் வழி தேடித் தருகின்றது. இதனுல் கிடைக்கும் கூலியைவிட அதிகக் கூலி பெற விரும்புவோர், வேறு லாபகரமான தொழில்களை, சாத்தியமானுல் நடத்தலாம். ஆனுல், பிழைப்புக்கு வழி இல்லாமல் யாரும் திண்டாட வேண்டியதில்லை.

இதன்மூலம் குழந்தைகளுக்கு ஒரு தொழில் கற்றுக் கொடுப்பதோடு மட்டுமல்லாமல், கல்வியும் புகட்டலாம். இதனுல் ஏற்படும் செலவுகளைத் திட்டமே ஏற்றுக்கொள்ளும்.

இத்திட்டத்தின் சில முக்கிய அம்சங்கள் பின்வருமாறு :

தொழிலில் தேர்ச்சி பெறுமல், இன்று நாட்டிலுள்ளவர்களில் பெரும் பகுதியினருக்குப் பயிற்சியும் தேர்ச்சியும் ஏற்படும்படி செய்கிறது.

போக்குவரத்து, பொருட்கள் சேமிப்பு, வியாபாரக் கணக்கு முதலியவற்றை அரசாங்கத்தின் கண்காணிப்புக்குக் கீழ்படுத்துவதன்மூலம், இன்று அன்ருட வாழ்க்கையைச் சூறையாடும் லாப நோக்கத்தைப் பல துறைகளிலிருந்து அடியோடு விலக்க முடியும்.

இத்திட்டத்தில் ஒன்று அல்லது இரண்டு கோடி, ஆண், பெண் குழந்தைகள் ஈடுபடுவதன்மூலம், தினம் 25 அல்லது 50 லட்ச ரூபாய் சம்பாதிக்க முடியும். கோடிக்கணக்கான மக்களுக்குப் புத்துயிர் பிறக்கும்.

இன்று வீணுக்கப்படும் தொழில் திறமையையும் சக்தியையும் பயன்படுத்தி, ஒன்று அல்லது இரண்டு கோடி ரூபாய் மதிப்புள்ள பொருட்களை ஆண்டுதோறும் உற்பத்தி செய்ய முடியும்.

உற்பத்தியாளரிடமிருந்து நேரடியாக வாங்குவதால், மூலப்பொருட்களை மிக நயமான விலைக்கு அரசாங்கம் வாங்கும். அரசாங்கம் வாங்குவதெல்லாம் அசல் விலைக்குத்தான் வாங்கும்.

ஏதாகிலும் ஒரு பிரச்னையைக் குறித்து நிபுணர்களுடன் கலந்து ஆலோசிக்க அவசியம் ஏற்பட்டால், ஆலோசனை கூற நிபுணரை அரசாங்கம் நியமித்து அவருக்குச் சம்பளமும் தரவேண்டும்.

பொருட்களைப் பாதுகாத்துக் கணக்கு எழுதும் பொறுப்பு உடையவர்களிடமே, குழந்தைகளுக்குக் கல்வி புகட்டும் பொறுப்பையும் ஒப்புவிக்க வேண்டும். இரண்டு, மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு சட்டாம்பிள்ளை முறையைக் கையாளலாம். அதாவது, ஓரளவு தேர்ச்சி பெற்ற மாணவர்கள் மற்ற மாணவர்களுக்குக் கல்வி புகட்டவேண்டும். தேர்ச்சி பெற்ற ஒரு சில மாணவர்களுக்கு மட்டுமே ஆசிரியர்கள் கல்வி புகட்டுவார்கள்.

இந்த ஆசிரியரிடம் சாதாரணமாக உபயோகப்படும் மருந்து வகைகள் சுமார் ஐம்பது இருக்கவேண்டும். டிங்க்சர் போன்ற மருந்துகளும், ஆயுர்வேத மருந்துகளும் இருக்கவேண்டும். இம்மருந்துகளையும், அவற்றை உபயோகிக்கும் விதத்தையும் விளக்கும் பிரசுரங்களையும் அரசாங்கமே ஒவ்வொரு கிராமத்துக்கும் தரவேண்டும். இவற்றை மிகக் குறைந்த விலைக்குக் கிராமவாசிகளுக்கு விற்கவேண்டும்.

இத்திட்டத்தின்படி, வீட்டு உபயோகத்துக்கு வேண்டிய பல பொருட்களை உற்பத்தி செய்யலாம்.

உதாரணமாக, துணி, காகிதம், பென்சில், பேனக்கட்டை, குண்டுசி, கம்பியால் செய்யப்படும் பொருட்கள், சோப்பு, மண் சாமான்கள், பானைகள், பொத்தான், கண்ணடிச் சாமான்கள், வளையல்கள் செய்தல், விவசாயக் கருவிகள், பனை வெல்லம், ஆணி, கூந்தல் தைலம், செருப்புப் பாலிஷ், உலோகங்கள் பாலிஷ், பினைல், குல்லா, செருப்பு, அன்றாட உபயோகத்துக்கு வேண்டிய பாத்திரங்கள், கயிறு, நூல், விளையாட்டுப் பொம்மை, சிறு மரச் சாமான்கள், தீக்குச்சி, அட்டையாலும் தகரத்தாலும் செய்யப்படும் காலி டப்பாக்கள், கட்டில், சீப்பு, துடைப்பம், பிரஷ், கத்தி, கத்தரிக்கோல், தோல் சாமான், மை, பசை, அரக்கு, சங்கீத வாத்தியங்கள், பவுண்டன் பேனு, சைக்கிள், கடிகாரத்தின் பாகங்கள், ஸ்டாக்கிங், பனியன், மெழுகுவத்தி, முகம் பார்க்கும் கண்ணடி, விளையாட்டுச் சாமான் முதலியன உற்பத்தி செய்யலாம். கணக்குப் புத்தகங்கள் தைத்தல், புத்தகக் கட்டுவேலை செய்தல், மசாலாச் சாமான்கள் செய்தல், அப்பளம் போடுதல், லித்தோ லேபிள் அச்சு வேலை செய்தல் முதலிய தொழில்களையும் நடத்தலாம்.''

நண்பர் எழுதியுள்ள மேற்கண்ட கடிதம், கருத்தைக் கவர்வதாய் உள்ளது. அது ஆழ்ந்த சிந்தனைக்குரியது. ஒரு விஷயம் வெளிப்படையாய் உள்ளது. நண்பர், துணிக்கு முதல் ஸ்தானம் தந்துள்ளார். அதுதான் அனைவருக்கும் அத்தியாவசியமானது. கதர் உற்பத்தியின் பல கட்டங்களில் உள்ள வேலைகளில்,

பல்லாயிரக்கணக்கான ஆண், பெண், குழந்தைகள் ஈடுபட்டு நியாயமான கூலி சம்பாதிக்க முடியும். நெசவுத் தொழிலாளருக்கும் இத்திட்டத்தில் வேலை உண்டு. இன்று அத் தொழிலாளர் நகரங்களில் வசிக்கின்றனர். வியாபாரத் தரகர்கள் அவர்களைச் சுரண்டுகிறார்கள். அவர்களுக்குத் தேவையான நூல் கிடைக்கும் படி மக்களின் அரசாங்கம் ஏற்பாடு செய்தால், அவர்கள் நிலைமை எளிதாகித் தொழில் ஸ்திரப்படும். அப்பொழுது, அவர்கள் நகரங்களில் வசிக்க வேண்டிய அவசியமில்லை.

ஆனால், இரண்டு சந்தேகங்கள் எனக்குத் தோன்றுகின்றன. யந்திரத்தால் உற்பத்தி செய்யப்படும் பொருட்களைப் போலவே, கையால் செய்த பொருட்களையும் குறைந்த விலைக்கு விற்பது சாத்தியமா என்பது ஒன்று. இத்திட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பொருட்களில் கதரைத் தவிர, மற்றப் பொருட்கள் அனைவருக்கும் அத்தியாவசியமானவை அல்ல. அவற்றிற் பெரும்பாலானவை, உள்ளூரிலே உபயோகிக்கப்படா. ஆகவே, அவற்றை நகரங்களில்தான் விற்கவேண்டும். கிராமவாசிகள் உற்பத்தி செய்யும் பொருட்கள், நகரவாசிகளும் விரும்பி வாங்கும் அளவுக்குச் சிறந்தவையாயிருக்க வேண்டியதுதான். நமது கிராமங்கள் முன்னேறினால், தொழில் திறமையும் கலை உணர்வும் கொண்ட தொழிற் கலைஞருக்கு குறைவிருக்காது. கிராமக் கவிகள், கிராமக் கலைஞர், கிராமச் சிற்பிகள், ஆராய்ச்சி அறிஞர், மொழி வல்லுநர் முதலியோர் பலர் தோன்றுவார்கள். பெறுதற்கரிய பொருளை யெல்லாம், கிராமத்திலிருந்தே பெற முடியும். இன்றோ, கிராமங்கள் சாணிக் கிடங்குகளாக இருக்கின்றன. அவற்றைச் சீர்திருத்தினால், அவை பிருந்தாவனங்களாகக் காட்சி அளிக்கும். அக் கிராமங்களில் வாழும் மக்களை யாரும் சுரண்டவோ, ஏமாற்றவோ முடியாது.

இவ் வழியில் கிராமங்களைச் சீர்திருத்தும் வேலை உடனே தொடங்கவேண்டும். அதற்கேற்றபடி திட்டத்தையும் சில வகைகளில் திருத்திக் கொள்ளவேண்டும். கிராமச் சீர்திருத்த வேலை தாற்காலிக முறையிலல்லாமல் நிரந்தர அடிப்படையில் நடக்க வேண்டும்.

இரண்டாவது கஷ்டம் என்னவெனில், இத் திட்டத்தில் கைத்தொழிலும் கல்வியும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்கப் பட்டுள்ளன. கைத்தொழில், கலை, கல்வி, ஆரோக்கியம் அனைத்தும் ஒரு திட்டத்தில் இணைக்கப்பட்டிருக்கவேண்டும். ஆதாரக் கல்வி முறை அல்லது புதுக் கல்வி முறை எனப்படுவது, இந்த நான்கும் இணையச் செய்வது; பிறப்பிலிருந்து இறப்புவரை, மனிதன் கற்க வேண்டிய கல்வி அனைத்தையும் தழுவுவது. ஆகவே, ஆரம்பத்திலிருந்தே கிராமச் சீர்திருத்த வேலையை ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத பல பிரிவுகளாகக் கூறு செய்யாமல், நான்கு அம்சங்களையும் தழுவும் வேலையை ஏற்றுக் கொள்ளவேண்டும். கைத்தொழிலும் மற்றத் தொழில்

களும் கல்வியிலிருந்து வேறுபட்டவை என்று கருதாமல் கைத் தொழிலைக் கல்வி புகட்டும் சாதனமாகவே கையாளவேண்டும். ஆகவே, சீர்திருத்தத் திட்டத்துடன் புதுக் கல்வியையும் இணைத்துக் கொள்ளவேண்டும்.

— 'ஹரிஜன்'–10—11—194

# 29

# சுதந்திரமும் சுதேசியும்

[20—6—47–ல் காந்திஜி, பிரார்த்தனைக் கூட்டத்தில் செய்த பிரசங்கத்தின் சாரம் பின்வருமாறு:]

சுயராஜ்யம் என்ற துறையில், சுதேசி ராஜ்யம் ஏற்பட்டவுடன், சுதேசி உணர்ச்சி நாட்டிலிருந்து வெகு விரைவில் மறைந்து வருகிறது என்று சிலர் கூறுகின்றனர். கதரின் மதிப்பு இன்று குறைந்துள்ளதுபோல் என்றும் இருந்ததில்லை. அயல் நாட்டுத் துணியை அணிந்து கொள்ளுபவரும் காந்திக் குல்லாய் என்று சொல்லப்படும் குல்லாயை அணிந்து கொள்ளுவது சர்வ சாதாரணமாகி விட்டது. இந்நிலை உண்மையில் பரவிவிட்டால், நம் உயிரினும் இனிய சுதந்திரம் வெகுநாள் நிலைக்காது என்றே அஞ்சுகிறேன். ஆசியாவின் ஜோதியாக விளங்க வேண்டிய இந்தியா, அப்பெருமையைப் பறிகொடுத்துவிட வேண்டியது தான். படாடோபம் எங்கும் பரவியுள்ளது என்று ஒரு நண்பர் நொந்துகொள்ளுகிறார். அயல்நாட்டு மோகமும் ஆடம்பர வாழ்க்கையும் ஒன்றுக்கொன்று துணையானவை. இப்பரிதாபகரமான நிலை நகரங்களில் இருப்பது உண்மையானாலும், கிராமங்களிலாவது இருக்கக்கூடாது என்பதுதான் என் ஆசை. 'வறுமையினலாவது, கிராமங்களில் இந்நிலை பரவிவிடக்கூடாது.

1915–ல் நான் இந்தியா திரும்பியவுடனேயே, கதரே சுதேசியின் மையம் என்பதை உணர்ந்து விட்டேன். கதர் மறைந்தால், சுதேசி நிலைக்காது என்று அன்றே கூறினேன். இந்திய ஆலைகளில் உற்பத்தி செய்யப்படுவது சுதேசி அல்ல என்பதை நான் விளக்கியுள்ளேன். அதையே நான் இன்றும் உறுதியாக நம்புகிறேன்.

நமது முதல் தேசியப் போராட்டத்தின் போது, அயல் நாட்டுத் துணியைக் கொளுத்தியதை நினைத்துப் பாருங்கள். சரோஜினி தேவியும், பண்டித மோதிலால் நேருவும் தமது விலையுயர்ந்த துணிகளை அத்தீயில் இட்டனர். கதரின் எளிமையிலும் தூய்மையிலும் உண்மையான இன்பம் கண்டதாகப் பண்டித மோதிலால் நேரு பின்னர் சிறையிலிருந்து எழுதினர். அந்த மனப்பான்மையும் உணர்ச்சியும் இன்றில்லை என்பது வருந்தத்

தக்கதே. நமது மூவர்ணக் கொடியின் நடுவில் ராட்டை திகழ்கிறது. இந்நாட்டில் வாழும் கோடிக்கணக்கான மக்களின் ஒற்றுமையையும் சாத்வீக பலத்தையும் அது குறிக்கிறது. அக் கொடியின் மூவர்ணங்கள் குறிக்கும் மக்களையும் ஒன்றுபடுத்தி, அவர்கள் சக்தியை ஒன்று திரட்டக்கூடியது ராட்டையில் நூற்கப்படும் நூல் என்பது என் நம்பிக்கை. ஆதலால்தான் சுதந்திரம், கதர் நூலின் ஓரிழையை நம்பி நிற்கிறது என்றும், ராட்டையே மிகப் பலம் பொருந்திய ஆயுதம் என்றும் நான் கூறியுள்ளேன். அந்த ராட்டை இன்று எங்கே?

சுதேசி உணர்வு நம்மிடம் இருந்தால், நம் முக்கியமான தேவைகளுக்கு அயல்நாட்டுப் பொருள்களை நாம் எதிர்பார்த்துக் கொண்டிருக்க மாட்டோம் என்பதை நான் பலமுறை வலியுறுத்தியுள்ளேன். பற்றுக்குறை மிகுந்துள்ள இந் நேரத்தில், உணவு, உடை ஆகிய இரு தேவைகளையும் நம் நாடே பூர்த்தி செய்து கொள்ளுவது முற்றிலும் அசாத்தியம் என்பது நிரூபிக்கப்பட்டால், அவற்றை வெளியிலிருந்து இறக்குமதி செய்வதில் எனக்குத் தடையில்லை. ஆனால், இந்தியாவே அத்தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள முடியாது என்பது இன்னமும் நிரூபிக்கப்படவில்லை. நம் நாட்டிலுள்ள லட்சக்கணக்கான கிராமங்களில் நாம் நமக்கு வேண்டிய உணவை உற்பத்தி செய்வதுடன், கதரையும் உற்பத்தி செய்துகொள்ள முடியும் என்பதைச் சிறிதும் தயக்கமின்றிக் கூறுவேன். ஆனால், நம்மை நாமே நம்பி நம் தேவைகளைப் பூர்த்திசெய்து கொள்ள முடியும் என்ற உறுதியை இழந்து சோம்பலுக்கு அடிமையாகி விட்டோம். உணவு, உடை ஆகிய இரு தேவைகளையும் பூர்த்தி செய்துகொள்ள, மேல் நாடுகளை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதை விட உடையின்றி பட்டினியால் வாட நான் சித்தமாயிருக்கிறேன் என்றுகூடச் சொல்வேன். அசையாத உறுதி இல்லாவிடில், நம் கடமையைச் செய்வது இயலாது.

—'ஹரிஜன்' 26—9—1947

## 30

# மனிதன் உழைப்பை மதிக்க வேண்டும்

**கேள்வி :** ஒருவர் தம்முடைய உடனடியான சுற்றத்தாருக்கும் நண்பர்களுக்கும் சேவை செய்து கொண்டு, அதே சமயத்தில் மனித சமுதாயம் முழுவதற்கும் சேவை செய்ய முடியுமா? சுதேசியின் உண்மையான பொருள் என்ன?

**பதில் :** நம்முடைய சுற்றத்தாருக்கும் அதே சமயத்தில் மனித சமுதாயத்துக்கும் சேவை செய்ய முடியுமென்று நான் உறுதியாக நம்புகிறேன். இதற்கு ஒரே ஒரு

நிபந்தனைதான் அவசியம். நாம் செய்யும் சேவை, நம் சுய நலனையோ, நம் பிரத்தியேக நன்மையையோ நோக்கமாகக் கொண்டிருக்கக் கூடாது. அந்தச் சேவையினுல் வேறு எவரையும் பாதிக்கவோ, சுரண்டவோ கூடாது. அப்பொழுது அந்தச் சேவையின் உண்மைத் தன்மையை நம் உறவினர் உணர்வதுடன், அதைப்போலவே தாமும் மற்றவர்களுக்குச் செய்ய வேண்டும் என்பதை உணர்வர். இதே உணர்வு அனைவருக்கும் பரவினுல், நல்லெண்ணம் ஒருவருக்கொருவர் பரவி உலகம் அனைத்தையும் தழுவும்.

அயலாரை விலக்கி, அண்டையில் உள்ளவர்க்கு முதலில் சேவை செய்வதையே சுதேசி வற்புறுத்துகிறது என்று தான் ஏற்படும். ஆனுல், நாம் எவருக்காகச் சேவை செய்கிருேமோ, அவர்களும் மற்றவர்களுக்குச் சேவை செய்ய வேண்டும். ஆகவே, சுதேசி உண்மையில் யாரையும் விலக்காது. யாருடைய நன்மையையும் பிரத்தியேகமாக விரும்பாது. மனிதன் தன் சக்திக்குட்பட்டு, சேவை செய்வதற்கு ஓர் எல்லை உள்ளது. அந்த எல்லையை அனுசரித்துத்தான் சேவை செய்யத் திட்டம் வகுக்கிறது சுதேசி.

கே: இந்தியாவில் உள்ள அளவற்ற மூலப் பொருட்களைச் சிறந்த முறையில் பயன்படுத்தி நாட்டை யந்திர மயமாக்கப் பல திட்டங்களைச் சர்க்கார் புகுத்தி வருகின்றனர். ஆனுல், நாட்டில் உள்ள எல்லையற்ற மனித பலத்தைப் பயன்படுத்தத் திட்டம் வகுக்காமல், அது விரயமாக அனுமதிக்கிருர்கள். அத்தகைய திட்டங்களையும் சுதேசித் திட்டங்கள் எனக் கொள்ளலாமா?

ப: சர்க்கார் திட்டம் என்ன என்பதை நான் இன்னமும் சரியாக உணர்ந்து கொள்ளவில்லை. ஆனுல், மூலப் பொருட்களைப் பயன்படுத்தி அவற்றைவிட அதிகச் சக்தி வாய்ந்த மனித பலத்தைப் பயன்படுத்தாத எந்தத் திட்டமும், கோணல் திட்டம் என்றே நான் உறுதியாக நம்புகிறேன். மனிதருள் சமத்துவம் ஏற்பட அத்திட்டம் வழி காட்டாது. யந்திரத் தொழிலில் உலகிலேயே மிக முன்னேறிய நாடு அமெரிக்கா. ஆனுல், அங்கே வறுமையும் தாழ்வும் ஒழிந்துவிடவில்லை. அதற்குக் காரணம், அங்கு மனித பலம் மதிக்கப்படாமல் பலரைச் சுரண்டி போக வாழ்வு வாழும் ஒரு சிலரிடம் செல்வமும் அதிகாரமும் குவிந்துள்ளதுதான். ஆகவேதான் நாடு யந்திர மயமானது, அந் நாட்டின் பாமர மக்களுக்கும், உலகில் மற்ற நாடுகளுக்கும் ஆபத்தாகி விட்டது.

அந்த ஆபத்திலிருந்து இந்தியா தப்பித்துக்கொள்ள வேண்டுமானுல், அமெரிக்காவும் மற்ற மேற்கு நாடுகளும் பின்பற்றி வந்த கொள்கையில் சிறந்த அம்சங்களை எடுத்துக் கொண்டு, பார்வைக்குக் கவர்ச்சிகரமாய் இருந்தபோதிலும்

உண்மையில் நாட்டுக்கு நாசம் விளைவிக்கும் கொள்கைகளையும் திட்டங்களையும் விலக்க வேண்டும். இந்தியாவில் உள்ள எல்லையற்ற மனித பலத்தை நன்கு பயன்படுத்துவதும், மூலப்பொருட்களை வெளிநாடுகளுக்கு அனுப்பி அவற்றிலிருந்து செய்யப்பட்ட பொருட்களை மீண்டும் இறக்குமதி செய்யாமல் நம் கிராமங்களிலேயே அப்பொருட்களைப் பயன்படுத்துவதுமே இந்தியாவின் பொருளாதார உயர்வுக்கு உகந்த வழி.

—'ஹரிஜன்,'–23—3—1947

# 31

# வகுப்பு ஒற்றுமை

குஜராத்தியில் எனக்கு ஒரு கடிதம் வந்துள்ளது. அதன் சாரம் பின்வருமாறு:

"உண்மையான பொருளாதார தருமத்துக்கு முரண்பட்ட மதம் உண்மையான மதம் ஆகாது என்றும், மதத்துடன் முரண்பட்ட பொருளாதாரம் உண்மையான பொருளாதாரம் ஆகாதென்றும், அவை இரண்டையும் கண்டிக்க வேண்டுமென்றும் நீங்கள் சென்னையில் செய்த பிரசங்கமொன்றில் கூறியதாக 1927–ஆம் வருடம் செப்டம்பர் மாதம் 15-ம் தேதி 'எங் இந்தியா' இதழில் காணப்படுகிறது.

"நீங்கள் பல ஆண்டுகளாகவே இந்தக் கொள்கையைப் பின்பற்றி வருவதை நான் அறிவேன். ஆனால், இக்கொள்கை அனைவராலும், இன்னமும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. ஆகவே மதத்தின் பெயரால் நடக்கும் கொடுமைகளைத் தடுக்க முனைந்து, நீங்கள் உங்கள் சக்தியையும் நேரத்தையும் செலவு செய்வது சரியல்ல என்று எனக்குத் தோன்றுகிறது. உங்கள் நிர்மாணத் திட்டம் இன்று என்ன ஆகிவிட்டது? இன்று காங்கிரஸ் கையில்தான் அதிகாரம் உள்ளது. பூரண சுதந்திரம் நமக்குக் கிடைத்துவிட்டது. வெள்ளையர் வெளியேறி விட்டனர். இந்நிலையில், உங்கள் நிர்மாணத் திட்டத்தை அமல் நடத்தி, அதன்மூலம், மதமும் பொருளாதாரமும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவையல்ல என்பதை நீங்கள் நாட்டுக்கு நிரூபிப்பது நல்ல வழியல்லவா? இந்தியாவில், இன்று நேர்மைக்கு மாறாக உள்ள பொருளாதார நியதிகளைக் கண்டித்து நீங்கள் ஒன்றும் எழுதுவதில்லை. ஆகவே, காங்கிரஸ் அரசாங்கத்தின் தற்போதைய பொருளாதாரக் கொள்கையை நீங்கள் ஆதரிக்கிறீர்கள் என்று, ஆராய்ந்தறியாத மக்கள் எண்ணிவிடுகிறார்கள். நிர்மாணத் திட்டத்தை உண்டாக்கிய நீங்களே இப்பொழுது அதை ஒழித்து வருகின்றீர்கள் என்ற எண்ணம் எனக்கு ஏற்பட்டுவிட்டது. எனக்குத் தெரிந்தவரை, கதர் அல்லது கிராமக் கைத்தொழில் வேலை நடத்திவரும் ஸ்தாபனம் எதுவும் சுயதேவைப் பூர்த்தி முறைப்படியும், உண்மையான பொருளாதார தரும அடிப்படையிலும் நடக்கவில்லை."

நண்பர், சற்று ஆத்திரத்துடன் எழுதியுள்ளார். ஆகவே அவர் முழு உண்மையையும் கடிதத்தில் வெளிப்படுத்தவில்லை. வகுப்பு ஐக்கியமே என் உயிர்நாடி. கதர், கிராமக் கைத்தொழில் முதலிய வேலைத் திட்டங்களை நான் வகுப்பதற்கு முன்பே வகுப்பு ஐக்கியக் கொள்கையே என் லட்சியத் துடிப்பாக இருந்து வந்தது. பன்னிரண்டு வயதில், நான் ஆங்கிலம் கற்றுக் கொள்ள ஆரம்பித்த காலத்திலிருந்தே, இது என்னை ஆட்கொண்டது. ஹிந்துக்கள், முஸ்லிம்கள் பார்ஸிகள் அனைவரும் ஒரே பூமியில் பிறந்தவர்கள், சகோதரர்கள் என்ற உண்மையை உணர்ந்தேன். 1885–ல் காங்கிரஸ் தோன்றுவதற்கு முன்பே இந்த உணர்வு தோன்றிவிட்டது. வகுப்பு ஒற்றுமை, நிர்மாணத் திட்டத்தின் அடிப்படைகளில் ஒன்று என்பதை நாம் மறந்து விடக் கூடாது. வகுப்பு ஐக்யத்துக்காக, நான் பல அபாயங்களையும் பொருட்படுத்தாது பாடுபட்டுள்ளேன். அந்த ஐக்யம் ஏற்படாவிடில், நிர்மாணத் திட்டம் முன்னேற முடியாது என்பது என் உறுதியான நம்பிக்கை. அது எவ்வாறிருந்தாலும், அந்த ஐக்யமில்லாமல் நிர்மாணத் திட்ட முன்னேற்றத்துக்கு நான் வேலை செய்ய இயலாது. வகுப்புக் கலவரங்களின் நடுவிலே, நிர்மாணத் திட்டத்தை நடத்த நான் வழி அறியேன். நண்பர் சொல்வதை ஒப்புக்கொண்டால், நான் நோவாகாலிக்கும், அங்கிருந்து பீகாருக்கும் சென்றிருக்கக்கூடாது என்று ஏற்படும். இத்தனை ஆண்டுகளாக நான் செய்து வந்த வேலையை, நான் இப்பொழுதும் செய்யக்கூடிய வேலையைச் சரியான நேரத்தில் செய்யத் தவறியவனாவேன். அதற்கு நான் சம்மதிக்க முடியாது. நிர்மாணத் திட்டத்தின் மற்ற அம்சங்களுக்காக இதை விட்டுக் கொடுப்பது, நம் உடனடியான, பிரதான கடமையைச் செய்யத் தவறியதாகும். நான் செய்யக்கூடிய வேலை ஒன்றைச் செய்யத் தவறிவிட்டேன் என்பதைத் தவிர வேறு நன்மை ஒன்றும் இதனால் ஏற்படாது.

இன்று காங்கிரஸ் சர்க்காரில் அங்கம் வகிப்பவர்கள், என்னுடன் சேர்ந்து பாடுபட்ட ஊழியர்கள். காங்கிரஸில் சேர்ந்து வேலை செய்ததால்தான், நமக்கு இந்தச் சிறப்பு கிட்டியதென்றும், இன்று உயர்ந்த பதவிகளை அவர்கள் வகிக்கிறார்கள் என்றும் சொல்லலாம். நண்பர் குறிப்பிடும் பொருளாதார தருமத்தின் சிறப்பையும், அத்தருமத்தைக் கடைப்பிடிப்பது சாத்தியம், அவசியம் என்பதையும் என் சகாக்களே உணரும்படி நான் செய்ய முடியவில்லையென்றால், அவர்கள் மற்றவர்களுக்கு இதை உணர்த்தவேண்டுமென்று நான் எப்படி எதிர்பார்க்க முடியும்? கதர்ப் பொருளாதாரம் என்று கூறப்படுவதைப் புகுத்திக் கிராமக் கைத்தொழில்கள் மூலம் கிராமங்களுக்குப் புத்துயிர் அளிக்கும் திட்டத்தை அவர்கள் அமல் நடத்தினால், பொது ஜன ஆதரவைப் பெற முடியுமென்ற நம்பிக்கை அவர்களுக்கில்லை.

நண்பர் கூறியுள்ள யோசனைகளைப் பார்த்தால், ஸ்ரீ ஜாஜூ, ஸ்ரீ குமரப்பா போன்றவர்கள் அரசாங்க அதிகாரத்தை ஏற்றுக் கொள்ள நான் அவர்களைத் தயார் செய்ய வேண்டும் என்று சொல்வதுபோல் இருக்கிறது. இது என்ன தவறான எண்ணம்? யாரையும் தயார் செய்ய எனக்கென்ன உரிமை? மக்களுக் காக, மக்களால் நடக்கும் மக்களுடைய சர்க்கார், ஒரு தனி மனிதர் சொல்படி—அவர் எவ்வளவு பெரியவராயிருந்தாலும்— நடக்க முடியாது. மேலும், இன்று நிர்வாகத்தை நடத்திவரு பவர்களைக் காட்டிலும் திறமையுள்ளவர்களோ, நுட்ப அறிவு மிகுந்தவர்களோ யார் உள்ளனர்? தங்களைவிடத் திறமை யுள்ளவர்கள் இருந்தால், அவர்களுக்குத் தங்கள் இடத்தைத் தந்துவிட்டு இன்றுள்ள மந்திரிகள் வெளியேறுவார்கள் என்று நிச்சயமாக நம்புகிறேன். அவர்களை எனக்குத் தெரிந்தவரை, அவர்கள் பதவிக்கு வேட்டை ஆடுபவரல்ல. ஆகவே, எவருடைய தூண்டுதலுமில்லாமலே திறமையுள்ளவர்களுக்குத் தாங்களே இடம் கொடுத்துவிட்டுத் தங்களுக்குக் கிடைத்த ஓய்வு குறித்து மகிழ்வார்கள்.

அவர்களில் எவரையும்விட நான், அந்த இடத்தில் நல்ல வேலை செய்ய முடியும் என்று யாரும் தவறாக எண்ணிவிடக் கூடாது. அப்பொறுப்பை ஏற்க நான் முன்வந்தால், அவர்கள் என்னை வரவேற்பார்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனால், என்னிடம் எல்லையற்ற திறமை இல்லை. அத்தகைய சக்தி, நான் ராமா என்ற பெயரால் விரும்பி அழைக்கும் ஆண்டவனிடம் தான் உள்ளது. நான் பணிவுடன் அவரைப் பூசிக்கும் ஒரு பக்தன் தான். பக்தன், பரமனைப் போல் இருக்க முடியும் என்று நினைக்கக் கூடாது. ஆண்டவன் ஆட்டுகிறபடி பக்தன் ஆடவேண்டும்.

நான் செய்ய முயற்சிப்பது போலவே, இன்று அதிகாரத் தில் உள்ளவரும், வகுப்பு ஒற்றுமைக்காகத் தங்களால் இயன்ற வரை பாடுபட்டு வருகின்றனர் என்பதையும் மறந்து விடக் கூடாது. நான் என் வழியில் செய்கிறேன்; அவர்கள் அவர் களுக்கேற்ற முறையில் செய்கின்றனர், இப் பிரச்னை திருப்தி கரமாகத் தீர்ந்து நாட்டில் அமைதி நிலவும் வரை, நிர்மாண வேலை எதுவும் முன்னேற முடியாது என்பதை நான் அறிந்துள் ளதைப் போலவே அவர்களும் அறிவார்கள்.

மேலும், நிர்மாணத் திட்டம் பலனளிக்க வேண்டுமானால், அதை நம் நாட்டின் கோடிக்கணக்கான பாமர மக்கள் பின்பற்றி வேலை செய்ய வேண்டும் என்பதை மறந்துவிடக் கூடாது. அதற்கு, ஆயிரக்கணக்கான ஊழியர்கள் தேவை. இத் திட் டத்தைப் பல ஆண்டுகளாக, மக்களுக்கு உணர்த்தி வருகிறோம். சர்க்கா சங்கம், கிராமக் கைத்தொழில் சங்கம், கோசேவா சங்கம், தாலிமி சங்கம், இந்துஸ்தானி பிரசார சங்கம், ஆதி வாசி சேவா சங்கம், ஹரிஜன சேவா சங்கம் போன்ற பல

சங்கங்கள் தோன்றித் தங்களாலியன்றவரை இந்த லட்சியத் துக்காகப் பாடுபட்டு வருகின்றன. மதத்துக்கும் பொருளாதாரத் துக்கும் உள்ள தொடர்பின் அவசியத்தையும் உயர்வையும் அவர்கள் உணர்ந்துள்ளனர். வகுப்பு ஒற்றுமைக்காக, நான் பாடுபட்டு வருவதால், நிர்மாணத் திட்டத்தின் மற்ற அம்சங் களில் எனக்குள்ள சிரத்தை குறைந்துவிடவில்லை. முடிந்த போதெல்லாம், அவற்றிலும் நான் பங்கெடுத்து வருகிறேன். அதைவிட என்னிடமிருந்து அதிகம் எதிர்பார்க்கக் கூடாது. செய்துகொண்டிருக்கும் வேலையைக் கைவிட்டு, இதைவிடச் சிறந்த வேலையாயிருந்தாலும், அதில் ஈடுபட எனக்கு விருப்ப மில்லை. ஆகவே நண்பர், எனக்குத் தந்த எச்சரிக்கையை அவரே மனத்திற் கொள்ளவேண்டும். அவரும் நண்பர்களும் ஏதாவது ஒரு துறையில் முழு மனத்துடன் ஈடுபட்டு, நாட்டுக்குச் சேவை செய்ய வேண்டும்.

நாட்டுக்குச் சேவை செய்ய, தேசிய ஊழியர்களிடம் அர சியல் அதிகாரம் இருக்க வேண்டியது அவசியமில்லை என்பதை நான் பன்முறை வற்புறுத்தியுள்ளேன். ஆனால், எந்தப் பிரதி நிதிகள் கையில் அதிகாரத்தை ஒப்புவிக்கின்றனரோ, அவர் களுடன் பொது மக்கள் நெருங்கிய தொடர்பு கொள்ளுவது அவ சியம். அதிகாரத்தில் உள்ளவர்கள் வெகு சிலரே. பொது மக்கள் தங்கள் சக்தியை உணர்ந்து அதை விவேகத்துடன் பயன்படுத்தினால், எல்லாம் சரியாகிவிடும். நம் சுதந்திரம், பதினெட்டு நாட்களுக்கு முன்புதான் பிறந்த சிசு. உடனே நிலைமை தானாகச் சரியாகிவிடும் என்று எதிர்பார்க்கக் கூடாது. மேலும், அதிகாரத்தை ஏற்றுள்ளவர்கள் இந்த மகத்தான நிர் வாக வேலைக்குப் புதிதானவர்கள். அப்புதுப் பொறுப்புகளை ஏற்றுக்கொள்ள, அவர்கள் தங்களை விரைவில் பக்குவப் படுத்தி வருகின்றனர்.

—'ஹரிஜன்'–11—9—1947

[கல்கத்தாவில் 4-9-47-ல் செய்த பிரசங்கம்]

## 32

## யந்திரங்களை எதிர்க்கிறேனா ?

"பாபுஜி, நீங்கள் எல்லா யந்திரங்களையும் எதிர்க்கிறீர் களா?" என்று ஸ்ரீ ராமச்சந்திரன் கேட்டார்.

காந்திஜி, சிரித்துக் கொண்டே கூறினார். "இவ்வுடலே ஒரு நுட்பமான யந்திரம் என்பதை நான் உணரும்போது, எல்லா யந்திரங்களையும் எப்படி எதிர்க்க முடியும்? ராட்டை

கூட ஒரு யந்திரம்தான். பல் தேய்க்கும் குச்சிகூட ஒரு வகையில் யந்திரம்தான். நான் யந்திரங்களை எதிர்க்க வில்லை; யந்திரங்கள் மேலுள்ள மோகத்தைத்தான் எதிர்க் கிறேன். உழைப்பை மிச்சப்படுத்தும் யந்திரம் என்று கூறி, அதன்மேல் மோகம் கொள்ளுகின்றனர். ஆயிரக்கணக்கானவர் வேலையை இழந்து பட்டினியால் வாடும் நிலைவரை, இந்த உழைப்பை மிச்சப்படுத்தும் முறை கையாளப்படுகிறது. மனித சமுதாயத்தின் ஒரு சிறு பகுதியினரின் உழைப்பையும் நேரத் தையும் மட்டும் மிச்சப்படுத்தும் முறையை நான் ஆதரிக்க வில்லை. மனித சமுதாயம் முழுவதற்கும் அவற்றை மிச்சப்படுத் தும் முறையை ஆதரிக்கின்றேன். செல்வம் குவிய வேண்டும்; ஆனால், ஒரு சிலரிடம் மட்டுமல்ல; அனைவரிடமும். இன்று கோடிக் கணக்கானவர் முதுகின்மேல் ஒரு சிலர் ஏறிச் சவாரி செய்யவே யந்திர முறை உதவுகிறது. உழைப்பை மிச்சப்படுத்த வேண்டும் என்ற உபகார சிந்தனை அவர்களை உந்தவில்லை. பேராசையே பிடரியைப் பிடித்துத் தள்ளுகிறது. இத்தகைய அமைப்பை எதிர்த்துத்தான், நான் என் முழு வலிமையுடன் போராடு கின்றேன்.''

''அப்படியானால், நீங்கள் யந்திரத்தை எதிர்க்கவில்லை; யந்திரம் இன்று துஷ்பிரயோகம் செய்யப்படுவதைத்தான் எதிர்க்கிறீர்கள், அல்லவா?'' என்று ஸ்ரீ ராமச்சந்திரன், ஆவ லுடன் கேட்டார்.

''ஆம் என்று நான் தயங்காமல் கூறுவேன். ஆனால், விஞ் ஞான உண்மைகளும் புதுமைகளும், பேராசையின் கருவிகளாக இருக்கும் நிலை ஒழிய வேண்டும் என்பதை முதலில் வற்புறுத்து வேன். அதை ஒத்துக்கொண்டால், தொழிலாளரிடம் மித மிஞ்சிய வேலை வாங்கமாட்டார்கள். யந்திரத்தினாலும் தீங்கு ஏற்படாமல் உபகாரம் ஏற்படும். யந்திரத்தை ஒழிப்பது என் குறிக்கோளல்ல; அதைக் கட்டுப்படுத்தவே நான் விரும்பு கிறேன்.''

''அவ்வாறு பார்த்தால், மிகவும் சிக்கலான, மின்சார சக்தி யால் இயங்கும் யந்திரங்களெல்லாம் மறைய வேண்டும் என்று தானே ஏற்படும்?''

''அவை போக வேண்டி நேரிடலாம். ஆனால், ஓர் உண் மையை நான் தெளிவுபடுத்த வேண்டும். மனிதன்தான் பிர தானம். யந்திரம், மனிதனின் கை கால்களை முடக்கிவிடக் கூடாது. சில யந்திரங்களினால் ஏற்படும் நன்மையை நான் உணர்கிறேன். உதாரணமாக, சிங்கர் தையல் மெஷினை எடுத்துக் கொள்ளுவோம். நாம் கண்டுபிடித்துள்ள யந்திரங் களில் மிக உபயோகமானவற்றில் அது ஒன்று. அதைக் கண்டு பிடித்த விதமே ஒரு காவியமாகும். தம் மனைவி, கையாலேயே தையல் வேலைசெய்து மிகவும் சிரமப்படுவதைப் பார்த்த சிங்கர்,

தம் மனைவியின் மேல் கொண்டிருந்த அன்பின் காரணமாய், அனாவசிய சிரமத்தையும் உழைப்பையும் மிச்சப்படுத்துவதற்காகத் தையல் யந்திரத்தைக் கண்டுபிடித்தார். அதனால், அவர் தம் மனைவியின் உழைப்பை மட்டுமல்ல, யந்திரத்தை வாங்கும் அனைவருடைய உழைப்பையும் மிச்சப்படுத்தினார்.''

''சிங்கர் தையல் யந்திரங்களை உற்பத்தி செய்ய ஒரு தொழிற்சாலை வேண்டுமல்லவா? அதில் மின்சார சக்தியால் இயங்கும் யந்திரங்கள் இருக்குமல்லவா?''

''அது அவசியம்தான். ஆனால், அத்தகைய தொழிற்சாலைகளைத் தேசீய மயமாக்கிவிட வேண்டும். அரசாங்கமே அவற்றை எடுத்து நடத்த வேண்டும். அந்த அளவுக்கு நான் சோஷலிஸ்ட் தான். அத்தொழிற்சாலைகள் மிகச் சிறந்த முறையில் நடக்க வேண்டும். லாபம் குறிக்கோளாக இருக்கக் கூடாது; மனித சமுதாயத்தின் நலனே நோக்கமா யிருக்க வேண்டும். பேராசைக்குப் பதிலாக அன்பு ஆட்சி செலுத்த வேண்டும். தொழிலாளரின் நிலைமையில் மாறுதல் ஏற்பட வேண்டுமென்றுதான் நான் விரும்புகிறேன். பணப் பேராசை அடங்க வேண்டும். தொழிலாளிக்கு நியாயமான ஊதியம் மட்டுமல்ல, உற்சாகமளிக்கக் கூடிய வேலையும் கிடைக்கும்படி செய்யவேண்டும். அத்தகைய நிலைமையில், யந்திரத்தினால், அதன் சொந்தக்காரரான முதலாளிக்கோ, அரசாங்கத்துக்கோ நன்மை ஏற்படுவது போலவே தொழிலாளிக்கும் ஏற்படும். தையல் யந்திரத்தை ஒரு உதாரணமாகத்தான் குறிப்பிட்டேன். அந்த யந்திரம், அன்பில் உதயமானது. தொழிலாளியின் உழைப்பை மிச்சப்படுத்துவதே நோக்கமாயிருக்க வேண்டும். உண்மையான உபகார சிந்தனை உந்த வேண்டும்; பேராசை பிடித்தலையக்கூடாது. அதுபோலவே வளைந்துள்ள கதிர்களை நிமிர்த்த ஒரு யந்திரம் கண்டுபிடிக்கப்பட்டால் அதை நான் வரவேற்பேன். அந்த யந்திரத்துக்குப் பின்னும் கொல்லர்தான் கதிர்களைச் செய்வார்கள். ஆனால், கதிர் வளைந்துவிட்டால், அதைச் சரியாக்க, நூல் நூற்பவர் ஒவ்வொருவரிடமும் ஒரு யந்திரம் இருக்கும். ஆகவே பேராசைக்குப் பதிலாக, அன்பு ஆட்சி செலுத்தினால், எல்லாம் சரியாகிவிடும்.''

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]

—'எங் இந்தியா'-13—11—1924

# 33

# சோம்பல், சைத்தானின் துணை

ஓர் ஊழியர் காந்திஜியிடம் சில கேள்விகள் கேட்க வந்தார். அக்கேள்விகள் பற்றிப் பல முறை விவாதம் நடந்துள்ள போதிலும், அந்த ஊழியரை அவை இன்னும் உறுத்திக்கொண்டிருந்தன.

"பிரிட்டிஷார் வருவதற்கு முன்பே கதரும் இருந்தது; சீருணவும் இருந்தது. அவற்றால் நம் நிலைமை உயர்ந்து விடவில்லை. அப்படியிருக்கும்போது, கதரையும் சீருணவையும் பற்றி நீங்கள் அவ்வளவு வற்புறுத்துவது ஏன்?" என்பதுதான் அவருடைய முதல் கேள்வி.

காந்திஜி கூறினார்: "'எங் இந்தியா', 'ஹரிஜன்' ஆகியவற்றை நீங்கள் வாசித்தால், இக்கேள்வியைப் பற்றி ஏற்கனவே முழுதும் அலசி ஆராய்ந்தாகிவிட்டது என்பதை நீங்கள் காண்பீர்கள். ஆயினும், மீண்டும் சுருக்கமாகக் கூறுகிறேன். கதர் முன்பே இருந்தது. ஆனால், அதன் தத்துவத்தை நாம் உணரவில்லை. நம் தேவைகளை நாமே பூர்த்தி செய்து வந்தோம். ஆனால், சுயதேவைப் பூர்த்தி முறையின் தத்துவத்தை நாம் உணரவில்லை; அதன் அவசியத்தையும் நாம் அறியவில்லை. கதரையும் மற்றக் கைத்தொழில்களையும் நாம் பயின்று வந்தோம்; ஆனால், விவேகத்துடனல்ல. அவை நம் வாழ்வுக்கு உயிர் நாடியாய் இருந்தன என்பதை நாம் உணரவில்லை. ஆகவே நாம் அவற்றை இழந்தபோது, அந்த நஷ்டத்தை உணரவில்லை. அவற்றைப் புனருத்தாரணம் செய்ய இன்று முயற்சி நடக்கும் போது, அவற்றைப் புதுப்பிப்பதால் என்ன பலன் என்றே சிலருக்குச் சந்தேகம் பிறந்துவிடுகிறது."

"அதற்கு, அரசியல் உணர்வும் பிரசாரமும் அவசியம். அதைத்தான் நீங்கள் தடை செய்து விட்டீர்களே?"

"தமக்குத் தாமே உதவி செய்து கொள்ளுவதன் அவசியத்தையும், சீருணவின் நன்மையையும், சோம்பலை ஒழித்துவிட்டு, ஓய்வு நேரத்தை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ளுவதன் முக்கியத்துவத்தையும் மக்கள் உணர்வதற்கு அரசியல் பிரசாரம் தேவையில்லை."

"விடிந்தது முதல் இருள் அடையும் வரை சுமைதாங்கிக் கழுதைகள் போல், ஒரு மணி நேர ஓய்வுமின்றி, கிராமவாசிகள் உழைத்தும், உணவுக்கு வழி பிறக்கவில்லை. அவர்கள் இன்னும் அதிகம் உழைக்க வேண்டுமென்று கூறுகிறீர்களா?"

"நீங்கள் சொல்வது எனக்குப் புதிதாக இருக்கிறது. எனக்குத் தெரிந்தவரை, கிராமங்களில் எவ்வளவோ நேரம் வீணுக்கப்

படுகிறது. ஆனல், நீங்கள் சொல்வதுபோல், அவர்கள் அளவுக்கு மீறி வேலே செய்யவேண்டி யிருப்பதானல், எட்டுமணி நேர வேலேக்கு, வாழ்க்கைக்கு வேண்டிய நியாயமான ஊதியத்தைத் தவிர எதையும் ஏற்றுக்கொள்ள மறுக்க வேண்டுமென்று கூறுவேன்.''

''யந்திரத்தின் நல்ல அம்சங்களே யெல்லாம் ஏற்றுக் கொண்டு, அதன் கெட்ட அம்சங்களே விலக்கி விடுவதுதானே?''

''மனித யந்திரங்கள் வேலேயில்லாமல், சோம்பலாய்க் கிடப்பதை நாம் அனுமதிக்க முடியாது. நம் நாட்டில், அளவற்ற ஆள்பலம் இருக்கிறது. அதைப் பயன்படுத்திக் கொள்ளாமல் யந்திரத்தை உபயோகிக்க இடமில்லே.''

''யந்திரங்களே வைத்துக் கொண்டு, நம் தேவைக்கு ஏற்ற படி, குறிப்பிட்ட கால அளவுக்கு அவற்றை உபயோகித்துக் கொள்ளுவதுதானே?''

''அது எப்படி முடியும்? ஒருவர் தம் தொழிற்சாலேயில், 30 லட்சம் பேருக்கு வேலே கொடுத்து, மக்கள் அனேவருக்கும் வேண் டிய துணியை உற்பத்தி செய்து, லாபத்தைத் தொழிலாளிகளி டம் பகிர்ந்து கொண்டாலும், முன்பு முப்பது கோடி மக்களுக்குக் கிடைத்து வந்த பணம்தானே, இப்பொழுது முப்பது லட்சம் பேரிடை வினியோகமாகும்.''

''அப்படி இருக்காது. நம் தேவைகளுக்கு எவ்வளவு அவசி யமோ அவ்வளவு நேரம்தான் நாம் வேலே செய்ய வேண்டும். நம் அனேவருக்குமே கொஞ்ச உழைப்பு அவசியம்தான். ஆனல், எல்லோரும் இரண்டு மணி நேரம் வேலே செய்துவிட்டு, மற்ற நேரத்தைச் சந்தோஷமாய்க் கழிப்பதுதானே?''

''ஆகவே நாம் அனேவரும் தினம் ஒரு மணி நேரம் வேலே செய்தால், அத்துடன் நீங்கள் திருப்தி அடைந்துவிடுவீர்களா?'' என்று காந்திஜி கேட்டார்.

''ஒரு மணி நேரமோ, எவ்வளவோ, அதைக் கணக்கிட்டு நிர்ணயிக்க வேண்டும். ஆனல், அவசியமான அளவு வேலே செய்தால் போதும் என்றே நான் நினேக்கிறேன்.''

''அதுதான் விஷயம். எல்லோருக்கும் தினம் எட்டு மணி நேரமாவது உபயோகமான வேலே இருந்தால் ஒழிய நான் திருப்தி அடையமாட்டேன்.''

''எட்டு மணி நேரம் குறைந்த பட்சம் என்று நீங்கள் ஏன் வற்புறுத்த வேண்டுமென்று எனக்குத் தெரியவில்லேயே?''

''வேலே செய்வது நல்லது என்று உணர்ந்து வேலே செய்ய முன்வருபவர் மிகக் குறைவு. சாப்பாட்டுக்கு வழி காட்டும் என்ற தூண்டுதல் இருந்தால்தான். பெரும்பாலான மக்கள் வேலே செய்

வார்கள். அமெரிக்காவிலிருந்து ஒரு சில கோடீஸ்வரர்கள் வந்து 'நீங்கள் வேலையே செய்யவேண்டாம். உங்களுக்கு வேண்டிய உணவுப் பொருட்களை யெல்லாம் நாங்களே தருகிறோம்' என்று கூறினால், அவர்கள் தருமத்தை நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன்.''

"அதற்குக் காரணம், அது உங்கள் தன்மதிப்பைப் பாதிக்கும் என்பது."

''அதனால் மட்டுமல்ல. ஒவ்வொருவரும் உழைத்து உண்ண வேண்டும் என்ற அடிப்படையான வாழ்க்கைத் தத்துவத்துக்கே அது முரண்பட்டது."

''அது உங்கள் சொந்தக் கருத்து. சமூக அமைப்பை நிர்ணயித்துக்கொள்ளும் உரிமையை நீங்கள் சமூகத்திடம் ஒப்படைப்பீர்களா, அல்லது விவேகமுள்ள ஒரு சில வழிகாட்டிகளிடம் ஒப்படைப்பீர்களா?"

"விவேகமுள்ள ஒரு சில வழிகாட்டிகளிடம்தான் ஒப்படைப்பேன்.''

''அப்படியானால், நீங்கள் சர்வாதிகாரத்தை ஆதரிக்கிறீர்கள் என்றுதானே ஏற்படும்?''

''இல்லை, அகிம்சையே என் அடிப்படைத் தத்துவம். தனிப்பட்டவரையோ, ஒரு வகுப்பையோ நான் நிர்ப்பந்தம் செய்ய மாட்டேன். வழிகாட்டுவது வேறு; சர்வாதிகாரம் வேறு."

விவாதம் இன்னும் வலுத்துக்கொண்டே போயிருக்கும். ஆனால், காந்திஜிக்கு அவகாசம் இல்லாததால், அன்றைய தினம் அத்துடன் முடிந்தது.

* * *

''ஓய்வு நேரத்தைப் பயன்படுத்தும் முறையும் கலையும்'' என்று ஸ்ரீ எல். பி. ஜாக்ஸ் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் ஓய்வு நேரத்தைப் பயன்படுத்துவது எவ்வளவு கடினமான கலை என்பதைக் காட்டியுள்ளார். உழைப்பின் தத்துவத்தை முற்றிலும் உணர்ந்து அனுபவித்தால் ஒழிய, ஓய்வு நேரத்தையும் அனுபவிக்கக் கற்றுக்கொள்ள முடியாது என்று அவர் கூறுகிறார். சமூக அமைப்பு சிறப்பாக அமையவேண்டுமானால், மனிதனுக்கு அதிக ஓய்வு இருக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறார், பர்ட்ராண்டு ரஸ்ஸல் என்ற அறிஞர். தினம் நான்கு மணி நேரம் மனிதன் உழைத்தால் போதும் என்று அவர் கூறுகிறார். நல்ல வேளை, காந்திஜியுடன் விவாதம் செய்த நண்பரைப்போல், ஒரு மணி நேரம் வேலை செய்தால் போதும் என்று அவர் கூறவில்லை. ஆனால், உண்மையில் ரஸ்ஸல் நினைப்பதுபோல், பிரச்னை அவ்வளவு எளிதாக இல்லை என்று ஜாக்ஸ் கருதுகிறார். ''நம்முடைய

ஓய்வு நேரம், மற்றவர்கள் செய்கையால் பாதிக்கப்படும். ஏனென்ருல், ஒருவருக்கொருவர் உபத்திரவம் செய்து கொண்டிருப்பதிலேயே, நாம் நமது ஓய்வு நேரத்தைப் பெரும்பாலும் செலவு செய்கிரும்'' என்பதை ஜாக்ஸ் நினைவூட்டுகிருர். அவர் மேலும் கூறுகிருர்: ''மேலும், ஓய்வு நேரத்தில்தான், கெட்ட எண்ணங்களும், கீழ்த்தரமான ஆசைகளும் தோன்றப் பெரிதும் வசதியாய் இருக்கிறது என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது. மனிதன் தினம் நான்கு மணி நேரம் மட்டுமே வேலைசெய்துவிட்டு, மற்ற நேரத்தில் சும்மா இருந்தால், சைத்தானுக்குக் கொண்டாட்டம் தான்.'' ஓய்வு நேரம், மனிதனின் நல்லெண்ணத்துக்கும் கெட்ட எண்ணத்துக்கும் போராட்டம் நடக்கும் நேரம் என்று அவர் கூறுகிருர். ஓய்வு நேரத்தை, மக்கள் தங்கள் ஆத்மிக முன்னேற்றத்துக்காகப் பயன்படுத்துகின்றனரா என்பதை ஆராய்ந்தறிய, ஆர். எல். டூபூஸ் என்பவரின் 'புத்தகங்கள்' என்ற நூலிலிருந்து ஒரு பகுதியை அவர் மேற்கோளாகக் காட்டுகிருர். அவர் கூறுவதாவது :

" அமெரிக்காவில் 11½ கோடி மக்கள் ஒவ்வொரு வாரமும் சினிமாவுக்குப் போகின்றனர். அமெரிக்க மக்கள் அனைவரும் ஆண்டுதோறும் புத்தகங்களுக்காக எவ்வளவு பணம் செலவு செய்கிருர்களோ, அதை மூன்றே வாரங்களில், சினிமா பார்ப்பதில் இந்த 11½ கோடி மக்கள் செலவு செய்கின்றனர். புத்தகங்களுக்காக அமெரிக்க மக்கள் ஆண்டுதோறும் ஏறக்குறைய 60 கோடி ரூபாய் செலவு செய்கின்றனர். மோட்டாரில் உல்லாசப் பிரயாணங்களுக்காக ஆண்டு தோறும் செலவாகும் தொகை 900 கோடி ரூபாய். தங்கள் வருட வருவாயில் இருநூற்றில் ஒரு பகுதியைப் புத்தகங்களுக்காக அமெரிக்க மக்கள் செலவு செய்கின்றனர். சாதாரண அமெரிக்கப் பிரஜை, ஆண்டுதோறும் இரண்டு புத்தகங்களை விலைக்கு வாங்குகிருர்; இரண்டு புத்தகங்களை நூல் நிலையத்திலிருந்து வாங்கிப் படிக்கிருர். அமெரிக்க சர்க்கார் அதிகார பூர்வமாய் வெளியிட்டுள்ள ஓர் அறிக்கையில் பின்வரும் புள்ளி விவரங்கள் காணப்படுகின்றன: சர்க்கரை மிட்டாய்க்காகச் செலவு செய்யப்படும் தொகை, புத்தகங்களுக்காகச் செலவு செய்யப்படுவதைக் காட்டிலும் 27 மடங்கு அதிகம்; சினிமா செலவு 22 மடங்கு; குளிர் பானங்கள் செலவு, 11 மடங்கு. மதுபானங்களுக்குச் செலவு செய்யப்படும் தொகை குறிப்பிடப்படவில்லை. இப்புள்ளி விவரங்களிலிருந்து நாம் உண்மையை ஆராய்ந்து அறியவேண்டும். அமெரிக்க மக்கள் வாங்கி அல்லது கடன் வாங்கிப் படிக்கும் புத்தகங்களெல்லாம், ஆன்மிக முன்னேற்றத்துக்கு உகந்தவையல்ல. அதே சமயத்தில், ஓய்வு நேரத்தைப் பயன்படுத்தும் மற்ற முறைகளிலும், மனப் பண்பாட்டுக்கு இடம் இருக்கலாம். சர்க்கரை மிட்டாய் மனிதன் வளர்ச்சிக்கு எப்படி உதவமுடியும் என்பதுமட்டும் விளங்கவில்லை. ஆனல், மொத்தத்தில், ஓய்வு நேரத்தில், சைத்தானுக்குக் கொண்டாட்டம்தான் என்பது தெளிவாகிறது.''

மேலே கூறியவை அமெரிக்காவைப் பொறுத்த மட்டிலும். லங்காஷயர் நகரங்களில் ஒன்றின் நிலைமையை ஜாக்ஸ் பின்வருமாறு சித்திரிக்கிருர் :

''வேட்டை நாய் ஓட்டப் பந்தயம் நடக்கும் இடத்திற்கு வெளியே மத்தியானம் ஆரம்பிக்க விருந்த பந்தயத்துக்குக் காலையிலிருந்து பெருங்

கூட்டம் காத்துக்கொண்டிருந்தது. விசாரித்ததில், அவர்களில் பெரும்பாலோர் வேலையில்லாதவர்கள் என்று தெரியவந்தது. சுற்று வட்டாரத்திலிருந்த பல தொழிற்சாலைகள் மூடப்பட்டிருந்தன. ஆனால், ஓட்டப் பந்தயம் மட்டும் ஒழுங்காகவும், லாபகரமாயும் நடந்துவந்தது. ஓய்வு நேரம் மக்களுக்கு அதிகம் கிடைத்திருந்தால், பொதுஜனப் பள்ளிக்கூடங்களுக்கு அதிகப் பேர் வருகின்றனரா என்று நான் விசாரித்தேன். இல்லையென்று தெரியவந்தது. மக்கள் மனத்தைக் கவர, வேறு கேளிக்கைகள் எத்தனையோ இருந்தன.

இந்தியாவைப் பொறுத்தவரை, இன்று நாம் காணும் கலகங்கள் முதலிய நாச நடவடிக்கைகள் பெரும்பாலும் வேலையில்லாதவரின் வேலையேயாகும். ஓய்வு நேரம் அதிகரிப்பதுடன், குற்றங்களும் எவ்வளவு அதிகரிக்கின்றன என்ற புள்ளிவிவர ஆராய்ச்சி மிகவும் பலனளிக்கும். சோம்பலாயிருப்பவனை சைத்தான் தன் கருவியாக உபயோகித்துக் கொள்ளுவான் என்ற உண்மை மட்டும் இன்னும் பொய்ப்பிக்கப்படவில்லை.

[மகாதேவ தேசாய்] —'ஹரிஜன்' - 7—2—1935

# 34

# புதுக் கல்வியின் மூலம் புது சமூகம்

தென்னிந்தியாவில் ஒரு கல்வி நிலையத்தை நிர்வகித்து வந்த டாக்டர் ஜான் டி. போயர் என்ற அறிஞர், ஐரோப்பாவுக்குத் திரும்புமுன், வார்தாவுக்கு வந்திருந்தார். அவர் வார்தா கல்வித் திட்டத்தைத் தீர ஆராய்ந்து, அது சம்பந்தமாக ஆரிய நாயகம், காகா சாகேப் ஆகியோருடன் விவாதித்தார். ஒரு சில நிமிஷங்களாவது, காந்திஜியுடன் அதைப் பற்றிப் பேச அவர் ஆசைப்பட்டார். அக் கல்வித் திட்டத்திற்கு அகிம்சை அடிப்படையாயிருப்பதால்தான், அது தம்மைப் பெரிதும் கவர்ந்ததென்றும் அவர் கூறினர். போதனைத் திட்டத்தில், அகிம்சைக்குப் போதிய அளவு முக்கியத்துவம் தரவில்லை என்று அவர் வருந்தினர்.

காந்திஜி கூறினர்: "அகிம்சை அடிப்படையாய் இருப்பதால், திட்டம் உங்களைக் கவர்ந்தது சரிதான். ஆனால், பாடத் திட்டம் முழுவதும் அகிம்சையைச் சுற்றியே அமைய முடியாது. அகிம்சையில் மிகுந்த பற்றுதலும் நம்பிக்கையும் உள்ள ஒருவர் வகுத்த திட்டம் அது என்பதை மனத்திற்கொண்டால் போதும், அக் கல்வித் திட்டத்தை ஏற்றுக்கொள்வோர் அனைவரும் அகிம்சையையும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற அவசியமில்லை. கல்வித் திட்டக் கமிட்டி அங்கத்தினர்களில் பலருக்கு அகிம்சைக் கொள்கையில் நம்பிக்கை கிடையாது. சைவ உணவு சாப்பிடு

பவர் ஒருவருக்கு அகிம்சையில் நம்பிக்கையில்லாமல் இருக்க லாம். அவர் ஆரோக்கியத்தை முன்னிட்டுச் சைவ உணவு சாப் பிடுபவராக இருக்கலாம். அது போலவே அக்கல்வித் திட் டத்தை ஏற்றுக் கொள்ளுபவர் அனைவரும் அகிம்சையில் நம் பிக்கை கொண்டிருக்க வேண்டும் என்ற அவசியமில்லை.''

''அக் கல்வித் திட்டத்திற்கு அகிம்சை அடிப்படையாய் இருக்கும் காரணத்தால், திட்டத்தை ஆதரிக்காத பல கல்வி நிபுணர்கள் இருப்பதை நான் அறிவேன்'' என்று டாக்டர் போயர் கூறினர்.

''அது எனக்கும் தெரியும். ஆனல், அகிம்சைத் தத்து வத்தை அடிப்படையாகக் கொண்டதென்ற காரணத்தால், கதரையே ஏற்றுக்கொள்ள மறுக்கும் சில பிரமுகர்களையும் நான் அறிவேன். அதற்கு என்ன செய்ய முடியும்? அக் கல்வித் திட் டத்தின் அடிப்படை அகிம்சைதான். அதை நான் தெளிவாக நிரூபிக்க முடியும். ஆனல், அதை நிரூபித்தால், திட்டத்தில் மக்களுக்கு அவ்வளவு ஆர்வமும் உற்சாகமும் இருக்காது என் பதும் எனக்குத் தெரியும். பட்டினியால் வாடும் மக்கள் கோடிக் கணக்காக உள்ள நாட்டில், வேறெந்த முறைப்படியும் குழந்தை கள் அனைவருக்கும் கல்வி புகட்ட முடியாது என்பதை அவர்கள் ஒத்துக்கொள்ளுகிருர்கள். அம்முறை, ஒரு புது பொருளாதார அமைப்புக்கு அடிகோலும் என்பதையும் அவர்கள் ஒத்துக்கொள் ளுகிருர்கள். அத்துடன் நான் திருப்தி அடைகிறேன். அகிம்சை, ஒரு வாழ்க்கைத் தத்துவம் அல்லது நெறி என்ற நம்பிக்கை அற்றவர்களும், சுதந்திரம் பெற ஒரு சாதனம் என்ற அளவில் நம்பும் வரை எனக்கு ஓரளவு திருப்திதான். இந்தியா முழு வதும், அகிம்சை நெறியை ஏற்றுக்கொண்டால், நாம் உடனடி யாக ஒரு குடியரசு நிறுவ முடியும்.''

''ஆனல், எனக்கு இன்னும் ஒரு விஷயம் விளங்கவில்லை. நான் ஒரு சோஷியலிஸ்ட். அகிம்சையில் நம்பிக்கை கொண் டவன் என்ற முறையில் அத் திட்டத்தில் எனக்குப் பற்றுதல் ஏற்பட்டுள்ள போதிலும், சோஷியலிஸ்ட் என்ற முறையில், அத் திட்டம் இந்தியாவை உலகின் மற்ற நாடுகளிலிருந்து பிரித்து ஒதுக்கிவிடும் என்று நினைக்கிறேன். இன்று மிகவும் அவசிய மானது, நாம் உலகத்தோடு இணைந்து வாழ்வது. அந்த இணைப்பை சோஷியலிஸம் ஏற்படுத்துவதுபோல் வேறெதுவும் ஏற்படுத்த முடியாது.''

''எனக்கு இந்த ஆட்சேபம் எழவில்லை. உலகிலிருந்து பிரிந்து ஒதுங்கியிருக்க நாம் விரும்பவில்லை. நாம் மற்ற நாடு களுடன் உறவு கொள்ள மனமுவந்து முன்வருவோம். ஆனல், இப்பொழுதுள்ள பலாத்கார உறவு ஒழிய வேண்டும். நாம் எந்த நாட்டையும் ஆண்டு சுரண்ட விரும்பவில்லை; அயல்நாட் டினர் நம் நாட்டைச் சுரண்ட அனுமதிக்கவும் விரும்பவில்லை. புதுக் கல்வித் திட்டத்தின் மூலம், எல்லாக் குழந்தைகளையும்

உற்பத்தியாளராக்க முடியும் என்று எதிர்பார்க்கிறோம். அந்த முறை நம் சமூக அமைப்பிலேயே ஊறி, நாட்டில் மகத்தான மாறுதலை உண்டாக்கும். ஆனால், அதனால் நாம் உலகின் மற்ற நாடுகளிலிருந்து ஒதுங்கி நிற்க விரும்புகிறோம் என்றாகாது. . ஒரு நாடு சில பொருட்களைத்தான் உற்பத்தி செய்ய முடியும். மற்றப் பொருட்களை வாங்க மற்ற நாடுகளுடன் தொடர்பு கொள்ளுவது அவசியம். ஆனால், அப்பொருள்களை அனுப்பும் அயல்நாடுகள், அந்நாட்டைச் சுரண்டக் கூடாது.''

''ஆனால், மற்ற நாடுகளிலிருந்து வரும் பொருட்கள் வேண்டாம் என்ற அளவுக்கு, நீங்கள் உங்கள் வாழ்க்கையை எளிய முறையில் அமைத்துக்கொண்டால், மற்ற நாடுகளிலிருந்து ஒதுங்கி நிற்பவராவீர்கள். அவ்வாறு ஒதுங்கி நிற்காமல், அமெரிக்காவுக்கும் நீங்கள் வழிகாட்ட வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.''

'' நாம் பிறரைச் சுரண்டாமலும், பிறர் நம்மைச் சுரண்ட இடம் கொடாமலும் இருப்பதன் மூலம்தான் அமெரிக்காவுக்கு நாம் வழிகாட்ட முடியும். அமெரிக்கா நம் உதாரணத்தைக கண்டு பின்பற்றும். இரு நாடுகளிடையேயும், தடையின்றி, சுயேச்சையான தொடர்பு ஏற்படலாம்."

''ஆனால், நீங்கள்தான் வாழ்க்கையை எளிய முறையில் அமைத்து, யந்திர முறையை ஒழிக்க விரும்புகிறீர்களே?''

'' முப்பது கோடி மக்கள் வேலை செய்வதற்குப் பதிலாக முப்பது லட்சம் மக்கள் வேலை செய்து நாட்டின் தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியுமென்றால், நான் அதற்குத் தடை சொல்ல மாட்டேன். ஆனால், மற்றவர்கள் வேலையிழந்து, பிழைப்புக்குத் திண்டாடிச் சோம்பலுக்கு அடிமையாகக் கூடாது. நாட்டை யந்திரமயமாக்கி, ஒவ்வொருவரும் தினமும் ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் வேலை செய்தால் போதும் என்ற நிலையை ஏற்படுத்த சோஷியலிஸ்டுகள் விரும்புகிறார்கள் என்பதை நான் அறிவேன். அதை நான் ஆதரிக்கவில்லை.''

'' அவர்களுக்கு ஓய்வு நேரம் கிடைக்குமல்லவா ?''

'' ஓய்வு நேரம் எதற்கு ? கால்பந்து விளையாடுவதற்கா ?''

''அதற்கு மட்டுமல்ல; உபயோகமான கைத்தொழில்களைப் பயில்வதற்கும்தான்.''

''உபயோகமான கைத்தொழில்களைப் பயில வேண்டுமென்றுதான் நானும் சொல்கிறேன். ஆனால், தினம் எட்டு மணி நேரம் வேலை செய்து, கையால் பொருட்களை உற்பத்தி செய்வார்கள்.''

'' ஒவ்வொரு வீட்டில் ஒரு ரேடியோவும், ஒவ்வொருவருக்கும் ஒரு காரும் இருக்கும்படியான சமூக அமைப்பு ஏற்படும் என்று

நீங்கள் எதிர்பார்க்கவில்லையா? அமெரிக்க ஜனாதிபதி ஹூவர் வகுத்த லட்சியம் அதுதான். ஒவ்வொருவருக்கும் ஒன்றல்ல, இரண்டு ரேடியோக்களும் இரண்டு கார்களும் இருக்க வேண்டு மென்று அவர் விரும்பினார்."

"அவ்வளவு கார்கள் இருந்தால், நடப்பதற்கே இடமில் லாமல் போய்விடுமே" என்று காந்திஜி கூறினார்.

"ஆம், ஒவ்வொரு ஆண்டும், போக்குவரத்தில் விபத்துக் களினால், நாற்பதாயிரம் பேர் மரணம் அடைகின்றனர். அதைப் போல் மூன்று மடங்கு பேர், கால் கை யிழந்து முடமாகின்றனர்."

"இந்தியாவில் எல்லாக் கிராமங்களிலும் ரேடியோக்கள் இருக்கும் தினத்தை நான் கண்ணால் காணப் போவதில்லை."

"எல்லோருக்கும் செழிப்பு ஏற்பட்டுப் பொருளாதாரம் உயரவேண்டும் என்ற தத்துவத்தில் பண்டித நேருவுக்கு நம் பிக்கை இருப்பது போல் தோன்றுகிறதே?"

"இருக்கலாம். செழிப்பு என்பது என்ன? அமெரிக்காவில் செய்வது போல், லட்சக் கணக்கான டன் கோதுமையை அழிக் கும் நிலைதான் செழிப்பான நிலையா?"

"அது முதலாளித்துவத்தின் அழிவு காலத்தைக் குறிக்கிறது. இப்பொழுது அவர்கள் கோதுமையை அழிப்பதில்லை. ஆனால், அதை உற்பத்தி செய்யாமலிருப்பதற்குத் தொழிலாளருக்குச் சம்பளம் தரப்படுகிறது. முட்டைகளின் விலை குறைந்திருந்த தால், ஒருவர் மீது ஒருவர் முட்டைகளை வீசி, விளையாடத் தொடங்கினர்."

"அந்த நிலைதான் ஏற்படவேண்டாமென்று நான் கூறு கிறேன். செழிப்பு என்றால், எல்லோருக்கும் உணவும் உடையும் போதிய அளவில் கிடைத்துக் கல்வி பயின்று மனத்தைப் பண் படுத்திக்கொள்ள வசதியும் கிடைக்கும் நிலை என்றால், அது எனக் குத் திருப்தி தரும். ஆனால் என்னால் ஜீரணிக்கமுடிவதற்கு மேல், அதிகமாக உணவை வயிற்றில் திணிப்பதை நான் விரும்பமாட் டேன். எனக்கு உபயோகமாயுள்ள பொருட்களைக் காட்டிலும் அதிகம் வைத்துக்கொள்ள நான் விரும்பமாட்டேன். அதே சமயத்தில் இந்தியாவில் வறுமையும், பிணியும், அழுக்கும், அல்லலும் நிறைந்திருக்க வேண்டுமென்றும் நான் விரும்பவில்லை."

"ஆனால், நீங்கள் வறுமையை விரும்பி ஏற்கிறீர்களென்றும், தரித்திர நாராயணனையே தெய்வமாகப் போற்றுகிறீர்களென் றும் பண்டித நேரு தம் சுய சரிதத்தில் கூறுகிறாரே" என்று நண்பர் கேட்டார்.

"ஆம். தெரியும்" என்று சிரித்துக்கொண்டே சொன்னார் காந்திஜி.

# 35
# சுதேசித் தொழில்கள்

பிரிட்டிஷ் சரக்குகளைப் பற்றிப் புதிய அரசியல் திட்டத்தில் உள்ள ஷரத்துக்கள் பற்றி அதிக விவாதம் எழுந்துள்ளது. அது இயல்புதான். சமஷ்டியை ஏற்றுக்கொள்ள முடியாதபடி செய்யும் புது அரசியல் திட்டத்தில் உள்ள கண்டிக்கத்தக்க அம்சங்களில் அதுவும் ஒன்று. காந்தி-இர்வின் ஒப்பந்தம் என்று இப்பொழுது பெயர் பெற்றுள்ள ஒப்பந்தத்தில், "இந்தியாவின் நலனுக்குகந்தபடி" என்ற வார்த்தைகளைச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று காந்திஜி வற்புறுத்தியதன் நியாயம் நன்கு விளங்கும். அயல் நாட்டுத் துணிக் கடைகள் முன்பு மறியல் செய்ய இந்தியருக்கு உரிமை உண்டு என்று ஒப்பந்தத்தில் தெளிவாக்கப்பட்டது, மேற்சொன்ன உரிமையை மேலும் உறுதிப் படுத்தியது. பிரிட்டிஷ் துணி உள்பட அயல் நாட்டுத் துணியை எல்லாம் பகிஷ்கரிப்பது, பிரிட்டிஷ் துணி முதலாளிகள் மீது துவேஷம் காட்டியதாக ஆகுமா? லார்டு இர்வின் அவ்வாறு நினைக்கவில்லை. துணித் தொழிலுக்குப் பொருந்திய உண்மையே, பிரிட்டிஷ் தொழில் வளர்வேண்டுமென்பதற்காகப் புறக்கணிக்கப்பட்ட, அல்லது அடியோடு அழிக்கப்பட்ட தொழில்கள் அனைத்திற்கும் பொருந்தும். அக் கொள்கையை 1931-இல் லார்டு இர்வின் ஏற்றுக்கொண்டதற்கு முன்பாகவே, 1916-இல் இந்திய அரசாங்கத்தில் வர்த்தக கைத்தொழில் இலாகா அங்கத்தினராயிருந்த ஸர் வில்லியம் கிளார்க் அந்தக் கொள்கையை ஏற்றுக்கொண்டிருந்தார் என்பதை ஒரு நண்பர் எடுத்துக்காட்டுகிறார். கைத்தொழில் கமிஷன் நியமனத்தைப் பற்றிய தீர்மானத்தை ஆதரித்துப் பேசுகையில் அவர் கூறியதாவது :

"மூலதனம், அதிகாரம், நிர்வாகம் அனைத்தும் இந்தியர் கையிலேயே இருக்கும்படியான தொழில்களை ஏற்படுத்துவதே நம் அனைவருக்கும் பொதுவான நோக்கம்." தூரத்தில் இருந்து போட்டி போடும் முதலாளி, தம்முடைய தொழிலை இந்தியாவுக்கு மாற்றி அங்கே இந்தியருடன் போட்டி போடுவதால் ஏற்படும் நிலையை அவர் கண்டித்தார்.

இப் பிரச்னையைத் தெளிவு படுத்தவும், சுதேசித்தொழில்கள் பற்றிக் காந்திஜியின் அதிகாரபூர்வமான கருத்தை அறிந்து கொள்ளவும், சிந்தியா கப்பல் கம்பெனியின் பிரதிநிதிகள் மூவர், சில தினங்களுக்கு முன்பு, அவரைச் சேகானில் சந்தித்தனர். அவர்கள் மூன்று சந்தேகங்களை முக்கியமாக எழுப்பினர் :

ஒன்று : "மலையும் மடுவும்" என்ற தலைப்பில் "எங் இந்தியா"வில் காந்திஜி எழுதியுள்ள கட்டுரையில் பின்வரும் பகுதி காணப்படுகிறது :

"இந்தியத் தொழிலையும் ஆங்கிலேய அல்லது ஐரோப்பியத் தொழிலையும் சமமாகப் பாவிக்க வேண்டுமென்று கூறுவது இந்தியாவின் அடிமை நிலையை நீடித்து உறுதிப் படுத்துவதாகும். இரண்டையும் சமமாகப் பாவிக்கவேண்டும் என்று கூறுவதற்கு முன்பு, இரண்டும் சம நிலையை அடையவேண்டும். மலையையும் மடுவையும் எப்படிச் சமமாகப் பாவிக்க முடியும்? மலை அளவுக்கு மடு உயர்ந்த பின்தான், சமத்துவம் பற்றிப் பேசலாம்... இந்தியத் தொழிலுக்கு விசேஷ ஆதரவு தருவதை, இனத் துவேஷம் என்று சொல்லுவது தவறு. துவேஷத்துக்கு இங்கே இடமே இல்லை. தங்கள் ஆதிக்கத்தை அகற்றிவிட்டு, நம்முடன் சமமாக ஆங்கிலேயர் வாழ முன் வந்தால், எல்லா ஆங்கிலேயர்களுக்கும் நம் நாட்டில் இடம் உண்டு...வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும், ஆளும் வர்க்கத்தைச் சேர்ந்தவர் என்ற காரணத்தால் ஆங்கிலேயர் ஆதிக்கம் செலுத்துகின்றனர். இந்தியாவின் வர்த்தகத்தையும் கைத்தொழிலையும் அழித்து, அதன் மேல் ஆங்கிலேயர் தம் ஆதிக்கத்தை நிலை நாட்டியுள்ளனர் என்று கூறுவது மிகையாகாது. அந்த உண்மையை அனைவரும் ஏற்றுக் கொள்ளுவார்கள். லங்காஷயர் லாபமடைவதற்காக, இந்தியக் கைத்தொழில் அழிய வேண்டியதாயிற்று. பிரிட்டிஷ் கப்பல் தொழில் பெருக வேண்டுமென்பதற்காக, இந்தியக் கப்பல் தொழில் அழிய வேண்டியதாயிற்று.

சுதந்திர இந்தியாவில், இந்தியக் கப்பல் தொழில் புத்துயிர் பெற்று வளருமல்லவா?

இரண்டு: சுதேசி, அல்லது இந்தியக் கம்பெனிகள் என்றால் எவை? அசல் பிரிட்டிஷ் கம்பெனிகளும், தங்கள் பெயருக்குப் பின்னால் இந்தியா லிமிடெட் என்று சேர்த்துக்கொண்டு, பொது மக்கள் கண்ணில் மண்ணைத் தூவுவது ஒரு வழக்கமாகி விட்டது. லீவர் பிரதர்ஸ் (இந்தியா லிமிடெட்) இங்கு தங்கள் தொழிற்சாலைகளை ஏற்படுத்தியுள்ளனர். சுதேசி சோப் உற்பத்தி செய்வதாகச் சொல்லிக்கொண்டு, வங்காளத்தில் பல பெரிய சோப் தொழிற்சாலைகளுக்கும் சிறு தொழிற்சாலைகளுக்கும் பெரும் நஷ்டம் தேடி வைத்துள்ளனர். இம்பீரியல் கெமிக்கல்ஸ் இந்தியா லிமிடெட் என்ற கம்பெனி, பல விசேஷச் சலுகைகள் பெற்றுள்ளது. அயல்நாட்டுச் சரக்குகளை நம்மீது சுமத்துவதற்குப் பதிலாக, அயல்நாட்டுத் தொழிற்சாலைகளையே நம்மீது சுமத்தப் பார்க்கின்றனர்.

மூன்று: சில கம்பெனிகளில் டைரக்டர்கள் இந்தியர்கள். ஆனால், அவர்களுக்குமேல் உள்ள நிர்வாக அதிகாரிகள், அல்லது "மானேஜிங் ஏஜெண்டுகள்" ஆங்கிலேயர்கள். மூலதனத்தில் பெரும் பகுதி இந்தியருடையதாகவும், டைரக்டர்களில் பெரும் பாலோர் இந்தியர்களகவும். இருந்த போதிலும், நிர்வாக அதிகாரி ஐரோப்பியராகவோ, நிர்வாக ஏஜெண்டு ஐரோப்பியக்

கம்பெனிகளாகவோ இருந்தால், அக் கம்பெனியை இந்தியக் கம்பெனி என்று அழைப்பீர்களா?

இம்மூன்று சந்தேகங்களுக்கும் காந்திஜி தெளிவான பதில் கூறினர். அதன் சுருக்கம் பின்வருமாறு :

"ஒன்று : 1931-இல் நான் எழுதிய கட்டுரை பற்றி நீங்கள் நினைப்பூட்டியது குறித்து மகிழ்ச்சி. அதே கருத்துத்தான் இன்றும் எனக்குள்ளது. இந்திய நலனைக் காக்க அவசியமானல், அயல்நாட்டுத் தொழில்கள் மீது சில தடைகள் விதிக்க, சுதந்திர இந்தியாவுக்கு உரிமை இருக்கும்.

"இரண்டு : நிர்வாக அதிகாரம் முழுவதும், இந்தியர் கையில் உள்ள கம்பெனிகள்தான் சுதேசிக் கம்பெனிகள் ஆகும். போதிய மூலதனமும் தொழில் மேதையும் இந்தியாவில் இல்லாது போனல், அந்நியர் மூலதனத்தையும் நிபுணத்துவத்தையும் பயன்படுத்திக்கொள்ளுவதில் தவறில்லை. ஆனல் அவை, இந்தியரின் நிர்வாக அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டிருக்க வேண்டும். இந்தியாவின் நலனுக்குகந்த முறையில் பயன்படுத்தப்பட வேண்டும். ஆனல், அந்நியர் மூலதனத்தையோ, நிபுணத்துவத்தையோ உபயோகிப்பது ஒரு விஷயம்; அந்நியத் தொழில்களையே இங்கு தொடங்கி இந்தியர்கள் மீது சுமத்துவது வேறு விஷயம். நீங்கள் குறிப்பிட்டுள்ள கம்பெனிகளை, எந்த வகையிலும் சுதேசிக் கம்பெனிகள் என்று அழைக்க முடியாது. அத்தகைய தொழில்களை ஆதரிப்பதை விட, இன்னும் சில ஆண்டுகள் தாமதித்தாவது இந்தியருக்குச் சொந்தமாயும் அவர்கள் நிர்வாக அதிகாரத்திற்குட்பட்டதாயும் உள்ள தொழில்களை ஆரம்பிப்பது சிறந்ததே.

"மூன்று: நான் மேலே சொன்னதில், இதற்கும் பதில் அடங்கியுள்ளது."

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது]

—'ஹரிஜன்' – 26—8—1938

# 36

# பெருவாரியான உற்பத்தி

எதிராளியின் கருத்து சரியானது என்று ஒத்துக்கொள்ளாதபோதிலும், அவர் அதில் உண்மையான நம்பிக்கை கொண்டிருப்பதைக் கருதி, ஏதோ விட்டுக்கொடுப்பது போல், ஓர் இளைஞர் கூறினர்: "கிராமக் கைத்தொழில்களுக்குப் புத்துயிர் கொடுப்பது சரிதான். நம் கிராமங்களுக்கு மிகவும் தேவையான புது வாழ்வை அவை அளிக்கும். ஆனல், விஞ்ஞான அறிஞர்

ஜீன்ஸ் கூறியது போல், நம் உலகம் விரிந்துகொண்டே வருகிறது. அத்தகைய நிலையில் பெருவாரியான பொருள் உற்பத்தி இன்றியமையாதது. மக்கள் அனைவரும், பெருவாரியான பொருள் உற்பத்தியில் ஈடுபட வேண்டும். அதிகாரம் அனைத்தும் மக்கள் கையில் இருக்கவேண்டும். அதுதான் ஏழை உழைப்பாளிகளின் விமோசனத்துக்கு வழி. இதற்கு எதிராகக் காந்திஜி காட்டும் வழி என்ன?"

நண்பர் கேட்ட இக்கேள்வி, இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டின் போது, யந்திரத்தின் உபயோகம் பற்றி ஒரு அமெரிக்கப் பத்திரிகை நிருபருக்கும் காந்திஜிக்கு மிடையே நடந்த விவாதத்தை எனக்கு நினைப்பூட்டியது. பெருவாரியான பொருட்களை ஒரு சிலர் உற்பத்தி செய்வது ஒன்று; பெருவாரியான மக்கள், பொருட்களை உற்பத்தி செய்வது வேறு. பிந்தியதைத்தான் தாம் ஆதரிப்பதாகப் பொருள்படும்படி காந்திஜி பதில் கூறினர். அதையேதான் நானும் நண்பருக்குக் கூறினேன்.

காந்திஜியுடன் பேசியதற்கு ஒரு வருடத்துக்கு முன்புதான், அந்த நிருபர், அமெரிக்கத் தொழில் பிரமுகர் போர்டு என்பவரைச் சந்தித்துப் பேசியிருந்தார். அப்போது, பெருவாரியான பொருட்கள் உற்பத்தியைத் தொடர்ந்து நடத்த ஐரோப்பிய நாடுகளின் அப்போதைய நிலைமை சாதகமாயில்லை என்று நிருபர் கூறினர். அந் நிலைமை வெகு விரைவில் மாறி விடுமென்றும், நயமான பொருட்களுக்கு மீண்டும் அமோக கிரக்கி ஏற்படுமென்றும் தாம் நம்புவதாக போர்டு கூறினர். மக்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதுதான் பிரச்னை என்று போர்டு கூறினர்.

அதைச் சொல்லிவிட்டு, "பெருவாரியான பொருட்களை உற்பத்தி செய்வது, மக்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் என்று நீங்கள் கருதுகிறீர்களா?" என்று அந்த நண்பர் காந்திஜியைக் கேட்டார்.

காந்திஜி கூறினர்: "நான் அதை நம்பவில்லை. போர்டு கூறும் வாதத்தில், பெருந்தவறு இருக்கிறது. பொதுமக்கள் அனைவரிடையேயும் பொருள்கள் சமமாக விநியோகமானல் ஒழிய, பெருவாரியான உற்பத்தியால் உலகுக்கு அபாயம்தான் ஏற்படும். போர்டு உற்பத்தி செய்யும் கார்களைத்தான் எடுத்துக்கொள்ளுங்கள். இன்னும் அதிகமாகக் கார்கள் உற்பத்தி செய்யப்பட்டால், அவற்றை வாங்குவதற்கு ஆள் இருக்காது என்ற நிலை என்ருவது ஏற்பட்டே தீரும். அந்நிலை ஏற்பட்டபின், கார்கள் உற்பத்தியை மேலும் தொடர்ந்து நடத்தமுடியாது. அப்பொழுது என்ன நடக்கும்? பெருவாரியான பொருட்களை உற்பத்தி செய்து குவிப்பதில் மக்களின் உண்மையான தேவைகளை மறந்துவிடுகின்றனர். பெருவாரியான பொருட்களை உற்பத்தி செய்வது சிறந்ததாயிருந்தால், அதையே எப்பொழுதும் நீடித்து நடத்துவது சாத்தியமாக இருந்திருக்கும். ஆனல், அது சாத்தியமில்லை

என்பதைத் தெளிவாக நிரூபிக்க முடியும். எல்லா நாடுகளும் பெருவாரியாகப் பொருட்களை உற்பத்தி செய்து குவிப்பதில் முனைந்தால், அவற்றை வாங்குவதற்கு ஆள் இருக்காது. அதன் பின்பு, பெருவாரியான உற்பத்தியை நிறுத்த வேண்டியதுதான்.''

நிருபர் கேட்டார்: ''அத்தகைய நிலை மேனாடுகளில் ஏற்பட்டு விட்டது என்று நீங்கள் கருதுகிறீர்களா? சிறந்த பொருட்களுக்கு எப்பொழுதும் தேவையும் கிராக்கியும் இருக்குமென்றும், உலகின் தேவைகள் பெருகிக்கொண்டே போகின்றன என்றும், ஏதாவது ஒரு பொருளுக்குத் தேவையில்லாமல் போனாலும் பொதுவாக அந்நிலை ஏற்படாது என்றும் போர்டு கருதுகிறார்.''

காந்திஜி கூறினார்: ''பெருவாரியாக உற்பத்தி செய்து குவிப்பதால்தான் உலக நெருக்கடி ஏற்படுகிறது என்பது என் உறுதியான நம்பிக்கை. யந்திரம் மக்களின் தேவைகளையெல்லாம் பூர்த்தி செய்துவிடும் என்பதை வாதத்திற்காக ஒத்துக் கொண்டாலும், உற்பத்தி குறிப்பிட்ட ஒரு சில இடங்களில் நடக்கும். அப்பொருட்களை ஒழுங்காக விநியோகம் செய்வதற்கு அவற்றை மற்ற இடங்களுக்கு அனுப்பவேண்டும். ஆனால், தேவைக்கேற்றபடி அந்தந்த ஊரிலேயே உற்பத்தியும் வினியோகமும் நடந்தால் அங்கு உற்பத்தியாகும் பொருட்கள் அங்கேயே உபயோகிக்கப்படும். சிக்கலின்றி பொருளாதார வாழ்வு நடக்கும். மோசடி, கொள்ளை முதலியவற்றிற்கும் இடம் இருக்காது.''

நிருபர் கூறினார்: ''மின்சார சக்தியை உலகின் ஒவ்வொரு மூலைக்கும் பரப்புவதன் மூலம், அங்கங்கேயே தொழில்கள் நடக்கலாம் என்று போர்டு கூறுகிறார். லட்சக்கணக்கான சிறு, சுத்தமான கிராமங்கள், தொழில்களை நல்ல முறையில் நடத்திவரலாம் என்கிறார். அத்தகைய நிலை ஏற்பட முடியுமானால், உங்களுக்கு ஆட்சேபம் இருக்க முடியாதல்லவா?''

“என் ஆட்சேபம் அதனால் தீர்ந்துவிடாது. பல்வேறு இடங்களில் பொருள் உற்பத்தி நடப்பது உண்மை என்றபோதிலும், மின்சார சக்தி ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்துதான் வரும். அதனால், அந்த இடத்தில் உள்ளவர்களிடம் அளவற்ற அதிகாரம் சிக்கிவிடும். முடிவில் அதனால் கெடுதல்தான் ஏற்படும். வெளிச்சம், தண்ணீர், ஏன் காற்றுக்குக்கூட, அந்த மின்சார சக்தியை நம்பி நிற்கும் நிலையை நாம் அடையக்கூடும். அதை நினைத்தாலே, பயங்கரமாக இருக்கிறது.''

அது நியாயம்தான் என்று நிருபருக்குத் தோன்றியது. அவர் கூறினார்: ''நீங்கள் லண்டனுக்கு இப்பொழுது விஜயம் செய்வது, மிகவும் நல்லது என்று எனக்குப் படுகிறது. அரசியல் பிரச்னைகள் ஒருபுறம் இருக்கட்டும். பொதுவாக யந்திரத்தின் உபயோகத்திலும், அமெரிக்காவிலும் ஜெர்மனியிலும் செய்வது போல் பொருட்களைப் பெருவாரியாக உற்பத்தி செய்து குவிப்பதிலும், மேனாட்டு மக்கள் நம்பிக்கை இழந்துவரும் நிலை ஏற்

பட்டுள்ளது. அளவுக்கு மீறி அதை உபயோகித்துவிட்டோமோ என்ற சந்தேகம் அவர்கள் மனத்தில் எழுந்துள்ளது. மிதமிஞ்சிய யந்திர உபயோகத்திஞல் ஏற்பட்டுள்ள பிரச்னையைத் தீர்க்க ஐரோப்பாவும் அமெரிக்காவும் என்ன செய்ய வேண்டும் என்பதைப்பற்றி உங்களிடம் ஏதாவது யோசனை உண்டா?"

''பிற்போக்கான, அல்லது கட்டுப்பாடான பலமில்லாத மற்ற நாடுகளை இந்த நாடுகள் சுரண்டுகின்றன. பிற்போக்கான மக்கள் இதை உணர்ந்து, சுரண்டலை இனி அனுமதிக்கக் கூடாது என்று முடிவு செய்துவிட்டால், தாங்கள் உற்பத்தி செய்து கொள்ளும் பொருட்களைக்கொண்டே அவர்கள் திருப்தி அடைவார்கள். வாழ்க்கைக்கு அத்தியாவசியமான பொருட்களைப் பொறுத்தவரையிலாவது, பெருவாரியாக உற்பத்தி செய்து குவிக்கும் முறை ஒழியும்.''

''உலகம் முழுவதும் அந்த முறை ஒழியுமா?"

''ஆம்.''

''ஆனால், முன்னேற்றமில்லாத மக்களின் தேவைகள் பெருக, அவர்களுக்கு அதிகப் பொருட்கள் வேண்டியிருக்குமல்லவா?''

''தங்களுக்கு வேண்டிய பொருட்களை அவர்களே உற்பத்தி செய்வார்கள்; அவ்வாறு அவரவர்கள், தங்களுக்கு வேண்டிய பொருட்களை உற்பத்தி செய்துகொண்டால் மேனாடுகளில் இப்பொழுது நடப்பதுபோல், பொருட்களைப் பெருவாரியாக உற்பத்தி செய்து குவிக்கும் முறை, தானாக ஒழியும்."

''உள்ளூரிலேயே, அந்த ஊருக்கு வேண்டிய பொருள்கள் உற்பத்தியாகும் என்று கூறுகிறீர்களா?''

''உற்பத்தியாகும் பொருட்கள் அந்த இடத்திலேயே உபயோகமாகும் முறை வழக்கில் வந்துவிட்டால், எந்த விலைக்காவது பொருட்களை உற்பத்தி செய்து குவிப்பதில் உள்ள மோகம் குறையும். தற்போதைய பொருளாதார முறையினால் ஏற்பட்டுள்ள கணக்கற்ற சிக்கல்களும், பிரச்னைகளும் தாமாகத் தீர்ந்துவிடும். ஓர் உதாரணத்தைப் பார்ப்போம்: உலகத்துக்கு வேண்டிய துணியெல்லாம் இங்கிலாந்திலிருந்துதான் இன்று முக்கியமாகக் கிடைக்கிறது. மற்ற நாடுகள் தன்னிடமிருந்தே துணியை வாங்கும் நிலையை எப்பொழுதும் காத்து வர வேண்டுமானால், இங்கிலாந்து மற்ற நாடுகளை அடிமைப்படுத்த வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. ஆனால், நான் கூறும் முறைப்படி, இங்கிலாந்து தனது நாலரைக்கோடி மக்களுக்கு வேண்டிய அளவுமட்டுமே துணியை உற்பத்தி செய்யும். அந்த அளவை அடைந்த பின், உற்பத்தி நின்றுவிடும். வேறொரு நாட்டு மக்களின் தேவைகளையும் பொருட்படுத்தாமல், அவர்கள் மேல் துணியைச் சுமத்தி, அவர்களிடமிருந்து பணம் பறிப்பதற்காக இங்கிலாந்து உற்பத்தியை மேலும் தொடராது. அமெரிக்

காவில் இன்றுள்ளதுபோல், ஒரு பக்கத்தில் செழிப்பும், மற்ெருரு பக்கத்தில் வறுமையும் இருக்காது. நீதிக்கும், இயற்கை நியதிக்கும் மாருகச் செல்வம் ஒரு சிலரிடம் சிக்காது. தான் உற்பத்தி செய்யும் அலங்காரச் சாமான்களை விற்றும், தன்னிடமுள்ள இணையற்ற தொழில் மேதையை விற்றும் அமெரிக்கா மற்ற நாடுகளைக் கட்டுப்படுத்தி வைத்துள்ளது. பொருட்களை உற்பத்தி செய்து குவிப்பதில், உச்ச நிலையை அடைந்துவிட்டது. ஆயினும், வேலையில்லாத் திண்டாட்டத்தையோ, மக்களுக்கு வேண்டிய பொருட்கள் கிடைக்காத குறையையோ ஒழிக்க, அமெரிக்காவால் இயலவில்லை. ஒரு சிலரிடத்தே பணம் குவிந்துள்ளபோதும், ஏழ்மை பிடுங்கித் தின்ன உழன்று வரும் மக்கள் ஆயிரக் கணக்கில்—ஏன், கோடிக் கணக்கில் என்றுகூடச் சொல்லலாம்— இருக்கின்றனர். பொருட்களை உற்பத்தி செய்வதன் நன்மை அமெரிக்க மக்கள் அனைவருக்கும் கிடைக்கவில்லை.''

''அது வினியோகத்தில் உள்ள குறை. நம் உற்பத்தி முறை உச்ச நிலையை அடைந்து, சிறந்து விளங்கியபோதும், நம் வினியோக முறை இன்னும் ஒழுங்காக அமையவில்லை. சம வினியோக நிலையை ஏற்படுத்திவிட்டால், பெருவாரியாக உற்பத்தி செய்து குவிக்கும் யந்திர முறையின் கெடுதல்களை அகற்றிவிட முடியுமல்லவா?'' என்று நிருபர் கேட்டார்.

''முடியாது. கெடுதல், அம்முறைக்கு அடிப்படையாகவே உள்ளது. தேவைக்கு வேண்டிய பொருட்களை உற்பத்தி செய்து உற்பத்தியாகும் பொருட்களை அங்கேயே உபயோகிக்கும் முறையைக் கையாண்டால், அதாவது உற்பத்தியும் வினியோகமும் ஒருமுகப்பட்டால், சம வினியோக நிலை ஏற்படும். நாம் உற்பத்தி செய்யும் பொருட்களை, மற்ெருரு நாட்டின் மீது சுமத்த முயற்சிக்கும் வரை, சம வினியோக நிலை ஏற்பட முடியாது. விஞ்ஞான முன்னேற்றத்தையும், தொழில் முறையில் மேனுடுகள் அடைந்துள்ள உயர்வையும், நாம் பயன்படுத்திக் கொள்ள முடியாது என்று அர்த்தமில்லை. மேனுடுகள் தங்கள் திறமையைத் தாங்களே பயன்படுத்திக்கொள்ள வேண்டும். தரும சிந்தனையால் தூண்டப்பட்டு, அவர்கள் பிற நாடுகளிலும் அதைப் பயன்படுத்த விரும்பினுல், அவர்கள் மற்ற நாடுகளுக்குக் கூறவேண்டும்: 'எங்களுக்குப் பாலம் கட்டத் தெரியும். அதை நாங்கள் ரகசியமாய் வைத்துக்கொள்ள விரும்பவில்லை. பாலம் கட்ட உங்களுக்கு நாங்கள் சொல்லித்தருகிறோம். அதற்கு நீங்கள் கூலியொன்றும் எங்களுக்குத் தரவேண்டியதில்லை.' கோதுமை ஒரு கதிர் விளையுமிடத்தில், இரண்டாயிரம் கதிர்களை உற்பத்தி செய்யும் முறை அமெரிக்காவுக்குத் தெரிந்திருந்தால், அந்த முறையை மற்றவர்களுக்கும் சொல்லிக் கொடுக்க வேண்டுமேயொழிய, உலகுக்கு வேண்டிய கோதுமை எல்லாவற்றையும் தானே உற்பத்தி செய்து குவிக்க முன்வரக்கூடாது.''

"உங்கள் கருத்துப்படியே மற்ற நாடுகளைச் சுரண்டாமலும், வினியோகத்தில் ஏற்றத்தாழ்வு ஏற்படுத்தாமலும், யந்திர உற்பத்தி முறை ரஷ்யாவில் நடக்கவில்லையா?'' என்று நிருபர் கேட்டார்.

"அரசாங்கமே எடுத்து நடத்தும் தொழில்கள் பற்றி—அதாவது, சோவியத் ரஷ்யாவில் இன்றுள்ளது போல் உற்பத்தி, வினியோகம் இரண்டையும் அரசாங்கம் கண்காணித்துக் கட்டுப்படுத்திவரும் நிலைபற்றி—என் கருத்து என்ன என்று நீங்கள் கேட்கிறீர்கள். அது ஒரு புதிய முயற்சி. எவ்வளவு தூரம் அது வெற்றி பெறும் என்பது எனக்குத் தெரியாது. அது பலாத்காரத்தை அடிப்படையாகக் கொள்ளாமல் இருந்தால், அதை நான் பெரிதும் போற்றுவேன். ஆனால், இன்று அது பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பதால், அது நம்மை எங்கு, எவ்வளவு தூரம் அழைத்துச் செல்லும் என்று எனக்குத் தெரியவில்லை.''

"எதிர்கால இந்தியாவில் பொருட்களைப் பெருவாரியாக உற்பத்தி செய்து குவிக்கும் முறை ஏற்படவேண்டுமென்று நீங்கள் விரும்பவில்லையா?''

"அனைவரும் பொருட்களைப் பெருவாரியாக உற்பத்தி செய்ய வேண்டுமென்றுதான் நான் விரும்புகிறேன். ஆனால், அது பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்டதாய் இருக்கக்கூடாது. ராட்டையின் தத்துவமே அது தானே? பெருவாரியாகப் பொருட்களை உற்பத்தி செய்யவேண்டும். ஆனால், மக்கள் அவற்றைத் தங்கள் வீடுகளிலேயே உற்பத்தி செய்து கொள்ள வேண்டும். கோடிக்கணக்கான மக்களில் ஒவ்வொருவரும் பொருட்களை உற்பத்தி செய்தால், பொருட்கள் பெருவாரியாகத் தானே உற்பத்தியாகும்? ஆனால், நீங்கள் பெருவாரியான உற்பத்தி என்பது, யந்திர முறையில் ஒரு சிலர் எல்லாப் பொருட்களையும் உற்பத்தி செய்வதைக் குறிக்கும் என்பதை நான் அறிவேன். அம்முறை தவறு என்பதை நான் உணர்ந்துள்ளேன். நான் விரும்பும் யந்திரங்கள், மிக எளிய, சுலபமான யந்திரங்களே. ஒவ்வொருவர் வீட்டிலும், அவற்றை உபயோகிக்கும்படியாய் இருக்கவேண்டும். மேலும், என் முறைப்படி, நாணயம், காசு பணம் அல்ல; உழைப்பு தான் நாணயம். உழைக்கச் சக்தியுடையவன், உண்மையில் செல்வமுடையவனே. தன் உழைப்பினால் அவன் துணியையும் உணவு தானியங்களையும் உற்பத்தி செய்ய முடியும். தானே உற்பத்தி செய்ய முடியாத பொருள் வேண்டியிருந்தால், தன்னிடம் மிஞ்சியுள்ள உணவு தான்யத்தைக் கொடுத்து வாங்கிக்கொள்ளலாம். சமமான, நியாயமான, சுதந்திரமான முறையில், உழைப்புக்குப் பதிலாகப் பொருள்கள் பெறும் முறை இது. இதில் கொள்ளைக்கு இடமில்லை. கர்நாடகப் பண்டமாற்று முறையல்லவா இது என்று நீங்கள் ஆட்சேபிக்கலாம். உண்மையில் சர்வதேச வர்த்தகம்

முழுவதுமே இப் பண்டமாற்று முறையை அடிப்படையாகக் கொண்டதுதானே? மேலும் இம் முறையினால் ஏற்படும் இன்னொரு நன்மையையும் பாருங்கள். இம் முறையைப் பெருக்கி, விரித்துக்கொண்டே போகலாம் ஆனால், யந்திர உற்பத்தி முறையை, அளவுக்கு மீறிப் பெருக்கிக் கொண்டால், வேலையில்லாத் திண்டாட்டம்தான் ஏற்படும். நுட்பமான யந்திரம் உபயோகிக்கப்படுவதால் வேலை இழக்கும் தொழிலாளருக்கு வேறு வேலை கிடைக்கும் என்று நீங்கள் சொல்லலாம். தொழில் முறை மிகவும் கட்டுப்பாடாக உள்ள நாட்டில், ஒரு தொழிலில் ஒரு யந்திரத்தை வேலை செய்து தேர்ச்சி பெற்றவர்கள், மற்றொரு தொழிலிலோ துறையிலோ வேலை பெறுவது சாத்தியமில்லை என்பதை நீங்கள் அனுபவத்தில் கண்டிருக்கலாம். இன்று இங்கிலாந்தில் 30 லட்சத்துக்கு மேற்பட்டவர் வேலையில்லாமல் திண்டாடவில்லையா? இந்த முப்பது லட்ச மக்களும் நேற்று வரை தொழிற்சாலையில் வேலை செய்து விட்டுத் திடீரென வயலில் வேலை செய்ய முடியாது.''

வயல் வேலை என்பதைத் தொடர்ந்து, விவசாயத்தில் யந்திரங்களை உபயோகிப்பது பற்றிய பேச்சு எழுந்தது.

''அமெரிக்காவிலும், கானடாவிலும், விவசாயத்தை யந்திர மயமாக்கியுள்ளதால் ஏற்பட்டுள்ள மகத்தான முன்னேற்றம் இந்தியாவிலும் ஏற்பட முடியாதா?" என்று நிருபர் கேட்டார்.

''ஏற்படலாம். இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல எனக்குத் தகுதியில்லை என்று நான் கருதுகிறேன். இதுவரை, இந்தியாவில் மிக நுட்பமான யந்திரங்களை விவசாயத்திற்காக உபயோகித்துப் பலன் அடைந்ததில்லை. யந்திரங்களை அடியோடு விலக்கவேண்டுமென்ற எண்ணம் எங்களுக்கில்லை. ஜாக்கிரதையாகப் புது முயற்சிகளும் சோதனைகளும் நடத்தி வருகிறோம். ஆனால், மின்சார யந்திரங்களை விவசாயத்தில் உபயோகிக்கவேண்டிய அவசியம் இதுவரை ஏற்படவில்லை.''

எல்லா யந்திரங்களையும் காந்திஜி வெறுக்கிறார் என்ற தவறான எண்ணம் பலருக்கு இருப்பது போல், இந்த நிருபருக்கும் ஏற்பட்டிருந்தது.

''எல்லா யந்திரங்களையும் நீங்கள் வெறுக்கிறீர்கள் என்று சிலர் நினைக்கிறார்கள். அவ்வாறு அவர்கள் நினைப்பது தவறு என்றுதான் நான் இப்பொழுது உணர்கிறேன்'' என்றார் நிருபர்.

''அது முற்றிலும் தவறு. ராட்டையும்கூட ஒரு யந்திரம் தான்; அதிலும், மிக அழகானதோர் யந்திரம். எல்லோரும் உபயோகிக்கக்கூடிய யந்திரத்துக்கு அது சிறந்த உதாரணம். பாமர மக்களின் யந்திரம் அது.''

"ஆகவே, உற்பத்தியையும் வினியோகத்தையும் ஒரு சிலர் கையில் சிக்க வைப்பதால்தான், நீங்கள் யந்திரங்களை வெறுக்கிறீர்கள் அல்லவா?"

"ஆம்; அதுதான் சரியான காரணம். ஏகபோக உரிமையையும் ஆதிக்கத்தையும் நான் வெறுக்கிறேன். பாமர மக்களுடன் எதைப் பகிர்ந்துகொள்ள முடியாதோ, அது எனக்கு வேண்டியதேயில்லை. அவ்வளவு தான்" என்றார் காந்திஜி.

[ஸ்ரீ பியாரிலால் எழுதியது]

—'ஹரிஜன்'– 2—11—1934

# 37

# சமக்ர கிராம சேவை

1946-ஆம் ஆண்டு ஜனவரி 29-ஆம் தேதி சென்னையில் நடந்த நிர்மாண ஊழியர் மகாநாட்டிலும் காந்திஜியிடம் ஊழியர்கள் இரு கேள்விகள் கேட்டனர். அக்கேள்விகளும், அவற்றிற்குக் காந்திஜியின் பதிலும் கீழே தரப்பட்டுள்ளன:

கே: நிர்மாணத் திட்டத்தின் ஓர் அம்சத்தை எடுத்து வேலை செய்துவரும் ஊழியர், மற்ற அம்சங்களின் வேலைகளிலும் இறங்கலாமா? அது சரியா? சரி என்றால் எப்படி சரியாகும்?

ப: நிர்மாணத் திட்டத்தில் தற்போது 18 அம்சங்கள் உள்ளன. அகிம்சையின் சின்னமான ராட்டை நடுநாயகமாக விளங்குகிறது. ஆகவே, ஒவ்வொரு ஊழியருக்கும் நூற்கத் தெரிய வேண்டும்; ராட்டையைப்பற்றிய எல்லாம் தெரியவேண்டும். ஓர் ஊழியர், காகிதம் செய்வதையே தமது முக்கியமான வேலையாகவும் ஜீவனோபாயமாகவும் கொண்டிருந்தால், மற்ற வேலைகளில் ஈடுபட அவருக்கு அவகாசம் இருக்காது. ஆனால், ராட்டை வேலை கையால் காகிதம் செய்யும் வேலை இரண்டையும் தவிர வேறு வழிகளில் கிராமங்களுக்குச் சேவை செய்ய அவரால் முடியும். உதாரணமாக, சுற்றுப்புறச் சுகாதாரத்தையும் அவர் கவனிக்கலாம். நோயாளிகளுக்குச் சிகிச்சை செய்யும் முழுப் பொறுப்பையும் ஏற்றுக்கொள்ள முடியாத நிலையில் இருந்தாலும், சிகிச்சை செய்வதுபற்றி யோசனை கூறலாம்.

இன்னொரு ஊழியர், ராட்டை வேலையிலேயே ஈடுபட்டு, நூற்பதையே ஜீவனோபாயமாகக் கொண்டிருப்பதாகக் கொள்ளுவோம். ராட்டை மூலம் ஊழியருக்கு, வாழ்க்கைக்குத் தேவையான ஊதியம் கிடைப்பதோடல்லாமல், சமூகத்துக்

கும் உபயோகமான சேவை செய்ய முடியும். ராட்டையைத் தவிர, வேறெந்த வேலையை முக்கியமாக எடுத்துக்கொள்ளுவது, எதைத் துணை வேலையாகக் கொள்ளுவது என்று ஒவ்வொரு ஊழியரும் முடிவு செய்யவேண்டும். இவற்றைத் தேர்ந்தெடுப்பதில் அறிவும் விவேகமும் வேண்டும். ஒருவர் விவேகத்துடன் நூல் நூற்கவேண்டுமானால், நூல் நூற்பது மட்டுமல்ல, நூற்பதற்கு முன் பஞ்சடிப்பது, அரைப்பது போன்ற வேலைகளும், நூற்ற பின், நெசவு முதலிய வேலைகளும் அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும். எந்த வேலையை முக்கியமாக எடுத்துக் கொள்ளுகிறாரோ, அத்துடன் சம்பந்தப்பட்ட எல்லாவற்றையும் பற்றித் தெளிவாக அறிந்திருக்கவேண்டும். நிர்மாணத் திட்டத்தின் மற்ற அம்சங்கள் குறித்தும் பொது அறிவு வேண்டும். வானியல் சாஸ்திர ஆராய்ச்சியாளருக்கு விஞ்ஞானப் பொது அறிவும் இருக்கவேண்டியது அவசியம் என்பது போலவே நிர்மாண ஊழியருக்கு அத்திட்டத்தின் மற்ற அம்சங்களிலும் பயிற்சி இருக்க வேண்டும்.

கே : உங்கள் கொள்கைப்படி, சமக்ர கிராம சேவை என்பது என்ன? அச் சேவை செய்ய, நாங்கள் எப்படி எங்களை ஆயத்தம் செய்து கொள்ள முடியும்?

ப : பதினெட்டு அம்சங்கள் கொண்ட நிர்மாணத் திட்டத்தில் சமக்ர கிராம சேவை அடங்கியுள்ளது. அத்தகைய சேவை செய்யும் ஊழியருக்குக் கிராமத்தில் உள்ள அனைவரும் தெரிந்திருக்க வேண்டும். அவர்களுக்குத் தம்மாலியன்ற சேவையை அவர் செய்வார். ஊழியர், தாமே தனியாக, எல்லா வேலைகளையும் செய்துவிட முடியும் என்ற அர்த்தமில்லை. கிராமவாசிகள் எம்முறையில் வேலை செய்ய வேண்டும் என்பது பற்றி யோசனை கூறி, வழிகாட்ட வேண்டும்; அவர்களுக்கு வேண்டிய உதவியும் செய்து, தேவையான பொருட்கள் கிடைக்கவும் ஏற்பாடு செய்ய வேண்டும். தம் வேலையில் உதவி செய்ய, மற்றவர்களை ஊழியரே ஆயத்தம் செய்வார். கிராம மக்களின் நம்பிக்கையையும் அபிமானத்தையும் பெற்று, எல்லா விஷயங்களிலும் அவர்கள் தம்மிடம் யோசனை கேட்டு, அதைப் பின்பற்றும்படி ஊழியர் நடந்து கொள்ளவேண்டும். நான் ஒரு கிராமத்தில் போய் எண்ணெய்ச் செக்கு ஒன்று வைக்கிறேன் என்று வைத்துக்கொள்ளுங்கள். நான் சாதாரண வாணியராக இருக்கமாட்டேன். மகாத்மா வாணியராக இருப்பேன். மகாத்மா என்னும் சொல்லை நான் கேலிக்காக உபயோகித்திருக்கிறேன். நான் சொல்வது என்னவென்றால், மற்றவர்கள் பின்பற்றக்கூடிய ஒரு லட்சிய வாணியராக நான் இருப்பேன். கீதையும் திருக்குர் ஆனும் எனக்குத் தெரிந்திருக்கும். குழந்தைகளுக்குப் படிக்கச் சொல்லிக்கொடுக்க அருகதை உள்ளவனாக இருப்பேன். ஆனால், எனக்கு அவகாசம்

இல்லாமல் போகலாம். கிராமவாசிகள் அனைவரும் என்னிடம் வந்து, குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக்கொடுக்க ஏற்பாடு செய்யும்படி கேட்பார்கள். நான் ஓர் ஆசிரியரை ஏற்பாடு செய்வதாகவும், ஆனால், ஆசிரியரின் சம்பளத்தை அவர்கள் கொடுக்கவேண்டும் என்பதாகவும் கூறுவேன். அவர்கள் தடையின்றி சம்மதிப்பார்கள். நூல் நூற்க அவர்களுக்கு நான் சொல்லித் தருவேன். நெசவுக்கு ஏற்பாடு செய்யும்படி அவர்கள் கூறும்போது, ஆசிரியரை ஏற்பாடு செய்தது போலவே அதே நிபந்தனைகளின் பேரில், நெசவு செய்பவரை ஏற்பாடு செய்வேன். தங்கள் துணியைத் தாங்களே நெய்துகொள்ள, அவர் சொல்லிக் கொடுப்பார். சுத்தம், சுகாதாரம் ஆகியவற்றின் முக்கியத்துவத்தை அவர்களுக்கு உணர்த்துவேன். தோட்டிக்கு ஏற்பாடு செய்யும்படி அவர்கள் கேட்கும்போது, "நானே உங்கள் தோட்டியாக இருப்பேன்; அந்த வேலையில் உங்கள் அனைவருக்கும் பயிற்சி தருவேன்" என்று கூறுவேன். சமக்ர கிராம சேவை என்று நான் கருதுவது இதுதான். இத்தகைய ஊழியரை இந்த யுகத்தில் கண்டுபிடிக்க முடியாது என்று நீங்கள் கூறலாம். அப்படியானால் இந்த யுகத்தில், கிராமங்கள் முன்னேற்றம் அடைய முடியாது என்று நான் கூறுவேன். ரஷ்யாவில் ஒரு வாணியர் உதாரணத்தை எடுத்துக் கொள்ளுங்கள். எண்ணெய் மில் நடத்துபவர் வாணியர் தானே? அவருக்குப் பணம் இருக்கலாம். ஆனால், அவருடைய உண்மையான பலம், பணத்தில் அல்ல. அவர் அறிவு தான் அவருடைய பலம். உண்மையான அறிவே ஆன்மிக பலத்தையும் உயர்வையும் தருகிறது. எல்லோரும், அத்தகைய மனிதரின் யோசனையைக் கேட்டுப் பின்பற்றுவார்கள். உதாரணமாக வினோபா பாவேயை எடுத்துக் கொள்ளுவோம். அவர் அத்தகைய லட்சிய ஊழியர். அவர் செய்யும் சேவையை நீங்கள் அறிவீர்கள். உங்கள் சக்திக்கியன்றவாறு, அவர் உதாரணத்தைப் பின்பற்ற முடியும் என்பதையும் நீங்கள் அறிவீர்கள்.

(சுசீலா நய்யார் எழுதியது.)

—'ஹரிஜன்'—17—3—1946

ராட்டையின் மூலம் மக்களின் பட்டினியைப் போக்க அல்லும் பகலும் பாடுபட்ட மகாத்மாவின் சமாதி முன்பு அவர் அமரத்துவம் அடைந்த நாளிலும் மற்ற முக்கியமான சமயங்களிலும் ஏராளமான மக்கள் நூற்பு யக்ஞம் நடத்தி வருவது வழக்கம். ராஷ்டிரபதி டாக்டர் ராஜேந்திர பிரஸாதும் பிரதம மந்திரி ஸ்ரீ ஜவாஹர்லால் நேருவும் நூற்பதையும், கீழே இருக்கும் படத்தில் ஏராளமான பெண்கள் நூற்பதையும் காணலாம்.



மகாத்மா கடைசி நாட்களில் நூற்று வந்த சர்க்கா.

38

# காங்கிரஸ் மந்திரி சபைகளும், கிராம முன்னேற்றமும்

காங்கிரஸ் மந்திரி சபைகள் மீண்டும் பதவி ஏற்றுள்ளது, அரசியல் விதிகளுக்குட்பட்டு நிர்வாகத்தை நடத்தி வருவதற்கு மட்டுமல்ல. காங்கிரஸ் தன் லட்சியமாகக் கொண்டுள்ளதற்கு ஏற்பப் பாமர மக்களுக்கும் உண்மைச் சுதந்திரம் கிடைக்கும்படி செய்வதே காங்கிரஸ் மந்திரி சபைகளின் பொறுப்பு. 1946 ஜூலை 31-ஆம் தேதி புனவில் கூடிய மாகாணக் கைத்தொழில் மந்திரிகள் மகாநாடு மேற்சொன்ன கொள்கையை ஒட்டிய சில விஷயங்களைப் பற்றி ஆலோசித்தது. நமது பொருளாதாரக் கொள்கையின் லட்சியம் எதுவாயிருக்க வேண்டும்? நாம் எத்தகைய சமூக, பொருளாதார அமைப்பை ஏற்படுத்த விரும்புகிறோம்? கிராம முன்னேற்ற லட்சியம் ஈடேறுவதற்கு, இப்பொழுதுள்ள பொருளாதார நிர்வாக அமைப்புகளில் உள்ள தடைகள் என்ன என்பன பற்றி ஆலோசனை நடந்தது.

தமது அரை மணி நேரப் பிரசங்கத்தில் கிராமக் கைத்தொழில்களைப் பற்றித் தம் கொள்கையை விளக்கிப் பேசினார் காந்திஜி. புதுக் கல்வி, கதர் உட்படக் கிராமக் கைத்தொழில் ஆகிய இரண்டுக்கும் லட்சியம் பொதுவானதுதான் என்று காந்திஜி விளக்கினார். பெரிய நகரங்களுக்கு அடிமைப்படாமல் கிராமங்களின் உயர்வையும் கிராம வாழ்க்கையின் சிறப்பையும் காப்பதும், யந்திரத்துக்கு அடிமைப்படாமல் தனி மனிதன் நலனைக் காப்பதுமே அந்த லட்சியம். உண்மையான இந்தியாவை நாம் காணக் கூடியது ஒரு சில பெரிய நகரங்களில் அல்ல; ஏழு லட்சம் கிராமங்களில்தான் என்பதால் இந்த லட்சியத்தின் முக்கியத்துவம் அதிகரிக்கிறது. நகரத்துக்கும் கிராமத்துக்குமிடையே நீதியை நிலைநாட்டுவதே இன்றையப் பிரச்னை. இப்பொழுதோ, கிராமங்களின் நலன் பாதிக்கப்பட்டு, நகரங்களுக்கு விசேஷ சலுகை தரப்படுகிறது.

காந்திஜி கூறினார்: "யந்திரத்தின் ஆதிக்கம் இப்பொழுது அதிகமாயுள்ளது. இது யந்திர யுகம் எனப்படுகிறது. யந்திரம் என்றால் என்ன என்று கேட்கலாம். ஒரு வகையில், மனிதனே மிக அற்புத யந்திரம். அதைப்போல் வேறு யந்திரம் நம்மால் செய்ய முடியாது. ஆனால், மனிதன் அல்லது மிருகத்தின் உழைப்புக்குத் துணையாக நின்று, அதன் திறமையை அதிகரிப்பதல்லாமல், அந்த உழைப்பையே பறித்து, அதன் ஸ்தானத்தைக் கைப்பற்றிக் கொள்ளும் யந்திரங்களையே நான் குறிப்பிடுகிறேன். அதுதான் யந்திரத்தின் முதல்

இயல்பு. இரண்டாவது இயல்பு, யந்திரத்தின் சக்தியை அதிகரித்து அல்லது பெருக்கிக்கொண்டே போவதற்குத் தடையில்லை. மனித உழைப்பைப் பெறுத்தவரை அவ்வாறில்லை. ஓரளவுக்கு மேல், அதன் திறமையையோ, உழைப்பு சக்தியையோ பெருக்க முடியாது. இதிலிருந்து, யந்திரத்தின் மூன்றுவது இயல்பு எழுகிறது. யந்திரத்துக்குத் தனியாகவும், சொந்தமாகவும் ஒரு சக்தி இருப்பது போல் தோன்றுகிறது. மனித உழைப்புக்கு விரோதியாய் இருக்கிறது யந்திரத்தின் சக்தி. நூறு அல்லது ஆயிரம் பேர் செய்து கொண்டிருந்த வேலையை ஒரு யந்திரம் செய்கிறது; அதனுல் ஆயிரம் பேருக்கு வேலையில்லாமல் போகிறது. வேலையில்லாமல் திண்டாடுவோர் எண்ணிக்கை பெருகுகிறது. யந்திரத்தின் நியதி அது தான். இந்தப் போக்கு அமெரிக்காவில் மிகவும் முற்றியுள்ளது. நான் யந்திரங்களை எதிர்ப்பது இன்றல்ல. 1908–ஆம் ஆண்டுக்கு முன்பே, தென்னுப்பிரிக்காவில் பல யந்திரங்கள் சூழ்ந்திருந்த போதே, அவற்றை நான் எதிர்த்து வந்தேன். யந்திரங்களின் முன்னேற்றம் என் கருத்தை மாற்றவில்லை என்பது மட்டுமல்ல, என் வெறுப்பை அதிகரித்துள்ளது. கோடிக்கணக்கான மனிதர்களைச் சுரண்டி அடிமைப்படுத்துவதற்கு யந்திரத்தைவிடச் சிறந்த சாதனம் இருக்க முடியாது என்பதையும், மனிதர் அனைவரும் சமமாக இருக்கும் சமுதாய நிலையை ஏற்படுத்த வேண்டுமானுல், யந்திரத்துக்கு இடம் இருக்க முடியாது என்பதையும் நான் அப்பொழுதே உணர்ந்தேன். யந்திரம், மனிதனின் சக்தியை வளர்க்கவில்லை; அதை ஒடுக்கினுல் ஒழிய, உலகுக்குச் சேவை செய்வதற்குப் பதிலாக அது உலகைச் சீரழிக்கும் என்பது என் நம்பிக்கை. டர்பனுக்கு ஒரு முறை ரெயிலில் போய்க்கொண்டிருந்தபோது பேரறிஞர் ரஸ்கின் எழுதிய 'கடையனுக்கும் கதிமோட்சம்' (Unto This Last) என்ற புத்தகத்தைப் படித்தேன். மனித சமுதாயம் முன்னேறி, சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவற்றை நிலைநாட்டவேண்டுமானுல், அவர் கூறிய கொள்கையைச் சமுதாயம் பின்பற்றவேண்டும் என்பதை நான் உணர்ந்தேன். ஊமைகள், நொண்டி, முடங்கள் ஆகியோரையும் தன்னுடன் அழைத்துச் சென்ருல்தான், சமூகம் முன்னேற முடியும். தருமத்தின் அவதாரமான யுதிஷ்டிரர், தமக்கு விசுவாசமாயிருந்த நாய் இல்லாமல், மோட்ச லோகத்துள் நுழைய மறுக்கவில்லையா?

"யந்திர யுகத்திலோ, இந்த நீதிக்கு இடமில்லை. வல்லான் வாழ, வலிமையற்றவர் மடியவேண்டும் என்பதே இன்றைய நியதி. நான் கனவு காணும் சுயராஜ்யத்தில் இந்நிலை இருக்காது. எளியவருக்கும் அங்கு இடம் இருக்கும். அவ்வாறு இருக்கவேண்டுமானுல், யந்திர சக்தியை உபயோகிக்க நினைப்பதற்கு முன், நம் மக்கள் தொழில் சக்தியையும் ஆள் பலத்தையும் சரிவரப் பயன்படுத்தவேண்டும். மக்கள் ஸ்தாபனமான காங்கிரஸைப் பலப்படுத்தும் நோக்கத்துடன் தான் புதுக் கல்வி சங்கம், கிராமக்

கைத்தொழில் சங்கம் ஆகியவற்றை அமைக்க உதவினேன். இந்தச் சங்கங்களை அமைத்து அவற்றிற்குப் பூரண சுயேச்சை அளித்துள்ளது காங்கிரஸ். எப்பொழுதும் தடையின்றி, இச் சங்கங்களின் உதவியைக் காங்கிரஸ் பெறலாம். காங்கிரசின் முதுகெலும்பாகிய கிராமவாசிகளின் நலனுக்காகவே இந்த சங்கங்கள் பாடுபடுகின்றன. ஆனல், மந்திரி சபைகள் எவ்வித நிர்ப்பந்தத்துக்கும் உள்ளானவையல்ல. இந்தச் சங்கங்களின் லட்சியங்களில் உங்களுக்கு நம்பிக்கையில்லையென்ருல், அதைக் காரியக் கமிட்டியின் மூலம் வெளிப்படையாகக் கூறிவிட வேண்டும். மனப்பூர்வமான நம்பிக்கை இல்லாமல், ஒரு லட்சியத்தோடு விளையாடுவது சும்மாயிருப்பதைவிடக் கேவலமானது. நாட்டின் அரசியல், பொருளாதார விமோசனத்துக்கு வழிகாட்டும் என்ற நம்பிக்கை இருந்தால்தான், அவ்வேலையில் ஈடுபடவேண்டும். அந்த நம்பிக்கை இல்லாமல், உங்களையோ, மற்றவர்களையோ, நீங்கள் ஏமாற்றிக்கொண்டிருக்கக் கூடாது.

“கிராமக் கைத்தொழில்களுக்கு அடிப்படையும் ஆதாரமும் விவசாயம். பல ஆண்டுகளுக்கு முன் நான் படித்த ஒரு பாட்டில், விவசாயியே உலகத்தின் பிதா என்று குறிப்பிட்டிருந்தது. ஆண்டவன் சிருஷ்டி கர்த்தா என்ருல், விவசாயி, அவர் கை அல்லது கருவி. விவசாயிக்கு நாம் செய்யவேண்டிய கடமையை எப்படிச் செய்யப்போகிருேம்? அவர்கள் நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்ததன் பயனைத்தான் நாம் இதுவரை அனுபவித்தோம். நாம் விவசாயத்தைச் சீர்திருத்துவதை முதல் வேலையாகக் கொண்டிருக்கிருேம். ஆனல், அதைச் செய்ய இயலவில்லை. ஓரளவுக்குத் தவறு என்னுடையதுதான்.

“அரசியல் அதிகாரம் இல்லாதவரை, விவசாயத்தில் அடிப்படையான சீர்திருத்தம் எதுவும் செய்யமுடியாது என்று சிலர் சொல்லுவதை நான் அறிவேன். ஆவியையும் மின்சார சக்தியையும் உபயோகித்து, விவசாயத்தை யந்திரமயமாக்க அவர்கள் விரும்புகின்றனர்; விவசாயத்தையும் அவர்கள் ஒரு வர்த்தகமாக்க விரும்புகின்றனர். சீக்கிரம் பலன் கிடைக்கும் என்று எதிர்பார்த்து, பூமிச் செழிப்பை வைத்து வியாபாரம் செய்வது முடிவில் மிகுந்த கெடுதல் உண்டாக்கும். அது கண்மூடித்தனமான கொள்கை என்று நான் எச்சரிப்பேன். பூமியின் செழிப்பை அது உறிஞ்சி விடும். நாணயமான உழைப்பு இருந்தால்தான், புண்ணிய பூமி நல்ல பலன் தரும்.

“என்னுடைய கொள்கை முற்போக்கானதல்ல; உடனடியாக நன்மை பயப்பதல்ல என்று சிலர் குறைகூறலாம். உடனடியாகச் சீரும் செழிப்பும் ஏற்பட்டு விடும் என்று நான் சொல்லவில்லை. ஆனல், பூமிக்கும், அதை உழுவோருக்கும் நிரந்தரமாக செழிப்பு ஏற்பட, நான் காட்டியுள்ள ஒரே வழிதான் உண்டு. சத்தான சீருணவே கிராம வாழ்வின் உயிர்நாடி. விவசாயியின் வருவாயில் பெரும் பகுதி உணவுக்கே செலவாகிறது. உணவுக்

குப் பின்தான் மற்றவை யெல்லாம். கிராமவாசிகளுக்கு நல்ல கறந்த பாலும், நெய்யும், எண்ணெயும், மாமிச உணவு சாப்பிடுப வராயிருந்தால் நல்ல முட்டையும், மாமிசமும் கிடைப்பது அவசியம்தான். சத்துணவு சாப்பிடாமல், நல்ல உடை அணிந் தால் மட்டும் என்ன பலன்? குடி தண்ணீர் கிடைக்கச் செய்வது போன்ற பிரச்னைகளை, உணவுப் பிரச்னைக்குப் பின் எடுத்துக் கொள்ள வேண்டும்: இப் பிரச்னைகளை ஆராயும் போது, விவசா யத்தில் கால்நடைகளை உபயோகிப்பது சிறந்ததா, யந்திரங் களை உபயோகிப்பது சிறந்ததா, மின்சார சக்தியால் நீர்பாய்ச் சுதல் நல்லதா என்பன போன்ற கிராம வாழ்வோடு ஒட்டிய பிரச்னைகள் எல்லாம் எழும். அத்தகைய அமைப்பில் நகரங் களும், தங்களுக்கு இயற்கையாய் உள்ள இடத்தை அடையும். இன்றுள்ளது போல், கோளாறுகளாகவும், கொப்புளங்களாக வும் நகரங்கள் இருக்காது. நம் கைகளை உபயோகித்து வேலை செய்யும் கலையையே நாம் மறந்துவிடக் கூடுமென்ற நிலையில் இன்றுள்ளோம். பூமியை உழுது பேணும் முறையை நாம் மறந் தால், அது நம்மையே நாம் மறப்பதாகும். நகரங்களுக்குச் சேவை செய்து விட்டால் மட்டும் மந்திரி பதவியின் பொறுப்பைச் சரி வர நிர்வகித்து விட்டதாக எண்ணுவது, உண்மை இந்தியா, எழு லட்சம் கிராமங்களில் உறைகிறது என்பதை மறப்பதாகும். ஒரு மனிதன் உலகம் முழுவதையும் வென்று, தன் ஆத்மாவைப் பறிகொடுத்து விட்டால் அதனால் பலன் என்ன?"

பிறகு சில கேள்விகள் கேட்கப்பட்டன.

கே: நகரங்கள் உடம்பில் உள்ள கொப்புளங்கள் போன்றவை என்று நீங்கள் கூறினீர்கள். இந்தக் கொப்புளங்களை என்ன செய்ய வேண்டும்?

ப: கொப்புளங்களுக்கு என்ன செய்ய வேண்டுமென்று ஒரு வைத்தியரிடம் கேட்டால், அவர் என்ன சொல்வார்? ரண சிகிச்சை செய்ய வேண்டும்; பற்று அல்லது பிளாஸ்திரி போடவேண்டும் என்பார். 'நாகரிகம்' ஒரு நோய்; அதற்கு நல்ல மருந்து தேவை என்று கூறினர் எட்வர்ட் கார் பெண்டர். பெரிய நகரங்களின் வளர்ச்சி அந்த நோயின் ஒரு சின்னமே. இயற்கை வைத்தியத்தில் நம்பிக்கை கொண்டவனாதலால், ரத்தத்தைச் சுத்தப்படுத்தி உடலைத் தேற்றுவதன் மூலம், கொப்புளம் இயற்கையாகக் குண மாகும் என்று நான் நம்புகிறேன். நகரவாசிகள் மனத்தில் கிராமங்கள் மீது பற்றுதல் ஏற்பட்டால், அவர்களுக்கு உண்மையான கிராமிய மனப்பான்மை ஏற்பட்டால், எல்லாம் விரைவில் திருந்திவிடும்.

கே: இப்பொழுதுள்ள நிலைமையில், அந்நிய, இந்திய ஆலைப் பொருட்களால் பாதிக்கப்படாமல், கிராமக் கைத்தொழில் களைக் காக்க, உருவான நடவடிக்கைகள் என்ன எடுத்துக் கொள்ள முடியும்?

ப: நான் பொதுப் படையாகத்தான் சொல்ல முடியும். கிராம வாசிகளின் நண்பர்களாகவும் பிரதிநிதிகளாகவும் பதவி ஏற்றுள்ளோம் என்ற உணர்வு உங்களுக்கு இருந்தால் நீங்கள் போடும் உத்தரவுகள், இயற்றும் சட்டங்கள் செய்யும் காரியங்கள் அனைத்திலும், கிராமங்களின் நலனைக் காக்க வேண்டுமென்ற கவலை காணப்படும். கிராமவாசிகள் நலனைக் காப்பதற்கு வைஸ்ராயின் விசேஷ அனுமதி தேவையில்லை. ஆலைத் துணியின் போட்டியிலிருந்து, கையால் நூற்பவரையும், நெய்பவரையும் நீங்கள் காக்க விரும்பினல், ஆலை முதலாளிகளை அழைத்து, நாங்கள் பதவியை விட்டு விலக வேண்டுமென்று நீங்கள் எண்ணினல் ஒழிய, பாமர மக்களின் தேவைகளை அனுசரித்து நீங்கள் உங்கள் உற்பத்தி முறையை அமைக்கவேண்டும் என்று கூறவேண்டும். கையால் நூற்று நெசவு செய்யப்படும் துணி கிடைக்கும் சில பிரதேசங்களுக்கு, ஆலைத் துணியை அனுப்பக்கூடாது என்று அவர்களிடம் கூற வேண்டும். கைத்தறி நெசவுக் காரர்கள் தயாரிக்கக்கூடியதாயுள்ள நூலையும் ஜவுளியையும் மில்கள் தயாரிக்கக் கூடாது என்றும் அவர்களிடம் கூற வேண்டும். நீங்கள் உண்மையான, உறுதியான நம்பிக்கையுடன் அவர்களிடம் பேசினல், உங்கள் வார்த்தையை அவர்கள் ஏற்றுக்கொண்டு ஒத்துழைக்க முன்வருவார்கள். இந்தியப் பஞ்சத்துக்கு நிவாரணம் தேட இந்தோனேஷியாவிலிருந்து அரிசி வாங்கி, அதற்குப் பதிலாகத் தேவையான துணிகளை இந்தோனேஷியாவுக்கு ஏற்றுமதி செய்ய அவர்கள் முன்வரவில்லையா? மனத்தில் உறுதியான நம்பிக்கை இருந்தால், மார்க்கம் தெளிவாக இருக்கும்.

# சிறைவாசத்திலும் நூற்பு

## 1

'எங் இந்தியா'வில் வெளியான மூன்று கட்டுரைகளுக்காக ராஜத்துவேஷக் குற்றம் சாட்டப்பட்டுக் காந்திஜியும் சங்கரலால் பாங்கரும் 1922, மார்ச்சு 10-ஆம் தேதியன்று கைது செய்யப் பட்டனர். காந்திஜிக்கு ஆறு வருடச் சிறைவாசத் தண்டனை விதிக்கப்பட்டு, எராவ்டா சிறைச்சாலைக்குக் கொண்டுபோகப் பட்டார். ஆனாலும், 1924 ஜனவரியில் காந்திஜிக்குத் திடீரென்று குடல் அனுபந்த நோய் ஏற்படவே, அந்த வருடம் பிப்ரவரி 5-ல் அவரை நிபந்தனையின்றி விடுதலை செய்து விட்டனர். இதுதான் இந்தியாவில் காந்திஜி அனுபவித்த முதல் சிறைவாசமாகும். எராவ்டா சிறையில் இருந்தபோது 1922, ஏப்ரல் 14-ஆம் தேதி யன்று ஸ்ரீ ஹக்கிம் அஜ்மல்கானுக்குக் காந்திஜி எழுதிய ஒரு நீண்ட கடிதத்தில்,* சிறைவாசத்தின்போதும் தவறாமல் நூல் நூற்று வருவதில் தாம் கொண்டிருந்த சிரத்தையையும், அதற் காகச் சிறைச்சாலை அதிகாரிகளுடன் போராட நேர்ந்ததையும் அவர் விவரமாகக் கூறியிருக்கிறார்.

சிறைச்சாலையில் நூற்பதைத் தடை செய்தால், உணவு உட்கொள்ள மறுத்துவிடப் போவதாக ஏற்கனவே ஸ்ரீ சங்கர லால் பாங்கரிடம் காந்திஜி கூறியிருந்தார். ஏனென்றால், நோயிலோ, பிரயாணத்திலோ இருந்தாலொழியத் தினந்தோறும் குறைந்தது ஒரு மணி நேரமாவது நூற்பது என்று ஹிந்து புது வருடத் தினத்தன்று அவர் பிரதிக்ஞை செய்துகொண்டிருந்தார். அவர் இந்த நிலையில், எராவ்டா சிறையில் பிரவேசிக்கும்போதே சிறைக்குள் ராட்டையை வைத்துக்கொள்ளத் தம்மை அனுமதிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். ஆனால், சிறைச் சாலையின் சூப்பரின்டெண்டு அனுமதிக்கவில்லை. எனினும் மறு நாள் அவர் காந்திஜியைப் போய் பார்த்தப்போது, ராட்டை வைத் துக்கொள்ள அனுமதியளித்து உத்தரவிட்டார். சிறைச் சாலையில் சங்கரலால் பாங்கரிடம் காந்திஜி, பஞ்சைப் பட்டை போடக் கற்றுக்கொண்டார். பட்டை போடுவதில் ஒரு மணி நேரமும், நூற்பதில் மூன்று மணி நேரமும் செலவழித்துவந்தார். மேற்சொன்ன கடிதத்தில் காந்திஜி பின்வருமாறு கூறியிருக்கிறார்:

"நூற்பது நாளுக்கு நாள் எனக்கு ஆன்மிகத் தேவையாக ஆகிவருகிறது. ஒவ்வொரு நாளும் நான் ஏழைகளிலும் ஏழை களாக உள்ளவர்களுக்கு அருகில் சென்றுகொண்டிருக்கிறேன்; அதன் மூலம் கடவுளை நோக்கியும் நெருங்கிச் செல்லுகிறேன். இந்த வேலைகாக ஒதுக்கும் நான்கு மணி நேரமும் மற்ற நேரங்

---

* இந்தக் கடிதத்தை 'மகாத்மா காந்தி நூல்கள் 3-ஆம் தொகுப்'பில் 823—32 பக்கங்களில் காணலாம்.

களை விட எனக்கு அதிக முக்கியமானதாக இருக்கிறது. என் உழைப்பின் பலன் என் கண் முன்னுல் இருக்கிறது. இந்த நான்கு மணி நேரத்தில் அசுத்தமான எண்ணம் எதுவும் எனக்கு உண்டாவதில்லை. கீதையையோ, குர்ஆனையோ, ராமாயணத்தையோ வாசிக்கும்போது என் சிந்தனைகள் எங்கோ பறந்து விடுகின்றன. ஆனுல், நான் நூற்கும்போதோ, மண்வெட்டியால் கொத்தும்போதோ என் கவனமெல்லாம் ஒரே விஷயத்தில் செல்லுகிறது. ஒவ்வொருவர் விஷயத்திலும் ராட்டை இவ்வளவு முக்கியத்துவம் பெற்று விளங்கமுடியாது. ஆனுல், எனக்கு ராட்டையும், வறுமைப்பட்ட இந்தியாவின் பொருளாதாரமும் ஒன்ருக இருக்கின்றன. அதனுல், எனக்கு ராட்டையானது, தனக்கே உரியதொரு கவர்ச்சியோடு விளங்குகிறது. ராட்டையும் புத்தகங்களும் என் உள்ளத்தை முன்னும் பின்னும் பற்றி இழுக்கின்றன. நூற்பதிலும், பஞ்சைப் பட்டை போடுவதிலும் நான் இன்னும் அதிகமான நேரத்தைச் செலவழிக்கிறேன் என்று என் அடுத்த கடிதத்தில் உங்களுக்குத் தெரிவிப்பது எனக்கு அசாத்தியமானதாக இராது.''

## 2

[1931-ஆம் வருடம் டிசம்பர் 31-ஆம் தேதி யன்று சட்ட மறுப்பு ஆரம்பிக்கப்பட்டதைத் தொடர்ந்து, மறு வருடம் ஜனவரி 4-ஆம் தேதியன்று அதிகாலையில் காந்திஜியும் வல்லபபாய் பட்டேலும் பம்பாயில் கைது செய்யப்பட்டனர். 1818-ஆம் வருட 3-வது ரெகுலேஷனின் கீழ் இருவரும் விசாரணையின்றி எராவ்டா சிறையில் காவலில் வைக்கப்பட்டனர். மார்ச்சு மாதம் 10-ஆம் தேதி யன்று காந்திஜியின் காரியதரிசி மகாதேவ தேசாய் நாசிக் சிறையிலிருந்து எராவ்டா சிறைக்கு மாற்றப்பட்டதன் பயனுக, அவரும், காந்திஜியும், பட்டேலும் ஒன்ருகச் சிறைவாசம் செய்துவந்தனர். அப்போது காந்திஜிக்கு இரண்டு கைகளிலும் வலி ஏற்பட்டிருந்தும் கூட அவர் தவருமல் நூல் நூற்று வந்ததையும், புது மாதிரியான ராட்டையில் விடா முயற்சியுடன் நூற்று வெற்றி கண்டதையும், வேறு பல செய்திகளையும் பற்றி, ஸ்ரீ தேசாய் அப்போது எழுதி வந்த நாட் குறிப்பில் பல இடங்களிலும் குறிப்பிட்டிருக்கிருர். அந்தப் பகுதிகள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன;]

### கைகளில் வலி: ஆனுல், நூற்பது நிற்கவில்லை

**ஏப்ரல் 13, 1932**

பாபுவுக்கு இடது முழங்கைக்கு மேலே உள்ள எலும்பிலும் வலது கட்டை விரலிலும் வலி ஏற்பட்டிருக்கிறது. ஆனுலும்,

அவர் கடந்த மூன்று நாட்களாக நாள் ஒன்றுக்கு 375 சுற்றுக்கள் நூற்பது என்ற உறுதியுடன் இருப்பதாகவே தோன்றுகிறது. அவருடைய இரண்டு கைகளுக்கும் ஓய்வு கொடுக்கவேண்டும் என்று டாக்டர் மேத்தா கூறுகிறார். நூற்பது தமது வலியை அதிகப்படுத்தவேயில்லை என்கிறார் பாபு. இது தேசீய வாரமாக இருப்பதால் பாபு வழக்கத்தைவிட அதிகமாகவே நூற்கிறார். இன்று அவர் அடியோடு களைத்துப் போய்விட்டார். பொதுவாக மூன்று மணிக்கு அவர் நூற்பதை நிறுத்துவார். ஆனால், இன்று வாரத்தின் கடைசி நாளாக இருப்பதால் பிற்பகல் 4 மணி வரையிலும் நூற்றுக் கொண்டேயிருந்தார். மேலும், 500 கெஜங் களுக்குக் குறையாமல் நூற்றாலொழிய அவருக்கு மகிழ்ச்சி ஏற் படாது.

## ஏப்ரல் 16, 1932

சேவை புரிவதில் பாபுவுக்குள்ள ஆர்வத்தை வேறு யாரால் கைக்கொள்ளவோ, அல்லது புரிந்துகொள்ளவோ முடியும்? அவருக்குக் கை வலி. நூற்கக் கூடாது என்று டாக்டர்கள் அவரைத் தடுக்கிறார்கள். அப்படி இருந்தும் இன்று 405 சுற்றுக்கள் வரை அவர் நூற்றுவிட்டு, நூற்பதற்கும் வலிக்கும் சம்பந்தமே இல்லை என்று கூறினார். "நான் நூற்பதில் எப்படி முன்னேறுகிறேன் என்பதைப் பாருங்கள்" என்று முழக்கமாகச் சொன்னார்.

## ஏப்ரல் 17, 1932

வலித்துக் கொண்டிருக்கும் இடது முழங்கைக்கு ஓய்வு கொடுக்க வேண்டுமென்ற டாக்டரின் ஆலோசனையைப் பின் பற்றுவதற்குப் பாபு இன்று புது முறை ஒன்றைக் கண்டு பிடித்து விட்டார். பர்தோலி முறையில் செய்யப்பட்ட ராட்டையில், இடது கையால் சக்கரத்தைச் சுற்றக்கூடிய முறையில் கதிரைக் கொண்டு போய்ப் பொருத்தினார். இது இடது கைக்கு உதவி யாக இருக்கிறதா என்பது எனக்குத் தெரியவில்லை. ஏனென் றால், இது கை நூலை இழுப்பதற்குப் பதிலாகச் சக்கரத்தைச் சுற்றவேண்டியிருக்கிறது. ஆனால், பாபு இந்தப் பரிசோதனை யைச் செய்ய ஆரம்பித்துவிட்டார். நூல் இழுப்பதில் சிறிது நேரம் அவர் கஷ்டப்பட்டார். நாசிக் சிறையில் இருந்தபோது என் வலது கையில் வலியாக இருந்த சமயம் இதே பரிசோ தனையை நான் செய்து பார்த்தேன். அது வீண் முயற்சியாகவே முடிந்தது. ஆனால், பாபு ஒன்றரை மணி நேரம் விடாமுயற்சி செய்து 7 பட்டைகள் நூற்றுவிட்டார். ஏழாவது பட்டையை நூற்றபின், மாமூலான முறையில் நூல் இழுப்பது அவருக்குச் சாத்தியமாகிவிட்டது. அதனால் அவர் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்து, "இப்போது 95 சுற்றுக்கள் நூற்று விட்டேன், பார்த்தீர்களா? இந்த 95-ம் நேற்று அதிகப்படியாக நூற்ற 282-ம் சேர்ந்து, தினசரி நான் நூற்கவேண்டிய அளவான 375

சுற்றுக்களை விட அதிகமாக இருக்கிறது" என்றார். "ஆம் பாபு, ஆனால், உங்கள் இடது கைக்கு நீங்கள் ஓய்வு கொடுப்பதாக உங்களால் சொல்ல முடியாது" என்று நான் சொன்னேன். அதற்குப் பாபு பின்வருமாறு கூறினார்: "இந்தப் பயிற்சி பழகிப் போய்விட்ட பிறகு, கை ஓய்வு பெற்ற உணர்ச்சியை அடைந்துவிடும். அதற்கு ஓய்வு கிடைக்காவிட்டாலும் கூடப் பரவாயில்லை. ஏனென்றால், எப்பொழுதாவது வலது கை அறவே உதவாமல் போய் விட்டால், அதனுடைய ஸ்தானத்தை வகிப்பதற்கு இடது கை தயாராக இருக்கும்.

மேஜர் மேத்தா பாபுவின் வலது கட்டைவிரலையும் இடது முழங்கையையும் மின்சார சாதனத்தைக் கொண்டு பிடித்து விட்டார்.

## ஏப்ரல் 18, 1932

ராட்டை உறுப்புக்களை பாபு நன்றாகப் பொருத்திவிட்டு, இடது கையாலேயே தொடர்ந்து சக்கரத்தைச் சுற்றினார். பலன்கள் நேற்றைவிட இன்று விசேஷமாக இருந்தன. நேற்று 96 சுற்றுக்கள் நூற்பதற்கு அவருக்கு மூன்றரை மணி நேரம் ஆயிற்று; இன்று இரண்டரை மணி நேரத்துக்குள்ளாகவே 85 சுற்றுக்கள் நூற்றுவிட்டார். "இது பிரயோஜனமில்லை. ஒரு குறிப்பிட்ட வயதுக்குப் பிறகு நீங்கள் புதுத் திறமைகளைச் சம்பாதிக்க முடியாது. பழைய பழக்கத்துக்கு நீங்கள் திரும்புவது தான் நல்லது" என்றார் சர்தார். "நான் நிச்சயமாக நேற்றைவிட இன்று அதிகமாகவே நூற்றிருக்கிறேன்" என்று பாபு பதில் அளித்தார். இதைப் பற்றி ஆசிரமவாசிகள் கேள்விப்பட்டால், அவர்கள் எல்லோரும் இடது கையாலேயே நூற்க ஆரம்பித்து விடுவார்கள் என்று சர்தார் குறிப்பிட்டார். அதைப் பற்றித் தமது அடுத்த கடிதத்தில் எழுதப் போவதாகச் சொன்னார் பாபு. குழந்தைகளுக்கு இரண்டு கைகளில் எதைக் கொண்டும் ராட்டையைச் சுற்றக் கற்றுக் கொடுக்க வேண்டும் என்று சர்தார் யோசனை கூறினார். பாபு அதற்குச் சம்மதித்தார். ஜப்பானில் குழந்தைகளுக்கு இரண்டு கைகளாலும் வேலை செய்வதற்குக் கற்பிக்கிறார்கள் என்றும் தெரிவித்தார்.

பாபு தமது பரிசோதனையைப் பற்றி ஆசிரமத்தின் காரியதரிசிக்கு எழுதி, ஆசிரமத்தில் உள்ளவர்கள் அன்றாடம் செய்ய வேண்டிய பலவித வேலைகளிலும் இரண்டு கைகளில் எதையும் உபயோகிக்க முடிந்தவர்கள் உபயோகிக்க வேண்டும் என்று சிபாரிசு செய்தார்.

## ஏப்ரல் 29, 1932

பாபு தாம் நூற்பதனால் அடையும் பலனைத் தினமும் தெரிவிக்கிறார். இன்று அவர் 4 பட்டைகளில் 100 சுற்றுக்களும், மேற்கொண்டு 5 பட்டைகளில் 102 சுற்றுக்களும் நூற்றார்.

அவருடைய நூல் நன்ருகவும், நன்கு முறுக்கேறியதாகவும் இருந்தது. நாளாவட்டத்தில் இடது கையால் நூற்பதன் சிரமத்தைத் தாங்கிக் கொள்ள முடியும் என்று அவர் உறுதியாகக் கருதுகிருர்.

## மே 6, 1932

பாபு சுமார் 2 மணி நேரம் மகன் ராட்டையில் நூற்ருர். அதில் 24 சுற்றுக்கள் நூற்றுவிட்ட பின் அவர் சந்தோஷம் அடைந்தார். அவ்வளவு நேரமும் சிரித்துக்கொண்டேயிருந்த சர்தார், “ நீங்கள் நூற்கும் பஞ்சைவிட, வீணுக்கும் பஞ்சுதான் அதிகமாக இருக்கப்போகிறது ” என்று கூறினர். அதற்குப் பாபு பின் வருமாறு பதில் கூறினர் : “ இடது கையால் நான் நூற்றதைப் பார்த்ததும் நீங்கள் சிரித்தீர்கள். ஆனல், இப்போது நான் எப்படி நூல் இழுக்கிறேன் என்பதைப் பாருங்கள். நீங்கள் பார்க்காமல் இருக்கும் வரையில் இந்த நூல் அருது.”

## மே 10, 1932

நேற்று மகன் ராட்டையைப் பாபு வலது கையால் சுற்ற முடிந்தது. அதன் காரணமாக அவர் மிகவும் உற்சாகமாக இருந்தார். ஆனல், இன்று அதைக் கொண்டு நூற்கச் சாத்தியமில்லாமல் போய்விட்டது. பாபு காலையில் சர்தாரைப் பார்த்து, “ அந்த ராட்டை உங்கள் சாபத்துக்கு உள்ளாகாமல் இருந்திருந்தால் அதை என்னல் சுற்ற முடிந்திருக்கும் ” என்று சொன்னர். 9 அல்லது 10 மணி வரை அவர் கடும் பிரயாசைப்பட்டும் ஒன்றும் பிரயோசனமில்லாமல் போய்விட்டது. பஞ்சுப்பட்டைகள் தான் வீணுயின. பிற்பகலிலும் அதே கதைதான். ராட்டையை வழிக்குக் கொண்டு வருவதற்குப் பாபுவும் நானும் முயன்று பார்த்தோம். ஆனல், அது அசையவே இல்லை. சர்தார் பிற்பகல் நித்திரையிலிருந்து எழுந்து, அந்த ராட்டையைக் கைவிடுமாறு பாபுவிடம் சொன்னர். ஆனல், பாபுவோ தமது முயற்சி ஒரு போதும் நிற்காது என்ருர்... சர்தார் தரையில் பஞ்சு பாழாகிக் கிடந்ததை விரலால் சுட்டிக் காண்பித்து, “பாபு இவ்வளவு நூற்றுவிட்டார்” என்று சொன்னர். இடது கையை உபயோகிக்கத் தொடங்கி, ஐந்து மணி நேரம் அரும்பாடு பட்டுக் களைத்த பாபு மாலையில் எதுவும் செய்யமுடியாமல் சோர்ந்து விழுந்து விட்டார். அதனல், 8 மணிக்கு முன்னதாகவே, நான் கால் பிடித்து விடும் போதே அவருக்குத் தூக்கம் வந்துவிட்டது. தூங்கப் போகும் போது அவர் சர்தாரிடம், “ ராட்டை நாளை நன்ருக வேலை செய்யப்போவது நிச்சயம் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். ஏனென்ருல், நம்பிக்கை மலைகளையும் நகர்த்த வல்லது” என்ருர். நம்பிக்கைக்கும் ராட்டைக்கும் என்ன சம்பந்தம் இருக்க முடியும் என்று சர்தார் சந்தேகப்பட்டார். ஆனல், அனைத்திலுமே நம்பிக்கைக்கு இடம் உண்டு என்று குறிப்பிட்டார் பாபு.

## மே 11, 1932

பாபு இன்று ராட்டை சுற்றுவதில் மேலும் அதிகமாக வெற்றி பெற்று விட்டார். மூன்று மணி நேரத்தில் 131 சுற்றுக்கள் நூற்ருர். தம் வெற்றியைக் கண்டு ஆனந்தம் அடைவதற்காக அவர் சர்தாரை அழைத்தார். ஆனல், சர்தார் தரையில் பஞ்சு பாழாகிக் கிடந்ததைச் சுட்டிக் காட்டினர். இந்த மாதிரி கயிறுகள் திரிப்பதைக் கொஞ்சம் கொஞ்சமாக நிறுத்தி விடுவதாகக் காந்திஜி உறுதி கூறினர்.

## மே 12, 1932

இன்று காலையில் பாபு மகன் ராட்டையைச் சுழற்றுவதில் சுறுசுறுப்பாக ஈடுபட்டிருந்தார். அப்பொழுது, "இது எனக்கு மிகவும் பயனுள்ள பயிற்சி" என்று கூறினர். நான் நேரிலேயே பார்த்துக் கொண்டிருப்பதால் அதை எனக்குச் சொல்ல வேண்டிய அவசியமில்லை என்று நான் சொன்னேன். அதற்குப் பாபு கூறியதாவது: "நான் அதைச் சொல்லவில்லை. 63-வது வயதில் நான் இந்தத் தொழிலை மேற்கொண்டிருப்பதை ஒரு பயிற்சி என்று நீங்கள் ஒரு வேளை கருதக்கூடும். ஆனல், இந்த வயதில் இந்தத் தொழிலில் நான் சந்தோஷத்தை அனுபவிக்கிறேன் என்று சொல்லுகிறேன். அது எனக்கு மகத்தான பயிற்சியாகவும் இருக்கிறது. தொழில் செய்வதில் பிரமாதமான ஒரு சுவை இருக்கிறது. அதைத் தொழிலாளியால்தான் உணர முடியும்."

இன்றும் பாபு மூன்று மணி நேரம் ராட்டை சுற்றி முற்றிலும் களைத்துப் போய் விட்டார்.

## மே 20, 1932

பெல்காம் சிறையில் இருக்கும் பிரபுதாஸுக்குப் பாபு ஒரு நீண்ட கடிதம் எழுதினர். கடந்த பதினைந்து நாட்களாக, மகன் ராட்டையில் நூற்கும் திறமையைப் பெறுவதில் தாம் அடைந்துள்ள முன்னேற்றம் தமக்குத் திருப்தி யளித்திருப்பதாகத் தெரிவித்ததோடு, அந்த ராட்டையைக் கண்டு பிடித்ததற்காகப் பிரபுதாஸைப் பாராட்டியும் எழுதினர். வயோதிகத்தினல் காணும் பலவீனம் இருந்தபோதிலும், அந்த ராட்டையில் நூற்கும் ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ள முடிந்ததற்குத் தம்மைப் பாக்கியசாலியாகக் கருதுவதாக அறிவித்தார். பிரபுதாஸ் தாம் கண்டுபிடித்த ராட்டையினிடம் பாபு எடுத்துக்கொண்ட சிரத்தையைத் தம் கண்களால் பார்த்திருந்தால், பெருமகிழ்ச்சியடைவதோடு தமது எடையிலும் ஒன்றிரண்டு பவுண்டுகள் அதிகரித்திருப்பார். தம் கைகள் சரியாக ஆன்தும் மகன் ராட்டையில் நூற்க வேண்டுமென்று பாபு முடிவு செய்து வைத்திருந்தார். ஆனல், இப்போது அதைச் செய்து பார்க்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கும் நிலையில்தான் அவரால் அதைச் செய்ய முடிந்தது. அந்த ராட்டையில் நூற்க வேண்டும், இல்லை

யென்றால் நூற்காமலே இருந்துவிட வேண்டும் என்ற நிலையை அவர் அடைந்து விட்டார். அவசியம்தான் புதிதாக ஒன்றைக் கண்டுபிடிப்பதற்குத் தாயாக இருக்கிறது. அதனால் நூற்பதில் வேகத்தைக் கூட்டுவதற்கு அவர் பலவிதமான வழிகளிலும் முயன்று பார்க்கத்தான் செய்வார்.

## மே 27, 1932

இன்று நூற்றுக்கொண்டிருக்கும் போது, ராட்டையின் சக்கரம் சுழலாமலிருந்ததைப் பாபு கண்டார். கைக்கு ஓய்வு கொடுத்துக் கொண்டிருந்த போது, கால் விரலால் அதைச் சுற்றினார். ஒரு காலை மிதி பலகையில் ஊன்றிக்கொண்டு, சக்கரத்தைச் சுற்றுவதற்காக மற்றொரு காலைத் தூக்கிக்கொண்டு, ஒரு கையால் நூலை இழுத்தார். இதனால் அவர் நடராஜரைப் போல் காட்சியளித்தார். "என்னிடம் காமிரா இருந்தால் இப்படியே உங்களைப் படம் பிடித்து விடுவேன்" என்று சர்தார் கூறினார்.

## ஜூன் 8, 1932

போலக் லண்டனிலிருந்து பாபுவுக்கு எழுதிய ஒரு கடிதம்:
"'ராட்டை வேகமாக வேலை செய்யாததால் அதில் நம்பிக்கை இழந்து நீங்கள் தையல் யந்திரத்தைச் சுற்றத் தொடங்கியிருக்கிறீர்கள்' என்று லண்டன் பத்திரிகைகளில் செய்தி வெளிவந்திருக்கிறது. அதை ஒரு நிமிஷ நேரங்கூட நான் நம்பவில்லை. ஆனால், அதற்கு உடனடியாக மறுப்பு விட வேண்டியது அவசியம்."

அதற்குப் பாபு எழுதிய நீண்ட பதிலில் ராட்டையைப் பற்றியும் விரிவாக எழுதியிருந்தார்:

"ராட்டை வேகமாக வேலை செய்யவில்லை என்று நம்பிக்கையை இழப்பதற்கு நான் பல அவதாரங்களை எடுக்கவேண்டும். ராட்டை சாவதானமாக வேலை செய்வதுதான் எனக்கு அதிலுள்ள மிகமிகக் கவர்ச்சிகரமான அம்சமாக இருக்கவேண்டும். ஆனால், அதில் எனக்கு அநேகக் கவர்ச்சிகள் உள்ளன. அதனால் நான் ராட்டை விஷயத்தில் ஒருபோதும் சலிப்படைந்துவிட மாட்டேன். அதில் எனக்கு நிரந்தரமான ஈடுபாடு இருக்கிறது. அதன் சம்பந்தங்கள் என்னிடம் வளர்ந்துகொண்டு வருகின்றன. அதன் அழகுகளை அநேகமாகத் தினந்தோறுமே நான் பார்த்துக் கொண்டு வருகிறேன். அதற்குப் பதிலாகவோ, தனிப்படவோ தையல் யந்திரத்தை நான் உபயோகிக்கவே இல்லை. பத்திரிகைச் செய்திகளில் தவறு நேர்ந்த விதம் எப்படி என்பதை நான் அறிவேன். பத்து வருடங்களுக்கும் மேலாக, அநேகமாய் யாதொரு இடையீடும் இல்லாமல், ராட்டையைச் சுற்றுவதற்கு வலது கையை உபயோகித்து வந்த காரணத்தால் என் வலது முழங்கையில் வலி உண்டாகத் தொடங்கியது. இது, டென்னிஸ்

விளையாட்டுக்காரர்களுக்குத் தொடர்ந்து மட்டையை உபயோகிப்பதால் அடிக்கடி ஏற்படும் வலியைப் போன்றது என்று இங்குள்ள டாக்டர்கள் முடிவுக்கு வந்தார்கள். அதனல் முழங்கைக்குப் பூரண ஓய்வு கொடுக்க வேண்டும் என்று அவர்கள் ஆலோசனை கூறினர்கள். பிரபுதாஸ் கண்டு பிடித்த ராட்டை மட்டும் இல்லையென்ருல், சிறிது காலத்துக்கு நூற்பதையே நிறுத்திவிட வேண்டும் என்றே அவர்கள் சொல்லியிருக்கக் கூடும். மகன்லாலுடைய குமாரர் பிரபுதாஸை நீங்கள் அறிவீர்கள். அவர் கண்டு பிடித்த ராட்டையைச் சுற்றுவதற்கு ஒரு பெடலை மிதிக்க வேண்டும். அதனல் வலது கையையும் நூலை இழுப்பதற்குப் பயன் படுத்த முடியும்; நூல் உற்பத்தியும் இரட்டிப்பாகும். இந்த ராட்டையை வரவழைத்துக் கொண்டதன் மூலம், நான் டாக்டர்களை முந்திக் கொண்டு விட்டேன். வலது கையால் வேலையே செய்யக்கூடாது என்று கண்டிப்பான உத்தரவு வருவதற்கு முன்பாகவே, காலால் சுற்றும் மகன் ராட்டையில் நூற்கும் திறமையை அடைந்து விட்டேன். காலஞ் சென்ற மகன்லாலின் பெயர் அந்த ராட்டைக்கு வைக்கப்பட்டிருக்கிறது. இந்தப் புதிய ராட்டையைப் பற்றி எதுவும் அறியாத பைத்தியக்கார நிருபர் ஒருவர், பெடலை மிதித்து நான் ராட்டையைச் சுற்றியதாகக் கேள்விப்பட்டதும், நான் தையல் யந்திரத்தை ஓட்டுவதாக முடிவு செய்துவிட்டார். என்னைப் பற்றி அநேக விஷயங்களைக் கற்பனை செய்வதிலும், எல்லா விதமான காரியங்களையும் நான் செய்ததாகக் கூறுவதிலும் வல்லவர்களான பத்திரிகை நிருபர்கள் இருப்பதால், பொய்யான செய்தியை ஆதாரமாக வைத்துக் கொண்டு, ராட்டையில் நான் நம்பிக்கை இழந்து விட்டதாக முடிவு செய்து விட்டார்கள். கதையின் முழு விவரத்தையும் இப்பொழுது நீங்கள் தெரிந்துகொண்டிருப்பீர்கள்.”

## ஜுலை 10, 1932

மதுர தாஸுக்கு எழுதிய கடிதத்தில் பாபு பின்வருமாறு எழுதியிருந்தார்:

“கதர் அபிமானம் இந்தியாவில் இன்னும் அதிகமாக ஏற்படவில்லை. வேறு வார்த்தைகளில் சொன்னல், ஏழைகளாக அவதாரம் எடுத்துள்ள கடவுளிடம் போதிய அளவு பக்தி ஏற்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. இந்தப் பக்தி உள்ள இடத்திலும், கதர்தான் இந்தப் பக்தியின் எளிமையான சின்னம் என்பதை, அறியாமை மிகுந்துள்ள பக்தர்கள் உணரவில்லை. நீங்கள் விரும்பினல், நூலின் தரத்தை அபிவிருத்தி செய்வதைப் பற்றி ஒரு புத்தகம் எழுதலாம். ஆனல், சொந்த அனுபவத்தை அடிப்படையாகக் கொள்ளாத ஒரே ஒரு வாக்கியத்தைக்கூட நீங்கள் எழுதக் கூடாது; சொந்த அனுபவத்தையே பொதுவான உண்மை என்று முடிவு கட்டி விடவும் கூடாது. உங்கள் அனுபவம் எல்லோருக்கும் பொதுவானதாக ஆகக்கூடிய தன்மை பெற்றிருக்க வேண்டும். அப்படி இல்லை என்ருல், எழுதும்

யோசனையையே விட்டு விடுங்கள். அனுபவத்தை அடிப் படையாகக் கொள்ளாத எழுத்துக்கள் இக் காலத்தில் சரகருடைய நூலின் மொழிபெயர்ப்பைப் போன்று அநேகமாய் பயனற்றவையே. ஏனென்றால், அந்நூலில் விவரிக்கப்பட்டிருக்கும் அநேக மூலிகைகள் என்ன மூலிகைகள் என்பதைக் கண்டறியவும், கண்டறியக் கூடிய மூலிகைகளின் மதிப்பை நம்பக்கூடிய முறை யில் நிரூபிக்கவும் நமக்கு முடியவில்லை. அதனால், நீங்களே வெவ் வேறு நம்பர்களில் மெல்லிய நூலை நூற்கவும், இப்படி நூற்ப தற்குக் கதிர், ராட்டை, பருத்தி, பட்டை போடுதல், நீங்கள் நூற்கும் திறமை ஆகியவை எந்தெந்த அளவில் உதவியாக இருக்கின்றன என்பதை ஆராயவும் வேண்டும். இது தான் முக்கியமான காரியம். மற்ற நூற்பாளர்களுடன் உங்கள் குறிப் புக்களை ஒப்பிட்டுப் பாருங்கள். இப்படிப்பட்ட தயாரிப்புக்குப் பிறகு நீங்கள் எழுதினால் உங்கள் புத்தகம் மிகவும் மதிப்பு வாய்ந்த நூலாக இருக்கும்.

"ராட்டையில் 20-ஆம் நம்பர் நூலை நூற்றால் போதும் என்று ஒரு காலத்தில் நான் நினைத்துக் கொண்டிருந்தேன். பிறகு அதை 40-ஆம் நம்பராக உயர்த்தினேன். இப்பொழுது, மேல் எல்லை எதையும் நான் வரையறுக்கவில்லை. நாம் நல்ல பருத்தியை விளைய வைத்து, அதை நுணுக்கமாகக் கவனத்துடன் பட்டை போட்டு, சமமான நூலை நூற்று, அதைத் திறமை சாலியான நெசவாளியைக் கொண்டு நெய்து கொள்ள முடியுமானால், நாம் 400-ஆம் நம்பர் நூலை நூற்க வேண்டும் என்று நான் சொல்லுவேன். நூற்பதில் நாம் அடைந்த அனு பவத்தைக் கொண்டும், அதில் நமக்குள்ள விருப்பத்தைக் கொண்டும் அதில் எல்லா முன்னேற்றத்தையும் சாத்தியமான தாக ஆக்கவேண்டும். அப்படிச் செய்தால் கை நூற்புக் கலை உடனடியாக வருமானமுள்ளதாகவே ஆகிவிடக்கூடும்."

## ஜூலை 11, 1932

உபயோகமற்ற அலங்கார வேலைகளை விட்டொழிக்கும்படி பிரேமா பஹனுக்கும், 400-ஆம் நம்பர் நூலை நூற்கும்படி மதுர தாஸுக்கும் பாபு நல்லுரை பகர்ந்தது சம்பந்தமாக, கலையைப் பற்றிய அவருடைய கருத்துக்களைக் குறித்து நான் அவரோடு விவாதித்தேன். அவருடைய முடிவுகளைக் கீழ்க் கண்டவாறு சுருக்கிக் கூறலாம்:

"பயன் தராத அழகை நினைத்துப்பார்க்கவே முடியாது. பயன் தருதல் என்பது இங்கே விரிவான பொருளில் கொள்ளப் படுகிறது. 400-ஆம் நம்பர் நூலைக்கொண்டு நெய்த துணி அணி வதற்கு உகந்ததாகவோ, உகந்ததல்லாததாகவோ இருக்கலாம். ஆனால், இப்படிப்பட்ட மிகவும் சன்னமான நூலை நூற்பதில் ஒருவன் மேற்கொள்ள வேண்டிய கடும் பிரயாசையும், அவனுக் குப் புலனாகும் நூற்புக் கலையின் ரகசியங்களும், நூற்கும்போதே

பிரச்னைகளுக்குத் தாமாகப் புலப்படும் பரிகாரங்களும் தரித்திர நாராயணனுக்கு (ஏழையாக உருக்கொண்ட கடவுளுக்கு) முற்றி லும் நன்மையளிக்கக் கூடியவையாகும். 20-ஆம் நம்பர் நூல் லட்சியமாக இருந்தபோது நாம் 10-ஆம் நம்பர் நூலையே நூற் ஞேம். 400-ஆம் நம்பரை லட்சியமாகக் கொண்டிருக்கும் நிலை யில் நாம் 50 அல்லது 60-ஆம் நம்பர் நூலை நூற்பது நிச்சயம். அதனுல், நூற்புக் கலையை அபிவிருத்தி செய்வதைக் கண்ணேட் டமாகக் கொண்டாலும், 400-ஆம் நம்பர் நூலை நூற்க முயல்வது மிகவும் பயனுடையதாகும். 50 அல்லது 100-ஆம் நம்பர் நூலில் நெய்த துணியை நாமே நிச்சயம் அணியமாட்டோம்; 6-ஆம் நம்பர் நூல் துணியைக்கொண்டு உடம்பை மூடிக்கொள் ளத்தான் விரும்புவோம். ஆனுல், மிகமிகச் சொகுசாக வளர்ந்த வர்களின் தேவைகளுக்கு நாம் துணி கொடுக்க முடியும் என்பதை நிரூபித்தால்தான் தரித்திர நாராயணனுக்குச் சேவை செய்த வர்கள் ஆவோம். நாம் நூற்கும் மெல்லிய நூலின் பின்னணியில் தரித்திர நாராயண சேவை இருந்தாக வேண்டும். இப்படிப் பட்ட சேவையில் ஈடுபட்ட ஒருவன், 400-ஆம் நம்பர் நூலில் நெய்த துணியை உபயோகிப்பவனைப் பழிக்காமல், அவனுக்கு அத்துணியைக் கொடுத்து வருவான். வாடிகனில் நான் என்னை மறந்து சித்திரங்களையும் சிற்பங்களையும் பார்த்தேன். அவை எதைக் காட்டுகின்றன? அவற்றின் அழகை ரசிக்கும் ஆற்றல் பெற்றவர்கள் அதிகமாக இல்லை. ஆனுல், அந்தச் சித்திரக்காரர் களும், சிற்பிகளும் மனித வர்க்கத்துக்குச் சேவை செய்யும் நோக்கத்துடனேயே வேலை செய்திருக்கிறுர்கள் என்பது நிச்ச யம். பார்க்கிறவர்களின் உள்ளத்தில் கெட்ட எண்ணங்களை எழுப்பக்கூடிய சித்திரம், கலையம்சம் உடையது என்று கூறத் தக்கதல்ல. ஏனென்ருல், ஒழுக்க நெறியில் மனிதனை ஓர் அடி முன்னேற்றி அழைத்துச் செல்லுவதும், உயர்ந்த கருத்துக்களை அவனுக்கு ஊட்டுவதுமே கலையாகும். ஒழுக்க ரீதியில் அவனை அது இழிநிலையில் தள்ளுமானுல், அது கலையல்ல: ஆபாசமே. நான் இப்போது வான சாஸ்திரம் பற்றிய புத்தகங்களை வாசித் துக் கொண்டிருக்கிறேன். அதில், சூரியனுடைய பரப்பில் ஒரே ஒரு சதுரகெஜத்தில் உள்ள உஷ்ணம், பூமியில் உள்ள உயிர்களை யெல்லாம் காப்பாற்றப் போதுமானது என்று காட்டப்பட்டிருக் கிறது. இது மிகவும் பயனுள்ள விவரம். நாம் வாழும் பூமியிலி ருந்து சூரியன் கோடிக்கணக்கான மைல்களுக்கு அப்பால் இருக் கிறது. அதேபோல, ஒரே பட்டையிலிருந்து பல மைல் நீளத் துக்கு நூல் நூற்பது நூற்புக் கலைக்குச் செய்யும் ஒரு சேவை யாகும்.''

## 3

## ராட்டையில் வசிக்கிறுர் கடவுள்

“உங்கள் அனைவரையும் இந்தியத் தாயுடன் பிணைப்பது, கையால் நூற்ற நூல்தான் என்பதை ஞாபகத்தில் வைத்துக்

கொள்ளுங்கள். நூற்பதைக் கைவிட்டீர்கள் என்ருல், சேவையையும் கைவிட்டவர்கள் ஆகிறீர்கள். அதனுல், ஒருபோதும் ராட்டையில் நூற்பதை நிறுத்திவிடாதீர்கள். இன்று கடவுள் ராட்டையில் வசிக்கிருர். பட்டினித் தீ சுற்றிலும் பற்றி எரிந்து கொண்டிருக்கிறது. அதிலிருந்து காப்பாற்றக்கூடியது ராட்டையே. அதைத்தவிர வேறு எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லே. கடவுள் எப்போதும் ஏதாவது ஒரு ஜட உருவில் நமக்குக் காட்சியளிக்கிருர். ஆகையால், திரௌபதிக்காகக் கடவுள் ஆடையாக உருவெடுத்தார் என்பதற்காக அவளேப் பற்றிப் பாடுகிருேம். இன்று கடவுளேக்காண விரும்பும் யாரும் ராட்டையின் வடிவத்தில் அவரைக் கண்டு கொள்ளலாம்.''

—வார்தாவிலிருந்து 20—12—1936–இல் சாபர்மதி ஆசிரம சகோதரிகளுக்குக் காந்திஜி எழுதிய ஒரு கடிதத்தின் பகுதி.

## நூற்பே யக்ஞம்

"நூற்பே யக்ஞம் என்பதை மறந்து விடாதீர்கள். யக்ஞம் செய்யாமல் சாப்பிடுகிறவன் திருடிய உணவைச் சாப்பிடுகிறவஞகிருன் என்று கீதை சொல்லுகிறது. யக்ஞம் என்பது, பிறர் நன்மைக்காகச் செய்யும் பணியே. நமக்கு இப்படிப்பட்ட பணியாக இருப்பது நூற்பதுதான்.''

—ஸோடேபூரிலிருந்து 3—1—1927–ல் சாபர்மதி ஆசிரம சகோதரிகளுக்குக் காந்திஜி எழுதிய ஒரு கடிதத்தின் பகுதி.

## 4

[1921–ஆம் ஆண்டில் காந்திஜி கதரைப் பரப்புவதில் தீவிரமாக ஈடுபடலானர். அப்பொழுது அவர் இந்தியா முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்தார்; அநேக பெரிய நகரங்களுக்கும் எண்ணற்ற குக்கிராமங்களுக்கும் விஜயம் செய்து, பொது மக்களுக்கும் காங்கிரஸ் ஊழியர்களுக்கும் கதரின் முக்கியத்துவத்தை எடுத்துக் கூறினர். அந்தச் சமயத்தில் மகாத்மாவுடன் சேர்ந்து, அவருடைய கோஷ்டியில் ஒருவராகச் சுற்றுப் பிரயாணம் செய்த ஸ்ரீ கிருஷ்ணதாஸ், "மகாத்மாஜியுடன் ஏழு மாதங்கள்'' என்ற \அழகான ஒரு நூல் எழுதியிருக்கிருர். அந்நூலிலிருந்து கதர் சம்பந்தப்பட்ட சில முக்கியமான பகுதிகளேத் தொகுத்துக் கீழே கொடுத்திருக்கிருேம் :]

## கதர் வியாபாரத்துக்கு ஒரு கிழக்கிந்தியாக் கம்பெனி

கிழக்கு வங்காளத்திலுள்ள பாரிஸால் என்ற சிறு நகரில், செப்டம்பர் 3–ஆம் தேதியன்று காங்கிரஸ் தொண்டர்களேப் பார்த்து காந்திஜி நல்லுரை கூறும்போது, கதர் உற்பத்தியையும், வினியோகத்தையும் அவர்கள் தங்கள் முக்கியமான கடமை

யாகக் கருதவேண்டும் என்ருர். மேலும், அவர்கள் கதர் விற்பனையை அடிப்படையாகக் கொண்ட ஒரு புதிய "கிழக்கிந்தியாக் கம்பெனி"யை அமைப்பதில் வெற்றி பெற வேண்டும் என்பதே தமது உள்ளத்தின் பிரார்த்தனை என்றும் காந்திஜி சொன்னுர்.

## ராட்டைகளை அழித்தால்?

செப்டம்பர் 4-ஆம் தேதியிலிருந்து 13-ஆம் தேதிவரையிலும் காந்திஜி கல்கத்தாவில் தங்கியிருந்தார். அப்போது ஒரு நாள் தேசபந்து சித்தரஞ்சன் தாஸ், தாம் பார்த்த ஒரு கிழவியின் கதையைக் காந்திஜியிடம் சொன்னுர். ஸ்ரீ தாஸ் கூறியதாவது: " திரும்பவும் ராட்டையை உற்பத்தி செய்தால், போலீசார் வந்து அதைச் சுக்கல் சுக்கலாக உடைத்து, நெருப்பு வைத்து விடுவார்கள் என்பது அந்தக் கிழவியின் உறுதியான கருத்து. வங்காளத்தில் முன்பு துணி உற்பத்தித் தொழிலை நாசமாக்குவதற்காகக் கையாளப்பட்ட அக்கிரமமான முறைகளெல்லாம் அந்தக் கிழவிக்கு ஞாபகமிருக்கின்றன." ஸ்ரீ தாஸ் இவ்வாறு கூறக் கேட்டதும் காந்திஜி ஒரு முறை சிரித்தார். பிறகு பின் வருமாறு கூறினுர்: "ராட்டையை அழிக்க வேண்டுமென்று அரசாங்கம் மீண்டும் ஒரு முறை நினைத்தால் நான் மிகமிகச் சந்தோஷப்படுவேன். ஏனென்ருல், அதன் காரணமாக ராட்டையின் உண்மையான மதிப்பைப்பற்றி ஜனங்கள் மனத்தில் அழிக்க முடியாத முத்திரை விழுந்துவிடும் அல்லவா?"

## பூர்வகுடிகளின் கதர்ப் பரிசு

செப்டம்பர் மாதத்திலேயே காந்திஜி கல்கத்தாவிலிருந்து மிதுனபுரிக்குப் போய்ச் சேர்ந்தார். அங்கே அவரை வீற்றிருக்கச் செய்து ஓர் ஊர்வலம் நடத்தினர். ஊர்வலத்திற்குப் பிறகு பெண்கள் கூட்டம் ஒன்றும், பொதுக்கூட்டம் ஒன்றும் நடைபெற்றன. பொதுக்கூட்டத்தில் நகரசபையின் உபசாரப் பத்திரமும் மற்ற உபசாரப் பத்திரங்களும் வாசித்து அளிக்கப் பெற்றபின், உள்ளூரிலேயே தயாரிக்கப்பட்ட சில கதர்த்துணிகளையும் அவருக்கு அன்பளிப்பாகக் கொடுத்தார்கள். அந்தச் சமயத்தில், கூட்டத்தின் நடுவேயிருந்து, பூர்வ குடிகளான சந்தல் ஜாதியைச் சேர்ந்த ஒருவர் எழுந்து நின்று, "நாங்கள் ஏழைகள்; ஒன்றும் அறியாத சந்தல் ஜாதியினர். ஆனுலும், தயவுசெய்து எங்களுடைய இந்தத் துணிகளை ஏற்றுக்கொள்ளுங்கள்" என்று கூறி, அவர்கள் கைப்பட நெய்த ஒரு ஜோடி அழகான கதர் அங்கவஸ்திரங்களை மகாத்மாவிடம் கொடுத்தார். அஸ்ஸாமிலும் கிழக்கு வங்காளத்திலும் பல இடங்களில் மகாத்மா இப்படிப்பட்ட கதர்ப் பரிசுகளை வாங்கினுர். ஆனுல், இந்தச் சந்தல் ஜாதியைச் சேர்ந்த அன்பரிடமிருந்து பரிசை வாங்கும்போது மட்டும், தமது ஆசனத்தை விட்டு எழுந்து நின்று, கைகளை நீட்டி, ஆவலும் திருப்தியும் கொண்டவ

ராகப் பெற்றுக்கொண்டார். இது, இதற்கு முன் காணுத கட்சி யாக இருந்தது என்கிருர் ஸ்ரீ கிருஷ்ணதாஸ்.

## முனிசிபாலிடிக்கு மூன்று வேலைகள்

*1921* செப்டம்பர் மாதம் *20*-ஆம் தேதி காலையில் காந்திஜி திருச்சிராப்பள்ளியிலிருந்து புறப்பட்டுக் காவேரியாற்றைக் கடந்து ஸ்ரீரங்கத்துக்கு வந்து சேர்ந்தார். ஸ்ரீரங்கம் நகரசபை அவருக்கு வாசித்தளித்த வரவேற்புப் பத்திரத்தை ஒரு வெள்ளிப் பேழையில் வைத்துக் கொடுத்தது. இப்படிப்பட்ட அழகான விலையுயர்ந்த பரிசுப் பொருள்களை வைத்துக் கொள்ளத் தம்மிடம் எந்தவிதமான பெட்டியும் கிடையாதென்றும், அதனுல் அதை விற்று அந்தப் பணத்தைத் திலகர் சுயராஜ்ய நிதியில் சேர்த்துக் கொள்ளப் போவதாகவும் காந்திஜி கூறினர். அப்புறம், ஸ்ரீரங்கம் முனிசிபாலிடி—உண்மையில் இந்தியாவில் உள்ள ஒவ்வொரு முனிசிபாலிடியுமே—மூன்று விதமான வேலைகளில் ஈடுபட வேண்டும் என்று குறிப்பிட்டார். அவ்வேலைகளாவன: முதலில், முனிசிபல் எல்லைக்குள் அந்நியத் துணி இறக்குமதியாகாமலும், ஒவ்வொருவரும் கதர் கட்டும்படியாகவும் பார்த்துக்கொள்ள வேண்டியது; இரண்டாவதாக, லாகிரி வஸ்துக்களின் உபயோகத்தைத் தடைசெய்ய வேண்டியது; மூன்ருவதாக, தீண்டாமைப் பேயை ஒழித்துக்கட்ட வேண்டியது.

## நூற்பின்றேல் சோறில்லை

*1921*, செப்டம்பர் மாதத்தில் காந்திஜி தமிழ்நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்த சமயத்தில், நூற்பது சம்பந்தமாக ஒரு விரதத்தை மேற்கொண்டிருந்தார். அதாவது, மத்தியானச் சாப்பாட்டுக்கு முன் அரை மணி நேரம் நூற்கவேண்டும்; என்ருவது ஒரு நாள் அப்படி நூற்கத் தவறிவிட்டால், அன்று சாப்பிடாமலே இருந்து விடவேண்டும் என்பதுதான் அவ்விரதம். ரெயில் பிரயாணம் செய்யும்போது மட்டும் காந்திஜி இதற்கு விதிவிலக்கு அளித்திருந்தார். இது சம்பந்தமாக ஒரு நாள் காந்திஜி கூறியதாவது :

"நம் உடம்பைக் காப்பாற்றுவதற்காக உலகம் நமக்கு வேண்டிய தினசரி உணவைக் கொடுத்து வருகிறது. அதனுல், நம் சரீர உழைப்பைக் கொண்டு தினந்தோறும் உலகத்துக்குக் கைம்மாருக ஏதாவது சேவை செய்யக் கடமைப்பட்டிருக்கிருேம். உலகின் நன்மையைக் கருத்தில் கொண்டு நாள்தோறும் சிறிது நேரம் ராட்டையில் நூற்பதன் மூலம் ஒவ்வொருவரும் இந்தக் கடமையை நிறைவேற்ற முடியும். சரீர உழைப்பைக் கொண்டு நாம் தினந்தோறும் ஏதாவது கைம்மாறு செய்யாமல் நம் பூத உடம்புகளைப் போஷிக்கத் தினந்தோறும் உலகத்தினிடமிருந்து உணவைப் பெற்றுக்கொண்டு வந்தால், அது திருடும் குற்றத்தைச் செய்வதாகவே ஆகும்."

## முழங்கால் வேட்டியைக் கைவிடும் நாள்

1921, அக்டோபர் 19-ஆம் தேதி மாலை ஆறு மணிக்குப் பம்பாயில் சுமார் ஒரு லட்சம் பேருக்கு மேல் கூடியிருந்த பொதுக் கூட்டத்தில், மலைபோலக் குவிக்கப்பட்டிருந்த அந்நியத்துணிகளை நெருப்பு வைத்துக் கொளுத்துவதற்கு முன்பு காந்திஜி கதர், ராட்டை, சுயராஜ்யம் ஆகியவை பற்றி விரிவாகவும் உருக்கமாகவும் பேசினர். சில தினங்களுக்கு முன்புதான் அவர் மதுரையில் தமது மாமூல் உடையை விட்டுவிட்டு, முழங்கால் வேட்டியைக் கட்டத் தொடங்கியிருந்தார். இந்தக் கோலத்தில் காந்திஜியைக் கண்ட பலர் கண்ணீர் விட்டனர். இதைக் குறிப்பிட்டுக் காந்திஜி தமது சொற்பொழிவில் கூறியதாவது : "என்னைப் பொறுத்தவரையிலும், அணுவளவு அனுதாபம்கூட எனக்குத் தேவையில்லை. ஆனால், நான் ஆந்திர மாகாணத்தில் அநேக ஜில்லாக்களுக்குப் போய்விட்டு இப்போதுதான் திரும்பி வந்திருக்கிறேன். அங்கே கோரமான பஞ்சம் தாண்டவமாடிக் கொண்டிருக்கிறது. பெண்களில் சிலர் பசிக் கொடுமையைப் பொறுக்கமாட்டாமல் தங்கள் குழந்தைகளோடு நீரில் மூழ்கித் தம் உயிரை மாய்த்துக் கொண்டுவிட்டார்கள் என்று என்னிடம் கூறினர். நம் மக்களின் நிலை இப்படியாக, மனம் உடைந்து போகக் கூடியவாறு இருக்கிறது. இது நம் அனைவர் உள்ளத்திலும் அனுதாபத்தை உண்டுபண்ணினல், நாம் அனைவரும் ராட்டையையும் கதரையும் கைக் கொண்டால், அப்பொழுது தான் நான் என் முழங்கால் வரையிலுள்ள வேட்டியைக் கைவிட்டு, என்னுடைய முந்திய உடையை மீண்டும் தரித்துக்கொள்ளுவது எனக்குச் சாத்தியமாகும். அங்கே கிடக்கும் அந்நியத் துணிக் குவியலில் நான் நெருப்பு வைக்கப்போகிறேன். ஆனல், என் நெஞ்சிலும் ஒரு நெருப்பு எரிந்து கொண்டிருக்கிறது. நான் வைக்கப்போகும் நெருப்பு, உள்ளுக்குள்ளேயே என்னை எரித்துக் கொண்டிருக்கும் நெருப்பின் வெளித் தோற்றமே தவிர வேறில்லை."

### திலகர் - கீதை

மேற்படி பம்பாய்ச் சொற்பொழிவை, லோகமான்ய திலகரைப் பற்றிய ஒரு குறிப்புடன் காந்திஜி முடித்தார். மகாத்மா கூறியதாவது : "லோகமான்யரின் பெருமையை அறிந்து கொள்ள அவர் எழுதிய கீதா ரகசியத்தின் பக்கங்களைப் புரட்ட வேண்டியதில்லை. லோகமான்யரின் கீதா போதனைகளை நான் ஒரே வாக்கியத்தில் கூறுகிறேன் : 'சுயராஜ்யம் எனது பிறப்புரிமை.' லோகமான்ய திலகரின் அந்த ஒரே வாக்கியம், லோகமான்யருடைய போதனைகளின் சாரத்தை—அவர் எதற்காக வெல்லாம் வாழ்ந்தாரோ, எதற்காக வெல்லாம் போராடினரோ அவை எல்லாவற்றையுமே—தெரிவிக்கிறது. ஆனலும், அது திலகர்-கீதையின் முதல் பாதிதான்.

அதன் மற்ருெரு பாதியை நான் பூர்த்தி செய்ய விரும்புகிறேன். அது தான், 'சுயராஜ்யத்தை ராட்டையின் மூலமே அடைய முடியும்' என்பதாகும். இந்த இரண்டு வாசகங்களில் திலகர் கீதையின் அதாவது சுயராஜ்ய சாஸ்திரத்தின் மூலக் கருத்தே அடங்கியிருக்கிறது.''

## விடுமுறையைக் கழிப்பது எப்படி?

பம்பாய் நேஷனல் கல்லூரி ஆசிரியர்கள் சிலர் தீபாவளி விடுமுறை நாட்களில் அகமதாபாத்துக்கு வந்திருந்தனர். அவர்கள் காந்திஜியைப் பார்க்க வந்த போது, ''நாங்கள் எங்கள் விடுமுறை நாட்களை எப்படிக் கழிப்பது?'' என்று அவரிடம் ஆலோசனை கேட்டனர். அன்று காந்திஜி மௌன விரதம் அனுஷ்டிக்கும் நாளானதால், கீழ்க்கண்ட பதிலை எழுதிக் கொடுத்தார்.

பட்டை போடுங்கள், நூற்றிடுங்கள், நெய்யுங்கள்;
நூற்றிடுங்கள், நெய்யுங்கள், பட்டை போடுங்கள்;
நெய்யுங்கள், பட்டை போடுங்கள், நூற்றிடுங்கள்.

இந்தப் பதிலைப் படித்துப் பார்த்ததும் ஆசிரியர்கள் ஒரே முழக்கமாகச் சிரித்தார்கள். ஓர் ஆசிரியர், மேற்படி பதில் எழுதப்பட்டிருந்த காகிதத்தை எடுத்து, அதை அரிய நினைவுப் பொருளாக வைத்துக் கொண்டார்.

## 5

## இரவு பகல் நூற்ற கொண்டாட்டம்

[1926-ஆம் ஆண்டில் தேசீய வாரத்தைச் சபர்மதி ஆசிரம வாசிகள் இரவும் பகலும் இடைவிடாமல் நூல் நூற்றுக் கொண்டாடினர். இதில் மற்றவர்களைப் போலவே காந்திஜியும் ஸ்ரீமதி கஸ்தூரி பாய் காந்தியும் தீவிரமாகப் பங்கெடுத்துக் கொண்டனர். அந்த நிகழ்ச்சிகளைப் பற்றி ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியிருப்பதன் சுருக்கம் பின் வருமாறு :]

............ஐந்து கோஷ்டியினர் தத்தம் இருப்பிடங்களில் இருந்து கொண்டே 6-ஆம் தேதி காலை 4-மணியிலிருந்து 13-ஆம் தேதி மாலை 7-வரை ராட்டைகளை வைத்துக் கொண்டு இரவும் பகலும் நூற்பதென்று தீர்மானித்தனர். மற்றவர்கள் தங்கள் ராட்டைகளில் நூற்பதோடு, 6-ஆம் தேதி காலையிலிருந்து 13-ஆம் தேதி மாலை வரை இரவும் பகலும் ஒரு தறியையும் ஓட்டிக் கொண்டிருக்க முடிவு செய்தனர்.

............ராட்டைகளும் தறியும் இரவும் பகலும் ஒரு நிமிடம் கூடக் கோளாறு ஏற்படாமலும், நிற்காமலும், அவற்றில் இரவு நேரத்தில் வேலை செய்து வந்தவர்களில் யாருக்கும் தேக அசௌக்கியம் ஏற்படாமலும் வேலை செய்து வந்தன. 16 வயதுடைய ஒருவர் 14 மணி நேரம் ராட்டையில் நூற்று, மாலைப் பிரார்த்தனையில் தாம் நூற்ற நூலின் அளவைப் பதிவு செய்த தினத்தன்று விசேஷமான உற்சாகம் ஏற்பட்டது. அவர் நூற்றது 4444 சுற்றுக்கள் அல்லது 5925 கெஜங்கள். இது, அந்தப் பையனுடைய சாதனையோடு போட்டிபோடவேண்டும் என்று மற்றவர்களைத் தூண்டிவிட்டது. அதன் பயனாக, மேற்கொண்டு ஐந்து தீரர்கள் தாங்கள் நூற்ற நூலின் அளவைப் பதிவு செய்ய வந்தார்கள். அவர்களில் எல்லோரையும்விட வெற்றிகரமாக நூற்ற ஒருவர் 9119 சுற்றுக்கள் அல்லது 12160 கெஜம் 17-ஆம் நெம்பர் நூலை நூற்றிருந்தார். ஒரே மாதிரி மணிக்கு 540 கெஜத்துக்குக் குறையாமல் 22 மணி 30 நிமிஷ நேரம் ஒரே மூச்சில் ராட்டையில் அவர் நூற்றிருந்தார்.

ஆனால், முதலாவதாக அதிகமாக நூற்ற 16 வயதுப் பையனுடைய சாதனைகளை அலட்சியம் செய்துவிட முடியாது. கடைசி நாளன்று அவர் 7000 சுற்றுக்கள் நூற்றார். இது அந்த வாரம் முழுவதிலும் தனிப்பட்ட ஒருவர் ஒரு நாளில் நூற்ற அளவைவிட அதிகம். அவர் நூற்ற மொத்த நூல் 17,244 சுற்றுக்கள் அல்லது 22,992 கெஜங்கள், அதாவது, நாள் ஒன்றுக்கு ஏறக்குறைய 3000 கெஜங்கள்.

............சிறுவர்கள் நூற்காத போதெல்லாம் பஞ்சைச் சுத்தம் செய்தல், அரைத்தல், பஞ்சு கொட்டுதல், பட்டை போடுதல் ஆகிய வேலைகளைச் செய்து வந்தார்கள். அந்தப் பஞ்சைப் பெரியவர்கள் நூலாக மாற்றிக் கொண்டிருந்தார்கள்............

கடைசி நாளன்று கடும் பிரயாசையோடு நூற்ற நூலின் அளவு விவரங்கள் பின்வருமாறு :

| | மொத்தச் சுற்றுக்கள் | ஒவ்வொருவரின் சராசரி | ஒரு நாளில் எல்லோரும் நூற்றது | சுற்றுக்கள் 1,43,898 |
|---|---|---|---|---|
| ஆண்கள் | 44,493 | 840 | ஒவ்வொருவரின் சராசரி | 1,170 |
| பெண்கள் | 27,488 | 887 | | |
| பள்ளிப்பிள்ளைகள் | 65,485 | 2,339 | [இவர்களே சாதாரண நாட்களில் | 271] |
| குழந்தைகள் | 6,432 | 585 | | |

5 ஆண்களும் பெண்களும் இரவும் பகலும் மாறிமாறி ஒரு தறியில் வேலை செய்து நெய்த விவரம் பின்வருமாறு :

வேலை செய்த மொத்த மணிகள் 180
,, ,, ஆட்கள் 40
நெய்த மொத்தத் துணி 190 கெஜங்கள்; 21 அங்குல அகலத்தில்

............ஆசிரமத்தின் மிகவும் வயதான உறுப்பினர்கள், அதாவது காந்திஜியும் கஸ்தூரிபாய் காந்தியும் நூற்ற மொத்த நூல் முறையே *3,829*, *4226* சுற்றுக்கள். மிகவும் குறைந்த வயதினர்—மிகவும் வயதானவர்களின் ஒரு பேத்தி—நூற்றது *4323* சுற்றுக்கள்.

—'ஹரிஜன்'–13—6—1948

## நிர்மாணத் திட்டத்தின் 21 அம்சங்கள்

பாபு ராஜேந்திரப் பிரசாத்தின் தலைமையில், சேவா கிராமத்தில் *1948*, மார்ச்சு *13*, *14*, *15* தேதிகளில் நடந்த நிர்மாண ஊழியர்களின் கூட்டத்தில் சர்வோதயத் தீர்மானப்படி, ஏற்றுக்கொண்ட நிர்மாணத் திட்டத்தின் *21* அம்சங்கள் :

1. மத ஒற்றுமை (பல மதத்தினரிடையே ஒற்றுமையை உண்டாக்குதல்)
2. தீண்டாமை ஒழிப்பு
3. ஜாதி வேற்றுமைகளை அகற்றுதல்
4. கள் குடி ஒழிப்பு
5. கதரும், கிராமக் குடிசைக் கைத்தொழிலும்
6. கிராம சுகாத்ரம்
7. ஆதாரக் கல்வி
8. பெண்களின் முன்னேற்றம்-சம உரிமையும் அந்தஸ்தும்
9. ஆரோக்கியமும் பொதுச் சுகாதாரமும்
10. தாய் மொழிகளின் வளர்ச்சி
11. குறுகிய மாகாண மனப்பான்மையை ஒழித்தல்
12. தேசீய மொழி ஹிந்துஸ்தானியின் வளர்ச்சி
13. பொருளாதார சமத்துவம்
14. விவசாயிகளின் நலனும் முன்னேற்றமும்
15. தொழிலாளர்களின் நலனும் முன்னேற்றமும்
16. ஆதிவாசிகளின் முன்னேற்றம்
17. மாணவர்களின் வளர்ச்சி
18. குஷ்டரோகிகளுக்குச் சேவை
19. அகதிகளுக்குச் சேவை
20. பசு சேவையும் பாதுகாப்பும்
21. இயற்கை வைத்தியம்

# பொருட் குறிப்பு அகரவரிசை

(எண் – பக்கத்தைக் குறிக்கும்)